# மகாத்மா காந்தி நூல்கள்

# 14





## தலைவர்களுக்கு காந்திஜியின் கடிதங்கள்

முதற் பதிப்பு: அக்டோபர், 1966

இந்நூலில் பிரசுரமாகியுள்ள கடிதங்கள் பின்வரும்
ஆங்கில நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை :

1. The Collected Works of Mahatma Gandhi, Government of India Publications.
2. Letters to Sardar Vallabhbhai Patel, published by Navajivan Trust.
3. Letters of Rt. Hon. V. S. Srinivasa Sastri, edited by T. N. Jagadisan and published by Asia Publishing House, Bombay.
4. A Bunch of Old Letters, edited by Jawaharlal Nehru, and published by Asia Publishing House, Bombay.

விலை ரூ. 7-50

மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை-29

# மகாத்மா காந்தி நூல்கள்

## 14

அரசியல் பிரச்னைகள், ஆரோக்கியம், சொந்த வாழ்க்கை முதலிய
பல்வேறு விஷயங்களையொட்டியும் தலைவர்களுக்கு காந்திஜி
எழுதிய கடிதங்களும், தலைவர்களைப்பற்றிய
காந்திஜியின் கருத்துகளும் இந்தத்
தொகுப்பில் அடங்கியுள்ளன.

வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில்]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை–2.

# தலைவர்களுக்கு காந்திஜியின் கடிதங்கள்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :

ஜெயமணி சுப்பிரமணியம்

## பதிப்புரை

மகாத்மா காந்தி நூல்களில் 14-வது தொகுப்பாக இது வெளிவருகிறது. இந்த நூலில் காந்தி அடிகள் அப்போதைய தலைவர்களுக்கு எழுதிய கடிதங்கள் இடம் பெற்றிருக்கின்றன. இந்தியாவின் விடுதலைக்காக அக்காலத்தில் உழைத்த தாதாபாய் நௌரோஜிக்கு 1894-ம் ஆண்டில் காந்திஜி எழுதிய முதல் கடிதத்துடன் இந்தத் தொகுப்பு ஆரம்பமாகிறது. அவற்றில் கோகலே, ஜவாஹர்லால் நேரு, மகாதேவ தேசாய், ஸ்ரீனிவாச சாஸ்திரியார், கவி ரவீந்திரநாத் தாகூர், விநோபாஜி, தீனபந்து ஆண்ட்ரூஸ், ஜெனரல் ஸ்மட்ஸ் முதலியவர்களுக்கு காந்தி அடிகள் எழுதிய கடிதங்கள் முக்கியமானவையாகும். இக்கடிதங்களில் பல இப்போதுதான் தமிழில் முதல் தடவையாக வெளிவருகின்றன.

நமது சுதந்திரப் போரின் வரலாற்றையும், அக்காலத்திய சரித்திரத்தையும் தெரிந்து கொள்ள இவை பெரிதும் உதவுகின்றன.

இதுவரை வெளியான தொகுப்புகளை அன்புடன் வரவேற்ற தமிழ் மக்கள், இதையும் ஆர்வத்துடன் வரவேற்றுப் பயன் அடைவார்கள் என்று நம்புகிறோம்.

காந்தி நூல் வெளியீட்டுக் கமிட்டி,
*சென்னை, 2-10-1966*

தி. சு. அவினாசிலிங்கம்
தலைவர்

# பொருளடக்கம்

## பின் சேர்க்கைப் பகுதி

பகுதி ஒன்று

# தாதாபாய் நௌரோஜி

[தாதாபாய் நௌரோஜி (1825-1917) 'இந்தியாவின் முதுபெரும் கிழவர்' என்று புகழ் பெற்றவர். பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து அரசியலில் ஈடுபட்ட முதல் இந்தியர் அவர்தான் எனலாம். நௌரோஜி லண்டன் பல்கலைக் கழகத்தில் குஜராத்தி ஆசிரியராக இருந்தார். 1874-லிருந்து சில ஆண்டுகள் வரையில் பரோடா திவானாகவும், 1885-ல் பம்பாய் சட்டசபை அங்கத்தினராகவும் இருந்தார். 1886-1892-ல் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கத்தினராக இருந்த முதல் இந்தியரும் அவர்தான். நௌரோஜி 1886, 1893, 1906-ம் ஆண்டுகளில் மூன்று தடவை காங்கிரஸ் அக்கிராசனராகப் பணியாற்றினார். அவர் எழுதிய நூல்களில் 'வறுமையும் பிரிட்டிஷாரின் தகாத ஆட்சி முறையும்' என்ற நூல் புகழ் பெற்றது. காந்திஜி இருபது வயது இளைஞராக இருந்த போதே நௌரோஜிக்கு அறுபது வயதுக்கு மேலாகி விட்டது. அக்காலத்தில் தென்னாப்பிரிக்க இந்தியர் பிரச்னைகளில் நௌரோஜி மிகவும் அக்கறை கொண்டிருந்தார். அவர் 89 வயது வரை உயிர் வாழ்ந்து தேசத்துக்கு அரும் தொண்டு புரிந்து அரசியல் வானில் அழியாப் புகழ் பெற்றார். அவருக்கு தென்னாப்பிரிக்காவிலிருந்து காந்திஜி எழுதிய முதல் கடிதமும், அதைத் தொடர்ந்து எழுதிய மற்றக் கடிதங்களும் இப்பகுதியில் வெளியாகியுள்ளன:]

## 1

டர்பன்,
*ஜூலை 5, 1894*

பொறுப்புள்ள அரசாங்கத்தின்கீழ் நேட்டாலில் ஏற்பட்டுள்ள முதலாவது பார்லிமெண்டு, பெரிதும் இந்தியர்களின் பார்லிமெண்டாகவே இருக்கிறது! அதன் நேரம், பெரும்பாலும்

இந்தியர்கள் சம்பந்தமான சட்டத்தைப் பற்றி விவாதிப்பதிலேயே செலவிடப்படுகிறது. ஆனால் அச் சட்டம் இந்தியர்களுக்குச் சாதகமானது அல்ல. சட்டசபையையும் அசெம்பிளியையும் கவர்னர் ஆரம்பித்து வைத்துப் பேசுகையில், நேட்டாலில் உள்ள இந்தியர்களின் வாக்குரிமை பற்றியே தமது மந்திரிகள் பரிசீலனை செய்வார்கள் என்று குறிப்பிட்டார்; இந்தியாவில் அவர்களுக்கு ஒரு காலத்திலும் வாக்குரிமை இருந்ததில்லை என்றும் கூறினர். இந்தியர்களின் வாக்குரிமையை அடியோடு பறிப்பதற்காக அவர்கள் கொண்டு வந்துள்ள சட்டத்திற்கு அவர் கூறும் காரணங்கள் என்னவெனில், வாக்குரிமையை இந்தியர்கள் இதற்கு முன் ஒரு போதும் உபயோகித்ததில்லை என்பதும், வாக்குரிமைக்கு அவர்கள் தகுதியற்றவர்கள் என்பதும்தான்.

இந்தியர்கள் அனுப்பியுள்ள விண்ணப்பம் இந்தக் கூற்றுக்குச் சரியான பதிலாக அமைந்துளது. எனவே அவர்கள் அந்த மசோதாவின் உண்மையான நோக்கத்தை வெளியிட்டிருக்கிறார்கள். அவர்கள் கூறுவது இதுதான்:

“இனிமேல் இந்தியர்களை நாங்கள் இங்கே விரும்பவில்லை. ஆனால் இந்தியக் கூலிகளையே நாங்கள் விரும்புகிறோம். அவர்கள் இங்கே அடிமைகளாக இருக்கவேண்டும். ஒப்பந்த காலம் முடிந்து அவர்கள் சுதந்திரமடைந்ததும் இந்தியாவுக்குத் திரும்பிச் சென்று விடவேண்டும்.”

எனவே இவ் விஷயத்தில் உங்களுடைய முழு கவனத்தையும் செலுத்த வேண்டுமென நான் உங்களை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன். இந்தியர்கள் எங்கே இருப்பினும் அவர்களுடைய சார்பில் நீங்கள் எப்போதுமே உங்களுடைய செல்வாக்கை உபயோகித்து வருகிறீர்கள். அது போலவே இப்போதும் உபயோகிக்க வேண்டுமென நான் கேட்டுக் கொள்கிறேன். குழந்தைகள் தந்தையை எதிர்பார்ப்பது போல், இந்தியர்கள் உங்களுடைய உதவியை எதிர்பார்க்கிறார்கள். இங்கே அவர்களுடைய உணர்ச்சி உண்மையில் அவ்விதமே இருந்து வருகிறது.

என்னைப்பற்றி ஒரு வார்த்தை கூறி இந்தக் கடிதத்தை முடித்துவிடுகிறேன். நான் இன்னும் அனுபவம் ஏற்படாதவன், இளைஞன். எனவே நான் தவறுகள் செய்யக்கூடும். நான் ஏற்றுக் கொண்டுள்ள பொறுப்பு, முற்றிலும் என் திறமையை மீறியது. யாதொரு பிரதிபலனையும் எதிர்பாராமல் இதைச் செய்துகொண்டிருக்கிறேன் என்பதையும் நான் சொல்லலாம். இந்தியர்களின் பெயரால் நான் மேம்பாடு அடைவதற்காக, எனது திறமையை மீறிய இவ்விஷயத்தை நான் பொறுப்பேற்றுக் கொள்ளவில்லை. இப்பிரச்னையைச் சமாளிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளக் கூடியவன் நான் ஒருவன்தான் இருக்கிறேன். எனவே நீங்கள் அன்புடன் எனக்கு வழிகாட்டி அவசியமான யோசனைகளைக்

கூறுவீர்களாயின், எனக்குப் பேருதவியாக இருக்கும். ஒரு தந்தையின் யோசனைகளை அவரது குழந்தை ஏற்றுக் கொள்வது போல், அவற்றை நான் ஏற்றுக்கொள்வேன்.

## 2

தாதா அப்துல்லா கம்பெனி,
டர்பன், ஜுலை *14, 1894*

கனம் தாதாபாய் நௌரோஜி, எம். பி.,
லண்டன்.

ஐயா,

சென்ற 7-ந் தேதி நான் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்து இதை எழுதுகிறேன். வாக்குரிமைச் சட்டத் திருத்த மசோதாவை எதிர்த்து நடைபெற்று வரும் இயக்கத்தின் போக்கு எந்த நிலையில் இருக்கிறது என்பதை உங்களுக்கு நான் அறிவிக்க வேண்டும்.

7-ந் தேதி நடைபெற்ற சட்டசபைக் கூட்டத்தில் அம் மசோதா மூன்ருவது முறையாக நிறைவேறியது. சட்ட சபைக்கு அனுப்பப்பட்டுள்ள விண்ணப்பமும் ஒப்புக்கொள்ளப் பட்டது. அந்த விண்ணப்பத்தை சபை ஆலோசிக்கும் வரையில், மசோதா மூன்ருவது முறையாக நிறைவேற்றப்படுவதை ஒத்திவைக்க வேண்டும் என்று ஓர் அங்கத்தினர் கொண்டு வந்த தீர்மானம் நிராகரிக்கப்பட்டுவிட்டது.

மசோதாவையொட்டி கவர்னர் தமது சம்மதத்தைத் தெரிவித்துள்ளார். எனினும் அது மகாராணியின்* அங்கீகாரத்தைப் பெறவேண்டும். மசோதாவை நிராகரிக்க வேண்டும் என்ற விருப்பம் மகாராணிக்கு இல்லை என்பதை ஒரு பிரகடனத்தின் மூலமோ அல்லது வேறு விதமாகவோ கவர்னர் அறிவிக்கும் வரையில் மசோதா சட்டமாவதற்கில்லை என்று அதில் (மசோதாவில்) ஒரு ஷரத்து இருக்கிறது.

பிரிட்டிஷ் சர்க்காருக்கு நாங்கள் அனுப்ப உத்தேசித்திருக்கும் விண்ணப்பத்தின் † பிரதி ஒன்றை இத்துடன் அனுப்பி

* விக்டோரியா மகாராணியையே (1819-1901) காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். விக்டோரியாவுக்கு அவரது 18-வது வயதில் அதாவது 1837-ல் பிரிட்டிஷ் மகாராணியாக முடிசூட்டு விழா நடந்தது. விக்டோரியா மகாராணி 64 ஆண்டுகள் வரையில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஆட்சி புரிந்து வந்தார்.

† மேலே குறிப்பிட்டுள்ள விண்ணப்பத்தின் சாரத்தை பின்சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

யிருக்கிறேன். அநேகமாக அது 17-ந் தேதி இங்குள்ள கவர்னருக்கு அனுப்பப்படும். அதில் ஏறக்குறைய 10,000 இந்தியர்கள் கையெழுத்திடுவார்கள். இப்போதே சுமார் 5000 பேர்கள் கையெழுத்திட்டுள்ளனர்.

சட்டசபைக்கு அனுப்பப்பட்ட விண்ணப்பத்தின் பிரதி ஒன்றை நான் அனுப்ப இயலாததைக் குறித்து வருந்துகிறேன். எனினும், பத்திரிகையில் அந்த விண்ணப்பம் பிரசுரமாகியிருக்கும் பகுதியைக் கத்தரித்து உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

இதற்கு மேல் எதுவும் எழுதவேண்டுமென நான் நினைக்கவில்லை. மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. வாக்குரிமை மசோதா சட்டமாகிவிடுமாயின், பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியர்களின் நிலைமை இந்தக் காலனியில் சகிக்க முடியாததாகிவிடும்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி**

## 3

டர்பன்,
ஜூலை 27, 1894

கனம் தாதாபாய் நௌரோஜி எம். பி.,
லண்டன்.

ஐயா,

14-ந் தேதி நான் எழுதிய கடிதத்தைத் தொடர்ந்து பின்வரும் விவரங்களை உங்களுக்கு நான் அறிவிக்கவேண்டும்.

பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நாங்கள் எழுதிய விண்ணப்பம் சென்ற வாரம் அனுப்பப்பட்டுவிட்டதாகக் கேள்விப்படுகிறேன். அதன் பிரதி ஒன்று ஏற்கனவே உங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. சர்க்கார் நிர்வாகம் ஆசியாக்காரர்களின் கைக்கு வந்து விடாமல் தடுப்பதொன்றே அந்த மசோதா நிறைவேறியதற்குக் காரணம் என்று அட்டர்னி ஜெனரல் ஸ்ரீ எஸ்கோம்பின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால், அதற்கு உண்மையான காரணம் இதுதான். காலனியில் தங்குவதால் யாதொரு பலனும் இராதவாறு, இந்தியர்களைக் கஷ்டங்களுக்கும் அவமதிப்பிற்கும் உள்ளாக்க வேண்டும் என்பதே.

இருந்தாலும் இந்தியர்களை அடியோடு ஒழித்துவிடவும் அவர்கள் விரும்பவில்லை. தங்களுடைய சொந்தச் செலவில் வரும் இந்தியர்களை அவர்கள் நிச்சயமாக விரும்பவில்லை. ஆனால் ஒப்பந்

தத்தின்மீது வரும் இந்தியர்கள் அவர்களுக்கு அத்தியாவசியமான தேவையாக இருக்கிறார்கள். ஆனால் ஒப்பந்த காலம் முடிந்ததும் அவர்கள் இந்தியாவுக்குத் திரும்பிச் சென்றுவிட வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். இதை உடனடியாகச் செய்யமுடியாது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள். எனவே அவர்கள் வாக்குரிமை மசோதாவைக் கொண்டு வர ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்கள் அவ்விஷயமாக பிரிட்டிஷ் சர்க்காரின் போக்கைத் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். மசோதாவை பிரிட்டிஷ் சர்க்கார் அனுமதிப்பார்கள் என்று தாம் நம்பவில்லையென சட்ட சபை அங்கத்தினர் ஒருவர் எனக்கு எழுதுகிறார். இம் மசோதாவுக்கு அனுமதி கிடைக்கக் கூடாது என்பது, இந்திய சமூகத்துக்கு எவ்வளவு முக்கியமானது என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

நேட்டால், இந்தியர்கள் வசிப்பதற்கு மோசமான ஓர் இடம் அல்ல. ஏராளமான இந்திய வர்த்தகர்கள் இங்கே மரியாதையாக வாழ்வதற்குப் போதிய அளவு சம்பாதிக்கிறார்கள். அம் மசோதா சட்டமாகிவிடுமாயின், இந்தியர்களின் முன்னேற்றத்திற்கு அது ஒரு பெரும் தடையாக இருக்கும்.

நான் முன்பு ஒரு தடவை கூறியதையே மீண்டும் சொல்லுகிறேன். அதாவது இங்கு சர்க்கார் நிர்வாகம் ஐரோப்பியர்களிடமிருந்து இந்தியர்களின் கைக்கு வருவதற்கான சந்தர்ப்பம் இம்மியளவு கூட இல்லை. ஆனால் பிரிட்டிஷ் சர்க்காரைப் பயமுறுத்துவதற்காகவே அவ்விதம் கூறியிருக்கிறார்கள். சர்க்கார் நிர்வாகம் அவ்விதம் மாறுவது ஒருபோதும் நடைபெறாத காரியம் என்பதை சர்க்கார் உள்பட இங்குள்ள யாவரும் நன்கு அறிவர். பார்லிமெண்டில் இந்தியர்களின் நலன்களைக் கவனித்துக் கொள்ளக்கூடிய வெள்ளையர்களான இரண்டு அல்லது மூன்று அங்கத்தினர்களைக்கூட இந்தியர்கள் தேர்ந்தெடுப்பதை அவர்கள் விரும்பவில்லை! அவ்விதமாயின், யாதொரு எதிர்ப்புமின்றி இந்தியர்களை அழித்துவிட சர்க்கார் வழிவகை செய்து கொள்ளலாம் அல்லவா?

அங்கேயுள்ள சர் டபிள்யூ. வெட்டர்பர்னுக்கும் மற்றவர்களுக்கும் நான் விண்ணப்பத்தின் பிரதிகளை அனுப்பியிருக்கிறேன். இந்தியப் பத்திரிகைகளுக்கும் சில பிரதிகளை அனுப்பியிருக்கிறேன்.

நீண்ட கடிதங்கள் எழுதுவதற்காக தயவு செய்து மன்னியுங்கள். நிலைமை எப்படி இருந்துவருகிறது என்பதை நீங்கள் சுருக்கமாகக் குறிப்பிட்டால் எனக்கு உதவியாக இருக்கும்.

உங்கள் நம்பிக்கையுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி**

## 4

328, ஸ்மித் தெரு, டர்பன், நேட்டால்,
ஜனவரி 25, 1895

தாதாபாய் நௌரோஜி அவர்களுக்கு, எம். பி.

ஐயா,

மாட்சிமை தங்கிய மகாராணி வாக்குரிமை மசோதாவுக்கு அனுமதி கொடுக்க மறுத்துவிட்டதாக, பத்திரிகைகள் பொது மக்களுக்கு அறிவித்து வருகின்றன. ஆனால் சர்க்கார் மௌன மாக இருந்துவருகிறார்கள். அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது தகவல் கொடுக்க முடியுமா?

இங்கே குடியேறி ஸ்தாபித்துள்ள இந்தியர்கள், அவர்கள் சார்பில் நீங்களும் காங்கிரஸ் கமிட்டியும் எடுத்துக் கொண்ட சிரமத்திற்காக மிகுந்த நன்றி செலுத்தாமல் இருக்க முடியாது.

உங்கள் நம்பிக்கையுள்ள ஊழியன்,
**மோ. க. காந்தி**

## 5

சென்ட்ரல் வெஸ்ட் தெரு, டர்பன், நேட்டால்,
மார்ச் 7, 1896

கனம் தாதாபாய் நௌரோஜி,
நாஷனல் லிபரல் கிளப்,
லண்டன்.

ஐயா,

பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டுள்ள வாக்குரிமை மசோதா அடங்கிய பகுதியை நான் இத்துடன் அனுப்பத் துணிகிறேன். இம் மசோதாவை அடுத்த சட்டசபைக் கூட்டத்தில் கொண்டுவர மந்திரி சபையினர் உத்தேசித்திருக்கிறார்கள். பிரிட்டிஷ் கமிட்டித் தலைவருக்கு நான் அனுப்பியுள்ள கடிதத்தின் ஒரு நகலையும் இத்துடன் இணைத்திருக்கிறேன்.

நாந்த்வெனி* சம்பந்தமாக விண்ணப்பம் செய்து கொண்டவர் களின் கோரிக்கையை அங்கீகரிக்க ஸுலுலந்து கவர்னர் மறுத்து

* நாந்த்வெனி, ஸுலுலந்தைச் சேர்ந்த ஒரு நகரப் பிரதேசமாகும். அங்கே ஐரோப்பியர்களுக்கு மாத்திரமே நிலங்களை விற்கவேண்டும் என்றும், ஐரோப்பியர்களைத் தவிர வேறு யாரும் நிலம், வீடு முதலிய சொத்துக்களை வாங்கக் கூடாது என்றும் சர்க்கார் கொண்டுவந்த மசோதாவைப் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

விட்டார். அவ்விஷயமாக பிரிட்டிஷ் சர்க்காருக்கு அனுப்புவதற்காக நான் இப்போது ஒரு விண்ணப்பம் தயாரித்துவருகிறேன்.

கமாண்டோ விண்ணப்பத்தைப் பற்றித் தாங்கள் எழுதிய கடிதத்திற்காகத் தங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,
**மோ. க. காந்தி**

## 6

(தந்தி)

டர்பன், மே *7, 1896*

நேட்டால் வாக்குரிமை மசோதாவையோ அல்லது மந்திரி சபையின் திருத்தத்தையோ அங்கீகரிக்க வேண்டாமென இந்திய சமூகத்தினர் மனப்பூர்வமாகக் கேட்டுக் கொள்கின்றனர். நேற்றிரவு உத்தேசிக்கப்பட்ட விண்ணப்பம் தயாராகிவருகிறது.

**(தாதாபாய் நௌரோஜி, சர் வில்லியம் ஹண்டர், பிரிட்டிஷ் காலனி மந்திரி ஸ்ரீ ஜோசப் சேம்பர்லேன் ஆகியோருக்கு அனுப்பப் பட்ட தந்திச் செய்தியே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.)**

## 7

*53* ஏ, பீல்டு தெரு, டர்பன், நேட்டால்,
செப்டம்பர் *18, 1897*

கனம் தாதாபாய் நௌரோஜி,
லண்டன்.

ஐயா,

காலனி பிரதம மந்திரிகளின் கூட்டத்தில் ஸ்ரீ சேம்பர்லேன் நிகழ்த்திய பிரசங்கத்தை யொட்டி நேட்டாலில் உள்ள இந்தியர் சமூகப் பிரதிநிதிகள் தங்களுக்கு எழுதியுள்ள கடிதத்தை* இத்துடன் இணைத்திருக்கிறேன். சேம்பர்லேனின் பிரசங்கம் இயல்பாகவே ஐரோப்பியர், இந்தியர் ஆகிய இரு சமூகத்தினருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கிறது. இவ்விஷயமாக அதிகமாக எதுவும் செய்ய முடியாவிட்டால், இக்கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள குடியேற்றச் சட்டத்தில் மாறுதல்களைச் செய்யவாவது நீங்கள் சக்தி வாய்ந்த உங்கள் செல்வாக்கை உபயோகப்படுத்துவீர்கள் என்று நான் நம்புகிறேன். தற்போது நேட்டாலுக்குள் இந்தியர்கள் பிரவேசிப்பதைத் தடுக்கும் சட்டம், நேட்டாலுக்குள் ஐரோப்பியர்கள் பிரவேசிப்பதில் எவ்விதத்திலும் குறுக்கிட முடியாது.

உங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,
**மோ. க. காந்தி**

---

*மேலே குறிப்பிட்டுள்ள கடிதத்தைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

# 8

டர்பன், நேட்டால்,
அக்டோபர் 8, 1900

அந்தரங்கமானது.

அன்புள்ள ஐயா,

சமீபத்தில் இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நடக்கப் போவதால், காங்கிரஸ் என்ன செய்யலாம் என்று நாங்கள் நினைக்கிறோமோ அதைக் குறித்து உங்களுடைய கவனத்தையும், உங்கள் மூலம் நம்முடைய மற்றப் பிரதிநிதிகளின் கவனத்தையும் ஈர்ப்பது பொருத்தமற்றதாக இராது. உங்களுடைய தேசத்திற்கு நீங்கள் செய்துள்ள தொண்டுகளின் பெருமையை அறிந்த நாங்கள், உங்களுக்கு அதிகத் தொந்தரவு கொடுத்து உங்களுடைய ஆரோக்கியத்திற்குத் தீங்கு நேரும்படி செய்யக் கூடாது என்பதை அறிவோம். எனவே இவ்விஷயமாக நீங்கள் நேரில் கவனம் செலுத்துவது சாத்தியமாக இராவிடில், இந்தக் கடிதத்தையோ அல்லது அதன் நகல்களையோ யாருக்கு அனுப்ப வேண்டுமோ அவர்களுக்கு அன்புடன் அனுப்புவீர்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. இவ்விஷயம் இந்தியாவிலிருந்து குடியேறுவோரை முற்றிலும் பாதிப்பதாக இருக்கிறது. எனவே இது மிகவும் தேசீய முக்கியத்துவம் வாய்ந்ததாகும். காங்கிரஸ் கூட்டத்தில் சமர்ப்பிக்க வேண்டிய நகல் தீர்மானத்தை* இத்துடன் அனுப்பியிருக்கிறேன். சர் வில்லியம் வெட்டர்பர்னின் விருப்பத்திற்கிணங்க இந்தியர்களின் தற்போதைய நிலைமையைப் பற்றிய குறிப்புகளையும் தயாரித்து

---

*பின்னர் காங்கிரசில் நிறைவேறிய அத்தீர்மானத்தின் விவரம் பின்வருமாறு:

தென்னாப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் துன்பங்களைக் குறித்து இந்திய சர்க்காரும் இந்தியா மந்திரியும் கவனம் செலுத்த வேண்டுமென காங்கிரஸ் கேட்டுக் கொள்வதுடன், இப்போது அந்தக் கண்டத்திலுள்ள எல்லைகள் மாற்றப்பட்டு போயர் குடியரசுகள் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளுடன் சேர்க்கப்பட்டிருப்பதால், அந்தக் குடியரசுகளில் குடியேறிய இந்தியர்களின் கஷ்டங்களுக்குப் பரிகாரமளிக்க பிரிட்டிஷ் சர்க்கார் முன்வருமென நம்புகிறது. முன்னர் அவை போயர் குடியரசுகளின் உள்நாட்டுப் பிரச்னைகளாக இருந்ததால், அவற்றில் தலையிட பிரிட்டிஷ் சர்க்காருக்கு அதிகாரம் இல்லாமலிருந்தது. ஆனால் இப்போது நிலைமை மாறியிருக்கிறது. எனவே நேட்டாலில் குடியேறியுள்ள இந்தியர்களுக்கு குடியேற்றக் கட்டுப்பாட்டினாலும், வியாபாரிகள் லைசன்ஸ் சட்டங்களாலும் ஏற்பட்டுள்ள கஷ்டங்களை முற்றிலும் அகற்றாவிட்டாலும், அவற்றின் கொடுமையைக் குறைக்கவாவது பிரிட்டிஷ் சர்க்கார் முற்பட வேண்டும். அவை பிரிட்டிஷ் அரசியல் சட்டத்தின் மூலாதாரமான விதிகளுக்கும், 1858-ம் வருஷத்திய பிரகடனத்துக்கும் முரணாக இருக்கின்றன.

லண்டனிலுள்ள நண்பர்களுக்கு தனித் தபாலில் அனுப்பியிருக்கிறோம். அந்தக் குறிப்புகளிலிருந்து இந்தியர்களின் தற்போதைய நிலையை அறிந்து கொள்ளலாம். தீர்மானத்தைப் பிரேரிக்கும் கனவானுக்கு அக் குறிப்புகள் உபயோகமாக இருக்கலாம். விஷயாலோசனைக் கமிட்டி, உசிதம் போல் அவற்றை மாற்றவோ அல்லது திருத்தவோ செய்யலாம்.

கேப் சட்டசபையில் சரிசமானமான நிலையில் இருக்கும் இரு கட்சியினர், மற்ற விஷயங்களில் பரஸ்பரம் நேர்மாறான கருத்துடையவர்களாக இருப்பினும், இந்தியப் பிரச்னை சம்பந்தப்பட்டவரையில் ஏகோபித்த அபிப்பிராயம் உடையவர்களாக இருக்கிறார்கள்! அச்சட்டசபையில் அது பற்றி நடந்த விவாதம் அடங்கிய முழு விவரங்களும் 'கேப் டைம்ஸ்' பத்திரிகையில் வெளியாகியிருக்கின்றன. அப்பகுதியைக் கத்தரித்து இத்துடன் அனுப்பியிருக்கிறேன். தென்னாப்பிரிக்காவின் இப்பகுதியில் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதை அதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். நேட்டாலில் உள்ளவர்களைக் காட்டிலும் கேப்பில் உள்ளவர்கள், இந்தியர்களுக்கு விரோதமான தீவிர நடவடிக்கைகளைக் கைக்கொள்ள அதிக ஆர்வமுடையவர்களாக இருந்து வருகிறார்கள். இந்தியாவிலிருந்து புதிதாக எவரும் வரமுடியாமல் அடியோடு தடுத்துவிட வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். இந்தியாவிலிருந்து வியாபாரியோ, குமாஸ்தாவோ அல்லது தொழிலாளியோ யார் வருவதையும் அவர்கள் சகிக்கவில்லை. சுயாட்சி புரியும் காலனிகளின் விருப்பத்தை நிறைவேற்ற காலனி மந்திரி ஸ்ரீ சேம்பர்லேன் எதுவும் செய்யத் தயாராக இருக்கிறார். இதற்கு மாறாக, இந்தியா மந்திரி காரியாலயத்தினர் தூங்கிவருகிறார்கள். எனினும் இப்பிரச்னையையொட்டி இந்தியர்களும் ஆங்கிலோ இந்தியர்களும் ஒரே கருத்துடையவர்களாக இருந்துவருவதால் இந்தியா மந்திரி காரியாலயத்தின் தூக்கத்தைக் கலைத்து அவர்கள் சுறுசுறுப்பாக நடவடிக்கைகளில் ஈடுபடும்படி செய்வது சாத்தியமாக இருக்கலாம். அதன் பலனாக ஏதாவது பரிகாரம் கிடைக்கலாம். செல்வாக்குள்ளவர்கள் அடங்கிய ஒரு கோஷ்டியினர் லார்டு கர்ஸனைத் தூது கண்டு பேசுவதால் மிகுந்த பலன் ஏற்படலாம்.

கேப் காலனிக்கு இந்தியர்கள் மகத்தான தொண்டு செய்திருக்கிறார்கள். சர் ஜார்ஜ் ஒயிட் தலைமையில் சென்ற இந்தியப் படைகள்தான் பகைவர்கள் முன்னேறிவராமல் தடுக்க முதன் முதலாக முன் சென்றன. லேடி ஸ்மித் நகர் முற்றுகையிடப்பட்டபோது காயமடைந்தவர்களைத் தூக்கிவரும் மகத்தான தொண்டில் ஈடுபட்டவர்களும் இந்தியர்கள்தான். ஆரம்பத்தில் தோல்வி நேர்ந்தபோது முற்றிலும் இந்தியர்களின் நன்கொடைகளைக் கொண்டு அமைக்கப்பட்ட தொண்டர் படைகளே பேருதவி புரிந்தன. இந்தியாவிலிருந்தும் கப்பல் கப்பலாகத் தொண்டர்கள் வந்து உதவி புரிந்தனர். ஆனால் இந்தியர்கள் செய்த இந்தத் தொண்டு

களையெல்லாம் கேப் காலனி முற்றிலும் மறந்துவிடும் என்றே தோன்றுகிறது. கேப் காலனியிலுள்ளவர்களின் விருப்பப்படி விட்டுவிட்டால், அவர்கள் இந்தியர்களை, குஷ்டரோகிகளை ஒதுக்கி வைப்பதுபோல் ஒதுக்கி வைத்துவிடுவார்கள் என்றும் தோன்று கிறது.

தற்போது இந்தியர்கள் விஷயத்தில் நேட்டால் அவ்வளவு விரோதபாவத்துடன் இல்லை. எனினும் ஏற்கனவே நிலவிய விரோத உணர்ச்சி மீண்டும் ஏற்பட அதிக காலமாகாது என்ற அச்சம் இருந்துவருகிறது. இந்தியா பஞ்ச நிவாரண நிதிக்கு நேட்டால் பெருந்தன்மையுடன் தாராளமாக உதவி புரிந்திருக் கிறது; பிரபு சிங்கிற்கு £ 100 வசூல் செய்து கொடுத்திருக்கிறது. பிரபு சிங் ஒப்பந்தத்தின்மீது இங்கே வந்த ஒரு தொழிலாளி. அவர் லேடி ஸ்மித்தில் குறிப்பிடத்தக்க தொண்டு புரிந்துள்ளார். அவரது தீரத்தை சர் ஜார்ஜ் ஒயிட் பகிரங்கமாகப் பாராட்டினர். (இவருக் காகத்தான் லேடி கர்ஸன் ஒரு சால்வை அனுப்பினர். அது சமீ பத்தில் பொதுக்கூட்டம் ஒன்றில் அவருக்குப் பரிசளிக்கப்பட்டது). இந்தியா பஞ்ச நிவாரண நிதிக்காக £ 4500-க்கு மேல் வசூலா யிற்று. அதில் பாதித் தொகை நமது சமூகத்திலிருந்து வசூல் செய்யப்பட்டதாகும்.

திரான்ஸ்வாலிலும், ஆரஞ்ச் ரிவர் காலனியிலும் இந்தியர் களுக்கு யாதொரு தடையும் இருப்பதற்கில்லை. இருந்தாலும் நாங்கள் எல்லோரும் மிகுந்த பீதியுடனேயே இருந்து வருகிறோம்.

உங்கள் நம்பிக்கையுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி**

## 9

மர்க்குரி லேன், டர்பன்.
ஜனவரி 30, 1903

கனம் தாதாபாய் நௌரோஜி,
லண்டன்.

ஐயா,

இந்தியர்கள் அடங்கிய இரு கோஷ்டியினர் நேட்டாலில் ஸ்ரீ சேம்பர்லேனைத் தூதுகண்டு பேசினர்கள். ஒரு கோஷ்டியினர் டர்பனிலும் மற்றொரு கோஷ்டியினர் மாரிட்ஸ்பர்க்கிலும் அவ ரைக் கண்டு பேசினர்கள். டர்பன் கோஷ்டியினர், இத்துடன் அனுப்பப்பட்டுள்ள அறிக்கையை அவரிடம் சமர்ப்பித்தனர். அதற்கு வியாக்கியானம் தேவையில்லை.

நேட்டாலில் பொறுப்பாட்சி இருந்துவருவதால், ஏற்கனவே அமுலில் உள்ள சட்டங்களைப் பொறுத்தமட்டில் தாம் எதுவும் செய்ய முடியாதென்று ஸ்ரீ சேம்பர்லேன் கருதுகிறர். அவர் அளித்துள்ள இந்தப் பதில் ஓரளவு உண்மையே. ஒப்பந்தத்தின்

மீது வந்துள்ள இந்தியத் தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு 3 பவுன் வரி விதித்து சமீபத்தில் வந்துள்ள மசோதாவைப் பொறுத்த மட்டில், தாம் இந்தியா மந்திரி காரியாலயத்தின் ஆலோசனைக்கு இணங்க நடக்க வேண்டியிருக்கும் என்று அவர் கூறினர். ஆனல் சர் ஜார்ஜ் ஹாமில்டன் உங்களிடம் கூறியதிலிருந்து அந்த மசோதா நிராகரிக்கப்படுமென நம்பப்படுகிறது.

சுதந்திரமாக இங்கு இந்தியர்கள் குடியேறுவதைத் தடுத்தாலொழிய, ஒப்பந்தத் தொழிலாளர்களை ஒப்பந்த காலம் முடிந்ததும் இந்தியாவுக்கு விரட்டினலொழிய, இந்த உபகண்டம் இந்தியர் மயமாகிவிடும் என்று காலனியிலுள்ள ஐரோப்பியர்கள் அஞ்சுவது போல் ஸ்ரீ சேம்பர்லேனும் அஞ்சுகிறுர் என்று தோன்றுகிறது. காலனியிலுள்ள வெள்ளையர்களின் போக்கு ஒரு விதத்தில் நியாயமானது என்றே அவர் நினைக்கிறுர். டர்பன் தூதுகோஷ்டியினரிடையே அவர் பேசியபோது நானும் கூட இருந்தேன். மாரிட்ஸ்பர்க் கோஷ்டியை அவர் வரவேற்றுப் பேசியபோது, அவர் கொண்டிருந்த ஒன்றிரண்டு தப்பெண்ணங்களை அகற்ற முயற்சிக்க வேண்டும் என நினைத்தேன். ஆனல் எவ்விஷயத்தைப் பற்றியும் அங்கே விவாதிக்கக் கூடாது என்று என்னிடம் கூறிவிட்டனர். எனவே டர்பனில் அவரிடம் கூறிய விஷயங்களையே நான் எடுத்துக் கூறினேன். அவரும், அங்கே என்ன சொன்னரோ அதையே திருப்பிக் கூறினர்.

இந்தியாவிலிருந்து ஒப்பந்தத் தொழிலாளர்கள் அனுப்புவதை நிறுத்தும் நோக்கத்துடன் நேட்டால் சர்க்கார் சமீபத்தில் இந்தியாவுக்கு ஒரு கமிஷனை அனுப்பியிருக்கிறுர்கள். ஒப்பந்தத்தின் மீது வரும் இந்தியர்கள் நேட்டாலிலேயே நிரந்தரமாக இருக்க சந்தர்ப்பம் அளிக்கக் கூடாது என்பதே அந்தக் கமிஷனின் நோக்கமாகும். லார்டு கர்ஸன் அந்தக் கருத்தை ஆதரிப்பாராயின், அது அநீதியின் சிகரமாக இருக்கும். அதற்கு ஓரிடத்திலும் முன்னுதாரணம் இல்லை. அது சில வருடங்களை கெடுவாகக் கொண்ட கலப்பற்ற அடிமைத்தனமாகவே இருக்கும். ஸ்ரீ சேம்பர்லேன் ஏகாதிபத்திய தேசபக்தியை உபதேசித்த பிறகும் கூட, ஒப்பந்தத்தின் நியாயமான கொள்கைகளை நேட்டால் புறக்கணித்துவிட்டுத் தன் சுயநலத்திற்காக இந்தியத் தொழிலாளர்களைச் சுரண்ட முற்படும் விபரீதத்தை அறிந்துகொள்ளவே முடியவில்லை. பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு விரோதமான போக்கை நேட்டால் சிறிதளவு கூட மாற்றிக்கொள்ளவில்லை என்பதையே அது காட்டுகிறது. இந்த உண்மை, இந்தியர்கள் சொந்தத்தில் நிலம் வைத்துக்கொள்ளக் கூடாதென்று மாரிட்ஸ்பர்க் நகரசபை தடை விதிக்க முயற்சி செய்வதிலிருந்து மேலும் உறுதியாகியிருக்கிறது. அந்தத் தடையை அகற்றுவதற்கான வழி, லார்டு ஜார்ஜ் ஹாமில்டன் கூறியுள்ள யோசனையின்படி ஒப்பந்தத் தொழிலாளர்கள் இந்தியாவிலிருந்து நேட்டாலுக்குச் செல்லாமல் தடுத்துவிடுவதேயாகும்.

உங்களுடைய மிகவும் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 10

தபால் பெட்டி *299*,
ஜோகன்னஸ்பர்க், மார்ச் *30*, *1903*

கனம் தாதாபாய் நௌரோஜி,
லண்டன்.

அன்புள்ள ஐயா,

உங்களுடைய கடிதத்திற்கு நன்றி. இன்றுவரையில் உள்ள நிலைமையைப் பற்றிய அறிக்கை ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இங்குள்ள பயங்கரமான நிலைமையைப் பற்றி நண்பர்கள் அறிந்திருக்க வேண்டும் என்பதற்காகவே இதை அனுப்புகிறேன்.

கிழக்கு லண்டனிலுள்ள மக்களின் வேண்டுகோளுக்கிணங்க, இன்று *20* பவுனுக்கு ஒரு 'டிராப்ட்' சர் வில்லியம் பெயருக்கு அனுப்பியிருக்கிறேன். அங்குள்ள நிலைமையும் இது போலவே தான் இருக்கிறது. இருந்தாலும், மக்கள் விண்ணப்பம் செய்து கொண்டதன் மீது கால்நடை பாதைகள்* சம்பந்தமாக உள்ள விதியை போலீசார் கண்டிப்பாக அமலுக்குக் கொண்டுவர முற்படவில்லையென்று அறிகிறேன்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள,
**மோ. க. காந்தி**

## 11

தபால் பெட்டி *6522*, ஜோகன்னஸ்பர்க்,
மே *10*, *1903*

கனம் தாதாபாய் நௌரோஜி,
லண்டன்.

அன்புள்ள ஐயா,

சென்ற ஏப்ரல் *16*வ நீங்கள் எழுதிய கடிதத்திற்காக நான் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

லார்டு ஜார்ஜின் பதில் ஓரளவு திருப்தியாக இருக்கிறது. எனினும் நாங்கள் கோரும் சட்டம் நிறைவேறுவதில் எவ்வளவு அதிகமான தாமதம் ஏற்படுகிறதோ, அவ்வளவு அதிகமான கஷ்டத்திற்கு இந்தியர்கள் உள்ளாக வேண்டியிருக்கும். மிகவும் குறைந்த சம்பளத்தில் தொழிலாளர்கள் வருவதைக் கட்டுப்படுத்த

* எவ்வளவு சுத்தமான உடை உடுத்திக் கொண்டிருந்தாலும் கிழக்கு லண்டன் பகுதிகளில் உள்ள நடைபாதைகளில் செல்லும் இந்தியர்கள் தண்டனைக்கு உள்ளாவார்கள் என்பதே அந்த விதியாகும். அதன்படி ஓர் இந்தியர் 2 பவுன் அபராதம் விதிக்கப்பட்டார்.

வேண்டும் என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிறோம். காலனிக்கு வரும் இந்தியத் தொழிலாளர்களின் தொகை பெரிதல்ல. நேட்டால் அடிப்படையில் நியாயமான திருத்தங்களுடன் சட்டம் வருவதை நாங்கள் ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறோம். ஆனால் இந்தியர்களைக் கட்டாயப்படுத்தி பஜார்களில் ஒதுக்கி வைக்கும் கொள்கையை ஓர் இந்தியர் கூட ஒப்புக்கொள்ளவில்லை. எனினும் புதிதாக விண்ணப்பம் செய்துகொள்ளுவோர் விஷயத்தில் மாத்திரம் அச்சட்டத்தை அமுலுக்குக்கொண்டு வருவதாயின், பஜார் முறை வெற்றிபெற நாங்கள் சர்க்காருடன் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறோம். பஜார் முறைக்கு உட்படும்படி இந்தியர்களைக் கட்டாயப்படுத்தும் சட்டம் எதுவும் அமுலுக்கு வரக்கூடாது என்பதே முக்கியமாகும். இந்தியர்களை ஒதுக்கி வைக்கும் தனி இடங்களே பஜார்கள் என்று இங்கே வழங்கப்படுகின்றன. அவ் விஷயமாக அரசாங்கத்துக்கு நான் எழுதியுள்ள கடிதத்தின் பிரதியையும், திரான்ஸ்வால் ஐரோப்பியர்கள் அனுப்பிய விண்ணப்பத்தை இணைத்து எழுதிய கடிதத்தின் பிரதியையும் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

உங்களுடைய மற்ற அலுவல்களுக்கிடையே நான் கத்தை கத்தையாக தஸ்தாவேஜுகளை அனுப்பி உங்களுக்கு சிரமத்தைக் கொடுத்து வருகிறேன் என்பதை அறிவேன். இருந்தாலும் இந்தப் பிரச்னை மிக மிக முக்கியமானது என்பதே நான் கூறும் ஒரே சமாதானமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 12

*25, 26* கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,
ஜோகன்னஸ்பர்க், மே *24, 1903*

கனம் தாதாபாய் நௌரோஜி,
லண்டன்.

ஐயா,

திரான்ஸ்வாலிலும், கிழக்கு லண்டனிலும் உள்ள இந்தியர்களின் நிலைமை பற்றிய அறிக்கையொன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இந்தியர்களைப் பாதிக்கும் தற்போதுள்ள சட்டத்தை மாற்றும் விஷயமாக லார்டு மில்னரின்* அறிக்கையை ஸ்ரீ

---

* லார்டு ஆல்பிரட் மில்னர் (1854–1925) 1897லிருந்து 1905 வரையில் தென்னாப்பிரிக்காவில் திரான்ஸ்வால் கவர்னராக இருந்தபோது மிகுந்த செல்வாக்குடன் விளங்கினார். பின்னர் 1918ல் அவர் பிரிட்டனில் யுத்த மந்திரியாகவும், 1919–21ல் காலனி மந்திரியாகவும் இருந்தார்.

சேம்பர்லேன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று நாங்கள் பத்திரிகைகளில் வாசித்தோம். அதன் நகல் ஒன்று உங்களுக்கு அனுப்பப்படுமென நம்புகிறேன். அப்படி அனுப்பப்பட்டால், முதலில் நான் அதைப் பார்க்காமல் நீங்கள் எந்த நகலையும் அங்கீகரிக்கமாட்டீர்கள் என்றும் நம்புகிறேன்.

ஆரஞ்ச் ரிவர் காலனியில் உள்ள சட்டம் இந்தியர்கள் அங்கே வருவதையே முற்றிலும் தடை செய்வதாக இருக்கிறது. எனவே அவ்விஷயமாக ஏதாவது செய்ய வேண்டியது அவசியமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 13

*25, 26 கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,*
*ஜோகன்னஸ்பர்க், மே 31, 1903*

அன்புள்ள ஐயா,

ஸ்ரீ சேம்பர்லேன் தென்னாப்பிரிக்காவில் தங்கியிருந்த போது நடந்த மாஜிஸ்திரேட் கோர்ட் நடவடிக்கைகளின் பிரதி ஒன்றை, ஹீடல்பர்க்கில் உள்ள வியாபாரிகளின் வேண்டுகோளுக்கு இணங்க இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இதை உங்களுக்கு அனுப்ப வேண்டுமென அவர்கள் கூறினார்கள். எனினும் அதன் மீது தாங்கள் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ள மாட்டீர்களென நம்புகிறேன். இங்கேயுள்ள நமது தேச மக்களிடையே தற்போது அமைதியின்மையும், குழப்பமும், பீதியும் நிலவிவருவது இயல்பேயாகும். எனவே அவர்கள் எவ் விஷயத்தையும் அமைதியாகவும் நிதானமாகவும் பரிசீலனை செய்ய இயலாதவர்களாக இருக்கிறார்கள். ஆகையால் ஸ்ரீ நாஸரிடமிருந்தோ அல்லது என்னிடமிருந்தோ வராத எந்த அறிக்கைகளையும் பெற்றுக்கொள்வதிலோ அல்லது அவற்றையொட்டி நடவடிக்கை எடுத்துக்கொள்வதிலோ எச்சரிக்கையாக இருக்கும்படி தங்களை வேண்டிக் கொள்கிறேன். ஹீடல்பர்க் நடவடிக்கைகளில் விவரிக்கப்பட்டுள்ளவை போன்ற சில அசௌகரியங்களை சகித்துக்கொள்ள வேண்டும் என்பதே எங்கள் கொள்கையாக இருக்கிறது; அப்படித்தான் இருக்கவும் வேண்டும். அது பெரும் பிரச்னையின் ஒரு பகுதியேயாகும். தற்போதுள்ள சட்டத்தை ரத்து செய்யும் விஷயத்திலேயே நமது முழு கவனத்தையும் செலுத்த முயற்சிக்க வேண்டும்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள,

**மோ. க. காந்தி**

## 14

தபால் பெட்டி 6522, ஜோகன்னஸ்பர்க்,
செப்டம்பர் 7, 1903

அன்புள்ள ஐயா,

இன்று உங்களுக்குத் தபாலில் அனுப்பப்பட்டுள்ள 'இந்தியன் ஒபினியனி'ல், ஸ்ரீ சேம்பர்லேன் நிகழ்த்தியுள்ள பிரசங்கத்தின் சாரத்தை நீங்கள் காணலாம்.

ஒப்பந்தத்தின்மீது இங்கே வரும் இந்தியத் தொழிலாளர்களை, அவர்களுடைய ஒப்பந்த காலம் முடிந்ததும் கட்டாயப்படுத்தித் திருப்பி அனுப்புவதற்கு இசையும்படி லார்டு கர்ஸனைத் தூண்டும் நோக்கத்துடன், சென்ற ஆண்டு நேட்டால் அரசாங்கத்தின் சார்பில் இந்தியாவுக்கு ஒரு கமிஷன் சென்றது உங்களுக்கு நினைவிருக்கலாம். அக் கமிஷன் திரும்பி வந்துவிட்டது. ஆனால் நேட்டால் அரசாங்கம் அவ்விஷயமாக இன்னும் யாதொரு அறிக்கையும் வெளியிடவில்லை. எனினும் மிகவும் ஆட்சேபகரமான முறையில் நிர்ப்பந்தப்படுத்தும் கொள்கையை இந்திய சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்பதையே ஸ்ரீ சேம்பர்லேனின் பிரசங்கம் காட்டுகிறது. அதாவது ஒப்பந்தத் தொழிலாளர்களின் சம்பளத்தில் ஒரு பகுதி, அவர்கள் இந்தியாவுக்குத் திரும்பியதும் கொடுக்கப்பட வேண்டும் என்பதுதான். இது தற்காலிக அடிமைத்தனம் என்பதைத் தவிர வேறு எதுவுமில்லை. சுதந்திரமாக நேட்டாலில் குடியேறியுள்ள இந்தியர்களுக்கு அதிக உரிமைகள் அளிப்பதற்குப் பதிலாக ஒப்பந்தத் தொழிலாளர்களுக்கு அத்தகைய நிபந்தனையை விதிப்பதாக இருந்தால்கூட, அதை ஒப்புக்கொள்ளக் கூடாது என்பதில் தென்னாப்பிரிக்காவில் உள்ள நாங்கள் உறுதியுடன் இருந்து வருகிறோம். ஒப்பந்தத் தொழிலாளர்களின் பிரச்னைக்கும், சுதந்திரமாக இந்தியாவிலிருந்து வந்துள்ளவர்களைப் பாதிக்கும் லைசன்ஸ் போன்ற மற்ற விஷயங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. சுதந்திரமாக வந்துள்ள இந்தியர்களை நீதியுடன் நடத்துவதாக உத்தரவாதம் அளிக்காவிடில், இந்தியாவிலிருந்து ஒப்பந்தத் தொழிலாளர்கள் அனுப்புவதை அறவே நிறுத்திவிட வேண்டும். ஆனால் சுதந்திரமாக வருவோர் நேர்மையுடன் நடத்தப்பட வேண்டும் என்பதற்காக, நேட்டாலுக்கு அழைத்து வரப்படும் ஒப்பந்தத் தொழிலாளர்களின் சுதந்திரத்தைப் பறிகொடுப்பது மிகவும் ஒழுங்கீனமான, இழிவான காரியமாகும். சுதந்திரமாக வந்துள்ள இந்தியர்கள் அந்த நிலையை ஒரு காலத்திலும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். எனவே ஒப்பந்தத் தொழிலாளர்களைக் கட்டாயப்படுத்தி இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பும் முறையை, தொடர்ந்து எதிர்த்து வரவேண்டும். அவ்விதம் திருப்பி அனுப்புவதை ஒப்புக்கொண்டு விட்டதாகவே ஸ்ரீ சேம்பர்லேனின் அறிக்கையிலிருந்து தெரிகிறது. ஆனால் நேட்டால் சர்க்காரோ முற்றிலும் மௌனம் சாதித்து வருகிறார்கள். எனவே, ஸ்ரீ சேம்பர்லேன்

தவருக அவ்விதம் கூறியிருக்கிருர் என்று நம்புவதற்கு இடமிருக்கிறது.

வியாபாரிகள் லைசன்ஸ் சம்பந்தமான போராட்டம் நேட்டாலில் மீண்டும் தலைதூக்கத் தொடங்கியிருக்கிறது. அது லார்டு மில்னர் விடுத்த அறிக்கையின் நேரடியான விளைவேயாகும். நேட்டால் இந்தியர்கள் இப்போது இயல்பாகவே அதிக தைரிய சாலிகளாகிவருகிருர்கள். புதுவருடம் நெருங்கிக்கொண்டிருப்பதால், இப்போது நிலைமை மிகவும் நெருக்கடியான கட்டத்தை அடைந்திருக்கிறது.

நியூகாஸிலில் மிகச் சிறந்த கட்டிடத்திற்குக் கூட ஒரு பிரிட்டிஷ் இந்தியருக்கு லைசன்ஸ் கொடுக்க மறுத்துவிட்டார்கள். இச்சம்பவத்தை நீங்கள் 'இந்தியன் ஒபினியனி'லிருந்து தெரிந்துகொள்ளலாம். டர்பனில் நான்கு லைசன்ஸ்கள் மறுக்கப்பட்டுவிட்டன. அந்த லைசன்ஸ்கள் புதியவை அல்ல. வியாபாரம் வேறு கட்டிடங்களுக்கு மாற்றப்பட்டதற்காக லைசன்ஸ்கள் கொடுக்க மறுத்துவிட்டார்கள். டர்பனிலிருந்து ஸ்ரீ நாஸரும் உங்களுக்குக் கடிதம் எழுதுவார். வியாபாரிகள் லைசன்ஸ் சட்ட சரித்திரத்தைப் பற்றி ஆரம்பம் முதல் நன்கு அறிவேனுதலால், அவ்விஷயமாகவும் நான் எழுதலாமென நினைத்தேன்.

சிறிது காலத்திற்கு முன் அனுப்பப்பட்ட நீண்ட தந்தி ஒன்றில் விவரிக்கப்பட்டிருந்தபடியே திரான்ஸ்வாலின் நிலைமை இருந்துவருகிறது. இங்கே தற்போது இந்தியர்களுக்கு லைசன்ஸ் கொடுக்கும் விஷயமாக ஒரு திட்டவட்டமான அறிக்கை வெளியிட வேண்டியதும், உண்மையானவர்களுக்கு லைசன்ஸ் கொடுப்பதில் உள்ள தடை நீங்கவேண்டியதும் அவசரமாகும்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி**

## 15

*25, 26 கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,*
*ஜோகன்னஸ்பர்க், நவம்பர் 23, 1903*

அன்புள்ள ஐயா,

திரான்ஸ்வாலிலுள்ள இந்திய வியாபாரிகளின் நிலையைப் பற்றி சென்ற வாரம் நான் தங்களுக்கு எழுதியிருந்தேன். சாத்தியமாயின், ஸ்ரீ பிராட்ரிக்கையும், ஸ்ரீ லிட்டில்டனையும் நேரில் பேட்டி கண்டு பேச ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அதில் யோசனை கூறியிருந்தேன். எவ்வளவுக்கு நான் அதைப் பற்றிச் சிந்திக்கிறேனே அவ்வளவுக்கு, அத்தகைய நடவடிக்கை

ஏதாவது எடுத்துக் கொள்ள வேண்டியது முற்றிலும் அவசியமென எனக்குத் தோன்றுகிறது. அத்தகைய பேட்டியின் போது மிகவும் அவசரமான பிரச்னையை யொட்டி மாத்திரமே விவாதிக்கலாம். தற்போது லைசன்ஸ்கள் இருக்கும் வியாபாரிகளின் உரிமைகளே அப்பிரச்னையாகும்.

பஜார்களுக்காக உத்தேசிக்கப்பட்டுள்ள மனைகளைப் பற்றி பொறுப்பு வாய்ந்தவர்கள் விடுத்துள்ள அறிக்கைகளை, இப்போது வெளிவந்துள்ள 'இந்தியன் ஒபினியன்' இதழில் நீங்கள் காணலாம். அந்த அறிக்கைகள் தவறானவை என்றும், அந்தந்த நகரப் பிரதேசங்களில் குறிப்பிட்ட அந்த மனைகள் மாத்திரமே கிடைக்கக்கூடியவையாக இருக்கின்றன என்றும் பெரும்பாலான புகார்களுக்கும் சர்க்கார் பதிலளித்திருக்கிறார்கள். அந்த மனைகள் வியாபாரத்திற்குச் சிறிதும் தகுதியற்றவை என்று கூற நான் தயங்கவில்லை. உண்மையில், இந்தக் கருத்தை சர்க்காரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் வேறு மனைகள் கிடைக்கவில்லை என்ற காரணத்தைக் கூறி அவர்கள் தட்டிக் கழிக்க முற்பட்டிருக்கிறார்கள். அது எப்படியாயினும், தற்போது ஒதுக்கிடங்களுக்கு வெளியே வியாபாரம் செய்து கொண்டிருப்பவர்கள் தங்கள் வியாபாரத்தை ஒதுக்கிடங்களுக்கு மாற்றிக் கொண்டு செல்லுவதென்ற பேச்சே எழ இடமில்லை. ஏற்கனவே லார்டு மில்னரின் அறிக்கையைப் பற்றி நான் குறிப்பிட்டிருக்கிறேன். அவர்களை ஒதுக்கிடங்களுக்கு மாற்ற தாம் ஒரு காலத்திலும் உத்தேசிக்கவில்லை என்றே அவரது அறிக்கை கூறுகிறது. அவர்கள் எல்லோரும் அகதிகளாவர். சென்ற ஜனவரி மாதம் ஸ்ரீ சேம்பர்லேன் தம்மைக் கண்டு பேசிய தூது கோஷ்டியினரிடம் கூறியதும் அதுதான். பிரிட்டிஷ் இந்தியர்களின் பொதுவான அந்தஸ்தைப் பற்றிய பிரச்னை ஒரு புறமிருக்க, பிரிட்டிஷ் காலனி காரியாலயத்தினரும் இந்தியா மந்திரி காரியாலயத்தினரும் போதிய அளவு வற்புறுத்துவார்களாயின், ஏழை மக்களுக்கு நீதி கிடைக்க வழி உண்டு என்பதில் சந்தேகமில்லை.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

# 16

*25, 26, கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,*
*ஜோகன்னஸ்பர்க், நவம்பர் 30, 1903*

அன்புள்ள ஐயா,

சென்ற வாரம் சர்க்காரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. யுத்தம் ஆரம்பமானபோது லைசன்ஸ் பெற்றோ அல்லது பெறாமலோ வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த சகலருக்கும்

பஜார்கள் அல்லது ஒதுக்கிடங்களுக்கு வெளியே வியாபாரம் செய்ய உரிமை உண்டு என்று பஜார் நோட்டீஸைத் திருத்தும்படி சட்டசபையைக் கேட்கப்போவதாக அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது ஓரளவு பரிகாரம் அளிப்பதாக இருப்பினும், அது அற்பமான பரிகாரமே. தற்போதுள்ள எல்லா லைசன்ஸ்களையொட்டியும் அவ்விதம் உறுதி அளிப்பதுதான் நீதியாகும். தவிர 'யுத்தம் ஆரம்பமானபோது வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த' என்ற வார்த்தைகளின் விளைவாகப் பல சிக்கல்கள் எழும். உதாரணமாக, *1899*-ஆம் ஆண்டிலோ அல்லது அதற்கும் முன்போ வியாபாரத்தில் ஈடுபட்டு, அக்டோபர் 11ல் யுத்தம் தொடங்கியபோது திரான்ஸ்வாலில் இராமலும், வர்த்தகத்தில் ஈடுபடாமலும் இருப்பவர்களின் நிலை என்ன? அவர்கள் எல்லோரையும் சமமாகவே நடத்த வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. பல ஆண்டுகளாக திரான்ஸ்வாலில் வியாபாரம் செய்து யுத்தம் ஆரம்பமான போது வியாபாரம் செய்யாமல் இருப்பவர்களைக் காட்டிலும், யுத்தம் ஆரம்பமாவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன் வியாபாரத்தை ஆரம்பித்தவருக்கு மிகமிகக் குறைந்த உரிமையே உண்டு. நான் ஏற்கனவே கூறியிருப்பதுபோல், தற்போது லைசன்ஸ்கள் உள்ள வர்த்தகர்கள் எவருக்கும் பஜார்கள் என்ற ஒதுக்கிடங்களில் வியாபாரம் செய்வது முற்றிலும் அசாத்தியமான காரியமாகும். எனவே ஸ்ரீ பிராட்ரிக்கையும் ஸ்ரீ லிட்டில்டனையும் பேட்டி கண்டு பேசி ஆவன செய்வதற்கான முயற்சியை நீங்கள் மேற்கொள்ளுவீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 17

25, 26, கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,
ஜோகன்னஸ்பர்க், செப்டம்பர் 5, *1904*

ஐயா,

இந்தியப் பிரச்னைகள் பற்றிய விவகாரங்கள் இப்போது நெருக்கடியான ஒரு கட்டத்தை அடைந்திருக்கின்றன. இன்று வரையிலுள்ள எல்லா விவரங்களையும் 'இந்தியன் ஒபினியனி'லிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அதில் வெளியாகியுள்ள பிரிட்டிஷ் இந்திய சங்கத்தின் விண்ணப்பம், நிலைமையைத் தெளிவாக விளக்குகிறது. அச் சங்கத்தின் யோசனைகள் மிகவும் மிதமானவை. அது பிரிட்டிஷ் இந்தியர்களின் உரிமையான குறைந்த பட்ச கோரிக்கையையே வெளியிட்டிருக்கிறது. காலனி ஆங்கிலேயர்கள் கூறிய நியாயமான எல்லா ஆட்சேபணைகளுக்கும் அது தக்க சமாதானம் கூறியிருக்கிறது. கல்வி சம்பந்தமான சோதனைக்குக் கூட இந்தியர்கள் விட்டுக் கொடுத்திருக்

கிறார்கள். ஆனால் லைசன்ஸ்கள் சம்பந்தமாகவும் நில பாத்தியம் சம்பந்தமாகவும் சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ளும் உரிமை இருக்கவேண்டியது முற்றிலும் அவசியமாகும். அவசிய மாயின், சில பகுதிகள் ஐரோப்பியர்களுக்கு மாத்திரமே சொந்தமாக இருக்க வேண்டுமென ஒதுக்கிவைக்கலாம். லைசன்ஸ்கள் சம்பந்தப்பட்டவரையில் நிலைமையை நான் மீண்டும் தெளிவாக்கிவிட வேண்டும். லைசன்ஸ் சட்டம் எதுவும் தற்போதுள்ள லைசன்ஸ்களுக்கு எவ்விதத்திலும் தடையாக இருக்கக் கூடாது. லைசன்ஸ் பெற்றோ அல்லது பெருமலோ யுத்தத்துக்கு முன் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தவர்களுக்கும், ஆனால் பிரிட்டிஷார் ஆக்கிரமித்துக் கொண்டபின் முக்கியமாக காலனிக்குத் திரும்பிவர இயலாததன் காரணமாக லைசன்ஸ் எடுக்காதவர்களுக்கும், சுதந்திரமாக வியாபாரம் செய்யும் உரிமையில் லைசன்ஸ் சட்டம் தலையிடுவதாக இருக்கக்கூடாது. எனினும் சட்டப்படி வியாபார ஸ்தலங்கள் சுத்தமாக வைத்துக் கொள்ளப்படவேண்டும்; கணக்குப் புத்தகங்களும் ஆங்கில மொழியில் வைத்துக் கொள்ளப்பட வேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளுக்கும் உட்படாத வியாபாரிகளை மாத்திரமே லைசன்ஸ் சட்டம் கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும். புதிய லைசன்ஸ்கள் சம்பந்தப்பட்டவரையில் சர்க்காருக்கோ அல்லது முனிசிபல் அதிகாரிகளுக்கோ தங்கள் விருப்பப்படி செய்ய பூரண அதிகாரம் இருக்கலாம். எனினும் அவர்களுடைய முடிவை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ள இந்தியர்களுக்கு உரிமை இருக்கவேண்டும். இவ்விதம் செய்தால் அப்பிரச்னை தீர்ந்துவிடும். மேற்கண்ட யோசனை, நேட்டால் உதாரணத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். எனினும் நேட்டால் சட்டத்திலுள்ள மிகவும் அநீதியான ஷரத்து இதில் இல்லை. அதாவது சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ள உரிமை இல்லை என்பதே அந்த ஷரத்தாகும். அதன் விளைவாக அங்குள்ள ஒவ்வொரு இந்திய வியாபாரியின் நிலைமையும் நிலையற்ற தாகியிருக்கிறது.

பிரிட்டிஷ் இந்தியர் சங்கத்தின் யோசனைகள் அங்கீகரிக்கப் படுமாயின், ஒரு கமிஷனை நியமிக்க வேண்டிய அவசியமேயில்லை. சட்ட சபைத் தீர்மானத்தில் கூறியுள்ளவாறு லைசன்ஸ்களை நிறுத்திவைக்க முடியாது. லைசன்ஸ்கள் நிறுத்திவைக்கப்பட வில்லையாயின், கமிஷன் நியமிக்க வேண்டும் என்பதை லார்டு மில்னர் ஒப்புக் கொள்வாரென நான் நினைக்கவில்லை. உண்மையில் கமிஷனை நியமிக்க வேண்டும் என்பதன் நோக்கம் இதுதான். ஸ்ரீ லிட்டில்டன் நேரடியாக அனுமதிக்க மறுத்ததை கமிஷன் மறைமுகமாக அனுமதிக்கும்படி செய்வதே அக்கோரிக்கையின் நோக்கமாகும். அது லைசன்ஸ் பிரச்னையை காலவரையறையின்றி ஒத்தி வைத்துவிடும். லைசன்ஸ்கள் கொடுப்பதை நிறுத்தி வைப் பதற்கு ஸ்ரீ லிட்டில்டன் இசைவாராயின், இந்தியர்களின் விரோ

திகள் திட்டவட்டமான எத்தகைய சட்டமும் கொண்டுவர அவச ரப்படமாட்டார்கள்.

ஆரஞ்சு ரிவர் காலனி பிரச்னை இன்னும் எழுப்பப்படவில்லை. அது முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயமென நான் நினைக்கிறேன். அந்தக் காலனி இந்தியர்களின் வருகையை அடியோடு தடுத்திருப்பது மானக்கேடான காரியமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

பின் குறிப்பு: சர் ஆர்தர் லாலியும் காலனி மந்திரி ஸ்ரீ டங்கனும் சென்ற வாரம் லண்டனுக்குப் புறப்பட்டுச் சென்றிருக்கிறார்கள். பலரும் அடங்கிய ஒரு தூது கோஷ்டியினர் அவர்களைப் பேட்டி கண்டு, அவர்களுடன் விவாதிக்க வேண்டுமென நான் யோசனை கூறலாமா? அது அவர்களுடைய மனத்தை மிகவும் மாற்றலாம். அது எப்படியாயினும், பல்வேறு கருத்துகள் கொண்ட பிரமுகர்கள் இந்தப் பிரச்னையை யொட்டி ஒரே அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்பதையாவது அது அவர்களுக்குக் காட்டும்.

## 18

25, 26, கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,
ஜோகன்னஸ்பர்க், செப்டம்பர் 19, 1904

அன்புள்ள ஐயா,

இந்தியர்களின் நிலைபற்றி இந்த வாரம் வெளிவந்துள்ள அரசாங்க அறிக்கையிலிருந்து, இந்திய பஜார்களுக்கான மனைகள் பிரச்னையை ஸ்ரீ லிட்டில்டன் வற்புறுத்தியிருப்பதை நான் அறிந்து கொண்டுள்ளேன்.

சர் ஆர்தர் லாலியின் அறிக்கைக்குப் பதிலாக பிரிட்டிஷ் இந்தியர்கள் அனுப்பிய விண்ணப்பத்திலிருந்து, அந்த மனைகளைப் பற்றித் தாங்கள் அறிந்துகொண்டிருப்பீர்கள். அதைத் தாங்கள் மறந்துவிடக்கூடாது என்பதற்காக, பெரும்பாலான மனைகளும் வியாபாரத்திற்கு முற்றிலும் தகுதியற்றவை என்ற உண்மையை மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறேன். தகுந்த அந்தஸ்துள்ள ஐரோப்பியர்களும் அந்த உண்மையை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவ்விவரங்களெல்லாம் கவர்னருக்கு அறிவிக்கப்பட்டுள்ளன. க்ருகர்ஸ்டிராப் பிரதேசத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள மனைகள்தான் தகுதியானவை. எனவே, இடம் தேவையானவர்கள் யாதொரு நிர்ப்பந்தமுமின்றியே விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார்கள். புதிய மனைகளுக்கு ஏற்பாடு செய்துள்ள மற்ற இடங்களில் யாதொரு விண்ணப்பமும் செய்துகொள்ளப்படவில்லை.

எனவே, நிர்ப்பந்தப்படுத்தி இந்தியர்களை ஒதுக்கிவைப்பதைத் தவிர்க்க வேண்டும் என்பதே முக்கியமாகும். தகுதியான இடங்களில் பஜார்களுக்கான மனைகளுக்கு வழி செய்வதாயின், அந்தப் பிரச்னை தானாகவே தீர்ந்துவிடும்.

அனுமதிச் சீட்டு இல்லாமல் டிரான்ஸ்கின் பிரதேசங்களில் இந்தியர்கள் பிரவேசிக்கக் கூடாது என்று தடுத்து வெளியாகியுள்ள கேப் நிர்வாகியின் பிரகடனத்தைப் பற்றி 'இந்தியன் ஒபினியனி'ல் வந்துள்ள தலையங்கத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். இது ஒரு புதிய தடையாகும். இதற்குக் காரணம் என்ன என்பதை அறிந்துகொள்ள முடியவில்லை.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 19

*பிரிட்டிஷ் இந்தியர் சங்கம், 25, 26, கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு, ஜோகன்னஸ்பர்க், செப்டம்பர் 26, 1904*

அன்புள்ள ஐயா,

உங்களுடைய இரு கடிதங்களும் கிடைத்தன. அவற்றிற்காக உங்களுக்கு நன்றி. ஸ்ரீ உமருக்கு எழுதியுள்ள கடிதங்களிலும் நீங்கள் என்ன யோசனைகள் கூறியிருக்கிறீர்கள் என்பதை அவர் என்னிடம் சொன்னார். நீங்கள் கூறியுள்ள யோசனைக்கு இணங்கவே இனிமேல் முக்கிய பகுதிகளை அடையாளமிட்டு 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையை உங்களுக்கு நேரில் அனுப்பும்படி நான் ஸ்ரீ நாஸருக்கு எழுதியிருக்கிறேன். பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் கடைசியாகச் சமர்ப்பித்துள்ள விண்ணப்பத்தில் குறிப்பிட்டிருக்கும் யோசனைகளின்படி சட்டம் கொண்டுவர உத்தேசிக்கவில்லை என்று சர்க்கார் எழுதியிருக்கிறார்கள். எனவே, எதிர்காலத்தில் இந்தியர் குடியேற்றத்தையும், புதிதாக விண்ணப்பம் செய்து கொள்வோருக்கு லைசன்ஸ் வழங்குவதையும் கட்டுப்படுத்துவதுடன் மாத்திரம் சர்க்கார் திருப்தியடையப் போவதில்லை என்பதையே அது காட்டுகிறது. பிரிட்டிஷ் இந்தியர்கள் எல்லோரையும் பாதிக்கும் வகையில் சட்டம் கொண்டு வரும் கொள்கையை நிலைநிறுத்த வேண்டும் என்பதே சர்க்காரின் உத்தேசம் என்பது அதிலிருந்து தெரிகிறது. அப்படியாயின், அது மிகவும் அபாயகரமான ஒரு கொள்கையாகும்; அது ஸ்ரீ சேம்பர்லேனின் கொள்கைக்கு நேர் மாறுபாடானதாக இருக்கும். திரான்ஸ்வாலில் வேறுவிதமான சட்டம் அனுமதிக்கப்பட்டால், கேப், நேட்டால் அரசாங்கங்களும் அதைப் பின்பற்ற முற்பட்டு விடும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 20

பிரிட்டிஷ் இந்தியர் சங்கம், 25, 26 கோர்ட் சேம்பர்ஸ்,
ரிஸ்ஸிக் தெரு, ஜோகன்னஸ்பர்க், அக்டோபர் 31, 1904

அன்புள்ள ஐயா,

செப்டம்பர் 19உ தாங்கள் எழுதியுள்ள கடிதம் வந்தது. பிளேக் நோய் பீறிட்டதைக் குறித்து நான் ஏப்ரல் 4உ எழுதிய கடிதத்தின் நகலும் அத்துடன் வந்து சேர்ந்தது. அவ்விஷயமாக லார்டு மில்னரின் பதில் மிகவும் வேதனையைக் கொடுக்கின்றது. அதையொட்டி அவருக்கு நான் ஒரு கடிதம் எழுத உத்தேசித்திருக்கிறேன். டாக்டர் போர்ட்டருக்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்து முழுவதும் வெளியாகியுள்ள 'இந்தியன் ஒபினியன்' இதழை இத்துடன் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். பிளேக் நோய் எப்படி ஏற்பட்டதென்பதை அது திட்டவட்டமாக நிரூபிக்கின்றது என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். ஒதுக்கிடங்களை நகரசபை 1903 செப்டம்பர் மாதம் தனது நிர்வாகத்தில் எடுத்துக்கொண்டது. ஆனால் 1904 மார்ச் 20உதான், அதாவது ஆறு மாதங்களுக்குப் பிறகுதான் பிளேக் நோய் பரவி வருவதாக உத்தியோக தோரணையில் அறிவிக்கப்பட்டது. அந்த நோயைத் தடுப்பதற்கான திட்டவட்டமான யோசனைகள் பிப்ரவரி 15உ கூறப்பட்டன. ஆனால் அதற்குப் பிறகுகூட நிலைமையைச் சீர்படுத்துவதற்கான முறைகள் எதுவும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. ஏப்ரல் 4உ நான் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருப்பது போல், ஜோகன்னஸ்பர்க் முனிசிபாலிடி படுமோசமான முறையில் அசட்டையாக இருந்திராவிடில், பிளேக் நோய் ஒருபோதும் ஏற்பட்டிராது. எனவே மார்ச் மாதம் பிளேக் நோய்க்கு ஏராளமானவர்கள் பலியாக நேர்ந்ததற்கு அந்த முனிசிபாலிடியேதான் பொறுப்பாளியாகும். நிலைமை மோசமாகிவிட்டதை உணர்ந்த பின் முனிசிபாலிடி நிர்வாகிகள், பிளேக் நோய் நிவாரணத்திற்காக தண்ணீரைப் போல் பணத்தைச் செலவிட்டார்கள். அது அவர்களுக்குப் பெருமையேயாகும். எனினும் அதனல் கோரமான பழைய சம்பவங்களுக்குப் பரிகாரம் ஏற்பட்டுவிடாது. 1901-ம் ஆண்டிலேயே, ஒதுக்கிடங்கள் ஆரோக்கியத்திற்குக் கேடு விளைவிப்பவையாக இருக்கின்றன என்று அதிகாரிகளின் அறிக்கைகள் கூறின என்பது உண்மையே. அப்படியிருந்தும் 1903 செப்டம்பர் மாதம் 26உ வரையில் அந்த இடங்கள் அதே நிலையில்தான் இருந்தன; அவற்றைச் சீர்திருத்த யாதொரு முறைகளும் கைக்கொள்ளப்படவில்லை. இதில் விசித்திரம் என்னவெனில், அது வரையில் அங்கு பிளேக் நோய் உண்டாகவில்லை! நகர சபை அவ்விடத்தைத் தங்கள் வசம் எடுத்துக் கொண்ட பிறகுதான் அங்கே பிளேக் நோய் பீறிட்டெழுந்தது. அந்த இடத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ள முனிசிபாலிடிக்கு சந்தர்ப்பம் இருந்தும் கூட அது அவ்விதம் செய்யவில்லை. இப்போது பிளேக் தீர்ந்துவிட்டது. அதனல் இந்தியர் மிகுந்த துன்பத்திற்கு உள்ளாயினர் என்பதை

எனது அறிக்கையிலிருந்து நிரூபிப்பது எளிதாகும். "நகர எல்லையை அடுத்துள்ள பிரதேசங்களில் மேற்கொள்ளப்பட்ட 'பரிகார முறைகள்' இந்தியர்களை ஒழிப்பதற்காகக் கைக் கொள்ளப் பட்டவையேயன்றி, பிளேக் நோயைத் தடுப்பதற்காகக் கைக் கொள்ளப்பட்டவை அல்ல" என்று டாக்டர் பேக்ஸ் கூறியது முற்றிலும் உண்மையேயாகும்.

பயங்கரமான பிளேக் நோய் பரவியதற்கு நகர சபைதான் காரணம் என்பது, காலனி ஆரோக்கிய அதிகாரியும், சட்டசபை அங்கத்தினருமான டாக்டர் டர்னர் கூறியிருப்பதிலிருந்தும் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி ருஜுவாகியிருக்கிறது. இந்த உண்மை யையும் கவனிக்கும்படி தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்தக் கடிதத்தை எந்த விதத்தில் உபயோகிப்பது சிறந்த தென நீங்கள் நினைக்கிறீர்களோ அந்த விதத்தில் உபயோகித் துக்கொள்ளலாம்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 21

தபால் பெட்டி *6522*,
ஜோகன்னஸ்பர்க், நவம்பர் *5, 1904*

அன்புள்ள ஐயா,

உங்களுடைய அக்டோபர் *13*௳ கடிதம் கிடைத்தது. உங் களுக்கும், கிழக்கு இந்தியர் சங்கம், சர் வில்லியம், சர் மாஞ்செர்ஜீ ஆகியோருக்கும் வாரந்தோறும் கடிதம் எழுதுவதை நான் ஒரு கடமையாகக் கொண்டிருக்கிறேன். பிளேக் நோயைப் பற்றிய கடிதப் போக்குவரத்து சம்பந்தமாக நான் லார்டு மில்னருக்கு எழுதிய கடிதத்தின் நகல் ஒன்றை இத்துடன் அனுப்பியிருக் கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 22

தபால் பெட்டி நெ. *6522*,
ஜோகன்னஸ்பர்க், டிசம்பர் *10, 1904*

அன்புள்ள ஐயா,

'இந்தியன் ஒபினியன்' இப்போது அதன் வாழ்வில் மூன்றாவது கட்டத்தை அடைந்திருக்கிறது. அதன் சம்பந்தமாக எடுத்துக்

கொண்டுள்ள முக்கியமான முறைகளைப் பற்றிக் கூறி உங்களுக்கு சலிப்பு ஏற்படும்படி நான் செய்யமாட்டேன். இந்த மாதம் அதன் சம்பந்தமான முழு விவரங்களும் வெளியாகியிருந்ததை நீங்கள் பார்த்திருப்பீர்கள். பொதுவான விஷயங்கள் பற்றி இங்கிலாந்திலிருந்து வாரந்தோறுமோ அல்லது இரண்டு வாரங் களுக்கு ஒரு தடவையோ ஒரு கடிதம் பிரசுரிக்க வேண்டுமென உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. முக்கியமாக, தென்னுப்பிரிக்காவில் இந்தியர்கள் பிரச்னைகள் பற்றி லண்டனில் நிலவிவரும் கருத்து களையும் குறிப்பிடவேண்டும். அந்த வேலையை மேற்கொள்ளக் கூடிய யாராவது ஒருவரைத் தாங்கள் சிபாரிசு செய்ய முடியுமா? இந்த வாரம் நான் விசேஷமாகக் குறிப்பிட வேண்டிய செய்தி வேறு எதுவுமில்லை.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 23

தபால் பெட்டி *6522*,
ஜோகன்னஸ்பர்க், மார்ச் *11, 1905*

அன்புள்ள ஸ்ரீ தாதாபாய்,

ஜோகன்னஸ்பர்க்கைச் சேர்ந்த ஸ்ரீ எல். டபிள்யூ. ரிச்சை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கவே இதை நான் எழுது கிறேன். ஸ்ரீ ரிச்சும் நானும் பல ஆண்டுகளாக ஒருவரையொருவர் நன்கு அறிவோம். அவர் இந்தியர்களுக்கு ஆதரவாக திட்டவட்ட மான கருத்துகள் உடையவர். இந்தியர்களுக்குச் சிறந்த முறை யில் தொண்டு புரிய வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவர் பாரிஸ்டர் படிப்புக்காக இங்கிலாந்துக்குச் செல்லுகிறுர்.

நீங்கள் அவருக்கு ஆதரவாக இருந்தால், அதை நான் ஒரு பேருதவியாகக் கருதுவேன். தென்னுப்பிரிக்கா இந்தியர் பிரச்னையை ஸ்ரீ ரிச் ஆராய்ச்சி செய்துள்ளார்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 24

பிரிட்டிஷ் இந்தியர் சங்கம், 25, 26, கோர்ட் சேம்பர்ஸ்,
ரிஸ்ஸிக் தெரு, ஜோகன்னஸ்பர்க், மார்ச் 20, 1905

தாதாபாய் நௌரோஜி அவர்களுக்கு,
22, கென்னிங்டன் ரோடு,
லண்டன்.

அன்புள்ள ஐயா,

பிரிட்டிஷ் இந்தியர்கள் சம்பந்தமாக தென்னுப்பிரிக்காவெங்கும் அதிகாரிகள் ஒரு பிற்போக்கான கொள்கையைப் பின்பற்றி வருகிருர்கள். அவ்விஷயமாக சமீபத்தில் வந்த 'இந்தியன் ஒபினியன்' இதழ்களைக் கவனிக்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். கேப் காலனியில் வியாபாரிகள் லைசன்ஸ் மசோதா ஒன்றைக் கொண்டு வர முயற்சித்து வருகிருர்கள் என்பதை அவ் விதழ்களில் நீங்கள் காணலாம். கேப்பிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர் களுக்குப் பேரபாயத்தை உண்டாக்குவதே அந்த மசோதாவின் நோக்கமாகும். நேட்டாலில் துப்பாக்கிகள் மசோதா ஒன்று கெஜட்டில் பிரசுரமாகியிருக்கிறது. அது காரணமின்றி பிரிட்டிஷ் இந்தியர்களை அவமதிப்பதாக இருக்கிறது. முனிசிபல் கார்ப்பொ ரேஷன் மசோதாவிலுள்ள ஷரத்துகளும் மிகவும் ஆட்சேபகரமான வையாக இருக்கின்றன. ஆரஞ்சு ரிவர் காலனியிலும் இந்தியர் களின் மீது மேன்மேலும் கஷ்டங்களைச் சுமத்தும் உப சட்டங்கள் கொண்டுவரப்படுகின்றன. ஆரஞ்சு ரிவர் காலனியைப்பற்றி இதுவரையில் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஒரு கேள்விகூட கேட்கப் படவில்லை. மற்ற விஷயங்களுடன் நேட்டால் முனிசிபல் மசோதா வைப் பற்றிய விவரங்களையும் இப்போது வெளியாகியுள்ள 'இந்தியன் ஒபினியன்' இதழில் காணலாம். இந்தக் கடிதத்தில் கண்டுள்ள மற்ற அம்சங்களைப் பற்றிய விவரங்கள் அடுத்த இதழில் வெளியாகும்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

## 25

தபால் பெட்டி 6522,
ஜோகன்னஸ்பர்க், மார்ச் 25, 1905

அன்புள்ள ஸ்ரீ தாதாபாய்,

'தென்னுப்பிரிக்கா புல்லெட்டின்' சம்பந்தமாக ஜனவரி 20உ தாங்கள் எழுதிய கடிதத்திற்கு இதுவரையில் என்னுல் பதில் எழுத இயலவில்லை. அப் பத்திரிகைக்கு தற்போது பண

உதவி எதுவும் செய்வது சிறிதும் சாத்தியமல்ல. நிதியில் பெரும் பகுதியும் இங்கே போராட்டத்தை நடத்துவதில் செலவாகி விட்டதே அதற்குக் காரணம். இருந்தாலும் இந்தப் பத்திரிகை உதவி புரிவதற்கு உரியது என்று தாங்கள் நினைத்தால், அதற்காக 10 பவுன் கொடுப்பது சாத்தியமாக இருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

## 26

பிரிட்டிஷ் இந்தியர் சங்கம்,
ஜோகன்னஸ்பர்க், ஏப்ரல் 10, 1905

அன்புள்ள ஐயா,

பரீட்சார்த்தமாக திரான்ஸ்வாலில் நடந்த வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பிலிருந்து, யுத்தத்திற்கு முன் இருந்ததைக் காட்டிலும் இப்போது பிரிட்டிஷ் இந்தியர்களின் நிலைமை சீர்பட்டிருக்கிறது என்று ஸ்ரீ லிட்டில்டன் கூறியதாகத் தெரிகிறது. இந்தக் கூற்றுக்கு ஏப்ரல் 8உ 'இந்தியன் ஒபினியன்' இதழில் பதில் அளிக்கப்பட்டிருப்பதை நீங்கள் பார்க்கலாம். பொதுவாக நிலைமை சீர்படவில்லை என்பது நிச்சயம்; யுத்தத்துக்கு முன் இருந்ததைக் காட்டிலும் மேலும் மோசமாகியிருக்கிறது!

நேட்டாலில் இந்தியர்களுக்கு விரோதமான பல மசோதாக்கள் கொண்டு வரப்பட்டிருக்கின்றன என்பதை 'இந்தியன் ஒபினியனி'லிருந்து நீங்கள் அறிந்து கொள்ளலாம். ஆரஞ்சு ரிவர் காலனி, நிற மக்கள் மீது தனக்குள்ள பிடியை மேன்மேலும் இறுக்கிவருகிறது. ஒவ்வொரு நகரமாக இந்தியர்களுக்கு விரோதமான தடைச் சட்டங்கள் நிறைவேறிவருகின்றன. அத்தகைய சட்டங்கள் பிரிட்டிஷ் அரசியல் முறைக்கு முரணானவை. அவை மசோதாக்களாக சட்டசபையில் வந்திருக்குமாயின், அவற்றை ஸ்ரீ லிட்டில்டன் ஒரு காலத்திலும் அனுமதித்திருக்க மாட்டார்.

பிரிட்டிஷ் சர்க்காரின் இந்தியப் பிரஜைகள், உதவிக்கு உங்களையே எதிர்பார்க்கிறார்கள்.

அவர்களுக்கு நீங்கள் பாதுகாப்பளித்து நீதி வழங்குவீர்களென நான் மனப்பூர்வமாக நம்புகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

## 27

ஜோகன்னஸ்பர்க்,
மே 15, 1905

ஐயா,

சிறிது காலமாக நேட்டால், இந்தியர்களுக்கு எதிரான போராட்டத்தில் மிகவும் சுறுசுறுப்பாக இருந்துவருகிறது. சர்க்கார் கெஜட்டில் வெளியாகியுள்ள பல்வேறு மசோதாக்களும் இப்போது நேட்டால் பார்லிமெண்டில் விவாதத்துக்கு வந்திருக்கின்றன.

துப்பாக்கிக் கட்டுப்பாடு மசோதா, எள்ளளவும் நியாயமற்ற முறையில் சுதேசிகளுடன் இந்தியர்களையும் சரிசமானமான நிலையில் வைப்பதாக இருக்கிறது. அந்த மசோதாவைப் பொறுத்த மட்டில் இந்தியர்கள் சுதேச விவகார இலாகாவினுடைய ஆதிக்கத்தின் கீழ் இருப்பார்கள். அதன் விளைவு என்னவாகும் என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

மற்றொரு மசோதாவும் பிரசுரமாகியிருக்கிறது. அதன்படி, நேட்டாலிலுள்ள கிராமப் பிரதேச நிலங்களில் இந்தியர்கள் வசித்துக் கொண்டிருந்தால், அது யாரும் வசிக்காத ஓர் இடமாகவே கருதப்படும். ஒரு நபரோ அல்லது கம்பெனியோ 249 ஏக்கர்களுக்கு மேல் சொந்தத்தில் வைத்துக்கொண்டுள்ள அந்த நிலத்தில் வசிக்காவிடில், அத்தகைய நிலத்திற்கு ஒவ்வொரு ஏக்கருக்கும் வருடந்தோறும் வரி வசூலிக்கப்படும். அந்த நிலங்களில் இந்தியர்கள் வசித்துக் கொண்டிருந்தால், அவர்கள் அவற்றின் சொந்தக்காரர்களாக இருந்தாலொழிய அந்த நிலங்களுக்குச் சொந்தக்காரர்கள் வரி கொடுக்க வேண்டும். இது அநீதியும், இந்தியர்களை அவமதிப்பதுமாகும். நேட்டால் கடற்கரை பிரதேச நிலங்களை விவசாயத்திற்குத் தகுதிவாய்ந்தவையாகச் செய்தவர் இந்தியர்களேயாவர்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 28

ஐயா,

'இந்தியன் ஒபினியன்' இதழ் ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். 1885-ம் வருடம் மூன்றாவது சட்டப்படி இந்தியர்கள் சொந்தமாக நிலம் வைத்துக் கொள்வது இப்போது எவ்வளவு தூரம் சாத்தியம் என்பதை அதன் தலையங்கத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்தியர்கள் சொந்தத்தில் ஜங்கம சொத்து

வைத்துக் கொள்வதற்கு சுப்ரீம் கோர்ட் பூரண சுதந்திரம் அளித்துத் தீர்ப்புக் கூறியிருக்கிறது. ஆனால் அவ்விஷயமாக ஒரு நிபந்தனை இருக்கிறது. அதாவது அவ்விதம் சொந்தத்தில் சொத்து வைத்துக் கொள்ளும் இந்தியருக்கு ஓர் ஐரோப்பிய நண்பர் டிரஸ்டியாக இருக்கவேண்டும். அங்கு ஏதாவது சட்டம் தயாரிக்கப்படுமாயின், *1885-3*-வது சட்டப்படி இந்தியர்கள் சொந்தத்தில் சொத்துவைத்துக்கொள்வது முடியாத காரியம் அல்ல என்ற உண்மையை கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே இதை நான் கூறுகிறேன்.

*1885-3*-வது சட்டத்தின் ஸ்தானத்தில் வரப்போகும் புதிய சட்டம், அநேகமாக அந்தச் சட்டத்தைப் போலவே இருக்கு மென்று தெரிகிறது. அதாவது அந்தச் சட்டத்தின் கீழ் இந்தியர் களுக்கு உள்ள உரிமைகளைக் காட்டிலும் அதிகமான உரிமைகளை அளிக்க வேண்டும் என்பது சர்க்காரின் உத்தேசமல்ல. சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்புக்கு இணங்க, இந்தியர்களின் வர்த்தக உரிமை களைக் கட்டுப்படுத்துவதற்குத் தாம் சம்மதிக்க முடியாது என்று ஸ்ரீ லிட்டில்டன் கூறியதுபோல், சொந்தத்தில் நிலம் வைத்துக் கொள்ள இந்தியர்களுக்கு உள்ள உரிமைகளைக் கட்டுப்படுத்தும் எந்தச் சட்டத்தையும் தாம் அனுமதிக்க முடியாதென்றும் அவர் இப்போது மறுத்துவிட வேண்டும்.

தற்போது நேட்டால் பார்லிமெண்டு பரிசீலனை செய்துவரும் இந்தியர்களுக்கு விரோதமான மசோதா, வரப்போகும் அபாயத் திற்கு அறிகுறியாகும். இப்போது பலவிதத்திலும் இந்தியர்களின் உரிமைகளைப் பறிக்கும் பல சட்டங்கள் உருவாகிவருகின்றன. அந்தச் சட்டங்கள் அவசியமற்றவை என்பதுடன், இந்தியர்களை அவமதிப்பனவாகவும் இருக்கின்றன. வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்து லார்டு கர்ஸன் பேசியபோது குறிப்பிட்டது போல், நேட்டாலுக்கு ஒப்பந்தத்தின்மீது இந்தியர்கள் செல்லுவதைத் தடுக்க வேண்டிய நேரம் வந்திருக்கிறது. இந்தியர்களுக்கு விரோதமான நடவடிக்கைகளை நேட்டால் சர்க்கார் நிறுத்தி, தங்கள் நிலைமையை மாற்றிக் கொண்டாலன்றி, ஒப்பந்த இந்தியர் கள் நேட்டாலுக்குச் செல்லுவதைத் தடுத்துவிட வேண்டும்.

(மேற்கண்ட கடிதம் *24-6-1905* தேதிக்கு முன் காந்திஜியினால் எழுதப்பட்டதாகும்)

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 29

*பிரிட்டிஷ் இந்தியர் சங்கம், ரிஸ்ஸிக் தெரு,*
*ஜோகன்னஸ்பர்க், மார்ச் 19, 1906*

ஐயா,

'இந்தியன் ஒபினியனி'ல் மார்ச் 10வ இதழைப் பார்க்கும்படி உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன். குடியேற்றக் கட்டுப்பாடு சட்டத்தின் கீழ் விநியோகிக்கப்படும் நற்சாட்சிப் பத்திரங்களுக் கும், அனுமதிச் சீட்டுகளுக்கும் மிகவும் அதிகமான கட்டணங்கள் விதிக்கப்படுவதைக் கண்டித்து சர்க்காருக்கு நேட்டால் இந்தியர் காங்கிரஸ் எழுதியுள்ள கடிதம் அதில் அடங்கியிருக்கிறது.

அந்தக் கட்டணம் முற்றிலும் அநீதியான ஒரு தண்டம் என்பதையும், அவ்விதம் விதிப்பதற்குச் சிறிதும் நியாயமில்லை என்பதையும் நான் சொல்லத் தேவையில்லை.

தென்னப்பிரிக்காவிலுள்ள இந்தியர் சமூகத்துக்கு திரான்ஸ் வாலில் மற்றொரு அடி கொடுத்திருக்கிறார்கள். மார்ச் 17வ 'இந்தியன் ஒபினியன்' இதழில் 1885-3-வது சட்டத்தின் கீழ் திரான்ஸ்வால் சுப்ரீம் கோர்ட்டில் நடந்துள்ள வழக்கு விவரங்களை நீங்கள் காணலாம். அவ்வழக்கைப் பற்றிய முழு விவரங்களும், விமர்சனமும் 'இந்தியன் ஒபினியனி'ல் வெளியாகியிருக்கின்றன*.

அவ்விரு விஷயங்களும் அவசரமாகக் கவனிக்கப்பட வேண் டியவை.

தங்கள் நம்பிக்கையுள்ள,
**மோ. க. காந்தி**

## 30

*தபால் பெட்டி 6522,*
*ஜோகன்னஸ்பர்க், மே 16, 1906*

அன்புள்ள ஐயா,

ஸ்ரீ ஏ. எச். வெஸ்டை உங்களுக்கு அறிமுகம் செய்துவைப் பதற்காகவே இக் கடிதம் எழுதுகிறேன். அவர் இண்டர்நாஷனல் அச்சுக்கூடத்தை நிர்வகிப்பதுடன், 'இந்தியன் ஒபினியனு'க்கு உதவி ஆசிரியராகவும் இருந்துவருகிறார். எந்தத் திட்டத்தின் கீழ் 'இந்தியன் ஒபினியன்' பிரசுரமாகி வருகிறதோ, அந்தத் திட்டத்தை உருவாக்கியவர்களில் ஸ்ரீ வெஸ்டும் ஒருவர். ஸ்ரீ வெஸ்ட்

---

*மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ள வழக்கைக் குறித்து 'இந்தியன் ஒபினியன்' எழுதியிருந்த தலையங்கத்தை, பின் சேர்க்கைப் பகுதி யில் காணலாம்.

அவரைச் சேர்ந்தவர்களைப் பார்க்க வருகிறார். அங்கே அவர் இருக்கும் சிறிது காலத்திற்குள் அவரால் இயன்றவரையில் பொது அலுவல்களிலும் ஈடுபடுவார்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 31

டர்பன், நேட்டால்,
ஜூன் 8, 1906

அன்புள்ள ஐயா,

கமிஷனர்கள் எந்தக் கப்பலில் புறப்படுகிறார்களோ அதே கப்பலில் நான் மாத்திரம் புறப்பட்டு இங்கிலாந்துக்கு வரவேண்டு மென்று யோசனை கூறி தாங்கள் அனுப்பியிருந்த தந்தி கிடைத்தது.

அதன்படி புறப்படுவதற்கான ஏற்பாடுகளையும் நான் செய்து கொண்டிருந்தேன். ஆனால் அச்சமயம் நேட்டால் சர்க்காரிட மிருந்து ஒரு கடிதம் வந்தது. போரில் காயமடைந்தவர்களைத் தூக்கிச் செல்லும் இந்தியர் படையை அமைப்பதாக இந்தியர் சமூகம் கூறியதை ஒப்புக் கொண்டு அக்கடிதத்தில் பதில் எழுதி யிருக்கிறார்கள். எனவே எந்தச் சமயத்திலும் நான் போர் முனைக்குச் செல்லுவதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

இந்நிலையில் இங்கிலாந்துக்குச் செல்லுவதைக் காட்டிலும் அப்படையை அமைப்பதுதான் மிக மிக முக்கியமானது என்று நாங்கள் முடிவு செய்திருக்கிறோம். ஆரம்பக் கட்டத்திலாவது நான் அந்தப் படையுடன் இருக்க வேண்டுமென எல்லோரும் கூறுகின்றனர். வைத்திய உதவி சம்பந்தமான அலுவல்களில் இந்தியர்களுக்குள்ள திறமையைச் சோதிக்க நேட்டால் சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

எனவே இங்கிலாந்துக்குச் செல்லும் நோக்கத்தை, தற் போதைக்கு நான் விட்டுவிட வேண்டியிருக்கும் என்றே அஞ்சு கிறேன்.

தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் நலன்களை மேற் பார்வையிட்டுவரும் லண்டன் கமிட்டி, அவர்களுடைய நிலைமையை பிரிட்டிஷ் சர்க்காரிடம் எடுத்துக் கூற அவசியமான முறைகளைக் கைக்கொள்ளுமென நம்புகிறோம்.

திரான்ஸ்வாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் சார்பில் அரசியல் கமிட்டியிடம் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையை நீங்கள்

பார்த்திருக்கலாம். அதில் முழுவிவரங்களும் அடங்கியிருக்கின்றன. அந்த அறிக்கை 'இந்தியன் ஒபினியன்' 2ம் தேதி இதழில் வெளியாகி யிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 32

30—6—1906-ல் தாதாபாய் நௌரோஜிக்கு காந்திஜி எழுதிய ஒரு கடிதத்தின் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தேதியில் காந்திஜி போர் முனையில் இருந்தார் என்றாலும், அவர் அதற்கு முன்பே இக்கடிதத்தை எழுதிவைத்திருந்து ஜூன் 30உ தபாலில் சேர்த்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. ஜூலை 24உ காலனி மந்திரிக்கு தாதாபாய் எழுதிய கடிதம் ஒன்றில், காந்திஜி எழுதிய கடிதத்தின் சாரத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். அதன் விவரமாவது :

அடையாளமிட்ட 'இந்தியன் ஒபினியன்' இதழைத் தனித் தபாலில் அனுப்பியிருக்கிறேன். முனிசிபல் கார்ப்பொரேஷன் மசோதா சம்பந்தமாக நேட்டால் காலனி கவர்னருக்கும் லார்டு எல்ஜினுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தை அந்த இதழில் நீங்கள் காணலாம். "நிற மக்கள்" என்பதற்கு ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்தில் யாதொரு மாறுதலும் செய்யக் கூடாதென்று சமீபத்தில் நடந்த முனிசிபாலிடிகள் சங்கக் கூட்டம் ஒன்றில் தீர்மானம் நிறைவேறியிருப்பதையும் தாங்கள் கவனிக்கக் கோருகிறேன். இந்தத் தீர்மானம், முன் போலவே இந்திய சமூகத்தை அவமதிப்பதாகவும், இழிவு படுத்துவதாகவும் இருக்கிறது. எனவே இவ்விஷயமாக காலனி மந்திரி கூறிய யோசனையை நடைமுறையில் கொண்டுவர வேண்டுமென இந்தியா மந்திரியும் இந்திய அரசாங்கமும் வற்புறுத்துவார்கள் என்று நம்பப்படுகிறது. பார்லிமெண்டு தேர்தலில் வாக்குரிமை இராதவர்களுக்கு முனிசிபல் தேர்தலிலும் வாக்குரிமை இருக்கக்கூடாதென்று முனிசிபல் மசோதாவில் ஒரு ஷரத்து இருக்கிறது. லார்டு எல்ஜின் தமது கடிதத்தில் அதைப்பற்றிக் குறிப்பிடவேயில்லை. பார்லிமெண்டு வாக்காளர்கள் ஜாபிதாவில் இல்லாத இந்தியர்களுக்கெல்லாம் வாக்குரிமை இல்லை என்பதை, காலஞ்சென்ற ஸ்ரீ ஹாரி எஸ்கோம்பின் விருப்பத்திற்கிணங்க நேட்டால் இந்தியர் சமூகம் முன்பு ஒப்புக்கொண்டது. அதற்கு மேல் எவ்விதத்திலும் அவர்களுடைய வாக்குரிமைக்குப் பாதகம் ஏற்படாது என்ற நிபந்தனையின் மீதே இந்தியர்கள் அதற்கு இணங்கினர் என்பது உங்களுக்கு நிச்சயமாக நினைவிருக்கும். மேலே கூறிய விதம் இந்தியர்களுக்கு முனிசிபல் வாக்குரிமை மறுக்கப்படுமாயின், அவர்களுடைய நிலைமை இந்தியாவில் இருப்பதைக் காட்டிலும் மோசமாகிவிடும்.

இந்தியாவில் அவர்களுக்கு பிரதிநிதித்துவ ஸ்தாபனங்கள் இருக்கின்றன. சில முனிசிபாலிடிகளின் நடவடிக்கைகளைப் பற்றிய விவரங்கள் பல சந்தர்ப்பங்களிலும் 'இந்தியன் ஒபினியனி'ல் வெளியாகியிருக்கின்றன. அவை பிரிட்டிஷ் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்குமிடையே படுமோசமாகவும், எதேச்சாதிகாரத்துடனும் வேற்றுமை பாராட்டிவருகின்றன. எனவே இந்தியர்களுடைய முனிசிபல் உரிமைகள் பறிக்கப்படுவதைத் தடுப்பதற்கான முறைகளை உடனே எடுத்துக் கொண்டாலன்றி, நேட்டாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர் சமூகத்திற்குப் பெரும் அநீதி இழைத்ததாக முடியும்.

## 33

*21, 24 கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக், ஆண்டர்சன் தெரு முனை,*
*ஜோகன்னஸ்பர்க், 30-7-1906*

அன்புள்ள ஸ்ரீ நௌரோஜி,

போர் முனையிலிருந்து நான் இப்போதுதான் திரும்பி வந்துள்ளேன். அரசியல் கமிட்டியிடம் நாங்கள் சமர்ப்பித்த அறிக்கையை பிரிட்டிஷ் காலனி மந்திரிக்கும் இந்தியா மந்திரிக்கும் அனுப்பியிருப்பதாகக் கூறி தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. சர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு நான் எழுதிய கடிதத்தின் நகலை இத்துடன் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

எடின்பரோ சர்வகலாசாலையின் எம். ஏ. பட்டப் பரீட்சையில் வெற்றிபெற்ற உங்களுடைய பேத்திக்கு எனது வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 34

ஜோகன்னஸ்பர்க்,
ஆகஸ்டு *6, 1906*

அன்புள்ள ஐயா,

திரான்ஸ்வால் காலனி காரியதரிசியான ஸ்ரீ டங்கன் சட்டசபையில் நிகழ்த்தியுள்ள பிரசங்கத்தின் நகலை உங்களுக்கு இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

அது மிகவும் விபரீதமான ஒரு பிரசங்கமாகும், அதை அடிப்படையாகக் கொண்டு சட்டம் கொண்டுவரப்படுமாயின், இந்தியர் சமூகம் பயங்கரமான அநீதிக்கு இலக்காக நேரும். உத்தேசிக்

கப்பட்டுள்ள சட்டத்தில் எள்ளளவும் நீதியின், நேர்மையின் அறி குறியே இல்லை. சட்டத்தை மறைத்துக் கொண்டிருக்கும் நளின மான சொற்களை நீக்கிவிட்டுப்பார்த்தால், காலனியிலுள்ள ஒவ் வொரு இந்தியரும் யாதொரு காரணமுமின்றி மூன்ருவது முறை யாக இப்போது தங்களைப் பதிவு செய்து கொள்ளவேண்டும் என்பதே அதன் அர்த்தமாகும். மத சம்பந்தமான காரியங்களுக் காக இந்திய டிரஸ்டிகளின் பெயரில் நிலத்தைப் பதிவு செய்து கொள்ளவேண்டும். ஏற்கனவே சுப்ரீம் கோர்ட் அவ்விதம் தீர்ப் புக் கூறியிருப்பதால் அதில் புதிய சலுகை எதுவும் இல்லை. காலஞ் சென்ற அபூ பேக்கர் அமாதின் சொத்துக்களுக்கு மாத்திரம் பரிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. அவ்விஷயத்தில் கூட நீதி வழங் கவோ, நேர்மையுடன் நடக்கவோ முன்வந்திருப்பதாகக் கூறு வதற்கில்லை. தனி நபரான ஒரு பிரிட்டிஷ் பிரஜைக்கு பிரிட்டிஷ் சர்க்கார் செய்ய வேண்டிய கடமையையே செய்திருக்கிருர்கள்.

உத்தேசிக்கப்பட்டுள்ள சட்டம் நிறைவேறுமாயின், உண்மை யில் பிரிட்டிஷ் இந்தியர்களின் நிலைமை இப்போதிருப்பதைக் காட்டிலும் மிகவும் மோசமாக இருக்கும். 3 பவுன் பதிவு வரி, வருடந்தோறும் கொடுக்க வேண்டிய வரி அல்ல என்பதை மறந்து விடக்கூடாது. 1885-3-வது சட்டப்படி காலனியில் உள்ள வர்கள் 3 பவுன் கொடுத்திருக்கிருர்கள். மீண்டும் அவர்கள் கொடுக்க வேண்டும் என்று கூற முடியாது. எனவே உத்தே சிக்கப்பட்டுள்ள வரி வஜா அர்த்தமற்றதாகும். ஏனெனில் அந்த வஜா, புதிதாகத் குடியேறுவோர் விஷயத்தில் அமலுக்கு வராது. வரப்போகும் குடியேற்ற சட்டம் மேலும் கடுமையான கட்டுப் பாடுகளை விதிப்பதாக இருக்கும். இங்கு வருவோருக்கு ‘பர்மிட்’ கள் வழங்குவது ஓர் ஏமாற்று வித்தையாகும். தற்போதுள்ள சட்டம் கூட, அவ்விதம் ‘பர்மிட்’கள் வழங்குவதை அனுமதிக் கின்றது. எனவே அவ்விதம் வழங்குவதில் புதிய சலுகை எது வும் இல்லை.

உண்மையான நிலைமையை பிரிட்டிஷ் சர்க்கார் அறிந்து கொள்ளவில்லை என்றே நான் மிகவும் அஞ்சுகிறேன். ஸ்ரீ டங்கன் விவரித்துள்ள விதம் சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் உண் மையிலேயே சலுகைகள் அளிக்கப்போவதாக, இங்குள்ள சர்க்கார் பிரிட்டிஷ் சர்க்காரை நம்பும்படி செய்திருக்கிருர்கள்.

நான் ஏற்கனவே கூறியதுபோல், உத்தேசிக்கப்பட்டுள்ள சட்டத்தின் கீழ் இந்தியர்களின் நிலைமை மேலும் மோசமாகிவிடும். ஏனெனில் புதிய சட்டத்தின் பெயரால் செய்யக்கூடிய விஷமங் களுக்கு எல்லையே இராது. டச்சு சர்க்காரின் ஆட்சி இருந்த காலத்தில் இந்தியர்கள் பதிவு செய்து கொள்வதில் அதிக சிக்கல் எதுவும் இல்லை. பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் அதில் கட்டுப் பாடுகள் அதிகமாயின. கண்ணியம் வாய்ந்த இந்தியர்களிடமிருந்து கூட கட்டை விரல் அடையாளம் வாங்கிக் கொண்டார்கள். இப் போது மூன்ருவது தடவையாக பதிவு முறை அமலுக்கு வருமா

யின், அது மேலும் அதிகமான கட்டுப்பாடுகள் விதிப்பதாக இருக்கும் என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

யுத்தத்திற்கு முன் இங்கு வசிக்காத ஒரு சில இந்தியர்கள் கள்ளத்தனமாக காலனிக்குள் பிரவேசித்துள்ளனர் என்பதற்காகவே, அதிகமான கட்டுப்பாடுகள் அடங்கிய புதிய சட்டம் உருவாகிவருகிறது. அவர்கள் காலனிக்குள் பிரவேசித்ததற்கு 'பர்மிட்' இலாகா அதிகாரிகளின் ஊழலே காரணம். அவர்களின் ஊழல் எல்லை மீறி அதிகமாகவே, பிரிட்டிஷ் இந்தியர் சங்கத்தின் முயற்சியால் அத்தகைய அதிகாரிகளைக் கைது செய்து வழக்குத் தொடர்ந்தனர். ஆனால் ஜூரிகள் அவர்களுக்குச் சாதகமாக இருந்ததால் அந்த அதிகாரிகள் விடுதலை செய்யப்பட்டார்கள் என்றாலும், அவர்கள் குற்றவாளிகள் என்பதில் சர்க்காருக்குச் சந்தேகம் இல்லாததால், அவ்விரு அதிகாரிகளையும் சர்க்கார் வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள்.

எனவே காலனியில் பொறுப்பாட்சி அமலுக்கு வருமுன் பிரிட்டிஷ் இந்தியர்களுக்குப் பரந்த அளவில் நீதிவழங்க வேண்டும்; யுத்தத்திற்கு முன் பிரிட்டிஷ் சர்க்கார் கூறிய உறுதி மொழிகளை நிறைவேற்ற வேண்டும். கேப் காலனியிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களுக்குச் சமமாக மற்ற காலனியிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களையும் நடத்துவதாக அவர்கள் உறுதி கூறியிருக்கிறார்கள். அவ்விதம் செய்தாலொழிய, *1885-3*-வது சட்டத்தை அப்படியே அமலில் வைத்துக் கொள்வதே சிறந்தது.

இப்போது எதிர்பாராத நிலைமை ஏற்பட்டிருப்பதால், தென்னாப்பிரிக்காவிலிருந்து ஒரு தூது கோஷ்டி செல்லுவதென்ற பிரச்னையை ஒத்திவைக்க வேண்டியதுதான். ஏனெனில், திரான்ஸ்வாலில் உள்ள பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு அநீதி இழைக்கும் புதிய சட்டத்தைத் தடுக்க நம் சக்தி முழுவதையும் உபயோகிக்க வேண்டியிருக்கும்.

இந்தியா மந்திரியையும் காலனி மந்திரியையும் நேரில் பேட்டி காண வேண்டியது அவசியமென நினைக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 35

ஹோட்டல் ஸிஸில், லண்டன் டபிள்யூ. ஸி.,
நவம்பர் *16, 1906*.

அன்புள்ள ஐயா,

தென்னாப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களை நீதியுடனும் நேர்மையுடனும் நடத்தும்படி செய்வதற்காக ஒரு கமிட்டியை

அமைக்கும்படி தென்னுப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் இந்திய சமூகத்தினர் எங்களுக்கு அதிகாரம் அளித்திருக்கிருர்கள். அதற்கு, 'தென்னுப்பிரிக்கா பிரிட்டிஷ் இந்தியர் கண்காணிப்புக் கமிட்டி' என்று பெயர் சூட்ட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

அக்கமிட்டியில் நீங்களும் கலந்து கொள்ள விரும்புகிறீர்களா என்பதை, நீங்கள் அன்புடன் அறிவித்தால் நாங்கள் மகிழ்ச்சி யடைவோம்.

அதைச் சேர்ந்த ஒரு நிர்வாகக் கமிட்டியில் நியமிக்கப்படும் அங்கத்தினர்களைத் தவிர மற்றவர்கள் இடைவிடாமலும், தீவிர மாகவும் வேலை செய்ய வேண்டுமென எதிர்பார்க்கப்படவில்லை.

தென்னுப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்கள் நியாயமா கவும், நேர்மையுடனும் நடத்தப்படவில்லை என்று கருதுவோரின் தார்மிக ஆதரவையும் செல்வாக்கையும் பெறவேண்டும் என்பதே எங்களுடைய கவலையாகும்.

தென்னுப்பிரிக்காவைச் சேர்ந்த ஸ்ரீ எல். டபிள்யூ. ரிச், கமிட் டியின் காரியதரிசியாக இருக்க இசைந்துள்ளார்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

எச்.ஓ.அலி

# 36

ஹோட்டல் ஸீஸில், லண்டன், டபிள்யூ. ஸி.,
நவம்பர் *17, 1906*

அன்புள்ள ஸ்ரீ நௌரோஜி,

உங்களுடைய குறிப்புகள் கிடைத்தன. ஸ்ரீ போலக்கிட மிருந்து வந்த கடிதங்களை, நேரில் கண்டு உங்களிடம் விளக்கிக் கூறலாமென நான் நம்பிக்கொண்டிருந்தேன். ஆனல் ஆசியாக் காரர்கள் அவசரச் சட்டம் சம்பந்தமாக நான் ஓய்ச்சல் ஒழிவின்றி அலுவல்களில் ஈடுபட்டிருந்ததால், அவ்விதம் செய்ய முடிய வில்லை.

டாதம் மசோதாவை நேட்டால் சட்டசபை நிராகரித்து விட்டதால், தற்போது மேற்கொண்டு எதுவும் செய்வதற்கில்லை.

ஸ்ரீ அப்துல் கனி அனுப்பிய மனுவையொட்டி நீங்கள் ஏற் கனவே நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

தங்களுக்கு ஸ்ரீ போலக் எழுதிய கடிதங்களை, உங்களுடைய 'பைலில்' வைத்துக் கொள்வதற்காக நான் திருப்பி அனுப்பி யிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 37

ஜோகன்னஸ்பர்க்,
மார்ச் 25, 1907

அன்புள்ள ஸ்ரீ நௌரோஜி,

சர் வில்லியமுக்கு நான் எழுதிய கடிதத்தின் நகலை நீங்கள் வாசிப்பதற்காக இத்துடன் அனுப்பியிருக்கிறேன். 'இந்தியா' இதழில் ஒவ்வொரு வாரமும் இதைப் பற்றி விவாதிக்க வேண்டுமென நான் நினைக்கிறேன். திரான்ஸ்வாலில் என்ன முறைகள் மேற்கொள்ளப்பட்டாலும், அவற்றைத் தொடர்ந்து மற்ற எல்லாக் காலனிகளிலும் அதே முறைகள் மேற்கொள்ளப்படும். அவசரச் சட்டம், இந்தியர்களை அவமதித்து இழிவு படுத்தும் நிறவேற்றுமைச் சட்டமேயாகும். அந்தக் கொள்கை ஒரு தடவை அங்கீகரிக்கப்பட்டு விடுமாயின், பின்னர் இங்கே இந்தியர் குடியேற்றத்திற்கு முற்றுப்புள்ளி வைத்ததாகிவிடும்.

தங்கள் நம்பிக்கையுள்ள,
மோ. க. காந்தி

பகுதி இரண்டு

# கோபால கிருஷ்ண கோகலே

(பாரத நாடு பெற்றெடுத்த அருந்தவப் புதல்வர்களில் கோபால கிருஷ்ண கோகலேயும் (1866-1915) ஒருவர். புனு பர்க்குஸன் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராக இருந்த கோகலே 1890-ம் ஆண்டிலிருந்து அரசியலில் ஈடுபட்டு நாட்டுக்குத் தொண்டு புரிந்தார். அவரது கருத்துகள் நீதியையும், நேர்மையையும், புள்ளி விவரங்களையும் அடிப்படையாகக் கொண்டிருந்த தால், பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினர் கூட அவரது வார்த்தைகளுக்குச் செவிசாய்த்து அவருக்கு மரியாதை காட்டிவந்தனர்.

கோகலேயைத் தமது அரசியல் குருவாக காந்திஜி கருதி வந்தாரெனில், கோகலேயின் அருமை பெருமைகளைப் பற்றி அதிகம் கூறவேண்டிய தேவையில்லை. அவர் ஸ்தாபித்த இந்திய ஊழியர் சங்கம் காந்திஜியின் மனத்தைக் கவர்ந்தது. இந்தியாவின் எதிர்காலம் காந்திஜியின் கையில் தான் இருக்கிறது என்பதை, இந்தியாவிலே முதன் முதலாக உணர்ந்த பெருமை கோகலேயையே சார்ந்தது. காந்திஜியின் இடைவிடாத கோரிக்கைக்கு இணங்க கோகலே 1912-ம் ஆண்டில் தென்னுப்பிரிக்காவுக்கு விஜயம் செய்தார். தென்னுப்பிரிக்கா இந்தியர் பிரச்னையில் இந்திய அரசாங்கமும், வைஸ்ராயும், பிரிட்டிஷ் மந்திரிகளும் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டதற்கு கோகலேயின் இடைவிடாத முயற்சியே காரணமாகும் என்பதை கோகலேய்க்கு காந்திஜி எழுதிய பின்வரும் கடிதங்களிலிருந்து தெரிந்து

கொள்ளலாம். பல ஆண்டுகள் வரையில் இம்பீரியல் சட்ட சபையில் அங்கத்தினராக இருந்த கோகலே, 1905-ம் ஆண்டு காசியில் நடந்த காங்கிரஸ் மகாசபைக்குத் தலைமை வகித்து நாட்டிற்கு வழிகாட்டினர்.)

## 1

பக்கிங்காம் ஹோட்டல்,
சென்னை, அக்டோபர் *18, 1896.*

பேராசிரியர் கோகலே,

புனு.

ஐயா,

தென்னுப்பிரிக்காவில் இந்தியர் பிரச்னைபற்றி ஸ்ரீ ஸொஹானியிடம் சில காகிதங்களைக் கொடுத்துவருவதாக நான் வாக்களித்தேன். ஆனல் அவ்விதம் செய்ய நான் அறவே மறந்துவிட்டதற்காக வருந்துகிறேன். இப்போது அவற்றைத் தபாலில் அனுப்பியிருக்கிறேன். அவை ஏதாவது உபயோகமாக இருக்குமென நம்புகிறேன்.

எங்களுடைய லட்சியம் நிறைவேறுவதற்கு, இந்தியாவிலுள்ள சுறுசுறுப்பான பிரபல ஊழியர்கள் அடங்கிய ஒரு கமிட்டி எங்களுக்கு அத்தியாவசியமான தேவையாக இருக்கிறது. அப்பிரச்னை தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களை மாத்திரமல்ல, இந்தியாவுக்கு வெளியே உலகிலுள்ள சகல பாகங்களிலும் வசிக்கும் இந்தியர்களையே பாதிப்பதாக இருக்கிறது. ஆஸ்திரேலிய காலனிகளைப்பற்றிய தந்தியை நீங்கள் வாசித்திருப்பீர்கள் என்பதில் சந்தேகமில்லை. அந்தப் பிரதேசங்களில் இந்தியர் குடியேற்றத்தைத் தடுக்க சட்டம் கொண்டுவந்திருக்கிருர்கள். அந்தச் சட்டத்திற்கு பிரிட்டிஷ் மன்னரின் அனுமதி கிடைப்பது சாத்தியமே. நம்முடைய பெரிய மனிதர்கள் சிறிதும் தாமதமின்றி இந்தப் பிரச்னையை எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிடில், வெகு சீக்கிரத்தில் இந்தியாவுக்கு வெளியே இந்தியர்கள் யாதொரு தொழிலிலும் ஈடுபட முடியாமற்போய்விடும். கல்கத்தாவிலுள்ள இம்பீரியல் சபையிலும், பிரிட்டிஷ் பார்லிமெண்டிலும் அந்தத் தந்தியை அடிப்படையாகக் கொண்டு கேள்விகள் கேட்கலாம் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். அவ்விஷயமாக இந்திய அரசாங்கத்தின் நோக்கம் என்ன என்பது பற்றியும் உடனடியாக விசாரிக்க வேண்டும்.

நான் தங்களுடன் பேசிக் கொண்டிருந்தபோது, அப்பிரச்னையில் நீங்கள் மிகவும் அக்கறை காட்டியதாலேயே மேற்கண்ட விதம் எழுதத் துணிந்தேன்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள,
**மோ. க. காந்தி**

## 2

கோவா கப்பலிலிருந்து
*ஜனவரி 30, 1902*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நாளைக்கு நாங்கள் ரங்கூனுக்குப் போய்ச் சேரலாமென எதிர் பார்க்கிறோம். கால நிலை மிகவும் அருமையாக இருக்கிறது. நீங்கள் இப்போது இந்தக் கப்பலில் இருக்கவேண்டுமென நான் எவ்வளவு விரும்புகிறேன் தெரியுமா! இந்தக் கப்பலில் நீங்கள் பிரயாணம் செய்திருந்தால், உங்களுடைய இருமல் இரண்டே நாட்களில் உங்களை விட்டு ஓடிப் போயிருக்கும். இப் போது நீங்கள் குணமடைந்திருக்கிறீர்கள் என்றும், சரியான டாக் டரிடம் யோசனை கேட்டு வருகிறீர்கள் என்றும் நம்புகிறேன்.

நான் உங்கள் வீட்டில் இருந்த போது நீங்கள் என்னிடம் காட்டிய அன்பிற்கு நான் எவ்விதம் நன்றி செலுத்தப்போகிறேன்?* அந்தஸ்தில் உங்களுக்கும் எனக்கும் உள்ள தூரத்தை அகற்ற நீங்கள் எவ்வளவு அக்கறை எடுத்துக் கொண்டீர்கள் என்பதை நான் எளிதில் மறக்க முடியாது. நீங்கள் என் மீது நம்பிக்கை வைத்து எனக்கு வழிகாட்டியாக இருப்பதையே நான் ஒரு பாக்கியமாகக் கருதி முற்றிலும் திருப்தியடைவேன். அதற்கு மேல் நீங்கள் காட்டும் அன்பிற்கு நான் தகுதியற்றவன். தேசத்திற்கு நான் செய்துள்ள தொண்டுகளை நீங்கள் பெருந்தன்மையுடன் மிகவும் அதிகமாக மதிப்பிட்டிருக்கிறீர்கள் என்பதே எனது உண்மையான அபிப்பிராயமாகும். எனது வாழ்க்கையில் நிகழ்ந்த சிறிய சம்பவங்களை நீங்கள் எல்லைமீறி மிகைபடுத்தியிருக்கிறீர்கள்.

இப்போது நான் நினைத்துப் பார்க்கும் போது, திங்கட் கிழமை மாலை உங்களுடைய விருப்பத்தை ஆட்சேபிக்க எனக்கு உரிமை இல்லை என்பதை உணருகிறேன். நான் மிகவும் தன் மூப்பாக நடந்து கொண்டு விட்டேன். அதனால் உங்களுக்கு வேதனை ஏற்படும் என்பதை நான் உணர்ந்திருந்தால், அத்தகைய உரிமையை நான் எடுத்துக் கொண்டிருக்கமாட்டேன்.† எனது மதியீனத்திற்காக நீங்கள் மன்னிப்பீர்களென நம்புகிறேன்.

---

* காந்திஜி அச்சமயம் கல்கத்தாவுக்கு வந்திருந்தபோது ஒரு மாதம் வரையில் கோகலேயின் வீட்டிலேயே தங்கியிருந்தார்.

† கல்கத்தாவில் கோகலே டிராம் வண்டியில் போவதில்லை; குதிரை வண்டியில் போவதையே வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் மிகுந்த செல் வாக்குடன் விளங்கியதால், பொதுஜனக் கூட்டமுள்ள டிராம் வண்டியில் செல்லுவது எளிதான காரியமல்ல. எல்லோரும் அவரைப் பார்த்து, மரியாதை காட்டத் தொடங்கி விடுவார்கள். ஆனல் இந்தக் காரணத்தை அறி யாத காந்திஜி, அவர் குதிரை வண்டியில் செல்லுவதைக் குறித்து தமது அதிருப்தியைத் தெரிவிக்கவே, காந்திஜி தம்மைத் தவருகப் புரிந்து கொண் டதற்காக கோகலே வருந்தினர். இச்சம்பவத்தையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

கல்வித் துறையில் நீங்கள் செய்துள்ள மகத்தான தொண்டைப் பாராட்டுவோர் இந்தச் சிறிய கப்பலில்கூட பலர் இருக்கின்றனர்.

கோச்சு வண்டிக்காரருக்கு நான் எதுவும் கொடுக்க மறந்து விட்டேன். அவருக்கு ஒரு ரூபாயும், குதிரையைக் கவனித்துக் கொள்ளும் வேலைக்காரருக்கு அரை ரூபாயும் கொடுக்கும்படி அன்புகூர்ந்து ஸ்ரீ படேயிடம் கூறுவீர்களா?

தயவுசெய்து டாக்டர் பி. ஸி. ராயிடம் என்னைப் பற்றி நினைவு படுத்துங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 3

7, மொகல் தெரு,
ரங்கூன், பிப்ரவரி 2, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

பேராசிரியர் கதாவதேயை*, அவர் இங்கிருந்து சென்னைக்குப் புறப்படும் தறுவாயில் நான் சந்தித்தது அதிர்ஷ்டமேயாகும். நேற்று காலை அவர் சென்னைக்குப் புறப்பட்டார். ரங்கூன் சீதோஷ்ண நிலை அவருக்குப் பிடிக்கவில்லை. அதைச் சமாளிப்பது அவருக்குக் கடினமாக இருக்கிறது. விறுவிறுப்பான சீதோஷ்ண நிலையையே அவர் விரும்புகிறார். ரங்கூனில் அத்தகைய நிலை இல்லையென்றே தோன்றுகிறது.

சுகாதாரத்தைப் பொறுத்த வரையில் இது மிகவும் நல்ல இடமேயாகும். தெருக்கள் அகலமாகவும் அழகாகவும் இருக் கின்றன. வடிகால் ஏற்பாடுகளும் நன்றாக நடைபெற்று வரு கின்றன.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

---

* பேராசிரியர் கதாவதே கோகலேயின் நண்பர். காந்திஜி கல்கத்தா வில் இருந்த போது அவரைச் சந்தித்து நட்புக் கொண்டார்.

# 4

ராஜ்கோட்,
மார்ச் 4, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

ஐந்து இரவுகள் வரையில் ரயிலில் பிரயாணம் செய்த பின், சென்ற புதன் கிழமை இங்கு வந்து சேர்ந்தேன். நடுவி லுள்ள ஸ்டேஷன்களில் நான் நின்றிராவிட்டால் ஒரு நாள் முன்பே வந்திருப்பேன்.

மிக மிகக் கஷ்டப்பட்ட பிறகே, 'இண்டர் மீடியேட்' வகுப்பு வண்டிகள் ஒன்றில் எனக்கு ஓர் இடம் கிடைப்பது சாத்திய மாயிற்று. அதுவும், அவசியமாயின் நான் இரவு முழுவதும் நின்று கொண்டே பிரயாணம் செய்கிறேன் என்று கூறிய பிறகே இடம் கிடைத்தது. சில பிரயாணிகளுடைய நண்பர்களின் தந்திரமே அத்தகைய இட நெருக்கடிக்குக் காரணமாகும். அந்த நண்பர்கள், மேற்கொண்டு பிரயாணிகள் உள்ளே வராமல் தடுப்பதற்காக, வண்டிக்குள் இடத்தையெல்லாம் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். வண்டி புறப்படுவதற்காக 'கார்டு' ஊதலை ஊதியதும் அவர்கள் கீழே இறங்கிப் போய் விட்டார்கள்! மூன்ருவது வகுப்பு வண்டிகளில் இடமே இல்லை. கனவானைப் போல் நிதானமாக நடந்து கொள்வோர் மூன்ருவது வகுப்பில் பிரயாணம் செய்வது முடியாத காரியம். எனினும், காசியி லிருந்து நான் மூன்ருவது வகுப்பில்தான் பிரயாணம் செய்தேன். நீங்கள் கூறுவதுபோல், முண்டியடித்து முதலில் வண்டியில் ஏறுவதுதான் கடினமாக இருந்தது. பிறகு எல்லாம் ஆனந்தம் தான். மற்றப் பிரயாணிகளும் நானும் மனம் விட்டுப் பேசினோம். சிற்சில சமயங்களில் நாங்கள் அந்தரங்க நண்பர்களைப் போல் அளவளாவினோம்!

ஏழைப் பிரயாணிகளுக்கு காசி மிகவும் மோசமான ஒரு ஸ்டேஷனுகும். அங்கு லஞ்ச ஊழல் தாண்டவமாடுகின்றது. போலீசாருக்கு லஞ்சம் கொடுத்தாலொழிய, டிக்கெட் வாங்குவது மிகவும் கடினமான காரியம். மற்றவர்களைக் கேட்பது போல் அவர்கள் என்னிடமும் வந்து, நாங்கள் ஏதாவது பணம் கொடுத்தால் எங்களுக்கு டிக்கெட்டுகள் வாங்கித் தருவதாகக் கூறினர். பலரும் அவ்விதமே அவர்களுக்குப் பணம் கொடுத்து டிக்கெட்டுகள் வாங்கிக் கொண்டனர். எங்களில் பணம் கொடுக்க மறுத்துவிட்டவர்கள், டிக்கெட்டு கொடுக்கும் ஜன்னல் திறந்த பிறகு டிக்கெட்டுகள் வாங்குவதற்காக ஏறக்குறைய ஒரு மணி நேரம் காத்திருக்க வேண்டியிருந்தது. சட்டத்தின் பாது காவலரான போலீசாரிடமிருந்து உதை வாங்காமல் டிக்கெட்டுகள் வாங்க முடிந்தால் அது அதிர்ஷ்டமேயாகும். ஆனல் மொகல் சராயில் நிலைமை அதற்கு நேர்மாருக இருந்தது. அங்கு டிக்கெட்

கொடுப்பவர் மிகவும் நல்ல மனிதர். அரசனுயினும் ஆண்டியாயினும் தாம் யாதொரு வேற்றுமையும் பாராட்டுவதில்லை என்று அவர் கூறினர்.

வண்டிகளில் எல்லோரும் முண்டியடித்து ஏறிக் கொண்டோம். வண்டிகளில் உட்கார வேண்டியவர்களின் தொகை 'நோட்டீஸ் போர்டி'ல் குறிப்பிடப்பட்டிருக்கிறதெனினும், யாதொரு கட்டுப்பாடுமின்றி ஏராளமானவர்கள் வண்டிகளில் ஏறிக்கொண்டனர். அத்தகைய நிலைமையில், ஏழைகளான மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளுக்குக் கூட இரவில் பிரயாணம் செய்வது அசௌகரியமாகத்தான் இருந்தது.

'பிளேக்' நோய் இருக்கிறதா என்று மூன்று இடங்களில் பரிசோதனை செய்தனர். அப்போது அதிகாரிகள் கடுமையாக நடந்து கொண்டார்களென நான் கூற முடியாது. மூன்ருவது வகுப்பு வண்டிகளில் எனது அனுபவம் மிகவும் குறைவே என்ருலும், நான் கற்பனை செய்து கொண்டிருந்தபடி பிரயாணிகளின் நிலைமை அவ்வளவு பயங்கரமானதாக இல்லை. எனினும் அதன் சம்பந்தமாக நியாயமான ஒரு முடிவுக்கு வர ஐந்து நாள் பிரயாணம் போதாது. ஆனல் அந்தப் பிரயாணம் காரணமாக எனக்கு அதிக அனுபவமும் அதிக மனோபலமும் ஏற்பட்டிருக்கின்றன. மீண்டும் சந்தர்ப்பம் கிடைத்தவுடன் பிரயாணத்தைத் தொடங்க உத்தேசித்துள்ளேன்.

காசி, ஆக்ரா, ஜெயபூர், பாலன்பூர் ஆகிய இடங்களில் நான் இறங்கினேன். மத்திய ஹிந்து கல்லூரி ஒரு தீய ஸ்தாபனம் அல்ல. இருந்தாலும் அவசரமாகப் பார்த்துவிட்டு அதைப்பற்றி உறுதியுடன் எதுவும் கூறுவது முடியாத காரியம். 'பளிங்குக் கற்களால் கனவு உருவாகியிருக்கிறது' என்று தாஜ் மகாலைப் பற்றிக் கூறுவது சரியே. அது நிச்சயமாக பார்க்கத்தக்கதே. ஜெயபூர் அற்புதமான ஓர் இடமாகும். அங்குள்ள ஆல்பர்ட் மியூஸியம் கட்டிடம் கல்கத்தாவிலிருப்பதைக் காட்டிலும் சிறந்த கட்டிடமாகும். ஜெயபூர் சித்திரக் கல்லூரி ஒரு வங்காளி சூபரிண்டெண்டின் நிர்வாகத்தின் கீழ் முன்னேற்றம் அடைந்து வருகிறது.

என்னுடைய கடிதத்தின் மிகவும் முக்கியமான கட்டத்திற்கு இப்போது நான் வருகிறேன். பாலன்பூரில் சமஸ்தான நிர்வாக அதிகாரியான ஸ்ரீ பட்வாரியைப் பார்ப்பதற்காக நான் சென்றேன். அவர் என்னுடைய நண்பர். அடுத்த ஏப்ரல் மாதத்தில் ரானடே நினைவு நிதிக்குப் பணம் வசூலிப்பதற்காக நானும் உங்களுடன் சேர்ந்து வரலாமென அவரிடம் பேச்சுவாக்கில் சொன்னேன். ஸ்ரீ பட்வாரி கள்ளம் கபடமற்ற மனிதர். அடுத்த ஏப்ரல் மாதத்தில் தொகை வசூலிக்க வருவது பெரும் தவறு என்று அவர் கூறினர். அதன் விளைவாக நமக்கு பத்தாயிரம் ரூபாய் நஷ்டம் ஏற்படும் என்றும் கூறினர். குஜராத்திலுள்ள எல்லா சமஸ்தானங்களும் பஞ்சம் காரணமாகப் பரிதவித்து வருவதாயும்,

எனவே அடுத்த டிசம்பர் அல்லது ஜனவரி மாதம் வசூல் செய்ய முற்படுவதே சிறந்ததென்றும் கூறினர். அவரது அபிப்பிராயத்தை உங்களிடம் கூறிவிட்டேன். மேற்கொண்டு தங்கள் உசிதப்படி செய்யலாம்.

கத்தியவாரைச் சேர்ந்த பல பகுதிகளிலும் பிளேக் நோய் கடுமையாக இருந்து வருகிறது.

என்னைப்பற்றி பேராசிரியர் ராய்க்கு நினைவு படுத்துங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 5

ராஜ்கோட்,
மார்ச் 27, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

உங்களுக்கு ஜுரம் அடித்ததைக் கேட்க நான் மிகவும் வருந்துகிறேன். உங்களுக்குள்ள பல முக்கிய கடமைகளில், நாட்டின் நலனுக்காக உங்களுடைய ஆரோக்கியத்தைப் பாது காத்துக் கொள்வதும் ஒன்ருகும். உங்களுடைய உடல் நலம் குன்றியதற்கு அதிக கவலை அல்லது அதிக வேலை காரண மல்ல என்றே நம்புகிறேன். நான் ஒரு வார்த்தை கூற அனுமதிக் கப்படலாம் என்ருல், உங்களுடைய குடும்ப அலுவல்களைக் கண்டிப்பாகவும் ஒழுங்காகவும் செய்து வருவதால் உங்களுக்கு மாத்திரமல்ல, உங்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளும் பாக்கியம் கிடைப்பவர்களுக்கும் லாபகரமாக இருக்கும் என் பதே. நான் கூறுவது தவருக இருக்கலாம். எனினும் அவ் விதம் நடந்து கொள்வது மிகவும் கடினமான காரியம் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம் ஆகும். வெளிநாடுகளுக்குத் தொழில் நிபுணர்கள், போலிகள் ஆகியோரின் குடியேற்றத்தைக் கட்டுப்படுத்துவதற்காக வைஸ்ராய் சபையில் ஒரு மசோதா வரப்போவதாகப் பத்திரிகைகளிலிருந்து நான் அறிகிறேன். இதன் நோக்கம் என்ன? இது காலனிகளிலுள்ள ஐரோப்பியர் களுக்குக் காட்டப்படும் சலுகையா அல்லது உண்மையில் நம் முடைய நலன்களுக்காகக் கொண்டுவரப்படுகிறதா? ஸ்ரீ வாடியா ராஜ்கோட் வழியாகச் சென்ருர் என்றும், ரானடே நினைவுச் சின்னத்திற்காக நூற்றுக்கணக்கான ரூபாய் வசூல் செய்தார் என்றும் கேள்விப்படுகிறேன். அடுத்த சில நாட்களுக்கு நீங்கள் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளைப் பற்றி எனக்கு அறிவிப்பீர் களென எதிர்பார்க்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 6

ராஜ்கோட்,
ஏப்ரல் 8, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

வரவு செலவு திட்டத்தைப் பற்றிய உங்களுடைய மகத்தான பிரசங்கத்தை வாசித்தேன். அதன் பிரதியொன்று எனக்குக் கிடைத்தது. அந்தப் பிரசங்கத்திற்காக மரியாதையுடன் கூடிய எனது வாழ்த்துக்களை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். நேட்டாலில் உள்ள நண்பர்களுக்கு அப்பிரசங்கத்தின் நகல்களை நான் வழங்க விரும்புவதால், சாத்தியமாயின், ஒரு சில பிரதிகள் எனக்குக் கிடைக்கும்படி செய்யுங்கள்.

ரானடே நினைவுச் சின்ன வசூல் விஷயமாக எனது முந்திய கடிதத்திற்குப் பதில் எழுதுவதாக நீங்கள் கூறினீர்கள். அப் பதிலை நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 7

ராஜ்கோட்,
ஏப்ரல் 22, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நேட்டால் இந்தியர்களைப் பற்றி உங்களுக்கு நான் சிரமம் கொடுக்கலாமா? 10-ஆம் தேதி 'டைம்ஸ் ஆப் இந்தியா'வில் வெளியான தந்தியை நீங்கள் வாசித்திருக்கலாம். அதைப் பற்றி அப் பத்திரிகையின் ஆசிரியருக்கு நான் ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். அவ்விஷயமாக அனுப்பப்பட்ட விண்ணப்பங்களில் ஒன்றின் நகலையும் அவருக்கு நான் அனுப்பியிருக்கிறேன். அப் பிரச்னையை நன்கு அறிந்து கொள்ள அது அவருக்கு உதவியாக இருக்கும். நான் ஒரு யோசனை கூறத் துணியலாம் என்றால், அதன் ஆசிரியரைப் பார்த்து நேட்டால் நிலைமை பற்றி அவருடன் விவாதிப்பதே பலன் தரத்தக்க வழியாகும். இவ்விஷயத்தில் நீங்கள் உதவி செய்யமுடியும். தற்போது நாம் எடுத்துக் கொள்ளக் கூடிய ஒரே நடவடிக்கை, பத்திரிகைகளின் மூலம் முழு சக்தியையும் உபயோகித்து புத்திசாலித்தனமான கிளர்ச்சி செய்வதேயாகும். நேட்டாலிலிருந்து அதன் சம்பந்தமான காகிதங்கள் வந்தபின், பிரதிநிதித்துவம் வாய்ந்தவர்கள் கையெழுத்திட்டு வைஸ்ராய்க்கு அனுப்பும் ஒரு விண்ணப்பத்தில் ஸ்ரீ டர்னரையும்

கையெழுத்திடும்படி கேட்கலாம். அவர் அவ்விதமே செய்வதாக முன்பு வாக்களித்திருக்கிறுர். மேலே குறிப்பிட்ட விண்ணப்பத்தின் நகலே உங்களுக்கு அனுப்ப முடியாததற்காக வருந்துகிறேன். ஆனுல் மாகாண சங்கத்தினர், தங்களுக்கு அப்போதைக்கப் போது அனுப்பப்படும் காகிதங்களே 'பைல்'களில் வைத்திருப்பார்களாயின், அவர்களிடமிருந்து நீங்கள் அவ் விண்ணப்பத்தின் நகலேப் பெறலாம். அதைப்பற்றி ஸ்ரீ முன்ஷிக்கு எழுதிக் கொண்டிருக்கிறேன். நான் எல்லே மீறி உங்களுடைய நேரத்தை வீணுக்கவில்லே என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 8

ராஜ்கோட்,
மே *1, 1902*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

உங்களுடைய அன்பார்ந்த கடிதத்திற்காக நான் மிகவும் நன்றியுள்ளவனுக இருக்கிறேன். உங்களுடைய மௌனத்திற்குத் தவிர்க்கமுடியாத காரணம் இருந்திருக்கவேண்டும் என்பதை நான் முற்றிலும் உணர்ந்து கொண்டேன். என்ருலும் நீங்கள் நோயுற்றது தான் அதற்குக் காரணமென நான் நினேக்கவில்லே. மூன்று நாட்களுக்கு முன் ஸ்ரீ வாடியாவை நான் பார்த்தபோதுதான் இதை அறிந்து கொண்டேன். தற்காலிகமாக நான், சமஸ்தான பிளேக் நிவாரணத் தொண்டர் கமிட்டியில் மிகவும் பொறுப்பான காரியதரிசி பதவியை ஒப்புக் கொண்டிருக்கிறேன் என்பதைக் கேட்க நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள். ராஜ்கோட்டில் பிளேக் பரவலாம் என்பதற்காகவே அக்கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. எனவே ரானடே நினேவுச் சின்ன சம்பந்தமாக உங்களிடமிருந்து கட்டளே வந்தால், நான் என்ன செய்வது என்பது பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் எப்போது அவ்வேலேயை ஆரம்பித்தாலும், உங்களுக்குத் தேவையாயின், உங்களுக்கு உதவியாளனுக இருக்கத் தயாராக இருக்கிறேன் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லே.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 9

ஆகாகான் கட்டிடம், 2-வது மாடி,
ஹைகோர்ட்டுக்கு எதிரில்,
பம்பாய், கோட்டை,
ஆகஸ்டு 1, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நேட்டாலிலிருந்து நான் எதிர்பார்க்கும் தொகை வந்து சேருமாயின், பம்பாயிலேயே நிரந்தரமாக இருக்க முற்படுவேன் என உங்களிடம் கூறியுள்ளேன் என்று நினைக்கிறேன். இப்போது அங்கிருந்து ரூ. 3000 வந்திருப்பதால், நான் இங்கே என்னுடைய அலுவலகத்தை ஆரம்பித்திருக்கிறேன்.* இந்த இடத்தில் ஒரு வருடம் முயற்சி செய்து பார்க்க உத்தேசித்திருக்கிறேன்.

நான் செய்ய வேண்டியதைக் குறித்து நீங்கள் எந்தச் சமயத்திலும் எனக்குக் கட்டளையிடலாம் என்ற எனது வாக்குறுதியை நான் மீண்டும் குறிப்பிட வேண்டிய தேவையில்லை.

உங்களுடைய உடல் நலம் நன்றாக இருக்கிறதென்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 10

ஹைகோர்ட்டுக்கு எதிரில்,
பம்பாய், நவம்பர் 14, 1902

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

பம்பாயில் நான் ஸ்தாபித்து விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கையில், நேட்டாலிலிருந்து ஒரு செய்தி வந்தது. உடனே நேட்டாலுக்கு வந்து சேரும்படி என்னைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். நேட்டாலிலுள்ள நம்மைச் சேர்ந்தவர்களுக்கும் எனக்கும் இடையே நடந்துள்ள தந்திப் போக்குவரத்திலிருந்து, தென்னாப்பிரிக்காவுக்கு ஸ்ரீ சேம்பர்லேன்† விஜயம் செய்யப் போவதன் சம்பந்தமாகவே என்னை அங்கே வரும்படி அழைத்திருக்கிறார்களென நினைக்கிறேன். முதல் கப்பலிலேயே, அதாவது

* 1902 ஜூலை மாதம் 10–ஆம் தேதி காந்திஜி ராஜ்கோட்டிலிருந்து புறப்பட்டு மறுநாள் பம்பாய் வந்து சேர்ந்தார்! பம்பாயில் வக்கீல் தொழிலை ஆரம்பித்து நடத்த வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அங்கு சென்றார்.

† ஜோசப் சேம்பர்லேன் (1836–1914) அப்போது பிரிட்டிஷ் காலனி மந்திரியாக இருந்தார்.

அநேகமாக 20-ஆம் தேதி புறப்படும் கப்பலிலேயே நான் செல்ல உத்தேசித்திருக்கிறேன்.

நான் புறப்படுவதற்கு முன் உங்களைச் சந்திக்கவேண்டும் என்பதே எனது விருப்பம். ஆனால் அது சாத்தியமில்லை என்றே தோன்றுகிறது.

தென்னுப்பிரிக்கா இந்தியர் பிரச்னை விஷயத்தில் நீங்கள் ஒரு கண் வைத்திருப்பீர்கள் என்றே நம்புகிறேன். நான் அங்கே இருக்கும் வரையில், அங்குள்ள நிலைமையைப் பற்றி உங்களுக்கு அப்போதைக்கப்போது அறிவிப்பதை எனது கடமையாகக் கருதுவேன். லார்டு ஜார்ஜ் ஹாமில்டனின்* பதில் நம்பிக்கை அளிப்பதாக இருக்கிறதென்று நினைக்கிறேன். இந்தியாவில் தகுந்த முறையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுமாயின், மிகுந்த நன்மை ஏற்படும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறீர்களென நம்புகிறேன். ஒரு மாறுதலுக்காக நீங்கள் மகாபலேசுவரத்திற்குச் செல்லப்போவதாக, சில நாட்களுக்கு முன் ஸ்ரீ வாச்சா என்னிடம் கூறினர்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 11

தபால் பெட்டி 299, ஜோகன்னஸ்பர்க்,
பிப்ரவரி 23,1903

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

இந்த நாட்டில் சம்பவங்கள் மிகவும் துரிதமாக நடைபெற்று வருகின்றன. எனவே இயல்பாகவே நான் போராட்டத்தின் நடுவே இருந்து வருகிறேன். போராட்டம் நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மிகவும் தீவிரமாக இருந்து வருகிறது.

பிரிடோரியாவில் ஸ்ரீ சேம்பர்லேனிடம் சமர்ப்பித்த மகஜரின் நகலை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இங்கு திரை மறைவில் பல வேலைகள் நடந்து வருகின்றன. பழைய சட்டங்கள் மிகவும் கடுமையாகப் பிரயோகிக்கப்பட்டு வருகின்றன. எனவே மார்ச் மாதத்திற்குப் பிறகு கூட நான் இங்கேயே தங்கியிருக்கும்படி நேரலாம்.

நான் உற்ற சமயத்தில் வந்து சேர்ந்ததால், ஸ்ரீ சேம்பர்லேனைப் பேட்டி கண்ட டர்பன் தூது கோஷ்டியில் நானும் கலந்து

* லார்டு ஜார்ஜ் ஹாமில்டன் அப்போது இந்தியா மந்திரியாக இருந்தார்.

கொண்டேன். தூது கோஷ்டி சமர்ப்பித்த மகஜரின் பிரதிகள் உங்களுக்குக் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன்.

அங்கே உங்களால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்வீர்கள் என்பதே எனது நம்பிக்கை. இவ்விஷயம் பத்திரிகைகளில் இடைவிடாமலும், புத்திசாலித்தனமாகவும் விவாதிக்கப் பட்டால் நன்மை ஏற்படும். நீங்கள் ஆரோக்கியத்துடன் இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 12

*தபால்பெட்டி 6522, ஜோகன்னஸ்பர்க்,*
*மே 10, 1903*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

மிகுந்த கஷ்டங்களுக்கிடையே நான் இங்கே அதிக காலம் தங்கியிருக்க வேண்டியவனுக இருக்கிறேன். இங்கு பிரச்னை மிகவும் மோசமான ஒரு கட்டத்தை அடைந்திருக்கிறது. எனவே அதைக் கண்காணிப்புடன் கவனித்துவர வேண்டும். நான் இங்கே எவ்வளவு காலம் தங்கியிருக்க நேரும் என்பதைக் கூறுவது கடினமாகும். என்னைப் பற்றி எழுதவே எனக்கு நேரமில்லை.

பத்திரிகைகளிலிருந்து கத்தரித்து இத்துடன் இணைக்கப் பட்டுள்ள விவரங்கள் மிக மிக முக்கியமானவை. பம்பாய் வர்த்தக சங்கம் தன்னுடைய பலமான கண்டனத்தை அனுப்பியிருக்கிறது. எனினும் விஷயங்களை நன்கு தெரிந்து கொண்டு அந்தக் கண்டனம் அனுப்பப்படவில்லை என்று அஞ்சுகிறேன். கேப் சட்டம் மோசமானதுதான். அதில் திருத்தம் செய்ய வேண்டியதும் அவசியமே. இருந்தாலும் யாதொரு கட்டுப்பாடுமின்றி குடியேற்றத்தை அனுமதிப்பது சாத்தியமில்லாத காரியமாகும். கேப் சட்டப்படி, வெளிநாடுகளைச் சேர்ந்த வெள்ளையர்கள் கூடக் குடியேற முடியாமல் திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறார்கள். தங்கள் நாட்டிற்குள் வெளிநாட்டினர் குடியேறுவதைக் கட்டுப்படுத்துவது, காலனி வெள்ளையர்களின் உறுதியான கொள்கை என்று தோன்றுகிறது. எனவே நாம் மேற்கொள்ளக் கூடிய உண்மையான, பலன்தரத்தக்க நடவடிக்கை என்னவெனில், நிறவேற்றுமையை அடிப்படையாகக் கொண்ட சட்டத்தை எதிர்த்துப் போராடுவதேயாகும்.

கேப், நேட்டால் சட்டங்களின் ஷரத்துகள் பொது வானவையாக இருக்கின்றன. அவை நம்மைக் கடுமையாகப் பாதிப்பதற்குக் காரணம், கல்வி சம்பந்தமான நிபந்தனையில் இந்திய மொழிகளில் பெற்றுள்ள அறிவு சேர்த்துக் கொள்ளப் படாததேயாகும். இந்திய மொழிகளிலுள்ள அறிவுக்கும் இடம் கொடுத்து கேப் சட்டம் தயாரிக்கப்பட்டது. ஆனால் கமிட்டியில் அது திருத்தப்பட்டுவிட்டது. இங்குள்ள சட்டம் இந்தியர் களுக்கு விரோதமானது. (இந்தியர்கள் 'ஆசியாவின் பூர்வ குடி மக்கள்' என்று அதில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.) எனவே சொந்தமாக சொத்து வைத்துக் கொள்ள அவர்களுக்கு உரிமை இல்லை. இந்தச் சட்டங்களின் முழு விவரங்களையும் ஏற்கனவே அனுப்பப்பட்ட பத்திரிகைகளில் நீங்கள் காணலாம்.

உங்களுடைய ஆரோக்கியம் நன்றாக இருந்து, உங்களுக்கு நேரமும் இருக்குமாயின், இந்தப் பிரச்னையை நீங்கள் நன்கு ஆராய்ந்து அச்சட்டத்தை எதிர்த்து இந்தியாவில் இயக்கத்தை நடத்துங்கள். காலனிகளில் குடியேறும் எல்லோருக்கும் உள்ள பொதுவான கட்டுப்பாடுகளின் கீழ் இந்தியர்கள் குடியேறுவதை அனுமதித்தால் கூட, எதிர்காலத்தில் நமக்கு மகத்தான சாத் தியக்கூறுகள் இருக்கின்றன என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 13

ஜோகன்னஸ்பர்க்,
ஜூலை 4, 1903

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் நிலைமை பற்றிய விவரங்களை நான் அப்போதைக்கப்போது உங்களுக்கு அனுப்பி வருகிறேன். நீங்கள் கவனிக்கவேண்டிய மற்றப் பொது அலு வல்கள் உங்களைத் திணறடித்து வருகின்றன என்பதை நான் அறிவேன். இருந்தாலும் எங்களுடைய துன்பங்களைப்பற்றி உங் களுக்கு சிரமம் கொடுக்காமல் தவிர்க்கும் வழி எதுவும் எனக்குத் தெரியவில்லை. இவ்விஷயமாக இந்தியாவில் போதிய அளவுக்கு நீடித்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படவில்லை என்றே இங்கு கருதப்படுகிறது. காலனிகளின் நடவடிக்கையை வைஸ் ராய் தீவிரமாகக் கண்டித்து வருகிறார் என்றே நம்புகிறேன். எனினும் பொது மக்களுடைய அபிப்பிராயத்தின் மூலம் அவரது கைகள் பலப்படுத்தப்பட்டாலன்றி, நிலைமை நமக்கு முற்றிலும் பாதகமாகிவிடும். விசித்திரமான ஒரு நிலைமை என்னவெனில்,

இங்கே கூட லார்டு மில்னர் நீதி வழங்க வேண்டும் என்பதில் மிகவும் ஆர்வமுடையவராக இருக்கிறார் என்று தெரிகிறது. எனினும் பொதுஜன அபிப்பிராயம் என்று கூறப்படும் ஒரு நிலையைக் கண்டு அவர் பயப்படுகிறார். உண்மையில், தென்னாப் பிரிக்காவிலுள்ள மக்கள் பணம் ஈட்டுவதிலேயே ஆழ்ந்து போயிருக்கிறார்கள். தங்களுடைய சொந்தத் தொழில் துறைக்கு வெளியே என்ன நடக்கிறது என்பது பற்றி அவர்களுக்கு அக் கறையே இல்லை. ஆனால் திரான்ஸ்வாலிலும், ஆரஞ்சு ரிவர் காலனியிலும் ஆசியாக்காரர்களுக்கு விரோதமான பழைய சட் டத்தின் தீவிரத்தைத் தளர்த்தக் கூடாதென்று, சுயநலமுள்ள ஒரு சில கிளர்ச்சிக்காரர்களே கவர்னருக்கு கண்டனங்கள் அனுப்பிய வண்ணமாக இருந்து வருகிறார்கள். எனவே அத் தகைய கிளர்ச்சியைத் தகர்க்க, இந்தியா முழுவதும் ஓர் இயக் கத்தை ஆரம்பித்து அதைத் திறம்பட நடத்த வேண்டியது அவசியமாகும். இம் முயற்சியை மேற்கொள்ள தங்களுக்கு நேரம் இருக்குமென்று நம்புகிறேன்.

நான் கல்கத்தாவில் இருந்தபோது ஸ்ரீடர்னர்* என்னிடம் என்ன சொன்னார் என்பது உங்களுக்குத் தெரியும். அதாவது நீங்கள் இவ்விஷயமாக அவருக்கு எழுதினாலோ அல்லது அவ ரைக் கண்டு பேசினாலோ அவர் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளத் தயாராக இருக்கிறார்.

நான் மேத்தாவுக்கும் (சர் பிரோஸிஷா மேத்தா) எழுது கிறேன். இவ்விஷயமாக நீங்கள் அவரைப் பார்ப்பீர்களென நம்பு கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 14

*தபால் பெட்டி 6522, ஜோகன்னஸ்பர்க்,*
*அக்டோபர் 3, 1904*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

உங்களுக்கு எத்தனை அலுவல்கள் இருக்கின்றன என் பதை நான் அறிவேன். அதனாலேயே உங்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதித் தொந்தரவு கொடுப்பதைத் தவிர்த்து வந்திருக் கிறேன். ஆனால் காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நெருங்கிக் கொண்டிருப்பதால், இனி நான் அவ்விதம் எழுதாமல் இருக்க முடியாது. இங்குள்ள நிலைமை பற்றி லண்டனில் வெளியாகி

---

* ஸ்ரீ டர்னர் (வெள்ளையர்) அப்போது வங்காள வர்த்தக சங்கத் தின் தலைவராக இருந்தார்.

யிருக்கும் அரசாங்க அறிக்கையின் பிரதி ஒன்றை இத்துடன் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். திரான்ஸ்வால் நிலைமையைப் பற்றி மாத்திரமே அதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. திரான்ஸ்வால் நிலைமை சம்பந்தமாகவே இப்போது நாம் சகல முயற்சிகளும் எடுத்துக் கொள்ளவேண்டும். யுத்தம் ஆரம்பமாகும் தறுவாயில் லார்டு மில்னர், பிரிட்டிஷ் இந்தியர்கள் உள்பட துன்பத்திற்குள்ளாக்கப்படும் மக்களின் சார்பில் பேசும் வீரராகத் திகழ்ந்தார். ஆனால் எல்லோரும் எதிர்பார்த்ததற்கு மாறாக இப்போது அவர் அடியோடு மாறிவிட்டதுடன், யுத்தத்திற்கு முன் திரான்ஸ்வாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு இருந்த கொஞ்ச நஞ்ச உரிமைகளையும் பறித்துவிட அவர் முற்றிலும் தயாராக இருக்கிறார்! அவருடைய இந்த மாற்றத்தை அவரது அறிக்கையிலிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அரசாங்க அறிக்கைகளுக்குப் பதிலளித்து பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் அனுப்பியுள்ள விண்ணப்பத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன். இந்தியர்கள் எவ்வளவு தூரம் செல்லத் தயாராக இருக்கிறார்கள் என்பதை அவை காட்டுகின்றன. ஐரோப்பியர்கள் விரும்புவதையெல்லாம் விட்டுக் கொடுக்க இந்தியர்கள் தயாராக இருக்கிறார்கள் என்பதையும் அந்த விண்ணப்பத்திலிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம். குடியேற்றக் கட்டுப்பாட்டை இந்தியர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். சொந்தத்தில் சொத்து வைத்துக் கொள்ளும் உரிமைக்குப் பதிலாக லைசன்ஸ் கட்டுப்பாட்டிற்கும் அவர்கள் இசைகிறார்கள். ஆனால் அந்த யோசனை தங்களுக்குத் திருப்தியை அளிக்கவில்லை என்று கூறி சர்க்கார் அதை நிராகரித்து விட்டார்கள். ஏனெனில், பாரபட்சமான சட்டம் கொண்டுவரும் கொள்கையை நிரந்தரமாக ஸ்தாபிக்க வேண்டும் என்பதே சர்க்காரின் விருப்பமென அஞ்சுகிறேன்.

எத்தகைய சட்டமாயினும், அது பாரபட்சமின்றி எல்லோரையும் கட்டுப்படுத்துவதாக இருக்கவேண்டும் என்று பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் கூறுகிறது. பிரிட்டிஷ் பிரஜைகளாயினும் அல்லவாயினும், ஆசியாக்காரர்களை மாத்திரமே கட்டுப்படுத்தும் சட்டத்தை நிறைவேற்ற திரான்ஸ்வால் சர்க்கார் விரும்புகின்றனர். சுயாட்சி பெற்றுள்ள காலனிகளில் கூட, உதாரணமாக கேப், நேட்டால் காலனிகளில் கூட அத்தகைய சட்டம் நிறைவேற்ற அனுமதி கொடுக்கப்படவில்லை என்பது உங்களுக்குத் தெரியும். அத்தகைய சட்டத்தை நிறைவேற்ற அந்த சர்க்கார் விரும்பினார்களெனினும், அதற்கு அனுமதி கிடைக்கவில்லை.

ஆரஞ்சு ரிவர் காலனியிலுள்ள சட்டம் மிகக் கொடுமையானதாக இருக்கிறது. ஆனால் அதை அகற்ற இதுவரை யாதொரு முயற்சியும் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

நேட்டாலில் அமலுக்கு வந்துள்ள வியாபாரிகள் லைசன்ஸ் சட்டம், உள்ளூர் அதிகாரிகளுக்கு எதேச்சாதிகாரம் அளித்திருக்கிறது. அதை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ளவும் உரிமை அளிக்கப்படவில்லை.

நீங்கள் 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையை வாசித்து வருகிறீர்கள் என்று நம்புகிறேன். அதில் சிறிதும் தவறின்றி எல்லாத் தகவல்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன.

லண்டனிலுள்ள 'டைம்ஸ்' முதலிய மற்றப் பத்திரிகைகள், திரான்ஸ்வாலில் இந்தியர்கள் நடத்தப்படும் விதம் பொதுவாக இந்தியர்களின் மனத்திற்கு வேதனையைக் கொடுக்கும் என்றும், பிரிட்டிஷாரிடம் அவர்களுக்குள்ள விசுவாசத்தைக் கூட மிகவும் பாதிக்கும் என்றும் குறிப்பிட்டிருக்கின்றன. தென்னாப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு நீதி வழங்க வேண்டும் என்று இந்தியாவில் இடைவிடாது கூக்குரலிட்டுக் கிளர்ச்சி செய்யவேண்டும் என்பதையே லண்டன் பத்திரிகைகளின் அபிப்பிராயம் காட்டுகிறது. எனவே இவ்விஷயமாக காங்கிரஸ் முன்னரைவிட அதிக கவனம் செலுத்த வேண்டும். இந்தியர்கள் மோசமாக நடத்தப்படுவதைக் கண்டித்து இந்தியாவெங்கும் பொதுக் கூட்டங்கள் நடைபெற வேண்டும்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறீர்களென நம்புகிறேன். இதற்கு நீங்கள் ஒரு வரி பதில் எழுதினால் நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 15

தபால் பெட்டி 6522, ஜோகன்னஸ்பர்க்,
ஜனவரி 13, 1905

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

'இந்தியன் ஒபினியன்' பத்திரிகை நடந்து வருவது உங்களுக்குத் தெரியும். அதன் வாழ்வில் இப்போது ஒரு புதிய கட்டம் ஆரம்பமாகியிருக்கிறது. எனவே, அதற்கு உங்களுடைய தீவிரமான அனுதாபம் தேவை என்று நான் கேட்டுக்கொள்வது நியாயமாக இருக்குமென்றே எண்ணுகிறேன். முற்றிலும் மனம் விட்டு நான் இந்தக் கடிதத்தை எழுத முற்பட்டுள்ளேன். என்னை நீங்கள் நன்கு அறிவீர்களாதலின், நீங்கள் தவறாக எதுவும் நினைத்துக் கொள்ள மாட்டீர்கள் என்பதே எனது நம்பிக்கையாகும். பண உதவியின்றி ஸ்ரீ மதன்ஜித்தினால் பத்திரிகையை நடத்த முடியாது என்பதை நான் தெரிந்து கொண்டேன். அவரது தேசபக்தி காரணமாகவே அவர் பத்திரிகையில் ஈடுபட்டிருக்கிறார் என்பதை அறிவேனாதலின், நான் சேமித்து வைத்திருந்த தொகையில் பெரும் பகுதியை அவரிடம் ஒப்புவித்தேன். எனினும் அந்தத் தொகை போதாது. மூன்று

மாதங்களுக்கு முன் பத்திரிகை சம்பந்தமான முழுப் பொறுப்பையும், நிர்வாகத்தையும் நானே எடுத்துக் கொண்டேன். ஸ்ரீ மதன்ஜித் இன்னும் பெயரளவில் பத்திரிகையின் சொந்தக்காரராகவும், அதன் பிரசுரகராகவும் இருந்து வருகிறார். ஏனெனில் இந்திய சமூகத்துக்காக அவர் எவ்வளவோ தொண்டு புரிந்திருக்கிறார். என் சொந்த அலுவலகமும் இப்போது 'இந்தியன் ஒபினியனி'ன் நலனுக்காகவே வேலை செய்து வருகிறது. நான் அதில் சற்றேறக்குறைய 3500 பவுன் தொகை போட்டிருக்கிறேன். நான் நெருங்கிப் பழகியுள்ள சில ஆங்கில நண்பர்களிடம் இத்துடன் இணைக்கப்பட்டுள்ள எனது திட்டத்தைக் காண்பித்தேன். அவர்கள் அதை ஆதரித்தனர். இப்போது அது பூரணமாக செயல்பட்டு வருகிறது. புனாவிலுள்ள பர்குஸன் கல்லூரியை ஸ்தாபித்தவர்களைப் போல் அந்த நண்பர்கள் அவ்வளவு சிறந்த தியாகிகளாக இருக்க முடியாது என்றாலும், அவர்களும் தியாகிகள் என்றே நான் எண்ணத் துணிகிறேன். அவ்விதம் ஆங்கில நண்பர்கள் தைரியமாக முன் வந்தது, ஆனந்தத்தைக் கொடுக்கும் ஓர் அற்புத நிகழ்ச்சியாகவே எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் இலக்கிய நிபுணர்கள் அல்ல; எனினும் அவர்கள் அப்பழுக்கற்ற, யோக்கியப் பொறுப்புள்ள, சுதந்திரமான நபர்கள் ஆவர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் சொந்தத்தில் தொழிலோ அல்லது உத்தியோகமோ இருக்கிறது. அதில் அவர்கள் சௌக்கியமாகவும் இருந்து வருகிறார்கள். அப்படியிருந்தும் அவர்கள் ஜீவனத்திற்கு மாத்திரம் போதுமான 3 பவுன் மாதச் சம்பளத்தில், எதிர்காலத்தில் எப்போதோ வரக்கூடிய லாபத்திற்காக, தொண்டு புரிவதற்கு முன் வரச் சிறிதும் தயங்கவில்லை!

தொடர்ந்து எனக்கு சம்பாத்தியம் வந்து கொண்டிருக்குமாயின், திடலில் ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பிக்க வேண்டும் என்பதும் எனது உத்தேசமாகும். அது தென்னாப்பிரிக்காவிலுள்ள வேறு எந்தப் பள்ளிக்கூடத்திற்கும் இரண்டாவதாக இராது. முதலாவதாக, அது இந்தியக் குழந்தைகளின் கல்விக்காகவே ஏற்படுத்தப்படும்: இரண்டாவதாக, அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர விரும்புவோர் யாவரும் அதில் சேரலாம். ஆனால் சகலரும் பள்ளிக்கூடத்திலேயே வசிக்க வேண்டும். இதற்குத்தொண்டர்கள் தேவை. இந்தச் சேவைக்காகத் தங்களுடைய வாழ்க்கையை அர்ப்பணம் செய்ய ஒன்றிரண்டு ஆங்கிலேயர்களும் ஆங்கிலப் பெண்மணிகளும் கிடைப்பார்கள். இருந்தாலும் இந்திய உபாத்தியாயர்களை நியமிக்க வேண்டியது முற்றிலும் அத்தியாவசியமாகும். போதிப்பதில் தகுதியும் திறமையும் வாய்ந்த பட்டதாரிகள் யாரையாவது இங்கு வருமாறு தாங்கள் தூண்ட முடியுமா? அவ்விதம் வருவோர் அப்பழுக்கற்ற நடத்தையுடையவர்களாக இருக்க வேண்டும்; வெறும் ஜீவனச் செலவுக்காக மாத்திரமே உழைக்க விரும்புகிறவர்களாக இருக்க வேண்டும்; சோதனையில் தேறியவர்களாகவும் முதல்தரமானவர்களாகவும் இருக்க வேண்டும்.

அத்தகையோர் குறைந்தபட்சம் இரண்டு அல்லது மூன்று பேர்க ளாவது வரவேண்டும். மேற்கொண்டு சிலர் வந்தாலும் இங்கு இடமளிக்க முடியும். பள்ளிக்கூடம் ஒழுங்கான முறையில் நடை பெறத் தொடங்கியபின், ஒரு ஆரோக்கிய ஆசிரமமும் அமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. அதில் சுகாதார முறைகளை அடிப் படையாகக்கொண்டு வெட்டவெளியில் சிகிச்சை அளிக்கப்படும்.

எனினும், நான் இக்கடிதம் எழுதும் உடனடியான நோக்கம் 'இந்தியன் ஒபினியனை'ப் பற்றியதே. இவ்விஷயமாக நான் சொல்லியிருப்பதையெல்லாம் நீங்கள் அங்கீகரித்தால், பத்திரிகையில் வெளியிடுவதற்காக அதன் ஆசிரியருக்கு உற்சாக மளித்து அன்புகூர்ந்து ஒரு கடிதம் எழுதுவீர்களா? மேலும் உங்க ளுக்கு சிறிது நேரம் கிடைத்தால் எப்போதாவது ஒரு கட்டுரையும் எழுதுங்கள். கட்டுரை மிகவும் சிறியதாக இருந்தாலும் இருக் கட்டும். அப் பத்திரிகைக்கு கௌரவ நிருபர்களாகவோ அல்லது சம்பளம் பெறும் நிருபர்களாகவோ ஊழியம் புரிய விரும்புவோ ரையும் நியமிக்க நான் ஆர்வமுடையவனாக இருக்கிறேன். ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, தமிழ் ஆகிய மொழிகளில் அவர்கள் வாரந்தோறும் குறிப்புகள் எழுதி அனுப்பக்கூடியவர்களாக இருக்க வேண்டும். அதனால் மிகுந்த செலவு ஏற்படுமாயின், ஆங்கிலத்தில் வாரக் குறிப்புகள் எழுதக்கூடிய ஒரு நிருபரை நிய மித்தாலும் நான் திருப்தியடைவேன். அது மற்ற மூன்று இந்திய பாஷைகளிலும் மொழிபெயர்த்துப் பிரசுரிக்கத் தக்கதாக இருக்க வேண்டும். அத்தகைய நிருபரையோ அல்லது நிருபர்களையோ நீங்கள் சிபாரிசு செய்ய இயலுமா? வாரக் குறிப்புகள், தென்னாப் பிரிக்கா இந்தியர் பிரச்னை சம்பந்தமாக இந்தியாவில் என்ன செய்யப்பட்டு வருகிறதென்பதை அறிவிப்பனவாக இருக்க வேண்டும். தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் அக்கறை காட்டக் கூடிய விஷயங்களும் அவற்றில் அடங்கியிருக்க வேண்டும். அவசி யமாயின், இந்தக் கடிதத்தில் உள்ள விவரங்களை முற்றிலுமோ அல்லது ஒரு பகுதியையோ நீங்கள் உங்கள் விருப்பப்படி வெளி யிடலாம்.

நீங்கள் ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

(பேராசிரியர் கோகலேய்க்கு காந்திஜி எழுதிய முந்திய கடிதங்கள் யாவும் அவர் (கோகலே) இந்தியாவில் இருந்தபோது எழுதப்பட்டவை. பின்வரும் கடிதங்கள் கோகலே லண்டனில் இருந்தபோது எழுதப்பட்டவை.)

## 16

தபால் பெட்டி நெ. 6522,
ஜோகன்னஸ்பர்க், டிசம்பர் 26, 1905

பேராசிரியர் கோகலே, ஸி. ஐ. ஈ.
84, 85, பாலஸ் சேம்பர்ஸ்,
வெஸ்ட்மின்ஸ்டர், லண்டன்.

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நீங்கள் இப்போது இங்கிலாந்தில் மேற்கொண்டுள்ள அலுவல் களில் ஆழ்ந்து ஈடுபட்டிருப்பீர்கள். தென்னாப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு உங்கள் இதயத்தில் சிறிது இடம் அளித்து அவர்களை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். அங்கிருந்து நீங்கள் இந்தியாவுக்குத் திரும்பும்போது, தென்னாப்பிரிக்கா வழி யாகச் செல்லுவது உங்களுக்கு சாத்தியமாக இருக்குமா? அவ் விதம் இங்குவர இயலுமாயின், நீங்கள் அன்புகூர்ந்து முன் கூட்டியே அறிவித்தால், இத் தேசத்திலுள்ள வெவ்வேறு பாகங் களிலும் நீங்கள் தங்குவதற்குத் தகுதியான ஏற்பாடுகள் செய்யப் படும். நீங்கள் தென்னாப்பிரிக்காவில் ஒரு மாதம் வரையில் தங்கி யிருக்க வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். நீங்கள் வர முடியுமாயின், தென்னாப்பிரிக்காவில் யாத்திரை செய்ய உங்களுக்கு ஆகும் செலவை, இந்திய சமூகத்தினர் ஏற்றுக்கொள்வார்கள், நீங்கள் கேப் டவுனில் வந்து இறங்கி, கிம்பர்ஸி, ப்ளூம்பாண்டீன், ஜோகன்னஸ்பர்க் முதலிய இடங்களுக்குச் செல்லலாம். அங் கிருந்து நேட்டாலுக்குச் சென்று டர்பனைப் பார்க்கலாம். பிறகு பீடர்மாரிட்ஸ்பர்க்கிற்குச் சென்று, அங்கிருந்து கிழக்குக் கடற் கரை வழியாக மொஸாம்பிக், ஜான்ஸிபார், லாமு, மொம்பாஸா ஆகிய இடங்களுக்கு விஜயம் செய்யலாம்; அல்லது இலங்கை வழியாக இந்தியாவுக்குச் செல்லும்போது நடுவில் மோரீஸ் தீவுக்கும் செல்லலாம்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

# 17

ஸ்டாங்கர் முகாம்,
*ஜூன் 22, 1906*

பேராசிரியர் கோகலே,
லண்டன்.

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

ஸ்டாங்கரிலுள்ள*[1] ராணுவ முகாமிலிருந்து இந்தக் கடிதத்தை நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். அணிவகுத்துச் செல்லும்படி இந்திய வைத்தியப் படைக்கு நேற்று உத்தரவு வந்தது. இம் முறை நமது வைத்தியப்படை செய்ய வேண்டிய அலுவல்கள் மிகக் கடுமையானவை. அது எப்படியாயினும், நான் அந்தப் படையுடன் செல்ல வேண்டியது முற்றிலும் அவசியமாக இருக் கிறது. எனவே இப்போது நான் இங்கிலாந்துக்கு வருவது சாத்தியமில்லை.

உங்களுடைய நீண்ட கடிதத்திற்காகவும், நீங்கள் கூறியுள்ள யோசனைகளுக்காகவும் நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.

லார்டு மார்லியுடன்*[2] உங்களுடைய பேட்டிகளின் பலன் என்ன என்பது உரியகாலத்தில் நமக்குத் தெரிய வருமென நினைக் கிறேன்.*[3] நீங்கள் இந்தியாவுக்குத் திரும்பிச் செல்லும்போது தென்னாப்பிரிக்காவுக்கும் விஜயம் செய்வீர்களாயின், உங்க ளுடைய அற்புதமான தொண்டுக்கு சிகரம் வைத்ததுபோல் இருக்கும். இது சுயநலமான ஓர் எண்ணம் என்பதை நான் அறி வேன். இருந்தாலும் அதற்காக நான் மன்னிப்புக்கு உரியவனே. ஏனெனில் தற்போது எனது அலுவல்கள் யாவும் தென்னாப்பிரிக் காவை மாத்திரமே பொறுத்ததாக இருக்கின்றன.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

---

*1. ஸ்டாங்கர், டர்பனிலிருந்து வடகிழக்கே நாற்பத்தைந்து மைல் தூரத்திலுள்ள ஒரு நகரமாகும்.

2. வைகவுண்ட் ஜான் மார்லி (1838–1923) 1886–லும், 1892–95–லும், அயர்லாந்து மந்திரியாக இருந்தார். 1905–லிருந்து 1910–ம் ஆண்டுவரையில் இந்தியா மந்திரியாக இருந்தார். அவர் பல அரிய நூல்களும் எழுதி இலக்கிய மேதை என்ற புகழ் பெற்றவர்.

3. 1905 டிசம்பர் மாதம் காசியில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த கோகலே, பின்னர் இங்கிலாந் துக்குச் சென்று, அப்போது இந்தியா மந்திரியாக இருந்த லார்டு மார்லியைப் பல தடவைகள் பேட்டிகண்டு பேசினர். குறிப்பாக வங்காளப் பிரிவினை, அரசியல் சீர்திருத்தம் பற்றியும், பொதுவாக இந்தியப் பிரச்னைகள் பற்றியும் அவர்களுக்குள் பேச்சு நடந்தது.

## 18

(தந்தி)*

ஜோகன்னஸ்பர்க்,
செப்டம்பர் *21, 1907*

கோபால கிருஷ்ண கோகலே,
கல்கத்தா.

தங்களுடைய தந்திக்காக பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் தங்களுக்கு நன்றி செலுத்துகிறது. தங்கள் செய்தி பெரிதும் உற்சாகம் அளிக்கிறது. கௌரவத்திற்காகவும், மதத்திற்காகவும் இறுதிவரையில் போராடுவோம். எங்களுக்கு உங்கள் எல் லோருடைய அனுதாபமும் தேவை. எல்லாக் கட்சிகளுடையவும் ஏகமனதான அங்கீகாரத்தைக் கோருகிறோம். கட்டுப்பாடில்லாத குடியேற்றத்திற்காக இப்போது போராட்டம் நடைபெறவில்லை. இங்கே தங்கியிருப்பவர்களின் சுயமரியாதையைப் பாதுகாக்கவே போராட்டம் நடைபெறுகிறது.

**மோ. க. காந்தி**

## 19

ஜோகன்னஸ்பர்க்,
நவம்பர் *14, 1907*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

ஸ்ரீ அமீருதீன் முகமது ஹுசேன் பஜந்தாரை உங்களுக்கு அறிமுகப்படுத்தவே இதை எழுதுகிறேன். வரப்போகும் இந்திய

*பேராசிரியர் கோகலேயிடமிருந்து ஜோகன்னஸ்பர்க் பிரிட்டிஷ் இந்தியர் சங்கத்துக்குப் பின்வருமாறு ஒரு தந்திச் செய்தி வந்திருக்கிறது :

"உங்கள் போராட்டத்தைக் கூர்ந்து கவனித்து வருகிறேன். அவ்விஷயமாக நான் கவலையும் அக்கறையும் கொண்டுள்ளேன். எனது ஆழ்ந்த அனுதாபமும் பாராட்டுதலும். நிச்சயமாக உங்களுக்கு இறைவன் அருள் கிடைக்குமென நம்புகிறேன்."

பேராசிரியர் கோகலேயை அறியாத இந்திய தேசபக்தர் இருக்க முடியாது. அவர் இந்தியா சட்ட சபையில் அங்கத்தினராக இருக்கிறார். அவரது தந்தி இங்குள்ள இந்தியர்கள் யாவருக்கும் மகத்தான தைரியத்தை அளிக்கும் என்பதில் ஐயமில்லை. பேராசிரியர் கோகலே தந்தி கொடுத்திருக்கிறார் என்றால், இவ்விஷயத்தில் இந்தியா முழுவதும் அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறது என்பதும், இந்தியா நமக்குப் பாதுகாப்பு அளிக்க முன்வரும் என்பதுமே அர்த்தமாகும்.

**இந்தியன் ஒபினியன், 21-9-1907**

தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு திரான்ஸ்வால் இந்தியர்களின் சார்பில் அவரும் மற்றும் நான்கு இந்தியர்களும் பிரதிநிதிகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீ பஜந்தார் திரான்ஸ்வாலில் நீண்ட காலமாக இருந்துவரும் பிரபல வியாபாரியாவார். எங்களுடைய நிலைமையை காங்கிரஸ் முன் னிலையில் எடுத்துக்கூற அவருக்குத் தாங்கள் சகல வசதிகளும் செய்து கொடுப்பீர்கள் என்றும், அவருக்கு ஆலோசனை கூறி வழிகாட்டுவீர்கள் என்றும் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 20

ஜோகன்னஸ்பர்க்,
நவம்பர் *22, 1907*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

ஸ்ரீ அமீருதீன் பஜந்தார் மூலம் நான் உங்களுக்கு ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறேன். சூரத்தில் நடைபெறவிருக்கும் காங்கிரசுக்கு திரான்ஸ்வாலிலிருந்து வரும் பிரதிநிதிகளில் அவரும் ஒருவர். இங்கே நாங்கள் நடத்திவரும் போராட்டம், நாங்கள் எல்லோரும் முதலில் இந்தியர்கள், அடுத்தபடியாகத்தான் ஹிந் துக்கள், முஸ்லிம்கள், தமிழர்கள், பார்சிகள் என நாங்கள் உணர்ந்து கொள்ளும்படி செய்திருக்கிறது. இந்த உண்மையைத் தாங்கள் கவனிக்கக் கோருகிறேன். காங்கிரசுக்கு நாங்கள் அனுப்பி யுள்ள பிரதிநிதிகள் யாவரும் முஸ்லிம்கள்தான் என்பதையும் தாங்கள் கவனித்திருப்பீர்கள். அதைக் குறித்து நான் மகிழ்ச்சி யடைகிறேன். தென்னாப்பிரிக்காவுடன் தொடர்புள்ள பல முஸ்லிம் களும் காங்கிரசுக்கு வரலாம். அவர்கள் விஷயத்தில் நீங்கள் அக்கறையெடுத்துக் கொண்டு, அவர்கள் தங்கள் தங்கள் சொந்த ஊரில் இருப்பதுபோல் எண்ணும்படி எல்லா வசதிகளும் செய்து கொடுக்குமாறு நான் உங்களைக் கேட்டுக் கொள்ளலாமா? இந்த காங்கிரசின் விசேஷ அம்சமாக ஹிந்து - முஸ்லிம்கள் ஓர் ஒப்பந்தம் கூட செய்து கொள்ளலாம். போராட்டத்தின் மற்ற விவரங்களைப் பற்றி நீங்கள் பத்திரிகைகளிலிருந்து தெரிந்து கொண்டிருக்கலாம்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 21

லண்டன்,
ஜுலை 23, 1909

பேராசிரியர் கோகலே,
புனா.

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைக்கும்போது ஸ்ரீ போலக்கும் இந்தியாவுக்கு வந்து சேர்ந்திருப்பார். இங்கு எங்களுடைய அலுவல்கள் மிகக் கடினமாக இருக்கின்றன. இது, உங்களுக்கு ஒரு புதிய செய்தி அல்ல. பூர்வ பீடிகையாகவும், உங்களுக்கு நேரம் இருக்குமாயின் இவ்விஷயமாக விசேஷ கவனம் செலுத்துமாறு உங்களைக் கேட்டுக் கொள்வதற்காகவுமே இதைக் குறிப்பிடுகிறேன்.

இந்தப் போராட்டத்தின் தேசீய முக்கியத்துவத்தை நமது தலைவர்கள் உணர்ந்து கொள்ளவேண்டும் என்பதில் நான் மிகுந்த ஆர்வமுள்ளவனாக இருக்கிறேன். இந்தத் தொண்டில் ஈடுபடுவதற்காகவே ஸ்ரீ போலக் ஒரு லட்சிய தூதராக இந்தியாவுக்கு அனுப்பப் பட்டிருக்கிறார். நீதி கிடைக்கும் வரையில் திரான்ஸ்வாலில் நாங்கள் தொடர்ந்து துன்பத்திற்கு உள்ளாகிவர உறுதி கொண்டுள்ளோம். எனினும் தாய்நாட்டிலிருந்து இதுவரையில் எங்களுக்குக் கிடைத்துள்ள உதவியைக் காட்டிலும் அதிகமான உதவியை எதிர்பார்க்க எங்களுக்கு உரிமை உண்டு.

ஸ்ரீ போலக்கின்* வேலை மிகவும் கடினமானது. முற்றிலும் உங்களுடைய போதனைகளுக்கு இணங்கி நடந்து கொள்ளும்படி

---

* இந்தியாவுக்கு வந்த போலக் கோகலேயுடன் நீண்ட நேரம் பேசியபின், ஆகஸ்டு 14ம்-தேதி காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

"தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் பிரச்னை திருப்திகரமாகத் தீரும் என்பதில் கோகலேய்க்கு நம்பிக்கையில்லை. எனினும் அவர் தமது சக்தி முழுவதையும் எனக்கு உதவியாக உபயோகித்துவருகிறார். அவரது ஸ்தாபனமும் (இந்திய ஊழியர் சங்கம்) எனக்குப் பேருதவியாக இருந்துவருகிறது. இந்தியப் பிரமுகர்களைச் சந்தித்துப் பேசுவது அவசியம் என்பதை அவரும் ஒத்துக்கொள்கிறார். பம்பாய், புனா, சூரத், பரோடா, அகமதாபாத் சென்னை, கல்கத்தா, ஐக்கிய மாகாணம் ஆகிய இடங்களுக்குச் செல்லத் திட்டமிட்டிருக்கிறோம். எதிர்காலத்தில் பலனளிக்கக்கூடிய எல்லா ஏற்பாடுகளையும் செய்கிறோம். கோகலே ஓர் அற்புதமான மனிதர். எல்லா விவரங்களையும் குற்றம் குறையின்றி நன்கு அறிந்து வைத்திருக்கிறார். உங்கள் மீது அவர் பெரு மதிப்பு வைத்திருக்கிறார். மிதமிஞ்சிய வேலையினாலும் கவலையினாலும், மலேரியா ஜுரத்தினாலும் அவர் தேய்ந்து போயிருக்கிறார்."

அவரை நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு அவரது அலுவல்கள் எளிதாக இருக்கும்படி செய்ய நீங்கள் மிகுந்த அக்கறை எடுத்துக் கொள்வீர்கள் என்பதை நான் அறிவேன். ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள நாங்கள் அந்தரங்கமாகப் பேச்சு வார்த்தைகள் நடத்திவருகிறோம். எனினும் நான் ஸ்ரீ ஸ்மட்ஸை நன்கு அறிவேனாதலின், அந்தப் பேச்சுவார்த்தைகளில் எனக்கு அதிக நம்பிக்கையில்லை. இன்னும் ஒருவார காலத்தில் நாங்கள் பகிரங்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி நேரலாம். அவ்விதமாயின், இந்தியா எங்களுக்கு ஆதரவு அளிக்க வேண்டியது முற்றிலும் அவசியமாகும். அவசியமென்று உங்களுக்குத் தோன்றுவதை நீங்கள் செய்வீர்களென நாங்கள் எதிர்பார்க்கலாமா?

நாங்கள் தயாரித்த நீண்ட அறிக்கையின் சாரத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். பேச்சு வார்த்தைகளின் முடிவு தெரிந்த உடனேயே, பேச்சு வார்த்தைகள் வெற்றி பெருவிடில் அந்த அறிக்கை வெளியிடப்படும்.

தங்கள் நம்பிக்கையுள்ள,
**மோ. க. காந்தி**

# 22

லண்டன்,
நவம்பர் *11, 1909*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நான் தங்களைப் பேராசிரியர் என்று குறிப்பிட்டு கடிதம் எழுதக் கூடாது என்று தாங்கள் ஸ்ரீ போலக் மூலம் அனுப்பிய அன்பார்ந்த செய்தி எனக்குக் கிடைத்தது*. ஆனால் தங்களிடம் எனக்குள்ள மதிப்பும் பக்தியும், மிகவும் பழக்கமான முறையில் தங்களுக்கு எழுத இடம் கொடுக்கவில்லை.

அதிகமான வேலையும், கவலையும் உங்களுடைய ஆரோக்கியத்தைச் சீர்குலைத்து விட்டன என்று ஸ்ரீ போலக் எனக்கு எழுதியுள்ள சென்ற கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். நீங்கள் மனம் விட்டு எதையும் கூறுவது, உங்களுடைய உயிருக்கே அபாயகர

---

* செப்டம்பர் 10ம்–தேதி காந்திஜிக்கு போலக் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: "பேராசிரியர் கோகலே என்று குறிப்பிட்டு தாங்கள் கடிதம் எழுதுவது சம்பிரதாய முறையை அனுசரித்ததாக இருக்கிறது என்றும், தாங்களும் அவரும் பரஸ்பரம் நெருங்கிப் பழகியவர்களாதலால், அத்தகைய சம்பிரதாயங்கள் அவசியமில்லை என்றும் கோகலே கருதுகிறார்."

மாக இருந்து வருகிறதென்றும்* அவர் கூறுகிறார். எனவே, தாங்கள் திரான்ஸ்வாலுக்கு வந்து எங்களுடன் சேர்ந்துகொள்ள வேண்டும் என்று நான் யோசனை கூறத் துணிகிறேன். திரான்ஸ்வால் பிரச்னை, எப்படிப் பார்த்தாலும் ஒரு தேசீயப் போராட்டம் என்பதே எனது அபிப்பிராயமாகும். அதில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு மிகுந்த உற்சாகம் அளிக்க வேண்டியது கடமையாகும். நவீன உலகில் இதைக் காட்டிலும் மகத்தான போராட்டம் வேறு எதுவும் இல்லை என்றே நான் கருதுகிறேன். அப்போராட்டம் இறுதியில் வெற்றி பெறும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. ஆனால் அது விரைவில் வெற்றி பெற்றால், அவ்வெற்றி இந்தியாவிலுள்ள பலாத்கார இயக்கத்தைத் தகர்த்துவிடும்.

இங்குள்ள நம் தேச மக்களிடையே நான் தங்கு தடை எதுவுமின்றி மிகவும் நெருங்கிப் பழகியிருக்கிறேன். அவர்களுக்கு உங்கள் மீது மிகக் கடுமையான வெறுப்பு ஏற்பட்டிருப்பதைக் காண்கிறேன். இந்தியாவில் அரசியல் சீர்திருத்தம் ஏற்படுவதற்கான ஒரே வழி பலாத்காரம்தான் என்று பெரும்பாலோரும் கருதுகின்றனர். திரான்ஸ்வாலில் உள்ள நாங்கள், பலாத்காரம் பலனற்றது என்பதையும், சுயமாக துன்பத்தை ஏற்பதுதான் அதாவது சாத்துவிக எதிர்ப்புதான் சரியான முறையென்றும் நிரூபித்துக் காட்ட முயற்சித்து வருகிறோம். எங்களுடைய துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள நீங்கள் உத்தேசித்திருப்பதாக பகிரங்கமாகக் கூறிவிட்டு, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த ஒரு பிரஜை என்ற முறையில் நீங்கள் திரான்ஸ்வாலுக்கு வருவீர்களாயின், அது உலக மக்களின் கவனத்தை ஈர்க்கும். அதன் பலனாகப் போராட்டமும் முடிவடையும். உங்களுடைய தேச மக்கள் உங்களை நன்கு புரிந்து கொள்வார்கள். மேலே கடைசியாக நான் கூறியதை நீங்கள் பொருட்படுத்தாமல் இருக்கலாம். ஆனால் இந்திய மக்களின் நலனுக்காக நான் அதில், அதாவது அவர்கள் உங்களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதில் மிகவும் அக்கறையுடையவனாக இருக்கிறேன். நீங்கள் இங்கு வந்தால், உங்களை அதிகாரிகள் விட்டு வைத்திருந்து நானும் சுதந்திரமாக இருப்பேனாயின், பலவீனமடைந்துள்ள உங்களுக்குப் பணிவிடை செய்வதை நான் ஒரு பெரும் பாக்கியமாகக் கருதுவேன். அதிகாரிகள் உங்களைக் கைது செய்து சிறையில் வைத்தால், நான் ஆனந்தம் அடைவேன். நான் இவ்

---

*அக்டோபர் 14 வ காந்திஜிக்கு போலக் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்ததாவது: ‘‘கோகலே எவ்வளவு தூரம் மனவேதனைக்கு உள்ளாகியிருக்கிறார் என்பதைப் பாருங்கள். கவர்னர் அவரைத் தம்மிடம் அழைத்து வரும்படி கூறி, அவரது உயிருக்கு அபாயம் ஏற்படக்கூடும் என்று எச்சரித்ததாக கோகலே என்னிடம் அந்தரங்கமாகக் கூறினார். இந்திய ஊழியர் சங்கத்தினர் கோகலேயை இராப் பகலாகப் பாதுகாத்து வருகிறார்கள்; பாதுகாப்பின்றி வெளியே செல்ல அவரை அவர்கள் ஒரு போதும் விடுவதேயில்லை.’’

விதம் கூறுவது தவறாக இருக்கலாம். எனினும் இந்தியாவுக்காக அத்தகைய துன்பத்தை ஏற்பது பெருமையே என்று நான் கருதுகிறேன். அத்தகைய தீவிர அபிப்பிராயமுள்ள என்னை, காங்கிரஸ் மேடையில் திரான்ஸ்வால் பிரச்னைக்கு முக்கிய இடம் அளிக்கவேண்டும் என்று கூறுவதற்காக மன்னிப்பார்கள். திரான்ஸ்வால் இந்தியர் போராட்டத்தில் நீங்களும் கலந்து கொள்ளப் போவதாகக் கூறுவதைக் காட்டிலும் பலன்தரத் தக்க விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது.

பல குறுக்கீடுகளுக்கிடையே இக்கடிதத்தை நான் எழுதியிருக்கிறேன். எனவே என் விருப்பப்படி விஷயங்களை விளக்கி என்னால் எழுத முடியவில்லை. உங்கள் மீதுள்ள பக்தியே, இந்த யோசனை கூறும்படி என்னைத் தூண்டியிருக்கிறது. தென்னாப்பிரிக்காவில் யாரும் உங்கள் மீது தப்பெண்ணம் கொள்ளமாட்டார்கள். வேறு எந்த இடத்தையும் காட்டிலும் இங்குதான் உங்களை அதிகமாகப் போற்றுவார்கள்.

உங்களுடைய பதிலை, தபால் பெட்டி 6522, ஜோகன்னஸ்பர்க் என்ற விலாசத்திற்கு அன்பு கூர்ந்து எழுதுவீர்களா?

தங்கள்,

மோ. க. காந்தி

## 23

(தந்தி)

நவம்பர் 30, 1909

உற்ற சமயத்தில் மிகவும் தாராளமாக உதவி புரிந்ததற்காக டாடாவுக்கு நன்றி செலுத்துகிறேன். இந்தியர்களின் துன்பம் மிகவும் அதிகமாகியிருக்கிறது. கைதிகள் கொடுமையாக நடத்தப்படுகிறார்கள். மத சம்பந்தமான உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்கப்படுவதில்லை. உணவும் போதிய அளவு கொடுக்கப்படுவதில்லை. கைதிகளை மலஜல சட்டிகளைத் தூக்கிச் செல்ல வேண்டியிருக்கிறது. அவற்றை எடுத்துச் செல்ல மறுத்தால், மேலும் உணவைக் குறைத்து தனி அறையில் அடைக்கிறார்கள். பிரபல முஸ்லிம்கள், ஹிந்துக்கள், பார்ஸிகள் ஆகியோர் சிறையில் இருக்கிறார்கள்.

காந்தி

# 24

ஜோகன்னஸ்பர்க்,
டிசம்பர் 6, 1909

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நாங்கள் கேப் டவுனுக்கு வந்து சேர்ந்தவுடனே, டாடாவிட மிருந்து தாராளமான நன்கொடை கிடைத்திருப்பதை அறிவிக்கும் உங்களுடைய தந்தி கிடைத்தது. எங்களுடைய தேவைகளைக் குறித்து புனாவிலிருந்து தாங்கள் எழுதிய கடிதமும் இப்போது கிடைத்தது. நான் இப்போதுதான் உங்களுக்குப் பின்வருமாறு தந்தி கொடுத்திருக்கிறேன்:

"தற்போதைய தேவை ஆயிரம் பவுன். இந்த மாத முடி விற்குள் நாங்கள் சிறைப்படலாமென எதிர்பார்க்கிறோம். பின்னர் அதிகத் தொகை தேவையாக இருக்கும்."

செலவு அதிகமாகியிருப்பதை நான் கவனித்து வருகி றேன். அவ்விதம் அதிகமாகியே தீரும். தென்னாப்பிரிக்காவில் நாங்கள் சேகரித்த தொகைகளெல்லாம் செலவாகி விட்டன. வெளியாரின் உதவியின்றியே போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தும் ஆற்றல் வாய்ந்த போதிய இந்தியர்கள் திரான்ஸ் வாலில் இருக்கிறார்கள். ஆனால் அவ்விதம் உதவி புரிய அவர் களுக்கு விருப்பமில்லை. தாங்கள் போதிய தொகை கொடுத்து விட்டதாக அவர்கள் எண்ணுகிறார்கள். அவர்கள் இந்தியர் களிடையே மனோதைரியம் இல்லாதவர்கள். தைரியம் உள்ள வர்கள் எல்லாவற்றையும் கொடுத்து பாப்பராகிவிட்டார்கள். அவர்களை சர்க்கார் எத்தனை தடவை கைது செய்து சிறைக்கு அனுப்பினாலும், அத்தனை தடவை அவர்கள் சிறைக்குச் சென்று வருகிறார்கள். அவ்விதம் சிறை செல்லுவோரின் குடும்பங்களைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. இந்தப் போராட்டம் ஆரம்ப மானபோது, செலவுகளையெல்லாம் நான் ஏற்றுக்கொண்டு வந் தேன். என்னுடைய அலுவலகம்கூட போராட்டத்திற்காகவே உபயோகிக்கப்பட்டு வருகிறது. சென்ற இரண்டு ஆண்டுகளாக வக்கீல் தொழிலில் நான் அநேகமாக ஈடுபடவே இல்லை. 'இந் தியன் ஒபினியன்' தன் செலவைத் தானே செய்து கொள்ளக் கூடிய நிலையை இன்னும் அடையவில்லை. எனவே அதன் செலவுக்கும் நான் தொகை கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. இப்போதைய செலவுகள் இவைதான்:

| | |
|---|---|
| இங்கேயுள்ள அலுவலகம் | 50 பவுன் |
| லண்டனிலுள்ள அலுவலகம் | 40 ,, |
| 'இந்தியன் ஒபினியன்' | 50 ,, |
| துன்பத்திற்குள்ளான குடும்பங்களுக்கு | 25 ,, |

இவைதான் குறைந்த பட்சமான மாதச் செலவுகள் என எண்ணுகிறேன். 'இந்தியன் ஒபினியனி'ல் வேலை செய்வோரில் ஐரோப்பியர்கள் உட்பட அநேகமாக எல்லோருமே வறுமை விரதத்தை மேற்கொண்டு வேலை செய்து வருகிறார்கள். பணம் செலுத்தும் சந்தாதார்களின் தொகை மிகவும் குறைவாதலால், அப்பத்திரிகை அலுவலகத்திற்கும் உதவி அளிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. இந்தியாவிலிருந்து உதவித் தொகை கிடைக்குமாயின், மேற்கண்ட செலவுகளைத் தொடர்ந்து செய்து வரலாமென்று கருதுகிறேன். இல்லாவிடில், 'இந்தியன் ஒபினியனு'க்கு ஆகும் செலவில் பெரும் பகுதியைக் குறைத்துவிட வேண்டும் என்பது எனது உத்தேசமாகும். அதாவது லண்டன் அலுவலகத்தை மூடிவிட உத்தேசித்திருக்கிறேன். அவ்விதம் செய்வது, போராட்டத்திற்கு மகத்தான ஆதரவளித்து வரும் அம்சங்களில் ஒன்றை இழந்துவிடுவதாகும்.

இறுதிவரையில் உறுதியுடன் நிற்கக்கூடிய தீவிர சாத்துவிக எதிர்ப்பாளர்கள் நூறுபேர் இருக்கிறார்கள். அவர்கள், இந்தியர்களின் பிரச்னையையொட்டி அதிகாரிகள் கவனம் செலுத்தும்படி நடந்து கொள்வார்கள். இந்திய சமூகத்தினரில் பெரும்பாலோர் கூட்டங்களுக்கு விஜயம் செய்தும், கண்டனங்கள் அனுப்பியும், தங்களாலியன்ற பொருள் கொடுத்தும் உதவி செய்வார்கள். இதன் பலனாக, சாத்துவிக எதிர்ப்பாளர்களுக்கு தங்களை அண்டியிருக்கும் தங்கள் குடும்பத்தினருக்கு ஆதரவு அளிப்பது சாத்தியமாக இருக்கும். செலவுக்குப் பணமின்றி போராட்டத்தின் வேகத்தைக் குறைப்பது, போராட்டம் காலவரையறையின்றி நீடித்து நடப்பதற்குக் காரணமாகிவிடும். எனினும் ஒரு கொள்கையையொட்டி இந்தப் போராட்டம் மேற்கொள்ளப்பட்டிருப்பதால், எங்களில் அதை நன்கு அறிந்தவர்களுக்கு ஏமாற்றம் எதுவும் ஏற்படாது. நாங்கள் அதற்காக ஆயுள் முழுவதும் துன்பத்தை அனுபவிக்கத் தயாராக இருக்கிறோம்.

திரான்ஸ்வாலிலோ அல்லது தென்னாப்பிரிக்காவிலோ உள்ள நமது தேச மக்களை, அவர்கள் முன்போல் தாராளமாகப் பண உதவி செய்யவில்லை என்பதற்காக நான் குறைகூற முடியாது. இந்தப் போராட்டத்திற்காக ஏற்கனவேயே 10,000 பவுனுக்கு மேல் செலவாகியிருக்கிறது. இந்தக் கணக்கில் நான், தனி நபர்களுக்கு ஏற்பட்டுள்ள ஏராளமான நஷ்டத்தைச் சேர்க்கவில்லை. எனவே பலரும் இப்போது மனம் சோர்ந்து, பண உதவி அளிப்பதற்குக் கூட மறுப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

இருந்தாலும், இந்தப் போராட்டத்தின் தேசீய முக்கியத்துவத்தை இப்போது இந்தியாவில் மக்கள் உணர்ந்துகொண்டிருப்பதால், நாங்கள் பகிரங்கமாகவே பண உதவி பெறலாமென்று கருதுகிறேன். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு அதிகமாகப் பண உதவி கிடைக்க வேண்டும் என்பதில் நான் ஆர்வமுடையவனாக இருக்கிறேன். இப்போது நான் இங்குள்ள நிலைமையைப்

பூராவாக உங்களுக்கு எடுத்துக் கூறியுள்ளேன். எல்லா வகுப்பு களையும் சேர்ந்த, ஈடு இணையற்ற தைரியம் வாய்ந்த இந்தியர் களில் சிலர் இப்போது டீப்க்ளூப் சிறையில் இருந்து வருகிறார்கள். அவர்களில் ஸ்ரீ ரஸ்டம்ஜிக்குத்தான் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன். அவர் சென்ற ஒன்பது மாதங்களுக்கு மேலாக தொடர்ந்து சிறையில் இருந்துவருகிறார். அவரது ஆரோக்கியம் மிகவும் சீர்குலைந்துவிட்டது. நான் நேற்று சிறைக்குச் சென்று அவரைப் பார்த்தேன். அவசியமாயின், சிறை யிலேயே இறக்க அவர் உறுதிகொண்டிருக்கிறார். மற்றொருவ ரான இமாம் அப்துல் காதிர் பவாசீர் பண்பு வாய்ந்தவர். மூன்றா வதாக, பிரபல வியாபாரியான ஸ்ரீ இப்ராகிம் அசுவத்தைச் சொல் லலாம். அவர் சூரத் ஜில்லாவைச் சேர்ந்தவர். நான்காவதாக, ஜைன வகுப்பைச் சேர்ந்தவரும் பி. ஏ. வரையில் படித்தவருமான ஸ்ரீ நானுலால் ஷாவைக் குறிப்பிட வேண்டும். ஐந்தாவது ஸ்தா னத்தை வகிப்பவர் அகமதாபாத்தைச் சேர்ந்த ஸ்ரீ உமையா சங்கர் ஷெலாட். அவர் அகமதாபாத்தைச் சேர்ந்த ஒரு பிராம்மண ராவார். மலஜலச் சட்டியைத் தூக்க மறுத்ததற்காக அவர் தனி அறையில் அடைக்கப்பட்டிருக்கிறார். எனினும் அஞ்சா நெஞ்சம் படைத்த தம்பி நாயுடுதான் அவர்கள் எல்லோரையும் விட அதிக தைரியசாலியும், அதிக உறுதி வாய்ந்தவரும் ஆவார். இந்தப் போராட்டத்தின் தத்துவத்தை அவரைப்போல் வேறு எந்த இந்தி யரும் அறிந்துகொள்ளவில்லை என்றே நினைக்கிறேன். அவர் மோரீஸ் தீவில் பிறந்தவர். எனினும் எங்களில் பெரும்பாலோரை யும்காட்டிலும் அவர்தான் உண்மையான இந்தியர். இந்தப் போராட்டத்திற்காக அவர் எல்லாவற்றையும் தியாகம் செய்துள் ளார். லார்டு ஆம்தில்லின் திருத்தத்தில் குறிப்பிட்டிருப்பதற்குக் குறைந்த எதையும் நான் ஒப்புக்கொண்டால் கூட, தாம் அதை ஒப்புக் கொள்ள மறுத்து தாம் மாத்திரம் தனியாகப் போராட் டத்தை நடத்தி திரான்ஸ்வால் சிறையிலேயே இறக்கத் தீர்மானித் திருப்பதாக அவர் எனக்கு ஒரு செய்தி அனுப்பியுள்ளார்.

இந்த ஜாபிதாவில் ஸ்ரீ ஸொராப்ஜி என்ற மற்றொரு இளைஞ ரையும் நான் சேர்த்துக் கொள்ளலாம். போராட்டத்தின் இரண் டாவது கட்டத்திற்கு அஸ்திவாரம் போடுவதற்காக அவர் லாபகர மான உத்தியோகத்தை விட்டுவிட்டு வந்துள்ளார். அவர் கற் றறிஞர். தமக்கு என்னென்ன நேரும் என்பதை அறியாமல் கிள்ளுக்கீரையாக எண்ணிக்கொண்டு அவர் போராட்டத்தில் ஈடு பட்டார். எனவே அவர் சென்ற பதினெட்டு மாதங்களாகச் சிறை யிலேயே இருந்துவருகிறார். இவ்விதமாக நான் பலருடைய பெயர்களைக் குறிப்பிட முடியும். தற்போது மொத்தத்தில் சுமார் முப்பது இந்திய சாத்துவிக எதிர்ப்பாளர்கள் சிறையில் இருந்து வருகிறார்கள். சர்க்கார் விரும்புவார்களாயின், அந்த கௌரவத் திற்கு உரிமை கோர இன்னும் பலர் தயாராக இருக்கிறார்கள் என்பது நிச்சயம். இதுபோன்ற போராட்டத்தின் பலாபலன்கள் என்னவென்பதை அளவிடுவது மிகவும் கடினமாகும். நம் தாய்

நாடு பாதுகாப்பு அளிக்க முன்வந்து சாத்தியமானவரையில் உதவி புரியுமென நான் நம்புகிறேன். எங்களுக்கு இந்தியாவிலிருந்து தொடர்ந்து பண உதவி கிடைத்து வந்தால், அதுவே தார்மிக ரீதியில் மகத்தான பலனை அளிக்கக்கூடியதாக இருக்கும். லண்டனிலிருந்து நான் எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்கும் என்றும், அது உங்களுடைய ஆலோசனையில் இருந்துவரும் என்றும் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

பின் குறிப்பு: உங்களிடமிருந்து கிடைத்துள்ள 1673 பவுனை, பெரிதும் 'இந்தியன் ஒபினியன்' சம்பந்தமாக ஏற்பட்ட கடன்களைத் தீர்ப்பதற்காக உபயோகிக்க உத்தேசித்திருக்கிறேன். அதன் சம்பந்தமான கணக்கு விவரங்கள் முழுவதையும் உங்களுக்கு அனுப்புகிறேன்.

**மோ. க. காந்தி**

## 25

ஜோகன்னஸ்பர்க்,
ஏப்ரல் 25, 1910

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

சென்ற டிசம்பர் 6வ நான் அனுப்பிய தந்திக்கு, எவ்வளவு தொகை தேவையாக இருக்குமென்று கேட்டு நீங்கள் பதில் தந்தி அனுப்பியிருந்தீர்கள். அதற்கு நான் அனுப்பிய பதில் பின்வருமாறு:

"தற்போது ஆயிரம் பவுன் தேவை. இந்த மாத இறுதிக்குள் நான் சிறைப்படுவேன் என்று எதிர்பார்க்கிறேன். பின்னர் மேலும் மிகவும் அதிகமான தொகை தேவையாக இருக்கும்."

அந்தத் தொகைகளெல்லாம் எவ்விதம் பட்டுவாடா செய்யப்படுகின்றன என்பது பற்றியும் அதே தினத்தில் நான் ஒரு கடிதம் எழுதினேன்.* பம்பாய், ரங்கூன், லண்டன், மொஸாம்பிக், ஜான்ஸிபார் ஆகிய மற்றும் பல இடங்களிலிருந்தும் மொத்தம் பவுன் 5269-10-7 கிடைத்தது. கிடைத்த தொகைகளெல்லாம் சரியான முறையில் செலவிடப்பட்டுள்ளன.

துன்பத்திற்குள்ளான குடும்பங்கள் கொடுக்க வேண்டிய வாடகைகளுக்காக சற்றேறக் குறைய 50 பவுன் கொடுக்கப்பட்

*முந்திய பக்கங்களில் வெளியாகியுள்ள 24-ம் கடிதத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

டுளது. எனவே அவர்களை ஒரு பண்ணைக்கு மாற்றுவது நல்ல தல்லவா என்பது பற்றி நாங்கள் ஆலோசித்து வருகிறோம். அந்தப் பண்ணையில் ஆடவர்களும் பெண்களும் தங்கள் ஜீவனத் திற்கு ஏதாவது சம்பாதிக்க முடியும். அவ்வாறு செய்வதன் பலனாக, கஷ்ட நிவாரணத்துக்காக இப்போது கொடுக்கப்பட்டு வரும் தொகையில் பாதியை மிச்சப்படுத்துவது சாத்தியமாகும்.

ஒரு பண்ணைக்கு முதலீடு செய்வது கஷ்டமான காரியமாக இருந்தது. சிறையிலிருந்து வெளிவந்துள்ள ஸ்ரீ கச்சேலியாவும், மற்றவர்களும், நானும் முதலீடு செய்யும் சிரமத்தை ஏற்கவும் தயா ராக இருந்தோம். அவசியமாயின், போராட்டம் முடிந்ததும் அதை விற்று சரிக்கட்டிக் கொள்ளலாம் என்று நம்பினோம். அதற்கு அதிக மூலதனம் தேவையில்லை. இப்போது ஓர் ஐரோப்பிய நண்பர் (எச். காலென்பாக்) ஒரு பண்ணையை வாங்கி, போராட்டம் முடியும் வரையில் அதை இலவசமாக எங்களிடம் ஒப்புவிக்க முன்வந்துள்ளார். இந்தக் கடிதம் உங்கள் கைக்குக் கிடைக்கும்போது அவர் தகுதியான ஒரு பண்ணையை வாங்கிவிட லாம். அவ்விதம் அவர் வாங்கிவிட்டால், துன்பத்திற்குள்ளான குடும்பங்களும் நானும் அந்தப் பண்ணையிலேயே சேர்ந்து வசிப் போம்.

சமீப காலமாக அதிகாரிகள் இந்தியர்களை, குறிப்பாக தைரிய சாலிகளான தமிழர்களைக் கைது செய்வதில் வெகு மும்முரமாக இருந்து வருகிறார்கள். தமிழர்களைக் காட்டிலும் வேறு எந்த இந்தியரும் போராட்டத்தில் அவ்வளவு சிறந்த முறையில் பங்கு எடுத்துக் கொள்ளவில்லை. தைரியசாலிகளான அவர்கள் போராட் டத்தில் அடிக்கடி சிறை சென்றுள்ளனர். டீப்க்ளூப் சிறையில் தற் போது முப்பது பேர்கள் இருக்கின்றனர். திரான்ஸ்வாலிலுள்ள மற்ற சிறைகளைக் காட்டிலும் டீப்க்ளூப் சிறையில் கட்டுப்பாடு விதிகள் மிகக் கடுமையானவை. ஏறக்குறைய அறுபது பேர் நாடுகடத்தப்பட்டுள்ளனர். மேலும் முப்பது பேரை நாடுகடத்த அதிகாரிகள் உத்தரவிட்டுள்ளனர். நாடுகடத்தும் இந்த உத்தரவு களைப் பற்றி நான் சாந்தமாக எழுதுவதென்பது இயலாத காரிய மாகும். அவர்கள் எல்லோரும் திரான்ஸ்வாலில் குடியேறி ஸ்தா பித்தவர்கள். அவர்களில் சிலர் நேட்டாலிலும் ஸ்தாபித்தவர்க ளாவர். நேட்டால் காலனி குடியேற்றச் சட்ட விதிகளின்படி அவர்களில் சிலர், கல்வி சம்பந்தமான சோதனையில் தேறியவர்கள். நேட்டாலில் பிரவேசிக்க அவர்களுக்கு உரிமை உண்டு. மற்றும் சிலர் திரான்ஸ்வாலிலும், தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த மற்றப் பகுதிகளிலும், பிறந்த இளைஞர்கள். பலர், இந்த நாட்டிலேயே பிறந்து வாழ்ந்துவரும் தங்களுடைய குடும்பங்களைவிட்டுச் சென் றிருக்கிறார்கள். அவர்களுடைய மனைவிமாரையும், சகோதரி களையும், தாய்மாரையும் நான் அடிக்கடி சந்தித்தேன். அவர்க ளெல்லோரும் தைரியமாகவே இருக்கிறார்கள். நாடு கடத்தப்பட்டு இந்தியாவுக்குச் சென்றுள்ளவர்களுடன் நீங்களும் செல்ல விரும்பு கிறீர்களா என்று அவர்களை நான் கேட்டேன். இந்தக் கேள்வி

அவர்களுக்குக் கோபத்தை உண்டாக்கியது. அவர்கள் கூறியதாவது: "நாங்கள் எப்படி அவர்களுடன் செல்ல முடியும்? நாங்கள் குழந்தைகளாக இருந்தபோது எங்களை இங்கு அழைத்து வந்தார்கள். எங்களுக்கு இந்தியாவில் யாரையும் தெரியாது. இந்தியா எங்களுக்கு ஓர் அந்நிய நாடுதான். எனவே இந்தியாவுக்குச் செல்லுவதைவிட இங்கே மடிவதையே நாங்கள் விரும்புகிறோம்."

தேசிய நோக்குடன் பார்க்கும்போது மேற்கண்ட மனநிலை வருந்தத்தக்கதே என்றாலும், அந்த ஆடவர்களும் பெண்களும் தென்னாப்பிரிக்காவிலேயே வேரூன்றியவர்கள் என்ற உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது. போராட்டத்திற்கு முன் அவர்களில் பலர் கண்ணியமாக சம்பாதித்து வாழ்ந்துவந்தார்கள். அவர்கள் பல்வேறு தொழில்களிலும் ஈடுபட்டு மாதந்தோறும் 6 பவுனிலிருந்து 15 பவுன்வரையில் சம்பாதித்து வந்தார்கள். டிராலி வண்டி கண்டிராக்டர் போன்றவர்கள் மாதம் 30 பவுன்வரையில் கூட பொருளீட்டிவந்தார்கள். அவர்கள் எல்லோரும் இப்போது வறுமையில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய குடும்பத்தினர், சாத்துவிக எதிர்ப்பு நிதியிலிருந்து தங்களுடைய ஜீவனத்திற்கு மிகக் குறைந்தபட்சமான தொகையைப் பெற்றுவருகிறார்கள். இந்தியர்களை நாடுகடத்துவதற்காக சர்க்கார் பல பொய்க் காரணங்களைக் கூறிவருகிறார்கள் என்பது ருஜுவாகியிருக்கிறது. உண்மை என்னவெனில், தைரியசாலிகளான தமிழர்களின் உறுதியையும் உள்ள வலிமையையும் தகர்க்க அரசாங்கத்தினால் இயலவில்லை. எனவே, இப்போது அவர்களை எப்படியாவது ஒழித்துக்கட்ட சர்க்கார் அதிகாரிகள் முற்பட்டிருக்கிறார்கள். ஆனால் அந்த ஆடவர்களோ, அவர்களுடைய மனைவிமாரோ, தாய்மாரோ அல்லது சகோதரிகளோ அதிகாரிகளின் கொடுமைகளுக்குப் பயந்து அடிபணிந்துவிடமாட்டார்கள் என்று நான் உங்களுக்கும், உங்கள் மூலம் இந்தியாவிலுள்ள பொதுமக்களுக்கும் உறுதி கூறுகிறேன்.

திரான்ஸ்வால் சட்டத்தில் இந்தியர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அவமதிப்பை எதிர்த்தே நாங்கள் போராடிவருகிறோம். அந்த அவமதிப்பு அகற்றப்படும் வரையில் தாய்நாடு தனது முயற்சியைக் கைவிடாது என்றும், தாய்நாட்டிலிருந்து எங்களுக்குக் கிடைத்துவரும் ஆதரவைத் தொடர்ந்து பெற்றுவருவோம் என்றும் நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 26

ஜோகன்னஸ்பர்க்,
மே 2, *1910*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

உங்களுக்கு எழுதப்பட்டுள்ள ஒரு பகிரங்கக் கடிதத்தை* நான் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். நான் யோசனை செய்த பின், அவ்விதம் அனுப்புவதுதான் சிறந்ததென்று எனக்குத் தோன்றியது. அக்கடிதம் இங்குள்ள பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்டுள்ளது. இந்தியாவிலும் அதைத் தாங்கள் பத்திரிகைகளில் வெளியிடுவீர்களென நினைக்கிறேன். நன்கொடையளித்தவர்கள் தெரிந்துகொள்ளவும் இது உதவியாக இருக்கும். 'இந்தியன் ஒபினியன்' சம்பந்தமாக நான் செய்த செலவை ஸ்ரீ டாடா அங்கீகரித்துள்ளார் என்று ஸ்ரீ பெடிட் எனக்கு எழுதியிருக்கிறார். அவ்விஷயமாக உங்களுடைய கடிதம் எனது கவலையை அகற்றியிருக்கிறதெனினும், ஸ்ரீ டாடாவிடமிருந்து திட்டவட்டமான அங்கீகாரம் எனக்குக் கிடைத்தால் நலமாக இருக்கும்.

குஜராத்தியில் நான் வெளியிட்ட 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற புத்தகத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு இப்போது வெளியாகியிருக்கிறது. அவற்றை நான் வெளியிட்டது, திரான்ஸ்வாலில் நடைபெற்றுவரும் போராட்டத்தை எந்த விதத்திலும் பாதிக்காது என நம்புகிறேன். அந்தப் புத்தகத்தில் நான் வெளியிட்டுள்ளவை எனது சொந்த அபிப்பிராயங்களாகும். போராட்டத்தின் போது அந்த அபிப்பிராயங்கள் பக்குவமடைந்தன என்றாலும், அவற்றிற்கும் போராட்டத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. எனவே எனக்கு எதிராகவோ அல்லது அப் புத்தகத்துக்கு எதிராகவோ ஏதாவது தப்பெண்ணம் ஏற்பட்டால், அதற்கும் போராட்டத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்பதை நீங்கள் வலியுறுத்துவீர்களென நம்புகிறேன். 'ஹிந்த் ஸ்வராஜி'ல் கூறப்பட்டுள்ள அபிப்பிராயங்கள் தீர்க்காலோசனையின்றியோ, ஆய்ந்தோய்ந்து பாராமலோ உருவானவையல்ல. 'டைப்' செய்யப்பட்ட அதன் பிரதியை ஸ்ரீ போலக் உங்களுக்கு அனுப்பியுள்ளார். அச்சிட்ட பிரதியை உங்களுக்கு நான் அனுப்பவில்லை. ஏனெனில் குஜராத்தி புத்தகம் பறிமுதல் செய்யப்பட்டிருப்பதால், அதன் மொழிபெயர்ப்புக்கும் அதே தடை விதிக்கப்படும் என்று நினைத்தே அச்சிட்ட பிரதியை நான் அனுப்பவில்லை.

டைப் செய்யப்பட்ட பிரதியை வாசிக்க உங்களுக்கு நேரமிருந்தால், உங்களுடைய அபிப்பிராயத்தை மிகவும் மதிப்பு வாய்ந்ததாகக் கருதுவேன். அப் புத்தகம் இங்கு பரந்தமுறையில் விநியோகிக்கப்பட்டிருக்கிறது. அதையொட்டி ஏராளமான விமர்

---

* 25-ம் கடிதத்தையே காந்திஜி பகிரங்கக் கடிதம் என்று குறிப்பிட்டிருக்கிறார். அந்தக் கடிதம் 7-5-1910 'இந்தியன் ஒபினியன்' இதழில் வெளியிடப்பட்டது.

சனங்களும் வந்திருக்கின்றன. இன்றைய 'டிரான்ஸ்வால் லீடர்' இதழில் ஒருவர் கையெழுத்திட்ட விமர்சனம் வெளியாகியிருக்கிறது. அதை உங்களுக்கு அனுப்பும்படி ஸ்ரீ போலக்கைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

நோயிலிருந்து நீங்கள் பூரண குணமடைந்திருக்கிறீர்களென நம்புகிறேன். தாய் நாட்டுக்குத் தொண்டு புரிவதற்காக நீங்கள் நீண்ட காலம் வாழ்ந்திருக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 27

போனிக்ஸ், நேட்டால்,
செப்டம்பர் *30, 1910*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

ஸ்ரீ போலக்கை* வரவேற்பதற்காக இங்கே நான் வந்திருக்கிறேன். இங்குள்ள நிலைமை பற்றி இன்னும் சில நாட்களில் உங்களுக்கு எழுதுகிறேன்.

ஸ்ரீ மணிலால் டாக்டர், எம். ஏ., பாரிஸ்டரைத் தங்களுக்கு அறிமுகம் செய்துவைக்கவே இதை நான் எழுதுகிறேன். அவர் சிறிது காலமாக மோரீஸ் தீவில் தொழில் நடத்திவருகிறார். சொந்த நலனைக் காட்டிலும் தேச நலன் அபிவிருத்தியடைய வேண்டும் என்பதற்காகத் தமது தொழிலில் ஈடுபடும் உயர்ந்த ரக மனிதர்களில் அவரும் ஒருவர் என்பதே எனது அபிப்பிராயமாகும். அவர் இந்தியர்களின் பிரதிநிதியாக காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு வருகிறார். நீங்கள் அவருக்கு ஆலோசனை கூறி வழி காட்டினால் மிகவும் நன்றியுள்ளவராக இருப்பார்.

தங்கள் உண்மையுள்ள

**மோ. க. காந்தி**

---

* தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் சார்பில் அவர்களுடைய கஷ்ட நஷ்டங்களை எடுத்துக் கூறுவதற்காக இந்தியாவுக்கு வந்திருந்த ஸ்ரீ போலக், சுல்தான் என்ற கப்பலில் 1910 செப்டம்பர் 28உ டர்பன் போய்ச் சேர்ந்தார். அவரை வரவேற்கவே தாம் நேட்டாலுக்கு வந்ததாக மேற்கண்ட கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

## 28

ஜோகன்னஸ்பர்க்,
மே 19, 1911

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

இப்போது செத்துவிட்ட குடியேற்ற மசோதாவைப் பற்றி விசாரித்து தாங்கள் ஒரு தந்தி அனுப்பினீர்கள். அதன் பிறகு, நான் குறிப்பிட்ட காலத்தில் ஒழுங்காகத் தங்களுக்குக் கடிதம் எழுத வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்த்தீர்களா என்பது எனக்குத் தெரியாது. உங்களுடைய நேரத்தை மற்றும் பல அலுவல்கள் ஆட் கொண்டிருப்பதை நான் நேரில் அறிவேன். எனவே உங்களுக்குக் கடிதங்கள் எழுதித் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்றே அதிக மாக எழுதுவதை நான் எப்போதும் தவிர்த்து வந்திருக்கிறேன். இன்றுவரையிலுள்ள நிலைமையை ஸ்ரீ போலக்கிடமிருந்து நான் தெரிந்துகொண்டேன். அவர் சென்ற முறை உங்களைப் பார்த்த போது, நீங்கள், கல்கத்தாவில் உங்களுடன் நான் தங்கியிருந்த போது* இருந்ததைக் காட்டிலும் அதிகமான அலுவல்களில் மும்முரமாக ஈடுபட்டிருப்பதாக என்னிடம் கூறினர். எனினும் இங்குள்ள நிலைமையைப்பற்றிய எனது விமர்சனத்தை உங்களுக்கு அப்போதைக்கப்போது அனுப்பவேண்டியது அவசியமென்று நான் கருதுகிறேன். இந்தியர்கள் சென்ற நான்கு ஆண்டுகளாக சாத்து விக எதிர்ப்பை மேற்கொண்டிராவிடில், எதுவும் செய்திருக்க முடி யாதென நான் இயல்பாகவே கருதுகிறேன். எனினும் உங்களு டைய தலைமையில் இந்தியாவில் பொதுமக்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளும், அங்கே ஸ்ரீ போலக்கும், இங்கிலாந்தில் ஸ்ரீ ரிச்சும் செய்த அற்புதமான காரியங்களும் எங்களுடைய இன்னல்க ளெல்லாம் விரைவில் தீருவதற்குக் காரணமாக இருந்தன என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். இருந்தாலும் நாம் மிகப் பிடிவாதமுள்ள விரோதியுடன் போராட வேண்டியவர்களாக இருக்கிறோம். எனவே இடைவிடாமல் கண்காணிப்புடன் இருந்து வர வேண்டியது முற்றிலும் அவசியமாகும். குடியேற்றச் சட்டத் தில் இந்தியர்களுக்கு ஏட்டளவில் சமத்துவ அந்தஸ்து அளிக்கப் பட்டுள்ளதெனினும், அதனால் இங்குள்ள இந்தியர்களின் பொரு ளாதார நிலைமையில் யாதொரு மாறுதலும் ஏற்பட்டு விடாது. இந்த உண்மையை நான் அறியாமலில்லை. ஆனல் போராட்ட மானது ஆச்சரியமான விதத்தில் இந்தியர்களை ஒன்று சேர்த்து அவர்களிடையே ஒற்றுமை ஏற்படும்படி செய்திருக்கிறது; நாம் கூறுவதை அரசாங்கம் மரியாதையுடன் செவி கொடுத்துக் கேட்கும் படியும் செய்திருக்கிறது. போராட்டத்தின் பலனக இந்திய சமூகத் திற்கு தன்னம்பிக்கையும் ஏற்பட்டிருக்கிறது. எனவே இப்போது

* 1901-ல் காந்திஜி தென்னப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்தபோது, பல நாட்கள் வரையில் கல்கத்தாவில் ஸ்ரீ கோகலேயுடன் தங்கியிருந்தார்.

தான் நாங்கள் இங்கு சட்ட சம்பந்தமான சில அசௌகரியங்களைக் குறித்து கவனம் செலுத்த சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அவை, நாம் ஒரு தேச மக்கள் என்ற முறையில் நமது கௌரவத்தைப் பாதிப்பவையல்ல; ஆனால் அவை இங்கே குடியேறியுள்ள இந்தியர்களின் பொருளாதார நிலைமையைப் பாதிப்பவையாக இருக்கின்றன. உதாரணமாக, திரான்ஸ்வாலில் இந்தியர்கள் சொந்தத்தில் நிலம் முதலிய சொத்துகள் வைத்துக் கொள்ளக்கூடாது என்ற தடை நீக்கப்படவேண்டும். இந்தியர்கள் டிராம் வண்டிகளை உபயோகிக்கக் கூடாது என்ற தடை ஆத்திரத்தை உண்டாக்குவதாக இருக்கிறது. எனவே அதிக காலம் அதைச் சகித்துக் கொண்டிருக்க முடியாது. கட்டிடங்களில் இந்திய வியாபாரிகள் தங்கள் தங்கள் தொழிலை யாதொரு தொந்தரவுமின்றி நடத்துவதற்கு இடையூறாக இருக்கும் திரான்ஸ்வால் தங்கச் சட்டத்திலுள்ள கொடிய ஷரத்தை,* எப்பாடுபட்டாவது அகற்றிவிட வேண்டும். திரான்ஸ்வால் சம்பந்தப்பட்டவரையில் அவ்வளவுதான்.

நேட்டாலில், ஒப்பந்தத்திலிருந்து விடுதலை பெற்ற இந்தியர்களிடமிருந்து வருடந்தோறும் வசூலிக்கப்படும் மனிதத் தன்மையற்ற கொடிய வரி இந்தியர்களுக்கு ஒரு பெரும் சுமையாக இருந்து வருகிறது. அது இந்தியர்களின் மனைவிமார், குழந்தைகள், ஆடவர்கள், பெண்கள் எல்லோரிடமிருந்தும் வசூலிக்கப்படுகிறது. அந்த வரியைப் பற்றி நன்கு அறிந்த ஒவ்வோர் இந்தியரின் மனச் சாட்சியையும் அது வேதனைக்கு உள்ளாக்கும். நேட்டாலில் வியாபாரிகள் லைசன்ஸ் சட்டம் எந்த விநாடியிலும் இந்திய சமூகத்தை மூழ்கடிக்கக் கூடிய பயங்கரமான மேகமண்டலத்தைப் போல் இருந்துவருகிறது. கேப் காலனியிலும் அது போன்ற ஒரு சட்டம், இந்திய வியாபாரிகளின் வாழ்வுக்கு அபாயம் விளைவிப்பதாக இருந்து வருகிறது. அங்கு குடியேற்றச் சட்டத்திலுள்ள ஒரு கொடிய ஷரத்தும் இந்தியர்கள் குடியேறி ஸ்தாபிக்கும் உரிமையை ஒரு கேலிக்கூத்தாகச் செய்திருக்கிறது. இவ்விஷயங்களை யொட்டி காலனி மந்திரிக்கு விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டுள்ளன. உங்களுடைய ஏராளமான அலுவல்களுக்கிடையே அவற்றைப் பரிசீலனை செய்யும்படி உங்களுடைய ஊழியர்களில் ஒருவரை நீங்கள் கேட்கலாம். அதன் பின் நீங்கள் அவசியமென்று கருதும் முறைகளை எடுத்துக் கொள்ளலாம். அந்த விண்ணப்பங்கள் 'இந்தியன் ஒபினியனி'ல் வெளியாகி யிருக்கின்றன.

---

* ஐரோப்பியரல்லாத நிற மக்களுக்குக் கடைகளை ஐரோப்பியர் வாடகைக்கு விடக் கூடாது என்று திரான்ஸ்வால் தங்கச் சட்டத்தின் 130-வது ஷரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தச் சட்டம் நிறைவேறுவதற்கு முன் அதன் நகல் மசோதாவை எதிர்த்து காந்திஜி 1908-ம் ஆண்டில் திரான்ஸ்வால் சர்க்காருக்கு விண்ணப்பம் செய்து கொண்டிருந்தார். ஆனால் அப்போது காந்திஜி மேற்கண்ட ஷரத்தின் விளைவாகத் துன்பம் ஏற்படுமென எதிர்பார்க்கவில்லை, ஆசியாக்காரர்களை நேரடியாகப் பாதிக்கும் ஷரத்துக்களைப் பற்றியே அப்போது அவர் அதிக கவனம் செலுத்தி வந்தார்.

ஸ்ரீ போலக் தம்பதிகள் நவம்பர் மாத ஆரம்பத்தில் இந்தியாவில் இருப்பார்கள். மேற்கண்ட விஷயங்களையொட்டி உங்களுக்குத் தேவையான உதவியை அவர் செய்வார். ஜெனரல் ஸ்மட்ஸிடமிருந்து நாங்கள் இறுதியான பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஜெனரல் ஸ்மட்ஸின் உறுதி மொழி அடுத்த வருடம் நிறைவேற்றப்படாவிடில், போராட்டத்திற்குத் தயாராக இருக்கும்படி சாத்துவிக எதிர்ப்பாளர்கள் எல்லோரையும் எச்சரித்திருக்கிறோம். டால்ஸ்டாய் பண்ணை இன்னும் தொடர்ந்து நடந்து வருகிறது. எனினும் சாத்துவிக எதிர்ப்பு நிதியை மிகவும் சிக்கனமாகவே உபயோகித்துக்கொள்ள முயற்சித்து வருகிறோம். ஸ்ரீ போலக்கின் பிரயாணச் செலவுக்கான தொகையை இங்கேயே வசூல் செய்து வருகிறோம்.

நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 29

*ஜூன் 17, 1911*

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

இக்கடிதத்தை உங்களிடம் கொண்டுவரும் ஸ்ரீ ஸொராப்ஜி பூர்ஜி அதஜானியா மாபெரும் சாத்துவிக எதிர்ப்பாளர்களில் ஒருவராவார். மறக்க முடியாத இந்தப் போராட்டத்தில் நான் பெற்ற அற்புதமான அனுபவங்களில் ஸ்ரீ ஸொராப்ஜியைப் போன்றவர்களைக் கண்டுபிடித்ததுதான் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். அவரைச் சந்தித்தால் நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள் என்பது நிச்சயம். அடுத்த வருடம் சட்டம் கொண்டுவரப் போவதாக ஜெனரல் ஸ்மட்ஸ் உறுதி கூறியிருக்கிறார். அதற்குள் தாம் இந்தியாவிலிருந்து திரும்பி வந்துவிடவேண்டும் என்பது ஸ்ரீ ஸொராப்ஜியின் உத்தேசமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 30

டால்ஸ்டாய் பண்ணை, லாலி ஸ்டேஷன்,
திரான்ஸ்வால், *அக்டோபர் 24, 1911*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

இந்திய தேசீய காங்கிரஸ் தலைவர் பதவி சம்பந்தமான குழப்படியைக் குறித்து நான் உங்களுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுத

விரும்புகிறேன். அதை ஒரு குழப்படியாகவே இங்குள்ளவர்கள் கருதுகின்றனர். இதைப்பற்றி பின்னர் எழுதுகிறேன்.

ஸ்ரீ மணிலால் டாக்டர், மோரீஸ் தீவில் சிறந்த முறையில் பொதுத் தொண்டு செய்திருக்கிருர் என்பதை நீங்கள் அறிவீர் கள். அதன் பலனுக அவர் அங்குள்ள ஏழை இந்தியர்களின் அன்பைப் பெற்று, அவர்களுடைய உண்மையான நண்பராகியிருக் கிருர். அவர் இப்போது தென்னுப்பிரிக்காவுக்கு வந்திருக்கிருர். இங்கேயுள்ள மாகாணங்கள் ஒன்றில் அவர் நிரந்தரமாக வசிக்க முற்படலாம். இதன் மத்தியில் அவர் காங்கிரசில் கலந்து கொள்வ தற்காக இந்தியாவுக்குச் செல்லுகிருர். இந்தியாவிலிருந்து ஒப்பந் தத் தொழிலாளர்கள் அனுப்பப்படுவதை அடியோடு கண்டித்து காங்கிரஸில் ஒரு தீர்மானம் கொண்டுவர அவர் விரும்புகிருர். அவரது அபிப்பிராயத்தை நான் முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன். ஒப்பந்தத் தொழிலாளர்களை அனுப்புவதால் யாருக்கும் எவ்வித நன்மையும் ஏற்படவில்லை. அது இந்தியாவிலுள்ள நமது பிரச்னை களைத் தீர்க்கப்போவதில்லை என்பதை, பதினெட்டு வருட அனுபவம் எனக்குக் கற்பித்திருக்கிறது. எனவே ஸ்ரீ மணிலாலின் முயற்சி வெற்றிபெற நீங்கள் உதவி புரிவீர்களென நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

# 31

ஜோகன்னஸ்பர்க்,
அக்டோபர் *30, 1911*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

காங்கிரஸ் தலைவர் பதவி சம்பந்தமான குழப்படியை யொட்டி தாங்கள் அனுப்பிய நீண்ட தந்திக்காக நான் நன்றி யுள்ளவனுக இருக்கிறேன். நீங்கள் நோயுற்றிருந்ததைக் கேட்க மிகவும் வருந்துகிறேன். இந்தியாவுக்கும், இங்கிலாந்துக்கும் வெளியே நீங்கள் ஒரு காலத்திலும் பிரயாணம் செய்ய முடியாதா? பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் வெளிநாடுகளுக்குச் செல்லுகிருர்கள். அப்படியிருக்க இந்திய ராஜதந்திரிகளும் ஏன் வெளிநாடு களுக்குச் செல்லக்கூடாது? தென்னுப்பிரிக்காவுக்கு நீங்கள் வந்து ஒரு சில நாட்கள் இங்கே பிரயாணம் செய்தால் கூட, அதனுல் இரு விதத்தில் நன்மை ஏற்படும். இப்போது நீங்கள் இங்கே சிறை செல்ல வேண்டுமென்ற பிரச்னை எழுவதற்கில்லை. உங்க ளுடைய விஜயமானது இங்குள்ள மக்களுக்கு இந்தியாவுடன் நெருங்கிய தொடர்பை உண்டாக்கும்; உங்களுடைய ஆரோக்கியம் சீர்படுவதற்காக உங்களுக்குப் பணிவிடை செய்யும் வாய்ப்பு

எனக்குக் கிடைக்கும். டால்ஸ்டாய் பண்ணையிலும், போனிக்ஸிலும் உங்களைப் போன்ற நோயாளிகளுக்குப் போதிய வசதிகள் இருக்கின்றன என்பதே எனது அபிப்பிராயமாகும். டால்ஸ்டாய் பண்ணையில் ஸ்ரீ காலென்பாக் உங்களை அன்புடன் வரவேற்பார் என்பது நிச்சயம். போனிக்ஸில் நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டில் இருப்பதுபோல் இருக்கலாம்.

காங்கிரஸ் தலைவர் பதவி சம்பந்தமாக என் பெயர் தீவிரமாக விவாதிக்கப்படுகிறது என்பது, நேட்டால் இந்தியர் காங்கிரசிலிருந்து வந்த ஒரு தந்தியிலிருந்துதான் எனக்கு முதன் முதலாகத் தெரிந்தது. வரப்போகும் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு நான் தலைமை வகிக்க வேண்டுமென அதற்கு அழைப்பு வந்திருப்பதாகவும், அந்த அழைப்பை ஏற்றுக் கொள்ளும்படி என்னை வற்புறுத்துவதாகவும் அந்தத் தந்தியில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அந்த அழைப்பை நான் ஏற்றுக் கொள்வதற்கில்லையென பதில் அனுப்பினேன். இந்தியாவிலிருந்து அழைப்பை யார் அனுப்பினர்கள் என்பதன் சம்பந்தமாக மிகுந்த குழப்படி ஏற்பட்டது. அது எப்படியாயினும், நான் கருத்துகளை பகிரங்கமாகத் தெரிவிக்காமல் காங்கிரஸ் தலைவர் பதவியை ஏற்றுக் கொள்ள முடியாது. காங்கிரசில் வருடந்தோறும் விவாதிக்கப்படும் பல பிரச்னைகளையொட்டியும் எனக்கு உறுதியான அபிப்பிராயங்கள் உண்டு. காங்கிரஸ் மேடையில் நான் கூறும் அந்த அபிப்பிராயங்கள் நமது தலைவர்களால் ஒப்புக் கொள்ள முடியாதவையாக இருக்கலாம். எனது அபிப்பிராயங்கள் பக்குவமடையவில்லை என்றும், அரைகுறையான ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்றும் கருதப்படலாம். எனக்கு மாருன அபிப்பிராயங்கள் உடையவர்களுக்கு அவற்றை எடுத்துக் கூற பூரண உரிமை உண்டு என்றே நான் நினைக்கிறேன். எனவே தற்போதுள்ள நிலைமையில் தென்னப்பிரிக்கா இந்தியர்களின் பிரச்னைகளைத் தீர்க்க முற்படுவதன் மூலமே நான் சிறந்த தொண்டு செய்ய முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தியாவுக்குச் செல்லும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்குமாயின், என் தேச மக்களுக்கு நான் தனித்த முறையில் தொண்டு செய்யவே விரும்புகிறேன்; இல்லாவிடில் தங்களைப் போன்ற தலைவரின் மேற்பார்வையில் உத்தியோகப் பற்றற்ற முறையில் தொண்டு செய்ய விரும்புகின்.. பல விஷயங்களையொட்டியும் நமக்குள் கருத்து வேற்றுமை இருக்கிறதென்பதை நான் அறிவேன். இருந்தாலும் உங்களிடமும் உங்களுடைய உயர்ந்த ஒழுக்கத்திலும் முன் போலவே எனக்கு மிகுந்த மதிப்பு இருந்துவருகிறது.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 32

டால்ஸ்டாய் பண்ணை, திரான்ஸ்வால்,
டிசம்பர் 8, 1911

அன்புள்ள பேராசிரியர் கோகலே,

நீங்கள் நோயுற்றிருந்தும், நவம்பர் 3உ. தாங்கள் அனுப்பியுள்ள அந்த நீண்ட கடிதத்தைத் தாங்கள் வாயால் கூறி எழுதிக் கொள்ளும்படி செய்ய வேண்டியிருந்ததை நினைக்க நான் வருந்துகிறேன். காங்கிரஸ் தலைவர் பதவிக்கு என்னைச் சம்பந்தப் படுத்தி ராய்ட்டர் அனுப்பிய படுமோசமான தந்தி உங்களுக்கு எவ்வளவு வேதனையை உண்டாக்கியிருக்கவேண்டும் என்பதை நான் முற்றிலும் உணர முடிகின்றது. என்னை மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன். அந்தத் தந்தி வெளியான பின், போலி உணர்ச்சி காரணமாகவும் தர்ம சங்கடமான நிலைமையைச் சமாளிப்பதற்காகவும் தலைவர் பதவிக்கு என்னை நியமனம் செய்திருந்தால், அது துக்கப்படவேண்டிய ஒரு விஷயமாக இருந்திருக்கும். இதன் சம்பந்தமாக அங்கே பத்திரிகைகளில் நடந்துள்ள விவாதத்தைக் குறித்து நான் எள்ளளவும் கவலைப் படவில்லை என்பதையும், அது என்னை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை என்பதையும் நான் உங்களுக்கு உறுதியாகக் கூறவேண்டிய தேவையில்லை.

நீங்கள் ஸ்ரீ ரிச்சிற்கு எழுதியுள்ள கடிதத்தில் உங்களுடைய புதல்வி நோயுற்றிருப்பதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவள் இப்போது பூரணமாகக் குணமடைந்து விட்டாள் என்றே நம்புகிறேன்.

ஸ்ரீ போலக் அங்கே உங்களுடன் இருக்கிறார். எனவே இங்குள்ள நிலைமை பற்றி நான் உங்களுக்கு எதுவும் கூறத் தேவையில்லை. இந்தியாவிலிருந்து ஒப்பந்தத் தொழிலாளர்களை உலகத்தின் எந்தப் பாகத்திற்கும் அனுப்பக்கூடாதென்று அறவே தடுத்து காங்கிரசில் கொண்டு வந்த தீர்மானம் நிறைவேறி யிருக்குமென நம்புகிறேன்*

தென்னாப்பிரிக்காவுக்கு விஜயம் செய்யும்படி உங்களை மீண்டும் நான் அழைக்கலாமா? உங்களுடைய ஆரோக்கியத்தை உத்தேசித்தும், உங்கள் மீது பேரன்பு கொண்டு நீங்கள் இன்னும் பல ஆண்டுகள் உடல் ஆரோக்கியத்துடனும், மன வலிமையுடனும் வாழவேண்டுமென விரும்புவோரை உத்தேசித் தும் நீங்கள் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரமாக இந்த

* மேலே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ள தீர்மானம் கல்கத்தாவில் நடந்த அகில இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக் கூட் டத்தில் 1911-டிசம்பர் 28-ம்தேதி நிறைவேறியது. அந்தக் கூட்டம் பண்டித பிஷன்நாராயண் தாரின் தலைமையில் நடந்தது.

நாட்டிற்கு விஜயம் செய்யவேண்டும். போலக் தம்பதிகள் திரும்பி வரும்போது அவர்களுடன் நீங்களும் இந்த நாட்டிற்கு வந்தால் எவ்வளவு அருமையாக இருக்கும்! தயவு செய்து இங்கே வருவதென்று முடிவு செய்யுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 33

டால்ஸ்டாய் பண்ணை,
*திரான்ஸ்வால், ஜனவரி 12, 1912*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

மிகவும் சீக்கிரத்தில் தாங்கள் இந்த நாட்டிற்கு வருகிறீர்கள் என்ற செய்தியைப் பார்க்க நாங்கள் எல்லோரும் எவ்வளவு ஆனந்தமடைந்தோம் என்பதை உங்களுக்கு விவரித்துக் கூறுவது முடியாத காரியம்.

நீங்கள் வரும் தேதியைப் பல நாட்களுக்கு முன்பாகவே அறிவிப்பீர்களென நம்புகிறேன்.

சாத்தியமாயின், நீங்கள் லண்டனுக்குச் செல்லும்போது இங்கு வருவது சிறந்ததென நீங்கள் நினைக்கவில்லையா? அப்போதுதான் நீங்கள் இங்குள்ள பிரச்னையை நேரில் பரிசீலனை செய்து, லண்டனிலும் எங்களுக்கு நீங்கள் மிகுந்த உதவி அளிக்க முடியும். இங்கே நீங்கள் தங்குவதன் மூலம் உங்கள் உடல் நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டு நீங்கள் அதிக ஆரோக்கியத்துடன் லண்டனுக்குச் செல்லலாமென நான் எண்ணுகிறேன். ஒரு வேளை இந்த எண்ணம் வீண் பெருமையாக இருக்கலாம்.

இப்போதுதான் தென்னாப்பிரிக்கா யூனியன் பார்லிமெண்டுக் கூட்டம் நடைபெற விருக்கிறது. சர்க்கார் உறுதி கூறியுள்ள மசோதா எந்தச் சமயத்திலும் வெளியிடப்படலாம்.*

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

---

* யூனியன் பார்லிமெண்டு 26—1—1912-ல் கூடியது. காந்திஜி மேற் கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ள மசோதா 30—1—1912-ல் முதல் முறையாக நிறைவேறியது.

## 34

டால்ஸ்டாய் பண்ணை,
திரான்ஸ்வால், 28-7-1912

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

உங்கள் தந்தி எனக்கு மிகுந்த ஆனந்தத்தை அளித்தது. நீங்கள் இங்கு வரும் தேதியைப் பற்றி* ஒவ்வொருவரும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இங்கு நீங்கள் குறைந்தது ஒரு மாதமாவது தங்கியிருப்பீர்களென நம்புகிறேன். உங்களைத் தங்களிடையே வரவேற்க முக்கியமான எல்லா நகரங்களிலுமுள்ள இந்தியர் சங்கங்கள் மிகவும் ஆர்வத்துடன் இருந்து வருகின்றன.

உங்களுடன் உங்களுடைய காரியதரிசியோ அல்லது வேறு யாராவதோ கூட வந்தால், அத்தகவலை நீங்கள் அன்பு கூர்ந்து அறிவிப்பீர்களென எண்ணுகிறேன்.

தென்னாப்பிரிக்காவில் உங்களுக்கு ராஜயோகமான வரவேற்பு அளிக்கப்படும் என்பதை நான் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

லண்டன் வந்ததன் பலனாக உங்களுடைய உடல் நலம் மிகவும் அபிவிருத்தி அடைந்திருக்குமென நம்புகிறேன். சில நாட்கள்வரை உங்களை யாரும் வந்து பார்க்கக் கூடாதென டாக்டர்கள் உத்தரவிட்டிருப்பதாக ஸ்ரீ போலக்கின் மகளிடமிருந்து நான் கேள்விப்பட்டதால் மிகவும் கவலையுடன் இருந்தேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 35

டால்ஸ்டாய் பண்ணை,
ஆகஸ்டு 4, 1912

உங்களுடைய நீண்ட கடிதத்திற்காக மிகவும் நன்றி.

உங்களுடைய உடல் நலம் அபிவிருத்தியடைந்து வரும் சமயத்தில், அதற்குக் குந்தகம் ஏற்படக்கூடிய விதத்தில் நீங்கள் இங்கு வரவேண்டுமென நான் கனவில் கூட கூறமாட்டேன். தென்னாப்பிரிக்காவுக்கு வருமுன் நீங்கள் முற்றிலும் குணமடைவீர்கள் என்றே நினைக்கிறேன். நீங்கள் கேப் டவுன், கிம்பர்லி, ஜோகன்னஸ்பர்க், பிரிடோரியா ஆகிய இடங்களுக்குச் செல்ல

---

* ஸ்ரீ கோகலே தாம் அக்டோபர் மாதம் 5-ம் தேதி புறப்பட்டு வருவதாக 28—7—1912-ல் அவர் லண்டனிலிருந்து அனுப்பிய தந்தியில் குறிப்பிட்டிருந்தார்.

வேண்டியிருக்கும். நீங்கள் ஆட்சேபிக்காமலிருந்தால், உங்களை வரவேற்கும்படி ஜெனரல் போத்தாவையும்* ஸ்ரீ பிஷரையும்† கேட்டுக்கொள்ள உத்தேசித்திருக்கிறேன். உங்களை வரவேற்கும்படி ஸ்ரீ மெர்ரிமென்னையும் கேட்டுக் கொள்கிறேன். அவர் தென்னுப்பிரிக்காவில் தலைசிறந்த ராஜதந்திரியாகத் திகழ்கிருர். நான் மேலே கூறியுள்ள எல்லா இடங்களிலும் உங்களுக்கு உபசாரப் பத்திரங்கள் வாசித்து அளிக்கப்படும். தங்களுக்கு ஜோகன்னஸ்பர்க்கில் ஒரு விருந்தும் அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதில் ஐரோப்பியர்களும் கலந்து கொள்வார்கள். அதற்கு அநேகமாக மேயர் தலைமை வகிக்கலாம். உங்களுடைய விஜயத்தின் கடைசி வாரத்தில் நீங்கள் டர்பனுக்கும், போனிக்ஸிற்கும் செல்ல வேண்டியிருக்கும். டர்பனிலிருந்து நீங்கள் கப்பலில் இந்தியாவுக்குப் புறப்படலாம்.

உங்களுடைய யாத்திரைத் திட்டத்தை நான் குறிப்பிட்டிருப்பதற்குக் காரணம் என்னவெனில், அதில் நீங்கள் ஏதாவது மாறுதல் செய்ய விரும்பினுல் தந்தி அல்லது கடிதத்தின் மூலம் நீங்கள் அவ்விதமே செய்யலாம் என்பதுதான்.§

---

* ஜெனரல் போத்தா (1862—1919) தென்னுப்பிரிக்காவில் நடந்த போயர் யுத்தத்தில் ராணுவ தளபதியாக இருந்தார். 1907–ல் திரான்ஸ்வாலில் பார்லிமெண்டு முறையை அடிப்படையாகக் கொண்ட அரசாங்கம் ஏற்பட்ட போது ஜெனரல் போத்தா முதலாவது பிரதம மந்திரியாக பதவி வகித்தார். 1910–ல் தென்னுப்பிரிக்கா யூனியன் சர்க்கார் அமைக்கப்பட்டபோது அவர் தான் அந்த சர்க்காரின் முதலாவது பிரதம மந்திரியாக பதவி ஏற்ருர். 1914–ல் ஆரம்பமான ஜெர்மன் யுத்தத்தின்போது ஜெனரல் போத்தா, ஜெர்மனியின் ஆதிக்கத்தில் இருந்த ஆப்பிரிக்கப் பிரதேசங்களில் பெரும் பகுதியையும் வெற்றி பெற்று ஆக்கிரமித்துக் கொண்டார். அவர் 1919 வரையில் யூனியன் பிரதம மந்திரியாக இருந்தார்.

† அப்ரஹாம் பிஷர் ஆரஞ்சு ரிவர் காலனியில் பிரதம மந்திரியாக இருந்தார். பின்னர் பல ஆண்டுகள் வரையில் தென்னுப்பிரிக்கா யூனியன் சர்க்கார் மந்திரியாக இருந்தார். அவர்தான் 1913-ல் யூனியன் பார்லிமெண்டில் குடியேற்ற மசோதாவைக் கொண்டு வந்து நிறைவேற்றினர்.

‡ ஜான் ஸேவியர் மெர்ரிமென் 1908-1910-ல் கேப் காலனி பிரதமராக பதவி வகித்து வந்தார்.

§ ஸ்ரீ கோகலே தென்னுப்பிரிக்காவுக்கு விஜயம் செய்வதையொட்டி 10—8—1912-ல் வெளியான 'இந்தியன் ஒபினியன்' இதழில் காந்திஜி தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்திய சமூகத்திற்குப் பின்வருமாறு ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தார் :

ஸ்ரீ கோகலேயைப் போன்ற ஓர் இந்தியப் பிரமுகர் இந்த நாட்டிற்கு விஜயம் செய்வது இதுதான் முதல் தடவையாகும். அவர் நமக்குப் பேருதவி புரிந்திருக்கிருர். ஒப்பந்தத் தொழிலாளர்களை அனுப்பும் முறையை ரத்து செய்யும் விஷயமாக அவர் செய்துள்ள தொண்டிற்கு நாம் போதிய அளவு நன்றி செலுத்துவது முடியாத காரியம். மேலும் அவரது முயற்சியினுலேயே

ஜெனரல் ஸ்மட்ஸின் வாக்குறுதியை ஸ்ரீ பிஷர் நிறைவேற்று விட்டால் கூட, அதனால் பேரபாயம் எதுவும் ஏற்பட்டுவிடாது. நமது இயக்கத்திற்கு அதனால் அதிக பலமே ஏற்படும். ஆனால் யூனியன் சர்க்கார் அவ்விதம் செய்வது சாத்தியமாக இருக்குமென நான் நினைக்கவில்லை. நடக்கக் கூடியது என்னவெனில், யூனியன் பார்லிமெண்டு அந்த மசோதாவை நிறைவேற்றுமல் இருந்துவிடலாம். தங்களுடைய கௌரவத்தைப்பற்றிய சிந்தனையேயின்றி யூனியன் சர்க்கார் தாங்கள் எதுவும் செய்வதற்கு வழியில்லை என்று நம்மிடமும் பிரிட்டிஷ் சர்க்காரிடமும் கூறிவிடலாம். அவ்விதம் நேருமாயின், மனக் கசப்பு அதிகமாகி போராட்டம் உக்கிரமாக இருக்கும். எங்களில் சிலருக்கு உயிர் ஒட்டிக்கொண்டிருக்கும் வரையில் போராட்டம் தொடர்ந்து நடைபெறும்.

போராட்டத்திற்காக ஸ்ரீ டாட்டா மீண்டும் ரூ. 25,000 கொடுத்திருப்பது மிகவும் அருமையான உதவியாகும். அதற்கு உங்களுடைய முயற்சியே காரணம் என்பதை நான் அறிவேன். ஒவ்வொரு சமயத்திலும் நன்கொடைகள் உற்ற சமயத்தில் வந்து சேர்ந்திருக்கின்றன. பண்ணையை நடத்துவது மிகவும் கஷ்டமாக இருந்தது.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

நம்முடைய சத்தியாக்கிரக நிதிக்கு ஏராளமான நன்கொடைகள் கிடைத்தன. சத்தியாக்கிரகிகளிடம் அவர் பூரண அனுதாபத்துடன் இருந்து வருகிறார். தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னையை யொட்டி ஸ்ரீ போலக் இந்தியாவுக்குச் சென்றிருந்தபோது, ஸ்ரீ கோகலே அவருக்கு எல்லாவிதத்திலும் உதவி புரிந்தார். இந்திய சட்ட சபையிலும் ஸ்ரீ கோகலேய்க்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. குறிப்பாக, இங்குள்ள இந்தியர்களின் நிலைமையைப் பரிசீலனை செய்வதற்காகவே அவர் இந்த நாட்டுக்கு விஜயம் செய்கிறார்.

நம்முடைய சுயநலனை உத்தேசித்தாவது அவரைத் தகுந்த முறையில் வரவேற்று உபசரிக்க வேண்டும். அவரை வரவேற்கும்போது ஹிந்து-முஸ்லிம் பிரச்னையை நாம் எழுப்பக் கூடாது. வகுப்பு வேற்றுமை எதுவுமின்றி எல்லாச் சங்கங்களும் இந்தியர் என்ற முறையிலேயே அவரை வரவேற்க வேண்டும். நம்மிடையே அற்ப வேற்றுமைகள் இருப்பினும், அவற்றை இப்போது மறந்து இந்திய சமூகத்தைச் சேர்ந்த எல்லோரும் அவரை ஏக மனதாக வரவேற்க வேண்டும். இதுபோன்றதொரு அரிய சந்தர்ப்பம் கிடைக்காது. இப்போது நாம் செய்யும் முயற்சியும் நாம் காட்டும் ஒற்றுமையும் எப்போதும் நமக்குப் பக்கபலமாக இருந்து வரும்.

## 36

தார்-எஸ்-ஸலாம் (கிழக்கு ஆப்பிரிக்கா),
டிசம்பர் 4, 1912

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

நாங்கள் இங்கு இன்னும் இரண்டு நாட்கள் வரையில் இருப்போம்.

லூரென்கோ மார்க்விஸில் (கிழக்கு ஆப்பிரிக்கா) பெட்டி* கண்டு பிடிக்கப்பட்டதாகவும், அது உங்களுக்கு அனுப்பப்பட்டு வருவதாகவும் ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து தந்தி வந்ததும், நான் உங்களுக்கு ஒரு தந்தி அனுப்பினேன். அது உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன்.

என்னிடமுள்ள குற்றம் குறைகளையெல்லாம் நீங்கள் மன்னிப்பீர்களா? உங்களுக்கு நான் தகுதி வாய்ந்த ஒரு சீடனாக இருக்கவே விரும்புகிறேன். இது வெறும் கேலிப் பேச்சல்ல, உண்மையாகவே கூறுகிறேன். இந்தியாவில் ஒரு சீடனுக்கு என்ன தகுதிகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றனவோ, அந்தத் தகுதிகளுடன் விளங்க வேண்டும் என்பதே என் விருப்பமாகும். நமக்குள் கருத்து வேற்றுமைகள் பல இருக்கலாம். எனினும் அரசியல் வாழ்க்கையில் உங்களையே நான் ஒரு முன்னுதாரணமாகக் கொண்டுள்ளேன்.

இந்த அரைகுறை வைத்தியனிடமிருந்து ஒரு வார்த்தை. நிறைய உண்ணாவிரதம் இருங்கள். கண்டிப்பாக இரண்டே வேளை தான் சாப்பிடவேண்டும்; குழம்பு, ஊறுகாய் முதலிய எவ்வித மான வியஞ்சனங்களையும் அடியோடு தவிர்க்க வேண்டும்; பருப்பு வகைகள், டீ, காப்பி ஆகியவற்றை விட்டுவிட வேண்டும்; இடுப்பு ஸ்நானமும், ஆசனத்தில் அமர்ந்து ஸ்நானமும் செய்ய வேண்டும்; ஒழுங்காக தினந்தோறும் வேகமாக நடக்க வேண்டும்; (சிந்தனையைத் தூண்டுவதற்காக அங்குமிங்கும் உலாவுவதல்ல). ஆலிவ் எண்ணெயும், அமிலத்தன்மையுள்ள பழங்களும் சாப்பிட வேண்டும்; சமைத்த உணவு உட்கொள்வதைச் சிறிது சிறிதாக விட்டுவிடவேண்டும். இவ்விதம் செய்வதால் உங்களுக்குள்ள நீரிழிவு நோய் அகன்றுவிடும். தற்போது உங்கள் உடல் இருக்கும் நிலையில், நீங்கள் எவ்வளவு காலம் தொண்டு புரியலாம் என்று கருதுகிறீர்களோ அதைக் காட்டிலும் பல வருடங்கள் அதிகமாகத் தொண்டு புரியலாம்.

ஸ்ரீ காலென்பாக் உங்களை விசாரித்ததாக எழுதும்படி கூறினர்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

---

* ஜோகன்னஸ்பர்க்கில் பிரிட்டிஷ் இந்தியர் சங்கத்தினர், கெட்டியான தங்க 'பிளேட்'டில் தங்களுடைய உபசாரப் பத்திரத்தின் வாசகங்களைச் செதுக்கி, அதை ஸ்ரீ கோகலேய்க்குக் கொடுத்தனர். அந்த 'பிளேட்' வைக்கப்பட்டிருந்த பெட்டியைப் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

பின் குறிப்பு: உங்கள் தந்தியைக் கண்டு நாங்கள் இருவரும் மகிழ்ச்சி அடைந்தோம். மொம்பாஸாவில் தங்களுக்கு அளிக்கப் பட்ட வரவேற்பு விவரங்களை 'இந்தியன் ஒபினியனி'ல் பிரசுரிப் பதற்காக அனுப்பி வைக்கும்படி ஸ்ரீ சாஸ்திரியாரையோ அல்லது இந்திய ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த வேறு யாரையாவதோ அன்பு கூர்ந்து கேட்பீர்களா ?

மோ. க. கா.

# 37

போனிக்ஸ், நேட்டால்,
டிசம்பர் 28, 1912

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

சகன்லாலின் மகன் நோயுற்றிருப்பதால், நான் ஜோகன்னஸ் பர்க்கிற்குச் சென்றவுடனேயே இங்கு அவசரமாக வரவேண்டிய தாயிற்று. இடுப்பு ஸ்நானம், அரைப் பட்டினி ஆகிய முறைகளைக் கைக்கொண்டதன் பலனாக, அவன் இப்போது மிகவும் குண மடைந்திருக்கிறான்.

மொம்பாஸாவிலிருந்து தாங்கள் எழுதிய கடிதத்திற்காகவும், இந்தியாவிலிருந்து அனுப்பிய தந்திக்காகவும் மிகுந்த நன்றி. நீங்கள் தந்தி மூலம் அறிவித்த கண்டனம் நாங்கள் எதிர்பார்த் ததேயாகும். அது என்னை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை. கண் டன வாதிகள், அப்பிரச்னையைப் பரிசீலனை செய்யும் சிரமத்தை எடுத்துக் கொள்ளவில்லை. ஸ்ரீ நடராஜன் கூட அவரது பத்திரி கையில், தற்போதுள்ள சூழ்நிலையில் எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு நாங்கள் நல்ல பேரம் செய்திருப்பதாகக் குறிப் பிட்டிருக்கிறார். உண்மை என்னவெனில், நாங்கள் யாதொரு "பேரமும்" செய்யவில்லை. இருந்தாலும் உங்களுக்கு நான் தொந்தரவு கொடுக்கக் கூடாது. உங்களுடைய நேரமும் ஆரோக் கியமும் மிகவும் அருமையானவை என்று நான் கருதுகிறேன். எனவே நீண்ட கடிதம் எதுவும் எழுதி அவற்றிற்கு நான் குந்தகம் விளைவிக்கக் கூடாது.

தங்களுடைய தந்திக்கு இந்த வாரத் தொடக்கத்தில் நான் பதிலளித்தேன். நமது பிரயாணத்தின்போது ஏற்பட்ட சில சில்லறைத் தவறுகளைத் தடுத்திருக்கலாம் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். நான் அதிகக் கவனத்துடன் இருந்திருந்தால், அவற்றைத் தடுத்திருக்க முடியும். இந்தப் பிரயாணத்தின்போது நான் கற்றுக்கொண்ட படிப்பினை இனி வீண்போகாது.

ஜனவரி மாதம் மத்தியில் நான் போனிக்ஸுக்கு ஜாகை செல்லலாமென நம்புகிறேன்.

நான் ஜோகன்னஸ்பர்க்கிற்கு வந்ததும், சாத்துவிக எதிர்ப்பு நிதிப் பணம் எல்லாம் தீர்ந்துவிட்டதாக ஸ்ரீமதி ஷ்லெஸின் என்னிடம் கூறினர். பல இனங்களுக்கும் நான் கொடுக்க வேண்டியிருப்பதால், ஸ்ரீ பெடிட்டினிடம் உள்ள மீதித் தொகையை அனுப்புமாறு அவரிடம் கூறும்படி உங்களைக் கேட்டுக் கொண்டு நான் அனுப்பிய தந்தியில் சில வார்த்தைகளைச் சேர்க்கும் உரிமையை எடுத்துக் கொண்டேன்.

உங்களுடைய உடல் நலம் திருப்திகரமாக இருந்துவருகிறதென நம்புகிறேன். உங்களுடைய ஆரோக்கியத்தைப் பற்றியும் உணவில் நீங்கள் செய்துள்ள மாறுதல்களைப் பற்றியும் எல்லா விவரங்களையும் அறிந்து கொள்ள நான் ஆர்வத்துடனிருக்கிறேன்.

தென்னுப்பிரிக்கா சம்பந்தமான வேலைகளைக் கவனிக்க இந்திய ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த ஒருவரை நியமித்துவிட்டால், இங்குள்ள நிலைமையைப் பற்றி அப்போதைக்கப்போது ஒழுங்காக ஒவ்வொரு கப்பலுக்கும் கடிதம் எழுத ஏற்பாடு செய்வது சாத்தியமாக இருக்கும். அங்கு முக்கியமானவர்களுக்கு வினியோகிப்பதற்காக 'இந்தியன் ஒபினியன்' இதழ்கள் சிலவற்றை அனுப்பலாம். இங்குள்ள நிலைமையைப் பற்றித் தவருமல் கடிதம் எழுதும்படி நீங்கள் என்னைக் கேட்டிருக்கிறீர்கள். பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவை ஏராளமான விவரங்களை நீங்கள் வாசிக்கும்படி தொந்தரவு கொடுக்கக் கூடாதென்று நான் கருதுகிறேன். நீங்கள் நியமிக்கும் ஒருவர் அதையெல்லாம் கவனிக்கலாம்; அவசியமாக இருக்கும்போது உங்களுடைய யோசனைகளைக் கேட்டுக் கொள்ளலாம்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 38

போனிக்ஸ்,
பிப்ரவரி *14, 1913*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

இந்தியாவிலுள்ள பத்திரிகைகளில் வெளியான கண்டனங்கள் யாவும் இப்போது என்முன் இருக்கின்றன. அவற்றை வாசிக்கும்போது என் மனம் வேதனை அடைகின்றது. எனினும் இதெல்லாம் எதிர்பார்த்ததுதான். உங்களுடைய சொந்த முறையில் அதை நீங்கள் சமாளித்து வருவதையும் நான் கவனித்துள்ளேன்*.

* தென்னுப்பிரிக்காவுக்கு விஜயம் செய்த ஸ்ரீ கோகலே, அங்குள்ள இந்தியர்களின் உரிமைகள் சிலவற்றை விட்டுக் கொடுத்து பேரம் செய்து கொண்டார் என்றே அப்போது இந்தியாவிலுள்ள சில பத்திரிகைகள் கண்டித்தன. தென்னுப்பிரிக்காவில் ஏற்கனவே குடியேறியுள்ள இந்தியர்

இந்தியப் பிரச்னை சம்பந்தமாக தென்னாப்பிரிக்கா யூனியன் மந்திரிகளிடையே பலமான கருத்து வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது. பிரதம மந்திரி ஜெனரல் போத்தாவுக்கும் சுதேசிகள் நிர்வாக மந்திரி ஜெனரல் ஹெர்ட்ஸாகிற்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமை காரணமாக யூனியன் பார்லிமெண்டு அலுவல்களே சீர்குலைந்துள்ளன. எனவே சர்க்கார் தாங்கள் கொண்டுவரப் போவதாக உறுதி கூறியுள்ள சட்டம் மீண்டும் தள்ளி வைக்கப்படலாம். அவ்விதம் நேருமாயின், எனது நிலைமை தர்ம சங்கடமாகிவிடும். அதன் காரணமாக, நான் இந்த வருட நடுவில் இந்தியாவுக்குப் புறப்பட முடியாமற்போகலாம்.

மந்திரிகள் தாங்கள் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற வில்லை. குடியேற்றச் சட்டங்களின் உக்கிரம் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இங்கு சட்ட பூர்வமாகக் குடியேறி ஸ்தாபித்த இந்தியர்களின் மனைவிமார்கூடத் துன்பத்திற்கும் வீண் செலவிற்கும் உள்ளாக வேண்டியிருக்கிறது. அத்தகைய சம்பவங்களெல்லாம் 'இந்தியன் ஒபினியனி'ல் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன.

அங்கு நீங்கள் தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னைகளைக் கவனிக்க ஒரு நிரந்தரமான கமிட்டியை அமைப்பீர்களென நினைக்கிறேன். நீங்கள் லண்டனுக்குச் செல்லும்போது அங்குள்ள கமிட்டியையும்* ஒழுங்குபடுத்துவீர்கள் என்று நம்புகிறேன்.

ஸ்ரீ பெடிட் தந்தி மூலம் 400 பவுன் அனுப்பியுள்ளார். நீங்கள் கொடுத்த 80 பவுனும் அதில் சேர்ந்திருப்பதாக அவர் அறிவித்திருக்கிறார்.

ஜஸ்ட் எழுதியுள்ள 'இயற்கைக்குத் திரும்புக' என்ற நூலின் பிரதியொன்று இப்போதுதான் ஸ்ரீ காலென்பாக்கிற்குக் கிடைத்

---

களுக்கு ஐரோப்பியர்களைப் போல் எல்லா உரிமைகளும் இருக்க வேண்டும் என்று ஸ்ரீ கோகலே வற்புறுத்தினர். தங்கு தடையின்றி இந்தியர்களின் குடியேற்றத்திற்கு அனுமதி கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்துவதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்பதே காந்திஜியின் அபிப்பிராயம். அதை ஸ்ரீ கோகலே முற்றிலும் ஒப்புக்கொண்டார். இதையே இந்தியப் பத்திரிகைகள் கண்டிக்க முற்பட்டன. ஆனால் ஸ்ரீ கோகலே இந்தியாவிலுள்ள பல நகரங்களிலும், முக்கியமாக இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திலும் நிகழ்த்திய அரிய பிரசங்கங்கள் பத்திரிகைகளின் தப்பெண்ணத்தை அடியோடு அகற்றிவிட்டன. அதன் பலனாக இந்தியப் பத்திரிகைகள் தாங்கள் ஸ்ரீ கோகலேயைக் கண்டித்தது தவறு என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டதுடன், ஸ்ரீ கோகலே அமைதியாகவும், ராஜதந்திரத்துடனும், தேசபக்தியுடனும் தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னையைச் சமாளித்திருப்பதாகவும் பாராட்டின. இதையே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்.

* லண்டனில் அப்போது செயல்பட்டு வந்த தென்னாப்பிரிக்கா பிரிட்டிஷ் இந்தியர் கமிட்டியையே மேற்கண்ட கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

தது. அது நேற்று உங்களுக்குத் தபாலில் அனுப்பப்பட்டிருக்கிறது. அதை வாசிக்க உங்களுக்கு நேரம் இருக்குமென நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 39

போனிக்ஸ்,
ஏப்ரல் *19, 1913*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

இதற்குள் நீங்கள் லண்டனுக்குப் புறப்பட்டிருப்பீர்கள். அங்கே உங்களுக்கு ஓய்வு கிடைக்குமென நான் நம்புகிறேன். உங்களுக்கு நரம்பு சம்பந்தமான கோளாறு ஏற்பட்டதாக நான் பத்திரிகையில் பார்த்தபோது என் மனம் வருந்தியது. அத்தகைய சந்தர்ப்பங் களில்தான் நான் உங்களுடன் இருக்கவேண்டுமென விழைகிறேன்.

இங்குள்ள நிலைமைபற்றிய முழு விவரங்களையும் ஸ்ரீ போலக் உங்களுக்கு எழுதுவார். இந்தத் தடவை போராட்டம் ஆரம்ப மாகுமாயின், அதன் விளைவாக இந்தியர்கள் முன்னரைக் காட்டி லும் அதிகமான துன்பங்களை அனுபவிக்க நேரும். இந்த முறை பண உதவி கோரி இந்தியப் பொதுமக்களுக்கு நாங்கள் வேண்டு கோள் விடுக்கப்போவதில்லை. என்னை நேரில் அறிந்தவர்கள் ஏதாவது அனுப்ப விரும்பினால், அவர்களுடைய உதவியை நான் நன்றியுடன் அங்கீகரிப்பேன். தென்னாப்பிரிக்காவிலேயே வீடு வீடாகச் சென்று யாசிக்க வேண்டும் என்பதே எங்களுடைய திட்டமாகும். அதன் மூலம், நாங்கள் சிறைக்கு வெளியில் இருக் கையில் எங்களுடைய உணவுக்கும், உடைக்கும் போதிய தொகையைச் சேகரித்துவிடலாமென நினைக்கிறேன். பண உதவி புரியுமாறு பகிரங்கமாக வேண்டுகோள் விடுக்க வேண்டாமென நான் உங்களைக் கேட்டுக் கொள்ளலாமா? என்னிடம் இன்னும் *300* பவுன் இருக்கிறது. அவசர நிலைமை ஏற்பட்டால் அதைச் சமாளிப்பதற்காக அந்தத் தொகையை நான் மிகவும் ஜாக்கிர தையாகப் பாதுகாத்து வருகிறேன். பெண்மணிகள் உள்பட இங்கு குடியேறியுள்ளவர்களில் பெரும்பாலோரும் போராட்டத் தில் கலந்து கொள்வார்கள். இதைப் போன்ற ஓரிடத்தில் சிறைக்குச் செல்லுவதால் கஷ்டங்கள் நேருமெனினும், தாங்கள் இனி சிறை செல்லாமல் இருக்க முடியாதென இங்குள்ள பெண் மணிகள் கருதுகின்றனர். ஸ்ரீமதி காந்தி யாதொரு தூண்டுதலு மின்றி தானாகவே சிறை செல்ல முன் வந்திருக்கிறாள்.* அவளைத் தடுக்க நான் விரும்பவில்லை.

---

*தென்னாப்பிரிக்கா சட்டத்திலுள்ள அநீதியான ஷரத்துகளை ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி அறிந்த போது அவர் ஆத்திரமடைந்து பின் வருமாறு.

ஸ்ரீமதி காந்தியின் நோக்கம் இன்னும் பகிரங்கப்படுத்தப் பட்டவில்லை. நீங்களும் இவ்விவரத்தைத் தற்காலிகமாக யாரிடமும் கூருமல் இருப்பீர்களா ?

லண்டன் கமிட்டிக்கு உங்களால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்து வருவீர்களென நம்புகிறேன். நான் ஏற்கனவே வாக்களித்தபடி நிதி வசூல் செய்து வருகிறேன். கணிசமான ஒரு தொகை சேர்ந்ததும் அதை உங்களுக்கு அனுப்புகிறேன். மாட் போலக்கிற்குத் தொகை அனுப்புவதை இந்த மாதத்திலிருந்து நிறுத்தி விட்டோம். மாட் தென்னுப்பிரிக்காவுக்கு விஜயம் செய்ததன் சம்பந்தமான அவரது நடவடிக்கையைப் பற்றி அவர் உங்களுடன் விவாதிக்கலாம். அவர் எனக்கும் உங்களுக்கும் இடையே தப்பெண்ணம் ஏற்படும்படி செய்திருப்பதாக அவருக்கே நான் எழுதினேன். நம்மிடையே உள்ள நெருங்கிய உறவுக்குப் பங்கம் விளைவித்ததைத் தவிர, மற்றப்படி கமிட்டி அலுவல்களை மாட் போலக் திருப்திகரமாகவே செய்துவந்திருக்கிருர். அவர் செய்ததை நான் தவருகப் புரிந்துகொண்டிருப்பதாக அவர் கருதுகிருர். ஆனால் அவரது கூற்றை நான் நம்பவில்லை என்று அவரிடமே கூறினேன். வேதனையைக்

---

காந்திஜியினிடம் கூறினர்: "அப்படியாயின், இந்த நாட்டின் சட்டப்படி நான் உங்களுக்கு மனைவி அல்லவா ?"

காந்திஜி: "ஆம், அது மாத்திரமல்ல; நமது குழந்தைகள் நமக்கு வாரிசுகளும் அல்ல!"

ஸ்ரீமதி காந்தி: "அப்படியானல் நாம் இந்தியாவுக்குச் சென்று விடுவோம்."

காந்திஜி: "அவ்விதம் செல்லுவது கோழைத்தனமாகும். தவிர நாம் இந்தியாவுக்குச் செல்லுவதால் அப்பிரச்னை தீர்ந்துவிடாது."

ஸ்ரீமதி காந்தி: "அவ்விதமாயின், நானும் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைக்குச் செல்ல முடியாதா ?"

காந்திஜி: "நீ போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறைக்குச் செல்லலாம். எனினும் அது அற்ப விஷயமல்ல. உன்னுடைய உடல் நிலை திருப்திகரமாக இல்லை. அத்தகைய கஷ்டங்களை அனுபவித்து உனக்கு வழக்கமில்லை. போராட்டத்தில் ஈடுபட்ட பின் துன்பங்களுக்குப் பயந்து பின்தாங்குவது மானக்கேடாகும்,"

காந்திஜி அவ்விதம் கூறியதைக் கேட்டு ஸ்ரீமதி காந்தி உறுதி தளர்ந்துவிடவில்லை. ஸ்ரீமதி காந்தியுடன் நெருங்கிய உறவுள்ள போனிக்ஸ் குடியிருப்பில் வசித்துவரும் பெண்களும், ஸ்ரீமதி கஸ்தூரிபாயைப் போலவே தங்களுடைய உணர்ச்சியும் இருந்துவருவதாகவும், அவரைச் சிறைக்குச் செல்லும்படி விட்டுவிட்டுத் தாங்கள் வெளியில் இருக்க முடியாது என்றும் வற்புறுத்திக் கூறினர். அவர்கள் செய்துள்ள முடிவு மிகுந்த கவலையைக் கொடுத்திருக்கிறது.

'இந்தியன் ஒபீனியன்'—1-10-1913

* மாட் போலக், ஸ்ரீ போலக்கின் சகோதரி. அவர் தென்னுப்பிரிக்கா பிரிட்டிஷ் இந்தியர் கமிட்டிக்கு உதவி கௌரவக் காரியதரிசியாக இருந்தார்.

கொடுக்கும் பழைய சம்பவங்களை உங்களுக்கு நினைவுபடுத்தித் தொந்தரவு கொடுக்க வேண்டாம் என்பதே என் விருப்பம். இருந்தாலும் எங்களிருவருக்கும் இடையே நிகழ்ந்தவைகளை உங்களுக்கு அறிவிக்க நான் கடமைப்பட்டுள்ளேன்.

உங்களுடைய உடல் நலனைப் பற்றியும் நீங்கள் என்ன சிகிச்சை பெற்றுவருகிறீர்கள் என்பது பற்றியும் ஒரு வரி எழுதினால் நான் மகிழ்ச்சியுடையவனாக இருப்பேன். ஜஸ்ட், கூனே* ஆகியோரின் ஸ்தாபனங்களைப் பார்க்க உங்களுக்கு நேரம் கிடைப்பது சாத்தியமா?

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 40

போனிக்ஸ், நேட்டால்

ஜூன் 7, 1913

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

உங்களிடமிருந்து ஏன் கடிதம் வரவில்லை என்பதை நான் முற்றிலும் அறிந்து கொண்டேன். அதற்குக் காரணம் என்ன என்பது எனக்கு வேதனையைக் கொடுத்தது. உங்களுக்குப் பணிவிடை செய்ய அங்கு நான் உங்களுடன் இருக்க முடியவில்லையே என்று வருந்துகிறேன். இப்போது நீங்கள் நன்கு குணமடைந்திருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். இந்தியா ஒரு காலத்திலும் உங்களை முற்றிலும் அறிந்து கொள்ளப் போவதில்லை. இணையற்ற உங்களுடைய சக்தியும் சுறுசுறுப்பும் பொறாமையையே உண்டு பண்ணுகின்றன.

உங்களுடைய அரைகுறை வைத்தியன் என்ற முறையில் நான் உங்களுடைய ஆரோக்கியம், உணவு ஆகியவற்றைப்பற்றி நிச்சயமாக அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

போலக் தவறாமல் ஒழுங்காக உங்களுக்குக் கடிதம் எழுதி வருகிறார் என்பதை நான் அறிவேன். எனவே நான் நீண்ட கடிதம் எழுதி உங்களுக்குத் தொந்தரவு கொடுக்க விரும்பவில்லை. உங்களுக்கு நேரம் இருந்தால், இந்த வாரம் வெளியாகியுள்ள 'இந்தியன் ஒபினியனை' அவசியம் வாசியுங்கள். அதில் ஸ்ரீ பிஷருக்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தின் முழு விவரங்களும் அடங்கியிருக்கின்றன. யூனியன் கட்சியைச்

---

* இயற்கை வைத்திய முறை நிபுணர்களான ஜஸ்ட், ஜெர்மன் டாக்டர் கூனே ஆகிய இருவரையும் பற்றி காந்திஜி விவரமாகக் கூறியிருப்பதை மகாத்மா காந்தி நூல்கள் 3, 4, தொகுப்புகளில் காணலாம்.

சேர்ந்தவர்கள் முதலில் தீவிரமாகப் போராடினார்கள். எனினும் இறுதியில் அவர்கள் சோர்ந்து விட்டார்கள். அந்த மசோதாவை பிரிட்டிஷ் சர்க்கார் மாறுதல் எதுவும் செய்யாமல் அப்படியே ஒப்புக்கொண்டுவிட்டார்களென ஸ்ரீ பிஷர் அறிவித்ததே யூனியன் வாதிகளின் சோர்வுக்குக் காரணமாகும். இங்கே தயாரித்தபடி அம்மசோதாவை பிரிட்டிஷ் சர்க்கார் ஒப்புக் கொண்டுவிட்டார்கள் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. 'இந்தியன் ஒபினியனி'ல் வெளியான விவாத விவரங்களை நீங்கள் கவனித்திருந்தால், பார்லிமெண்டில் பேசிய பலரும் நமது லட்சியத்திற்குச் சாதகமாகவே உங்களுடைய பெயரை அடிக்கடி குறிப்பிட்டார்கள் என்பதை நீங்கள் அறிந்து கொண்டிருக்கலாம். தென்னாப்பிரிக்காவுக்கு நீங்கள் விஜயம் செய்வது, பல விதத்திலும் மிகவும் சாதகமான பலனை அளிக்கும் என்பது நிச்சயம்.

மசோதா, செனேட் சபையில் இரண்டாவது முறையாக நிறைவேறியிருக்கிறது. ஸ்ரீமதி காந்தி, ஸ்ரீமதி டாக்டர், சகன்லாலின் மனைவி, மகன்லாலின் மனைவி ஆகியோர் போராட்டத்தில் கலந்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறார்கள் என்பதை நான் உங்களுக்கு அறிவித்தேனா? தயவு செய்து இச்செய்தியை இப்போது தாங்கள் வெளியிடவேண்டாம். இங்கே போனிக்ஸில் இருக்கும் மற்றும் பல ஆடவர்களும் இந்தத் தடவை போராட்டத்தில் கலந்து கொள்ளப் போகிறார்கள். போராட்டம் நிச்சயமாக ஆரம்பமாகும் என்றே தோன்றுகிறது. அவ்விதம் ஆரம்பிக்கப்படுமாயின், நான் இந்தியாவுக்குத் திரும்புவது கால வரையறையின்றி ஒத்திவைக்கப்பட வேண்டியதுதான்.

போலக் இப்போது இந்தியர் பிரச்னை சம்பந்தமான அலுவலகத்தை ஆரம்பித்திருக்கிறார். ரிச்சிற்குத் தேவையான செலவுத் தொகையைப் பற்றி நான் கவலைப்படவில்லை. போலக் தமக்குத் தேவையான செலவுக்குத் தாமே ஏற்பாடு செய்து கொள்வார். லண்டன் கமிட்டிக்கு அனுப்பிவந்த தொகை சென்ற மார்ச் மாதத்திலிருந்து நிறுத்தப்பட்டிருக்கிறது. எனவே இப்போது சமாளிக்க வேண்டிய ஒரே பொறுப்பு 'இந்தியன் ஒபினியன்' மாத்திரமேயாகும். போராட்டம் மறுபடியும் ஆரம்பமாகுமாயின், மேதின் குடும்பத்தை ஆதரித்துவர வேண்டியிருக்கும். இதைத் தவிர அனுமத்துச் செலவுகளையும் ஏற்கவேண்டியிருக்கும். மேதின் குடும்பத்தை ஆதரிப்பதற்காக நான் தென்னாப்பிரிக்காவில் யாரிடமும் யாசிக்கமாட்டேன். மற்றச் செலவுகளுக்குத் தேவையான தொகையை நாங்கள் இங்கேயே கண்டுபிடிக்க வேண்டும். லண்டன் கமிட்டிச் செலவுக்காக உங்களிடம் கொடுப்பதற்கு நான் தொகை வசூல் செய்துவருகிறேன். அக்கமிட்டியை நீங்கள் சீர்திருத்துவீர்களென நம்புகிறேன். லண்டன் கமிட்டி மூன்று வருடங்கள் வரையில் செயல்படுவதற்கு 600 பவுன் தேவையாக இருக்கிறது. அந்தத் தொகையில் ஏதாவது குறையுமாயின்,

அதைத் தாம் ஈடு செய்வதாக நமது நண்பரான ரஸ்டம்ஜி எனக்கு வாக்குறுதி அளித்திருக்கிறார்.

காலென்பாக் சென்ற சில தினங்களாக இங்கே இருந்து வருகிறார்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்து வருகிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 41

போனிக்ஸ், நேட்டால்,
ஜூன் *20, 1913*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

மசோதா மிகவும் மோசமாக இருப்பதால், சாத்துவிக எதிர்ப்பில் ஈடுபட வேண்டியது அவசியமாகியிருக்கிறது. இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைக்கும்போது எங்களில் சிலர் சிறையில் இருக்கலாம். நான் அடுத்த வாரம் ஜோகன்னஸ்பர்க்கிற்குச் செல்ல உத்தேசித்திருக்கிறேன். மசோதாவையொட்டி நமது ஆட்சேபணைகளைத் தெரிவித்தும், அவற்றிற்கு அடுத்த வருடம் பரிகாரம் செய்ய வேண்டுமென்று கேட்டும் ஸ்ரீ பிஷருக்கு ஒரு கடிதம் எழுதத் தீர்மானித்திருக்கிறேன். அப்படியே செய்வதாக அவர் எழுத்து மூலம் வாக்குறுதி அளித்தால், போராட்டம் தற்காலிகமாக நிறுத்தப்படும். அவர் அவ்விதம் வாக்குறுதி அளிப்பார் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. இந்தத் தடவை போராட்டம் உக்கிரமாகவும் நீண்ட காலம் நடைபெறுவதாகவும் இருக்கும். எனவே அத்தகைய போராட்டத்தை ஆரம்பிக்குமாறு சக சாத்துவிக எதிர்ப்பாளர்களைக் கேட்பதற்கு முன், மீண்டும் போராட்டத்தை ஆரம்பிப்பதால் ஏற்படக்கூடிய துன்பத்தைத் தவிர்ப்பதற்காக நியாயமான எல்லா முறைகளையும் கைக்கொள்ள விரும்புகிறேன்.

மசோதாவுக்கு மன்னரின் அங்கீகாரமும் கிடைத்துவிட்டது. அநேகமாக அடுத்த மாதம் முதல் வாரத்தில் சாத்துவிக எதிர்ப்பு ஆரம்பமாகலாம். நாங்கள் சிறை செல்லுவதற்காக, புதிய சட்டத்தை மீறி எல்லா மாகாணங்களிலும் பிரவேசிப்போம். கற்றறிந்த, கற்றறிவில்லாத எல்லா இந்தியர்களும் போராட்டத்தில் கலந்து கொள்வார்கள்.

நான் அறிந்தவரையில் *130* ஆடவர்களும் *13* பெண்களும் போராட்டத்தை ஆரம்பிப்பார்கள். காலம் செல்லச் செல்ல மேலும் ஏராளமானவர்கள் அதில் ஈடுபடுவார்கள். போராட்டத்

திற்காக அதிகமான தொகை வசூலிக்க வேண்டுமென நான் எதிர்பார்க்கவில்லை. எனினும் யாசகம் செய்வதன் மூலம் போதிய உணவும் உடையும் கிடைப்பதில் கஷ்டம் எதுவும் இராது. நாங்கள் எல்லோரும் சிறைக்குச் சென்றுவிட்டால், தாம் யாசகம் செய்வதாக காலென்பாக் உறுதி கூறியுள்ளார், அவரைப் பூரண மாக நம்பலாம். அவரது உடலில் உயிர் உள்ளளவும் ஒரு குடும் பம் கூட பட்டினி கிடக்கும்படி நேராமல் அவர் பார்த்துக் கொள்வார். இந்தியாவிலிருந்தோ அல்லது வேறிடத்திலிருந்தோ கேட்காமல் தொகை வராவிடில், நாங்கள் நடந்து யாத் திரை செய்யத் தீர்மானித்துள்ளோம். அப்போது உள்நாட்டிலும், வெளிநாடுகளுக்கும் தந்திகள் கொடுக்க பணம் செலவு செய்யும்படி நேராது. தற்போது ஸ்ரீமதி ஷ்லெஸின் ஜோகன்னஸ்பர்க்கில் எல்லாப் பொது அலுவல்களையும் செய்து வருகிறார். அவரது ஜீவனத்திற்கு அவர் வேறு எங்கேயோ வேலை செய்து வருகிறார். லண்டன் கமிட்டிச் செலவுக்காக நான் விசேஷ நிதி வசூல் செய்து வருகிறேன். அந்த நிதி உங்களிடம் ஒப்பு விக்கப்படும். மற்றச் செலவினங்களையும் நான் கைவிட்டு வரு கிறேன். 'இந்தியன் ஒபினியன்' சிப்பந்திகளை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவுக்குக் குறைத்திருக்கிறோம். அவர்கள் தங்க ளுடைய செலவைத் தாங்களே சமாளித்துக் கொள்ளவேண்டும். என்னுடைய சொந்தச் செலவுகள் சிலவற்றை டாக்டர் மேத்தா* தமது பொறுப்பில் எடுத்துக் கொண்டுள்ளார்.

போராட்டம் ஒரு வருடம் வரையில் நீடிக்குமென எதிர் பார்க்கப்படுகிறது. எனினும் நான் எதிர்பார்ப்பதைக் காட்டிலும் அதிக நபர்கள் போராட்டத்தில் ஈடுபடுவார்களாயின், யூனியன் பார்லிமெண்டின் அடுத்த கூட்டம் நடைபெறும் போதே போராட் டம் முடிவடையலாம். ஆனால் காலவரையறையின்றிப் போராட் டம் நடைபெறுவதற்கு நாங்கள் ஏற்பாடுகள் செய்து வருகிறோம்.

இந்த நெருக்கடியைச் சமாளிக்க இந்தியர் சமூகத்துக்கு எவ்வளவு தொகை தேவையாக இருக்கும் என்பதற்குப் பதில் அளிப்பது கடினமாகும். பணமாக எதுவும் தேவையிராது. தொகை வசூலாக ஆக, நான் போராட்டத்தை விரைவில் முடிப் பதற்காகவும், சாத்துவிக எதிர்ப்பாளர்களின் குடும்பங்களையும் 'இந்தியன் ஒபினியனை'யும் ஆதரிப்பதற்காகவும் அதை உபயோ கிப்பேன். நேட்டாலிலிருந்தும், கேப் காலனியிலிருந்தும் கூட சிலர் நிச்சயமாக போராட்டத்தில் கலந்து கொள்வார்கள்.

உங்களிடம் எனது பிரார்த்தனை இதுதான்: எங்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். பண வசூல் செய்வதற்காக பகிரங்க மாக யாசிக்காதீர்கள். தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னையைக் குறித்து உங்களுடைய ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொள்ளா தீர்கள்.

---

* டாக்டர் பிராணஜீவன்தாஸ் மேத்தா காந்திஜி லண்டனில் மாணவ ராக இருந்த காலத்திலிருந்து அவரது நண்பராக இருந்தார்.

இந்தப் பிரார்த்தனை சுயநலனை அடிப்படையாகக் கொண்ட தாகும். ஏனெனில் நான் இந்தியாவுக்கு வந்து உங்களைச் சந்திக் கவும், உங்களுடைய தலைமையில் வேலை செய்யவும், நான் விரும்புவதையெல்லாம் உங்கள் காலடியில் உட்கார்ந்து கற்றுக் கொள்ளவும் ஆர்வம் உடையவனாக இருக்கிறேன். சில விஷயங் களில் நான் தவறு செய்திருப்பேனாயின், அதைத் திருத்திக் கொள்ள விரும்புகிறேன். அதுபோலவே நான் கூறுவது சரி யாக இருக்குமாயின், தாங்களும் உங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள வேண்டுமென விரும்புகிறேன். உங்களிடமிருந்து எனக்குக் கடிதங்கள் கிடைக்காவிட்டால், நான் உங்கள் மீது தப்பெண்ணம் கொள்ளமாட்டேன். உங்களுக்கு நேரம் இருந்து உங்களுடைய உடல் இடம் கொடுக்குமாயின், உங்களுடைய கடி தங்களையும் ஆலோசனையையும் நான் விசேஷமாக மதித்து நடப் பேன். அவை எனக்கு ஆறுதல் அளிப்பவையாக இருக்கும்.

போலக்கிற்கு நீங்கள் அனுப்பிய தந்தியைக் குறித்து நான் தங்களுக்கு மற்றொரு கடிதம் எழுத வேண்டும். நிலைமையைப் பற்றி நாளை நான் அவருடன் விவாதித்தபின், டர்பனுக்கு அவர் திரும்பிச் சென்றதும் உங்களுக்குக் கடிதம் எழுதும்படி அவரிடம் கூறுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 42

(தந்தி)

டர்பன்,
*ஜூன் 21, 1913*

கோகலே,
லண்டன்,

இறுதிக் கடிதத்தை மந்திரியிடம் சமர்ப்பிப்பதற்காக திரான்ஸ் வாலுக்குச் செல்லுகிறேன். அவரது பதில் திருப்திகரமாக இருந்து, புதிய ஒப்பந்தமும் ஏற்படுமாயின், சாத்துவிக எதிர்ப் புப் போராட்டம் இராது. சட்டத்தில் ஆட்சேபகரமான, படு மோசமான நான்கு ஷரத்துகள் அடங்கியிருக்கின்றன. அவற் றிற்குப் பரிகாரம் ஏற்படும் என்ற நம்பிக்கை அதிகமாக இல்லை. ஒப்பந்தம் ஏற்படாவிடில், ஜூலை மாத ஆரம்பத்தில் போராட் டம் தொடங்கும். அப்போது போலக் உடனே புறப்பட்டு வரு வார். சாத்தியமாயின் இந்தியாவில் தொகை வசூல் செய்யலாம். ஒரு வருட காலத்திற்கு இங்கேயுள்ள குடும்பங்களுக்கு உதவி அளிப்பதற்கும் சேர்த்து *1000* பவுன் தேவையாக இருக்கும். இந்தத் தொகையை இப்போது இங்கே வசூல் செய்வது முடி யாத காரியம்.

**காந்தி**

# 43

"மவுண்டன் வியூ", (ஜோகன்னஸ்பர்க்)
ஜுலை, 12, 1913

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

நான் அனுப்பிய தந்தி உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன். நிச்சயமாக ஒப்பந்தம் ஏற்படுமென்று சொல்லுவதற்கில்லையாதலாலும், உங்களுடைய தந்திகள் கண்டிப்பாக இருந்ததாலும், உங்களிடம் போலக்கை அனுப்புவதே சிறந்ததென் நாங்கள் எண்ணினோம். இதுவரையில் ஜெனரல் ஸ்மட்ஸிடமிருந்து திட்டவட்டமான தகவல் எதுவும் கிடைக்கவில்லை. அவருக்கு நான் சொந்தமாக எழுதிய கடிதத்திற்கு அவரது காரியதரிசியிடமிருந்து தந்தி மூலம் பதில் கிடைத்திருக்கிறது. எனது கடிதத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்களைக் கவனிப்பதற்கு, நெருக்கடி காரணமாக ஜெனரல் ஸ்மட்ஸுக்கு நேரமில்லை என்று அவர் தந்தியில் குறிப்பிட்டிருக்கிறார். மந்திரி சபைக்குள்ளேயும் தகராறுகள் இருந்துவருகின்றன.

ஓர் ஒப்பந்தம் ஏற்படுமாயின், யாதொரு தடையுமின்றி உங்களுடைய விருப்பப்படி நடந்து கொள்ளவேண்டுமென்று நான் போலக்கிற்கு யோசனை கூறியிருக்கிறேன். உங்களுடைய சொந்தக் காரியாலய அலுவல்களுக்கு அவரை உபயோகப் படுத்திக் கொள்வதாயின், அவர் அதை ஒரு கௌரவமாகவே நினைப்பார். அவர் லண்டன் கமிட்டியின் காரியதரிசியாக இருக்கலாமென நீங்கள் கருதினால், அவரை நீங்கள் அவ்விதமே நியமிக்கலாம்.

பணம் வசூல் செய்வது உங்களுக்குத் தொந்தரவாக இருக்குமாயின், அவ்விஷயமாக நீங்கள் சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர் திரும்பி வரும் வரையில் நான் எப்படியாவது ஏற்பாடு செய்துகொள்கிறேன். நான் அனுப்பிய தந்திகளில் நிலைமையை விளக்கிக் கூறவேண்டியது எனது கடமையென்று நினைத்தேன். எனினும் அந்தத் தந்திகளைப் பற்றி நீங்கள் கவலைப்படவேண்டிய அவசியமே இல்லை. சுயநலம் காரணமாக நான் கவலைப்படுவதெல்லாம் என்னவெனில், இன்னும் சில வருடங்களுக்காவது நீங்கள் ஜீவதசையுடன் இருக்கவேண்டும் என்பதுதான். எங்களுடைய கஷ்டங்கள், நீங்கள் இந்த உலகை நீத்துச் செல்லுவதை துரிதப்படுத்தி விட்டன என்பதைக் காட்டிலும் எனக்கு துக்கத்தைக் கொடுக்கக் கூடிய நிகழ்ச்சி வேறு எதுவும் இருக்க முடியாது. மீண்டும் போராட்டம் ஆரம்பமாகுமாயின், நீங்கள் ஆகஸ்டு மாதத்திலோ அல்லது நீங்கள் முற்றிலும் குணமடைவதற்கு முன்போ இந்தியாவுக்குச் செல்ல வேண்டுமென்ற அவசியம் சிறிதும் இல்லை.

இவ்விஷயமாக நான் சாத்துவிக எதிர்ப்பாளர்களுடன் பேசினேன். போராட்டம் நீடிப்பதைக் குறித்து அவர்கள் சிறிதும் பயப்படவில்லை என்று உங்களிடம் கூறும்படி என்னைக் கேட்டுக் கொண்டார்கள். இங்கு மந்திரி சபை நெருக்கடியும், வேலை நிறுத்தங்களும் ஏற்படாமல் இருந்தால், போராட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்படுமாயின், வெகு சீக்கிரத்தில் முடிவடைந்து விடும்.

என்னுடைய பயங்கரமான கையெழுத்தை உங்களால் வாசிக்க முடியும் என்றே நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 44

(தந்தி)

டர்பன்,
ஜூலை 29, 1913

கோகலே,
லண்டன்.

வேலைநிறுத்த நெருக்கடி, ஒப்பந்தம் ஏற்படுவதற்கான சமரசப் பேச்சுகளின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்து வருகிறது.

**மோ. க. காந்தி**

## 45

(தந்தி)

ஜோகன்னஸ்பர்க்,
அக்டோபர் 22, 1913

கோகலே,
புனா.

ஏறக்குறைய நூறு பேர்கள் சிறையில் இருக்கின்றனர். நேட்டால் சுரங்கங்களில் வேலை செய்யும் ஒப்பந்தத் தொழிலாளர்களும், சுதந்திரத் தொழிலாளர்களும் அடங்கிய ஏறக்குறைய இரண்டாயிரம் குடும்பங்கள் வேலை நிறுத்தம் செய்துவருகின்றன. மூன்று பவுன் வரியை ரத்து செய்வதாக சர்க்கார் வாக்களித்தால் அவர்கள் எல்லோரும் வேலைக்குத் திரும்புவார்கள். பொது

வான சாத்துவிக எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபடும்படி அந்தத் தொழிலாளர்கள் அழைக்கப்படவில்லை. மிகவும் தைரிய சாலிகளான சில பெண்கள் உள்பட நூறு பேர்கள் சிறை செல்லுவதற்கான நடவடிக்கைகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டு வருகிறார்கள். பெரிதும் அவர்களுடைய செல்வாக்கினாலேயே வேலைநிறுத்தம் நடந்துவருகிறது. அவர்கள் கைது செய்யப் படாததால், எல்லையைக் கடந்து சென்று மற்றவிடங்களிலுள்ள தொழிலாளர்களுக்கும் அவர்கள் அமைதியாக நிலைமையை எடுத்துக் கூறி வருகிறார்கள். கோபமூட்டப்பட்டும் கூட தொழிலாளர்கள் பலாத்காரத்தை மேற்கொள்ளவில்லை, திருப்பி அடிக்கவில்லை. வேலைநிறுத்தம் மற்ற நிலக்கரிச் சுரங்கங்களுக்கும் பரவலாம். ஐரோப்பியர்களின் அபிப்பிராயமும், வரியை ரத்து செய்வதற்குச் சாதகமாகவே இருந்துவருகிறது. போலக் நியூகாஸிலில் இருக்கிறார். அவர் வியாழக்கிழமை டர்பனில் இருப்பார்.

**மோ. க. காந்தி**

# 46

(தந்தி)

ஜோகன்னஸ்பர்க்,
*அக்டோபர் 22, 1913*

கோகலே,
புனா.

முந்திய தந்தியில் குறிப்பிட்டுள்ளபடி, ஆறு கைக்குழந்தைகளுடன் பதினொரு பெண்கள், நியூகாஸிலில் வேலைநிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்கள் அடங்கிய கூட்டத்தில் பேசியதற்காக நாடோடிகள் என்று குற்றம் சாட்டப்பட்டு மூன்று மாதம் கடுங்காவல் தண்டனை அடைந்துள்ளனர்.

**காந்தி**

# 47

நியூகாஸில்
*அக்டோபர் 29, 1913*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

போராட்ட சம்பந்தமான விவரங்களை, போலக் தங்களுக்கு அறிவித்து வருவார். சிறை செல்லும் நோக்கத்துடன் நானும் தற்போது வேலைநிறுத்தத் தொழிலாளர்களுடன் அணிவகுத்துச் செல்லுவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். லண்டனில் போலக் சௌகரியமாக இருப்பதற்கு வசதி அளிக்க வேண்டும்.

என்பதற்காகவே இக்கடிதம் எழுதுகிறேன். அப்படியாயின் அவர் பொது அலுவல்களில் ஈடுபடுவதுடன், லண்டன் கமிட்டியையும் நிர்வாகம் செய்து வரலாம். ஒப்பந்தம் ஏற்பட்டவுடன் நான் திரும்பிவிடுவேன். பிறகு தாம் தென்னுப்பிரிக்காவில் பலன்தரத்தக்க விதத்தில் வேலை செய்ய முடியாதென போலக் கருதுகிருர். அவரது அபிப்பிராயத்தை நானும் ஒப்புக்கொள்கிறேன். லண்டனிலேயே நிரந்தரமாக இருக்கும் ஸ்ரீ டுபே அவரை அழைத்திருக்கிருர். இந்தியாவில் பிரிவீ கவுன்சில் வழக்குகளைக் கையாளும் சில வக்கீல்களின் ஆதரவு அவருக்கு இருந்தால்தான், அவர் லண்டனிலேயே தங்கியிருப்பது சாத்தியமாகும். போலக் லண்டனில் பிரிவீ கவுன்சில் ஏஜண்டாகத் தொழில் நடத்த உத்தேசித்துள்ளார் என்பது தாங்கள் அறிந்ததே.

தங்கள்,
**மோ. க. காந்தி**

## 48

சார்லஸ்டவுன்,
நவம்பர் 4, 1913

ஐயாயிரம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிருர்கள். அவர்கள் 300 பெண்களும், 600 குழந்தைகளும் உள்பட 4000 பேருக்கு உணவு அளிக்க வேண்டியிருக்கிறது. 300 பேர் சிறையில் இருக்கின்றனர். மேலும் 200 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். வேலை நிறுத்தம் செய்துள்ள 1500 தொழிலாளர்கள் சார்லஸ்டவுனில் இருக்கிருர்கள். மற்றவர்கள் நியூகாஸிலுக்கு வந்துகொண்டிருக்கிருர்கள். அவர்கள், தங்களை அதிகாரிகள் கைது செய்ய வேண்டும் என்பதற்காக எல்லையைக் கடக்க ஆயத்தமாக இருந்துவருகிருர்கள். தொழிலாளர்களிடையே உற்சாகம் நாளுக்கு நாள் அதிகமாகிவருகிறது. எங்களுடைய குறைகளுக்குப் பரிகாரம் தேட பலவிடங்களிலுமுள்ள பாதிரிமார் முயற்சித்துவருகின்றனர்.*

**மோ. க. காந்தி**

**'டைம்ஸ் ஆப் இந்தியா,' 5-11-1913**

---

* மேற்கண்ட வேலைநிறுத்த சம்பந்தமான முழு விவரங்களையும் மகாத்மா காந்தி நூல்கள் 1-ம் தொகுப்பில் ('தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்') காணலாம்.

## 49

(தந்தி)

சார்லஸ்டவுன்,
நவம்பர் 6, 1913

வேலை நிறுத்தம் தொடர்ந்து நடை பெற்றுவருகிறது. சாத்துவிக எதிர்ப்பாளர்களை சர்க்கார் கைது செய்யவில்லை. மாதத்திற்கு 7000 பவுனுக்கு மேல் செலவாகி வருகிறது. பண்டங்களும் ரொக்கமுமாக ஒவ்வொரு மாதமும் இங்கே 1000 பவுன் வசூலாகுமென எதிர்பார்க்கப்படுகிறது. 4000 தொழிலாளர்களுடன் நான் வியாழக்கிழமையன்று திரான்ஸ்வாலுக்கு அணிவகுத்துச் செல்லுகிறேன். புதிதாக அமைக்கப்பட்டுள்ள சிறை முகாமில் பல குழந்தைகள் பிறந்துள்ளன. அணிவகுத்து வரும்போது இரண்டு கைக்குழந்தைகள் இறந்தன.

மோ. க. காந்தி

'டைம்ஸ் ஆப் இந்தியா', 7-11-1913

## 50

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 22, 1913

கமிஷன் சிபாரிசு செய்ததன்மீது நாங்கள் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டோம். சர்க்காருக்கு நாங்கள் ஒரு கடிதம் எழுதியிருக்கிறோம். இந்தியர் சமூகத்தைப் பாதிக்கும் விஷயங்களையொட்டி இந்தியர்களைக் கலந்து ஆலோசிக்க வேண்டும். இந்த உரிமை ஒப்புக்கொள்ளப்பட்டாலன்றி நாங்கள் கமிஷன் முன் சாட்சியம் கூற முன்வரமாட்டோம் என்று அக்கடிதத்தில் அறிவித்திருக்கிறோம். மேலும், இந்திய சமூகத்தினால் ஒப்புக்கொள்ளப்படும் ஷ்ரீனர், நீதிபதி ரோஸ்-இன்ஸ் போன்றவர்களை கமிஷனில் அங்கத்தினர்களாக நியமித்தால்தான் கமிஷன் பாரபட்சமற்றதாக இருக்க முடியும் என்றும், சிறைகளிலுள்ள சற்றேறக்குறைய 4000 சாத்துவிக எதிர்ப்பாளர்களை விடுதலை செய்ய வேண்டும் என்றும் கடிதத்தில் கேட்டுக் கொண்டிருக்கிறோம். பின்னர் கமிஷனின் அறிக்கை வெளியாகும்வரையில் நாங்கள் சாத்துவிக எதிர்ப்பு இயக்கத்தை நிறுத்திவைப்பதாக உறுதி கூறியுள்ளோம். இந்தியர்களின் எல்லாக் குறைகளையும் கமிஷன் பரிசீலனை செய்யவேண்டும் என்றும் நாங்கள் கேட்டிருக்கிறோம். இந்த வேண்டுகோள் நிராகரிக்கப்பட்டால், நாங்கள் மீண்டும் சிறையை நாடுவதுடன், சாத்துவிக எதிர்ப்பு இயக்கத்தையும் தீவிரமாக நடத்த முற்படுவோம் என்றும் சர்க்காருக்கு அக்கடிதத்தின் மூலம் அறிவித்திருக்கிறோம். இன்று நடந்த ஆறாயிரம்

பேர்களடங்கிய பொதுக் கூட்டத்தில், கடிதத்தில் கண்டுள்ள கோரிக்கைகளை உறுதி செய்து தீர்மானங்கள் நிறைவேறின. திரான்ஸ்வால் முதலிய மற்றவிடங்களில் உள்ளவர்களும் ஏகமனதாக இருந்துவருகிறார்கள். சர்க்காரிடமிருந்து திருப்தி கரமான பதில் கிடைக்காவிடில், குறைந்த அளவு உணவுடன் டர்பனிலிருந்து பிரிடோரியாவுக்குக் கால்நடையாக அணிவகுத்துச் சென்று, அதிகாரிகளால் கைது செய்யப்படுவதற்குத் தயாராக இருக்க வேண்டும் என்றும் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

பிரிடோரியாவுக்குச் செல்லும் வழியில் மேலும் ஆயிரக் கணக்கானவர்கள் அணிவகுப்பில் கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம். துப்பாக்கிப் பிரயோகத்திற்கும் இலக்காக நேரும் என்று கூட்டத்திலிருந்தவர்களை எச்சரித்தோம். கிறிஸ் தவாலயத்தைச் சேர்ந்தவர்களும், செல்வாக்குடன் கூடிய தனி நபர்களான ஐரோப்பியர்களும் தற்போதைய கமிஷன் நிரா கரிக்கப்படுவதை ஆதரிக்கிறார்கள். நாங்கள் பிரிடோரியாவி லிருந்து டர்பனுக்குப் பிரயாணம் செய்தபோது, முக்கியமான எல்லா இடங்களிலும் உள்ள இந்தியர்களின் பிரதிநிதிகளைச் சந்தித்தோம். அவர்கள் மிகுந்த உற்சாகத்துடன் இருக் கிறார்கள். தற்போதைய கமிஷனை அவர்கள் யாவரும் நிராகரிக் கிறார்கள். இங்கே நமது மக்கள் துன்பங்களை இவ்வளவு மன உறுதியுடன் சகித்துக் கொள்வார்களென யாரும் எதிர்பார்க்க வில்லை. சரியான தலைவர்கள் இராமலிருந்தும் கூட ஒப்பந்த இந்தியர்களின் உறுதியும், திறமையும், ஒழுங்கும், ஒத்துழைப்பும் பிரமிக்கத்தக்கவையாக இருக்கின்றன. அங்குள்ள இந்திய மக்களை உடனடியாகவும், தீவிரமாகவும் ஒத்துழைக்கும்படி கேட்டுக் கொள்ளுங்கள்.

மோ. க. காந்தி<br>
காலென்பாக்,<br>
போலக்

## 51

(தந்தி)

டர்பன்,<br>
டிசம்பர் *23, 1913*

கோகலே,<br>
இந்திய ஊழியர் சங்கம்,<br>
புனே.

மாரிட்ஸ்பர்க்கிற்குப் போயிருந்தேன். அங்கு நடந்த பொதுக் கூட்டத்தில், நேற்று டர்பன் கூட்டத்தில் நிறைவேறிய தீர் மானங்கள் அங்கீகரிக்கப்பட்டன. கமிஷனில் மேலும் சிலரை

அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்றும், சிறையிலிருக்கும் சாத்துவிக எதிர்ப்பு இயக்கக் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும் என்றும் நாங்கள் கூறிய யோசனை ஒப்புக் கொள்ளப்பட்டாலன்றி, கமிஷனை அங்கீகரிப்பது சாத்தியமல்ல. இந்தியர்கள் அவ்விஷயமாக மிகவும் உறுதியுடனும் உற்சாகத் துடனும் இருந்து வருகிறார்கள். மேற்கண்ட நிபந்தனைகள் ஒப்புக் கொள்ளப்படாவிட்டால், கமிஷனை அங்கீகரிக்க வேண்டும் என்ற யோசனைக்கு அவர்கள் செவி சாய்க்கமாட்டார்கள். அவர்கள், என்ன நேர்ந்தாலும் நேரட்டும் என்ற துணிச்சலுடன் இருந்து வருகிறார்கள். சர்க்கார் மீது அவர்களுக்கு அணுவளவும் நம்பிக்கையில்லை. இந்தியர்களின் பொதுவான குறைகளைப் பரி சீலனை செய்வதும் கமிஷனின் அலுவல்களில் ஒன்று என்று தெரி கிறது. நான்கு பெண்மணிகள் தண்டனை காலம் முடிவடைந்து விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள். இந்தியர்களிடையே மிகுந்த கண்ணியம் வாய்ந்த ரஸ்டம்ஜியும், மற்றவர்களும், சிறையில் உள்ளவர்களை அதிகாரிகள் மிகக் கொடுமையாகவும் காட்டு மிராண்டித்தனமாகவும் நடத்திவருவதாகக் கூறுகின்றனர். ரஸ்டம்ஜி ஏற்கனவே இந்த இயக்கத்தில் கலந்துகொண்டு பல சிறைகளில் நீண்டகால அனுபவம் பெற்றவர். ஆனால் தற்போது டர்பன் சிறையில் சாத்துவிக எதிர்ப்பு இயக்கக் கைதிகள் உள்ளாகும்படி நேர்ந்துள்ள கொடுமைக்கு உவமையே இல்லை என்று அவர் கூறுகிறார். அவ்விஷயத்தில் மாஜிஸ்திரேட் அசட்டையாக இருந்துவருகிறார். அவர் சிறைகளுக்கு விஜயம் செய்வதில்லை, கைதிகளின் புகார்களை ஏற்றுக் கொள்வதுமில்லை. கவர்னரை நெருங்கவே முடிவதில்லை. கைதிகள் உண்ணாவிரதம் தொடங்குவதற்கு முன் சிறை வார்டர்கள் முரட்டுத்தனமாகவும், காட்டுமிராண்டித்தனமாகவும் நடந்துவந்ததுடன், கைதிகளை வேண்டுமென்றே அவமதித்தும் வந்தார்கள். அவர்கள் கைதி களின் புகார்களைப் பற்றி விசாரிப்பதில்லை. சுதேசி வார்டர்கள் கொடுமையாக நடந்துகொள்வதுடன், சாத்துவிக எதிர்ப்பாளர் களைக் காரணமின்றி அடித்தும் துன்புறுத்துகிறார்கள். அந்த வார்டர்களைக் கேட்பார் யாருமில்லை.

பிராக்ஜி தேசாயை நீங்கள் அறிவீர்கள். அவரை வார்டர் கள் காரணமின்றி அடித்ததில் அவர் கீழே விழுந்துவிட்டார். பிறகு அவர்கள் அவரை அவரது அறைக்கு இழுத்துச் சென் றார்கள். அவர் அங்கே வைத்திய சிகிச்சை எதுவுமின்றி வெகு நேரம்வரை வேதனையை அனுபவிக்க நேர்ந்தது. அதன் பின் தான் அதிகாரிகள் அவரைக் கவனிக்கலாயினர். அதன் விளைவாக பிராக்ஜி தேசாய் பதினேரு நாட்கள் வரையில் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற நேர்ந்தது. போனிக்ஸ் பள்ளிக்கூடத்தில் வாசிக் கும் 16 வயதுள்ள மாணவர்களும் அதிகாரிகளின் முரட்டுத் தனத்திற்கு ஆளாயினர். ரஸ்டம்ஜி, மணிலால் காந்தி ஆகியோ ரையும் அதிகாரிகள் அடித்தும், உதைத்தும் கூலிகள் என்று கூறியும் அவமதித்தனர். உடுத்திக் கொள்ள அவர்களுக்கு அழுக்

கடைந்த சிறைத் துணிகளே கொடுக்கப்பட்டுள்ளன. அபாய கரமான, ஆரோக்கியமற்ற நிலையைப் பற்றிக் கூறப்பட்ட புகார் களுக்கு அதிகாரிகள் செவி கொடுக்கவில்லை. சிறையிலுள்ள புத்தகசாலையிலிருந்து கைதிகளுக்கு புத்தகங்கள் கொடுக்கப்படுவ தில்லை; வெளியிலிருந்து அவர்கள் சொந்தமாகப் புத்தகங்களைத் தருவித்துக் கொள்ளவும் அனுமதிக்கப்படவில்லை. உணவு கொடுக்கப்படும் தட்டுகளும் கோப்பைகளும் துருப்பிடித்தும் அழுக்கடைந்தும் இருக்கின்றன. உணவு மட்டரகமாக இருப்ப துடன், நெய்யும் கலப்படமாக இருக்கிறது. அரை குறையாக வேக வைத்த காய்கறிகள் அடிக்கடி கொடுக்கப்படுவதால், டர்பன் சிறையில் இன்னும் இருந்துவரும் சில பெண்கள் சீத பேதியால் துன்புற்று வருகிறார்கள். கரப்பான் பூச்சிகளும் புழுக்களும் உள்ள உணவைக் கொடுக்கிறார்கள். அவற்றைச் சுட்டிக் காட்டுவோருக்கு வேறு உணவும் கொடுக்கப்படுவதில்லை. இவ்விதம் மோசமாக நடத்தப்படுவதைக் கண்டித்தே நான்கு நாட்கள் வரை பலர் உண்ணாவிரதம் இருந்தனர். சைவ உணவு சாப்பிடும் ஒருவருக்கு நான்காவது நாள் பாலும் முட்டைகளும் பலாத்காரமாகக் கொடுக்கப்பட்டன. பரிகாரம் அளிப்பதாக சிறை அதிகாரி வாக்களித்தபின்தான் உண்ணாவிரதம் நின்றது. ஆனால் இன்னும் பரிகாரம் அளிக்கப்படவில்லை. நெய் கொடுக்க வில்லை என்பதற்காக மாரிட்ஸ்பர்க் சிறையிலுள்ள கைதிகள் மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருந்தனர். கைதிகளின் கஷ் டங்களைக் குறித்து ரஸ்டம்ஜி விடுத்த அறிக்கை மிகுந்த பர பரப்பை உண்டாக்கியிருக்கிறது. விடுதலை அடைந்துள்ள சாத்து விக எதிர்ப்பாளர்கள் மிகவும் உறுதியுடனும், அவசியம் ஏற் பட்டால் மீண்டும் உடனடியாகக் கைதியாவதற்குத் தயாராகவும் இருந்துவருகிறார்கள். இவ்விஷயங்களையெல்லாம் விசாரிக்க வேண்டுமென்று கோரி சர்க்காருக்கு விண்ணப்பம் அனுப்ப ஏற் பாடு செய்துவருகிறோம்.

**காந்தி**

## 52

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 23, 1913

மந்திரிகளைப் பேட்டி காண்பதற்காக நாங்கள் ஒருபோதும் பிரிடோரியாவுக்குச் செல்லவில்லை. எங்களுடைய கோரிக்கை களை ஆதரித்து அங்கே இந்தியர்கள் தாமதமின்றிக் கிளர்ச்சி செய்தாலன்றி, இங்கு சர்க்கார் அக்கோரிக்கைகளை அங்கீகரிப்பதற்கு வழியில்லை. வைஸ்ராய் இங்குள்ள நிலைமை

யைத் தவருகப் புரிந்து கொண்டுள்ளார்.* இங்குள்ள இந்தியர்களைத் திருப்தி செய்வதற்காக கமிஷன் நியமிக்கப்படவில்லை என்றும், பிரிட்டிஷ் இந்திய ஏகாதிபத்திய சர்க்காரைத் திருப்தி செய்யவே நியமிக்கப்பட்டுளது என்றும் இன்று வெளியாகியுள்ள தந்தி கூறுகிறது. இங்கே நடைபெற்றுவரும் கிளர்ச்சி இந்தியாவிலுள்ள தீவிரவாதிகளால் தூண்டப்பட்ட போலியான ஒரு கிளர்ச்சியே என்றும், இந்திய சர்க்காருக்கு தர்ம சங்கடமான நிலைமையை உண்டாக்க வேண்டும் என்பதே அதன் நோக்கம் என்றும் செய்திகள் வெளியாகியுள்ளன. கிளர்ச்சியில் ஈடுபட்டவர்களுக்குக் கெட்ட பெயரை உண்டாக்க இங்கே சர்க்கார் பெருமுயற்சி செய்து வருகின்றனர். என்றுலும், சர்க்கார் அடக்க முடியாதவாறு கிளர்ச்சி வலுவடைந்து வருகிறது. இங்குள்ள இந்திய மக்களில் பெரும்பாலோர் மிகவும் ஆத்திரத்துடன் இருந்து வருகிறுர்கள். எனவே கமிஷனை ஒப்புக்கொண்டால் இந்திய மக்கள் தங்களுடைய தலைவர்களைக் கொன்றுவிடுவார்கள் என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். நாங்கள் விடுதலை அடைவதற்கு முன்பே கமிஷனை ஆட்சேபித்துப் பலவிடங்களிலிருந்தும்

* கோகலேயிடமிருந்து வந்த இரண்டு தந்திகளுக்குப் பதில் அளித்தே காந்திஜி மேற்கண்ட தந்தியை அனுப்பினுர். டிசம்பர் 23ல காலை 9 மணிக்கு கோகலே தாம் அனுப்பிய தந்தியில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார். "நம்மிடமிருந்து வைஸ்ராயைப் பிரித்துவிட தீவிரமான முயற்சிகள் நடைபெற்றுவருகின்றன. ராய்ட்டரின் ஒரு தலைப்பட்சமான தந்திகள் அத்தகையோருக்குப் பெரிதும் உதவியாக இருந்துவருகின்றன. நீங்கள் உடனடியாகப் பதில் அளித்தாலன்றி, அச்செய்திகளால் விளையக்கூடிய விபரீதத்தைத் தடுக்க முடியாது. கமிஷனில் அங்கத்தினர்களாக உள்ள எஸ்ஸெலினும் வைலியும் இந்தியர்களுக்கு விரோதமான கொள்கையுடையவர்கள் என்பதற்கு திட்டவட்டமான உதாரணங்கள் கூறி விவரமாகவே அவசரத் தந்தி அனுப்புங்கள்."

காலை 11 மணிக்கு கோகலேயிடமிருந்து டர்பனுக்கு மற்றொரு தந்தி வந்தது. அதன் விவரமாவது: "நீங்கள் நேற்று மாலை அனுப்பிய தந்தி இப்போதுதான் கிடைத்தது. மந்திரிகளைக் கண்டு பேசுவதற்காக நீங்கள் பிரிடோரியாவுக்குச் சென்றிருப்பதாய் ராய்ட்டர் தந்தி கூறுகிறது. என்ன நிகழ்ந்தது என்பதைத் தந்தி மூலம் அறிவியுங்கள். ஞாயிற்றுக்கிழமை நடந்த கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானத்தில் கண்ட கோரிக்கைகளுக்கு சர்க்கார் எவ்வளவு தூரம் இசைவார்கள் என்பதற்கும் தந்தி கொடுங்கள். மகத்தான முயற்சிகள் எடுத்துக் கொண்டதன் பலனுகவே விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்டதென்று வைஸ்ராய் கருதுகிறுர். எனவே கமிஷனை பகிஷ்கரிப்பதற்குச் சரியான காரணங்கள் உள்ளன என்று அவருக்குத் திருப்தி ஏற்படும்படி செய்வது விரும்பத்தக்கது. ஆகையால், எஸ்லேவின், வைலி நியமனத்திற்கு எதிரான ஆட்சேபணைகளைத் தந்தி மூலம் உடனே தெரிவியுங்கள். இன்று அறிக்கை வெளியிட வேண்டும். உங்களுடைய ஆட்சேபணைகளை இந்தியா ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது."

சர்க்காருக்குக் கண்டனங்கள் அனுப்பப்பட்டன. பலரும், கமிஷனில் மேற்கொண்டு அங்கத்தினர்களை நியமிக்கவேண்டுமென்று கோரவில்லை; எஸ்ஸெலின், வைலி ஆகிய இருவருக்கும் பதிலாக வேறு இருவரை நியமிக்க வேண்டும் என்றே கேட்டுக்கொண்டனர். நாங்கள் கூறும் நபர்களைக் கமிஷனில் நியமித்தால் கூட, எஸ்ஸெலினும், வைலியும் இருப்பதை ஆட்சேபிக்காமல் இருக்கும்படி மக்களைச் சமாதானப்படுத்தப் பெருமுயற்சி செய்ய வேண்டியிருந்தது. மூலாதாரமான விஷயங்களையொட்டி சர்க்கார் இந்தியர்களைக் கலந்தாலோசிக்க வேண்டும். இந்தியரின் இந்த உரிமையை ஒப்புக் கொள்ளவேண்டும் என்பதே போராட்டத்தின் சாரமாகும். இந்த நெருக்கடியான கட்டத்தில் அந்த உரிமையை விட்டுக் கொடுத்துவிட்டால், சாத்துவிக எதிர்ப்பு இயக்கம் செத்துவிடும். அசெம்பிளி அங்கத்தினரான மெய்லருடன் எஸ்ஸெலின் சமீபத்தில் பேசியபோது, மனத்தைப் புண்படுத்தக் கூடிய விதத்தில் இந்தியர்களை மூர்க்கத்தனமாகக் கண்டித்தார். பொது மேடைகளில்கூட ஆசியாக்காரர்களைக் கண்டித்து எஸ்ஸெலின் பேசியிருப்பதால், அவரது நியமனத்தை மெய்லர் பகிரங்கமாகக் கண்டித்துள்ளார். உண்மையில் எஸ்ஸெலின் யூனியன் மந்திரிகளுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதால், அவரை உத்தியோகப் பற்றற்ற ஒரு மந்திரி என்றே சொல்லலாம்! அக்கிரமமான வரியை ரத்து செய்ய வேண்டுமென நாங்கள் கிளர்ச்சி செய்து கொண்டிருந்தபோது, அந்த வரியை ரத்து செய்யக்கூடாதென்று வைலி கூறினர். பல முதலாளிகளுக்கும் அவர் சட்ட ஆலோசகராக இருப்பதுடன், 1896-ம் ஆண்டிலிருந்து ஆசியாக்காரர்களுக்கு பரம விரோதியாகவும் இருந்து வருகிறார். ஒப்பந்தம் எதுவுமின்றி சுதந்திரமாக வந்த இந்தியர்கள் அடங்கிய கப்பல்களை* மூழ்கடித்துவிட வேண்டும் என்று வெள்ளையர்களுக்கு அக்காலத்தில் ஆலோசனை கூறியவர் அவர்தான்! நாங்கள் கமிஷனை பகிஷ்காரம் செய்தாலும் கூட, எங்களுடைய குற்றச் சாட்டுகள் அடங்கிய சாட்சியத்தை நாங்கள் அச்சடித்து விநியோகிக்க முடியும். இந்தக் கமிஷன், இந்தியர்களுக்குப் பரிகாரம் அளிப்பதற்காக நியமிக்கப் படவில்லை; காலம் கடத்தி இந்தியர்களை ஏமாற்றுவதற்கே நியமிக்கப்பட்டுள்ளது.

காந்தி

---

*1896 டிசம்பர் மாதம் இந்தியாவிலிருந்து தென்னப்பிரிக்காவுக்குச் சென்ற 'கூர்லண்ட்', 'நாதேரி' என்ற இரு கப்பல்களிலும் இருந்த இந்தியர்கள் டர்பனில் இறங்கக் கூடாது என்று வெள்ளையர்கள் பெரும் கிளர்ச்சி செய்தனர். அக்கப்பல்களையே துறைமுகத்துக்கு வருமுன் மூழ்கடித்துவிட வேண்டும் என்று வைலி கூறியதாக மேற்கண்ட கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

# 53

(தந்தி)

டர்பன்,

டிசம்பர் *24, 1913*

உங்களுடைய உணர்ச்சியை உணருகிறேன். என் உயிரைக் கொடுப்பதால் நன்மை ஏற்படுவதாயின், அவ்விதமே கொடுக்கத் தயாராக இருக்கிறேன். இந்தப் போராட்டம், வைஸ்ராய், பிரிட்டிஷ் மந்திரிகள் போன்ற தற்காலிகமான அதிகார வர்க்கத்திற்கு அப்பாற்பட்டது. ஞாயிற்றுக்கிழமை நடந்த கூட்டத்தில் கடவுளின் பெயரால் செய்துகொண்ட பிரதிக்ஞை மாற்ற முடியாதது. மக்கள் உறுதியுடன் இருப்பார்களாயின், இப்போதோ, பிறகோ நீதி கிடைப்பது நிச்சயம். எங்களில் யாராவதோ அல்லது குறிப்பாக நானோ கமிஷனில் மேற்கொண்டு அங்கத்தினர்களைச் சேர்க்க வேண்டாமென்று சொல்லி கமிஷனை அங்கீகரிக்கும்படி ஆலோசனை சொல்லுவேனாயின் நாங்கள் கொல்லப்படுவோம். அதற்கு முற்றிலும் நியாயமும் இருக்கும். கமிஷனை பகிஷ்காரம் செய்வதாக நாங்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டபோது, நீங்களோ அல்லது வைஸ்ராயோ அந்தக் கோரிக்கையைக் கைவிடும்படி கூறினால், அந்த ஆலோசனையை நான் மாற்றிக் கொள்வேனா என்று கூட்டத்தில் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அந்தப் பிரதிக்ஞையை மாற்றிக் கொள்ளும் படி செய்யும் சக்தி உலகில் எந்த மனிதருக்கும் இல்லை என்று நான் கூறினேன். எங்கள் நிலைமை நாளுக்கு நாள் பலமடைந்து வருகிறது. பகிஷ்காரத்தை வைஸ்ராய் கண்டித்தால், அதன் பின் மக்களிடம் எங்களுக்குள்ள செல்வாக்கு இருந்தாலும் சரி, மறைந்தாலும் சரி, போராட்டம் காரணமாக சிலர் பலியாகும் வரையில் அது தொடர்ந்து நடைபெற்றுத்தான் தீர வேண்டும். நீண்ட காலமாக நடைபெற்றுவரும் இந்த தார்மிகப் போராட்டத்தில், மேற்கண்ட மூலாதாரமான கொள்கையை நாங்கள் வெற்றிகரமாக நிறைவேற்றி வருகிறோம். போராட்டத்தின்போது பிரிட்டிஷ் மந்திரிகள் எங்கள் நிலையை அடிக்கடி கண்டித்து வந்தும்கூட, பிறகு இங்குள்ள மந்திரிகளைப் போலவே வழிக்கு வந்தது உண்டு. பயங்கரமான நெருக்கடி ஏற்பட்டுள்ள இச்சமயத்தில் நீங்கள் உறுதியுடன் இருந்துவரவேண்டும் என்றும், நாங்கள் பின்வாங்க முடியாவிட்டாலும்கூட நீங்கள் ஏதாவது ஒரு வழியைக் கண்டுபிடிக்க வேண்டும் என்றும் பிரார்த்திக்கிறோம்.

காந்தி

## 54

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 24, 1913

அந்தரங்கமானது.

பிரதிநிதித்துவம் வாய்ந்த ஏழு பாதிரிமார் இன்று எங்களுடன் நீண்ட நேரம் கலந்தாலோசித்தனர். தாங்கள் தலையிட்டு சமரசம் செய்துவைப்பதாக சர்க்காருக்கு அவர்கள் தந்தி கொடுத்துள்ளனர். அது ஒப்புக் கொள்ளப்படாவிட்டால், எங்களுடைய கோரிக்கைகளை சர்க்கார் அங்கீகரிக்க வேண்டுமென்று அவர்கள் பகிரங்கமாகக் கிளர்ச்சி செய்வார்கள். சர்க்கார் விட்டுக் கொடுக்கவேண்டும் என்று ‘ராண்ட் டெயிலி மெயில்’, ‘ஈஸ்ட் லண்டன் டெஸ்பாச்’ ஆகிய இரு பத்திரிகைகளும் வற்புறுத்தியிருக்கின்றன. எங்கள் கோரிக்கைகளை ஆதரித்து ஹாஸ்கன் பகிரங்கமாக அறிக்கை விடுத்துள்ளார்.

காந்தி

## 55

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 25, 1913

எங்கள் கடிதத்திற்கு அரசாங்கம் அனுப்பியுள்ள பதில் கிடைத்துளது. கமிஷனில் மேற்கொண்டு அங்கத்தினர்களைச் சேர்க்க வேண்டும் என்ற கோரிக்கையை அவர்கள் நிராகரித்திருக்கிறார்கள் என்றாலும், சமரசப் பேச்சிற்கு அவர்கள் தயாராக இருப்பதாய் அறிவித்திருக்கிறார்கள். உள்நாட்டு மந்திரியைப் பேட்டி காண அனுமதிக்கும்படி கேட்டுள்ளோம்.

காந்தி

## 56

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 26, 1913

என்னை நீங்கள் அறிவீர்கள். எனவே இந்திய சர்க்காருக்கு தர்மசங்கடமான நிலைமை ஏற்படாதிருக்க என்னால் இயன்றதையெல்லாம் செய்வேன் என்று தயவு செய்து வைஸ்ராய்க்கு

உறுதி கூறுங்கள். வைஸ்ராயின், சந்தேகத்திற்கு இடமில்லாத, தைரியமான பேச்சில் அவரது அந்தரங்க சுத்தி தொனிக்கின்றது.* அவரது பேச்சு இங்கு ஐரோப்பியர்களிடையேயும் இந்தியர்களிடையேயும் மிகுந்த உணர்ச்சியை உண்டாக்கியிருக்கிறது. பேட்டி அளிக்கும் விஷயமாக உள்நாட்டு மந்திரியிடமிருந்து பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இங்கு செல்வாக்குள்ளவர்கள் நமக்குச் சாதகமாகவே வேலை செய்து வருகிறார்கள். தற்போது பரபரப்பும், சந்தேகமும், ஆத்திரமும் நிலவி வரும் நிலையில் எங்கள் சார்பில் ஒரே ஒருவரையே கமிஷனில் நியமிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம். தோட்ட முதலாளிகளுக்கும் அவர்களின் சார்பில் ஒருவரை கமிஷனில் நியமித்துக் கொள்ள உரிமை உண்டு. சாத்துவிக எதிர்ப்பாளர்களைச் சிறையிலிருந்து விடுதலை செய்வதற்கு யாதொரு தடையும் இராதென்று கருதுகிறோம். பலாத்காரக் குற்றத்திற்காகச் சிறைப்பட்டுள்ள 'சாத்துவிக எதிர்ப்பாளர்'கள் யாராவது இருந்தால், அவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று நாங்கள் கேட்கவில்லை. சாத்துவிக எதிர்ப்பாளர்களை விடுதலை செய்ய வேண்டியது முற்றிலும் அவசியம் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். எங்களுடைய வேண்டுகோளை சர்க்கார் அங்கீகரித்து அவர்களை விடுதலை செய்யவேண்டுமென்று 'பிரிடோரியா நியூஸ்' பலமாக வற்புறுத்தியிருக்கிறது. இதை அங்கீகரிக்கும்படி வைஸ்ராய் தென்னாப்பிரிக்க சர்க்காரை வற்புறுத்த முடியுமா? சர்க்கார் அவ்விதம் செய்வதால் நமது கொள்கைக்கும் பாதகம் ஏற்படாது; சர்க்காரின் கண்ணியத்திற்கும் கௌரவத்திற்கும் குந்தகம் நேராது; அதன் மூலம் எதிர்காலத்தில் நிரந்தரமான சமரசம் ஏற்படுவதற்கும் வழி செய்ததாகும். சமரசம் ஏற்பட நாங்கள் எங்களால் இயன்றதையெல்லாம் செய்துவருகிறோம். நீங்களும் உங்களால் இயன்றதைச் செய்யவேண்டும். அப்போதுதான் கமிஷனை நாங்கள் ஒப்புக்கொண்டு, போராட்டத்தையும் நிறுத்த முடியும். இங்குள்ள இந்தியர்களின் எல்லாக் குறைகளையும் கமிஷன் பரிசீலனை செய்யும் என்பதில் யாதொரு சந்தேகமும் இருக்கக் கூடாது.

**காந்தி**

---

*அப்போது இந்தியா வைஸ்ராயாக இருந்த லார்டு ஹார்டிஞ்ஜ் சென்னையில் மக்கள் அளித்த உபசாரப் பத்திரங்களுக்குப் பதில் அளிக்கையில், தென்னாப்பிரிக்க சர்க்காரைக் கண்டித்தும், காந்திஜி முதலிய சாத்துவிக எதிர்ப்பாளர்களிடம் தமக்குள்ள அனுதாபத்தைத் தெரிவித்தும் பேசினார். இச்சம்பவத்தையே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். லார்டு ஹார்டிஞ்ஜ் பிரிட்டிஷ் சர்க்காரில் பல பதவிகள் வகித்தவர். அவர் 1910–லிருந்து 1916 வரையில் இந்தியா வைஸ்ராயாக இருந்தார்.

## 57

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 26, 1913

என்னுடைய தந்தியை அனுப்புவதற்காக வெஸ்ட் சென்றூர். நிதி விஷயமாக நீங்கள் அனுப்பிய தந்தியும் அப்போதுதான் வந்தது. அதற்கும் பதில் தந்தி அனுப்பப்பட்டிருக்கிறது. நிதித் தொகையை அனுப்ப வேண்டாமென்று உங்களுக்குத் தந்தி கொடுப்பதற்குக் காரணம் இதுதான். இங்கே சர்க்கார் கைக் கொண்டுவரும் அடக்கு முறைகளுக்கு எல்லேயே இராதென்று தோன்றுகிறது. ராணுவச் சட்டத்தின் கீழ் அவர்கள் யாரையும் கைது செய்யலாம், எதையும் கைப்பற்றலாம். ராணுவச் சட்டம் விதிக்க வேண்டும் என்றும் சர்க்காருக்கு யோசனை கூறப்பட்டு வருகிறது. ஆகையால் நிதித் தொகை உங்களிடம் இருப்பதே நல்லது. தேவையாக இருக்கும்போது அனுப்புங்கள். இயக்கம் எதிர்பார்த்ததற்குமேல் எங்கும் பரவி பலமடைந்து வருகிறது. நாள் முழுவதும் மக்கள் திரண்டு வந்து எங்களே முற்றுகை யிட்டவண்ணமாக இருக்கிருர்கள். சத்தியாக்கிரக யாத்திரை நிச்சயமாக ஒத்திவைக்கப்படும். சமாதானம் ஏற்படலாம் என்ற நம்பிக்கை இருந்துவருவதால், நான் யாத்திரைக்குப் பூர்வாங்கமான ஏற்பாடுகள் எதுவும் செய்யவில்லே. முதலில் 5000 பேர் யாத்திரைக்குப் புறப்படுவார்கள். செல்லச் செல்ல அந்தத் தொகை 20,000-ஆக உயர்ந்துவிடலாம். யாத்திரையில் ஈடுபடக்கூடிய ஆடவர்களும் பெண்களும் உறுதியுடன் இருந்து வருகிருர்கள். சனிக்கிழமை மாரிட்ஸ்பர்க்கில் நடக்கும் பொதுக் கூட்டத்திற்கு நான் செல்லுகிறேன். நீங்கள் தந்தி மூலம் அனுப்பும் கட்டளேகளே உடனே கவனித்து ஆவன செய்கிறேன்.

காந்தி

## 58

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 27, 1913

ராபர்ட்சன் இங்குவரும் வரையில் போராட்டத்தை நிச்சய மாக ஒத்திவைக்கிருேம்.* பகிரங்கமாக அவருக்கு வரவேற்பு

*மேற்கண்ட தந்திக்கு அன்றைய தினமே கோகலேயிடமிருந்து பின்வரு மாறு ஒரு தந்தி வந்தது: “ராபர்ட்சன் இங்கிருந்து 29உ புறப்பட்டால், அங்கு 8உ வந்து சேரலாமென அறிகிறேன். ஆனுல் அவர் அங்கு வந்தபின் ஒரு வாரம்வரையில் போராட்டத்தை மீண்டும் ஆரம்பிக்கக்கூடாது. இவ்விதம் நீங்கள் வாக்குறுதி அளிக்கும்வரையில் ராபர்ட்சன் புறப்படுவதற்கான

உபசாரம் அளிக்கலாமா? தற்போது நடைபெற்றுவரும் சமரசப் பேச்சுகள் முறிந்துவிட்டால், ராபர்ட்சனின் வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருப்பதாயும் அதன் பின்னரே போராட்டம் மீண்டும் ஆரம்பமாகுமென்றும் நாங்கள் பகிரங்கமாக அறிவிக்க லாமா? இதன் மத்தியில் நாங்கள் கமிஷன் முன்னிலையில் சாட்சியம் கொடுப்பதற்கில்லை.

காந்தி

## 59

டர்பன்,
டிசம்பர் *27, 1913*

ராபர்ட்சன் 29வ அங்கிருந்து புறப்படுவராயின், அவர் இங்கு வந்து சேர்ந்தபின் ஒரு வாரம் வரையில் சத்தியாக்கிரக யாத் திரையைத் தொடங்குவதில்லை என்று நான் உறுதி கூறுகிறேன். இதன் மத்தியில் எங்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கும் படி ஜெனரல் ஸ்மட்ஸை இந்திய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க் காரும் வற்புறுத்துவார்களென நம்புகிறேன். ஸ்ரீமதி ஹாப்ஹவுஸ் தென்னுப்பிரிக்க சர்க்காரின் நெருங்கிய நண்பராவார். அவர் எனக்கு அனுப்பியுள்ள தந்தியில், யாத்திரையை நிறுத்தி வைக்குமாறும், தாம் தலையிட்டு ஆவன செய்வதாகவும் குறிப் பிட்டிருக்கிறுர். இதைப்போல், எங்கள் கோரிக்கையைக் குறித்து அதிக அனுதாபம் ஏற்பட்டுவருகிறது. சாதகமான இந்த நிலை மைக்கு வைஸ்ராயினுலோ அல்லது லார்டு க்ரூவினுலோ பாதகம் ஏற்படாமல் இருக்க வேண்டும். ஆண்ட்ரூஸையும், ராபர்ட்சனை யும் நாங்கள் பூரணமாக கௌரவிப்போம்.

காந்தி

---

ஏற்பாடுகளை நிறுத்திவைத்திருக்கிறோம். ஒரு வாரம் வரையில் கமிஷனின் விசாரணையை லார்டு க்ரூ ஒத்திவைக்கும்படி செய்யும் பொறுப்பை வைஸ்ராய் ஏற்றுக்கொண்டுள்ளார். நீங்கள் அவ்விதம் வாக்களிக்கிறீர்களா? சந்தேகத் திற்கு இடமின்றி திட்டவட்டமாகத் தந்தி கொடுங்கள். போராட்டத்தை அவ் விதம் ஒத்திவைத்திருப்பதற்குக் காரணம் என்ன என்பதைப் பகிரங்கமாகக் கூறவும், கமிஷனின் விசாரணை ஒத்திவைக்கப்படாவிடில், அதில் கலந்து கொள்ளாமலிருக்கவும் உங்களுக்கு நிச்சயமாக உரிமை உண்டு. ராபர்ட்ச னுக்கு பகிரங்கமாக வரவேற்பு அளிப்பது விரும்பத்தக்கதே.

## 60

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் *29, 1913*

வேறு வழி எதுவுமில்லை. லார்டு க்ருவின் அனுதாபத்தை நாம் இழக்கும்படி நேருமாயின், இந்தியாவின் அனுதாபத்துடன் நாம் திருப்தியடைய வேண்டும். நீங்கள் எங்களைப் பற்றி மித மிஞ்சிக் கவலைப்படமாட்டீர்களென நம்புகிறேன். துன்பத்தை அனுபவிக்க நாங்கள் முற்றிலும் உற்சாகத்துடன் இருந்துவரு கிறோம். துன்பம் நேருமென்று தெரிந்துதான் போராட்டத்தில் ஈடுபட்டோம். எனவே அதை அனுபவிக்க நாங்கள் தயாராக இருக்கிறோம். சத்தியாக்கிரக யாத்திரையை ஒத்திவைப்பதால் மிகுந்த பாதகம் ஏற்படும். போராட்டம் ஒத்திவைக்கப்படலாம் என்று மக்களை எச்சரித்தும் கூட, அவர்கள் போராட்டம் நடைபெறுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்; போராட்டத்தில் ஈடுபடுவதற்காக தங்களுக்குச் சொந்தமான தட்டுமுட்டு சாமான்களையும் விற்று வருகிறார்கள். இனி வெளி யிலிருந்து உதவி கிடைக்காதென்று தெரிந்தும்கூட அவர்கள் இவ்வளவு உற்சாகத்துடனும் உறுதியுடனும் இருந்துவருவதால், நம்பிக்கைக்கு இடமிருக்கிறது. பின்னர் அறிக்கை அனுப்பு கிறேன்.*

**காந்தி**

---

*டிசம்பர் 28உ கோகலேயிடமிருந்து வந்த பின்கண்ட தந்திக்குப் பதில் அளித்தே மேற்கண்ட தந்தியை காந்திஜி அனுப்பினர்: "உங்களுடைய நிலைமையை இந்தியாவுக்கு விளக்கிக் கூறவேண்டியது அவசியமாகியிருக் கிறது. இதற்குச் சிறந்த வழி என்னவெனில், எல்லா விவரங்களும் அடங்கிய அறிக்கையை உடனே அனுப்புங்கள். கீழ்க்கண்ட விவரங்கள் அதில் அடங்கி யிருக்கவேண்டும்: 1 கமிஷனில் எஸ்ஸெலனும். வைலியும் அங்கத்தினர் களாக இருப்பதைக் குறித்து உங்களுடைய ஆட்சேபணைகள். 2. கமிஷனைக் குறித்து தென்னாப்பிரிக்காவிலுள்ள நண்பர்களான ஐரோப்பியர்களின் உணர்ச்சியும் அவர்கள் கூறும் ஆலோசனையும். 3. பெண்கள் உள்பட சாத் துவிக எதிர்ப்புக் கைதிகளுக்குச் சிறையில் இழைக்கப்பட்ட கொடுமைகள். 4. இந்தியர்களுக்கு ஆத்திரத்தை உண்டாக்கிய மற்றுமுள்ள நிகழ்ச்சிகள். 5. அங்கு கூட்டத்தில் செய்துகொண்ட பிரதிக்ஞையும், அதற்குக் காரணங் களும். 6. பகிரங்கமாகக் குறிப்பிடக்கூடிய சமரசப் பேச்சுகள் ஏதாவது நடைபெற்றால் அவற்றைப் பற்றிய விவரங்கள். 7. தற்போதைய நிலைமையும எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக்கையும். 8. நீங்கள் இந்தியாவுக்கு ஏதாவது செய்தி அனுப்ப விரும்புகிறீர்களா? உங்களுடைய அறிக்கை சமாதான தோரணையிலும், ஆனால் உறுதியுடனும் இருக்கட்டும். மற்றும் உங்களுடைய அறிக்கை, வைஸ்ராய் இதுவரை அளித்துவரும் ஆதரவைப் பாராட்டுவதாக வும், தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் எதிர்கால நிலைமையையொட்டி இந்த

## 61

(தந்தி)

டர்பன்,
டிசம்பர் 29, 1913

சர்க்கார் தங்களுக்குச் சாதகமானவர்களை நியமித்து கமிஷனை நிரப்பியிருக்கிறார்கள் என்று இந்தியர்கள் கருதுகின்றனர். கமிஷனில் மேற்கொண்டு அங்கத்தினர்களை நியமிக்க வேண்டுமென இந்தியர்கள் கூறியுள்ள யோசனை நியாயமானது என்பதை அநேகமாக தென்னாப்பிரிக்காவிலுள்ள எல்லாப் பத்திரிகைகளும் ஒப்புக்கொண்டுள்ளன. கமிஷனில் உள்ள எஸ்ஸெலினும் வைலியும் ஆசியாக்காரர்களைக் கடுமையாக எதிர்க்கும் வெறி கொண்டவர்கள் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுளது. கமிஷனின் தலைவர் பூர்வாங்கமாக விடுத்துள்ள அறிக்கையில், இந்தியக் கைதிகளைக் கொடுமையாக நடத்தியதைப் பற்றி மாத்திரமல்ல, இந்தியர்களின் குறைகளைப் பற்றியும், அவர்கள் சம்பந்தமாக சர்க்காரின் கொள்கை பற்றியும் விசாரிக்கப் போவதாகக் குறிப்பிட்டுள்ளார். கமிஷன் தலைவரின் நேர்மையைப் பற்றி சந்தேகத்திற்கு இடமே இல்லை என்றாலும், கொள்கை சம்பந்தமான விஷயங்களில் அவர் தமது சகாக்களைக் கட்டுப்படுத்த முடியாது. கமிஷன் ஒரு நீதிச் சபை மாத்திரமல்ல, அரசியல்வாதிகளும் அடங்கிய ஒரு சபை என்பதை அதன் அங்கத்தினர்களின் ஜாபிதாவிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்தியர்களின் மூலாதாரமான உரிமைகளைப் பாதிக்கும் எவ்விஷயத்தையொட்டியும் இந்திய சமூகத்தினரைக் கலந்தாலோசிக்க வேண்டும் என்று இந்தியர்கள் அடிக்கடி வற்புறுத்தி வந்துள்ளனர். தற்போதைய கமிஷனை அமைப்பதில் இந்தியர்களைக் கலந்து ஆலோசிக்காதது மாத்திரமல்ல, இந்தியர்களின் உணர்ச்சியை இறுமாப்புடன் அலட்சியம் செய்துமிருக்கிறார்கள். சமீபத்தில் ரயில்வே ஊழியர்களான ஐரோப்பியர்கள் வேலை நிறுத்தம் செய்தபோது வாக்கு எடுப்பதன் மூலம் தங்களுக்கு விருப்பமான ஒருவரைத் தேர்ந்தெடுக்க அவர்கள் அனுமதிக்கப்பட்டனர். நாங்களோ, எங்களைக் கலந்தாலோசிக்க வேண்டுமென்று மாத்திரமே கேட்கிறோம். மேலும் மூன்று தலைவர்களை அதிகாரிகள் விடுதலை செய்தபோது, அவர்களை விடுதலை செய்வதற்கான காரணங்களை அவர்களுக்குக் கூறவில்லை: கமிஷன் நியமனம் பற்றியும் அவர்களுடன் கலந்து ஆலோசிக்கவில்லை. தலைவர்கள் விடுதலை அடைவதற்கு முன் நடந்த பல கூட்டங்

---

நாட்டில் நம்பிக்கை உண்டாக்குவதாகவும் இருக்கவேண்டும். உங்களுடைய அறிக்கை தவறாமல் செவ்வாய்க்கிழமை காலையில் இங்கு வந்து சேர வேண்டும்."

மேற்கண்ட தந்திக்கு இணங்க காந்திஜி கோகலேய்க்கு அனுப்பிய அறிக்கை 31-12-1913-ல் இந்தியாவிலுள்ள பத்திரிகைகளில் பிரசுரமாயின.

களிலும் கமிஷன் அங்கத்தினர்களின் நியமனம் பற்றிக் கண்டித்தனர். ஆனால் அந்தக் கண்டனங்களையெல்லாம் சர்க்கார் லட்சியம் செய்யவேயில்லை. கைதிகளுக்குக் கசையடி கொடுத்ததை இந்தியர்கள் பார்த்ததால், அவர்களுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டிருக்கிறது. போலீசார் சுட்டதும் அநீதியானதென்று அவர்கள் கருதுகின்றனர். சிறைகளில் கொடுமை தாங்காமல் சாத்துவிக எதிர்ப்புக் கைதிகள் உண்ணுவிரதம் இருந்தனர். சிறையில் கைதிகளை ஜெயிலு வார்டர்கள் அவமதிப்பதுடன், அடிக்கவும் செய்கிறார்கள். அவர்களுக்குப் போர்வைகளோ, மிதியடிகளோ, புத்தகங்களோ கொடுக்கப்படுவதில்லை. ஜெயிலுக்கள் மோசமான முறையில் சமையல் செய்த மோசமான உணவுகளையே கைதிகளுக்குக் கொடுக்கிறார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் மக்களுக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கியிருக்கின்றன. கமிஷன் நியமனத்தையொட்டி தங்களுடைய உணர்ச்சிகளை அதிகாரிகள் லட்சியமே செய்யவில்லை என்பது அவர்களுடைய ஆத்திரத்தை அதிகப்படுத்தியிருக்கிறது. சர்க்கார் நீதியுடன் நடந்துகொள்ள விரும்பவில்லை என்பதற்கு அது ஓர் அறிகுறி என்றே இந்தியர்கள் கருதுகின்றனர். தலைவர்களை சர்க்கார் விடுதலை செய்தது, பெருந்தன்மையான செயல் அல்ல, அவர்களுடைய விடுதலை சமூகத்திற்கு விடுத்த ஒரு சவாலேயாகும். அதனாலேயே, கமிஷனில் மேற்கொண்டு அங்கத்தினர்களை நியமிக்கவேண்டுமென்று சர்க்காருக்கு அந்தரங்கமாக விண்ணப்பம் செய்துகொள்வதற்குப் பதிலாக, இந்தியர்கள் பகிரங்கமாக அந்தக் கோரிக்கையை விடுத்தனர். அந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டால் என்ன நிகழும் என்பதையும் அவர்கள் கூறியுள்ளனர். இந்த நிலையில் தற்போதைய கமிஷனை ஒத்துக் கொண்டால், இந்தியர் சமூகம் தன் சுயமரியாதையையே விட்டுக் கொடுத்ததாகும். 21வ நடந்த பொதுக்கூட்டத்தில், தற்போதைய கமிஷனை ஒத்துக் கொள்ள முடியாது என்று தீர்மானம் நிறைவேறியதுடன், கோரிக்கைகளை சர்க்கார் அங்கீகரித்தாலன்றி போராட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்படும் என்றும் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர். சென்னையில் வைஸ்ராய் செய்த பிரசங்கத்திற்காகவும், தென்னுப்பிரிக்கா இந்தியர்களின் கோரிக்கைகளை அவர் தொடர்ந்து உறுதியுடன் ஆதரித்து வருவதற்காகவும் இந்தியர் சமூகம் அவருக்கு ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது. தற்போது ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்த்து, பாரபட்சமற்றவர்களைக் கமிஷனில் அங்கத்தினர்களாக நியமிக்க வேண்டும் என்றும், இந்தியர்களைப் பாதிக்கும் மூலாதாரமான பிரச்னைகளையொட்டி இந்திய சமூகத்தைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்றும் இந்தியர்கள் விடுத்துள்ள கோரிக்கையை சர்க்கார் அங்கீகரிக்கும்படி செய்வதற்காக இங்குள்ள ஐரோப்பிய நண்பர்கள் முயற்சி செய்துவருகிறார்கள். எங்களுடைய கோரிக்கை முற்றிலும் நியாயமானதென எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். எனவே இதை இந்தியா தீவிரமாக ஆதரிக்கும் என்பதே எங்களுடைய நம்பிக்கையாகும். இந்தியர் சமூகத்தைக் கலந்து

ஆலோசிக்காமல் கமிஷனை நியமித்தது, சர்க்கார் செய்த தவறாகும். கமிஷனில் குறிப்பிட்டவர்களை அங்கத்தினராக நியமித்தால் இந்தியர்கள் கடுமையாக எதிர்ப்பார்கள் என்பதை சர்க்கார் அறிந்துதான் இருக்க வேண்டும். அப்படியிருந்தும் அவர்களைக் கமிஷனில் நியமித்ததும் சர்க்கார் செய்த தவறாகும். இவ்விதம் சர்க்கார் செய்த தவறுகளுக்காக நாங்கள் ஏன் கஷ்டத்திற்குள்ளாக வேண்டும்? இந்தியர்களுக்கு ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் கசையடி கொடுத்ததையும், மற்றும் இந்தியர்களுக்குப் பல கொடுமைகள் இழைக்கப்பட்டதையும்பற்றி மாத்திரம் சர் வில்லியம் சாலமன் விசாரிப்பாராயின், நாங்கள் கமிஷனின் முன்னிலையில் சாட்சியம் கொடுக்கத் தயாராக இருக்கிறோம். ஆனால் கைதிகளுக்கு அதிகாரிகள் இழைத்த கொடுமைகளை ருசுப்பிப்பதைக் காட்டிலும், இந்தியர்களுக்கு இழைக்கப்பட்டுவரும் இன்னல்களை அகற்ற வேண்டும் என்பதிலேயே இந்தியர் சமூகம் அதிக அக்கறை கொண்டுள்ளது. இங்கு மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருப்பதால், மூலாதாரமான கோரிக்கைகளைத் தலைவர்கள் கைவிடுவார்களாயின், அவர்கள் மக்களால் கொல்லப்படுவார்கள் என்றும், அது நியாயமாகவே கருதப்படும் என்றும் அங்கு நமது நாட்டு மக்களிடம் உறுதியாக எடுத்துக் கூறுங்கள். எனது யோசனைகளை எழுத்து மூலம் அறிவித்தால் அவற்றைப் பரிசீலனை செய்வதாக ஜெனரல் ஸ்மட்ஸ் எனக்குப் பதில் அளித்துள்ளார். எனது யோசனைகளைத் தந்தி மூலம் அறிவித்திருக்கிறேன். அவை இரு சாராருக்கும் மத்தியஸ்தமான யோசனைகளென நான் கருதுகிறேன்.

**காந்தி**

## 62

(தந்தி)

டர்பன்,
*டிசம்பர் 30, 1913*

என் பெயரால் நீங்கள் கொடுத்துள்ள வாக்குறுதியை உயிரைக் கொடுத்தாவது நிறைவேற்றுவேன் என்பதை நம்புங்கள். போராட்டத்தை ஒத்திவைத்திருப்பதற்குக் காரணம் என்ன என்பதை நான் கூறவில்லை. 15உ வரை நாங்கள் போராட்டத்தை நிறுத்திவைத்திருக்கிறோம் என்று மாத்திரம் பொது மக்களுக்கு அறிவித்திருக்கிறேன். ராபர்ட்சன் இங்கு வந்தபின் ஒரு வாரம் வரையிலோ, அதற்கும் அதிகமாகவோ நாங்கள் காத்திருக்கிறோம் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். ஸ்மட்ஸின் இறுதியான பதில் திருப்திகரமாக இருந்தால், நாங்கள் ஓர் அறிக்கை வெளியிட வேண்டியிருக்கும். வைஸ்ராயின் பிரதிநிதி இங்கு வருவதால், அவர் நிலைமையைப் பரிசீலனை

செய்யும்வரையில் மரியாதைக்காகவாவது நாம் யாதொரு நட வடிக்கைகளிலும் ஈடுபடக்கூடாது என்று கூற உத்தேசித்திருக் கிறேன். உடல் நலமின்மை காரணமாக நீங்கள் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு வரவில்லை என்று தந்திச் செய்திகள் கூறுகின்றன. தயவு செய்து விவரமாக எங்களுக்கு அறிவியுங்கள்.

**காந்தி**

## 63

(தந்தி)

டர்பன்,

டிசம்பர் *31, 1913*

போலக் லண்டனுக்குச் செல்லுவதென்ற யோசனை விரிவாக ஆலோசிக்கப்பட்டது. அவரை அங்கு அனுப்ப முடியும் என்றே நானும் நம்பியிருந்தேன். ஆனால் இப்போதைய நிலைமை யில் அவர் இங்கே இருக்க வேண்டியது அவசியமென நாங்கள் எல்லோரும் கருதுகிறோம். கமிஷனில் மேற்கொண்டு அங்கத் தினர்கள் நியமிக்கப்படுவார்களாயின், சாட்சியம் கொடுப்பதற்கு போலக் இங்கே இருந்து தீர வேண்டும். சாத்துவிக எதிர்ப்பு யாத்திரை ஆரம்பமாகுமாயின், ஒவ்வொரு தலைவரும் இங்கே இருக்க வேண்டியது அவசியமாகும். அவரும் கூட்டத்தில் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டிருக்கிறார். மெக்டொனல்டுக்கு அனுப்புவதற்காக முழு விவரங்களும் அடங்கிய அறிக்கையைத் தயாரித்துக் கொண்டிருக்கிறேன். ரூ. *7000* வந்து சேர்ந்தது.*

**காந்தி**

---

* 31-12 1913 ல் கோகலே அனுப்பிய பின்கண்ட தந்திக்குப் பதிலளித்து காந்திஜி அன்றைய தினமே மேலே குறிப்பிட்டுள்ள தந்தியை அனுப்பினார்: "ஒப்பந்தத் தொழிலாளர் முறை, மூன்று பவுன் வரி, நமது வேலைநிறுத் தத்தைப் பற்றிய முழு விவரங்கள், அந்த வேலை நிறுத்தத்தை நசுக்க அதிகாரிகள் கையாண்டுவரும் முறைகள் ஆகிய எல்லா விவரங்களும் அடங்கிய ஓர் அறிக்கையை போலக் உடனடியாக ராம்சே மெக்டொனல்டுக்கு அனுப்பு வாரென நான் அவருக்கு (ராம்சே மெக்டொனல்டுக்கு) வாக்களித்திருக் கிறேன். மெக்டொனல்டு அப்பிரச்னைகளை பார்லிமெண்டில் எழுப்புவதாகக் கூறியுள்ளார். பிப்ரவரி ஆரம்பத்தில் போலக்கை இங்கிலாந்துக்கு அனுப் பும்படி நான் கூறிய யோசனைக்கு நீங்கள் இன்னும் பதில் அனுப்பவில்லை. அவர் அங்கு செல்லவேண்டியது மிகவும் அவசியமென்று கருதுகிறேன்."

## 64

(தந்தி)

டர்பன்,
*ஜனவரி 2, 1914*

ரவரண்ட் ஸி. எப். ஆண்ட்ரூஸும், ரவரண்ட் டபிள்யூ. பியர்சனும் இங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கு இந்திய சமூகத்தினர் மனப்பூர்வமாக வரவேற்பளித்தனர். கமிஷனில் மேற்கொண்டு குறைந்த பட்சம் ஒரே ஒரு ஐரோப்பிய அங்கத்தினரையாவது சேர்த்துக் கொள்ள நாங்கள் இப்போது முயற்சி செய்து வருகிறோம். யாருடைய பாரபட்சமற்ற தன்மையில் எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ அந்த ஐரோப்பியரையே கமிஷனில் நியமிக்க வேண்டும் என்பது எங்களுடைய கோரிக்கையாகும். அவசியமாயின் தோட்ட முதலாளிகளும் அவர்களுடைய சார்பில் ஓர் அங்கத்தினரை நியமிக்கலாம். இவ்விஷயத்தில் இந்தியா எங்களுக்கு ஆதரவு அளிக்குமென நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். எங்களைப்பற்றி அதிகமாகக் கவலைப்படவேண்டாம் என்று எல்லோரையும் கேட்டுக்கொள்ளுங்கள். நமது சமூகத்தைச் சேர்ந்த பெரும்பாலோருக்கும் இவ்வளவு தூரம் துன்பங்களைச் சகித்துக் கொள்ளும் ஆற்றல் இருக்குமென நாங்கள் எதிர்பார்க்கவேயில்லை. சிறையிலிருந்து நாங்கள் வெளிவந்ததும் இந்த உண்மையைத் தெரிந்து கொண்டோம். தகுந்த தலைவர்கள் இல்லாமலிருந்தும் கூட, ஒப்பந்தத் தொழிலாளர்களான இந்தியர்கள் காட்டிய திறமையும், உறுதியும், கட்டுப்பாடும் எங்களைப் பிரமிக்க வைத்துள்ளன. இந்தக் கஷ்டமான நிலைமையிலும் நாங்கள் உற்சாகத்துடன் இருந்து வருகிறோம்.

**காந்தி**

## 65

(தந்தி)

டர்பன்,
*ஜனவரி 3, 1914*

தென்னாப்பிரிக்க இந்தியர் பிரச்னையை காட்பிரே சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. எல்லாவற்றையும் உங்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி அவரிடம் கூறியிருக்கிறேன். போராட்டம் நிறுத்தப்பட்டிருக்கும்போது ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். நான் அவருடன் ஒரு வாரம் போனிக்ஸில் தங்க வேண்டுமென ஆண்ட்ரூஸ் விரும்புகிறார். நானும் அதற்கு இசைந்திருக்கிறேன். நீங்கள் அனுமதி அளிப்பீர்களாயின், ஹரிலால் இங்கு வரவேண்டுமென்று நான் கருதுகிறேன். சாத்துவிக எதிர்ப்பாளன் என்ற முறையில் போராட்டத்தில் ஈடுபட வேண்டு

மென அவன் பிரதிக்ஞை செய்து கொண்டுள்ளான். அவன் அனுமதிக்கப்பட்டால், அந்தப் பிரதிக்ஞையை அவனுல் நிறைவேற்ற முடியும். சிறை அனுபவமும், மற்ற அனுபவமும் கணிசமான கல்வி என்பதே எனது அபிப்பிராயமாகும்.

காந்தி

## 66

(தந்தி)

ஜோகன்னஸ்பர்க்,

*ஜனவரி 22, 1914*

அரசாங்கத்துக்கும் எனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்திலிருந்து தற்காலிகமான ஒப்பந்தத்திற்கு வழி ஏற்பட்டிருக்கிறது. கமிஷன் சம்பந்தமான மூன்று யோசனைகளை அரசாங்கம் ஒப்புக்கொள்ளவில்லை என்ருலும், இந்தியர் பிரச்னையை விரைவில் தீர்க்க விரும்புவதாக அறிவித்திருக்கிருர்கள். நாங்கள் பிரதிக்ஞையை மீறி கமிஷன் முன்னிலையில் சாட்சியம் கூற முடியாது. ஆனல் சாத்தியமான வரையில் ராபர்ட்சனுக்கு உதவியாக இருப்போம். அரசாங்கத்தின் நிலையை நாங்கள் நன்கு உணர்ந்து சாத்துவிக எதிர்ப்பு இயக்கத்தை நிறுத்தி வைத்துள்ளோம். வரப்போகும் அசெம்பிளிக் கூட்டத்தில் இந்தியர் பிரச்னையையொட்டி சட்டம் கொண்டுவரப்போவதாக அரசாங்கம் உறுதியளித்திருப்பதே, இயக்கத்தை நிறுத்தியதற்குக் காரணமாகும். எங்களுடைய சாட்சியத்தை நாங்கள் பிரசுரித்து, பழைய புண்களைக் கிளறப் போவதில்லை. எங்களுடைய நோக்கத்தை நன்கு உணர்ந்து கொண்டுள்ள அரசாங்கமும் எங்கள் மீது புகார்கள் கூறி கமிஷன் முன்னிலையில் யாதொரு சாட்சியமும் கூறப் போவதில்லை. சர்க்கார் எல்லாக் கைதிகளையும் விடுதலை செய்யத் தீர்மானித்திருக்கிருர்கள். நான் எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கைகளை இந்திய சமூகத்தினரின் அங்கீகாரத்திற்காக அவர்களிடம் அறிவிக்கப் போகிறேன். உங்களுடைய உணர்ச்சியையும், வைஸ்ராயின் உணர்ச்சியையும், மற்றுமுள்ள பல சந்தர்ப்பங்களையும் மனத்திற்கொண்டே அவ்விதம் முடிவு செய்திருக்கிறோம். ஆண்ட்ரூஸும் நானும் சேர்ந்தே அரசாங்கத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளோம். ஜெனரல் ஸ்மட்ஸை நான் கடைசியாக பேட்டி கண்ட போது ஆண்ட்ரூஸும் கூட இருந்தார். சனிக்கிழமை டர்பன் போய்ச் சேரலாமென எதிர்பார்க்கிறேன்.

காந்தி

## 67

(தந்தி)

டர்பன்,

ஜனவரி 25, 1914

தற்காலிகமான ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. நாங்கள் ஏற்கனவே பிரதிக்ஞை செய்துகொண்டிருப்பதற்கிணங்க கமிஷன் முன் சாட்சியம் கூறுவதற்கில்லை. இருந்தாலும் ராபர்ட்சனின் முயற்சி வெற்றிபெற இயன்ற உதவி அளித்து வருகிறோம். கமிஷனின் அலுவல்கள் முடிவடைந்தபின் சட்டம் கொண்டு வருவதாக அரசாங்கம் வாக்களித்திருக்கிறது. எனவே அதுவரையில் சாத்துவிக எதிர்ப்பு நிறுத்திவைக்கப்படும். இந்தியர்களைப் பாதிக்கும் முக்கியமான பிரச்னைகளை யொட்டி இந்தியர்களைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்ற கொள்கையை அரசாங்கம் ஒப்புக் கொண்டுள்ளது. கைதிகள் விடுதலை செய்யப்பட்டு வருகிறார்கள். சமரசத்திற்கு இப்போது அதிக சாதகமான சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது.

## 68

(தந்தி)

டர்பன்,

ஜனவரி 26, 1914

டர்பன், பிரிடோரியா, ஜோகன்னஸ்பர்க் முதலிய மற்ற இடங்களிலும் நடந்த இந்தியர்கள் அடங்கிய பொதுக் கூட்டங்களில் ஒப்பந்தம் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டது.

காந்தி

## 69

(தந்தி)

கேப் டவுன்,

பிப்ரவரி 18, 1914

கேப் டவுன் நகர மண்டபத்தில் ரவீந்திரநாத் தாகூரைப் பற்றி* ஆண்ட்ரூஸ் பேசினார். அக் கூட்டத்திற்குத் தலைமை

---

* 1913-ம் ஆண்டில் ரவீந்திரநாத தாகூர் இலக்கிய நோபல் பரிசு பெற்றார்.

வகித்த மேயர், ஆண்ட்ரூஸின் தொண்டில் தமக்குள்ள அனுதாபத்தைப் பகிரங்கமாகத் தெரிவித்தார். பார்லிமெண்டிலுள்ள பிரபல அங்கத்தினர்கள் உள்பட ஏராளமான பிரமுகர்கள் அக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். முன்னாள் பிரதமரான மெர்ரிமென், இந்தியர்களின் உயர்ந்த வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்து கொள்ளவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர். இந்தத் தத்துவத்தின் உண்மையை ஆண்ட்ரூஸ் விளக்கி வருவதாகவும், இன்று அவ்விதம் விளக்குவதைக் காட்டிலும் வேறு சிறந்த தொண்டு இருக்கமுடியாது என்றும் மெர்ரிமென் குறிப்பிட்டார். இந்த நெருக்கடியான சமயத்தில் அத்தகைய பிரசங்கத்தைக் கேட்கும் வாய்ப்பு கிடைத்ததைப் பற்றி கவர்னர் ஜெனரல் தமது ஆழ்ந்த மகிழ்ச்சியைத் தெரிவித்தார். மேலும் அவர் பேசுகையில், சமாதானத்திற்காகவும், சமரச ஒப்பந்தத்திற்காகவும் ஆண்ட்ரூஸ் செய்துவரும் தொண்டிற்காக அவருக்கு நன்றி தெரிவித்ததுடன், ஒப்பந்தம் விரைவில் ஏற்படுமென்று தாம் நம்புவதாகவும் கூறினர்; இந்தியாவின் உயர்ந்த வாழ்க்கைத் தத்துவத்திற்கும், சிந்தனைகளுக்கும் தாகூர் பிரதிநிதியாக விளங்கிவருவதாகக் கூறி அவருக்குத் தமது மனப்பூர்வமான பாராட்டுதலைத் தெரிவித்தார். ஆண்ட்ரூஸ் விளக்கியதைப் போல, கூலிகள் இருக்கும் நாடு என்ற முறையில் அல்ல, உயர்ந்த சித்தாந்தங்களைக் கொண்ட நாடு என்ற முறையில் இந்தியாவின் மகத்துவத்தை மேலும் நன்கு அறிந்து கொள்ள விரும்புவதாகவும் கூறினர். லார்டு கிளாட்ஸ்டன் ஆழ்ந்த உணர்ச்சியுடன் பேசினர். பத்திரிகைகளில் பிரபலமாக விமர்சனம் செய்யப்பட்ட மேற்கண்டவர்களின் பிரசங்கங்கள் நல்ல எண்ணத்தை உண்டாக்கியிருக்கின்றன. பத்திரிகைகளில் இந்தத் தந்தியை விரிவாக வெளியிடுங்கள்.

காந்தி

## 70

(தந்தி)

கேப் டவுன்,
பிப்ரவரி 19, 1914

'கேப் டைம்ஸ்' ஆண்ட்ரூஸின் பிரசங்கத்தை முழுவதும் பிரசுரித்திருப்பதுடன் தலையங்கமும் எழுதியிருக்கிறது. கவர்னர் ஜெனரல் முடிவுரையாகக் கூறிய பின்வரும் வார்த்தைகளையும் அது குறிப்பிட்டிருக்கிறது: "தாகூர், சிருஷ்டிக்கும் கற்பனைத்திறன் வாய்ந்த தேசீய வாழ்க்கையின் உருவாகவே திகழ்கிருர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த மற்ற பாகங்களைக் காட்டிலும் இந்தியாவே, நாகரிகத்திலும், உயர்ந்த வாழ்க்கைத் தத்துவத்தை எட்டும் முயற்சிகளிலும் வளர்ச்சி யடைந்திருக்கிறது. இந்தியாவுக்கும் தென்னுப்பிரிக்காவுக்கும் இடையே ஏற்பட்டுள்ள தகராறைத் தீர்ப்பதில் ஆண்ட்ரூஸின் பிரசங்கம் மிகவும் உதவியாக இருக்கும் என்பதே எனது நம்பிக்கையாகும். இரு நாடுகளிடையும்

நல்லெண்ணம் ஏற்படுவதற்காக ஆண்ட்ரூஸ் தென்னுப்பிரிக்காவில் செய்துவரும் முயற்சிக்காக நான் அவருக்கு மனப்பூர்வமாக நன்றி செலுத்துகிறேன்.''

**காந்தி**

# 71

(தந்தி)

கேப் டவுன்,
*பிப்ரவரி 24, 1914*

ரவரண்ட் ஆண்ட்ரூஸ் சனிக்கிழமை இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். புறப்படுமுன் கிறிஸ்தவாலய சபைக் கூட்டம் ஒன்றில் அவர் பேசினர். அக்கூட்டத்திற்கு வந்து பேச வேண்டுமென எனக்கும் அழைப்பு அனுப்பியிருந்தார்கள். 'தாகூரும், அவரது உபதேசமும்' என்பதுபற்றி பல்கலைக் கழக மாணவர்கள் கூட்டத்திலும் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் பேசினர். கூட்டத்திற்கு உப அத்தியட்சகர் தலைமை வகித்தார். இங்கு நடந்த பொதுக்கூட்டம் ஒன்றில் இந்திய சமூகத்தினர் ஆண்ட்ரூஸுக்கு விடைகொடுத்து உபசாரம் செய்தனர். அக்கூட்டத்திற்குப் பல ஆங்கிலேயர்களும் வந்திருந்தனர். ஆண்ட்ரூஸின் முயற்சியால் பொதுவாக மிகவும் சாதகமான ஒரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீ ஆண்ட்ரூஸும், ஸ்ரீ பியர்சனும் இங்கே தூது வந்ததற்காக இந்தியர்கள் அவர்களுக்கு ஆழ்ந்த நன்றி செலுத்துகிறார்கள். மந்திரிகள் உள்படப் பல ஐரோப்பியர்களும், அவர்களுடைய விஜயத்தினல் ஏற்பட்டுள்ள பலனைக் குறித்துத் தங்களுடைய மனப்பூர்வமான மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ ஆண்ட்ரூஸ் எல்லா இடங்களிலும் அன்பும் அனுதாபமும் ஏற்படும்படி செய்ததுடன், விரைவில் சமரசம் ஏற்படுவதற்கும் பேருதவி புரிந்துள்ளார்.

**காந்தி**

# 72

கேப் டவுன்,
*பிப்ரவரி 27, 1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

நான் கேப் டவுனில் தற்காலிகமாக இருந்துகொண்டு நிகழ்ச்சிகளைக் கவனித்துவருகிறேன். போராட்டத்தைப்பற்றிய செய்திகளை உங்களிடம் வற்புறுத்திக் கூற நான் விரும்பவில்லை. எனவே நான் எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு சுருக்கமாக எழுதுகிறேன்.

ஸ்ரீ ஆண்ட்ரூஸும் ஸ்ரீ பியர்சனும் உண்மையிலேயே நல்ல மனிதர்கள். நாங்கள் எல்லோரும் அவர்களை மிகவும் நேசிக்கிறோம். ஆனால் சர் பெஞ்சமினைப் பொறுத்த மட்டில் எங்களுக்கு மிகவும் ஏமாற்றமே ஏற்பட்டிருக்கிறது. அவர் யாதொரு நன்மையும் செய்யவில்லை. அவர் மிகுந்த தீங்கும் செய்யலாம். அவர் உறுதி யற்றவர், அந்தரங்க சுத்தி இல்லாதவர். தெரிந்தோ, தெரியா மலோ அவர் எங்களிடையே பிளவை உண்டு பண்ணிவருகிறார் என்பதில் சந்தேகமில்லை. அவரைப் பற்றி ஸ்ரீ ஆண்ட்ரூஸ் உங்களுக்கு விவரமாகக் கூறுவார். சர் பெஞ்சமினைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தை உங்களிடம் கூறவேண்டுமென்று நினைத்தே இதை எழுதினேன்.

மார்ச் மாதம் சமரசம் ஏற்பட்டுவிட்டால், ஏப்ரலில் நான் இந்தியாவுக்குப் புறப்பட உத்தேசித்திருக்கிறேன். பெண்களும் குழந்தைகளுமாக என்னுடன் சுமார் 20 பேர் வருவார்கள். அவர்கள் என்னுடனேயே தங்கியிருப்பார்கள். புனாவிலுள்ள இந்திய ஊழியர் சங்கத்தில் நான் வசிக்கவேண்டுமென இன்னும் நீங்கள் விரும்புகிறீர்களா என்பது எனக்குத் தெரியாது. நான் என் குடும்பத்தினரைப் பார்த்துவிட்டு வந்த பின், உடனடியாக அவ்விதமே செய்யத் தயாராக இருக்கிறேன். என்னுடன் வசிப்போரின் எண்ணிக்கை மேலே குறிப்பிட்டிருப்பதைக் காட்டிலும் அதிகமாகலாம். ஏனெனில், என்னுடைய வாழ்க்கை யிலும் தொண்டிலும் பங்கு எடுத்துக் கொள்ள என் குடும்பத்தைச் சேர்ந்த சிலரும் விரும்பலாம். சங்கத்தின் ஜாகையில் என்னை வைத்துக் கொள்ளக் கடமைப்பட்டிருப்பதாகத் தயவு செய்து தாங்கள் கருத வேண்டாம். நான் முற்றிலும் உங்கள் கையில் இருக்கிறேன். உங்கள் காலடியில் உட்கார்ந்து நான் கற்றுக் கொள்ளவும், அவசியமான அனுபவும் பெறவும் விரும்பு கிறேன். உங்களுடைய மேற்பார்வையில் நான் தங்கியிருந்தாலும் இராவிட்டாலும், நான் இந்தியாவுக்கு வந்த பின் ஒரு வருட காலத்திற்கு மௌனமாக இருக்கவேண்டும் என்ற ஒப்பந்தத்தை அணுவளவும் வழுவின்றி நிறைவேற்றுவேன். எனினும் அந்த ஒப்பந்தத்தில் தென்னாப்பிரிக்கா பிரச்னை சேர்க்கப்படவில்லை என்றே அறிகிறேன். மேலும் நாம் ஒரே விதமான அபிப்பிராயம் கொண்டுள்ள எத்திட்டத்தையொட்டியும் உங்களுடைய விருப்பத் திற்கிணங்க நான் அந்த ஒப்பந்தத்தை மீறலாம்.

தற்போது எனக்குள்ள ஆசையை நீங்கள் அறிவீர்கள். உங்கள் பக்கத்தில் இருந்துகொண்டு நோயுற்ற உங்களுக்குப் பணிவிடை செய்வதும், தொண்டு செய்வதுமே எனது ஆர்வ மாகும். நான் நேசிக்கும், எனது குருவாகக் கருதும் யாருக்காவது கீழ்ப்படிந்து உண்மையான கட்டுதிட்டத்திற்கு உட்படவே நான் விரும்புகிறேன். தென்னாப்பிரிக்காவில் நான் தங்களுக்கு நல்ல காரியதரிசியாக இல்லை என்பதை அறிவேன். ஆனால் என்னை இப்போது தாங்கள் அங்கீகரித்தால், தாய் நாட்டில் நல்ல காரிய தரிசியாக இருப்பேன் என்று நம்புகிறேன்.

இடம் மாறுதல் காரணமாகவும், ஐரோப்பாவிலுள்ள அமைதியான சூழ்நிலை காரணமாகவும் உங்களுடைய ஆரோக்கியம் அபிவிருத்தி அடையுமாக.

இந்தக் கடிதம் மார்ச் மாத மத்தியில் உங்கள் கையில் இருக்கும். நான் எங்கு செல்ல வேண்டும் என்பதுபற்றி என்னிடம் ஏதாவது கூறவேண்டியது அவசியமென்று தாங்கள் நினைத்தால், நீங்கள் எனக்குத் தந்தி கொடுப்பீர்கள் என்பது நிச்சயம். நீங்கள் திரும்பிவருவதற்கு முன் என்னைப் புனாவுக்குச் செல்லும்படி கூறமாட்டீர்கள் என்றே நினைக்கிறேன். நீங்கள் அவ்விதம் கூறினால், நான் நிச்சயமாக அங்கு செல்லுவேன்.

ஏப்ரலில் இந்தியாவுக்குச் செல்லுவது எனக்குச் சாத்தியமாக இருக்குமாயின், எங்களுடைய பிரயாணத்திற்காக நீங்கள் அனுப்பிய தொகையை உபயோகித்துக் கொள்ள நான் உத்தேசித்திருக்கிறேன். நாங்கள் எல்லோரும் 'டெக்'கில்தான் பிரயாணம் செய்வோம். என்னிடம் சொந்தமாகப் பணம் எதுவும் இல்லை. இப்பாது போனிக்ஸ் பணம் கொடுப்பதும் முடியாத காரியம். அது முற்றிலும் வறண்டுபோய்விட்டது.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 73

போனிக்ஸ், நேட்டால்,

*ஏப்ரல் 1, 1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

உங்களுடைய இரண்டு தந்திகளும் கிடைத்தன. கடைசித் தந்திக்கு இப்போது நான் பதில் எழுதுகிறேன்.

ஒப்பந்தம் ஏற்படும்வரையில் ஸ்ரீமதி காந்தி உயிருடன் இருப்பாரா என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அவள் படுத்த படுக்கையாக இருக்கிறாள். அவள் பக்கத்தில் இருந்து கொண்டே இதை நான் எழுதுகிறேன். நான் அவளுக்கு டாக்டராகவும், நர்ஸாகவும், மற்றும் எல்லாப் பணிவிடைகளும் செய்பவனாகவும் இருக்கவேண்டியது அவசியமாகியிருக்கிறது. என்னுடைய சகோதரரின் மரணம் காரணமாக ஐந்து விதவைகளையும், அவர்களுடைய குழந்தைகளையும் முற்றிலும் பராமரிக்கும் பொறுப்பு எனக்கு ஏற்பட்டிருக்கிறது. மற்றவர்களுக்கு ஆகும் செலவுகளை இப்போது டாக்டர் மேத்தா கொடுத்துவருகிறார். இத்துடன் விதவையான என் சகோதரருடைய மனைவியின் ஜீவனச் செலவையும் அவர் ஏற்றுக்கொள்வார் என்பதில் எனக்கு ஐயமில்லை. எனினும் அவளும் மற்றவர்களும் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரமாக என்னுடன் வந்து வசிக்கவே ஆர்வ

முடையவர்களாக இருக்கிறார்கள். இது முற்றிலும் இயல்புதான். எனவே மிகவும் அவசியம் என்று நீங்கள் கருதினாலொழிய நான் லண்டன் செல்லுவதற்கு விருப்பமற்றவனாகவே இருப்பேன். அவசியம் என்று நீங்கள் கருதினால் ஸ்ரீமதி காந்தி இறந்தாலும் சரி, அல்லது குறைந்தபட்சம் இரண்டு மாதங்களுக்காவது அவளை விட்டுவிட்டு நான் புறப்படுவதற்கு இடம் கொடுக்கும் வகையில் அவள் குணமடைந்தாலும் சரி, நிச்சயமாக லண்டனுக்கு வருகிறேன்.

நான் ஏற்கனவே உங்களுக்கு அறிவித்திருப்பதுபோல், 22-ஆம் தேதி யூனியன் பார்லிமெண்டுக் கூட்டம் மீண்டும் ஆரம்பமாகும் வரையில் இந்தியர் சம்பந்தமான சட்டம் விவாதத்திற்கு வராது.

நீங்கள் விஷியில்* இருப்பதால், உங்களுடைய உடல் நலனில் மிகவும் அபிவிருத்தி ஏற்பட்டிருக்குமென நம்புகிறேன்.

என்னையும் என்னுடைய எதிர்காலத்தையும் பற்றி கவலைப்பட வேண்டாம் என்று உங்களை நான் கேட்டுக் கொள்வதால் யாதொரு பலனுமில்லை என்பதை அறிவேன். இந்தியாவில் நான் எந்த இடத்தில் இருக்கும்படி நேர்ந்தாலும், உங்களுடன் நான் செய்துகொண்டுள்ள ஒப்பந்தத்தை நிறைவேற்றியே தீருவேன்; அதாவது இந்தியாவில் நான் வந்து இறங்கிய பிறகு ஒரு வருட காலத்திற்கு நான் உறுதி கூறியுள்ள எல்லா விஷயங்களையும் பற்றி மௌன விரதத்தை அனுசரித்து வருவேன். இந்த வாக்குறுதிக்கு தென்னாப்பிரிக்கா மாத்திரம் விலக்காகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 74

போனிக்ஸ், நேட்டால்,
*மே 6, 1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

உங்களுடைய தந்தியும், மிகவும் அன்பார்ந்த உங்கள் கடிதமும், டாக்டர் மேத்தாவின் கடிதமும் வந்து சேர்ந்தன.

---

* விஷி, பிரான்ஸில் உள்ள ஒரு சிறிய நகரமாகும். ஆரோக்கியத்தைக் கொடுக்கக்கூடிய சுரங்க ஊற்றுக்கள் அங்கே உள்ளன. இரண்டாவது உலக மகாயுத்தத்தில் பிரான்ஸை ஜெர்மனி ஆக்கிரமித்துக் கொண்டபோது, மார்ஷல் பிடெயின் சர்க்கார் விஷியையே தலைநகராகக் கொண்டிருந்தனர்.

உங்களுக்குப் பலன் அளிக்கக்கூடியவகையில் தொண்டு புரிய நான் சக்தியற்றவனாக இருப்பினும், நீங்கள் நோயுற்றிருக்கும் போது உங்கள் பக்கத்திலிருக்க நான் எவ்வளவு ஆர்வமுடையவனாக இருக்கிறேன் தெரியுமா! உங்கள் தந்தி எனக்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது. ஸ்ரீமதி காந்தி இப்போது பெரிதும் குணமடைந்திருக்கிறாள். அவளது உடல் நலம் தொடர்ந்து முன்னேற்றம் அடைந்து வருமாயின், ஒரு மாத காலத்தில் அநேகமாக முன்போல் அவளது ஆரோக்கிய நிலை சீராகிவிடும். அவ்விதமாயின், நான் அவளுடன் லண்டனுக்கு வர முடியும். அங்கு உங்களுடன் கலந்து ஆலோசித்த பின், நாங்கள் இருவரும் நேராக இந்தியாவுக்குப் புறப்பட்டுச் செல்லலாம். நாங்கள் அங்கிருந்து புறப்பட்ட பிறகு எங்கள் கோஷ்டியைச் சேர்ந்த மற்றவர்கள் இங்கிருந்து புறப்படலாம். இவ்விதம் செய்தால், அதிக காலம் வீண்போகாமல் நான் இந்தியாவுக்குப் போய்ச் சேர முடியும். எனவே நான் வரலாமா என்பதற்குத் தயவு செய்து தந்தி கொடுங்கள். உங்களுடைய கடிதத்தையும், டாக்டர் மேத்தாவின் கடிதத்தையும் பார்க்கும் போது, நான் அங்கு வர மிகவும் விரும்புகிறேன். நான் வருவதற்கு நீங்கள் அனுமதிக்காவிடில், அது எனக்கு ஓர் ஏமாற்றமாகவே இருக்கும். எனக்கு முன் நீங்கள் இந்தியாவுக்குச் செல்ல முற்பட்டாலொழிய, அங்கு நான் வர உங்களுடைய தந்தி எனக்கு அதிகாரம் அளிப்பதாக இருக்குமென நம்புகிறேன்.

இங்கு நகல் மசோதா இன்னும் வெளியாகவில்லை. அது ஜூன் மாதம் முடிவதற்குள் வெளியாகலாம். எனவே அப்போதுதான் நான் இங்கிருந்து புறப்படுவது சாத்தியமாகும். ஒரு வேளை ஓர் இறுதியான ஒப்பந்தம் ஏற்படாமற்போனாலும் போகலாம். அவ்விதம் ஏற்படாவிடில், போராட்டம் மீண்டும் ஆரம்பமாகும். பின்னர் நான் இந்தியாவுக்குச் செல்லத் துணியமாட்டேன். எத்தகைய நிலைமைக்கும் நான் முற்றிலும் தயாராக இருந்து வருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 75

கேப் டவுன்,
ஜூன் 5, *1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

உங்கள் தந்திக்காக நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். ஸ்ரீமதி காந்தி இப்போது மிகவும் குணமடைந்திருக்கிறாள் என்றாலும் இன்னும் பலவீனமாகவே இருக்கிறாள். அவள் வந்தால் நான் அவளை அழைத்துவருகிறேன். ஸ்ரீ காலென்பாக்கும் என்

னுடன் வரலாம். அவர் வருவதாயின், அவரைச் சேர்ந்தவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு அவர் என்னுடன் வருவார். அங்கு உங்களுக்குப் பணிவிடை செய்ய நீங்கள் என்னை அனுமதிக்காவிடில், உங்களுடன் கலந்து ஆலோசித்த உடனேயே நான் இந்தியாவுக்குப் புறப்பட விரும்புகிறேன்.

உங்களுடைய ஆரோக்கிய நிலைபற்றி எனக்கு எதுவும் தெரியாததலின், தங்களுக்கு நீண்ட கடிதம் எழுதவேண்டுமென்ற ஆர்வம் இருப்பினும் அவ்விதம் நான் செய்யவில்லை. எனினும் சொராப்ஜிக்கு நான் எழுதியிருக்கிறேன். நீங்கள் குணமடைந்திருந்தால், நான் அவருக்கு எழுதியிருப்பதன் சம்பந்தமாக உங்களைப் பார்க்கும்படி அவரைக் கேட்டிருக்கிறேன். அவ்விஷயமாக என்ன செய்ய வேண்டும் என்பதை அவர் உங்களிடமிருந்து கேட்டுக் கொள்வார்.

இந்தியர் பிரச்னையையொட்டிய மசோதா முதல் தடவையாக நிறைவேறியிருக்கிறது. அது மிகவும் திருப்தியளிப்பதாக இருக்கிறது. மற்ற அம்சங்களையொட்டி நான் ஜெனரல் ஸ்மட்ஸை மீண்டும் பேட்டி காண உத்தேசித்திருக்கிறேன். எனவே போராட்டம் இறுதியாக நின்றுவிடுவதற்கான வாய்ப்பு இருக்கிறது. அவ்விதம் நின்றுவிட்டால், ஜுலை மாதம் மத்தியிலோ, சாத்தியமாயின், அதற்கும் முன்போ நான் லண்டனுக்குப் புறப்படலாம்.

இந்தக் கடிதம் கிடைத்ததும் உங்களுடைய உடல் நலனைப் பற்றித் தயவு செய்து தந்தி கொடுக்கும்படி உங்களை நான் கேட்கலாமா?

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 76

*கிம்பர்லி ரயிலில்,*

*ஜுலை 1, 1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

எல்லாம் சமரசமாக முடிந்திருக்கிறது என்று நேற்று நான் உங்களுக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். அதன் சம்பந்தமான கடிதப் போக்குவரத்தையோ அல்லது வேறு தஸ்தாவேஜுகளையோ உங்களுக்கு அனுப்பித் தொந்தரவு கொடுக்க நான் விரும்பவில்லை.

18-ஆம் தேதி இங்கிருந்து புறப்பட நான் வெகு தீவிரமாக முயற்சி செய்து வருகிறேன். உங்களைச் சந்திக்க வேண்டும் என்பதும், உங்களுடைய கட்டளைகளைப் பெற்று உடனே இந்தி

யாவுக்குப் புறப்பட வேண்டும் என்பதும்தான் என்னுடைய ஒரே ஆர்வமாகும். நான் 18-ஆம் தேதி புறப்பட்டால் அதற்குப் பின்பும், 25-ஆம் தேதி புறப்பட்டால் அதற்கு முன்பும் இந்தக் கடிதம் உங்கள் கைக்குக் கிடைக்கும். நான் எப்போது புறப்படுகிறேன் என்பதுபற்றி அடுத்த வாரம் தந்தி கொடுக்கிறேன். எனக்கு ஏதாவது கட்டளைகள் விடுக்க வேண்டுமாயின், நீங்கள் அன்பு கூர்ந்து கேப் டவுனுக்காவது அல்லது மடீராவுக்காவது தந்தி கொடுங்கள்.

உங்கள் உடல் நிலை அபிவிருத்தி அடைந்து வருகிறதென நம்புகிறேன்.

ஸ்ரீமதி காந்தியும், ஸ்ரீ காலென்பாக்கும் என்னுடன் வருகிறார்கள்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 77

(தந்தி)

ஜோகன்னஸ்பர்க்,

*ஜுலை 6, 1914*

ஸ்ரீ கோகலே,

லண்டன்.

இறுதியாக சமரசம்* ஏற்பட்டிருப்பதைக் குறித்து இந்திய சமூகத்தைச் சேர்ந்த எல்லோரும் தங்களுக்கு மனப்பூர்வமான நன்றியையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறார்கள். உங்களுடைய தியாகமும் தொண்டும் இராவிடில், இவ்வளவு சீக்கிரமாக சமரசம் ஏற்பட்டிராது. பேருதவி புரிந்ததற்காகவும், சமரசம் ஏற்பட தைரியமாக வழிவகை செய்ததற்காகவும் வைஸ்ராய் லார்டு ஹார்டிஞ்சுக்கும் நாங்கள் தாழ்மையுடன் நன்றி செலுத்துகிறோம். இதை அவருக்குத் தந்தி மூலம் அறிவிக்கும்படி எங்களுடைய பிரதிநிதியான உங்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

**காந்தி**

---

* காந்திஜியின் தலைமையில் சாத்துவிக எதிர்ப்பாளர்கள் எட்டு ஆண்டுகள்வரையில் இடைவிடாது போராடியதன் பலனாகவே நீதியை அடிப்படையாகக் கொண்ட மேற்கண்ட சமரசம் ஏற்படுவது சாத்தியமாயிற்று.

## 78

லண்டன்,
நவம்பர் *6, 1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

ஸ்ரீ காலென்பாக்கிற்குத் தாங்கள் எழுதிய கடிதத்தை நான் பார்த்தேன். படுத்த படுக்கையாக இருந்த நான் சென்ற ஐந்து நாட்களாகத்தான் நடமாடிக் கொண்டு, இழந்த பலத்தை மீண்டும் பெற்று வருகிறேன். தயவு செய்து என்னைப்பற்றிக் கவலைப் படாதீர்கள்.

கர்னல் பேக்கருடன் ஏற்பட்ட சச்சரவு சமரசமாகிவிட்ட தென்பதை அறிய நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள். எந்த இரண்டு அம்சங்களுக்காக நாங்கள் போராடி வந்தோமோ அவற்றை அவர் ஒப்புக்கொண்டுள்ளார்.

கடற்பிரயாணம் உங்கள் உடலுக்கு நலன் அளித்திருக்கிறது என்றும், நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்கள் என்றும் நம்பு கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 79

லண்டன்,
நவம்பர் *26, 1914*

அன்புள்ள ஸ்ரீ கோகலே,

உங்கள் தந்தி கிடைத்தது. அதற்கு நான் பதில் தந்தி கொடுத்திருக்கிறேன். எனக்கு ஏற்பட்டுள்ள நோயைக் கட்டுப் படுத்த என்னால் முடியவில்லை, டாக்டர்களாலும் முடியவில்லை. அவர்கள் கூறும் நிபந்தனைகளை நான் சிறிதும் வழுவின்றிப் பின் பற்றினால், எனது நோயைக் கட்டுப்படுத்த முடியுமென்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் நான் அவ்விதம் செய்ய இயலா தவனாக இருக்கிறேன். எப்படியாவது உயிர்வாழ வேண்டுமென நான் விரும்பவில்லை. சைவ உணவை ஆதரிக்கும் டாக்டர் அலின்சன், இத்தகைய நிலையில் எனது சொந்த சிகிச்சையே சிறந்ததென்று கருதுகிறார். டாக்டர் மேத்தா மிகுந்த அக்கறை யுடன் என்னைக் கவனித்து வருகிறார். என்னால் சாத்தியமான வரையில் அவர் கூறுகிறபடி கேட்டு வருகிறேன். சென்ற வாரம் எனது நிலை மறுபடியும் மோசமாகியது. நான் இன்னும் படுத்த படுக்கையில் தான் இருக்கிறேன். என்றாலும் முன்னரை விட இப்போது நான் குணமடைந்து வருவதாகவே தோன்றுகிறது.

தயவு செய்து என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நான் குணமடையாவிடில், இந்தியாவுக்கு வந்துவிட முயற்சிக்கிறேன்.

நீங்கள் அனுப்பிய தந்தியில் உங்களுடைய உடல் நலனைப் பற்றி ஏதாவது கூறியிருக்கக் கூடாதா என்பதே எங்கள் எல்லோருடைய ஏக்கமுமாகும். நீங்கள் மிகவும் குணமடைந்திருக் கிறீர்கள் என்றே நம்புகிறேன். எப்படியாயினும், நீங்கள் ஆர்வத்துடன் எதிர்பார்த்துவந்த சூழ்நிலையிலேயே இப்போது இருந்து வருகிறீர்கள்.*

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

---

*கடைசியாக கோகலேய்க்கு காந்திஜி எழுதிய கடிதம் இதுதான் என்று கூறலாம். கோகலேயின் மரணத்தைப் பற்றி சாந்திநிகேதனிலும், புனாவிலும் நடந்த அனுதாபக் கூட்டத்தில் காந்திஜி நிகழ்த்திய உருக்கமான பிரசங்கங் கள் பின்சேர்க்கைப் பகுதியில் வெளியாகியுள்ளன.



பால கங்காதர திலகர்

பகுதி மூன்று

# லோகமான்ய திலகர்

காந்திஜி இந்திய அரசியலில் பிரவேசிப்ப தற்கு முன்பே, இந்திய மக்களிடையே தேசபக்தி பொங்கி எழும்படி செய்த பெருமை லோகமான்ய பாலகங்காதர திலகருக்கே (1853-1919) உரியது. திலகர் அரசியல் தலைவராக மாத்திரமல்ல, இலக் கிய மேதையாகவும், சரித்திரப் பேராசிரியராகவும், பிரபல பத்திரிகாசிரியராகவும் திகழ்ந்தார். அவர் எழுதிய பல அரிய நூல்களுள் 'கீதா ரகஸ்யம்' இன்றும் சிறந்து விளங்குகிறது. அக்காலத்தில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டங்களில், இங்கிலாந்து மன்னரை வாழ்த்தும் பிரிட்டிஷ் தேசீய கீதம் பாடுவது வழக்கமாக இருந்தது. அந்த வழக்கத்தை முதன் முதலாகக் கண்டித்து, அதைக் கைவிடும்படி செய்தவர் திலகர் தான்.

திலகர், 'கேசரி' என்ற பிரபல பத்திரிகை யின் ஆசிரியராக இருந்தபோது பிரிட்டிஷ் ஆட்சி யைக் கண்டித்து எழுதியதற்காக பிரிட்டிஷ் அதி கார வர்க்கம் அவருக்கு நான்கு மாதம் சிறைத் தண்டனை விதித்தது. பின்னர் இளைஞர்களைத் தூண்டி விட்டார் என்பதற்காக அவருக்கு அதி காரிகள் பதினெட்டு மாதம் சிறைத் தண்டனை விதித்தனர். அதன்பின், வங்காளத்தில் பிரிட் டிஷாரை எதிர்த்து பலாத்காரக் குற்றம் புரியும்படி இளைஞர்களைத் தூண்டிவிட்டார் என்று அவ ருக்கு ஆறு வருடங்கள் சிறைத்தண்டனை விதித்து அவரை நாடு கடத்தினர்.*

---

* லோகமான்ய திலகருக்கு விதிக்கப்பட்ட கொடுமையான தண்டனை யை வன்மையாகக் கண்டித்து 'இந்தியன் ஒபினியனி'ல் காந்திஜி எழுதிய தலையங்கத்தைப் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

1879-ம் ஆண்டில் திலகர் வக்கீல் தொழிலை மேற்கொள்ள முற்பட்டார். ஆனால் பிரிட்டிஷ் ஆட்சியின் ஊழல்கள் காரணமாக அவர் அரசியல் துறையில் பிரவேசிக்காமல் இருக்க முடியவில்லை.

1896-ல் திலகரும் காந்திஜியும் முதன் முதலாகச் சந்தித்தனர். அந்த ஆண்டு நவம்பர் மாதம் புனவில் நடந்த பொதுக்கூட்டம் ஒன்றில் தென்னுப்பிரிக்கா இந்தியர்களின் துன்பங்களைப் பற்றி காந்திஜி பேசினர். அவர் பேசிய பின், தென்னுப்பிரிக்காவில் பல இன்னல்களுக்கும் உள்ளாகி அவதிப்பட்டு வரும் இந்தியர்களுக்குத் தங்களுடைய அனுதாபத்தைத் தெரிவித்தும், அவ் விஷயமாக இந்திய அரசாங்கத்தினிடம் விண்ணப்பம் செய்துகொள்வதற்காக டாக்டர் பண்டர்கார், லோகமான்ய திலகர், பேராசிரியர் கோகலே ஆகிய மற்றும் ஆறு பிரமுகர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை நியமித்தும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. 1915 ஜனவரி மாதம் 13-ஆம் தேதி காந்திஜி தம்பதிகளை வரவேற்பதற்காக பம்பாயில் நடந்த கூட்டம் ஒன்றில் திலகர் பேசிய போது குறிப்பிட்டதாவது: "ஸ்ரீ காந்தியையும் ஸ்ரீமதி காந்தியையும் வரவேற்று அவர்களைக் கௌரவிப்பதன் மூலம் நாம் நமது கடமையையே செய்கிரேம். தொலைவிலுள்ள ஒரு நாட்டில் இந்தியாவின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக அவர்கள் போராடினர். அத்தகைய தியாக சீலர்களான ஆடவர்களையும் பெண்களையும் இந்தியா உருவாக்க வேண்டும்."

காந்திஜிக்கும் திலகருக்கும் அரசியலில் கருத்து வேற்றுமை இருப்பினும், காந்திஜி அக்காலத்தில் நடந்த பொதுக் கூட்டங்கள் பலவற்றிலும் திலகரின் தியாகத்தையும், தேசபக்தியையும் மேதையையும் போற்றிப் புகழ்ந்துள்ளார். ஆனல்

அவர்களுக்குள் நடந்த கடிதப் போக்குவரத்து சொற்பமேயாகும். காந்திஜி திலகருக்கு எழுதிய இரண்டு கடிதங்களும் அவர்களிடையே இருந்த கருத்து வேற்றுமையைக் காட்டுகின்றன :

## 1

அகமதாபாத்,
ஜூலை 27, 1915

அன்புள்ள ஸ்ரீ திலகர்,

உங்களுடைய கடிதம் கிடைத்தது. உங்களை நான் பேட்டி கண்டு பேசியதன் சம்பந்தமாக என் பெயரை உபயோகித்துக் கொள்ளும்படி நான் யாருக்கும் எத்தகைய அதிகாரமும் அளிக்க வில்லை. நீங்கள் குறிப்பிட்டுள்ள விவரங்களை நான் வாசித்தது கூட இல்லை. நமக்குள் நடந்த சம்பாஷணைகள் அந்தரங்க மானவை; அவை எப்போதும் அந்தரங்கமானவையாகவே இருக்க வேண்டும். நீங்கள் அனுப்பியுள்ள நகல் எனது பேட்டிக்கு நீதி செய்வதாக இல்லை. காங்கிரஸ் கட்சியின் சார்பிலோ அல்லது அதன் அதிகாரம் பெற்றோ உங்களுடன் பேசியதாக நான் ஒருபோதும் கூறவே இல்லை. ஒரு நண்பன் என்ற முறையிலும், உங்கள் மீதுள்ள மதிப்பு காரணமாகவும், எனது நண்பர்களுக்காகவும் உங்களிடம் வந்து பேசினேன். இவ்விஷயமாக காங்கிரஸ் கட்சியின் அபிப்பிராயம் என்ன என்பது எனக்குத் தெரியாது. தற்காலிகமான ஒரு யோசனையையே உங்களிடம் கூறினேன்.

பத்திரிகை விவாதத்தில் என்னை இழுக்க வேண்டாம் என்ற என் விருப்பத்திற்கு நீங்கள் மதிப்புக் கொடுப்பீர்களென நான் நம்புகிறேன். எனது பேட்டியை எவ்விதத்திலும் நீங்கள் பிரசுரிக்க மாட்டீர்கள் என்றும் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 2

ஆகஸ்டு 25, 1918

அன்புள்ள ஸ்ரீ திலகர்,

உங்கள் கடிதம் கிடைத்தது. உங்களுடைய அனுதாபத்திற்காக நான் நன்றியுள்ளவனாக இருக்கிறேன். என்னுடைய உடல் நலனைக் குறித்து நீங்கள் கவலைப்படாமல் எப்படி இருக்க முடியும்? கடவுள் அருளால் நான் இப்போது சௌக்கியமாக இருக்கிறேன்.

எனினும் இன்னும் சில நாட்கள் வரையில் படுக்கையை விட்டு என்னால் எழுந்திருக்க முடியாது. எனக்கு நோவு மிகவும் அதிகமாக இருந்தது. ஆனால் இப்போதுதான் அது குறைந்திருக்கிறது.

காங்கிரசுக்கோ அல்லது மிதவாதிகளின் மகாநாட்டிற்கோ நான் செல்ல உத்தேசிக்கவில்லை. எனது அபிப்பிராயங்கள் அவ்விரு சாராரின் அபிப்பிராயங்களுக்கும் வேறுபாடானவையாக இருக்கின்றன. அவற்றைப்பற்றி உங்களிடம் முன்பே நான் கூறியிருக்கிறேன். யுத்தத்திற்கு ஆள் சேர்க்கும் வேலையை நாம் எல்லோரும் மேற்கொண்டு லட்சக்கணக்கானவர்களைச் சேர்த்தோமாயின், இந்தியாவுக்கு நாம் மகத்தான தொண்டு செய்தவர்கள் ஆவோம். ஸ்ரீமதி பெசண்டும் நீங்களும் இந்தக் கருத்தை ஆதரிக்கவில்லை என்பதை நான் அறிவேன். இந்த வேலையை மிதவாதிகளும் மனப்பூர்வமாக மேற்கொள்ளமாட்டார்கள். இது ஒரு விஷயம். மற்றொன்று என்னவெனில், மாண்டேகு-செம்ஸ்போர்டு திட்டத்தை நாம் ஒப்புக்கொண்டு நமது விருப்பத்திற்கிணங்க அதில் செய்ய வேண்டிய அபிவிருத்திகளைத் தெளிவாக விளக்கிவிட வேண்டும். அந்த அபிவிருத்திகளைப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக்கொள்ளும்படி செய்வதற்காக, உயிர் போகும் வரையில் போராட வேண்டும். அதை மிதவாதிகள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பது தெளிவாகும். ஸ்ரீமதி பெசண்டும், நீங்களும் அதை அங்கீகரித்தால் கூட நான் விரும்பும் வழியில் நீங்கள் போராட மாட்டீர்கள் என்பது நிச்சயம். தாம் ஒரு சத்தியாக்கிரகி அல்ல என்று ஸ்ரீமதி பெசண்ட் பிரகடனம் செய்துள்ளார். சத்தியாக்கிரகம் பலவீனர்களின் ஆயுதம் என்று நீங்கள் கூறுகிறீர்கள். சங்கடமான இந்த நிலையில் அகப்பட்டுக்கொள்ள நான் விரும்பவில்லை. காங்கிரசில் உங்கள் இருவருக்கும் எதிராக ஒரு கிளர்ச்சியை நடத்திச் செல்ல நான் விரும்பவில்லை. எனது திட்டத்தில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. என்னுடைய ஆன்மிக ஒழுக்கம் குற்றம் குறையற்றதாக இருக்குமாயின், ஸ்ரீமதி பெசண்டும் நீங்களும் எனது திட்டத்தை ஒப்புக்கொள்வீர்கள் என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். என்னால் பொறுத்திருக்க முடியும்.

மிதவாதிகளும் அமிதவாதிகளும் சில சில்லறைக் கொள்கைகளைக் கைவிட்டுவிட்டு ஒன்று சேரலாம் என்பது எனக்கு மனவெறுப்பை உண்டாக்குகிறது. அவ்விரு சாராரும் தங்களுடைய நிலையை சர்க்காருக்கும் மக்களுக்கும் தெளிவாக எடுத்துக் கூறுவதால், யாதொரு அபாயமும் நேராது என்பதே எனது நம்பிக்கை. அமிதவாதிகளையும் மிதவாதிகளையும் ஒன்று சேர்க்கும் முயற்சியை நான் விரும்பவே இல்லை. இரு கட்சிகளும் சர்க்காரிடமும் மக்களிடமும் தங்கள் தங்களுடைய நிலையை தைரியமாக எடுத்துக் கூறுவதால், மிகுந்த நன்மையே உண்டாகும். நீங்கள் மேற்கொண்டுள்ள அலுவலில் கடவுள் உங்களுக்கு உதவி புரிவாராக.

தங்கள்,
மோகன்தாஸ்

பகுதி நான்கு

# பண்டித ஜவாஹர்லால் நேரு

1916-ம் ஆண்டிலிருந்து 1948-ல் காந்திஜி அமர நிலையை அடைந்த வரையில் அவருடன் இடையருத தொடர்பு கொண்டிருந்த பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு (1889-1964), அரசியல் பிரச்னைகள் பற்றியும், குடும்ப விஷயங்கள் பற்றியும் காந்திஜி எழுதிய அற்புதமான கடிதங்கள் இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. சில கடிதங்களிலிருந்து காந்திஜிக்கும் நேருஜிக்கும் அரசியல் பிரச்னைகளில் இருந்த தீவிரமான கருத்து வேற்றுமைகளும் வெளியாகின்றன. "லட்சியத்திற்காக அரசியல் தோழமையைத் தியாகம் செய்யத்தான் வேண்டும் என்றும், எனினும் அதனல் சொந்த நட்புக்கு எவ்வித ஊறுபாடும் ஏற்படுவதற்கில்லை என்றும்" காந்திஜி தமது கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிருர். "நாம் நீண்ட காலமாக ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகியிருக்கிரேம். நமக்குள் எவ்வளவு கடுமையான அரசியல் வேற்றுமை இருப்பினும், நாம் தொடர்ந்து ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே இருப்போம்" என்று காந்திஜி மற்ருெரு கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிருர். சிற்சில சமயங்களில் நேருஜியின் அரசியல் நிலையை வன்மையாகக் கண்டிக்கவும் காந்திஜி தயங்கவில்லை. அக்கடிதங்களை நேருஜியே வெளியிட்டிருப்பதிலிருந்து, அவரது பெருந்தன்மையும், விருப்பு வெறுப்பற்ற சீரிய குணமும் ஒளிவீசித் திகழ்கின்றன. 'பழைய கடிதங்களின் ஒரு தொகுப்பு' என்ற தலைப்பில் நேருஜி வெளியிட்டுள்ள நூலி

லிருந்து, பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தியின் அனுமதி பெற்றுப் பின் கண்ட கடிதங்கள் பிரசுரிக்கப்பட்டுள்ளன :

## 1

(இந்தியாவில் 1921 டிசம்பர் மாதம் மக்கள் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து திரள் திரளாக சிறைக்குச் செல்லும் படலம் முதன் முதலாக ஆரம்பமாயிற்று. பெயரளவில் சட்டத்தை மீறியதற்காக பதினாயிரக்கணக்கானவர்கள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டனர். என் தந்தை உட்பட எங்களில் பெரும்பாலோரும் சிறையில் இருந்தபோது, இயக்கத்தை நிறுத்திவிடும்படி மகாத்மா காந்தி திடீரென்று கட்டளையிட்டுள்ளார் என்று நாங்கள் கேள்விப்பட்டோம். ஐக்கிய மாகாணத்தில் கோரக்பூர் ஜில்லாவைச் சேர்ந்த சௌரி சௌராவில் ஆத்திரம் கொண்ட விவசாயிகள் அடங்கிய ஒரு கூட்டத்தினர் போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கி அதற்குத் தீ வைத்தனர்; அங்கிருந்த ஒரு சில போலீஸ்காரர்களையும் கொன்றுவிட்டார்கள். மகாத்மா காந்தியின் கட்டளைக்கு அச்சம்பவம்தான் காரணம் என்று கூறப்பட்டது. ஒரு கிராமத்தைச் சேர்ந்த சிலர் அடங்கிய ஒரு கோஷ்டியினர் தவறாக நடந்துகொண்டதற்காக, ஒரு மகத்தான இயக்கத்தையே திடீரென்று வாபஸ் செய்ததைக் குறித்து சிறையிலிருந்த நாங்கள் எல்லோரும் மிகவும் மனவேதனை அடைந்தோம். மகாத்மா காந்தி அப்போது சுதந்திரமாகவே இருந்தார். அதாவது அவர் சிறையில் இல்லை. எனவே அவர் செய்த தீர்மானத்தைக் குறித்து எங்களுடைய மனவேதனையை அவர் தெரிந்துகொள்ளும்படி செய்தோம். அப்போதுதான் காந்திஜி பின்கண்ட கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டுவந்த என் சகோதரி (விஜயலக்ஷ்மி பண்டிட்) ஒரு பேட்டியின் போது சிறையில் உள்ள எங்களுக்கு அதை வாசித்துக் காட்டினார் :)*

பார்டோலி,
பிப்ரவரி 19, 1922

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

காரியக் கமிட்டியின் தீர்மானங்களைக் குறித்து, நீங்கள் எல்லோரும் திடுக்கிட்டு மனம் உடைந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிகிறேன். நான் உங்களுக்காக அனுதாபப் படுகிறேன். உங்களுடைய தந்தைக்காக என் இருதயம் உருகுகிறது. அவர் எவ்வளவு மனவேதனையை அனுபவித்திருக்க வேண்டும் என்பதை

* இப்பகுதியில் காந்திஜியின் கடிதங்களுக்கு முன் அடைப்புக் குறிகளுக்குள் இருப்பது, அக் கடிதங்கள் எந்தச் சந்தர்ப்பத்தில் எழுதப்பட்டவை என்பது பற்றி நேருஜியின் விளக்கமாகும்.

நான் சித்திரித்துக் கொள்ள முடியும். இந்தக் கடிதம் அனுவசிய மானதென்றே கருதுகிறேன். ஏனெனில், முதலில் ஏற்பட்ட அதிர்ச்சியைப் பின் தொடர்ந்து நீங்கள் எல்லோரும் உண்மை நிலையை அறிந்து கொண்டிருக்க வேண்டும் என்பதை நான் அறி வேன். இளைஞனை தேவதாஸின் மதியீனமான காரியங் களைக் குறித்து நாம் மனத்தை அலட்டிக்கொள்ளக் கூடாது. பாவம், திடீரென்று நிகழ்ந்த சம்பவங்கள் அவனை நிலைகுலையும்படி செய்திருக்கின்றன. எனினும், ஒத்துழையாமை இயக்கத்தில் அனுதாபம் கொண்ட ஜனங்கள் கோபாவேசம் கொண்டு கான்ஸ்டேபிள்களைக் காட்டுமிராண்டித் தனமாகக் கொலை செய்துவிட்டார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. அந்த ஜனக்கூட்டம் அரசியல் நோக்கம் உள்ள கூட்டம் என்ப தையும் யாரும் மறுக்க முடியாது. எனவே, அத்தகைய தெளி வான எச்சரிக்கையைப் பொருட்படுத்தாமல் விட்டுவிட்டால், அது கடுமையான குற்றமாக முடியும்.

பல சம்பவங்களையும் கஷ்டப்பட்டுச் சகித்துவந்த எனக்கு, இனி சகிக்க முடியாது என்ற நிலையை ஏற்படுத்தியது சௌரி சௌரா நிகழ்ச்சிதான் என்பதை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டும். வைஸ்ராய்க்கு நான் கடிதம் எழுதியபோதே என் மனத்தில் அவநம்பிக்கை இருக்கத்தான் செய்தது என்பதை, அக் கடிதத்தைப் படித்தவர்கள் தெளிவாக அறிந்து கொண்டிருக்க வேண்டும். சென்னை நிகழ்ச்சிகள் எனக்கு மிகவும் கலக்கத்தைக் கொடுத்தன. ஆனால், அந்த எச்சரிக்கைக் குரலை நான் அமுக்கி விட்டேன். கோரக்பூர் சம்பவத்திற்கு முந்தியே, கல்கத்தா, அலகாபாத், பஞ்சாப் முதலியவிடங்களைச் சேர்ந்த ஹிந்துக்களிட மிருந்தும் முஸ்லிம்களிடமிருந்தும் எனக்குக் கடிதங்கள் வந்தன. தவறு முற்றிலும் அரசாங்கத்தினுடையது அல்லவென்றும், நமது மக்கள் இறுமாப்புடன் எதிர்க்கவும் மிரட்டவும் தொடங்கியிருக் கிறார்கள் என்றும், அவர்களைச் சமாளிப்பது கஷ்டமாக இருக் கிறது என்றும், அவர்களுடைய நடத்தையும் சாத்துவிகமாக இல்லை என்றும் எனக்கு வந்த கடிதங்களில் குறிப்பிட்டிருக் கின்றன. பிரோஸ்பூர் ஜிர்க்கா சம்பவம் அரசாங்கத்தின் கௌர வத்திற்கு உகந்தது அல்லவென்றாலும், நாம் முற்றிலும் குற்றமற்ற வர்கள் என்றும் கூறிவிட முடியாது. பாரில்லியைக் குறித்து ஹக்கிம்ஜி புகார் கூறியுள்ளார். ஜஜ்ஜாரைப் பற்றியும் மோசமான புகார்கள் கிடைத்துள்ளன. ஷாஜஹான்பூரிலும் நகர மண்ட பத்தை ஆக்கிரமித்துக்கொள்ள பலாத்கார முயற்சி நடந்திருக் கிறது. தொண்டர் படைச் சிறுவர்கள் அடங்காப் பிடாரிகளாக இருக்கிறார்களென்றும், அவர்கள் ஓர் உயர்தரக் கல்வி சாலையில் மறியல் செய்துகொண்டு, இளைஞர்கள் கல்வி சாலைக்குச் செல்லு வதைத் தடுக்கிறார்கள் என்றும் கனூஜில் உள்ள காங்கிரஸ் காரிய தரிசியே தந்தி கொடுத்துள்ளார்.

கோரக்பூரில் சுமார் 36,000 தொண்டர்கள் சேர்த்துக் கொள் ளப்பட்டனர். அவர்களில் நூறு பேர்கூட காங்கிரஸ் பிரதிக்ஞை

விதிகளுக்குக் கட்டுப்படவில்லை. கல்கத்தாவில் முற்றிலும் சீர் குலைவு ஏற்பட்டிருக்கிறதென்றும், தொண்டர்கள் அகிம்சைப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளாததுடன், அந்நியத் துணிகளைக் கூட உடுத்திக் கொண்டுவருகிறார்கள் என்றும் ஜம்னாலால்ஜி கூறி யுள்ளார். என் வசமுள்ள இந்தச் செய்திகளைத் தவிர, தென் னிந்தியாவிலிருந்து இன்னும் அதிகச் செய்திகள் வந்தன. கடை சியில் சௌரி சௌரா செய்தி, துப்பாக்கி வெடிமருந்துக்குத் தீ வைக்கும் ஒரு சக்தி பொருந்திய தீக்குச்சியாக அமைந்தது. அவ் வளவுதான், ஜ்வாலையும் மூண்டது.

எனவே, இந்த இயக்கம் நிறுத்தப்படாவிடில், நாம் அகிம் சைப் போராட்டத்தை நடத்துபவர்களாகமாட்டோம்; ஒரு பலாத் காரப் போராட்டத்தையே நடத்துபவர்கள் ஆவோம். நாடெங்கும் அகிம்சை, ரோஜா அத்தரின் நறுமணத்தைப் போல் வியாபித்து வருகிறதென்பது உண்மையே. எனினும், ஹிம்சையின் துர்நாற் றமும் இன்னும் சக்தி வாய்ந்ததாகவே இருக்கிறது. அதை அலட் சியம் செய்வதோ அல்லது குறைவாக மதிப்பதோ புத்திசாலித் தனமாகாது. இவ்விதம் பின்வாங்கியதால், நமது லட்சியம் வளர்ச் சியே அடையும். நமது இயக்கம் நம்மையறியாமலேயே நேர் பாதையிலிருந்து விலகியிருக்கிறது. இப்போது நாம் திரும்பவும் சரியான நிலைக்கு வந்துள்ளோம். இனி நாம் நேராக மேற்கொண்டு செல்லக்கூடும். சம்பவங்களின் சாதக, பாதகங்களைத் தீர்மா னிக்கும் அனுகூலமான நிலையில் நான் இருக்கிறேன். ஆனால் நீங்கள் அத்தகைய நிலையில் இல்லை.

தென்னாப்பிரிக்காவில் நான் பெற்ற சொந்த அனுபவத்தை உங்களுக்குக் கூறட்டுமா? தென்னாப்பிரிக்கா சிறைகளில் நாங்கள் இருந்தபோது, எங்களுக்குப் பல்வேறு செய்திகளும் கிடைப்ப தற்கு ஏற்பாடு செய்திருந்தோம். அதுதான் சிறையில் எனது முதல் அனுபவமாகும். எனவே, இரண்டு அல்லது மூன்று நாட் கள்வரையில் 'துக்கடா' செய்திகளைக் கேட்க நான் மகிழ்ச்சி யடைந்தேன். ஆனால், அவ்விதம் சட்டவிரோதமாகப் பெறும் திருப் தியில் அக்கறை கொள்ளுவது முற்றிலும் உருப்படாத காரியம் என்பதை நான் உடனே உணர்ந்து கொண்டுவிட்டேன். உள்ளே யிருந்துகொண்டு நான் எதுவும் செய்ய முடியவில்லை. பலன் தரத் தக்க விதத்தில் நான் வெளியே செய்தியும் அனுப்ப முடியவில்லை. வீணாக நான் என் ஆன்மாவை அலட்டிக் கொண்டேன். சிறையில் இருந்துகொண்டு இயக்கத்தை நான் நடத்துவது அசாத்தியம் என்பதை உணர்ந்தேன். வெளியில் உள்ளவர்களைச் சந்தித்து அவர்களுடன் மனம்விட்டுப் பேசுவது சாத்தியமாகும் வரையில் நான் காத்திருந்தேன். நான் பேச்சளவில்தான் இயக்கத்தில் அக் கறை எடுத்துக் கொண்டேன். ஏனெனில், சிறையில் இருந்து கொண்டு எதையும் தீர்மானிக்க எனக்கு அதிகாரமோ, உரி மையோ இல்லையென்று தோன்றியது. இவ்விதம் எண்ணியது முற்றிலும் சரி என்பதைப் பின்னர் நான் தெரிந்துகொண்டேன். ஒவ்வொரு தடவையும் நான் சிறையிலிருந்து விடுதலை பெறும்

வரையில் கொண்டிருந்த எண்ணங்களை சிறையிலிருந்து வெளியே வந்த உடனேயும், நேரடியாகத் தகவல்களைத் தெரிந்துகொண்ட உடனேயும் மாற்றிக்கொள்ளும்படி நேர்ந்தது இன்னும் எனக்கு நினைவில் இருக்கிறது. எப்படியோ சிறையில் உள்ள சூழ்நிலை, முற்றிலும் தெளிவான மனத்துடன் எதையும் தீர்மானிக்க உங்களுக்கு இடம்கொடுப்பதில்லை. எனவே, வெளியுலகத்தை நீங்கள் முற்றிலும் மறந்துவிட வேண்டுமென்றே நான் விரும்புவேன். இது கடினமான காரியம் என்பதை நான் அறிவேன். எனினும், நீங்கள் ஏதாவது ஆழ்ந்த படிப்பில் ஈடுபட்டாலும், ஏதாவது தீவிரமான உடலுழைப்பு சம்பந்தமான அலுவல்களில் ஈடுபட்டாலும், வெளியுலகை மறந்துவிட முடியும். நீங்கள் என்ன செய்தாலும், ராட்டினத்தில் மாத்திரம் வெறுப்புக்கொண்டு விடாதீர்கள். நானும் நீங்களும் பல காரியங்களைச் செய்திருக்கிறோம், பல விஷயங்களை நம்பியிருக்கிறோம். அவற்றிற்காக நம்மை நாமே வெறுத்துக்கொள்ளக் காரணம் இருக்கலாம். ஆனால், நாம் ராட்டினத்தில் உறுதியான நம்பிக்கை வைத்ததற்காகவோ, அல்லது தாய் நாட்டின் பெயரில் ஒவ்வொரு நாளும் நல்ல நூல் நூற்றதற்காகவோ, ஒரு காலத்திலும் நாம் சிறிதும் வருந்துவதற்குக் காரணம் ஏற்படாது. எட்வின் ஆர்னால்ட் எழுதியுள்ள "சொர்க்க கீதம்" உங்களிடம் இருக்கிறது. அதன் கருத்து இதுதான்: 'இதில் சக்தியை வீணாக்குவது என்பதில்லை. இதில் அழிவுமில்லை. இந்தத் தருமத்தின் கடுகளவும், பல படுகுழிகளிலிருந்தும் ஒருவரைக் காப்பாற்றுகிறது.' இந்தத் தருமம் என்பது கர்ம யோகத்தையே குறிப்பிடுகிறது. நமது யுகத்தில் ராட்டினம்தான் கர்ம யோகமாகும். நீங்கள் பியாரிலால் மூலம் அனுப்பிய கடிதம் என்னை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்திருக்கிறது. உங்களிடமிருந்து மகிழ்ச்சியளிக்கும் ஒரு கடிதத்தை விரும்புகிறேன்.

## 2

[என் தந்தைக்கு நான் ஒரு பாரமாக இருந்துவருவதைக் குறித்து வருந்தியும், எனக்கு ஆகும் செலவை நானே சம்பாதித்துக்கொள்ள விரும்புவதாகவும் குறிப்பிட்டு காந்திஜிக்கு நான் கடிதம் எழுதியிருந்தேன். அதில் ஒரு சங்கடம் என்னவெனில், நான் காங்கிரசின் முழு நேர ஊழியனாக இருந்தேன். இவ்விதம் நான் எழுதியதைக் கேள்வியுற்ற என் தந்தை மிகவும் மனவேதனை அடைந்தார். ஹசரத் மோஹனியையே காந்திஜி தமது கடிதத்தில் ஹசரத் என்று குறிப்பிட்டிருக்கிறார். அவர் ஒரு உருதுக் கவிஞர். அவர் புரட்சி இயக்கத்திலும் தேசிய இபக்கத்திலும் மிகவும் தீவிரமான பங்கு எடுத்துக்கொண்டிருந்தார்.]

செப்டம்பர் *15, 1924*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்கள் சொந்த விஷயமாக நீங்கள் எழுதியுள்ள மிகவும் உருக்கமான கடிதம் கிடைத்தது. அதையெல்லாம் நீங்கள் தைரியமாகச் சமாளித்துவிடுவீர்கள் என்பதை நான் அறிவேன்.

தந்தைக்கு இப்போதெல்லாம் எளிதில் கோபம் ஏற்பட்டுவிடுகிறது. எனவே அவ்விதம் கோபம் ஏற்படும்படி நீங்களோ, நானே அற்பமான காரியம்கூட செய்துவிடக் கூடாது என்பதில் நான் மிகவும் கவலையுள்ளவனாக இருக்கிறேன். சாத்தியமாயின், நீங்கள் அவருடன் மனம் விட்டுப் பேசி, அவர் மனத்தைப் புண்படுத்தக்கூடிய எந்த நடவடிக்கையையும் தவிர்க்க வேண்டும். அவர் மனம் வருந்துவதைக் காண என் மனம் வருந்துகிறது. அவர் எளிதில் கோபம் கொள்வது மன வருத்தத்தின் நிச்சயமான அறிகுறியேயாகும். ஹசரத் இன்று இங்கு வந்திருந்தார். ஒவ்வொரு காங்கிரஸ்வாதியும் நூல் நூற்க வேண்டும் என்று நான் கூறும் யோசனைகூட அவருக்குச் சஞ்சலத்தை உண்டாக்குவதாக ஹசரத்தினிடமிருந்து நான் தெரிந்துகொண்டேன். நான் காங்கிரசிலிருந்து விலகிக்கொண்டு, மூன்று காரியங்களையும் அமைதியாகச் செய்து வரவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. உண்மையான எல்லா ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் அவற்றைச் செய்வதற்கே நேரம் சரியாக இருக்கும். ஆனால் அது கூட மக்களுக்குச் சஞ்சலத்தைக் கொடுக்கிறது. புனா சுயராஜ்யக் கட்சியினருடன் நான் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன். அவர்கள் நூற்பதற்கு இசையவில்லை, நான் காங்கிரஸிலிருந்து விலகுவதற்கும் அவர்கள் இசையவில்லை. நான் நானாக இராவிட்டால், என்னால் யாதொரு பலனும் ஏற்பட முடியாது என்பதை அவர்கள் உணரவில்லை. அது ஒரு துர்ப்பாக்கியமான நிலையாகும். எனினும் அதைக் குறித்து நான் சோர்வு அடையவில்லை. நான் கடவுளிடம்தான் நம்பிக்கை வைத்திருக்கிறேன். இந்த விநாடியில் செய்ய வேண்டிய கடமையை மாத்திரமே நான் அறிந்திருக்கிறேன். அதற்கு மேல் அறிந்து கொள்ளும் சக்தி எனக்கு இல்லை. அப்படியிருக்க நான் ஏன் கவலைப்படவேண்டும்?

உங்களுக்கு ஏதாவது பணத்திற்கு ஏற்பாடு செய்ய நான் முயற்சிக்கட்டுமா? பிரதிபலன் கிடைக்கக் கூடிய அலுவலில் நீங்கள் ஏன் ஈடுபடக்கூடாது? நீங்கள் உங்களுடைய தந்தையின் பாதுகாப்பில் இருந்தால்கூட நீங்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துத்தான் ஜீவனம் செய்ய வேண்டும். ஏதாவது பத்திரிகைகளுக்கு நீங்கள் நிருபராக இருப்பீர்களா? அல்லது ஒரு பேராசிரியர் பதவியை ஏற்றுக் கொள்வீர்களா?

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 3

(தாம் மூன்று வாரம் உண்ணாவிரதம் இருக்கப்போவதாக காந்திஜி அறிவித்தபோது இந்தக் கடிதம் எழுதப்பட்டது).

செப்டம்பர் 19, 1924

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நீங்கள் திடுக்கிட்டுப் போக வேண்டாம். அதற்கு மாறாக, எனது கடமையைச் செய்யும் வழியை எனக்குக் காட்டி கடவுள்

பலம் அளிப்பதைக் குறித்து ஆனந்தம் அடையுங்கள். நான் வேறு எதுவும் செய்வது முடியாத காரியம். ஒத்துழையாமையின் கர்த்தா என்ற முறையில் நான் மகத்தான பொறுப்பை வகிக்க வேண்டியவனாக இருக்கிறேன். லக்ஷ்மணபுரி, கான்பூர் நிகழ்ச்சிகளைக் குறித்து உங்களுடைய கருத்துகள் என்ன என்பதை எழுத்து மூலம் எனக்கு அறிவியுங்கள். கசப்பான சம்பவங்கள் எல்லாவற்றையும் நான் தெரிந்து கொள்ளட்டும். என் வரையில் நான் முற்றிலும் அமைதியாகவே இருந்து வருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 4

நவம்பர். *16, 1924*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

தாய்நாட்டிற்குத் தொண்டு புரிவதற்காகவும், தன்னைத்தான் அறிந்துகொள்வதற்காகவும் நீங்கள் பல ஆண்டுகள் ஆயுளுடன் இருக்க வேண்டுமென்று உங்களுக்கு வாழ்த்துக் கூறவே இந்த ஒரு வரி எழுதுகிறேன்.

சாத்தியமாயின், தந்தையுடன் இங்கு வாருங்கள்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 5

(என் மனைவிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை ஒரு வாரத்தில் இறந்து விட்டது. அதைக் குறித்தே காந்திஜியிடமிருந்து பின்வரும் தந்தி வந்தது.)

(தந்தி)

நவம்பர் *28, 1924*

சபர்மதியிலிருந்து

நேரு, அலகாபாத்.

குழந்தையின் மரணத்தைக் குறித்து வருந்துகிறேன். கடவுளின் சித்தப்படி நடக்கும்.

**காந்தி**

## 6

ஏப்ரல் 25, 1925

என் அன்புள்ள ஜவாஹர்லால்,

நான் டிதாலில் இருக்கிறேன். இது சற்றேறக்குறைய ஜுஹுவைப் போன்ற ஓர் இடமாகும். வங்காள சோதனையைச் சமாளிக்கும் சக்தியைப் பெறுவதற்காக இங்கு நான்கு நாட்கள் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு வந்துள்ள கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதி முடிக்க முயற்சித்து வருகிறேன். 'கடவுளும் காங்கிரசும்' என்ற கட்டுரையைக் குறித்து நீங்கள் எழுதிய கடிதமும் அக் கடிதங்களில் ஒன்றாகும். அதன் சம்பந்தமாக உங்களுடைய சங்கடமான நிலைமையைக் குறித்து நான் அனுதாபமடைகிறேன். வாழ்க்கையிலும் சரி, உலகிலும் சரி, உண்மையான மதம்தான் எல்லாவற்றையும்விட மகத்தான சாதனமாகும். ஆனால் அதுதான் எல்லாவற்றையும்விட அதிகமாக சுயநலத்திற்காக துஷ்பிரயோகம் செய்யப்பட்டு வருகிறது. அவ்விதம் துஷ்பிரயோகம் செய்வோரையும், அவர்களுடைய துஷ்பிரயோகத்தையும் நேரில் பார்த்தவர்கள் உண்மையை உணராமல் மதத்தையே கண்டு வெறுப்படைவது இயல்பேயாகும்.

மதம் தனிப்பட்ட ஒவ்வொருவரையும், ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் பொறுத்த விஷயம். அதை நீங்கள் எந்தப் பெயரிட்டு அழைத்தாலும், மிகக் கொடுமையான தீக்கு மத்தியில் மகத்தான ஆறுதல் அளிப்பது கடவுள்தான். அது எப்படியாயினும், நீங்கள் சரியான பாதையில்தான் சென்று வருகிறீர்கள். பகுத்தறிவை மாத்திரமே அடிப்படையாகக் கொண்டு சோதனை செய்வதை நான் ஆட்சேபிக்கவில்லை என்றாலும், அது அடிக்கடி குழப்பத்தை உண்டாக்குவதுடன், மூடநம்பிக்கை போன்ற தவறுகளைச் செய்யவும் காரணமாகி விடுகிறது. என்னைப் பொறுத்தமட்டில் பசுப் பாதுகாப்பு என்பது பசுவுக்குப் பாதுகாப்பு அளிப்பது மாத்திரமல்ல, அதைக் காட்டிலும் எத்தனையோ அதிகமான கருத்துகள் அதில் அடங்கியிருக்கின்றன. உலகத்தில் வாழும் எல்லாவற்றிற்கும் பசு ஓர் உதாரணமேயாகும். எனவே பசுப் பாதுகாப்பு என்பது, பலவீனர்களையும், திக்கற்றவர்களையும், ஊமைகளையும், செவிடுகளையும் பாதுகாப்பதேயாகும். அங்கிலையில் மனிதன் எல்லா சிருஷ்டிகளுக்கும் எஜமானனாக இருப்பதில்லை, ஊழியனாகவே இருக்கிறான். பசு, இரக்கத்திற்கு ஓர் இலக்கணமாகத் திகழ்கின்றது என்பதே எனது அபிப்பிராயமாகும். இதுவரையில் நாம் பசுப் பாதுகாப்பை ஒரு விளையாட்டாகவே கருதிவருகிறோம். ஆனால் விரைவில் நாம் அதன் உண்மைத் தத்துவத்தை அறிந்து நடந்துகொள்ள வேண்டியிருக்கும்.

இதற்கு முன் நான் எழுதிய எல்லாக் கடிதங்களும் உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன். டாக்டர் சத்தியபாலிடமிருந்து ஒரு துக்ககரமான கடிதம் எனக்கு வந்தது. எனவே

ஒரு சில நாட்களாவது நீங்கள் பஞ்சாபுக்குச் சென்று தங்கியிருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். நீங்கள் அங்கு சென்றால், அவருக்கு உற்சாகமாக இருக்கும். தந்தை அமைதியான, குளிர்ச்சியான இடத்தில் இரண்டு மாதங்கள் வரை தங்கி வசிக்க வேண்டுமென விரும்புகிறேன். நீங்கள் ஏன் அல்மோராவுக்குச் சென்று சுமார் ஒரு வாரம் வரையில் தங்கக் கூடாது? அங்கு நீங்கள் அலுவல்களைக் கவனிப்பதுடன், குளிர்ச்சியான காற்றையும் அனுபவிக்கலாம்.

தங்கள்,
பாபு

# 7

(காந்திஜி தமது வலது கைக்கு ஓய்வு கொடுப்பதற்காக இடது கையால் எழுதுவதைப் பயிற்சி செய்து வந்தார். இந்தக் கடிதம் அவர் இடது கையினால் எழுதியதேயாகும்.)

செப்டம்பர் 30, 1925

எனது அன்புள்ள ஜவாஹர்,

நாம் விசித்திரமான காலத்தில் வாழ்ந்து வருகிறோம். சிட்லா சஹாய், அவர்மீது தொடரப்பட்டுள்ள வழக்கில் எதிர் வழக்காடலாம். அதன் சம்பந்தமான நிகழ்ச்சிகளைத் தயவு செய்து எனக்கு அறிவித்து வாருங்கள். அவர் என்ன தொழில் செய்கிறார்? அவர் ஒரு வக்கீலா? புரட்சி நடவடிக்கைகளில் அவர் எப்போதாவது தொடர்பு வைத்துக் கொண்டிருந்தது உண்டா?

காங்கிரசைப் பொறுத்த மட்டில், சாத்தியமான வரையில் அது ஆடம்பரமற்றதாக இருக்கும்படி செய்வதே சிறந்ததாகும். தற்போது மிகுந்துள்ள ஊழியர்களைக் கொண்டு அதைச் சமாளிப்பது சாத்தியமாக இருக்க வேண்டும். இப்போது உங்களுடைய பளு அதிகமாகும் என்பதை நான் அறிவேன். இருந்தாலும் நீங்கள் எவ்விதத்திலும் உங்களுடைய ஆரோக்கியம் சீர்குலைய இடம் கொடுக்க வேண்டாம். உங்களுடைய உடல் நலனைப் பற்றி நான் மிகவும் கவலையுடையவனாக இருக்கிறேன். உங்களுக்கு இப்படி அடிக்கடி ஜுரம் வருவதை நான் விரும்பவில்லை. நீங்களும் கமலாவும் சில நாட்கள் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பம்.

*தந்தை எனக்கு எழுதியிருக்கிறார். அவர் நினைப்பது போல அவ்வளவு தூரம் செல்ல நான் ஒருபோதும் விரும்பியதில்லை. தந்தைக்கு ஆதரவு அளிக்க வேண்டுமென்று எவரை

* மோதிலால் நேருவையே காந்திஜி மேலே 'தந்தை' என்று குறிப்பிட்டிருக்கிறார். ஜவாஹர்லால் நேருவுடன் காந்திஜி பேசும் போதும், அவருக்குக் கடிதம் எழுதும் போதும் மோதிலால் நேருவை, பெரும்பாலும் 'தந்தை' என்றுதான் காந்திஜி குறிப்பிடுவது வழக்கம்.

யாவது கேட்க வேண்டுமென நான் எண்ணவே மாட்டேன். ஆனால் நீங்கள் செய்யும் பொதுத் தொண்டிற்காக உங்களுக்கு ஏதாவது தொகை கொடுப்பதை ஒரு பாக்கியமாகக் கருதும் நண்பரையோ அல்லது நண்பர்களையோ அவ்விதமே கொடுக்கும்படி கேட்க நான் தயங்கமாட்டேன். நீங்கள் இருக்கும் நிலைக்கும், இருக்க வேண்டிய நிலைக்கும் இணங்க உங்களுடைய தேவைகள் அசாதாரணமானவையாக இராமலிருக்குமாயின், பொது நிதியிலிருந்து தொகை எடுத்துக் கொள்ளும்படி நான் உங்களை வற்புறுத்துவேன். நீங்கள் ஏதாவது வியாபாரத்தில் ஈடுபடுவதன் மூலமோ அல்லது உங்களுடைய தொண்டு நீடித்திருப்பதற்காக உங்களுடைய அந்தரங்க நண்பர்கள் உங்களுக்குக் கொடுக்கும் தொகையிலிருந்தோ நீங்கள் பொது நிதிக்கு உங்கள் பங்கிற்கு ஏதாவது செலுத்த வேண்டும் என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். இவ்விஷயமாக உடனடியான அவசரம் எதுவும் இல்லை. எனினும் இதைப்பற்றி மனத்தை அலட்டிக் கொள்ளாமல் ஓர் இறுதியான முடிவுக்கு வாருங்கள். ஏதாவது வியாபாரத்தில் ஈடுபட வேண்டுமென நீங்கள் தீர்மானித்தால் கூட, நான் ஆட்சேபிக்கமாட்டேன். உங்களுக்கு மன அமைதி இருக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். ஒரு வர்த்தக ஸ்தாபனத்தின் மானேஜர் என்ற முறையில்கூட நீங்கள் தேசத்திற்குத் தொண்டு செய்வீர்கள் என்பதை நான் அறிவேன். உங்கள் மனத்திற்குப் பூரண அமைதியைக் கொடுக்கக் கூடிய எந்த முடிவிற்கு நீங்கள் வந்தாலும், அதைக் குறித்து உங்கள் தந்தை ஆட்சேபிக்க மாட்டார் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம்.

தங்கள்,

பாபு

பின் குறிப்பு: நான் ஓய்வு கொடுத்துள்ள எனது வலது கையை, 'எங் இந்தியா'வுக்குக் கட்டுரைகள் எழுத நான் உபயோகிக்க வேண்டும்.

## 8

(தந்தி)

அகமதாபாத்,
டிசம்பர் 1, 1925

ஜவாஹர்லால் நேரு,
ஆனந்தபவன்,
அலகாபாத்.

உண்ணாவிரதம் முடிந்துவிட்டது. உடல் நிலைமை முற்றிலும் திருப்திகரமாக இருக்கிறது. கமலா நாளுக்கு நாள் குணமடைந்து வருகிறார் என்று நம்புகிறேன். சொரூப் இங்கே இருக்கிறார்.

காந்தி

## 9

(என் மனைவிக்குச் சிகிச்சை செய்வதற்காக *1926* ஆரம்பத்தில் நான் ஐரோப்பாவுக்குச் சென்ற போது காந்திஜி எழுதிய கடிதம்.)

ஜனவரி *21, 1926*

எனது அன்புள்ள ஜவாஹர்,

உங்களுடன் கமலாவையும் அழைத்து செல்லுவதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் புறப்படுவதற்கு முன் இருவரும் இங்கு வர முடியாவிட்டாலும், நீங்கள் மாத்திரமாவது இங்கு வரவேண்டும். தேச பந்து நினைவுச் சின்னத்தைப் பற்றி, ஜம்னலால் ஜிக்கு நீங்கள் எழுதியுள்ள கடிதம் போதுமானது. அகில இந்திய நூற்போர் சங்கம் சம்பந்தப்பட்டவரையில், நீங்கள் தொடர்ந்து அதன் காரியதரிசியாக இருந்துவரவேண்டும். ஓர் உதவியாளர் தேவையாயின், சங்கர்லால் ஒருவரை வைத்துக் கொள்ளட்டும். புள்ளி விவரக் குறிப்புகள் அடங்கிய படத்தை நீங்கள் தயாரிக்காததைக் குறித்து உங்கள் மீது நான் குற்றம் கூறவில்லை. நீங்கள் வீண் பொழுது போக்கிக் கொண்டிருக்கவில்லை. ஐரோப்பாவில் குளிரைத் தாங்கக் கூடிய உடைகளை நீங்கள் எடுத்துச் செல்ல வேண்டும்.

தங்கள்,
பாபு

## 10

ஆசிரமம், சபர்மதி,
மார்ச் *5, 1926*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

*1*-ஆம் தேதி நீங்கள் எழுதிய குறிப்பு கிடைத்தது. டாக்டர் மேத்தாவுக்கு நீங்கள் கடிதம் எழுதியிருப்பினும், இரட்டிப்பு நிச்சயமாக இருப்பதற்காக நானும் அவருக்கு எழுதியிருக்கிறேன். கப்பலில் கமலாவின் உடல் நலம் மிகவும் திருப்திகரமாக இருந்ததென நம்புகிறேன். கடற் பிரயாணத்தின் மூலம் உங்கள் எல்லோருக்கும் பலன் ஏற்பட்டதா? இதைக் காட்டிலும் அதிகமாக எதுவும் கூற நேரம் இல்லை.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 11

ஆசிரமம், சபர்மதி,
ஏப்ரல் 23, 1926

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

ஒவ்வொரு வாரமும் நான் உங்களுக்குக் கடிதம் எழுத வேண்டுமென நினைக்கிறேன். ஒவ்வொரு வாரமும் அவ்விதம் எழுதத் தவறிவிடுகிறேன். எனினும் இந்த வாரம் நான் எழுதாமல் இருக்கக் கூடாது. பரஸ்பர ஒத்துழைப்பு வாதிகளுடன்* தந்தை இங்கு வந்திருந்தார். அப்போது நான் உங்களைப் பற்றிக் கடைசியாகக் கிடைத்த செய்தியைத் தெரிந்து கொண்டேன். இப்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

ஹிந்துக்களும் முஸ்லிம்களும் நாளுக்கு நாள் அதிகமாகப் பிரிந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதைக் குறித்து நான் கலங்கவில்லை. பின்னர் அவர்களிடையே அதிக நெருங்கிய உறவு ஏற்படவே, இந்தப் பிளவு உண்டாகியிருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது.

கமலா குணமடைந்து வருகிறாளென நம்புகிறேன்.

தங்கள்,
பாபு

## 12

நந்தி மலை, மைசூர் சமஸ்தானம்,
மே 25, 1927

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நான் நோயுற்று, வந்த கடிதங்களை அதிகமாகக் கவனிக்க முடியாமல் இருந்தபோது உங்களுடைய கடிதம் கிடைத்தது. நான் இன்னும் பூரணமாக குணமடையவில்லை; மிதமான அளவுக்குத் தான் அலுவல்களைக் கவனித்து வருகிறேன். இருந்தாலும் எனது நிலை நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து வருகிறது.

அங்கு நீங்கள் சென்று நீண்ட காலமாகிறது. எனினும் நீங்கள் காலத்தை வீணாகக் கடத்தவில்லை என்பதை நான் அறிவேன். நீங்கள் திரும்பி வரும்போது கமலாவின் உடல் நிலை முற்றிலும் சீராகிவிடுமென நம்புகிறேன். இன்னும் அதிக காலம் அங்கு தங்கியிருப்பது கமலாவின் உடல் நிலைக்கு அவசியமாயின், நீங்கள் அவ்விதமே தங்கியிருப்பீர்களென நினைக்கிறேன். வல்லரசுகளின்

---

* மகாராஷ்டிரத்தில் பிரபல காங்கிரஸ்வாதிகளும் மற்றவர்களும் அடங்கிய ஒரு கோஷ்டியினரே "பரஸ்பர ஒத்துழைப்புவாதிகள்" ஆவர். அந்தக் கோஷ்டியின் தலைவர்களாக மற்றவர்களுடன் எம். ஆர். ஜெயகரும், என். ஸி. கேல்காரும் இருந்தனர்.

கொடுமைகளுக்கு இலக்காகிவரும் தேசங்கள் அடங்கிய மகாநாட்டின் நடவடிக்கைகளைப்பற்றி உங்களுடைய பகிரங்க அறிக்கையையும், உங்களுடைய அந்தரங்கமான அறிக்கையையும் கூட, நான் மிகுந்த அக்கறையுடன் வாசித்தேன். இந்த மகாநாட்டின் மூலம் நான் அதிகமாக எதுவும் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில் அந்த நாடுகளின் சுதந்திர நடவடிக்கைகள், அவைகளைச் சுரண்டும் வல்லரசுகளின் தயவையே பொறுத்தவையாக இருக்கின்றன. எனவே அம் மகாநாட்டில் கலந்து கொண்டுள்ள ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த அங்கத்தினர்களால் கடைசியான சோதனையை எதிர்த்து நிற்க முடியாது. ஏனெனில் அவைகள் தங்களுடைய சுயநலனுக்குத் தீமையை விளைவிக்கக்கூடியது என்று கருதும் ஒரு விஷயத்தில் விட்டுக் கொடுக்கமாட்டா. நம்மைப் பொறுத்தமட்டில் நமது மக்கள், உள்நாட்டில் தங்களுக்குள்ள சக்தியை உருவகப்படுத்துவதற்குப் பதிலாக, வெளி சக்திகளையும், வெளியார் உதவியையும் எதிர்பார்க்க முற்படும் அபாயமும் ஏற்படும். எனினும் இது வெறும் வாதத்தை அடிப்படையாகக் கொண்ட அபிப்பிராயமேயாகும். ஐரோப்பிய நிகழ்ச்சிகளை நான் உன்னிப்பாகக் கவனித்து வரவில்லை. நீங்கள் அங்கேயே இருக்கிறீர்கள். ஐரோப்பிய நாடுகளிடையே பிற நலனைக் கருதும் சூழ்நிலை ஏற்பட்டிருப்பதை நீங்கள் நேரில் காணலாம்; ஆனால் அதை நான் இங்கிருந்த வண்ணம் காணமுடியாது.

வரப்போகும் காங்கிரசுக்கு உங்களை அக்கிராசனராகத் தேர்ந்தெடுப்பது என்ற பேச்சு இருந்துவருகிறது. அதைப் பற்றி நான் தந்தையுடன் கடிதப் போக்குவரத்து நடத்திவருகிறேன். ஹிந்து-முஸ்லிம் பிரச்னைபற்றி அ. இ. கா. கமிட்டியில் ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றியும்கூட, இங்கு நிலைமை சிறிதும் திருப்தியளிக்கக் கூடியதாக இல்லை. மண்டைகளை உடைத்துக் கொள்வதை எவ்விதத்திலாவது தடுக்க முடியுமா என்பது எனக்குத் தெரியவில்லை. பாமர மக்கள் மீது நமக்கு இருந்த பிடிப்பை நாம் இழந்துவிட்டோம். நீங்கள் காங்கிரஸ் அக்கிராசனராக வந்தால், பாமர மக்கள் சம்பந்தப்பட்டவரையில் நீங்கள் ஒரு வருடகாலத்திற்கு எதுவும் செய்ய முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. எனினும் நான் அவ்விதம் கூறுவதற்கு, காங்கிரஸ் வேலையைச் சட்டை செய்ய வேண்டியதில்லை என்பது அர்த்தமல்ல. யாராவது அந்த வேலையைச் செய்துதான் தீரவேண்டும். ஆனால் அதைச் செய்வதற்கு மிகுந்த விருப்பமும் ஆர்வமும் உள்ள பலர் இருக்கின்றனர். அவர்களுடைய ஆர்வத்திற்குப் பல்வேறு நோக்கங்கள், சுய நல நோக்கம் கூடக் காரணமாகும். எப்படியோ காங்கிரஸ் ஸ்தம்பித்துவிடாமல் சென்று கொண்டிருக்கும்படி அவர்கள் செய்வார்கள். எனினும் பாமர மக்களுக்காக வேலை செய்யும் தகுதி வாய்ந்தவர்களுடைய, பாமர மக்களைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கக் கூடியவர்களுடைய விருப்பப்படியேதான் காங்கிரஸ் எப்போதும் நடைபெற்றுவரும். எனவே உங்களுடைய தொண்டைச் சிறந்த முறையில் எவ்விதம் உபயோகப்படுத்திக் கொள்வது என்

பதே இப்போது கேள்வியாகும். அதாவது நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அதையே நீங்கள் செய்யவேண்டும். எதையும் பாரபட்சமின்றி நோக்கும் ஆற்றல் உங்களுக்கு உண்டு என்பதையும், தாதாபாயைப் போலவோ அல்லது மாக்ஸ்வெனியைப் போலவோ 'கிரீடத்தை என் தலையில் வையுங்கள்' என்று எள்ளளவும் சுயநல நோக்கமின்றி நீங்கள் கூறுவீர்கள் என்பதையும் நான் அறிவேன். அவ்விதமே கிரீடம் உங்கள் தலையில் சூட்டப்படும் என்பதிலும் எனக்குச் சந்தேகமில்லை. கிரீடத்தைத் தரிக்கும்படி உங்களை நிர்ப்பந்தப்படுத்துவதோ, அதைச் சூட்டிக் கொள்ளும்படி உங்களை வேண்டிக் கொள்ளுவதோ அவசியமென்று எனக்குத் தோன்றவில்லை. தந்தையும் உங்களுக்கு இந்தக் கப்பலில் கடிதம் எழுதியிருப்பார். இந்தக் கடிதத்தின் நகல் ஒன்றை அவருக்கு நான் அனுப்பிக் கொண்டிருக்கிறேன்.

உங்களுடைய விருப்பத்தைக் குறித்து நீங்கள் தந்தி கொடுத்தால் நலமாக இருக்கும். ஜூலை மாதக் கடைசி வரையில் நான் பெங்களூரில் இருப்பேன். எனவே உங்கள் தந்தியை நீங்கள் நேராக பெங்களூருக்கு அனுப்பிவைக்கலாம். அல்லது நிச்சயமாக அது எனக்குக் கிடைக்க வேண்டுமாயின், ஆசிரமத்துக்கு அனுப்புங்கள். நான் எங்கே இருந்தாலும் அந்தத் தந்தி எனக்கு மீண்டும் தந்தி மூலம் அனுப்பப்பட்டுவிடும்.

உங்கள் எல்லோருக்கும் என் அன்பு.

தங்கள்,<br>
பாபு

## 13

(*1927* டிசம்பர் மாதம் நான் ஐரோப்பாவிலிருந்து திரும்பியதும், சென்னையில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு நேராகச் சென்றேன். எனது யோசனையின்மீது அங்கு பல தீர்மானங்கள் நிறைவேறின. அந்தக் கூட்டத்தில் நான் மேற்கொண்ட நடவடிக்கைகளை காந்திஜி அங்கீகரிக்கவில்லை. எனவே அவ்விஷயமாக பின்வருமாறு அவர் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார்:)

சத்தியாக்கிரக ஆசிரமம், சபர்மதி,<br>
ஜனவரி *4, 1928*

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

நீங்கள் என்னை மிகவும் நேசிக்கிறீர்கள் என்று நான் கருதுகிறேன். எனவே நான் இப்போது எழுதப் போவதைக் குறித்து நீங்கள் கோபம் அடையமாட்டீர்கள். அது எப்படியாயினும், நான் உங்களை மிகவும் நேசிப்பதால், உங்களுக்குக் கடிதம் எழுதித் தீரவேண்டும் என்று நான் நினைக்கும்போது என் பேனாவை என்னால் கட்டுப்படுத்த முடியாது.

நீங்கள் மிதமிஞ்சி வேகமாகச் சென்று கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் சிந்திக்கவும், இங்குள்ள சூழ்நிலையை நன்கு அறிந்து கொள்ளவும் அவகாசம் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். நீங்கள் தயாரித்து நிறைவேறும்படி செய்துள்ள தீர்மானங்களில் பெரும்பாலானவையும், ஒரு வருட காலத்துக்குத் தள்ளிவைக்கப் பட்டிருக்கலாம். 'குடியரசு ராணுவத்தில்' நீங்கள் குதித்திருப்பது ஆலோசனையில்லாத ஓர் அவசர நடவடிக்கையாகும். உங்களுடைய இந்த நடவடிக்கைகளைப் பற்றி நான் அவ்வளவாகக் கவலைப்படவில்லையாயினும், விஷமிகளையும் போக்கிரிகளையும் நீங்கள் ஆதரிக்க முற்பட்டிருப்பது எனக்குக் கவலையைக் கொடுக்கின்றது. கலப்பற்ற அகிம்சையில் நீங்கள் இன்னும் நம்பிக்கை வைத்திருக்கிறீர்களா என்பது எனக்குத் தெரியாது. நீங்கள் உங்களுடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டிருந்தாலும் கூட, எல்லைமீறிய, கட்டுப்பாடில்லாத பலாத்காரம்தான் தேசத்தை விடுவிக்கப்போகிறது என்று நீங்கள் நினைக்க முடியாது. ஐரோப்பாவில் நீங்கள் பெற்ற அனுபவங்களைக் கொண்டு நமது நாட்டின் நிலையை நீங்கள் கவனமாகப் பரிசீலனை செய்ததன் பலனாக, தற்போது நாம் அனுசரித்துவரும் முறைகளும் வழிகளும் தவறானவை என்று உங்களுக்குத் தோன்றினால், உங்களுடைய சொந்த அபிப்பிராயங்களைத் தாராளமாக வலியுறுத்துங்கள். ஆனால் கட்டுதிட்டங்களுக்கு உட்பட்ட ஒரு கட்சியை அமைத்துக் கொண்டு அவ்விதம் செய்யுங்கள். கான்பூர் அனுபவங்களை நீங்கள் அறிவீர்கள். எந்தப் போராட்டத்திலும், கட்டுதிட்டங்களுக்கு உட்பட்ட கோஷ்டியினர் இருக்க வேண்டியது அவசியமாகும். நீங்கள் கையாளும் கருவிகளில் அக்கறை கொள்ளாததன் மூலம், போராட்டத்தின் மேற்கண்ட அம்சத்தை நீங்கள் அலட்சியம் செய்வதாகவே தோன்றுகிறது.

உங்களுக்கு நான் ஆலோசனை கூறுவதாயின், அது இது தான்: நீங்கள் இப்போது இந்திய தேசீய காங்கிரஸ் சபையின் காரியதரிசியாக இருக்கிறீர்கள். எனவே ஒற்றுமை என்ற முக்கிய தீர்மானத்தையொட்டியும், முக்கியமான, ஆனால் இரண்டாவதான சைமன் கமிஷன் பகிஷ்காரத் தீர்மானத்தையொட்டியும் உங்களுடைய முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டியது உங்களுடைய கடமையாகும். ஸ்தாபனத்தை பலப்படுத்துவதிலும், சொல் வன்மையிலும் உங்களுக்குள்ள மகத்தான திறமையெல்லாம் ஒற்றுமைத் தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டுவரத் தேவையாக இருக்கும்.

நான் கூறியுள்ளவற்றை மேலும் விவரமாக விளக்க எனக்கு நேரமில்லை. ஆனால் புத்திசாலிக்கு ஒரு வார்த்தை போதுமானது.

கமலாவின் உடல் நலம் ஐரோப்பாவிலிருந்தது போலவே இங்கும் நன்றாக இருந்துவருகிறதென நம்புகிறேன்.

தங்கள்,

பாபு

## 14

ஆசிரமம், சபர்மதி,
ஜனவரி 17, 1928

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

பென்னர் பிராக்வேயைப் பற்றி சென்ற ஞாயிற்றுக் கிழமை உங்களுக்குக் கடிதம் எழுதியிருந்தேன். உரிய காலத்தில் அந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைத்ததென நம்புகிறேன்.

குறிப்பிட்ட நடவடிக்கைகளில் நீங்கள் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டதால்தான், அக்கட்டுரைகளை நான் எழுதினேன் என்பதை நீங்கள் அறிவீர்களா? ஆனால் அவற்றை நீங்கள் ஆட்சேபித்திருக்கிறீர்கள். நான் எத்தகைய உணர்ச்சியுடன் அக்கட்டுரைகளை எழுதினேன் என்பதை, உங்களுக்கும் எனக்கும் இடையே உள்ள உறவை உன்னி நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள் என நான் நினைத்தேன். அதன் காரணமாக தப்பெண்ணம் ஏற்பட சிறிதும் இடமிராதென்றும் எண்ணினேன். ஆனால் நான் நினைத்ததெல்லாம் தவறு என்பதை இப்போது உணருகிறேன். இருந்தாலும் அதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. ஏனெனில் பல ஆண்டுகளாக நீங்கள் விரும்பாத கட்டுப்பாட்டுக்கு உங்களை நீங்கள் உட்படுத்திக் கொண்டு வந்திருக்கிறீர்கள். அந்தக் கட்டுப்பாட்டிலிருந்து எனது கட்டுரைகளால்தான் இப்போது உங்களை விடுவிக்க முடிந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. உங்களுக்கும் எனக்குமிடையே சில கருத்து வேற்றுமைகள் இருப்பதை நான் கண்டுபிடிக்க முற்பட்டேன் என்றாலும், அந்த வேற்றுமைகள் இவ்வளவு பயங்கரமானவை என்று நான் எண்ணவேயில்லை. நீங்கள் விரும்பாத கட்டுப்பாடுகளுக்கு தேசத்தின் நலனுக்காக நீங்கள் உங்களை வீரத்துடன் உட்படுத்திக் கொண்டு வந்திருக்கிறீர்கள். உங்கள் விருப்பத்திற்கு விரோதமாக என்னுடனும், என் கீழும் வேலை செய்வதன் மூலம் தேசத்திற்குத் தொண்டு செய்யலாம் என்றும், இறுதியில் நீங்கள் அப்பழுக்கின்றி வெளிவர முடியும் என்றும் நம்பி வந்திருக்கிறீர்கள். ஆனால் அதே சமயம் நீங்கள் விரும்பாத கட்டுப்பாட்டிற்கு உங்களை உட்படுத்தும் இயற்கையற்ற நிலையைத் திணறிக் கொண்டு சகித்தும் வந்திருக்கிறீர்கள். நீங்கள் அந்த நிலையிலிருந்தபோது சட்டை செய்யாத விஷயங்களே, இப்போது உங்களுக்கு என்னுடைய பெரும் குறைபாடுகளாகத் தோன்றுகின்றன. நான் காங்கிரசைத் தீவிரமாக நடத்தி வந்தபோது அகில இந்திய காங்கிரசின் நடவடிக்கைகளைப் பற்றி 'எங் இந்தியா'வில் நான் இவை போன்ற காரசாரமான கட்டுரைகள் எழுதியிருப்பதை உங்களுக்குக் காட்ட முடியும். அ. இ. கா. கமிட்டிக் கூட்டங்களில் அங்கத்தினர்கள் பொறுப்பில்லாமலும், அவசரப்பட்டும் பேசியபோதும், நடவடிக்கையில் ஈடுபட்டபோதும் நான் கண்டித்தும் பேசியிருக்கிறேன். நீங்கள் மதிமயக்கத்தில் இருந்தபோது அவையெல்லாம் இப்போது தோன்றுவதுபோல் அப்போது உங்களுக்கு முரண்பாடானவையாகத் தோன்றவில்லை.

எனவே உங்கள் கடிதத்திலுள்ள முரண்பாடுகளை உங்களுக்கு எடுத்துக் காட்டுவதால் பலனில்லை என்று எனக்குத் தோன்று கிறது. ஆகையால் இப்போது நான் கூறவிரும்புவது, எதிர்கால நடவடிக்கையைப் பற்றியதேயாகும்.

சென்ற பல ஆண்டுகளாக நீங்கள் பணிவுடனும், யாதொரு ஆட்சேபணையுமின்றி விசுவாசத்துடனும் இருந்து வந்திருக் கிறீர்கள். அதை நான் மிகவும் மதித்தும் வந்திருக்கிறேன். எனவே என்னிடமிருந்து இப்போது உங்களுக்கு விடுதலை தேவையாயின், நான் உங்களுக்குத் தேவையான எத்தகைய சுதந்திரமும் அளிக்கத் தயாராக இருக்கிறேன். எனக்கு எதிரா கவும், என் கருத்துகளுக்கு எதிராகவும் நீங்கள் பகிரங்கமாகப் போராட்டம் நடத்த வேண்டியது அவசியம் என்பதையும் இப் போது நான் மிகவும் தெளிவாகக் காண்கிறேன். ஏனெனில் எனது அபிப்பிராயங்கள் தவறானவையாக இருக்குமாயின், அவற்றால் நாட்டுக்குச் சீர்படுத்த முடியாத தீங்கு நேரும். எனவே அந்தத் தவறுகளை நீங்கள் அறிந்து கொண்டபின், எனக்கு எதிராகப் புரட்சி செய்ய எழ வேண்டியது உங்களுடைய கடமையாகும். அல்லது உங்களுடைய முடிவுகள் சரி யானவையா என்பதில் உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருக்கு மாயின், அவற்றைப் பற்றி உங்களுடன் நேரில் விவாதிக்க நான் மகிழ்ச்சியுடையவனாக இருக்கிறேன். உங்களுக்கும் எனக்கும் இடையே உள்ள வேற்றுமைகள் ஏராளமானவை, மூலாதார மானவை என்றும், எனவே நம்மிடையே சமரசத்திற்கு இட மில்லை என்றும் தோன்றுகிறது. நீங்கள் எப்போதுமே தைரியத் துடனும், விசுவாசத்துடனும், திறமையுடனும், யோக்கியப் பொறுப்புடனும் இருந்துவந்திருக்கிறீர்கள். அப்படிப்பட்ட ஒரு தோழரை நான் இழக்க வேண்டியிருப்பதைக் குறித்து எனது வருத்தத்தை உங்களிடமிருந்து மறைப்பதற்கில்லை. எனினும் லட்சியத்திற்காக தோழமையைத் தியாகம் செய்யத்தான் வேண் டும். லட்சியம், அவற்றையெல்லாம் விட உயர்ந்ததாகக் கருதப் பட வேண்டும், லட்சியத்தைப் பொறுத்தமட்டில் இந்தத் தோழமை மறைந்துதான் தீரவேண்டுமெனில், அது நம்முடைய சொந்த நட்பை எவ்விதத்திலும் பாதிப்பதற்கில்லை. நாம் நீண்ட காலமாக ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகியிருக்கிறோம். நமக்குள் எவ்வளவு கடுமையான அரசியல் வேற்றுமைகள் இருப் பினும், நாம் தொடர்ந்து ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே இருப்போம். ஏராளமானவர்களுடன் நான் அத்தகைய தொடர்பு வைத்துக்கொள்ளும் நல்ல அதிர்ஷ்டம் எனக்கு இருந்து வரு கிறது. உதாரணமாக சாஸ்திரியாரை எடுத்துக் கொள்வோம். அரசியலில் அவருக்கும் எனக்கும் உள்ள வேற்றுமைகளுக்கு எல்லையே இல்லை. அப்படியிருந்தும், அந்த அரசியல் வேற்று மைகளை நாங்கள் உணர்ந்து கொள்வதற்கு முன் எங்களிடையே மலர்ந்த நட்பு, எத்தனையோ அக்கினிப் பரீட்சைகள் ஏற்பட்டும் கூட, உறுதியுடன் தொடர்ந்து நிலைபெற்றுவந்திருக்கிறது.

நான் கூறும் யோசனை இதுதான்: உங்களுடைய நிலையைப் பகிரங்கப்படுத்துவதற்கு ஒரு கண்ணியமான வழி இருக்கிறது. நமக்கிடையே உள்ள வேற்றுமைகளைக் குறிப்பிட்டு, பத்திரிகையில் வெளியிடுவதற்காக எனக்கு ஒரு கடிதம் எழுதுங்கள். அதை நான் 'எங் இந்தியா'வில் பிரசுரித்து, அதற்கு ஒரு சுருக்கமான பதிலும் எழுதுகிறேன். உங்களுடைய முதல் கடிதத்தை நான் வாசித்து அதற்குப் பதிலும் அளித்த பிறகு, அதைக் கிழித்துப் போட்டுவிட்டேன். இரண்டாவது கடிதத்தை நான் வைத்துக் கொண்டிருக்கிறேன். மற்றொரு கடிதம் எழுதும் சிரமத்தை எடுத்துக்கொள்ள நீங்கள் விரும்பாவிடில், இப்போது என்னிடமுள்ள கடிதத்தை வெளியிட நான் தயாராக இருக்கிறேன். அதில் அவமதிப்பான பகுதி எதுவும் இல்லை. அத்தகைய பகுதி ஏதாவது எனக்குத் தென்பட்டால், அதை நான் அகற்றி விடுவேன் என்று நீங்கள் நிச்சயமாக நம்பலாம். அது மனம் விட்டுக் கூறியுள்ள யோக்கியப் பொறுப்பான ஒரு கடிதமாகும்.

அன்புடன்,
பாபு

## 15

(இந்தக் கடிதம் லக்ஷ்மணபுரி நிகழ்ச்சிக்குப் பின் காந்திஜியினல் எழுதப்பட்டதென நான் நினைக்கிறேன். அந்நகரில் சைமன் கமிஷன் வந்தபோது எங்களில் பலர் அதை எதிர்த்து அமைதியாக ஆர்பாட்டம் செய்தோம். அதன் காரணமாக நாங்கள் தடிகளால் போலீசாரின் கடுமையான தாக்குதலுக்கு இலக்கானேம்.)

வார்தா,
டிசம்பர் 3, *1928*

எனது அன்புள்ள ஜவாஹர்,

உங்களுக்கு எனது அன்பு. அதையெல்லாம் நீங்கள் தைரியமாகச் சமாளித்திருக்கிறீர்கள். இன்னும் அதிக தைரியமான காரியங்களை நீங்கள் செய்ய வேண்டியிருக்கிறது. இன்னும் பல ஆண்டுகள் நீங்கள் ஆயுளுடன் இருக்கக் கடவுள் அருள் புரிவாராக. அந்நியரின் நுகத்தடியிலிருந்து இந்தியாவை விடுதலை செய்வதற்குற்ற கருவியாக உங்களை அவர் தேர்ந்தெடுப்பாராக.

தங்கள்,
பாபு.

## 16

ரயிலில்,
ஜுலை 29, 1929

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

இந்துவுக்கு நீங்கள் எழுதியுள்ள கடிதங்கள் மிகவும் அருமை யானவை. அவற்றை வெளியிட வேண்டியது அவசியமாகும். அவற்றை நீங்கள் ஹிந்தியில் எழுதியிருக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். இப்போது கூட, அவை ஆங்கிலத்தில் பிரசுரமாகும் அதே சமயத்தில் ஹிந்தியிலும் பிரசுரமாக வேண்டும்.

அவ்விஷயத்தை நீங்கள் முற்றிலும் எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட முறையில் கையாண்டிருக்கிறீர்கள். மனிதனின் ஆதி உற்பத்தி இப்போது வாதத்திற்கு இடமான ஒரு பிரச்னை யாகியிருக்கிறது. மதத்தின் ஆதி உற்பத்தியும் இன்னும் அதிக விவாதத்திற்கு இடமான ஒரு விஷயமாகியிருக்கிறது. எனினும் இந்த வேறுபாடுகள், உங்களுடைய கடிதங்களின் சிறப்பைக் குறைத்துவிடவில்லை. அந்தச் சிறப்பிற்குக் காரணம், நீங்கள் செய்துள்ள முடிவுகள் உண்மையானவை என்பதல்ல, அவ்விஷ யத்தை நீங்கள் கையாண்டுள்ள விதமும், உங்களுடைய பொது நடவடிக்கைகளுக்கிடையே நீங்கள் உண்மையாகவே இந்துவின் இருதயத்தைத் தொடவும், அவளது அறிவுக் கண்களைத் திறக்க வும் முயற்சித்திருக்கிறீர்கள் என்பதுமேயாகும்.

நான் எடுத்துக் கொண்டுவந்துள்ள கெடியாரம் சம்பந்தமாக கமலாவுடன் தகராறு செய்ய நான் விரும்பவில்லை. இருந்தாலும் அந்த அன்புப் பரிசை நான் மறுதளிக்க முடியவில்லை. எனினும் அதை நான் இந்துவின் சொத்தாகப் பாதுகாத்து வருவேன். என்னைச் சுற்றிலும் பல போக்கிரிக் குழந்தைகள் இருக்கும்போது, அத்தகைய தட்டுமுட்டு சாமான் ஒன்றை நான் ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டிருப்பது முடியாத காரியம்! எனவே இந்து அவளுடைய கண்ணுன கெடியாரத்தை மீண்டும் பெறுவதைக் குறித்து கமலா வருந்தமாட்டார் என்பதை அறிய நான் மகிழ்ச்சி அடைவேன்.

காங்கிரஸ் கிரீடம் என்பது பற்றிய என் கட்டுரையை முன்பே எழுதிவிட்டேன். அடுத்த 'எங் இந்தியா' இதழில் அது வெளி யாகும்.

தங்கள்,
பாபு

# 17

(டில்லியில் 'தலைவர்கள் மகாநாடு' ஒன்று நடந்தது. அம் மகா நாட்டில் கலந்து கொண்டவர்கள் ஓர் அறிக்கை வெளியிட்டனர். அந்த அறிக்கை, இந்தியாவுக்கு ஒருவித டொமினியன் அந்தஸ்து அளிப்பது பற்றியதே யாகும். இறுதியில் நானும் வேண்டா வெறுப்புடன் அதில் கையெழுத்திட்டேன். சுபாஷ் போஸ் அதில் கையெழுத்திடவில்லை. அதில் நான் கையெழுத்திட்டதைக் குறித்து பின்னர் வருந்தி காந்திஜிக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன். அப்போது நான் காங்கிரசின் பொதுக் காரியதரிசியாக இருந்ததுடன், அடுத்த காங்கிரஸ் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தேன். நான் எழுதிய கடிதத்திற்கு காந்திஜி பின்வருமாறு பதில் அளித்திருந்தார் :)

அலிகார்,
நவம்பர் 4, 1929

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்கள் கடிதம் எனக்குக் கிடைத்தது. நான் உங்களுக்கு எப்படி ஆறுதல் கூறுவேன்? உங்களுடைய மன நிலையைப் பற்றி மற்றவர்கள் விவரித்ததை நான் கேட்டபோது, உங்களை எல்லைமீறி நான் வற்புறுத்திவிட்டேனே என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். நீங்கள் அத்தகைய வற்புறுத்தலுக்கு அப்பாற்பட்டவர் என்றே நான் எப்போதும் நம்பிவந்திருக்கிறேன். உங்களுடைய எதிர்ப்பை நான் எப்போதும் கௌரவித்து வந்திருக்கிறேன். அது எப்போதும் கண்ணியமானதாவே இருந்து வந்திருக்கிறது. அந்த நம்பிக்கையுடனேயே நான் உங்களை வற்புறுத்தினேன். எனினும் இந்தச் சம்பவம் ஒரு படிப்பினையாக இருக்கட்டும். எனது யோசனை உங்களுடைய அறிவுக்கோ அல்லது உள்ளத்துக்கோ இசைந்ததாக இராவிடில், என்னை எதிர்த்து நில்லுங்கள். நீங்கள் என்னை எதிர்ப்பதற்காக, உங்கள் மீது எனக்குள்ள அன்பு குறைந்துவிடாது.

ஆனால் நீங்கள் ஏன் மனச் சோர்வு அடைய வேண்டும்? பொதுஜன அபிப்பிராயத்தைக் குறித்து நீங்கள் அஞ்சவில்லை என நான் நம்புகிறேன். நீங்கள் யாதொரு தவறும் செய்யாவிடில் மனச் சோர்வு எதற்கு? சுயேச்சைக் கொள்கை, அதிகமான சுதந்திரத்திற்கு முரணானதல்ல. இப்போது நீங்கள் காங்கிரசின் நிர்வாக அதிகாரியாகவும், வரும் வருடத்திற்குத் தலைவராகவும் இருக்கிறீர்கள். எனவே, உங்களுடைய சகாக்களில் பெரும்பாலோர் முடிவுசெய்யும் நடவடிக்கையிலிருந்து நீங்கள் விலகி நிற்க முடியாது. நீங்கள் கையெழுத்திட்டது தர்க்க ரீதியாக நியாயமாகும், புத்திசாலித்தனமாகும், மற்ற எந்த விதத்திலும் சரியேயாகும். எனவே உங்களுடைய மனச் சோர்வை நீங்கள் உதறித் தள்ளிவிடுவீர்கள் என்றும், உங்களைக் கைவிடாத உற்சாகத்தை நீங்கள் மீண்டும் பெறுவீர்கள் என்றும் நான் நம்புகிறேன்.

நீங்கள் நிச்சயமாக அறிக்கை வெளியிடலாம். இருந்தாலும் அவ்விஷயமாக அவசரம் எதுவும் இல்லை.

இதன் சம்பந்தமாக என்னுடன் கலந்து பேச வேண்டுமென நீங்கள் கருதினுல், எங்கு வேண்டுமாயினும் என்னைச் சந்தித்துப் பேசத் தயங்காதீர்கள்.

நான் அலகாபாத்துக்கு வரும்போது கமலா பூரண ஆரோக்கியத்துடன் இருப்பதைக் காணலாமென நம்புகிறேன்.

சாத்தியமாயின், உங்களுடைய மனவருத்தம் தீர்ந்து விட்டது என்று தந்தி கொடுங்கள்.

தங்கள்,
பாபு

# 18

பிருந்தாவனம்,
நவம்பர் *8*, *1929*

எனது அன்புள்ள ஜவாஹர்,

உங்கள் கடிதம் கிடைத்தது. எனது தந்தி உங்களுக்குக் கிடைத்திருக்க வேண்டும். இப்போது நீங்கள் ராஜிநாமா செய்ய வேண்டாம். நான் கூறுவதை வாதித்துக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. நீங்கள் ராஜிநாமா செய்தால், அது தேச நலனைப் பாதிக்கும் என்பதை மாத்திரம் நான் அறிவேன். அதற்கு அவசரம் எதுவும் இல்லை. கொள்கை சம்பந்தமான முரண்பாடு எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. காங்கிரஸ் கிரீடத்தைப் பொறுத்த மட்டில், அதை வேறுயாரும் தரிக்க முடியாது. அது ரோஜா மலர்களாலான கிரீடமாக ஒரு போதும் இருந்ததில்லை. இப்போது அது முற்றிலும் முட்களாலான கிரீடமாக இருக்கட்டும். நான் அதைத் தரிக்க வேண்டுமென எனக்குத் தோன்றியிருக்குமாயின், லக்ஷ்மணபுரியிலேயே நான் அவ்விதம் செய்திருப்பேன். நான் அதைத் தரிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் என்று நான் மனத்தில் எண்ணிய சந்தர்ப்பம் இத்தகையதல்ல. நீங்கள் கைதியாகி, அடக்குமுறைகளும் அதிகமானுல், அத்தகைய சந்தர்ப்பம் ஏற்படும். ஆனுல் நாம் சந்திக்கும்போது இதைப்பற்றி அமைதியாகவும், பாரபட்சமின்றியும் விவரமாக விவாதிக்கலாம்.

இதன் மத்தியில் கடவுள் உங்களுக்கு மன அமைதியைக் கொடுப்பாராக.

பாபு

# 19

(1929 டிசம்பர் மாத இறுதியிலும் 1930-ம் வருட ஆரம்பத்தி லும் லாகூரில் நடந்த தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் பூரண சுயேச்சைத் தீர்மானம் நிறைவேறியது. 1930 ஜனவரி 26-ம் தேதி நாடெங்கும் "சுயேச்சை தினம்" கொண்டாடப்பட்டது. அதன் பின் காந்திஜி உப்பு சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். அவர் தமது சகாக்கள் அடங்கிய ஒரு கோஷ்டியுடன் சபர்மதி ஆசிரமத்தி லிருந்து தண்டி கடற்கரைக்குப் புறப்பட்டார். அடுத்துள்ள மூன்று கடிதங்களும் அவர் கடற்கரைக்குச் சென்றபோது எழுதப்பட்டவை. அவரும் அவரது சகாக்களும் தண்டியில் ஏப்ரல் மாதம் கைது செய் யப்பட்டனர்.)

மார்ச் *11, 1930*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

இப்போது இரவு *10* மணி அடிக்கப்போகிறது. இன்றிரவு நான் கைது செய்யப்படுவேன் என்ற வதந்தி மிகவும் பலமாக இருந்து வருகிறது. நான் உங்களுக்குத் தந்தி கொடுக்காததற்குக் காரணம் என்னவெனில், பத்திரிகை நிருபர்கள் அவர்கள் அனுப்ப வேண்டிய செய்திகளை அங்கீகாரம் பெறுவதற்காக என்னிடம் கொடுக்கின்றனர். எனவே ஒவ்வொருவரும் ஓய்ச்சல் ஒழிவின்றி வேலை செய்து வருகிறார்கள். தவிர, தந்தி கொடுப்பதற்கு விசேஷ மாக எதுவும் இல்லை.

எல்லா விஷயங்களும் மிகவும் திருப்திகரமாக நடைபெற்று வருகின்றன. அணிவகுப்பில் கலந்துகொள்ள, தொண்டர்கள் சாரி சாரியாக வந்து கொண்டிருக்கிறார்கள். நான் கைது செய்யப் பட்டாலும் கூட, தொண்டர்களின் அணிவகுப்பு தொடர்ந்து முன் னேறிக் கொண்டிருக்கும். நான் கைது செய்யப்படாவிடில், என்னிடமிருந்து நீங்கள் தந்திகளை எதிர்பார்க்கலாம்.

விசேஷமாக நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. நான் போதிய விவரங்களை எழுதியிருக்கிறேன். இன்று மாலைப் பிரார்த் தனைக்காக மணலில் ஏராளமான மக்கள் கூடியிருந்தபோது நான் இறுதிச் செய்தி விடுத்தேன்.

நீங்கள் ஆரோக்கியமாக இருக்கவும், பளுவைத் தாங்க உங்க ளுக்கு சக்தி ஏற்படவும் கடவுள் அருள் புரிவாராக.

உங்கள் எல்லோருக்கும் அன்பு.

பாபு

## 20

*மார்ச் 13, 1930*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

என்னுடைய கடைசிக் கடிதமென்று கருதப்பட்ட சென்ற கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்கும் என்று நம்புகிறேன். நான் கைது செய்யப்படுவேன் என எனக்குக் கிடைத்த செய்தி, முற்றிலும் ஆதார பூர்வமானது என்று கூறப்படுகிறது. எனினும் நாங்கள் எங்கள் யாத்திரையின் இரண்டாவது கட்டத்திற்குப் பத்திரமாக வந்திருக்கிறோம். இன்றிரவு நாங்கள் மூன்றாவது கட்டத்தை ஆரம்பிக்கிறோம். யாத்திரைத் திட்டத்தை உங்களுக்கு இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அகமதாபாத்தில் நடக்கும் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்கு நான் போகக் கூடாது என்று எல்லா நண்பர்களும் மிகவும் வற்புறுத்துகிறார்கள். அது மிகவும் பொருள் பொதிந்த ஒரு யோசனையாகும். எனவே குறிப்பிட்ட தினத்தில் நாங்கள் இருக்கும் இடத்திற்கு காரியக் கமிட்டி வரலாம்; அல்லது நீங்கள் மாத்திரம் வரலாம். போராட்டத்தை முடிக்காமல் நாங்கள் திரும்பிப் போகக் கூடாது என்ற உணர்ச்சி நன்கு வளர்க்கப்பட்டிருக்கிறது. நான் திரும்பிச் செல்லுவது அதற்கு ஓரளவு குந்தகத்தை விளைவிக்கும். இதைப் பற்றி உங்களுக்கு எழுதியிருப்பதாக ஜம்னாலால்ஜி என்னிடம் கூறினார். கமலா ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறாளென நம்புகிறேன்.

உங்களுக்கு முழு விவரங்களும் அடங்கிய தந்திகள் கொடுக்க வேண்டுமென நான் கேட்டுக் கொண்டேன்.

தங்கள் உண்மையுள்ள,
பாபு

## 21

*மார்ச் 31, 1930*

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

உங்களுடைய கடிதம் எனக்குக் கிடைத்தது. தண்டியில் பட்டாணியர்கள் யாரும் இராததே நான் உங்களுக்குத் தந்தி கொடுக்காததற்குக் காரணமாகும். அப்படியே இருந்தாலும் நாங்கள் அவர்களைச் சமாளிப்போம். எல்லைப் புறத்திலிருந்து நல்ல, உண்மையான பட்டாணியர்களின் வருகைகூட சிக்கல்களை உண்டாக்கும். தண்டி செல்ல நான் அனுமதிக்கப்படுவேனாயின், தவிர்க்கக்கூடிய சிக்கல்களுக்கு இடம் கொடுக்காமல் அங்கு செல்ல நான் விரும்புகிறேன். குஜராத்தில் எல்லாம் சரிவர நடைபெற்று வருகின்றன என்றே தோன்றுகிறது.

ராய் பரீலியில் அதிகாரிகள் ஏராளமானவர்களைக் கைது செய்திருப்பதைக் குறித்து நான் ஆச்சரியம் அடைகிறேன். தற்காலிகமாக உப்பு வரி விஷயத்தில் மாத்திரம் நீங்கள் கவனம் செலுத்தி வருவது சரியே என்று கருதுகிறேன். மேற்கொண்டு நாம் என்ன செய்ய முடியும், என்ன செய்ய வேண்டும் என்பது இன்னும் இரண்டு வாரங்களில் நமக்குத் தெரிந்துவிடும்.

வேறுவிதமாக நான் அறிவித்தாலொழிய, ஏக காலத்தில் தொடங்குவதற்குத் தயவு செய்து ஏப்ரல் 6-ம் தேதியையே வைத்துக் கொள்ளுங்கள்.

இப்போது இரவு 10 மணி அடிக்கப்போகிறது. எனவே இத்துடன் விடைபெற்றுக் கொள்கிறேன்.

பாபு

## 22

பார்ஸாத், ஜூன் 28, 1931

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

உங்கள் கடிதமும் கார்டும் கிடைத்தன. ராய் பரீலியில் 144-வது பிரிவுத் தடையுத்தரவை அதிகாரிகள் வாபஸ் செய்துள்ளனர் என்பதைக் கேட்க மகிழ்ச்சி அடைகிறேன். சர்க்கார் பிரதம காரியதரிசிக்கு நீங்கள் எழுதிய தெளிவான கடிதமே அதற்குக் காரணம் என்பதில் சந்தேகம் இல்லை. நமது நடவடிக்கைகளை நாம் குற்றம் குறையின்றி நிறைவேற்ற வேண்டும் என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். எனவே கவர்னரைக் கண்டுபேச அனுமதிக்கும்படி நீங்கள் அவரைக் கேட்க வேண்டும். அவரைப் பேட்டி காணும்போது, மாகாணத்திலேயே உயர்தர அதிகாரியான கவர்னரின் முன்னிலையில் தங்களுடைய நிலைமையைத் தெளிவாக எடுத்துக் கூற தாம் எல்லாவிதத்திலும் முயற்சி செய்ய விரும்புவதாக அவரிடம் நீங்கள் கூறவேண்டும். கவர்னரிடமிருந்து நீங்கள் வெறுங்கையுடன் திரும்பி வரலாம். இருந்தாலும் அவரைப் பார்க்க முயற்சிப்பதன் மூலம் நமது நிலைமை நிச்சயமாக பலம்பெறும்; சமரச ஒப்பந்தம் நிறைவேறுவதற்கும் இடம் ஏற்படும். அவரைப் பார்க்க விரும்புவதாக நீங்கள் கூறுவதாலோ, அவர் அதை ஒப்புக்கொண்டால் அவரைப் பார்ப்பதாலோ நமக்கு யாதொரு நஷ்டமும் இல்லை.

உனவ் ஜில்லா நிகழ்ச்சிகளைப் பற்றி 'எங் இந்தியா'வில் நான் எழுதியிருப்பதை நீங்கள் பார்த்திருக்கலாம். அவ்விஷயமாக நீங்களும் மற்றவர்களும் கூறியுள்ள ஆதாரங்களின் மீது நான் மீண்டும் எழுதப் போகிறேன்.

காரியக்கமிட்டிக் கூட்டத்தை ஒத்திவைக்க நேர்ந்தது துரதிர்ஷ்டமாகும். தற்போது அலகாபாத் இருக்கும் நிலையில் அங்கு செல்லுவதை வல்லபாய் சிறிதும் விரும்பவில்லை. நானும்

அவ்விதமேதான் நினைக்கிறேன். கான்பூரிலும், ஐக்கிய மாகாணத்தைச்சேர்ந்த மற்ற இடங்களிலும் நிலவிவரும் பரபரப்பைப் பார்க்கும்போது, தற்காலிகமாக அலகாபாத்தைத் தவிர்த்ததே சிறந்தது என்றும் நினைக்கிறேன்.

பாபு

## 23

பார்ஸாத்,
*ஜூலை 1, 1931*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய ஜூன் 27உ கடிதம் கிடைத்தது. அது பார்டோலியிலிருந்து எனக்குத் திருப்பி அனுப்பப்பட்டுள்ளது. பம்பாயிலிருந்து நான் மீண்டும் பார்ஸாதுக்கு வந்தது உங்களுக்குத் தெரியாது. ஏனெனில் நானும் வல்லபாயும் எங்களுடைய வேலைகளைப் பகிர்ந்துகொள்வது அவசியமாகியிருக்கிறது. நாங்கள் இடைவிடாமல் கண்காணிப்புடன் இருந்து வருவதால், அபாயம் தவிர்க்கப்பட்டு வருகிறது. தென்னுப்பிரிக்காவில் சமரச ஒப்பந்தங்களை அமல் நடத்துவதில் எனக்குச் சங்கடமான அனுபவங்கள் ஏற்பட்டது உண்டு. எங்கள் கடமையை அப்பழுக்கின்றி நூறு சதவிகிதம் நிறைவேற்றுவதற்காக எங்கள் மண்டை உடைவதற்கும் இடம் கொடுக்க வேண்டியிருந்தது. சர்க்காரும் அவர்களுடைய கடமையைச் சரிவர செய்வதற்காக எங்களைக் கைது செய்ய வேண்டியிருந்தது. அவற்றையெல்லாம் நான் மறந்துவிட்டேன் என்றே நினைத்தேன். ஆனல் இப்போது பழைய நினைவுகளையெல்லாம் நான் மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்கிறேன். அந்த அனுபவங்களில் பல இப்போது எனக்கு மீண்டும் ஏற்பட்டுள்ளன. போராட்டமாக இருப்பினும் அல்லது சமரச ஒப்பந்தமாக இருப்பினும், நாம் விசுவாசமுள்ள ஊழியர்களாக இருந்தால், தேசம் முன்னேக்கிச் செல்லும் என்பது நிச்சயம். இதுதான் எனக்குப் பெரு மகிழ்ச்சியை அளிக்கக் கூடியதாகும்.

பிரதம காரியதரிசிக்கு நீங்கள் எழுதிய கடிதங்கள் எல்லாம் எனக்குத் திருப்தி அளித்திருக்கின்றன. கவர்னர் உங்களைப் பார்க்க இசைவாரென நம்புகிறேன்.

உங்கள்மீது கூறப்பட்டுள்ள ஒரு புகாரை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் அதைப் பற்றி எழுதினல் அந்தப் புகாரின் பிரதியைத் திருப்பி அனுப்புங்கள், அல்லது நீங்கள் வரும்போது, அதை உங்களுடன் கொண்டுவாருங்கள். நாம் சந்திக்கும் போது அதையெல்லாம் பற்றி எனக்குச் சொல்லுங்கள்.

பாபு

## 24

(வட்ட மேஜை மகாநாட்டிலிருந்து காந்திஜி திரும்பிவந்ததும், அவரைச் சந்திப்பதற்காக நான் அலகாபாத்திலிருந்து பம்பாய்க் குச் சென்று கொண்டிருந்தபோது, அதிகாரிகள் என்னைக் கைது செய்தனர்; என்னுடன் வந்த ஷெர்வானியையும் கைது செய் தனர். அதே சமயத்தில் சில மாகாணங்களில் பல அவசரச் சட் டங்கள் விதிக்கப்பட்டன. எல்லைப்புற மாகாணத்தில் கான் அப்துல் கபார்கானும், மற்றவர்களும் கைது செய்யப்பட்டார்கள். இவ்விதமெல்லாம் அதிகாரிகள் செய்ததன் நோக்கம் என்ன வெனில், காந்திஜி லண்டனிலிருந்து திரும்பிவருவதற்கு முன் நமது இயக்கத்தை நசுக்கிவிட வேண்டும் என்பதேயாகும்.)

டிசம்பர் *28, 1931*

எனது அன்பார்ந்த ஜவாஹர்,

உங்களுடைய கடிதத்தை இந்து என்னிடம் கொடுத்தாள். நீங்கள் கைது செய்யப்பட்டதைக் குறித்து நான் ஆச்சரியப்படவே யில்லை. கமலாவைச் சென்று பார்க்க இன்னும் என்னல் முடிய வில்லை. நிச்சயமாக இன்றே அல்லது நாளையோ நான் சென்று பார்ப்பேன். இந்துவுக்கு நீங்கள் எழுதிய கடிதங்களின் இரண் டாவது தொகுப்பை நான் வாசித்தேன் என்பதை அறிய நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள். நான் சில யோசனைகளைக் கூறவேண்டு மென நினைத்தேன். ஆனல் நாம் மீண்டும் சுதந்திரமாகச் சந்திக் கும்போது அவற்றைப் பற்றிப் பேசலாம்.

உங்களுக்கும் ஷெர்வானிக்கும் எனது அன்பு.

பாபு

## 25

ஜனவரி *2, 1932*

எனது அன்பார்ந்த ஜவாஹர்,

உங்களுடைய கடிதத்தைப் பார்த்து நான் பெருமகிழ்ச்சி அடைந்தேன். பாவம், வெளியிலுள்ள எங்களைப் பார்த்து நீங்கள் பொருமைப்படுவதற்குக் காரணம் இல்லை. அலுப்புத்தட்டும் சாரமற்ற வேலைகளை வெளியில் உள்ளவர்களிடம் விட்டுவிட்டு, எல்லாப் பெருமையையும் நீங்கள் அடைந்திருப்பதைக் குறித்து உங்கள் மீது எங்களுக்குப் பொருமை ஏற்பட்டிருக்கிறது! எனினும் நாங்கள் இன்னும் அதிகப் பெருமையை அடைவதற்காக உங்கள் மீது வஞ்சம் தீர்க்க சதிசெய்து வருகிறோம். உங்களுக்குச் சில பத்திரிகைகள் வர அனுமதித்திருக்கிறார்கள் என்றே நம்பு கிறேன். நான் எந்தக் காரியம் செய்தாலும், நீங்கள் என் மனக் கண்முன் எப்போதும் இருந்துவருகிறீர்கள்.

அன்றொருநாள் நான் கமலாவைப் பார்த்தேன். அவள் மிகுந்த ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியம். நான் மீண்டும் அவளைச் சென்று பார்த்து, உடம்பு நன்ருகத் தேறும் வரையில் அறையை விட்டு வெளிச் செல்லக்கூடாது என்று வற்புறுத்தப் போகிறேன். டாக்டர் முகமது சம்பந்தமாக எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கையை நீங்கள் அங்கீகரிப்பீர்களென நம்புகிறேன். ஆனந்த பவனுக்கு விதிக்கப்பட்டுள்ள வரியை அவசியம் கொடுத்துவிட வேண்டும்.

உங்கள் இருவருக்கும் என் அன்பு,

பாபு

கடவுளின் அருளும் சர்க்காரின் தயவும் இருக்குமாயின், நாளை நான் ஆசிரமத்திற்குச் செல்லுகிறேன். இரண்டு அல்லது மூன்று நாட்களில் திரும்பிவிடுவேன்.

## 26

எரவாடா மத்திய சிறை,
புனா, டிசம்பர் 31, 1932

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

தீண்டாமைப் பிரச்னையைக் குறித்து தாம் வகுத்துள்ள திட்டத்தைப் பற்றி விவாதிப்பதற்காக அன்றொரு நாள் என்னைப் பார்ப்பதற்கு சொரூப் வந்தார். இலங்கையில் ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி நீங்கள் அவருக்கு ஆலோசனை கூறியதாகச் சொன்னர். அத்தகைய ஓய்வு அவசியமல்ல என்றே நான் கருதுகிறேன். ஏதாவது வேலை செய்ய அவருக்கு நல்ல தெம்பு இருக்கிறது. தீண்டாமை சம்பந்தமாக ஏதாவது வேலை செய்ய அவர் மிகவும் விரும்புகிருர். அதைச் செய்ய அவருக்கு விருப்பம் இருக்கும் வரையில், அவரை அவ்விதமே செய்ய அனுமதிக்க வேண்டும் என்றே நான் எண்ணுகிறேன்.

நீங்கள் மேலும் சில பற்களை எடுத்துவிட்டதாக அவர் என்னிடம் கூறினர். மற்றப்படி நீங்கள் முற்றிலும் ஆரோக்கியத்துடனேயே இருந்து வருவதாக நேரில் பார்த்தவர்கள் எனக்குக் கூறினர். சிறையில் உங்களைப் பார்க்க வருவோரைக் கண்டு பேச நீங்கள் இன்னும் மறுத்துவருவதாகத் தெரிகிறது. சாத்தியமாயின், நீங்கள் அவர்களைப் பார்க்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அவ்விதம் பார்ப்பது, அவர்களுக்குத் திருப்தியைக் கொடுக்கும்.

நாங்கள் நான்கு பேர் அடங்கிய ஒரு கோஷ்டியாக மகிழ்ச்சியுடன் இருந்துவருகிறோம். சகன்லால் ஜோஷியும் இப்போது எங்களுடன் வந்து சேர்ந்து கொண்டிருக்கிருர். ஹரிஜன் தொண்டில் நீங்கள் அக்கறை எடுத்துக் கொண்டு வருகிறீர்களா என்பது

எனக்குத் தெரியாது. எனக்கு சாஸ்திரிகளுடன் ஆனந்தமாக நேரம் போய்க் கொண்டிருக்கிறது. சாஸ்திரங்களைப் பற்றிய மேலெழுந்தவாரியான அறிவு இப்போது எனக்கு அதிகமாகியிருக்கிறது. எனினும் உண்மையான மதத்தைப் பற்றி நான் அதிகமாக அறிந்து கொள்ளும்படி செய்ய அவர்கள் சக்தியற்றவர்களாக இருக்கிறார்கள்!

பாபு

## 27

எரவாடா மத்திய சிறை,
பூனா, பிப்ரவரி 15, 1933

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

உங்களுடைய அருமையான கடிதத்திற்குப் பதிலாக நானும் ஒரு நல்ல கடிதம் எழுத வேண்டும் என்ற நம்பிக்கையுடன் உங்களுக்கு எழுதுவதை ஒத்திப் போட்டு வந்தேன். ஆனால் இதற்கு மேல் நான் அதை ஒத்திப் போட முடியாது. தினந்தோறும் வேலைகள் அதிகமாகி வருகின்றன. எனவே எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு இப்போது ஒரு நல்ல கடிதம் எழுதித் தீர வேண்டும். 'ஹரிஜனை'ப் போன்ற ஒரு குற்றமற்ற பத்திரிகை உங்களுக்கு அனுமதிக்கப்படுகிறதா என்பது எனக்குத் தெரியாது. எனவே உங்களுக்கு இது கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் இப்பத்திரிகையை அனுப்பியுள்ளேன். உங்களுக்கு இது கிடைத்தால், இதைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைத் தயவு செய்து தெரிவியுங்கள். சனாதனிகளுக்கு எதிரான போராட்டம் நாளுக்கு நாள் அதிக ருசிகரமானதாகி வருகிறது, அதிகக் கடினமாகவும் இருந்து வருகிறது. அதில் ஒரு நன்மை என்னவெனில், நீண்ட காலத் தூக்கத்திலிருந்து அவர்கள் விழிப்படைந்திருக்கிறார்கள். அவர்கள் என் மீது பிரயோகம் செய்யும் வசைமாரி, ஆச்சரியமான முறையில் எனக்குப் பலமூட்டுவதாக இருக்கிறது. இந்த உலகிலுள்ள எல்லாத் தீமைகளும், எல்லா ஊழல்களும் என்னிடம் இருப்பதாக அவர்கள் கூறுகின்றனர். எனினும் இந்தப் புயல் அடங்கிவிடும். ஏனெனில் கைகண்ட சஞ்சீவியான அகிம்சையை நான் பிரயோகித்து வருகிறேன் அல்லவா? அவர்களுடைய வசைமொழிகளை நான் எவ்வளவுக்கெவ்வளவு அசட்டை செய்கிறேனோ அவ்வளவுக்கவ்வளவு அவர்களுடைய ஆத்திரமும் மூர்க்கத்தனமும் அதிகமாகின்றன. எனினும் அது, விளக்கைச் சுற்றி விட்டில் பூச்சி மரண நடனம் ஆடுவதற்கே ஒப்பாகும். பாவம், ராஜகோபாலாச்சாரியாரும் தேவதாஸும் கூட சனாதனிகளின் வசைமாரிக்கு இலக்காக வேண்டியிருக்கிறது! லக்ஷ்மிக்கும் தேவதாஸுக்கும் திருமணம் நிச்சயமாகியிருப்பதை அவர்கள் அம்பலத்தில் இழுத்து நீசத்தனமான குற்றச்சாட்டுகளை ஜோடித்து வருகிறார்கள். இவ்விதமாகத் தீண்டாமை ஆதரிக்கப்பட்டு வருகிறது!

தீண்டாமை சம்பந்தமாக அன்ெருரு நாள் சொரூபும், கிருஷ்ணுவும் என்னை வந்து பார்த்தார்கள். குடும்ப சம்பந்தமான பேட்டி என்ற முறையில் இந்துவும் வந்து பார்த்தாள். இந்துவின் ஆரோக்கியம் முதல் தரமாக இருக்கிறது. அவள் சந்தோஷமாக வும் இருக்கிருள். சொரூப் தீண்டாமையை எதிர்த்து குஜராத் திலும், கத்தியவாடிலும் யாத்திரை செய்து வருகிருர். ராஜா வுக்கு உதவியாக தேவதாஸ் டில்லியில் இருந்துவருகிருன். தீண் டாமை எதிர்ப்பு மசோதாக்களையொட்டி ராஜா அசெம்பிளி அங் கத்தினர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டு வருகிருர். எங்கள் நேரத்தையெல்லாம் தீண்டாமை எதிர்ப்பு அலுவல்களே ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. எழுதவேண்டிய கடிதங்கள், நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன. அந்தக் கடிதங்களுக்குத் தேவையான உறைகளையெல்லாம் சர்தார் வல்லபாய் ஒட்டித் தயாரித்துவருகிருர். அவர் பத்திரிகைகளை வாசித்து, தீண்டாமை சம்பந்தமான செய்திகளைத் துருவி எடுப்பதில் சலிப்படைவதில்லை. மேலும் அவர் எல்லையின்றி நகைச் சுவையை அள்ளிவிடும் ஒரு தொழிற்சாலையாகவே இருந்துவருகிருர்! சிறையில் மற்ற எந்தப் பரிசோதனை நாளும் அவருக்கு ஒன்றுதான். அவர் சிறை அதிகாரி களுக்கு ஒருபோதும் எத்தகைய வேண்டுகோளும் விடுப்பதில்லை. ஆனுல் எனக்கோ ஏதாவது ஒரு வேண்டுகோள் விடுக்காமல் ஒரு நாள் கூடச் செல்லுவதில்லை. அவ்விரண்டில் எது மகிழ்ச்சி அளிக்கக் கூடியது என்பது எனக்குத் தெரியாது. எனக்கு ஏற் படும் தோல்விகளை முகம் கோணுமல் நான் ஏற்றுக்கொள்ள முடியு மாயின், அவரைப் போல் நானும் ஏன் மகிழ்ச்சியுடன் இருக்க முடியாது!

உங்களுடைய தனிமையையும், உங்களுடைய புத்தக ஆராய்ச்சியையும் கண்டு நாங்களெல்லோரும் பொருமை அடை கிருேம். நமக்கு ஏற்பட்டுள்ள துன்பங்களைச் சிருஷ்டித்து கொண் டவர்கள் நாம் தான்; சரியாகக் கூறுவதாயின், அத் துன்பங் களுக்குக் காரண கர்த்தா நான்தான். சமஸ்கிருதத்தில் தாம் ஒரு நிபுணராகிவிடலாம் என்று வல்லபாய்க்கு இருந்து வந்த நம்பிக்கையையெல்லாம் நான் தூள் தூளாகத் தகர்த்துவிட்டேன். ஹரிஜன் அலுவல்களின் பரபரப்புக்கிடையே அவரால் சமஸ்கிரு தப் படிப்பில் கவனம் செலுத்த முடியவில்லை.

ஹரிஜன் அலுவல்கள் காரணமாக எனக்கு இன்னும் அதிகத் தொந்தரவுகள் ஏற்படலாம். எனினும் அவை நாஞக வலுவில் தரு வித்துக் கொள்பவை அல்ல என்று உங்களுக்கு உறுதி கூறு கிறேன்.

எல்லா விதத்திலும் நீங்கள் முன்னேற்றம் அடைந்து வருகிறீர்கள் என்று நாங்கள் எல்லோரும் நம்புகிருேம். இதை நான் கூறுவதற்கு மாத்திரமே இங்கே இடமும் நேரமும் இருக் கின்றன!

பாபு

## 28

எரவாடா மத்திய சிறை,
பூனா, மே 2, 1933

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

வரப்போகும் உண்ணாவிரதத்தை எதிர்த்து என் மனம் போராடிக் கொண்டிருக்கையில், நீங்கள் நேரில் என்முன் இருப்பது போலவே தோன்றியது. ஆனால் அப்படியும் பலனில்லை. உண்ணாவிரதம் முற்றிலும் தவிர்க்க முடியாததாகிவிட்டது என்பதை நீங்கள் உணர்ந்துகொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். வெறும் அறிவைக் கொண்டு மாத்திரம் ஹரிஜன் இயக்கத்தின் தத்துவத்தை அறிந்து கொள்ள முடியாது. உலகத்திலேயே அதைப் போன்ற தீமை வேறு எதுவுமில்லை. எனினும் நான் ஹிந்து மதத்தைக் கைவிட்டுவிட முடியாது. ஹிந்து மதம் என்னைக் கைவிட்டுவிட்டால், எனக்கு வாழ்க்கையே ஒரு சுமையாகிவிடும். ஹிந்து மதத்தின் மூலம்தான் கிறிஸ்தவ மதம், இஸ்லாம் மதம் முதலிய மற்றும் பல மதங்களையும் நான் நேசிக்கிறேன். எனவே ஹிந்து மதத்தை என்னிடமிருந்து பறித்துவிட்டால், எனக்கு வாழ்க்கையில் வேறு எதுவுமே இருக்க முடியாது. எனினும் தீண்டாமையுடன் அதாவது உயர்ந்தவர் – தாழ்ந்தவர் என்ற நம்பிக்கையுடன் கூடிய ஹிந்து மதத்தை நான் சகித்துக் கொண்டிருக்க முடியாது. ஆனால் அதிர்ஷ்டவசமாக, அந்தத் தீமைக்கு ஹிந்து மதத்தில் ஒரு தலை சிறந்த மருந்து இருக்கிறது. அந்த மருந்தை நான் பிரயோகித்துப் பார்த்திருக்கிறேன். உண்ணாவிரதத்திற்குப் பிறகு நான் உயிருடன் இருப்பேனாயின், அது நல்லதுதான். உயிர்வாழ வேண்டும் என்பதற்காக எவ்வளவோ முயற்சி செய்தும் கூட இந்த உடல் மறைந்துவிடுமாயின் அதுவும் நல்லதுதான். இந்த உடல், எளிதில் ஒடிந்துவிடக்கூடிய ஒரு சிம்னி விளக்கைக் காட்டிலும் கூட அதிக சீக்கிரத்தில் அழிந்துவிடக் கூடியதாகும். ஒரு சிம்னி விளக்கைப் பத்தாயிரம் ஆண்டுகள் வரையில் கூட நீங்கள் பாதுகாத்துவிடலாம். ஆனால் இந்த உடலை நீங்கள் ஒரு நிமிடம் கூட உருவாக வைத்துக்கொண்டிருக்க முடியாது. எல்லா முயற்சிகளுக்கும் மரணம் முற்றுப்புள்ளி வைத்துவிடுவதில்லை. அது நல்ல விதத்தில் நேருமாயின், மேலும் மகோன்னதமான முயற்சிக்கு அது அஸ்திவாரமாக அமையலாம். எனினும் உங்கள் மனத்திற்கு உண்மை இயல்பாகவே தோன்றாவிடில், வாதத்தினால் உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி நான் செய்யமாட்டேன். உண்ணாவிரதத்தைக் குறித்து உங்களுடைய அங்கீகாரத்தை நான் பெறாவிட்டால் கூட, அந்தச் சோதனை நாட்களில் தொடர்ந்து உங்களுடைய பேரன்புக்கு நான் பாத்திரமாக இருந்து வருவேன் என்பதை அறிவேன்.

உங்களுடைய கடிதம் கிடைத்தது. நேரம் கிடைக்கும்போது அதற்குப் பதில் எழுதலாமென நான் நினைத்தேன். ஆனால் கடவுள் சித்தம் வேறாகியது!

கமலா தனது விலாசத்தைக்கூட எனக்குத் தெரிவிக்கவில்லை. அவளிடமிருந்து பல நாட்களாகக் கடிதமே இல்லை. நீங்கள் அவளைப் பார்க்கும்போது தயவு செய்து அவளிடமும் இந்துவிடமும் எனது அன்பைத் தெரிவிக்கவும். உண்ணாவிரதத்தைப் பற்றி கமலா கவலைப்பட வேண்டாம். சாத்தியமாயின் எனக்கு ஒரு தந்தி கொடுங்கள்.

பாபு

## 29

*ஜுலை 22, 1933*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நான் உங்களுக்குக் கடிதம் எழுத வேண்டுமென அடிக்கடி விரும்பினேன் என்றாலும், எழுத இயலவில்லை. புதிதாக நான் பெற்றுள்ள சக்தியையெல்லாம், என் முன்னுள்ள அவசரமான அலுவல்களைக் கவனிப்பதற்கே செலவிட வேண்டியிருக்கிறது. உங்களுடைய தாயாருடனும் கமலாவுடனும் நான் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தேன். சொரூபையும் ரஞ்ஜித்தையும் நான் அதிகமாகப் பார்க்க முடியவில்லை.

கிருஷ்ணாவைப் பற்றி உங்கள் தாயார் மிகவும் கவலைப்படுகிறார். அவளுடைய எதிர்காலத்தைப் பற்றி, தாயார் என்னிடம் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது யோசனை கூறுவதாயின், தயவு செய்து கடிதம் எழுதுங்கள்.

தேவதாஸையும் லக்ஷ்மியையும் நான் புனாவில் விட்டுவிட்டு வந்தேன். அவர்கள் இப்போது இங்கு வந்து சேருவார்கள். தற்காலிகமாக தேவதாஸ் டில்லியிலேயே நிரந்தரமாகத் தங்கியிருப்பான். மகாதேவ், பா, பிரபாவதி ஆகியோர் என்னுடன் இருக்கின்றனர். அவர்களும் கூடிய சீக்கிரம் இங்கிருந்து சென்றுவிடுவார்களென எதிர்பார்க்கிறேன்.

உண்ணாவிரதத்திற்கு முன்பு இருந்த பலத்தை மீண்டும் நான் மெதுவாக அடைந்து வருகிறேன்.

அன்பு,

பாபு

## 30

(எனது இளைய சகோதரி கிருஷ்ணுவுக்கும் ராஜா ஹதீசிங்கிற்கும்திருமணம் நடந்தபோது இந்தக் கடிதம் காந்திஜியினல் எழுதப்பட்டதாகும்.)

அக்டோபர், *18, 1933*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

கதர் நூலால் செய்யப்பட்ட இரண்டு மாலைகளை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். மணப் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் போடுவதற்காக அது பிரத்தியேகமாக என்னல் எனது ஆசிகளுடன் நூற்கப்பட்டதாகும். நீங்கள் என் சார்பில் இந்த மாலைகளை! அவர்களுடைய கழுத்தில் தயவு செய்து போடுவீர்களா? அவை உரிய காலத்தில் உங்களுக்கு வந்து சேருமென நம்புகிறேன்.

திருமண வைபவம் வேண்டாமென ஸ்ரீமதி ஹதீசிங் தடுத்துவிட்டதைக் குறித்து நான் வருந்தாமலிருக்க முடியவில்லை. இவ்விஷயங்களிலெல்லாம் நான் ஒரு கர்னடகம்!

உங்கள் எல்லோருக்கும் அன்பு,

பாபு

## 31

சேவாகிராமம், வார்தா,
ஆகஸ்டு *10, 1934*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

பம்பாயில் நடைபெறும் கூட்டங்களுக்கு வரும்படி வழக்கமாக அனுப்பப்படும் அழைப்பு கான் அப்துல் கபார்கானுக்குக் கிடைத்தது. அக் கூட்டங்களுக்கு வர அவருக்கு விருப்பமில்லை. அவரை வற்புறுத்த நானும் விரும்பவில்லை. பம்பாயில் நடைபெறும் கூட்டங்களிலும், வைபவங்களிலும் பேசும்படி அவரைக் கேட்டுக் கொள்வார்கள். அவர் இப்போது அவ்விதம் பேசுவதை நான் விரும்பவில்லை. இந்த வருடம் முடியும் வரையில் அவர் என்னுடன் இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். அவர் பலவீனமாக இருக்கிருர். எனவே அவர் நோய்க்கு இலக்காகவும் இடம் உண்டு. ஆகையால் கூட்டங்களுக்கு வர இயலாததற்காக அவரைத் தயவு செய்து மன்னிப்பீர்களா?

அன்பு,

பாபு

# 32

ஆகஸ்டு 17, 1934

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

உணர்ச்சி ததும்பும், உருக்கமான உங்கள் கடிதம் கிடைத்தது. அதற்கு, என் உடல் நிலை இடம் கொடுப்பதைக் காட்டிலும் அதிகமாக நான் ஒரு நீண்ட கடிதம் எழுத வேண்டும்.

சர்க்கார் அதிகப் பெருந்தன்மையுடன் நடந்து கொள்வார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். இருந்தாலும் கமலாவுக்கும், தாயாருக்கும் மருந்துகளோ அல்லது டாக்டர்களோ செய்ய முடியாத நன்மையை, சிறையிலிருந்து உங்களுடைய தற்கால விடுதலை செய்திருக்கிறது.* நீங்கள் இப்போது எதிர்பார்ப்பதைக் காட்டிலும் அதிக நாட்கள் வெளியில் இருக்க அனுமதிக்கப்படுவீர்கள் என்று நம்புகிறேன்.

உங்களுடைய ஆழ்ந்த வருத்தத்தை நான் உணருகிறேன். உங்களுடைய உணர்ச்சிகளைத் தங்குதடையின்றி நீங்கள் வெளியிட்டிருப்பது முற்றிலும் சரியேயாகும். எனினும் நீங்கள் எழுதியிருப்பதை ஆழ்ந்து ஆலோசிப்பீர்களாயின், உங்களுடைய ஏமாற்றத்திற்கும் வருத்தத்திற்கும் போதிய காரணம் இல்லை என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். என் தோழமையை நீங்கள் இழந்துவிடவில்லை என்று நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். 1917-லும் அதற்குப் பிறகும் உங்களிடம் நான் எவ்விதம் இருந்தேனே அவ்விதமேதான் இப்போதும் இருக்கிறேன். பொதுவான லட்சியத்தில் எனக்கிருந்த பேரார்வம் இன்னும் அப்படியேதான் இருந்துவருகிறது. நம் நாடு பரிபூரணமான சுயேச்சை அடைய வேண்டும் என்பதே என் விருப்பம். உங்களுக்கு மன வேதனையைக் கொடுத்துள்ள ஒவ்வொரு தீர்மானமும் பரிபூரணமான சுயேச்சையை லட்சியமாகக் கொண்டே தயாரிக்கப்பட்டிருக்கிறது. தீர்மானங்களுக்கும், தீர்மானங்களில் அடங்கியுள்ள கருத்துகளுக்கும் நானே முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ஆனல் அந்தந்தக் காலத்திற்குத் தேவை எது என்பதை அறிந்துகொள்ளும் திறமை எனக்கு உண்டு என நான் கற்பனை செய்துகொள்கிறேன். அதன் பலனுக உருவானவைதான் அத் தீர்மானங்களாகும். இங்கேதான், லட்சியத்தை அடைவதற்கான முறைகளையும் வழிகளையும் பற்றி நமக்குள் வேற்றுமை எழுகின்றது.

---

* ஸ்ரீமதி கமலா நேருவின் உடல் நிலை கவலைக்கு இடமாக இருந்ததால், நேருஜியை சிறையிலிருந்து சர்க்கார் தற்காலிகமாக விடுதலைசெய்தனர். இதையே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறர். எனினும் அவர் விடுதலை அடைந்த பத்து நாட்களுக்குள் அவரை அதிகாரிகள் மீண்டும் சிறைக்கு அழைத்துச் சென்றுவிட்டார்கள்.

என்னைப் பொறுத்தமட்டில், லட்சியம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு அதை அடைவதற்கான வழிகளும் முக்கியமாகும்; ஒரு விதத்தில் லட்சியத்தைக் காட்டிலும்கூட அதை அடைவதற்கான வழிகள் அதிக முக்கியமானவை. வழிகள் ஓரளவு நமது கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவை. வழிகளில் நமக்குள்ள பிடியை நாம் இழந்துவிடுவோமாயின், லட்சியத்தில் நமக்குள்ள பிடியையும் இழக்க நேரும்.

தான்தோன்றித் தனமான பேச்சைப் பற்றிய தீர்மானத்தை விருப்பு வெறுப்பின்றி வாசித்துப் பாருங்கள். சோஷலிசக் கொள்கையைப் பற்றி அதில் ஒரு வார்த்தைகூட இல்லை. அதில் சோஷலிஸ்டுகளுக்கு மிகவும் மதிப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. நெருங்கிப் பழகியதன்மூலம் அவர்களில் சிலரை நான் நன்கு அறிவேன். அவர்களின் தியாகம் எனக்குத் தெரியாதா? அவர்கள் மிகவும் அவசரப்படுகிறார்கள். அவர்கள் ஏன் அவசரப்படக்கூடாது? அவர்களைப் போல் அவ்வளவு விரைவாக என்னால் செல்ல முடியாவிடில், அவர்களை நிற்கும்படியும், என்னையும் அவர்களுடன் அழைத்துச் செல்லும்படியும் நான் கேட்க வேண்டும். இதுதான் எனது நிலைமையாகும். 'சோஷலிசம்' என்பதற்கு அகராதியில் என்ன அர்த்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் பார்த்தேன். அந்த அர்த்தத்தைப் பார்ப்பதற்கு முன் எனது நிலைமை எப்படி இருந்ததோ அதற்குமேல் அதிகமாக அது எதையும் விளக்கவில்லை. அதன் முழு அர்த்தத்தையும் தெரிந்துகொள்ள நான் எதை வாசிக்க வேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்கள்? மசானி எனக்குக் கொடுத்த புத்தகங்களில் ஒன்றை நான் வாசித்தேன். நரேந்திர தேவ் சிபாரிசு செய்த புத்தகத்தை வாசிப்பதில் எனக்கு ஒழிந்த நேரத்தையெல்லாம் இப்போது அர்ப்பணம் செய்துவருகிறேன்.

காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடம் நீங்கள் கடுமையாக நடந்துகொள்கிறீர்கள். அவர்கள் நமது சகாக்கள் அல்லவா? நாம் எல்லோரும் ஒரு சுதந்திர ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் நம்பிக்கைக்கு உரியவர்கள் அல்லாவிடில், அவர்களை மாற்றிவிட வேண்டியதுதான். எனினும் மற்ற சிலரைப் போல் அவ்வளவு துன்பத்தை ஏற்கும் சக்தி அவர்களுக்கு இல்லை என்பதற்காக அவர்களைக் குறை கூறுவது தவறாகும்.

சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லித் தீர்த்தபின், நான் ஆக்க வேலையை விரும்புகிறேன். எனவே நாம் சந்திப்பதற்கில்லையாதலின், இப்போது நான் என்ன செய்யவேண்டும் என்று விரும்புகிறீர்கள்? உங்கள் கருத்துக்களைப் பிரதிபலிக்கும் சிறந்த பிரதிநிதிகள் யார் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

டிரஸ்ட் சம்பந்தமாக விவாதம் நடந்தபோது நான் இல்லை; வல்லபாய் இருந்தார். உங்களுடைய மன நிலை கோபத்தையே வெளிப்படுத்துகின்றது. டிரஸ்டிகள் தங்களுடைய கடமையைச்

செய்வார்களென நீங்கள் நம்ப வேண்டும். தவறு எதுவும் நடந்திருப்பதாக நான் கருதவில்லை. வேறு அலுவல்களில் நான் ஈடுபட்டிருந்ததால், அவ்விஷயத்தைப்பற்றிக் கவனிக்கவில்லை. அதன் சம்பந்தமான தஸ்தாவேஜுகளையும் மற்றவைகளையும் இப்போது நான் பரிசீலனை செய்து வருகிறேன். மற்ற டிரஸ்டிகள் உங்களுடைய உணர்ச்சிகளுக்கு முற்றிலும் மதிப்புக் கொடுப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. நான் இவ்விதம் உறுதி கூறியபின், இவ்விஷயத்தைக் குறித்து நீங்கள் உங்கள் மனத்தை அலட்டிக் கொள்ள வேண்டாம் என்றே உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். உங்கள் தந்தையின் நினைவையொட்டி உங்களுக்கு எவ்வளவு மதிப்பும் மரியாதையும் இருக்கிறதோ, அவ்வளவு மதிப்பும் மரியாதையும் சக டிரஸ்டிகளுக்கும் இருக்கும் என நீங்கள் எண்ணுவதே உங்களுடைய பெருந்தன்மையான சுபாவத்துக்குப் பொருத்தமாகும். தந்தையினுடைய நினைவின் காவலராக தேச மக்கள் இருக்கட்டும். அந்த மக்களில் ஒருவர்தான் நீங்கள்.

இந்து சௌக்கியமாக இருக்கிருள் என்றும், புதிய வாழ்க்கையை விரும்புகிருள் என்றும் நம்புகிறேன். கிருஷ்ணவைப் பற்றி ஏன் யாதொரு தகவலுமில்லை?

அன்பு,

பாபு

## 33

வார்தா
நவம்பர் 22, 1934

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய ஆரோக்கியத்தைப் பற்றி விசாரித்து சில தினங்களுக்கு முன் நான் உங்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். நேற்று இங்கு வந்த உங்கள் தாயார், கமலாவிடமிருந்து வருவதைத் தவிர வேறு கடிதங்கள் எதுவும் உங்களுக்கு வருவதில்லை என்று என்னிடம் கூறுகிருர். உங்களுடைய கடிதப் போக்குவரத்தைக் கட்டுப்படுத்துவதன் சம்பந்தமான விதிகளை அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்பதையும், உங்கள் நேரத்தை எவ்விதம் கழித்து வருகிறீர்கள் என்பதையும் தயவு செய்து எனக்கு அறிவியுங்கள்.

அன்பு,

பாபு

## 34

(இந்தக் கடிதமும் பின்வரும் மற்றும் சில கடிதங்களும் ஜெர்மனியில் என் விலாசத்திற்கு அனுப்பப்பட்டவை. எனது மனைவியின் உடல் நிலை கவலைக்கிடமாக இருந்ததால், அல்மோரா சிறையிலிருந்து அதிகாரிகள் என்னைத் திடீரென்று விடுதலை செய்தார்கள். அப்போது அவள் ஜெர்மனியில் பிளாக் பாரஸ்ட் என்ற இடத்திலுள்ள ஆரோக்கிய சாலையில் சிகிச்சை பெற்று வந்தாள். நான் விடுதலை அடைந்த உடனேயே ஜெர்மனியில் அவள் இருந்த இடத்திற்கு அவசரமாகப் புறப்பட்டுச் சென்றேன்,)

வார்தா,
அக்டோபர் 3, 1935

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய கடிதங்கள் கெடியாரத்தைப் போல் குறித்த காலத்தில் மிகவும் ஒழுங்காக வந்து கொண்டிருக்கின்றன. அவை மிகவும் மகிழ்ச்சி அளிப்பவையாகவும் இருக்கின்றன.

கமலா தனது நிலையை மிகவும் தைரியமாகச் சமாளித்து வருகிறுள் என்பதைக் காண்கிறேன். அவளது முயற்சி பலனைக் கொடுக்கும். இயற்கை வைத்திய முறைகளில் எனக்குள்ள பிரேமையை நீங்கள் அறிவீர்கள். ஜெர்மனியிலேயே பல இயற்கை வைத்திய சாலைகள் இருக்கின்றன. கமலாவின் நிலை அந்தக் கட்டத்தைத் தாண்டியிருக்கலாம். எனினும் யார் கண்டார்கள்? அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய நோய்களில் பல, இயற்கை வைத்திய முறையின் மூலம் தீர்க்கப்பட்டுள்ளன என்பது எனக்குத் தெரியும். எனது இந்த அனுபவத்தைத் தங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

அடுத்த ஆண்டு காங்கிரஸ் கிரீடத்தைத் தரிக்கும் விஷயமாக நீங்கள் எழுதிய கடிதம் எனக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது. அதற்கு நீங்கள் சம்மதித்ததைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். அதனுல் பல சங்கடங்கள் தீரும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம். லாகூரில் நீங்கள் வகித்த காங்கிரஸ் தலைமைப் பதவிக்கும், லக்ஷ்மணபுரியில் வகிக்கப் போகும் தலைமைப் பதவிக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. லாகூரில் எல்லாம் சிறிதும் தகராறின்றி நடைபெற்றன. ஆனுல் லக்ஷ்மணபுரியில் அதற்கு நேர்மாருக இருக்கும். அவற்றை யெல்லாம் உங்களைக் காட்டிலும் திறமையுடன் சமாளிக்கக்கூடிய வேறு யாரையும் நான் கற்பனை செய்து கொள்ள முடியாது. அந்தப் பளுவை வகிப்பதற்கான எல்லா சக்தியையும் கடவுள் உங்களுக்கு அளிப்பாராக.

எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக உங்களுடைய நூலை நான் வாசித்து வருகிறேன். அதிலுள்ள

அத்தியாயங்கள் என் மனத்தையே அவற்றில் லயிக்கச் செய்கின்றன. இப்போது இதைக் காட்டிலும் நான் எதுவும் சொல்லுவதற்கில்லை.

இந்தக் கடிதத்தின் மூலம் உங்கள் எல்லோருக்கும் எங்கள் அன்பைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பாபு.

## 35

டில்லி,
*மார்ச் 9, 1936.*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

அவ்விதமாக நீங்கள் கமலாவை ஐரோப்பாவிலேயே என்றென்றைக்கும் விட்டுவிட்டுத் திரும்புகிறீர்கள். எனினும் அவளது ஆன்மா ஒருபோதும் இந்தியாவை விட்டு வெளிச்சென்றதில்லை. அது உங்களுக்கும் எங்களில் பலருக்கும் எப்போதும் ஓர் அரும் பொக்கிஷமாக இருந்துவரும். எங்களுக்குள் நடந்த இறுதிச் சம்பாஷணையை நான் ஒருபோதும் மறக்க முடியாது. அப்போது எங்கள் இருவருடைய கண்களும் கலங்கின.

இங்கே உங்களுக்கு மகத்தான பொறுப்பு காத்துக்கொண்டிருக்கிறது. அதை வகிக்கும் சக்தி உங்களுக்கு உண்டு என்பதற்காகவே அந்தப் பொறுப்பு உங்கள் மீது சுமத்தப்பட்டிருக் டிருக்கிறது. என் உடல் நிலை முன்போல் இருந்திருக்குமாயின் நான் உங்களைப் பார்க்க வந்திருப்பேன். ஆனால் இப்போது நான் அவ்விதம் வரத் துணியவில்லை. என் உடலில் குறிப்பிடும்படியான கோளாறு எதுவும் இல்லை. எனது எடை கூட அதிகமாகியிருக்கிறது. ஆனால் மூன்று மாதங்களுக்கு முன் இருந்த ஜீவசக்தி கூட எனக்கு இப்போது இல்லை என்று தோன்றுகிறது. இதில் விசித்திரமான நிலைமை என்னவெனில், நான் ஒரு போதும் நோயுற்றதில்லை. இருந்தாலும் என் உடல் பலவீனமடைந்திருக்கிறது; கருவி அதிக ரத்த அழுத்தத்தைக் காட்டுகிறது. எனவே நான் கண்காணிப்புடன் இருக்க வேண்டும்!

ஒரு சில நாட்கள் ஓய்வு எடுத்துக் கொள்வதற்காக நான் டில்லியில் இருக்கிறேன். நீங்கள் முதலில் போட்ட திட்டம் நிறைவேறியிருந்தால், நாம் சந்திப்பதற்காக வார்தாவிலேயே நான் தங்கியிருப்பேன். அங்கு உங்களுக்கு அதிக அமைதியாகவும் இருந்திருக்கும். எனினும் நான் வார்தாவில் இருந்தாலும், டில்லியில் இருந்தாலும் ஒன்றுதான் என்று நீங்கள் கருதினால், நாம் டில்லியில் சந்திக்கலாம். அங்கு நான் இம்மாதம் 23-ஆம் தேதி வரை

யில் நிச்சயமாக இருப்பேன். ஆனால் நீங்கள் வார்தாவில் சந்திக்க விரும்பினால், நான் சீக்கிரமாக வார்தாவுக்கு திரும்பிவிடுகிறேன். நீங்கள் டில்லிக்கு வந்தால், ஹரிஜன் ஜாகைகளில் தங்கியிருக்கலாம். அவை கிங்ஸ்வேயில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள மிகவும் நல்ல இடமாகும். சாத்தியமாயின், நீங்கள் நாம் சந்திக்கும் தேதியை எனக்கு அறிவியுங்கள். ராஜேந்திரபாபுவும், ஜம்னலால் ஜியும் உங்களுடன் கூட இருப்பார்கள். வல்லபாயும் அங்கு வந்திருப்பார்; இருந்தாலும் அவர் வராமல் இருப்பதே சிறந்ததென நாங்கள் எல்லோரும் நினைத்தோம். மற்ற இருவரும் அரசியல் பிரச்னையைப் பற்றி விவாதிப்பதற்காக அல்ல, உங்களுக்கு அனுதாபம் தெரிவிப்பதற்காக அங்கு வந்திருப்பார்கள். நீங்கள் குடும்ப அலுவல்களை முடித்தபின், நாம் எல்லோரும் சந்தித்து அரசியல் பிரச்னைகளைப் பற்றி விவாதிப்போம்.

கமலாவின் மரணத்தினால் ஏற்பட்ட துக்கத்தையும், உடனடியாக உங்களைவிட்டுப் பிரிந்திருப்பதையும் இந்து தைரியத்துடன் சகித்துக் கொண்டிருப்பாள் என்று நம்புகிறேன். அவளுடைய விலாசம் என்ன?

உங்களுக்கு எல்லாம் நலமாக இருக்கட்டும்.

அன்பு,

பாபு

## 36

ஏப்ரல் 21, 1936

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

குறிப்புகள் அருமையாக இருக்கின்றன. உங்களுடைய விடைகள் பூரணமாகவும், நேரடியாகவும் இருக்கின்றன.

வரப்போகும் கூட்டத்தைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? அங்கு விவாதம் நடைபெறுமாயின் அது பரஸ்பரம் ஒருவருடைய கருத்துகளைக் குறித்து மற்றொருவருக்குத் திருப்தி உண்டாகும்படி செய்வதற்காகவே இருக்கும். எந்த விஷயமும் பூரணமாக விவாதிக்கப்பட்டுளது என்று நீங்கள் கருதும்போது, மேற்கொண்டு அதுபற்றிய விவாதத்தை நீங்கள் நிறுத்திவிடலாம். எல்லோரும் ஒருமித்து வேலை செய்யவேண்டும் என்றே நீங்கள் விரும்புகிறீர்கள். அவ்விதமே நடக்கும் என்பதில் எனக்கு மிகுந்த நம்பிக்கை இருந்து வருகிறது.

நான் 23-ந் தேதி நாகபுரிக்குச் செல்லுகிறேன்.




1922-ல் சபர்மதி சிறையில் காந்திஜி இருந்த அறை

சர்தாரின் உடல் நிலை இன்னும் அபிவிருத்தி அடையவில்லை. அவர் இப்போது மோர் மாத்திரமே சாப்பிட்டு வருகிறார். மே, 8-ந் தேதி அவரை நந்தி மலைக்கு அழைத்துச் செல்லத் தீர்மானித்திருக்கிறேன். நீங்களும் அங்கே வர சாத்தியமாக இருக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

அன்பு,

பாபு.

## 37

நந்தி மலை,
*மே 12, 1936*

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

அகாதாவுக்கு நான் எழுதிய பதிலின் நகலை உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.* அதற்குக் காரணம் என்னவெனில், உங்களுடைய நிலையை நான் சரியாக எடுத்துக் கூறியிருக்கிறேனா என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்பதுதான்.

---

*ஸ்ரீமதி அகாதா ஹாரிசனுக்கு காந்திஜி எழுதிய கடிதத்தின் விவரம் பின் வருமாறு:

வார்தா,
ஏப்ரல்

எனது அன்புள்ள அகாதா,

உங்களுடைய 17உ கடிதம் கிடைத்தது. ஜவாஹர்லாலிடமிருந்து அதற்குக் குறைந்த எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. அவருடைய பிரசங்கம் அவரது நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக இருக்கிறது. அவர் தேர்ந்தெடுத்துள்ளவர்கள் அடங்கிய 'மந்திரி சபை'யில் 1920-லிருந்து நிலவிவரும் சம்பிரதாயமான அபிப்பிராயங்களை ஆதரிப்பவர்களே பெரும்பான்மையோராக இருக்கிறார்கள் என்பதை நீங்கள் காணலாம். இன்று என்னால் சாத்தியமாயின், புதிய அமைப்புத் திட்டத்தை ஒழித்துவிடவே நான் விரும்புவேன். நான் விரும்பும் எந்த அம்சமும் அதில் இல்லை. எனினும் ஜவாஹர்லாலின் வழி என்னுடைய வழி அல்ல. நிலம் முதலியவை சம்பந்தமாக அவரது கொள்கையை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அவரது முறைகளில் எதையும் நான் ஒத்துக்கொள்ளவில்லை. இனப் போராட்டத்தைத் தடுக்க நான் எல்லா விதத்திலும் முயற்சி செய்வேன். அவரும் அவ்விதமே செய்வாரென எதிர்பார்க்கிறேன். எனினும் அந்தப் போராட்டத்தைத் தடுப்பது சாத்தியம் என்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை. என்னுடைய முறை ஒத்துக்கொள்ளப்படுமாயின், அதைத் தடுப்பது முற்றிலும் சாத்தியம் என்பதே எனது நம்பிக்கை. ஜவாஹர்லால் தமது முறைகளை எடுத்துக் கூறுவதில் தீவிரமாக இருப்பினும், செயலில் அவர் நிதானமும், சாந்தமும் உள்ளவர். அவரை நான் அறிந்த வரையில், அவர் அவசரப்பட்டு போராட்டம் எதுவும் மூளும்படி செய்துவிடமாட்டார். போராட்டம் அவர் மீது திணிக்கப்படுமாயின், அவர் அதிலிருந்து பின்தாங்கவும் மாட்

'இடைவிடாத, நாசகரமான இனப் போராட்டத்திற்கு இடம் கொடுக்கும் ஒரு முறையையோ, அல்லது முக்கியமாக ஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட முறைகளையோ ஆதரிக்கும் குற்றத்துக்கு' நான் ஆளாகவில்லை. 'சில்லறைக் குற்றங்கள் செய்தவர்களைக் கண்டித்து, பெரும் தவறுகள் செய்த மற்றவர்களைப் புகழும் குற்றத்துக்கும்' நான் ஆளாகவில்லை.

நீங்கள் என் மீது சுமத்துவதாகத் தோன்றும் குற்றத்திற்கு நான் என்னையறியாமலேயே இடம் கொடுத்திருக்கலாம். அப்படியாயின், அதற்கு ஆதாரமாக நீங்கள் குறிப்பிட்ட உதாரணங்களை எனக்கு எடுத்துக் காட்டவேண்டும். விஷயங்களைச் சமாளிக்க நீங்கள் மேற்கொள்ளும் முறைக்கும் நான் மேற்கொள்ளும் முறைக்கும் வேற்றுமை உண்டு என்பதை நான் முன்பே ஒத்துக்கொண்டிருக்கிறேன். எனினும் தற்போதுள்ள முறையைப் பொறுத்தமட்டில் நமக்குள் யாதொரு கருத்து வேற்றுமையும் இல்லை.

டாக்டர் அன்சாரியின் மரணம் ஒரு பெரும் அடியாகும். என்னைப் பொறுத்த மட்டில் அவரது நட்பு அரசியல் நட்பைக் காட்டிலும் எவ்வளவோ மேலானது.

நீங்கள் காளிக்குச் செல்லுவீர்களென நம்புகிறேன். இல்லாவிடில் கொஞ்சம் குளிர்ந்த காற்று வாங்குவதற்கு இங்கே வாருங்கள்.

அன்பு,

பாபு

---

டார். ஆனால் அவ்விஷயத்தில் காங்கிரஸ் ஒருமித்த மனத்துடன் இல்லை. எங்களுக்குள் வேற்றுமை இருக்கத்தான் செய்கிறது. போராட்டத்தைத் தவிர்ப்பதே எனது முறையின் நோக்கமாகும். அவரது முறை அப்படியல்ல. ஜவாஹர்லால் அவரது சகாக்களில் பெரும்பாலோருடைய தீர்மானங்களையும் ஒப்புக்கொள்வார் என்பதே எனது அபிப்ராயமாகும். அவரைப் போன்ற இயல்புடைய ஒருவருக்கு இது மிகவும் கடினமாகும். அவருக்கு இது கடினமாகத்தான் இருக்கிறது. அவர் என்ன செய்தாலும், அதைப் பெருந்தன்மையுடனேயே செய்வார். வாழ்க்கையின் லட்சியத்தையொட்டி எங்களுக்குள் கருத்துவேற்றுமை சந்தேகமின்றி அதிகமாகியிருக்கிறதெனினும், எங்களுக்குள் இருக்கும் நெருங்கிய உள்ள ஒற்றுமை இன்றிருப்பதுபோல் இதற்குமுன் ஒரு போதும் இருந்ததில்லை.

பகிரங்கமாக வெளியிடவேண்டும் என்பதற்காக இதை நான் எழுதவில்லை. எனினும் இதை உங்களுடைய நண்பர்களிடம் காட்ட உங்களுக்குச் சுதந்திரம் உண்டு.

அன்பு,

பாபு

## 38

நந்தி மலை,
மே 21, 1936

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

'ஹிந்து'விலிருந்து கத்தரிக்கப்பட்ட இரண்டு விஷயங்களை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் கூறியதை நிருபர் சரியாகக் குறிப்பிட்டிருக்கிறார் என்று நான் நம்பவில்லை. அவ் விவரத்தைத் தாங்கள் அனுப்பக் கூடுமாயின், அந்த இரண்டு விஷயங்களைப் பற்றியும் நீங்கள் கூறியது என்ன என்பதைச் சரியாக அறிந்துகொள்ள நான் விரும்புகிறேன். பெண்களை விலக்கியிருப்பது முற்றிலும் நீங்கள் செய்துள்ள காரியமேயாகும். காரியக் கமிட்டியில் ஒரு பெண்மணியைச் சேர்த்துக் கொள்ளாமல் இருப்பது சாத்தியமென்று வேறு எவரும் நினைத்திருக்கக்கூட மாட்டார்கள். தேசத்தின் தற்போதைய பொருளாதார நிலையில் கதர் தவிர்க்கமுடியாதது என்றும், நாடு சுதந்திரம் அடைந்தபின், கை நெசவுத் துணி மில் துணிக்கு இடம் கொடுக்கவேண்டியிருக்கும் என்றுமே நீங்கள் கூறிவந்திருப்பதாக நான் புரிந்து கொண்டுள்ளேன்.

அன்பு,
பாபு

## 39

பெங்களூர்,
மே 29, 1936

அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய 25-ந் தேதி கடிதம் எனக்குக் கிடைத்தது. அவ்விதம் நீங்கள் மிகுந்த பரபரப்புடனும் அவசரமாகவும் யாத்திரை செய்துவருகிறீர்கள். அதற்குத் தேவையான பலத்தைக் கடவுள் உங்களுக்கு அளிப்பாராக. நீங்கள் ஒரு வாரமாவது காளியில் இருப்பது கூட ஒரு வரப்பிரசாதமாகவே இருக்கும்.

கதரைப் பற்றிய உங்களுடைய அறிக்கையை நான் வெளியிட உத்தேசித்திருக்கிறேன். அவ்விஷயமாகப் பல கடிதங்கள் வந்திருக்கின்றன. திரித்தும் சுருக்கமாகவும் வெளியிடப்பட்டுள்ள அந்த அறிக்கை, கதரில் நம்பிக்கையுள்ள நமது மக்களிடையே திகிலை உண்டாக்கியிருக்கிறது. உங்களுடைய அறிக்கையின் முழுவிவரம் நிலைமையை ஓரளவு சீர்படுத்தும்.

காரியக் கமிட்டியில் ஒரு பெண்மணியை நியமிக்காமல் விட்டிருப்பதற்கு நீங்கள் கூறியுள்ள விளக்கம் எனக்குத் திருப்தி

யளிக்கவில்லை. கமிட்டியில் ஒரு பெண்ணை அங்கத்தினராக நியமிக்க எள்ளளவு விருப்பம் இருப்பதாக நீங்கள் காட்டியிருந்தால் கூட, பழைய அங்கத்தினர்களில் ஒருவர் விலகிக் கொள்வதில் யாதொரு தகராறும் இருந்திராது. புலாபாயை நியமிக்க வேண்டும் என்பதில் மாத்திரம்தான் 'நிர்ப்பந்தம்' இருந்தது. அவரது பெயரை முதல் தடவையாகக் கூறியபோது அதை நீங்கள் ஆட்சேபிக்கவில்லை. மற்ற எந்த அங்கத்தினரையும் பொறுத்த மட்டில் நிர்ப்பந்தம் எதுவும் இல்லை. ஒரு சோஷலிஸ்டு அங்கத்தினரின் பெயரை விலக்கிவிட்டு ஒரு பெண்மணியை அங்கத்தினராக நியமிப்பதற்கு உங்களுக்குப் பூரண சுதந்திரமும் இருந்தது. என் நினைவுக்கு எட்டிய வரையில், சரோஜினி தேவியின் ஸ்தானத்தில் வேறு எந்தப் பெண்மணியை நியமிப்பது என்பதை யொட்டி ஒரு முடிவு செய்ய உங்களாலேயே இயலவில்லை. சரோஜினி தேவியை அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்வதிலும் உங்களுக்கு விருப்பமில்லை. காரியக் கமிட்டியில் எப்போதும் ஒரு பெண்மணியையும், சில முஸ்லிம்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற சம்பிரதாயத்தில் உங்களுக்கு நம்பிக்கை இல்லை என்று கூட நீங்கள் கூறினீர்கள். எனவே காரியக் கமிட்டியில் ஒரு பெண்மணியைச் சேர்க்காமல் விட்டதற்கு முற்றிலும் உங்களுடைய விருப்பமே காரணமாகும். அந்தச் சம்பிரதாயத்தை மீற வேறு எந்த அங்கத்தினருக்கும் விருப்பமோ அல்லது தைரியமோ இருந்திருக்க முடியாது. காரியக்கமிட்டியில் ஒரு பெண்ணைச் சேர்த்துக் கொள்ளாததற்கு நான்தான் பொறுப்பாளி என்று சில காங்கிரஸ் வட்டாரங்களில் என்மீது குற்றம் சாட்டுகிறார்கள் என்பதையும் நான் உங்களுக்குக் கூறவேண்டும். ஸ்ரீமதி நாயுடுவைச் சேர்த்துக் கொள்ள வேண்டாம் என்று நான் சொல்லியதாகவும், காரியக் கமிட்டியில் பெண் அங்கத்தினரே வேண்டாம் என்று வற்புறுத்தியதாகவும் கூறப்படுகிறது. ஏற்கனவே நான் கூறியது போல் அவ்விதம் செய்ய நான் ஒருபோதும் துணிந்திருக்க மாட்டேன்.

நமது லட்சியத்தை முக்கியமாகக் கொண்டே மற்றவர்களையும் தேர்ந்து எடுத்திருக்கிறீர்கள் என்றே நான் எண்ணி வருகிறேன். எல்லோரும் சிறந்த நோக்கத்துடன் இருந்துவரும்போது வேண்டியவர் அல்லது வேண்டாதவர் என்ற பேச்சிற்கே இடமில்லை. ராஜன்பாபு, ஸி. ஆர். வல்லபாய் ஆகியோருக்கு உங்களுடைய அறிக்கை மிகுந்த வேதனையைக் கொடுத்திருக்கிறது. உங்களிடம் அவர்கள் கௌரவமாகவும், பூரண விசுவாசத்துடனும் நடந்து கொண்டு வந்திருப்பதாகக் கருதுகிறார்கள். நானும் அதை ஒப்புக் கொள்கிறேன். உங்களுக்கு ஏதோ தீங்கு இழைக்கப்பட்டிருப்பதுபோல் உங்களுடைய அறிக்கை தொனிக்கின்றது. இந்த நிலையை நீங்கள் உணர்ந்து, சாத்தியமாயின் அறிக்கையைத் திருத்திக் கொள்ளவேண்டும் என்பதே என் விருப்பமாகும்.

மற்றொரு விஷயத்தையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே எனது ஆர்வமாகும். நீங்கள் என்ன கூற விரும்புகிறீர்கள் என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை.

எனினும் நாம் சந்திக்கும்போது அதைப் பற்றிப் பேசலாம். ஏற்கனவே உங்களுக்கு இருந்துவரும் சிரமத்தை அதிகப்படுத்த நான் விரும்பவில்லை.

அரசியல் நிலைமை திருப்திகரமாக இருக்கும்போது டாக்டர் அன்சாரியின் நினைவுச் சின்னத்தைப் பற்றி யோசிக்கலாம் என்று நான் ஆஸப் அலியிடம் தெளிவாகக் கூறியிருக்கிறேன். நீங்கள் வேறு விதமாக நினைக்கிறீர்களா?

கமலாவின் நினைவுச் சின்னவேலைகள் மெதுவாக முன்னேறி வருகின்றன.

அன்பு,
பாபு

## 40

சேவாகிராமம்,
ஜூன் *19, 1936*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நேற்று உங்கள் கடிதம் கிடைத்தது. ரஞ்ஜித்தின் உடல் நிலை அபிவிருத்தி அடைந்திருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். அவர் தம் தேக நிலையை ஜாக்கிரதையாகக் கவனித்து வரவேண்டும்.

உங்களுடைய மந்திரி சபையில் (காரியக் கமிட்டி) ஒரு பெண் மணியைச் சேர்த்துக் கொள்ளாததைப் பற்றி நீங்கள் விசேஷ அறிக்கை எதுவும் வெளியிடவேண்டுமென நான் விரும்பவில்லை. காரியக் கமிட்டியில் மற்றவர்களைச் சேர்த்துக் கொள்வதற்கும் அல்லது சேர்த்துக் கொள்ளாமல் இருப்பதற்கும், ஒரு பெண்ணைச் சேர்த்துக் கொள்ளாமல் இருப்பதற்கும் வேற்றுமை உண்டு. அக் கமிட்டியில் ஒரு பெண்மணியைச் சேர்த்துக் கொள்ளாமல் இருக்க நம்மில் எவருக்கும் தைரியமோ அல்லது விருப்பமோ இல்லை. உங்களுடைய நிலை இதுதான் என்றால், சந்தர்ப்பம் ஏற்படும்போது இதைத் தெளிவாகக் கூறிவிட வேண்டும்.

மற்றவர்கள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளைக் குறித்து உங்கள் மனவேதனை இன்னும் தீராதது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கின்றது. உங்களுக்கு விருப்பம் இல்லாவிட்டால்கூட, லட்சியத்திற்காகவே புலாபாய் மாத்திரையை விழுங்கினீர்கள்.* முதன் முதலாக நாம் விவாதித்தபோது நீங்கள் குறிப்பிடுவதற்கு முன்பே,

---

பண்டித ஜவாஹர்லால் நேரு* ஸ்ரீ புலாபாய் தேசாயை காரியக் கமிட்டியில் விருப்பமின்றி சேர்த்துக்கொண்டதையே காந்திஜி மேற்கண்ட விதம் குறிப்பிட்டிருக்கிறார்.

காரியக் கமிட்டியில் சோஷலிஸ்டுகள் இருக்கவேண்டும் என்று நான் கூறினேன். அவர்களுடைய பெயர்களையும் குறிப்பிட்டேன். அது எப்படியாயினும் நான் வற்புறுத்திக் கூற விரும்புவது என்ன வெனில், யார் யாரைக் குறிப்பிட்டார்கள் என்பது அல்ல, அவ் விதம் குறிப்பிட்ட எல்லோரும் பொதுவான லட்சியத்திற்காகத் தொண்டு புரியவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் இருந்தார் கள் என்பதுதான்.

என் நினைவுக்கு எட்டியவரையில், நீங்கள் எனக்கு அனுப்பி யுள்ள அறிக்கை ஏற்கனவே நான் பார்த்த அறிக்கையல்ல. நீங்கள் அனுப்பியுள்ள அறிக்கையை, நான் இப்போதுதான் முதல் தடவையாகப் பார்ப்பதுபோல் தோன்றுகிறது. டாக்டர் எச், வேறு அறிக்கை ஏதாவது வெளியிட்டாரா என்று அவரைத் தயவு செய்து கேளுங்கள். இப்போது நீங்கள் அனுப்பியுள்ள அறிக்கை கூட, டாக்டர் என்னிடம் அடிக்கடி கூறியதற்கு நேர் மாறுபாடாக இருக்கிறது. டாக்டரின் கருத்துகள் தவருனவை என்பதே எனது அபிப்பிராயம். அப்படியிருந்தும் அவற்றை நான் ஆட்சேபிக்கவில்லை. என்னுடைய புகார் என்னவெனில், அவர் என்னிடம் கூறியது ஒன்று, பத்திரிகைகளில் வெளியிடுவதற்காகக் கூறுவது மற்ருென்று என்பதுதான். டாக்டர் எச். இடம் இந்தக் கடிதத்தைக் காட்டவும் உங்களுக்கு உரிமை உண்டு.

நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்கள் என்றே நம்புகிறேன். பஞ்சாபில் உங்களுடைய சூருவளி சுற்றுப் பிரயாணத்தைக் கவலை யுடனேயே கவனித்துவந்தேன்.

அன்பு,

பாபு

## 41

சேவாகிராமம், வார்தா,
*ஜுலை 8, 1936*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

இப்போதுதான் உங்களுடைய கடிதம் கிடைத்தது. வார்தா நிகழ்ச்சிகளைப் பற்றி எழுத நேரம் கிடைக்குமா என்று நான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். அவ்விதம் எழுதுவதை, உங்கள் கடிதம் ஒரு சங்கடமான காரியமாகச் செய்திருக்கிறது. ஆனல் ஒன்று மாத்திரம் கூற விரும்புகிறேன். வாபஸ் செய்து கொள் வதாக எழுதப்பட்டுள்ள கடிதத்திற்கு நீங்கள் கூறும் அர்த்தம் பொருந்தாது. நான் அதைப் பார்த்த பின்னரே, அது உங்களுக்கு அனுப்பப்பட்டது. ராஜிநாமாவுக்குப் பதிலாக அவ்விதம் எழுதும் படி நான்தான் யோசனை கூறினேன். அக்கடிதத்தை நீங்கள்

நியாயமான முறையில் எடுத்துக் கொள்ளவேண்டும் என்றே நான் விரும்புகிறேன். அது எப்படியாயினும், இந்த ஆண்டு முடியும் வரையில் வாய்ச் சண்டையெல்லாம் நின்றுவிடவேண்டும், ராஜிநாமாக்களும் இருக்கக்கூடாது. அவற்றிற்கு இடம் கொடுத்தால், நெருக்கடியைச் சமாளிக்க அ.இ.கா. கமிட்டி சக்தியற்றும், சீர்குலேந்தும் போகும். ஜனநாயகத்தின் பெயரால், திடீரென்று அக்கமிட்டி ஒரு நெருக்கடியைச் சமாளிக்கும்படியான நிலைமையை உண்டாக்குவது அநீதியாகும். கடிதத்தில் அடங்கியுள்ள உட்பொருளை நீங்கள் மிகைபடுத்துகிறீர்கள். நான் உங்களுடன் வாதிக்கக் கூடாது. நிலைமையைச் சாந்தமாகப் பரிசீலனை செய்யும்படியும், மனச்சோர்வுக்கு இடம் கொடுக்காமல் இருக்கும் படியும் உங்களை நான் வற்புறுத்துவேன். மனச்சோர்வு உங்களுக்குத் தகுதியல்ல. காரியக் கமிட்டிக் கூட்டங்களில் நீங்கள் உங்களுடைய நகைச் சுவை உணர்ச்சிக்கு ஏன் இடம் கொடுக்கக் கூடாது? பல ஆண்டுகளாக நீங்கள் யாதொரு தகராறுமின்றி வேலை செய்துவந்தவர்களுடன் சுமுகமாக நடந்து கொள்வது உங்களுக்கு ஏன் அவ்வளவு கடினமாக இருக்கவேண்டும்? அவர்களுக்குச் சகிப்புத்தன்மை இல்லை என்று அவர்கள் மீது குற்றம் சாட்டுவதாயின், அந்தக் குற்றத்தில் உங்கள் பங்கு அதிகமாகவே இருக்கிறது. உங்களிடையே பரஸ்பரம் சகிப்புத்தன்மை இல்லை என்பதற்காக, நாடு துன்பத்திற்கு உள்ளாகும்படி செய்யக் கூடாது.

உங்களுக்கு ஜெர்மன் டாக்டர் கூறியுள்ள யோசனை மிகவும் விவேகமானது. அதை நீங்கள் அங்கீகரிப்பீர்களென நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 42

சேவாகிராமம்,
*ஜூலை 15, 1936*

அன்புள்ள ஜவாஹர்லால்,

நீங்கள் என்மீது தப்பெண்ணம் கொள்ளாமல் இருப்பீர்களாயின், சிவில் உரிமைகள் சங்கத்தில் என்னை நீங்கள் இழுக்க வேண்டாம் என்று நான் கூற விரும்புகிறேன். தற்போதைக்கு எந்த அரசியல் ஸ்தாபனத்திலும் சேர நான் விரும்பவில்லை. எப்போதும் சட்ட மறுப்பு வாதியாக இருக்கும் ஒருவர் அதில் சேருவதில் அர்த்தமில்லை. அந்தச் சங்கத்தில் நான் சேருவதோ அல்லது சேராமல் இருப்பதோ ஒருபுறமிருக்க, சரோஜினியையோ அல்லது வேறு யாராவது ஒரு சட்டமறுப்புவாதியையோ அதன் தலைவராக நியமிப்பது தவறு என்பதே தீர்க்காலோசனையுடன் கூடிய

எனது உறுதியான அபிப்பிராயமாகும். அதன் தலைவர் பிரபல அரசியல் நிபுணரான ஒரு வக்கீலாக இருக்க வேண்டும் என்பதே இன்னும் எனது அபிப்பிராயம். இந்த யோசனை உங்களுக்குத் திருப்தி அளிக்காவிடில், சட்ட மறுப்பில் ஈடுபடாத பிரபல நூலாசிரியர் ஒருவர் அச்சங்கத்தின் தலைவராக இருக்கவேண்டும். அதன் அங்கத்தினர்களின் தொகையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றும் நான் உங்களைக் கேட்டுக் கொள்வேன். உங்களுக்குத் தேவையானது தரமேயன்றி, எண்ணிக்கை அல்ல.

உங்களுடைய கடிதம் உருக்கமாக இருக்கிறது. உங்களுக்கு மிகவும் தீங்கு இழைக்கப்பட்டிருப்பதாக நீங்கள் கருதுகிறீர்கள். உண்மை என்னவெனில், உங்களுக்குள்ள தைரியமும், பட்டவர்த்தனமாகப் பேசும் தன்மையும் உங்களுடைய சகாக்களுக்கு இல்லை என்பதேயாகும். அதனால் பேரபாயமே ஏற்பட்டிருக்கிறது. உங்களிடம் மனம் விட்டும், பயமின்றியும் பேசும்படி அவர்களை எப்போதுமே நான் கேட்டு வந்திருக்கிறேன். அவர்களுக்குத் தைரியம் இல்லாததால், அவர்கள் உங்களுடன் பேசிய போதெல்லாம் விஷயத்தைக் குழப்பி உங்களுக்குக் கோபம் உண்டாகும்படி செய்திருக்கிறார்கள். உங்களுக்குத் திடீரென்று கோபம் ஏற்படுவதாலும், அவர்கள் விஷயத்தில் உங்களுக்குப் பொறுமை இல்லாததாலும் உங்களைக் கண்டு அவர்கள் நடுங்குகிறார்கள். உங்களுடைய கடுஞ்சொற்களையும் அதிகாரப் போக்கையும் கண்டு அவர்கள் கொதிப்படைந்து வந்திருக்கிறார்கள். நீங்கள் தவறே செய்வதில்லை என்றும், பேரறிவு படைத்தவரென்றும் நீங்கள் மமதை கொண்டிருப்பதாக அவர்களுக்குத் தோன்றுகிறது. அவர்களை நீங்கள் மரியாதையின்றி நடத்தியதாகவும், சோஷலிஸ்டுகள் கேலி செய்வதையும், ஆதாரமற்ற புகார்கள் கூறுவதையும் கண்டித்து நீங்கள் காரியக் கமிட்டியிலுள்ள உங்களுடைய சகாக்களின் சார்பில் ஒருபோதும் பேசுவதில்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர்.

உங்களுடைய நடவடிக்கைகள் அபாயகரமானவை என்று அவர்கள் கூறியதாக நீங்கள் புகார் செய்கிறீர்கள். அவ்விதம் கூறுவது, நீங்கள் அபாயகரமானவர் என்று சொல்லுவதாகாது. தவிர அவர்களுடைய கடிதம் உங்களுடைய அருமை பெருமைகளையோ அல்லது உங்களுடைய தொண்டுகளையோ விவரிப்பதற்காக எழுதப்படவில்லை. உங்களுடைய இயல்பான சக்தியையும் சுறுசுறுப்பையும், பாமர மக்களிடையேயும் நாட்டின் யுவர்களிடையேயும் உங்களுக்குள்ள செல்வாக்கையும் அவர்கள் நன்கு உணர்ந்துள்ளனர். உங்களை விலக்கிவிட்டு எதுவும் செய்ய முடியாது என்பதையும் அவர்கள் அறிவர். அதனாலேயே அவர்கள் உங்களுக்கு விட்டுக்கொடுக்க விரும்பினர்.

இதையெல்லாம் கோரமாகத் தோன்றும் ஒரு தமாஷ் நாடகமாகவே நான் கருதுகிறேன். நீங்களும் அதையெல்லாம்

வேடிக்கையான முறையில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

எல்லா உப கமிட்டிகளிலும் பெரும்பான்மையோரான அவர்களுடைய பலம் பிரதிபலிப்பதைக் குறித்து நீங்கள் ஏன் கோபம் அடையவேண்டும்? அது முற்றிலும் இயற்கையே அல்லவா? அவர்களுடைய ஏகமனதான தீர்மானத்தின் பலனாகவே நீங்கள் காங்கிரஸ் தலைவர் பதவியில் இருக்கிறீர்கள்.* நீங்கள் சாதாரணமாக காலப்போக்கில் அப்பதவிக்கு வருவதைக் காட்டிலும் அதிக விரைவில் வரவேண்டும் என்பதை மனத்திற் கொண்டே முட்களாலான கிரீடத்தை (காங்கிரஸ் தலைவர் பதவியை) தரிக்க உங்களுடைய பெயரைப் பிரேரேபிக்க வேண்டுமென நான் யோசனை கூறினேன். தலையில் சிறுகாயங்கள் ஏற்பட்டால் கூட அந்தக் கிரீடத்தைத் தரித்து வாருங்கள். கமிட்டிக் கூட்டங்களில் உங்களுடைய நகைச்சுவை உணர்ச்சியை மீண்டும் மேற்கொள்ளுங்கள். அதுதான் உங்களுடைய இயல்பான தன்மையாகும். அற்ப காரணத்திற்காகச் சீறி எழுவதும், கவலையில் ஆழ்ந்துவிடுவதும் உங்களுடைய இயல்பு அல்ல.

புது வருஷப் பிறப்பன்று லாகூரில் நீங்கள் மகிழ்ச்சிபொங்க மூவர்ணக் கொடியைச் சுற்றி நடனம் ஆடியதாகச் செய்தி வெளியாயிற்று. இந்தக் கடிதத்தை வாசித்து முடித்ததும், அதுபோல் நீங்கள் மகிழ்ச்சியடைந்ததாகத் தந்தி மூலம் எனக்கு அறிவிப்பது சாத்தியமாக இருக்கவேண்டும் என்பதே என் விருப்பம்.

நீங்கள் உங்களுடைய தொண்டைக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும்.

எனது அறிக்கையில் சில மாறுதல்கள் செய்யப்போகிறேன். எனினும் நீங்கள் அதைப் பார்க்கும்வரையில், நான் அதை வெளியிடுவதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன்.

மகாதேவைத் தவிர வேறு எவரும் நமது கடிதப் போக்குவரத்தைப் பார்க்கக்கூடாது என்று தீர்மானித்திருக்கிறேன்.

அன்பு,

பாபு

---

*1935-ல் லக்ஷ்மணபுரியிலும், 1936-ல் பெய்ஜ்பூரிலும் நடந்த அகில இந்திய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு பண்டித ஜவாஹர்லால் நேருவே தலைமை வகித்தார். அதையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

## 43

சேவாகிராமம்,
ஜூலை 30, 1936

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

'பைத்தியக்காரத்தனமான' திட்டங்களை நீங்கள் மிதித்துத் தள்ளிவிட்டு, பொது மக்களின் நன்மைக்காக உங்களுடைய சக்தியைச் சேமித்துவைக்கவேண்டுமென நான் எவ்வளவு விரும்புகிறேன், தெரியுமா?

உங்களுடைய நகைச்சுவை உணர்ச்சியை நீங்கள் ஒருபோதும் இழக்காமல் குறிப்பிட்ட காலம் முடியும்வரையில் நீங்கள் பதவியில் இருந்துவருவதென உறுதி கொள்வீர்களாயின், எல்லாம் நன்மையாக முடியும். தற்போதுள்ள கோஷ்டியின் மூலமே நீங்கள் உங்களுக்குச் சாத்தியமானவரையில் உங்களுடைய கொள்கையை நிறைவேற்ற முயற்சிக்க வேண்டும். எதிர்காலத்தைப் பற்றி அதாவது அடுத்த ஆண்டில் மேற்கொள்ள வேண்டிய திட்டங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய நேரம் வந்திருக்கிறது. என்ன நேர்ந்தாலும், எதிர்க்கும் கோஷ்டியில் நீங்கள் இருக்கக்கூடாது என்பதே எனது உறுதியான அபிப்பிராயமாகும். உங்கள் தந்தையைப்போல் நீங்களும் காங்கிரசில் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பதாகக் கருதும்போது, உங்களுக்கு தற்போதைய கோஷ்யினிடமிருந்து யாதொரு எதிர்ப்பும் இராது என்றே நினைக்கிறேன். பம்பாயில் உங்களுக்கு எவ்வித தொந்தரவும் இராது என்றும் நம்புகிறேன்.

கமலா நினைவுச் சின்னம் எனக்குக் கவலையைக் கொடுத்து வருகிறது. அந்தத் திட்டமோ அல்லது தொகை வசூல்களோ எந்த நிலையில் இருக்கின்றன என்பது எனக்குத் தெரியவில்லை. கூர்ஷெத்தோ அல்லது சொரூபோ அல்லது இருவருமோ அவ்விஷயத்தில் முழு கவனமும் செலுத்திவருவார்களாயின், அதைப் பற்றிக் கவலையில்லை. இவ்விஷயமாக அவள் என்னென்ன செய்து வருகிறாள் என்பதை எனக்கு அப்போதைக்கப்போது அறிவித்து வரவேண்டுமென நான் எதிர்பார்க்கிறேன். தயவு செய்து சொரூபிடம் சொல்லுங்கள்.

சோஷலிஸத்தைப் பற்றி இங்கே நான் எதுவும் விவாதிக்க மாட்டேன். தொலைவிலுள்ள எதிர்காலத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை. எப்போதும் நான் தற்போதைய பிரச்னைகளிலேயே என் முழு கவனத்தையும் செலுத்தி வருகிறேன். சிற்சில சமயங்களில் தற்போதைய பிரச்னைகள்தான் எனக்குக் கவலையைக் கொடுக்கின்றன. அவற்றில் நாம் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டால், எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

நீங்கள் உண்மையிலேயே சௌக்கியமாக இருந்து வருகிறீர்களென நம்புகிறேன்.

அன்பு,

பாபு

ஜெங்கின்சுக்கும் எனக்கும் நடந்துள்ள கடிதப் போக்குவரத்தை நீங்கள் பார்த்திருக்கலாம். சட்ட பூர்வமான நடவடிக்கைகளை நானும் வெறுக்கிறேன். இருந்தாலும் இவ்விஷயமாக கோர்ட்டில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டியது அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது.

## 44

சேவாகிராமம்,
ஆகஸ்டு 28, 1936

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நேற்று நமக்குள் நடந்த சம்பாஷணை, என்னைச் சிந்திக்கும்படி தூண்டியிருக்கிறது. எவ்வளவோ முயற்சித்தும்கூட, நீங்கள் கூறுவதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நான் அறிந்தவரையில் என் அறிவு மழுங்கத் தொடங்கிவிடவில்லை. எனவே நீங்கள் கூறுவதை நான் புரிந்து கொள்ளும்படி செய்யவாவது நீங்கள் மனப்பூர்வமாக முயற்சிக்க வேண்டாமா? நீங்கள் கூறுவதை நான் ஒப்புக் கொள்ளாமலிருக்கலாம். ஆனால் ஒப்புக் கொள்ளவில்லை என்று கூறும் நிலையிலாவது நான் இருக்கவேண்டாமா? நேற்று நடந்த சம்பாஷணை உங்கள் மனத்தில் என்ன இருக்கிறது என்பதை விளக்குவதாக இல்லை. மற்றும் சிலரும் அப்படித்தான் கருதுகிறார்கள். நான் இப்போது அதுபற்றி ராஜாவுடன் விவாதித்து வருகிறேன். உங்களுக்கு நேரம் இருந்தால், உங்களுடைய திட்டத்தைப் பற்றி நீங்கள் அவருடன் விவாதிக்கவேண்டுமென நான் விரும்புகிறேன். நேரம் இல்லாததால், நான் நீண்ட கடிதம் எதுவும் எழுதுவதற்கில்லை. நான் கூறுவதன் பொருள் என்ன என்பது உங்களுக்குத் தெரியும்.

அன்பு,

பாபு

## 45

டிசம்பர் 28, 1936

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நீங்கள் இன்று காங்கிரஸ் கூட்டத்தை முடித்துவிடுவீர்கள் என்று நம்புகிறேன். அவ்விதம் முடித்துவிட்டால், நாளை மத்தியானம் 12 மணிக்குப் பிறகு நான் புறப்படுவதற்கு அனுமதி கொடுப்

பீர்கள் என்றும் நம்புகிறேன். இனிமேல் கிராமங்களிலேயே காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தை நடத்த வேண்டும் என்ற எனது யோசனையை நீங்கள் பாராட்டினல், பிப்ரவரிக்கும் மார்ச்சுக்கும் இடையே காங்கிரஸ் கூட்டத்தை நடத்துவதென்ற பழைய விதியை மீண்டும் மேற்கொள்ளுமாறு நீங்கள் காங்கிரசைக் கேட்டுக்கொள்ள வேண்டும். இதுதான் எனது விருப்பமாகும். குளிர்காலத்தில் ஆயிரக்கணக்கானவர்கள் கஷ்டத்திற்கு உள்ளாகும்படி நேருவதை இயன்றவரையில் தடுக்க வேண்டும். இந்த ஏற்பாட்டிற்கு காங்கிரஸ் பிரதிநிதிகளும் தங்களைச் சரிப்படுத்திக் கொள்ளவேண்டும். சட்டசபைகளில் காங்கிரஸ் பெரும்பான்மையான ஸ்தானங்களைப் பெற்றுல், கிறிஸ்துமஸ், ஈஸ்டர் விடுமுறைகளைப் போல் காங்கிரஸ் மகாசபை நடக்கும்போதும் ஏன் விடுமுறை இருக்கக் கூடாது என்பதற்குக் காரணம் எதுவும் இல்லை. கமலா நினைவுச் சின்னத்திற்காக எங்கேயாவது விரைவில் நிலம் வாங்கவேண்டும் என்றும், பின்னர் அதன் சம்பந்தமாக வீடுவிடாகச் சென்று பண வசூல் செய்யவேண்டும் என்றும் நான் சொரூபிடம் கூறியிருக்கிறேன்.

அன்பு,

பாபு

## 46

சேவாகிராமம், வார்தா,
ஏப்ரல் 5, 1937

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நீங்கள் ஏன் நோய்க்கு இலக்காக வேண்டும்? நோயுற்ற பின் நீங்கள் ஏன் ஓய்வு எடுத்துக் கொள்ளவில்லை? இந்து வந்தபின் நீங்கள் எங்கேயாவது சென்று ஓய்வு எடுத்துக் கொள்வீர்களென நான் நினைத்தேன். அவள் வரும்போது எனது அன்பை அவளுக்குத் தெரிவியுங்கள். இத்துடன் நான் அவளுக்கும் ஒருவரி எழுத வேண்டும்.

இப்போது உங்களுடைய புகாரைக் கவனிக்கலாம். காரணம் எதுவாயினும், நான் கூறுவது ஒவ்வொன்றும், செய்வது ஒவ்வொன்றும், உங்களுக்கு அதிருப்தியையே கொடுக்கின்றன. மௌனமாக இருப்பது அசாத்தியமாக இருந்ததாலேயே நான் அறிக்கை வெளியிட்டேன். எனது அறிக்கையையொட்டி காங்கிரஸ் பக்கத்திலிருந்து வந்த முதலாவது புகார் உங்களுடையதுதான். நீங்கள் எழுதியதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். தெளிவாகப் புரிந்து கொள்ளும் சக்தி எனக்கு ஏற்படும் வரையிலோ அல்லது உங்களுடைய பீதி தீரும்வரையிலோ நீங்கள் என் விஷயத்தில் பொறுத்திருக்க வேண்டும். என்னுடைய அறிக்

சையினல் எவ்வித அபாயமும் ஏற்படுமென நான் நினைக்கவில்லை. நான் புரிந்து கொள்ளாத விஷயம் ஏதாவது உங்கள் மனத்தில் இருக்கிறதா?

வார்தாவிலிருந்து சென்னை வரையில் கமலாதேவி எங்களுடன் பிரயாணம் செய்தார். அவர் டில்லியிலிருந்து வந்து கொண்டிருந்தார். அவர், நான் இருந்தவண்டிக்கு இரண்டு தடவை வந்து நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். காரியக் கமிட்டியில் ஸரோஜினிதேவி ஏன் சேர்த்துக் கொள்ளப்படவில்லை என்றும், ராஜாஜியினல் லக்ஷ்மிபதி ஏன் ஒதுக்கிவைக்கப்பட்டுவருகிருர் என்றும், அனுசூயாபாய் ஏன் சேர்த்துக்கொள்ளப்படவில்லை என்றும் என்னைக் கடைசியாக அவர் கேட்டார்; அதற்குக் காரணத்தை அறிந்து கொள்ளவும் விரும்பினர். அவர்கள் சேர்த்துக் கொள்ளப்படாததன் சம்பந்தமாக என் பங்கு என்ன என்பதை அவரிடம் நான் கூறினேன். திங்கட்கிழமை மௌன தினத்தன்று நான் உங்களுக்கு எழுதிய கடிதத்தின் விவரங்களையும், என் நினைவுக்கு எட்டியவரையில் அவரிடம் சொன்னேன். முதலில் ஸரோஜினிதேவியைச் சேர்த்துக் கொள்ளாததற்கோ, பின்னர் சேர்த்துக் கொண்டதற்கோ நான் எவ்விதத்திலும் காரணம் அல்ல என்றும் அவரிடம் கூறினேன். எனக்குத் தெரிந்தவரையில், லக்ஷ்மிபதியைச் சேர்த்துக் கொள்ளாததற்கு ராஜாஜி எவ்விதத்திலும் காரணம் அல்ல என்றும் அவரிடம் கூறினேன். நீங்கள் எல்லாவற்றையும் அறிந்து கொள்ள வேண்டும் என்று நான் எண்ணியதால்தான் இதை எழுதினேன்.

இந்தக் கடிதம் வரும்போது நீங்கள் பூரணமாகக் குணம் அடைந்திருப்பீர்களென நம்புகிறேன். உங்கள் தாயாரைப் பற்றி நீங்கள் உங்கள் கடிதத்தில் எதுவுமே கூறவில்லையே.

அன்பு,

பாபு

## 47

சேவாகிராமம், வார்தா,
ஜூன் 25, *1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

எல்லைப்புற சம்பந்தமான கொள்கையையொட்டி உங்களுடைய அறிக்கை இப்போதுதான் கிடைத்தது. கான்சாகிபும் நானும் அதை வாசித்தோம். அது எனக்கு மிகுந்த திருப்தியைக் கொடுத்திருக்கிறது. ஸ்பானிஷ் வெடிகுண்டு வீச்சும், பிரிட்டிஷ் வெடிகுண்டு வீச்சும் ஒரே விதமானவையா என்று நான் ஆச்சரியமடைகிறேன். பிரிட்டிஷாருக்கு எவ்வளவு நஷ்டம் என்பது தெரியுமா? பிரிட்டிஷாரின் வெடிகுண்டு வீச்சுக்கு வெளிப்படையாக

என்ன காரணம் கூறப்படுகிறது? இவ்விஷயங்களெல்லாம் உங்களைப் போல் எனக்கு அவ்வளவு நன்ருகத் தெரியாது. இதற்காக சிரிக்காதீர்கள் அல்லது கோபமடையாதீர்கள். பத்திரிகைகளில் வெளியாகும் மிகச் சுருக்கமான செய்திகளிலிருந்து நான் எதுவும் தெரிந்து கொள்ள முடிவதில்லை. இருந்தாலும், என்னுடைய கேள்விகளுக்கு விடை அளிப்பதற்காக சிரமம் எடுத்துக் கொள்ளவேண்டாம். நாம் சந்திக்கும்போது விவரமாகப் பேசிக் கொள்ளலாம். மௌலானுவும் வருவாரென்று நம்புகிறேன். அவர் வர இயலாவிட்டால்கூட நீங்கள் குறிப்பிட்ட தேதியில் கூட்டத்தை நடத்த வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். அமைதியான மூன்று நாட்கள் நமக்குக் கிடைக்கட்டும்.

இந்து சௌக்கியமாக இருக்கிருள் என்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 48

சேவாகிராமம்,
(தேதி தெரியவில்லை)

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய கடிதங்களை நான் விரும்புகிறேன். வேறு விதத்தில் எனக்குக் கிடைக்காத தகவல்களை அக்கடிதங்களிலிருந்து நான் அறிந்து கொள்கிறேன். இஸ்லாம் உலக இயக்கத்தைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. பேட்டியைக் குறித்து நான் விடுத்த வேண்டுகோளை நீங்கள் பார்த்திருக்கலாம். என்னுடைய முறையை நீங்கள் அறிவீர்கள். இத்தகைய சந்திப்புகளிலிருந்தே நான் பலம் பெறுகிறேன். எனது நடவடிக்கைகளைச் சரியான முறையில் தேசத்திற்கு விளக்கிக் கூறவேண்டியது உங்களுடையவும், மற்ற சக ஊழியர்களுடையவும் கடமையாகும். ஸி. ஆர். ஐப் பற்றி நீங்கள் அலட்டிக் கொள்ளாமல் இருப்பதையே நான் விரும்புவேன். அவரைப் பரிபூரணமாக நம்பலாம். இருந்தாலும், உங்களுடைய சந்தேகங்களை நீங்கள் அவருடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். 15-ம் தேதி மாலை நான் சாந்திநிகேதனுக்குப் புறப்படுகிறேன். அங்கிருந்து 19-ம் தேதி வாலிகண்டாவுக்குப் புறப்படுகிறேன்.

அன்பு,

பாபு

## 49

சேவாகிராமம், வார்தா,
*ஜூலை 10, 1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நான் நேற்று மௌலானா சாகிபுடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன். மாகாணங்களில் முஸ்லிம் மந்திரிகளை நிய மிக்கும் விஷயமாக அவருடன் கலந்து ஆலோசிக்கவேண்டும் எனில், அதைக் குறிப்பிட்டு ஒரு பகிரங்க அறிக்கை வெளியிடுவது தான் சிறந்ததென நான் நினைக்கிறேன். மௌலானாவும் இதை ஒப்புக் கொள்கிறார். காரியக் கமிட்டியைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணினால், தந்தி மூலம் அவர்களுடன் ஆலோசனை நடத்துங்கள்.

ஹிந்து, உருது பிரச்னை பற்றி நீங்கள் விரைவில் எழுதுவீர் களென நான் எதிர்பார்க்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
பாபு

## 50

சேவாகிராமம், வார்தா.
*ஜூலை 15, 1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

இன்று தேர்தல் நடக்கும் தினம். நான் அதைக் கவனித்து வருகிறேன்.

காங்கிரஸ் மந்திரி சபைகளின் கடமைகள் பற்றியும், அதன் சம்பந்தமான மற்ற விஷயங்கள் பற்றியும் நான் 'ஹரிஜனி'ல் எழுத ஆரம்பித்திருக்கிறேன். இதைக் கூறவே உங்களுக்கு நான் இந்தக் கடிதம் எழுதுகிறேன். அவ்விதம் எழுத நான் தயங்கினேன். ஆனால் அது மிகவும் முக்கியமானதென்று நான் கருதுவதால், அவ்விதம் எழுத வேண்டியது என் கடமை என்பதைக் கண் டேன். 'ஹரிஜனு'க்கு எழுதியுள்ள எனது கட்டுரையின் முன் பிரதி ஒன்றை உங்களுக்கு அனுப்ப வேண்டும் என்பதே என் விருப்பம். இதை மகாதேவ் பார்த்துக் கொள்வார். நீங்கள் அதைப் பார்த்தால், அவ்விதம் நான் தொடர்ந்து எழுதிவரலாமா என்பதைத் தயவு செய்து சொல்லுங்கள். அப்பிரச்னை முழு வதையும் நீங்களே கையாண்டுவரும்போது அதில் நான் குறுக்கிட விரும்பவில்லை. ஏனெனில், தேசத்திற்காக உங்களுடைய உழைப்பு, சக்தி, திறமை ஆகிய எல்லாவற்றையும் முழு அளவுக்கு நான் விரும்புகிறேன். நான் எழுதுவது உங்களுக்கு மனக்கலக்

கத்தை உண்டாக்குமாயின், நான் திட்டவட்டமாகத் தீங்கு செய்தவனாவேன்.

மௌலானாவைப் பற்றி நான் எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன்.

அன்பு,
பாபு

## 51

சேவாகிராமம், வார்தா,
*ஜூலை 22, 1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

மௌலானா சாகிப் வார்தாவில் ஒரு நாள் தங்கியிருந்தார். நாங்கள் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அசெம்பிளியிலுள்ள முஸ்லிம் லீக் அங்கத்தினர்களுக்கும் காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கும் இடையே செய்து கொள்ளப்பட்டுள்ள நகல் ஒப்பந்தத்தை அவர் என்னிடம் காட்டினார். உங்களுக்கு அது திருப்தியை அளித்திருக்கிறது என்றும், ஆனால் தாண்டன்ஜி அதை விரும்பவில்லை என்றும் அவர் என்னிடம் கூறினார். நான் தாண்டன்ஜிக்கு அவ்விஷயமாக எழுதும்படி மௌலானா கூறிய யோசனைக்கு இணங்க அவருக்கு எழுதியிருக்கிறேன். அவரது ஆட்சேபணைதான் என்ன?

மந்திரிகளுக்கு ஐந்நூறு ரூபாய் சம்பளம், பெரிய வீடு, மோட்டார் செலவுப் படி ஆகியவை கடுமையாகக் கண்டிக்கப்பட்டுவருகின்றன. இதைப்பற்றி நான் எவ்வளவுக்கு அதிகமாகச் சிந்திக்கிறேனோ அவ்வளவுக்கு இந்த ஊதாரித்தனமான ஆரம்பத்தை நான் விரும்பவில்லை. இதைப் பற்றியும் நான் மௌலானாவுடன் பேசினேன்.

இந்து எப்படி இருக்கிறாள்?

அன்பு,
பாபு

## 52

சேவாகிராமம், வார்தா,
*ஜூலை 30, 1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

ஹிந்தியைப்பற்றி நீங்கள் எழுதியுள்ள வியாசம் வந்து சேர்ந்தது என்றும், 4-ம் தேதி தம்மை வந்து சந்திக்கும்படி வைஸ்ராய் டில்லிக்கு என்னை அழைத்திருக்கிறார் என்றும் மகாதேவ் உங்க

ளிடம் கூறியிருக்கலாம் என்று நம்புகிறேன். வைஸ்ராயைச் சந்திக்கும் ஆனந்தம் கிடைக்கவேண்டும் என்பதைத் தவிர அந்த அழைப்புக்கு வேறு விசேஷமான காரணம் எதுவும் இல்லே. அவ்விஷயமாக அவர் முந்திக்கொண்டுவிட்டதாக நான் பதில் எழுதியிருந்தேன். ஏனெனில் கான் சாகிப் மீது விதிக்கப்பட்டுள்ள தடை சம்பந்தமாகவும், எல்லேப் புறத்துக்குச் செல்ல எனக்குள்ள விருப்பத்தைப் பற்றியும் நானே அவரைப் பேட்டிகாண விரும்பினேன். எனவே அவரது அழைப்புகிணங்க நான் 4-ம் தேதி டில்லிக்குச் செல்லுகிறேன். அன்று காலே 11-30 மணிக்கு பேட்டி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அன்றே நான் அங்கிருந்து புறப்பட்டு 5-ம் தேதி சேவாகிராமத்துக்கு வந்து சேருவேன்.

என் கடிதத்திற்கு ஜாகிர் அளித்துள்ள பதிலின் பிரதியை உங்களுக்கு அனுப்புவதற்காகவே இக்கடிதம் எழுதுகிறேன். சமீபத்தில் பம்பாயில் நடந்த கலகத்தைப் பற்றியும், படுமோசமான ஹிந்தி—உருது வாக்குவாதத்தைப் பற்றியும் எனது அபிப்பிராயத்தை விவரித்து ஜாகிருக்குக் கடிதம் எழுதியிருந்தேன். தீர்க்காலோசனையுடன் கூடிய அவரது பதிலே நீங்களும் பார்க்க வேண்டும் என்பதற்காகவே உங்களுக்கு அதை அனுப்பியிருக்கிறேன்.

ஜான்ஸி தேர்தலே ஒரு படுதோல்வியாக நான் கருதவில்லே. அது ஒரு கௌரவமான தோல்வியே ஆகும். நாம் ஓய்ச்சல் ஒழிவின்றி உழைத்திருந்தால், பலன் தரத்தக்க விதத்தில் காங்கிரசின் கோரிக்கை முஸ்லிம்களின் செவிகளில் விழும்படி செய்திருக்க முடியும் என்ற நம்பிக்கையையே அத்தோல்வி உண்டாக்கியிருக்கிறது. எனினும் கிராமங்களில் கணிசமான அளவுக்கு வேலே செய்தாலன்றி, காங்கிரஸ் விடுக்கும் செய்தியால் மாத்திரம் இறுதியில் நமது நோக்கம் நிறைவேருது என்ற எனது அபிப்பிராயத்தையே நான் மீண்டும் கூறுகிறேன். மக்களிடையே சக்தியை உண்டாக்க நாம் எந்த வழியைப் பின்பற்றுகிருேம் என்பதையே எல்லாம் பொறுத்திருக்கின்றன.

சென்னேயில் மேஹரலி நிகழ்த்திய பிரசங்கம் என் கண்களைத் திறந்திருக்கிறது. பொதுவாக சோஷலிஸ்டுகளின் அபிப்பிராயத்தை அவர் எவ்வளவு தூரம் பிரதிபலிக்கிருர் என்பது எனக்குத் தெரியவில்லே. பத்திரிகையில் பிரசுரமான அவரது பிரசங்கத்தைக் கத்தரித்து ராஜாஜி எனக்கு அனுப்பியிருக்கிருர். அதன் பிரதியொன்றை அவர் உங்களுக்கும் அனுப்பியிருப்பாரென நான் நம்புகிறேன். அது தீங்கை விளேவிக்கக்கூடிய ஒரு பிரசங்கமாகும். அதை நீங்கள் கவனிக்க வேண்டும். அது காங்கிரஸ் கொள்கைக்கு முரணுக இருக்கிறது.

சென்னேயில் ராயும் பேசியிருக்கிருர். பத்திரிகைகளிலிருந்து அத்தகைய பிரசங்கங்கள் கத்தரிக்கப்பட்டு உங்களுக்கு அனுப்பப்படுகின்றன என்றே நினேக்கிறேன். இருந்தாலும் நீங்கள்

உடனடியாகப் பார்ப்பதற்காக பியாரிலால் எனக்கு அனுப்பி யிருந்த கத்தரிப்புகளை இத்துடன் இணைத்திருக்கிறேன். ராய் எனக்குக் கடிதமும் எழுதிவருகிறார். கடைசியாக அவர் எழுதிய கடிதத்தை நீங்கள் பார்க்க வேண்டும். அதை நான் கிழித்து எறிந்திராவிட்டால், இத்துடன் அனுப்பியிருப்பேன். அவரது நிலையைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயம் என்ன? நான் ஏற்கனவே உங்களிடம் கூறியிருப்பதுபோல், அவரைப் புரிந்து கொள்வதே எனக்குக் கடினமாக இருக்கிறது.

கதரை, சுதந்திரத்தின் சின்னமாக விளங்கும் உடை ('livery of freedom') என்று நீங்கள் குறிப்பிட்டிருப்பது, இந்தியாவில் நாம் ஆங்கில மொழியை எவ்வளவு காலம் பேசுகிறோமோ அவ் வளவு காலம்வரையில் நீடித்து நினைவில் இருந்துவரும். அந்தக் கவர்ச்சியான அடைமொழியில் அடங்கியிருக்கும் கருத்து முழு வதையும் ஹிந்தியில் மொழிபெயர்க்க முதல்தரமான ஒரு கவியினால் தான் முடியும். என்னைப் பொறுத்தமட்டில் அது வெறும் கவிதை மாத்திரமல்ல, அது ஒரு மகத்தான உண்மையைப் பிரகடனம் செய்கின்றது. அதன் முழுக் கருத்தையும் இன்னும் நாம் உணர்ந்து கொள்ளவில்லை.

அன்பு

பாபு

## 53

ரயில்வண்டியில்,
ஆகஸ்டு *3, 1937*

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

டில்லிக்கு எங்களை ஏற்றிச் செல்லும் ரயில்வண்டியில் இருந்து கொண்டு இதை நான் எழுதுகிறேன். இத்துடன் எனது முன்னுரையை* அனுப்பியிருக்கிறேன். இதைக் காட்டிலும் விவர மாக என்னால் எதுவும் எழுத இயலவில்லை. புஷ்டு, பஞ்சாபி என்ற சொற்களுக்கு முன் 'ஒரு வேளை' என்று நீங்கள் குறிப்

---

*காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ள முன்னுரையின் விவரம் வருமாறு:

ஆகஸ்டு 3, 1937

ஹிந்தி – உருது பிரச்னையைப் பற்றி ஜவாஹர்லால் நேரு எழுதியுள்ள சுருக்கமான கட்டுரையை நான் மிகவும் அக்கறையுடன் வாசித்தேன். அப் பிரச்னை சமீபகாலமாக துரதிர்ஷ்டவசமான வாக்குவாதத்திற்கு இடம் கொடுத்திருக்கிறது. அதில் ஏற்பட்டுள்ள விபரீதமான திருப்பத்திற்குத் தகுந்த காரணம் எதுவும் இல்லை. அது எப்படியாயினும் ஜவாஹர்லாலின் கட்டுரை, தேசிய ரீதியாகவும், கல்வி ரீதியாகவும் ஆலோசிக்குமிடத்து, அவ்விஷயத்தை யொட்டிய சரியான, மதிப்புவாய்ந்த ஒரு விளக்கமேயாகும். சம்பந்தப்பட்ட

பிட்டிருக்கிறீர்கள். சந்தேகத்துக்குக் காரணமான அந்த வினை யுரிச் சொல்லை அகற்றிவிடவேண்டும். ஏனெனில் கான் சாகிப் ஒரு காலத்திலும் புஷ்டுவைக் கைவிடமாட்டார். சீக்கியர்களோ வெனில் குர்முகியில் எழுதப்பட்டுள்ள பஞ்சாபி மொழிக்காக தங்கள் உயிரையே விட்டுவிடுவார்கள். அந்த லிபியில் அழகு எதுவும் இல்லை. ஆனல் சிந்தியைப்போல் அதுவும் மற்ற ஹிந்துக்களிடமிருந்து சீக்கியர்களைப் பிரித்து ஒதுக்குவதற்காகவே கண்டுபிடிக்கப்பட்டதென நான் அறிகிறேன். அது உண்மை யாயினும், குர்முகி லிபியைக் கைவிடும்படி சீக்கியர்களைத் தூண்டு வது தற்காலிகமாக சாத்தியமல்ல என்றே எனக்குத் தோன்று கிறது.

நான்கு தென்னிந்திய மொழிகளிலிருந்து ஒரு பொதுவான லிபியை உருவாக்கவேண்டும் என்று நீங்கள் யோசனை கூறியிருக் கிறீர்கள். அந்த நான்கு மொழிகளிலிருந்து ஒரு கலப்பு லிபியை உருவாக்குவதற்குப் பதிலாக அதன் ஸ்தானத்தில் தேவநாகரி யையே வைத்துக் கொள்வது அவர்களுக்கு எளிது என்று எனக்குத் தோன்றுகிறது. தவிர, அந்த நான்கு மொழிகளிலிருந்து ஒரு கலப்பு லிபியை உருவாக்குவது நடைமுறையில் சாத்தியமும் அல்ல. எனவே நான் கூறும் யோசனை என்னவெனில், பொது வான சிபாரிசையொட்டி மாத்திரம் உங்களுடைய அபிப்பிரா யத்தைக் கூறுங்கள் என்பதுதான். அதாவது எங்கு சாத் தியமோ அங்கெல்லாம் சமஸ்கிருதத்துடன் மூலாதாரமான தொடர்புள்ள மாகாண மொழிகள், திருத்தப்பட்ட தேவநாகரி லிபியை மேற்கொள்ள வேண்டும் என்பதேயாகும். இந்தப் பிரசாரம்தான் இப்போது நடந்துவருகிறது என்பதை நீங்கள் அறிந்திருக்கலாம்.

மேலும் என்னைப் போலவே நீங்களும் நினைப்பீர்களாயின், நீங்கள் உங்களுடைய நம்பிக்கையைக் குறிப்பிடத் தயங்கவேண் டாம். அதாவது ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருமித்த உள்ளம் படைத்தவர்களாகத் திகழ வேண்டிய நாள் வந்துதான் தீரும் என்றும், அவர்களில் ஹிந்துஸ்தானி பேசுவோர் ஒரே லிபியை (தேவநாகரி) மேற்கொள்ளுவார்கள் என்றும், சமஸ்கிருதத்தி லிருந்து உருவான மகத்தான மொழிகளின் லிபிகளுக்கும் அதற்கும் பலவிதத்திலும் தொடர்பு இருக்கிறது என்றும் கூற நீங்கள் தயங்கவேண்டாம். ஓரளவுக்கோ அல்லது முற்றிலுமோ எனது யோசனைகளை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களாயின், செய்ய வேண்டிய அவசியமான மாறுதல்களை நீங்கள் உணர்ந்து கொள் வது கடினமல்ல. உங்களுடைய நேரத்தை மிச்சப்படுத்து வதற்காக நானே அவ்விதம் செய்ய உத்தேசித்தேன். ஆனல்

---

நபர்களால் அவரது உருவான யோசனைகள் அங்கீகரிக்கப்படுமாயின், வகுப்பு வாதத் திசையில் திரும்பியுள்ள அந்த வாக்குவாதத்திற்கு அவை முற்றுப் புள்ளி வைத்துவிடும். அவரது யோசனைகள் விவரமாகவும், முற்றிலும் நியாய மானவையாகவும் இருக்கின்றன.

இப்போது என் உடல் இருக்கும் நிலையில் அந்த சிரமத்தை நான் மேற்கொள்ளக்கூடாது.

என்னுடைய சோதனைகளை உங்களால் ஒத்துக்கொள்ள முடியாவிட்டால், எனது முன்னுரையில் பின்வரும் வாக்கியத்தைச் சேர்த்துக் கொள்வது சிறந்ததாகும். ''அது எப்படி இருந்தாலும், பொதுவான அந்த யோசனைகளை மனப்பூர்வமாக ஆதரிக்க நான் தயங்கவில்லை.''

இந்துவுக்கு அறுவை சிகிச்சை நல்லவிதமாக முடியுமென நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 54

ரயில்வண்டியில்,
ஆகஸ்டு *4, 1937*

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

நான் மந்தபுத்தியுள்ளவன். உங்களுடைய கடிதம் கிடைத்ததும், என்னுடைய 'பைலை'ப் பரிசோதனை செய்ய முற்பட்டேன். கடைசியில் மேஹரலியின் பிரசங்கம் அடங்கிய பத்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட பகுதியைக் கண்டு பிடித்தேன். என் கடிதத்தில் அவரது பிரசங்கத்தைப் பற்றியே குறிப்பிட்டேன், மசானியின் பிரசங்கத்தை அல்ல.

பயங்கரமாகக் குலுக்கிப்போடும் ரயில் வண்டியிலிருந்து இதை நான் எழுதுகிறேன். இப்போது நான் திரும்பி வார்தாவுக்குச் சென்று கொண்டிருக்கிறேன். இப்போது இரவு மணி *10-30* ஆகிறது. நான் தூக்கத்திலிருந்து எழுந்ததும், அந்தப் பிரசங்கத்தைப் பற்றி நினைத்துக் கொண்டேன். உடனே தேட ஆரம்பித்தேன். நேற்று நான் சென்ற வண்டி இதைவிட நன்றாக இருந்தது.

நான் வைஸ்ராயைப் பார்த்தேன். அதன் சம்பந்தமாக சர்க்கார் விடுத்துள்ள அறிக்கையை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அது பேட்டியின் சரியான சுருக்கமேயாகும். மற்ற விஷயங்களை கிருபளானி உங்களைச் சந்திக்கும்போது கூறுவார். ஒரு விஷயத்தை மாத்திரம் இங்கே நான் கூறலாம். வைஸ்ராய் என்னை அழைத்தது போல் உங்களையும் அழைக்கலாம். உங்களுக்கு அழைப்பு அனுப்பினால், நீங்கள் அதை ஏற்க மறுக்கமாட்டீர்கள் என்று அவரிடம் நான் கூறினேன். நான் கூறியது சரிதானே?

ராயின் பிரசங்கங்களை வாசிக்கும் சிரமத்தை உங்களுக்கு நான் கொடுத்ததற்காக வருந்துகிறேன். அவற்றை நீங்கள் வாசிக்கக் கடமைப்பட்டிருக்கிறீர்களென நான் நினைக்கிறேன். இருந்தாலும் அவற்றைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயம் என்ன என்பதை அறிந்துகொள்ள நான் அவசரப்படவில்லை. ஏற்கனவே அவற்றை வாசித்திராவிட்டால், உங்களுக்கு நேரம் கிடைக்கும்போது வாசிக்கலாம்.

இந்துவுக்கு பம்பாயில் அறுவை சிகிச்சை நடக்கப்போவதை நான் அறிந்து கொண்டேன்.

அன்பு,

பாபு

## 55

சேவாகிராமம், வார்தா,
*அக்டோபர் 1, 1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

என்னைப் பொறுத்தமட்டில், பட்டாபி அப்பதவிக்கு* மிகவும் பொருத்தமானவரே ஆவார். எனினும் அவ்விஷயமாக காரியக் கமிட்டி அங்கத்தினர்களின் கருத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டியிருக்குமென நினைக்கிறேன்.

வார்தாவில் நடக்கப்போகும் கல்வி மகாநாட்டிற்கு வர உங்களுக்கு அவகாசம் கிடைக்குமா என்பது எனக்குத் தெரியாது. உங்களால் வர இயலுமாயின், நீங்கள் வரவேண்டுமென நான் விரும்புகிறேன். எனினும் வேறு எங்கேயாவது அதைக் காட்டிலும் அதிக முக்கியமான அலுவல் உங்களுக்கு இருக்குமாயின், மகாநாட்டிற்கு வந்துதான் தீரவேண்டும் என்று கூற நான் விரும்பவில்லை. மகாநாட்டிற்கு வந்தால், இரண்டு நாட்கள் உங்களுக்கு ஓய்ச்சல் ஒழிவு இராது என்பது நிச்சயம். இருந்தாலும் நீங்கள் வந்தால், அது எனக்கு ஆறுதலாக இருக்கும்.

அன்பு,

பாபு

---

*அகில இந்திய காங்கிரஸ் தலைவர் பதவியையே காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

## 56

சேவாகிராமம், வார்தா,
அக்டோபர் 12, 1937

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய கடிதம் கிடைத்தது. நான் கல்கத்தாவுக்கு வர முயற்சி செய்து வருகிறேன். 25ல இங்கிருந்து புறப்படு வேன். காங்கிரஸ் மாகாணங்களில் உள்ள மந்திரிகளின் நடவடிக் கைகள் பற்றி அப்போது என்னிடம் கூறுங்கள். தொண்டைக் கட்டும் ஜலதோஷமும் தற்காலிகமான கோளாறு என்றும், பஞ்சாபில் உங்களுடைய அலுவல்கள் காரணமாக ஏற்பட்ட சிரமத்தை நீங்கள் சமாளித்திருப்பீர்கள் என்றும் நம்புகிறேன். எல்லைப் புறத்தில் இப்போது காலநிலை மிகவும் ஆனந்தமாக இருக்கும். எந்த விஷயத்தையொட்டியும் சிறிது காலமாவது நீங்கள் மனத்தை அலட்டிக் கொள்ளாமல் இருக்க வேண்டும் என்பதே எனது விருப்பம்.

அன்பு,
பாபு

## 57

வார்தாவுக்குச் செல்லும் வழியில்,
நவம்பர் 18, 1937

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

வங்காளத்தில் உள்ள கைதிகள் விஷயமாக நான் என்ன செய்திருக்கிறேன் என்பதை உங்களுக்கு அறிவிப்பதற்காகவும், அதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவுமே இந்தக் கடிதம் எழுதுகிறேன். அதன் சம்பந்தமான சமரசப் பேச்சுகள் தொல்லையாகவே இருந்தன. அந்தப் பேச்சுகளை ஆரம்பிக்குமுன், சமரசத்தின் மூலம் பரிகாரத்தை நாடுவது விரும்பத்தக்கதா என்பது பற்றி இரு சகோதரர்களுடனும்* கலந்து ஆலோசித்தேன். பலனில் அக்கறை கொள்ளாமல், பொதுமக்களின் அபிப்பிராயம் உருவாவதன் மூலம் கைதிகளை விடுதலை செய்யும்படியான நிர்ப்பந்தம் ஏற்படட்டும் என்று இருந்திருக்கலாம். ஆனால் பொதுமக்களின் கிளர்ச்சி தொடர்ந்து நடைபெற்றுவரும் இச்சமயத்தில் சமரசப் பேச்சுகள் நடத்துவதை சகோதரர்கள் வற்புறுத்தினர். அவ்விஷயமாக நான் எனது திட்டத்தை வெளியிட்டேன். அந்தமான் கைதி களுக்கு நான் தந்தி அனுப்பியிருந்தேன் அல்லவா? அநேகமாக அத்தந்தியில் அடங்கியிருந்த விவரங்களையொட்டியதாகவே எனது

*சகோதரர்களான சரத் சந்திர போஸையும் சுபாஷ் சந்திர போஸையுமே இரு சகோதரர்கள் என்று காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

திட்டம் இருந்தது. எனவே பாதுகாப்புக் கைதிகள், அந்தமானிலிருந்து கொண்டுவரப்பட்டவர்கள், ஹிஜ்லி கைதிகள் ஆகியோரை நான் பார்த்தேன். சில குறிப்பிட்ட பாதுகாப்புக் கைதிகளை உடனடியாக விடுதலை செய்ய மந்திரிகள் ஒப்புக் கொண்டனர். மேலும் யார் யாரை விடுதலை செய்வது அபாயமில்லாமல் இருக்குமோ அவர்களையெல்லாம் இன்னும் நான்கு மாதங்களுக்குள் விடுதலை செய்வதாகவும் அவர்கள் கூறினர். மற்றவர்கள் சம்பந்தப்பட்டவரையில் என்னுடைய சிபாரிசுகளை ஒப்புக்கொள்வதாகவும் மந்திரிகள் குறிப்பிட்டார்கள். கைதிகளின் தற்போதைய கொள்கையை நான் திட்டமாக அறிந்து கொண்டபின்தான் நான் சிபாரிசு செய்ய வேண்டும். சுதந்திரத்தைப் பெற பலாத்கார முறைகளில் காங்கிரஸ் மந்திரிகள் நம்பிக்கை வைக்கவில்லை. எனவே அப்போதைக்கப்போது காங்கிரசினால் அங்கீகரிக்கப்பட்ட நடவடிக்கைகளையே அவர்கள் பின்பற்றவேண்டும். அவ்விதம் காங்கிரஸ் மந்திரிகளிடம் நான் கூறுவது சாத்தியமாக இருக்குமாயின், அவர்கள் கைதிகளை விடுதலை செய்வார்கள். காங்கிரஸ் மந்திரிகள் எப்போது வேண்டுமாயினும் தங்களுடைய கொள்கையைப் பிரகடனம் செய்துகொள்ளலாம்.

பல சிறைகளிலும், ஹிஜ்லி முகாமிலும் உள்ள கைதிகளுடன் நான் பேசிய விவரங்களை இங்கு குறிப்பிடவேண்டிய அவசியம் இல்லை. இவையெல்லாம் உங்கள் மனத்திற்கு உடன்பாடாக இருக்கின்றனவா என்பது எனக்குத் தெரியாது. அவற்றை நீங்கள் ஆதரிக்கவில்லையாயின், நீங்கள் அதைத் தந்தி மூலம் அறிவிக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். ஆதரிப்பீர்களாயின், உங்களுடைய கடிதத்தை எதிர்பார்க்கிறேன்.

பத்திரிகைகளிலிருந்து அறிந்து கொண்டதைத் தவிர அகமதாபாத், ஷோலாப்பூர் வேலை நிறுத்தங்களைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. வேலை நிறுத்தங்கள் என் மனத்திற்குச் கலகத்தைக் கொடுத்துள்ளன. காங்கிரசின் கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டு காங்கிரஸ்வாதிகள் நடக்கவில்லை என்பதனாலோ அல்லது காங்கிரசின் செல்வாக்கிற்கு உட்படாதவர்களின் நடவடிக்கைகளைக் காங்கிரசினால் கட்டுப்படுத்த முடியவில்லை என்பதனாலோ, நாம் நிலைமையைச் சமாளிக்க இயலவில்லை எனில், நாம் பதவியில் இருப்பது காங்கிரசின் லட்சியத்திற்குத் தீங்காகவே முடியும்.

'வந்தே மாதர'த்தைப் பற்றிய வாக்குவாதம் இன்னும் முடிந்தபாடில்லை. காரியக் கமிட்டியின் தீர்மானத்தைப் பற்றி* பல வங்காளிகளுக்கும் ஏற்பட்டுள்ள மன வேதனை இன்னும் தீர்ந்தபாடில்லை. அமைதியான நிலைமை ஏற்படும்படி செய்ய தாம்

---

*தேசிய வைபவங்களில் 'வந்தே மாதரம்' என்ற கீதத்தின் முதல் வரிகளை மாத்திரம்தான் பாடவேண்டும் என்றும், மற்றவைகளைப் பாடக்கூடாது என்றும் காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் செய்ததையொட்டி வாக்குவாதம் ஏற்பட்டது. அதையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

முயற்சித்து வருவதாக சுபாஷ் (சுபாஷ் சந்திரபோஸ்) என்னிடம் கூறினர்.

வரப்போகும் கவர்னர் பதவியேற்றதும், நான் வங்காளத்திற்குத் திரும்பிச் செல்லலாமென எதிர்பார்க்கிறேன்.

நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

நாங்கள் நாகபுரிக்கு அருகில் வந்து கொண்டிருந்தபோது இதை எழுதியுள்ளேன். இன்று மாலை நாங்கள் வார்தாவுக்குப் போய்ச் சேருவோம்.

அன்பு,

பாபு

## 58

சேவாகிராமம், வார்தா.
*டிசம்பர் 7, 1937*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

முத்ரா தீர்மானங்களையோ அல்லது உங்களுடைய பிரசங்கத்தையோ நான் வாசிக்கவில்லை. அவ்விரண்டையும் பார்க்க நான் விரும்புகிறேன்.

மகாதேவின் கடிதத்திலிருந்து உங்களுடைய சாந்தமான புகாரை நான் தெரிந்து கொண்டேன். நான் என்ன செய்ய முடியும்? என் இயல்பு அதுதான். நான் எப்படி இருக்கிறேனே அப்படியேதான் நீங்கள் என்னை ஏற்றுக் கொள்ளவேண்டும். இதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். நீங்கள் என்னிடம் எவ்வளவு சாந்தமாக இருந்துவருகிறீர்கள் என்பதையும் நான் அறிவேன்.

நீங்கள் விரும்பினல் கிரிப்ளை உங்களுடன் அழைத்து வரலாம்.

அன்பு,

பாபு

## 59

சேவாகிராமம்,
*ஏப்ரல் 25, 1938*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

எல்லைப்புற மாகாணத்துக்கு மகாதேவ் விஜயம் செய்ததையொட்டி அவர் எழுதிய குறிப்புகளின் பிரதி ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அங்கிருந்து கலக்கத்தைக் கொடுக்கும்

செய்திகள் வந்ததாலும், நான் செல்ல இயலாததாலும் அவரை அனுப்ப வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. இந்தக் குறிப்புகளை எல்லா அங்கத்தினர்களுக்கும் நான் அனுப்பவில்லை. அவற்றின் பிரதிகளை மௌலானாவுக்கும் சுபாஷுக்கும் மாத்திரம் அனுப்பியிருக்கிறேன். அவை எனக்கு மிகுந்த துயரத்தை உண்டாக்கியிருக்கின்றன. மகாதேவ் மேலும் பல விவரங்களைக் கூறுகிறார். அவற்றின் பிரதி ஒன்றை நான் சகோதரர்களுக்கும்* அனுப்பியிருக்கிறேன். அவர்களிடம் உங்களுக்குள்ள மகத்தான செல்வாக்கை நீங்கள் உபயோகிப்பீர்கள் என்று நம்புகிறேன். அவர்களுக்கும் எனக்கும் தந்திப் போக்குவரத்து நடந்துவருகிறது. அங்கு நிகழ்ந்த சம்பவங்கள் எனக்கு அதிர்ச்சியைக் கொடுத் திருக்கின்றன. என்றாலும் கான் சாகிப் விரும்பினால் நான் அம் மாகாணத்திற்குச் சென்று சில நாட்கள் அங்கே தங்குவேன். நமக்குள்ளேயே பலம் குன்றிவருகிறதென்று தோன்றுகிறது. நம்முடைய சரித்திரத்தில் மிகவும் நெருக்கடியான இந்தக் கட்டத் தில் முக்கியமான விஷயங்களையொட்டி நம்மிடையே உள்ள கருத்து வேற்றுமை எனக்கு வேதனையைக் கொடுக்கிறது. இப் போதெல்லாம் என் கருத்தை நீங்கள் ஒத்துக் கொள்ளும்படி செய்ய என்னால் இயலவில்லை. அதனால் நான் எவ்வளவு தனிமை யாக இருப்பதுபோல் தோன்றுகிறதென்பதை உங்களுக்குக் கூற என்னால் இயலாது. என்மீது உள்ள அன்பு காரணமாக நீங்கள் பெரிதும் விட்டுக் கொடுப்பீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனால் தேசத்தைப் பொறுத்த விஷயங்களில் அறிவு ஒத்துக் கொள்ளாததை அன்பு காரணமாக விட்டுக்கொடுப்பது கூடாது. உங்கள் மீது எனக்குள்ள மதிப்பு, நீங்கள் என்னை எதிர்ப்பதால் மேலும் அதிகமாகிறது. அதனால், நான் தனித்து நிற்பதாகத் தோன்றும் வேதனை மிகவும் அதிகமாகிறதேயன்றி, குறைய வில்லை. இருந்தாலும் இக்கடிதத்தை இத்துடன் நான் நிறுத்திக் கொள்ளவேண்டும்.

அன்பு,

பாபு

## 60

*பிஷாவருக்குச் செல்லும் ரயிலில்,*
*ஏப்ரல் 30, 1938*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நான் ஜின்னாவுடன் 3½ மணி நேரம் பேசிக்கொண்டிருந்தேன். அதன் சம்பந்தமாக சுருக்கமான குறிப்புகள் அடங்கிய பிரதி ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். நீங்களும் மற்ற அங்கத்

*கான் அப்துல் கபார்கானையும், டாக்டர் கான் சாகிபையுமே சகோதரர் கள் என்று காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

தினர்களும் அந்த அடிப்படையை விரும்பாமலிருக்கலாம். ஆனால் அதிலிருந்து தப்புவதற்கு வேறு வழியில்லை என்பது எனது சொந்த அபிப்பிராயம். இப்போது நான் உங்களைப் போல் தேசம் முழுவதும் பிரயாணம் செய்யவில்லை என்பது என்னிடமுள்ள குறையாகும். என் உள்ளத்தில் ஏற்பட்டுள்ள சோர்வு அதைக் காட்டிலும் ஒரு பெரும் குறையாகும். நான் ஏதோ அலுவல்களைச் செய்துவருகிறேன் என்றாலும், ஒரு மாதத்திற்கு முன் எனக்கு இருந்த தன்னம்பிக்கையை இப்போது நான் இழந்துவிட்டேன் என்பதை நினைக்க என் மனம் தவிக்கின்றது. எனது வாழ்க்கையில் இது தற்காலிகமான ஒரு கட்டம் என்றே நான் நம்புகிறேன். இதை நான் உங்களிடம் கூறுவதற்குக் காரணம் என்னவெனில், எனது யோசனைகளை அவற்றின் தகுதியை முக்கியமாகக் கொண்டு பரிசீலனை செய்ய வேண்டும் என்பதேயாகும். முதல் யோசனையைப் பொறுத்தமட்டில் தகராறு எதுவும் இராது என்றே எண்ணுகிறேன். இரண்டாவது யோசனை அசாதாரணமானது. எனினும் அது உங்களுக்குத் திருப்தியளிக்காவிடில், அதை நீங்கள் உடனடியாக நிராகரிக்கத் தயங்க வேண்டாம். இவ்விஷயத்தில் நீங்கள்தான் வழிகாட்டியாக இருக்கவேண்டும்.

நான் 11-ம் தேதி திரும்பிவரலாமென எதிர்பார்க்கிறேன். ஜின்னாவுடன் சமரசப் பேச்சுகளை ஆரம்பிக்கவேண்டுமென நான் சுபாஷுக்குத் தந்தி கொடுத்திருந்தேன். அதற்கு அவர் அனுப்பியுள்ள பதிலில், தாம் 10-ம் தேதி பம்பாய்க்கு வருவதாகக் குறிப்பிட்டுள்ளார். அங்கு நீங்களும் சீக்கிரமாகச் செல்ல வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். மௌலானா சாகிபுக்கும் அவ்விதமே எழுதியிருக்கிறேன். இந்தக் கடிதத்தின் பிரதி ஒன்றையும் அவருக்கு அனுப்பியிருக்கிறேன்.

அன்பு,
பாபு

## 61

மே 7, 1938

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

காந்தி சேவா சங்கத்தைப் புதிய முறையில் அமைப்பதில் உங்களுக்குக் கலக்கத்தைக் கொடுக்கக் கூடிய அம்சம் என்ன இருக்கிறது? நான்தான் அதற்குப் பொறுப்பாளி என்பதை நான் ஒப்புக் கொள்ளவேண்டும். உங்களுக்குக் கலக்கத்தைக் கொடுத்திருப்பது எது என்பதை நீங்கள் தயக்கமின்றி கூறவேண்டும். நான் தவறு செய்திருந்தால், அத்தவறு எனக்குத் தெரிந்ததும் நான் அதைத் திருத்திக் கொள்வேன் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

எந்த இடங்களில் குறைகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதைக் குறித்து நமக்குள் கருத்து வேற்றுமை இருப்பினும், பொதுவாக சீர்குலைவு ஏற்பட்டிருக்கிறது என்பதை உங்களைப்போல் நானும் ஒப்புக் கொள்கிறேன்.

நாம் சந்திக்கும்போது மேற்கொண்டு பேசலாம்.

அன்பு,
பாபு

## 62

சேவாகிராமம், வார்தா,
*மே 26, 1938*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நீங்கள் எவ்வளவு நிர்வாகத் திறமையுடனும், உடனடியாகவும், ஒழுங்காகவும் அலுவல்களைக் கவனிக்கிறீர்கள்! குர்கான் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் நடவடிக்கைகளை நீங்கள் பரிசீலனை செய்ய முற்பட்டதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். இரு கட்சியினரும் உங்களுடைய யோசனையை ஒப்புக் கொள்ள வேண்டும்; ஒப்புக் கொள்வார்களென நம்புகிறேன்.

ஜின்னாவுடன் நான் பேசியதன் சம்பந்தமான எனது குறிப்புகளைப் பற்றி நீங்கள் எழுதிய கடிதம் இன்று கிடைத்தது. அவருடன் நான் இரண்டாம் தடவையும் பேசவேண்டியது மிகவும் அவசியம் என்று எண்ணுகிறேன். அதனால் எத்தகைய அபாயமும் நேராதென நம்புகிறேன். ஜல்லை நீங்கள் பார்த்துப் பேசிய பின், உங்களுக்கு நேரமிருந்தால் எனக்கு ஒருவரி எழுதுங்கள். ஐரோப்பாவில் நீங்கள் யாத்திரை செய்யும்போது, நீங்கள் இங்கே அவசரம் அவசரமாக அலுவல்களில் ஈடுபடுவதுபோலன்றி ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

அன்பு,
பாபு

## 63

சேவாகிராமம், வார்தா,
*ஆகஸ்டு 31, 1938*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

என் உடலில் அதிக சக்தி இல்லாததால், உங்களுக்கு எழுத வேண்டும் என்ற என் ஆர்வத்தை அடக்கிக் கொள்ளும்படி நேர்ந்திருக்கிறது.

இந்துவைப் பற்றி நான் அனுப்பிய தந்திக்கு உங்களுடைய பதிலை எதிர்பார்க்கிறேன்.

யூதர்கள் விஷயத்தில் முற்றிலும் உங்களைப் போலவே என்னுடைய அபிப்பிராயமும் இருந்துவருகிறது. நான் அந்நியத் துணிகளை பகிஷ்காரம் செய்கிறேனேயன்றி, அந்நியர்களின் திறமையை அல்ல. துன்புறுத்தப்பட்டுள்ள யூதர்களுக்காக நான் மிகவும் வருந்துகிறேன். அவ்விஷயமாக நான் உருவான ஒரு யோசனை கூறுகிறேன். உதவி பெறுவதற்குத் தகுதிவாய்ந்தவர்களின் பெயர்களையெல்லாம் சேகரித்து, அவர்கள் நம்முடன் சேர்ந்து நமது வாழ்க்கை அந்தஸ்தையும் மேற்கொள்ளவேண்டுமென அவர்களிடம் தெளிவாகக் கூறிவிட வேண்டும். மற்ற விவரங்களை மகாதேவ் எழுதுவார்.

அன்பு,
பாபு

## 64

(*1938-39.* தேதி தெரியவில்லை)

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்கள் கடிதம் கிடைத்தது. தப்பெண்ணம் ஏற்படுவதற்கு இடம் உண்டு என்பதை நான் அறிகிறேன். அறியாமையினாலோ அல்லது சுயநலத்தினாலோ எழுதும் இத்தகைய கண்டனங்களால் ஒரு காலத்திலும் என் மனம் மாறிவிடாது. உள்ள வலிமை நமக்கு இருந்தால், எல்லாம் சரியாகி விடும் என்பதை நான் அறிவேன். வெளிநாடுகள் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் நீங்கள்தான் எனக்கு வழிகாட்டியாக இருக்கிறீர்கள். எனவே உங்களுடைய கடிதம் எனக்கு உதவியாக இருக்கிறது.

குமரப்பா விஷயத்தில் செய்த தவறுக்கு நீங்கள் திட்டத்திற்கு அதிகமாகவே ஈடுசெய்துவிட்டீர்கள். அவரது கடிதத்தை நீங்கள் பார்க்க விரும்புவீர்கள் என்றே அதை அனுப்பியிருக்கிறேன். நீங்கள் அதை வாசித்ததும் கிழித்து எறிந்துவிடலாம். ஆம், அவரைப் போன்ற ஒரு சில ஊழியர்கள்தான் நம்மிடையே இருக்கிறார்கள்.

## 65

சேவாகிராமம்,
நவம்பர் *24, 1938*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய கடிதம் கிடைத்தது. நீங்கள் தேசிய அலுவல்களில் ஈடுபட்டுவிட்டால், பின்னர் உங்களுடைய நேரத்துக்கு

நீங்கள் எஜமானராக இருக்க முடியாது. எனினும் உங்களால் என்ன முடிகிறதோ அதைக் கொண்டு நான் திருப்தியடைவேன்.

குருதேவிடமிருந்து ஒரு தூதர் கொண்டுவந்த கடிதத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். வங்காளத்திலுள்ள ஊழல்களை ஒழிக்க வேண்டுமாயின், தலைவர் பதவி சம்பந்தமான அலுவல்களிலிருந்து விடுதலை பெற வேண்டியது அவசியம் என்பதே என் சொந்த அபிப்பிராயம் என்று அவருக்கு நான் பதிலளித்திருக்கிறேன். குருதேவ் உங்களுக்கு நேராக எழுதுவார் அல்லது நேரில் பேசுவார் என்பதில் சந்தேகமில்லை. நீங்கள் உங்களுடைய சொந்த அபிப்பிராயத்தைக் கூறுங்கள்.

பிரயாணத்தினால் இந்துவுக்கு பாதகம் எதுவும் இல்லை என்றே நம்புகிறேன்.

அன்பு,
பாபு

## 66

சேவாகிராமம், வார்தா,
நவம்பர் *30, 1938*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

சீன நண்பர்கள் வந்திருந்தார்கள். ஐந்து நிமிடம் பேசுவதாகக் கூறிவிட்டு முப்பத்தைந்து நிமிட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியாக, அவர்கள் கேட்டுக் கொண்டதைக் காட்டிலும் ஏழு மடங்கு அதிக நேரம் தங்கிவிட்டதாக, எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சாந்தமாக அவர்களிடம் கூறினேன்.

வைஸ்ராயுடன் நடந்த பேட்டியையொட்டி அகாதா அனுப்பியுள்ள விவரங்கள் அடங்கிய ஒரு பிரதி இத்துடன் வருகிறது. என்னை ஆங்கில மக்களின் ஒரு நண்பனாகக் கருத வேண்டும் என்று மாத்திரமே நான் வைஸ்ராய்க்குச் செய்தி அனுப்பியிருந்தேன். அரசியலைப் பற்றி நான் எதுவும் கூறவில்லை.

சுபாஷைப் பற்றி குருதேவ் எழுதியிருந்த கடிதத்தை என் கடிதத்துடன் இணைத்திருந்தேன். அது உங்களுக்கு வந்து சேர்ந்ததென்றே நம்புகிறேன்.

உழைத்து உழைத்து உங்களை மாய்த்துக்கொள்ள மாட்டீர்கள் என்றும், இந்து சௌக்கியமாக இருக்கிறாள் என்றும் நம்புகிறேன்.

சொரூப் மிகவும் அதிகமாக உழைத்து வருகிறாள். அதிலிருந்து அவளுக்கு விடுதலை அளிக்க வேண்டும். சீர்குலைந்துள்ள தன் உடலை அவள் மீண்டும் தேற்றிக் கொள்ள வேண்டும்.

## 67

சேவாகிராமம்; வார்தா,
பிப்ரவரி 3, 1939

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

தேர்தலையும், அது போராடப்பட்ட விதத்தையும் பார்த்த பிறகு, வரப்போகும் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு நான் வராமல் இருப்பதன் மூலமே தேசத்திற்குத் தொண்டு புரிய முடியும் என்று நான் கருதுகிறேன். தவிர, என் உடல் நிலையும் நன்றாக இல்லை. ஆகையால் நீங்கள் எனக்கு உதவி புரிய வேண்டும் என்பதே என் விருப்பம். எனவே காங்கிரசுக்கு வருமாறு என்னை நீங்கள் தயவு செய்து வற்புறுத்தாதீர்கள்.

காளியில் நீங்கள் எடுத்துக் கொண்ட ஓய்வு உங்களுக்கும் இந்துவுக்கும் நன்மையாக இருந்திருக்கும் என்றே நம்புகிறேன். எனக்குக் கடிதம் எழுத வேண்டியது இந்துவின் கடமையாகும்.

அன்பு,
பாபு

## 68

புது டில்லி,
மார்ச் 30, 1939

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய இரண்டு கடிதங்களும் கிடைத்தன. இரண்டும் நல்ல கடிதங்கள்.

கடிதப் போக்குவரத்தின் பிரதிகளை நான் அனுப்புகிறேன்.

ஐக்கிய மாகாண நிகழ்ச்சிகள் எனக்குக் கலக்கத்தைக் கொடுக்கின்றன. அவற்றிற்கு நான் கூறும் பரிகாரம் என்னவெனில், ஒன்று நீங்கள் பிரதம மந்திரியாக வரவேண்டும், இல்லாவிடில் மந்திரி சபையைக் கலைக்கவேண்டும் என்பதுதான். அடங்காப் பிடாரிகளை உங்களுடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர வேண்டும்.

இங்கு வந்திருந்த சோஷலிஸ்டுகளுடன் நான் மூன்று நாட்கள் வரை மனம் விட்டு அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருந்தேன். அவ்விஷயமாக நரேந்திரதேவ் உங்களுக்கு அறிவிப்பார். அதன் சம்பந்தமாக அவர் தாமாக எதுவும் கூறாவிடில், அவர் கூறும்படி நீங்கள் செய்ய வேண்டும்.

அன்பு,
பாபு.

# 69

சேவாகிராமம், வார்தா,
ஜுலை 29, 1939

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

தாமி மக்களுக்கு நான் யோசனை கூறி வழிகாட்டுவதற்குப் பதிலாக அவர்களை உங்களிடம் அனுப்பியிருக்கிறேன். என்னுடைய தலையீடின்றி இந்தப் பளுவை நீங்களே சமாளிக்க வேண்டுமென நான் கருதுகிறேன். காங்கிரஸை ஒதுக்கித் தள்ளிவிடவேண்டும் என்ற எண்ணம் சமஸ்தானங்களில் இருந்து வருவதாகத் தோன்றுகிறது. சமஸ்தானங்கள் மகாநாட்டின் நோக்கம் அதுதான். உங்களுடைய கமிட்டிக்குத் (காரியக் கமிட்டி) தெரிவிக்காமல் சமஸ்தான ஸ்தாபனங்கள் தாமாக எத்தகைய நடவடிக்கையையும் மேற்கொள்ளக் கூடாது என்று நான் ஏற்கனவேயே 'ஹரிஜனி'ல் குறிப்பிட்டிருக்கிறேன். உங்களுடைய கமிட்டி ஒழுங்கான முறையில் நடைபெற வேண்டுமாயின், அதைச் சிறிது மாற்றி அமைக்க வேண்டும்.

கடைசியாக நான் காஷ்மீருக்குச் செல்ல முடியவில்லை. ஏனெனில் நான் சமஸ்தான சர்க்காரின் விருந்தினனாக இருப்பதை ஷேக் அப்துல்லாவும் அவரது நண்பர்களும் சகிக்கவில்லை. என்னுடைய பழைய அனுபவத்தை நான் மனத்திற் கொண்டு, ஷேக் அப்துல்லா அதை அங்கீகரிப்பார் என்ற எண்ணத்துடன் சமஸ்தான சர்க்காரின் கோரிக்கையை ஒப்புக் கொண்டேன். ஆனால் நான் செய்தது தவறு என்பதைப் பின்னர் உணர்ந்தேன். எனவே சமஸ்தான சர்க்காரின் விருந்தினனாக இருப்பதை நான் ரத்து செய்துவிட்டு, ஷேக் அப்துல்லாவின் விருந்தினனாக இருக்க இசைந்தேன். இது சர்க்காருக்கு தர்மசங்கடமாகியது. ஆதலின் காஷ்மீருக்குச் செல்லுவதையே நான் அடியோடு ரத்து செய்து விட்டேன் இரண்டு விதத்தில் நான் புத்தியீனமாக நடந்து கொண்டுள்ளேன் நீங்கள் இல்லாமல் நான் அங்கே செல்ல நினைத்தது முதல் தவறு. சமஸ்தான சர்க்காரின் அழைப்பை அங்கீகரிக்குமுன் ஷேக்கின் அனுமதி பெறாதது இரண்டாவது தவறாகும். சர்க்காரின் அழைப்பை ஏற்றுக் கொள்வதன் மூலம் மக்களுக்கு நான் தொண்டு புரிய முடியும் என்று எண்ணியிருந்தேன். ஷேக்குடனும் அவரது நண்பர்களுடனும் எனக்குள்ள தொடர்பைக் குறித்து நான் மகிழ்ச்சியடையவில்லை. அவர்கள் நியாயமற்ற முறையில் நடந்து கொள்கிறார்கள் என்றே நாங்கள் எல்லோரும் கருதுகிறோம். கான் சாகிப் அவர்களுக்கு நியாயத்தை எடுத்துக் கூறினார். ஆனால் யாதொரு பலனுமில்லை.

இலங்கைக்கு உங்கள் விஜயம் அற்புதமாக முடிந்துளது. அதனால் உடனடியான பலன் என்ன என்பதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. உங்களை பர்மாவுக்கு அனுப்பவேண்டும் என்று தயாப்ஜியும், தென்னாப்பிரிக்காவுக்கு அனுப்பவேண்டும் என்று

ஆண்ட்ரூஸும் விரும்புகிருர்கள். நாம் சந்திக்கும்போது இவ்விஷய மாகப் பேசுவோம். நீங்கள் ஆரோக்கியத்துடனும் கிருஷ்ண ஆனந்தமாகவும் இருக்கிறீர்களென நம்புகிறேன்.

அன்பு,
பாபு

## 70

சேவாகிராமம், வார்தா,
ஆகஸ்டு *11, 1939*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

காரியக் கமிட்டியின் முன்னிலையிலேயே திட்டக் கமிட்டியைப் பற்றி உங்களுடன் பேசலாமா என்று நினைத்தேன். வேறு நேரம் இல்லாததே அதற்குக் காரணம், சங்கர்லால் உங்களுடன் பேசிய பிறகு இன்று காலை என்னைப் பார்க்க வந்தார். அவ் விஷயமாக கிருபளானிக்கு அவர் எழுதிய கடிதத்தின் நகல் ஒன்றையும் எடுத்துக் கொண்டுவந்தார். அவரது ஆட்சேபணையைக் குறித்து அவரிடம் நான் அனுதாபம் கொண் டேன். அக்கமிட்டியின் அலுவல்களை என்னல் ஒருபோதும் பாராட்டவும் முடியவில்லை, அறிந்து கொள்ளவும் முடியவில்லை. கமிட்டி அமைப்பிற்குக் காரணமான தீர்மானத்தின் ஷரத்துகளுக்கு உட்பட்டு அது வேலை செய்து வருகிறதா என்பதும் எனக்குத் தெரியவில்லை. அதன் நடவடிக்கைகள் காரியக் கமிட்டிக்கு அறிவிக் கப்பட்டு வருகின்றனவா என்பதும் எனக்குத் தெரியாது. ஏராள மான உபகமிட்டிகள் எந்த நோக்கத்துடன் நியமிக்கப்பட்டுள்ளன என்பதையும் என்னல் அறிந்து கொள்ள முடியவில்லை. மிகுந்த உழைப்பும் ஏராளமான பணமும் வியர்த்தமாகி வருகின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது. என்னுடைய இந்த சந்தேகங் களைத் தீர்க்கக் கூடிய ஒளியை நான் நாடுகிறேன்.

உங்களுடைய மனம் சீனவில் இருக்கிறது என்பதை நான் அறிவேன். உங்களுடைய மனத்தில் இருப்பதை ஷாவினல் விளக்க முடியுமாயின், அவரிடமிருந்து எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள நான் முயற்சிக்கிறேன். அல்லது உங்களுடைய மகத்தான லட்சிய யாத்திரையிலிருந்து நீங்கள் திரும்பிவரும்வரையில் காத் திருக்கிறேன். கடவுள் உங்களைப் பாதுகாத்து, மீண்டும் பத்திர மாகத் தாய்நாட்டுக்குக் கொண்டுவந்து சேர்ப்பாராக.

அன்பு,
பாபு

## 71

சேவாகிராமம், வார்தா,
*செப்டம்பர் 18, 1939*

எனது அன்பார்ந்த ஜவாஹர்லால்,

நான் சியாங் கை ஷேக்கிற்கு எழுதிய கடிதத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அந்தக் கடிதம் நான் விரும்பியதைக் காட்டிலும் அதிகமாக நீண்டுவிட்டது. அசல் கடிதத்துடன் டைப் அடித்த ஒரு பிரதியையும் அனுப்புவது நல்லது.

மகாதேவ் நேற்று சென்னைக்குப் புறப்பட்டுச் சென்றார்.

அன்பு,
பாபு

## 72

சேவாகிராமம், வார்தா,
*அக்டோபர் 26, 1939*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுக்கு என்மீதுள்ள அன்பும் மதிப்பும் சிறிதும் குன்றாமல் இருந்துவருகின்றன என்பதை என்னால் அறிந்து கொள்ள முடிகின்றது. என்றாலும் நம்மிடையே உள்ள கருத்து வேற்றுமைகள் குறிப்பிடத்தக்கவையாக இருந்துவருகின்றன. நமது தேச சரித்திரத்தில் இது மிகவும் நெருக்கடியான ஒரு கட்டமாகும். நமது கவனத்தை ஈர்த்துவரும் மிகவும் முக்கியமான பிரச்னைகளையொட்டி எனக்கு உறுதியான அபிப்பிராயங்கள் உண்டு. அவ்விதமே உங்களுக்கும் உறுதியான அபிப்பிராயங்கள் உண்டு என்பதை நான் அறிவேன். ஆனால் அவை, என் கருத்துகளிலிருந்து வேறுபாடானவை. கருத்துகளைத் தெரிவிக்கும் முறையிலும் உங்களுக்கும் எனக்கும் வேற்றுமை இருக்கிறது. நான் உறுதியாகக் கொண்டுள்ள அபிப்பிராயங்களை, காரியக் கமிட்டியில் உள்ள மற்ற அங்கத்தினர்களும் ஆதரிக்கிறார்களா என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியாது. என்னால் அங்குமிங்கும் போக முடியவில்லை. மக்களுடனும், காங்கிரஸ் ஊழியர்களுடனும் கூட நேரடியான தொடர்பு கொள்ள என்னால் முடியவில்லை. நீங்கள் எல்லோரும் என்னுடைய கருத்துகளை ஆதரிக்கும்படி செய்ய என்னால் இயலவில்லையாயின், தேசத்திற்கு வழிகாட்டும் பொறுப்பை நான் ஏற்கக்கூடாது என்று

கருதுகிறேன்.* காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடையே கருத்து வேற்றுமைகள் இருக்கக்கூடாது. எனவே முழுப் பொறுப்பையும் நீங்கள் ஏற்றுக் கொண்டு தேசத்திற்கு வழிகாட்டுங்கள்; என்னுடைய கருத்துகளை சுதந்திரமாக வெளியிட என்னை விட்டு விடுங்கள். நான் முழு மௌன விரதத்தை மேற்கொள்ளவேண்டுமென நீங்கள் எல்லோரும் எண்ணுவீர்களாயின், அதற்கு உட்பட்டு நடப்பதில் எனக்கு ஒன்றும் சிரமம் இல்லை என்றே நம்புகிறேன். பலன் ஏற்படக்கூடும் என்று நீங்கள் கருதினால், நீங்கள் இங்கு வந்து எல்லா விஷயங்களையும் பற்றி என்னுடன் விவாதிக்க வேண்டும்.

அன்பு,

பாபு

---

* இச்சந்தர்ப்பத்தில் சர்தார் வல்லபாய் பட்டேல் நேருஜிக்கு எழுதிய ஒரு கடிதத்தைக் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். இந்தக் கடிதமும் நேருஜி வெளியிட்டுள்ள 'பழைய கடிதங்களின் தொகுப்பு' என்ற நூலில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

பம்பாய்,
ஜூலை 3, 1939

எனது அன்புள்ள ஜவாஹர்,

......'ஹரிஜனி'ல் வெளியாகியுள்ள பாபுவின் பேட்டி பற்றி நீங்கள் அவருடன் (காந்திஜியுடன்) நிதானமிழந்து கோபத்துடனும், மிகவும் உணர்ச்சி வசப்பட்டும் பேசினீர்கள். அவ்விஷயமாக நீங்கள் அவ்வளவு ஆத்திரமடைந்ததைக் கண்டு நாங்கள் எல்லோரும் வருந்துகிறோம். நீங்கள் பாபுவிடம் நடந்து கொண்டவிதம் நியாயமற்றது என்றே நாங்கள் கருதினோம். அவ்விதம் இன்னும் ஒன்றிரண்டு சம்பவங்கள் நிகழுமாயின், பொது வாழ்க்கையிலிருந்தே அடியோடு விலகிவிட பாபு முடிவு செய்துவிடுவார் என்று நான் கருதினேன். அவருக்கு இப்போது 71 வயதாகிறது. அவருடைய சக்தி மிகவும் குறைந்து விட்டது. உங்களுடைய மனம் புண்பட்டால் அவர் வேதனை அடைகிறார். இவ்வுலகில் அவர் மற்ற எவரையும் விட உங்களைத்தான் அதிகமாக நேசிக்கிறார். அவரது நடவடிக்கை ஏதாவது உங்களுக்கு அதிருப்தியை கொடுத்தால், அவர் அதையே நினைத்துக் கொண்டு மனம் புழுங்குகிறார். அன்று மாலை நீங்கள் கோபத்துடன் பேசியதிலிருந்து அரசியலிலிருந்தே அடியோடு விலகிவிடலாமா என்று அவர் சிந்தித்துவருகிறார்.

தங்கள் உண்மையுள்ள,

வல்லபாய்

## 73

ரயில்வே ஸ்டேஷன், டில்லி,
நவம்பர் *4, 1939*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நீங்கள் இங்கிருந்து சென்ற உடனே கிருபளானி இங்கே வந்தார். ஐக்கிய மாகாணத்தில் பெரும் கொந்தளிப்பு இருந்து வருவதாயும், சட்ட மறுப்புக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுவரு வதாகவும், அவர் என்னிடம் கூறினர். தந்திக் கம்பிகளை அறுக்கும் படியும், தண்டவாளங்களைப் பெயர்க்கும்படியும் மக்களைக் கேட்டுக் கொண்டு அனுமதேயமான விளம்பரங்கள் விநியோகிக்கப்பட்டு வருவதாகவும் அவர் என்னிடம் சொன்னர். தற்போது சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கான சூழ்நிலை நிலவவில்லை என்பதே எனது சொந்த அபிப்பிராயமாகும். மக்கள் தான் தோன்றித் தனமாக நடந்து கொள்வார்களாயின், சட்ட மறுப்பு இயக்கத் திற்கு நான் தலைமை வகிப்பதை விட்டு விடும்படி நேரும். இந்த வாரத்திய 'ஹரிஜனை' நீங்கள் வாசிக்கவேண்டும் என்பதே எனது விருப்பம். இவ்விஷயமாக எனது நிலை என்ன என்பது அதில் விளக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றித்தான் உங்களுடன் விவா திக்க வேண்டுமென நினைத்தேன். ஆனல் அவ்விதம் நடைபெற வில்லை. நம்முடைய தேச சரித்திரத்தின் இந்த நெருக்கடியான சமயத்தில் நம்மிடையே தப்பெண்ணம் எதுவும் இருக்கக்கூடாது; சாத்தியமாயின் நாம் ஒருமித்த மனத்துடன் இருக்கவேண்டும்.

அன்பு,
பாபு

## 74

சேவாகிராமம், வார்தா,
நவம்பர் *14, 1939*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய கடிதங்கள் ஒழுங்காக வந்து கொண்டிருக் கின்றன. ராஜன் பாபுவுக்கு நீங்கள் எழுதிய கடிதத்தைப் பார்த் தேன். அதை நான் பார்ப்பதற்கு முன்பே, அவ்விஷயமாக 'ஹரிஜனி'ல் ஒரு குறிப்பு எழுதியுள்ளேன். அதன் முன் பிரதி ஒன்றை உங்களுக்கு அனுப்ப நான் முயற்சிக்கிறேன்.

அலகாபாத்தில் நான் இன்னும் அதிக நாட்கள் இருக்க வேண்டுமென நீங்கள் விரும்பினல் அவ்விதமே செய்கிறேன்.

நம்முடைய அறிக்கைகள் லண்டன் பத்திரிகைகளில் சுயநல நோக்கத்துடன் திரித்துக் கூறப்பட்டிருப்பதைக் குறித்து நான்

கவலைப்படவில்லை. அவ்விஷயமாக நான் 'நியூஸ் கிராணிகிள்' பத்திரிகைக்கு சுருக்கமாக ஒரு செய்தி அனுப்புகிறேன்.

அன்பு,
பாபு

நீங்கள் இன்று அரை நூற்றுண்டைப் பூர்த்தி செய்திருப்பதாக மகாதேவ் இப்போது எனக்கு நினைவூட்டுகிறுர். இதே சக்தியுடனும், கபடமற்ற தன்மையுடனும், களங்கமற்ற யோக்கியப் பொறுப்புடனும் நீங்கள் அடுத்த அரை நூற்றுண்டையும் பூர்த்தி செய்வீர்களென நான் நம்புகிறேன்.

## 75

(1940-ல் சட்ட மறுப்பை ஆரம்பிக்க வேண்டியது அவசியம் என்பதில் காந்திஜி நம்பிக்கை கொண்டிருந்தார். இருந்தாலும், குறிப்பாக அப்போது யுத்த காலமானதால், உள்நாட்டில் கலகமும், பலாத்காரமும் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டும் என்பதே அவரது விருப்பமாகும். ஆகையால், சில குறிப்பிட்ட நபர்கள் மாத்திரமே சட்டங்களை மீற வேண்டுமென அவர் தீர்மானித்தார். சட்டத்தை மீறுவதற்காக அவர் தேர்ந்தெடுத்த முதல் நபர் ஆச்சாரிய வினேபா பாவே. அந்த ஜாப்தாவில் எனக்கு இரண்டாவது ஸ்தானம் கிடைத்தது.)

வார்தா,
அக்டோபர் 21, 1940

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

எனவே, முதலாவது சத்தியாக்கிரகியாக வினேபா நிர்ணயிக்கப் பட்டிருக்கிறுர். எனது அபிப்பிராயத்தில் அவரது நான்கு நாள் தொண்டு முற்றிலும் வெற்றிகரமாக முடிந்திருக்கிறது.

நான் ஒரு குறிப்பு தயாரித்து வருகிறேன். அதை நீங்கள் பார்க்கலாம். நீங்கள் தயாராக இருப்பதாக, பேராசிரியர் டெலிபோன் மூலம் கூறினர். உங்களுடைய அறிக்கையையும் நான் பார்த்தேன். இருந்தாலும் உங்களை இன்னும் ஒன்று கேட்க விரும்புகிறேன். அதாவது நான் எழுதுவதிலும் செய்வதிலும் உங்களுக்குத் திருப்தியளிக்கக் கூடிய எதையாவது நீங்கள் காண முடிகின்றதா என்பதுதான். கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டவர் என்முறையில் மாத்திரமே நீங்கள் இயக்கத்தில் கலந்து கொள்வதை நான் விரும்பமாட்டேன். திட்டத்தில் நம்பிக்கையுள்ளவர்களே தேவை என்பது எனது எண்ணம். திட்டத்தில் உள்ள ஒவ்வொரு அம்சத்திலும் அல்ல, முக்கிய அம்சத்தில் நம்பிக்கை இருந்தால் போதும். புத்திசாலிக்கு ஒரே வார்த்தை போதும் அல்லவா?

சாத்தியமாயின் ஒரு தந்தி கொடுங்கள்.

அன்பு,
பாபு

## 76

வார்தா,
அக்டோபர் 24, 1940

அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய தந்தி கிடைத்து மகிழ்ச்சியடைந்தேன். என்னுடைய அறிக்கை அதிகாரிகளால் அனுமதிக்கப்பட்டிருக்குமாயின், இதற்கு முன்பே நீங்கள் அதைப் பார்த்திருப்பீர்கள்.

நீங்கள் தயாராக இருந்தால், சட்டத்தை மீறப் போவதை இப்போது நீங்கள் சம்பிரதாயமான முறையில் பிரகடனம் செய்யலாம். பொதுக் கூட்டத்திற்கு நீங்கள் ஒரு கிராமத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாமென நான் யோசனை கூறுவேன். நீங்கள் உங்களுடைய பிரசங்கத்தை மீண்டும் நிகழ்த்த அவர்கள் அனுமதிப்பார்களென நான் நினைக்கவில்லை. வினோபாவைப் பொறுத்த மட்டில், அவர்களுடைய திட்டம் இன்னும் தயாராகவில்லை. எனினும் உங்களை அவர்கள் சுதந்திரமாக விட்டுவைத்தால், வினோபாவுக்காகத் தயாரித்துள்ள திட்டத்தையே நீங்களும் பின்பற்றுங்கள் என்பதே எனது யோசனையாகும். எனினும் உங்களுடைய அபிப்பிராயம் வேறு விதமாக இருக்குமாயின், நீங்கள் உங்களுடைய சொந்தத் திட்டத்தையே கைக்கொள்ளலாம். ஆனால் உங்களுடைய திட்டம் என்ன என்பதை மாத்திரம் எனக்கு அறிவியுங்கள். நீங்கள் ஆரம்பிக்கும் தேதியை நீங்களே நிர்ணயம் செய்து கொள்ளுங்கள். ஆனால் அந்தத் தேதியையும் இடத்தையும் பிரகடனம் செய்வதற்கு எனக்கு அவகாசம் இருக்கவேண்டும். உங்களுடைய முதலாவது திட்டத்தை நிறைவேற்றுவதற்குக்கூட சர்க்கார் உங்களை விடமாட்டார்கள். எனினும் சர்க்கார் எடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் நான் தயாராக இருக்கிறேன்.

நமது திட்டத்தை விளம்பரம் செய்வதற்குற்ற ஒவ்வொரு நியாயமான முறையையும் நான் பயன்படுத்திக் கொள்வேன். என்றாலும், ஒழுங்குபடுத்தப்பட்ட எனது சிந்தனை அதற்குரிய பலனைக் கொடுக்கும் என்பதிலேயே நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன். நீங்கள் இதை நம்புவது கடினமெனில் இவ்விஷயமாக நீங்கள் யாதொரு முடிவுக்கும் வராமல், ஏற்படும் பலன்களைக் கவனித்து வாருங்கள் என்றே உங்களை நான் கேட்டுக் கொள்வேன். நீங்கள் பொறுமையாக இருந்துவருவீர்கள் என்பதையும், அங்கேயுள்ள மக்களையும் பொறுமையாக இருக்கும்படி கேட்டுக் கொள்வீர்கள் என்பதையும் நான் அறிவேன். என்னிடம் உங்களுக்குள்ள விசுவாசம் காரணமாக நீங்கள் எவ்வளவு சிரமத்தைத் தாங்கிவருகிறீர்கள் என்பதையும் நான் அறிவேன். அதை நான் அளவிட முடியாத ஒரு பொக்கிஷமாகவே கருதுகிறேன். உங்களுடைய விசுவாசம் வீண்போகவில்லை என்பது பின்னர் தெரியவருமென்றே நம்புகிறேன். ஏனெனில் ‘செய் அல்லது

செத்து மடி' என்பதே நமது திட்டத்தின் சாரமாகும். அதிலிருந்து பின்வாங்குவதென்ற பேச்சிற்கே இடமில்லை; நம்முடைய லட்சியம் எதிர்க்க முடியாதது. அதை விட்டுக் கொடுப்பதென்ற பேச்சுக்கும் இடமில்லை. கலப்பற்ற அகிம்சையின் சக்தி எத்தகையது என்பதை ருசுப்பிப்பதற்காக என் வழியைப் பின்பற்றுவதற்கு மாத்திரம் நான் அனுமதிக்கப்பட வேண்டும்.

இரண்டாவது சத்தியாக்கிரகியாக நான் வேறு ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று மௌலானா சாகிப் டெலிபோனில் என்னிடம் கூறினார். நீங்கள் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட இசைந்தால், அவ்விதம் செய்ய முடியாதென்று நான் அவரிடம் கூறினேன்.

'ஹரிஜன்' சம்பந்தமாக நான் எடுத்துக் கொண்டுள்ள முறையையொட்டி உங்களுடைய அபிப்பிராயம் என்ன என்பதை அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

அன்பு,
பாபு

## 77

வார்தா
மார்ச் 4, 1942

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நேற்று உங்கள் கடிதம் கிடைத்தது. இந்தக் கடிதத்தை வாசிப்பது உங்களுக்குக் கடினமாக இராது என்றே நம்புகிறேன்.*

இந்துவின் திருமணத்தையொட்டி வெளியிலிருந்து யாரும் அழைக்கப்படக் கூடாது என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். எனினும் அலகாபாத்திலுள்ள ஒரு சிலரை மாத்திரம் சாட்சிகளாக அழைக்கலாம். உங்கள் விருப்பப்படி எத்தனை பேருக்கு வேண்டுமாயினும் நீங்கள் திருமண அழைப்புகள் (லக்னப் பத்திரிகை) அனுப்பலாம். ஒவ்வொருவரிடமிருந்தும் ஆசிகளைக் கோருங்கள். திருமணத்துக்கு விஜயம் செய்யும் சிரமத்தை யாரும் எடுத்துக் கொள்ளவேண்டாம் என்று தெளிவாகக் கூறிவிடுங்கள். வரும்படி யாருக்காவது எழுதினால், ஒருவர் பாக்கியின்றி எல்லோருக்கும் அவ்விதமே எழுத வேண்டும்.

இவ்வளவு தூரம் எளிமையான முறையை இந்து விரும்புவாளா, விரும்பமாட்டாளா என்பதையும் யோசிக்கத்தான்

---

* மேற்கண்ட கடிதத்தை காந்திஜி ஹிந்தியில் எழுதியிருந்தார். இதற்குப் பின் நேருஜிக்கு காந்திஜி எழுதிய எல்லாக் கடிதங்களும் ஹிந்தி மொழியில் எழுதப்பட்டவை.

வேண்டும். இவ்வளவு தூரம் செல்ல நீங்களும் விரும்பவில்லையாயின், என்னுடைய யோசனையை நீங்கள் நிராகரித்து விடலாம்.

இந்துவைப் பற்றி நீங்கள் கூறியுள்ள அபிப்பிராயங்களை நான் பார்த்தேன். அவை எனக்குப் பிடித்தமாக இருந்தன. அவளது விவாகத்தைப் பற்றி ஒவ்வொரு நாளும் எனக்குக் கடிதங்கள் வருகின்றன. அவற்றில் சில பயங்கரமாக இருக்கின்றன. அந்தக் கடிதங்களையெல்லாம் நான் கிழித்து எறிந்துவிட்டேன். அக்கடிதங்களுக்குப் பதிலளித்து 'ஹரிஜனி'ல் நான் ஒரு குறிப்பு எழுதியிருக்கிறேன். அதன் பிரதி ஒன்றையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். அக்குறிப்பு திங்கட்கிழமையன்று எழுதப்பட்டது.

நேற்று முதல் முஸ்லிம்களிடமிருந்து கடிதங்கள் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன. தாக்க வேண்டும் என்ற அவர்களுடைய நோக்கத்தை அவை வெளிப்படுத்துகின்றன. இது ஒரு பழங் கதையே. இவ்விதம் கடிதங்கள் தொடர்ந்து வந்துகொண்டுதான் இருக்கும்.

இந்திய சமஸ்தானங்களைப் பொறுத்தமட்டில் சாத்தியமானதையெல்லாம் நான் செய்வேன். பணக் கஷ்டம் எப்போதும் இருந்துவரும். அதன் சம்பந்தமான முழுப் பொறுப்பையும் ஜம்னலால்ஜி ஏற்றுக் கொண்டுள்ளார். அவர் பணத்திற்கு எப்படி வழி செய்வார் என்பதுதான் தெரியவில்லை. பணத்திற்கு எப்படி ஏற்பாடு செய்வதென்பது எனக்கும் வியப்பாக இருக்கிறது. பத்திரிகையைப் பற்றி நான் பட்டாபியுடன் கலந்து ஆலோசித்து வருகிறேன். நீங்கள் இங்கு வரும்போது எல்லாவற்றையும் பற்றிப் பேசுவோம்.

நான் சியாங் கை ஷேக்கின் அறிக்கையைப் பார்த்தேன். அது ஒரு நல்ல அறிக்கையே. உங்களுடைய சம்மதம் கிடைத்து விட்டது என்றாலும், அந்தக் கடிதத்தை பகிரங்கமாக வெளியிட வேண்டிய அவசியமில்லை என்று நான் நினைத்தேன். அது பழைய விஷயமாகிவிட்டது.

பாகீரதி இங்கு வந்திருக்கிறாள். சந்திரா சிங்கை வைத்துக் கொள்வது கடினமாக இருக்கிறது. மனம் போன போக்கில் நடந்து கொள்வது அவருக்கு வழக்கமாகிவிட்டது. அவருக்கு புத்திசாலித்தனமும் இல்லை. அற்ப விஷயங்களுக்கெல்லாம் சச்சரவிடுகிறார். அவர் யாரையாவது அடிக்க முற்பட்டால்கூட நான் ஆச்சரியப்படுவதற்கில்லை. இருந்தாலும் அவர் நல்ல உழைப்பாளி. நீங்கள் கவலைப்பட வேண்டாம். என்னுடைய கடிதத்தை வாசிப்பதில் உங்களுக்கு சிரமம் இருக்குமாயின், நான் இன்னும் தெளிவாக எழுதுகிறேன். நாம் ஒருவருக்கொருவர் தேசீய பாஷையிலேயே தொடர்ந்து கடிதம் எழுதிவருவது நமது கடமையாகும். சிறிது காலம் சென்ற பிறகு, அவ்விதம் எழுதுவது எளிதாகிவிடும். அதனால் ஏழைகளுக்கு மிகுந்த நன்மை ஏற்படும்.

பாபுவிடமிருந்து ஆசிகள்.

# 78

வார்தா,
ஏப்ரல் 15, 1942

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

பேராசிரியர் இங்கே வந்திருக்கிறார். அவர் என்னிடம் எல்லா விவரங்களையும் கூறினார். உங்களுடைய பத்திரிகைப் பேட்டியைப் பற்றியும் நான் தெரிந்து கொண்டேன். நம்முடைய கருத்து வேற்றுமைகள் நம்முடைய செயல்களிலும் புகுந்து வருவதைக் காண்கிறேன். இந்த நிலையில், வல்லபாயும் மற்றவர்களும் என்ன செய்வார்கள்? உங்களுடைய கொள்கை ஒப்புக் கொள்ளப் படுமாயின், பின்னர் காரியக் கமிட்டி இன்றைக்கு இருப்பதுபோல் இருக்க முடியாது.

நான் எவ்வளவுக்கு அதிகமாக அதைப்பற்றிச் சிந்திக்கிறேனோ அவ்வளவுக்கு, நீங்கள் செய்வது தவறு என்ற உணர்ச்சி எனக்கு அதிகமாகிவருகிறது. அமெரிக்கப் படைகளும் சீனப்படைகளும் இந்தியாவில் பிரவேசித்துவரும்போது, நாம் கொரில்லா போராட்டத்தில் ஈடுபடுவதால் நன்மை எதுவும் ஏற்படுமென நான் கருதவில்லை.

உங்களை எச்சரிக்க வேண்டியது எனது கடமையாகும்.

இந்துவும் பிரோஸும் சௌக்கியமாக இருக்கிறார்களென நான் நம்புகிறேன்.

பாபுவிடமிருந்து ஆசிகள்,

உத்கலிலுள்ள பார்வர்ட் பிளாக் நபர்கள் ஆயுதந்தாங்கி வருகிறார்கள் என்றும், கொரில்லா போருக்கு கம்யூனிஸ்டுகள் தயாராகிவருகிறார்கள் என்றும் நேற்று நான் கேள்விப் பட்டேன். அது எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்குத் தெரியாது.

# 79

வார்தா,
ஏப்ரல் 24, 1942

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நான் ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை மீரா பென் ஒப்புக் கொண்டிருக்கிறார். தியாகத்திற்கும் அவர் தயாராக இருக்கிறார். நான் போகாவிட்டால் கூட அவர் அலகாபாத்திற்குச் செல்ல விரும்பினார். எனவே அவரை இங்கு வரும்படி நான் அழைத்தேன். எனது அபிப்பிராயங்களை ஒரு தீர்மானத்தின் உருவத்தில் அவர் மூலம் நான் அனுப்புகிறேன். நான் அலகாபாத்திற்குச் செல்ல வேண்டுமென மௌலானா சாகிப்

வற்புறுத்தினர். நான் அங்கு செல்லுவதற்கில்லையென்று அவரிடம் கூறினேன். இப்போதெல்லாம் பிரயாணம் செய்வது எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. எனவே என்னை மன்னிக்கும்படி அவரை வேண்டிக் கொண்டேன்; ஒரு தீர்மானத்தின் உருவில் எனது அபிப்பிராயங்களை அனுப்புவதாயும் அவருக்கு எழுதினேன். தீர்மானத்தை ஆதரித்து எனது வாதங்களைக் கூற வேண்டியது அவசியம் என நான் கருதவில்லை. எனது தீர்மானத்தை நீங்கள் விரும்பவில்லையாயின், நான் உண்மையில் அதை வற்புறுத்த முடியாது. ஒவ்வொருவரும் அவரது சொந்த வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டிய நேரம் வந்திருக்கிறது.

பேனியிலும் மற்ற இடங்களிலும் சர்க்காரின் போக்கு சகிக்க முடியாததாக இருக்கிறது. இந்த யுத்தத்தில் தோல்வியுருமல் இருந்தாலும்கூட, அத்தகைய சர்க்கார் நமக்கு என்ன சாதிக்கும்? இன்று அது தனது வாழ்வுக்கே போராடி வருகிறது. இந்த சர்க்கார் போன பின், நாம் ஜப்பானியர்களைச் சமாளித்து நிற்க முடியும் என்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இந்த அரசாங்கம் அகற்றப்பட்ட பின் நாம் நம்மிடையே சண்டையிட்டுக் கொள்வோம் என்பது வேறு விஷயமாகும். அது எப்படியாயினும், நம்முடைய உள் நாட்டுத் தகராறுகளிலிருந்து நம்மையே காப்பாற்ற இந்த சர்க்காரின் தயவை நாம் நாட வேண்டியது அவசியமா?

ஆச்சாரிய நரேந்தர தேவ் தீர்மானத்தைப் பார்த்தார். அவருக்கு அதில் திருப்தியே.

பாபுவிடமிருந்து ஆசிகள்

## 80

*அக்டோபர் 5, 1945*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

பல நாட்களாக நான் உங்களுக்குக் கடிதம் எழுத வேண்டுமென ஆர்வமுடையவனாக இருந்துவருகிறேன். ஆனால் இன்றுவரையில் எழுத முடியாமற்போய்விட்டது. நான் உங்களுக்கு ஆங்கிலத்தில் எழுதவேண்டுமா அல்லது ஹிந்துஸ்தானியில் எழுத வேண்டுமா என்ற கேள்வியும் என் மனத்தில் இருந்து வந்தது. கடைசியாக ஹிந்துஸ்தானியிலேயே உங்களுக்கு எழுதுவதென்று தீர்மானித்தேன்.

நம்மிடையே உள்ள கருத்துவேற்றுமையைப் பற்றியே முதலில் நான் உங்களுக்கு எழுத விரும்புகிறேன். நம்மிடையே மூலாதாரமான பிரச்னைகளில் கருத்து வேற்றுமை இருக்குமாயின்,

அதைப் பொதுமக்களும் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டுமென நான் கருதுகிறேன். அதை அவர்களுக்குத் தெரியாமல் மறைத்துவைப்பது, சுயராஜ்யத்திற்காக நாம் செய்துவரும் தொண்டிற்கே குந்தகம் விளைவிக்கக் கூடியதாகும். 'இந்திய சுயராஜ்ய'த்தில்* நான் குறிப்பிட்டுள்ள அரசாங்க முறையையே இன்றும் நான் ஆதரிப்பதாகக் கூறியுள்ளேன். இவை வெறும் வார்த்தைகள் அல்ல. 1909-ல் அந்தச் சிறு புத்தகத்தை நான் எழுதினேன். அக்காலத்திலிருந்து இன்றுவரையில் நான் பெற்ற அனுபவம் எனது நம்பிக்கையில் உள்ள உண்மையை உறுதிப்படுத்தியிருக்கிறது. எனவே அம்முயற்சியில் நான் தனியாக நிற்கும்படி நேர்ந்தாலும் கவலைப் படமாட்டேன். நான் இதை எழுதும்போது என் முன் 'இந்திய சுயராஜ்யம்' இல்லை. அதே சித்திரத்தை எனது சொந்த வார்த்தைகளில் மீண்டும் சித்திரிப்பதே உண்மையில் சிறந்ததாகும். இது, 'இந்திய சுயராஜ்ய'த்தில் நான் வரைந்த அதே சித்திரமா அல்லவா என்பது உங்களுக்கும் சரி, எனக்கும் சரி, முக்கியமல்ல. அப்போது நான் கூறியது சரி என்று ருசுப்பிக்க வேண்டிய அவசியமில்லை. இன்று எனது உணர்ச்சி எப்படி இருக்கிறது என்பதை அறிந்து கொள்வதே முக்கியமானது. இந்தியா உண்மையான விடுதலை பெறவேண்டுமாயின், நகரங்களில் அல்ல, கிராமங்களிலும், மாளிகைகளில் அல்ல, மண்குடிசைகளிலும் மக்கள் வாழவேண்டும் என்ற உண்மையை சீக்கிரமாகவோ அல்லது தாமதித்தோ உணர்ந்து கொண்டுதான் தீர வேண்டும். நகரங்களிலும், மாளிகைகளிலும் கோடிக்கணக்கான மக்கள் பரஸ்பரம் அமைதியாக வாழ்வது ஒரு காலத்திலும் இயலாத காரியமாகும். அங்கு அவர்கள் பலாத்காரத்தையும் அசத்தியத்தையும் மேற்கொள்ளுவதைத் தவிர வேறு வழி எதுவும் இராது. சத்தியமும் அகிம்சையுமின்றேல், மானிட வர்க்கத்திற்கு அழிவைத் தவிர வேறு எதுவும் இராது என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். எளிமையான கிராம வாழ்க்கையில் மாத்திரம்தான் சத்தியத்தையும் அகிம்சையையும் நாம் நடைமுறையில் கொண்டுவர முடியும். இந்த எளிமையை ராட்டினத்திலும் ராட்டினத்தின் உட்பொருளிலும்தான் சிறந்த முறையில் காண முடியும். இன்று உலகம் தவறான வழியில் சென்று கொண்டிருப்பதைக் குறித்து நான் அஞ்சக்கூடாது. இந்தியாவும் ஒருவேளை அதே வழியில் செல்லலாம்; விட்டில் பூச்சி விளக்கைச் சுற்றி மேலும் மேலும் வெறி நடனம் புரிந்து இறுதியாக விளக்கில் விழுந்து தன்னைத்தானே எரித்துக் கொள்வதைப் போல், இந்தியாவும் செய்யலாம். ஆனால் எனக்குக் கடைசி மூச்சு உள்ளவரை

---

*'இந்திய சுயராஜ்யம்' காந்திஜி எழுதியுள்ள ஒரு நூலாகும். 1909-ம் ஆண்டில் காந்திஜி இங்கிலாந்திலிருந்து தென்னாப்பிரிக்காவுக்குக் கப்பலில் பிரயாணம் செய்தபோது இந்த நூலை எழுதினர். இந்நூல் முழுவதும், மகாத்மா காந்தி நூல்கள், முதல் தொகுப்பில் (பக்கங்கள் 603-731) சேர்க்கப்பட்டிருக்கிறது.

யிலும் இந்தியாவையும், இந்தியாவின் மூலம் உலகம் முழுவதையும் அத்தகைய கொடிய விதியிலிருந்து பாதுகாப்பதே எனது முழு முதற்கடமையாகும்.

நான் கூறுவதன் சாரம் இதுதான்: மனிதன், தன்னுடைய உண்மையான தேவைகள் என்ன என்பதை உணர்ந்து அவற்றைக் கொண்டு திருப்தியடைய வேண்டும்; சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்பவனாக இருக்க வேண்டும். இவ்விதம் அவன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவில்லையாயின், அவன் தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ள முடியாது. பல நீர்த் துளிகள் சேர்ந்து மகாசமுத்திரமாகியிருப்பதுபோல், தனி நபர்கள் சேர்ந்தே உலகம் உருவாகிறது. நான் புதிதாக ஒன்றும் கூறிவிடவில்லை. இது எல்லோருக்கும் தெரிந்த உண்மையே.

'இந்திய சுயராஜ்ய'த்தில் நான் இதையெல்லாம் கூறியிருக்கிறேன் என்று நினைக்கவில்லை. நவீன விஞ்ஞான முறைகளில் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. நவீன விஞ்ஞான வழியை அடிப்படையாகக் கொண்டு பண்டைய முறைகளுக்குச் சரியான விதத்தில் புதிய உருவம் கொடுக்க வேண்டும். நம்முடைய கிராம வாழ்க்கை இன்றைக்கு இருப்பதைப்போல இருக்கவேண்டுமென நான் எண்ணுவதாக நீங்கள் கற்பனை செய்து கொள்ளவேண்டாம். நான் கனவு காணும் கிராமம், இன்னும் எனது சிந்தனையில்தான் இருந்து வருகிறது. இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு மனிதனும் அவனது கனவு உலகில் வாழ்கின்றான் அல்லவா? நான் கனவு காணும் தலைசிறந்த கிராமத்தில் எல்லோரும் புத்திசாலிகளாக இருப்பார்கள்; அவர்கள் மிருகங்களைப் போல் புழுதியிலும் இருளிலும் வாழமாட்டார்கள்; அங்கே ஆடவர்களும் பெண்களும் சுதந்திரர்களாக இருப்பார்கள்; உலகிலுள்ள எவருக்கும் எவ்விதத்திலும் சரிசமானமாக இருப்பார்கள். அந்தக் கிராமத்தில் பிளேக், வாந்திபேதி, வைசூரி போன்ற நோய்கள் இரா; ஒருவரும் சோம்பேறியாக இருக்கமாட்டார்கள்; யாரும் சுகபோகங்களில் புரண்டு கொண்டும் இருக்கமாட்டார்கள். அங்கு வாழும் ஒவ்வொருவரும் அவரவர் பங்கிற்கு உடலுழைப்பில் ஈடுபட வேண்டியிருக்கும். இதன் சம்பந்தமாகப் பெரும் அளவில் எல்லா விவரங்களையும் சித்திரிக்க நான் விரும்பவில்லை. கிராம வாழ்க்கையில் ரயில்வேக்கள், தந்தி தபால் அலுவலகங்கள் ஆகியவற்றிற்கும் இடம் உண்டு.

காரியக் கமிட்டிக் கூட்டத்தின் கடைசி நாளன்று, இவ்விஷயத்தை மற்றொரு கூட்டத்தில் சாங்கோபாங்கமாக விவாதித்து நிலைமையைத் தெளிவாக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. நானும் அதை விரும்புகிறேன். எனினும் காரியக் கமிட்டி கூடினாலும் கூடாவிட்டாலும், நம்மிடையே பரஸ்பரம் உள்ள நிலையை நாம் தெளிவாக அறிந்து கொள்ளவேண்டும். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக, நம்மைப் பிணைத்துள்ள தொடர்புக்குக் காரணம் அரசியல் அலுவல்கள் மாத்திரமல்ல; அத்தொடர்பு மிகவும் ஆழ்ந்தது, சிறிதும் தகர்க்க முடியாதது.

ஆகையால், அரசியல் துறையில் கூட நாம் ஒருவரையொருவர் தெளிவாக அறிந்து கொள்ளவேண்டும் என்பதே எனது மனப் பூர்வமான ஆர்வமாகும். இரண்டாவதாக, நம்மில் எவரும் தம்மை உபயோகமற்றவர் என்று கருதவில்லை. நாம் இருவரும் இந்தியா வின் சுதந்திர லட்சியத்திற்காகவே உயிர்வாழ்கிறோம்: அதற் காகவே நாம் இருவரும் மகிழ்ச்சியுடன் உயிர் துறப்போம். உல கத்தின் புகழுரை நமக்குத் தேவையில்லை. உலகம் நம்மைப் புகழ்ந் தாலும் அல்லது இகழ்ந்தாலும், நாம் அதைப் பொருட்படுத்தப் போவதில்லை. தொண்டு புரிவதில் புகழுரைக்கு இடமில்லை. இந் தியாவுக்குத் தொண்டு புரிவதற்காக நான் 125 வயது வரையில் உயிர் வாழ விரும்புகிறேன். இருந்தாலும் இப்போது நான் கிழவ னாகி விட்டேன் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். என்னைக் காட்டிலும் நீங்கள் மிகவும் இளைஞர். அதனாலேயே உங் களை எனது வாரிசு என்று குறிப்பிட்டிருக்கிறேன். இருந்தாலும் நான் என்னுடைய வாரிசை நன்கு புரிந்து கொள்ள வேண்டும்; என்னுடைய வாரிசும் என்னை நன்கு புரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் எனக்கு மனத் திருப்தி ஏற்படும்.

மற்றொரு விஷயம். கஸ்தூரிபா டிரஸ்டிலும் ஹிந்துஸ்தானி பிர சார சபையிலும் நீங்கள் சேரவேண்டுமென நான் உங்களைக் கேட் டேன். அதன் சம்பந்தமாக நீங்கள் யோசித்து எனக்கு அறிவிப்பதாகக் கூறினீர்கள். ஹிந்துஸ்தானி பிரசார சபையில் ஏற்கனவேயே உங்கள் பெயர் இருப்பதை நான் காண்கிறேன். இவ்விஷயமாக உங்களையும் மௌலானா சாகிபையும் தாம் சந்தித்த தாயும், அதற்காக 1942-ல் உங்களுடைய கையெழுத்துக்களைப் பெற்றதாயும் நானாவதி எனக்கு நினைவூட்டினார். என்றாலும் அது பழைய சரித்திரமாகும். ஹிந்துஸ்தானியின் தற்போதைய நிலையை நீங்கள் அறிவீர்கள். அவ்விதம் நீங்கள் கையெழுத்திட்டதற்கு முர ணின்றி நடந்து கொள்ள நீங்கள் இன்னும் விரும்புவீர்களாயின், இந்தச் சபையில் நான் உங்களிடமிருந்து வேலை வாங்க விரும்பு கிறேன். அதில் அதிகமாக வேலை எதுவும் இராது. நீங்கள் அதற்காகப் பிரயாணம் செய்யவும் நேராது.

கஸ்தூரிபாய் நிதி சம்பந்தமான வேலை மற்றொரு விஷயமாகும். நான் மேலே எழுதியிருப்பதை நீங்கள் ஆதரிக்கவில்லையாயின், டிரஸ்டில் நீங்கள் மகிழ்ச்சியுடன் இருக்க முடியாது. அந்த நிலையை நான் புரிந்து கொள்வேன்.

உங்களுக்கும் சரத் போஸுக்குமிடையே பீறிட்டெழுந்துள்ள வாக்குவாதத்தைப் பற்றியதே நான் கூறவிரும்பும் கடைசி விஷய மாகும். அது எனக்கு வேதனையைக் கொடுத்திருக்கிறது. உண்மை யில் அதன் காரணத்தை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. நீங்கள் கூறியிருப்பதைத் தவிர மறைமுகமான காரணம் ஏதாவது இருக்கிறதா? அப்படியிருக்குமாயின், நீங்கள் அதை எனக்குச் சொல்ல வேண்டும்.

நான் எழுதியிருப்பதைப் பற்றி நீங்கள் என்னுடன் பேச வேண்டும் என்று கருதினல், நாம் கூடிப் பேசுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

நீங்கள் கடுமையாக உழைத்து வருகிறீர்கள். நீங்களும் இந்துவும் சௌக்கியமாக இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

## 81

புனா,
*நவம்பர் 13, 1945*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

நேற்று நமக்குள் நடந்த பேச்சு எனக்கு மகிழ்ச்சியளித்தது. எனினும் நீண்ட நேரம் பேச முடியாததற்காக வருந்துகிறேன். ஆனல் ஒரே தடவையில் அவ்விஷயத்தைப் பேசி முடித்துவிட முடியாது; நாம் அடிக்கடி சந்தித்துப் பேச வேண்டியது அவசியமாகும். நினைத்த இடத்திற்கு ஓட என் உடல் நிலை இடம் கொடுக்குமாயின், நீங்கள் எங்கிருந்தாலும் நானே வந்து உங்களுடன் இரண்டு நாட்கள் வரையில் தங்கி, மனம் விட்டு அந்தரங்கமாகப் பேசியபின் திரும்புவேன். இதற்கு முன் அவ்விதம் நான் செய்திருக்கிறேன். நாம் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ள வேண்டியதும், நம்முடைய நிலை என்ன என்பதை மற்றவர்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளவேண்டியதும் அவசியமாகும். இன்று நாம் இருப்பதுபோல ஒருமித்த உள்ளத்துடன் இருக்கும்வரையில், இறுதியில் நமக்குள் கருத்து வேற்றுமை இருந்தாலும் பாதகமில்லை. நேற்று நமக்குள் நடந்த பேச்சிலிருந்து நான் அறிந்து கொண்டது என்னவெனில், நமக்குள் அதிகமான கருத்து வேற்றுமை எதுவும் இல்லை என்பதுதான். இதைச் சோதிப்பதற்காக, நான் புரிந்து கொண்ட விவரங்களின் சாரத்தைக் கீழே குறிப்பிட்டுள்ளேன். அதில் ஏதாவது முரண்பாடு இருந்தால், தயவு செய்து என்னைத் திருத்துங்கள்.

*1.* நீங்கள் கூறியதுபோல் உண்மையான பிரச்னை என்னவெனில், அறிவு, பொருளாதாரம், அரசியல், தார்மிகம் ஆகிய துறைகளில் மனிதன் மகோன்னதமான வளர்ச்சி பெறும்படி எப்படிச் செய்வது என்பதேயாகும். இதை நான் முற்றிலும் ஒத்துக் கொள்கிறேன்.

*2.* இவ்விஷயத்தில் எல்லோருக்கும் சமமான உரிமையும், சந்தர்ப்பமும் இருக்க வேண்டும்.

*3.* அதாவது உணவு, தண்ணீர், உடை ஆகிய மற்றுமுள்ள வாழ்க்கை வசதிகளின் தரத்தில் நகரவாசிகளுக்கும் கிராமவாசி

களுக்கும் இடையே யாதொரு வேற்றுமையும் இருக்கக் கூடாது. இன்று இந்த சமத்துவ அந்தஸ்தை அடைவதற்கு, வாழ்க்கைக்குத் தேவையான உடை, உணவு, இருக்க இடம், விதை, தண்ணீர் ஆகிய அவசியமான சாதனங்களை தங்களுக்குத் தாங்களே உற்பத்தி செய்து கொள்ள மக்களுக்குச் சக்தி இருக்க வேண்டும்.

4. தனித்து வாழ்வதற்காக மனிதன் பிறக்கவில்லை. அவன் முக்கிய அம்சங்களில் சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு ஜந்துவே. அவன் சுதந்திரமானவன், அதே சமயத்தில் ஒருவரையொருவர் சார்ந்து வாழவேண்டியவன். எவரும் பிறருடைய முதுகின்மீது சவாரி செய்ய முடியாது, சவாரி செய்யக் கூடாது. அத்தகைய வாழ்விற்கு அவசியமான நிபந்தனைகளை நாம் வகுத்துக் கொள்ள முயற்சிப்போமாயின், நாம் ஒரே ஒரு முடிவிற்கு வந்து தீரவேண்டியிருக்கும். அதாவது கிராமங்கள் ஒன்று சேர்ந்தே சமுதாயம் உருவாகின்றது. கிராமம் சமுதாயத்தின் ஒரு முக்கிய அம்சமாக இருக்கவேண்டும். ஒரு கிராமத்தை, மக்கள் அடங்கிய சிறிய, நிர்வாக சாத்தியமான ஒரு கோஷ்டி என்று வேண்டுமாயினும் வைத்துக் கொள்ளுங்கள். வாழ்க்கையின் மூலாதாரமான தேவைகள் சம்பந்தப்பட்டவரையில் ஒவ்வொரு கிராம மக்களும் சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்பவர்களாக இருக்க வேண்டும்; பரஸ்பர ஒத்துழைப்பு, ஒருவரையொருவர் சார்ந்திருத்தல் ஆகிய பிணைப்புகளால் கட்டுண்டவர்களாக இருக்கவேண்டும்.

இது வரையில் நான் உங்களைப் புரிந்து கொண்டிருப்பது சரிதான் எனில், அப்பிரச்னையின் இரண்டாவது பகுதியைப் பற்றிய ஆலோசனையை என்னுடைய அடுத்த கடிதத்தில் எடுத்துக் கொள்கிறேன்.

நான் உங்களுக்கு எழுதிய முதல் கடிதத்தை, ராஜகுமாரியைக் கொண்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கச் செய்தேன். அது இன்னும் என்னிடமே இருக்கிறது. இக் கடிதத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பை உங்களுக்காக நான் இத்துடன் அனுப்பியுள்ளேன். அதனால் இருவித நோக்கம் நிறைவேறும்; முதலாவதாக, ஆங்கில மொழிபெயர்ப்பின் மூலம் நான் எனது நிலையைப் பூரணமாகவும், தெளிவாகவும் உங்களுக்கு விளக்க முடியும். இரண்டாவதாக, நான் உங்களைப் பூரணமாகவும் சரியாகவும் புரிந்து கொண்டிருக்கிறேனா என்பதையும் நான் கண்டுகொள்ள அது எனக்கு உதவியாக இருக்கும்.

இந்துவுக்கு ஆசிகள்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

# 82

(காந்திஜி எனக்கு எழுதிய ஒரு கடிதத்தின் மொழி பெயர்ப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. காந்திஜியின் அசல் கடிதம் ஹிந்தியில் எழுதப்பட்டதாகும். அவர் தமது உண்ணு விரதத்தை முடித்த தினத்தில் இந்தக் கடிதம் எழுதினுர். அந்த உண்ணுவிரதம் ஆறு நாட்கள் நீடித்தது. டில்லியில் ஏற்பட்ட வகுப்புக் கலகத்தைக் குறித்து தமது வருத்தத்தைத் தெரிவிக்கவே காந்திஜி உண்ணுவிரதத்தை மேற்கொண்டார்.

டில்லியில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளும், காந்திஜியின் உண்ணுவிரதமும் என்னை நிலைகுலையச் செய்தன. ஒன்றிரண்டு நாட்கள்வரையில் நானும் எத்தகைய உணவும் அருந்தவில்லை. நான் அவ்விதம் இருந்தது ஓர் ஒழுங்கான உண்ணுவிரதம் அல்ல. டில்லி நிகழ்ச்சிகளைக் குறித்து என் மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியே நான் உணவு அருந்தாதற்குக் காரணமாகும். இது யாருக்கும் தெரியாது. எனினும் இச்சம்பவம் காந்திஜிக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. எனவே உண்ணுவிரதத்தை நிறுத்திவிடும்படி அவர் எனக்குப் புத்திமதி கூறினுர்.

ஜவாஹர் என்ற சொல்லுக்கு மாணிக்கம் என்று அர்த்தம். அதையே 'இந்தியாவின் மாணிக்கம்' என்று காந்திஜி சிலேடையாகக் குறிப்பிட்டிருக்கிருர்.

இதுதான் காந்திஜி எனக்கு எழுதிய கடைசிக் கடிதமாகும். பன்னிரண்டு நாட்களுக்குப் பிறகு *1948* ஜனவரி *30*-ஆம் தேதி அவர் ஒரு கொலைகாரனின் கையால் இறந்தார்.)

ஜனவரி *18, 1948*

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உங்களுடைய உண்ணுவிரதத்தைக் கைவிடுங்கள்.

பாகிஸ்தான் பஞ்சாப் சபாநாயகரிடமிருந்து வந்துள்ள தந்தியின் நகலை இத்துடன் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். நான் உங்களிடம் என்ன சொன்னேனே அதையே ஸாஹித் ஹுசேன் கூறியிருக்கிருர்.

நீங்கள் நீண்ட ஆயுளுடனிருந்து, தொடர்ந்து இந்தியாவின் மாணிக்கமாக இருந்துவருவீர்களாக.

பாபுவிடமிருந்து ஆசிகள்

மேற்கு பஞ்சாப் அசெம்பிளி சபாநாயகரிடமிருந்து வந்த தந்தியின் விவரமாவது :

உங்களுடைய மகத்தான உண்ணுவிரதம் தன்னலமற்ற, உயர்ந்த நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்டது. அதைப் பற்றி ஜனவரி *30*-ஆம் தேதி சபை அங்கத்தினர்கள் நிகழ்த்திய பிரசங்

கங்களின் முக்கிய பகுதிகளை உங்களுக்கு அறிவிக்க நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். அப்போது பேசிய அங்கத்தினர்களின் உணர்ச்சிகளில் நானும் இச்சபையினரும் பூரணமாகப் பங்கு எடுத்துக் கொள்கிறோம்.

மாலிக் முகமது பிரோஸ் கான் நூன்: "மத ஸ்தாபகர்களைத் தவிர, இந்த உலகில் மகாத்மா காந்தியைக் காட்டிலும் ஒரு மகா புருஷர் பிறந்ததில்லை."

கனம் மியான் முகமது மும்தாஸ் கான் தௌல்தானா, நிதி மந்திரி: "முஸ்லிம்களிடம் தமக்குள்ள உணர்ச்சிகளை வெளியிடும் மகாத்மா காந்தியின் உண்ணாவிரதத்தை பாராட்டவேண்டியது நம்முடைய முழு முதற்கடமையாகும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக உயிரையும் தியாகம் செய்ய இந்தியாவில் ஒரு மனிதராவது இருக்கிறார் என்பதையே அந்த உண்ணாவிரதம் காட்டுகிறது. இந்த உண்ணாவிரதத்தைத் தொடர்ந்து அனுசரிக்க இனிமேல் அவசியம் ஏற்படாமல் நாம் நடந்துகொள்ள எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திருக்கிறோம். சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு அளிக்கும் விஷயமாக அவரது உணர்ச்சிகளில் நாங்களும் பங்கு எடுத்துக்கொள்கிறோம் என்பதை இந்தச் சபையிலிருந்து மகாத்மா காந்திக்கு உறுதி கூறுகிறோம்."

முதல் மந்திரி கான் இப்திகார் ஹுசேன் கான்: "ஓர் உயர்ந்த லட்சியத்தை நிறைவேற்றுவதற்காக மகாத்மா காந்தி மேற்கொண்ட மகத்தான உண்ணாவிரதத்தைக் குறித்து நான் என் சார்பிலும் எனது சகாக்களின் சார்பிலும் எங்களுடைய ஆழ்ந்த வியப்பையும் மனப்பூர்வமான பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறேன். அவரது உண்ணாவிரதம் எங்களுக்கு மிகுந்த மனக் கலக்கத்தையும் கொடுத்திருக்கிறது. விலையிலாப் பொக்கிஷமான அவரது உயிரைப் பாதுகாக்க இம் மாகாணத்தில் சகல முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படவேண்டும்."

சபாநாயகர்,
மேற்கு பஞ்சாப் அசெம்பிளி.



வார்தா சத்தியாக்கிரக ஆசிரமத்தில் ஜம்னலால் பஜாஜும் காந்திஜியும்

பகுதி ஐந்து

# சர்தார் வல்லபாய் பட்டேல்

## முகவுரை

சர்தார் பட்டேலுக்கு காந்திஜி குஜராத்தியில் எழுதிய கடிதங்களில் பெரும்பாலானவற்றையும் பாதுகாத்து, அவற்றைத் தேசமும் பகிர்ந்து கொள்ளும்படி செய்ததற்காக, தூய கன்னிப் பெண்மணியான ஸ்ரீமதி மணிபென் பட்டேலுக்கு நாடு மிகவும் நன்றிக் கடன்பட்டிருக்கிறது. தீயைப் போன்ற சர்தார் வல்லபாய் பட்டேலுக்குப் பணிவிடை செய்யும் கடமையை காந்திஜி அவரிடம் ஒப்படைத்திருந்தார். அந்தக் கடிதங்களே இந்த நூலில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

இந்தக் கடிதங்களை மொழி பெயர்க்கும் கௌரவத்தை எனக்கு அளித்தார்கள். அவற்றில் பதினைந்து கடிதங்களை நான் மொழி பெயர்த்தேன். பின்னர் ஸ்ரீ சுதர்சன் தேசாய்க்கு அதிக ஓய்வு நேரம் இருந்ததை நான் கண்டேன். எனவே மீதியுள்ள கடிதங்களை மொழி பெயர்க்கும்படி அவரை நான் கேட்டுக் கொண்டேன். இருந்தாலும் அவர் மொழி பெயர்த்ததைப் பின்னர் நான் சீர்திருத்தினேன். ஆகையால் அதில் ஏதாவது தவறுகள் இருக்குமாயின், அதற்கு நான்தான் பொறுப்பாளி.

1921-ல் முதன் முதலாக எழுதப்பட்ட கடிதம், ஒத்துழையாமை இயக்கத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இந்தியா சுயராஜ்யம் பெறுவதற்காக அந்த இயக்கம் காந்திஜியினல் ஆரம்பிக்கப்பட்டதாகும். 291, 292-ஆம் கடிதங்கள் 1947-ஆம் வருடக் கடைசியில் எழுதப்பட்டவை. அவை, நிர்வாக அதிகாரம் மாற்றப்பட்ட பிறகு எழுந்த நிலைமையைப் பற்றியவை.

பார்டோலி 'யுத்தத்தை'ப் பற்றி 9, 10, 11-ஆவது கடிதங்களிலும், லண்டன் வட்டமேஜை மகாநாட்டைப் பற்றி 12-வது கடிதத்திலும், 26, 42, 47-லிருந்து 58 வரையிலும் உள்ள கடிதங்களில் மகாத்மா ஹரிஜன் யாத்திரையைப் பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மேலும் பீகார் பூகம்பம், கிராமக் கைத்தொழில்கள் சங்கம், பார்சாத் கொள்ளை நோய், ஹரிபுரா காங்கிரஸ் ஏற்பாடுகள், பசுப் பாதுகாப்பு, இயற்கை வைத்தியம், கோவா

பிரச்னை, தேசீய சர்க்காருக்கு விடுக்கப்பட்ட கட்டளைகள், நோவாகாலி, பீகார் கலவரங்கள், டில்லி கலகங்கள் ஆகியவை பற்றி முறையே மற்றக் கடிதங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

எவ்விஷயத்தையொட்டியும் சர்தார் கூறும் முடிவில் காந்திஜி மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார் (கடிதம் 25). காந்திஜி தாம் தயாரிக்கும் திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பை சர்தாரிடம் விட்டுவிடுவது வழக்கம், சர்தாரும் காந்திஜியினிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தார் (கடிதம் 23). சர்தாரின் உணவில் சில மாறுதல்களைச் செய்ய வேண்டுமென சில கடிதங்களில் காந்திஜி யோசனை கூறியுள்ளார். சர்தார் ஒப்புக் கொள்ள முடியாத அரசியல் முடிவுகளைப் பற்றி காந்திஜி மற்றும் சில கடிதங்களில் விளக்கியிருக்கிறார். சிறை வாழ்க்கையின் அலுப்பைத் தீர்ப்பதற்காக சர்தாருக்கு ஆசிரமத்தின் செய்திப் பிரசுரங்களையும் அனுப்பிவைத்தார்.

இந்த நூலுக்குத் தேவையான சில பிரதிகளை அனுப்பியதற்காக ஸ்ரீ பியாரிலாலுக்கு எனது நன்றி உரியதாகும். அச்சுப் பிழைகளையெல்லாம் கவனமாகச் சரிபார்த்ததற்காக எனது நண்பரும், முன்னாள் மாணவருமான ஸ்ரீ கரீம்பாய் வோராவுக்கும் எனது நன்றி உரியது.

வால்ஜி கோவிந்தஜி தேசாய்

## 1

பம்பாய்,
*ஜூலை 8, 1921*

பாய் ஸ்ரீ வல்லபாய்*,

நான் திங்கட்கிழமை (*11-ம் தேதி*) அகமதாபாத் போய்ச் சேருகிறேன். அன்றே அங்கிருந்து புறப்பட்டுவிடுவேன். கமிட்டி எடுத்துக் கொள்ளவேண்டிய நடவடிக்கைகள் சம்பந்தமாக நான் பாய் இந்துலாலுக்கு (யாக்ஞிக், காரியதரிசி, குஜராத் மாகாண காங்கிரஸ் கமிட்டி) எழுதியுள்ள கடிதத்தைத் தயவு செய்து பாருங்கள். ஒத்துழையாமையை மேற்கொள்ள அக் கமிட்டி தீர்மானிக்குமென நான் நம்புகிறேன். சட்ட சபைகளை முற்றிலும் பகிஷ்காரம் செய்வது மாத்திரமே நமக்கு உதவியாக இருக்கும்.

தயவு செய்து பாய் மாவ்லங்காருக்கும் மற்றவர்களுக்கும் தெரிவியுங்கள்.

மோகன்தாஸிடமிருந்து வந்தே மாதரம்*

---

*சர்தார் வல்லபாய் பட்டேலுக்கு காந்திஜி எழுதும் கடிதங்களை பாய் ஸ்ரீ வல்லபாய் என்றும், பெரும்பாலும் பாய் வல்லபாய் என்றும் தொடங்குவது வழக்கம். பின்னர் சிரஞ்சீவி வல்லபாய் என்று காந்திஜி தொடங்குவது வழக்கமாகியது.

*சர்தாருக்கு எழுதிய கடிதங்களில் 1924-லிருந்து 'பாபு' அல்லது 'பாபுவிடமிருந்து ஆசிகள்' என்று காந்திஜி கையெழுத்திடலானார்.

## 2

*1921*

கித்வானிக்கும் காகாசாகிப் கலேல்காருக்கும்* ஏதோ கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டிருக்கின்றன என்று தோன்றுகிறது. அவர்களை ஒன்று சேர்த்து சமரசம் செய்துவையுங்கள்.

தயவு செய்து அனசூயா பென்னைப் (சாராபாய்) பார்த்து' செக்கை (வர்த்தக யூனியன் கல்விசாலைகளுக்கு உதவியாக) அவரிடம் கொடுங்கள்.

வித்தல் பாயுடன்* நான் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன் என்று மணிபென் அல்லது தயாபாயிடம் தயவு செய்து சொல்லுங்கள். ராட்டினத்தின் முக்கியத்துவத்தை அவர் இப்போது ஏதோ சிறிதளவு உணர்ந்து கொண்டுள்ளார். எனினும் சட்ட சபைகளே அவரது நடவடிக்கைக்குத் தகுதியான இடம் என்று எனக்குத் தோன்றுகிறது. அவர் பொதுமக்களுடன் கலந்து அவர்களுக்குத் தொண்டு செய்ய முடியாது. அவ்விதம் செய்ய அவர் விரும்பமாட்டார் என்று கூறுவதற்கில்லை. ஆனால் அதற்குற்ற திறமையை அவர் வளர்த்துக் கொள்ளவில்லை. எனினும் சட்ட சபைகளில் வேலை செய்யும் திறமையை அவர் வளர்த்துக் கொண்டுள்ளார். இந்த இரண்டு துறைகளில் ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு விதமான தகுதிகள் வேண்டும் என்று எண்ணுகிறேன்.

## 3

(அ) தந்தி

சில்ஹெட், அஸ்ஸாம்,
ஆகஸ்டு *30, 1921*

*சம்பவம் வந்து கொண்டிருக்கிறது. குஜராத்தில் ஒருநாள் ஹர்த்தாலுக்கு ஏற்பாடு செய்யுங்கள். அனுமதி பெற்றே தொழிலாளர்கள் அதில் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும். சிட்டகாங்கில் புதன், வியாழக்கிழமைகளிலும், பாரிசாலில் சனிக்கிழமையும், ஞாயிற்றுக்கிழமையும், அதன் பின்னர் கல்கத்தாவிலும் ஹர்த்தால் மேற்கொள்ளப்படவேண்டும்.

(ஆ) கடிதம்

நம்மிடம் அவசியமான பலம் இருக்குமாயின், அகமதாபாத்தில் இளவரசர் இருக்கும்வரையில் தொடர்ந்து ஹர்த்தால் நடைபெற

---

*அகமதாபாத் தேசியக் கல்லூரியில் கிதவானி பிரின்ஸிபாலாகவும் காகாசாகிப் பேராசிரியராகவும் இருந்தனர்.

*வித்தல்பாய் பட்டேல், சர்தார் வல்லபாய் பட்டேலின் மூத்த சகோதரர். மணிபென்னும் தயாபாயும் முறையே சர்தாரின் மகளும் மகனும் ஆவர்.

*வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வரும் தேதி அப்போது நெருங்கிக் கொண்டிருந்தது. அதையே காந்திஜி 'சம்பவம்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

வேண்டும். ஹர்த்தாலையொட்டி வியாபாரமெல்லாம் நின்றுவிட்டாலும் கூட, ஏழை மக்கள் விரும்பும் உணவுப் பொருட்கள் அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்வதில் அக்கறையெடுத்துக் கொள்ள வேண்டும். அத்தகைய ஹர்த்தால் அனுஷ்டிக்கப் படுமாயின், ராணுவச் சட்டம் பிறப்பிக்கப்படலாம். அதை நாம் தைரியத்துடன் வரவேற்று, மக்களைக் கொல்லுவதற்காக நடைபெறும் துப்பாக்கிப் பிரயோகங்களையும் சமாளித்து நிற்க வேண்டும். ஆனால் அத்தகைய தீவிரமான நடவடிக்கைக்கு நாம் தயாராக இருக்கிறோமென நான் நினைக்கவில்லை. எனவே நம்மால் என்ன செய்யக் கூடுமோ அதைக் கொண்டு நாம் திருப்தியடைய வேண்டும். இளவரசரின் விஜயத்தில் கலந்து கொள்ளாமல் நாம் எவ்விதம் தவிர்ப்பது என்பது பற்றி மக்களுக்குக் கட்டளைகள் பிறப்பிக்க வேண்டும். சாத்தியமானவரையில் முனிசிபாலிடிகள் அதில் பங்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. இளவரசருக்கு யாரும் சலாம் வைக்கக் கூடாது. அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் கூட, அவர் விஜயம் செய்யும்போது பையன்கள் தங்களுடைய இடங்களிலிருந்து எழுந்திருக்கக் கூடாது. அத்தகைய நடவடிக்கைகளையெல்லாம் எடுத்துக் கொள்ளும் சக்தி நமக்கு இருக்குமாயின், அவரது ஜாகையின் வாயிலில் மறியல் செய்யவும் நாம் ஏற்பாடு செய்ய வேண்டும்; மக்கள் அவரைப் பார்க்காமலும் தடுக்க வேண்டும். உண்மையில், அவமரியாதையாக இராமல் நமது அதிருப்தியைக் காட்டுவதற்கான எத்தனையோ வழிகளைப் பற்றி நாம் சிந்திக்க முடியும். இந்த முறைகளையெல்லாம் நாம் மேற்கொண்டு நமது நிலைமையைச் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாக்க வேண்டும். பூரண பகிஷ்காரத் திட்டத்தைச் சீக்கிரமாக அறிவிக்க வேண்டும் என்பதே நான் கூறும் யோசனையாகும். அமைதியாகவும், ஆனால் உறுதியுடனும் நடந்து கொள்ளும்படி மக்களுக்கு நாம் பயிற்சி அளிக்கவேண்டும். நகரில் இளவரசரின் விருப்பப்படி எதுவும் நடக்க முடியாது என்பதை நிரூபிக்க நமக்கு சக்தி இருக்கவேண்டும்.

இவ்வளவு தூரத்திலிருந்து நான் இதைக் காட்டிலும் அதிகமாக எதுவும் கூறமுடியாது. எப்படியிருந்தாலும், உங்களுடைய சக்திக்கு மீறிய எத்தகைய நடவடிக்கையையும் மேற்கொள்ளாதீர்கள். தோல்வி ஏற்படாமல் தவிர்க்கவேண்டியது அவசியமாகும். நமது ஆர்ப்பாட்டங்களைத் தொடர்ந்து அமைதிக்கு பங்கம் ஏற்படக்கூடிய நிலைமை எழுமாயின், தயவு செய்து என்னுடைய யோசனைகளை நிறைவேற்ற முற்படாதீர்கள்.

காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டித் தலைவர் பதவியை நீங்கள் அங்கீகரித்தது முற்றிலும் தகுதியே. மக்களுக்குத் தொண்டு செய்வதொன்றே நமது வாழ்க்கையின் லட்சியமாக இருக்குமாயின், அத்தகைய கௌரவங்களைக் கண்டு நாம் மமதை கொள்ள மாட்டோம்.

## 4

சில்ஹெட், அஸ்ஸாம்,
ஆகஸ்டு 30, 1921

விசேஷ ரயிலில் நாங்கள் சில்சாரிலிருந்து நேற்று காலை இங்கே வந்து சேர்ந்தோம். இன்று மாலை 4 மணிக்கு இங்கிருந்து சிட்டகாங்கிற்குப் புறப்படுகிறோம். இங்குள்ள மக்கள் மிகவும் பிற்போக்கானவர்களாக இருக்கிறார்கள். இங்கே தொழிலாளர்களுக்கும் பஞ்சம்தான். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துள்ள தேயிலைத் தோட்டங்களிலும் நாங்கள் பிரயாணம் செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். நாங்கள் எப்போது கல்கத்தாவுக்குப் போய்ச் சேருவோம் என்று நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. எனினும் செப்டம்பர் 4-ம் தேதி மாலை அங்கே நாங்கள் இருக்கவேண்டுமென்று எண்ணிக்கொண்டிருக்கிறோம்.

அந்நியத் துணிகளைப் பகிஷ்காரம் செய்வதாக இங்கேயுள்ள சில மார்வாடி ஜவுளி வியாபாரிகள் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டிருக்கிறார்கள். அந்தப் பிரதிக்ஞையை அவர்கள் நிறைவேற்றுவார்களென நம்ப முடியுமா என்பதை, காலம்தான் காட்ட முடியும்.

## 5

மௌன தினம்.
(செப்டம்பர் 5, 1921)
148, ரஸ்ஸா ரோடு, கல்கத்தா

அகமதாபாத் காங்கிரஸ் கூட்டத்திற்கு விஜயம் செய்தவர்களைப் பற்றி நான் 'எங் இந்தியா'வில் ஒரு குறிப்பு எழுதப் போகிறேன்.

அங்கே வருவதற்கு நான் ஆர்வத்துடன் இருந்துவருகிறேன். ஆனால் அலுவல்கள் காரணமாக நான் இங்கே இருக்க வேண்டியது அவசியமாகியிருக்கிறது. அவரிடமிருந்து எனக்குத் தகவல் கிடைப்பதற்கு முன் நான் கல்கத்தாவிலிருந்து புறப்பட வேண்டாம் என்று சென்னையிலிருந்து ராஜகோபாலாச்சாரி தந்தி கொடுத்திருக்கிறார். தவிர, இங்கே எனது அலுவல்கள் 12-ஆம் தேதிக்கு முன் முடிவடையுமென்று தோன்றவில்லை.

வங்காளத்தில் சுதேசி இயக்கம் தளர்ச்சியடைந்திருக்கிறது. ஏராளமான ராட்டினங்கள் சுழன்றுவருகின்றன என்றாலும், நூல் ஒழுங்கான முறையில் உபயோகப்படுத்தப்படவில்லை. நெசவிலும் அவர்கள் எவ்வளவு கவனம் செலுத்த வேண்டுமோ அவ்வளவு கவனம் செலுத்தவில்லை.

குறைந்த பட்சம் இந்த மாதம் முடியும்வரையிலாவது சட்ட மறுப்பு ஒத்திவைக்கப்படவேண்டும். ஆனால் டில்லி தீர்மானத்திற்கு

இணங்க எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு மறியல் நடைபெறட்டும். ஒரு தடவை சட்ட மறுப்பை ஆரம்பித்துவிட்டால், என்ன நேருவதாயினும் அது இறுதிவரையில் நிறைவேற்றப்பட வேண்டும். அவ்விஷயமாக நான் ஒரு தீர்மானத்திற்கு வருமுன், எனது சக ஊழியர்களுடன் நான் அதைப் பற்றி விவாதிக்க விரும்புகிறேன். தற்போதைக்கு நாம் சுதேசி இயக்கத்தில் முழு கவனத்தையும் செலுத்தினலே போதுமானது. அந்நியத் துணி பகிஷ்காரமும், கதர் உற்பத்தியும் அதில் உள்ளடங்கியவையே.

நம் முன் ஏராளமான அலுவல்கள் இருக்கின்றன. டிசம்பருக்குள் அவற்றையெல்லாம் பூர்த்தி செய்துவிட வேண்டும். ஆகையால் தயவு செய்து உங்களுடைய ஆரோக்கியத்தை யொட்டி அக்கறை எடுத்துக் கொள்ளுங்கள். தேசத்தின் நிலைமையில் ஒரு மாறுதல் ஏற்பட்டுத்தான் தீரும். அந்த மாறுதல் நன்மைக்கா, அல்லவா என்பது கடவுளின் கையில் இருக்கிறது, அல்லது ஒரு வேளை நம் கையிலும் இருக்கலாம்.

வைஸ்ராயின் பிரசங்கம், எனது நிலைமையில் நான் மேலும் விடாப்பிடியாக இருக்கும்படி செய்திருக்கிறது. அரசியல் காரணங்களுக்காக இளவரசர் இந்தியாவுக்கு வரவில்லையாயின், அவர் வேறு எதற்காகத்தான் வருகிறார்? யாருடைய செலவில் அவர் வருகிறார்? ஆனல் தற்போது நாம் அதைப் பற்றி அலட்டிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

## 6

*செப்டம்பர் 16, 1924*

ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக 18-ஆம் தேதியிலிருந்து 21 நாட்கள் உண்ணாவிரதம் இருக்க நான் தீர்மானித்திருப்பதை ஏற்கனவே நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்பது நிச்சயம். நீங்கள் சிங்கத்தைப் போன்ற ஹிருதயம் படைத்தவர்கள். ஆகையால் அதைப் பற்றி நீங்கள் சிறிதும் கலங்கமாட்டீர்கள். அதற்கு மாருக நீங்கள், பொதுவான லட்சியத்திற்காக இன்னும் அதிகமாக உழையுங்கள். மணிபென்னும் கலக்கம் அடையாமல் தயவு செய்து பார்த்துக் கொள்ளுங்கள். நான் அவளுக்குத் தனியாகக் கடிதம் எழுதவில்லை.

## 7

*செப்டம்பர் 26, 1925*

நான் 20-ஆம் தேதி பம்பாய்க்கு வருகிறேன். 21-ஆம் தேதி நீங்கள் என்னுடன் கட்சுக்கு வருகிறீர்கள் என்றே எண்ணுகிறேன். ஆகையால் 20-ஆம் தேதியாவது நீங்களும் பம்பாயில் இருக்க வேண்டும். தேவதாஸின் தந்தியை நான் மணிபென்னுக்கு அனுப்பியிருக்கிறேன். டிசம்பரில் அவள் சேவாசதனில் தங்கியிருக்கலாம்

என்று தேவதார் கூறுகிறார். தயாபாயை பிர்லாஜியிடம் ஒப் படைத்தால், அவனை அவர் அவர்களுடைய மில்லில் வேலைக்கு எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அது சரியல்ல. நாம் சந்திக்கும் போது இதைப்பற்றி மேற்கொண்டு பேசுவோம். இவ்விஷயமாக நான் ஜம்னாலால்ஜியிடமும் பேசி வருகிறேன்.

## 8

*ஜனவரி 23, 1927*

கத்தியவாட் அரசியல் மகாநாட்டின் தலைவர் பதவியை ஒப்புக் கொள்ள பாய் அமிருதலால் தக்கர் ஒருவேளை மறுத்துவிடலாம். அவர் அந்த மகாநாட்டில் அரசியலைப் பற்றி எதுவுமே பேச வேண்டியிராது என்றாலும், 'அரசியல்' என்ற அடைமொழியே அவருக்குப் பிடிப்பதில்லை. இந்திய சமஸ்தானப் பிரஜைகள் அடங் கிய எந்த மகாநாட்டிலும், தற்போது அரசியலுக்கு இடமில்லை என்றே நான் கருதுகிறேன். அது தன் கவனம் முழுவதையும் ராட் டினத்திற்கு அர்ப்பணம் செய்யவேண்டும். அமிருதலால் 'முடியாது' என்று கூறிவிட்டால், அம் மகாநாட்டின் தலைவர் பதவியை நீங் களே ஒப்புக் கொள்ள முடியுமா என்று யோசிக்கிறேன். அவ்விஷ யத்தில் நம்முடைய கருத்துகள் அநேகமாக ஒன்றாகவே இருக் கின்றன என்று நம்புகிறேன். எனினும் நமக்குள் அவ்விஷயமாகக் கருத்துவேற்றுமை இருந்தால், அந்தப் பொறுப்பை ஏற்க மறுத்து விடுவதற்கு உங்களுக்குச் சுதந்திரம் உண்டு. ஆனால், உங்களுடைய பொறுப்புகள் மேலும் அதிகமாகின்றன என்ற ஒரே காரணத்திற் காக நீங்கள் அதை ஏற்க மறுக்கக்கூடாது. ஏனெனில், உங்கள் விருப்பப்படி அந்தப் பொறுப்பை நீங்கள் வகிப்பது எளிதாக இருக்குமாறு செய்வது சாத்தியம் என்றே நான் நிச்சயமாக எண்ணுகிறேன்.

தயவு செய்து நீங்கள் ஜாமூயி (பீகார்) விலாசத்துக்குப் பதில் எழுதுங்கள். அரை நாள் அங்கேயே இருக்கும்படி நேரலாமென எதிர்பார்க்கிறோம். அன்று மேலும் இரண்டு இடங்களுக்கு நாங்கள் செல்ல வேண்டியிருக்கிறது.

வெள்ளிக்கிழமை நாங்கள் ஆக்ராவில் இருப்போம். ஞாயிற்றுக் கிழமை பாட்னா போய்ச்சேருவோம். திங்கட்கிழமை மாலை நாங்கள் பாட்னாவிலிருந்து புறப்பட்டு கல்கத்தா வழியாக கொண்டியாவுக்கு புதன்கிழமை போய்ச் சேருவோம்.

எப்படியிருந்தாலும், தற்போதைக்குத் திருமணம் செய்து கொள்ளும் உத்தேசம் மணிபென்னுக்கு இல்லை. இந்த மன நிலை நீடிக்க நாம் அவளுக்கு ஆதரவு அளிக்கவேண்டும். அவ்விஷயமாகக் கவலைப்படுவதை தயவு செய்து விட்டுவிட்டு, அந்தப் பொறுப்பை என்னிடம் ஒப்படையுங்கள். அவளை கராச்சிக்கு அனுப்ப நான் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். அவளும் அங்கு செல்ல

ஆர்வமுடையவளாக இருக்கிறாள். கராச்சி காலநிலை அவளுக்கு ஒத்துக்கொள்ளும். அங்கு கடுமையான தொண்டு செய்ய அவளுக்குச் சக்தி ஏற்படும்.

(மேற்கண்ட 8 கடிதங்களும், அகமதாபாத்தில் சர்தார் இருந்த போது அனுப்பப் பட்டவையாகும்.)

## 9

சத்தியாக்கிரக ஆசிரமம்,
சபர்மதி, ஜூன் 3, 1928

கவர்னருக்கு அனுப்பப்படவேண்டிய கடிதத்தின் நகலை இத்துடன் அனுப்பியுள்ளேன். பார்டோலியில் போர் நன்ருக நடைபெற்றுவருகிறது. இதைப் போன்ற பல போராட்டங்களை நடத்த சர்தார் நீண்ட காலம் வாழ்வாராக. நான் வரவேண்டுமென்று நீங்கள் விரும்பினல், கடிதமோ அல்லது தந்தியோ அனுப்புங்கள். நீங்கள் எந்த விநாடியிலும் கைது செய்யப்படலாமென பலமான வதந்திகள் நிலவுகின்றன. நீங்கள் கைது செய்யப்பட்டால், அது உங்களுக்கு ஒரு ஓய்வு சிகிச்சையாக இருக்கும். கைதியாகாவிடில், ஓய்வு நமக்கு விலக்கப்பட்ட ஒரு பழமேயாகும்.

(9, 10, 11-ஆவது கடிதங்கள் பார்டோலிக்கு அனுப்பப் பட்டவை.)

## 10

சபர்மதி,
ஜூலை 24, 1928

கவர்னரின் பிரசங்கத்திற்குப் பதிலளித்து நாம் சுருக்கமாக ஓர் அறிக்கை வெளியிட வேண்டுமென நான் நினைக்கிறேன். அவர் தமது பிரசங்கத்தில் பொது மக்களின் மனத்தில் தப்பெண்ணம் உண்டாகும்படி செய்யத் தீவிரமாக முயற்சித்துள்ளார். ஒரு நீண்ட பதில், நமது லட்சியத்திற்குத் தீங்கு விளைவிப்பதாக இருக்கும். எனவே நான் சுருக்கமான ஒரு பதிலை அனுப்பியுள்ளேன். அவ்விஷயமாக 'எங் இந்தியா'வுக்கும் நேற்று ஒரு கட்டுரை எழுதினேன். அதில் எந்தப் பகுதியையும் மாற்றவேண்டிய அவசியமில்லை; கவர்னர் பிரசங்கத்தையொட்டிப் புதிதாக எதுவும் எழுத வேண்டிய அவசியமும் இல்லை என்பதை அறிந்து கொண்டுள்ளேன். பார்டோலியிலிருந்து நீங்கள் ஓர் அறிக்கையை வெளியிடுங்கள். தற்போதைக்கு அதுவே போதும். மேற்கொண்டு ஏதாவது தேவையாயின், அதைப் பற்றி அடுத்த வாரம் நாம் பார்த்துக் கொள்ளுவோம். அடுத்த இரண்டு வாரங்கள் நான் மிகவும் நெருக்கடியான ஒரு காலமாகும். அந்தக் காலத்

தில், சமரசத்திற்குக் குந்தகம் விளைவிக்கும்படியான ஒரு வார்த்தையையும் நாம் சொல்லிவிடக் கூடாது. பார்டோலியில் நீங்கள் இருக்கவேண்டிய அவசியம் இல்லையாயின், தயவு செய்து அகமதாபாத்துக்கு வாருங்கள்; அல்லது நீங்கள் விரும்பினால், நான் அங்கு வந்து உங்களுடன் சேர்ந்து கொள்கிறேன். இவ் விஷயமாகத் தீர்மானம் செய்ய வேண்டியது நீங்கள்தான். ஏனெனில் நீங்கள்தான் அங்கேயே இருக்கிறீர்கள். ஆனால் எனக்கோ அங்குள்ள நிலைமையைப் பற்றி ஒன்றுமே தெரியாது.

## 11

சபர்மதி,
ஜூலை *31, 1928*

உங்களுடைய கடிதம் கிடைத்தது. அங்கே வருமாறு என்னை அழைத்து ஒரு தந்தி வருமென இன்று நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். எனவே நான் அதற்குத் தயாராக இருந்தேன்.

பாய் நாரிமனும், ஹரிபாயும் இங்கு எதிர்பார்க்கப்படுவதால், அதிகமாக எதுவும் எழுதுவதற்கில்லை. நாம் மேற்கொள்ள வேண்டிய நிலை முற்றிலும் தெளிவாகும். கிராமக் கணக்கர்களையோ அல்லது நிலங்களையோ நாம் கைவிட முடியாது. கமிட்டியின் விசாரணை எல்லாவற்றையும் தழுவியதாக இருக்கவேண்டும். அது விசாரணை செய்யும் விஷயங்களில் எவ்விதத்திலும் கட்டுப்பாடு இருக்கக்கூடாது. நியாயமானதென்று நீங்கள் நினைத்தால், கேயும், டேவிஸும் நியமிக்கப்படுவதற்கு நாம் இணங்கலாம். என்னை அங்கு நீங்கள் எதிர்பார்க்கும் தேதியைத் தயவு செய்து தந்தி மூலம் அறிவியுங்கள்.

மணிபென் என்னைப் பார்க்க வந்தாள். அவள் மிகவும் இளைத்திருப்பதாகத் தோன்றுகிறது. அவளை இங்கே அனுப்பியது முற்றிலும் அவசியமேயாகும். தற்காலிகமாக அவள் அகமதாபாத்தில் வசித்துவருவாள். 5-ஆம் தேதி ஆசிரமத்திற்கு வருவதாக அவள் சொல்லுகிறாள்.

பின்குறிப்பு :-நாரிமனும் ஹரிபாயும் என்னைப் பார்க்க வந்தார்கள், என்னுடன் பேசினார்கள். சட்டசபை அங்கத்தினர்கள் மூலம் உங்களுக்கு அழைப்பு வந்தால், நீங்கள் போகவேண்டும் என்றே நான் நினைக்கிறேன். நாம் தயாரித்த நகலைப் போலவே சமரச நிபந்தனைகள் இருக்கவேண்டும்.

# 12

லண்டன்,
அக்டோபர் *26, 1931*

கடிதங்கள் எழுதச் சிறிதும் நேரமே இல்லை. இதைக் கூட, பெடரல் கமிட்டிக் கூட்டம் (வட்டமேஜை மகாநாடு) நடந்துகொண்டிருக்கையிலேயே நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். உங்களுடைய மூக்கில் ஏற்பட்டுள்ள கோளாறுக்கு நீங்கள் மிகவும் சீக்கிரத்தில் சிகிச்சை பெற வேண்டும். இங்கே என்னுடைய அலுவல்களில் பெரும்பாலானவையும் மகாநாட்டிற்கு வெளியிலேயே நடைபெற்று வருகின்றன. அவற்றினால் தற்போது அதிக பலன் இல்லாவிட்டாலும், பின்னர் அவை நமக்கு மிகவும் பலன் தரத்தக்கவையாக இருக்குமென நான் நினைக்க இடமிருக்கிறது. இங்கே நான் வந்துள்ள காரியம் வெற்றிபெறுமென்பதில் நம்பிக்கை இல்லை. எனினும், நான் நிச்சயமாக, நமது கௌரவத்துக்குக் குந்தகம் ஏற்படாத முறையில் நடந்து கொள்ளுவேன். பொறுப்புள்ள ஸ்தானங்களை வகிக்கும் பலரையும் நான் சந்தித்துப் பேசினேன்.

மகாநாட்டின் ஆலோசனைகள் நவம்பர் மாத மத்தியில் முடிந்து விடும். அநேகமாக ஐரோப்பாவிலுள்ள எல்லா நாடுகளுக்கும் வரும்படி எனக்கு அழைப்புகள் வந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் பார்க்க நான் விரும்புகிறேன். நான் அந்த நாடுகளுக்குச் சென்றால், அது நமது லட்சியத்திற்கு உதவியாக இருக்கக் கூடும். நீங்கள் எல்லா நண்பர்களையும் பார்த்து உங்களுடைய முடிவைத் தந்தி மூலம் எனக்கு அறிவியுங்கள். நான் அங்கெல்லாம் போக வேண்டும் என்பதற்கு நீங்கள் இசைந்தால், இன்னும் அதிகமாக ஒரு மாத காலத்திற்கு நான் இந்தியாவிலிருந்து வெளியில் இருக்க நேரும். ஜனவரியில்தான் நான் திரும்பிவர முடியும். இந்தக் கட்டத்தில் எனக்கு நாற்காலியிலேயே தூக்கம் கண்ணைச் சுற்றுகின்றது. பேனா ஓட மறுப்பதை நீங்கள் பார்க்கலாம். உங்களால் சாத்தியமாயின், எனக்கு நீங்கள் ஒரு மாதம் அவகாசம் கொடுக்க வேண்டும். தாய் நாட்டில் நீங்கள் உங்களுடைய விருப்பப்படி செய்யுங்கள். ஜவாஹர்லாலின் தந்திக்கு நான் அனுப்பிய பதிலை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். இங்கே என்ன நேர்ந்தாலும் நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. இந்தியாவில் நீங்கள் போராட்டத்தை நடத்த வேண்டியது அவசியம் என்று நினைத்தால் நிச்சயமாக அப்படியே செய்யுங்கள். நமது பிராந்தியப் பிரச்னைகளைப்பற்றி தற்போது இங்கே எதுவும் செய்ய முடியாது. உதாரணமாக, வங்காளப் பாதுகாப்புக் கைதிகளைப் பற்றி ஏதாவது செய்ய வேண்டுமென எதிர்பார்த்தேன். ஆனால் அவ்விஷயத்தில் எதுவும் செய்யத் தகுதியான சந்தர்ப்பம் கிடைக்கவே இல்லை. பிரிட்டிஷ் தேர்தல்களுக்குப் பிறகு ஏதாவது செய்ய முடியுமா என்றும் நான் கூறுவதற்கில்லை.

குஜராத்திலுள்ள அதிகாரிகள் சரியாக நடந்துகொள்ளவில்லை என்பதை அறிகிறேன். அவர்கள் செய்யும் தவறான முடிவுகளை யெல்லாம் நீங்கள் எதிர்க்கலாம். ராஸ் பிரதேசத்தில் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களைத் திருப்பிக் கொடுக்கும் விஷயமாக அவர்கள் எழுதியுள்ள கடிதம் அவர்களுடைய துடுக்குத்தனத்தையே காட்டுகிறது. இருந்தாலும், இறுதியில் எல்லாவற்றையும் சமாளிப்பதில் நாம் நிச்சயமாக வெற்றியடைவோம்.

இப்போது இது ஒரு நீண்ட கடிதமாகிவிட்டது, அல்லவா?

(சர்தார் பம்பாயில் இருந்த போது இந்தக் கடிதம் அனுப்பப் பட்டது.)

## 13

*மே 9, 1933*

நேற்றிரவு நான் நன்கு தூங்கினேன். சிறையைக்காட்டிலும் இந்த இடம் (பர்ணகுடி) அதிகக் காற்றோட்டமுள்ளதாகவும், அதிகக் குளிர்ச்சியாகவும் இருக்கிறது. நான் திறந்த வெளியில் தூங்கினேன். இங்கே செய்வதற்கு அதிக வேலை இருக்கிறது. எனினும் இன்னும் இரண்டு நாட்கள்தான் வேலை செய்வேன். அதன் பின் வேலை செய்வதை அடியோடு நிறுத்திவிடத் தீர்மானித் திருக்கிறேன். இப்போது குறிப்பிடத்தக்க பலவீனம் எதுவும் எனக்குத் தெரியவில்லை. நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம். என் விஷயத்தில் உங்களுடைய அன்பான பராமரிப்பு ஒரு தாயின் அரவணைப்பைப்போல் இருந்தது.

(சுயத் தூய்மைக்காக காந்திஜி 21 நாட்கள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டபோது, இரண்டாவது நாள் எரவாடா சிறையி லிருந்து சர்தாருக்கு எழுதிய கடிதம்.)

## 14

ஞாயிற்றுக்கிழமை,
*ஜூலை, 1933*

உங்களுக்கு முந்திய கடிதத்தை எழுதிய உடனேயே, என் கையால் எழுதுவதை நான் நிறுத்திவிட வேண்டியிருந்தது. அவ்விதம் எழுதுவதற்குத் தேவையான பலம் எனக்கு இராததே அதற்குக் காரணம். இப்போது எனக்குப் போதிய பலம் இருக் கிறதா என்பதை முயற்சி செய்து பார்க்க வேண்டுமென்று எனக் குத் தோன்றுகிறது. எனவே உங்களுக்கு எழுதுவதைக் காட்டிலும் சிறந்த முறையில் நான் அதை எப்படி முயற்சி செய்து பார்க்க முடியும்?

டாக்டர்களுடைய அறிக்கைகளையும், நான் குணமடைய நீண்ட காலம் செல்லுவதையும் குறித்துத் தயவு செய்து கவலைக்கு இடம்

கொடுக்காதீர்கள். கடவுளின் சித்தப்படி நடக்கும். மூன்று வாரங்களில் நடமாட முடியுமென நான் எதிர்பார்த்தேன். ஆனால் அது நடைபெறவில்லை. இருந்தாலும், கவலைப்படுவதற்கு யாதொரு காரணமும் இல்லை. எனது உடல் நிலை குணமடைய இன்னும் சிறிது காலம் ஆகும்; அவ்வளவுதான். அதில் ஆச்சரியம் இல்லை. ஏனெனில் எனக்கு 64 வயதாகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன் என்பதை நிச்சயமாக நம்புங்கள். பிரேமலீலாபென் தாகர்ஸியின் அன்பு காரணமாக நான் கடலில் ஸ்நானம் செய்து வருகிறேன். அவருடைய வீட்டை நான் ஒரு தர்மசாலையாக மாற்றியிருக்கிறேன். தேவதாஸின் திருமண ஏற்பாடுகளையெல்லாம் அவரே பொறுப்பேற்றுக் கொண்டு செய்தார். விவாகத்தை நடத்திவைப்பதில் அவர் ஆழ்ந்த அக்கறை எடுத்துக் கொண்டார். கடவுளின் கருணைக்கு எல்லையே இல்லை. ஆனால் அதற்கு நாம் தகுதி வாய்ந்தவர்களா? அதற்கு நாம் தகுதி வாய்ந்தவர்களாவதற்கு கடவுள் உதவி புரிவாராக.

உங்களுடைய மூக்கு இப்போது எப்படி இருக்கிறது? ராமபென் ஜோஷி அறுவை சிகிச்சை செய்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் நான் செய்திருக்கிறேன்.

நான் இவ்வளவு எழுதியும், எனக்குக் களைப்பு ஏற்படவில்லை. இருந்தாலும் இன்று இதற்குமேல் அதிகக் கடிதங்கள் எதுவும் நான் எழுதப்போவதில்லை.

(இந்தக் கடிதம் எரவாடா சிறைக்கு அனுப்பப்பட்டது. 1932-ல் ஜனவரி 3-ம்தேதி சர்தாருக்கு மூக்கில் ஏற்பட்ட புண் காரணமாக அறுவை சிகிச்சை நடந்தது. ஆனால் அதற்கு மறுநாளே அவரைக் கைது செய்து, திறந்த ஒரு மோட்டாரில் காந்திஜியுடன் அவரையும் எரவாடா சிறைக்கு அழைத்துச் சென்றார்கள். குளிரில் அவரை அவ்விதம் திறந்த மோட்டாரில் அழைத்துச் சென்றதால் அவருக்கு மூக்கில் வேதனை அதிகமாகி அவர் சிறையில் இருந்தவரையில் இடைவிடாது தொந்தரவு கொடுத்து வந்தது. சிற்சில நாட்களில் அவர் இரவு முழுவதும் தூங்கவே முடியாமல் கஷ்டப்பட்டார். மூக்கில் உள்ள கோளாறு காரணமாக அறுவை சிகிச்சை செய்து கொள்ளும்படி அவருக்கு ஆலோசனை கூறப்பட்டது. ஆனால் அவர் விரும்பும் டாக்டர்களைக் கொண்டு அறுவை சிகிச்சை செய்து கொள்ள முடியாததால், அவ்விஷயமாக அவர் எத்தகைய முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை; அரசாங்கம், தான் எது தகுதி என்று கருதுகிறதோ அதைச் செய்யும்படி விட்டுவிட்டார்.)

## 15

ஆகஸ்டு 24, 1933

இந்தக் கடிதத்தை என் கையினால் எழுத முடியாதவாறு அவ்வளவு பலவீனமான நிலையில் நான் இல்லை. எனினும் இன்று

நான் இதை வாயினல் கூற, பிறரையே எழுதிக் கொள்ளும்படி செய்கிறேன். நீங்கள் பத்திரிகைகளைப் படித்து வருவீர்களாதலின், சமீபத்தில் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றித் தெரிந்து கொண்டிருப்பீர்கள். அவையெல்லாம் கனவில் நிகழ்ந்தவைபோல் தோன்றுகின்றன. எனினும் கடவுள் நமக்குக் கொடுக்கும் எதையும் நாம் நன்றியுடன் அங்கீகரிக்க வேண்டும். நாம் ஓர் அடி முன் வைத்தாலே போதுமானது. எனவே எதையும் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனல் இந்தத் தடவை நான் செல்ல வேண்டிய வழி என் முன் தெளிவாகத் தெரியவில்லை. எரவாடா சிறையில் நான் எப்போதும் உங்களைப் பற்றியே நினைத்தவண்ணம் இருந்தேன். நான் எரவாடா சிறைக்குக் கொண்டுவரப்படுவதற்கு முதல் நாள் உங்களை நாசிக் சிறைக்குக் கொண்டுபோய்விடுவார்களென நான் எதிர்பார்க்கவே இல்லை. ஒவ்வொரு நாளும் பற்பல சந்தர்ப்பங்களிலும் நாங்கள் உங்களைப் பற்றி நினைத்தோம். அப்போது எழுந்த பிரச்னைகளைப்பற்றி உங்களைக் கலந்து ஆலோசிக்க முடியாதது, எங்களுக்குக் கஷ்டமாக இருந்தது.*

---

*1933 மே 8-ம் தேதி காந்திஜி விடுதலையடைந்தபோது, ஆறு வாரங்களுக்கு சட்டமறுப்பை நிறுத்திவைக்கும்படி அவர் காங்கிரஸ் அக்கிராசனருக்கு ஆலோசனை கூறினர். பின்னர் புனவில் நடந்த தொழிலாளர் காங்கிரசில் தனிப்பட்டவர்கள் மாத்திரமே சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபடுவதென்று தீர்மானிக்கப்பட்டது. அந்த இயக்கத்தின்போது சத்தியாக்கிரகிகளான விவசாயிகள் வீடு வாசல்களை விட்டுவிட்டு இயக்கத்தில் கலந்து கொள்ள வேண்டியிருந்தது. எனவே சபர்மதி ஆசிரம வாசிகளும் அவ்விதமே செய்ய வேண்டும் என்று காந்திஜி கருதினர். ஆகையால் தாங்கள் காலி செய்யப்போகும் ஆசிரமத்தை ஆக்கிரமித்துக் கொள்ளுமாறு காந்திஜி அரசாங்கத்திற்கு அறிவித்ததுடன், 1933 ஆகஸ்டு 1-ம் தேதி சபர்மதியிலிருந்து தமது தலைமையில் ஆசிரமத்தில் உள்ள யாவரும் சத்தியாக்கிரகம் செய்ய கெட்டா ஜில்லாவுக்கு செல்லப் போவதாகவும் பிரகடனம் செய்தார். எனவே ஆகஸ்டு 2-ம் தேதி காந்திஜியை அதிகாரிகள் கைது செய்து எரவாடா சிறைக்குக் கொண்டுவந்தார்கள். அங்கிருந்த சர்தாரை அதற்கு முதல் நாளே அதிகாரிகள் நாசிக் சிறைக்கு மாற்றிவிட்டதால், காந்திஜி அங்கு வந்ததும் சர்தாரைக் காணமல் அதிர்ச்சியடைந்தார். பின்னர் காந்திஜியை 'பரோலில்' ஒரு நாளைக்கு விடுதலை செய்தனர். பிறகு அவரைக் கைது செய்து 'பரோல்' விதியை மீறியதாக அவருக்கு (காந்திஜிக்கு) ஒருவருடம் சிறைத்தண்டனை விதித்தனர். தண்டனையடைந்த கைதி என்ற முறையில் 'ஹரிஜன்' பத்திரிகையையும், ஹரிஜன் இயக்கத்தையும் நடத்தக் கூடாதென்று அதிகாரிகள் காந்திஜியைத் தடுத்துவிட்டார்கள். அதற்காக காந்திஜி ஆகஸ்டு 16-ம் தேதி உண்ணுவிரதத்தை ஆரம்பித்தார். அதற்கு முன் செய்துவந்ததுபோல் சிறையில் ஹரிஜனங்களுக்குத் தொண்டு புரியத் தம்மை அனுமதித்தாலன்றி தமது உண்ணுவிரதம் தொடர்ந்து நீடிக்கும் என்றும் அறிவித்தார். ஆகஸ்டு 20-ம் தேதி அதிகாரிகள் காந்திஜியைப் புனவில் உள்ள சாஸூன் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று, 23-ம் தேதி விடுதலை செய்தனர். மேற்கண்ட கடிதம் அதற்கு மறுநாள் எழுதப்பட்டதாகும்.

புத்தகங்களோ அல்லது வேறு சாதனங்களோ உங்களுக்குத் தேவையாக இருந்தால் தயவு செய்து எனக்குத் தெரிவியுங்கள்.

என்னை நன்கு கவனித்து வருகிறார்கள். சாதாரணமாக எனக்கு உள்ள பலத்தை, மிகவும் விரைவில் திரும்பவும் பெற்று விடலாமென நான் நம்புகிறேன். இப்போது யாதொரு உதவியு மின்றி என்னால் படுக்கையில் உட்கார முடிகிறது. இன்று நான் சில பழங்களும் கீரைக் குழம்பும் சாப்பிட்டேன். டாக்டர் கில்டரும் டாக்டர் பட்டேலும் என்னைப் பரிசோதனை செய்து என் உடல் நிலையில் கோளாறு எதுவும் இல்லை என்று கூறியுள்ளனர். ஆகையால் தயவு செய்து என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். உங்களுடைய மூக்கின் நிலைமை எப்படி இருக்கிறது? எதையெல்லாம் எழுத உங்களை அனுமதிக்கிறார்களோ அதையெல்லாம் எழுதுங்கள். நான் சில நாட்கள் வரையில் பர்ணகுடியில் இருந்துவிட்டு, பின்னர் பம்பாய்க்குச் செல்லுகிறேன். பம்பாயிலும் நான் சில நாட்கள் தங்கியிருப்பேன். அதன்பின் நான் எங்கே இருப்பேன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்.

(15-லிருந்து 57-ஆம் கடிதம் வரையில் எல்லாக் கடிதங்களும் நாசிக் சிறைக்கு அனுப்பப்பட்டவை.)

## 16

புனா-பம்பாய் ரயிலில்,
செப்டம்பர் 15, 1933

உங்களுடைய கடிதம் ரயிலில் எனக்குக் கிடைத்தது. நான் பம்பாய்க்குச் செல்லும் வழியில் உங்களுக்கு இப்போது பதில் எழுதுகிறேன். புதன்கிழமை நான் அகமதாபாத்திற்குச் செல்லுகிறேன். அங்கே வியாழக்கிழமை நடைபெறவிருக்கும் இரண்டு வைபவங்களைப் பற்றி* நீங்கள் பத்திரிகைகளில் பார்த்திருப்பீர்கள். 23-ம் தேதி நான் வார்தாவுக்குச் செல்லலாமென நம்புகிறேன். அடுத்தபடியாக என்ன செய்வதென்பது அங்கே தீர்மானிக்கப்படும்.

என்னுடைய ஆரோக்கியத்தைப் பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம். என் விஷயத்தில் நான் மிகவும் ஜாக்கிரதையாக இருந்து வருகிறேன். இனியும் தொடர்ந்து ஜாக்கிரதையாக இருந்து வருவேன். இரண்டு பவுண்டு பாலும், கறிகாய்களும், பழங்களும் இப்போது என்னால் சாப்பிட முடிகின்றது. இப்போது எனது எடை நூறு பவுண்டு ஆகும். தினந்தோறும் எனக்கு உடம்பைப் பிடித்துவருகிறார்கள். மிகுந்த அக்கறையுடன் என்னைக்

---

*மாணிக்லால் ஜிதாலால் புத்தகசாலைக் கட்டிடத்தின் அடிக்கல் நாட்டு விழாவையும், ஸ்ரீ சினுபாய் மாதவலால் சிலையைத் திறந்து வைப்பதையும் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

கவனித்துவரும் டாக்டர் டின்ஷாவும் இப்போது பம்பாய்க்கு வரப்போகிறார். பிரேமலீலாபென் என்மீது அன்பைச் சொரிந்து வருகிறார். எனக்கு 'பர்ணகுடி' என் வீடுபோல் இருக்கிறது. நீங்கள் தொடர்ந்து தேன் உட்கொண்டு வருவதை அறிய நான் மகிழ்ச்சியடைகிறேன். உங்களுக்குக் கொஞ்சம் தேன் அனுப்பும்படி பிரேமலீலாபென்னை நான் கேட்கட்டுமா? அவர் நாளை பம்பாய்க்கு வருகிறார். பர்ணகுடியில் அத்தையும் (ஸ்ரீமதி சரோஜினி நாயுடு) கூடவே இருந்தார். அவர் அன்பும் மற்ற குணாதிசயங்களும் வாய்க்கப்பெற்ற ஓர் அற்புதமான பெண்மணி. அவர் சங்கடங்களைச் சிருஷ்டித்துக் கொள்ளும் இயல்பான சுபாவம் உள்ளவர். ஜவாஹர்லால் சிறந்த ஆரோக்கியத்துடன் இருந்து வருகிறார். பெயரைப் போலவேயே உண்மையில் அவர் ஒரு ரத்தினம்தான். ஆண்ட்ரூஸ் புனாவுக்கு வந்து இரண்டு நாட்கள் அமைதியாகக் கழித்தார்.

அநேகமாக சந்திரசங்கரும் என்னுடன் யாத்திரையில் கலந்து கொள்வார். மகாதேவிடமிருந்து ஒரு நீண்ட கடிதம் வந்தது. அவர் ஆரோக்கியத்துடன் இருக்கிறார், வாசித்துக்கொண்டும் நூற்றுக்கொண்டும் இருக்கிறார். பாவும் சௌக்கியமாக இருக்கிறாள். உங்களுடைய பற்களைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள். உங்களுடைய சமஸ்கிருத பாட வாசிப்பு எப்படி இருக்கிறது?

எந்தக் காரணத்திற்காகவும் கவலைப் படாதீர்கள். சிறையிலிருந்து விடுதலை அடைந்தபின் உங்களைப் பார்த்துவிட்டு, பிறகு நான் எங்கே இருந்தாலும் என்னை வந்து சந்திக்கும்படி மணிபென்னுக்குக் கடிதம் எழுதியிருந்தேன். இருதய நோயினால் அல்லல்பட்டுவரும் கமலா நேரு இன்னும் லக்ஷ்மணபுரியில்தான் இருந்துவருகிறாள்.

சிறையில் ஒருவருக்குத் தோழர்கள் இருந்தால்தான் என்ன, இல்லாவிட்டால்தான் என்ன? கடவுள் எப்போதும் கூட இருக்கிறார் என்ற உணர்ச்சி ஒருவருக்கு இருக்குமாயின், அவர் வேறு கூட்டாளிகளை ஏன் நாடவேண்டும்?

நான் கனசியாமதாசையும் (பிர்லா) தக்கர் பாபாவையும் கலந்து கொண்டு ஹரிஜன் யாத்திரைத் திட்டத்தைத் தயாரிக்க வேண்டியவனாக இருக்கிறேன்.

உங்களுக்கு ஏதாவது தேவையாக இருந்தால் எழுதிக் கேளுங்கள். உறைகளை உற்பத்தி செய்யும் அலுவலை இப்போது மகாதேவ் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.*

---

*ஆசிரமத்திற்கு வரும் பத்திரிகைகளில் விலாசம் எழுதப்பட்டுள்ள மேலுறைக் காகிதங்களிலிருந்து, கடிதங்களை அனுப்புவதற்கான உறைகளை சர்தார் பட்டேல் தயாரித்துவந்தார். சர்தார் சிறைப்பட்ட பின் அந்த அலுவலை ஸ்ரீ மகாதேவ தேசாய் மேற்கொண்டார். இதையே மேற்கண்ட கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

# 17

வார்தா,
செப்டம்பர் 24, 1933

கஸ்தூரிபாய், மீராபென், சந்திரசங்கர், பிரபுதாஸ், நாயர், ஆனந்தி, நிர்மலா (மகாதேவ தேசாயின் சகோதரி), சாரதா (சிமன்லாலின் மகள்), பிரபாவதி ஆகியோர் என்னுடன் இருக்கின்றனர். பிரிஜ்கிஷனும் என்னுடன் இருக்கிறார். நீலாநாகினியும், அமலாவும் (மிஸ் மார்கேரட் ஸ்பீஜல்) ஒரு பெரும் பிரச்னையாக இருந்து வருகிறார்கள். நாகினி உறுதியற்றவராக இருக்கிறார். மந்த புத்தியுள்ள அமலா எதையும் சரிவரச் செய்வதில்லை. அவ்விருவரும் இருப்பது ஒரு சுமையே ஆகும். என்றால் இயலுமாயின், அந்தச் சுமையைக் குறைக்க நான் முயற்சி செய்வேன். டங்கனும் மேரி பாரும் அருமையான தொண்டு செய்துவருகிறார்கள். அவ்விருவரும் நல்ல உழைப்பாளிகள், யோக்கியப் பொறுப்பும் உள்ளவர்கள்.

நான் பம்பாய்க்குப் புறப்படுவதாக இருந்த தினத்தில் மணி* வந்தாள். அவள் என்னுடன் நீண்ட நேரம் தங்கியிருந்தாள். நான் எல்வினைப் பார்க்கச் சென்றபோது அவளையும் அழைத்துச் சென்றேன். உங்களை அவள் சந்தித்த பிறகு நான் இருக்குமிடத்திற்கு வரவேண்டுமென அவளுக்கு யோசனை கூறினேன்; அவளுடைய கண்களையும் பற்களையும் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும் என்றும் கூறினேன்.

ஆனந்தியும், மற்றப் பெண்களும், குரோஷியின் குழந்தைகளும் இப்போது ஹரிஜனங்களுக்காக அனசூயா பென் நடத்திவரும் ஹாஸ்டலில் இருக்கிறார்கள். அவர்கள் அங்கேதான் இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நரன்தாஸ் புருஷோத்தமுக்கு ஹரக்சந்த்பாயின் மகளைத் திருமணம் செய்வதாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அவ்விருவரும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள் என்பதைத்தான் நான் விரும்பவில்லை. எனினும் பெண் நல்லவள் என்று கூறுகிறார்கள். நரன்தாசும் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள சம்மதித்திருக்கிறான்.

நீங்கள் கீதையை மாத்திரம் வாசித்து முடித்துவிட்டால்கூட, சமஸ்கிருதத்தில் மிகவும் முன்னேற்றம் அடைவீர்கள்.

ஜவாஹர்லாலின் தங்கை கிருஷ்ணகுமாரியை கஸ்தூரிபாயினுடைய சகோதரியின் மகனுக்குத் திருமணம் செய்வதாக நிச்சயிக்கப்படலாம். அவன் பாரிஸ்டர் பரீட்சையில்தேறி இப்போதுதான் இங்கிலாந்திலிருந்து திரும்பிவந்திருக்கிறான்.

---

* சர்தாரின் புதல்வி மணிபென் பட்டேலைப் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

நான் கஸ்தூரிபாயையும், அவரது சகோதரியையும், சகோதரியின் மகளேயும் சந்தித்தேன். அவனும் கிருஷ்ணகுமாரியும் பம்பாயில் இரண்டு, மூன்று தடவை சந்தித்த பிறகு அவர்களே நிச்சயித்துக் கொண்டுவிட்டார்கள். சொரூப ராணியும் அதற்குச் சம்மதம் அளித்துவிட்டார். சீக்கிரத்தில் திருமணம் நடைபெறும். அவ்விதம் நடைபெற்ருல் சொரூப ராணியின் மனத்திலிருந்து ஒரு பாரம் குறையும்.

எனது உடல் நிலே நன்ருகவே இருக்கிறது. எனக்கு ரத்த அமுக்கம் இருக்கிறதா என்று நான் கூற முடியாது. ஏனெனில், அவ்விஷயமாக திட்டமான அபிப்பிராயம் கூறுவதற்கு இங்கே டாக்டர் யாரும் இல்லே, டாக்டர் தேவையும் இல்லே. இப்போது நான் ஒரு பவுண்டு பாலும், வேக வைத்த பூசனிக்காய் போன்ற கறிகாய்களும், டுரியான் பழமும் ஒரு நாளேக்கு இரண்டு தடவை சாப்பிட்டு வருகிறேன். நான் இங்கே வந்தபோது, எனது எடை 99 பவுண்டாக இருந்தது. இன்னும் சில நாட்களில் நான் மீண்டும் எனது எடையை நிறுத்துப் பார்ப்பேன். பாவும் மீராவும் சௌக்கியமாக இருக்கிருர்கள்.

அக்டோபர் 15-ஆம் தேதி வரையில் நான் இங்கேயே தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறேன்.

சத்தியாக்கிரக ஆசிரமத்தை அரசாங்கம் இன்னும் தங்கள் வசம் எடுத்துக் கொள்ளவில்லே. எனவே அது ஹரிஜனங்களுக்கான ஒரு நிரந்தரமான விடுதியாக மாற்றப்பட்டு வருகிறது. ஜம்னலால்ஜியும், அகமதாபாத்திலுள்ள நண்பர்களும் அந்த ஏற்பாட்டை விரும்புகின்றனர். அது ஜாகை வசதிக்கான ஓர் இடமாக இருப்பதுடன், அங்கு தோல் பதனிடும் ஒரு தொழிற்சாலே, ஹரிஜன மாணவர்களின் ஹாஸ்டல், ஹரிஜன சேவா சங்க அலுவலகம் முதலியனவும் இருக்கும். அந்த நிலமும் கட்டிடங்களும் ஹரிஜன சேவா சங்கத்தினிடம் ஒப்புவிக்கப்படும். அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால், கடிதம் எழுதுங்கள்.

இது ஒரு நீண்ட கடிதம் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா?

## 18

வார்தா,
செப்டம்பர் 30, 1933

மணியிடமிருந்து நேற்று ஒரு கடிதம் வந்தது. ஈரல் வீக்கம் காரணமாக அவள் ஏதோ சிகிச்சை பெற்று வருகிருள் என்று தெரிகிறது. எனவே அவள் இங்கே வர சிறிது காலம் ஆகும்.

டாக்டர் சந்துலால் (தேசாய்) சௌக்கியமாக இருக்கிருர் என்று நம்புகிறேன்.

## 19

வார்தா,
அக்டோபர் 3, 1933

ஆசிரமத்தைப் பற்றி நான் எழுதிய கடிதத்தை நீங்கள் பத்திரிகைகளில் பார்த்திருப்பீர்கள். அவசியமாயின், நான் தோத ராம்ஜியை அனுப்புகிறேன். பரீட்சித்லாலும் அங்கு வருவார். எனவே சிரமம் எதுவும் இருப்பதற்கில்லை.

மணிக்கு, அவசியமான சிகிச்சை முடிந்த பிறகுதான் இங்கே வரவேண்டுமென நான் எழுதியிருக்கிறேன்.

நான் வேறு ஏதாவது அலுவலைக் கவனிக்க விரும்புகிறேன். எனவே நான் இத்துடன் நிறுத்திவிடுவதே நல்லது. ஜம்னுலால் என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறுர். என்னைப் பற்றிக் கவலைப் படாமல் இருக்கும்படி அவர் உங்களைக் கேட்டுக்கொள்கிறுர். அவசியமாயின், நான் ஒரு மலைப் பிரதேசத்துக்குச் செல்லுவேன். அது எப்படியாயினும், எனது எடை இப்போது 103-ஆக உயர்ந் திருக்கிறது.

## 20

உங்களுடைய கடிதம் இன்றுதான் எனக்குக் கிடைத்தது. எனது நிலைமை எவ்விதம் அபிவிருத்தி அடைந்து வருகிறது என் பதை, பத்திரிகைகளிலிருந்து நீங்கள் பார்த்திருக்கலாம். என் னுடைய ரத்த அமுக்கமும் 160-100-ஆகக் குறைந்திருக்கிறது; எடையும் 103-ஆக உயர்ந்திருக்கிறது.

கிருஷ்ணு நேரு-குணேத்தம ஹதீசிங் திருமணம் 20-ஆம் தேதி அலகாபாத்தில் நடைபெறும். அதற்கு நான் போவதற்கில்லை. அவர்களும் அங்கே என்னை எதிர்பார்க்கவில்லை. அவர்களுக்கு ஆசி கூறி நான் ஏற்கனவேயே ஒரு கடிதம் எழுதிவிட்டேன். நீங் களும் வாழ்த்துக்கள் கூறிக் கடிதம் எழுதுங்கள்.

கிஷோர்லால் இரண்டு மூன்று நாட்களில் வந்து சேருவார்.

ஹரிஜன் இயக்க யாத்திரை நவம்பர் 8-ஆம் தேதி ஆரம்ப மாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. தக்கர்பாபா, சந்திரசங்கர், மீரா, நாயர், ராமநாராயணன் சௌத்ரி ஆகியோரும் என்னுடன் வருவார்கள்.

## 21

வார்தா,
அக்டோபர் 21, 1933

உங்களுடைய கடிதம் முன்பே கிடைத்துவிட்டது. நீங்கள் விரும்புவது போல் நான் ஏற்கனவேயே ஓய்வு எடுத்துக் கொண்டு

வருகிறேன். என்னுடைய ஓய்வில் எனது அலுவல்கள் குறுக்கிட நான் அனுமதிக்கமாட்டேன். என்னைப் பற்றி அலட்டிக் கொள்வதை நீங்கள் விட்டுவிட வேண்டும் என்பதே என் விருப்பம். பிரேமலீலாபென்னின் தூரதிருஷ்டிக் கண்ணாடியைக் காட்டிலும் கூட அதிக சக்தி வாய்ந்த கண்ணாடியை நீங்கள் வாங்கிக் கொள்ள வேண்டும். அதன் மூலம் ஒரு கடுகுகூட ஒரு பெரிய மலைபோல் தெரியவேண்டும்!

புதன்கிழமை பிரபுதாசுக்குத் திருமணம் நடந்தது. முற்றிலும் தன் விருப்பத்திற்கேற்ற ஒரு பெண்ணை அவன் தனது சொந்த முயற்சியின் பலனாகவே அடைந்திருக்கிறான். அவளுக்கு 24 வயது ஆகிறது. அவள் எளிய பழக்க வழக்கங்கள் உள்ளவள், கல்வியில் நல்ல தேர்ச்சி பெற்றவள், ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தவள்.

மகாதேவ் பெல்காம் சிறையிலிருந்து எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அது அவர் இயற்றிய ஒரு சிறந்த கவிதையைப் போல் தோன்றுகிறது. நீங்கள் ஆனந்தமாக அனுபவிப்பதற்காக அதிலிருந்து சில பகுதிகளை இத்துடன் இணைத்திருக்கிறேன்.

சிறை செல்லுவதற்காக பா தன் சொந்த ஏற்பாடுகளைச் செய்துவருகிறாள். கிஷோர்லாலும் அவரது மனைவியும் நேற்று முன்தினம் இங்கிருந்து புறப்பட்டுச் சென்றுவிட்டார்கள்.

தற்போது நீங்கள் எவ்வளவு எடை இருக்கிறீர்கள்? உங்களால் என்ன சாப்பிட முடிகின்றது? எவ்வளவு பாலும் தயிரும் சாப்பிடுகிறீர்கள்? உங்களுக்கு நான் அனுப்பக் கூடியது ஏதாவது இருக்கிறதா? அழுத பிள்ளைக்கே பால் கிடைக்கும். கேட்டாலொழிய தாயார் கூட இரண்டாவது தடவை உணவு அளிக்கமாட்டாள் என்பது பழமொழி. நான் எப்படிப்பட்ட தாயார் என்பதை நீங்கள் அறிவீர்கள். காலைப் பிரார்த்தனை நேரம் வந்துவிட்டது. எனவே கடிதத்தை நான் இத்துடன் முடிக்கிறேன்.

## 22

வார்தா
அக்டோபர் 27, 1933

மணி, மிருது*, மிருதுவின் மாமன், பாபோ* ஆகியோர் சென்ற மூன்று நாட்களாக இங்கே இருக்கிறார்கள். பாபோ இந்தத் தடவை என்னுடன் மிகவும் சிநேகமாகி விட்டான். அவன் ஆரோக்கியமே உருவாகத் திகழ்கிறான். ஜப்பானியத் துறவியின் பேரிகையை அடிப்பதில் அவனும் என்னுடன் கலந்து கொள்கிறான். இந்தத் துறவி ஒரு ரத்னம்தான். அவர் மனம் விட்டுப் பேசுபவராகவும், பணிவுள்ளவராகவும், மலர்ந்த முகத்துடனும், மரியாதை

---

* மிருதுளா சாராபாயையே மிருது என்றும், சர்தார் பட்டேலின் பேரனை பாபோ என்றும் காந்திஜி 22-ஆம் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

யுள்ளவராகவும் இருக்கிறார். அவர் ஹிந்தி கற்றுக்கொள்வதுடன், ராட்டினத்திலும் தக்ளியிலும் நூற்கிறார். அவர் மிகுந்த அக்கறையுடன் ஆசிரம விதிகளையும் சிறிதும் வழுவின்றிப் பின்பற்றி வருகிறார். அந்தப் பெண்களுடன் (மணியுடனும் மிருதுளாவுடனும்) நான் பல மணிநேரம் பேசிக் கொண்டிருந்தேன். இருவரும் இங்கிருந்து புறப்பட மிகவும் அவசரப்படுகிறார்கள். அவர்கள் இன்று மெயில் வண்டியில் புறப்படுவதாக பயமுறுத்தினார்கள். மணியின் காலுக்கு மின்சார சிகிச்சை செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது. மிருதுளாவும் போகவிரும்புகிறாள். நோயாளிகளான அவளுடைய நண்பர்களுக்கு அவள் பணிவிடை செய்ய வேண்டுமாம். இருவரும் பரஸ்பரம் நன்கு பழகுகிறார்கள் என்றே தோன்றுகிறது.

* * *

பட்டாபி (சீதாராமய்யா) இங்கே வந்திருக்கிறார். அவரை நான் பத்து நிமிஷ நேரம் கூட பார்க்க முடியவில்லை. யாரும் என்னுடன் அதிக நேரம் பேச ஜம்னாலால்ஜி அனுமதிப்பதில்லை. அகமதாபாத் நெசவு மில் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் மொத்தம் ஒன்றரை மணி நேரமே என்னைப் பார்த்துப் பேச அனுமதிக்கப்பட்டார்கள். அதுவும் மூன்று தவணைகளாக அவர்கள் பார்த்துப் பேசினர். ஜம்னாலாலின் கண்காணிப்பு அவ்வளவு கண்டிப்பாக இருக்கிறது.

வித்தல்பாயின் மரணம் மன வேதனையைக் கொடுத்துளது. எனினும் அவரைப் பொறுத்தமட்டில் அது அவருக்கு கலப்பற்ற விடுதலையேயாகும். அவர் வெளிநாட்டில் இருக்கும் போது அவரது காலம் முடிந்துவிடும் என்றே நாமும் எதிர்பார்த்தோம். அவருக்கு மிகவும் சிறந்த வைத்திய சிகிச்சை நடந்ததென்றே தோன்றுகிறது. வித்தல்பாய்க்கு சுபாஷ் (சந்திரபோஸ்) மனப்பூர்வமாகவும் விசுவாசத்துடனும் பணிவிடை செய்ததன் மூலம் தொண்டில் தம்மையே மிஞ்சிவிட்டார். அதைப் பற்றி அவருக்கு நான் எழுதியிருக்கிறேன்; நீங்களும் எழுத வேண்டும் என்றே நினைக்கிறேன்.

மேற்கொண்டு இன்னும் சிறிது காலத்திற்கு சுவாமி (ஆனந்த்) இங்கே தங்கியிருப்பார். நாகினியைத் தேடுவதற்காக தக்கர்பாபா பிருந்தாவனத்திற்குச் சென்றிருக்கிறார். அவரது கருணைக்கு எல்லையே இல்லை. தற்போது கமலா கடுமையாக உழைத்து வருகிறாள். டங்கன் அவரது கிராம அலுவல்களில் மூழ்கிவிட்டார். மேரி பார் இன்னும் இங்கேதான் இருக்கிறாள். அவள் நோயுற்றிருந்தாள்; எனினும் இப்போது பூரணமாகக் குணமடைந்துவிட்டாள். கிராமங்களிலுள்ள ஹரிஜனங்களிடையே வினோபா மிகவும் அருமையான தொண்டு செய்துவருகிறார். அப்போதைக்கப்போது தேவதாஸிடமிருந்தும் எனக்குத் தகவல் வந்து கொண்டிருக்கிறது.

நான் ஹரிஜன் யாத்திரையை மேற்கொண்டிருப்பதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம். என்னை நான் ஜாக்கிரதையாகக்

கவனித்துக் கொள்கிறேன். முதலில் நான் தென்னிந்தியாவுக்குச் செல்லவேண்டுமென ராஜா* விரும்புகிறார்.

## 23

வார்தா,
அக்டோபர் 28, 1933

நவம்பர் 9-ஆம் தேதி வித்தல்பாயின் உடல் பம்பாய்க்கு வந்து சேரும் என்றும், நீங்கள்தான் தகனக் கிரியைகள் செய்யவேண்டும் என்றும் சுபாஷிடமிருந்து ஒரு தந்தி வந்திருக்கிறது. தற்காலிகமாக நீங்கள் விடுதலை கோருவீர்களென நான் எதிர்பார்க்கவில்லை என்றும், எனவே நீங்கள் இராமலேயே தகனம் நடக்க வேண்டியதுதான் என்றும் பத்திரிகைகளின் மூலம் பதில் அளித்திருக்கிறேன். கிரியைகளை தயாபாய் செய்ய வேண்டும். உங்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்க நேரம் இல்லை. அவ்விதம் கேட்பது ஒழுங்கென்றும் நான் கருதவில்லை.

காகா (கலேல்கார்) உண்ணுவிரதம் ஆரம்பித்து மூன்று நாட்கள் ஆகின்றன. அவர் சௌக்கியமாக இருக்கிறார்.

## 24

வார்தா,
நவம்பர் 1, 1933

பெரிய மனிதர்களின் சிந்தனைப் போக்கு ஒரே விதமாகவே இருக்கும் என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. இப்போது நம்மைப் பெரிய மனிதர்கள் என்று சொல்லக் கூடுமாயின், வித்தல்பாயின் அந்திமக் கிரியைகளைச் செய்யவேண்டும் என்பதற்காக நீங்கள் விடுதலை கோருவது ஒழுங்கல்ல என்று நான் எண்ணியது போலவே நீங்களும் எண்ணியிருக்கிறீர்கள். இவ்விஷயமாக நான் முன்பே தயாபாய்க்கு எழுதியிருக்கிறேன். உங்களிடமிருந்து வந்ததென்றோ அல்லது உங்களுடைய அபிப்பிராயங்கள் என்று கூறியோ நான் எதுவும் வெளியிடுவதென்ற பேச்சிற்கே இடமில்லை. உங்களுக்கு வந்த தந்தியைப் பற்றி மேஜரிடம் கூறிவிட்டு, உங்களுடைய அடுத்த கடிதத்தில் பின்கண்டவாறு எனக்கு ஏதாவது இரண்டொருவரிகள் எழுதி அனுப்புங்கள் :

“வித்தல்பாய் பட்டேலின் மரணத்தைக் குறித்து அன்புடன் அனுதாபத் தந்திகளும் கடிதங்களும் அனுப்பியவர்கள் யாவருக்கும் பத்திரிகைகளின் மூலம் தயவு செய்து எனது நன்றியைத் தெரிவியுங்கள்.”

---

*ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியாரையே ராஜா என்று காந்திஜி தமது கடிதங்களில் குறிப்பிட்டிருக்கிறார்.

இதைக் கூட மேஜர் அனுமதிக்க முடியாமல் சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜெனரலிடமிருந்து அனுமதி பெறவேண்டியிருக்குமாயின், அவ்விதம் அனுமதி கிடைக்கும்போது அதை வெளியிடலாம்.

தீனபந்து (ஸி. எப். ஆண்ட்ரூஸ்) இன்று வரலாம். அவர் அடிக்கடி வந்துகொண்டிருக்கிறார். என்னுடன் பேசுவதற்கு அவர் தமக்கு மிகவும் அதிக நேரம் அளிக்க வேண்டும் என்று கோரலாம். அவ்விதம் அளிக்க என்னால் மறுக்க முடியாது.

காகா அவரது உண்ணாவிரதத்தை நாளை காலை முடிப்பார். அவர் முற்றிலும் நன்றாகவே இருக்கிறார். எனது உடல் நிலைக்கும் அவரது உடல் நிலைக்கும் வேற்றுமை உண்டு. குளிர்ந்த நீராயினும் வெந்நீராயினும் உப்பு அல்லது சோடாவுடன் கலந்து அவரால் ஏராளமாகத் தண்ணீர் சாப்பிட முடியும். அத்தகைய சக்தியை கடவுள் எனக்கு அருளியிருந்தால், உண்ணாவிரதத்தில் பன்சாலியுடன்* போட்டி போட்டு அவரைத் தோற்கடிக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டிருக்கும்.

அவர் கித்தான் துண்டைக் கட்டிக் கொண்டு கயிற்றுத் தொட்டிலில் உட்கார்ந்திருக்கிறார். அவர் தண்ணீருடன் சமைக்காத வெறும் மாவைக் கலந்து சாப்பிட்டுக் கொண்டு எப்போதும் சஞ்சாரம் செய்தவண்ணம் இருக்கிறார். எப்போதாவது அவர் எனக்கு ஒரு தபால் கார்டு எழுதுவது வழக்கம். அதுதான் உண்மையான அனுபவம் என்று அவர் எனக்கு அறுதியிட்டுக் கூறுகிறார்.

மகாதேவ் எனக்கு அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார். அவர் எல்லா இடங்களிலிருந்தும் புத்தகங்கள் வாங்கிச் சேகரித்துவருகிறார். பின்னர் இவையெல்லாம் ஒரு பொதுஜனப் புத்தக சாலைக்குப் போய்ச் சேரும். எனவே அவ்விஷயமாகக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. ஆனால் சிறையில் அவற்றையெல்லாம் வாசித்து அவர் தமது கண்களைக் கெடுத்துக் கொண்டு விடக் கூடாது என்பதே எனது கவலையாகும். எனவே அவருக்கு லேசான தடையுத்திரவு ஒன்றை அனுப்ப விரும்புகிறேன்.

சிறையில் தேவதாஸ் தனது நேரத்தைப் பலன்தரத்தக்க விதத்தில் உபயோகித்து வருவதாகவே தோன்றுகிறது. அவன் வாசிக்கிறான், பாடம் சொல்லிக் கொடுக்கிறான், நூற்கிறான், பல விளையாட்டுகளிலும் பங்கு எடுத்துக் கொள்கிறான்.

என்னுடைய யாத்திரைத் திட்டம் பின்வருமாறு: இந்த மாதம் மத்திய மாகாணத்தில். பிறகு டில்லி, பஞ்சாப், சிந்தி, ராஜபுதனம், ஐக்கிய மாகாணம், வங்காளம், அஸ்ஸாம் முதலிய

*பேராசிரியர் பன்சாலியைப் பற்றி மகாத்மா காந்தி நூல்கள் 10-ம் தொகுப்பு 350-361 பக்கங்களிலும், 13-ம் தொகுப்பு 100–101 பக்கங்களிலும் காந்திஜி குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

இடங்கள். இந்தத் திட்டத்தில் ஏதாவது மாறுதல் ஏற்பட்டாலும் அதைக் குறித்து நான் ஆச்சரியப்படுவதற்கில்லை முதலில் நான் சென்னைக்குப் போகவேண்டும். நாங்கள் 8-ஆம் தேதி இங்கிருந்து புறப்பட வேண்டும். ராஜேந்திர பாபுவை மீண்டும் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றிருக்கிறார்கள். தற்போதைக்கு அவரை அங்கேயே வைத்துக் கொள்வார்களென நினைக்கிறேன்.

## 25

எனக்கு இப்போதுள்ள கஷ்டம், நீங்கள் என் பக்கத்தில் இராததுதான். இதை உங்களைப்போலவே நானும் உணருகிறேன். எனவே நான் ஏகலவ்யனின் வழியைப் பின்பற்றுகிறேன். அவனைச் சீடனாக ஏற்றுக் கொள்ள துரோணர் மறுத்துவிட்டார். ஆனால் அவன் துரோணரைப் போல் மண்ணால் ஓர் உருவம் செய்து தன் முன்னிலையில் வைத்துக் கொண்டு வில் வித்தை கற்றுக் கொண்டான். நான் வில் வித்தையில் தேர்ச்சி பெற்றவன் அல்ல. அம்பை நீங்கள் ஒரு கலப்பைக் கொழுவாக மாற்றிக் கொண்டிருக் கிறீர்கள். என் திறமைக்கு எட்டிய வரையில் நானும் விவசாயியாக இருக்கவே விரும்புகிறேன்.

ஒவ்வொரு நாளும் உங்களுடைய உருவத்தை நான் கற்பனை செய்து, அதனிடம் எனது கேள்விகளைக் கேட்கிறேன். அதற்குக் விடை சரியானதென்று யாரும் கூற முடியாது. முக்கியமான விஷயம் என்னவெனில், நீங்கள் என்ன நினைப்பீர்கள் அல்லது செய்வீர்கள் என்பதை நான் எப்போதும் மனத்தில் உன்னியே அலுவல்களைச் செய்கிறேன்.

புறப்படுவதற்கான ஏற்பாடுகள் இன்னும் நடைபெற்று வருகின்றன. சார்லிபாய் (ஆண்ட்ரூஸ்) நேற்று இங்கிருந்து புறப் பட்டுச் சென்றார்.

இந்த யாத்திரை நெடுக உங்களுடைய கடிதங்கள் எனக்குத் தேவையாக இருக்கும். என் கடிதங்களும் உங்களுக்கு வந்து கொண்டிருக்கும்.

பாவைத் தொடர்ந்து காகா, சுவாமி ஆகிய மற்றவர்களும் சிறைக்குச் செல்லுவார்கள். மொரார்ஜியும் (தேசாய்) மற்றவர் களும் இங்கே ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறார்கள். என்னைப் பற்றி எவ்விதத்திலும் கவலைப்படாதீர்கள். இந்தத் தடவை உங்களுடைய கடிதம்...*

---

*அக்கடிதத்தின் ஒரு பகுதியைச் சிறை அதிகாரிகள் அடித்துவிட்டார்கள் என்பதை சர்தார் அறிந்து கொள்வதற்காகவே காந்திஜி அவ்விதம் குறிப்பிட் டிருக்கிறார்.

## 26

நாகபுரி,
நவம்பர் 9, 1933
(காலைப் பிரார்த்தனைக்கு முன்)

உங்களுடைய கடிதம் கிடைத்தது. இந்தப் பிரயாணத்தின் போது நீங்கள் எனக்கு எழுதுவதை நிறுத்திவிடுவது சரியல்ல. நானும் கடிதம் எழுதிக் கொண்டிருப்பேன். வித்தல்பாயின் மரணத்திற்குப் பின் நிகழ்ந்தவை எதுவும் என் கவனத்திலிருந்து தப்பவில்லை. என்மீதும் சில தாக்குதல்கள் நிகழ்ந்துள்ளன. ஆனால் அவற்றை நான் பொருட்படுத்தவில்லை. பொருட்படுத்தி என்ன பலன்? சகதியைக் கிளறுவதால் மேலும் அதிகமான சகதிதான் மேல் மட்டத்துக்கு வரும். நான் கவனம் செலுத்திய ஒரே விஷயம், சுபாஷ்பாபுவின் மனப்பூர்வமான பணிவிடைதான்.

சென்ற செவ்வாய்க்கிழமை எனது அலுவல்கள் ஆரம்பமாயின. ஒவ்வோரிடத்திலும் மக்கள் பெரும் திரளாக வந்து கொண்டிருக்கிறார்கள். தீண்டாமையை நான் கண்டிக்கும்போது அவர்களுடைய மனம் நோவதாகத் தோன்றவில்லை. வார்தாவுக்கு அருகில் ஓர் அருமையான கோவிலைத் (ஹரிஜனங்களுக்கு) திறந்து வைத்தேன். நாகபுரியில் இதற்கு முன் இராதவாறு ஜனக் கூட்டம் அவ்வளவு அதிகமாக இருந்தது. இறுதிவரையில் எனது குரல் நன்றாகவே இருந்தது. இறுதியில் எனக்கு உண்மையில் களைப்பே ஏற்படவில்லை. நான் யாத்திரையை ஆரம்பித்தபோது, என் எடை 108 பவுண்டு இருந்தது. இதுவரை செய்யப்பட்டுள்ள வசூல்களும் திருப்திகரமாக இருக்கின்றன. மத்திய மாகாண யாத்திரை முடிந்ததும், நான் டில்லிக்குச் சென்று, பிறகு அங்கிருந்து நேராக தெற்கே செல்ல வேண்டும். வைதிகர்களின் எதிர்ப்புக்கு அஸ்திவாரம் தென்னிந்தியாவே யாதலின், முதலில் அங்கு செல்ல வேண்டியது முக்கியமென ராஜா கூறுகிறார். வார்தா பிரதேசத்திலுள்ள அலுவல்களை முடிப்பதற்காக சனிக்கிழமை வார்தாவுக்குத் திரும்பி வருகிறோம். ஜவாஹர்லாலும் மற்றவர்களும் கூட இங்கு வந்து என்னைப் பார்ப்பார்கள். (டாக்டர்) அன்சாரி முன்பே என்னை வந்து பார்த்துவிட்டுச் சென்றார். என்னுடன் மீரா, சந்திரசங்கர், நாயர், ராம்நாத், ஓம்*, ராமேசுவரதாஸ் பிர்லாவின் மருமகள், தக்கர் பாபா ஆகியோர் இருக்கின்றனர். ஓம் இப்போது முற்றிலும் தைரியசாலியான பெண்ணாகிவிட்டாள்!

பா வார்தாவுக்கு 13-ஆம் தேதி புறப்படுகிறாள், 15-ஆம் தேதி வாக்கில் அகமதாபாத்துக்குச் செல்லுகிறாள். அவளுக்கு மனம் அமைதியான நிலையில் இல்லை; எனவே அவளால் ஒரு முடிவுக்கு

---

* ஜம்னாலால் பஜாஜின் மகள் உமாவையே ஓம் என்று காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

வர இயலவில்லை. இருந்தாலும், அவள் சிறைக்குச் செல்லத் தீர்மானித்திருக்கிருள். தனக்கு சிறைதான் சரியான இடம் என்பது அவளது உறுதியான அபிப்பிராயமாகும்.

## 27

சண்டா,
நவம்பர் 14, 1933

உங்களிடமிருந்து கடிதங்கள் இல்லாமல் நான் காலம் தள்ள முடியாது. எனக்கு நீங்கள் அந்த வழக்கத்தை உண்டாக்கியிருக்கிறீர்கள். நாங்கள் சண்டாவில் இருக்கிறோம். இப்போது மாலை 4 மணி ஆகிறது. 6 மணிக்கு நாங்கள் ஸாவ்லிக்குப் புறப்படப் போகிறோம்.

நாகபுரி மாணவர்கள் கூட்டத்தில் முட்டை எறியப்பட்ட சம்பவத்தைப் பற்றி நான் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையிலிருந்து தான் அறிந்து கொண்டேன். கூட்டம் நடந்த மண்டபத்தில் நான் எதையும் பார்க்கவில்லை. அமளி எதுவும் நடைபெற்றதாகவும் எனக்குத் தெரியவில்லை. ஓம் உட்கார்ந்திருந்த இடத்திற்கு அருகில் ஒரு முட்டை விழுந்ததாக சந்திர சங்கர்தான் என்னிடம் கூறினர். ஓமைக் குறிபார்த்து அது எறியப்பட்டதா அல்லது என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த முன்னாள் தலைவரையோ அல்லது என்னையோ குறிபார்த்து எறியப்பட்டதா என்பதை யாரும் கூற முடியாது. உண்மை என்னவெனில், அச்சம்பவம் எல்லை மீறி மிகைபடுத்திக் கூறப்பட்டிருக்கிறது. மாணவர்கள் அன்புடன் நடந்து கொண்டார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. அவர்கள் ரூ. 700 அடங்கிய பண முடிப்பு ஒன்றும் கொடுத்தார்கள். ஐக்கிய மாகாணத்திலும் மாணவர்கள் அவ்விதமே நடந்து கொள்வார்கள் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம்.

ஞாயிற்றுக்கிழமை அன்சாரி என்னை வந்து பார்த்தார். அவரது உடல் நிலை ஓரளவு அபிவிருத்தியடைந்திருக்கிறது. அவர் வித்தல்பாயைச் சந்திக்க விரும்பினர். ஆனல் அவ்விதம் சந்திக்க முடியாமற் போய்விட்டது.

யாத்திரையினல் இதுவரை எனக்கு சிரமம் எதுவும் ஏற்படவில்லை. நேரமாகிவிட்டது. நான் உணவு உட்கொண்டு, பின்னர் மோட்டாரில் ஏறிக் கொள்ளவேண்டும். எனவே இன்று இவ்வளவு தான் எழுத முடியும்.

பாவும் சுவாமியும் நேற்று இங்கிருந்து வார்தாவுக்குப் புறப்பட்டார்கள். பா அகோலா சென்று அங்கிருந்து அகமதாபாத்துக்குச் செல்லுவாள்.

## 28

ராஜ்பூர்,
நவம்பர் 23, 1933

கடிதம் எழுதுவதை நீங்கள் உண்மையில் நிறுத்திவிட்ட தாகவே தோன்றுகிறது. ஜம்னாலால்ஜியின் ராஜிநாமா* தவிர்க்க முடியாததாகி விட்டது. ராஜிநாமா செய்யாவிடில், அவர் மன அமைதியுடன் இருக்க முடியாது. மற்ற ராஜிநாமாக்களும் அப் படியே. அவை நிலைமையை மிகவும் தெளிவாக்கியிருக்கின்றன. ஜம்னாலால்ஜிக்கு ஒரு சுமை குறைந்து, புதிய பலம் ஏற்பட்டிருக் கிறது. இதற்கு மேல் அதிகமாக எதுவும் நான் சொல்ல மாட்டேன். எனினும், அவர்கள் மேற்கொண்ட இந்த முறை சரி என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

உங்களுடைய உடல் நிலையில் மீண்டும் சிறிது கோளாறு ஏற் பட்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவ்விதமாயின், எனக்கு அறிவியுங்கள். உங்களுடைய எடை எவ்வளவு இருக்கிறது என் பதை நீங்கள் எங்களுக்குச் சொல்ல முடியுமா? மூக்கில் ஏற்பட்ட கோளாறினால் இப்போது உங்களுக்குத் துன்பம் எதுவும் இல்லை என்றே நம்புகிறேன். என்னிடமிருந்து நீங்கள் எதையும் மறைத்து வைக்க மாட்டீர்கள் என்பது நிச்சயம்.

பிரயாண சிரமத்தை நான் நன்கு சமாளித்து வருகிறேன். முன்னரைக் காட்டிலும் மக்கள் கூட்டம் அதிகமாக இருந்து வரு கிறது; எப்போதும்போல் அவர்கள் எல்லை மீறிய ஆர்வத்துடன் இருந்துவருகிறார்கள்.

## 29

இதார்ஸி,
டிசம்பர் 1, 1933

இதார்ஸி தர்ம சாலையில் காலை 3-15 மணிக்கு இதை நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். பல் துலக்கி சுத்தம் செய்து கொள் வதற்காக மீரா சென்றிருக்கிறாள். அவள் திரும்பிவந்ததும், நாங்கள் பிரார்த்தனை செய்வோம். பிறகு கரேலி வழியாக அனந்தபூர் செல்ல நாங்கள் ரயிலில் புறப்படுவோம். அனந்தபூரில் தான் ஜிதாலாவின் தலைமைக் காரியாலயம் இருக்கிறது. நேற்று நாங்கள் பீடுலில் இருந்தோம். ரயிலில் இதார்ஸிக்கு வந்த பின் அங்கு நடந்த பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டோம். பின்னர் இந்த விடுதியில் வந்து தூங்கினோம்.

---

* காரியக் கமிட்டி அங்கத்தினர் பதவியை ஜம்னாலால் பஜாஜ் ராஜிநாமா செய்ததுபற்றியே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

உங்களுடைய கடிதம் கிடைத்தது. 'டைம்ஸ் ஆப் இந்தியா' வில் வெளியாகியுள்ள பொய்களை நாம் எப்படிச் சமாளிக்க முடியும்? எனினும் என் மனத்திற்குத் தோன்றுவதை நான் செய்துவருகிறேன். இப்போதெல்லாம் பத்திரிகைகள் வாசிப்பதற்கு எனக்கு நேரம் கிடைப்பதில்லை. ஹரிஜனங்களுக்காக (கடவுளின் குழந்தைகள்) நான் செய்யும் தொண்டை ஹரியே (கடவுளே) கவனித்து வருகிறார் என்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. எங்களுடைய கூட்டங்களுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் வரும்படி செய்யும் அதே சக்தி, பொய்யர்களையும் வாயடைத்துப் போகும்படி செய்யும். நமது பாதையில் நாம் கண்காணிப்புடன் செல்லும் வரையில், நாம் முற்றிலும் திருப்தியுடன் இருக்கலாம்.

எப்போதும் உங்கள் கண் என்மீது இருக்கிறது என்பதை நான் அறிவேன். அது அபாயத்திலிருந்து என்னைப் பாதுகாத்து வராதா? நான் எரவாடாவில் இருந்த காலம் முழுவதும், என் விஷயத்தில் நீங்கள் தாயைப்போல் அன்பு காட்டியதை நான் கவனிக்கவில்லையா? அத்தகைய உங்களுடைய மன நிலையை உங்களுடைய கடிதங்களிலிருந்து உணர்ந்து கொள்ள முடியும். அதே கண்காணிப்புடன் மற்றவர்களையும் நீங்கள் கவனித்துவருவதையும் நான் பார்த்திருக்கிறேன்.

என்னைப் பற்றியோ, தற்போது என்ன நிகழ்ந்துவருகிறது என்பது பற்றியோ கவலைப்படாதீர்கள். இது கடவுளின் வேலையாகும். தவறாகச் செல்லும் விஷயங்களைச் சீர்படுத்த அவரைத் தவிர வேறு யாரால் முடியும்?

நாங்கள் இப்போது ரயிலில் இருக்கிறோம். உங்கள் மூக்கில் உள்ள கோளாறுக்கு அவசியமான பரிகார முறைகளைக் கைக்கொள்வீர்களென நம்புகிறேன்.

## 30

ஜபல்பூர்,
டிசம்பர் *4, 1933*

நேற்றிரவு நாங்கள் ஜபல்பூருக்கு வந்து சேர்ந்தோம். இப்போது காலை *6-30* மணி. நேற்று கட்ணியில் உங்களுடைய கடிதம் கிடைத்தது. அனந்தபூரில் நடைபெற்று வரும் வேலையை நான் சென்று பரிசோதனை செய்தேன். அது உறுதியுடனும், நிதானமாகவும், எனவே மெதுவாகவும் நடைபெற்றுவருகிறது. ஜிதாலால் ஒரு சிறந்த தொண்டராவார்.

கோவர்த்தன்பாய்க்கு என்மீது மிகுந்த கோபம். அவரைச் சமாதானப்படுத்த நான் முயற்சித்து வருகிறேன். பணத்தை வெளி நாடுகளில் செலவு செய்யவேண்டும் என்பது அவரது எண்ணமாகும். அவ்விதம் செய்யவேண்டாமென்று அவருக்கு நான் கூறியிருக்கிறேன். (வித்தல் பாயின்) 'உயிலைப்' பற்றி அவர் இன்னும்

என்னைக் கேட்கவில்லை. அவர் கேட்டால், நீங்கள் அவ்விஷயமாக எழுதியதை இயல்பாகவே நினைவில் வைத்துக் கொள்வேன்

பிராஜ்கிஷன் கடுமையான நோய்வாய்ப்பட்டிருக்கிறார். நான் உண்ணாவிரதம் இருந்தபோது அவர் எவ்வளவு பக்தியுடனும் விசுவாசத்துடனும் எனக்குப் பணிவிடை புரிந்தார் என்பதை நீங்கள் அறிவீர்கள். அவரது உடல் நிலைபற்றி எனக்குச் செய்தி கிடைத்து வருகிறது. அவர் இன்னும் சிகிச்சை பெற்றுவருகிறார். ஒரு வேளை அவர் தேறிவிடலாமென டாக்டர் அன்சாரியிடமிருந்து ஒரு தந்தி வந்திருக்கிறது.

சிறையில் மகாதேவுக்கு ஒரு தோழர் இருக்கிறார் என்பது பற்றி உங்களிடமிருந்து தான் நான் தெரிந்து கொண்டேன். சகன் லால் ஜோஷி சௌக்கியமாக இருக்கிறார். இங்கே வந்தபின் நேற்றுத்தான் பாவைப்பற்றிய நல்ல செய்தி எனக்குக் கிடைத்தது.

ஹரிஜனங்களுக்காக நாம் செய்துவரும் தொண்டு வெற்றிகரமாக நடந்து வருகிறது. அவ்விஷயமாக இதுவரை அடைந்துள்ள முன்னேற்றம் திருப்திகரமாக இருக்கிறது.

## 31

ஜபல்பூர்,
டிசம்பர் 7, 1933

பாவுக்கு நான் அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறேன். இந்தத் தடவை சிறைக்குச் செல்லுவது அவளுக்கு எளிதாக இல்லை, இருந்தாலும் கடவுள் அவளைக் கவனித்துவருவார். தக்கர் பாபா உங்களுடைய கடிதத்தை என்னிடம் காட்டினார். ஆனால் அவர்மீது குற்றம் இல்லை. உண்மையில், என்னைப் பாதுகாத்துவர அவர் இடைவிடாது முயற்சித்து வருகிறார். முதலாவதாக, தொல்லை கொடுக்கும் நபர்களை என்னிடம் வர அவர் விடுவதே இல்லை. அவரே பலருடனும் பேசி முடித்துவிடுகிறார். இருந்தாலும் சிலரை என்னிடம் அழைத்துவர வேண்டியிருக்கிறது. பார்க்க வருவோரைச் சமாளிக்கும் விஷயம், அனுபவம் காரணமாக நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து வந்திருக்கிறது. எனினும் அதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். எல்லாம் கடவுள் சித்தப்படி நடக்கும்.

கிஷோர்லால் பம்பாயில் நோய்க்கு இலக்கானார். இப்போது அவர் சிறிது குணமடைந்திருக்கிறார். அவரது உடல் நிலையை விசாரித்துக் கடிதம் எழுதுங்கள்.

ஜீவராஜ் (டாக்டர் மேத்தா) மிகவும் இளைத்துவிட்டார். அவர் மதிரானிலுள்ள ரக்பி ஹோட்டலில் இருக்கிறார்.

மதுரதாஸ் மற்றவர்களுடன் இங்கு வந்தார். அவர் இன்னும் என்னுடன்தான் இருக்கிறார். அவர் டில்லி வரையில் என்னுடன்

வருவார். அவரும் மிகவும் இளைத்துவிட்டார். அவருக்கு முதுகில் வலி இருந்துவருகிறது. அவரால் அதிகமாக நடமாட முடியாது. ஆனால் அவர் ஓய்வு எடுத்துக் கொண்டால், அவருக்கு பலம் உண்டாகும்.

காரியக் கமிட்டிக் கூட்டத்தை வெறும் பேச்சுக் கூட்டம் என்று மாத்திரமே வர்ணிக்க முடியும்.

ஜம்னாலால்ஜியைப் பற்றி நான் என்ன கூறுவது? அவரது உடல் எடை இப்போது சிறிது அதிகமாகியிருக்கிறது. பொதுவாக அவர் குணம் அடைந்திருக்கிறார். இருந்தாலும் மூக்கு உங்களுக்குத் தொல்லை கொடுத்துவருவது போல், காது அவருக்குத் தொல்லை கொடுத்து வருகிறது.

நேதி* முறையில் நீங்கள் பயிற்சி பெற உத்தேசித்திருப் பதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் உங்களுக்கு அம்முறையைக் கற்றுக் கொடுக்க அங்கே யார் இருக்கிறார்கள்? அம் முறையில் நான் ஒரு நிபுணன் என்று கருதமுடியும். நான் அதில் ஒரு நிபுணன் என்ற முறையில் என்னை நீங்கள் சிறைக்குள் அழைக்க முடியாதா? தகுந்த தேர்ச்சியின்றி நேதி முறையை அனு சரிப்பதால் பெரும்பாலும் சிறிது ரத்தம் வருவது உண்டு. முதலில் ஒரு துளிரையோ அல்லது வைக்கோலையோ உபயோகிப்பது உண்டு. ஆனால் அதை நீங்கள் ஒரு போதும் முயற்சி செய்து பார்க் கக்கூடாது. ஒரு துண்டு மெல்லிய துணி போதுமானது. நீங்கள் மெதுவாகச் செய்தால் அதில் கஷ்டம் எதுவும் இருப்பதற்கில்லை. கிருஷ்ணதாஸ், மகாதேவ், தேவதாஸ் எல்லோரும் என்னிட மிருந்தே அதைக் கற்றுக்கொண்டார்கள். ஜானகிபென் ஜம்னா லால்ஜியுடன் வந்திருந்தார்; இரவு இருவரும் புறப்பட்டுச் சென்று விட்டார்கள்.

சந்திர சங்கர் நல்ல வேலை செய்துவருகிறார். காகாவும், சுவாமி யும் மதிராஸுக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கே சில நாட்கள் தங்கியிருப்பார்கள்.

நான் 10-ஆம் தேதி டில்லி போய்ச் சேருகிறேன்.

## 32

சீதா நகர்,
டிசம்பர் 25, 1933

நான் உங்களுடைய கடிதத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்த போது நீங்கள் என்னுடைய கடிதத்தை எதிர்பார்த்துக் கொண் டிருந்தீர்கள். எனது கடிதத்திற்கு உங்களிடமிருந்து பதில் வர வில்லை என்ற தவறான எண்ணத்துடன் நான் இருந்தேன். நாங்கள்

* தண்ணீரை மூக்குத் துவாரங்களின் வழியாக இழுத்து மூக்கைச் சுத்தம் செய்யும் ஒரு முறை.

அவ்வளவு வேகமாகச் சென்று வருவதால், தேதி, கிழமைகளைப் பற்றிக் கூட நினைவு இருப்பதில்லை. யாருக்கு என்ன எழுத வேண்டும் என்றுகூட என்னால் நினைவு படுத்திக் கொள்ள முடிவ தில்லை. இது வயோதிகம் காரணமாகவும் இருக்கலாம்.

நான் அதிகாலையில் 3 மணிக்கு எழுந்திருப்பதைக் குறித்து சந்திரசங்கர் உங்களை அனாவசியமாக பயமுறுத்தியிருக்கிறார். அவ்வளவு அதிகாலையில் எழுந்திராவிடில், நான் திண்டாட வேண்டியதுதான். நீங்கள் வற்புறுத்த வேண்டியதெல்லாம் என்ன வெனில், இரவில் நான் சீக்கிரமாகப் படுக்கச் செல்லவேண்டும் என்பதுதான். இந்த விதிகூட சமீபத்தில் மீறப்பட்டுவிட்டது என்பது உண்மையே. எனினும் எனது ஆரோக்கிய நிலை அற்புதமாக இருக்கிறது என்பதை எல்லா டாக்டர்களும் ஒப்புக் கொள்கின்றனர். நீங்கள் கற்பனை செய்து கொள்வதுபோல் நான் அவ்வளவு அதிகமான கடிதங்கள் எழுதுவதில்லை, முற்றிலும் அவசியமாக எழுத வேண்டிய கடிதங்களை மாத்திரமே எழுதுகிறேன். நீங்கள் என் பக்கத்தில் இருந்தால், அத்தனை கடிதங்கள் எழுதும்படி நீங்களே என்னைக் கேட்டிருப்பீர்கள். உங்களைத் திக்கற்ற நிலையில் விட்டு விட்டு நான் சிறையிலிருந்து வெளியே வந்துவிட்டதாக நீங்கள் புகார் கூறுவது முற்றிலும் சரிதான். ஆனால் அதற்கு எளிதில் பரிகாரம் செய்துவிட முடியும். அதாவது என்னைப் பற்றிக் கவலைப்படுவதை அறவே விட்டுவிடுங்கள். என் உடல் பலத்தை மீறி நான் ஒருபோதும் அதிகமாக எவ்வித வேலையும் செய்வதில்லை. நீங்கள் என்னைப் பார்த்தால், நான் என்னைக் கவனித்துக் கொள்வதில் வெற்றி பெற்றிருக்கிறேன் என்று எனக்கு நற்சாட்சிப் பத்திரம் வழங்குவீர்கள்! அல்லது உண்மையைக் கூறுவதாயின், கடவுள் என்னைக் கவனித்துவருகிறார். எனினும் அவரது நோக்கத்தை நான் சீர்குலைத்து விடுவேனாயின், அவரால்கூட எதுவும் செய்யமுடியாது. நான் அவருடன் இரண்டறக் கலந்திருப்பதால்தான், பல மகத்தான ஆபத்துகளிலிருந்தும் அவர் என்னைக் காப்பாற்றுகிறார். சென்னையில் நான் ஒவ்வொரு நாளும் நசுக்குண்டுவிடக்கூடிய அபாய நிலையிலிருந்து காப்பாற்றப்பட்டேன். நான் காப்பாற்றப் பட்டதற்கு கடவுளின் சித்தம் காரணமேயன்றி, மனிதனின் முயற்சியல்ல.

ஒவ்வொரு வாரமும் என்னிடமிருந்து பாவுக்கு நிச்சயமாக ஒரு கடிதம் போகும். இதுவரையில் பாவுக்குக் கடிதம் எழுத நான் ஒரு வாரம் கூடத் தவறியதில்லை. பாவைக் கடவுள் காப்பாற்றுவார். அவளைக் காப்பாற்ற வேறு யார் இருக்கிறார்கள்? மணியைப் பற்றிக் கவலைப்பட உண்மையில் எதுவுமே இல்லை. கஞ்சிபாயிடமிருந்து* எனக்கு ஓர் அருமையான கடிதம் கிடைத்தது. அவர் அவசியமென்று நினைத்தால் என்னை வந்து பார்க்கும்படி அவரைக் கேட்டிருக்கிறேன்.

---

* கன்யாலால் நானுபாய் தேசாய்

ராஜா பிப்ரவரி 6-ஆம் தேதி விடுதலையாவார். லக்ஷ்மி சௌக்கியமாக இருக்கிறாள். தேவதாஸ் சென்னையில் அவளுடன் சேர்ந்து கொள்வான்.

அரிஸ்டார்ச் இளவரசியிடமிருந்து ஒவ்வொரு வாரமும் கடிதம் வந்து கொண்டிருக்கிறது. அவர் பணமும் அனுப்பிவருகிறார். அவரது அன்புக்கு எல்லையே இல்லை.

மணிலாலும் ஸொராப்ஜியும்* இன்னும் பரஸ்பரம் சச்சர விட்டு வருகிறார்கள். உள்ளூர் அரசியல் நிலைமை பற்றியே அவர் களுக்குள் கருத்துவேற்றுமைகள் இருந்து வருகின்றன. யாருக்கும் வழிகாட்டியாக இருக்க என்னால் ஒருபோதும் முடிந்ததில்லை. அவ னுக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அதைச் செய்யும்படி மணி லாலுக்கு நான் எழுதியிருக்கிறேன். எனினும் சாதாரண மரியா தையைக் கைவிட்டுவிடக் கூடாது என்றும், நபர்களைப் பற்றிய வாக்குவாதங்களில் ஈடுபடக்கூடாது என்றும் அவனுக்கு நான் புத்திமதி கூறியிருக்கிறேன். அவர்களுடைய சண்டை சீராகி விடுமென நான் நம்புகிறேன்.

சுபாஷ் எனக்கு இனிமையான கடிதமொன்று எழுதியிருக் கிறார். பிரசுரிப்பதற்காக அதை நான் பத்திரிகைகளுக்கு அனுப்பி யிருக்கிறேன்.

யாத்திரை நாளுக்கு நாள் பலம் பெற்றுவருகிறது. ஓரிடத்தில் கூட தகராறு ஏற்படவில்லை. தென்னிந்தியாவில் துஷ்டர்கள் இன்னும் எங்கள் வழிக்கு வரவில்லை. எதிர்காலத்தில் என்ன நேரும் என்பதைக் கடவுளே அறிவார். ஒவ்வோரிடத்திலும் ஏராள மான ஜனங்கள் கூடி வருகிறார்கள். இன்று நாங்கள் சீதா நகரில் இருக்கிறோம். அது ஒரு சிறிய, அமைதியான நகரம். இன்று மௌன தினமாகும். நான் நாளைக்கும் இங்கேயே இருப்பேன். இவ்விதம் எனக்கு வாரத்தில் இரண்டு நாட்கள் ஓய்வு இராவிடில், எனது அலுவல்களைச் செய்வது கடினமாகிவிடும்.

சென்னையில் நான் (ஸ்ரீனிவாச) சாஸ்திரியைக் கண்டு சிறிது நேரம் பேசினேன். முன்ஷியும் (கே. எம்) லீலாவதியும் கூட அங்கே என்னைச் சந்தித்தார்கள். புலாபாய் தேசாயிடமிருந்து ஒரு தந்தி வந்தது. அவர் இன்னும் முற்றிலும் குணமடைந்ததாகத் தெரிய வில்லை.

யாத்திரையில் எனது கூட்டாளிகளில் கிஷனும் ஒருவள். அவள் மிகவும் நல்ல பெண். எனவே அவள் பிரேமாவின் தோழி யாக இருப்பதில் ஆச்சரியமில்லை.

---

* மணிலால், காந்திஜியின் இரண்டாவது மகன்; ஸொராப்ஜி, தென் னாப்பிரிக்காவில் காந்திஜியின் சக ஊழியராக இருந்த ஒரு பார்சியின் மகன்.

# 33

கடப்பை (ஆந்திரா),
*ஜனவரி 2, 1934*

இப்போது விடியற்காலம் மணி *3-20* ஆகிறது. நான் முகத்தைச் சுத்தம் செய்து கொண்டதும், இப்போது உங்களைப் பற்றியே நினைக்கிறேன். இவ்வளவு சீக்கிரமாக எழுந்திருந்தால்தான் என் மனம் அமைதியாக இருக்கிறது. இதற்கு ஈடாக பகலில் அதிகமாகத் தூங்கிவிடுவேன். அது எப்படியாயினும், இன்று பிரயாணம் எதுவும் இல்லை. நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம். எனது உடல் நிலை நன்ருக இருந்துவருகிறது.

உங்களைப் பற்றி நீங்கள் அதிகமாக எதுவும் எழுதுவதில்லை. எனவே நீங்கள் எதையோ என்னிடமிருந்து மறைக்கப்பார்க்கிறீர்கள் என்றே நான் கருதுகிறேன். நீங்கள் அவ்விதம் செய்யக் கூடாது.

பாவுக்கு ஒழுங்காக ஒவ்வொரு வாரமும் கடிதம் எழுதிவருகிறேன். இனியும் எழுதிவருவேன். அவள் கூறிய யோசனைக்கு இணங்க, எரவாடா மந்திரிலிருந்து நான் அனுப்பி வந்ததுபோல் கீதையைப் பற்றிய ஒரு விமர்சனமும் அனுப்பிவருகிறேன்.

மகாதேவுக்கு இப்போது ஒரே ஒரு கடிதம் எழுதவும், ஒரே ஒரு கடிதம் பெறவும் தான் உரிமை உண்டு. இருந்தாலும் அவர் ஒரே கடிதத்தில் பல கடிதங்களில் எழுத வேண்டிய விவரங்களை எழுதிவிட முயற்சிக்கிருர். அது போலவே ஜீவன்ஜி தேசாய் மூலம் அவர் தமக்கு வரும் ஒரு கடிதத்திலிருந்து எல்லா விவரங்களையும் அறிந்து கொள்கிருர். அவருக்கு இது கடுமையான சோதனைக் காலமாகும். எனினும் இந்தச் சோதனையிலிருந்து அவர் வெற்றியுடன் வெளிவருவார். தற்போது அவர் கீதையை மொழி பெயர்ப்பதில் ஆழ்ந்திருக்கிருர்.

கிஷோர்லாலைப்பற்றி உங்களுக்கு முன்பே தெரியும். அவருக்கு இன்னும் ஜுரம் ஒழிந்தபாடில்லை. இப்போது கேதார் நாத், சுவாமி, கோமதி (கிஷோர்லாலின் மனைவி) ஆகியோரடங்கிய ஒரு கமிட்டியை அவரே நியமித்திருக்கிருர். அவர்களுடைய யோசனைக்கு இணங்கி நடக்க அவர் ஒப்புக்கொண்டிருக்கிருர்.

நேற்று பாவின் கடிதம் வந்தது. அதைப் பார்த்து ஓம் சில பிரதிகளை எழுதினுள். அதில் உங்களுக்கும் ஒன்று அனுப்பியிருக்கிறேன். ஓம் மிகவும் சுறுசுறுப்பான ஒரு பெண். விரைவாகக் கற்றுக்கொள்ளவேண்டும் என்பதிலும் அவள் ஆர்வமுடையவளாக இருக்கிருள். அவள் நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து வருகிருள். அவள் கபடமற்றிருப்பதே அதற்குக் காரணம். கிஷனுக்கு உடல் நிலை சரியாக இல்லை. இல்லாவிடில் அவளும் நல்ல உழைப்பாளிதான். அவ்விரு பெண்களும் எளிய பழக்கவழக்கம் உடையவர்கள். இருவரும் பரஸ்பரம் சுமுகமாகப் பழகுகிருர்கள்.

ராதாகாந்த் மாளவியா நேற்று வந்தார். கெட்டியான 'ஜெலி'ல் பாலை வைத்துப் பாதுகாப்பதற்கான ஒரு திட்டத்தை அவர் தயாரித்திருக்கிறார்; அதன் சம்பந்தமாக என்னுடைய உதவியை நாடுகிறார். இது போன்ற சாகஸங்களில் எனது உதவியை நாடுவது மடத்தனமாகும். அவர் ஐரோப்பாவில் பயிற்சிபெற்ற பின் இந்தியாவுக்கு வந்திருக்கிறார் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

மால்கனி கடுமையாக உழைக்கிறார்; தக்கர்பாபாவின் ஸ்தானத்தில் அவர் திருப்திகரமாக வேலை செய்கிறார். எல்லாச் சிப்பந்திகளும் எதிர்பார்க்கும் அளவுக்கு நன்றாக வேலை செய்கிறார்கள். எனவே, எல்லாம் சரியாக நடந்து வருகிறது. ஆனந்தியும், மற்றக் குழந்தைகளும் முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள். அவர்களுக்கு வாரத்தில் 3 மணி நேரம் ராமநாராயண பதக் பாடம் சொல்லிக் கொடுக்கிறார்.

நான் மணியுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறேன். அவள் சிறையில் மகாதேவைப் போல் அவ்வளவு மோசமான நிபந்தனைகளுக்கு உட்படும்படி நேரவில்லை என்று நம்புகிறேன். அது பற்றி உங்களுக்குத் தெரியுமா?

## 34

பெங்களூர்,
ஜனவரி 8, 1934

பாவுக்கு நான் எழுதிய கடிதத்தை முடித்த பின் உங்களுக்கு இந்தக் கடிதம் எழுதுகிறேன். இப்போது மாலை சுமார் 4 மணி. இன்று மௌன தினமாகும். அகமதாபாத் நெசவு மில்களில் சம்பளத்தை வெட்ட உத்தேசித்திருக்கிறார்கள். அவ்விஷயமாக நாளை ஒரு கூட்டம் இருக்கிறது. சங்கர்லால் பாங்கர், குல்ஸாரிலால் முதலிய மற்றவர்கள் ஏற்கனவேயே இங்கு வந்துவிட்டார்கள். மில் சொந்தக்காரர்கள் நாளை வருவார்கள். அதற்காக ஐந்து மணி நேரம் செலவிட நான் இசைந்துள்ளேன். நாளை இரவு நான் மலையாளத்துக்குச் செல்லுகிறேன்.

வேலைத் தொந்தரவு மிகவும் அதிகமாக இருக்கிறது. இருந்தாலும் என் உடல் நிலை நன்றாக இருந்துவருகிறது. நேற்று டாக்டர் சுப்பராவ் என்னைப் பரிசோதனை செய்தார். என் உடல் நிலை பற்றி அவருக்கு மிகவும் திருப்தி ஏற்பட்டது. இரத்த அமுக்கம் 155–100–ஆகக் குறைந்திருக்கிறது. இது மிகுந்த அபிவிருத்தியையே காட்டுகிறது. தக்கர் பாபா 16–ஆம் தேதி கோழிக்கோடில் எங்களுடன் வந்து சேர்ந்து கொள்வார்.

இங்கே நான் முன்போலவே மைசூர் அரசாங்கத்தின் விருந்தினர் விடுதியில் இருக்கிறேன். மக்களிடையே மகத்தான உற்சாகம் நிலவிவருகிறது. திவான் என்னைப் பார்க்க வந்திருந்தார்.

அவர் உங்களை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறார். உங்களுக்கு அவரது நல் வாழ்த்துக்களை அனுப்பும்படி கூறினார். அவர் மிகவும் அன்புடன் நடந்து கொள்கிறார்.

மோட்டாரை விற்பதற்கு அனுமதிகோரி......இடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதை விற்கத் தயாராக இருப்பதாகக் கூறி பின்னர் தக்கர் பாபாவிடமிருந்தும் ஒரு தந்தி வந்தது. எனவே நான் அதற்கு அனுமதி கொடுத்தேன். அதையெல்லாம் என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. அத்தகைய விஷயங்களில் நான் நீங்கள் கூறிய விதமே செய்துவந்துள்ளேன். அதனால்தான் நான் அடிக்கடி ஏகலவ்யனைப் போல் நடந்து கொள்கிறேன். அவன் துரோணரைப் போல் ஒரு மண் உருவத்தைச் செய்து, அதனிடமிருந்து வில் வித்தையைக் கற்றுக் கொண்டான். அதன் பலனாக இறுதியில் அவன் அர்ஜுனனைப் போலவே வில் வித்தையில் தேர்ச்சி பெற்றுவிட்டான். உங்களைப் போல ஓர் உருவத்தை நான் மனத்தில் கற்பனை செய்து கொண்டு, அந்த உருவத்தினிடம் கேள்விகள் கேட்கிறேன். மோட்டாரை விற்பதற்கு அனுமதி கொடுத்து நான் ஒரு தந்தி அனுப்பினேன். உங்களுடைய ஆலோசனையும் அவ்விதமேதான் இருக்குமென நான் நினைத்தேன்.

டாக்டர் பி. ஸி. ராய் மரணத்திலிருந்து மயிரிழையில் தப்பினார். எனது தந்திக்குப் பதிலளித்து அவர் அவ்விதம் எழுதியிருக்கிறார். அவருக்கு ஒரு எலும்பு முறிந்துவிட்டது. எனவே இரண்டு வாரங்கள் வரையில் அவர் படுத்த படுக்கையிலேயே இருப்பார்.

மாமாவின் (வி. எல். பாட்கே) கடிதத்தைப் பற்றி உங்களிடமிருந்து வந்த கடிதம் ஒன்றில் குறிப்பிடப்பட்டிருந்தது. நவஸாரி, கோத்ரா ஆகிய இடங்களிலுள்ள ஹரிஜன் ஆசிரமங்களுக்காக தனித் தனி வசூல்களும், தனித்தனிக் கணக்குகளும் வைத்துக் கொள்வது முடியாத காரியம். அவ்விதமாயின், ஜனங்கள் பணம் கொடுக்கமாட்டார்கள். எனவே ஹரிஜன் சேவா சங்க நிதியிலிருந்து அந்த ஸ்தாபனங்களுக்கெல்லாம் உதவித் தொகை கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தாபனங்களின் நிர்வாகத்தில் யாதொரு மாறுதலும் இராது. எனினும் மத்திய நிதியிலிருந்து அவற்றிற்கு மான்யத் தொகைகள் வரும். அதன் மேற்பார்வையிலேயே அந்த ஸ்தாபனங்கள் செயல் புரிந்து வரும். எனினும் அவற்றின் சுயேச்சையான நிலைக்கு யாதொரு அபாயமும் ஏற்படாது. தற்போதைக்கு மாமா அவரது விருப்பப்படி அந்த வேலையில் ஈடுபட்டிருப்பார். நான் யாருக்கும் வழிகாட்டியாக இருக்க விரும்பவில்லை. வழிகாட்டியாக இருக்க முடியும் என்பதை நான் அறவே மறுக்கிறேன். நீங்கள் மேற்கொண்டு ஏதாவது தகவல் விரும்பினால், எனக்கு எழுதுங்கள். எனக்கு என்ன எழுதுவதென்றே தெரியவில்லை. எதைப் பற்றியாவது அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் உங்களுக்கு இருந்தால், நீங்கள் சமிக்ஞை

செய்தால் போதும். நீங்கள் கேட்கும் எல்லாத் தகவல்களையும் சேகரித்து உங்களுக்கு நான் அனுப்பிவிடுகிறேன். அவ்விதமாயின், என் பளு அதிகமாகுமே என்று நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை. எனது கைகள், மனம், நேரம் எல்லாவற்றையும் நான் சிக்கனமாகவே உபயோகித்து வேலை செய்கிறேன்.

தனது கெடு வருவதற்கு முன்பே தான் விடுதலை அடைந்துவிட்டதாக தேவதாஸ் அகமதாபாத்திலிருந்து தந்தி கொடுத்திருக்கிறான். அவன் என்னைப் பார்ப்பதற்காக இங்கு வருவான். ஒருவேளை பாவையும் அவன் பார்க்கலாம்.

கிஷோர்லால் குணமடைந்து வருகிறார். பிராஜ்கிஷனுக்கு இனி அபாயமில்லை. இப்போது அவராலும் சிறிது நடமாட முடிகிறது.

ஓம், கிஷன் இருவரும் சௌக்கியமாக இருக்கிறார்கள். மீரா பென் சௌக்கியமாக இருக்கிறார் என்பதைச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை.

## 35

கோழிக்கோடு,
*ஜனவரி 15, 1934*

இப்போது மாலை 4 மணி. இது மௌன தினமாகும். நாங்கள் நாக்ஜி புருஷோத்தமனின் பங்களாவில் தங்கியிருக்கிறோம். தேவதாஸும் லக்ஷ்மியும் இன்று வந்தார்கள். தக்கர் பாபாவும் சங்கர்லாலும் நாளை வருவார்கள். நாளை மத்தியானம் 2-30 மணிக்கு நான் கோழிக்கோடு ராஜாவைச் சந்தித்துப் பேசிவிட்டு, மாலை 5 மணிக்கு திருச்சூருக்குப் புறப்படுகிறேன்.

கதர் சம்பந்தமான சில விஷயங்களைப்பற்றிப் பேசுவதற்கென்றே இங்கே வரும்படி சங்கர்லாலை நான் அழைத்திருக்கிறேன். இந்த இலாகாவில் வீண் செலவு ஏற்பட்டுவருகிறது என்று நினைக்கிறேன். அதன் சம்பந்தமாக நான் கண்ட எல்லா விவரங்களையும் அவரிடம் எடுத்துக் கூற விரும்புகிறேன். ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்திற்கு கதர் அனுப்பும் வழக்கம் முற்றிலும் நிறுத்தப்பட்டுவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. அனந்தபூரில் மேற்கொள்ளப்படும் முறையை நான் ஆதரிக்கிறேன். கிருஷ்ணதாஸ் காந்தியும், ஸ்ரீ கிருஷ்ணதாஸ் ஜாஜூஜியும் அத்துறையில் நிபுணர்கள். ஸ்ரீ கிருஷ்ணதாஸ் நல்ல பெயர் வாங்கிவருகிறார்

தேவதாஸ் (சிறையிலுள்ள) பாவைச் சென்று பார்த்தான். அவளது மன உறுதியை அவன் பிரமாதமாகப் புகழ்கிறான். அவளுக்கு அதிகாரிகள் சிறிது தொல்லை கொடுத்துவருகிறார்கள்.

எனினும் அத்தகைய தொல்லை ஏதாவது இல்லையாயின், வாழ்க்கை மிகவும் சப்பென்றிருக்கும்.

நான் குருவாயூருக்குச் சென்றிருந்தேன். அங்கு யாதொரு பரபரப்பும் இல்லை. கருப்புக் கொடிகளைக் காட்டுவதற்காகவும், அப்போது அடிபடுவதற்காகவும் வர்ணாசிரம சங்கத்தினர் சில வட இந்திய மல்லர்களை அனுப்பியிருந்தார்கள். அவர்களில் இருவர் மேடையில் ஏறி உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களைக் கீழே இறங்கும்படி சில இளைஞர்கள் கூறினர்கள். அதன் விளைவாகக் கைகலப்பு ஏற்பட்டது. மல்லர்களுக்குச் சில அடிகள் கிடைத்தன. ஆனல் அவர்களுக்குக் காயம் எதுவும் இல்லையெனினும், காயமடைந்ததுபோல் அவர்கள் பாசாங்கு செய்தனர். எனவே அவர்களை நான் ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட்டு, கூட்டத்தை ஆரம்பித்து இறுதிவரையில் நடத்தினேன். கூட்டத்திலிருந்தவர்கள் மேடைக்கு வந்து காலணக்களாகக் கொடுத்தார்கள், கரன்சி நோட்டுகளாகவும் கொடுத்தார்கள். கௌமுதி என்ற ஒரு சிறு பெண் தன் மீதிருந்த நகைகளையெல்லாம் கழற்றிக் கொடுத்து விட்டாள். எவருக்குக் கடவுளின் பாதுகாப்பு இருக்கிறதோ, அவருக்கு யார் அபாயம் விளைவிக்கத் துணிவார்? எனவே, கடவுள் நமக்குத் தகுதியானது என்று நினைக்கும் ஒரு நிலையிலேயே நாம் வாழ வேண்டும்; அவரது கட்டளைப்படியே நாம் நடக்க வேண்டும்; அவரது பாட்டிற்குத் தகுந்தவாறு நாம் ஆடவேண்டும்.

பெங்களூரில் நாங்கள் இரண்டு பெண்மணிகளைச் சந்தித்தோம். ஒருவர் தாயார், மற்றொருவர் மகள். அவர்கள் ஹங்கேரியிலிருந்து வந்தவர்கள். இருவரும் படங்கள் எழுதுவதில் நிபுணர்கள். அவர்கள் எளிமையாக வாழ்கிறார்கள். தற்காலிகமாகவாவது அவர்கள் தங்கள் சக்தி முழுவதையும் இந்தியாவுக்காகவே உபயோகித்து வருகிறார்கள். நம்முடைய பஜனை கீதங்களுக்குச் சரியாக அவ்விருவரும் யாதொரு கஷ்டமுமின்றி நடனமாடுகிறார்கள்.

நாகினி அமெரிக்காவுக்குச் செல்லுவாரென்று தெரிகிறது. அவருடன் சிரியஸும் செல்லலாம்.

மணியின் கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன். பஞ்சுப் பட்டைகள் பற்றியும், புத்தகங்கள் பற்றியும் நான் சுவாமிக்கு எழுதியிருக்கிறேன். புத்தகங்கள் ஒரே அளவுள்ளவையாக இல்லை. எனவே அவற்றைச் சேர்த்து 'பைண்ட்' செய்ய முடியுமா என்பது எனக்குத் தெரியவில்லை. எனினும் அச்சக வேலைகளில் சுவாமி நிபுணராதலால், அவ்விதம் 'பைண்ட்' செய்வது சாத்தியமாயின், அப்படியே செய்வார். உங்களுக்கு மணியின் கடிதம் தயாபாயின் மூலம் அனுப்பப்பட்டது. நான் பெல்காமுக்குச் சென்றால் அவளையும், மகாதேவையும் பார்க்க நிச்சயமாக முயற்சிக்கிறேன்.

பெரியவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டுமாயின் எப்போதும் அவர்கள் பக்கத்திலேயே இருக்கவேண்டும் என்ற அவ

சியமில்லை என்று, மணிக்கு நீங்கள் கடிதம் எழுதும்போது கூறுங்கள். பெரியவர்களுடைய மனத்திற்குப் பிரியமான தொண்டு செய்வோர் யாராயினும், அவர்கள் பெரியவர்களுக்கு அப்பழுக்கற்ற தொண்டு செய்வோரேயாவர். ஒருவர் தமக்கு நெருங்கியவர்களுடனும் அன்பார்ந்தவர்களுடனும் கூட இருக்க விரும்புவது இயல்பேயாகும். இருந்தாலும் அவள் தூரத்தில் இருந்து கொண்டும் அவர்களுக்குத் தொண்டு செய்ய முடியும். கடிதம் நேராக அனுப்பப்பட்டிருக்க வேண்டுமென மணி நினைக்கிறாள். மற்ற இடங்களைப் போல் சபர்மதி மத்திய சிறை வழியாகவும் கடிதம் செல்ல வேண்டியிருக்கிறது. இது நமக்குப் புதிய அனுபவம் அல்ல. அத்தகைய இடையூறுகளையெல்லாம் கடந்துதான் ஆனந்த நிலையை அடைவதில் வெற்றி பெற வேண்டும்.

பிப்ரவரி 6-ஆம் தேதி ராஜா நிச்சயமாக விடுதலை செய்யப் படுவார்.

அவசியமில்லாத எண்ணங்களை மனத்திலிருந்து எப்படியாவது அகற்றிவிட வேண்டும். அவற்றை எப்படி அகற்றுவது என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டியது மிகவும் முக்கியமாகும்; இதற்கு, நீங்கள் கீதையை மனப்பாடம் செய்ய முயற்சிக்கலாம். அல்லது சமஸ்கிருதம் கற்றுக் கொள்ளவோ, நேராகவும் தலைகீழாகவும் ராமபஜனை செய்யவோ முற்படலாம்.

கவலைப்படுவதற்குக் கூட எனக்கு நேரமில்லை! எனவே, கவலைப்பட வேண்டாமென்று என்னிடம் கூறவேண்டிய அவசியமில்லை என்பதை நீங்கள் காணலாம்.

## 36

கன்யாகுமரி,
*ஜனவரி 22, 1934*

உங்களிடமிருந்து இன்னும் கூட யாதொரு தகவலும் இல்லை. ஆனால் நான் வழக்கம்போல் உங்களுக்குக் கடிதம் எழுதிவிடுகிறேன். இன்று நாங்கள் கன்யாகுமரியில் இருக்கிறோம். இங்கே மனிதரின் ஜாகைகளே இல்லை. எனவே இது மிகவும் அமைதியான ஓர் இடமாக இருக்கிறது. நன்கொடைகளாக வந்த வெள்ளி நாணயங்களை எண்ணும் சப்தத்தைத் தவிர வேறு எந்த சப்தமும் என் காதில் விழவில்லை! எங்களுக்கு எதிரேதான் கடல் இருக்கிறது. இருந்தாலும் அது சிறிதும் சப்தமின்றி மௌனமாக இருக்கிறது!

பீகார் பூகம்பம் மோதிஹாரியை அடியோடு நாசம் செய்துவிட்டதென்று தோன்றுகிறது. பூகம்பத்தினால் துன்பத்திற்குள்ளான மக்களுக்கு நிவாரணம் அளிக்கும் கடமையில் ராஜேந்திரபாபு ஆழ்ந்திருக்கிறார். மனத்தை உருக்கும் தந்தி ஒன்று அவரிடமிருந்து வந்திருக்கிறது. நான் அவருக்கு அனுதாபச் செய்தியொன்று

அனுப்பியிருக்கிறேன். அங்கே சதீஷ் பாபுவும் இருக்கிருர்; சுமார் பதினையாயிரம் பேர்கள் காயமடைந்திருக்கின்றனர். இறந்தவர் களின் தொகை இன்னும் தெரியவில்லை. பெரிய வீடுகள் கூட வசிக்க முடியாதவாறு அபாய நிலையில் இருக்கின்றன.

மூரியல் லெஸ்டர் பிப்ரவரி மாதம் ஹாங்காங்கிலிருந்து வரு கிருர். ஒருவேளை அவர் குன்னூரில் வந்து என்னைப் பார்க்கலாம். ஜனவரி 29-லிருந்து பிப்ரவரி 5-ஆம் தேதி வரையில் நான் குன் னூரிலேயே இருப்பேன் என்று எதிர்பார்க்கிறேன்.

பிருதுராஜ் கோழிக்கோடு வந்து எங்களுடன் சேர்ந்து கொண் டார். அவர் சில நாட்கள் இருந்துவிட்டுப் பின்னர் அவருடைய தாயாரைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டுச் செல்லுவார்.

திருவாங்கூரில் யாதொரு எதிர்ப்பும் இருப்பதை நாங்கள் காணவில்லை. எப்போதும்போல் திரளான ஜனக் கூட்டம் இருந்து வருகிறது. இவ்விஷயத்தில் மகாராஜா சிறிதும் அக்கறையின்றி அலட்சியமாக இருந்துவருகிருர். சி. பி. என்னைச் சந்திக்கவே இல்லை. தேவதார் இப்போது திருவனந்தபுரத்தில் இருக்கிருர். கூட்டுறவு சங்கங்களைப் பற்றி அவர் விசாரித்து வருகிருர். அவரது உடல் நலம் குன்றியிருக்கிறது. இருந்தாலும் தொண்டு செய்வது சாத்தியமாக இருக்கும் வரையில், அவர் முற்றிலும் மகிழ்ச்சியுட னேயே இருப்பார்.

கேளப்பன் ஒரு கிறிஸ்தவப் பெண்மணியை மணம் புரிந்து கொள்ளப் போகிருர். எனவே ஹரிஜன சேவா சங்கத்துடன் அவரது தொடர்பு முடிவடைந்துவிடும்.

பாவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அதில் அதிக விஷயம் எதுவும் இல்லை. சாத்தியமாயின் அதற்கு ஒரு பிரதி எடுத்து உங்களுக்கு அனுப்பும்படி செய்கிறேன். நான் அனுப்பிய மணியின் கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்கவேண்டும்.

ஆசிரம சகோதரிகள் யாவரும் இன்று நிச்சயமாக விடுதலை அடைந்திருப்பார்கள். நான் அவர்களுக்கு எழுதியிருக்கிறேன். கிஷோர்லால் இன்னும் படுத்த படுக்கையாகவே இருக்கிருர். ஜம்னுலால் மும்முரமாக வேலை செய்து வருகிருர்,

பூடோ என்ற பெயருள்ள ஒரு ஜெர்மன் இளைஞர் தென்னுப் பிரிக்காவிலிருந்து வந்திருக்கிருர். அவர் இப்போது எங்களுடன் பிரயாணம் செய்துவருகிருர். அவர் 'ஹிந்து' பத்திரிகையின் நிருபர் என்று தெரிகிறது. அவரிடமிருந்து இப்போதுதான் ரூ. 1000 திருட்டுப் போய்விட்டது. அவரிடம் தக்கர் பாபாவுக்கு ஒரு கவர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அந்த இளைஞர் காவற் காரர் வேலையையும், போர்ட்டர் வேலையையும் உற்சாகத் துடன் செய்துவருகிருர். அவர் திடகாத்திரமாக இருக்கிருர். அவருக்கு ஒருபோதும் களைப்பே ஏற்படுவதில்லை என்று தோன்றுகிறது. அவர் சுறுசுறுப்பாக இருக்கிருர்; கல்வி

யிலும் தேர்ச்சிபெற்றிருக்கிறார். அவர் ஒரு பிரிட்டிஷ் பிரஜையாக மாறியிருக்கிறார்.

சிரியஸ் போலீசாரின் மேற்பார்வையில் இருந்துவருகிறார் ஒருவேளை நாகினி இதற்குள் கப்பலேறியிருப்பார்.

## 37

குன்னூர்,
ஜனவரி 30, 1934

உங்களுடைய கடிதம் இன்னும் எனக்குக் கிடைக்கவில்லை. இப்போது மணி 2. ஆனந்தமான குன்னூர் வெய்யிலில் உட்கார்ந்து கொண்டு இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். இதற்கு முன் 'ஹரிஜனு'க்கு வாராந்திரக் கட்டுரைகளை எழுதி முடித்து, உணவு அருந்தினேன்; தமிழ்நாடு யாத்திரைத் திட்டத்தைத் தயாரித்து விட்டு, சிறிது நேரம் தூங்கினேன்.

தற்போது என்னுடைய நேரத்தில் பெரும் பகுதியையும் பீகார் பிரச்னை எடுத்துக் கொண்டுவருகிறது. அங்கு ஏற்பட்டுள்ள கஷ்ட நஷ்டங்களைப் பற்றி நீங்கள் பத்திரிகைகளில் வாசித்திருக்கலாம். கஷ்ட நிவாரண ஏற்பாடுகளைப்பற்றி ராஜேந்திரபாபுவிடமிருந்து எனக்கு தினந்தோறும் செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன. நான் என்ன செய்ய வேண்டுமென அவர் விரும்புகிறாரோ அதையெல்லாம் செய்துவருகிறேன். உடனடியாக நான் அங்கே செல்ல வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. விடுதலை செய்யப்பட்டுள்ள ஆசிரமவாசிகளின் உதவியை அவர் கேட்டுள்ளார். அதைக் குறித்து ஆசிரமவாசிகளுக்கு நான் தந்தி மூலம் அறிவித்திருக்கிறேன். யாருக்குச் சாத்தியமோ அவர்களெல்லாம் அங்கே செல்லுவார்கள். யார் யார் செல்லுவார்கள் என்பது பற்றி எனக்கு இன்னும் தகவல் கிடைக்கவில்லை. ஒவ்வொரு கூட்டத்திலும் நான் பீகாரைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். அதற்காகப் பணமும் நகைகளும் வசூல் செய்திருக்கிறேன். அவ்விஷயமாக எனது வேண்டுகோளுக்கு நல்ல பலன் கிடைத்திருக்கிறது. வசூல்களை எப்படி உபயோகிப்பது என்பது பற்றி நாங்கள் இன்னும் திட்டவட்டமாக எதுவும் தீர்மானம் செய்யவில்லை.

அப்துல் சலாம் இங்கே இருக்கிறார். அன்றே புறப்பட்டுச் செல்ல அவர் தயாராக இருந்தார். நான் அவரைத் தடுத்து ஒரு வாரத்திற்குப் பிறகு செல்லலாம் என்று கூறினேன். அதன்பின் அவர் குஜராத்திலுள்ள அவரது இடத்திற்குத் திரும்பிச் செல்லுவார். கங்காபென்னும் மற்றவர்களும் குணமடைந்து வருகிறார்கள்.

பிப்ரவரி கடைசியிலாவது அல்லது மார்ச் மாதத்திலாவது நான் பெல்காம் போய்ச் சேருவேன். இதன் மத்தியில் பீகாரிலிருந்து அழைப்பு வந்தால், பெல்காம் பிரயாணத்தை நிறுத்திவிட வேண்டியிருக்கலாம். எனது யாத்திரைத் திட்டத்தில் பெல்காமும்

சேர்க்கப்படுமாயின், சிறையிலுள்ள மகாதேவையும், மணியையும் பார்க்க நான் அனுமதி கோருவேன்.

சிறையிலுள்ள வேலபென்னின் எடையில் 25 பவுண்டுகள் குறைந்துவிட்டன. பிரேமாவும் லீலாவதி ஆஷரும் கூட சிறைக்குச் சென்றிருக்கிறார்கள். அவ்விருவருடைய உடல் நிலையும் திருப்திகர மாக இல்லை.

# 38

குன்னூர்,
பிப்ரவரி 5, *1934*

காலையில் முகம் கழுவி சுத்தம் செய்துகொண்டபின், முதல் வேலையாக இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

ஸ்ரீ அரவிந்தரின் ஆசிரமத்தில் குஜராத்தி காலனி சம்பந்தமாக அவரைப் பார்க்க நான் முயற்சி செய்யவேண்டியது அவசியமாக இருந்தது. தம்மைப் பார்க்க முடியாதென மறுத்து அவர் அனுப்பி யிருந்த பதில் மிகவும் மரியாதையாக இருந்தது. அவர் யாரையும் சந்திப்பதில்லை என்று எழுதியிருந்தார். மதிப்பிற்குரிய அன்னை யிடமிருந்து எனக்கு யாதொரு பதிலும் வரவில்லை. எனவே நான் புதுச்சேரிக்குப் போகவில்லை. போகாததைக் குறித்து நான் வருந் தவுமில்லை. இருந்தாலும் சந்திரசங்கரையும் பாபாவையும் அங்கே அனுப்ப உத்தேசித்திருக்கிறேன். 'அன்னை'யை, அன்னை என்று அழைப்பதால் நமக்கு நஷ்டம் எதுவுமில்லை. ஜனங்களை, அவர்கள் பெற்றுள்ள பட்டத்தைக் கூறி அழைக்கும் மரியாதை லண்டன் வட்ட மேஜை மகாநாட்டில் கூட அனுசரிக்கப்பட்டது. அந்த மகாநாட்டை 'காப்பி'யடிப்பது அழிவிற்கான நிச்சயமான வழி என்று நீங்கள் ஒருவேளை கூறுவீர்கள். இதில் கவனிக்க வேண்டி யது என்னவெனில், அந்த மகாநாடு கூட அந்த மரியாதையை அசட்டை செய்துவிடவில்லை என்பதுதான்.

தம்பிரானைப் பற்றி நான் முன்பே எழுதியிருக்கிறேன் என்று நினைக்கிறேன். அவர் மிகவும் எளிய முறையில் வாழ்கிறார். ஆடம் பரம் எதுவும் இல்லை. அவரது மாளிகை, அந்தப் பெயருக்கே தகுதி யற்றதாக இருக்கிறது. அங்கு நாற்காலி, ஸோபா முதலிய நவீன சாதனங்கள் அதிகமில்லை. அவர் மிகவும் மரியாதையுடன் நடந்து கொண்டார். அவர் அவரது புதல்வனையும் எனக்கு அறிமுகம் செய்துவைத்தார். எங்களுக்கு அவர் குடிக்க இளநீரும், அருந்து வதற்குப் பழங்களும் கொடுத்தார். அவருக்கு மிகுந்த திருப்தி ஏற் பட்டது. ஏனெனில் நாங்கள் கால நிலையைப்பற்றி மாத்திரமே பேசினோம். அவர் மிகவும் வயோதிகர். அவருக்கு இப்போது மறதி அதிகமாக இருப்பதாகக் கூறினர். அவர் நல்ல மனிதர். அவரைப் பார்த்துப் பேசியதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன்.

குன்னூர் மிகவும் அழகான ஓர் இடமாகும். உணவுப் பொருட்கள் மிகவும் மலிவாக இருக்கின்றன. இங்கே வசிக்க மாத்திரம் ஒருவருக்கு வீடு கிடைக்க வேண்டும். இந்தக் காலத்தில் இங்கு குளிர் அதிகமாக இருக்கிறதெனினும், தாங்க முடியாததாக இல்லை. இங்கே உள்ள பூர்வகுடி மக்களிடையே நமது ஊழியர்களில் சிலர் நல்ல தொண்டு செய்துவருகிறார்கள். பூர்வகுடி மக்கள் எனக்கு அழைப்பு அனுப்பியிருந்தனர். எனவே குன்னூரில் எட்டு நாட்கள் ஓய்வு எடுத்துக் கொள்ள என்னை அனுமதிக்க வேண்டுமென்று நான் யோசனை கூறினேன். அவ்விதமாயின் மலைவாசிகளான அந்த மக்களுக்காக நான் ஏதாவது செய்யக்கூடும் அல்லவா? அத்துடன் குவிந்துகிடக்கும் காகிதங்களையும் பார்த்து முடிக்கலாம். நாகேசுவர ராவுக்குச் சொந்தமான பங்களாவில் நான் வசிக்கிறேன். மோட்டார் இருக்கும் அறைக்கு மேலே என்னுடைய அறை இருக்கிறது. அது அழகாகவும் சுத்தமாகவும் இருக்கிறது. மோட்டார் இருக்கும் அறை கூட வசிப்பதற்கு உற்றதாக இருக்கிறது. இங்கு வந்ததைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். மலைப் பிரதேசங்களிலிருந்து ஒவ்வொரு நாளும் மக்கள் திரள் திரளாக வருகின்றனர். உதகையிலும், இங்கேயும், கோதகிரியிலும் அசாதாரணமான மாபெரும் கூட்டங்கள் நடந்தன. ஹரிஜனங்களிடமிருந்து வந்த தூது கோஷ்டியினர் என்னை வந்து சந்தித்தனர். அவர்களால் நிர்வாகம் செய்யப்படும் ஓர் அழகிய ஆசிரமத்தையும் நான் பார்த்தேன். மலைப் பிரதேசங்களிலுள்ள மக்கள் அதிகமாக மது அருந்துகின்றனர். அவர்களிடையே உள்ள தொழிலாளர்கள் நல்லவர்களாக இருக்கின்றனர்.

பீகாருக்கு, சிறந்த முறையில் உதவி கிடைத்துவருகிறது. எல்லா இடங்களிலிருந்தும் மக்கள் அதற்குப் பணமும், உடைகளும் அனுப்பி வருகிறார்கள். ஆசிரமவாசிகளிடையேயிருந்து பண்டிதர் (காரே), பார்னர்கர், ரவிஜிபாய் (நாதபாய் பட்டேல்), பால் (கலேல்கார்), சுவாமி தோத்ரே முதலிய மற்றும் பலர் ஏற்கனவேயே பீகாருக்குச் சென்றுவிட்டார்கள். மதுரதாஸ் அங்கு செல்லும் தறுவாயில் இருக்கிறார். மற்றவர்களும் தயாராக இருக்கிறார்கள். ஆனால் ராஜேந்திரபாபுவிடமிருந்து தகவல் வரும்வரையில் அவர்களைத் தடுத்து நிறுத்தி வைத்திருக்கிறேன். என்னைப் பற்றியும் தீர்மானிக்கும் பொறுப்பை ராஜேந்திரபாபுவிடமே விட்டிருக்கிறேன். கர்னாடகத்திற்கும் ஒரிஸ்ஸாவிற்கும் சென்ற பின், மார்ச் 26-ஆம் தேதி வாக்கில் பீகாருக்குச் செல்ல வேண்டும் என்பதே எனது சொந்த அபிப்பிராயமாகும். எல்லா இடங்களிலும் நான் பண வசூல் செய்து வருகிறேன். இந்தத் தடவை தாமிரக் காசுகள் தருவோரிடமே பெரும்பாலும் எனது தொடர்பு இருந்துவருகிறது. மத்தியதர வகுப்பைச் சேர்ந்த சிலரும் நன்கொடைகள் அளித்து வருகின்றனர். இருந்தாலும் ஏழைமக்களின் பெருந்தன்மைக்கு எல்லையே இல்லை. ஒவ்வொரு நாளும் மலைவாசிகளான பெண்கள் வந்து தங்களுடைய சேலையில் முடிந்து வைத்திருக்கும் சில்லறைக் காசுகளைக் கொடுக்கிறார்கள்.

தற்போது ராமச்சந்திரன் என்னுடனேயே இருக்கிறார். அவர் ஒரு கற்றறிஞர், நல்ல மனிதர்.

பா எழுதியுள்ள கடிதத்தின் ஒரு பிரதியை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் மணிக்கு எழுதும் போது பாவின் கடிதத்திலிருந்து எதைச் சேர்க்க முடியுமோ அதையெல்லாம் தயவு செய்து சேர்த்து எழுதுங்கள். பாவையும் மகாதேவையும் பார்க்க அனுமதி கோரி நான் முன்பே விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறேன். நான் தந்தியும் அனுப்பியிருக்கிறேன். இன்னும் ஒன்றிரண்டு நாட்களில் பதில் வரவேண்டும். மார்ச் 6-ஆம் தேதி நான் பெல்காம் போய்ச் சேருகிறேன்.

அப்பாஸ் சாகிபின் 81-ஆவது பிறந்த தின வைபவத்தைக் கொண்டாடினார்கள் என்று தெரிகிறது. காகா அதில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டார். அதைக் குறித்து கிழவருக்கு மிகவும் சந்தோஷம். அவரது வாழ்க்கை வரலாற்றை, கல்யாண்ஜி எழுதிவருகிறார். அதற்காக நமது நிபுணர்கள் எல்லோரும் அவர் இருக்குமிடத்திற்குச் சென்று, மறந்துபோன சம்பவங்களையெல்லாம் நினைவுபடுத்த அவருக்கு உதவி செய்தார்கள்.

நீங்கள் 'நேதி' முறையைப் பயிற்சி செய்து வருவதைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். கையினால் சுற்றப்பட்ட மெல்லிய துணித் திரி ஒருவேளை அதிக உபயோகமாக இருக்கலாம். அழுக்கை அது உறிஞ்சிக் கொள்ளும். பழைய வேட்டிகளிலிருந்து அதை எளிதில் செய்துவிடலாம். அத்துடன், மூக்கைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு பிராணயாமமும் அவசியமாகும். மலச் சிக்கலை நீங்கள் சீர்படுத்திக் கொண்டிருப்பது ஒரு நல்ல காரியமே. உணவில் நீங்கள் செய்துள்ள மாறுதல்கள் நல்ல பலனை அளிக்கும் என்பது நிச்சயம்.

வங்காளத்துக்குச் செல்லும் பிரச்னை இன்னும் சந்தேகமாகவே இருந்துவருகிறது. என்ன நிகழ்கிறது என்பதைப் பார்ப்போம்.

சில இடங்களில் பனி பயிர்களைப் பாழாக்கிவிட்டதாகத் தெரிகிறது. மற்ற இடங்களில் காலம் தவறி மழை பெய்திருக்கிறது. இச் சம்பவங்கள் பூகம்பத்துடன் நேரடியான தொடர்பு உள்ளவை என்று தோன்றுகிறது.

## 39

புதுப்பாளையம்,
செவ்வாய், பிப்ரவரி 13, 1934

இது ராஜாவின் ஆசிரமம். நாங்கள் சுமார் ஐம்பது நபர்கள் இங்கே இருக்கிறோம். ஆனால் எல்லோருக்கும் ஜாகை மிகவும் வசதியாக இருக்கிறது. காலநிலையும் எங்களுக்கு உதவியாக இருக்கிறது.

மூரியல் லெஸ்டரும் அவரது நண்பரும் கோயம்புத்தூருக்கு வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டார்கள். எனது யோசனையின்மீது அவர்கள் வங்காள கவர்னரைப் பார்ப்பதற்காக நேற்று புறப்பட்டுச் சென்ருர்கள். மிதுனபுரி* சம்பந்தமாக ஏதாவது செய்ய முடியுமா என்று பார்ப்பதற்காகவே அவர்கள் சென்றுள்ளனர். அதனால் பலன் ஏற்படுமென நான் நம்பவில்லை. எனினும், இப்படி ஏதாவது நாம் செய்தாக வேண்டும். அவ்விரு பெண்மணிகளும் ஞாயிற்றுக்கிழமை திரும்பிவருவார்கள். அம்துல் எனக்கு எதிரில் படுத்த படுக்கையாக இருந்து வருகிருள். அவளது உள்ளம் தங்கம் போன்றது, ஆனல் அவளது உடல் நிலையோ மிகவும் பலவீனமாக இருக்கிறது.

என் கருத்துகளைப் பற்றி தாகூர் விடுத்துள்ள கண்டனத்தை நீங்கள் நிச்சயமாகப் பார்த்திருப்பீர்கள். அதற்கு நான் 'ஹரிஜனில்' பதில் எழுதிக்கொண்டிருக்கிறேன். பின்னர் அவர் தமது கண்டனத்தை ரத்து செய்வது போல் ஓர் அறிக்கையும் வெளியிட்டிருக்கிருர். அத்தகைய அபிப்பிராயங்களை அவர் அவசரப்பட்டு எழுதிவிடுகிருர். பிறகு தம்மைத் தாமே திருத்திக் கொள்கிருர். இப்படியே நடந்துவருகிறது.

என்னை பீகாருக்கு வரும்படி ராஜேந்திரபாபு கேட்டிருக்கிருர். எனவே எந்த இடத்திலிருந்தாவது நான் பீகாருக்குச் செல்லவேண்டியிருக்குமென்று தோன்றுகிறது. எப்படியிருந்தாலும், 24-ஆம் தேதிக்கு முன் நான் புறப்படுவது சாத்தியமில்லையென்று அவருக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். இப்போது நான் அவரது பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

பாவிடமிருந்து வந்த கடிதத்தின் பிரதி ஒன்றை இத்துடன் அனுப்பியுள்ளேன். லக்ஷ்மிதாஸ் பாட்னுவுக்குச் சென்றிருக்கிருர். பாபுவிடமிருந்து இப்போதுதான் எனக்கு ஒரு கடிதம் வந்தது. ஆசிரமத்திலிருந்து பீகாருக்குச் சென்றுள்ள கோஷ்டியினர் மிகவும் மும்முரமாக வேலை செய்துவருகிருர்கள். பாலுவும் ரவிஜிபாயும் கூட்டாக ஒரு பண்டசாலையை மேற்பார்வையிட்டு வருகிருர்கள். பார்னர்கரும் ஸோமனும் பாட்னவில் இருக்கிருர்கள். மகன்பாய் விளம்பர இலாகாவில் இருக்கிருர். கடிதத்தை இப்போது நான் முடித்துவிட வேண்டும்.

பின் குறிப்பு: முக்கியமான ஒரு செய்தியை உங்களுக்கு அறிவிக்க நான் மறந்துவிட்டேன். மணியையும் மகாதேவையும் பார்ப்பதற்கு அனுமதி கொடுக்க சர்க்கார் மறுத்துவிட்டனர்.

---

* மிதுனபுரியில் ஒரு பிரிட்டிஷ் அதிகாரி கொலையுண்டதற்காக, அரசாங்கம் மிகவும் கடுமையான அடக்குமுறைகளைக் கைக்கொண்டு மக்கள் மீது வஞ்சம் தீர்க்க முற்பட்டதையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

## 40

கோடம்பாக்கம் (சென்னை),
பிப்ரவரி 19, 1934

இது மௌன தினமாகும். மாலைப் பிரார்த்தனைக்கு நாங்கள் தயாராகிக்கொண்டிருக்கிறோம். முன்பே என்னைச் சுற்றி வட்டமாகச் சிலர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களிடையே மூரியல் லெஸ்டரும் இருக்கிறார். இன்று நாங்கள் சென்னையின் எல்லையில் உள்ள ஓரிடத்தில் இருக்கிறோம். இது சிறிதும் அபிவிருத்தி செய்யப்படாத, ஏழைகள் வசிக்கும் ஓர் இடமாகும். இந்தப் புதிய இடத்தை கணேசன் ஏற்பாடு செய்திருக்கிறார். இங்கு ஏற்கனவேயே ஒரு வைத்தியசாலை அமைக்கப்பட்டிருக்கிறது; ஒரு தோல் பதனிடும் சாலையையும் ஆரம்பிக்கப்போகிறார்கள். நான்கு புறங்களிலும் ஒரு வராந்தாவும், நடுவில் ஒரு முற்றமும் இருக்கின்றன. இப்போதுதான் வெளியிலிருந்து சிறிதளவு தண்ணீர் கொண்டுவந்திருக்கிறார்கள்.

லெஸ்டர் வங்காளத்திற்குச் சென்று திரும்பிவந்துள்ளார்; கவர்னர் அவருடன் மூன்று மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்; அவருடன் சிற்றுண்டியும் அருந்தினர். கவர்னர் அவரிடம் மிகவும் மரியாதையாக நடந்து கொண்டார். எனினும் ஒழுங்கற்ற நடவடிக்கைகளைத் தாம் சகித்துக் கொண்டிருக்க முடியாதென்பதை அவர் மீண்டும் வற்புறுத்திக் கூறினர். இறுதியில், அவர்களுடைய சந்திப்பின் மூலம் யாதொரு பலனும் ஏற்படவில்லை.

நான் இப்போது பீகாருக்குச் செல்ல ஆயத்தம் செய்ய வேண்டும். கர்னாடகத்தில் யாத்திரையை முடித்ததும் நான் பீகாருக்குச் செல்ல வேண்டியிருக்கும். என்ன நடக்கப் போகிறது என்பதைப் பார்ப்போம்.

நேற்று நாங்கள் கிறிஸ்து—குல ஆசிரமத்தில் இருந்தோம். டாக்டர் பேடன் அங்கே வேலை செய்கிறார். ஏசுதாசன் அந்த ஸ்தாபனத்தின் தலைவராவார். அவர் ஓர் அருமையான இந்தியர், குமரப்பாவின் நண்பர். அது ஓர் அருமையான இடத்தில் இருக்கிறது. அவர்கள் ஏராளமான தொகை செலவு செய்து அங்கே ஒரு கிறிஸ்தவ ஆலயத்தை நிர்மாணித்திருக்கிறார்கள். அந்த இடத்தைப் பற்றி வர்ணிப்பதாயின், அங்கே இந்திய உடையில் கிறிஸ்தவ மதம் அலங்காரம் செய்யப்பட்டிருக்கிறது என்று கூறலாம்.

பீகாரைப் பற்றி நீங்கள் எழுதியுள்ள கடிதம் கிடைத்தது நீங்கள் சொல்லுவதை நான் ஒப்புக் கொள்கிறேன். அங்கே சென்றதும் என்னால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்கிறேன்.

ஸ்ரீனிவாச சாஸ்திரியின் மனைவி நோயுற்று ஆஸ்பத்திரியில் இருக்கிறார். அவரைப் பார்க்க நான் மதுரதாஸை அனுப்பினேன்.

நாளைக்கு என்ன செய்ய முடியும் என்பதை இனிமேல்தான் நான் பார்க்க வேண்டும்

நான் பார்க்க வேண்டிய காகிதங்கள் குவிந்து கிடக்கின்றன. 'ஹரிஜனு'க்கு நான் இன்னும் ஒரு வரிகூட எழுதவில்லை. கடவுள் என்னை எதைச் செய்ய விட்டாலும் அதை நான் செய்வேன்.

குஜராத்தில் பனி, நான் முதலில் நினைத்ததைக் காட்டிலும் மிகவும் அதிக நஷ்டத்தை உண்டாக்கியிருக்கிறதென்று தெரிகிறது. இருந்தாலும் தற்போது விவசாயிகளைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள் ?

நான் புதுச்சேரிக்குச் சென்றிருந்தேன். ஆனால் அங்கே யாரையும் சந்திக்க முடியவில்லை. அன்னையிடமிருந்து யாதொரு பதிலும் கிடைக்கவில்லை. மற்றோரிடத்தில் என்னைப் பார்ப்பதற்காக வந்த கோவிந்தபாய் எனக்கு முழுக் கதையையும் சொன்னார். ஆசிரமம் இன்னும் போலீஸ் கண்காணிப்பில் இருந்துவருகிறது. என்னை அங்கே வரவேற்றுப் பேசுவது அபாயகரமானது என்று கருதப் பட்டிருக்கலாம். ஆசிரம வாசிகளில் ஐம்பது சத விகிதம் பேர் குஜராத்தியர்கள். அவர்களுடைய தினசரி நடவடிக்கை முறை அநேகமாக இதுதான்: அவர்கள் எல்லோரும் காலை ஐந்து மணிக்கு எழுந்திருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் தனி அறை கொடுக்கப்படுகிறது. திலீப் ராய், கமலாதேவியின் கணவரான ஹரீன் சட்டோபாத்யாயா முதலியோர் உள்பட நாட்டின் பல் வேறு பாகங்களிலிருந்தும் வந்த 150 பேர்கள் அங்கே இருக்கிறார் கள். வருடத்தில் மூன்று தடவைகள்தான் ஸ்ரீ அரவிந்தர் தரிசனம் கொடுக்கிறார். அவரும் அன்னையும் தூங்குவதே இல்லை. தினந் தோறும் காலையில் 3-30 விருந்து 4-30 மணிவரையில் ஸ்ரீ அரவிந்தர் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு ஓய்வு எடுத்துக் கொள்கிறார், ஆனால் தூங்குவதில்லை. அவரை நாடுவோர் அவர் களுடைய தினசரிக் குறிப்பை உள்ளே அனுப்பிவிட வேண்டும். அவர்கள் எழுத்து மூலம் கேள்விகள் கேட்கலாம். அவர்களுக்கு ஸ்ரீயிடமிருந்தும் அன்னையிடமிருந்தும் தினந்தோறும் நான்கு தடவை கடிதங்கள் வருகின்றன. அவ்விருவரும் தினசரி சுமார் 200 கடிதங்கள் எழுதுகின்றனர். ஒரு கடிதத்திற்குக்கூட அவர்கள் பதிலளிக்காமல் இருப்பதில்லை. ஸ்ரீக்கு பல பாஷைகள் தெரியும். அவருடைய தெய்வீக செல்வாக்கினால் அவர் தம்மை நாடுவோர் முன்னேற்றம் அடையும்படி செய்கிறார். உதாரணமாக ஹரீன் சட்டோபாத்யாயா குடி வழக்கத்தை விட்டுவிட்டார். ஆசிரமத்தில் இறைச்சியும் மதுவும் விலக்கப்பட்டிருக்கின்றன.

இவ்விதமெல்லாம் கோவிந்தபாய் சொல்லுகிறார். அவர் களுடன் சேர்ந்து கொள்ளும்படியும் அவர் என்னை அழைக்கிறார். தற்போதைக்கு இந்தக் கடிதம் போதுமானது என்று நீங்கள் நினைக்கவில்லையா ?

## 41

செவ்வாய்க்கிழமை,
பிப்ரவரி 27, 1934

'தயாவதி' கப்பலில் நாங்கள் குண்டபூரிலிருந்து கார்வாருக்குச் சென்று கொண்டிருக்கிறோம். கப்பலிலிருந்தே இக்கடிதத்தை எழுதிக் கொண்டிருக்கிறேன். சந்திரசங்கர் அவரது ஊருக்குத் திரும்பி சென்றுவிட்டார். வால்ஜி என்னுடன் இருப்பதால், அவரை அனுப்பி வைப்பதில் எனக்குக் கஷ்டம் எதுவும் இருக்கவில்லை. 9-ம் தேதி நான் ஹைதராபாத்திலிருந்து புறப்பட வேண்டியவனாக இருக்கிறேன். 11-ம் தேதி பாட்னாவுக்குப் போய்ச் சேருவேன். அதன் பின் நான் மௌன விரதத்தை மேற்கொள்வேன். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் நான் அங்கே செல்லுவது அவசியமாகியிருக்கிறது. அந்தத் தேதிக்கு முன் செல்லுவது அசாத்தியமாகும். கர்னாடக யாத்திரைக்கான எல்லா ஏற்பாடுகளும் ஏற்கனவே செய்யப்பட்டுவிட்டன. பீகாரிலிருந்து மீண்டும் கர்னாடகத்திற்குத் திரும்பிவருவது எளிதாக இராது.

அம்பாலாலும், மிருதுளாவும் என்னை வந்து பார்த்தார்கள். என்மீது அவர்களுக்கு உள்ள அன்பே முற்றிலும் அதற்குக் காரணம். அம்பாலாலும் சரளாதேவியும் இங்கிலாந்துக்குச் செல்லுகிறார்கள். பாரதியும் சுஹிருத்தும் அங்கே தொலைவில் இருப்பதால் அவர்களுக்கு (அம்பாலாலுக்கும் சரளாதேவிக்கும்) இங்கே அமைதியாக இருக்க முடியவில்லை என்று தோன்றுகிறது. அவர்கள் ஓர் அற்புதமான தம்பதிகள் என்பதை நான் தெரிந்து கொண்டிருக்கிறேன். அவர்கள் தங்களுடைய குழந்தைகளுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கிறார்கள். குழந்தைகளிடம் அவர்கள் வைத்துள்ள அன்புக்கும் எல்லையே இல்லை.

லெஸ்டர் இலங்கைக்குச் சென்றுள்ளார். அகாதா ஹாரிசன் இங்கே வருவதற்காக மார்ச் 2-ஆம் தேதி லண்டனிலிருந்து புறப்படுகிறார்.

பா எழுதிய கடிதத்தின் ஒரு பிரதியையும், பன்சாலியின் தபால் கார்டையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். பன்சாலியின் கார்டை உங்களுக்காக வைத்திருந்தேன்.

என்னைப் பற்றி 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் என்ன எழுதியிருக்கிறார்கள் என்பதை நீங்கள் நிச்சயமாகப் பார்த்திருக்கலாம். அது முற்றிலும் இழிவான செயலாகும். அவ்விதம் பகிரங்கமாக எழுதியிருக்கிறார்கள். ஆனால் மிகவும் விஷத் தன்மைவாய்ந்த பிரசாரம் அந்தரங்கமாகவும் நடைபெற்றுவருகிறது. இத்தகைய பொய்யை இறுதியில் சத்தியம் வென்றுவிடும் என்ற நம்பிக்கையில் நான் அலுவல்களைச் செய்துவருகிறேன். இந்த நம்பிக்கை தான் வாழ்க்கை நெடுக என்னைத் தாங்கிவந்திருக்கிறது.

மணிக்கு நீங்கள் அடுத்த தடவை கடிதம் எழுதும்போது, அவளைப் பார்க்க எனக்கு ஏன் அனுமதி கிடைக்கவில்லை என்

பதைச் சொல்லுங்கள். நான் பெல்காமில் இரண்டு நாட்கள் இருப்பேன். இருந்தாலும் நான் மணியையோ அல்லது மகாதேவையோ பார்க்க முடியாது. இதை நினைக்க மிகவும் வேதனையாக இருக்கிறது. எனினும் நாம் திக்கற்றவர்களாக இருக்கிறோம்.

சுயேச்சையாக நிர்வாகம் செய்யப்பட்டுவந்த பாற்பண்ணை இப்போது ஹரிஜன் ஆசிரமத்தின் நிர்வாகத்திற்கு மாற்றப்பட்டிருக்கிறது. அதற்காக ஒரு தனி டிரஸ்ட் ஏற்படுத்தவும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

## 42

ரெய்பாக்,
*மார்ச் 8, 1934*

சமீப காலத்தில் உங்களிடமிருந்து யாதொரு கடிதமும் இல்லை. பிரார்த்தனைக்கு முன்பே இந்தக் கடிதத்தை எழுத நான் ஆரம்பித்திருக்கிறேன். நேற்று நாங்கள் பெல்காமை விட்டுப் புறப்பட்டோம். ரெய்பாக் ஒரு சிறிய கிராமம். எனினும் ரயில் பாதையில் இருக்கிறது. உங்களுக்குக் கடிதம் எழுதுவதில் இந்தத் தடவை தாமதம் ஏற்பட்டுவிட்டது. ஏனெனில் தயாபாய், சந்துபாய், துர்கா, ஜீவன்ஜி ஆகியோரும், மற்றவர்களும், பெல்காமில் நான் இருந்தபோது அங்கே வந்திருந்தார்கள். தயாபாய், மணியைச் சந்தித்தார்; துர்கா, ஜீவன்ஜி, பாப்லா இம் மூவரும் மகாதேவைச் சந்தித்தார்கள். மணியும் மகாதேவும் சௌக்கியமாகவே இருக்கிறார்கள். மகாதேவ் தமது வேலையில் ஆழ்ந்திருக்கிறார்.

நாசிக் சிறையிலுள்ள நிலைமையைப் பற்றிய முழு விவரங்களையும் சந்துபாய் எடுத்துக் கூறினார்.

'நேதி' முறையை உறுதியுடன் செய்து வாருங்கள். மெல்லிய துணியை உபயோகிப்பதில் அக்கறை எடுத்துக் கொள்ளுங்கள்.

லெஸ்டர் டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றுள்ளார். ஹாரிஸன் *16*-ஆம் தேதி இங்கு வந்து சேருவாரென எதிர்பார்க்கப்படுகிறது. பா எழுதிய கடிதம் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

*11*-ஆம் தேதி நான் பாட்னா போய்ச் சேருகிறேன். தக்கர் பாபாவும் அவரது கோஷ்டியினரும் டில்லிக்குச் செல்லுவார்கள். பாட்னாவுக்குச் சென்றபின் ஹரிஜன் யாத்திரையைத் தொடருவது சாத்தியமாக இருக்குமாயின், பின்னர் நான் அவரை வரும்படி அழைப்பேன்.

# 43

பாட்னு,
(புதன்கிழமை) மார்ச் *14*, *1934*

இன்னும் *4* மணி அடிக்கவில்லை. பாவுக்குக் கடிதம் எழுதி முடித்த பின், இந்தக் கடிதத்தை எழுத ஆரம்பித்திருக்கிறேன். நான் ஞாயிற்றுக் கிழமை இரவு பாட்னு போய்ச் சேர்ந்தேன். ஆறு மணிக்கு நாங்கள் மோதிஹாரிக்குப் புறப்பட வேண்டும். நேற்றைய தினம் சகாக்களுடன் பேசுவதில் கழிந்தது. வசூல்கள் மிகவும் திருப்திகரமாக இருக்கின்றன. இருந்தாலும் தேவையும் அதிகமாக இருக்கிறது. ஒவ்வொரு பைசாவும் புத்திசாலித்தனமாக செலவு செய்யப்படுகிறதா என்பதை நாம் நிச்சயம் செய்து கொள்ளவேண்டும். லக்ஷ்மிதாஸ் இப்போது அநேகமாக குண மடைந்துவிட்டார். அவரால் இப்போது வீட்டில் நடமாட முடிகின்றது.

ராஜேந்திரபாபுவின் உடல் நலம் இப்போது மிகவும் திருப்திகரமாகவே இருந்து வருகிறது. அவர் தன் முன்னுள்ள வேலை காரணமாக தனது நோயையே மறந்திருக்கிறார். நேற்று பாட்னு நகருக்குச் சென்றேன். அரசாங்கக் கட்டிடங்கள் பலவற்றிற்கும் மிகுந்த சேதம் ஏற்பட்டிருக்கிறது. இனி அவற்றை உபயோகிப்பதற்கில்லை. பாட்னுவில் மாத்திரம் ஒன்றரைக் கோடி ரூபாய்க்கு மேல் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அங்கு பூகம்பத்தினல் *80* பேர்கள் மாண்டனர், *400* பேர்கள் காயமடைந்தனர். அப்படியிருந்தும்கூட, இவை மற்ற இடங்களில் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களுடன் ஒப்பிடும்போது மிக மிக அற்பமானவையே. வைஸ்ராய் நிதிக்காக ஏற்பட்டுள்ள கமிட்டி வேறு, ராஜேந்திர பாபு நிதிக் கமிட்டி வேறு. என்ன செய்ய முடியும் என்பதை நாம் பார்க்கலாம்.

லெஸ்டரும் அவரது நண்பரும் டில்லியிலிருந்து நேற்று வந்தார்கள். அவ்விருவரும் என்னுடன் வர உத்தேசித்திருக்கிறார்கள். இருந்தாலும் அவரது நண்பர் சீக்கிரமாக பிரிட்டனுக்குத் திரும்பிச் செல்ல வேண்டியிருக்கும். லெஸ்டர் எல்லாவற்றையும் பரிசீலனை செய்ய விரும்புவதால் அவர் மாத்திரம் இங்கே தங்கியிருப்பார்.

அகாதா ஹாரிசன் *16*-ஆம் தேதி இந்தியாவில் வந்து இறங்குவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தக்கர்பாபாவும் அவரது கோஷ்டியினரும் ஹைதராபாத்தில் எங்களை விட்டுச் சென்றுவிட்டார்கள். பின்னர் நான் ஒரிஸ்ஸா யாத்திரையைத் தொடங்கும்போது அவர் திரும்பி வருவார். இன்னும் ஒரு மாத காலத்தில் நான் பீகாரிலிருந்து புறப்பட்டுச் செல்லுவது சாத்தியமாக இருக்குமென நினைக்கிறேன். நாங்கள் அலகாபாத் வழியாக வந்தோம். நாங்கள் அலகாபாத்தில் மூன்று மணி நேரம் தங்கியிருக்க நேர்ந்தது. எனவே நான் ஆனந்த பவனுக்குச்

சென்றேன். நான் சென்றது, சொரூபராணி நேருவுக்கு* ஆறுதலாக இருந்தது. சொரூப ராணியுடனும் கமலாவுடனும் நான் வெகு நேரம் இருந்தேன். இருவரும் படுத்த படுக்கையாக இருக்கிறார்கள்.

நான் இப்போது இதற்கு மேல் எதுவும் எழுத முடியாது. எனது கண்கள் மிகவும் களைப்புற்றிருக்கின்றன. தூங்குவதென்ற பேச்சிற்கே இடமில்லை.

## 44

*மார்ச் 22, 1934*

இப்போது புதன்கிழமை காலை 9 மணி ஆகிறது. அருகில் பீகார் கஷ்ட நிவாரணக் கமிட்டியின் கூட்டம் நடந்து கொண்டிருக்கிறது. எந்த விநாடியிலும் அவர்கள் என்னை உள்ளே வரும்படி கூறலாம். எனவே இந்தக் கடிதத்தை இப்போது நான் எழுதாவிடில், இன்று இதை முடிக்கவே முடியாது.

எல்லாம் திருப்திகரமாகவே இருக்கிறது. பத்திரிகைகளில் வெளிவந்துள்ள தீர்மானங்களை நீங்கள் பார்த்திருக்கலாம். மௌலானா, மாளவியாஜி, பிதான் ராய் ஆகியோரும் மற்றவர்களும் அங்கே இருந்தார்கள். கஷ்ட நிவாரணக் கமிட்டியின் அலுவல்களுக்காக நான் ஜம்னாலால்ஜியை இங்கேயே வைத்துக் கொண்டிருக்கிறேன். இல்லாவிடில் நானே இங்கு தங்கியிருக்கும்படி நேரும். இப்போது சாத்தியமானவரையில் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு ஹரிஜன் யாத்திரையில் ஈடுபடவே நான் விரும்புகிறேன்.

ராஜா காசநோயால் அவதிப்பட்டு வருகிறார். ஏப்ரல் மாத ஆரம்பத்தில் அவர் டில்லிக்குச் செல்லுவார். டில்லிக்குச் செல்லும் வழியில் சர்க்கா சங்கக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக இங்கே தங்குவார்.

7-ஆம் தேதி வாக்கில் நான் இங்கிருந்து அஸ்ஸாமுக்குப் புறப்பட்டுச் செல்லுவேன். அஸ்ஸாம் யாத்திரைக்கு இரண்டு வாரங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. அங்கிருந்து மீண்டும் பாட்னாவுக்கு வந்து சில நாட்கள் தங்கியிருந்துவிட்டு, பிறகு ஒரிஸ்ஸா செல்லுவேன். ஒரிஸ்ஸாவிலிருந்து மீண்டும் இங்கு திரும்பிவருவேன். அதன் பிறகு செய்யவேண்டிய அலுவல்கள் எதுவும் இன்னும் தீர்மானிக்கப்படவில்லை. ஆனால் மீதியுள்ள மாகாணங்கள் ஒவ்வொன்றிலும் சில நாட்களாவது யாத்திரை செய்ய வேண்டும் என்பது எனது விருப்பமாகும்.

---

* பண்டித ஜவாஹர்லால் நேருவின் தாயாரான சொரூப ராணியைப் பற்றியே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

# 45

முஸாபர்பூர்,
மார்ச் 29, 1934

இதை நான் இரவு 2-45 மணிக்கு எழுதிக் கொண்டிருக்கிறேன். எனவே தயவு செய்து கோபத்தை அடக்கிக் கொள்ளுங்கள். நான் கெடியாரத்தில் மூன்று மணிக்கு 'அலாரம்' வைத்தேன். ஆனால் அது 12 மணிக்கு முன்பே அடித்துவிட்டது. நான் எழுந்திருந்து, முகம் கழுவிச் சுத்தம் செய்து கொண்டபின் எழுதத் தொடங்கினேன். சிறிது நேரம் எழுதிய பின் நான் கெடியாரத்தைப் பார்த்தேன். அப்போது நடுநிசி என்பதை அது காட்டியது. எழுத வேண்டியவை குவிந்து கிடந்ததால், மீண்டும் படுக்கச் செல்ல எனக்குத் துணிவு ஏற்படவில்லை. எனவே நான் தொடர்ந்து எழுத முற்பட்டேன். 'ஹரிஜன்' கட்டுரைகளையெல்லாம் அநேகமாக முடித்தபின், நான் உங்களுக்கு எழுதத் தொடங்கினேன். இதற்குப் பின் பாவுக்கு எழுதுவேன்.

இந்தத் தடவை நீங்கள் என்னை நீண்ட காலம் காத்திருக்கும்படி செய்துவிட்டீர்கள். இனிமேல் ஒழுங்காக நீங்கள் கடிதம் எழுதுவீர்கள் என்று நம்புகிறேன். ஹாரிசன் மிகவும் தைரியசாலியான ஒரு பெண்மணி. லெஸ்டரும் அப்படியேதான். ஹாரிசன் அதிக மனப் பக்குவம் உள்ளவர். அவர் சிறிதும் கள்ளம் கபடமற்றவர், பணிவு உள்ளவர்.

நாங்கள் முஸாபர்பூரில் இருக்கிறோம். காலையில் பெல்சந்துக்குப் புறப்பட்டுச் செல்லுவோம். பியாரிலால் என்னுடன் இருக்கிறார். அவர் மேற்கொண்டு சிறிது காலமே இங்கிருப்பார். நாங்கள் நேற்று சப்ராவில் இருந்தோம். அங்கு டாக்டர் முகமதுவுடன் தங்கியிருந்தோம். முற்றிலும் நாசமடைந்த கட்டிடங்கள் எல்லா இடங்களிலும் தென்படுகின்றன. முகமது கலெக்டருடன் ஒத்துழைத்து பூகம்ப கஷ்ட நிவாரண வேலைகளை நன்கு செய்துவருகிறார். நிவாரண கமிஷனரை நான் பார்த்தேன். குஜராத்தில் வெள்ளம் ஏற்பட்டபோது நீங்கள் திட்டமிட்டுச் செய்தது போல் நாங்கள் ஒரு காலத்திலும் செய்ய முடியாது. இருந்தாலும் கூடியவரையில் நல்ல முறையில் கஷ்ட நிவாரண வேலைகளைச் செய்வோம். என்ன செலவு செய்தாலும், அது விவேகத்துடன் செலவு செய்யப்படும்.

ஜம்னலால்ஜி தற்போது இங்கேயே தங்கியிருப்பார். கதர் உற்பத்தியை மேற்பார்வையிடுவதற்காக லக்ஷ்மிதாசும் இங்கே இருப்பார். மற்றவர்களும் செய்யவேண்டிய அலுவல்கள் என்ன என்பதை ஜம்னலால் நிர்ணயிப்பார்.

புலாபாய் என்னை வந்து பார்த்தார். ஒரு வழக்கையொட்டி கயாவுக்குச் சென்றிருந்த அவர் திரும்பும் வழியில் இங்கே தங்கினார். நாங்கள் சிறிது நேரம்தான் பேசிக்கொண்டிருந்தோம்.

பெல்காம் சிறையில் மணி கடுமையான சோதனைக்கு உள்ளாகி வருகிருள் என்று தோன்றுகிறது. அது அப்படித்தான் இருக்க வேண்டும். கடவுள் அவளுக்குப் பாதுகாப்பாக இருப்பார். மே மாதம் பா விடுதலை செய்யப்படுவார்.

நான் ஜுலை மாதத்தில்தான் குஜராத்திற்குச் செல்ல முடியும் என்று தோன்றுகிறது. என்னைப் பற்றியோ அல்லது வேறு வெளி விஷயங்களைப் பற்றியோ சிறிதும் கவலைப்படாதீர்கள். அறிவை அடிப்படையாகக் கொண்ட பொழுது போக்காக நாம் கடவுளிடத்தில் நம்பிக்கை வைக்கவில்லை. நமக்கு அவர் சத்திய மானவர், அவர் ஒருவர்தான் சத்தியமானவர். நம்மை ஆட்டி வைக்கும் மகத்துவம் வாய்ந்த அந்த எஜமானர் கண் எதிரில் நாம் வாழ்கிருேம், நடமாடுகிருேம். எனவே அவர் தமது விருப்பப்படி நம்மை நடத்திச் செல்லுவார். இந்த கோஷ்டியில் உங்களையும் நான் சேர்த்துக் கொள்வது மிகையாகுமென்று நினைக்கவில்லை.

## 46

பாட்ணு,
ஏப்ரல் 6, 1934

தேசீய வாரம் இன்று ஆரம்பமாகிறது. இப்போது சற்றேறக் குறைய இரவு மணி 2-30 ஆகிறது. சமீப காலமாக, இதுதான் நான் வழக்கமாக எழுந்திருக்கும் நேரமாகும். இருந்தாலும் பகலில் சிறிது நேரம் தூங்கிவிடுவேன். என்னுடைய உடல் நலனைப் பற்றி விசாரித்து உங்களிடமிருந்து ஒரு தந்தி வந்தது. நான் அதற்குப் பதிலளித்திருக்கிறேன். அன்சாரி என்னைச் சந்தித்து பரிசோதனையும் செய்தார். உண்மையில் என் உடல் நலனில் எவ் விதக் கோளாறும் இல்லை என்பதுதான் அவர் கூறியதன் சாரமாகும். நான் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்றுதான் எல்லோரும் ஆலோசனை கூறுகிருர்கள். சாத்தியமானவரையில் அவ்விதமே ஓய்வு எடுத்து வருகிறேன் என்று உங்களுக்கு நான் உறுதிகூற முடியும். மற்றவைகளை நான் கடவுளிடம் விட்டு விடுகிறேன்.

அன்சாரி, டாக்டர் பிதான், புலாபாய் ஆகியோர் இங்குவந்து, பிறகு போய்விட்டார்கள். சட்டசபைகளுக்குச் செல்லுவதில் நம்பிக்கையுடையோர் யாவரும் அவ்விதமே செய்யவேண்டியது கடமை என்று அவர்களிடம் நான் எழுதிக் கொடுத்திருக்கிறேன். ஆனல் அவர்கள் சொந்த முறையிலேயே சட்ட சபைக்குள் செல்ல வேண்டும், காங்கிரசின் பெயரில் செல்லக்கூடாது. அதற்கு மேல் யாதொரு கட்டுப்பாடும் இராமலிருப்பதே சிறந்ததென நான் கருதுகிறேன்.

தீர்க்காலோசனை செய்த பின் நான் மேற்கொண்டுள்ள தீர் மானத்தை நீங்கள் அங்கீகரிப்பீர்களென நம்புகிறேன். தனித்த முறையில் சட்ட மறுப்பு செய்ய யாராவது விரும்பினல், அவர்

தமது சொந்தப் பொறுப்பில் அவ்விதம் செய்வது ஒழுங்கல்ல என்று நான் கருதினேன். எனவே சகாக்களுக்கு, அவர்களும் சட்ட மறுப்பைத் தள்ளி வைக்கவேண்டுமென யோசனை கூறியிருக்கிறேன். சட்ட மறுப்பை முதலில் நான் மாத்திரமே ஆரம்பிக்க வேண்டும். பின்னர் தகுதியான சமயம் என்று நான் கருதும் போது மற்றவர்களையும் சட்ட மறுப்பு செய்யும்படி அழைப்பேன். என் மீதுள்ள கவர்ச்சியினால் நேரடி நடவடிக்கை எடுத்துக் கொள்ளும் எவரும் சொந்த முறையில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவதாகக் கூறமுடியாது. அவ்விஷயமாக நீங்கள் ஓர் அறிக்கையைக் காணலாம். இம்முறையை நீங்கள் அறிந்து கொள்ள முடியாவிடில், நீங்கள் கவலைப்படாதீர்கள். அதைப்பற்றி நீங்கள் இன்னும் மேற்கொண்டு யோசித்துப் பார்த்த பிறகு, அது முற்றிலும் சரியே என்பதைக் காண்பீர்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

வித்தல்பாய் எழுதி வைத்துள்ள உயிலை நான் பார்த்தேன். அதில் கண்டுள்ள ஒவ்வொரு விஷயமும் ஒழுங்கான முறையில் இருக்கிறதென்றே தோன்றுகிறது. அதன் மூலம் போஸுக்கு ஏதாவது கிடைப்பதாயின், அவருக்குக் கிடைக்கட்டுமே என்பது தான் என் அபிப்பிராயமாகும். உங்களுடைய சக கைதி யார்?

## 47

*ஏப்ரல் 13, 1934*

இது உண்ணாவிரத தினமாகும்.* தேஜ்பூரிலிருந்து கௌஹாத்திக்குச் செல்லும் கப்பலின் மேல்தளத்தில் நாங்கள் எல்லோரும் படுத்துக் கொண்டிருக்கிறோம். இங்கே மழை காலம் முன்பே ஆரம்பமாகிவிட்டது. நேற்று இங்கு பெருமழை பெய்தது. ஆனால் இன்று கொஞ்சம் வெய்யிலாக இருக்கிறது. எனவே மேல் தளத்தில் பிரயாணம் செய்வது சகிக்கக் கூடியதாகவே இருக்கிறது. இப்போது மணி 9 ஆகிறது. நாங்கள் மத்தியானம் கௌஹாத்தி போய்ச் சேருவோம். என் உடல் நலம் நன்றாக இருக்கிறது. நான் போதிய ஓய்வு எடுத்துக் கொள்வதுடன், என் பலத்தை மீறிய அலுவல்களில் ஈடுபடுவதில்லை. டாக்டர்களின் ஆலோசனைக்கு இணங்க நாம் சிறிதும் வழுவின்றி நடந்து கொள்வதாயின், நாம் எப்போதும் படுத்த படுக்கையிலேயே இருந்து வர வேண்டியதுதான்!

அகமதாபாத்தில் மில் சொந்தக்காரர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே இப்போது ஏற்பட்டுள்ள தகராறில், மில் சொந்தக்காரர்கள் மீதுதான் குற்றம் என நான் நினைக்கிறேன். இதை அவர்களே ஒத்துக் கொள்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில்

*1919-இல் அமிருதசரஸில் உள்ள ஜாலியன்வாலா பாக்கில் பிரிட்டிஷ் அதிகாரிகள் செய்த படுகொலைகளின் நினைவாக நாடெங்கும் ஏப்ரல் 13-ஆம் தேதி உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டது.

கஸ்தூரிபாய் நடந்து கொண்ட விதம் அவருக்குப் பெருமை அளிப் பதாக இல்லை. மில் சொந்தக்காரர்களால் நிறைவேற்றப்பட்டுள்ள தீர்மானம் நியாயமற்றதாகவும், நகைக்கத்தக்கதாகவும் இருப்ப தால், அதைப் பற்றி ஏதாவது எழுத வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. நான் அவ்விதமே எழுதினேன்; கஸ்தூரிபாயை சாந்தமாகக் கண்டித்தேன். அந்தத் தீர்மானம் மறைமுகமான ஒரு மிரட்டலேயாகும். சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாக மிகவும் கஷ்டப்பட்டு உருவாக்கியுள்ள மத்தியஸ்த ஏற்பாட்டையே அந்த மிரட்டல் பாழாக்கியிருக்கும். ஆனால் என் கடிதத்தினால் பலன் ஏற்பட்டது. மில் சொந்தக்காரர்களுக்குள்ளேயே கருத்து வேற்றுமை இருந்துவருகிறது. எனவே சிமன்பாயும் சேகர்லாலும் என்னைப் பார்க்க வந்தார்கள். கஸ்தூரிபாய் வரவில்லை. ஏனெனில் அவர் ஜினிவாவுக்குச் செல்ல ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். பலமான ஆதாரம் இருந்தாலன்றி தொழிலாளர்களின் சம்பளத்தை ஒருபோதும் குறைக்கக் கூடாதென்று நான் யோசனை கூறினேன். லாபத்திற்கும் சம்பளத்திற்கும் பரஸ்பரம் தொடர்பை ஸ்தாபிக்க வும், குறைந்த பட்ச சம்பளத்தை நிர்ணயிக்கவும் அவர்கள் தயா ராக இருந்தால், அவர்களுக்கு உதவி புரிய நான் முயற்சிப்பதாக அவர்களிடம் கூறினேன். இந்த யோசனை அவர்களுக்குத் திருப்தியைக் கொடுத்தது. இருந்தாலும், அதை அமுலுக்குக் கொண்டுவருவதில் மற்ற முதலாளிகளின் அங்கீகாரத்தைப் பெறு வது கடினமாக இருக்குமென்று அவர்கள் கூறினர். அவர்கள் கூறியது சரிதான். இப்போது என்ன செய்ய முடியும் என்பதைப் பார்க்கலாம்.

நான் செய்துள்ள தீர்மானத்தைப் பற்றி நீங்கள் வாசித்திருக்க லாம். அவ்விஷயமாக உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள நான் இன்னும் ஆர்வமுடையவனாக இருக்கிறேன். நான் செய்துள்ள இரண்டு தீர்மானங்களும் சரி என்று நீங்கள் பாராட்டு வீர்கள் என்றே நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். அதைப் பற்றி எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. சத்தியாக்கிரகத்தின் தரத்தைக் குறைப்பதென்ற அபாயம் இப்போது எதுவும் இல்லை. சட்டசபைப் பிரவேசத்தை ஆதரிப்பவர்களை இனிமேல் கண்டிக்கக் கூடாது. அவர்கள் சட்டசபைகளுக்குப் போகட்டும். அவர்கள் தூய்மையாக இருப்பார்களாயின், சட்டசபைகளில்கூட பலன்தரத் தக்க காரியங்களைச் செய்ய முடியும்.

உங்களுக்கு 'ஹரிஜன்' வருவதில்லை என்பது விசித்திரமாக இருக்கிறது. நான் விசாரித்து வருகிறேன்.

மூக்கு வெகு நளினமான ஓர் உறுப்பாகும். எனவே அதைச் சீர் படுத்தவேணடும். அதை எப்படிச் சீர்படுத்த முடியும் என்று கூறுவது கடினமாகும். எனவே நீங்களே தான் சிந்தித்து ஒரு வழியை மேற்கொள்ள வேண்டும். சில சமயங்களில் டாக்டர்களே யாதொரு உதவியும் செய்ய முடியாதவர்களாக இருக்கிறார்கள். நோயாளியே ஒரு வழியைக் கண்டு பிடித்தபின் நிலைமை சீராகி

விடுகிறது. பிராணாயாமமும், சிற்சில ஆசனங்களைப் பயிற்சி செய்வதும் பலன்தரத்தக்கவையாக இருக்கலாம். சுத்தமான காற்றோட்டம் உள்ள இடத்தில் பிராணாயாமப் பயிற்சி செய்ய வேண்டும். எனவே திறந்த வெளியில் அதைச் செய்வதுதான் சிறந்தது. சிறையில் நீங்கள் தூங்குவதற்கான ஏற்பாடுகளைப் பற்றி நான் உங்களைக் கேட்கவே இல்லை. உங்களைத் தனி அறையில் அடைத்து வைக்கவில்லை என்றே எண்ணுகிறேன்.

மணியிடமிருந்து வந்த கடிதம் ஒன்றை தயாபாய் அனுப்பி வைத்தான். அதில் தைரியம் ததும்புகிறதெனினும், அது மனத்தை உருக்குவதாக இருக்கிறது.

## 48

ஜோர்ஹாட், அஸ்ஸாம்,
ஏப்ரல் *18, 1934*

பிரார்த்தனை நேரம் நெருங்கிவிட்டது. பட்சிகள் பாடிக்கொண்டிருக்கின்றன. இந்தப் பகுதிகளில் சீக்கிரமாகப் பொழுது விடிகின்றது. ஐந்து மணிக்கே சந்தி வெளிச்சம் ஏற்பட்டு விடுகின்றது.

பா எழுதிய கடிதத்தின் பிரதியொன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

முழு நிலைமையையும் இப்போது நீங்கள் அறிந்து கொண்டிருக்க வேண்டும். எனது தீர்மானத்தின் பலன் முற்றிலும் நன்மையளிப்பதாகவே இருக்கிறது என்பதை நான் காண்கிறேன். நான் அந்த ஒரே தீர்மானத்துக்குத்தான் வந்திருக்க முடியும் என்பதை இப்போது உணர்கிறேன். அத்தீர்மானம் அவசரப்பட்டு செய்யப்படவில்லை, காலம் கடந்தும் செய்யப்படவில்லை. அது உற்ற சமயத்திலேயே செய்யப்பட்டிருக்கிறது. எனினும் விளைவுகளைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? பலன்களைப் பற்றிக் கவலைப்படுவது, நாம் கீதையை வாசித்துவருவதற்குப் பொருந்தாது. விளைவுகள் தம்மைத்தாமே கவனித்துக் கொள்ளும். வெளிக்கு நன்மைபோல் தோன்றுவது மோசமானதாக இருக்கலாம்; வெளிக்குத் தீமைபோல் தோன்றுவது உண்மையில் நன்மையளிப்பதாக இருக்கலாம்.

ராஞ்சியில் ஒரு கூட்டம் நடக்கும். அப்போது என்னால் முடிந்த வரையில் ஒரு வழியைக் காட்டுகிறேன். பார்லிமெண்டு அலுவல்களில் ஈடுபடுவோருக்கு சுதந்திரமாக நடந்து கொள்ள உரிமை அளிக்க வேண்டியது நமது கடமை என்று எனக்குத் தோன்றுகிறது. தினந்தோறும் சட்டசபைகளிலேயே மனநாட்டம் உள்ளவர்களை, உண்மையிலேயே சட்டசபைகளில் பிரவேசிக்க அனுமதிக்க வேண்டியது நியாயமேயாகும். அப்போதுதான் அவர்கள், அவர்களுடைய நடவடிக்கையினால் ஏற்படும் பலாபலன்களை உணர்ந்து கொள்ள முடியும். ஜிலேபியைப் பற்றி எப்போதும்

கனவு கண்டுவரும் ஒருவர், அதைத் தின்று அதன் ருசியைத் தனக்குத்தானே அறிந்து கொள்வதுதான் சிறந்ததென நீங்கள் நினைக்கவில்லையா? மதுரதாஸ், பெரின் ஆகிய மற்றவர்களும் அநேகமாக வருவார்கள். ராஜாவும் வருவாரென நம்புகிறேன்.

தரும சிந்தனையுடையவரான பியர் ஸெரஸோல் ஜினிவாவிலிருந்து இங்கு வந்து சேருவார். அவரே திறமை வாய்ந்த ஓர் இஞ்சினீர். இயற்கை உற்பாதங்கள் நேர்ந்தவிடத்திற்கெல்லாம் சென்று உதவி புரிவதையே அவர் தமது தொழிலாகக் கொண்டிருக்கிறார். அவர் 25-ஆம் தேதி பம்பாயில் வந்திறங்கி பீகாருக்குப் புறப்பட்டுச் செல்லுவார் மதுரதாஸ் அவரைச் சந்தித்து இங்கே அழைத்து வருவார், அல்லது ராஞ்சிக்கு அவரை அனுப்புவார். ஹிக்கின்பாதமும் இங்கே வந்திருந்தார். அவரும் உதவி செய்வதாக வாக்களித்திருக்கிறார். ஹாரிசனும் லெஸ்டரும் பாட்னாவில் என்னைச் சந்திப்பார்கள். அவ்விருவரும் கல்கத்தாவுக்குச் சென்றிருந்தார்கள். அவர்கள் கடுமையான உழைப்பாளிகள், தூய்மையானவர்கள், தைரியசாலிகள். ஆனால் அவர்களுடைய குரல், கேட்பாரற்று வனாந்தரத்தில் எழுப்பிய குரலாக இருக்கிறது.

உபயதுல்லாவுக்காக* நான் மறைமுகமாக முயற்சி செய்துள்ளேன். அது பலனைக்கொடுத்து வருகிறது. அவர் அதிலிருந்து உயிர்தப்புவாரென்றே நம்புகிறேன்.

அகமதாபாத்திலுள்ள குழந்தைகளை ஒரு விதமான விசித்திர நோய் தாக்கிவருவதாகத் தெரிகிறது. சினிமாதான் அதற்குக் காரணம் என்று சிலர் கூறுகிறார்கள். அவ்விதம் இருக்குமாயின், அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. அது மூளைக்கும் கண்களுக்கும் மிகுந்த கேட்டை விளைவிப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

ஊருக்குச் சென்றிருந்த சந்திரசங்கர், உடல் நிலை குணமடைவதற்கு முன்பே அவசரப்பட்டுத் திரும்பிவந்துவிட்டார். அவர் மீண்டும் நோய்வாய்ப்பட்டதால், அவரைத் திருப்பி அனுப்பிவிட்டோம். இந்தப் பிரயாண சிரமத்தை அவரால் தாங்க முடியவில்லை என்பது தெளிவாகும்.

கமலா நேருவும், சொரூப ராணியும் வைத்திய சிகிச்சைக்காக கல்கத்தாவுக்குச் சென்றிருக்கிறார்கள்.

---

*உபயதுல்லா, டாக்டர் கான்சாகிபின் இரண்டாவது குமாரர். முல்டான் சிறையிலிருந்து தம்மை மாற்றவேண்டும் என்பதற்காக அவர் அப்போது உண்ணாவிரதம் இருந்துவந்தார்.

## 49

முஸாபர்பூர்,
ஏப்ரல் *23, 1934*

உங்களுடைய இரண்டு கடிதங்களும் கிடைத்தன. முகம் கழுவி சுத்தம் செய்து கொண்டு நான் இப்போதுதான் எழுத ஆரம்பித்திருக்கிறேன். இப்போது மணி *3-40*. எனது பழக்க வழக்கங்களில் இது ஓர் அபிவிருத்தி என்று நீங்கள் கருதுவீர்களென நம்புகிறேன். நாங்கள் முஸாபூரிலுள்ள கோகலே புரியில் இருக்கிறோம். நாங்கள் அஸ்ஸாமிலிருந்து நேற்றிரவு *10-30* மணிக்கு இங்கு வந்து சேர்ந்தோம். நகரை அடுத்துள்ள இந்தப் புதிய பிரதேசத்திற்கு கோகலேயின் பெயரை வாஜபாய் சூட்டியிருக்கிறார். நான் எனது மௌன விரதத்தை முடித்த பின் அதைத் திறந்து வைக்கவேண்டுமென ஏற்பாடாகியிருக்கிறது.

வால்ஜிக்கு உடல் நலம் திருப்திகரமாக இல்லை. எனவே இங்கே வந்ததும் நேராகப் படுக்கச் செல்லாமல் டாக்டரை அழைத்துவந்தேன். நடுநிசிக்குத் தான் படுக்கச் சென்றேன். என்னைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். என் உடல் நலனைக் குறித்து நான் மிகவும் ஜாக்கிரதையாக இருந்துவருகிறேன். எப்படியோ போதிய அளவு தூங்கிவிடுகிறேன்.

இந்த நடவடிக்கையின் அவசியத்தை நீங்கள் உணர்ந்து கொள்ள அதிக காலம் ஆகாது என்று எல்லோரிடமும் கூறி வந்தேன். எனவே ஒன்றும் புரியவில்லை என்று நீங்கள் கூறுவதைக் கேட்டு நான் ஆச்சரியமடைந்தேன். நீங்கள் எழுதும் கடிதங்களிலிருந்து உங்களுடைய மனவேதனையை என்னால் அறிந்து கொள்ள முடிகிறது. சிறைக்கு வெளியிலுள்ள எவரும் உங்களைப்போல் வேதனைப்படவில்லை என்று தெரிகிறது. ஜவாஹர்லாலின் நிலைமையும் உங்களைப் போலவேதான் இருக்கிறது. அவரும் ஒரு விநாடியில் விஷயத்தைப் புரிந்து கொள்வார் என்றே நினைத்தேன். சிறைக்கு உள்ளே இருப்பவர்கள் வெளியில் நிகழும் சம்பவங்களைப் புரிந்து கொள்ள முடியாது என்ற என்னுடைய கருத்து உங்கள் விஷயத்திலும் உண்மையாகியிருக்கிறதா; அல்லது நான்தான் தவறு செய்துவிட்டேனே? நான் அப்படி நினைக்கவில்லை. ஏனெனில் அந்தத் தீர்மானம் முற்றிலும் சரி என்பதை நான் தெளிவாகக் காண்கிறேன். ஏற்கனவேயே புனாவில் அந்த எண்ணம் எனக்கு ஏன் ஏற்படவில்லை என்று கேட்பதால் பலனில்லை. அப்போது அதற்கு உரிய நேரம் வரவில்லை. அப்போது இருந்த நிலைமைக்கு புனாவில் என்ன செய்தோமோ அதுதான் சரியாகும். தற்போதுள்ள நிலையில் இப்போது என்ன செய்திருக்கிறோமோ அதுதான் சரி. இந்தத் தீர்மானத்திற்கு நாம் வராவிடில், நமது லட்சியத்திற்கு மிகுந்த பாதகம் ஏற்பட்டிருக்கும்.

இடையூறுகள் இருக்கத்தான் செய்கின்றன. அவை எதுவும் எனது கவனத்திலிருந்து தப்பிவிடவில்லை. நாம் அவற்றைச்

சமாளித்துவிடுவோம். இப்போது மேற்கொண்டுள்ள முறை யால் மக்களுக்கு நன்மையே ஏற்பட்டிருக்கிறது; அதனுல் இன்னும் அதிக நன்மையே ஏற்படும். ஒத்துழையாமையில் ஈடுபட்டுள்ள விவசாயிகளுக்கு விஷயங்களை விளக்கிக் கூறுவது சாத்தியமேயாகும். நான் கொடியைக் கீழே இறக்கியிருந் தால், யாதொரு பலனும் ஏற்பட்டிராது. இறுமாப்பு எதுவும் இதற்குக் காரணமென்று நீங்கள் கனவில் கூட நினைக்க மாட்டீர்கள் என்பது நிச்சயம். நீங்கள் கைதியாக இருப்ப தால், எல்லா வாதங்களையும் இங்கே கூறிக் கொண்டிருப்பது முடி யாத காரியம். எனவே இப்போது நான் நிறுத்திக் கொள்கிறேன். பொறுமையின் பலன்கள் இனிமையானவை. எனவே பொறுமை யாக இருங்கள். இறுதியில் எல்லாம் சீராகிவிடுவதை நீங்கள் காண்பீர்கள்.

சுயராஜ்யக் கட்சிக்கு மீண்டும் உயிர் கொடுப்பதை அறிந்து கொள்வது முற்றிலும் எளிது. அது மீண்டும் உயிர் பெற வேண்டி யது மிக மிக அவசியமாகும். பல அடிகள் பெற்ற பின்பும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு கட்சிக்கு காங்கிரஸில் இடம் இருக்கவேண்டும் என்பதே எனது கருத்தாகும். இப்போது மாத் திரமல்ல, எதிர்காலத்திலும் எப்போதுமே இது அவசியம். சுயநலம், திறமையின்மை ஆகிய சங்கடங்கள் இருக்கின்றன என் பது உண்மையே. எனினும் ஏற்கனவே ஸ்தாபிக்கப்பட்ட ஒன்றை நீங்கள் அகற்றிவிட முடியாது. நீங்கள் அதைச் சீர்திருத்த லாம் அல்லது கட்டுப்படுத்தலாம். அதற்கு அதிகமாகவோ அல்லது குறைவாகவோ எதுவும் செய்ய முடியாது. நான் அவர்களைத் தூண்டிவிட்டேன் என்று கூட நீங்கள் கூறலாம். முதல் அடி எடுத்து வைக்க அவர்கள் விரும்பினர் என்ருலும், அவ்விதம் செய் வதற்கான தைரியம் அவர்களுக்கு இல்லை. நான் புனுவில் கூறிய வெறும் யோசனை இப்போது நடைமுறையில் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. சட்டசபைப் பிரவேசத்தை காங்கிரஸ் ஆதரிக்காமல் இருக்கும்படி செய்வதில் நாம் வெற்றி பெற்றிருந்தோமாயின், அப் போது நிலைமை வேறுவிதமாக இருந்திருக்கும். ஆனுல் அவ்விதம் செய்வது, அப்பட்டமான நிர்ப்பந்தமாக இருந்திருக்கும்.

பூல்சந்த் பாபுஜி ஷாவின் மரணத்தைப் பற்றிய தந்தி நேற்றுத்தான் எனக்குக் கிடைத்தது. மிகவும் நல்ல ஊழியர் ஒருவர் போய்விட்டார். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள குறிப்பு நரசிங்பாய் ஈசுவர்பாய் பட்டேலினுல் தயாரிக்கப்பட்டதாகும். அதை நீங்கள் மகிழ்ச்சியுடன் வாசிப்பீர்கள் என்று நினைக்கிறேன். அவர் தூக்கத்தில் மரணமடைந்ததாக நரசிங்பாய் எழுதியுள்ளார். அவர் கடைசி நாள்வரையில் வேலை செய்துகொண்டிருந்தார். அவ ருக்கு யாதொரு நோயும் இல்லை. இரவில் கெடியாரம் நின்று விட்டது, அவ்வளவுதான். அவர் சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்று சந்திரசங்கர் பாண்டியா என்னைக் கேட்கிருர். நாம் என்ன செய்ய வேண்டும்? நினைவுச் சின்னங்களுக்கான காலம் இது அல்ல. உங்களுக்கு ஏதாவது யோசனை தோன்றுகிறதா?

## 50

ராஞ்சி,
மே 3, 1934

உங்களுடைய இரு கடிதங்களும் கிடைத்தன. உங்களுக்கு இருந்துவரும் வேதனையை நான் அகற்றிவிட முடியாது. காலம் தான் அந்த வேதனையைச் சாந்தப்படுத்தும். சிறைகளுக்குச் செல்லு வதன் மூலம் நாம் கஷ்டங்களிலிருந்து தப்பிவிட முடியாது. நான் மக்களிடம் கொடுத்துள்ள ஆயுதத்தை* நான் பறித்துக் கொண்டு விடவில்லை. அதன் உபயோகத்தை ஒத்திவைத்திருக்கிறேன். அதன் சக்தியை நிரூபிக்கவே அவ்விதம் செய்திருக்கிறேன். அனு பவத்தின்மீது மாத்திரமே அதை நிரூபிக்க முடியும். அதைப் பார்க்க உயிர்வாழ்வோர் அதிர்ஷ்டசாலிகள் ஆவர்.

## 51

சகிகோபால்,
மே 10, 1934

இப்போது இரவு மணி ஒன்று. நான் விழித்துக் கொண்டிருக் கிறேன். இதைக் குறித்து அதிர்ச்சியோ, மன வேதனையோ அல் லது கவலையோ அடையாதீர்கள். எனக்கு இப்போது சிறிதும் களைப்பு இல்லை. இது கடவுளின் செயல். அவருக்கு எல்லாம் சாத் தியமே. தரையில் விரிக்கப்பட்டுள்ள ஒரு வைக்கோல் மெத்தை யில் நான் படுத்துக் கொண்டிருக்கிறேன். நாங்கள் சந்தன்பூர் என்ற ஒரு கிராமத்தில் தங்கியிருக்கிறோம். கால் நடையாக நாங் கள் யாத்திரையைத் தொடங்கி இன்றோடு மூன்று நாட்களா கின்றன. பூரியிலிருந்து சுமார் பத்து மைல் தூரத்தில் நாங்கள் இருக்கிறோம். நேற்று நாங்கள் பூரியிலிருந்து புறப்பட்டோம். தண்டி யாத்திரைக்கு நீங்கள் திட்டமிட்டதுபோல், இந்த யாத் திரையை தக்கர்பாபா திட்டமிட்டிருக்கிறார்.

பிரயாணத்தில் எனக்கு முற்றிலும் வெறுப்பு ஏற்பட்டு விட்டது. ரயில் வண்டிகளிலும் மோட்டார்களிலும் பிரயாணம் செய்வது எனக்கு எவ்வளவு வேதனையைக் கொடுத்தது என்பதை, நான் பூரியில் விளக்கிக் கூறினேன். இத்தகைய பிரயாண முறையை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியத்தை நானும், தக்கர்பாபாவும், மற்றவர்கள் எல்லோரும் உணர்ந்தோம். எனினும் விளைவுகளை எண்ணித் தயங்கிக் கொண்டிருந்தோம். ஆனால் இறுதியில் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டு அந் தத் தீர்மானத்திற்கு வந்தோம். பூரியில் ஒரு கூட்டத்திற்கு நடந்து செல்லுவதன் மூலம் நான் அதை செயலுக்குக் கொண்டுவந்தேன். அதன் பலனாக, வைதிக கோஷ்டியினுடைய எதிர்ப்பின் தீவிரம்

*சத்தியாக்கிரக ஆயுதத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

குறைந்துவிட்டது. எனவே கூட்டங்களில் தொந்தரவு கொடுக்க அரை மனத்துடனேயே முயற்சிகள் நடந்தன. நேற்று காலை நாங்கள் புறப்பட்டபோது கால்நடையாக யாத்திரை செய்கிறோம் என்ற செய்தி பரவவில்லை. ஆனால் நாங்கள் தங்கிய கிராமத்தில் நேரம் ஆக ஆகக் கூட்டமும் அதிகமாயிற்று. நாங்கள் சந்தன்பூருக்குச் சென்ற போது, ரஸ்தாவில் ஆடவர்களும் பெண்களும் நிறைந்திருந்தார்கள். நாங்கள் அங்கு சென்ற சிறிது நேரத்தில் நடந்த கூட்டத்திற்கு எல்லாத் திசைகளிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர். கிராமத்தின் எல்லையில் நாங்கள் வெட்ட வெளியில் படுத்துக் கொண்டிருக்கிறோம். எனக்கு இலைகளினாலானதுபோல் தோன்றும் ஒரு குடிலே அமைக்கப்பட்டிருக்கிறது. புதிதாக வந்துள்ள ஹரக்சந்த், ஜீவராம், பூர்பாய் இவர்களைத் தவிர, எங்கள் கோஷ்டியில் பழைய நபர்களே இருந்து வருகிறார்கள். கோபபந்து செளத்ரியின் மனைவி, சோனாமணி ஆகியோருடன் உள்ளூர்த் தலைவர்கள் யாவரும் இங்கேயே இருக்கிறார்கள். ஒரிஸ்ஸாவில் செய்யப் போகும் யாத்திரைக்கு இது ஓர் உதாரணமாகும். ஒரிஸ்ஸாவில் மேற்கொண்டிருக்கும் கால்நடை யாத்திரையை முடிக்க என்னை அனுமதிக்க வேண்டும் என்றும், ஆகையால் மற்ற இடங்களுக்கு என்னை வற்புறுத்தி அழைக்கக் கூடாது என்றும் மற்ற மாகாணங்களை நான் ஏற்கனவேயே கேட்டுக் கொண்டிருக்கிறேன். மழை காலத்தில் என்ன செய்வது என்பது பற்றி நாம் யோசிக்க வேண்டும். அப்போது கால்நடை யாத்திரை சாத்தியமில்லையாயின், மழைகாலம் முடியும்வரையில் ஒரே இடத்தில் இருப்பதையே நான் விரும்புவேன். சம்பவங்கள் எவ்விதம் உருவாகிவருகின்றன என்பதைப் பார்ப்போம். பாட்னாவில் மற்ற ஊழியர்களையும் நான் பார்க்கும்போது, அவ்விஷயமாக அதிகமாகத் தெரிந்துகொள்வேன். அவர்களுக்கு இதை விளக்கிக் கூற முயற்சி செய்கிறேன். புதிய நடவடிக்கையைப் புரிந்து கொள்வதில் உங்களுக்குக் கஷ்டம் எதுவும் இராதென்றே நினைக்கிறேன். என்னுடைய நடவடிக்கைகள் பலவற்றிற்கும் உங்களுடைய அங்கீகாரத்தைப் பெற வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் என்னைத் திருப்தி செய்வதற்காக மாத்திரம் நீங்கள் அவற்றை அங்கீகரிக்கக் கூடாது.

நாங்கள் ராஞ்சியை விட்டுப் புறப்பட்டதும் ஏற்பட்ட மோட்டார் விபத்தைப் பற்றி நீங்கள் பத்திரிகைகளில் வாசித்திருக்கலாம். “இறைவனால் பாதுகாக்கப்படுவோருக்கு அபாயம் விளைவிக்க யார்தான் துணிவார்?” என்று தீரோ பகத் கேட்டார். வாழ்க்கை முழுவதும் அவர் பெற்ற அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டே அவர் அவ்விதம் கேட்டார்.

## 52

சம்பபூர்ஹாத் (உத்கல்),
மே 22, 1934

நேற்று முன்தினம் உங்களுடைய கடிதம் எனக்குக் கிடைத்தது. இப்போது விடியற்காலம் 3 மணி.

சோஷலிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த மசானி எங்களுடன் இருந்துவிட்டு இன்றுதான் புறப்படுகிறார். ஒரிஸ்ஸா யாத்திரை 12-ஆம் தேதி பாலசூரில் முடிவடையும். எனவே அதன் பின் கால் நடையாக யாத்திரை செய்வதை நிறுத்திவிட நான் தீர்மானித்திருக்கிறேன். ஒவ்வொரு மாகாணத்திலும் சில நாட்கள் ஓரிடத்தில் தங்கவும் உத்தேசித்திருக்கிறேன். நான் 14-ஆம் தேதி பம்பாய்க்கும், 17-ஆம் தேதி புனாவுக்கும் செல்லுகிறேன். அங்கிருந்து 26-ஆம் தேதி அகமதாபாத்திற்குப் புறப்படுகிறேன். அகமதாபாத்திலிருந்து சிந்துவிற்குச் சென்று அங்கே மூன்று நாட்களும், பிறகு லாகூரில் மூன்று நாட்களும் தங்கியிருப்பேன். பின்னர் லாகூரிலிருந்து ஐக்கிய மாகாணத்திற்குச் செல்லுகிறேன். யாத்திரைத் திட்டத்தின் பிரதி ஒன்றை இத்துடன் அனுப்பியுள்ளேன். பின்னர் இதில் திருத்தம் செய்யப்படலாம்.

பா விடுதலை செய்யப்பட்டிருக்கிறாள். அவள் வார்தாவுக்கும் டில்லிக்கும் சென்றுவிட்டு எங்களுடன் வந்து சேருவாள்.

வெள்ளக் கஷ்ட நிவாரண நிதியிலிருந்து, ஹரிஜனங்களுக்கு ஏற்பட்டுள்ள அதுபோன்ற துன்பத்திற்குப் பரிகாரமாக ரூ. 5000 செலவு செய்ய விரும்பினேன். ஆனால் அந்த நிதியிலிருந்து தொகை எடுக்கக் கூடாது என்பது உங்களுடைய கட்டளை என எனக்கு அறிவிக்கப்பட்டது. எனவே அதிலிருந்து ரூ. 1000 தான் நான் எடுத்தேன். அதிலிருந்து மேற்கொண்டு தொகை எடுக்கு முன் உங்களைக் கலந்தாலோசிக்க வேண்டுமென நினைத்தேன். அவ்விஷயமாக உங்களுக்கு ஏதாவது ஞாபகம் இருக்கிறதா என்பதை தயவு செய்து எனக்கு அறிவியுங்கள். அது எப்படியாயினும், இவ்விஷயத்தில் உங்களுடைய விருப்பம் என்ன?

நரன்தாசுக்கு மூக்கிலிருந்து உதிரம் கொட்டியதால், அவர் சிறையிலிருந்து வெளியே வந்துவிட்டார். அவர் ஒரு கிழவரைப் போல் இருக்கிறார். சுவாமியும் சுரேந்திராவும் கூட நோயால் துன்பத்திற்குள்ளாயினர். சிறையில் கஞ்சியும் எண்ணெயும் மாத்திரம்தான் கிடைக்கின்றன. அவை போதாது. பாலோ அல்லது தயிரோ இராமல் ஒருவர் காலம் தள்ள முடியாது என்றே தோன்றுகிறது.

மணிலாலின் மனைவிக்கு பிள்ளைக் குழந்தை பிறந்திருக்கிறது. குடும்ப விருட்சம் இவ்விதம் வளர்ந்து வருவதில் எனக்கு இப்போதெல்லாம் அக்கறையே இல்லை. அவ்விதம் வளர்ந்து வருவது எனக்கு வருத்தத்தைத்தான் கொடுக்கிறது. இயற்கையை யாரும்

தடுக்க முடியாது. எனினும் நோயைக் காட்டிலும் கருத்தடை மோசமான ஒரு பரிகார முறையாகும். மரணத்தை ஜயிக்காத வரையில், மனிதன் செய்வதெல்லாம் இருட்டில் வழி தெரியாமல் தடுமாறுவதற்கொப்பாகும். ஈசோபநிடதத்தின் முதல்சுலோகத்தை இன்னும் நீங்கள் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அதை நான் எரவாடா சிறையில் மனப் பாடம் செய்ய முயற்சித்தேன். அதில் பதினெட்டு சுலோகங்கள்தான் அடங்கியுள்ளன. இருந்தாலும், அதை ஒரு ஞானத் திரட்டு என்றே சொல்லவேண்டும். கீதையைப் போலவே அந்த உபநிடதத்திலும் வாழ்க்கையைப் பற்றிய அதே கருத்து விவரிக்கப்பட்டிருக்கிறது. உபநிடதத்திலுள்ள விதை, கீதையில் அழகான ஒரு மரமாக வளர்ச்சி பெற்றிருக்கிறது.

## 53

பாரிமூல் (உத்கல்),
*மே 30, 1934*

இன்று புதன்கிழமை வந்துவிட்டது; ஆனால் உங்களிடமிருந்து இன்னும் யாதொரு கடிதமும் வரவில்லை.

புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ள கப்பலில் அதற்குள் வெடிப்பு ஏற்பட்டுவிட்டது. அது மிதக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். இருந்தாலும் யாத்திரை முடியும்வரையில் அது மிதக்குமா என்பது இனிமேல்தான் தெரியவேண்டும். பெரியவர்கள் நான்கு பேரும்* 15-ஆம் தேதி மீண்டும் பம்பாயில் கூடுகிறார்கள்.

ராஜேந்திரபாபுவின் மூத்த சகோதரரான மகேந்திரபாபு கடுமையாக நோயுற்றிருக்கிறார். அவர் ஒருவேளை உயிர் பிழைக்கலாம். அவர் இறந்துவிடுவாராயின், உடனடியாக ராஜேந்திரபாபு ஏராளமான பொறுப்புகளை வகிக்கவேண்டியிருக்கும். அவருக்குக் கடிதம் எழுதுங்கள்.

ஸெரஸோல், அகாதா, மூரியல் இம் மூவரும் 15-ஆம் தேதி இங்கிருந்து புறப்படுகிறார்கள். அவர்கள் எல்லோரும் மிகுந்த அனுபவம் பெற்றுள்ளனர். ஸெரஸோல் அக்டோபர் மாதம் மற்ற சக ஊழியர்களுடன் திரும்பிவந்தார். பீகாரில் அலுவல்கள் நன்றாகவே நடைபெற்று வருகின்றன. பொதுவாக ஜம்னாலால்ஜியின் மேற்பார்வையில் அவை நடைபெற்று வருகின்றன.

மால்கனி இப்போது பாபாவின் ஸ்தானத்தை மேற்கொண்டிருக்கிறார். பாட்னாவில் நான் தேவதாஸைப் பார்த்தேன். அவன் இப்போது பெருத்திருக்கிறான். அவனது திருமணமும் டில்லி வாசமும் அவனுக்குப் பொருத்தமாக அமைந்திருக்கின்றன.

---

*பண்டித மாளவியா, டாக்டர் அன்சாரி, டாக்டர் பி. ஸி. ராய், ஸ்ரீ புலாபாய் தேசாய் ஆகிய நால்வரையுமே பெரியவர்கள் என்று காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

சுசீலா, பிரபாவதி, ஓம் ஆகிய மூவரும் உங்களுக்குக் கடிதம் எழுதுவார்கள். இங்கு உஷ்ணம் அசமதாபாத்தைக் காட்டிலும் மிகக் கடுமையாக இருக்கிறது.

## 54

கரத்பூர் (ஒரிஸ்ஸா)
*ஜூன் 7, 1934*

இந்தத் தடவைகூட உங்களிடமிருந்து இன்னும் கடிதம் வரவில்லை. என் கடிதங்கள் ஒழுங்காக அனுப்பப்பட்டுவருகின்றன. இங்கே மழை பெய்யத் தொடங்கிவிட்டது. எனவே இப்போது எல்லா அலுவல்களும் ஸ்தம்பித்துவருகின்றன. இன்னும் சிறிது நேரத்தில் காலைப் பிரார்த்தனை நடைபெறும். சதீஷ்பாபு, பத்து நபர்கள் அடங்கிய ஒரு கோஷ்டியுடனும், அவர்களுடைய பெட்டி, படுக்கை சாமான்களுடனும் பத்ரக் ஸ்டேஷனிலிருந்து வந்து சேர்ந்தார். சேருகக் கிடக்கும் சாலையில் இரண்டு மைல் தூரம் வருவதற்கு அவர்களுக்கு ஒன்றே முக்கால் மணி நேரம் ஆயிற்று.

பிரார்த்தனை முடிந்து மீண்டும் இந்தக் கடிதத்தை எழுதத் தொடங்குகிறேன்.

சதீஷ்பாபு கால் நடையாக வங்காளத்தில் யாத்திரை செய்து வருகிறார். கால்நடையாகச் செல்லுபவன் என்ற முறையில் எனது யாத்திரையின் பலன்களை மதிப்பிடுவது கடினமான காரியம். ஆனால் என்வரையில் எனக்கு முழுத் திருப்தி ஏற்பட்டிருக்கிறது. மற்றவை யாவும் சாரமற்றவையாகத் தோன்றுகின்றன.

ஹாரிசன் பம்பாய்க்குப் புறப்பட்டுச் சென்றிருக்கிறார். அவரை அங்கே மீண்டும் நான் சந்திப்பேன். அவர் மிகவும் அன்புள்ள ஒரு பெண்மணி. ஜம்னலால்ஜியுடன் பிரயாணம் செய்துவரும் மூரியலும் பம்பாயில் என்னைச் சந்திப்பார்.

## 55

புனா
*ஜூன் 27, 1934*

சென்ற வாரம் உங்களுக்குக் கடிதம் எழுதுவதற்காக நேரம் கண்டுபிடிக்கப் பெருமுயற்சி செய்தேன்; ஆனால் முடியவில்லை. மற்றவர்களுக்கும் நானே எழுதவேண்டும் என்பதற்காகக் கடிதங்கள் எழுதுவதை நிறுத்திவைத்திருந்தேன். இன்று கூட நேரமின்றி சிரமப்பட்டுக் கொண்டே எழுதுகிறேன். எனக்கு நேரம் இருந்தால், பல பக்கங்களை நிரப்பிவிடுவேன். ஆனால் தற்போது நான் எவ்வளவு எழுதினாலும், அதைக் கொண்டு நீங்கள் திருப்தி அடைய வேண்டும்.

சந்துபாய்க்கு என்னுல் என்ன இயலுமோ அதையெல்லாம் நான் செய்கிறேன். குஜராத்தில் யாத்திரை செய்வது அவசிய மாக இருப்பதால்தான் நான் அங்கே போய்க் கொண்டிருக் கிறேன். நான் போனுல், ஹரிஜனங்களுக்காக நிதி வசூல் செய்யாமல் என்னுல் இருக்க முடியாது. என்னுடைய தீர்மானத் தைப் பற்றி நீங்கள் வாசித்திருப்பீர்கள். தற்போதைக்கு நிலைமை யைக் கவனித்து வாருங்கள். இவ்விஷயத்தில் எது சரி அல்லது எது தவறு என்பதை யார் அறிவார்? நாம் எதிர்பார்க்கக் கூடிய தெல்லாம், நாம் என்ன செய்கிருேமோ அது நமக்குத் தெரிந்த வரையில் நல்லதாகத்தான் இருக்கவேண்டும் என்பதேயாகும். சரியான காரியமே செய்யப்பட்டு வருகிறதென்று நம்புகிறேன்.

சிறிது காலமாக உங்களுடைய உடல் நலம் திருப்திகரமாக இல்லை என்று கேள்விப்பட்டேன். என்னென்ன சிகிச்சை களெல்லாம் பெற முடியுமோ அவற்றையெல்லாம் பெற்று உங் களுடைய ஆரோக்கியத்தைத் தயவு செய்து அபிவிருத்தி செய்து கொள்ளுங்கள். அவசியமாயின், டாக்டர்களுக்குச் சொல்லி அனுப்புங்கள். நீங்களாகக் கேட்டாலொழிய யாரும் எதுவும் கொடுக்கமாட்டார்கள். சட்டபூர்வமாக என்ன வசதிகளையெல் லாம் நீங்கள் பெற முடியுமோ அதையெல்லாம் பெற்று, மூக்கில் உள்ள கோளாறைப் போக்கிக் கொள்ளுங்கள்.

இந்தத் தடவை நிறைவேறிய தீர்மானம் உங்களுக்கு ஒருவேளை பிடிக்காமலிருக்கலாம். ஆனுல் அது பலன்தரத்தக்கது என்றே நான் கருதுகிறேன். படாபாய் (பண்டித மாளவியா) இங்கு வந்து என்னைப் பார்த்தார். நாம் பொறுத்திருந்து பார்ப்போம். ஆகாயத் தில் பல புதிய கிருமிகள் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் அடக்குவது முடியாத காரியம். நாம் நம் முடைய பங்கைத்தான் செய்துமுடிக்க இயலும். நீங்கள் கலங் காமல் இருக்கவேண்டும். நீங்கள் இருக்குமிடத்திலிருந்து வெளி யிலுள்ள விஷயங்களைப் பற்றி நினைப்பது பலனற்ற, தீங்கை விளைவிக்கும் காரியமாகும்.

பரீட்சித்லாலை அடித்தது, முக்கியமல்லாத ஒரு நிகழ்ச்சியென நான் நினைக்கவில்லை. அவ்விஷயமாக மக்களிடையே யாதொரு உணர்ச்சியும் ஏற்படவில்லை. பொது மக்கள் அதில் அக்கறை கொள்ளாதது, அவர் அடிபட்ட அட்டூழியத்தைக் காட்டிலும் படு மோசமானது.

பா இப்போது இங்கே வந்திருக்கிருள். அவள் ஆரோக்கியத் துடனும் மகிழ்ச்சியுடனும் இருக்கிருள்.

காந்தி, தேவதாஸுடன் இருக்கிருன். அவன் ஒரு கல்லூரி யில் சேர்ந்திருக்கிருன். அவனுக்குத் தன்னுடைய எதிர்காலத்தைப் பற்றி பிரமாதமான ஆசைகள் இருந்துவருகின்றன. ராதா, பேராசிரியர் கார்வே பள்ளிக்கூடத்தில் சேர்ந்திருக்கிருள்.

மீராபென்னைப் பற்றி நீங்கள் வாசித்திருக்கலாம். தான் வெளியே சென்று, தானாக ஏதாவது செய்யவேண்டும் என்ற எண்ணம் அவரது மனத்தில் திடீரென்று உதித்தது. நானும் சம்மதித்தேன். அவர் போய்விட்டார். அவர் மிதமிஞ்சி எனது நிழலிலேயே இருந்து வந்திருக்கிறார். எனவே அவர் தனது சுதந்திரத்தில் ஓரளவை மீண்டும் பெறுவது நன்மையே ஆகும். அவர் சில மாதங்களுக்குத்தான் அவ்விதம் சென்றிருக்கிறார். சாதாரண கைதிகளின் நிலைமையைப் பற்றி மாத்திரமே மாக்ஸ்வெலைப் பார்த்துப் பேசியதாக மீராபென் கூறினார்.

இன்றைக்கு இவ்வளவுதான். 'பர்ணகுடி'யில் இன்று காலையில்தான் இதை எழுதினேன். இப்போது நாங்கள் பாம்பூர்தாவுக்குப் புறப்பட்டுச் செல்லுகிறோம்.

## 56

பவநகர்,
ஜூலை 2, 1934

உங்களுடைய சென்ற கடிதத்தில், நீங்கள் சந்தித்த நபர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருந்த பகுதியில் சில விஷயங்கள் அடிக்கப்பட்டிருந்தன.

சபர்மதி சிறையில் இருந்த சத்தியாக்கிரகிகளான பெண்கள் எல்லோரையும் விடுதலை செய்துவிட்டதாக இன்று ஒரு தந்தி வந்திருக்கிறது. அவர்களில் மணியும் ஒருவளாக இருக்கலாம். ஆடவர்களான சில சத்தியாக்கிரகிகளும்,-எல்லோரும் அல்ல-விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள்.

புனாவில் எறியப்பட்ட வெடிகுண்டைப் பற்றி நான் என்ன கூறுவது? அது போன்ற ஒரு சம்பவம் எதிர்பார்க்கப்பட்டதே. எனது ஹரிஜன் யாத்திரையின் போது அச்சம்பவம் நிகழ்ந்தது முற்றிலும் நன்மையேயாகும். ஒரு கோஷ்டிக்கு எதிராக உபயோகிக்கப்படும் ஒன்று, மற்றொரு கோஷ்டிக்கு விரோதமாகவும் எதிர்பாராத விதத்தில் உபயோகிக்கப்பட்டுத்தான் தீரும். எனினும் கடவுளின் சித்தமின்றி, ஒரு சிட்டுக் குருவி கூட இறப்பதில்லை.

பவநகரிலிருந்து இதை நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். இங்குள்ள நிலவரங்களை ஏற்கனவேயே நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். இங்குள்ள சங்கடம் என்னவெனில், தொழிலாளர்கள் ஒருவருக்கொருவர் சுமுகமாக நடந்து கொள்ள முடியாததுதான். இங்கு சுமார் ரூ. 30,000 வரை கணிசமாக வசூலாகியிருக்கிறது.

ஒத்துழையாமையில் ஈடுபட்டுள்ள விவசாயிகளைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்.

எனக்கு ஓய்ச்சல் ஒழிவின்றி அலுவல்கள் இருந்துவருகின்றன. எனவே நான் நீண்ட கடிதம் எழுதுவதற்கில்லை. உங்களுக்கு

எழுதும்படி மற்றவர்களுக்கும் நான் நிரந்தரமான கட்டளை பிறப்பித்திருக்கிறேன்.

......க்கு வைத்திய சிகிச்சைக்காக இன்னும் அதிகத் தொகை தேவையாக இருக்கிறது. எப்படியிருந்தாலும் மாதந்தோறும் நூறு ரூபாய்க்குமேல் கொடுக்க முடியாதென்று நான் அவரிடம் கூறியிருக்கிறேன்.

## 57

கராச்சி,
*ஜூலை 11, 1934*

சமீபகாலமாக, வாரந்தோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் உங்களுக்கு என்னால் கடிதம் எழுத முடிவதில்லை. காலை ஆகாரத்திற்குப் பிறகு *5-30* மணிக்கு இதை நான் எழுத ஆரம்பித்தேன். ஆனால் அப்போது ஒரு பார்ஸி பெண்மணி, பதினைந்து வயதுள்ள தனது மகளுடன் என்னைப் பார்க்க வந்தாள். அந்தச் சிறுமி டென்னிஸ் பந்து விளையாட்டில் அகில இந்தியாவிலும் புகழ் பெற்றிருக்கிருள். ஆனல் இப்போது அவளுக்கு உலக வாழ்க்கையிலேயே வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. அவளது மனம் சமயத் துறையில் நாட்டம் கொண்டிருக்கிறது. அவ்விஷயமாகவே அவள் என்னைப் பார்க்க வந்தாள். ஹரிஜனங்களுக்காக அவள் பத்து ரூபாய் கொடுத்தாள். என் கையெழுத்தைப் பெற்ற பின் அவர்கள் திரும்பிச் சென்றுவிட்டனர்.

நான் மேற்கொள்ளவிருக்கும் உண்ணாவிரதத்தைப் பற்றி* வருத்தம் அடையாதீர்கள். அது வந்துதான் தீரவேண்டும். என்னைச் சுற்றி ஏராளமான மக்கள் கூடிவருகிருர்கள். சனாதனிகள் யுத்தத்திற்கு ஆயத்தமாகிவருகிருர்கள். மக்கள் அவர்களைச் சகித்துக் கொள்ளாவிடில், அத்தகைய கைகலப்புகள் தவிர்க்க முடியாதவையாகிவிடும். வெறும் வார்த்தைகளால் ஆயிரக் கணக்கான மக்களுக்கு புத்தி புகட்ட முடியாது. அவர்கள் விஷயத்தில் உண்ணாவிரதம்தான் சரியான ஒரு பரிகாரமாகும். மக்கள் கூட்டம் முன்பு ஒருபோதும் இராதவாறு அதிகமாகியிருக்கிறது. எனவே அவர்களைக் கட்டுப்படுத்துவது கடினமாக இருக்கிறது. யாதொரு கஷ்டமுமின்றி ஏழுநாட்கள் தாண்டிவிடும். தயவு செய்து கவலைப் படாதீர்கள். என் உடல் நலம் முற்றிலும் திருப்திகரமாகவே இருக்கிறது. அலுவல்களின் பளு அதிகமாக இருந்தும்கூட, இரத்த அமுக்கம் சற்றேறக்குறைய *150*-ஆக இருந்துவருகிறது. அது ஒரு நல்ல அறிகுறியே ஆகும். எடை *104*-ஆக இருக்கிறது. மேற்கொண்டு தகராறு எதுவுமின்றி யாத்திரையில் மீதியுள்ள பகுதி

---

* ஆஜ்மீரில் ஹரிஜன ஆதரவாளர்களான தொண்டர்கள் சில சனாதனிகளை அடித்து விட்டார்கள். அதற்குப் பிராயச்சித்தமாக தாம் மேற்கொண்ட உண்ணாவிரதத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

பூர்த்தியடையுமாயின், எனக்கு மன ஆறுதலாக இருக்கும். உண்ணாவிரதத்திலும், உண்ணாவிரதத்தினால் இழந்த பலத்தை மீண்டும் பெறுவதிலும் ஆகஸ்டு மாதம் சென்றுவிடும். அடுத்தபடியாக நான் என்ன செய்யப் போகிறேன் என்பது கடவுளுக்குத் தான் தெரியும்.

உங்களுடைய உடல் நலனைப் பற்றிய முழு விவரங்களையும் நான் அறிந்துகொள்ள விரும்புகின்றேன். நான் தயாபாய்க்கும் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

மணி விடுதலையடைவதாக நேற்று எனக்குச் செய்தி வந்தது. மகாதேவும் பியாரிலாலும் லாகூரில் வந்து என்னுடன் சேர்ந்து கொள்வார்கள். ஹைதராபாத்திலிருந்து காகா சாகிப் முன்பே இங்கு வந்து சேர்ந்துள்ளார். இம் மூவரும் தற்காலிகமாக என்னுடன் இருப்பதே சிறந்தது. நரஹரி வரப்போவதில்லை. நான் சிறிது காலம் ஒரே இடத்தில் தங்கினால், ஒழுங்கான முறையில் ஒவ்வொருவரையும் சந்திப்பது சாத்தியமாக இருக்கும். எல்லாம் கடவுள் சித்தப்படி நடக்கும்.

பா மிகவும் சௌகரியமாக இருக்கிறாள். அவளுக்குத் தேவையான உணவைப் பெற அவள் ஏற்பாடு செய்து கொள்கிறாள். அவளைக் கவனித்துக்கொள்ள தக்கர் பாபா இங்கு எப்போதும் இருக்கிறார்.

## 58

லாகூர்,
ஜுலை 16, 1934

சிறையிலிருந்து நீங்கள் விடுதலையடைவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை. அரசாங்கமும் நாமும் பரஸ்பரம் கலந்து ஆலோசிக்காமலேயே அவரவர் சொந்த வழியில் சென்றுவருகிறோம். அது ஒரு விதத்தில் முற்றிலும் சரிதான். இரு சாராருடைய கொள்கைகளும் அவர்களுடைய நடவடிக்கையிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. நிலைமையைப் பரிசீலனை செய்வதற்கு உங்களுக்குச் சிறிது காலம் அவகாசம் கிடைத்தபின், மத்தியஸ்தர் என்ற முறையில் உங்களுடைய அபிப்பிராயத்தை நான் பின்னர் நாடுவேன்.

உங்கள் மூக்கில் உள்ள கோளாறுக்கு ஒழுங்கான முறையில் சிகிச்சை செய்து கொண்ட பிறகு நீங்கள் இங்கு வருவதையே நான் விரும்புகிறேன். வாரணாசிக்கு நீங்கள் வரவேண்டியது அவசியமாகும். எனினும் உங்களுடைய உடல் நிலை காரணமாக நீங்கள் வர முடியாவிடில், நீங்கள் வராமலேயே நாங்கள் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்கிறோம்.

லால்நாத்தான்* மற்றவர்களை விடச் சிறந்தவர் என்று தோன்றுகிறது. அவர் தைரியசாலி என்பதுடன், தமது வாக்குறுதி

* மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ள லால்நாத் என்பவர் வைதிக ஹிந்துக்களின் சார்பில் ஆர்ப்பாட்டம் செய்தவர்களில் ஒருவராவார்.

யையும் நிறைவேற்றுகிறார். அவர் என்னைத் தூஷிக்கிறார் என்பது உண்மையே. ஆனால் அது உலகில் எல்லோருக்கும் உள்ள உரிமையாகும். அவர் அடிக்கப்பட்டது இது முதல் தடவை அல்ல. அவரைப் பின்பற்றிய மற்றவர்களும் அடிக்கப் பட்டிருக்கிறார்கள். ஆனால் அவர் அதைப்பற்றிப் போலீசாரிடம் ஒருபோதும் புகார் கூறியதில்லை. அவர் சாதாரணமாக தமது ஆட்களுக்கு போலீஸ் பாதுகாப்பு வேண்டுமென்றும் கேட்பதில்லை. அவர் தமது ஆட்களை நல்ல கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்கிறார். நம்மைச் சேர்ந்தவர்களை நான் கண்டிப்பான கட்டுப்பாட்டிற்குள் வைத்திராவிடில், லால்நாத்தின் ஆட்களுக்குக் கடுமையான காயங்கள் ஏற்பட்டிருக்கும்; நமது லட்சியத்திற்கும் குந்தகம் ஏற்பட்டிருக்கும். இன்றுதான் யாரோ ஒருவரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. லால்நாத்துக்கு விரோதமாக துவேஷத்தைத் தூண்டியவர்களில் தாமும் ஒருவர் என்று அவர் அக்கடிதத்தில் கூறியிருக்கிறார். நமது நல்ல ஊழியர்களில் அவரும் ஒருவர். அவர் ஓர் எழுத்தாளர், ஒரு கவி. அதற்குப் பிராயச்சித்தமாகத் தாம் ஏதாவது செய்ய வேண்டுமென்று அவர் கோருகிறார். நான் உண்ணாவிரதம் இருக்கக்கூடாது என்று இன்னும் நீங்கள் வற்புறுத்துகிறீர்களா? அத்தகைய விஷயங்களையொட்டி நான் யாருடன், எங்கே கலந்து ஆலோசிக்க முடியும்? யாரோ ஒருவரைப் பாம்பு கடித்து, அவ்விஷயத்தை டாக்டரிடம் கூறினால், டாக்டர் வேறு ஒருவரின் அபிப்பிராயத்தை நாட வேண்டுமா அல்லது தமது அறிவைக் கொண்டு தம்மால் இயன்ற சிகிச்சையைச் செய்ய வேண்டுமா? சக ஊழியர்களைக் கலந்து கொள்ளாமல் நான் அத்தகைய முறையைக் கைக்கொள்ளச் சிறிதும் விரும்பவில்லை. ஆனால் சில சமயங்களில் நான் என்ன செய்வதென்று தோன்றவில்லை. நான் ஒரு தீர்மானத்திற்கு வருமுன் தம்மைக் கலந்து ஆலோசிக்கும்படி கனசியாமதாஸ் கூறியிருந்தார். அவருக்கு நான் எழுதினேன். பின்னர் அவர் என் முடிவிற்கே விட்டுவிட்டார். நான்கு நாட்கள் உண்ணாவிரதம் இருக்கலாம் என்று தேவதாஸ் யோசனை கூறினார். உண்ணாவிரதம் இருக்க வேண்டியது அவசியம் என்றும், அவ்விதமாயின், குறைந்த அளவு ஏழு நாட்களாவது உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்றும் ஜெயராம்தாஸ் கூறினார். பாபுவும் அதை ஆட்சேபிக்கவில்லை. சந்திரசங்கரும் காகா கலேல்காரும் கூட அதை ஆட்சேபிக்கவில்லை. அத்தகைய உண்ணாவிரதங்கள் இன்றேல் என் முன்னுள்ள மகத்தான கடமையை நான் நிறைவேற்ற முடியாது.

பொதுஜனங்களிடையே பிரமாதமான விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. லாகூரையும் மற்றவிடங்களையும் காட்டிலும் கூட இங்கே கூட்டம் அதிகமாக இருந்துவருகிறது. ஆகஸ்டு மாதத்தைப் பொறுத்த மட்டில் நான் ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்; அதாவது ரயில் வண்டியிலும் மோட்டாரிலும் பிரயாணம் செய்வதிலிருந்து என்னைக் காப்பாற்றுங்கள்; என்னை ஒரே இடத்தில் இருக்க விடுங்கள். அல்லது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கால் நடையாகவே செல்ல விடுங்

கள். ஆகஸ்டு மாதத்திற்குப் பிறகு நடக்கப்போவதை யார் அறிவார்?*

ஆண்ட்ரூஸ் ஆகஸ்டு 25-ஆம் தேதி இங்கே வந்து சேருவார். சுவாமியிடமிருந்து உங்களுக்கு விவரமான கடிதம் வரும். சந்திர சங்கரும் உங்களுக்கு எழுதுவார்.

நான் கல்கத்தாவுக்குச் செல்ல உத்தேசித்திருக்கிறேன். அங்கு கட்சியைத் தூய்மைப்படுத்துவதற்காக மாத்திரமே செல்லு கிறேன். ஒருவேளை அங்கே கவர்னரை நான் சந்திக்க வேண்டி யிருக்கும் என்று டாக்டர் பிதான்ராய் எனக்கு எழுதியிருக்கிறார். அங்கே முக்கியமான விஷயம் பயங்கர இயக்கம்தான். அது இப் போது தலை தூக்கியிருக்கிறதென்று தெரிகிறது.

மற்ற விஷயங்களைப்பற்றி நாம் சந்திக்கும்போது பேசலாம். இதன் மத்தியில் மகாதேவ் உங்களுக்கு எல்லா விவரங்களையும் அறிவித்துவருவார்.

(மேற்கண்ட கடிதமும், 83-ஆம் கடிதம் வரையில் பின்வரும் மற்றக் கடிதங்களும் சர்தார் பம்பாயில் இருந்தபோது காந்திஜி யினால் எழுதப்பட்டவை.)

## 59

வார்தா,
ஆகஸ்டு *19, 1934*

நீங்கள் அனுப்பிய செய்திகள் கிடைத்தன. நீங்கள் பூரண மாக குணம் அடைந்தபின் இங்கு வந்தால் மிகவும் நன்மையாக இருக்கும். ஆண்ட்ரூஸ் 25-ஆம் தேதி இங்கு வருகிறார். சாத்திய மாயின், அப்போது நீங்களும் இங்கு இருப்பதை நான் விரும்பு வேன். எனக்குத் தேவையான பூரண ஓய்வு இங்கே எனக்குக் கிடைக்கிறது. என்னை யாரும் தொந்தரவு செய்வதில்லை. ஜம்னாலால்ஜியின் கட்டளைகளைக் 'காவலர்கள்' சிறிதும் வழுவின்றி அப்படியே நிறைவேற்றிவருகிறார்கள். பம்பாயைவிட வார்தா மிகவும் அமைதியான இடம் என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர் கள். நீங்கள் வந்தால் மணியும் வருவது நலமாக இருக்கும்.

திடீரென்று நான் காங்கிரசை விட்டுவிட முடியாது. ஆனால் என்னுடைய வேதனையை நான் உங்களுடன் பகிர்ந்து கொள் கிறேன். காங்கிரசை விட்டுச் செல்ல நீங்கள் எல்லோரும் என்னை அனுமதிக்கும்வரையில் நான் எப்படிச் செல்ல முடியும்? எனினும்

---

*1934 ஆகஸ்டு மாதம் முடிய ஹரிஜன் தொண்டு மாத்திரமே செய்து வருவதென்று காந்திஜி தமக்குத் தாமே கட்டுப்பாடு விதித்துக் கொண்டிருந் தார். செப்டம்பரிலிருந்து அந்தக் கட்டுப்பாடு இல்லை. எனவே அதன் பின் நடக்கப்போவதை யார் அறிவார் என்றே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக் கிறார்.

அதை விட்டுச் செல்லுவது ஒன்றுதான் வழி என்று நான் கருது கிறேன். காங்கிரசின் முன்னேற்றத்தை நான் தடுத்து வருகிறேன் என்று தோன்றுகிறது. ஒருவருக்கு நம்பிக்கை இல்லாத ஒரு ஸ்தாபனத்தைப் பற்றிக் கொண்டிருப்பதும், நம்பிக்கையுள்ளவர் கள் அதை உபயோகிப்பதற்குத் தடையாக இருப்பதும் முற்றிலும் பரிதாபகரமான, அபாயகரமான ஒரு நிலையாகும். அதிலிருந்து காங்கிரசைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமை அல்லவா?

ஊழலுக்கு ஒரு பரிகாரம் செய்வது பற்றி நாம் சிந்திப்பது சாத்தியமாக இருக்கும்வரையில், மேற்கண்ட பிரச்னையைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. ஆனால், காங்கிரசைவிட்டு வெளியேறுவது ஒன்றுதான் சாத்தியம் என்ற நிலை ஏற்படும் போது ஒருவர் வேறு என்ன செய்ய முடியும்? நான் காங்கிரசை விட்டு வெளிச் சென்றால், அதில் நிலவிவரும் போலி வேடத்திற்கு ஒரு முடிவு ஏற்பட்டுவிடும். பின்னர் சத்தியம்-அசத்தியம், பலாத்காரம்-அகிம்சை, கதர் - காலிகோ அல்லது மில்துணிகள் முதலியன யாவும் காங்கிரசில் பகிரங்கமாக இடம் பெற்றுவிடும். ஒரு காங்கிரஸ்வாதியின் உண்மையான நிலை அதுவாயின், அவர் ஒளிவு மறைவின்றி அவ்விதமே நடந்து கொள்ள முடியும். ஆனால் நான் காங்கிரசில் இருக்கும்வரையில், அது சாத்தியமல்ல. விதி களைத் தளர்த்துவதற்கு நான் ஒரு காலத்திலும் சம்மதிக்கமாட் டேன். நான் எதிர்த்தும் கூட அந்த விதிகள் காங்கிரசினால் ரத்து செய்யப்படுமாயின், அது காங்கிரசிலிருந்து என்னை வெளியேற்று வதற்கு ஒப்பாகும் அல்லவா? நிலைமை அவ்வளவு தூரத்திற்கு முற்றும்படி விடுவது புத்திசாலித்தனமாகுமா? இவ்விஷயங்களை யும், மற்றப் பிரச்னைகளையும் நீங்கள், ராஜாஜி ஆகிய மற்றவர்களின் முன்னிலையில் எழுப்ப வேண்டுமென நான் விரும்புகிறேன்.

செப்டம்பரிலோ அல்லது உண்ணாவிரதத்திற்குப் பிறகு நான் இழந்த பலத்தை மீண்டும் பெறும்போதோ நான் என்ன செய்ய வேண்டும் என்பதையும் நாம் ஆலோசிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். சீக்கிரத்தில் அவ்விதம் விவாதிக்கவேண்டியது அவசியம்.

ஜவாஹர்லாலின் அதிர்வெடி அவ்வளவு அபாயகரமானதல்ல. அவ்விதம் கத்தித் தீர்க்க அவருக்குள்ள உரிமையைத்தான் அவர் உபயோகித்தார். அவர் இப்போது அமைதியாகிவிட்டார் என்றே நம்புகிறேன்.

துன்பத்திற்குள்ளான குஜராத் குடியானவர்கள் சம்பந்தமாக நான் தீர்க்காலோசனை செய்து சில முறைகளை வகுத்திருக்கிறேன். அவர்கள் சம்பந்தமாக நீங்கள் கூறும் யோசனைகளையும் நாம் மேற் கொள்ளலாம்.

நீங்கள் விரும்பியபடியே, இறுதியில் பார்லிமெண்டு போர்டு கூட்டம் ஒத்திவைக்கப்பட்டுளது. இருந்தாலும், அதை ஒத்திவைத் ததற்குக் காரணம் வேறாகும்.

## 60

வார்தா,
*ஆகஸ்டு 21, 1934*

உங்கள் கடிதம் கிடைத்தது. அங்கே நீங்கள் தங்கியிருக்க வேண்டிய அவசியத்தை நான் உணர்ந்து கொள்ள முடியும். எப்படியிருந்தாலும், இங்கேயும் சரி, அங்கேயும் சரி, நாம் ஒரே விதமான வேலையையே செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம்.

காங்கிரசைத் தூய்மைப்படுத்த வேண்டிய பிரச்னை மிகவும் முக்கியமாகும். நாம் சந்திக்கும்போதுதான் அதைப்பற்றி அதிக மாக விவாதிக்க முடியும். எனினும் காங்கிரஸ் அதன் சொந்தக் கொள்கையை வகுத்துக் கொள்ளவேண்டியது அவசியம். 'அ' இங்கு வந்தால், இந்தப் பிரச்னையைத் தீர்த்துவிடலாம். உங்க ளுடன் கலந்து ஒரு தேதியை நிர்ணயித்து, செப்டம்பர் மாதம் அவரை இங்கு அழைக்க நான் முயற்சித்து வருகிறேன். நீங்கள் வர இயலாவிடில், நான் அவருடன் பேசி ஒரு முடிவுக்கு வரு கிறேன். உங்களிடம் காட்டாமல் நான் எழுத்து மூலம் எதுவும் கொடுக்கமாட்டேன்.

ஆண்ட்ரூஸ் அங்கு வரும்போது எல்லா விஷயங்களையும் பற்றி அவருடன் பேசுங்கள். இங்கே நடக்கும் சம்பவங்களை நான் உங் களுக்கு அறிவித்துவருவேன்.

மகாதேவ் இன்று அலகாபாத்துக்குச் செல்லுகிறார். அவர் சனிக்கிழமைக்குள் திரும்பிவர வேண்டும்.

உங்கள் சக்திக்கு மீறி வேலை செய்து மீண்டும் நோய்க்கு இலக்காகிவிடாதீர்கள்.

## 61

வார்தா,
*ஆகஸ்டு 22, 1934*

இங்கே நீங்கள் தீர்க்க வேண்டிய ஒரு பிரச்னை எழுந்திருக் கிறது. காகா தெற்கே சென்று வேலை செய்ய விரும்புகிறார். இங்கே வந்துள்ள உபாத்தியாயருக்கு, அவர்கள் கிராமங்களுக் குச் சென்று வசிக்க வேண்டும் என்றும், ஆதாரக் கல்வி உள்பட ஆக்கவேலைகளில் ஈடுபட வேண்டும் என்றும் நான் யோசனை கூறினேன். அவர்களுக்கு இந்த யோசனை பிடித்திருக்கிறது. இங் கிருந்து செல்ல அனுமதிக்கப்படுவோர், ஆக்கவேலைகளை நிறை வேற்றத் தயாராக இருக்கிறார்கள். அவ்விதம் செல்ல விரும்பு வோரில் காகாவும் ஒருவராவார்.

## 62

வார்தா,
ஆகஸ்டு 23, 1934

டில்லியில் ஏற்பட்டுள்ள பிளவுகளைப் பற்றிய விவரம் அடங்கிய கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன். அதை நீங்கள் வாசித்ததும் கிழித்து எறிந்துவிடுங்கள். அவற்றை நான் காதில் போட்டுக் கொள்ள முடியாதென்று கண்டிப்பாக மறுத்துவிட்டேன். ஒவ்வொரு நாளும் அத்தகைய செய்திகள் வந்த வண்ணமாக இருக்கின்றன. தற்போது ஒவ்வொருவரும் சுயநலனையே முக்கியமாகக் கருதுகின்றனர். தேசம் எக்கேடு கெட்டாவது போகட்டும் என்று எண்ணுகின்றனர். அத்தகைய மனப்பான்மை நிலவி வருகையில், நாம் நமது லட்சியத்தை எப்படி அடைய முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை. வங்காளத்திலிருந்து ஆனேய்க்கு விரோதமாகவும் எனக்குப் புகார்கள் வந்திருக்கின்றன. அவரது பாரபட்சமற்ற தன்மையில் சந்தேகத்திற்கே இடமில்லை என்றும், அவர்கள் அவரிடம் பூரண நம்பிக்கை வைக்க வேண்டும் என்றும் நான் பதில் எழுதியிருக்கிறேன்.

வகுப்புத் தீர்ப்பைப்பற்றி அதன் கொள்கையை மாற்றிக் கொள்ளவேண்டுமென 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகைக்கு மாளவியாஜி கட்டளை பிறப்பித்துள்ளார். எனவே கனசியாமதாஸ் (பிர்லா) அவ்விஷயமாக தமது அபிப்பிராயத்தை விளக்கி தமது ராஜிநாமாவை அனுப்பியிருக்கிறார். என்ன நிகழ்கிறது என்பதைக் காத்திருந்து பாருங்கள். அவர்களுடைய மனம் எப்படி வேலை செய்கிறது என்பதை அறிந்து கொள்ளவே முடியவில்லை.

## 63

வார்தா,
ஆகஸ்டு 24, 1934

குஜராத் வித்தியாபீடத்தின் தர்மகர்த்தா பதவியை காகா ராஜிநாமா செய்துள்ளார். நீங்கள்தான் சங்கத்தின் தலைவராக இருக்கவேண்டும் என்று நாங்கள் எல்லோரும் முடிவு செய்துள்ளோம். அப்பதவிக்கு உங்களை நாங்கள் முன்பே நியமித்துவிட்டோம். அதனுடன் எனக்கு சட்ட ரீதியான தொடர்பு இருந்ததாக எனக்கு நினைவில்லை. எனவே அதுபற்றி நான் விசாரித்ததில், சட்ட ரீதியாக அதற்கும் எனக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டேன். ஆனால் ஆன்மிக ரீதியாக நான் அதன் அத்தியட்சகர் என்று கருதப்பட்டு வந்துளது. நான் அதன் விவகாரங்களில் தலையிடுவது அவசியம் என்று கருதுகின்றனர். ஆனால் ஒரு ஸ்தாபனம் எப்படி அவ்வாறு நடைபெற முடியும்? அதில் எனக்குள்ள ஆன்மிக அந்தஸ்துடன் நான் திருப்தியடைகிறேன். அதற்குமேல் அந்த ஸ்தாபன சம்பந்தமான

பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை; அவ்விதம் ஏற்றுக் கொள்ள எனக்கு சக்தியும் இல்லை.

என்னுடைய சிபாரிசின்மீது, உங்களுடைய அங்கீகாரத்திற்காக மற்றொரு தீர்மானமும் செய்திருக்கிறோம். நரஹரி, ஹரிஜன் ஆசிரமத்தின் மானேஜராக இருக்க வேண்டும். அவருக்குத் தேவையான வித்தியாபீட ஆசிரியர்கள் அவருடன் வேலை செய்ய வேண்டும். வித்தியாபீடத்தின் நிதியில் பணம் இருக்கும்வரையில், நரஹரியின் சம்பளமும் மற்ற ஆசிரியர்களின் சம்பளமும் அதிலிருந்தே கொடுக்கப்படவேண்டும். தற்போதைக்கு ஹரிஜன சேவா சங்கம் அந்தப் பளுவை வகிக்கக்கூடாது என்பதே எனது அபிப்பிராயமாகும். ஏனெனில், அதிலிருந்து மிகமிகக் குறைந்த தொகையே சாதி ஹிந்துக்களுக்காகச் செலவு செய்யப்பட வேண்டும் என்பது அதன் கொள்கையாக இருந்து வருகிறது அல்லவா? அதன் வருமானத்தில் 95 சத விகிதம் நேரடியாக ஹரிஜனங்களுக்காகவே செலவு செய்யப்பட வேண்டும் என்பதே லட்சியமாகும். இவ்விஷயத்தில் நாம் முன்னுதாரணமாகத் திகழ வேண்டும். மீதியுள்ள ஆசிரியர்கள் யாவரும், அவர்கள் இசைந்தால், கிராமங்களுக்குச் சென்று ஸ்தாபிக்க வேண்டும் என்பது மூன்றாவது தீர்மானமாகும். இதுவும் உங்களுடைய அங்கீகாரத்தைப் பெற்றால்தான் அமலுக்கு வரும். அவர்கள் கிராமங்களுக்குச் சென்று, நான் கூறியுள்ள யோசனைகளுக்கிணங்க ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக வேலை செய்ய வேண்டும். இத்திட்டத்தை நரஹரி உங்களுக்கு விளக்கிக் கூறுவார். அதில் நீங்கள் விரும்பாத எதையும் தயக்கமின்றி நீங்கள் ரத்து செய்துவிடலாம். அங்கு கூடியிருந்த காகாசாகிப், கிஷோர்லால்பாய், மகன்பாய், ஸோமன், நரஹரி ஆகியோர் அதை அங்கீகரித்திருக்கிறார்கள். நரஹரியைப் பற்றி நான் முன்பே தக்கர்பாபாவிடம் பேசியிருக்கிறேன். நரஹரியைப் போல் ஒருவர் இராமல், ஹரிஜன் ஆசிரமம் நல்ல பலனைக் காட்ட முடியாது. அதன் நிர்வாகம் நன்றாக நடைபெற்றால், ஹரிஜன் பிரச்னையைத் தீர்க்க வழியுண்டாகும். அதன் பின்னர் தான் சத்தியாக்கிரக ஆசிரமத்தினால் பலன் ஏற்படும். நரஹரி அவ்விஷயத்தில் மிகவும் அக்கறையுடையவராக இருக்கிறார்; அதில் வெற்றிபெற முடியும் என்ற நம்பிக்கையும் அவருக்கு இருக்கிறது. எனவே நரஹரியைத் தயவு செய்து ஹரிஜன் ஆசிரமத்திலேயே வேலை செய்யவிடுங்கள்.

## 64

வார்தா,
ஆகஸ்டு 24, 1934

உங்களுடைய கடிதமும் தந்தியும் கிடைத்தன. உங்கள் தந்திக்கு நான் பதில் அளிக்கவில்லை. ஏனெனில் ஏற்கனவேயே நேற்று அவ்விஷயமாக நான் எழுதியுள்ளேன். கட்டுரையைப் பார்த்த பின் நீங்கள் ஒன்றும் கூறவில்லையெனில், பின்கண்ட விதம் நீங்கள் ஓர் அறிக்கை வெளியிடலாம்:

"பண்டித மாளவியாஜியும் ஸ்ரீ எம். எஸ். ஆனேயும் அமைத்துள்ள புதிய கட்சியின் நடவடிக்கைகளை நான் வாசித்தேன். அதன் சம்பந்தமாக சில விஷயங்களைத் தெளிவாக்கும்படி கேட்டு எனக்குத் தந்திகளும் கடிதங்களும் வந்திருக்கின்றன. காங்கிரசிடமிருந்து அதிகாரம் பெருமல் காங்கிரசின் பெயரை உபயோகிப்பது ஒழுங்கல்ல என்பதே எனது அபிப்பிராயமாகும். காங்கிரஸ் வாதிகள் அடங்கிய தேசீயக் கட்சி என்று அந்தக் கட்சிக்குப் பெயரிடலாம். ஆனல் அக்கட்சியில் கண்டிப்பாகக் காங்கிரஸ்வாதிகள் மாத்திரமே இருக்கவேண்டும். எனினும் காங்கிரசின் அதிகாரம் பெருமல், அதற்கு காங்கிரஸ் தேசீயவாதிகள் கட்சி என்று பெயரிடுவது ஒழுங்கல்ல. அதிலும் காங்கிரசின் அதிகார பூர்வமான கொள்கைக்கு நேர்மாருன கொள்கையைப் பிரசாரம் செய்வதற்காக அத்தகைய கட்சியை அமைப்பது சிறிதும் ஒழுங்கல்ல. அதற்கு காங்கிரசின் பெயரை வைத்திருப்பது பொது மக்களின் மனத்தில் குழப்பத்தை உண்டாக்கும். எனவே நிலைமையை மீண்டும் ஆராய்ந்து அக்கட்சிக்கு வேறு பெயர் சூட்டும்படி நான் வணக்கத்துடன் வற்புறுத்துகிறேன். காங்கிரஸ்வாதிகளுக்கும் மற்றவர்களுக்கும் அறிவு புகட்டுவதற்காக ஒரு கட்சியை அமைக்க அவருக்குப் பூரண உரிமை உண்டு. நான் மற்ருெரு விஷயத்தையும் வற்புறுத்த விரும்புகிறேன். அதாவது காங்கிரசின் பெயரில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டுக்கு மாத்திரமே தேர்தல்களை நடத்த உரிமை உண்டு. பண்டித மாளவியாஜி, ஸ்ரீ ஆனே ஆகியவர்களுக்கும் காரியக் கமிட்டிக்கும் இடையே ஏற்பட்டுள்ள வேற்றுமைகள் துரதிர்ஷ்டகரமானவை. இங்கிலையில் வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாகக் காரியக்கமிட்டி செய்துள்ள தீர்மானத்தில் கண்ட கொள்கையையே காங்கிரஸ் வாதிகள் விசுவாசத்துடன் ஆதரிப்பார்களென நான் நம்புகிறேன்."

மேற்கண்ட அறிக்கையில் நீங்கள் தகுதியானவை என்று கருதும் மாறுதல்களைச் செய்யுங்கள்.

ராஜேந்திரபாபுவின் கடிதம் விசித்திரமாக இருக்கிறது. அதற்கு ஒரே ஒரு விடைதான் உண்டு. தேர்தல்களில் போட்டியிடுவதற்காக காங்கிரஸ் அபேட்சர்களுக்குத் தேவையாக இருக்கும் தொகைகளுக்கு காங்கிரஸ் எத்தகைய பொறுப்பும் ஏற்றுக்கொள்ள முடியாது. தேர்தல்களுக்காக நாம் தனித்த முறையில் தொகை வசூல் செய்வதும் முடியாத காரியம். தொகை வசூல் செய்ய வேண்டியவர்கள் புலாபாயும் மற்றவர்களும் ஆவர். அதைப் பற்றி புலாபாயுடன் தயவு செய்து பேசுங்கள். அதற்காக காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெற வேண்டும் என்று அவர் விரும்புகிருர். புலாபாயின் விருப்பத்திற்கிணங்க செப்டம்பர் மாத ஆரம்பத்தில் உங்கள் விருப்பம் போல் அக்கூட்டம் பம்பாயிலோ அல்லது வார்தாவிலோ நடைபெறலாம்.

ஜவாஹர்லால் கைது செய்யப்பட்டதாயும், அவரைத் தாம் பார்க்க முடிந்ததாயும் மகாதேவ் தந்தி கொடுத்துள்ளார்.

# 65

வார்தா,
ஆகஸ்டு 25, 1934

நேற்று நான் எழுதிய கடிதம் உங்களுக்கு வந்து சேர்ந்திருக்கு மென நம்புகிறேன். உங்கள் கடிதத்தை மதுரபாபு இன்று கொண்டுவந்தார். செலவை பார்லிமெண்டரி போர்டு ஏற்றுக் கொண்டால் மாத்திரம்தான் தேர்தல்களில் போட்டியிடவேண்டு மென அவரிடம் சொல்லி அனுப்பியிருக்கிறேன். உங்களிட மிருந்தோ அல்லது என்னிடமிருந்தோ அவர்கள் எதுவும் எதிர் பார்க்கக்கூடாது. அவர்களுக்குப் போதிய நம்பிக்கை இருக்கு மாயின், அவர்கள் பணம் எதுவும் செலவு செய்யாமலேயே தேர்தல்களில் தாராளமாகப் போட்டியிடலாம். அது சாத்திய மில்லையாயின், அவர்கள் ஆய்ந்தோய்ந்து பாராமல் தேர்தல் களில் பங்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. செலவு செய் யாமலும், ஒருவருடைய புகழின் பலத்தை மாத்திரம் அடிப்படை யாகக் கொண்டும் தேர்தலில் போட்டியிடுவது எந்த இடத் திலாவது சாத்தியமாயின், அது பீகார்தான். எனினும் அதுபற்றி நான் உண்மையில் எதுவும் கூறுவதற்கில்லை. ஏனெனில் தேர்தல் எப்படி நடைபெறுகிறது என்பதே எனக்குத் தெரியாது. காங் கிரசின் சார்பில் தேர்தல்களில் கலந்துகொள்ளும் அபேட்சகர்கள், செலவில்லாமலோ அல்லது குறைந்த செலவிலோ தேர்தல்களில் போட்டியிடுவதுதான் சிறந்ததாகும்.

நீங்கள் இங்குவர இயலாவிடில் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நேரில் கண்டு பேசுவதன் நோக்கம் கடிதப்போக்கு வரத்தின் மூலமும் நிறைவேறலாம்.

மீராபென் இங்கிலாந்தில் மிகவும் கடுமையாக உழைத்துவரு கிறார் என்று தெரிகிறது. அதனால் என்ன பலன் என்பது இப் போது தெரியாமல் இருக்கலாம். எனினும் பிரிட்டனுக்கு அவரது விஜயத்தினால் யாதொரு பலனும் இல்லை என்று நாம் கருத முடி யாது. மகாதேவ் திரும்பிவந்ததும் வெளிநாட்டிலிருந்து வந்த கடிதங்களின் பிரதிகளை உங்களுக்கு அனுப்ப ஏற்பாடு செய் கிறேன். ஒருவேளை உங்களுக்கும் அக்கடிதங்கள் கிடைத்திருக்க லாம். மூரியல், லாயிட் ஜார்ஜைப் பார்க்கச் சென்று அவருடன் மணிக்கணக்காகப் பேசிக்கொண்டிருந்தார். அவ்விதமாக இந்த ஒரு சில நண்பர்கள் தங்கள் அறிவுக்கு எட்டிய வரையில் அங்கே வேலை செய்துவருகிறார்கள்.

## 66

வார்தா,
ஆகஸ்டு 26, 1934

உங்கள் கடிதத்திற்கு மகாதேவ் பதில் அளித்திருப்பார் என்று நான் நினைக்கிறேன். ராஜா இன்று இங்கிருந்து புறப்படுவதற்காக அவசரமாக வந்தார். அவருடன் நான் நீண்டநேரம் பேசிக் கொண்டிருந்தேன். எனவே கடிதம் எழுதுவதற்குத் தடை ஏற்பட்டுவிட்டது. ஆனேயும் இங்கு வந்து திரும்பிச் சென்றுவிட்டார். அவர் செய்த காரியமெல்லாம் மாளவியாஜியிடமிருந்து பெற்றுவந்த அன்பையும் வாழ்த்துக்களையும் எனக்குத் தெரிவித்ததுதான். நான் ஏதாவது சொல்லுவதற்கு இருக்கிறதா என்று அவர் என்னைக் கேட்டார். ஒழுங்கையும் மரியாதையையும் நிலை நிறுத்த அவர்கள் விரும்பினுல், ஒவ்வோரிடத்திலும் அவர்கள் பரஸ்பரம் கலந்து ஆலோசித்த பின் மாத்திரமே அபேட்சகர்களை நியமிக்க வேண்டும் என்றும், எதிர்க்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் நியமிக்கக் கூடாது என்றும் நான் கூறினேன். நாகபுரிக்குச் செல்லும் ரயிலைப் பிடிக்கத் தாம் விரும்புவதாகக் கூறிவிட்டு அவர் சென்ருர். மீண்டும் திரும்பி வருவதாகவும் உறுதி கூறினுர். இந்தப் புதிய கட்சி, விஷயங்களைக் குழப்பியிருக்கிறது. அவர்களுக்குக் குறிப்பிடத் தக்க பலன் எதுவும் ஏற்படுமென நான் நினைக்கவில்லை.

காரியக் கமிட்டி வார்தாவில் கூடுவதால் யாதொரு அபாயமுமில்லை. அது இங்கே கூடினுல், உங்களைப் பார்க்கவாவது எனக்குச் சந்தர்ப்பம் கிடக்கும்.

உங்கள் உடல் நலம் அபிவிருத்தியடைந்து நீங்கள் பலம் பெற்றுவருகிறீர்கள் என்று நம்புகிறேன்.

மாலைப் பிரார்த்தனைக்குப் பின் நாஞகை மேற்கொண்டுள்ள மௌன விரதத்தின்போது இதை அவசரம் அவசரமாக எழுதித் தள்ளிவிட்டேன். மேலும் ஏதாவது இருந்தால் நாளைக்கு எழுதுகிறேன்.

ஆகஸ்டு 27, 1934

பின் குறிப்பு: இன்னும் ஒரு விஷயம். நம்முடைய புத்தக சாலைகளைப் பற்றி பாலுபாய்க்கு (தாகூர்) இப்போது நான் எழுத வேண்டிய அவசியமில்லை. வித்தியாபீட புத்தகங்களை நீங்கள் மீண்டும் பெற்ருல், அவர்களிடம் இன்னும் ஆசிரமத்திற்குச் சொந்தமான ஐம்பதாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள புத்தகங்கள் இருக்கும். தற்போது அவை உபயோகிக்கப்படாமல் கிடக்கின்றன. அவர்கள் புத்தக சாலைக்கு ஓர் அதிகாரியை நியமித்தால், புத்தகங்களுக்கு முறையாக ஓர் அட்டவணையையும், வாசிக்கக் கொடுப்பதற்கான விதிகளையும் தயாரிக்கலாம்; பொது மக்கள் வாசிப்பதற்குப் புத்தகங்களை ஒழுங்காகக் கொடுத்து வரலாம்.

ஆண்ட்ருஸும், ஸ்டான்லி ஜோன்ஸும் இங்கே வந்திருக்கிருர்கள். புலாபாய் நாளை உங்களைச் சந்திப்பார்.

## 67

வார்தா,
செப்டம்பர் 3, 1934

எழுதுவதில் இன்றைக்கு நான் என்னையே மிஞ்சிவிட்டேன்! வேதனையால் இடுப்பும் முதுகும் முரண் செய்கின்றன. இருந்தாலும் தற்போது அதை நான் லட்சியம் செய்யக் கூடாது.

நரஹரியின் கடிதத்தை இன்றுதான் நான் பார்த்தேன். அவருக்கு ஏதோ அநீதி செய்யப்பட்டிருக்கிறது என்றே நான் கருதுகிறேன். கோபம் அடையும்படியாக அக் கடிதத்தில் நிச்சயமாக எதுவும் இல்லை. பம்பாயில் உங்கள் முன்னிலையில் அவர் தமது புகாரைக் கூறமுடியாததால், அவர் மிகப் பணிவுடன் எழுத்து மூலம் அதை இப்போது தெரிவித்திருக்கிறார். காகா அங்கேயே தங்க வேண்டும் என்பதும், மீண்டும் ஒத்துழைப்பு நிலவ வேண்டும் என்பதும் அவரது விருப்பம். அவ்விதம் செய்ய அவர்கள் உங்களைத் தூண்டுவதன் மூலம் மிகவும் அதிகமாக எதிர்பார்த்துவிட்டார். உங்களுடைய குணம் அவருக்குத் தெரியாது என்பதையே இது காட்டுகிறது. நீங்கள் எனக்கு எழுதிய கடிதமே உங்களுடைய இறுதியான அபிப்பிராயம் என்பதை அவர் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அந்த அபிப்பிராயம் தெளிவாகவும், விவரமாகவும் இருக்கிறது. குஜராத்தில் காகா இருக்க வேண்டும் என்று யாராவது விரும்பினால் அது உங்களுடைய அங்கீகாரத்தையும் ஆசியையும் பெற்றிருக்க வேண்டும் என்று நரஹரிக்கு நான் எழுதினேன். நரஹரிக்கு நீங்கள் காரமாக பதில் எழுதியதாக கிஷோர் லால் என்னிடம் கூறினார். என்னுடைய அபிப்பிராயம் சரியானது என்று நீங்கள் கருதினால், தயவு செய்து அவரை உற்சாகப்படுத்தி ஒரு கடிதம் எழுதுங்கள். நீங்கள் மீண்டும் நரஹரியின் கடிதத்தை வாசிக்க விரும்பலாம் என்பதற்காக அதைத் திருப்பி அனுப்பியிருக்கிறேன்.

## 68

வார்தா,
செப்டம்பர் 20, 1934

நரஹரியைப் பற்றி நீங்கள் கூறியிருப்பதை நான் வாசித்தேன். நீங்கள் அதைத் தொல்லையாக நினைப்பது இயல்பேயாகும். இதெல்லாம் வேண்டுமென்றே செய்யப்படவில்லை. வீண் தப்பெண்ணமே இதற்கெல்லாம் காரணமாகும். காலம் செல்லச் செல்ல இதெல்லாம் சரியாகிவிடும். யாருக்கும் கெட்ட எண்ணம் இல்லை என்பது நிச்சயம். இந்த மனக்கசப்பு தீர வேண்டும் என்பதற்காகவாவது, காகா தற்போதைக்கு குஜராத்தை விட்டுச் செல்லக் கூடாது என்று தீர்மானித்திருக்கிறேன். இருக்கும் இடத்திலிருந்தே அவரால் இந்தியா முழுவதும் கல்வியை நடத்தவும், அழிக்கவும் முடியும்.

வித்தியா பீடத்தை விட்டு நீங்கள் வெளியேறுவதென்ற பேச்சிற்கே இடமில்லை. மேலும் நான் கூறுவதை நீங்கள் ஒத்துக்கொள்வதாயின், வித்தியாபீடத்தின் தீர்மானங்களுக்கிணங்க, அதற்காக வேலை செய்யும் பல்வேறு நபர்களுக்கும் தொகை கொடுக்க வேண்டும். வித்தியாபீடம் ஒரு நடமாடும் ஸ்தாபனமாக இருக்கும். ஒவ்வொருவரும் அவரவருக்கு இடப்பட்ட வேலையைச் செய்வார். கல்வியைப் பற்றிய எந்த முடிவுகளையும் காகாவோ அல்லது வித்தியா பீடத்தின் ஆசிரியர்களோ தான் செய்வார்கள். தாம் வேலை செய்யும் இடத்தை யார் தேர்ந்தெடுக்கிறாரோ அவரே சுதந்திரமாக அப்பிரதேச சம்பந்தமான பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டும் என்பது எனது அபிப்பிராயமாகும். ஒருவர் மற்றொருவரிடம் கேள்விகள் கேட்க விரும்பினால், அவர் ஒரு நண்பர் என்ற முறையிலேயே கேள்விகள் கேட்க வேண்டும். இவ்விஷயத்தை காகா, கிஷோர்லால், நரஹரி ஆகியோருடன் நான் பூரணமாக விவாதித்தேன். நீங்கள் என் யோசனையை விரும்பினால், ஒரே கடிதத்தில் அதை நடைமுறையில் கொண்டுவந்து அந்த அத்தியாயத்தை முடித்துவிடுங்கள்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறீர்களென நம்புகிறேன்.

ராஜேந்திரபாபு 23-ஆம் தேதி வருவார். அப்போது நீங்களும் இங்கே இருப்பீர்கள் அல்லவா?

## 69

வார்தா,
*செப்டம்பர் 21, 1934*

உங்கள் மீது நான் மற்றொரு பளுவைச் சுமத்துகிறேன். நான் சுமித்ராவை பம்பாய்க்கு அனுப்புகிறேன். அவளது கண்களைப் பரிசீலனை செய்து சிகிச்சை அளிக்க மணி ஏற்பாடு செய்ய வேண்டும்.

எனது அறிக்கையைப்* பலரும் ஆட்சேபிக்கின்றனர். காங்கிரசிலிருந்து நான் விலகிக் கொள்ளும்படியான சூழ்நிலையை நீங்கள் தான் முயற்சி செய்து உருவாக்க வேண்டும். நூற்பதிலும் கதர் உடுத்திக் கொள்வதிலும் யாரும் அக்கறை கொள்ளவில்லை.

நேற்று ஆனே என்னை வந்து பார்த்தார். அவர் இரண்டு மணி நேரம் என்னுடன் பேசினார். எங்களுடைய கூட்டு அறிக்கையை நீங்கள் வாசித்திருப்பீர்கள். மாளவியாஜி 26-ம் தேதி வருவாரென்று நேகிராம் தந்தி கொடுத்துள்ளார். அத்தகைய நீண்ட தூரப் பிரயாணத்தை மாளவியாஜி மேற்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்று நான் ஆனேயிடம் கூறினேன்.

---

* காங்கிரசிலிருந்து விலக உத்தேசித்திருப்பதாகத் தாம் விடுத்த அறிக்கையையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

எங்கு தோல்வி ஏற்படும் போல் தோன்றுகிறதோ அங்கிருந்து இரு கட்சிகளும் வாபசாகி விட்டால், அதுவே போதுமானது. சிந்தாமணியும், குன்ஸ்ருவும் தேர்தலில் வெற்றிபெறவேண்டும் என்பதே எனது திட்டவட்டமான விருப்பமாகும். அவர்களால் மிகுந்த பலன் உண்டு. ஆனால் காங்கிரசிற்குள் அவர்களைக் கொண்டுவரும் வழி எதுவும் எனக்குத் தெரியவில்லை.

## 70

வார்தா,
அக்டோபர் 4, *1934*

நேற்று உங்கள் கடிதம் கிடைத்தது. உங்களுக்குப் பதில் எழுதும்படி நான் கிஷோர்லாலைக் கேட்டிருக்கிறேன். நான் ஓய்ச்சல் ஒழிவின்றி மும்முரமாக வேலை செய்தும் கூட, ஒவ்வொரு நாளும் செய்ய வேண்டிய வேலைகள் பாக்கி நின்று விடுகின்றன.

நேற்று ஆனே என்னைக் கண்டு பேசிக் கொண்டிருந்தார். நேற்று முன்தினம் நேகிராம் இங்கு வந்தார். அவரும் நீங்களும் கலந்து பேச வேண்டும் என்றும், ஏதாவது கருத்து வேற்றுமை இருந்தால், பகதூர்ஜி, அல்லது தேஜ் பகதூர் சாப்ரூ போன்ற யாராவது மத்தியஸ்தராக நியமிக்கப்பட வேண்டும் என்றும் நான் ஆனேய்க்கு யோசனை கூறினேன். ஆனால் எனது யோசனையை அவர் ஆதரிக்கவில்லை. அபேட்சகர்களின் பெயர்கள் உறுதியான பின் அது பற்றி யோசிக்கலாம் என்று அவர் கூறிவிட்டார்.

நவம்பரில் தேர்தல் நடந்தால் நன்றாக இருக்கும் என்றும் அவர் கூறினார். "மாளவியாஜிக்காகத்தான் தேர்தலை ஒத்திவைக்க வல்லபாய் மறுத்துவிட்டார். நீங்கள் அவருக்கு ஒரு தந்தி அனுப்பினால் ஒரு வேளை அவர் ஒத்திவைக்க இசையலாம்" என்று அவரிடம் நான் கூறினேன். இது நடைமுறையில் சாத்தியமா என்பது எனக்குத் தெரியாது.

## 71

வார்தா,
அக்டோபர் *8, 1934*

மகாதேவுக்கு நீங்கள் எழுதிய கடிதங்களை வாசித்தேன். டாக்டர் அன்சாரியையும் அழைத்துக் கொண்டுவர நீங்கள் முயற்சி செய்யுங்கள்.

ஈசுவரசரணைப் பற்றிப் பல தந்திகள் வந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் உங்களுக்கு நான் அனுப்பவில்லை. எனினும் பாபா ராகவதாசிடமிருந்து வந்த தந்தியை மாத்திரம் அனுப்பியிருக்கிறேன். அவருக்கு எதிராக கிருஷ்ணகாந்த மாளவியா நிற்கிறார். ஈசுவரசரன் வாபஸ் செய்து கொள்ளவேண்டும் என்றும்,

அவருக்குப் பதிலாக சிந்தாமணி நிற்கவேண்டும் என்றும் ஆனே யோசனை கூறுகிறுர். பகவன்தாசுக்கு எதிர்ப்பு இருக்கக்கூடாது என்றும் அவர் கூறுகிறுர். அவ்விதம் செய்வது சாத்தியமாயின், அது சிறந்ததுதான் என்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது. சிந்தாமணிக்கு ஆதரவாக ஈசுவரசரண் விட்டுக் கொடுக்க வேண்டும். பகவான்தாசுக்கு எதிராகத் தேர்தல் போராட்டம் நடைபெறுமாயின், அது உறவுகளைப் பாதித்து மனக் கசப்பை உண்டாக்கும். இவ்விதம் நான் உங்களுக்குத் தந்தியும் கொடுத்திருக்கிறேன்.

காங்கிரஸ் கூட்டத்தைத் தள்ளிவைக்கக் கூடாது என்பது பற்றி நாரிமனிடமிருந்தும், மதுரதாசிடமிருந்தும் நீண்ட தந்திகள் வந்திருக்கின்றன. தள்ளிவைப்பதால் வீண் பணச் செலவுதான் ஏற்படுமென எனக்குத் தோன்றுகிறது. எப்படிச் செய்தாலும் எனக்கு ஒன்றுதான். வந்த தபால்களையும், தந்திகளையும் உங்களுக்கு அறிவிக்கும் ஒரு தபால்காரனுகவே நான் நடந்து கொண்டுள்ளேன். காங்கிரசையோ அல்லது பார்லிமெண்டரி போர்டையோ பாதிக்கக் கூடிய எதுவும் நிகழும்படி நீங்களோ அல்லது நானே விட்டுவிடக் கூடாது. நான் இருக்கும் இடத்திலிருந்தே அத்தகைய விஷயங்களையொட்டி எதுவும் கூறக் கூடிய நிலையில் நான் இல்லை.

கான் சகோதரர்கள் வங்காளத்தைவிட்டு வெளிக்கிளம்ப முடியாதவர்களாக இருக்கிறுர்கள்; அவர்களை 19-ஆம் தேதி இங்கு வரும்படி செய்வது கடினமாகும். நான் அவர்களுக்கு எழுதியிருக்கிறேன். அதற்குமேல் நாம் எதுவும் செய்வதற்கில்லை.

ஆரஞ்சு இளவரசரான வில்லியத்தைப் பற்றிய நினைவு எனக்கு வருகிறதெனினும், மீண்டும் நோய்க்கு இடம் கொடுத்துவிடாதீர்கள். அதாவது அவர் மூலமாக ஒரு வேலை நடைபெற வேண்டும் என்று கடவுள் விரும்பியதால், சரமாரியான துப்பாக்கி குண்டுகளுக்கு நடுவில் கூட அவருக்கு யாதொரு காயமும் ஏற்படவில்லை.

## 72

வார்தா,
*நவம்பர் 18, 1934*

உங்களிடமிருந்து வந்த மூன்று கடிதங்களையும் வாசித்தேன். கிராம உத்தியோக சங்கத்தின் (கிராமக் கைத்தொழில்கள் சங்கம்) உண்மையான இயல்பை நீங்கள் உணர்ந்து கொள்ளவில்லை என்பது அக் கடிதத்திலிருந்து எனக்குத் தெரிகிறது. கிராமங்களில் உற்பத்தி செய்யக் கூடிய பொருட்களையெல்லாம் கிராமப் பிரதேசங்களிலிருந்து வாங்கவேண்டும் என்பதுதான் அந்தச் சங்கத்தின் நோக்கமாகும். அவ்விதமாக நாம், கிராமங்களிடம் பட்டுள்ள கடனை ஓரளவு திருப்பிக் கொடுக்கலாம். அவ்விதம் செய்ய நமக்குத் திறன் உண்டா, இல்லையா என்பது வேறு விஷயமாகும். நம்

மில் ஆறு அல்லது ஏழு பேர் ஆரம்பித்த இயக்கங்கள் பொது மக்களின் ஆதரவைப் பெற்றிருக்கின்றன. நான் உத்தேசித்துள்ளவாறு அவ்விதம் செய்வது நமது கடமையெனில், உதாரணமாக நாம் எல்லோரும் கிராமங்களில் செய்யப்பட்ட காகிதம், பேனுக்கள், மை, பேனுக் கத்திகள், சோப், சர்க்கரை, மாவு, வெல்லம், அரிசி ஆகியவற்றையே உபயோகிக்கவேண்டும். அவற்றில் பலவற்றை, கிராமங்களில் உற்பத்தி செய்ய முடியாமல் இருக்கலாம். எனினும், அவ்விதம் செய்வதை நமது மூலாதாரமான ஒரு கடமையாகக் கருதுவோமாயின், கோடிக்கணக்கான ரூபாய் கிராமவாசிகளுக்குப் போய்ச் சேரும்; கிராமங்களின் மதிப்பும் உயரும். அப்படியானுல்தான் நாம் கனவு காணும் கிராமவாசிகளின் சுயராஜ்யத்தை அடைய முடியும். அது பலாத்காரமற்ற சுயராஜ்யமாகவும் இருக்கும்.

இடைவிடாது வேலை செய்யும் அரை டஜன் நண்பர்களாவது இருந்தால்தான் சங்கம் ஒழுங்காகச் செயல் புரிய இயலும். காங்கிரஸ்வாதிகள் அல்லாத, ஆனுல் காங்கிரஸ் மனப்பான்மையுள்ளவர்களை அதில் சேர்த்துக் கொள்ளவே நான் முயற்சித்து வருகிறேன். சில காங்கிரஸ்வாதிகளும் அதில் இருக்கலாம். புதிய ஸ்தாபனத்தில் ஜெயராம்தாசையும் கவர நான் முயற்சித்து வருகிறேன். ராஜேந்திரபாபுவும், நீங்களும் அவருக்கு அனுமதி அளிப்பீர்கள் என்பதே எனது நம்பிக்கையாகும். இதில் கான் சாகிபுக்கும் அக்கறை ஏற்படும்படி செய்ய நான் முயற்சித்து வருகிறேன். ஜல்பாயும் இதில் சேருவாரா என்பது எனக்குத் தெரியாது. அவர் சேராவிடில், குர்ஷெத்தை அழைக்க நான் விரும்புகிறேன். நான் கண்டுவரும் கனவுகள் இவைதான். அவை நடைமுறையில் வரலாம் அல்லது வராமற்போகலாம்; அவை எனக்கு மிகுந்த ஆறுதல் அளிக்கின்றன. உங்களுக்கு முக்கியமான அலுவல்கள் இராவிடில், இப்போது நீங்கள் வரலாம். முதலில் உங்கள் மூக்கிற்குச் சிகிச்சை செய்து கொள்ளவேண்டியது அவசியமாகும். குஜராத்திலிருந்து எத்தனை ஊழியர்களை நான் இந்த வேலையில் ஈடுபடும்படி செய்ய வேண்டும்? ரவிபாய் விண்ணப்பம் அனுப்பியிருக்கிருர். தற்போதைய பதவியை அவர் விட்டிருந்தால், உங்களுடைய அனுமதியின் மீதுதான் வரமுடியுமென அவருக்கு நான் எழுதியிருக்கிறேன்.

தேர்தல் முடிவுகள் உண்மையில் ஆச்சரியகரமானவை.

## 73

வார்தா,
நவம்பர் *29, 1934*

மீராபென் புதன்கிழமை அங்கு வந்து சேருவார். எவ்விதம் அவரை வரவேற்பது தகுதியென்று உங்களுக்குத் தோன்றுகிறதோ, தயவு செய்து அவ்விதமே செய்யுங்கள். சாத்தியமாயின் நீங்களே வாருங்கள்.

கிராமக் கைத்தொழில்கள் சங்க போர்டை அமைக்கும் விஷயமாக நாங்கள் இன்னும் யாதொரு தீர்மானமும் செய்யவில்லை. யார் தலைவராக இருப்பது என்பதே பெரிய கேள்வியாக இருக்கிறது. அதன் தலைமை அலுவலகம் வார்தாவில் இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். செயல்படும் அதன் கிளைகளின் தொகை ஏராளமாக இருக்கும்; ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒவ்வொரு ஜில்லாவுக்கும், ஒவ்வொரு தாலுகாவுக்கும் கூட ஒவ்வொன்று இருக்கும். மற்ற விவரங்கள், அது எப்படி செயல்படுகிறது என்பதைப் பொறுத்தவை.

## 74

வார்தா,
டிசம்பர் *12, 1934*

உங்களுடைய கடிதம் கிடைத்தது. கான் சாகிபிற்காக நான் ஒரு புதிய அறிக்கையை* அனுப்பியிருக்கிறேன். இதுதான் சரி என்றும், இப்படித்தான் செய்ய வேண்டும் என்றும் நான் நினைக்கிறேன். நான் அவருக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். அதை நீங்களும் வாசிக்கலாம். ஏனெனில் நான் அவ்விஷயமாகத் தங்களுக்கு மேற்கொண்டு எதுவும் எழுத வேண்டிய அவசியம் இராது அல்லவா? அதில் வருத்தத்தைத் தெரிவித்திருப்பது மிகவும் முக்கியமானதென்று நான் கருதுகிறேன். எனினும் இவ்விஷயமாக நீங்களே இறுதியான முடிவு செய்ய வேண்டும். இவ்வளவு தூரத்தில் இருந்து கொண்டு என்னால் திட்டவட்டமாக எதுவும் கூற முடியாது. ஒரு வக்கீலை வைத்துக் கொள்ளவேண்டும் என்றும் நான் கருதுகிறேன். அவர் கோர்ட்டில் அறிக்கையை வாசிக்க வேண்டும். தாம் குற்றவாளி என்றோ அல்லது குற்றவாளி அல்ல என்றோ அவர் கூறக்கூடாது. தண்டனையை எவ்விதத்திலும் குறைக்கும்படி வக்கீல் கேட்கக் கூடாது. அவசியமாயின், அவர் பிரசங்கத்தை விமர்சனம் செய்யலாம் அல்லது வழக்கு நடவடிக்கைகளைப் பேசாமல் கவனித்துக் கொண்டிருக்கலாம். சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்வதென்ற பேச்சிற்கே இடமில்லை. இவையெல்லாம் நான் கூறும் யோசனைகளே. உங்கள் உசிதம் போல் இவற்றை நீங்கள் ஒப்புக் கொள்ளலாம் அல்லது நிராகரிக்கலாம்.

## 75

வார்தா,
டிசம்பர் *13, 1934*

சார்லிபாயை (ஆண்ட்ரூஸ்) அமைதியாக இருக்கும்படி செய்வது கஷ்டமாகும். அவரது நடவடிக்கையால் ஏதாவது தீங்கு

---

*அரசாங்கத்திற்கு விரோதமாக துவேஷப் பிரசங்கம் செய்ததாக கான் சாகிப் மீது வழக்கு நடந்து கொண்டிருந்தது. அதையொட்டி கோர்ட்டில் கான்சாகிப் வெளியிடுவதற்காகத் தயாரிக்கப்பட்ட அறிக்கையையே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

ஏற்பட்டால்கூட, அதை நாம் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். எனினும் நான் மிகுந்த கண்காணிப்புடன் இருந்து வருகிறேன். அவருடன் மனம்விட்டுப் பேசினேன். இதைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். அவர் அடிக்கடி இங்கு வருவதிலும் போவதிலும் விசேஷம் எதுவும் இல்லை என்பதை இப்போது மற்ற வர்களும் அறிந்து கொண்டுள்ளனர்.

மற்றொரு பிரச்னை கிருபளானியின் நடவடிக்கையே. ராஜா ராமை அவர் வேலையிலிருந்து நீக்கியது பரிதாபகரமானது. கிருஷ்ணதாஸ் தனியாக அந்த வேலையைச் சமாளிக்க முடியாது என்று நான் எண்ணுகிறேன். எனினும் அதன் சம்பந்தமாக போதிய அளவு எனக்கு எதுவும் தெரியாது. எனவே நீங்களே கிருபளானிக்கு ஏன் எழுதக் கூடாது? அவரது அறிக்கைகளை நான் வாசிக்கவில்லை. அவற்றில் அவர் யோசனையின்றி ஏதாவது கூறியுள்ளாரா? அவ்விதமாயின், அவருக்கும் நான் எழுதுகிறேன். நான் எழுதினால், அவர் உடனே நிலைமையைச் சீர்படுத்திக் கொள்வார்.

பம்பாய்க் கூட்டத்தில் நீங்கள் மிகவும் நிதானமாக நடந்து கொண்டிருக்கிறீர்கள். அதில் நீங்கள் செய்த பிரசங்கம் எனக்கு மிகவும் திருப்தியைக் கொடுத்திருக்கிறது. அதையெல்லாம் மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதுதான்.

ஒரு சில முஸ்லிம்களின் நடத்தைக்காக நீங்கள் ஏன் மன வேதனை அடையவேண்டும்? நமது சொந்த மதத்தை நாம் கடைப் பிடித்துவருவோம். சிந்துவிலும் லாகூரிலும் நடந்த கொலைகளைப் பற்றி நான் மௌலானா ஆசாதுக்கும் டாக்டர் அன்சாரிக்கும் எழுதி யிருக்கிறேன். அவ்விஷயமாக ஏதாவது செய்வதாக அவர்கள் பதில் எழுதியிருக்கிறார்கள். அப்பிரச்னையில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் சகித்துக் கொள்வதைத் தவிர நாம் வேறு எதுவும் செய்வதற்கில்லை. நாம் ஜாக்கிரதையாக இருந்துவருவதே போதுமானது.

நான் 28-ஆம் தேதி டில்லிக்குப் புறப்படுகிறேன். அங்கே ஒரு மாத காலம் தங்கியிருப்பேன். கிராமக் கைத்தொழில்கள் சங்கக் கூட்டம் ஜனவரி 31-ஆம் தேதி நடக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது. நீங்களும் நிச்சயமாக டில்லிக்கு வருவீர்கள் அல்லவா? ஜனவரி 15-ஆம் தேதி காரியக் கமிட்டிக் கூட்டம் நடந்தால் எனக்கு வசதியாக இருக்கும். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரமாக நான் டில்லியிலிருந்து புறப்பட்டுவிட உத்தேசித் திருக்கிறேன்.

உங்களுக்கு மூக்கில் ஏற்பட்டுள்ள புண் எப்படி இருக்கிறது?

## 76

வார்தா,
டிசம்பர் 23, 1934

மில் சொந்தக்காரர்கள் சங்கம் நிறைவேற்றியுள்ள தீர்மானங்களை நீங்கள் நிச்சயமாகப் பார்த்திருக்கலாம். அவர்கள் காரணமின்றி சச்சரவுகளை ஆரம்பிக்காமல் பார்த்துக் கொள்ளுங்கள். மில் சொந்தக்காரர் எவராவது உங்கள் வார்த்தைக்குச் செவிகொடுப்பாராயின், அவருடன் பேசுங்கள். நான் கஸ்தூரிபாய்க்கும் சமன் பாய்க்கும் எழுதியிருக்கிறேன்.

நீங்கள் எங்கு சென்றாலும் தயவு செய்து கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தைப் பற்றிச் சொல்லிவாருங்கள். அதன் மூலம் எதிர் காலத்தில் மகத்தான பலன்கள் ஏற்படும்.

## 77

வார்தா,
டிசம்பர் 26, 1934

உங்கள் கடிதம் கிடைத்தது. கங்காதரராவுக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன். அவரிடமிருந்து தமக்கு வந்த ஒரு கடிதத்தை ஜம்னாலால்ஜி எனக்கு அனுப்பியிருக்கிறார். அவ்விஷயத்தைப் பற்றி எனக்கு எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. எனவே அவரை டில்லிக்கு வரும்படி கேட்டிருக்கிறேன். நான் முன்போல் பணம் கொடுத்துக் கொண்டே இருக்க முடியாது. பணம் எங்கிருந்து வரும்?

கராச்சியிலும் லாகூரிலும் நடந்த கொலைகளைப் பற்றி பிரெல்வியின் கட்டுரையை நீங்கள் பார்த்திருக்கலாம். அதுபற்றி டில்லியில் என்னால் என்ன செய்ய முடியும் என்பதைப் பார்க்கலாம்.

டாக்டர் கான் சாகிப் பஞ்சாபுக்குச் செல்லக்கூடாது என்று தடுத்து அதிகாரிகள் உத்தரவு பிறப்பித்திருப்பதால், அவர் டில்லிக்குச் செல்ல நேர்ந்தது. தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ள பிரதேசங்களில் இருக்கும் ரயில் ஸ்டேஷன்களின் வழியாகக் கூட செல்லக் கூடாதா என்று கான் சாகிப் கேட்டிருந்தார். அதற்கு அதிகாரிகள் அளித்துள்ள பதிலில், தடையுத்தரவு 28-ஆம் தேதி காலாவதியாகிறதென அறிவித்திருக்கிறார்கள். எனவே எல்லை மாகாணத்திற்கு அவர் செல்லக்கூடாது என்று பிறப்பிக்கப்பட்டுள்ள தடையுத்தரவும் 29-ஆம் தேதி ரத்தாகிவிடுகிறது. ஆகையால் அந்த உத்தரவு மேலும் நீடிக்கப்பட்டாலன்றி, எல்லைப்புற மாகாணத்துக்கு கான் சாகிப் செல்ல எவ்விதத் தடையுமில்லை.

கிராமக் கைத்தொழில்கள் சங்க அலுவல்கள் சம்பந்தமாக வைகுண்ட மேத்தா இங்கு வந்திருக்கிறார். அவர் இன்னும் இரண்டு நாட்கள் வரையில் இங்கேயே தங்கியிருப்பார்.

ஆக்கத் திட்டத்தையொட்டி மிகவும் உறுதியாக இருங்கள். மக்கள் சோம்பேறித் தனத்தை விட்டுவிட்டு தங்கள் கடமையைச் செய்யாவிடில், போராட்டமும் இராது, சுயராஜ்யமும் வராது. எனவே நமக்குள் ஒத்துழைப்பு மிகவும் அவசியமாகும்.

## 78

வார்தா,
ஜனவரி *30, 1935*

கே. டி. ஷா என்னைப் பார்க்க வந்திருந்தார் என்பதைப் பற்றி எழுத நான் மறந்துவிட்டேன். போர்டில் அவர் வேலை செய்ய விரும்புகிறார். அவரை உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும் என்றே நான் கருதுகிறேன். அவரை, கௌரவ பொருளாதார ஆலோசகராக நியமிக்கலாமா? அவர் சம்பளம் எதையும் விரும்ப வில்லை.

உங்களுடன் பிரயாணம் செய்யலாமென நான் நம்பிக் கொண்டிருந்தேன். டில்லியில் பேச நமக்கு நேரமே கிடைக்கவில்லை, இருந்தாலும் நீங்கள் அங்கே தங்கியிருந்தது நல்லதுதான். ஆண்ட்ரூசிடமிருந்து மற்றொரு கடிதம் வந்தது. ஆகாசக் கோட்டை கட்டுவதைத் தவிர அதில் வேறு எதுவும் இல்லை.

டில்லியிலுள்ள குளிருக்கும் இங்கேயுள்ள வெப்ப நிலைக்கும் எவ்வளவு வேற்றுமை !

(சர்தார் டில்லியிலிருந்தபோது இக்கடிதம் அவருக்கு காந்திஜியினால் எழுதப்பட்டதாகும்.)

## 79

வார்தா,
மார்ச் *18, 1935*

அவ்விஷயமாக எத்தகைய யோசனையும் கூறுவது கடினமாகும். பாலுபாய் தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டுள்ளார் என்று தோன்றுகிறது. சர்க்காருக்காக அவர் பிரார்த்தனைகளுக்கு ஏற்பாடு செய்வதாயின், அவர் ஏன் இனிப்புப் பட்சணங்களும் வழங்கக் கூடாது? சர்க்கார் உத்தரவில் நிர்ப்பந்தம் எதுவும் இல்லை. அது எப்படியாயினும், பாலுபாய் அவரது நண்பர்களுடன் கலந்து ஆலோசிக்கவேண்டும். எல்லோரும் உறுதியாக இருந்தால், சர்க்காருக்கும் மக்களுக்கும் இடையே நடந்துவரும் போராட்டம் இன்னும் தீர்ந்துவிடவில்லை என்று அவர்கள் கூறலாம். அந்தக் கொண்டாட்டங்கள் ஒரு தனி நபரின் பிறந்த தினத்தையொட்டியவை அல்ல, ஒரு மன்னரின் ஆட்சியையொட்டியவை. எந்த ஆட்சியின் கொள்கையை அவர்கள் ஆதரிக்கவில்லையோ அந்த ஆட்சி சம்பந்தமான வைபவங்களில் கலந்து கொள்வது கலப்பற்ற போலி

வேடமேயாகும். சட்ட மறுப்பு தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது. எனவே சர்க்கார் உத்தரவுகள் விடுத்து எதையும் சாதித்துக் கொள்ள முடியும். ஆனால் மனப்பூர்வமாக அவர்களுடைய உத்தரவுகளை நிறைவேற்றுவோர் அதிகமாக இருக்கமாட்டார்கள். மக்களின் விருப்பத்திற்கு மாறாக அதில் கலந்து கொள்ளும்படி சர்க்கார் அவர்களை வற்புறுத்த முடியாது. அவர்கள் சாத்தியமானவரையில் யாருடைய உணர்ச்சிகளையும் புண்படுத்த விரும்பவில்லை. எனவே அவ்வைபவங்களில் கலந்து கொள்ளும்படி சர்க்கார் பொது மக்களை நிர்ப்பந்தப்படுத்தாமல் இருப்பதே புத்தி சாலித்தனமாகும். அதைப் பற்றி அவர்கள் தடபுடல் எதுவும் செய்யக் கூடாது. விருப்பம் உள்ளவர்கள் மாத்திரம் அவ்வைபவங்களுக்கு வருவார்கள். சர்க்கார் அவ்விஷயமாக முனிசிபாலிடிக்கு எதுவும் எழுதக் கூடாது. முனிசிபாலிடியும் சர்க்காருக்கு எதுவும் எழுதவேண்டாம்; அதன் சம்பந்தமாகத் தீர்மானம் நிறைவேற்றவும் வேண்டாம்.

தற்போது முனிசிபாலிடிக்கு சில வசதிகள் அளிக்கப்பட்டுள்ளன. என்றாலும், வைபவங்களில் அது கலந்து கொள்ள முடியாது.

இதுதான் என்னுடைய பொதுவான அபிப்பிராயமாகும். அகமதாபாத்தில் உள்ள விசேஷ நிலைமையை உன்னி வேறுவிதமான நிலையை மேற்கொள்வது அவசியமாயின், அதுபற்றி நான் எதுவும் சொல்லுவதற்கில்லை.

இதைப் பார்த்தபின் உங்களுக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அவ்விதம் நீங்கள் பாலுபாய்க்கு யோசனை கூற வேண்டும்.

(இக்கடிதம், சர்தார் பம்பாயில் இருந்தபோது எழுதப்பட்டதாகும்.)

## 80

வார்தா,
மார்ச் *30, 1935*

யாருடைய அழைப்புக்கும் ‘சரி’ என்று நான் கூறவில்லை. பத்திரிகைகளில் அதைப் பற்றி நான் வாசித்தபோது மிகவும் ஆச்சரியம் அடைந்தேன். இப்போது எனக்கு எந்த இடத்துக்கும் செல்ல விருப்பமில்லை. என் விருப்பப்படி நடப்பதாயின், நான் மௌன விரதத்தை நீடித்து அனுசரிப்பேன். அது என் மனத்திற்கு மிகவும் உகந்ததாக இருக்கிறது. அவசியமாயின், நான் யோசனைகள் கூறுவேன். எனினும் உங்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக யார் செல்ல முடியும்? என்னை வெளியே இழுக்க உங்களைத் தவிர வேறு யாராலும் முடியாது. இப்போது கூட, நீங்கள் அனுமதித்தால் இன்னும் ஒரு வருட காலத்துக்கு நான் இப்படியே

இருந்துவர விரும்புகிறேன். நீங்கள் என்னை எங்கேயாவது அழைத்துச் செல்ல விரும்பினால் அது பார்சாத் நகரமாகத்தான் இருக்க வேண்டும். அங்குதான் பிளேக் நோய் மிகவும் கொடுமை யாக இருந்து வருகிறது. என்னுடைய திட்டத்தில் பின்வரும் நான்கு விஷயங்களும் அடங்கியிருக்கவேண்டும்: தீண்டாமை ஒழிப்பு, கதர், கிராமக் கைத் தொழில்கள், பிளேக் நிவாரணம். விவசாயிகளின் கண்ணீரைத் துடைப்பதை ஒரு திட்டம் என்று கூற முடியாது. அது நம்முடைய வாழ்க்கையின் முழு முதற்கடமையாகும். வேறு எங்கேயாவது என்னை வருமாறு அழைத்து, ஒரு சில நாட் களுக்குப் பிறகு திருப்பி அனுப்பிவிடாதீர்கள். மே மாதம் 15-ஆம் தேதிக்குப் பிறகு ஒரு தேதியை நிர்ணயம் செய்யுங்கள்.

## 81

மௌன விரதத்தினால் ஏற்படும் ஒரு வசதி என்னவெனில் ஒவ்வொரு நாளும் வரும் தபால்கள் அன்றே பைசலாகிவிடு கின்றன. அதற்கு மூன்று மணி நேரம் ஆகிறது. மீதியுள்ள நேரத் தில், தேங்கிக் கிடக்கும் தபால்களைப் பார்த்து முடிக்கிறேன்.

பிளேக் நிவாரணத்தைப் பற்றி உங்களுடைய துண்டுப் பிரசுரத்தை நான் பார்த்தேன். அரசாங்கத்தையும், ஸ்தல ஸ்தாப னங்களையும் பற்றி அதில் உள்ள வாக்கியத்தை நான் விரும்ப வில்லை. இப்போது அதைக் கூறுவது முற்றிலும் பொருத்தமற்றது அல்லவா? அதனால் நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட்டுவிடாது. ஐக்கிய மாகாணத்தில் உள்ள அலுவல்களை ஜாக்கிரதையாகக் கையாளவேண்டும். யாதொரு இடையூறுமின்றி அதை நீங்கள் செய்து முடிக்க இயலுமா?

## 82

வார்தா,
ஏப்ரல் 2, 1935

மணிலால் கோதாரியை பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து நாடு கடத்தியதன் சம்பந்தமாக அதிகாரிகளிடமிருந்து அவருக்கு வந்த பதிலின் பிரதி ஒன்றைத் தயவு செய்து எனக்கு அனுப்புங்கள். அதைப் பார்த்த பிறகு, டில்லிக்கு என்ன எழுதவேண்டும் என்பது பற்றி எனக்கு ஏதாவது சில யோசனைகள் தோன்றலாம். அத் தகைய துடுக்கான பதில்களைக் காட்டிலும் மோசமான சம்ப வங்கள் எதிர்காலத்தில் நிகழ இருக்கின்றன. அதனால்தான் நம்மால் இயன்றதைப் பற்றற்ற முறையில் செய்ய வேண்டியவர் களாக இருக்கிறோம். நம்முடைய சக்திகளைச் சேமித்து வைக்க அது ஒன்றுதான் வழியாகும். கோபம் கொள்வது ஒரு பெரிய காரியம் அல்ல; அது எளிதில் செய்யக்கூடிய காரியமாகும்!

அம்மை குத்துவதைப் பற்றி எனது கருத்துகள் கவைக்குதவாதவை என்ற எண்ணத்தில் அலுவல்களைச் செய்வது தான் அபாயமற்றதாகும். அம்மை குத்திக் கொள்ளாமல் இருக்கும் அபாயத்தை நான் தொடர்ந்து மேற்கொண்டு வந்திருக்கிறேன், மற்றவர்களையும் மேற்கொள்ளும்படி செய்திருக்கிறேன். எனினும் அத்தகைய சந்தர்ப்பங்களில் நானும் அவர்களுடன் கூட இருந்தேன். ஆனால் தொலைவிலிருந்து நான் கூறும் யோசனைகளை மேற்கொள்வது அபாயமாகும். எனவே நான் கூறும் ஆலோசனை என்னவெனில், டாக்டர் பாஸ்கர் பட்டேல் என்ன சொல்லுகிறாரோ அவ்விதமே செய்யுங்கள் என்பதுதான். எனது கருத்துகளை அவருக்கு நான் ஏற்கனவே அறிவித்திருக்கிறேன்.

(அப்போது பார்ஸாத்திலிருந்து காங்கிரஸ் தொண்டர்களும் மக்களும் பிளேக் நோய்க்கு இலக்காகாமல் இருப்பதற்காக அம்மை குத்திக் கொண்டனர்; ஆனால் சர்தாரும் மணிபென் பட்டேலும் மாத்திரம் அம்மை குத்திக் கொள்ளவில்லை.)

## 83

வார்தா,
*ஏப்ரல் 4, 1935*

நீங்கள் ஜுரத்தினால் அவதிப்பட்டுவருகிறீர்கள் என்று தெரிகிறது. மணி அதைப் பற்றிக் கடிதம் எழுதியிருக்கிறாள். தீட்டாத அரிசியை நீங்கள் சாப்பிட முடியாமல் இருக்கலாம். இங்கு எல்லோருக்கும் அது ஜீரணமாகிறது. அப்படியிருக்கும்போது மற்றவர்களுக்கும் அது ஜீரணமாகத்தான் வேண்டும். எனினும் உங்கள் விஷயத்தில் அதைப் பரிசோதனை செய்து பார்ப்பதென்ற பேச்சிற்கே இடமில்லை. நீங்கள் நடமாடிக் கொண்டிருக்கவாவது முயற்சி செய்ய வேண்டும். உங்களுக்குத் தகுதியான உணவை அருந்துவதன் மூலமே அது சாத்தியமாகும்.

ராஜாஜியை பிரிட்டனுக்கு அனுப்பவேண்டுமென அகாதா யோசனை கூறுகிறார். எனினும் தற்போது அங்கு யார் போவதாக இருந்தாலும் அதனால் யாதொரு பலனும் ஏற்படாது. வரப்போகும் ஒரு கட்டத்தில் அவ்விதம் செல்லுவதால் ஒருவேளை ஏதாவது பலன் ஏற்படலாம். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

## 84

வார்தா,
*ஏப்ரல் 5, 1935*

ஜுரத்தை நீங்கள் முற்றிலும் சமாளித்துவிட்டீர்களென நான் நம்புகிறேன். இனி அதை உங்கள் அருகில் கூட வர விடாதீர்கள்!

ஐக்கிய மாகாணத்திற்கு நீங்கள் செல்லுவது நல்லதுதான். நீங்கள் கூறுவதைக் குறித்து யாரும் மனம் வருந்த மாட்டார்கள்.

"உங்களுடைய உண்மையான தலைவர் நேருவே. அவருடைய டிரஸ்டிகள் என்ற முறையில் மாத்திரமே நாங்கள் உங்களுடைய முன்னிலையில் வருகிறோம்." இதுதான் மக்களுக்கு நீங்கள் செய்யும் முக்கியமான உபதேசமாக இருக்க வேண்டும். மற்ற விஷயங்களைப் பொறுத்த மட்டில் உங்கள் விருப்பப்படி இருக்கலாம். அவ்விதம் அவர்கள் உங்களை வற்புறுத்தி அழைத்தது போற்றத்தக்கதாகும்.

உங்களுடைய துண்டுப் பிரசுரங்களையெல்லாம் நான் மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறேன். நேற்று முதல் அவற்றைக் கவனமாக வரிசைப்படுத்தி வைக்கத் தொடங்கியிருக்கிறேன். அந்தப் பிரதிகளை மணியும் பாதுகாப்பாக வைத்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை. அவற்றில் ஒரு வரிசையை நாங்களும் வைத்திருக்க உத்தேசித்திருக்கிறோம். எனவே தயவு செய்து 1-லிருந்து 6 எண் வரையிலுள்ள பிரதிகளை அனுப்பும்படி அவளிடம் கூறுங்கள்.

ராஜாவுக்கு அவசியம் ஒரு கடிதம் எழுதுங்கள். அவர் தனிமையில் விடப்பட்டிருக்கிறார் என்று தோன்றுகிறது. யாரிடமும் அவர் மனம் விட்டுப் பேசுவது அசாத்தியமாகியிருக்கிறது என்றும் தோன்றுகிறது.

## 85

வார்தா,
ஏப்ரல் 6, 1935

'அ'-வும் எனக்கு அவ்விதமே ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். பணம் வேண்டுமென இவ்விதம் அவர் ஏன் நெச்சரித்தவண்ணமாக இருக்கிறார் என்று அவரையே கேட்டிருக்கிறேன். அத்தகைய வேண்டுகோள்கள் விடுத்து உங்களைத் தொந்தரவு செய்யாமல் இருக்கும்படியும், விரும்பினால் என்னிடம் வரும்படியும் அவருக்கு நான் எழுதியிருக்கிறேன்.

சந்துபாய்க்கு நீங்கள் சரியான பதில் கொடுத்திருக்கிறீர்கள். சந்நியாச ஆசிரமத்தில் (உலகத்தைத் துறத்தல்) அவர்கள் காண்பது என்ன என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது.

நான் புலாபாயின் கடிதத்தை வாசித்தேன். அதெல்லாம் சரிதான். அவரால் செய்ய இயன்றதையெல்லாம் அவர் செய்யட்டும்.

இன்று இவ்வளவு போதும். இன்று உண்ணாவிரத தினம் (தேசிய வாரத்தின் முதல் நாள்) என்பதை நான் மறந்துவிட்டேன்.

## 86

வார்தா,
*ஏப்ரல் 7, 1935*

மணிலா கோதாரிக்கு அவர்கள் அளித்துள்ள பதிலில் மமதையின் சிகரத்தையே எட்டிவிட்டார்கள். அவர்கள் அவர்களுடைய இயல்புக்கு இணங்க நடந்துகொள்கிறார்கள்; நாம் நமது இயல்புக்கு இணங்க நடந்துகொள்கிறோம். அந்தக் கடிதத்தில் அவர்கள் பலாத்காரத்தின் எல்லையை அடைந்திருக்கிறார்கள் என்றே நான் கருதுகிறேன். பலாத்காரத்திற்கு எல்லை உண்டு; அகிம்சைக்கு எல்லையே இல்லை. அதனால்தான் அகிம்சை வெல்ல முடியாததாக இருக்கிறது. உங்களிடம் நான் இவ்விதம் ஏன் வேதாந்தம் பேச வேண்டும்? ஆனால் இது வேதாந்தம் அல்ல. இத்தகைய சிந்தனைகள் என் மனத்தில் எழுகின்றன. நான் அவற்றை உங்களிடம் கூறுகிறேன். என்னுடைய எண்ணங்களில் ஒன்றை யாவது உங்களிடமிருந்து என்னால் மறைத்து வைக்க முடியுமா? முடியாது.

நீங்கள் இழந்த பலத்தை மீண்டும் பெற்றுவருகிறீர்களென நான் நம்புகிறேன்.

அம்மை குத்துவதைப் பற்றி நீங்கள் கூறியிருப்பது மிகவும் அழகாக இருக்கிறது.

## 87

வார்தா,
*ஏப்ரல் 8, 1935*

அன்சாரியால் வேறு என்ன செய்ய முடியும்? பணக்காரராக இருப்பினும் ஏழையாக இருப்பினும், யாருக்கும் அவரால் 'இல்லை' என்று கூற முடியாது. சமீபத்தில் அவரிடம் வந்து யாசித்த ஒரு கொள்ளைக்காரிக்காக அவர் தமது பணப்பையைக் காலி செய்து கொடுத்துவிட்டார். எனவே பார்லிமெண்டு போர்டிலிருந்து அவரது விருப்பப்படி அவர் ராஜினாமா செய்யுமாறு விட்டுவிடுவதே அவரிடம் அன்பு காட்டுவதாகும்.

நம்மால் என்ன வேலை செய்ய முடியுமோ அதை, சர்க்காரைக் கண்டிக்காமலும், சர்க்காரிடமிருந்து எதுவும் கேட்காமலும் செய்ய வேண்டும் என்ற யோசனை எனக்குத் திருப்தியைக் கொடுக்கிறது.

சர்க்கார் ராஸைக் கொள்ளையடிக்கட்டும். எனினும் அவர்கள் பறிமுதல் செய்த ஒவ்வொரு அங்குல நிலத்தையும் நாம் திரும்பவும் பெற்றுவிடுவோம். என்னை எப்போது கூப்பிடுவதென்பது முற்றிலும் உங்கள் கையிலேயே இருக்கிறது. அது எப்படியாயினும், எனக்காக ஓர் ஊர்வலத்திற்குத் தயவு செய்து ஏற்பாடு செய்து

விடாதீர்கள். நீங்கள் விரும்பினால் பார்சாத்துக்கு என்னை அழைத்துச் செல்லுங்கள்.

## 88

வார்தா
*ஏப்ரல் 10, 1935*

உங்களுடைய துண்டுப் பிரசுரங்கள் நாளுக்கு நாள் மனதைக் கவர்வனவாக இருந்துவருகின்றன. பார்ஸாத்தைப் போல் மற்றும் பல இடங்கள் இருட்டறைகளாக இருந்து வருகின்றன. அவற்றிற்குள் கலப்பற்ற சுத்தமான காற்றைக் கொண்டு வர வேண்டியது அவசியமாக இருக்கிறது. அசட்டை செய்வதாலேயே நாம் துன்பப்படுகிறோம். நீங்கள் செய்து வருவதுதான் உருவான ஒரு வேலையாகும்.

நீங்கள் பரிசோதனைக்காக பழ உணவு சாப்பிட்டுவருவது நன்மையே. அதன் பலனை எனக்கு அறிவியுங்கள்.

## 89

வார்தா,
*ஏப்ரல் 22, 1935*

அலகாபாத் விவசாயிகள் கூட்டத்தில் நீங்கள் செய்த பிரசங்கம் முழுவதையும் வாசித்தேன். அந்த முறை சரியல்ல. சர்க்காரின் கொள்கையைக் கண்டித்து நீங்கள் மேற்கொண்ட தொனி தற்போதைய நிலையில் சரியான வழியல்ல. நீங்கள் பின்வரும் ரீதியில் பேசியிருக்கவேண்டும்: "சர்க்காரின் கொள்கையையோ அல்லது நிலச்சுவான்தார்களின் கொள்கையையோ பரிசீலனை செய்ய இது நேரமல்ல; ஆனால் நம்மை நாமே பரிசோதனை செய்து நமது சொந்த வீட்டை நாம் ஒழுங்காக வைத்துக் கொள்ள வேண்டும். நமக்கு நாம் என்ன செய்து கொள்ள வேண்டும் என்பதைத் தவிர வேறு எந்த விஷயத்தையும் பற்றி நான் பேசுவேன் என்று நீங்கள் எதிர்பார்க்க வேண்டாம்."

இந்த முன்னுரைக்குப் பிறகு விவசாயிகளின் கடமை என்ன என்பதை நீங்கள் விளக்கவேண்டும். அவ்விதம் விளக்கும்போது நீங்கள் சர்க்காரைப் பற்றி ஒரு தடவை கூடக் குறிப்பிடக் கூடாது. தற்காலிகமாக நாம் புது டில்லியைப் பற்றி மறந்துவிடுவதே நன்மையாகும். ஆனால் இந்த முறை உங்கள் மனத்திற்கு உகந்ததாக இராவிடில், உங்கள் உள்ளத்தில் உள்ள கடவுள் உங்களுடைய வாக்கில் என்ன வார்த்தைகள் வரும்படி செய்கிறாரோ அவற்றையே சொல்லுங்கள்.

# 90

வார்தா,
மே 5, 1935

உங்கள் தந்தி கிடைத்தது. நான் நிச்சயமாக 25-ஆம் தேதிக்குள் அங்கே இருப்பேன். பம்பாயில் கமலா நேருவைப் பார்க்க முடிந்தால் பார்த்துவிட்டு, 23-ஆம் தேதி நான் அங்கே வந்து சேரலாம். என்னை எத்தனை நாட்கள் அங்கே வைத்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறீர்கள் என்பதை எனக்கு அறிவியுங்கள். ஒரு சில நாட்களுக்கு மேல் என்னை அங்கே இருக்கும்படி தயவு செய்து வற்புறுத்தாதீர்கள்.

ராஜா மிகவும் சலிப்படைந்திருக்கிறார். அதற்காக அவர் மீது நாம் குற்றம் கூற முடியாது. எவராயினும் அவருடைய உள்ளம் அதில் இராதபோது, அவரை நாம் எப்படி வற்புறுத்திப் பிடித்து வைத்திருக்க முடியும்? உங்களுடைய ராஜிநாமாவையும், ராஜேந்திர பாபுவின் ராஜிநாமாவையும் அங்கீகரிக்க அங்கே யார் இருப்பார்கள்? மீதியுள்ளவர்கள் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு காலத்திற்கு அலுவல்களைச் செய்துவர வேண்டும். வேறு எந்தக் கட்சியாவது விரும்பினால், அது மகிழ்ச்சியுடன் காங்கிரசைக் கைப்பற்றலாம்.

பார்ஸாத்தில் பிளேக் நோயின் உக்கிரம் இப்போது தணிந்திருக்கும் என்று நம்புகிறேன். நீங்கள் இழந்த பலத்தை மீண்டும் பெற்றிருக்கிறீர்களா?

# 91

வார்தா,
மே 18, 1935

காலஞ் சென்ற மோகன்லால் பாண்டியாவுக்கு உங்களுடைய பாராட்டுதல்கள் முற்றிலும் தகுதியானவை. பழைய நிகழ்ச்சிகளைப் பற்றிய உங்களுடைய நினைவுகள் பசுமையாக இருக்கின்றன. இருந்தாலும் அத்தகைய நஷ்டங்களைக் குறித்து துக்கப்படுவதால் யாதொரு பயனும் இல்லை. சகாக்கள் வருகிறார்கள்; பின்னர் அவர்கள் போகிறார்கள். அவர்கள் போகிறார்களேயன்றி வருவதில்லை என்றே வருந்துகிறீர்கள். அப்படியே இருந்தாலும் அதனால் என்ன? நமது அருகிலிருந்து கடவுள் எக்காலத்திலும் அப்பால் செல்லுவதில்லை. கடவுள் அருகில் இருக்கிறார் எனில், எல்லோரும் அருகில் இருக்கிறார்கள். கடவுள் அருகில் இல்லை எனில், நூறு சக ஊழியர்களால் கூட யாதொரு பலனும் இல்லை. அவர்கள் ஆன்மா இல்லாத உடல் போன்றவர்கள்தான். எனவே காலஞ்சென்ற நண்பர்களைக் குறித்து நாம் புலம்பக் கூடாது; அதற்கு மாறாக, நம் சக்திக்கு இயன்ற அளவு அதிக பட்சமான வேலைகளைச் செய்ய வேண்டும்.

21-ஆம் தேதிக்கு முன் நான் இங்கிருந்து புறப்பட முடியாது. 22-ஆம் தேதி காலை நான் பம்பாய் வந்து சேருவேன். பா மாத்திரம்தான் என்னுடன் வருவாள். தாமும் வரவேண்டுமென மீரா பென் வற்புறுத்தினுல், அவரும் வருவார். ஆட்டுப்பால், வேப்பிலை, அங்கே கிடைக்கும் பழங்கள் ஆகியவையே எனக்குப் போதும். எனக்காக பம்பாயிலிருந்து நீங்கள் எதுவும் தருவிக்கக்கூடாது. எலுமிச்சம் பழரசத்துக்குப் பதிலாக புளி கரைத்த தண்ணீரும், கீரைகளுக்குப் பதிலாக வேப்பிலையும் தான் நான் உட்கொள்கிறேன். தற்போது இங்குள்ள தோட்டத்திலிருந்து கிடைக்கும் மாம்பழங்களையும் சாப்பிடுகிறேன்.

மகாதேவ் தற்காலிகமாக இங்கேதான் இருக்கவேண்டும். நான் இங்கே திரும்பி வந்தபின் அவசியமாயின் அவரை நான் அனுப்பலாம். மற்றவை நாம் சந்திக்கும்போது.

(90, 91-ம் கடிதங்கள் சர்தார் பார்ஸாத்தில் இருந்தபோது அனுப்பப்பட்டவை.)

## 92

வார்தா,
மே, 20, 1935

உங்களைப் பற்றி நினைப்பதை என்னுல் நிறுத்த முடியவில்லை. மகாதேவுக்குப் பதிலாக காகாவை இங்கேயே இருக்கும்படி கூறி விட்டு மகாதேவை என்னுடன் அழைத்துவருகிறேன். இப்போது மகாதேவ் உங்களுக்குத் தேவையாக இருந்தால், அவரைப் பிறகு அனுப்புவதில் அர்த்தமில்லை என்ற எண்ணம் என் மனத்தை உறுத்தி வந்தது. எனவே அதைப் பற்றி காகாவுடன் நான் பேசினேன். அவரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள இசைந்தார்.

நாம் சந்திக்கும்போது மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசுவோம், அல்லது பிறகு பார்ஸாத்தில் பேசுவோம். புதன்கிழமை யன்று ஏராளமானவர்கள் பார்க்க வருவார்கள். எனவே அப்போது நாம் ஒருவருக்கொருவர் ஒரு வார்த்தை கூடப் பேச முடியாது.

(இந்தக் கடிதம் சர்தார் பம்பாயில் இருந்தபோது அனுப்பப்பட்டது.)

## 93

வார்தா,
ஜூன் 4, 1935

நான் சூரத்தில் இருந்தபோது உண்மையில் உங்களுக்குக் கடிதம் எழுத விரும்பினேன்; ஆனுல் நேரம் கிடைக்கவில்லை. பிரயாணம் செய்து கொண்டிருக்கையில் எழுதுவது சாத்தியமாக இல்லை. நேற்று கூட என்னுல் எழுத முடியவில்லை. திரும்பி வரும் போது பிரயாணம் ஒரு சோதனையாகவே இருந்தது. புஸாவலில்

நாங்கள் உட்காருவதற்கு மாத்திரமே இடம் கிடைத்தது. எனவே இரவு முழுவதும் நாங்கள் உட்கார்ந்து கொண்டே பிரயாணம் செய்தோம்.

உங்கள் குடல் நோய்க்கு உடனடியாக ஒழுங்கான முறையில் சிகிச்சை செய்து கொள்ளுங்கள். அந்தக் கோளாறைச் சீர்திருத்தி விடலாம். நீங்கள் சீக்கிரமாக குணமடைவீர்கள். ஆனல் தாமத மின்றி சிகிச்சை செய்து கொள்ளுங்கள்.

உங்களுடைய கோரிக்கைக்கு இணங்க கனுகா எனக்கு மாம் பழங்கள் அனுப்பியிருக்கிருர். சபர்மதி சிறையில் இருக்கும் காபர் கானுக்கும், மிருதுளா மாம்பழங்கள் அனுப்புகிருர் என்று நான் நினைக்கிறேன்.

(இது அபு மலையிலிருந்து சர்தாருக்கு அனுப்பப்பட்டது)

## 94

வார்தா,
*ஜூன் 9, 1935*

குவெட்டா சம்பந்தமாக நாம் என்ன செய்ய முடியும்? அங்கே யாரும் வரக் கூடாது என்று அதிகாரிகள் தடுப்பதால், நம்மில் யாராவது அங்கே போகலாம் என்ற பேச்சிற்கே இடமில்லை. காயம் அடைந்தவர்களோ அல்லது அகதிகளோ எங்கே சென்ருலும், அவர்களுக்கு மக்கள் உதவி செய்துவருகிருர்கள். நாம் அதிக மாக எதுவும் செய்வது இயலாத காரியம். ராஜேந்திரபாபுவுக்கு வந்ததுபோல் நேற்று எனக்கும் ஒரு தந்தி வந்தது. இப்போது நாம் மௌனமாக இருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

இந்தியா மந்திரி காரியாலயத்தில் ஏற்பட்டுள்ள மாறுதலை* ஒரு நல்ல அறிகுறியாக நான் கருதவில்லை. சாப்ரூ சாகிப் கொடுத் துள்ள நற்சாட்சிப் பத்திரத்தை நீங்கள் வாசித்திருக்கலாம். அதைப்பற்றி கோபமடைவதால் யாதொரு பலனும் இல்லை. இதைப் போன்ற ஒரு மசோதாவை ஏற்கனவே அவர் கண்டித் தார்; ஆனல் இப்போது அதை வரவேற்கிருர்!

ராஜேந்திரபாபு 12-ம் தேதி இங்கு வருகிருர். அவர் இங்கே நான்கு மணி நேரம் தங்கியிருப்பார்.

(இந்தக் கடிதமும், பின்வரும் கடிதங்களும் சர்தார் பம்பாயில் இருந்தபோது அனுப்பப்பட்டவை.)

---

* சர் சாமுவல் ஹோர் இந்தியா மந்திரியாக நியமிக்கப்பட்டதையே காந்திஜி 94-ம் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிருர்.

## 95

வார்தா,
ஜூன் 17, 1935

இப்போது சாறுள்ள பழங்களே உங்களுக்கு உணவாக இருந்துவருமாயின், நீங்கள் மருந்து உட்கொள்ள வேண்டிய அவசியமே ஏற்படாது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். உங்களுக்கு அஜீரணம் ஏற்பட்டிருந்தால், நீங்கள் 'எனிமா' எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஆண்ட்ரூஸ் நாளை இங்குவருகிறார். அவர் இங்கு இரண்டு நாட்கள் வரை தங்குவார். இப்போதெல்லாம் இங்கே நல்ல கூட்டம் இருந்துவருகிறது. குமரப்பாவின் சகோதரரான பரதன் இங்கு வந்திருக்கிறார்.

தற்காலிகமாக நீங்கள் உங்கள் கையினாலேயே கடிதங்கள் எழுத வேண்டுமென நான் எதிர்பார்க்கவில்லை. இந்த நோய் சீக்கிரமாக உங்களை விட்டு ஒழிய வேண்டும்.

நீங்கள் பூரணமாகக் குணமடைந்த பின் இங்கு வாருங்கள், ராஜேந்திரபாபு நிச்சயமாக வருகிறார். ஜம்னாலாலும் ஜூலை மாதம் இங்கே இருப்பார். அப்போது இங்கு குளிர்ச்சியாக இருக்கும். கடுமையான உஷ்ணம் முன்பே குறைந்துவிட்டது.

## 96

வார்தா,
ஜூன் 21, 1935

நான் பொறுமையிழந்துவிடவில்லை. எனினும் வைத்தியர்களிடம் (இந்திய ஔஷத முறை வைத்தியர்கள்) சிகிச்சை பெறுவதை நான் ஆதரிக்கவில்லை. அவர்களுடைய வைத்தியம் நிச்சயமற்ற ஒரு முறையாகும். அதனால் குணம் ஏற்படலாம், ஏற்படாமலும் போகலாம். வைத்தியர்களிடம் சில மருந்துகள் இருக்கத்தான் செய்கின்றன. எனினும் அவற்றினால் பலன் ஏற்படவில்லையாயின், நீங்கள் திரும்பவும் டாக்டர்களையே நாடுங்கள். சிகிச்சை பெறுவதற்கு உங்களை வைத்தியர்களிடம் விட நான் நடுங்குகிறேன். மாளவியாஜியும் மோதிலால்ஜியும் கூட, கடைசியாக டாக்டர்களின் உதவியையே நாட வேண்டியிருந்தது. எனினும் நீங்கள் ஏற்கனவே குணமடைந்திருந்தால், மேற்கொண்டு சொல்லுவதற்கு எதுவும் இல்லை.

மகாதேவ் உங்களுக்குத் தேவையாக இருந்தால், தெரியப்படுத்துங்கள்.

## 97

மகன்வாடி, வார்தா,
*ஜூன் 27, 1935*

பார்ஸாத் பிளேக் நிவாரண வேலைகள் சம்பந்தமாக நீங்கள் அனுப்பிய அறிக்கை எனக்குக் கிடைத்தது. அதை நான் முழுவதும் வாசித்தேன். இரண்டாவது தபாலுக்காக நான் காத்திருந்தேன். ஆனால் ஒன்றும் வரவில்லை. பாவும் அவளுடன் யாதொரு கடிதமும் கொண்டுவரவில்லை. எனவே நான் தந்தி கொடுத்தேன்.

அந்த அறிக்கை எனக்குச் சிறிதும் திருப்தியளிக்கவில்லை. உண்மையான விவரங்களுக்குப் பதிலாக உண்மைகளும் வாதங்களும் அடங்கிய ஒரு கலப்படமாக அது இருக்கிறது. அதில் உள்ள முதல் பாரா ஒப்புக் கொள்ளத்தக்கதல்ல. அதனாலேயே நான் தந்தி கொடுத்தேன். இப்போதுதான் மாலை 4 மணிக்குத் தபால் வந்தது. நாம் ஒரு கமிட்டி* நியமிப்பதை நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதை நான் தெரிந்து கொண்டேன். இது எனக்கு மகிழ்ச்சி அளித்தது. அத்தகைய ஒரு கமிட்டி நமக்குப் பேருதவியாக இருக்கும் என்றே நான் நினைக்கிறேன். டாக்டர்களின் அபிப்பிராயமாவது, பாரபட்சமற்ற, சுயேச்சையான அபிப்பிராயம் என்று கருதப்படலாம் அல்லவா? அந்த யோசனை ஒப்புக் கொள்ளத்தக்கது என்று நீங்கள் கருதுவதால், அதைக் குறித்து நான் மேற்கொண்டு எதுவும் எழுத வேண்டிய அவசியம் இல்லை. இவ்விஷயமாக வெளியிடப்படும் எந்த அறிக்கையையும் நான் முன்னதாகவே பார்க்க வேண்டுமென விரும்புகிறேன். எல்லா விவரங்களும் மகாதேவின் வசம் இருக்குமாயின், அவர் இங்கே வந்து அறிக்கையைத் தயாரிக்கலாம். இல்லாவிடில், அவரை மேற்கொண்டு ஒரு நாள் அங்கேயே தங்கியிருக்கும்படி நீங்கள் கேட்கலாம்.

## 98

வார்தா,
*ஜூலை 3, 1935*

உங்கள் கடிதம் கிடைத்தது. மகாதேவ் அனாவசியமாகத் தாமும் பயந்துவிட்டார்; உங்களையும் பயமுறுத்திவிட்டார். நான்

---

*பார்ஸாத்தில் காங்கிரசின் சார்பில் நடந்த பிளேக் நோய் நிவாரண வேலைகள் விஞ்ஞான ரீதியாகவும், முறைப்படி ஒழுங்காகவும் இல்லை என்ற சர்க்காரின் குற்றச்சாட்டை விசாரிப்பதற்காக காங்கிரஸ் நியமிக்க உத்தேசித்த கமிட்டியைப் பற்றியே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

செய்ததெல்லாம் ஹரிலாலை* எச்சரித்ததுதான். என்னிடம் தந்திரம் எதுவும் செய்ய வேண்டாம் என்றும், அவ்விதம் செய்தால் அவன் என்னை இழந்துவிடும்படி நேரும் என்றும் அவனுக்கு எச்சரிக்கை செய்தேன். அவன் ஏதோ விஷமம் செய்யத் தீர்மானித்திருக்கிறான் என்றே தோன்றுகிறது. ஏனெனில் அவன் எங்கேயோ ஓடிவிட்டதாக எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. அவன் ஓடியது சிறிதும் அதிர்ச்சியைக் கொடுக்கவில்லை. முன்பு கூட அவன் ஒவ்வோரிடமாகத் திரிந்து கொண்டிருந்தான். அவனுடைய வாழ்க்கை முறையில் வெளிப்படையான சில அறிகுறிகளைக் கண்டு அவனது போக்கு மாறியிருப்பதாக எனக்குச் சிறிது நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால் அந்தப் பாசாங்கு அதிக காலம் நீடிக்கவில்லை. தயவு செய்து நீங்கள் கவலைப்படாதீர்கள். நான் அவசரப்பட்டு நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொண்டுவிடமாட்டேன். இப்போது யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை. மற்றப்படி எனது ஆரோக்கியம் மிகவும் திருப்திகரமாக இருக்கிறது. நான் மிகுந்த அக்கறையுடன் அதைக் கவனித்து வருகிறேன். இறுதியாக எல்லாம் இறைவன் சித்தப்படியே நடக்கின்றன. தொண்டு செய்வதற்கு என்னை ஒரு கருவியாக உபயோகிக்க இறைவன் விரும்பும் வரையில், யாதொரு விபரீதமும் நேராது. காலம் வரும்போது அதை எதுவும் தடுக்கவும் முடியாது. எப்படியும் இந்தியா முன்னேற்றம் அடைந்துதான் தீரும். இவ்விஷயமாக ஏமாற்றம் ஏற்படுவதற்குக் காரணம் இல்லை. கடவுளின் செயல்கள் எப்போதும் நன்மை அளிப்பவையாகவே இருக்கும்.

நீங்கள் குணமடைந்த பின் வார்தாவை உங்களுடைய தலைமை அலுவலகமாக வைத்துக் கொள்ளுவது ஒரு நல்ல யோசனையாகும்.

## 99

வார்தா,

*ஜூலை 23, 1935*

லாகூரில் என்ன நடந்து கொண்டிருக்கிறது? அதை நீங்கள் அறிந்து கொள்ள முடியுமா? யார் மீது குற்றம்? இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் காளான்களைப்போல முளைத்து வருகின்றன. அவற்றை நான் விரும்பவேயில்லை. ஆனால் நாம் எதுவும் செய்ய இயலாது. அந்தக் கம்பெனிகள் காங்கிரசின் பெயரால் செயல்படுவது பயங்கரமானது. எனினும் வேறு வழியின்றி நாம் பார்த்துக் கொண்டிருப்பதைத் தவிர நம்மால் வேறு என்ன செய்ய முடியும்?

---

*காந்திஜி தமது கடிதத்தில் தமது மூத்த குமாரன் ஹரிலால் காந்தியைப் பற்றியே குறிப்பிட்டுள்ளார்.

# 100

வார்தா,
ஆகஸ்டு 11, 1935

உங்கள் கடிதம் கிடைத்தது. சர்க்காரிடமிருந்து அனுமதி பெற்ற பின், ஆரம்பத்திலிருந்து இறுதிவரையில் நடந்த கடிதப் போக்குவரத்தை நாம் வெளியிட வேண்டும். கமிட்டி நியமனம் பற்றிய கடிதத்தையும் நாம் அச்சிட வேண்டும். இவற்றையெல்லாம் அச்சிட்ட பின் நாம் கமிட்டியின் முன்னிலையில் சாட்சியமும் கூறவேண்டும். குன்ஸ்ரூ வந்தால் நான் மகிழ்ச்சி அடைவேன்.

# 101

வார்தா,
ஆகஸ்டு 15, 1935

உங்களுக்குத் தேவையாக இருக்கும்வரையில் மகாதேவை அங்கேயே வைத்துக்கொள்ளுங்கள். இங்கே எப்படியாவது நான் சமாளித்துக் கொள்கிறேன். ராஜகுமாரியும், குர்ஷெத்தும்* அவர்களுடைய சக்திக்கு இயன்றவரையில் எனக்கு உதவி புரிந்து வருகிறார்கள். ராஜகுமாரி பெரும்பாலான கடிதங்களுக்கும் ஆங்கிலத்தில் பதில் எழுதுகிறாள். அவள் 21-ஆம் தேதி வரை இங்கே இருப்பாள். குர்ஷெத்பென் மேலும் சில நாட்கள் வரையில் இங்கே தங்கியிருப்பாள்.

ஏழு தடவை மருந்து சாப்பிடுவதற்குப் பதிலாக பதினன்கு தடவை மருந்து சாப்பிட்டாவது, உங்களுக்கு வந்துள்ள மஞ்சட் காமாலையை குணப்படுத்திக்கொள்ளுங்கள். சாப்பிட ஆரம்பித்த மருந்தை இறுதிவரையில் சாப்பிட்டு முடித்துவிடவேண்டும்.

# 102

வார்தா,
ஆகஸ்டு 18, 1935

கடுமையான மூல நோயினல் நீங்கள் அவஸ்தைப் படுவதாகவும், அறுவை சிகிச்சை செய்ய வேண்டியது அவசியம் என்றும் நேற்று கிஷோர்லால் என்னிடம் கூறினர். இது உடலில் மிகுந்த அசுத்தம் தேங்கியிருப்பதன் விளைவேயாகும். அதன் சம்பந்தமான முழு விவரங்களையும் எனக்கு அனுப்புங்கள். தற்போதுள்ள உங்களுடைய உடல் நிலையில், அறுவை சிகிச்சை செய்வது விரும்பத்தக்கதல்ல. எனவே கௌரீசங்கரையாவது அல்லது டாக்டர் டின்ஷா

*குர்ஷெத்பென், தாதாபாய் நௌரோஜியின் பேத்தியாவார்.

மேத்தாவையாவது நீங்கள் கலந்தாலோசிப்பதே சிறந்ததாகும். தங்களுடைய வயிற்றைச் சரியான நிலையில் வைத்துக் கொள்வதால் மாத்திரமே பலரும் அறுவை சிகிச்சையைத் தவிர்த்துக் கொள்கிறார்கள். அகமதாபாத்திலுள்ள அரை குறை வைத்தியரிடம் ஏற்கனவே நீங்கள் மிகுந்த நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள். எனவே ஒரு இயற்கை வைத்தியரிடமும் நீங்கள் மிகுந்த நம்பிக்கை வைத்து சிகிச்சை செய்து கொள்ளலாம். உங்களுடைய ஆரோக்கியம் சீர்குலைவதை நாங்கள் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.

## 103

வார்தா,
ஆகஸ்டு 23, 1935

கமிட்டியின்* அலுவல்கள் சம்பந்தமான அட்டவணையை நேற்று நான் தயாரித்தேன். அது வைகுந்தபாய் மூலம் அனுப்பப்பட்டிருக்கிறது. அதைப் பற்றி அவருடன் நான் பேசியுமிருக்கிறேன்.

'ஸஞ்ச்' பத்திரிகையிலிருந்து கத்தரித்து அனுப்பிய விஷயத்தை இத்துடன் திருப்பி அனுப்பியுள்ளேன். இத்தகைய கிளர்ச்சி நடந்து கொண்டுதான் இருக்கும். கமிட்டி தனது அலுவல்களை ஆரம்பித்தவுடன் அக்கிளர்ச்சி நின்றுவிடும்.

குமரப்பாவை நான் பம்பாய்க்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன். டாக்டர் ஜீவராஜ் மேத்தா அவரைப் பரிசோதிப்பதற்குத் தயவு செய்து ஏற்பாடு செய்யுங்கள். வேல் சந்த் (பாங்கர்) கொடுக்க உத்தேசித்துள்ள நன்கொடை விஷயமாக நீங்கள் ஏதாவது முடிவு செய்திருக்கிறீர்களா என்பதை எனக்கு அறிவியுங்கள். அவரது விருப்பத்திற்கிணங்க சில கிணறுகளை நிர்மாணிக்க வேண்டும் என்றும், மீதியுள்ள தொகையை கிராமப் புனருத்தாரணத்திற்காக மாத்திரமே செலவு செய்ய வேண்டும் என்றுமே நான் இன்னும் கருதுகிறேன்.

## 104

வார்தா,
ஆகஸ்டு 24, 1935

ஆண்ட்ருஸ் நோயுற்றிருப்பதால், அவர் இங்கேயே தங்கியுள்ளார்.

தேவதாஸின் தந்தியை† நான் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அவன் பூரண ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும்.

---

* 97-ம் கடிதத்தைப் பார்க்கவும்.

† தேவதாஸ் டைபாய்ட் ஜுரத்தினால் படுத்தபடுக்கையில் இருப்பதாகக் கிடைத்த தந்தியைப் பற்றியே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

என்றும், உண்ணுவிரதம் இருக்க வேண்டும் என்றும், அவ்விதம் செய்தால் அபாயம் எதுவும் ஏற்படாது என்றும் அவனுக்கு நான் பதில் தந்தி அனுப்பியிருக்கிறேன். ராஜா நிச்சயமாக அங்கே செல்லுவார். பாவும் மனுவும் ஏற்கனவே அங்கேதான் இருக்கிருர்கள். தேவதாஸுக்கு அன்சாரி சிகிச்சை செய்துவருகிருர். அதைவிட நாம் என்ன செய்ய முடியும்? அதைப்பற்றி நான் கவலேப் படவில்லே.

## 105

வார்தா,
ஆகஸ்டு 27, 1935

குழந்தை பாபாவுக்கு உள்நாக்கு வளர்ந்திருப்பதாக மணியின் கடிதத்திலிருந்து தெரிந்து கொண்டேன். அவ்வளவு சிறிய குழந்தைக்கு அவ்வளவு பெரிய உள்நாக்கு எப்படி வந்தது? அதற்குக் காரணம் என்ன? அதைப் பற்றி டாக்டர்களால் ஏதாவது சொல்ல முடியுமா?

தர்பார் கோபால்தாஸ் தேசாயும், டாக்டர் பாஸ்கரும் நோயுற்றிருக்கிருர்கள். இந்த நிலேமையை நீங்கள் எப்படி சமாளிக்க உத்தேசித்திருக்கிறீர்கள்? மகாதேவ் அங்கே தேவையென நீங்கள் நிணேக்கிறீர்களா?

மொரார்ஜியும் சந்துலாலும் இன்னும் இரண்டு அல்லது மூன்று நாட்கள் வரையில் இங்கே தங்கியிருப்பார்கள். அமெரிக்காவிலிருந்து வந்துள்ள சுவாமி யோகானந்த் இங்கே இருக்கிருர்.

## 106

வார்தா,
செப்டம்பர் 5, 1935

அலகாபாத்தில் ஜவாஹர்லாலேப் பார்ப்பதற்காக மகாதேவ் நேற்று இங்கிருந்து புறப்பட்டுச் சென்ருர். ஆனல் ஜவாஹர்லாலிடமிருந்து இன்று வந்துள்ள ஒரு தந்தியிலிருந்து, அவர் கமலா நேருவைப் பார்ப்பதற்காக இன்று மாலே ஸ்விட்ஜர்லாந்துக்குப் புறப்பட்டுச் செல்லுகிருர் என்று தெரிகிறது. எனவே மகாதேவுக்கு அவரைப் பார்க்க முடியாமற் போகலாம்.

பிளேக் நிவாரண வேலேயைப் பற்றி பம்பாய் சர்க்கார் அளித்துள்ள பதில் விஷம் நிறைந்ததாக இருக்கிறது. அவர்கள் கூறுவதன் அர்த்தம் என்ன என்பது தெளிவாகத் தெரிகிறது. அதாவது, மக்கள் தம் கையே தமக்கு உதவி என்ற எண்ணத்துடன் மேற்கொள்ளும் முறைகளேத் தகர்க்க முயற்சிப்பதே அவர்களின் நோக்கமாகும். கடிதப் போக்குவரத்தை இப்போது நாம்

பிரசுரிக்கக் கூடாது என்று நான் கருதுகிறேன். கடிதப் போக்கு வரத்தில், கமிட்டி நியமிக்க வேண்டிய சந்தர்ப்பம் என்ன என்பதை விளக்கும் பகுதியை மாத்திரமே நாம் வெளியிட வேண்டும். கமிட்டி அறிக்கையின் முன்னுரையாகவே அதை வெளியிட வேண்டும்.

இந்த யோசனை சரியா? கமிட்டி விரைவில் தனது அலுவல் களைப் பூர்த்தி செய்வது விரும்பத்தக்கதாகும்.

பாபா இப்போது குணமடைந்திருப்பான் என்று நம்பு கிறேன்.

இங்கு ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு கூட்டம் நடந்த வண்ணமாக இருக்கிறது.

## 107

வார்தா,
*செப்டம்பர் 9, 1935*

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தைத் தயவு செய்து வாசியுங்கள். அதை எழுதியவர் யார் என்பதை நீங்கள் ஒருவேளை தெரிந்து கொண்டிருப்பீர்கள். அவருக்காக ஏதாவது செய்ய இயலுமா என்று பாருங்கள். உங்களுடைய பளு முன்பு இருந்ததைவிட இப்போது குறைந்திருக்கும் என்று நம்புகிறேன்.

எரவாடா ஒப்பந்தத்தை சர்க்கார் மறைமுகமாக மீறி வருவதாக எனக்கு வதந்திகள் எட்டுகின்றன. பொறுத்திருந்து பார்ப் போம்.

## 108

வார்தா,
*செப்டம்பர் 13, 1935*

உங்கள் கடிதம் கிடைத்தது. ராஜாஜி என் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். உங்களுடைய கட்டளையை* அவரிடம் வாசித்துக் காட்டினேன். *18*-ம் தேதியாவது இங்கிருந்து தாம் புறப்பட்டுவிட வேண்டும் என்று அவர் கூறுகிறார். அவரது புதல்வி, சென்னைக்கு வருகிறாள். உடல் நலம் குன்றியுள்ள அவளது மகன் அவளுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறான். முட்களாலான கிரீடத்தைத்† தரிக்கும்படி அவரைத் தூண்ட நீங்கள் விரும்புகிறீர்

* ராஜாஜி ஒரு வாரகாலத்துக்கு வார்தாவிலேயே தங்கியிருக்கும்படி செய்யவேண்டும் என்று சர்தார் தமக்குக் கூறியிருந்த யோசனையையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

† காங்கிரஸ் தலைவர் பதவியையே 'முட்களாலான கிரீடம்' என்று காந்திஜி கூறியிருக்கிறார்.

கள் என்று அவர் எண்ணுகிருர்! அப்படியாயின் அது வீண் முயற்சியே என்று அவர் (ராஜாஜி) கூறுகிருர். புலாபாய்க்குத் தாம் யாதொரு உறுதி மொழியும் கொடுக்கவில்லே என்றும் அவர் சொல்லுகிருர். அவரது மனம், உடல் இரண்டும் சோர்வுற்றிருப்பதால், அவர் அந்தக் கிரீடத்தைத் தரிக்கக் கூடிய நிலேயில் இல்லே. ராஜாஜியின் சம்மதம் பெற்று நான் அதைத் தரிக்கும்படி ஜவாஹர்லாலேக் கேட்டிருக்கிறேன். அது எப்படியாயினும், நீங்கள் திங்கட்கிழமைக்குள் இங்கு வந்து சேர முடியுமா என்று பாருங்கள். ஏனெனில் செவ்வாய்க்கிழமை இங்கிருந்து புறப்படுவதற்கு அவருக்கு அனுமதி கொடுத்துவிட வேண்டும். இங்கு தற்போது கால நிலே மோசமாக இருக்கிறது.

மீரா இப்போது குணமடைந்திருக்கிருர். இருந்தாலும் இன்று இரண்டு மணியிலிருந்து அவருக்கு ஜுரம் அதிகமாகி வருகிறது.

சிந்தி விவகார சம்பந்தமாக நீங்கள் தப்பெண்ணம் கொண்டிருக்கிறீர்கள். அங்குள்ள மக்கள் மீது எதையும் திணிக்க நாம் விரும்பவில்லே. அவர்களுக்கு மௌனமாகத் தொண்டு செய்ய வேண்டும் என்பதுதான் நம்முடைய விருப்பமாகும். நாம் சந்திக்கும்போது மேற்கொண்டு இவ்விஷயத்தைப் பற்றிப் பேசுவோம். நாம் விரைவில் சந்திக்காவிடில், உங்களுக்கு நான் விவரமாக எழுதுகிறேன். நான் அவசரப்பட்டு எதுவும் செய்யமட்டேன்.

கமிட்டி அறிக்கையில் வாதம் எவ்வளவுக்குக் குறைவாக இருக்கிறதோ அவ்வளவுக்கு நலமாகும். அதில் பெயருரிச் சொல்லே இருக்கக்கூடாது. தற்போதைய தகராறுகளே யொட்டி அவர்களுடைய தீர்மானமும், எதிர்காலத்தைப் பற்றிய அவர்களுடைய யோசனேகளும் முற்றிலும் சாத்துவிகமானவையாக இருக்க வேண்டும். அதையும் அமுக்கிவிட சர்க்கார் விரும்புவார்களாயின், அவர்கள் அப்படியே செய்யட்டும். நான் நினேப்பது இதுதான்.

## 109

வார்தா,
*அக்டோபர் 31, 1935*

பரீக்ஷித்லாலின் கடிதத்தை இத்துடன் இணேத்திருக்கிறேன். நீங்கள் அதை ஏற்கனவே பார்த்திருக்கிறீர்கள் என்றே தெரிகிறது. அவரது முயற்சியை நான் அங்கீகரித்தது ஒரு வேளே தவருக இருக்கலாம். எனினும் என்னே நான் திருத்திக் கொள்ளுவதற்கு முன், நிலேமையைப் பற்றி நான் தெளிவாக அறிந்து கொள்ளவேண்டியது அவசியமாகும். ஓரிடத்தில் ஹரிஜனங்கள் தாக்கப்பட்டால், அவர்களுடைய புகாருக்கு யாரும் செவி கொடுக்கவில்லேயாயின், அவர்கள் அந்த இடத்தை விட்டு வெளியேறிவிடவேண்டும்; அவ்விதம் செய்ய அவர்களுக்கு நாமும்

உற்சாகம் அளிக்க வேண்டும். தனி நபர்களிடத்திலும், கோஷ்டி களிடத்திலும் பல ஆண்டுகளாக நான் இந்தக் கொள்கையையே பின்பற்றிவருகிறேன். அந்தக் கொள்கை 1906-ல் பிரகடனம் செய்யப்பட்டது. அதிலிருந்து அவ்வாறே நான் ஆலோசனை கூறி வந்திருக்கிறேன். தலஜாவிலும், மேராத்திற்கு அருகிலுள்ள ஒரு கிராமத்திலும் ஹரிஜனங்கள் அச்சுறுத்தப்பட்டபோது நான் அக் கொள்கையையே பின்பற்றும்படி சிபாரிசு செய்தேன். தலஜாவில் ஹரிஜனங்களுக்கு நீதி கிடைக்குமாறு ஸ்ரீ பிரபாசங்கர் பட்டாணி சாகிப் பார்த்துக் கொண்டார். மேராத்திற்கு அருகில் உள்ள கிராமத்தில் நீண்ட காலம் வரையில் வழக்கு நடந்தது. அதில் ஹரிஜனங்கள் தோல்வியடைந்தனர். வக்கீல்களும், மற்ற ஆலோ சகர்களும் அதிக உற்சாகத்துடன் இராததால் அவ்விஷயம் ஊசலாடிக் கொண்டிருந்தது.

கவிதாவிலுள்ள ஹரிஜனங்கள் அங்கிருந்து வெளியேறுவதற் குத் தடையாக விசேஷ காரணங்கள் இருக்கலாம். இருப்பினும், அங்குள்ள ஹரிஜனங்கள் யாவருமோ அல்லது அவர்களில் சிலரோ, தங்களுடைய நோக்கத்தைக் குறித்து சாதி ஹிந்துக்களுக்கு முன்னதாகவே அறிவித்துவிட்டு கவிதாவிலிருந்து வெளியேறு வதால் என்ன அபாயம் ஏற்பட்டுவிடும்?

இவ்விஷயமாக நான் கூறுவதை நீங்கள் அங்கீகரிக்காவிடில், தயவு செய்து உங்கள் நிலையை விளக்கிக் கூறுங்கள். கவிதாவி லுள்ள நிலைமையில் விசேஷம் எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நீங்கள் முன்பே அங்கு சென்றிருக்கிறீர்கள். எனவே அங்குள்ள விசேஷ நிலைமைக்குக் காரணம் என்ன என்பதை நீங்கள் விளக்கிக் கூற முடியும். அந்த அத்தியாயம் முடிந்துவிட்ட தாக நாம் கருதக் கூடாது. தமிழ் நாட்டைத் தவிர வேறு எங்கே யும் இத்தகைய சம்பவம் நிகழ்வதை நாம் கேள்விப்பட்டதில்லை. அங்கேதான் நாடார்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் சிற்சில சமயங் களில் மோதல் ஏற்படுகிறது. இதை ஒழிக்க நாம் ஏதாவதொரு வழியைக் கண்டுபிடிக்கவேண்டும்.

வேல்சந்த் ஹீராசந்த், அம்பேத்காருடன் இங்கு வரவேண்டு மென யோசித்துவருகிறார்.

உங்களுக்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டியது அவசிய மாயின், விரைவில் அவ்விதமே செய்வதுதான் சிறந்ததாகும்.

பஜேகார் ஆஸ்பத்திரியில் தேவதார் மரணப்படுக்கையில் இருந்துவருகிறார். அவருக்குக் கடிதம் எழுதுங்கள்.

## 110

வார்தா,
நவம்பர் 14, 1935

இப்போது நீங்கள் பேசக்கூடிய நிலையில்* இருக்கிறீர்களென நம்புகிறேன். அம்பேத்காருக்கு நீங்கள் எழுதியுள்ள கடிதத்தை நான் வாசித்தேன். அது கவர்ச்சியான முறையில் எழுதப்பட்டிருக்கிறது. எனினும் அது தற்போது அவரது மனத்தில் பதிவதற்கு இடமில்லை. என்னைத் திட்டாமல் அவரால் இருக்க முடியாது. எனவே அதில் உங்களுக்கும் பங்கு இராமல் அவரால் எவ்விதம் தவிர்க்க முடியும்? லண்டனைப் போல் இங்கேயும் அவருக்குப் பின் பல சக்திகள் வேலை செய்துவருகின்றன. இதில் பரிதாபம் என்னவெனில், இந்தப் பிரச்னை அவரது மிரட்டல்கள் காரணமாக எல்லையின்றிப் பெரிதாகிவிட்டது. அதைப் பற்றிக் கூட நான் கவலைப்படவில்லை. ஆனால் அப்பிரச்னை உருவான நல்ல காரியங்களுக்காக அல்ல, தீய நோக்கங்களுக்காக உபயோகிக்கப்பட்டு வருவதுதான் கவலையைக் கொடுக்கின்றது. தீண்டாமையை ஒழிப்பதற்குப் பதிலாக மக்கள் இப்போது அவரைச் சமாதானப் படுத்த முயற்சித்து வருகிறார்கள். அத்தகைய சூழ் நிலையில்தான் நாம் வேலை செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். எங்கு சென்றாலும் பயமுறுத்தலும் பலவீனமும் தான் காட்சியளிக்கின்றன.

ஜனவரி மாதம் குஜராத்தில் மேற்கொள்ள வேண்டிய எனது திட்டத்தைப் பற்றி நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்களென நம்புகிறேன். நான் 12-ஆம் தேதி அகமதாபாத்துக்குச் செல்லுகிறேன்; 28-ஆம் தேதி வார்தாவுக்குத் திரும்பிவருவேன். அன்றுதான் ராதாகிருஷ்ண பஜாஜ்—அனசூயா ஜாஜு திருமணம் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. அவ்வாறாக நான் குஜராத்தில் பதினைந்து நாட்கள் தான் தங்க முடியும். தயவு செய்து அந்தப் பதினைந்து நாட்களில் என்னென்ன ஏற்பாடுகள் செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்யுங்கள்.

## 111

வார்தா,
டிசம்பர் 11, 1935

பல நாட்களுக்குப் பிறகு இப்போது நான் உங்களுக்கு எழுதுகிறேன். டாக்டர்களின் கட்டளைகளைக் கூட மீறியே நான் எழுதுகிறேன் எனலாம். ஜம்னாலால்ஜி பயப்படுகிறார். இருந்தாலும் நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். நீங்கள் சாதாரண

*மூல நோய் காரணமாக 9-11-1935-ல் சர்தாருக்கு அறுவை சிகிச்சை நடந்தது. அதைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

மாக இங்கு வரவேண்டிய அவசியம் ஏதாவது இருந்தால் மாத்திரமே வரவேண்டும். நான் சௌகரியமாகவே இருக்கிறேன். என்னுடைய, உங்களுடைய, ஒவ்வொருவருடையவும் உயிரிழை பக்த மீராபாய் நேசித்த கடவுளின் கையில் இருக்கிறது. அவர் நம்மை எங்கு இட்டுச் செல்லுகிருரோ அங்குதான் நாம் செல்ல வேண்டும். யாரையும் தமது விருப்பப்படி நடந்து கொள்ள அவர் விடுவதில்லை.

## 112

வார்தா,
*ஜனவரி 4, 1936*

அங்கு வர முடியாததைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். ஆனல் அங்கு வர டாக்டர்கள் விதிக்கும் நிபந்தனைகளுக்கெல்லாம் நான் இணங்க முடியாது. அவர்கள் நினைப்பது போல் எனது உடல் நிலை அவ்வளவு மோசமாக இருக்குமாயின், நான் அங்கு வராமல் இருப்பதே நல்லது. ஹரிஜனங்களுக்காக வசூல் செய்து முடிந்த பின், தாங்கள் இங்கு வந்து சில நாட்கள் தங்கியிருக்கவேண்டும் என்பது என் விருப்பம். ராஜேந்திரபாபுவையும் அழைத்துவாருங்கள். அவசியமான தொகையை நீங்கள் அகமதாபாத்திலேயே வசூல் செய்துவிடலாம்*.

## 113

சேவாகிராமம்,
*மே 1, 1936*

மகாதேவ் இன்று புறப்பட முடியவில்லை. அதற்குக் காரணங்களில் ஒன்று எனது தந்தியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மற்றொரு காரணம் என்னவெனில், அடுத்த வார 'ஹரிஜன்' இதழுக்கு அவர் விஷயங்களை அனுப்பவேண்டும். அவர் புறப்படுவதற்கு முன் அந்த அலுவலை முடித்துவிட்டால், இன்னும் அதிக நாட்கள் கூட நீங்கள் அவரை அங்கே நிறுத்திவைத்துக் கொள்ளலாம். இதையெல்லாம் பற்றி மகாதேவ் உங்களிடம் கூறுவார்.

---

*குஜராத்தில் சில நாட்கள் தங்கி ஹரிஜனங்களுக்காக வசூல்கள் செய்ய வேண்டுமென காந்திஜி திட்டமிட்டிருந்தார். ஆனல் அவர் நோயுற்றதால், வார்தாவை விட்டுச் செல்ல முடியவில்லை. எனவே ஹரிஜன் நிதிக்கு வசூல் செய்யும் பொறுப்பை சர்தார் ஏற்க நேர்ந்தது. அந்த நிதிக்கு தற்காலிகமாக ரூ. 30,000 தான் தேவையாக இருந்தது. ஆனல் சர்தார் அகமதாபாத்தில் மாத்திரம் இரண்டே நாட்களில் ரூ. 50,000 வசூல் செய்து விட்டார்.

உங்களுடைய உடல் நலனை நீங்கள் சீர்படுத்திக் கொள்ளா விட்டால் நமக்குள் சச்சரவு ஏற்படுமென நான் உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன்.

இந்தக் கிராமத்தின்* சீதோஷ்ண நிலை உண்மையில் நன்றாக இருக்கிறது. இரவு அழகாகவும் குளிர்ச்சியாகவும் இருக்கிறது. உணவு முதலியவற்றிற்கான ஏற்பாடுகள் சிறந்தவையாக இருக்கின்றன. மேற்கொண்டு இக்கிராமத்தைப் பற்றிய விவரங்களை ஓய்வு இருக்கும்போது எழுதுகிறேன். டாக்டர் அம்பேத்காரும் வால்சந்தும் ஒரு தடவை என்னைச் சந்தித்துப் பேசினார்கள்; மீண்டும் அவர்கள் வருகிறார்கள்.

## 114

சேவாகிராமம்,
*ஜூலை 28, 1936*

நீங்கள் மிகுந்த வேதனையைப் பொறுத்துக் கொண்டுவருகிறீர்கள். உங்கள் மூக்கில் உள்ள புண்ணுக்கு இதற்குள் அறுவை சிகிச்சை நடந்திருக்குமென நான் எதிர்பார்க்கிறேன்.

உங்களுக்குத் தேவையான ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் இங்கே வரமுடியாவிடில், அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். எனது ஆரோக்கியம் மிகவும் திருப்திகரமாக இருக்கிறது.

## 115

சேவாகிராமம்,
ஆகஸ்டு *1, 1936*

ஒரு வழியாக அறுவை சிகிச்சை முடிந்துவிட்டது. அது வெற்றிகரமாக முடிந்திருக்கும் என்றே நம்புகிறேன்.

நான் ராஜாராமுக்கு எழுதிய பதிலின் நகல் ஒன்று உங்களுக்கு நிச்சயமாகக் கிடைத்திருக்கும். நீங்கள் ஏற்கனவே அவருக்குப் பதில் எழுதியிராவிடில், பின்வருமாறு எழுதும்படி நான் உங்களுக்கு யோசனை கூறுகிறேன்.

“உங்கள் கடிதத்தில் பதில் அளிக்க வேண்டிய புதிய விஷயம் எதுவும் இல்லை. எனவே எனது முதல் கடிதத்தில் கூறியிருப்பதைவிட அதிகமாக நான் எதுவும் சொல்லுவதற்கில்லை.”

ஆஸ்பத்திரியிலிருந்து வருவதற்கு அவசரப்படாதீர்கள். நீங்கள் போதிய ஓய்வு எடுத்துக் கொள்ளும்வரையில், வேலை செய்ய ஆரம்பித்துவிடாதீர்கள்.

---

* வார்தாவுக்கு அருகிலுள்ள, பிற்காலத்தில் உலகப் புகழ் பெற்ற கிராமத்தைபபற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார். அதற்குத்தான் பின்னர் சேவாகிராமம் என்று பெயர் சூட்டப்பட்டது.

## 116

சேவாகிராமம்,
நவம்பர் 24, 1936

இந்த விஷயத்தைப் பொறுத்த மட்டிலாவது, நீங்கள் கூறுவதை யாரும் ஒத்துக்கொள்ளவில்லையென்று தெரிகிறது. என்னைப் பொறுத்தமட்டில் நான் ஜவாஹர்லாலின் அறிக்கையை* விரும்புகிறேன். அவர் அதைக் காட்டிலும் குறைவாக எதுவும் கூறியிருக்க முடியாது; அதைக் காட்டிலும் அதிகமாக அவர் எதுவும் கூறுவாரென நாம் எதிர்பார்க்கவும் முடியாது. இம்முறை காரியக் கமிட்டியில் தொடர்ந்து இருப்பதென்ற பேச்சிற்கே இடமில்லை. அவ்விஷயம் யோசனைக்கு வரும்போது நாம் பார்க்கலாம். நீங்கள் அறிக்கை வெளியிடுவதற்காக, நகல் தயாரித்து அனுப்ப நான் விரும்பவில்லை. ஆனால் மதுரதாஸிடம் அவ்விதம் அனுப்புவதற்கு நான் மறுக்க முடியாது. அவன் எனது சகோதரரின் மகன் அல்லவா? அதன் காரணமாக நான் அவனுக்குப் பல காரியங்களைச் செய்து கொடுக்க வேண்டியிருக்கிறது. அந்த நகலை நீங்கள் விரும்பாவிடில், வேறொன்றை எழுதுங்கள். போட்டியிடுவ்து உங்களுடைய கடமை என்று நீங்கள் கருதுவீர்களாயின், அப்படியே செய்யுங்கள். நகலில், நீங்கள் அவசியமென்று கருதும் இடங்களை மாற்றி எழுதலாம். நீங்கள் என்ன செய்தாலும், நம்பிக்கையுடன் செய்ய வேண்டும். ஏனெனில் நாம் பல பாலைவனங்களைக் கடந்து செல்லவேண்டியிருக்கும்.

உங்களுடைய ஆரோக்கியத்தை அபிவிருத்தி செய்து கொள்ளுங்கள். எல்லைப் புறத்திலிருந்து திரும்பிவரும்போது வார்தா வழியாகச் செல்ல முடியுமா என்று பாருங்கள்.

## 117

சேவாகிராமம்,
பிப்ரவரி 5, 1937

நான் என்னுடைய வலது கைக்கு ஓய்வு கொடுத்துக் கொண்டிருக்கிறேன். ஏனெனில் திங்கட்கிழமை அதற்கு ஏராளமான வேலைகள் இருக்கின்றன.†

உங்களை நீங்களே கடுமையாக விரட்டி வேலை வாங்குகிறீர்கள். ஆனால் சர்தாரைக் (தளபதியை) கண்டிக்கவோ அல்லது வழிக்குக்

---

* பெயிஜ்பூர் காங்கிரஸ் தலைவராக ஜவாஹர்லால் நேரு தேர்ந்தெடுக்கப்பட்டதைக் குறித்து அவர் விடுத்த அறிக்கையையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

† திங்கட்கிழமை மௌன தினமானதால் கடிதங்களை வாயால் கூறி பிறரை எழுதிக் கொள்ளும்படி காந்திஜி கூற முடியாது; அவரே தன் கையால் எழுதவேண்டும். அதைத் தான் காந்திஜி 117-ம் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

கொண்டுவரவோ யாரால் முடியும்? உங்களுடைய ஆரோக்கியத்துக்கு நீங்கள் ஏதாவது கேடு விளைவித்துக் கொண்டால், உங்கள் மனத்திற்குப் பிடிக்காத பல வார்த்தைகளை என்னிடமிருந்து நீங்கள் கேட்கவேண்டியிருக்கும். இவ்வளவுதான் முகவுரை.

போலக்கிற்கு நான் எழுதிய கடிதத்தை நீங்கள் விரும்பவில்லை என்று மகாதேவுக்கு சந்திரசங்கர் எழுதியுள்ளார். போலக் எழுதிய கடிதத்திற்கு நான் பதில் அளித்துத் தீரவேண்டியிருந்தது. ஆனல் அதை அவர் உடனே வெளியிடுவார் என்று நான் நினைக்கவில்லை. எனினும் அவ்விதம் வெளியிட்டதால், நமக்கு எத்தகைய தீங்கும் ஏற்படவில்லை. தீங்கு ஏற்படுவதாகவே வைத்துக் கொண்டாலும், அது தற்காலிகமானதாகவே இருக்கும். நியாயமான ஒரு விஷயத்தைப் பகிரங்கப்படுத்துவதால் ஒரு போதும் எத்தகைய தீங்கும் நேராது.

நீங்கள் எப்போது இங்கே வருகிறீர்கள்? காங்கிரஸ் கூட்டத்தை எங்கு நடத்தப் போகிறீர்கள்? அதற்கான ஏற்பாடுகளை உடனே ஆரம்பித்துவிடவேண்டும்.

## 118

சேவாகிராமம், வார்தா,
*மே 4, 1937*

நீங்கள் என்னை எங்கே அழைக்க உத்தேசித்திருக்கிறீர்கள்? என்னை எங்கே அழைத்தாலும் என்னுடன் வரும் ஏராளமானவர்களை நீங்கள் பராமரிக்க வேண்டியிருக்கும். அவர்களை என்னுடன் வராமல் நான் தடுக்கவும் முடியாது. நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை என்ருலும், நாங்கள் யாருடைய பங்களாவில் தங்குகிருேமோ அவர்களைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டும் அல்லவா? நான் எங்கே சென்ருலும் இம்முறை என்னுடன் தாம் வந்து தீரப்போவதாக மீரா முன்பே 'நோட்டீஸ்' கொடுத்து விட்டார். எனக்குக் கடற்கரைக் காற்று வேண்டும் என நான் நினைக்கவில்லை. உங்கள் விருப்பப்படி என்னை பார்டோலியிலும், சூரத்திலும்கூட எவ்வளவு காலம் வேண்டுமாயினும் நிச்சயமாக வைத்துக் கொள்ளவேண்டும். இருந்தாலும் நாங்கள் எல்லோரும் வந்து ஒரு பெரும் சுமையாக இருப்பதை நான் விரும்பவில்லை. இதுவரை நிச்சயமாகியுள்ள ஜாபிதா பின்வருமாறு :

பா, கனே, மீரா, பியாரிலால், மகாதேவ், ராதாகிருஷ்ண, கனு, மன்ஹர்லால், சாரதா.

நீங்கள் போதிய ஓய்வு எடுத்துக் கொண்டுவருகிறீர்களென நம்புகிறேன்.

## 119

வார்தா,
ஜூன் 19, 1937

புரோச்சில் நிகழ்ந்த சம்பவத்தைப் பற்றி நான் வாசித்தேன். அத்தகைய பொய்க் கூற்றுகளைத் தொடர்ந்து சொல்லிக் கொண்டு தான் இருப்பார்கள். தினகரராவைப் போன்ற ஒருவர் விஷயத்தில் அவர்கள் வேறு எவ்விதம் நடந்து கொள்ளுவார்களென நாம் எதிர்பார்க்க முடியும்?

26-லிருந்து 29-ம் தேதி வரையில் காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெற முடியும். எனவே நமக்குப் போதிய அவகாசம் இருக்கிறது. இருந்தாலும், அது எவ்வளவுக்கு விரைவில் கூடுகிறதோ அவ்வளவுக்கு நல்லதுதான்.

## 120

சேவாகிராமம்,
ஜூன் 21, 1937

உங்களுடைய கடிதத்தையும், அதற்கு ஜவாஹர்லால் அளித்துள்ள பதிலையும் வாசித்தேன். மற்றவர்களுக்காக நாரிமன் தோண்டிவரும் குழியில் அவரே விழுந்துவிடுவார் என்றே தோன்றுகிறது.

லோதியனிடமிருந்து எனக்கு ஒரு நீண்ட கடிதம் வந்திருக்கிறது. அதை வாசிக்க எனக்கு இன்னும் நேரம் கிடைக்கவில்லை. இப்போது உங்களுக்கு வீட்டிற்குள்ளாவது நடமாட முடியுமென நம்புகிறேன்.*

## 121

வார்தா,
ஜூலை 11, 1937

நாரிமன் பிரச்னையைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அது விரைவில் ஒரு முடிவுக்கு வந்துவிடும்.

## 122

சேவாகிராமம்,
ஜூலை 14, 1937

மௌலானாவைப் பற்றி உங்களுடைய மனத்தில் ஏதாவது சந்தேகமோ அல்லது அச்சமோ இருந்தால், அவரைப் பற்றி

---

* காலில் கருவேல் முள் தைத்து சர்தார் நடக்கமுடியாத நிலையில் இருந்தார். இதையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

நீங்கள் அந்தத் தந்தியை அனுப்பியிருக்கக் கூடாது. எனினும் அவ்விதம் அனுப்புவதால் பல தொந்தரவுகளிலிருந்தும் நாம் விடுபடுவோமென நான் நினைத்தேன். இந்த நடவடிக்கையால் நமக்கு நன்மையே தவிர வேறு எதுவுமில்லை என்றே நான் இன்னும் நினைக்கிறேன். ஜவாஹர்லாலைக் கூட நான் அவ்விதம் எச்சரிக்கை செய்தது உங்களுக்கு நினைவிருக்கும். அதன் பலனாக அறிக்கை வெளியிடவேண்டிய பொறுப்பு அவருக்கு ஏற்பட்டது. நான் இடைவிடாது கூறிவரும் யோசனைகள் உங்களுடைய மனத்திற்கு உடன்பாடானவையாக இராவிடில், நீங்கள் அவற்றை அங்கீகரிப்பது சரியல்ல.

## 123

சேவாகிராமம்,
ஜூலை 15, 1937

புலாபாய், முன்ஷி ஆகியோரை நீங்கள் சமாளித்துக்கொள்வீர்கள் என்பது நிச்சயம். என்றால் அங்கு அதிக பலன் ஏற்படாது. மந்திரி சபையில் கில்டர் சேர்ந்தால், மிகவும் சிறப்பாக இருக்கும் என்பது நிச்சயம்.

மௌலானாவிடமிருந்து யாதொரு பதிலும் வராவிடில், அதற்காகக் காத்திருக்க நேரமும் இல்லாவிட்டால், பின் கண்ட இரண்டு காரியங்களில் ஏதாவதொன்றைச் செய்யலாம். அப்பதவிக்கு முற்றிலும் தகுதி வாய்ந்த ஒருவரை நீங்கள் நியமிக்கலாம். அல்லது மௌலானாவினால் யார் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் அவர் நியமிக்கப்படுவார் என்று நீங்கள் தெளிவாகக் கூறிவிடலாம். காலங்கடத்தும் அவரது போக்கை ஏற்கனவே நாம் அறிவோம். மௌலானாவினால் அங்கீகரிக்கப்பட்ட ஒருவரைக் குறிப்பிடும்படியோ அல்லது வேறு ஏதாவது யோசனை கூறும்படியோ ஜவாஹர்லாலுக்கு ஏன் ஒரு தந்தி கொடுக்கக்கூடாது?

உங்களுடைய சகோதரர்களை* நீங்கள் மிகவும் சீக்கிரமாக அனுப்பிவருகிறீர்களென்று தோன்றுகிறது. அவர்கள் நமக்கும் எங்கேயாவது இடங்களைத் தயார் செய்துவைப்பார்கள். நமது வேலை முடிந்துவிட்டதென்று கடவுள் நினைத்தால், அவர் ஒரு நொடியில் நம்மைக் கொண்டுபோய்விடுவார்.

## 124

வார்தா,
ஜூலை 17, 1937

நீங்கள் காரணமின்றி வருத்தமோ அல்லது கோபமோ அடைகிறீர்கள். நாரிமன் விவகாரம் பற்றி நீங்கள் வெளியிட்டுள்ள

* சர்தார் வல்லபாய் பட்டேலின் மூத்த சகோதரர் காலமானதைப் பற்றியே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

அறிக்கை முன்பே வெளியிடப்பட்டிருக்க வேண்டும். காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடமிருந்து, தீர்மானம் நிறைவேற்றுவதை விட அதிகமாக நாம் என்ன எதிர்பார்க்க முடியும்? துவேஷ உணர்ச்சியுடன் செய்யப்படும் தாக்குதல்களை எதிர்த்து நிற்க என்ன வழி இருக்கிறது? ஏதாவது தீங்கு ஏற்படுமாயின், இறுதியில் நாரிமனுக்குத்தான் அந்தத் தீங்கு ஏற்படும். காலித்தனத்திற்கு நாம் அடிபணிந்துவிடுவோமாயின், அதனுல் பலருக்கும் பாதகம் ஏற்படும் என்பதை நான் முற்றிலும் ஒப்புக் கொள்கிறேன். ஆனுல் நீங்களோ அல்லது வேறு யாராவதோ அவ்விதம் அடிபணிந்து விடுவீர்கள் என்ற பேச்சிற்கே இடமில்லை. நாரிமனுக்கு நான் எழுதிய கடிதத்தின் நகல் ஒன்றை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

பொறுமையையும், மன அமைதியையும் இழந்துவிடாதீர்கள்.

## 125

சேவாகிராமம்,
*ஜூலை 19, 1937*

காங்கிரஸ் மந்திரிகளுக்கு ரூ. 500 சம்பளமும், அதற்கு மேல் வீட்டு வாடகையும் கொடுக்க வேண்டும் என்ற பிரச்னையை ஆழ்ந்து பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகும். ஒரு காரியதரிசிக்கும் ஒரு மந்திரிக்கும் இடையே வேற்றுமை பாராட்டுவது அர்த்தமற்றது. எனினும் உங்கள் கருத்து இதற்கு மாறுனதா என்பதை எனக்கு அறிவியுங்கள்.

## 126

சேவாகிராமம்,
*ஜூலை 24, 1937*

நாரிமன்* சம்பந்தமாக எனக்கு என்ன தோன்றுகிறதோ அதை நான் செய்து வருகிறேன். அதையெல்லாம் பற்றி இப்போது நீங்கள் மறந்துவிட வேண்டும். அவர்கள் எத்தகைய தாக்குதலில் வேண்டுமாயினும் ஈடுபடட்டும். உங்களுடைய நற்பெயரைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை.

அத்தகைய காரியங்களைச் செய்வதற்கு நாம் பின்பற்றும் வழிகளில் வேற்றுமை இருக்கிறது. நான் சொல்ல வேண்டியது அவ்வளவுதான். எந்த வழி சிறந்தது என்பதை யார் கூற முடியும்?

* நாரிமனுக்கும் சர்தார் பட்டேலுக்கும் ஏற்பட்ட தகராறை விசாரித்து பகதூர்ஜியும் காந்திஜியும் வெளியிட்ட அறிக்கையைக் காரியக் கமிட்டி பரிசீலனை செய்து, நாரிமனின் நடத்தையை வன்மையாகக் கண்டித்ததுடன், இனி காங்கிரஸ் ஸ்தாபனத்தில் அவர் எவ்விதமான பதவியையும் பொறுப்பையும் வகிப்பதற்குத் தகுதியற்றவர் என்றும் தீர்மானித்தது.

பலன்களைக் கொண்டு கூட அவற்றின் தராதரத்தை நாம் முடிவு செய்ய முடியாது. பலன்களைக் கொடுக்காவிட்டால் கூட, மோசமான பலன்களைக் கொடுத்தால் கூட, நான் எனது வழியைக் கைவிடமாட்டேன். அதுபோலவே நீங்களும் உங்களுடைய வழியைக் கைவிடக் கூடாது. ஒருவர் தனக்கு எது சிறந்ததென்று தோன்றுகிறதோ அதைத் தான் செய்ய முடியும். எனது கடிதங்களால் நிலைமையில் எவ்வித மாறுதலும் ஏற்படக் கூடுமென நான் எதிர்பார்க்கவில்லை.

எனது உடல் நிலை திருப்திகரமாக இருக்கிறது. எனக்குச் சிறிது ஓய்வு தேவையாக இருப்பதால், அவ்விதமே ஓய்வு எடுத்துக்கொண்டு வருகிறேன்.

## 127

சேவாகிராமம்,
*செப்டம்பர் 26, 1937*

உங்களுடைய கடிதங்களை இப்போது தான் வாசித்துக் கொண்டிருக்கிறேன். ஐந்து நாட்கள் ஓய்ச்சல் ஒழிவின்றி முழு மூச்சுடன் யாத்திரை செய்தும்கூட உங்கள் உடல் நலன் பாதிக்கப்படாததைக் குறித்து நான் உண்மையில் ஆச்சரியம் அடைகிறேன்.

கடுமையாக உழைக்கும் ஆற்றல் வாய்ந்த இருவர் சேரும் போது, ஒருவரையொருவர் களைத்துச் சோர்வடையும்படி செய்து விடுவார்கள். பொதுவாக, பலவீனமான, உடல் மெலிந்த இருவர் பரஸ்பரம் நிலைமையை உணர்ந்துகொண்டு இங்கிதமாக நடந்து கொள்வார்கள். வலிமைவாய்ந்த ஒருவர்கூட பலவீனமான தமது தோழரிடம் ஓரளவு கருணையோடு நடந்து கொள்வார். ஆனால் நீங்கள் இருவரும்* சேர்ந்துவிட்டால், உங்களில் கடினமாக உழைப்பவர் யார் என்பதைக் கூறுவது முடியாத காரியம். எனவே உங்களுடைய பிரயாணம் குறிப்பிடத்தக்கதாக இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. அது எப்படியாயினும், கமலாநேருவின் நினைவுச் சின்னத்திற்கு நீங்கள் செய்ய வேண்டிய கடமையையும் பொறுப்பையும் நிறைவேற்றி விட்டீர்கள். வசூல்களும் திருப்திகரமாக இருக்கின்றன. அகமதாபாத் மில் சொந்தக்காரர்கள் அவர்களுடைய தகுதிக்கு உரிய தொகை கொடுத்தார்களா?

நாரிமன் விவகாரத்தைத் தயவுசெய்து மறந்துவிட முயற்சி செய்யுங்கள். அவ்விஷயமாக உங்களுக்குள்ள கவலையை என்னிடம் மாற்றியிருக்கிறீர்கள். நான் அதை பகதூர்ஜியிடம் ஒப்படைத்திருக்கிறேன். அவர் விடாமுயற்சியுடன் கூடிய உழைப்பாளி. தினந்தோறும் எல்லாக் கடிதங்களையும் அவர் விடாமல்

---

* பண்டித ஜவாஹர்லால் நேருவும் சர்தார் பட்டேலும் சேர்ந்து குஜராத்தில் பிரயாணம் செய்ததை காந்திஜி அவ்விதம் குறிப்பிட்டிருக்கிறார்.

வாசிக்கிறார். அவற்றிலிருந்து குறிப்புகளும் எடுத்துக் கொள்கிறார். அவற்றை வாசிப்பதற்கு மாத்திரமே இரண்டு வாரங்கள் செல்லும். அவரிடம் ஏராளமான வழக்குகள் வந்து குவிந்திருக்கின்றன. ஆனால் இதையும் அவர் சட்ட பூர்வமான ஒரு வழக்காகவே நினைத்து, இதற்கு நேரத்தை அர்ப்பணம் செய்துவருகிறார். இதற்கு ஆகும் காலத்தைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். பத்திரிகைகளில் வரும் தாக்குதல்களையும் வாசிக்காதீர்கள்.

ஹரிபுரா காங்கிரசுக்கு ஏற்படக்கூடிய பெரும் செலவு, நமது இல்லாமையையே குறிப்பிடுவதாகும். நம்மிடம் தற்போது நிறைந்து வழியும் நிதியில் நான் நமது அழிவையே காண்கிறேன். நம்முடைய பகட்டு வெறும் போலி ஆடம்பரமாகவே இருக்கும். ஏனெனில், தொண்டர்களின் உழைப்பினால் சிருஷ்டிக்கப் பட்ட எதுவும் அங்கு இராது. இது, நீங்கள் செய்துவரும் அலுவல் களைப் பற்றிய ஒரு கண்டனம் அல்ல; எதிர்காலத்தைப் பற்றிய ஒரு ஜோசியமே; நமது தற்போதைய நிலையின் துக்ககரமான ஒரு சித்திரமேயாகும். இதேபோல ராமதாஸ் குலாடிக்கும் ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். எது நேர்ந்தாலும், ஹரிபுரா காங் கிரஸுக்கான ஏற்பாடுகளைச் செய்வதில், இந்தக் கடிதம் காரண மாக நீங்கள் அலட்சியமாக இருந்துவிட வேண்டாம். உங்கள் அறிவுக்குத் தோன்றிய விதம் நீங்கள் தயவு செய்து ஏற்பாடு களைச் செய்துவாருங்கள்.

ஹரிபுரா காங்கிரஸ் முகாம் ஒரு கிராமமாக இருக்க வேண்டும், ஒரு நகரமாக இருக்கக்கூடாது. கிராமீயக் கலைகளுக்கு அங்கு பூரணமாக இடம் அளிக்க வேண்டும். கலைகளின் வளர்ச்சிக்கு அறிவும், மனமும் முக்கியமேயன்றி, ஒருபோதும் பணம் முக்கிய மல்ல. எனவே அலங்காரம் செய்வதற்கு காலணாகூட அவர்கள் செலவு செய்யும்படி தயவுசெய்து விட்டுவிடாதீர்கள். பட்சணக் கடைகளிலும், டீ கடைகளிலும் பசும்பாலையும், நெய்யையும் மாத்தி ரமே உபயோகிக்க அனுமதிக்கவேண்டும் என நினைக்கிறேன். அதா வது அவர்கள் தேவையான பண்டங்களை நம்மிடமிருந்து வாங்க வேண்டும் அல்லது நமது மேற்பார்வையில் அவர்கள் வெளியி லிருந்து பண்டங்களை வாங்கவேண்டும். இதன் சம்பந்தமாக நாம் செலவு செய்யும் தொகையை, 'பர்மிட்டு'கள் கொடுக்கும்போது அவர்களிடமிருந்து வசூல் செய்துவிட வேண்டும். பட்சணக் கடைக்காரர்களுக்கும் ஹோட்டல்காரர்களுக்கும் கடைகளை வைக்க நாம் உதவி அளிக்க வேண்டும் என்றாலும், அவர்கள் நாம் வகுக்கும் விதிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.

இப்போது தர்பார் கோபால்தாஸ் விஷயத்திற்கு வரு கிறேன். அவருடைய கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக அல்ல, நம்முடைய கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக நாம் தர்பாரின் கிராமத்தை நம் வசத்தில் திருப்பி எடுத்துக் கொள்ளவேண்டும். தாசாவை தர்பார் இழந்துவிட்டார். ஆனால் கேடா ஜில்லா இப் போது அவரது ராஜ்யமாகியிருக்கிறது. தாசாவைச் சேர்ந்த தர்பா

ரைப் பற்றி யாருக்கும் தெரியாது. ஆனால் கேடா தர்பாரை இப்போது எல்லோரும் அறிவர். எனவே ரவிஜிபாயின் (மணிபாய் பட்டேல்) கடிதம் என் மனத்தைக் கவரவில்லை. அது எனக்குக் கோபத்தையே உண்டாக்கியிருக்கும். ஆனால் இந்த வயதில் நான் கோபித்துக் கொள்வது தவறாகும். அது எப்படியாயினும், அவர் தொலைவில் இருப்பதால், நான் என் கோபத்தை அடக்கிக் கொண்டிருக்கிறேன். தாசா கிராமத்தைப் பற்றி அவரைக் காட்டிலும் நாம்தான் அதிக அக்கறை கொள்ளவேண்டியவர்களாக இருக்கிறோம். தவிர, தர்பாரிடம் அவருக்கு உள்ள நட்பு காரணமாகவே அவருக்கு அதில் அக்கறையும் கவலையும் ஏற்பட்டிருக்கின்றன. தர்பார் நம்முடைய நண்பராக இராமல் சாதாரணமான ஒரு சக ஊழியராக இருந்தால் கூட, நாம் அவ்விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொண்டிருப்போம். நாம் அவ்விதம் அக்கறை எடுத்துக் கொண்டிராவிடில், காங்கிரசில் நாம் இருக்குமிடமே தெரிந்திராது. எனினும் இவையெல்லாம் வெறும் வாய்ப்பந்தல்கள் தான். ரவிஜிபாய் கொடுத்துள்ள தகவலை அடிப்படையாகக் கொண்டு நாம் உடனே செயலில் ஈடுபடவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. புதிய மந்திரி சபைக்கு மூச்சுவிட அவகாசம் கொடுக்க வேண்டுமென நான் எண்ணியிருந்தேன். ஆனால் இப்போது நான் கருதுவது என்னவெனில், குஜராத் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் என்ற முறையில் நீங்களோ அல்லது அதன் காரியதரிசியோ முதல் மந்திரிக்கு எழுத வேண்டும். அதாவது காங்கிரசின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக அவர் (முதன் மந்திரி), தர்பார் வழக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்றும், தாசாவை தர்பாரிடம் திருப்பிக் கொடுத்துவிடும்படி சிபாரிசு செய்யுமாறு கவர்னரைக் கேட்கவேண்டும் என்றும் எழுத வேண்டும். கேட்ட உடனேயே அது திருப்பிக் கொடுக்கப்படும் என்றும், நான் அதில் தலையிடும்படியான நிலைமை ஏற்படாது என்றும் நம்புகிறேன்.

## 128

சேவாகிராமம்,<br>*அக்டோபர் 9, 1937*

நிம்காருக்கு நீங்கள் எழுதியுள்ள பதிலை நான் வாசித்தேன். அது எனக்குச் சிறிதும் திருப்தியளிக்கவில்லை. அதில் மிகுந்த சகிப்பின்மையையே நான் காண்கிறேன். நிம்காரைப் பற்றி நீங்கள் என்ன எழுதியிருக்கிறீர்களோ, அதை ருசிப்பிப்பது கடினம் என்றே நான் நினைக்கிறேன். அவ்விதமெல்லாம் எழுத வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது? 'கிராணிகிள்' பத்திரிகையைத் தாக்கியிருப்பது சிறிதும் கண்ணியமற்றதாகும். 'கிராணிகிள்' உங்களுக்கு விரோதமாக இருக்கிறது என்பது எனக்கே தெரியாது. அப்படியே இருந்தாலும் கூட, அதற்கு என்ன காரணம் இருக்க முடியும்? அவ்

விதம் நீங்கள் கூறவேண்டிய சந்தர்ப்பம் என்ன? உங்களுடைய நடவடிக்கையே உங்களுக்கு எதிர்ப்பை வருந்தி அழைப்பதாக இருக்கிறது.

## 129

சேவாகிராமம்,

(அக்டோபர் 1-க்கும் 15-ம் தேதிக்கும் இடையே எழுதப் பட்டது.)

தற்போதைக்கு ஜின்னாவை நான் சந்திப்பேன் என்று நினைக்கவில்லை. நான் அவரைப் பார்க்க வேண்டுமென ஜவாஹர்லாலும் விரும்பவில்லை.

நான் கல்கத்தாவுக்குச் செல்லும்படி நேரலாம் என்று தோன்றுகிறது. நான் அங்கு போகவேண்டுமென ஜவாஹர்லால் வற்புறுத்துகிறார். வங்காளத்திலிருந்தும் அழைப்புகள் வந்திருக்கின்றன. சுபாஷும் எனக்கு எழுதியிருக்கிறார். நான் அங்கு சென்றால் பாதுகாப்புக் கைதிகளையும் சந்திக்கலாம். எனவே நாம் வழியில் சந்திக்கா விட்டாலும் கல்கத்தாவில் நிச்சயமாகச் சந்திப்போம்.

ஒற்றுமையைத் தகர்க்க இப்போது தோன்றிவரும் மனப்போக்கை நாம் தடுக்காவிடில், நமது லட்சியம் தோல்வியுறும் என்றே நான் கருதுகிறேன். கட்டுப்பாட்டை நிலைநிறுத்த நாம் எல்லா விதமான முயற்சிகளும் செய்ய வேண்டும். அவர்கள் நாம் கூறுவதற்குச் செவி கொடுக்காவிடில், நாம் விலகிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. தற்போதுள்ள ஸ்தாபனத்தின் ஒரு பகுதி ஒரு சிலரின் கட்டுப்பாட்டிற்குள் இருந்துவருவது அர்த்தமற்றதாகும். ஸ்தாபனம் முழுவதும் ஐக்கியமான கட்டுப்பாட்டிற்குள் இருந்தால்தான், உருவான வேலை செய்வது சாத்தியமாகும். இதை நிலைநிறுத்த நம்மால் என்ன செய்யக்கூடுமோ அதைச் செய்வோம்.

சதானந்தைப் பற்றி எழுத நான் முற்றிலும் மறந்துவிட்டேன். அவர் இங்கே வந்திருந்தார். மீண்டும் ஒரு பத்திரிகையை ஆரம்பிக்கவும், செய்தி ஸ்தாபனம் ஒன்றை அமைக்கவும் அவர் விரும்பினார். அவருக்குச் சிறிதும் உற்சாகமளிக்க நான் மறுத்துவிட்டேன். இரண்டாவது முறையும் அதே தவறைச் செய்யவேண்டாம் என்றும் அவருக்குப் புத்திமதி கூறினேன். அவர் பத்திரிகையை ஆரம்பித்தாலும், ஆரம்பிக்காவிட்டாலும் என்னை மறந்துவிடும்படி அவரிடம் சொன்னேன். அவர் இதற்கு இசைந்தார் என்றாலும், அவர் தாம் செய்த தவறுக்குச் சிறிதும் வருந்துவதாகத் தோன்றவில்லை. பம்பாயில் ஒரு புதிய ஆங்கில தினசரிப் பத்திரிகையை ஆரம்பிப்பது புத்திசாலித்தனமல்ல என்பதே எனது கருத்தாகும்.

நிம்காருக்கு பதில் எழுத வேண்டியது அவசியம். பத்திரிகைச் செய்திகளை ஆதாரமாகக் கொண்டு நான் எத்தகைய நடவடிக்கையும் எடுக்க முடியாது என்று மாத்திரமே கூறியுள்ளேன்.

## 130

(மௌன தினத்தன்று காந்திஜிக்கும் பட்டேலுக்கும் சம்பாஷணை நடந்த போது காந்திஜி எழுதிக் காட்டிய விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:)

சேவாகிராமம்,
நவம்பர் 1, 1937

காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்து எல்லோரும் வெளியேறிவிடுவதே சிறந்ததென்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன். இறுதியில் மற்றவர்கள் ராஜிநாமா செய்யாவிட்டால் கூட, நீங்கள் ராஜிநாமா செய்துவிட வேண்டும். ஜம்னுலால் நிச்சயமாக வெளியே வந்துவிடுவார். அதன் பின் பாக்கியிருப்பது யார்? பூஜ்யம்தான். புலாபாயும் வெளியே வந்துவிடுவார். நீங்கள் வெளியே வருவதற்கு யாதொரு தடையும் இல்லை. மௌலானுவின் ஆதரவைப் பெற வேண்டியது முற்றிலும் அவசியமென நான் நினைக்கவில்லை. நீங்கள் இப்போது வெளியே வராவிடில், பின்னர் நீங்கள் விரும்பாவிட்டாலும் கூட வெளியேறும்படி நேரலாம். சுபாஷின் நிலை உறுதியற்றதாக இருந்துவருகிறது என்ருலும், அவரைத் தவிர வேறு யாரும் ஹரிபுரா காங்கிரசின் தலைவராக இருக்க முடியாது. நேற்றிரவு அதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன்; இன்று காலை மீண்டும் அதைப் பற்றியே நினைத்தேன். மற்றவர்கள் அவரவர் விருப்பப்படி செய்யலாம். ஆனால் நீங்கள் அதிலிருந்து நிச்சயமாக வெளியேறிவிட வேண்டும் என்பதே எனது கருத்தாகும். மாகாண ஸ்தாபனங்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளாவிடில், நாம் எதுவும் செய்வதற்கில்லை; நம்முடைய முயற்சிகள் யாவும் தோல்வியே அடையும்.

நாரிமனைப் பற்றிய விஷயத்தை நான் கண்டுபிடிக்க முயற்சிக்கிறேன். அதன் சம்பந்தமாக அவர்கள் நடவடிக்கை எடுத்துக் கொள்ள முற்படாமல் இருக்கலாம். இருந்தாலும், மற்ற அங்கத்தினர்கள் என்ன சொல்லுகிருர்கள்? தேவும், பட்டவர்த்தனும், புலாபாயும் என்ன நினைக்கிருர்கள்? அப்பிரச்னையை ஒரே ஒரு அங்கத்தினர் கூட எழுப்பலாம். சாட்சியம்தான் தெளிவாக இருக்கிறதே.

தீவிரமான கருத்து வேற்றுமை இருப்பதால், கமிட்டியில் தொடர்ந்து இருப்பது சாத்தியமற்றது என்பதை நீங்கள் தெளிவாகக் கூறிவிட வேண்டும். நீங்கள் ஒருவர்தான் இப்பிரச்னையை பற்றி முற்றிலும் சிந்தித்து ஒரு முடிவு செய்ய வேண்டும். மற்ற எவருடைய விவேகமும் இவ்விஷயத்தில் பயன்படாது. கமிட்டியில் நீங்கள் தொடர்ந்து இருப்பதால் தீங்குதான் நேரும்.

குஜராத்தைப் பாதுகாப்பது சாத்தியமாக இருக்கலாம். ஒருவேளை அதுவும் முடியாமற் போய்விடலாம். வெள்ளம் போகிற திசையில் ஒருவர் தம்மை அது அடித்துக் கொண்டுபோக விட்டுவிடுவது அழிவைத்தான் உண்டாக்கும்.

நீங்கள் யாவரும் ராஜிநாமா செய்துவிட வேண்டும் என்று நான் முன்பே யோசனை கூறியிருக்கிறேன். இன்றே எல்லோரும் சேர்ந்து யோசனை செய்யுங்கள். இன்று செய்யப்படும் காரியம் ஒழுங்கற்றது என்பது நிச்சயம். அதுபோல் பல அலுவல்கள் ஒழுங்கற்ற முறையில் செய்யப்பட்டுவருகின்றன. அவரது விருப்பப் படி அவர் தமது காரியக் கமிட்டியைத் தாராளமாக அமைத்துக் கொள்ளட்டும். அவரும் ராஜிநாமா செய்வது ஒழுங்கிற்கு முரணானது என்பதை அவருக்குத் தெளிவாக எடுத்துக் கூறவேண்டும். ராஜேந்திரபாபு இன்று இங்கு வருகிறார். இதையெல்லாம் பற்றி அவரிடம் கேட்ட பின், நீங்கள் எல்லோரும் ராஜிநாமா செய்துவிட வேண்டும். அதைக் கவனிக்க எனக்கு நேரமோ அல்லது பலமோ இல்லை. நீங்களே இன்றிரவு பேசி முடிவு செய்ய வேண்டும்.

## 131

வித்தல் நகர், ஹரிபுரா,
பிப்ரவரி 20, 1938

இன்று நீங்கள் நிகழ்த்திய பிரசங்கத்தைப் பற்றி தேவதாஸ் புகார் கூறினான். பின்னர் ஜெயப்பிரகாஷ் வந்து அதைக் குறித்து மிகுந்த மனவேதனையுடன் பேசினார். உங்களுடைய பிரசங்கம் எல்லைமீறிக் கடுமையாக இருந்ததென்றே நான் நினைக்கிறேன். அத்தகைய பிரசங்கத்தினால் நீங்கள் சோஷலிஸ்டுகளின் மனத்தை மாற்றிவிட முடியாது. அது ஒரு தவறென்று நீங்கள் கருதினால், மேடையில் ஏற சுபாஷிடமிருந்து விசேஷ அனுமதி பெற்று, அவர்களுடைய கண்ணீரைத் துடைத்து அவர்கள் புன்முறுவல் செய்யும்படி பேசுங்கள். அடிக்கு நாம் ஒருபோதும் பதிலடி கொடுக்கக் கூடாது. மன்னிப்பதுதான் பலமுள்ளவர்களின் அணிகலன் ஆகும். அவர்கள் தங்களுடைய பிரசங்கத்தினால் பிறருக்குப் பாதகம் ஏற்படுமாறு செய்துவிட முடியாது. உண்மையில் இதைப் பற்றி நான் உங்களுடன் பேச விரும்பினேன்; ஆனால் அதற்கு நேரம் இல்லை.

## 132

சேவாகிராமம்
ஏப்ரல் 18, 1938

நேற்று உங்களுக்கு பியாரிலால் கடிதம் எழுதியுள்ளார். நீங்கள் இங்கு வந்தால் சில விஷயங்களைப்பற்றி நாம் பேசலாம். எனினும் வர இயலாவிடில், அதைப் பொருட்படுத்த வேண்டாம்.

குஜராத்தில் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களைப் பற்றிய பிரச்னை எழுந்தது. நாகபுரி சம்பந்தமாக மேற்கொண்டு எதுவும் செய்வது முடியாத காரியமென நான் நினைக்கிறேன். அது காலப்போக்கில் இயல்பாக நடக்கட்டும் என்று அதை விட்டுவிட வேண்டும். அக் கொள்கை முழுவதையுமே கவனத்துடன் புனராலோசனை செய்ய வேண்டும். எப்படியிருந்தாலும் ஜின்னாவைப் பார்ப்பதற்காக 28-ஆம் தேதி நான் அங்கே வரவேண்டும். அன்றே நான் திரும்பி விட வேண்டுமென்றும் நினைக்கிறேன்.

நீங்கள் சென்று ஜல்பாயை (ஏ. டி. நௌரோஜி) பார்த்தீர்களா? அவருக்கு நீங்கள் கடிதம் எழுதினீர்களா?

என்னை நீங்கள் கடற்கரைக்கு அழைத்துச் செல்ல வேண்டாம் என்பதே எனது விருப்பமாகும். மே 6, 7 தேதிகளில் உங்கள் கமிட்டி வார்தாவில் கூடும். எனது ஆரோக்கியம் உண்மையில் நன்றாக இருக்கிறது.

## 133

சேவாகிராமம்,
ஏப்ரல் 23, 1938

மகாதேவ் இன்று மாலை வந்து சேருவார். 28-ஆம் தேதி காலை நான் அங்கு வந்து சேரலாமென நம்புகிறேன். அன்றே நான் கவர்னரைச் சந்திக்கலாம். 9 அல்லது 9-30 மணிக்கு நான் அவரைப் பார்க்கத் தயாராக இருப்பேன்.

ஒரிஸ்ஸா, கேடாவிலுள்ள நிலங்கள், பாதுகாப்புக் கைதிகள் பிரச்னை ஆகியவற்றைப் பற்றி நான் வைஸ்ராயுடன் பேசினேன்.

மற்றொரு சமயம்தான் குஜராத்தில் நான் சில நாட்கள் தங்கியிருப்பது சாத்தியமாக இருக்கும். மே மாதம் நான் எல்லைப்புற மாகாணத்திற்குச் செல்ல வேண்டியிருக்கும். இன்று நான் கான் சாகிபுக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். மகாதேவ் வரும்போது மேற்கொண்டு அதன் சம்பந்தமான விவரங்கள் தெரியும்.

தற்போதைக்கு எனது உடல் நிலை திருப்திகரமாக இருக்கிறது.

ஜின்னாவைப் பற்றி நான் விடுத்துள்ள அறிக்கையைத் தயவு செய்து வாசியுங்கள். நான் அவரைச் சந்திக்காவிடில், நிச்சயமாக அது தப்பெண்ணத்திற்கு இடம் கொடுக்கும்.

## 134

சேவாகிராமம்,
*ஜூலை 18, 1938*

ஷரீப் இங்கு வந்து ஒன்றரை மணி நேரம் என்னுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார். உங்களுக்கும் அவருக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தையும் அப்போது அவர் என்னிடம் காட்டினுர். அவரைப் பற்றி நீங்கள் சர் மன்மதத்திற்கு (நாத் முகர்ஜி) ஏதாவது கடிதம் எழுதினீர்களா என்று அவர் கேட்டார். சர்தார் ஒருபோதும் சர் மன்மதத்திற்கு எழுதியிருக்க மாட்டார் என்று நான் அவரிடம் கூறினேன். இருந்தாலும் உங்களுக்கு எழுதி அதைப் பற்றி நிச்சயமாக அறிந்து கொள்வதாகவும் சொன்னேன். ஆகையால் தயவு செய்து அதைப் பற்றி எனக்கு அறிவியுங்கள்.

ஜின்னுபாய்க்கு அனுப்புவதற்காக நான் எனது பதிலைத் தயாரித்திருக்கிறேன். நீங்கள் வரும்போது அதைப் பார்க்கலாம்.

மற்றச் செய்திகளை மகாதேவ் உங்களுக்குக் கூறுவார்.

## 135

சேவாகிராமம்,
*ஜூலை 19, 1938*

இந்த இரண்டு கனவான்களும் கொல்லம் பாங்கியிலிருந்து வருகிறுர்கள். அவர்கள் தங்கள் கதையை உங்களிடம் கூறி உங்கள் ஆலோசனையையும் கேட்க விரும்புகிறுர்கள். அவர்களுடைய கதை பயங்கரமாக இருக்கிறது.

அவர்கள் சர் புருஷோத்தமதாஸையும் பார்க்க விரும்புகிறுர்கள். அவருக்கும் இவர்களிடம் ஒரு கடிதம் கொடுத்து அனுப்பியிருக்கிறேன்.

## 136

சேவாகிராமம்,
*ஆகஸ்டு 12, 1938*

பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடைபெற வேண்டுமென நீங்கள் விரும்பினுல், தாராளமாக அங்கேயே கூட்டுங்கள்; டில்லியில் கூட்ட வேண்டாம். நான் வரவேண்டியது உண்மையிலேயே அவசியமாக இருந்தால் மாத்திரம் என்னைக் கூப்பிடுங்கள். கூட்டத்திற்கு வார்தாதான் சிறந்த இடமாகும். நீங்கள் இதற்கு இசைந்தால், தந்தி மூலம் ஜம்னுலாலையும் கலந்து ஆலோசியுங்கள். வசதியாக இருக்க வேண்டுமாயின், பம்பாய் தான் சிறந்த இடம் என்று நான் நினைக்கிறேன். எனக்கு ஜாகை

வசதி அளிப்பதைக் குறித்து நீங்கள் கவலைப்படத் தேவையில்லை. அ. இ. கா. க. கூட்டத்திற்கான அறிக்கையை சீக்கிரமாக வெளியிடுவது சிறந்ததாகும். எது உசிதம் என்று தோன்றுகிறதோ அப்படிச் செய்யுங்கள். எவ்வளவுக்கு அதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கிறேனோ அவ்வளவுக்கு பம்பாயே சிறந்ததென எனக்குத் தோன்றுகிறது. அ. இ. கா. க. கூட்டம் அலகாபாத்தில் நடைபெற்றதே இல்லையாதலின், அந்நகரில் கூடுவது பற்றியும் ஆலோசிக்கவேண்டும். இதைப் பற்றி நீங்கள் சிந்திக்கவேண்டும் என்பதற்காக மாத்திரமே இதை எழுதுகிறேன்.

## 137

சேவாகிராமம்,
ஆகஸ்டு *15, 1938*

நீங்கள் ராஜ்கோட்டிற்குச் சென்றதைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். அதிர்ஷ்டம் உங்கள் பக்கத்தில் இருக்கும்போதெல்லாம் அது இப்படித்தான் இருக்கும். சட்கார் தவறான வழியில் செலுத்தப்பட்டிருக்கிறார். அவர்கள் தங்கள் விருப்பம் போல் செய்து கொள்ளட்டும். சமஸ்தான மக்களுக்கு உறுதியும் தைரியமும் இருக்குமாயின், அவர்கள் நடக்கக் கற்றுக்கொள்ளு முன் ஓட முயற்சிக்காமலும், வெளியிலிருந்து உதவியை எதிர்பாராமலும் அவர்களுடைய போராட்டத்தை அமைதியாகத் தொடர்ந்து நடத்துவார்களாயின், இறுதியில் அவர்கள் வெற்றி பெறுவது நிச்சயம். சமஸ்தானங்கள் சம்பந்தமாக மேற்கொண்டுள்ள கொள்கையை காங்கிரஸ் கைவிடாமல் இருக்குமாயின், சமஸ்தானங்களில் காங்கிரசின் செல்வாக்கு அதிகமாகும் என்பதில் ஐயமில்லை.

நீங்கள் நோய்க்கு இலக்காவீர்கள் என்பது எனக்கு முன்பே தெரியும். மற்றவர்களுக்கு நீங்கள் சர்தாராக (தளபதியாக) இருக்கலாம். ஆனால் உங்களுக்கு நீங்கள் அடிமையாக இருக்கிறீர்கள் என்றே தோன்றுகிறது. தன்னைத்தானே கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்பவர்தான் உண்மையான சர்தார் ஆவார். ஒவ்வொரு அலுவலையும் நீங்கள் குறித்த நேரத்தில் செய்து உங்களுடைய தினசரி வாழ்க்கையை ஒழுங்கு படுத்திக் கொள்வீர்களாயின், நீங்கள் நீண்ட காலம் வாழ்வீர்கள். மகாதேவ் கூட கஷ்டத்திற்கு ஆளான பின்னர்தான், அதைக் கற்றுக் கொண்டார்.

## 138

சேவாகிராமம்,
செப்டம்பர் *4, 1938*

மருந்துகளின் பலத்தைக் கொண்டு நீங்கள் எவ்வளவு காலம் உயிர்வாழ முடியும்? சீக்கிரமாக எந்த ராஜ்யத்தைப் பிடிக்க நீங்கள்

உத்தேசித்திருக்கிறீர்கள்? கவலைப்படாமலும் கஷ்டப்படாமலும் இருங்கள். உங்களால் சமாளிக்க முடிந்ததைச் செய்யுங்கள். உங்களுடைய ஆரோக்கியத்தில் அக்கறை எடுத்துக் கொள் ளுங்கள். இல்லாவிடில் உங்களை நீங்களே ஹிம்சை செய்த குற்றத்திற்கு ஆளாவீர்கள்.

## 139

பிஷாவர்,
அக்டோபர் *13, 1938*

நான் இங்கே சுகமாக ஓய்வு எடுத்துக் கொண்டுவருகிறேன். எனக்கு இத்தகைய பூரண ஓய்வு கொடுப்பதில் நீங்கள் கூட வெற்றி பெற்றதில்லை. கால நிலையும் அருமையாக இருக்கிறது. பழங்கள் குவியல் குவியலாக இருக்கின்றன. தற்போது என்னைக் கவனித்துக்கொள்ளவே கான் சாகிப் வாழ்ந்துவருகிறார்.

மகாதேவ் சிம்லாவுக்குச் சென்றுள்ளார். அதெல்லாம் நன்மைக்காகத்தான். எனினும் வேறிடத்திற்குச் செல்லுமாறு அவரைத் தூண்ட உங்களுக்குச் சுதந்திரம் உண்டு.

ஜின்னாவைப் பொறுத்தமட்டில், அந்த அத்தியாயம் முடிவடைந்துளது. அவரது கடிதமும் திருப்தியளிப்பதாக இல்லை. அவரைக் கலந்து கொள்ளாமலேயே நாம் என்ன சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லிவிட்டு, நாம் நிறுத்திக் கொள்ள வேண்டியதுதான். நான் தயாரித்துள்ள நகலைப்பற்றித் தயவு செய்து சிந்தித்து, அதைப்பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தை எனக்கு அறிவியுங்கள். அவ்விதம் ஏதாவதொரு அறிக்கையை நாம் கூடிய சீக்கிரம் வெளியிட வேண்டும்.

வித்தல்பாயின் மரண சாஸனத்தைக் குறித்து கோல்ட்மன் வெளியிட்டுள்ள அபிப்பிராயம் மிகவும் சிறந்ததாகும். இப்போது செய்ய வேண்டிய நியாயமான ஒரே காரியம், சாஸனத்தை நிறைவேற்றும் அதிகாரம் பெற்றவர் 'ஸம்மன்' அனுப்பி வழக்கை ஒரு முடிவுக்குக் கொண்டுவருவதேயாகும். இந்த அபிப்பிராயத்தை நான் சுபாஷுக்கும் அறிவித்திருக்கிறேன்.

சி. பி. மிகவும் கோணலான வழியிலேயே சென்றுவருகிறார். ராமச்சந்திரன் தாமாக எதுவும் செய்ய முடியாது. அங்குள்ள மக்கள் உறுதியாக இருந்துவருகிறார்கள். அதிகாரிகள் உங்களை அங்கே செல்லவிடுவார்களாயின், நீங்கள் சென்று நிலைமையைச் சீர்படுத்த வேண்டும். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சி. பி. தமது புகழை அறவே இழந்துவிடுவார். அவ்விஷயமாக எனக்கு ஏராளமான கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன.

# 140

கோஹாட்,
அக்டோபர் *21, 1938*

உங்கள் தந்திக்கு நான் பதில் அளித்திருக்கிறேன். ஒரு தனி நபர் என்ற முறையில் நீங்கள் திருவாங்கூருக்குச் சென்றால் கூட வெற்றியுடன்தான் திரும்பிவருவீர்கள். சிறையிலுள்ள கைதிகளைச் சென்று பாருங்கள். பல பொய்க் கூற்றுகள் வெளியாகி வருகின்றன. சமஸ்தான காங்கிரஸ் அங்கத்தினர்கள் பலாத்காரத்தில் ஈடுபடவில்லையென மறுத்து அதனிடமிருந்து எனக்குப் பல தந்திகள் வந்திருக்கின்றன. அவர்கள் பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபடுவதாகக் குறிப்பிட்டும் பல தந்திகள் வந்திருக்கின்றன. யாராவது நேரில் சென்று பார்த்தால் மாத்திரமே உண்மையைத் தெரிந்து கொள்ள முடியும். நான் கூறியுள்ள ஆலோசனையை நீங்கள் அறிவீர்கள். சி. பி.க்கு எதிராக உள்ள குற்றச்சாட்டுகளை ஒன்று அவர்கள் வாபஸ் செய்து கொள்ளவேண்டும், இல்லாவிடில் அதை ஒரு பெரிய பிரச்னையாகக் கருதி அதற்கான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவேண்டும். பிந்திய முறையை அவர்கள் கைக்கொள்ளுவார்களாயின், அதற்காக சத்தியாக்கிரகம் செய்வது முடியாத காரியம். இவ்விஷயமாக சமஸ்தான மக்களே ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டும். சி. பி. வெளியிலிருந்து நீதிபதிகளைக் கொண்டுவந்து வழக்குகளை ஆரம்பிப்பாராயின், மக்கள் அந்த சவாலை ஏற்றுக் கொள்ளவேண்டும். அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளாவிடில், போராட்டத்தின் வேகம் குன்றிவிடும். நான் கடைசியாகக் கூறியுள்ள யோசனையை நீங்கள் பார்த்திருப்பீர்கள். காரணம் எதுவாயினும் பலாத்காரம் மேற்கொள்ளப்பட்டிருக்குமாயின், சமாதானத்திற்கான ஏற்பாடுகள் எதுவும் செய்யாமலேயே சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தப்பட்டுவிட வேண்டும். சிறையில் தள்ளப்பட்டுள்ள ஒவ்வொருவரும் தொடர்ந்து சிறையிலேயே இருந்துவர வேண்டும். சட்ட மறுப்பைத் தவிர வேறு எல்லா நடவடிக்கைகளையும் தொடர்ந்து மேற்கொண்டு வரலாம். நீங்கள் அங்கு சென்றால், முதலில் ராமச்சந்திரனையும் பிறகு கைதிகளையும் கண்டு பேசிவிட்டு, உங்களுக்கு எது சிறந்ததென்று தோன்றுகிறதோ அவ்விதமே செய்யுங்கள்.

காந்தி சேவா சங்கத்திலிருந்து நீங்கள் ஏன் ராஜிநாமா செய்ய வேண்டும்? ஜம்னலால்ஜியின் உடல் நிலை தற்போது திருப்திகரமாக இல்லை. அவர் ராஜிநாமா செய்தால்கூட, அவர் தொடர்ந்து ஏதாவது தொண்டு செய்துவருவார் என்பது நிச்சயம். உங்களுடைய ராஜிநாமாவினால் நிலைமை எவ்விதத்திலும் சீர்பட்டு விடாது.

## 141

சேவாகிராமம்,
நவம்பர் *19, 1938*

அனந்தராயுடனும் நானுபாயுடனும் பேசியபின் நான் தயாரித்துள்ள ஒப்பந்தத்தைத் தயவு செய்து வாசியுங்கள். நீங்கள் அதை அங்கீகரித்தால், தாகூர் சாகிப் அதன்படி நடந்து கொள்ள வேண்டும். அதன்பின் சத்தியாக்கிரகத்தை வாபஸ் பெறலாம். பாய் அனந்தராயுடன் கலந்தாலோசித்து நீங்கள்தான் கமிட்டி அங்கத்தினர்களின் பெயர்களை நிர்ணயிக்கவேண்டும். சமஸ்தானப் பிரஜைகளின் பிரதிநிதிகளே அக்கமிட்டியில் பெரும்பான்மையோராக இருக்க வேண்டும். இவையெல்லாம் நடைபெற்றால் நாம் திருப்தியடைய வேண்டும் என்று நினைக்கிறேன். ஒப்பந்தத்தில் பொறுப்பாட்சி என்ற வார்த்தைகள் தெளிவாகக் குறிப்பிடப்படவில்லையெனினும், என் நகலிலுள்ள ஷரத்துகளின் அர்த்தம் அது தான்.

## 142

சேவாகிராமம்,
நவம்பர் *28, 1938*

பவநகரிலிருந்து வந்த கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன். சத்தியாக்கிரகிகளின் மற்றொரு கோஷ்டியை அனுப்புவதற்குள் அவர்கள் எனது கடிதத்திற்காகக் காத்திருக்க வேண்டுமென நான் தந்தி கொடுத்திருக்கிறேன். இவ்விதம் மாணவர்கள் அதில் கலந்து கொள்வது சிறிதும் நியாயமல்ல என்று நான் கருதுகிறேன்.

மேலும் ராஜ்கோட்டிற்கு வெளியிலுள்ள பல்வேறு இடங்களிலிருந்தும் சத்தியாக்கிரகிகளின் கோஷ்டிகளை மக்கள் அனுப்புவதைக் குறித்தும் நான் மகிழ்ச்சி அடையவில்லை. அது, நமது கொள்கைக்கு முற்றிலும் முரணாகும். அத்தகைய கோஷ்டிகள் சுயாட்சியை விரும்பவில்லை; அவர்களுக்கு அது கிடைக்கவும் கிடைக்காது. அவர்கள் செல்லுவதால் மனக்கசப்புதான் அதிகமாகிறது. அது ஒருவேளை ராஜ்கோட் மக்களின் பலவீனத்தை மறைக்கலாம். எனினும் எத்தகைய பலவீனத்தையும் மறைக்க நாம் நிச்சயமாக விரும்பவில்லை. ராஜ்கோட் சமஸ்தான மக்களிடையே உள்ள ஒளியே அவர்களுக்கு உதவியாக இருக்க வேண்டும். நாம் அவர்களுக்கு உற்சாகம் அளிக்கத்தான் முடியும். அவர்களுடைய சொந்த முன்னேற்றத்தினால் மாத்திரமே, அவர்களின் நிலை அதிக ஒளிவீசித் திகழ முடியும். இவ்விஷயத்தை நீங்கள் பரிசீலனை செய்யுங்கள். நான் கூறுவதை நீங்கள் ஒப்புக்கொண்டால், வெளியிடங்களிலிருந்து சத்தியாக்கிரகிகள் செல்லுவதையும், மாணவர்கள் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ளுவதையும் தயவு செய்து தடுத்துவிடுங்கள். நான் இன்னும் எவ்வளவோ எழுதவேண்டும். ஆனால் அதற்கு நேரம் எங்கே இருக்கிறது?

## 143

சேவாகிராமம்,
டிசம்பர், *1938*

சம்பந்தப்பட்ட காகிதங்களை நான் விடாமல் வாசித்தேன். அங்குள்ள நிலவரங்கள் அதிர்ச்சியைக் கொடுக்கின்றன. தாகூர் சாகிப் உறுதியாக இருந்தால், ஓர் ஒப்பந்தம் உடனடியாக ஏற்படக்கூடும். ஆனால் அவரது உறுதியில் எனக்கு நம்பிக்கையில்லை. இந்தக் காகிதங்களில் காணப்படும் தகவல்களை நாம் எவ்வளவு தூரத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்ள முடியும்? உங்களுக்கு அழைப்பு வந்தால், நீங்கள் அவசியம் போகவேண்டும். நீங்கள் அங்கே சென்றால் ரெசிடெண்டையும் பார்த்து அவருடன் நீங்கள் மனம் விட்டுப் பேசவேண்டும் என்றே எனக்குத் தோன்றுகிறது. ராஜாவிடமிருந்து வந்துள்ள அழைப்பை ரகசியமாக வைத்துக் கொள்வது முடியாத காரியமாகும். ராஜாவுக்கு அவ்வளவு தைரியம் இல்லையாயின், பின்னர் ராஜ்கோட்டிற்குச் செல்லுவதால் பலனேற்படாமல் போகலாம்.

## 144

சேவாகிராமம்,
டிசம்பர் *21, 1938*

காங்கிரஸ் அக்கிராசனர் பதவியை ஏற்றுக்கொள்ள மௌலானா கண்டிப்பாக மறுக்கிறார். எனவே அவரை மேற்கொண்டு வற்புறுத்துவது விவேகமல்ல. பட்டாபி சீதாராமையாவைப் பற்றி ஆலோசிப்பது சிறந்ததென நான் கருதுகிறேன்.

## 145

சேவாகிராமம்,
டிசம்பர் *31, 1938*

சம்புசங்கரைப் பற்றி உங்களுக்கு முன்பே தெரியும். அவர் பாலிடானாவில் இருந்து கொண்டே சுயராஜ்யம் பெறமுடியுமென நம்புகிறார். சம்புசங்கர் சுயேச்சையான மனப்போக்கு உள்ளவர். முற்றிலும் கடவுளின் அருளை நம்புவதன் மூலம் தமது லட்சியத்தை அடையலாம் என்பதே அவரது நம்பிக்கையும் ஆர்வமுமாகும். எனினும் தமது மூத்தோர்களின் ஆசிகளை அவர் எதிர்பார்க்கிறார். சிறிதும் தளராத நம்பிக்கையுடன் அவர் போராட்டத்தை நடத்தி வந்தால், எப்போதும் எனது ஆசிகள் அவருக்குக் கிடைக்குமென நான் அவருக்கு முன்பே கூறியுள்ளேன். சத்தியத்திலிருந்தும் அகிம்சையிலிருந்தும் சிறிதும் வழுவாத தொண்டர்களுடைய சட்டைப் பையில் அத்தகைய ஆசிகள் இருந்து வருகின்றன என்றும்

அவருக்குச் சொன்னேன். எனினும் அது அவருக்குத் திருப்தி யளிக்கவில்லை. அவர் உங்களுடைய ஆசிகளையும் விரும்புகிறார். தயவு செய்து அவர் கூறுவதற்குச் செவி கொடுத்து, உங்களுடைய நல்வாழ்த்துக்களையும் அவருக்குக் கூறுங்கள்.

## 146

ராஜ்கோட் சத்தியாக்கிரகத்தைப் பற்றிக் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு காந்திஜி எழுத்து மூலம் பின்வருமாறு பதிலளித்தார்:

மிகமிகக் குறைந்த அளவே பேசும்படி வல்லபாயிடம் சொல்லுங்கள். அவரது பிரசங்கங்கள் சாத்தியமான வரையில் பாரபட்சமற்றவையாக இருக்க வேண்டும். மக்கள் சிறைகளுக்கு வெளியில் இருக்க வேண்டியது அவசியமாக இருக்குமாயின், சிறைகளுக்குச் செல்லாமல் இருக்க அவர்களுக்குச் சுதந்திரம் உண்டு. மத்தியஸ்தத்தின் மூலம் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளுமாறு தர்பாருக்கும் டிரஸ்டிற்கும் அவர் ஆலோசனை கூறவேண்டும். மக்கள் தாங்கள் எடுத்துக் கொண்டுள்ள பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டிய அவசியத்தை, வல்லபாய் சமஸ்தான மக்களுக்கு விளக்கிக் கூற வேண்டும்.

## 147

பார்டோலி,
*ஜனவரி 11, 1939*

ஒவ்வொரு மாகாணத்திலும் புகழ்பெற்ற ஒன்றிரண்டு தலைவர்களைத் தவிர மற்ற எல்லா ஊழியர்களும் மௌனமாக இருக்க வேண்டும் என்றும், அவர்கள் பிரசங்கங்கள் செய்யக் கூடாது என்றும் எப்போதுமே நான் எண்ணிவந்திருக்கிறேன். முன்பு இருந்ததைவிட அதிகமாக அந்த எண்ணம் இப்போது உறுதி யடைந்திருக்கிறது. இது சாத்தியமல்ல எனில், அவர்கள் தீர்க்காலோசனை செய்து எளிய நடையில் எழுதிய சுருக்கமான பிரசங்கங்களை கூட்டங்களில் வாசிக்கவேண்டும். நாளுக்கு நாள் அதிகமாக மக்களின் கைக்கு அதிகாரம் வந்துகொண்டிருக்கிறது என்பதை ஒவ்வொருவரும் மனத்தில் இறுத்திக் கொள்ளவேண்டும். அத்தகைய நிலையில், பிரபல தலைவர்களின் வாக்கிலிருந்து தீர்க்காலோசனையின்றி ஒரு வார்த்தை கூட வெளிவரக்கூடாது.

## 148

சேவாகிராமம்,
பிப்ரவரி 7, 1939

லிம்டியிலுள்ள நிலவரங்கள் பயங்கரமானவையாக இருக்கின்றன. எனினும் அவற்றைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. அவற்றைக் காட்டிலும் கூட படுமோசமான நிகழ்ச்சிகளை நாம் காணவேண்டியிருக்கும். அவற்றைப் பற்றி நான் ஏதாவது எழுத வேண்டுமென நினைக்கிறேன். எனது உடல் நலத்தைக் கொண்டு நான் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்து வருகிறேன். எனவே சில விஷயங்களைப் பற்றி நான் வேண்டுமென்றே எழுதாமல் தவிர்த்து வந்திருக்கிறேன். தற்போது சுபாஷ்பாபு என்ன செய்து வருகிறாரோ அதை நான் மிகவும் விரும்புகிறேன்.

கூட்டத்தை நீங்கள் எப்போது நிர்ணயித்தாலும் நான் தயாராக இருக்கிறேன். மணியிடமிருந்து வந்த ஒரு கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன்.

ஆசிரமத்திலுள்ள இரண்டு பெண்களின் திருமணங்கள் இன்று நடந்தன. அவற்றை முடித்த பிறகே இக்கடிதத்தை எழுத நான் உட்கார்ந்தேன். அந்தத் திருமணங்கள் மிகவும் எளிய முறையில் நடந்தேறின. வெளியிலிருந்து யாரும் அழைக்கப்படவில்லை. இந்தக் கிராமத்திலிருந்தே ஹரிஜனங்களும் மற்றவர்களும் வந்திருந்தனர். இந்தத் திருமணங்கள் எனக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தன.

## 149

சேவாகிராமம்,
பிப்ரவரி 12, 1939

எனக்காக சட்கார் சில கட்டுரைகள் எழுதுவதாகக் கூறியிருந்தார். அவற்றிற்கு என்ன நேர்ந்தது? அவை விரைவில் வந்து சேர வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். வைஸ்ராயிடமிருந்து ஒரு நீண்ட கடிதம் வந்திருக்கிறது. அதற்கு நான் பதில் அனுப்பியிருக்கிறேன். அதன் நகல் ஒன்றை உங்களுக்கு அனுப்புகிறேன்.

மன்னர்கள் பாதுகாப்புச் சட்டத்தையும், அத்துடன் இணைக்கப்பட்டுள்ள அறிவிப்பையும் தயவு செய்து எனக்கு அனுப்புங்கள்.

பாவிடமிருந்து மணியைப் பிரித்து வேறிடத்திற்கு ஏன் கொண்டு சென்றார்கள் என்பதையும், பின்னர் ஏன் திரும்பவும் பா இருக்குமிடத்திற்கே அழைத்து வந்தார்கள் என்பதையும் என்னால் சிறிதும் அறிந்து கொள்ள முடியவில்லை.*

* ராஜ்கோட் போராட்டத்தில் கைதியான அன்னை கஸ்தூரிபாயையும், மணிபென் பட்டேலையும் ஒரே இடத்தில் வைத்திருந்தார்கள். பின்னர் மணிபென் பட்டேலை அன்னையிடமிருந்து பிரித்து அதிகாரிகள் வேறோரிடத்

## 150

சேவாகிராமம்,
பிப்ரவரி 13, 1939

நிலங்களை* கரேசியர்கள் தங்களுடைய சொந்த சொத்தாகக் கருதுகிறார்கள். எனவே அவற்றை அவர்கள் எளிதில் விட்டுவிட மாட்டார்கள் என்று தோன்றுகிறது. எனினும் நாம் மௌனமாகத் துன்பத்தை அனுபவித்து வருவோமாயின், எல்லாம் நன்மையாக முடியும்.

பாவின் பிரச்னை விரைவில் தீர்ந்துவிட்டது. மணி கெட்டிக்காரத் தனமும் தைரியமும் வாய்ந்தவள். அப்போதைக்கப்போது ஏற் படும் நிலைமையை எப்படிச் சமாளிப்பதென்ற கலையை அவள் போதிய அளவுக்குத் தெரிந்து கொண்டிருக்கிறாள். பெயரில் மாத்திரமல்ல, உண்மையிலேயே அவள் ஒரு ரத்தினம்தான்.

## 151

நாகபுரி,
செப்டம்பர் 24, 1939

ராஜ்கோட்டுக்குச் செல்லுவதைப் பற்றி லீலாவதி முன்ஷி யிடமோ அல்லது ஹம்சா பென்னிடமோ நீங்கள் இப்போது சொல்லவேண்டாம். பெரின்பென்னுக்கு (ஏ. டி. நௌரோஜி). அவள் ராஜ்கோட்டிற்குச் செல்ல வேண்டுமென நான் எழுதி யிருக்கிறேன். அவளுக்கு நான் எழுத வேண்டியது கடமை யென நினைத்தேன். ராஜ்கோட்டுக்குச் செல்ல வாடியாவுக்கு இயலாவிடில், பெரின் செல்லுவதற்குத் தயாராக இருக்குமாறு அவளுக்கு நான் எழுதியிருக்கிறேன். அவளுடைய பதில் கிடைத்ததும் உங்களுக்கு எழுதுகிறேன். தந்தி மூலம் சிம்லா வுக்குப் பதில் அனுப்பும்படி நான் அவளைக் கேட்டிருக்கிறேன்.

---

திற்குக் கொண்டு சென்றுவிட்டார்கள். அதைக் கண்டித்து மணிபென் பட்டேல் உண்ணாவிரதம் இருந்ததால், அவரை அதிகாரிகள் அன்னை இருந்த இடத் திற்கே மீண்டும் அழைத்து வந்துவிட்டார்கள். அதன் பின்தான் மணிபென் உணவு அருந்தினார். இச் சம்பவத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

* கரேசியர்கள், ரஜபுத்திர வகுப்பைச் சேர்ந்த நிலச்சுவான்தார்கள் ஆவர். அவர்கள் தொலைவில் இருந்துகொண்டு, தங்களுடைய நிலங்களில் பாடுபட்டு உழைக்கும் விவசாயிகளுக்கு உரிமை அளிக்க மறுத்ததைக் காந் திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

## 152

சேவாகிராமம்,
அக்டோபர் 14, 1939

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தைத் தயவு செய்து வாசியுங்கள். அதிலுள்ள விவரங்களைப்பற்றி விசாரித்தபின் பதில் எழுதுங்கள். அவர் மந்திரிக்கு எழுத வேண்டுமென்று கூறி நான் சுருக்கமாகப் பதில் அனுப்பியிருக்கிறேன். ஆனால் அது போதாது. அத்தகைய விஷயங்களை நாம் கூர்ந்து பரிசீலனை செய்யவேண்டும்.

"பாபு நம்மை ஜவாஹர்லாலின் பொறுப்பில் ஒப்படைத் திருக்கிறார். எனவே அவர் (ஜவாஹர்லால்) என்ன சொல்லு கிறாரோ அதைத்தான் நாம் செய்து வரவேண்டும்" என்று நீங்கள் கூறியதாக கிஷோர்லால் நேற்று என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார். நீங்கள் விளையாட்டாக அவ்விதம் கூறியிருக்க வேண்டும் என்றே நம்புகிறேன். நான் உங்களை யாரிடமும் ஒப்படைத்துவிடவில்லை. இங்கு தங்கியிருந்தவர்களிடையே நேற்றும் அதற்கு முன்தினமும் அவ்விஷயமாக பலமான விவாதம் நடந்தது. நீங்கள் யாவரும் சுயேச்சையாகச் சிந்தித் துத் தீர்மானம் செய்ய வேண்டுமேயன்றி, அவ்விதம் செய்யாத தற்கு என் மீது பொறுப்பைச் சுமத்துவது சரியல்ல.

## 153

சேவாகிராமம்,
அக்டோபர் 31, 1939

இவ்விதம் நீங்கள் அடிக்கடி ஏன் நோய்க்கு இடம் கொடுக் கிறீர்கள்? நீங்கள் உங்களுடைய ஆரோக்கியத்தைப் பாது காத்து வர வேண்டும். எனக்குத் தந்தி மூலம் டில்லிக்குச் செய்தி அனுப்புங்கள்.

## 154

சேவாகிராமம்,
சுதந்திர தினம்,
(ஜனவரி 26, 1940)

என்னுடன் பேசக்கூட முடியவில்லை என்று நீங்கள் கூறுவ தற்குக் காரணம் என்ன? உண்மை என்னவெனில், என்னுடன் பேச வேண்டிய அவசியம் எதுவும் இல்லையென்று நீங்கள் கருது கிறீர்கள். ஆரம்பத்திலிருந்தே அதுதான் உங்களுடைய வழக்க மாக இருந்துவருகிறது.

தற்போது நீங்கள் டில்லிக்கு வராமல் இருப்பதே விரும்பத் தக்கது. நான் 5-ஆம் தேதி அங்கு செல்லுகிறேன். முக்கியமாக ஏதாவது இருந்தால், உங்களுக்கு நான் தந்தி கொடுக்கிறேன். டில்லிக்கு வருமாறு மற்றவர்களுக்கும் எழுதுகிறேன். இப்படித் தான் செய்யவேண்டுமென எனக்குத் தோன்றுகிறது. எனினும் விசேஷ காரணங்கள் ஏதாவது இருக்குமாயின், நீங்கள் டில் லிக்கு வாருங்கள். இப்போது நீங்கள் வராவிட்டாலும், வரு வதற்குத் தயாராக இருங்கள்.

வீரவாலா* போய்விட்டார். அவரது ஸ்தானத்திற்கு யார் வருகிறார் என்பதைப் பார்ப்போம். மைசூரில் நிலவரங்கள் விசித்திரமாக இருந்துவருகின்றன என்று தோன்றுகிறது.

## 155

டில்லிக்குச் செல்லும் வழியில்,
பிப்ரவரி 3, 1940

இந்தப் புள்ளிவிவரங்களையெல்லாம் நான் பார்த்தேன். இந்த முப்பது அபேட்சகர்களையும் பிருத்விசிங் தேர்ந்தெடுக்கக் கூடாது; நீங்கள் எல்லோருமோ அல்லது நீங்கள் மாத்திரம் தனியாகவோ அவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஒவ்வொரு வருக்கும் ரூ. 20 செலவாகும் என்று காட்டப்பட்டிருக்கிறது. வரவு இனத்தில் எதுவும் இராதா? இல்லாவிடில் ஒவ்வொரு வருக்கும் $915 \div 30 = 30\frac{1}{2}$ ரூ செலவு ஏற்படும். அவ்விதம் செலவு செய்வது நியாயமா என்பதை நாம் ஆலோசிக்க வேண்டும். வேலைக்காரர்களே வைத்துக் கொள்ளாத உணவு விடுதியில் தலா என்ன செலவாகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? எனி னும் முக்கியமான விஷயம் செலவு அல்ல, அபேட்சகர்களைத் தேர்ந்தெடுப்பதேயாகும். பிருத்விசிங்கின் விருப்பப்படி ஏற்பாடு களைச் செய்யுமாறு நான் உங்களைக் கேட்டிருப்பதற்கு, அவருக்கு நீங்கள் யோசனை எதுவும் கூறி வழிகாட்டக் கூடாது என்று அர்த்தமில்லை. நீங்கள் யோசனை கூற வேண்டும் என்று நினைக்கும்போது தாராளமாக அவ்விதமே செய்யுங்கள். பொது வாக நீங்கள்தான் மேற்பார்வையிட்டு வரவேண்டும்.

---

* வீரவாலா, ராஜ்கோட் சமஸ்தானத்தில் நிகழ்ந்த சத்தியாக்கிரகப் போராட்டத்தின்போது அங்கு திவானாக இருந்தார்.

## 156

சேவாகிராமம்,
மே 7, 1940

டில்லியில் நான் செய்த 'அரும்பெரும்' காரியத்தைப் பற்றி* நீங்கள் அறிவீர்கள். இப்போது லண்டனுக்கும் டில்லிக்கும் தந்திகள் பறந்து கொண்டிருக்கின்றன. 15-ம் தேதி இரவு நான் சாந்திநிகேதனுக்குப் புறப்படுவேன். அங்கிருந்து 19-ம் தேதி கல்கத்தாவுக்குப் புறப்படுவேன்.

## 157

சேவாகிராமம்,
மே 30, 1940

சுரேஷ் பானர்ஜி இங்கு விஜயம் செய்ததைக் குறித்து மகாதேவ் உங்களுக்கு எழுதியிருக்கிறாரா என்பது எனக்குத் தெரியாது. இப்போது அவரே இந்த அபிப்பிராயத்தை அதிகமாக ஆதரிக்க முற்பட்டிருக்கிறார். இந்த அபிப்பிராயத்தை சுபாஷும் ஆதரிக்கும்படி செய்ய அவர் விரும்புகிறார். ஆனால் அதில் அவர் வெற்றிபெறுவாரென்று தோன்றவில்லை. சுபாஷ் எப்போது விரும்பினாலும் என்னை வந்து பார்க்கலாம் என்று எழுதினேன். அவர் எனது நிலைமையை அறிவார். பகிரங்கமாக அவர் கூறியுள்ள கருத்துகள் அவர் இங்கு வருவதற்கில்லை என்பதையே காட்டுகின்றன. அவரிடமிருந்து எதுவும் எதிர்பார்க்க முடியாது என்றே தெரிகிறது.

## 158

சேவாகிராமம்,
ஆகஸ்டு 1, 1940

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதம் நாடியாடிலிருந்து வந்திருக்கிறது. தயவு செய்து அது பற்றி ஏதாவது செய்ய வேண்டுமா என்று பாருங்கள்.

நீங்கள் அடிக்கடி நோய்க்கு இடம் கொடுப்பது சரியல்ல. நீங்கள் சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ளவேண்டும்.

உங்கள் மனம் ஏன் சஞ்சலமடைய வேண்டும்? நீங்கள் என்ன தீர்மானம் செய்தாலும், அதை நான் நியாயமான

---

* பூரண சுயேச்சைக்குக் குறைந்த எதையும் காங்கிரஸ் அங்கீகரிக்க முடியாது என்றும், பிரிட்டனுக்கு இந்தியா அகிம்சை எல்லைக்கு உட்பட்டு தார்மிக ஆதரவு அளித்துவரும் என்றும் காந்திஜி வைஸ்ராயிடம் கூறியதையே மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

தென்றே நிச்சயமாகக் கருதுவேன். ஏனெனில், ஒரு நபர், அவரது அறிவுக்கு எட்டியவரையில் மாத்திரமே நடந்துகொள்ள முடியும். ஏதாவது தவறு ஏற்படுமாயின், தவறு நிகழ்ந்த பின்னர்தான் அதைத் திருத்திக் கொள்ள முடியும். நான் ராஜாஜியுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி வருகிறேன். அவரது அபிப்பிராயத்தை மாற்றுவதற்காக அல்ல, ஆனால் அடுத்தபடியாக என்ன செய்ய வேண்டும் என்பதுபற்றியே பேசிவருகிறேன். நான் முயற்சி செய்து அவரது அபிப்பிராயங்களை மாற்ற விரும்பவில்லை. அந்த மாறுதல் அனுபவத்தின்மீதுதான் ஏற்படும். என்னுடைய அபிப்பிராயம்தான் * சரி என்பதில் எனக்கு அணுவளவும் சந்தேகமில்லை. எனது வழியில் தான் ராஜதந்திரமும் அடங்கியிருக்கிறது. தற்போதைக்கு இது போதும். நீங்கள் விரும்பும் போது இங்கே வாருங்கள்.

# 159

சேவாகிராமம்,
செப்டம்பர் 22, 1940

நீங்கள் இப்போது இங்கே வருவீர்களென நாங்கள் எதிர்பார்க்க முடியாது. நேற்று நீங்கள் வருவீர்களென ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது நான் புதன் கிழமையன்று இங்கிருந்து புறப்படுகிறேன்.

என்னுடைய பிறந்த தினத்தன்று பலசரக்கு வியாபாரிகள் எனக்கு 71 பசு மாடுகள் பரிசளிப்பார்கள். அதையொட்டி சமல்தாஸ் என்னிடமிருந்து ஒரு செய்தி கேட்டார். நானும் ஒரு செய்தி அனுப்பி யிருக்கிறேன். † நன்கொடையாளர்களுக்குத் தயவு செய்து அதை விளக்கிக் கூறுங்கள்.

---

* அந்நியர்களின் படையெடுப்பை இந்தியா சாத்துவிக முறைகளால் தான் எதிர்த்துச் சமாளிக்கவேண்டும் என்பது காந்திஜியின் நம்பிக்கை. ஆனால் சர்தாரும், காரியக் கமிட்டியைச் சேர்ந்த மற்றவர்களும் வேறுவிதமாக நினைத்தார்கள்.

† காந்திஜி அனுப்பிய செய்தியின் விவரம் பின்வருமாறு :

சேவாகிராமம்,
(வார்தா வழி)

"சர்தார் தலைமை வகிக்கும் ஒரு கூட்டத்திற்கு, உண்மையில் நான் செய்தி அனுப்பவேண்டிய அவசியமே இல்லை. இருந்தாலும் செய்தி அனுப்பும்படி என்னைக் கேட்டதால் நான் ஒரு செய்தி அனுப்பியிருக்கிறேன். என்னை நான், பசுவுக்கு ஒரு சிறந்த ஊழியனாகவே கருதுகிறேன். எனவே அவர்களுடைய நன்கொடையை நான் மிகச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்வேன். எனினும் அவர்கள் வழக்கமாகப் பசும் பாலைக் குடித்தும், பசு நெய்

நன்கொடை சம்பந்தமாக எத்தகைய நிபந்தனைகளையும் ஒப்புக் கொள்ளவேண்டாம். பசுப் பாதுகாப்புக்காக நான் விரும்பும் போது அதை உபயோகித்துக் கொள்ளுவேன். பசுக்களை நன் கொடையாக அங்கீகரிப்பதில் யாதொரு தவறும் இல்லை என் பது நிச்சயம். எனினும் அவற்றை எப்படி விநியோகிப்பது என்பதுபற்றி எனக்குச் சுதந்திரம் இருக்கவேண்டும்.

இப்போது உங்களுக்குக் காய்ச்சல் இல்லை என்றே நம்பு கிறேன்.

## 160

சேவாகிராமம்

*1940* நவம்பர் மாதம் பிற்பகுதியில் மௌன தினத்தன்று கேட்கப்பட்ட கேள்விகளுக்கு காந்திஜி பின்வரும் விடைகளை எழுதிக் கொடுத்தார் :

ஆசிரமத்தைச் சேர்ந்த நானும் மற்றவர்களும் சிறைக்குச் சென்ற பிறகு கூட, ராஜகுமாரி வெளியிலேயே இருந்து கொண்டு, சில்லறை விஷயங்களைக் கவனித்து வரவேண்டும். அவருக்கு அந்தத் திறமை உண்டு. அவர் ஆசிரமத்திலேயே இருப்பார். அரசாங்கம் துப்பாக்கியால் சுட முற்படுமாயின், அவர் துப்பாக்கிக்கு எதிரே நின்று இறக்கவேண்டும். அவருக்கு அத்தகைய தைரியம் உண்டு என்றே நம்புகிறேன். அவருக்கு தைரியம் இராவிட்டால்கூட, நமக்கு நஷ்டம் எதுவும் ஏற்பட்டு விடாது.

## 161

அதே சமயத்தில் காந்திஜி மற்றொரு காகிதத்தில் பின்வரு மாறு எழுதிக் கொடுத்தார் :

சர்க்கார் விஷயத்தில் எனது எதிர்ப்பு நாளுக்கு நாள் அதிக உறுதியடைந்து வருகிறது என்பதை, தயவு செய்து வல்லபாயிடம் சொல்லுங்கள். தற்போது நான் தேர்ந்தெடுப்ப வர்கள் மாத்திரம்தான் சிறைக்குச் செல்லவேண்டும். அவர்கள் என்னைக் கைது செய்யாவிடில், சர்க்கார் எத்தனை பேரை விரும்பு கிறார்களோ அத்தனை பேரையும் நான் சிறைக்கு அனுப்புவேன். நான் கைது செய்யப்பட்டால், இயக்கத்தைக் கடவுள் நடத்திச் செல்லுவார்.

---

யையே உபயோகித்தும் வரவேண்டும். அவ்விதம் செய்தாலொழிய, இப் போது அவர்கள் தர்மத்திற்குக் கொடுத்துள்ள 71 பசுக்களின் பாலையோ, அல்லது நெய், தயிர் முதலியவற்றையோ அருந்த யாரும் தயாராக இருக்க மாட்டார்கள் என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ளவேண்டும்.''

# 162

சேவாகிராமம்,
நவம்பர் *13, 1940*

மகாதேவிடமிருந்து உங்களுக்கு எல்லாச் செய்திகளும் கிடைத்திருக்கும். அவர் தற்போது ஒவ்வொருவரையும் சந்தித்து வருகிறார். அவர் பரிசோதனை யாத்திரையில் ஈடுபட்டிருக்கும் போது, யாரும் சிறைக்குச் செல்ல முற்படுவது சரியல்ல என்றே எண்ணுகிறேன். மகாதேவ் அங்கு வந்த பிறகு நீங்கள் செல்லலாம். என்னைப் பார்க்க நீங்கள் விரும்பினால், இங்கே வாருங்கள். இல்லாவிட்டால் நான் மகாதேவை நிச்சயமாக அனுப்புகிறேன். அவர் அங்கே நேராக வந்துவிட்டால், எனது இறுதியான தீர்மானத்தை அவர் தெரிந்துகொண்டுவர முடியாது. எனவே அவசியமாயின், தயவு செய்து தேதிகளைச் சிறிது மாற்றிக் கொள்ளுங்கள். பீகாரில் மிகச் சிறந்த ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள். பம்பாய் எஸ். கே. பட்டீலிடமிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. நான் அதற்குப் பதில் எழுதுகிறேன்.

மகாதேவ் வெள்ளிக்கிழமை இரவு வருவார். மங்களதாஸும்,* தாதாவும் கவர்னருக்கு எழுதவேண்டியது சரி என்றே தோன்றுகிறது. அவர்கள் ராஜிநாமா செய்வதென்ற பேச்சிற்கே இடமில்லை. ஆனால் அவர்களுடைய கடிதங்களில் ஆட்சேபிக்க முடியாத, திருப்திகரமான வாதங்கள் அடங்கியிருக்க வேண்டும். நான் ஒரு நகல் அனுப்பவேண்டுமென நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள் என்று தெரிகிறது. அதை இன்று நான் அனுப்ப முடியாது. ஏனெனில் இன்று அதிக அவசரமான வேலைகள் இருக்கின்றன. அதை மகாதேவிடம் அனுப்பினால் போதுமா? சாத்தியமாயின் இன்று அனுப்புகிறேன். முதல் ஜாபிதாவில் இராதவர்கள் கூட சிறைக்குச் செல்லலாம். எனினும் நீங்கள் எல்லோரும் சென்ற பின்தான் அவர்களை அனுப்பவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். இருந்தாலும் உள்ளூர் நிலைமையைப் பரிசீலனை செய்தபின் அவர்களைச் சிறைக்கு அனுப்பவேண்டியது அவசியம் என்று நீங்கள் கருதினால் அப்படியே செய்யுங்கள். நரஹரியை இப்போது சிறைக்கு அனுப்பக் கூடாது என்று நான் கருதுகிறேன். அவர் இப்போது போகாததன் காரணமாக யாராவது மனக்கலக்கம் அடைவார்களாயின், அதை வருந்தத்தக்க ஒரு நிலைமையாகவே நான் கருதுவேன்.

ரபி (அகமது கித்வாய்) என்னிடம் அரை மணிநேரம் தான் பேசிக்கொண்டிருந்தார். என்னுடைய சிந்தனையின் போக்கைத்

---

* மங்களதாஸ் பக்வாஸாவும், தாதா மாவ்லங்காரும் அப்போது முறையே பம்பாய் கவுன்ஸிலிலும், அசெம்பிளியிலும் சபாநாயகர்களாக இருந்தனர்.

தெரிந்து கொள்ளவே அவர் விரும்பினர். நான் சொல்லுகிறபடி எல்லோரும் மௌனமாகச் செய்ய வேண்டுமென ஜவாஹர்லால் அவர்கள் எல்லோரிடமும் கூறியிருக்கிருர்.

## 163

சேவாகிராமம்,
மார்ச் *9, 1941*

நான் வேண்டுமென்றுதான் உங்களுக்கு எழுதவில்லை. மகாதேவ் டில்லியில் இருக்கிருர். தயாபாயின் கையெழுத்தைப் பார்த்தபின் என்னுல் எழுதாமல் இருக்க முடியவில்லை. எல்லாம் திருப்திகரமாக இருந்துவருகின்றன. தனி நபர் சட்ட மறுப்புக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சிலர் ஏமாற்றம் அடைவார்கள் என்பது நிச்சயம். ஆனல் இம்முறை அவர்களுடைய தொகை மிகமிகக் குறைவாகும். இது நீண்டகாலப் போராட்டமாகவே இருக்கும். இருந்தாலும் காலம் நமது பக்கம் இருக்கிறது. போராட்டத்தில் நாம் தோல்வி அடைவதென்ற பேச்சிற்கே இடமில்லை. அங்கே ஒவ்வொருவரும் விவேகத்துடனும் நம்பிக்கையுடனும் நூற்றுவருகிருர்கள் என்றே நம்புகிறேன். எனது இயல்புக் கிணங்க, ராட்டினத்தில் எனக்குள்ள நம்பிக்கை நாளுக்கு நாள் அதிகமாக ஆழ்ந்து வேரூன்றி வருகிறது. பாரதானந்த் (மாரிஸ் பிரைட்மென்) கண்டுபிடித்துள்ள சிறிய சாதனங்களெல்லாம் எல்லாவற்றையும் மலிவாகச் செய்துவருகின்றன. எனது ஆரோக்கியம் மிகவும் நன்ருக இருந்துவருகிறது.

(இந்தக் கடிதமும், இதற்குப் பின்வரும் மூன்று கடிதங்களும் எரவாடா மத்திய சிறைக்கு அனுப்பப்பட்டவை. *17-11-1940*-லிருந்து *19-8-1941* வரையில் சர்தார் அந்தச் சிறையில்தான் வைக்கப்பட்டிருந்தார்:)

## 164

சேவாகிராமம்,
மே. *7, 1941*

நான் மணிபென்னுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தேன். எனவே உங்களுக்கும் இதை எழுதுகிறேன். எனது அலுவல்கள் யாதொரு இடையூறுமின்றி நடந்துவருகின்றன. எனது ஆரோக்கியம் அருமையாக இருக்கிறது. தலை ஈரத்துணியால் பாதுகாக்கப்பட்டு வருவதால், இங்குள்ள உஷ்ணம் எவ்விதத்திலும் அபாயகரமானதாக இல்லை.

எங்கேயாவது யாத்திரை செல்லவேண்டும் என்ற உணர்ச்சி எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. கடவுள் எங்கே என்னை அழைத்துச் செல்லுகிருரோ, அங்கே நான் போவேன். அக

மதாபாத், பம்பாய், பீகார் ஆகிய இடங்கள் என் மனத்திற்கு வருகின்றன. எனினும் அவ்விஷயமாக இன்னும் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். சமாதானத்திற்கான வழியை நாம் கண்டுபிடிக்க வேண்டும் அல்லது இறக்கவேண்டும். நான் செல்லக்கூடிய வழி அது ஒன்றுதான். எனினும் கடவுள் எனக்கு வழிகாட்டினாலன்றி நான் அதைக் கண்டுபிடிக்க முடியாது. எனவே நான் கலங்கவுமில்லை, கவலைப்படவுமில்லை. எனது கடமையில் நான் கண்காணிப்புடனும் ஈடுபாடுடனும் இருக்க முயற்சிக்கிறேன்.

நான் எழுதியிருப்பதில் ஆழ்ந்த அர்த்தம் இருப்பதாக ஊகித்துக் கொள்ளாதீர்கள். எனது சிந்தனையில் தோன்றியதையெல்லாம் நான் எழுதியிருக்கிறேன்.

## 165

சேவாகிராமம்,
மே *31, 1941*

மணிபென் நேற்று வந்து சேர்ந்தாள். அவள் மிகவும் இளைத்திருக்கிறாள். அப்படியிருந்தும்கூட அவளை நான் மீண்டும் சிறைக்கு அனுப்பியிருப்பேன். ஆனால் அகமதாபாத்தில் இருக்கும் ஏராளமான நல்ல வேலைகளை அவள் செய்ய முடியுமென நான் நினைக்கிறேன். எனவே அங்கு செல்லும்படி அவளை நான் கேட்டிருக்கிறேன். அவள் இரண்டு நாட்கள் பம்பாயில் தங்கிவிட்டு, பிறகு புறப்பட்டுச் செல்லுவாள்.

சிறையிலுள்ள பெண்கள் வார்டில் கக்கூஸ்கள் சகிக்கமுடியாத நிலையில் இருப்பதாக மணி கூறுகிறாள். அதைக் குறித்து அங்கே நீங்கள் கிளர்ச்சி செய்யவேண்டும். அலட்சியமும் சோம்பேறித்தனமுமே அத்தகைய நிலைக்குக் காரணமாகுமேயன்றி, அந்த நிலையைச் சீர்திருத்த அதிகச் செலவு ஏற்படும் என்பதல்ல. நீங்கள் மரியாதையான முறையில் குறிப்பிட்டு அதற்குப் பரிகாரம் தேட முடியுமென நான் நினைக்கிறேன்.

கலகங்களைப் பற்றி கவலைப்படாதீர்கள். அவை நடக்கிறபடி நடக்கட்டும். உண்மையான யுத்தம் மூண்டுவிட்டது என்பதே எனது அபிப்பிராயம். அது நம்மையெல்லாம் எங்கே கொண்டு செல்லுகிறது என்பதைப் பார்ப்போம்; யாருடைய விருப்பம் எதுவாயினும், அது பலாபலன்களை மாற்றிவிட முடியாது. நான் சிறிதும் கலக்கமடையாமல் நிம்மதியாக உட்கார்ந்திருக்கிறேன். என் திறமைக்கு எட்டியவரையில் நான் ஊழியர்களுக்கு வழி காட்டி வருகிறேன். அவசியமாயின் நான் அகமதாபாத்திற்கோ, பம்பாய்க்கோ அல்லது வேறிடத்திற்கோ செல்லுவேன்.

இறுதியில் சத்தியமும் அகிம்சையும் மாத்திரமே வெற்றி பெறும். நம்மிடத்தில் சத்தியமும் அகிம்சையும் இருக்கின்றனவா என்பதை நாம் விரைவில் தெரிந்து கொள்ளலாம்.

## 166

சேவாகிராமம்,
ஆகஸ்டு *14, 1941*

நேற்று உங்கள் கடிதம் கிடைத்ததால் நான் மகிழ்ச்சி அடைந்தேன். ஆனல் அதை வாசிக்க எனக்கு வருத்தமாக இருந்தது. உங்களுடைய ஆரோக்கியம் சிறிது சீர்குலைந்திருப்ப தாக மகாதேவ் எழுதியிருந்தார். இருந்தாலும் அது மோசமாகி யிருக்கிறதென்றே உங்கள் கடிதத்திலிருந்து தெரிகிறது. அப்படி யாயின், நீங்கள் டாக்டர் கில்டரிடம் சிகிச்சை பெறுவதால் என்ன நன்மை? உங்களைக் குணப்படுத்த அவரால் முடியாவிடில், அவரைப் போகச் சொல்ல வேண்டியதுதான்.

நீங்கள் பழரசம் மாத்திரமே உணவாகக் கொள்ளவேண்டும் என்று நான் கருதுகிறேன். குடல்களில் உள்ள கோளாறை யெல்லாம் அது சீர்படுத்திவிடும். உங்களால் எவ்வளவு சாத் தியமோ அவ்வளவு திராட்சை, ஆரஞ்சு, மாதுளை, அன்னசிப் பழம் ஆகியவற்றின் ரசத்தை அருந்துவதால்,உங்களுக்கு நன்மையே ஏற்படும். போதிய அளவு அந்தப் பழங்களின் ரசத்தை அதாவது அறுபது அவுன்ஸ் வரையில் நீங்கள் சாப்பிடக் கூடு மாயின், உங்களுக்குப் பலவீனம் ஏற்படாது. அதே சமயத்தில் நீங்கள் இரவில் அடிவயிற்றில் மண் பற்று போட்டுக் கொள்ள வேண்டும். நோய் காரணமாக நீங்கள் விடுதலை செய்யப் பட்டீர்கள் என்ற நிலை ஏற்படுவதற்கு நீங்கள் ஒருபோதும் இடம் கொடுக்கக் கூடாது. அப்போதைக்கப்போது தபால் கார்டிலாவது எனக்கு விவரம் எழுதி வாருங்கள்.

குஜராத்திலுள்ள ஊழியர்கள் சிறந்த பரிசோதனைக்கு உட் பட்டு வருகிறார்கள். அவர்கள் நன்கு வேலை செய்து வருகிறார் கள் என்று தெரிகிறது. மகாதேவும் நல்ல அனுபவம் பெற்று வருகிறார்.* அவர் இராமலேயே நான் சமாளித்துவருகிறேன். இப் போது கிஷோர்லால் இங்கே இருந்துகொண்டு எனக்கு உதவி புரிந்துவருகிறார். எனக்கு உடல் நிலை நன்ருக இருக்கிறது.

பா மீண்டும் தனது பழைய பலத்தைப் பெற்றிருக்கிறாள். மாலை நேரங்களில் அவள் சுமார் முக்கால் மைல் தூரம் நடந்து வருகிறாள். அவள் நாள் முழுவதும் வேலை செய்வதுடன், அவ ளால் இப்போது நன்கு சாப்பிடவும் முடிகிறது. எனவே கவலைக்கு எத்தகைய காரணமும் இல்லை.

ஜம்னலால் ஒரு மாறுதலுக்காக சிம்லாவில் இருந்துவருகிறார். அவர் இப்போது தினந்தோறும் எட்டு மைல் தூரம் நடக்க சக்தி பெற்றிருப்பதுடன், 'செஸ்' முதலிய மற்ற விளையாட்டு களிலும் ஈடுபட்டுவருகிறார். ஜானகிபென்னும் மதாலஸாவும்

* அப்போது மகாதேவ தேசாய் வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்குப் பண வசூல் செய்துகொண்டிருந்தார்.

என்னுடனேயே இருக்கிறார்கள். குருதேவ் (ரவீந்திரநாத தாகூர்) காலமானபின், தீனபந்து ஆண்ட்ரூஸின் நினைவுச் சின்னத்திற்கு நிதி வசூல் செய்யும் பொறுப்பு என்மீது சுமந்திருக்கிறது. எல்லாம் அவன் சித்தப்படி நடக்கும்.

## 167

சேவாகிராமம்,
ஆகஸ்டு *21, 1941,*

நீங்கள் விடுதலை செய்யப்படுவீர்கள் என்று நான் அஞ்சியது சரியாகிவிட்டது. அரசாங்கம் வேறு என்னதான் செய்ய முடியும்? இருந்தாலும் இப்போது நீங்கள் பூரணமாக குண மடைந்த பின்தான் அலுவல்களை மேற்கொள்ளவேண்டும். செய்ய வேண்டிய வேலை எவ்வளவோ இருக்கிறது. உங்களுடைய அறுவை சிகிச்சை முடியும் வரையில், நான் நிம்மதியாக இருக்க மாட்டேன். சிறை அதிகாரிகள் என்னுடைய கடிதங்களை உங்களிடம் கொடுத்தார்களா?

(இதுவும் பின்வரும் கடிதங்களும் சர்தார் பம்பாயில் இருந்த போது எழுதப்பட்டவை.)

## 168

சேவாகிராமம்,
ஆகஸ்டு *31, 1941*

உங்கள் கடிதம் எனக்குக் கிடைத்தது. எனினும் தற்போது உங்களிடமிருந்து கடிதங்களை நான் எதிர்பார்க்கமாட்டேன். டாக்டர்களின் மனத்தைப் புண்படுத்தாமல் அவர்களிடமிருந்து நீங்கள் விடுதலை பெறுவீர்களாயின், இங்கே வாருங்கள். அப்போது நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். உங்களுடைய குடல்களில் ஏற்பட்டுள்ள கோளாறை மண் சிகிச்சை போன்ற இயற்கை சிகிச்சை முறையினாலும், உணவை மாற்றிக் கொள்வதாலும் தீர்த்துக்கொள்ள முடியுமென நான் கருதுகிறேன். ஆயுர்வேத முறையில் நான் அதிக நம்பிக்கை வைக்கமுடியவில்லை. வைத்தியர்கள் சிகிச்சை முறைகளைப் பற்றிப் போதிய அறிவை வளர்த்துக் கொள்வதில்லை. சில ஔஷதங்கள் பலன் தரத்தக்கவைதான். எனினும் அவை எவ்விதம் வேலை செய்கின்றன என்பதை அவர்கள் சிறிதும் அறியார்கள். இவை என்னுடைய அபிப்பிராயங்களேயன்றி வேறு எதுவுமில்லை. உங்களுக்கு எது திருப்தியளிக்கிறதோ அவ்விதமே செய்யுங்கள். எந்த முறையையாவது கைக்கொண்டு நீங்கள் குணமடைய வேண்டும். கக்கூசில் நீங்கள் ஒரு மணி நேரம் உட்கார்ந்திருப்பதை நான் அனுமதிக்கவே மாட்டேன்.

## 169

சேவாகிராமம்,
செப்டம்பர் 14, 1941

நான் மனு சுபேதாருக்குக் கொடுத்த பதிலின் ஒரு நகலை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அவர் அதைப் புரிந்துகொள்வாரென நினைக்கிறேன். பல்வேறு விதமான திறமை படைத்தவர்களிடமிருந்தும் நாம் வேலை வாங்கவேண்டியவர்களாக இருக்கிறோம் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

தற்போது உங்களுக்கு எவ்விதமான கவலையும் இருக்கக் கூடாது. உங்களுடைய ஆரோக்கியம் சாதாரண நிலைக்கு வர வேண்டும். ஆயுர்வேத சிகிச்சையின்மூலம் உங்கள் உடல் நிலை அபிவிருத்தி அடைந்தால், அதில் எனக்குச் சிறிது நம்பிக்கை ஏற்படலாம். இதுவரையில் எனக்கு அதில் எத்தகைய நம்பிக்கையும் இருந்ததில்லை. ஆயுர்வேத முறையை அறிந்த ஒருவரிடம் ஒரு நோயாளி சிகிச்சை பெற நான் ஏற்பாடு செய்தேன். ஆனால் பலன் கிடைக்கவில்லை. உங்கள் விஷயத்திலாவது ஆயுர்வேத சிகிச்சை முறை வெற்றிபெற வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அம்முறை மிகவும் புகழப்படுவதை நான் கேட்டிருக்கிறேன். ஸி. ஆர். தாஸ், மோதிலால்ஜி, குருதேவ் ஆகியோருக்கு அதில் நம்பிக்கை உண்டு. இங்கே நம்முடைய லக்ஷ்மிதாஸும் அதில் நம்பிக்கை வைத்திருக்கிறார். எனினும் இறுதியில் எல்லோரும் மேல்நாட்டு வைத்திய முறைக்குத்தான் வந்து சேருகிறார்கள். நான் இப்படியெல்லாம் எழுதியிருப்பது நல்லதல்ல. அது கிடக்கட்டும்; எப்படியோ நீங்கள் குணம் அடைய வேண்டியதுதான் முக்கியம்.

(இத்துடன் இணைக்கப்பட்டிருந்த கடிதம் பின்வருமாறு :)

சேவாகிராமம்,
செப்டம்பர் 14, 1941

அன்புள்ள சுபேதார்,

உங்களுடைய கடிதம் எனக்குக் கிடைத்தது. நீங்கள் மீண்டும் தவறான வழியில் செலுத்தப்பட்டிருக்கிறீர்கள். காயிதே ஆஜம் ஒரு விஷயத்தைக் கூட திட்டவட்டமாகக் கூறவில்லை. இந்தியா இரண்டு நாடுகள் என்ற கூற்றை ருசுப்பிக்கவும், இந்தியாவைப் பிரிக்கவும் அவர் விரும்புகிறார். இரண்டு சகோதரர்களைப் பிரித்து விட விரும்பும் ஒருவர் கூறுவதற்கு எவ்விதம் செவி சாய்க்க முடியும்? இப்போதுள்ள நிலை அதுதான்.

காங்கிரசுக்கு எதிரான குற்றச்சாட்டுகள், பொய்க் கூற்றுகள் என்பது ருசுப்பிக்கப்பட்டிருக்கின்றன. அவை ருசுப்பிக்கப்படாவிடில், அவற்றை ஒரு மத்தியஸ்த சபையின் யோசனைக்கு விடலாம்.

அரசாங்கத்தினிடமிருந்தோ அல்லது காங்கிரசினிடமிருந்தோ அதிகபட்சமான சலுகைகளைப் பெற முயற்சிக்கும் கொள்கையில் அவர்கள் பிடிவாதமாக இருந்துவரும் வரையில், நல்லெண்ணம் ஏற்படுவது முடியாத காரியமாகும். அவர்களுடைய போக்கு இப்படியே இருந்து வருமாயின், எத்தனை சலுகைகள் அளித்தாலும் அவர்களுக்கு ஒருபோதும் திருப்தி ஏற்படாது. சிந்து, டாக்கா, அகமதாபாத் ஆகிய இடங்களில் மூண்ட கலகங்களுக்குக் காரணம், காங்கிரஸை வற்புறுத்தி நெருக்கவேண்டும் என்பதேயாகும். அவற்றைப்பற்றி இதுதான் எனது உறுதியான அபிப்பிராயம். எனினும் தகராறுக்குக் காரணமான எல்லா விஷயங்களையும் ஒரு மத்தியஸ்தரின் விசாரணைக்கு விட நான் தயாராக இருக்கிறேன். இதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியுமென நான் நினைக்கவில்லை.

எல்லாப் பிரச்னைகளும் இறுதியில் மக்களாலேயே தீர்க்கப் படவேண்டும் என்பதையும், நாம் அதைப் பார்த்துக் கொண்டிருக்கும்படி நேரும் என்பதையும் நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். எனவே உங்களுக்கு நான் கூறும் யோசனை இதுதான்: ஒன்று நீங்கள் அந்தப் பிரச்னையைக் கைகழுவி விட்டுவிட வேண்டும்; அல்லது ஏதாவது மூலாதாரமான கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு அதை விவாதிக்க வேண்டும்.

## 170

சேவாகிராமம்,
செப்டம்பர் *18, 1941*

ஆயுர்வேத சிகிச்சையை நீங்கள் இப்போது ஒருவழியாக முடித்துவிடுவதுதான் சிறந்ததாக இருக்கும். காலம் சிறிது கடந்திருந்தாலும், கவலைப்பட வேண்டியதில்லை. நீங்கள் பலன் அடைந்திருப்பதாக உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும்வரையில் நீங்கள் பொறுமையுடன் இருக்கவேண்டும்.

லீலாவதி ஆஷரை நீங்கள் உங்களுடைய மேற்பார்வையில் வைத்துக் கொண்டிருப்பதால் அவளைப்பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. பானுமதி சௌக்கியமாக இருக்கிறாள் என்றே நம்புகிறேன்.

புலாபாய் இப்போது விடுதலை அடைந்துவிட்டாரா? அவர் மிகவும் இளைத்துவிட்டதாகத் தெரிகிறது.

## 171

சேவாகிராமம்,
செப்டம்பர் 19, 1941

கான் பகதூர் அல்லா பக்ஷுடன் நான் நீண்ட நேரம் பேசினேன். அவர் இப்போது கராச்சிக்குப் போய்க்கொண்டிருக்கிருர்; அவர் பிறகு மௌலான அபுல் கலாம் ஆஸாதையும் பார்ப்பார். காங்கிரஸ், அசெம்பிளியை விட்டுவிட வேண்டும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். அவ்விதமே கான் பகதூரும் விட்டுவிடவேண்டும்; அவர் காங்கிரசைச் சேர்ந்தவராயின், அவர் அவ்விதமே செய்யவேண்டும். யுத்த முயற்சிக்கு சிந்துவில் மாத்திரம் காங்கிரஸ் உதவி புரிந்து மற்றவிடங்களில் உதவி புரியவில்லையாயின், அது நமக்குப் பாதகமாக வியாக்கியானம் செய்யப்படுவதற்கு இடம் கொடுக்கும், இடம் கொடுத்தும் வருகிறது. அதனால் தேசத்திற்கோ, சிந்துவுக்கோ, ஹிந்துக்களுக்கோ அல்லது முஸ்லிம்களுக்கோ யாதொரு நன்மையும் ஏற்படாது. தவருன ஒரு முறையால் யார் லாபமடைய முடியும்? யுத்தம் இராவிட்டால்கூட அசெம்பிளியிலிருந்து காங்கிரஸ் வெளியேறிவிடுவதையே நான் ஆதரித்திருப்பேன். நீங்கள் விரும்பினல், இவ்விஷயத்தை நான் மேற்கொண்டு விவாதிக்கிறேன். என் மனம் எவ்விதம் வேலை செய்துவருகிறது என்பதையே இந்தக் கடிதத்தில் நான் காட்டியிருக்கிறேன். இதிலிருந்து நீங்கள் கான் பகதூரின் நிலையையும் நன்கு புரிந்து கொள்ளலாம். அவரும் எனது அபிப்பிராயத்தை அங்கீகரிப்பதாகக் கூறுகிருர்.

## 172

சேவாகிராமம்,
செப்டம்பர் 22, 1941

உங்களுடைய உடல் நிலை இன்னும் அபிவிருத்தியடைவதற்கான வழி ஏற்படவில்லை என்று தோன்றுகிறது. அடுத்த இரண்டு வாரங்களுக்குள் திட்டவட்டமான முன்னேற்றம் ஏற்படாவிடில், நீங்கள் இங்கு வந்துவிடுவதையே நான் விரும்புவேன். பிரயாணம் செய்யக்கூடிய நிலையில் நீங்கள் இருந்தால், நீங்கள் இங்கு வந்து சில நாட்கள் வரை தங்கியிருப்பது ஒரு நல்ல யோசனையாக இருக்கலாம். தயவு செய்து உங்களுக்கு எது சிறந்ததோ அவ்விதமே செய்யுங்கள். ராஜேந்திரபாபு நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்துவருகிருர். அவர் இப்போது தினந்தோறும் என்னைப் பார்க்க வருகிருர்.

அல்லா பக்ஷ் என்ன செய்யப்போகிருர்? காங்கிரஸ் வெளியேறிவிடவேண்டும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம். ஆனல் அவ்விஷயமாக ராஜேந்திரபாபுவுக்குச் சந்தேகம் இருந்து வருகிறது.

## 173

சேவாகிராமம்,
செப்டம்பர் 25, 1941

நானிபென் ஜாவேரி காலமானார். ஆனால் எப்படி என்று புரிந்து கொள்வது எளிதல்ல. அது கடவுளின் செயலேயாகும். எனவே அதை நாம் அறிந்து கொள்ள முடியாது.

அல்லா பக்ஷின் நிலையை நான் முற்றிலும் புரிந்துகொள் கிறேன். அவ்விஷயமாக மௌலானா என்ன யோசனை கூறினாலும் அதற்கு நாம் உட்படுவோம் என்று நான் முன்பே கூறியிருக்கிறேன். எனினும் அதே சமயத்தில், பதவியை விட வேண்டியதுதான் நியாயம் என்பதை அல்லா பக்ஷ் முற்றிலும் உணர்ந்திருப்பாராயின், அவர் அதை மௌலானாவிடம் விளக்கிக் கூறிவிட்டு ராஜிநாமா செய்யவேண்டும் என்றும், காங்கிரசுடன் வனவாசம் செய்யவேண்டும் என்றும் நான் அவரிடம் கூறியிருக்கிறேன். இதை, உறுதிமொழியை மீறுவதாகவோ அல்லது வேறு தவறான நடவடிக்கையாகவோ கருதமுடியாது. நீங்கள் இங்கு வரும்போது, அதன் சாதக பாதகங்களைப் பற்றி விவாதிக்கலாம். சிந்துவைப்பற்றிய எனது அபிப்பிராயம் புதிதல்ல. அந்த அபிப்பிராயம் இப்போது மேலும் உறுதியடைந்திருப்பதுடன், எல்லா மாகாணங்களுக்குமே அது பொருத்தமாகவும் இருக்கிறது. இருந்தாலும் அதைப்பற்றி நான் அவசரப்படவில்லை. மௌலானா உட்பட நம்மில் பெரும்பாலோர் அதை ஒப்புக் கொண்டால்தான் அதை அமுலுக்குக் கொண்டுவர முடியும்.

தேவைக்குத் தகுந்தவாறு சிறிது காலத்திற்கு நீங்கள் ஆயுர்வேத சிகிச்சை பெறுவதில் அபாயம் எதுவும் இல்லை. ஹஜிரா தண்ணீரின் புகழைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். தேவ்லாலியைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால் உங்கள் உடல்நிலைக்கு ஹஜிரா ஒத்துக் கொள்ளலாம். இறுதியாக நாம் எப்போதுமே இயற்கை வைத்திய சிகிச்சை முறையை முயற்சிக்கலாம். எனினும் சிறிது நேரமாக இருந்தாலும் கூட நாம் முதலில் சந்தித்துப் பேச வேண்டும்.

தீனபந்து நினைவுச் சின்ன நிதிக்காக நான் யாத்திரை செய்யவேண்டியிருக்குமென நினைக்கிறேன். அக்டோபர் மாதம் மத்தியில் நான் புறப்பட விரும்புகிறேன்.

## 174

சேவாகிராமம்,
செப்டம்பர் 26, 1941

நான் என்ன நினைக்கிறேன் என்பதை நேற்றைய கடிதத்திலிருந்து நீங்கள் அறிந்திருப்பீர்கள். நீங்கள் நினைப்பது போல் இங்கு அவ்வளவு உஷ்ணமாக இல்லை. எப்போதும் இரவு நேரங்

களில் ஆனந்தமாக இருக்கிறது. பங்களாவில் கொசுக்கள் இருக்கின்றன. ஆனால் சேவாகிராமத்தில் வெட்ட வெளியில் நீங்கள் தூங்கினால், அவைகளால் உங்களுக்குத் தொந்தரவு ஏற்படாது. இங்கு மற்ற எல்லா வசதிகளும் இருக்கின்றன. எனவே இங்கே இரண்டு அல்லது மூன்று நாட்கள் தங்குவதற்கு நீங்கள் வருவது நல்ல யோசனையே ஆகும். தேவ்லாலியைப் பற்றி எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. ஆனால் ஹஜிரா மிகவும் புகழ்பெற்ற இடமாகும்.

அசெம்பிளி பிரவேசத்திற்கு அனுமதி கொடுக்கப்பட வேண்டுமென சத்தியமூர்த்தி எழுதியுள்ளார். நான் அதைச் சிறிதும் விரும்பவில்லை. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

## 175

சேவாகிராமம்,
அக்டோபர் 2, *1941*

இப்போது நீங்கள் புறப்படுவதற்கு ஆயத்தமாக வேண்டும். மதுரதாஸ் மிகவும் கடுமையாக நோயுற்றிருக்கிறார். அவர் அருகில் இருப்பதற்காக நீங்கள் யாரையாவது தயவு செய்து அனுப்ப இயலுமா? நான் முன்பே ராதாவுக்கு எழுதியிருக்கிறேன். அங்கு செல்லுமாறு ஜம்னாலால்ஜியைக் கேட்கலாமா என்று நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். உங்களுடைய உடல் நிலை திருப்திகரமாக இருக்கிறதென நம்புகிறேன்.

நாங்கள் புதிய கோசேவா சங்கத்தை அமைத்திருக்கிறோம். ஜம்னாலால்ஜியின் முயற்சிக்கு அது ஒரு புதிய துறையாகும்.

ஜம்னாலால் நாளை புறப்படுவார். அவர் பம்பாயில் தங்கி விட்டு, பின்னர் மதுரதாஸ் இருக்குமிடத்திற்குச் செல்லுவார்.

## 176

சேவாகிராமம்,
அக்டோபர் *4*, *1941*

நாம் விரைவில் சந்திக்கப்போகிறோம். என்றாலும் ஒரு விஷயத்தைப் பற்றி நான் எழுதுவது நல்லது. தொழிலாளர்களுக்கு எதிராக உள்ள வழக்கில், மில் சொந்தக்காரர்களின் சார்பில் ‘அ’ ஆஜராகப் போகிறார் என்று மணிபென் எழுதுகிறாள். இதை நம்பவே முடியவில்லை. இருந்தாலும் மணி தவறாக எழுதியிருக்க முடியாது. எனவே நானே அவருக்கு (‘அ’) எழுதலாமென்று முதலில் எண்ணினேன். ஆனால் பின்னர் அந்த எண்ணத்தை விட்டுவிட்டேன். நீங்கள் அங்கே இருந்தால், நான் எழுதவேண்டிய அவசியம் இராது. ஏனெனில் நீங்களே

நிலைமையைச் சீர்படுத்திவிட முடியும். மணி கொடுத்துள்ள தகவல் சரியாக இருக்குமாயின், நீங்கள் சென்று தயவு செய்து 'அ' வைப் பாருங்கள்; அவர் கோர்ட்டில் ஆஜராக விரும்பினல், தொழிலாளர்கள் சார்பில் ஆஜராக வேண்டுமேயன்றி மில் சொந்தக்காரர்களின் சார்பில் ஆஜராகக் கூடாது என்று அவரிடம் சொல்லுங்கள். எனக்குத் தெரிந்த வரையில் மற்ருெரு விஷயம் என்னவெனில், வக்கீலாகத் தொழில் நடத்தும் நோக்கம் அவருக்கு இல்லை. அவர் முற்றிலும் தேசத் தொண்டிலேயே தம்மை அர்ப்பணம் செய்து கொண்டுள்ளார். எப்போதாவது விசேஷமான வழக்குகளை மாத்திரமே அவர் ஏற்றுக் கொள்கிருர். ஆனல் மற்ற வக்கீல்களைப் போல் அவரும் தொழிலில் ஈடுபட ஆரம்பிப்பாராயின், அது மிகவும் வருந்தத் தக்கதாக இருக்கும். தாம் இனி ஒரு போதும் வக்கீல் தொழிலில் ஈடுபடப்போவதில்லை என்றும், தாம் காங்கிரசை விட்டு விலகுவதால் தமது நிலையைக் குறித்து யாருக்கும் சந்தேகம் இருக்க வேண்டிய அவசியமில்லை என்றும் அவர் கூறியது எனக்குத் திட்டவட்டமாக நினைவில் இருக்கிறது. அதாவது அவர் இன்னும் காங்கிரசைச் சேர்ந்தவராகவே இருக்கிருர். என்னைப்போல அவரும் ராஜிநாமா செய்தபின் முன்னரைக் காட்டிலும் அதிகமாக ஓர் உண்மையான காங்கிரஸ்வாதியாகி யிருக்கிருர். அவர் எப்போதும் நேர்மையுடனும், விவேகத்துடனும், தியாக புத்தியுடனும் நடந்துவந்திருக்கிருர். அவர் தம்மைத் தாமே திருத்திக் கொள்ளவும் ஆர்வம் உடையவர். என்னைப் போல் உங்களுடைய அபிப்பிராயமும் இருக்குமாயின், தயவு செய்து அவர் இருக்குமிடம் சென்று, நிலைமையை அவருக்கு விளக்கிக் கூறுங்கள். அவரிடம் நாம் நடந்துகொள்ளும் விதம், அவர் காங்கிரஸ் மனச் சார்புள்ளவர் என்பதையே அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டும்.

'ஆ', சட்ட சபையை விட்டுவிட வேண்டுமென மௌலாஞ விரும்புகிருர் என்பது உங்களுக்குத் தெரியும். அவ்விதம் செய்ய வேண்டியது அவசியமென நானே, ராஜேந்திரபாபுவோ, பேராசிரியரோ அல்லது நீங்களோ நினைக்கவில்லை. இந்தக் கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏதாவது இருக்கிறதா?

## 177

சேவாகிராமம்,
அக்டோபர் 8, 1941

ராஜா இப்போது இங்குவர முடியாது. அவரது சகோதரரின் குமாரர்களும், மிகவும் உயர்தரக் கல்வி கற்றவர்களும், இளைஞர்களுமான இருவர் சமீபத்தில் இறந்துவிட்டார்கள். அவரது வீட்டில் மற்றும் மூவர் நோயுற்றிருக்கிருர்கள். எனவே அவர் முதலில் பெங்களூருக்குச் செல்லுவார். அங்கு அவர் சில

நாட்கள் தங்கிவிட்டுப் பிறகு வருவார். அதைப் பற்றி அவர் உங்களுக்கு நிச்சயமாகத் தெரிவித்திருப்பார். நீங்கள் இங்கே இரண்டு தடவை வரும்படி நேருவதை நானும் விரும்பவில்லை. எனவே ராஜாவும் மற்றவர்களும் இங்கே வரும்போது நீங்களும் வருவதுதான் சிறந்ததாகும். சத்தியமூர்த்தி 10-ஆம் தேதி நிச்சயமாக வருகிறார். கமலாதேவி சட்டோபாத்தியாயா நாளை வருகிறார். பிரகாசமும் நிச்சயமாக வருவார். ஆஸப் அலி, ஜவாஹர்லாலையும் மௌலானுவையும் சந்தித்துவிட்டு வருவார். எனவே அது குறிப்பிடத்தக்க பிரமுகர்கள் அடங்கிய ஒரு கூட்டமாகவே இருக்கும். இருந்தாலும் அதை நான் சமாளித்து விடுவேன்.

இப்போது உங்களுக்குள்ள ஒரே கடமை, நோயிலிருந்து நீங்கள் குணமடைவதுதான்.

இப்போது ஆசிரமத்தின்மீது ஏராளமானவர்கள் படையெடுத்து வந்திருக்கிறார்கள். மற்றும் பலர் வருவதற்கு வேண்டுகோள் அனுப்பியிருக்கிறார்கள். எல்லோருக்கும் நான் வழக்கமாக 'இல்லை' என்றே பதில் சொல்லிவருகிறேன். ஏனெனில் அவர்களுக்கெல்லாம் இடம் இல்லை. விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன என்றாலும், இடம் நிறைந்து நெருக்கடியாகத்தான் இருக்கிறது.

## 178

சேவாகிராமம்,<br>அக்டோபர் 31, 1941

இன்று உங்களுடைய பிறந்ததினம் என்று கேள்விப்படுகிறேன். தொண்டுகள் நிறைந்த உங்களுடைய வாழ்க்கையில் நீங்கள் மற்றொரு வருடத்தைக் கடந்திருக்கிறீர்கள். இவ்விதமே நீங்கள் பல ஆண்டுகளைக் கழிக்க வேண்டுமென உங்களுக்கு வாழ்த்துக் கூறுவது, நீங்கள் தீர்க்காயுளுடன் இருக்க வேண்டுமென வாழ்த்துக் கூறுவதாகும். நாம் சுயராஜ்யம் பெறும் வரையில் இந்த உலகத்தைவிட்டுப் போய்விடக் கூடாது என்பதை மறந்துவிடாதீர்கள்!

## 179

சேவாகிராமம்,<br>டிசம்பர் 5, 1941

உங்களுடைய கடிதமும் டாக்டர்களுடைய அறிக்கையும் கிடைத்தன. நான் அங்கு வரும்வரையில் யாதொரு மாறுதல்களும் செய்ய வேண்டாம். பின்னர் நாம் டாக்டர் கில்டருடன் விவாதிப்போம். தற்போதைய உணவு போதுமானது என்பதிலும், அது நிச்சயமாகப் பலன் அளிக்கும் என்பதிலும் எனக்குள்ள

நம்பிக்கையை நான் கைவிட முடியாது. இருந்தாலும், டாக்டர்களின் முடிவுக்கு நாங்கள் மதிப்புக் கொடுக்க விரும்புகிறோம். நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்வதற்கு எத்தகைய தடையும் ஏற்பட இடம் கொடுக்காதீர்கள். காலையிலும் மாலையிலும் நடக்க வேண்டியது அவசியமாகும். டாக்டர்கள் கூறியிருப்பதற்கிணங்க நீங்கள் ஒன்று நடக்கவேண்டும் அல்லது படுத்திருக்கவேண்டும்; உட்கார்ந்து கொண்டிராதீர்கள்.

(இந்தக் கடிதமும், பின்வரும் கடிதங்களும் பார்டோலிக்கு அனுப்பப்பட்டன.)

## 180

சுயராஜ்ய ஆசிரமம், பார்டோலி,
ஜனவரி *4, 1942*

காரியக் கமிட்டிக் கூட்டத்திற்கு நீங்கள் வர இயலாவிடில், அதைக் குறித்து நீங்கள் சிறிதும் கவலைப்படவேண்டாம். ஆனால் அவசியம் நீங்கள் இடுப்பு ஸ்நான முறையை மேற்கொள்ள வேண்டும்.

## 181

சேவாகிராமம்,
பிப்ரவரி *7, 1942*

சிறிது காலமாக உங்களுக்குக் கடிதம் எழுதவேண்டுமென நான் நினைத்துக்கொண்டிருந்தேன். இன்று உங்களுடைய கடிதமே வந்துவிட்டது. எப்படியாவது பச்சைக் கறிகாய்களைச் சாப்பிட நீங்கள் முயற்சிக்கவேண்டும். அவற்றை உபயோகிப்பதன்மூலம் நான் மிகுந்த பலனை அடைந்திருக்கிறேன். இந்தச் சிகிச்சையை அடிப்படையாகக் கொண்டு, கனசியாமதாஸ் தினந்தோறும் நான்கு அவுன்ஸ் வெண்ணை சாப்பிடும்படி நான் செய்திருக்கிறேன். அதன் பயனாக அவர் சுறுசுறுப்பாகவும், மலர்ந்த முகத்துடனும் இருக்கிறார். கீரைகளைச் சிறிது உப்புப் போட்ட தண்ணீரில் வைத்துவிட்டால், அவை கெடுவதில்லை. வெங்காயம், காரட், முள்ளங்கி முதலியவை நான்கு அல்லது ஐந்து நாட்கள் கெடாமல் இருக்கும். கீரை இலைகளில் *4* அல்லது *5* போதுமானவை. எப்படியிருந்தாலும், இரண்டு அவுன்ஸ்களுக்கு மேல் அவற்றை உட்கொள்ள நாங்கள் விரும்பவில்லை.

'Z' – ஐ இங்கே அனுப்புங்கள். அவனுக்கு நான் பயிற்சியளித்தபின் இங்கிருந்துபோக அனுமதிக்கிறேன். பிறகு அவன் உங்களுடைய உதவியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அவன் நல்லவன். எனினும் அவன் இன்னும் பக்குவமடையவில்லை.

இங்கே அவன் முன்னேற்றம் அடைவான். உங்களுக்குத் தேவை யானபோது நீங்கள் அவனைத் தருவித்துக் கொள்ளலாம்.

உங்களுடைய குடலில் ஏற்பட்டுள்ள கோளாறை, உணவில் தகுந்த மாறுதல்களைச் செய்வதன் மூலம் நீங்கள் சீர்படுத்திக் கொள்ளலாம் என்பதை நிச்சயமாக நம்புங்கள். கக்கூசில் நீங்கள் ஒருபோதும் அதிகப் பிரயாசை எடுத்துக் கொள்ளும்படி நேரக்கூடாது. ஒரு மாறுதலுக்காக மகாதேவை அங்கு வருமாறு நீங்கள் வற்புறுத்துவதை நான் புரிந்துகொள்ள முடியும். இருந் தாலும். அங்கே இருந்து கொண்டு அவர் 'ஹரிஜன்' பத்திரிகை அலுவல்களை ஒழுங்கான முறையில் கவனித்துக்கொள்ள இய லாது. அவர் எழுதுவதை என்னிடம் காட்டவேண்டும் என்ப தில் அவர் எப்போதும் ஆர்வமுடையவராக இருக்கிறார்: நானும் அதைப் பார்க்கவேண்டும் என்பதில் ஆர்வமுடையவனாக இருக்கிறேன். இவ்விதமாக, பல சந்தர்ப்பங்களிலும், சிறிய ஆனால் முக்கியமான திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. நர ஹரியை இங்கு வருமாறு நான் கேட்டிருக்கிறேன்.

நீங்கள் இருந்த அறையிலேயே கனசியாமதாஸ் வசித்து வருகிறார். அவர் வார்தாவில் இருந்தால், அவருக்கு நான் சிகிச்சை அளிக்க முடியாது.

பாவுக்கு உடல் நலம் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. ஹஜிரா யாத்திரையை முடித்த பின் நீங்கள் இங்கு வரவேண்டும். குஜராத்தில் நூற்பதன் சம்பந்தமாக நான் கூறியுள்ள யோச னையை நீங்கள் நிச்சயமாகப் பார்த்திருப்பீர்கள். அந்தத் திட்டம் நடைமுறையில் நிறைவேறுமாறு நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும். சர்க்கா சங்கத்திற்கும் தயவு செய்து பண வசூல் செய்யுங்கள்.

(இந்தக் கடிதமும் அடுத்த இரண்டு கடிதங்களும், சர்தார் சூரத்திற்கு அருகிலுள்ள ஹஜிராவில் இருந்தபோது எழுதப் பட்டவை.)

## 182

சேவாகிராமம்,
பிப்ரவரி 23, 1942

மகாதேவ் இரத்த அமுக்கத்தால் கடுமையாகத் தாக்கப்பட் டுள்ளார். நேற்று கனசியாமதாஸுடன் அவர் நாஸிக் செல்லு வதற்காகப் புறப்பட்டார். ஆனால் ஸ்டேஷனுக்குச் செல்லும் வழி யில் அவருக்கு மயக்கமாக இருந்தது. எனவே அவர் நாஸிக் கிற்குப் போகவேண்டாமென்று முடிவுசெய்தார். அவர் அவ் விதம் செய்தது மிகவும் புத்திசாலித்தனமாகும். அவர் சிவில் சர்ஜனிடம் சென்று சிகிச்சை பெற்றுத் திரும்பிவந்தார். தற் போது அவர் சௌக்கியமாக இருக்கிறார்; இரத்த அமுக்கமும்

குறைந்திருக்கிறது. எனினும் அவர் மிகவும் நெருக்கடியான ஒரு நிலையைக் கடந்துவந்திருக்கிறார் என்றே தெரிகிறது. அது, அவர் நீண்ட காலம் ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதையே காட்டுகிறது. நீங்கள் கவலைப்படவேண்டாம். அவருக்கு ஏற்பட்டுள்ள கோளாறு நரஹரிக்கு ஏற்பட்டது போலவே இருக்கிறது. அவர் குணமடைவது நிச்சயம்.

நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?

## 183

சேவாகிராமம்,
பிப்ரவரி 25, 1942

மகாதேவுக்கு நீங்கள் எழுதிய கடிதத்திற்கு நான் பதிலளிக்க வேண்டியவனாக இருக்கிறேன். அவருக்கு இப்போது அபாயம் எதுவும் இல்லை. இருந்தாலும் சிறிது காலத்திற்கு அவர் யாதொரு வேலையும் செய்யக் கூடாது.

சியாங் கை ஷேக்கைப் பற்றி நீங்கள் 'ஹரிஜனி'ல் வாசித்திருப்பீர்கள். அவர் வந்தார்; நினைவில் வைத்துக் கொள்ளும்படியாக அவர் எதுவும் கூறவில்லை. எனினும் எல்லோருக்கும் வேடிக்கையாக இருந்தது. அவரிடமிருந்து நான் எதுவும் கற்றுக் கொள்ளவில்லை என்று நான் கூறமாட்டேன். ஆனால் நாம் அவருக்குக் கற்பிக்கக் கூடியது எதுவும் இல்லை. அவர் கூறியதெல்லாம் இதுதான்: "எது எப்படியிருந்தாலும், பிரிட்டிஷாருக்கு உதவி புரியுங்கள். மற்றவர்களைக் காட்டிலும் அவர்கள் சிறந்தவர்கள். இனிமேல் அவர்கள் இன்னும் சிறந்தவர்களாக இருப்பார்கள்."

காலஞ் சென்ற ஜம்னாலால்ஜியின் நண்பர்கள் அடங்கிய கூட்டமொன்று நடந்தது. அதற்கு நீங்கள் வந்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும் என்பது நிச்சயம். எல்லோரும் முற்றிலும் அந்நியோன்னியமாகச் சந்தித்துப் பேசினோம். ஜம்னாலால்ஜியின் தொண்டுகளைக் குறித்து விவாதம் நடந்தது. நடவடிக்கை முறைகளில் சிலவற்றையும் தயாரித்தோம். கனசியமதாஸ் அதில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டார். கோசேவா சங்கத்தின் தலைவர் பதவியை ஜானகிபென் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

என்னுடைய சொந்த மேற்பார்வையில் நீங்கள் வந்த பிறகுதான், உங்களுடைய உணவில் ரொட்டியையும் சேர்த்துக் கொள்ளுவதை நான் விரும்புவேன். பப்பாளிப் பழம் சாப்பிடுங்கள்; அதிகமாகப் பேரீச்சம்பழம் சாப்பிடுங்கள். வாழைப் பழங்கள் அபாயகரமானவை. இருந்தாலும் அவற்றை நீங்கள் முயற்சி செய்து பார்க்கலாம். எனினும் நல்ல பழுத்த பழங்களை நன்கு பிசைந்து சாப்பிடுங்கள். இப்போது இந்த ஜாபிதா தாராளமானதல்லவா?

இந்துலாலின் (யாக்ஞிக்) கடிதம் எனக்குச் சிறிதும் திருப்தி யளிக்கவில்லை. பின்வரும் தோரணையில் நீங்கள் அவருக்கு ஏதாவது எழுத முடியுமா? "நீங்கள் உறுதியற்றவராக இருப்பதால், உங்களிடம் நம்பிக்கை வைக்க முடியுமா என்று கூறுவது கடினமாக இருக்கிறது. எனவே காங்கிரசிடமிருந்தும் என்னிடமிருந்தும் பிரிந்து நீங்கள் தனியாக வேலை செய்வதே மிகச் சிறந்ததாக இருக்கும். உங்களுடைய வேலை காங்கிரஸின் அலுவல்களுக்குத் துணையாக இருக்குமாயின், தகராறுக்கு இடம் இராது. நான் மனம் விட்டு எழுதியுள்ள இந்தக் கடிதத்திற்காக உங்களுக்கு மன வருத்தம் ஏற்படக்கூடாது."

நீங்கள் உருது கற்றுக் கொள்ள முயற்சிக்கவேண்டும்.

## 184

சேவாகிராமம்,
மார்ச் 7, 1942

கோடை காலத்தில் சேவாகிராமத்தில் வசிக்க உங்களுக்குத் தைரியம் இல்லையாயின், நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்களோ அங்கு வர நான் முயற்சிக்கிறேன். நீங்கள் நூறு சதவிகிதம் ஆரோக்கியமாக இருப்பது சாத்தியம் என்பதே எனது நம்பிக்கையாகும். இதன் மத்தியில் நீங்கள் எங்கு சென்றாலும் ஓய்வு எடுத்துக் கொள்ளவும், ஸ்நானம் செய்யவும், சாப்பிடவும் தயவு செய்து குறிப்பிட்ட நேரத்தை நிர்ணயம் செய்து கொள்ளுங்கள். வைஸ்ராய் அவ்விதம் செய்யும்போது நாம் ஏன் செய்யக்கூடாது?

(இந்தக் கடிதம் நாடியாடுக்கு அனுப்பப்பட்டது)

## 185

சேவாகிராமம்,
மார்ச் 22, 1942

உங்களுடைய பற்களைக் கவனித்துச் சிகிச்சை செய்து கொள்வீர்களென நம்புகிறேன். உங்களுக்கு யோக ஆசனங்கள் கற்றுக் கொடுப்பவரைப் பற்றி அறிந்துகொள்ள நான் ஆர்வம் உடையவனாக இருக்கிறேன். ஆச்சாரிய நரேந்திரதேவின் நிலை அபிவிருத்தி அடைந்து வருகிறது. இங்கு நாளுக்கு நாள் உஷ்ணம் அதிகமாகி வருகிறது.

(இந்தக் கடிதமும், அடுத்துவரும் நான்கு கடிதங்களும் சர்தார் பம்பாயிலிருந்தபோது அனுப்பப்பட்டவை.)

## 186

சேவாகிராமம்
ஏப்ரல் 13, 1942

நீண்ட காலத்திற்குப் பின் உங்களிடமிருந்து தகவல் கிடைத்திருக்கிறது. நான் உங்களுக்குக் கடிதம் எழுதியவண்ணம் இருந்தேன். ஆனால், நீங்கள் தலைநகரிலேயே தங்கிவிட்டீர்கள்.

உங்களுடைய குடல் உங்களுக்குத் தொந்தரவு கொடுத்து வருவதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. ஏனெனில் உங்கள் குடலுக்கு நீண்ட ஓய்வு தேவையாக இருக்கிறது.

ஜவாஹர்லால், அகிம்சைக்கு முழுக்குப் போட்டுவிட்டார் என்றே தோன்றுகிறது. ஆனால் நீங்கள் உங்களுடைய அலுவல் களைத் தொடர்ந்து செய்துவர வேண்டும். உங்களால் இயன்ற வரையில் மக்களைக் கட்டுப்படுத்தி வைக்க முயற்சியுங்கள். இன்று அவர் செய்துள்ள பிரசங்கம்* அபாயகரமானது என்று தோன்றுகிறது. நான் அவருக்குக் கடிதம் எழுதவேண்டுமென நினைத்துக் கொண்டிருக்கிறேன்.

## 187

சேவாகிராமம்,
ஏப்ரல் 14, 1942

மீண்டும் உங்களிடமிருந்து யாதொரு கடிதமும் இல்லை. பேராசிரியர் எனக்கு முழுக் கதையையும் கூறினர். உங்களுடைய உடல் நிலை இடம் கொடுக்காவிடில், நீங்கள் அலகாபாத்திற்குச் செல்லவேண்டாம். எனினும் உங்களுடைய கருத்துகள் என்ன என்பதை அவர்களுக்கு நீங்கள் அறிவித்துவிடவேண்டும். காங் கிரஸ் பலாத்காரக் கொள்கையை மேற்கொள்ளுமாயின், நீங்கள் காங்கிரசிலிருந்து வெளியேறிவிட வேண்டுமென நான் கருது கிறேன். ஒருவர் தம்முடைய கருத்துகளை வெளியிடாமல் மௌன மாக உட்கார்ந்திருப்பதற்கு இது சந்தர்ப்பமல்ல. பல விஷயங் களையொட்டியும் தவருன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படு கின்றன. நாம் அவற்றைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்துவிடக் கூடாதென்றும், நமது செல்வாக்கிற்குக் குந்தகம் ஏற்படுவதாக இருந்தால் கூட நமது மனத்தில் உள்ளதைப் பகி ரங்கமாகக் கூறவேண்டுமென்றும் நினைக்கிறேன்.

'ஹரிஜனி'ல் நான் எழுதிவருவதை நீங்கள் கவனமாக வாசிக்க வேண்டுமென விரும்புகிறேன்.

---

* யுத்தகாலத்தில் எல்லாவற்றையும் தீவைத்துப் பொசுக்கிவிட்டுச் செல்லும் கொள்கையைப் பண்டித ஜவாஹர்லால் நேரு தமது பிரசங்கம் ஒன் றில் ஆதரித்திருந்தார். அதையே மேற்கண்ட கடிதத்தில் காந்திஜி குறிப்பிட் டிருக்கிறுர்.

ஒரிஸ்ஸாவில் கம்யூனிஸ்டுகள் கொரில்லா போரில் ஈடுபடு வதற்கான முஸ்தீபுகளைச் செய்துவருகிறார்கள் என்று தோன்று கிறது. மற்றொரு புறம், ஜப்பானுக்கு உதவியளிக்க பார்வர்டு பிளாக்கைச் சேர்ந்தவர்கள் தயாராகிவருகிறார்கள் என்றும் தெரி கிறது. இரண்டும் நிச்சயமற்ற வதந்திகளே. என்றாலும், அவை நடக்கக் கூடாதவை அல்ல. அநேகமாக ஒரிஸ்ஸா தாக்கப்படலாம். எனவே சர்க்கார் அங்கு துருப்புகளைக் குவித்து வருகிறார்கள்.

உங்களுடைய ஆரோக்கியம் எப்படியிருக்கிறது? அந்த சாது என்ன சொல்லுகிறார்?

உத்தியோக சங்கத்தில் வேலை செய்வதற்காக எல். எம். பட்டீலை நியமிப்பதுபற்றி அவர்கள் ஆலோசித்து வருகிறார்கள். அவருக்குச் சம்பளம் கொடுக்க வேண்டியது அவசியமா? ஆம் என்றால், எவ்வளவு கொடுக்கவேண்டும்? மகாராஷ்டிரப் பிர தேசத்திற்கு அவர் பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டும்.

## 188

சேவாகிராமம்,
ஏப்ரல் 22, 1942

உங்கள் கடிதம் எனக்குக் கிடைத்தது. நீங்கள் வெளியேற வேண்டியிருக்குமென்றே மௌலானாவின் தந்தியிலிருந்து தெரி கிறது. சாத்துவிக ஒத்துழையாமையை ஆதரித்து சந்தேகத் துக்கு இடமின்றி ஒரு தீர்மானம் ஒப்புக்கொள்ளப்படவில்லை யாயின், நீங்கள் வெளியேற வேண்டியது உங்களுடைய கடமை யாகும். பொசுக்கும் கொள்கை, அந்நியத் துருப்பு களை உபயோகிப்பது போன்ற யோசனைகளையும் பலமாக எதிர்க்கவேண்டும். கூட்டத்திற்கு வருமாறு என்னை அவர்கள் வற்புறுத்திவருகிறார்கள். ஆனால் நான் வரவில்லை என்று அவர் களுக்கு எழுதினேன். அதே சமயத்தில் இங்கே மூன்று அல்லது நான்கு கூட்டங்களுக்கு நான் ஏற்பாடு செய்திருக்கிறேன். அவற்றில் முக்கியமான ஒரு கூட்டம் முன்பே நிர்ணயிக்கப்பட்டு விட்டது. எனவே அதை இப்போது ஒத்திவைப்பது முடியாத காரியமாகும்.

நீங்கள் அலகாபாத்திலிருந்து திரும்பிவரும்போது, ஒன்றி ரண்டு நாட்களாவது இங்கே தங்கவேண்டும். இங்கு காலநிலை அலகாபாத்தில் இருப்பதைக் காட்டிலும் நூறு மடங்கு சிறந்த தாக இருக்கிறது. ராஜேந்திரரையும் தேவையும் உங்களுடன் அழைத்து வாருங்கள்.

## 189

சேவாகிராமம்,
மே 23, 1942

என்னிடம் வைத்திருந்த நம்பிக்கையை பிரித்விசிங் இப்போது இழந்துவிட்டதால், அவருக்கும் எனக்கும் உள்ள தொடர்புகள் முடிவடைந்துவிட்டன. அவரது ஸ்தாபனத்திலிருந்து கோபால்ராவ் ராஜிநாமா செய்துவிடுவார். கிஷோர்லாலும், நாத்ஜியும் கூட அதனுடன் தங்களுக்குள்ள தொடர்பைக் கத்தரித்துக் கொள்வார்கள். பிருத்விசிங்கின் நிலை என்ன என்பதை நாம் பின்னர்தான் தெரிந்துகொள்ள முடியும்.

அவர் நம்பிக்கையிழந்திருப்பதைக் குறித்து அவர் ஒரு பகிரங்க அறிக்கை வெளியிடவேண்டுமென நான் அவருக்கு யோசனை கூறியிருக்கிறேன். அவர் அவ்விதம் வெளியிடாவிட்டால் நான் ஏதாவது கூறவேண்டியிருக்கும். இந்தப் பிளவைக் குறித்து நீங்கள் நம்மைச் சேர்ந்தவர்களிடம் சொல்லலாம்.

லிம்டி சமஸ்தானத்தைப் பற்றி நான் தற்போது எதுவும் சொல்ல வேண்டாமென நினைக்கிறேன்.

## 190

சேவாகிராமம்,
மே 27, 1942

நானும் ஜவாஹர்லாலும் இன்று முழுவதும் அந்நியோன்னியமாகப் பேசிக்கொண்டிருந்தோம். நாங்கள் முன்னரைவிட இப்போது ஒருவரையொருவர் நன்கு அறிந்து கொண்டுள்ளோம். சிந்து நிகழ்ச்சிகளுக்கு முழுப் பொறுப்பாளியும் நீங்கள்தான் என்று சோயித்ராம் கூறுகிறார். நீங்கள் உறுதியுடன் இருக்க வேண்டும். நான் கூறுவதை நீங்கள் அங்கீகரித்தால், அவருக்கு நீங்கள் எழுதவேண்டும். அதைப் பற்றி நான் ஜவாஹர்லாலையும் கேட்டேன். காங்கிரஸ் அங்கத்தினர்களும், அல்லாபக்ஷும் கூட வெளியேறிவிடவேண்டுமென அவர் கூறுகிறார். தற்போதைய நிலை அதுதான். இருந்தாலும், உங்களுடைய கருத்து வேறு விதமாக இருக்குமாயின், நான் எதுவும் சொல்லுவதற்கில்லை.

உங்களுடைய ஆரோக்கியத்தில் அபிவிருத்தி எதுவும் ஏற்படாதது ஆச்சரியமாக இருக்கிறது. இந்தச் சளிப்பு உங்களை விட்டுப் போகவேண்டும். உப்பு கலந்த நீரை உள்ளுக்கு இழுத்து நீங்கள் மூக்கைச் சுத்தம் செய்து கொள்ளுகிறீர்களா? நீங்கள் இன்னும் குணம் அடையவில்லையெனில், இங்கே வந்து நீங்கள் தங்கியிருக்கவேண்டும்.

(சர்தார் பார்டோலியில் இருந்தபோது இந்தக் கடிதம் அனுப்பப்பட்டது.)

## 191

சேவாகிராமம்,
*ஜூன் 3, 1942*

தேபர்பாயுடன் நான் பூரணமாக விவாதித்தேன். தகராறைத் தீர்க்க வேண்டும் என்ற உத்தேசம் லிம்டி சமஸ்தானத்திற்கு ஒருபோதும் இருந்ததில்லை. ஆனால் அதைத் தீர்க்கும் உத்தேசம் அந்தச் சமஸ்தானத்திற்கு இருப்பதாக பகவன்தாஸ் நினைத்துக் கொண்டிருந்தார். சமஸ்தானத்தைவிட்டுச் சென்றவர்கள் திரும்பி வந்தபோது, சமரசத்திற்கான அறிகுறிகள் எதுவும் இல்லை என்பதையே அவர்கள் கண்டனர். எனவே இவ்விஷயமாக நீங்கள் வெளியிட்டுள்ள அறிக்கை சரியாகத்தான் இருக்க வேண்டும்.

இருந்தாலும், உங்களுடைய அறிக்கை வெளியாவதற்கு முன், நாம் ஏதாவது செய்ய வேண்டுமென நினைக்கிறேன். படேஹ்சிங்ஜி உங்களைப் பார்க்க விரும்புவதாக தேபர்பாய் கருதுகிறார். அவர் உங்களைப் பார்க்கவும், தகராறைத் தீர்க்கவும் விரும்பினால், அவரைச் சந்திக்க நீங்கள் தயாராக இருக்க வேண்டும். இந்தக் கட்டம் தாண்டிய பிறகு, உங்களுடைய அறிக்கையைப் பற்றி நாம் யோசிப்போம்.

தற்போது நிலைமை மிகவும் நன்றாக இருக்கிறது. அதிருப்தியடைந்தவர்கள் வெளியே இருக்கிறார்கள். அவர்கள் இப்போது எங்கு இருக்கிறார்களோ அங்கேயே இருக்கட்டும். உள்ளூர் பருத்தியை எதிர்த்து நடந்துவரும் பகிஷ்காரம் தொடர்ந்து நடைபெறவேண்டும். எனவே இப்போதைக்கு நீங்கள் உங்களுடைய அறிக்கையை வெளியிடவேண்டிய அவசியம் இல்லை. நான் ஏதாவது கூறவேண்டுமென நீங்கள் எண்ணினால், தந்தி மூலம் அறிவியுங்கள். நான் அவ்விதமே செய்கிறேன். அடுத்த வார 'ஹரிஜனி'ல் வெளியிட இன்னும் காலம் இருக்கிறது.

உங்கள் ஆரோக்கிய சம்பந்தமாக ஒரு விஷயத்தில் கவனமாக இருங்கள். எவ்வளவு குறைந்த நேரம் சாத்தியமோ அவ்வளவு நேரத்திற்குத்தான் நீங்கள் கக்கூசில் இருக்கவேண்டும். நீங்கள் அங்கு சிரமம் எடுத்துக் கொள்ளக்கூடாது. இதை மீறமுடியாத ஒரு விதியாக நீங்கள் கருதவேண்டும்.

(இந்தக் கடிதமும், அடுத்து வரும் ஐந்து கடிதங்களும் பம்பாய்க்கு எழுதப்பட்டவை.)

## 192

சேவாகிராமம்,
*ஜூன் 10, 1942*

லிம்டி அதிபரைப் பார்ப்பதால் நன்மை எதுவும் ஏற்படுமென நான் நினைக்கவில்லை. காங்கிரஸ்வாதி என்ற முறையிலோ

அல்லது சமஸ்தான மக்கள் சங்கத்தின் பிரதிநிதி என்ற முறையிலோ உங்களைப் பார்க்காமல், ஒரு பழைய நண்பர் என்ற முறையில் அவர் உங்களைப் பார்க்க விரும்புவது அர்த்தமற்றதாகும்.

நீங்கள் யாதொரு அறிக்கையும் வெளியிடவேண்டாம். ஒப்பந்தம் ஏற்பட்டதா அல்லது இல்லையா என்பது பற்றிய விவாதத்தில் நாம் சிக்கிக் கொள்ளவேண்டாம். பிறர் உதவியின்றி தங்கள் சொந்த முயற்சியால் சமாளிக்கக்கூடியவர்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தவேண்டும். மன்னர்கள் தங்களுக்குள்ளேயே பேரம் செய்து கொள்ளலாமென எண்ணுவார்களாயின், அவர்கள் அப்படியே செய்துகொள்ளட்டும். ஆனால் பகிஷ்காரக் கமிட்டி தன் நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்தி வரவேண்டும். ஒரே ஒருவர் உறுதியாக நின்றால் கூட, அவர் பொதுஜனப் போராட்டத்தின் பிரதிநிதியாக இருப்பார். அந்நிலையில், போராட்டத்தினால் ஒரு செப்புக் காசு லாபம் இல்லாவிட்டால்கூட, போராட்டம் தொடர்ந்து நடந்துவருகிறதென்று கூறமுடியும்.

மௌலானா சாகிபைப் பார்ப்பதற்காக நான் வார்தாவுக்குச் செல்லுகிறேன். அவர் பலவீனமடைந்துள்ளார் என்பது நிச்சயம். நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன்.

## 193

சேவாகிராமம்,
ஜூன் *14, 1942*

இங்கே எங்களுக்குள் நடந்துவரும் பேச்சுவார்த்தைகளைப் பற்றி மகாதேவ் உங்களுக்கு எழுதுவார்.

யாராவது ஜோட்பூருக்குச் செல்லவேண்டும். அங்கு செல்லும்படி ஸ்ரீபிரகாசாவைத் தூண்ட முடியுமா என்று பார்க்கிறேன். அவர் செல்லவில்லையாயின், முன்ஷி அங்கு செல்லவேண்டும். எனினும் ஜோட்பூர் கால நிலை முன்ஷிக்கு ஒத்துக் கொள்ளும் என்றால்தான் அவர் (முன்ஷி) அங்கு செல்ல வேண்டும். இவ் விஷயமாக ஜவாஹர்லாலுடன் கலந்து பேசுங்கள்.

நான் இக் கடிதம் எழுதுவதன் நோக்கம் வேறாகும். குஜராத்தில் கொள்ளைகள் அதிகமாகிவருகின்றன. அவற்றைச் சமாளிப்பதற்கு நாம் ஏதாவதொரு வழியைக் கண்டு பிடிக்க வேண்டும். விவசாயிகள் தடிகளைக் கொண்டு கொள்ளைக்காரர்களை எதிர்த்து நின்று சமாளிப்பார்களாயின், நான் அதை ஆட்சேபிக்கமாட்டேன். எப்படியிருந்தாலும் விவசாயிகள் அந்தச் சவாலை ஏற்றுக் கொண்டு தான் தீரவேண்டும். இதைப் பற்றிச் சிந்தியுங்கள்.

## 194

பஞ்சகனி,
*ஜூன் 15, 1945*

(எரவாடா சிறையிலிருந்து சர்தார் விடுதலை அடைந்ததும் காந்திஜியைச் சந்தித்தார். அன்று காந்திஜியின் மௌன தினமாதலின், அவர் (காந்திஜி) காகிதத்தில் பின்வருமாறு எழுதிக் காட்டினர்.)

உங்களுடைய உணவைப் பற்றி நான் சிந்தனை செய்தேன். நார் உள்ள எந்த உணவுப் பண்டங்களையும் நீங்கள் உட்கொள்ளக் கூடாது. சக்கை அதிகம் இல்லாத கறிகாய்களையே நீங்கள் உட்கொள்ளவேண்டும். பால், குளூகோஸ், தேன் ஆகியவையே உங்களுடைய முக்கிய உணவாக இருக்கவேண்டும். உங்களுக்கு ஜீரணம் ஆகுமாயின், வெண்ணெயையும் நீங்கள் சேர்த்துக் கொள்ளலாம். கத்தரிக்காய், தக்காளி போன்ற விதைகள் உள்ள கறிகாய்களைக் கூட நீங்கள் விட்டுவிட வேண்டும் என்று நினைக்கிறேன். அதாவது குடலுக்கு அதிக வேலை கொடுக்கக்கூடிய உணவுப் பண்டங்களை உட்கொள்ளக் கூடாது என்பதே முக்கியமாகும். ஒரு நாளைக்கு நான்கு தடவை சாப்பிடும்படி நேர்ந்தால் கூட, ஒவ்வொரு தடவையும் குறைந்த அளவு உணவையே உட்கொள்ள வேண்டும். குளிர்ந்த தண்ணீர், வெந்நீர் இரண்டிலும் இடுப்பு ஸ்நானம் செய்யவேண்டும். நீண்ட தொட்டியில் படுத்துக் கொண்டு ஸ்நானம் செய்வது நல்லது. டாக்டர்கள் உங்களைப் பரிசோதனை செய்வதோ அல்லது யோசனைகள் கூறுவதோ கூடாது என்பது அதன் அர்த்தமல்ல. அவர்கள் அவ்விதம் செய்யலாம். எனினும் அவர்கள் உணவு சம்பந்தமாக ஆராய்ச்சி செய்வதில்லை.

## 195

சேவாகிராமம்,
*ஜூலை 22, 1945*

சுசீலா நய்யார் இன்று புறப்படுகிருர். அவசியமாக இருந்தால் மாத்திரமே நீங்கள் அறுவை சிகிச்சை செய்து கொள்ள வேண்டும். நீங்கள் இரண்டு அல்லது மூன்று மாதங்கள் வரையில் டாக்டரின் மேற்பார்வையில் இருக்கவேண்டுமாயின், டின்ஷா மேத்தாவுடன் தங்கும்படி நான் உங்களுக்கு யோசனை கூறுகிறேன். நீங்கள் அங்கு சென்ருல், உங்களுக்கு நான் துணையாக இருப்பேன்.

## 196

சேவாகிராமம்,
*ஜூலை 25, 1945*

இப்போது நீங்கள் சிகிச்சை செய்து கொள்ளத் தீர்மானிப் பீர்களாயின், புனாவில் டின்ஷா இருக்குமிடத்தில் தங்கி சிகிச்சை செய்து கொள்ளும்படி நான் வற்புறுத்திக் கூறவிரும்புகிறேன். நான் அங்கே வரும்போது, உங்களுக்குச் சிகிச்சை செய்வதில் நானும் என் கைவரிசையைக் காட்ட முயற்சிக்கலாம். எப்படி யிருந்தாலும், அங்கு சிகிச்சை செய்துகொள்வதால் உங்களுடைய நிலைமை இப்போது இருப்பதைக் காட்டிலும் மோசமாகிவிடாது என்பது நிச்சயம். உங்களைச் சொஸ்தப்படுத்துவதில் ஒருவேளை டின்ஷா வெற்றிபெறக் கூடும்.

ஐ. என். ஏ. ராணுவ விசாரணையைப் பற்றி நான் பர்தி வாலாவுடன் பேசினேன். அதைப்பற்றி இன்று நான் கடிதமும் எழுதுகிறேன். அத்தகைய சம்பவங்கள் நிகழ்ந்துதான் தீரும். எனினும் அவற்றையெல்லாம் கண்டு சலசலப்பு அடையும் கோஷ்டியைச் சேர்ந்தவர் நீங்கள் அல்ல.

## 197

சேவாகிராமம்,
*ஆகஸ்டு 3, 1945*

நான் இங்கிருந்து 8-ம் தேதி புறப்பட்டு, 10-ம் தேதி புனா வுக்கு என்னுடன் உங்களை அழைத்துச் செல்ல வேண்டுமென உத்தேசித்திருந்தேன். ஆனால் 19-ம் தேதி வரையில் கூட்டங்கள் இருப்பதால் இந்த இடத்தை விட்டு நான் நகர முடியாது என் பதை இப்போது உணருகிறேன். நீங்கள் விடுதலை அடைந்த உடனேயே இவ்விடத்திலிருந்து புறப்பட நான் விரும்பினேன். எனவே இப்போது நீங்கள் இன்னும் 10 நாட்களுக்கு எப்படி யாவது சமாளித்துக் கொள்ளவேண்டியதுதான். நீங்கள் விரும் பினால் இன்னும் சிறிது காலத்திற்கு நீங்கள் அகமதாபாத்தி லேயே தங்கியிருக்கலாம். இதன் மத்தியில் நீங்கள் இங்கு வந்து ஆசிரமத்திலேயே தங்குவது மிகவும் சிறந்தது. பின்னர் நாம் சேர்ந்து புனாவுக்குச் செல்ல முடியும்.

மகாதேவ் நினைவுச் சின்னம் சம்பந்தமாக நிதி கோரி நான் பகிரங்க வேண்டுகோள் விடுப்பது சரியல்ல. நான் அவ்விஷய மாக ஒரு சிலருக்கு எழுதலாம். அதையொட்டி பம்பாய் எதுவும் செய்யாவிட்டால், அதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. நான் கூறியுள்ள திட்டத்தைப் பரிசீலனை செய்யுங்கள். பின் னரோ அல்லது நாம் சந்திக்கும்போதோ இவ்விஷயமாகப் பேசிக் கொள்ளலாம்.

(இந்தக் கடிதம் அகமதாபாத்துக்கு அனுப்பப்பட்டது.)

## 198

சேவாகிராமம்,
ஆகஸ்டு 9, 1945

ரயில் வண்டியில் பிரயாணம் செய்யும்போது நீங்கள் தூங்க முடியாதது பரிதாபகரமாகும். ஏற்கனவே ஏற்பாடு செய்துள்ளபடி நாம் புனுவுக்குச் செல்லுவோம். அங்குள்ள கால நிலை உங்களுக்கு ஒத்துக் கொள்கிறதா என்பதைப் பார்ப்போம். நான் இங்கிருந்து 19-ம் தேதி புறப்பட்டு 20-ம் தேதி அங்கு வருகிறேன். அங்கு நான் ஒரு நாள் தங்குவேன். பின்னர் 21-ம் தேதி முதலாவது ரயில் வண்டியில் நாம் புனுவுக்குப் புறப்படலாம். முன்பு கிடைத்ததுபோல் நமக்கு இம்முறையும் மூன்றாவது வகுப்பு வண்டியில் நல்ல இடம் கிடைக்குமென நம்புகிறேன். இதன் மத்தியில் நீங்கள் சிறிது ஓய்வு எடுத்துக் கொள்ள முடியுமா என்று முயற்சித்துப் பாருங்கள். நீங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டால், மணிக்கும் சிறிது ஓய்வு கிடைக்கும். இனி அதிக காலம் அவளால் சமாளிக்க முடியாதென்பதை நான் காண்கிறேன். இப்போது கூட உங்கள்மீதுள்ள எல்லையற்ற பக்தியினாலேயே அவள் சிரமத்தையெல்லாம் தாங்கிவருகிறாள். ஆனால் இயற்கையின்முன் பக்தியும் பயனற்றுப் போய்விடும்.

(இந்தக் கடிதமும், அடுத்துள்ள இரண்டு கடிதங்களும் பம்பாய்க்கு அனுப்பப்பட்டவை.)

## 199

சேவாகிராமம்,
ஆகஸ்டு 12, 1945

உங்கள் கடிதம் கிடைத்தது. கடவுள் சித்தம் இருந்தால், நாம் புனுவில் சந்தித்து மேற்கொண்டு பேசுவோம்.

நான் மௌலானா சாகிபுக்கும் எழுதியிருக்கிறேன். இருந்தாலும் உங்களுடைய தோரணையில் எழுதவில்லை. அது ஒரு சங்கடமான வேலையாகும். ஒரு முக்கியமான நடவடிக்கையை எடுத்துக்கொள்ளுமுன், அவர் உங்கள் எல்லோரையும் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்பதில் இருவித அபிப்பிராயங்கள் இருப்பதற்கில்லை.

நான் ஜின்னா சாகிபுக்கு என்ன எழுதினேனோ அது இறுதியானது. வேறு எந்த விதமாகவும் நான் செய்திருக்க முடியாது. இருந்தாலும், நான் கூறுவதை ஒத்துக்கொள்ளாமல் இருப்பதற்கு, உங்களுக்கும் மற்ற எல்லோருக்கும் உரிமை உண்டு. நீங்கள் அதை மனப்பூர்வமாக அங்கீகரிக்க முடியாவிடில், அதை

எல்லோரும் அறிய நீங்கள் பகிரங்கமாகக் கூறிவிட வேண்டும். வேறு யாருடைய சார்பிலும் நான் பேசவில்லை. எனது சொந்த அபிப்பிராயத்தையே நான் கூறியிருக்கிறேன். அதில் ஏதாவது குறை இருந்தால், அதை நான் உடனே ஒப்புக் கொண்டுவிடுவேன். எனது யோசனையை அவர் சிறிதும் விரும்பவில்லை என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். ஆகையால் நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்.

ஒரு புதிய தேர்தல் நடைபெறவேண்டியது அவசியமாகும். ஆனால் அவ்விதம் நடக்கும் என்பது நிச்சயமா? எனினும் தேர்தல் நடைபெறுவதாயின், அதைப் பற்றி நாம் யோசிப்போம். நாம் புனாவில் சந்திக்கும்போது மேற்கொண்டு பேசலாம்.

நீங்கள் இங்கே வர இயலாது என்பதை நான் முற்றிலும் அறிந்து கொள்ள முடியும். பம்பாயிலிருந்து புனாவுக்கு நீங்கள் விமானத்தில் வருவதாக இருந்தால் உங்களுக்கு சிரமம் குறைவாக இருக்குமா?

கடைசியாக இப்போது நீங்கள் செய்துள்ள பிரசங்கம் எல்லோருக்கும் மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது.* அது மிகவும் காரசாரமாக இருக்கிறது என்றாலும் அதை ஆட்சேபிப்பதற்கில்லை. ஏனெனில் உங்கள் மனத்தில் குமுறிக் கொண்டிருப்பதை நீங்கள் அடக்கி வைத்திருக்க முடியாது அல்லவா?

மணி எல்லைமீறி உழைத்து நோய்க்கு உள்ளாகமாட்டாள் என்று நம்புகிறேன்.

## 200

*(1945)*

காந்திஜி ஒரு காகிதத்தில் பின்வருமாறு எழுதி சர்தாரிடம் கொடுத்தார்:

ரகசியமாக எந்த விதமான உதவியும் செய்ய நீங்கள் அறவே மறுத்துவிட வேண்டும். அது சிறிதும் ஒழுங்கற்ற காரியமாகும். அது ஒரு போதும் ரகசியமாக இருக்க முடியாது. அத்தகைய உதவியை எவரும் பகிரங்கமாக அங்கிகரிக்க மாட்டார், அங்கீகரிக்கவும் வேண்டாம். இவையெல்லாம் மிகவும் கவனமாக ஆலோசிப்பதற்கு உரியவை. அத்தகைய முக்கியமான வேலையை அவசரமாகவோ அல்லது லஞ்சம் கொடுத்தோ செய்துவிட முடியாது. நாம் வெற்றிபெற முடியாவிட்டாலும், அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பிரிட்டிஷார் அவர்களுக்கு பாகிஸ்தானைக் கொடுக்கட்டும்.

---

* அகமத்நகர் கோட்டையிலிருந்து விடுதலையடைந்த பிறகு பம்பாயில் சர்தார் நிகழ்த்திய பிரசங்கத்தையே காந்திஜி குறிப்பிட்டிக்கிறார்.

## 201

முக்கிய முகாம் சோட்பூர்,
முகாம் கோண்டை, ஜனவரி 1, 1946

உங்கள் தந்தியும் கடிதமும் கிடைத்தன. சதீஷ் பாபு, ஹேம் பிரபாதேவி ஆகிய இருவருடைய நிர்வாகத்திலும் இருக்கும் ஒரு ஸ்தாபனம் முற்றிலும் ஒழுங்கான முறையில் நடைபெற்று வரும் என்பதில் ஐயமில்லை. எனவே நான் எங்கே இருந்தாலும், சோட்பூரிலிருந்து தவருமல் எனக்குத் தபால்கள் வந்து கொண்டிருக்கின்றன. உங்களைப் போலவே சதீஷ் பாபுவும் காவற்காரர், மெய்காவலர் என்ற முறையில் என்னுடன் இங்கே வந்திருக்கிருர். இந்தப் புதிய இடத்தில் எல்லா ஏற்பாடுகளும் ஒழுங்காகச் செய்யப்பட்டிருப்பதால், எவ்வளவு அதிக ஓய்வு கிடைக்கக்கூடுமோ அவ்வளவு ஓய்வு கிடைத்திருக்கிறது. எனவே எப்படி என் ஆரோக்கியத்திற்குத் தீங்கு நேரக்கூடும்?

பிரார்த்தனையின் மந்திர சக்தியை நான் நேரில் தொடர்ந்து பார்த்து வருகிறேன். கூட்டத்திற்கு ஆயிரக்கணக்கான மக்கள் வருகின்றனர்; சிற்சில சமயங்களில் ஒரு லட்சம் மக்கள் கூட வருகின்றனர். அப்படியிருந்தும் பிரார்த்தனை நடக்கும்போது அற்ப சந்தடியும் இருப்பதில்லை. மக்கள் சப்தம் செய்யாமல் அமைதியாக இருப்பதுடன், ஒருவரையொருவர் இடித்துத் தள்ளுவதுமில்லை. இது உண்மையில் ஒரு புதிய அனுபவமேயாகும்.

ராஜாஜியைப் பற்றி நீங்கள் எழுதியதை நான் வாசித்தேன்.* அந்தத் தகராறு இறுதியாகத் தீர்க்கப்பட்டால் மிகவும் சிறப்பாக இருக்கும். எனினும் அவ்விதம் தீருமா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. ஏனெனில் முரண்பாடு தொடர்ந்து இருந்து வருவதாக எனக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. மிகவும் அவசியமாக இருந்தால் மாத்திரமே அவற்றிற்கு நான் பதில் எழுதுகிறேன்.

உங்களுடைய ஆரோக்கியத்தைப் பற்றி நான் என்ன எழுதுவது? டின்ஷா கூறிய யோசனையை விரும்புகிறேன். ஒவ்வொரு நாளும் நீங்கள் அடையும் பலத்தை ஒவ்வொரு நாளும் செலவு செய்துவிட்டு, அதுதான் தேசத்தொண்டு என்று நீங்கள் கருதுவீர்களாயின், என்ன செய்ய முடியும்?

பா, மகாதேவ் ஆகியோரின் சமாதிகள் நிர்மாணிக்கப்பட்டுள்ள இடத்தை ஆர்ஜிதம் செய்து கொள்ளும் விஷயமாக ஆகா கான் கொடுத்துள்ள தந்தியில் 'நாம் சந்திப்போம்' என்று குறிப்பிட்டிருக்கிருர். ஜின்னுபாயைப் பற்றி நீங்கள் அளித்துள்ள பதில் அருமையாக இருக்கிறது. ஆகா கானின்

---

* சென்னை மாகாண தேர்தல் போர்டு அமைப்பைப்பற்றி சர்தார் எழுதியிருந்ததையே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

யோசனைகள் என்னைக் கவர்ந்து விடவில்லை. அதன் சம்பந்தமான மற்ற விவரங்களை நாம் சந்திக்கும்போது கூறுகிறேன்.

நான் 3-ம் தேதி சோட்பூருக்குத் திரும்பிவந்து, 9-ம் தேதி அஸ்ஸாமுக்குப் புறப்படுகிறேன். ஒருவேளை 18-ம் தேதி நான் மீண்டும் சோட்பூருக்குத் திரும்பிவரலாம். பின்னர் அங்கிருந்து 23-ம் தேதி சென்னைக்குப் புறப்படுவேன்.

சென்னையில் நான் அதிக பட்சமாக இரண்டு வாரங்கள் இருக்க உத்தேசித்திருக்கிறேன். பின்னர் சேவாகிராமத்தில் சிறிது காலம் இருந்துவிட்டு, நீங்கள் அனுமதித்தால் புனைவுக்குச் செல்லுவேன். நீங்கள் அனுமதிக்காவிடில், பார்டோலிக்குச் சென்றுவிட்டு பின்னர் புனைவுக்குச் செல்லுவேன்.

நீங்களும், பாலாசாகிபும் (கேர்), தேவும் தம்மை அசெம்பிளிக்குள் இழுப்பதாக பாய் வைகுந்த் எழுதியிருக்கிறார். நிச்சயமாக அவரை ஒரு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கச் செய்யுங்கள். மற்ற விஷயங்களை நான் வந்த பிறகு கவனிக்கலாம்.

(இந்தக் கடிதம் புது டில்லிக்கு அனுப்பப்பட்டது.)

# 202

சோட்பூருக்குச் செல்லும் கப்பலில்,
ஜனவரி 3, 1946

நான் பின்வருமாறு தந்தி கொடுத்திருக்கிறேன்:

"20-ம் தேதி வங்காளத்திலிருந்து புறப்படுகிறேன். பிப்ரவரி 8-ம் தேதி சென்னையிலிருந்து புறப்படுவேன். பார்டோலிக்குச் செல்லுமுன் புனைவுக்குச் செல்ல ஆர்வமுடையவனாக இருக்கிறேன். மார்ச் மாதம் மத்தியில் பார்டோலிக்கு வந்தால் சரியாக இருக்குமா?"

பிரிட்டனிலிருந்து வந்திருக்கும் பார்லிமெண்டு அங்கத்தினர்களை, பம்பாயிலாவது, புனைவிலாவது அல்லது வார்தாவிலாவது சந்திக்க நான் உத்தேசித்திருக்கிறேன். அவர்களைப் பற்றி இழிவாகப் பேசுவது கண்ணியமற்றதாகும். நாம் அன்பான வார்த்தைகளை உபயோகித்தால் எத்தகைய தீங்கும் நேர்ந்து விடாது. மேலும், அவர்களிடையே சில நல்ல மனிதர்களும் இருக்கிறார்கள். முன்னதாகவே அவர்களைக் கண்டிப்பதில் அர்த்தமில்லை.

இதற்கு முன் நான் எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்கும். டாக்டர் டின்ஷாவின் இயற்கை வைத்திய சாலையின் மேற்பார்வையை நான் ஏற்றுக் கொண்டபின் சில நாட்கள் வரையில் நான் புனைவிலேயே இருக்கவேண்டும். அதனால்தான்

மார்ச்சு மாதம் மத்தியில் நான் பார்டோலிக்கு வரலாம் என்று கூறுகிறேன். எனினும் இவ்விஷயத்தில் உங்களுடைய விருப் பப்படி நடந்துகொள்கிறேன். 15 நாட்களுக்கு மேல் என்னை பார்டோலியில் இருக்கும்படி நீங்கள் நிச்சயமாக வற்புறுத்த மாட்டீர்கள் என்றே நான் நினைக்கிறேன். அங்கு வருவதாக நான் கூறியுள்ள உறுதிமொழியிலிருந்து கூட நீங்கள் எனக்கு விடுதலை யளிக்கலாம். அங்கு நீங்கள் காங்கிரஸ் விஷயங்களில் ஆழ்ந் திருப்பீர்கள். நான் அங்கு வர வேண்டியது அவசியமாக இருந் தால் மாத்திரமே, நீங்கள் என்னை பார்டோலிக்கு அழைப்பீர்கள் என்று நான் எண்ணுகிறேன். என் மன நிலை எப்படி இருந்துவருகிறது என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே இதை எழுதுகிறேன். எனினும் இறுதியாக முடிவு செய்ய வேண்டிய பொறுப்பு உங்களைச் சார்ந்ததே. ஏனெனில் நீங்கள் இந்தியாவுக்கும், பார்டோலிக்கும் கூட சர்தார் அல்லவா?

(இந்தக் கடிதமும் பின்வரும் பல கடிதங்களும் சர்தார் பம் பாயில் இருந்த போது எழுதப்பட்டவை.)

## 203

சோட்பூர்,
*ஜனவரி 8, 1946*

நேற்று நான் உங்களுக்குப் பின்வருமாறு ஒரு தந்தி கொடுத்தேன்:

"கடவுள் சித்தம் இருந்தால், மார்ச் 3-ம் தேதி பார்டோ லிக்கு வருகிறேன்."

நான் உண்மையில் முதல் தேதியே பார்டோலிக்கு வர வேண்டுமென விரும்பினேன். ஆனல் பிப்ரவரியில் 28 நாட்களே இருப்பதால், பார்டோலிக்குச் செல்லுமுன் நான் புனவை எட் டிப் பார்க்க விரும்புகிறேன்.

பிரிட்டிஷ் பார்லிமெண்டு கோஷ்டியைப் பற்றி நான் முன்பே எழுதியிருக்கிறேன். நாம் அதை வெறுத்துத் தள்ளிவிடக் கூடாது; அதற்கு மாருக மனப் பூர்வமாக அதை வரவேற்க வேண்டும். முன்பு அத்தகையோர் வந்தால், மக்கள் ஆனந்தத் துடன் அவர்களை வரவேற்பார்கள். அதுபோல் இப்போதும் அவர்கள் ஆனந்தத்தில் திளைப்பார்கள் என்று நான் கூறவில்லை. எனினும் நமது விருந்தினர்களாக வந்திருப்போரை நாம் எந்த விதத்திலும் அவமதிக்கக்கூடாது. அந்தக் கோஷ்டியைச் சேர்ந்த அங்கத்தினர்களை வரவேற்பதற்காக விருந்துபசாரங்கள் நடை பெறலாம். அவற்றிற்கு வரவேண்டுமென நமக்கு அழைப்புகள் வருமாயின், காங்கிரஸ்வாதிகள் அவற்றை ஏற்க மறுத்துவிட

வேண்டிய அவசியமில்லை. நான் அவர்களை எங்கேயாவது நிச்சயமாக சந்திப்பேன். மிதுனபுரியிலிருந்து திரும்பிவந்ததும் நான் கவர்னரைப் பார்ப்பதாக இருந்தேன். ஆனால் நேற்றிரவு தான் நான் அவரைப் பார்த்தேன். பார்லிமெண்டு கோஷ்டியினரைச் சந்திக்க எப்போது எனக்கு சாத்தியமாக இருக்கும். என்று அவரே என்னைக் கேட்டார். நான் குறிப்பிட்ட தேதிகளைக் கூறினேன். அவர்கள் அநேகமாக சென்னையில் என்னைச் சந்திப்பார்கள். வேறு தேதிகள் வசதியாக இல்லை.

டாக்டர் முகமது என்னைப் பார்ப்பதற்காக வந்திருக்கிறார். அஸ்ஸாமுக்கு என்னை வழி அனுப்பிய பின் அவர் இன்று பாட்னாவுக்குப் புறப்படுவார். அவர் இங்கு தங்கியிருந்தபோது அவர் வந்திருப்பதைக் கேள்வியுற்ற கவர்னர் அவரைச் சந்திக்க விரும்பினார். அவ்விருவரும் சுமார் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் முக்கியமான எந்த விஷயத்தையும் பற்றி விவாதிக்கவில்லை. எனினும் பரஸ்பரம் சந்தித்ததைக் குறித்து அவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

நான் மிகவும் சௌக்கியமாக இருக்கிறேன். காஞ்சனையின் உடல் நிலை மோசமாகியிருக்கிறது. இருந்தாலும் அவள் உயிர் பிழைப்பாள் என்றே நம்புகிறேன். இன்று நான் அஸ்ஸாமுக்குப் புறப்படுகிறேன். அவளை விட்டுச் செல்ல நான் விரும்பவில்லை. என்றாலும், முன்னர் பல சமயங்களிலும் நான் இத்தகைய நிலையிலேயே புறப்பட நேர்ந்தது என்பதை நீங்கள் அறிவீர்கள். அவளைக் கவனித்துக் கொள்வதற்காக அநேகமாக டாக்டர் சுசீலா இங்கேயே தங்குவார்.

விடியற்காலையில் பிரார்த்தனைக்கு முன் இந்தக் கடிதத்தை நான் வாயால் கூறி எழுதிக் கொள்ளும்படி செய்தேன். இங்கே நான் பெற்ற அனுபவங்களைக் கூறி இந்தக் கடிதத்தை நிரப்புவதாயின், கடிதம் மிகவும் நீண்டுவிடும். தவிர அதற்கு நேரமும் இல்லை. அதையெல்லாம் வாசிக்க நீங்கள் ஏன் விரும்பவேண்டும்?

ராஜகுமாரி இங்கே இருக்கிறார். அவர் என்னுடன் அஸ்ஸாமுக்கு வருவார்.

## 204

கிராம சேவா ஆசிரமம்,
சேவாகிராமம், பிப்ரவரி *8, 1946*

நீங்கள் 'அ'-வை அறியாமல் இருக்கலாம். அவர் உறுதி வாய்ந்த ஒரு காங்கிரஸ் வாதியாவார். காங்கிரஸ்வாதி என்ற முறையில் அவர் கஷ்ட நஷ்டங்களுக்கும் உள்ளாகியிருக்கிறார். அவர் என்னிடம் விட்டுச் சென்ற கடிதத்தை நான் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அதை வாசித்ததும், காங்கிரசுக்கு 'ஆ' நம்பிக்கைத் துரோகம் செய்திருக்கிறார் என்பதை நீங்கள்

அறிந்து கொள்ளலாம். அவரது அபேட்சையைத் தவருக அனுமதித்துவிடாமல் தடுக்கவே அக் கடிதம் என்னிடம் கொடுக்கப் பட்டது. இப்போது அவ்விஷயமாக எது சரி என்று உங்களுக்குத் தோன்றுகிறதோ அவ்விதம் செய்யுங்கள்.

யாத்திரையின் போது ஓய்ச்சல் ஒழிவே இல்லை. இருந்தாலும் கடவுள் அருளால் அது யாதொரு இடையூறுமின்றி முடிவடைந்தது. ஏற்கனவே ஏற்பாடு செய்துள்ளவாறு நான் 3-ம் தேதி பார்டோலிக்குப் போய்ச் சேருவேன். சிந்து தேர்தல்களில் உங்களுக்கு நல்ல பலன் கிடைத்திருக்கிறதென்றே பத்திரிகைச் செய்திகளிலிருந்து தெரிகிறது.

## 205

சேவாகிராமம்,
*பிப்ரவரி 10, 1946*

ராஜேந்திரபாபு இங்கு வந்திருக்கிருர். உங்களுடைய தந்தி கிடைத்தது. 3-ம் தேதிக்கு முன் நான் பார்டோலிக்கு வந்து சேர இயலாது.

வைஸ்ராய் என்னை அழைத்திருக்கிருர். ஆனல் சமீபத்தில் அவரைப் பார்க்க நான் செல்ல முடியாது.

## 206

சேவாகிராமம்,
*பிப்ரவரி 13, 1946*

பத்திரிகையில் என்னுடைய அறிக்கையை நீங்கள் பார்த்திருப்பீர்கள். ஜவாஹர்லால் கூறியதாகப் பத்திரிகைகளில் என்ன வெளியாகியிருக்கிறதோ அது எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. இதைப் பற்றி அவருக்கும் நான் எழுதியிருக்கிறேன். மக்களை அவ்விதம் நாம் தூண்டக் கூடாது. கோடிக்கணக்கான மக்களிடம் இருக்கும் சிறிதளவையும் நாம் எடுத்துக் கொண்டு விடக் கூடாது. ஓர் வரையறைக்கு உட்பட்டு உணவுப் பொருட்கள் நிச்சயமாகக் கிடைக்குமாயின், அவை அடுத்த பருவகாலம் வரையில் நீடித்திருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். இதைக் குறிக்கோளாகக் கொண்டு நாம் ஒத்துழைக்க வேண்டும் என்பதே எனது அபிப்பிராயமாகும். நான் திங்கட்கிழமை அங்கு வருகிறேன். அன்று எனது மௌன தினமாகும்.

## 207

சேவாகிராமம்,
பிப்ரவரி *14, 1946*

உணவு நிலைமைபற்றி நீங்கள் தவருன எண்ணம் கொண்டிருக்கிறீர்கள் என்றே நினைக்கிறேன். சில உணவு தானியங்களை வெளிநாடுகளிலிருந்து கொண்டுவரலாம். ஆனுல் நாம் ஒருபோதும் அதையே நம்பிக்கொண்டு இருக்கக் கூடாது. மில்களுக்குப் போதுமான பருத்தி இல்லையாயின், மீதியை இறக்குமதி செய்து கொள்ளலாம். ஆனுல் ராட்டினங்களுக்குப் போதிய பருத்தி .நம் நாட்டில் இருக்கிறது.

## 208

சேவாகிராமம்,
பிப்ரவரி *16, 1946*

நீங்கள் என்னை ஏப்ரல் *3*-ம் தேதி வரையில் அங்கே நிறுத்திவைக்க முடியாது. அதிகபட்சம் *15* நாட்களுக்குமேல் அங்கே நீங்கள் என்னை வைத்துக் கொண்டிருக்கக் கூடாது என்று நான் முன்பே உங்களுக்கு எழுதியிருக்கிறேன். *19*-ம் தேதிக்கு மேல் பார்டோலிக்கு வெளியே சில நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவும் நான் சம்மதித்திருக்கிறேன். பார்டோலியில் நான் *15* நாட்கள் தங்கும்போது என்னிடமிருந்து உங்கள் விருப்பப்படி வேலை வாங்கிக் கொள்ளுங்கள். நான் பாய் (பி. ஜி.) கேருடன் மனம் விட்டு நீண்ட நேரம் பேசினேன். நாம் சந்திக்கும்போது அதைப் பற்றி மேற்கொண்டு பேசுவோம். தற்போது எனக்கு ஓய்ச்சலின்றி வேலைகள் இருந்துவருகின்றன.

புலாபாய் நோயுற்றிருப்பதைக் கேட்க நான் வருந்துகிறேன். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து நீங்கள் என்னை வீட்டுக்கு அழைத்துச் செல்லுமுன் அவரைச் சென்று பார்க்க நான் விரும்புகிறேன். அவ்விதம் பார்க்க எனது மௌனம் தடையாக இராது. மதுரதாஸுக்கு உடல் நலம் குன்றியிருந்தாலும் கூட, அவரால் என்னை பிர்லா பவனுக்கு வந்து பார்க்க இயலுமென நம்புகிறேன்.

## 209

சேவாகிராமம்,
பிப்ரவரி *23, 1946*

நீங்கள் கடுமையான சோதனைக்கு உள்ளாகிவருகிறீர்கள் என்பதை என்னுல் அறிந்து கொள்ள முடிகின்றது. விஷயங்கள் எத்தகைய விபரீத நிலைக்கு வந்திருக்கின்றன?

இந்த நிலைமையில்* என்னை நீங்கள் பார்டோலிக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறீர்களா? எப்படியிருந்தாலும் அங்கு 15 நாட்களுக்குமேல் நான் தங்க முடியாது. என்னை ஏன் ஒரு விசேஷ ரயில் வண்டியில் அழைத்துச் செல்ல வேண்டும்? இரவு முழுவதும் நான் ரயிலில் செல்ல வேண்டியிருக்குமாதலின், மக்கள் கூட்டத்தினல் எனக்குத் தொந்தரவு ஏற்படாமல் பாதுகாப்பதற்காக அப்படிச் செய்கிறீர்களா? இக்கடிதத்தை நான் சுசீலாவிடம் அனுப்பியுள்ளேன். எனவே அது சீக்கிரமாக உங்கள் கைக்குக் கிடைக்குமென நம்புகிறேன். அவள் உங்களுக்கு எல்லா விவரங்களையும் கூறுவாள்.

## 210

புனா,
*பிப்ரவரி 24, 1946*

அவாரிக்குக் கடிதம் எழுதி உண்ணாவிரதத்தைக் கைவிடும்படி கூறுங்கள். அவரது வழக்கை காரியக் கமிட்டிக்காவது அல்லது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்காவது அனுப்பும்படி சொல்லுங்கள். அவர் அவ்விவரங்களைப் பொதுமக்களிடமும் நிச்சயமாகக் கூறவேண்டும். சுசீலாவிடம் அனுப்பிய இதற்கு முந்திய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்கலாம். எனவே என்னை பார்டோலிக்கு அழைத்துச் செல்லும் யோசனையை இப்போது நீங்கள் விட்டுவிட வேண்டும் என்று எண்ணுகிறேன். எனினும் நிச்சயமாக நீங்கள் கூறுகிறபடி செய்கிறேன். ஆனல் நீங்கள் இப்போது பம்பாயை விட்டுச் செல்லக்கூடாது. எதைப் பற்றியாவது நீங்கள் என்னைப் பார்க்க விரும்பினல், இங்கே வாருங்கள். அங்கே நான் வரவேண்டுமென்பது உங்கள் விருப்பமாயின், நான் வருகிறேன். இங்கே எனது அலுவல்கள் ஒருசில நாட்களில் முடிவடைந்துவிடும்.

காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடையே தற்போது இருந்து வரும் கருத்து வேற்றுமைகள் மிகவும் தீங்கு விளைவிக்கக் கூடியவை. ஒளிவு மறைவின்றிப் பேசுவதுதான் முக்கியமாகும். தயவுசெய்து மிகவும் கடுமையாக உழைக்க முற்படாதீர்கள்.

## 211

புனா,
*பிப்ரவரி 26, 1946*

உங்கள் கடிதம். ராஜாஜி சம்பந்தமாக நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? அவர் வெளியேறிவிட விரும்புகிருர். எனவே அப்படியே செல்லுமாறு அவரை விட்டு விடுங்கள்.

---

* அப்போது பம்பாயில் ஏற்பட்ட கடற்படை சம்பந்தமான கடுமையான கலகங்களைப் பற்றியே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிருர்.

என்னை நீங்கள் பார்டோலிக்கு அழைத்துச் செல்ல விரும்பினால், நான் தயாராக இருக்கிறேன். இப்போதுள்ள சங்கடமான நிலைமையில் நீங்கள் பம்பாயில் இருக்க வேண்டுமென நான் யோசனை சொன்னேனேயன்றி வேறு எதுவுமில்லை. எனினும், அங்கேயுள்ள நிலைமையில் என்ன செய்ய வேண்டும் என்பதை, மற்ற எவரையும்விட நீங்கள்தான் நன்கு அறிவீர்கள். என்னுடைய வசதியை மனத்தில் வைத்துக் கொண்டு நான் அவ்விதம் கூறவில்லை. நாடு உள்ள நிலைமையில் நாம் எவ்விதம் செய்வது சிறந்தது என்பதை உன்னியே அவ்வாறு யோசனை கூறினேன்.

## 212

புனா,
மார்ச் 19, 1946

கடற்படைக்கு நீங்கள் அனுப்பியுள்ள செய்தி எனக்குக் கிடைத்தது. அஸோசியேடெட் பிரஸ்ஸிலிருந்தும் அதே தகவல் கிடைத்தது. நாம் நம்பிக்கையுடன் நமது வழியை வகுத்துக் கொள்ளவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயமாகும். பிறகு என்ன நேருகிறது என்பதை நாம் பொறுத்திருந்து பார்க்க வேண்டும். ஒருவர் கையில் ஆயுதம் இருக்கும்போது, குறிப்பாக ராம பாணம் (ராமனுடைய பாணம் அதாவது கடவுளிடத்தில் நம்பிக்கை) என்ற ஆயுதம் இருக்கும் போது அவர் எதற்காகக் கவலைப்பட வேண்டும்? கவி பிரிதம் எழுதிய பின் வரும் வாக்கியங்கள் எப்போதும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன:

"தீயிலேயே இருப்பவர்கள் மகத்தான ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர்: ஆனல் வெளியிலிருந்து அதைப் பார்த்துக் கொண்டிருப்பவர்கள் அத்தீயினல் எரிக்கப்படுகின்றனர்."

பங்கி (தோட்டிகள்) காலனியில் நான் தங்குவதற்கு நீங்கள் ஏற்பாடு செய்வீர்களென நம்புகிறேன்.

இயற்கை வைத்திய சாலையை அமைக்க நான் ஏதாவது ஒரு இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அதற்காக இங்கே சுற்றியுள்ள கிராமங்களை நான் கண்ணோட்டமிட்டு வருகிறேன். பிப்ரவரியிலிருந்து ஜூலை மாதம் முடிய குளிர்ந்த ஒரு பிரதேசத்தில் இருக்க வேண்டும் என்பதே எனது திட்டமாகும். குஜராத்தில் இந்த ஏற்பாட்டைச் செய்வது முடியாத காரியம். அபு ஒன்றுதான் குளிர்ந்த மலைப் பிரதேசமாகும். அங்கேயும் காலநிலை. பஞ்சகனி அல்லது மகாபலேசுவரத்தைப் போல் இருப்பதில்லை. புனாவைப் போல் குளிர்ந்த பிரதேசத்தை குஜராத்தைச் சேர்ந்த வேறு எந்த இடத்திலும் நான் கண்டதில்லை. பின்னர் நீங்கள் புகார் எதுவும் கூறக்கூடாது என்பதற்காகவே

இதையெல்லாம் உங்களுக்குச் சொல்லுகிறேன். குஜராத்தில் இயற்கை வைத்திய அலுவல்கள் நடைபெறுவதற்குத் தகுதி வாய்ந்த அத்தகைய ஓர் இடத்தைக் கண்டுபிடிக்க முடியும் என்று நீங்கள் கருதுகிறீர்களா? அதை நீங்கள் உண்மையில் விரும்புவீர்களா? என்னைப் பொறுத்தமட்டில் இயற்கை வைத்தியம் முன்போல் ஒரு பொழுது போக்காக இருக்கவில்லை. அதன் சம்பந்தமான விவரங்களை நான் நுணுக்கமாக முயற்சித்துப் பார்க்க வேண்டும்.

## 213

புனா,
*மார்ச் 21, 1946*

நாளை உருளிக்கு நான் புறப்படுகிறேன். அங்கே நான் ஒரு டெலிபோன் வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்வேன். தந்திகள் வருவதற்கும் அங்கே நிச்சயமாக வசதி உண்டு. வெற்றியோ அல்லது தோல்வியோ கடவுளிடம் இருக்கிறது.

கான் சாகிப் ஆகியோரைப் பற்றிப் பேராசிரியரிடமிருந்து (கிருபளானி) வந்த செய்தி முற்றிலும் மாறாக இருக்கிறது. 'காங்கிரஸ் என்ன தீர்மானம் செய்கிறதோ அதையே செய்வோம்' என்பது அவர்களுடைய பதிலாக இருக்க வேண்டும். ஆனால் இதை அவர்களுக்கு நீங்கள் எடுத்துக் கூறுவீர்களா? அல்லது மௌலானா அவ்விதம் கூறும்படி செய்வீர்களா?

குஜராத் சம்பந்தமாக நீங்கள் கூறுவதன் பொருள் எனக்குத் தெரிகிறது. ஓய்வு எடுத்துக் கொள்வதற்காக மாத்திரம் நான் எந்த இடத்திற்கும் செல்ல விரும்பவில்லை.

பங்கி காலனியில் எனக்கு ஜாகை வசதி செய்வதில் உள்ள கஷ்டங்களை நான் முற்றிலும் அறிவேன். இருந்தாலும் அவற்றையெல்லாம் சமாளித்து ஜாகை வசதிக்கு ஏற்பாடு செய்யுங்கள். தர்பார் கோபால்தாஸின் சொத்துக்கள் அவருக்கு மீண்டும் கிடைக்கும் விஷயமாக அவசரப்பட வேண்டாம்.

தின்ஷா வைத்தியசாலையின் எதிர்காலம் பரிசீலனையில் இருந்து வருகிறது. தென்னாப்பிரிக்கா கூட்டம் இன்னும் நிச்சயமாகவில்லை.

## 214

உருளி-காஞ்சன்,
*மார்ச் 22, 1946*

வைஸ்ராயிடமிருந்து இன்று மாலை எனக்கு ஒரு கடிதம் வந்தது. அவர் 3-ம் தேதி தம்மை வந்து பார்க்கும்படி என்னைக்

கேட்டிருக்கிறார். அவருக்கு நான் இன்னும் பதிலளிக்கவில்லை. இருந்தாலும் அவரைப் பார்க்க நான் செல்லவேண்டியிருக்கும்.

தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களைப் பற்றிய கூட்டம் 31-ம் தேதி மாலை நடைபெற ஏற்பாடாகியிருக்கிறது. அது, சாம் ராஜ்யப் பிரஜைகள் சங்கத்தினால் கூட்டப்படுகிறது. அதற்கு நான் தலைமை வகிக்க வேண்டியவனாக இருக்கிறேன். மேற்கொண்டு அதைப் பற்றிய விவரங்களை நீங்கள் கேள்விப்படுவீர்கள்.

இங்கு ஆரம்பம் நல்ல முறையிலேயே இருக்கிறதென்று தோன்றுகிறது. முடிவை நாம் பின்னர் தெரிந்துகொள்ளலாம். உங்களுடைய அவநம்பிக்கை நியாயமானது என்று நான் நினைக்கவில்லை.

## 215

உருளி-காஞ்சன்,
மார்ச் 25, 1946

முஸ்லிம் லீக் ஒரு விசித்திரமான முறையில் செயல்பட்டு வருகிறது. ஒருபோதும் இரண்டு கூட்டங்கள் நடைபெறுவது முடியாத காரியம். ஒரு கூட்டத்திற்கு லீகே ஏற்பாடு செய்யட்டும். அந்தப் பெருமை அவர்களுக்குக் கிடைப்பதால், தீங்கு எதுவும் ஏற்பட்டுவிடாது. புருஷோத்தமதாசுக்கு நான் எழுதிய கடிதத்தை அவர் உங்களிடம் காட்டுவார். லீகினால் ஏற்பாடு செய்யப்படும் கூட்டம் ஞாயிற்றுக்கிழமை நடப்பதாயின், அன்றே நான் அங்கு வருவது விரும்பத்தக்கதல்லவாயின், தயவு செய்து ஒரு தந்தி கொடுங்கள்.

தந்திகள் இங்கு வருகின்றன. நாம் விரும்பினால் டெலிபோனில் கூட நாம் தொடர்பு வைத்துக்கொள்ளலாம். எனினும் இன்னும் ஆறு நாட்களுக்காக ஏன் அவ்வளவு சிரமம் எடுத்துக்கொள்ளவேண்டும்?

இயற்கை வைத்திய முறையில் எனது அலுவல்கள் மிகவும் முன்னேற்றம் அடைந்து வருகின்றன. அதில் நஷ்டம் ஏற்படும் என்ற பேச்சிற்கே இடமில்லை. எனது மற்ற அலுவல்கள் முன்னேற்றம் அடைவதற்கும் அது உதவியாக இருக்கிறது. என்னிடம் சிறிது மூலதனம் இருந்து அதை நான் உபயோகிக்காவிடில், நான் எவ்வளவு பெரிய முட்டாளாக இருக்கவேண்டும்? ஒருவர் 125 ஆண்டுகள் வரையில் வாழவும், வேலை செய்யவும் இயலுமென நம்பவேண்டும். மற்றப்படி, வாழ்வுக்கும் சாவுக்கும் கடவுள் ஒருவர்தான் எஜமானர்.

பங்கி காலனியில் வசிப்பதுதான் எனது கடமை என்று நான் கருதுகிறேன். அதன் சம்பந்தமான இடையூறுகளை அகற்றுவதில் நாம் வெற்றி பெறவேண்டும்.

# 216

புனு,
*ஜூலை 1, 1946*

நான் செய்ய வேண்டிய அலுவல்கள் தலைக்குமேல் இருக்கின்றன. நேற்று காலை 9 மணிக்கு நான் மௌன விரதத்தை ஆரம்பித்தேன். நான் மந்திரிகளைச் சந்தித்தேன்.

ஜவாஹர்லால் 4-ம் தேதி இங்கு வருகிருர். காரியக் கமிட்டிக் கூட்டத்திற்கு வர வேண்டுமென அவர் என்னை இன்னும் வற்புறுத்திவருகிருர். நான் வருவதாயின், பங்கி காலனியில்தான் நான் தங்கியிருக்கவேண்டும். முன்பு என்னை அழைத்துச் சென்ற இடத்தில் நான் தங்கக்கூடுமாயின் அது சிறந்தது தான். எனினும் அந்த வீடு கிடைப்பதில் தாமதம் ஏற்படுவது இயல்பேயாகும். தயவு செய்து இதையெல்லாம் ஆலோசித்த பின் எது தகுதி என்று உங்களுக்குத் தோன்றுகிறதோ அவ்விதமே செய்யுங்கள்.

அன்ருெரு நாள் நீங்கள் கூறியதை நான் விரும்பவில்லை. அவ்விஷயமாக பியாரிலால் எண்ணியது என்ன என்பதை எழுதி உங்களுக்கு அனுப்பும்படி அவரை நான் கேட்டேன். நான் கூறியதைப் பற்றி நீங்கள் என்ன புரிந்து கொண்டீர்களோ அதுபோல் அவரது விளக்கம் இல்லை. அவர் தாம் நேரில் பார்த்ததையே விவரித்திருந்தார். நான் என்ன கூறினேனே அது அன்றும் இன்றும் மிகவும் முக்கியமானது. அது யாருடைய தவறும் அல்ல. அத்தவறுக்கு சந்தர்ப்பங்களே காரணமாகும். அதைப் பற்றி நீங்களோ அல்லது நானே என்ன செய்ய முடியும்? நீங்கள் உங்களுடைய சொந்த அநுபவத்தை ஆதாரமாகக் கொண்டு நடந்து கொள்கிறீர்கள்; நான் எனது சொந்த அநுபவத்தை ஆதாரமாகக் கொண்டு நடந்து கொள்கிறேன். நீங்கள் செய்துள்ள சில காரியங்களை என்னல் புரிந்து கொள்ளவே இயலவில்லை. உதாரணமாக அத்தகைய காரியங்களில் ஒன்று, தேர்தல்கள் சம்பந்தமான செலவினம் ஆகும். ஐ. என். ஏ. சம்பந்தமாக நீங்கள் செய்ததையும் நான் விரும்பவில்லை. மேலும் காரியக் கமிட்டியில் நீங்கள் கோபமடைந்ததும் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை. அரசியல் நிர்ணய சபைப் பிரச்னை விஷயமாகவும் உங்களுடைய போக்கு, அதற்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல் இருக்கிறது. இதையெல்லாம் ஒரு புகாராக நான் கூறவில்லை; நாம் வெவ்வேறு திசைகளில் சென்று வருகிருேம் என்பதைக் காட்டுவதற்காகவே கூறுகிறேன். இது ஒரு புகார் அல்ல; இதைக் குறித்து நான் வருந்தவுமில்லை. எனினும் உண்மையான நிலவரங்களை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

## சர்தாரின் பதில்

காந்திஜி எழுதிய மேற்கண்ட கடிதத்திற்கு சர்தார் பட்டேல் அனுப்பிய பதில் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

பம்பாய்க்கு வருவதைப்பற்றி நீங்கள்தான் தீர்மானம் செய்ய வேண்டும். ஜவாஹர்லால் உங்களை அழைத்திருப்பதால் நீங்கள் வரவேண்டும் என்று நான் கருதுகிறேன். நீங்கள் வராததைக் குறித்து இப்போதே பத்திரிகைகள் கற்பனைகளில் இறங்கத் தொடங்கியிருக்கின்றன. ஆனால் அது தவிர்க்க முடியாதது,

பியாரிலால் எழுதிய கடிதத்தை நான் பார்த்தேன். நீங்களும் எழுதியிருக்கிறீர்கள். அதைப்பற்றி நான் என்ன சொல்லப் போகிறேன்? என் மீதே தவறு இருக்கலாம், ஆனால் அந்தத் தவறை என்னால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. அவ்விதம் உணர முடியாதது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது.

நீங்கள் செல்லும் பாதையை விட்டுவிட்டு வேறான பாதையில் செல்ல நான் விரும்பவில்லை. தேர்தல்களில் நான் கலந்து கொள்ள வேண்டாம் என்று நீங்கள் நினைத்தீர்கள். ஆனால் நான் கலந்து கொள்ள வேண்டுமென மௌலானாவும் காரியக் கமிட்டியினரும் விரும்பினர். அவர்களுடைய விருப்பத்திற்கு இணங்கவே நான் தேர்தல்களில் கலந்து கொண்டேன். அவ்விதம் கலந்து கொள்ளாவிடில், காங்கிரஸ் தவறு செய்துவிட்டதாகக் கருதப்படும் என்று நான் எண்ணினேன்.

ஜவாஹர்லால் வற்புறுத்தியதன் மீதே நான் ஐ. என். ஏ. கமிட்டியில் கலந்து கொண்டேன். அதுவும் நிவாரண வேலைகளில் தான் கலந்து கொண்டேன். அதில் அரசியல் நோக்கம் எதுவும் இல்லை.

காரியக் கமிட்டியில் நான் சிறிது உஷ்ணமாகப் பேசியிருப்பேனாயின் அதற்குக் காரணம், குற்றம் குறையுள்ள எனது சுபாவமேயாகும். எப்போதாவது ஜவாஹர்லாலும் அவ்விதம் கடுமையாகப் பேசுவது உண்டு. ஆனால் கடுமையான எனது வார்த்தைகளுக்கு வேறு விசேஷமான காரணம் எதுவுமில்லை.

எனது ஆரோக்கியம் நாளுக்கு நாள் மோசமாகிவருகிறது. அவ்விஷயமாக எதுவுமே செய்ய முடியாது என்றே தோன்றுகிறது. இம்முறை டில்லியில் முழு அவநம்பிக்கையும் சந்தேகமும் நிலவும் சூழ் நிலையையே நான் கண்டேன். உஷ்ணம் மிகவும் அதிகமாக இருக்கிறது. நமது ஸ்தாபனத்தில் அந்நியோன்னிய உறவு குன்றியிருக்கிறது. எதிர்காலத்தைப் பொறுத்த மட்டில் அது கடவுளின் சித்தப்படியே இருக்கும். உங்களுடைய ஜாகைக்கான ஏற்பாடுகளை நான் செய்துவருகிறேன்.

## 217

பஞ்சகனி,
ஜூலை, 17, 1946

காஷ்மீர் மகாராஜாவின் பிரசங்கத்தை நான் வாசித்தேன். அது எனக்குத் திருப்தியளிக்கவில்லை. இவ்விஷயமாக ஜவாஹர்லால் அவசரப்படக் கூடாது என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். மகாராஜா விரும்பும்போது ஜவாஹர்லால் அங்கு செல்லுவதுகூடாது. அவர் எப்போது செல்ல வேண்டும் என்பதை நாம்தான் தீர்மானிக்கவேண்டும். காரியக் கமிட்டிகூட அதைப்பற்றி விவாதிக்க வேண்டும். கமிட்டி சிபாரிசு செய்யும் போது ஜவாஹர்லால் அங்கு செல்லவேண்டும். மற்ற எல்லாப் பிரச்னைகளும் சீர்குலைந்து போகும்படி காஷ்மீர் பிரச்னை உபயோகிக்கப்படலாம். அத்தகைய சந்தர்ப்பம் எதுவும் அளிக்கக் கூடாது என்பதே எனது கருத்தாகும். எது செய்வதாயினும், அரசியல் நிர்ணய சபை கூடிய பிறகே செய்யப்பட வேண்டும். மௌலானாவும் நீங்களும் முதலில் அங்கே சென்று, எது சாத்தியம் என்பதைக் கண்டுபிடிக்கவேண்டும் என்று கூட நான் கூறுவேன். மௌலானா, காஷ்மீர் மக்களுக்கு ஓர் அறிக்கை விடுக்கவேண்டியதும் அவசியமாக இருக்கலாம். நம்மால் இயன்ற எல்லா முறைகளையும் நாம் மேற்கொள்ளவேண்டும். நாம் தகுந்த முயற்சிகள் எடுத்துக் கொண்ட பின்னரும் கூட எல்லாம் சீர்குலைந்துவிடுமாயின், அப்படியே நடக்கட்டும். இவ்விஷயத்தில் பொறுமையுடன் கூடிய தீர்க்காலோசனை தேவையாகும். மற்ற விவரங்களைப்பற்றி முன்ஷி உங்களுக்குக் கூறுவார்.

ஜவாஹர்லாலுக்கு நான் எழுதிய கடிதத்தையும் தயவு செய்து பாருங்கள்.

## 218

பஞ்சகனி,
ஜூலை 21, 1946

இப்போது விடியற்காலம் 4 மணி ஆகிறது. ஒரு லாந்தரின் வெளிச்சத்தில் நான் இந்தக் கடிதத்தை எழுதிக் கொண்டிருக்கிறேன். மற்றெல்லோரும் தூங்குகின்றனர். ஐந்து மணிக்கு மின்சார விளக்குகள் எரியத் தொடங்கிய பிறகுதான் அவர்கள் எழுந்திருப்பார்கள். எனவே உங்களுக்கு எழுத இந்தத் துண்டுக் காகிதம் தான் எனக்குக் கிடைத்தது.

எனக்கு உங்களுடைய கடிதங்கள் யாவும் கிடைத்தன. பீமராவை (டாக்டர் பீமராவ் அம்பேத்கார்) நீங்கள் சந்தித்தது நன்மையேயாகும். நீங்கள் கூறும் எதற்கும் அவர் இசைய மாட்

டார். ஒரு ஹரிஜன் அபேட்சகர் சட்ட பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு, ஹரிஜன் வாக்குகளில் குறைந்த அளவு 20 சத விகிதமாவது அவர் ஏன் பெறவேண்டும்? இந்த விதியில் குறைகள் இருப்பதை நான் காண்கிறேன். இதைப் பற்றிச் சிந்தியுங்கள். தேர்தல்களில் ஹரிஜன் அபேட்சகர்களுக்காகச் செலவு செய்ய வேண்டிய தொகை நிர்ணயிக்கப்பட வேண்டும். எல்லாத் தேர்தல்களிலும் ஹரிஜனங்களுக்கு ஒரு குறிப்பிட்ட அளவு ஸ்தானங்கள் இருக்கவேண்டும்.

காஷ்மீரைப் பற்றி மகாராஜாவின் கடிதம் மிகவும் நியாய மானதாகவே இருக்கிறது. நான் கூறிய ஆலோசனையின் விவரங்களை முன்பே உங்களுக்கு அறிவித்திருக்கிறேன். அதன் நகல்களையும் இத்துடன் அனுப்பியிருக்கிறேன்.

பீமராவ் புனாவிற்காவது அல்லது சேவாகிராமத்திற்காவது வந்தால், நான் அவரைப் பார்ப்பேன் என்றே கூறியிருக்கிறேன். எனவே அதன் சம்பந்தமாக பத்திரிகைகளில் வெளியாகியுள்ள செய்தி தவறாகும்.

காங்கிரசின் கையிலிருந்து பல விஷயங்களும் நழுவி வருகின்றன என்றே தோன்றுகிறது. வேலை நிறுத்தம் செய்துள்ள பம்பாய் தபால்காரர்கள் காங்கிரசின் கோரிக்கைக்குச் செவி சாய்க்கவில்லை. கலகங்களில் ஈடுபட்டுவரும் அகமதாபாத் ஹிந்துக்களோ, முஸ்லிம்களோ, ஹரிஜனங்களோ அல்லது முஸ்லிம்களோ காங்கிரசின் வேண்டுகோளுக்குச் செவி கொடுக்கவில்லை. இது ஒரு விசித்திரமான நிலைமையே ஆகும்.

அகமதாபாத்திற்குச் செல்லக் கூடியவாறு உங்கள் உடல் நலம் அபிவிருத்தி அடையவில்லையா? நீங்களே உங்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொண்டுவருகிறீர்கள். நீங்கள் இங்கே வந்திருந்தால் எவ்வளவு அருமையாக இருந்திருக்கும்?

## 219

பஞ்சகனி,
ஜூலை 23, 1946

கோவாவைப் பற்றி நீங்கள் ஓர் அறிக்கை வெளியிடுவது விரும்பத்தக்கதாக இருக்கும். கோவாவிலுள்ள ஏராளமான கட்சிகளைச் சேர்ந்தவர்கள் உங்களுடைய ஆலோசனையை நாடி வருவதாக நீங்கள் அந்த அறிக்கையில் கூறவேண்டும். அத்தனை அதிகமான கட்சிகள் இருப்பது, கோவா மக்களுக்குத் தீங்கையே விளைவிக்கும். அவர்கள் எல்லோரும் சேர்ந்துவந்து, ஒரே குரலில் பேசவேண்டும். அவர்கள் கோவாவிற்கு வெளியிலுள்ளவர்களை நம்பிக் கொண்டிருக்கக் கூடாது. பற்பல அறிக்கைகள் வெளியாவது குழப்பத்தையே உண்டாக்கும். எனவே அதன் சம்பந்தமான எல்லா விவரங்களும் பம்பாய் காங்கிரஸ்

கமிட்டிக்கு அனுப்பப்பட வேண்டும். அவ்வாறு அனுப்பினல் தான் அக்கமிட்டி உத்தியோக தோரணையில் அறிக்கை வெளியிடமுடியும். நீங்கள் அறிந்திருப்பதுபோல், கோவாவில் தற்போது பிரஜா உரிமைப் போராட்டமே நடந்துவருகிறது. அது வெற்றியடைந்துதான் தீரவேண்டும். அதனிடம் இந்தியா முழுவதும் அனுதாபம் காட்டலாம். எனினும் அதன் விளைவாக ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைக் கோவாவிலுள்ள இந்தியர்கள்தான் ஏற்றுக் கொள்ளவேண்டும். இந்தியா சுதந்திரம் அடைந்ததும், அதைத் தொடர்ந்து கோவாவும் விடுதலை பெறும். இந்தியாவின் சுதந்திரத்திற்காக எதுவும் செய்ய வேண்டுமென்று இப்போது கோவா மக்களைக் கேட்கவேண்டியதில்லை.

பீமராவ் சம்பந்தமாக நீங்கள் கூறுவதை நான் உணருகிறேன். இருந்தாலும் அவரை மறுபடியும் சந்தியுங்கள். அவரது பிரசங்கங்கள் கண்ணியமற்றவையாக இருக்கின்றன. அவர் கூறியுள்ள இரண்டு புகார்களுக்குப் பதில் அளிக்க வேண்டும் என்பது ஒரு நல்ல யோசனையே. தேர்தல்களைப் பற்றியோ, சாதி ஹிந்துக்களைப்பற்றியோ என்னிடம் புள்ளிவிவரங்கள் இல்லை. அவை எனக்குக் கிடைக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்.

உங்களுடைய உடல் நிலையைப்பற்றி நீங்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது செய்ய வேண்டும். டின்ஷாவினிடம் உங்களுக்கு நம்பிக்கை இராதது பரிதாபகரமாகும். எனினும் உங்கள் உடல் நிலையைப் பற்றிக் கலந்து ஆலோசிக்க வேறு பல டாக்டர்கள் இருக்கிறார்கள். எப்படியிருந்தாலும், உங்கள் ஆரோக்கியம் மேலும் சீர்குலைவதற்கு நீங்கள் இடம் கொடுக்கக்கூடாது.

அகமதாபாத்தைப் பற்றி நான் நன்கு அறிந்து கொண்டுள்ளேன். அங்குள்ள மக்களே விரும்பாத நிலையில் நாம் அங்கே செல்லுவதென்ற பேச்சிற்கே இடமில்லை.

## 220

பஞ்சகனி,

*ஜுலை 24, 1946*

உங்கள் கடிதம் கிடைத்ததும் நான் அபீத் அலிக்கு (வேலை நிறுத்தத்தைத் தூண்டியதாகக் கூறப்பட்டவர்) எழுதினேன். நமது விருப்பத்துக்கு விரோதமாக எவரும் காங்கிரஸ் மாளிகையில் உட்கார்ந்து கொண்டு உண்ணாவிரதம் இருக்கக்கூடாது.

ஜவாஹர்லாலைப்பற்றி நான் நன்கு அறிந்து கொண்டுள்ளேன். தற்போது எல்லாம் யாதொரு தகராறுமின்றி சுமுகமாக நடைபெற வேண்டும். எதிர்காலத்தில் ஏற்படும் சங்கடங்களை நாம் அப்போதைக்கப்போது சமாளித்து வருவோம். 8-ம்

தேதி வார்தாவில் காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெறுகிற தென்று ஒரு பத்திரிகையில் செய்தி வெளியாகியிருப்பதாக பியாரிலால் கூறுகிறார்.

தபால் சிப்பந்திகள் வேலை நிறுத்தத்தை அடுத்து மற்றொரு வேலை நிறுத்தம் ஆரம்பமாகியிருக்கிறது. இது ஒரு நல்ல அறிகுறி அல்ல என்றே தோன்றுகிறது. இது, உங்களையும் மற்றவர்களையும் தீவிர சிந்தனையில் ஆழ்த்தக் கூடிய ஒரு விஷய மாகும். காங்கிரஸ் மிகவும் தைரியமாக இருப்பதுபோல் காட்டிக் கொள்ளலாம் என்றாலும், மக்களிடம் தனக்குள்ள செல்வாக்கை அது இழந்துவிட்டதென்றே தோன்றுகிறது; அல்லது அந்தத் தொல்லைகளில் காங்கிரசே சம்பந்தப்பட்டிருக்கலாம். இவ் விஷயம் தெளிவாக்கப்பட வேண்டும். இல்லாவிடில் வெற்றி யடையும் தறுவாயில் இருக்கும் நாம் தோல்வியே அடைவோம்.

நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன். இப்போதெல்லாம் இங்கே இருபத்து நான்கு மணி நேரமும் மழை பெய்கிறது.

## 221

பஞ்சகனி,
ஜூலை 27, 1946

நான் முன்பே அபீத் அலிக்கு ஒரு கடிதம் எழுதியிருக் கிறேன். நேற்று முன் தினம் இரவிலாவது அல்லது நேற்று காலையிலாவது அந்தக் கடிதம் அவருக்குக் கிடைத்திருக்க வேண்டும். காங்கிரஸ் மாளிகையை விட்டு அபீத் அலி வெளி யேறாவிடில், அவருக்கு எதிராகக் காங்கிரஸ் அதிகாரிகள் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க வேண்டும். அவ்விதமாக அவர்கள் அவருக்கு 'நோட்டீஸ்' கொடுத்துவிட்டு, அவர் வெளி யேறிச் செல்லும்வரையில் காங்கிரஸ் மாளிகையின் எல்லா அறைகளையும் காலி செய்து பூட்டிவிட வேண்டும். அத்தகைய சத்தியாக்கிரகம் சாத்தியமில்லையாயின், அவர் காங்கிரஸ் மாளி கையைச் சட்ட விரோதமாக ஆக்கிரமித்துக் கொண்டிருப்ப தாகக் கூறி, வெளியேறிவிடும்படி அவரைக் கேட்க வேண்டும்.

5 அல்லது 6-ம் தேதி நான் புனாவுக்குப் புறப்படுகிறேன்; கல்யாண் வழியாக வார்தாவுக்குச் செல்லுகிறேன். எனவே பம்பாய் வரையில் செல்ல வேண்டிய அவசியமில்லை. அதிலும் குறிப்பாக போலீஸ் பாதுகாப்பில் இருந்து கொண்டு என்னை உபசரிப்பவர்களுக்கும் மற்றவர்களுக்கும் நான் ஏன் தொல்லை கொடுக்க வேண்டும்? நான் செய்வதுதான் சரி என்பதை நீங்கள் ஒத்துக் கொள்ளவில்லையா?

எனது அன்பார்ந்த மணி,

எனக்குக் கடிதம் எழுதுவதை நீ ஏன் நிறுத்திவிட்டாய்?'

பாபு

## 222

புனு,
ஜூலை 29, 1946

உங்கள் கடிதம் கிடைத்தது. அதைப் பற்றி தேவும் என்னிடம் கூறினுர். மகாராஷ்டிரப் பிரதேசத்தில் நான் இந்திய மன்னர்களைச் சந்தித்தேன். அவர்களுடன் நான் பேசிக்கொண்டிருந்த விவரங்களைப் பற்றிய சுருக்கமான அறிக்கை தயாரிக்கப்பட்டு வருகிறது. அது தயாரானதும் உங்களுக்கு ஒரு பிரதி அனுப்புகிறேன்.

அபீத் அலியிடமிருந்து ஒரு நீண்ட கடிதம் வந்திருக்கிறது. அவருக்கு நான் இன்று பதில் எழுதுகிறேன். அவர் உண்ணுவிரதத்தை விட்டு விடவேண்டும் என்றும், காங்கிரஸ் மாளிகையை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்றும், அவர் விரும்பினுல், மில் சொந்தக்காரர்களுடன் அவருக்கு ஏற்பட்டுள்ள தகராறை மத்தியஸ்தர்களின் தீர்ப்புக்கு விடலாம் என்றும் நான் யோசனை கூறப்போகிறேன். நாம், பின்னர் என்ன நடக்கிறது என்பதைப் பார்ப்போம்.

தபால் சிப்பந்திகளின் வேலை நிறுத்தம் மோசமான கட்டத்தை அடைந்திருக்கிறதென்று தோன்றுகிறது. காங்கிரஸ் கூறும் யோசனையை ஒப்புக் கொள்ளத் தபால் சிப்பந்திகள் மறுக்கிருர்கள் என்று நீங்கள் ஓர் அறிக்கை வெளியிடவேண்டும்.

உங்களுடைய ஆரோக்கியத்தையொட்டி நீங்கள் உண்மையில் ஏதாவது செய்தாக வேண்டும்.

## 223

புனு,
ஜூலை 31, 1946

உங்களுடைய உடல் நலனைக் குறித்து நீங்கள் அக்கறை எடுத்துக் கொள்ளாமல் இருப்பது நியாயமல்ல.

தாம் உண்ணுவிரதத்தை நிறுத்திவிட்டதாகவும், காங்கிரஸ் மாளிகையிலிருந்து வெளியேறிவிட்டதாகவும், பாய் அபீத் அலி ஒரு கடிதம் எழுதியிருக்கிருர். அவரது கடிதத்தில் இனிமையும் நியாயமும் ததும்புகிறது!

இன்று கவர்னரை நான் சென்று பார்க்கவேண்டும். மரியாதைக்காகவே அவர் என்னை அழைத்திருக்கிருர் என்று தெரிகிறது.

## 224

புனா,
ஆகஸ்டு 1, 1946

உங்கள் கடிதத்திலுள்ள முழு விவரங்களுக்கும் நான் பதில் அளிக்க இயலாதவனாக இருக்கிறேன். அதிலுள்ள முக்கிய விஷயம் அம்பேத்காரைப் பற்றியதே. அவருடன் எத்தகைய ஒப்பந்தம் செய்து கொண்டாலும் அதில் அபாயம் இருக்கிறது என்றே நான் நினைக்கிறேன். உண்மைக்கும் பொய்க்கும் இடையே அல்லது பலாத்காரத்திற்கும் அகிம்சைக்கும் இடையே யாதொரு வேற்றுமையையும் தாம் காணவில்லை என்று தெளிவாகக் கூறும் ஒருவருடன் என்ன ஒப்பந்தம் செய்து கொள்ள முடியும்? அவரது கொள்கை ஒன்றே ஒன்றுதான்: அதாவது தமது நோக்கம் நிறைவேற எத்தகைய முறையாயினும் அதை மேற்கொள்ளுவதே யாகும். கிறிஸ்தவராகவோ, முஸ்லிமாகவோ அல்லது சீக்கியராகவோ தமது மனம் போனவாறு மதம் மாறவும், பின்னர் மறுபடியும் ஹிந்து மதத்துக்கு மாறவும் தயாராக இருக்கும் ஒரு மனிதரிடம் நாம் மிக மிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இதே ரீதியில் அவரைப் பற்றி என்னால் எவ்வளவோ எழுத முடியும். அவரது கூற்றெல்லாம் ஒரு வலையாகவும், வஞ்சகமாகவுமே எனக்குத் தோன்றுகிறது. மேலும், ஒவ்வொரு ஹரிஜன் அபேட்சகரும் ஹரிஜன் வாக்குகளில் குறைந்த அளவு 20 சதவிகிதமாவது பெறவேண்டுமென அவர் தற்போது வற்புறுத்துவது அவசியமல்ல. மாகாணங்களில் ஓரளவு சுயாட்சி ஏற்பட்டிருப்பதுபோல மத்திய சர்க்காரிலும் ஏற்படுமாயின், சாதி ஹிந்துக்களும் உண்மையாக நடந்து கொள்வார்களாயின், எல்லாம் நலமாகவே இருக்கும். ஆனால் நியாய புத்தி படைத்தவர்களின் தொகை குறைவாக இருந்து, வெறியர்களின் கைக்கு நிர்வாக அதிகாரம் மாறிவிடுமாயின், இன்று நீங்கள் என்ன ஒப்பந்தங்கள் செய்து கொண்டாலும், அநீதிதான் தாண்டவமாடும்.

இப்போது நீங்கள் விரும்பும் எத்தகைய ஏற்பாடுகளை வேண்டுமாயினும் நீங்கள் செய்யலாம். ஆனால் ஹரிஜனங்களை அடிப்பவர்களும், கொலை செய்பவர்களும், பொதுக் கிணறுகளை அவர்கள் உபயோகிக்க முடியாமல் தடுப்பவர்களும், பள்ளிக்கூடங்களிலிருந்து அவர்களை வெளியே விரட்டுபவர்களும், தங்கள் வீடுகளில் அவர்கள் பிரவேசிக்கக்கூடாதென்று தடுப்பவர்களும் யார்? அவ்விதமெல்லாம் செய்வோர் காங்கிரஸ்காரர்கள் அல்லவா? தற்போதுள்ள இந்த நிலைமையை உணர்ந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். எனவே நீதி வழங்குவதில் காங்கிரசுக்கு உள்ள சக்தியும் நேர்மையும்தான் முக்கியமேயன்றி, நீங்கள் குறிப்பிடுவது போன்ற ஒப்பந்தங்கள் அவ்வளவு முக்கியமானவை அல்ல என்றே நான் கூறுவேன். நான் கூறுவது,

வனாந்தரத்தில் கூக்குரலிடுவதுபோல் யாருடைய செவியிலும் விழாமற்போகலாம். எனினும் அத்தகைய வழியையே நான் விரும்புகிறேன். ஆகையால், முஸ்லிம் லீகிற்குப் பயந்து நாம் அம்பேத்காருடன் சமரசம் செய்து கொள்ள முற்பட்டால், இரு முனைகளிலும் நாம் தோல்வியுறும்படி நேரலாம்.

நான் இங்கிருந்து 5-ம் தேதி நிச்சயமாகப் புறப்பட்டு, மறு நாள் வார்தா பேய்ச் சேருவேன். பம்பாய்க்குச் செல்லுவதில்லை என்று நான் தீர்மானித்திருப்பதைப் பற்றி முன்பே உங்களுக்கு எழுதியிருக்கிறேன். ஆனால் அதை நான் மாற்றிக் கொள்ளவேண்டுமென நீங்கள் விரும்பினால், தாராளமாக அதை என்னிடம் சொல்லுங்கள். அப்படியாயின் நான் சில மணிநேரம் வரையில் ரயில் வண்டி ஒன்றில் தங்க வேண்டியிருக்கும். அவசியமாயின் நீங்கள் அங்கே வந்து என்னைப் பார்க்கலாம். எனினும் உங்கள் உடல் நலனுக்குக் குந்தகமாக இருக்குமாயின், நீங்கள் வரக்கூடாது. கடிதப் போக்குவரத்தின் மூலம் நாம் சமாளிக்க முடியாத விஷயம் எதுவும் இல்லை. எப்படியிருந்தாலும் நீங்கள் 8-ம் தேதி வார்தாவுக்கு வருகிறீர்கள். நீங்கள் விரும்பினால் ஒரு நாள் முன்னதாகவே வரலாம்.

வேலை நிறுத்தம் செய்துள்ள தபால் சிப்பந்திகள் அக்கிரமமான முறைகளைக் கைக்கொள்வார்களாயின், நாம் அவற்றைப் பகிரங்கமாகக் கண்டிப்பது முற்றிலும் நியாயமேயாகும்.

(இந்தக் கடிதம் புது டில்லிக்கு அனுப்பப்பட்டது.)

## சர்தாரின் பதில்

68, மாரின் டிரைவ்,<br>
பம்பாய்,<br>
ஆகஸ்டு 2, 1946

நீங்கள் பம்பாய்க்கு வராமல் நேராக வார்தாவுக்குச் செல்லுவதே சிறந்தது. நான் 6-ம் தேதி மாலை மெயிலில் இங்கிருந்து புறப்பட்டு 7-ம் தேதி காலையில் அங்கு வருகிறேன்.

அதற்கு முன் நான் வரமுடியாது. ஏனெனில் பஞ்சாபிலிருந்து சீக்கியர்கள் இங்கு வருகிறார்கள். நான் அவர்களை 5-ம் தேதி சந்திக்க வேண்டும்.

முஸ்லிம்களிடம் பயந்து கொண்டு நான் அம்பேத்காருடன் சமரசத்திற்கு முயற்சிக்கவில்லை. காங்கிரசை ஆதரிக்கும் ஹரிஜனங்களே பின்னர் ஒரு நாள் கேட்கப் போகும் சலுகையை இப்போதே அம்பேத்காருக்கு அளித்துவிட்டு, அவரை நம் பக்கம் சேர்த்துக் கொள்வதே புத்திசாலித்தனமாகுமென நான் நினைக்கிறேன். அவரை நம்பலாமா என்பது அவ்வளவு முக்கியமான

தல்ல. அவர் தாம் அளித்த வாக்குறுதியின்படி நடந்து கொள்ளாவிடில், அவர் தமக்குத் தாமே தீங்கு விளைவித்துக் கொண்டவராவார். 20 சதவிகிதம் ஹரிஜனங்களின் வாக்குகளைப் பெற்ற அபேட்சகர்கள் மாத்திரம்தான் சட்ட பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்று கருதப்படுவார்களாயின், அதனால் அவருக்கு விசேஷ லாபம் எதுவும் இல்லை. அவரது மத மாற்றத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் வந்த செய்திகள் அவரிடமிருந்து வரவில்லை. அது போன்ற யோசனைகள் அரசியல் நிர்ணய சபையில் விவாதத்துக்கு வரப்போவது நிச்சயம். சாப்ரு அறிக்கையும் அத்தகைய சிபாரிசுகளைச் செய்திருக்கிறது. எனவே அதில் அபாயம் எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள் என்பதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை.

சாதி ஹிந்துக்களின் மீதுதான் குற்றம் என்பதில் சந்தேகமில்லை. எனினும் அதைச் சீர்படுத்துவதற்காக நாம் செய்யக் கூடிய எதற்கும் இது தடையாக இருக்கவில்லை. பம்பாய் மாகாணத்தில் மஹார்களின் (ஹரிஜனங்களில் ஒரு பிரிவினர்) ஜனத்தொகை அதிகமாகும். அவர்களுக்கு அம்பேத்கார் பிரதிநிதியாக விளங்குகிறார். மற்ற இடங்களில் ஹரிஜனங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சலுகைகளால் அவருக்கு எவ்வித லாபமும் இல்லை. இதைப் பற்றிச் சிந்தியுங்கள்.

தபால் சிப்பந்திகளின் வேலை நிறுத்தம் வாபசாகிவிட்டது.

## 225

உருளி-காஞ்சன்,
ஆகஸ்டு 2, *1946*

வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்களில் தமது மில்லில் உள்ள ஒரு தொழிலாளி கத்தியால் குத்தப்பட்டதாயும், மற்றவர்கள் அடித்துத் துன்புறுத்தப்பட்டதாகவும் ராதாகிருஷ்ண எழுதியுள்ளார். இந்தப் புகாரைப் பற்றி நான் அபீத் அலிக்குக் கடிதம் எழுதியிருக்கிறேன். அக் கடிதத்தின் நகல் ஒன்றையும் இத்துடன் இணைத்திருக்கிறேன். இந்தப் பலாத்காரம் தொடர்ந்து நடைபெறுமாயின், மில் சொந்தக்காரருக்கு அவரது மில்லை மூடிவிடுவதைத் தவிர வேறு வழி இராது; விஷமிகள் தீ வைக்காமலும், மில்லுக்கு வேறு விதத்தில் சேதம் விளைவிக்காமலும் தடுப்பதற்கான முறைகளையும் அவர் எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும்.

(இந்தக் கடிதமும், அடுத்த இரண்டு கடிதங்களும் பம்பாய்க்கு அனுப்பப்பட்டன.)

அபீத் அலிக்கு காந்திஜீ எழுதிய கடிதத்தின் நகல் பின் வருமாறு:

பாய் கெய்தான் 31-ஆம் தேதி என்னை வந்து பார்த்தார். அவர் ஏதாவது புகார் கூறவிரும்பினால், ஒரு மத்தியஸ்தரிடம் கூறவேண்டும் என்றும், பாய் பீம்ஜியிடமிருந்தும், அல்லது அபீத் அலியிடமிருந்தும் கூட அந்த மத்தியஸ்தர் புகார்களை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும் நான் அவருக்கு யோசனை கூறினேன். இதுதான் நாகரிகமான நீதி நெறியாகும்.

நீதி பெறுவதற்குரிய சாதாரணமான எல்லா வழிகளும் தடுக்கப்பட்டு, நீதியின் ஸ்தானத்தில் சர்வாதிகார ஆதிக்கம் ஏற்படும்போதுதான், ஒரு சத்தியாக்கிரகி வேலை நிறுத்தமோ அல்லது வேறு விதமான சத்தியாக்கிரகமோ செய்ய வேண்டும்.

கெய்தான்ஜியிடமிருந்து இன்று எனக்கு ஒரு கடிதம் கிடைத்திருக்கிறது. வேலை நிறுத்தம் செய்திருப்போர் ஒரு தலைமைக் குமாஸ்தாவை அடித்து மண்டையில் காயம் ஏற்படும்படி செய்ததாயும், மற்றும் பல தொழிலாளர்கள் காயமடைந்ததாயும், அவர் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். வேலை நிறுத்தத் தொழிலாளர்கள் மீண்டும் வேலைக்குத் திரும்பவில்லை என்றும் அவர் கூறியிருக்கிறார்.

அவ்விதம் நடந்திருக்குமாயின், அது நல்லதல்ல. வேலை நிறுத்தம் செய்திருப்போர் உங்களுடைய கட்டுப்பாட்டில் இருக்கிறார்கள். எனவே அவர்கள் அத்துமீறிய அத்தகைய செயல்களில் ஈடுபடாமல் பார்த்துக் கொள்ளவேண்டியது கடமையாகும். நீங்கள் கூறவேண்டியது ஏதாவது இருக்குமாயின், அவ்விஷயமாக சர்தார் வல்லபாய் பட்டேலைப் பார்க்கும்படி நான் உங்களுக்கு யோசனை கூறுகிறேன்.

## 226

உருளி,
ஆகஸ்டு *3, 1946*

அதில் எதுவும் அபாயம் இருப்பதாக நீங்கள் கருதவில்லையாயின், நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. எனவே பீமராவுடன் செய்துகொள்ளவேண்டிய ஒப்பந்தத்தைத் தயார் செய்யுங்கள்.

நீங்கள் 7-ஆம் தேதி இங்கு வருவதை ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

## 227

சேவாகிராமம்,
ஆகஸ்டு *16, 1946*

நீங்கள் உங்களுடைய ஆரோக்கியம் சீர் குலையாமல் பார்த்துக் கொள்வீர்களாயின், நீங்கள் தேசத்துக்குச் செய்யும்

தொண்டின் ஓர் அம்சமாகவே அதை நான் கருதுவேன். ஆனால் நீங்கள் எங்களுடைய சர்தார் (தலைவர்). எனவே உங்களுக்கு யார் கட்டளையிட முடியும்?

## 228

வால்மீகி மந்திர், புது டில்லி,
திங்கட்கிழமை, செப்டம்பர் 2, *1946*

இன்று காலை பிரார்த்தனை நடந்ததிலிருந்து உங்களைப் பற்றியே நான் சிந்தித்து வருகிறேன். உப்பு வரியை ரத்து செய்யுங்கள்; தண்டி யாத்திரையை நினைவுபடுத்திக் கொள்ளுங் கள்; ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒன்று சேருங்கள்; தீண்டாமையை ஒழியுங்கள்; கதரை சர்க்காருக்குச் சொந்தமான தாகச் செய்யுங்கள்.*

## 229

காந்திஜி புது டில்லியில் இருந்தபோது *10-10-1946*-ல் ஒரு காகிதத்தில் பின்வருமாறு எழுதிக்கொடுத்தார்:

வானொலி மூலம் நான் தேசத்திற்குச் செய்தி விடுக்க வேண்டும் என்பது பலனற்ற ஒரு யோசனையாகும். உண்மை யான ஏழைகள் ஒருபோதும் ரேடியோ கேட்பதில்லை. எனவே அவ்விதம் செய்தி விடுப்பதில் எனக்குச் சிறிதும் உற்சாக மில்லை.

## 230

சோட்பூர்,
நவம்பர் 5, *1946*

ஜவாஹர்லாலுக்கு நான் எழுதிய கடிதத்தின் நகல் இத் துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. தயவு செய்து அதை வாசி யுங்கள். அதைக் காட்டிலும் அதிகமாக நான் எதுவும் சொல்லு வதற்கில்லை. அத்தகைய முறையை நான் ஏன் மேற்கொள்ளக் கூடாது என்பதற்கு ஏதாவது காரணங்கள் இருந்தால், எனக் குத் தெரிவியுங்கள். இது, நீங்கள் முன்பு நேரில் பார்த்த

---

*விசுவாசப் பிரமாணம் செய்து இடைக்கால சர்க்கார் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளுமுன் சர்தார் வல்லபாய் பட்டேலும் மற்ற மந்திரிகளும் திங்கட்கிழமை காந்திஜியைப் பார்க்கச் சென்றனர். அன்று காந்திஜியின் மௌன தினமாதலால், காந்திஜி எழுதிக் கொடுத்த மேற்கண்ட 'கட்டளை' அவர்களிடம் வாசித்துக் காண்பிக்கப்பட்டது.

உண்ணுவிரதங்களைப் போன்றதல்ல. எனினும் அந்த உண்ணுவிரதங்களுக்கும் இதற்கும் அதிக வேற்றுமை இல்லை.

இந்தக் கடிதத்தை, ராஜாஜி, தேவதாஸ், மௌலானு சாகிப் முதலிய மற்றவர்களிடமும் தயவு செய்து காட்டுங்கள்.

என் பக்கத்தில் இருக்க வேண்டும் என்று யாரும் கல்கத்தாவுக்கு ஓடிவர வேண்டாம். என்னைக் கவனித்துக் கொள்ள இங்கே பலர் இருக்கின்றனர். இந்தியாவில் முற்றிலும் அமைதி நிலவினுல்தான், தொடர்ந்து என்னுல் உயிர் வாழ முடியும். அதற்காக உங்களால் இயன்றதையெல்லாம் நீங்கள் செய்வீர்கள் என்பது நிச்சயம். எனது மரணத்தைப் பற்றிய ஜோசியத்தைக் குறித்து வற்புறுத்தாதீர்கள். எனினும் நான் தவறு செய்திருந்தால், நான் இறக்கும்படி விட்டுவிடுவதில் தீங்கு எதுவும் இருக்க முடியாது என்று கூறுங்கள். நான் ஆனந்தமாகவே இருக்கிறேன்.

## ஜவாஹர்லாலுக்கு எழுதிய கடிதம்

கல்கத்தா,
நவம்பர் 5, 1946

பீகாரிலிருந்து வந்துள்ள கெட்ட செய்தி எனக்கு கவலையைக் கொடுத்திருக்கிறது. எனது கடமை எனக்கு முற்றிலும் தெளிவாகத் தெரிகிறது. எனக்கு பீகாருடன் மிகவும் நெருங்கிய தொடர்புகள் உண்டு. நான் கேள்விப்படுவதில் பாதி உண்மையாக இருந்தால் கூட, பீகார் மனிதத் தன்மையையே இழந்து விட்டது என்பதை அறிந்து கொள்ளலாம். அங்கே நிகழ்ந்த சம்பவங்களுக்கெல்லாம் துஷ்டர்கள்தான் பொறுப்பாளியாவர் என்று கூறுவது முற்றிலும் உண்மையல்ல. நான் எவ்வளவோ முயற்சி செய்தும் கூட, இந்த உண்ணுவிரதத்தைக் கைவிடுவது சாத்தியமாக இல்லை. நான் பாலும் பருப்புவகைகளும் சாப்பிடுவதை நிறுத்தி இன்று ஏழு நாட்கள் ஆகின்றன. இருமல், உடலில் ஏற்பட்ட சிறிய கொப்புளங்கள் காரணமாகவே இந்த அரைகுறை உண்ணுவிரதத்தை நான் மேற்கொண்டேன். எனினும் அதே சமயம் எனக்கு வாழ்க்கையும் சலித்துவிட்டது. இதன் மத்தியில், பீகாரில் நிலைமை மிகவும் மோசமாகியது. என் உள்ளேயிருந்து ஒரு குரல் என்னை இவ்விதம் கேட்டது: "இந்தப் படுகொலையை நீ திக்கற்ற நிலையில் ஏன் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்? நீ கூறுவது பட்டப்பகலைப் போல் தெளிவாக இருக்கிறது. அப்படியிருந்தும் கூட உன் வார்த்தைகளுக்கு யாரும் செவி சாய்க்காவிடில், உன் வேலை முடிந்து விட்டது. பின்னர் நீ ஏன் சாகக் கூடாது?''

இத்தகைய வாதமே, யாரும் தடுக்கமுடியாதவாறு என்னைச் சாகும் வரையில் உண்ணுவிரதம் இருப்பதில் கொண்டுபோய்

விட்டது. பீகாரிலும், மற்ற மாகாணங்களிலும் நடைபெற்று வரும் கொலைகள் நிற்காவிடில், சாகும்வரை உண்ணுவிரதம் இருக்கும் நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டுவிடும் என்று நான் பகிரங்கமாக ஒரு அறிக்கை வெளியிட விரும்புகிறேன்.

இதன் மத்தியில் குறைந்த அளவு உணவையே நான் தொடர்ந்து சாப்பிட்டு வருவேன். சாகும் வரை உண்ணுவிரதம் ஒரு வேளை தாமதமாக மேற்கொள்ளப்படலாம். டில்லியில் ஒரு சமயம் நீங்கள் உண்ணுவிரதத்தைப் பற்றி என்னைக் கேட்டீர்கள். 'தற்போது அத்தகைய எண்ணம் எதுவும் எனக்கு இல்லை' என்று நான் உங்களிடம் கூறினேன். ஆனால் நிலைமை இப்போது மாறிவிட்டது. எனினும் உண்ணுவிரதத்தை நிறுத்தும் படி என்னை வற்புறுத்த நீங்கள் விரும்பும் எதையும் என்னிடம் கூறலாம். அது என் மனத்திற்குத் திருப்தியளிக்குமாயின், சாகும் வரை உண்ணுவிரதம் என்ற எண்ணத்தை நான் விட்டு விடுகிறேன். நான் மேற்கொள்ள உத்தேசித்திருக்கும் நட வடிக்கையை நீங்கள் அங்கீகரிப்பீர்கள் என்றே நான் நினைக் கிறேன். ஏனெனில் நான் எப்படிப்பட்டவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். என்ன நேர்ந்தாலும், நீங்கள் எல்லோரும் உங்களுடைய கடமையைத் தொடர்ந்து செய்து வரவேண்டும் என்பதே, எப்போதும் நான் கூறும் யோசனையாகும். என் னுடைய மரணத்தைப் பற்றிய சிந்தனைகளில் நீங்கள் ஒரு விநாடிகூட செலவு செய்யக்கூடாது. நீங்கள் கவலையை உதறித் தள்ளிவிட்டு, என்னைக் கடவுளின் கையில் ஒப்படைத்துவிட வேண்டும்.

நீங்கள் இந்தக் கடிதத்தை பீகார் மந்திரி சபையினரிடம் காட்டலாம். இந்த பீகார், விரஜகிஷோர் பிரசாதின் காலத்தில் இருந்த பீகாரைப்போல இருக்க முடியுமா?

(இந்தக் கடிதமும், பின் வரும் எல்லாக் கடிதங்களும், சர்தார் புது டில்லியில் இருந்தபோது அனுப்பப்பட்டவை.)

## 231

தத்தபரா, (நோவாகாலி),
நவம்பர் *14, 1946*

நான் இந்தக் கடிதத்தை 'சிரஞ்சீவி' என்று ஆரம்பித் தேன். எனவே அது அப்படியே இருக்கட்டும்.

ஆச்சாரியா (கிருபளானி) என்னிடம் எல்லாவற்றையும் கூறினர். எனது கருத்துகளை நான் ஜவாஹர்லாலுக்கு அறி வித்திருக்கிறேன். நீங்களும் அவற்றைத் தெரிந்து கொள்ளுங்கள். மேராத்தில் காங்கிரஸ் கூடுவதைப் பற்றி எவ்வளவுக்கு அதிக மாக நான் சிந்திக்கிறேனே அவ்வளவுக்கு அதை நான் அதிக

மாக எதிர்க்க வேண்டுமென்றே தோன்றுகிறது. இப்போது காங்கிரஸ் கூட்டத்தை நடத்தாமல் இருப்பதே மிகமிக புத்திசாலித்தனமாகும். எனினும் நடத்தித் தீரவேண்டும் என்று நீங்கள் கருதினுல், புது டில்லியில் அக் கூட்டத்தை நடத்துங்கள்.

இவ் வருடத்திற்கு கிருபளானி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதால், அவ்விஷயமாக இறுதியான முடிவுக்கு வரும் பொறுப்பை அவரிடம் விட்டுவிட வேண்டியது நமது கடமையாகும். எனினும் ஒவ்வொருவரும் அதன் சம்பந்தமாகத் தமது அபிப்பிராயத்தைக் கூறவேண்டும். காங்கிரஸ் கூட்டம் ரத்து செய்யப்பட்டால், அவரது பிரசங்கம் அச்சடிக்கப்படவும் வாசிக்கப்படவும் வேண்டும். உங்கள் முன் பல பிரச்னைகள் இருக்கின்றன. அவற்றைத் தீர்க்க உங்களுக்கு அமைதியும், நேரமும் தேவையாகும். இப்போது தவறு நேர்ந்துவிட்டால், அதன் விளைவாக மிகுந்த கஷ்ட நஷ்டங்கள் ஏற்படும்.

நான் இந்த இடத்தை விட்டு வருவது சிறிதும் இயலாத காரியம். எதைப்பற்றியாவது என்னுடன் கலந்து ஆலோசிக்க வேண்டியது அவசியமாயின், யாராவது இங்கு வந்து என் அபிப்பிராயத்தைக் கேட்கவேண்டும். அது ஒன்றுதான் வழி. உண்மையில் என்னைக் கேள்விகள் கேட்கவேண்டிய அவசியமே இல்லை. நான் கூறவேண்டியதையெல்லாம் கூறியிருக்கிறேன், செய்ய வேண்டியதையெல்லாம் செய்திருக்கிறேன். ஒருவேளை இந்த நோவாகாலி அத்தியாயம் என்னுடைய கடைசி அத்தியாயமாக இருக்கலாம். இதில் நான் உயிர் பிழைத்து வந்தால், அது எனக்கு ஒரு புதிய பிறப்பாகவே இருக்கும். என்னுடைய அகிம்சை இதற்கு முன் ஒருபோதும் இராத விதத்தில் இங்கே சோதனைக்கு உள்ளாகி வருகிறது.

## 232

ஸ்ரீராம்பூர்,
டிசம்பர் 4, 1946

அரசியல் நிர்ணய சபையைப் பற்றி எனது கருத்துகள் அடங்கிய ஓர் அறிக்கையை இத்துடன் நான் இணைத்திருக்கிறேன். தயவு செய்து அதை நீங்கள் வாசித்து, தகுதியான முறையில் என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்களோ அப்படிச் செய்யுங்கள். ஜவாஹர்லால் வராதது ஒரு பெரிய இடையூருக இருந்து வருகிறது. இவ்விஷயத்தில் எனக்கு மிகவும் திட்டவட்டமான கருத்துகள் உண்டு. அரசியல் நிர்ணய சபையை நிராகரிப்பது, நிச்சயமாக நம்முடைய பலவீனத்தைக் காட்டுவதாகாது. அந்தந்த நிலைமைக்குத் தக்கவாறு நடந்து கொள்வது பலவீனமாகாது. எனினும் எனது நிலை முற்றிலும் தவருக இருக்கலாம்.

## 1

## அறிக்கை

அரசியல் நிர்ணய சபையை முஸ்லிம் லீக் பகிஷ்காரம் செய்யுமாயின், மே 16-ம் தேதி பிரிட்டிஷ் மந்திரி சபைக் கோஷ்டி வெளியிட்ட அறிக்கையின் * கீழ் அரசியல் நிர்ணய சபை கூடுவது முடியாத காரியம் என்பதே எனது தெளிவான அபிப்பிராயமாகும். பெரிய கட்சிகள், அதாவது காங்கிரசும் முஸ்லிம் லீகும் ஒத்துழைக்க வேண்டும் என்று அந்த அறிக்கை தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது. எனவே அந்தக் கட்சிகளில் ஒன்று தனது பகிஷ்காரத்தைப் பிரகடனம் செய்யுமாயின், நியாயமாக அறிக்கையை அடிப்படையாகக் கொண்டு அரசியல் நிர்ணய சபை கூடுவது முடியாத காரியமாகும். பகிஷ்காரத் தைப் பொருட்படுத்தாமல் அரசியல் நிர்ணய சபையை அர சாங்கம் கூட்டுமாயின், நியாயமாக வேறு ஏதாவதொரு அறிக் கையை அடிப்படையாகக் கொண்டே அவ்விதம் செய்யமுடியும். காங்கிரசையும் கலந்து கொண்டு அரசாங்கம் அத்தகைய அறிக்கை ஒன்றைத் தயாரிக்க வேண்டும். காங்கிரஸ் எவ்வளவு சக்தி வாய்ந்த ஸ்தாபனமாயினும், இன்று உத்தேசிக்கப் பட்டுள்ள அரசியல் நிர்ணய சபை பிரிட்டிஷ் சர்க்கார் மேற் கொள்ளும் நடவடிக்கையின் மூலம்தான் கூட முடியும்.

பகிஷ்காரத்தை லட்சியம் செய்யாமல் பிரிட்டிஷ் சர்க் காரின் மனப்பூர்வமான ஒத்துழைப்பின் மீது அரசியல் நிர்ணய சபை கூடினாலும்கூட, இந்திய சிப்பாய்களாக இருப்பினும் அல்லது ஐரோப்பிய சிப்பாய்களாக இருப்பினும், பிரிட்டிஷ் படைகளின் நேரடியான அல்லது மறைமுகமான பாதுகாப்பின் கீழ் கூடும். அத்தகைய சூழ் நிலையில் நாம் ஒரு காலத்திலும் திருப்திகரமான அரசியலை உருவாக்க முடியாது என்பதே எனது அபிப்பிராயமாகும். நாம் ஒப்புக்கொண்டாலும், ஒப்புக் கொள்ளாவிட்டாலும், அத்தகைய நிலையில் நமது பலவீனத்தை அகில உலகமும் உணர்ந்து கொள்ளும்.

அத்தகைய நிலையில் அரசியல் நிர்ணய சபை கூடாவிட் டால், காயிதே ஆஜம் ஜின்னாவுக்கோ அல்லது முஸ்லிம் லிகிற்கோ அடி பணிந்ததாக ஆகும் என்று கூறப்படலாம். அத்தகைய குற்றச்சாட்டை நான் பொருட்படுத்தவில்லை. ஏனெ னில், அவ்விதம் விட்டுக் கொடுப்பது பலவீனமான ஒரு செய லாக இராது. அது, காங்கிரசின் பலத்தைக் காட்டும் ஒரு செயலாகவே இருக்கும்; அது உண்மைக்கும் நியாயவாதத் திற்கும் ஒத்ததாக இருக்கும். பிரிட்டிஷ் சர்க்காரை எதிர்

---

* பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டியினர் 16-5-1946-ல் வெளியிட்ட அறிக்கையின் முழு விவரங்களையும் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

பார்த்துக் கொண்டிராமலேயே நம்முடைய சொந்த அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும் அந்தஸ்தும் பலமும் நமக்கு இருக்குமாயின், அதுதான் சிறந்தது. அப்போது நாம் முஸ்லிம் லீக், மற்றக் கட்சிகள், மன்னர்கள் ஆகிய எல்லோருடைய ஒத்துழைப்பையும் நாடவேண்டியிருக்கும். பின்னர் சிலர் அதில் கலந்து கொள்ளாவிட்டால்கூட, சாதகமான ஓர் இடத்தில் அரசியல் நிர்ணய சபையைக் கூட்ட முடியும். காங்கிரஸ் மாகாணங்களும், மன்னர்களும் மாத்திரம் அதில் கலந்துகொள்ள அக்கறை கொள்ளலாம். இவ்விதம் செய்வது கண்ணியமாகவும், உண்மைக்கு முற்றிலும் உடன்பட்டதாகவும் இருக்கும்.

## 2

பிரிட்டிஷ் சர்க்கார் வெளியிட்டுள்ள அறிக்கை சம்பந்தமாக நாம் மேற்கொள்ளும் கொள்கை, பின்வரும் விதத்தில் இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன்:

வேறு ஒப்பந்தம் எதுவும் இராத நிலையில், அந்தந்தப் பிரிவுகளில் உள்ள பெரும்பான்மையோரின் வாக்குகளைக் கொண்டே முடிவு செய்ய வேண்டும் என்பது தங்களுடைய நோக்கம் என்று பிரிட்டிஷ் சர்க்கார் எப்போதும் கூறிவந்திருக்கிறார்கள். இந்த விளக்கத்தை காங்கிரஸ் ஒப்புக் கொள்ளாவிட்டால், அப் பிரச்னையை பெடரல் கோர்ட்டின் தீர்ப்புக்கு விட்டுவிட வேண்டுமென அவர்கள் (பிரிட்டிஷ் சர்க்கார்) யோசனை கூறியிருக்கிறார்கள். பெடரல் கோர்ட்டின் தீர்ப்பு பிரிட்டிஷ் சர்க்காரின் விளக்கத்திற்கு மாறாக இருக்குமாயின், நிலைமையை மீண்டும் அடியோடு மறு பரிசீலனை செய்வதாக அவர்கள் (பிரிட்டிஷ் சர்க்கார்) பண்டித நேருவின் முன்னிலையில் ஸ்ரீ ஜின்னாவுக்கு உறுதி கூறியிருக்கிறார்கள்.

அவர்கள் கூறியுள்ள இரண்டாவது யோசனை இதுதான்: ஒன்று அவர்களுடைய விளக்கத்தை காங்கிரஸ் இப்போது ஒத்துக் கொள்ளவேண்டும்; அல்லது அரசியல் நிர்ணய சபையில் பிரிவுகளை நிர்ணயிப்பதற்கு முன் பெடரல் கோர்ட்டின் தீர்ப்பை நாட காங்கிரஸ் முற்படவேண்டும்.

அவர்களுடைய நோக்கம் என்னவெனில், இந்தப் பிரச்னை தீர்ந்த பிறகுதான், அச்சபையில் கலந்து கொள்வதா, வேண்டாமா என்பதை முஸ்லிம் லீக் தீர்மானிக்கும் என்பதேயாகும். ஆனல் நான் இந்த யோசனையை ஒப்புக் கொள்ளமாட்டேன். அரசியல் நிர்ணய சபை ஒரு குஸ்தி மேடையாக மாறிவிடக் கூடாது என்பதே காங்கிரசின் கருத்தாகும். விவாதத்திற்கிடமான விஷயங்களையொட்டி சாத்தியமானவரையில் ஏக மனதான தீர்மானத்திற்கு வர அது முயற்சிக்க வேண்டும். இது மிகவும் முக்கியமாகும். எந்தக் கட்சியாயினும், ஒரு பிரச்னையை பெடரல் கோர்ட்டுக்குக் கொண்டுபோகுமுன், அரசியல் நிர்ணய சபைப்

பிரிவுகளின் கூட்டங்களில் சாங்கோபாங்கமாக அதை விவாதித்து ஒரு சமரசம் செய்து கொள்வதற்கான சாத்தியமான எல்லா முறைகளையும் கைக்கொள்ளவேண்டும். மற்றொரு புறம் முஸ்லிம் லீகின் நிலை என்னவெனில், மே 16-ம் தேதி மந்திரி சபைத் தூது கோஷ்டி வெளியிட்ட அறிக்கையில் அடங்கியுள்ள திட்டத்தை அது (முஸ்லிம் லீக்) நிராகரித்துவிட்டது. எனவே சர்க்கார் திட்டத்தை நிராகரித்து நிறைவேற்றிய தீர்மானத்தை முஸ்லிம் லீக் சபை முதலில் மாற்றிக் கொள்ளவேண்டும்; பின்னர் மந்திரி சபைக் கோஷ்டியினரால் உத்தேசிக்கப்பட்டுள்ள அரசியல் நிர்ணய சபையுடன் ஒத்துழைக்க இணங்க வேண்டும்

பிரிட்டிஷ் சர்க்கார் வெளியிட்டுள்ள அறிக்கையின் கடைசி பாராவில் குறிப்பிடப்பட்டிருப்பதன் சம்பந்தமாக, தேசத்தின் முன்னேற்றத்திற்குச் சிறுபான்மையோர் முட்டுக்கட்டை போட அனுமதிக்கக் கூடாது என்று ஸ்ரீ அட்லி தெளிவாகக் கூறியிருப்பதை நாம் திட்டவட்டமாக எடுத்துக் காட்டவேண்டும். அந்த உறுதிமொழியிலிருந்து நழுவிவிட இப்போது பிரிட்டிஷ் சர்க்கார் முயற்சித்து வருகிறார்கள். நாட்டின் ஒற்றுமையைப் பாதுகாப்பதற்காக காங்கிரஸ், அதன் அடிப்படையான கொள்கைகள் பலவற்றையும் விட்டுக் கொடுத்திருக்கிறது. காங்கிரஸ் நியாயமான எல்லா உறுதி மொழிகளும் அளித்தும் கூட, அரசியல் திட்டம் அகில இந்தியாவுக்கும் பொருந்தும் என்பதை ஒப்புக் கொள்ள பிரிட்டிஷ் சர்க்கார் தயாராக இல்லாவிடில், தங்களுக்கு ஒரு தனி ராஜ்யம் அமைக்க வேண்டும் என்று முஸ்லிம் லீக் கோரும் உரிமையை அவர்கள் (பிரிட்டிஷ் சர்க்கார்) அங்கீகரிக்கிறார்கள் என்றே அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். ஏனெனில், முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக உள்ள மாகாணங்கள் இப்போது உருவாகப்போகும் அரசியல் திட்டத்தில் தங்களுடைய அதிருப்தியைத் தெரிவிக்குமாயின், அவைகளுக்குப் பிரிந்து செல்ல உரிமை உண்டு. இதனால், மே 16-ம் தேதியிலும். மே 25-ம் தேதியிலும் பிரிட்டிஷ் சர்க்கார் வெளியிட்ட அறிக்கைகளில் கொடுக்கப்பட்டுள்ள உறுதிமொழிகள் யாவும் ரத்தாகிவிடுகின்றன. அதற்கு மாறாக, முஸ்லிம் லீகர்கள் அரசியல் நிர்ணய சபையை விட்டு வெளியேறிவிடுவார்களாயின், அவர்கள் பாகிஸ்தானைப் பெறுவார்கள் என்று தெளிவாக உறுதிமொழி அளிக்கப்பட்டிருக்கிறது.

## 233

ஸ்ரீராம்பூர்,
டிசம்பர் 25, 1946

நீங்கள் பியாரிலாலுக்கு எழுதியுள்ள கடிதம் நேற்று நேராக எனக்கு வந்து சேர்ந்தது. பியாரிலாலும் மற்றவர்களும் அவர்களுடைய வேலைகளில் ஆழ்ந்து, தங்களுடைய உயிரைப் பணயம்

வைத்துவருகிறார்கள். எனவே இந்தக் கடிதத்தைப் பற்றி பியாரிலாலுக்கு எதுவும் தெரியாது. அவர் எப்போதாவது நான் இருக்கும் இடத்திற்கு வருகிறார். அடுத்த தடவை அவர் இங்கே வரும்போது அக் கடிதத்தை வாசிப்பார்.

விடியற்காலம் 3 மணிக்கு இந்தக் கடிதத்தை நான் வாயால் கூறி எழுதிக் கொள்ளும்படி செய்கிறேன். 4 மணிக்கு கை கால்களைக் கழுவிக் கொண்டு பிரார்த்தனையைத் தொடங்குவேன். தற்போது இதுதான் தினசரி வழக்கமாக இருந்துவருகிறது. கடவுள் சித்தம் இருக்கும் வரையில் மாத்திரமே நான் இந்த பூமியில் தொடர்ந்து அலுவல்களைச் செய்துவர முடியும். எனினும் நீங்கள் கவலைப்படும்படியாக எனது உடல் நிலையில் கோளாறு எதுவும் இல்லை. எத்தனை அலுவல்கள் இருந்தாலும் உடல் சமாளித்து வருகிறது. என்றாலும், எனக்கு அவை கடுமையான சோதனையாகவே இருக்கின்றன. என்னுடைய சத்தியமும் அகிம்சையும் தராசில் நிறுக்கப்பட்டு வருகின்றன. ரத்தின வியாபாரிகளிடம் இருக்கும் தராசைக் காட்டிலும் இந்தத் தராசு அணுவளவும் ஏற்றத் தாழ்வின்றி நிறுக்கும் மிகச் சிறந்த தராசு ஆகும். சத்தியத்திலும், அகிம்சையிலும் எவ்விதமான குறையும் இருக்க முடியாது. ஏதாவது குறைகள் இருக்குமாயின், அவற்றின் பிரதிநிதி என்று கூறிக்கொள்ளும் என்னிடத்தில்தான் இருக்கக் கூடும். அப்படியாயின், கடவுள் என்னை அப்பால் அகற்றிவிட்டு, என்னைக் காட்டிலும் தகுதிவாய்ந்த வேறொரு பிரதிநிதியின் மூலம் அலுவல்களைச் செய்வார் என்றே நான் நம்புகிறேன்.

பியாரிலால் எனக்காக எந்த அலுவல்களைச் செய்துவந்தாரோ, அவற்றைச் செய்ய என்னால் இயலாததைக் குறித்து நான் வருந்துகிறேன். இப்போது என்னுடன் இருக்கும் இருவருக்கும், அவற்றைச் செய்ய நான் இன்னும் பயிற்சியளிக்க முடியவில்லை. எனினும் அவ்விருவரும் புத்திசாலிகள்தான். எனவே அந்த வேலைகளுக்கு அவர்களைத் தயார் செய்ய முடியுமென நான் நம்புகிறேன். இவ்விஷயமாக உங்களுடைய கடிதம் எனக்கு உற்சாகம் அளிக்கும்.

மூன்று அல்லது நான்கு நாட்களுக்கு முன், மனுவை அவளது விருப்பத்திற்கிணங்க ஜெயசுக்லால் விட்டுச் சென்றுள்ளார். இங்கேயே இருந்து, அவசியமாயின் என்னுடன் இறக்கவும் அவள் தயாராக இருந்ததால், அவளை என்னுடன் வர நான் அனுமதித்தேன். இப்போது நான் இந்தக் கடிதத்தை அவளைக் கொண்டுதான் எழுதும்படி செய்திருக்கிறேன். எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு சிரமத்தைக் குறைத்துக் கொள்வதற்காக நான் கண்களை மூடிக் கொண்டு படுத்திருக்கிறேன். சுசேதா (கிருபளானி) இந்த அறையிலேயே இருக்கிறாள். அவள் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாள்.

நீங்கள் என் பார்வைக்கு அனுப்பியுள்ள தந்தி, குப்பைக் கூடையில் எறிவதற்கே தகுதியுள்ளது. மிகைபடக் கூறுவதற்கு இங்கே எல்லையே இல்லை. மக்கள் வேண்டுமென்று மிகைபடக் கூறுவதில்லை. ஆனால் மிகைபடக் கூறுவது என்பதன் அர்த்தத்தையே அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. இங்கே மரம், செடி கொடிகள் நாற்புறங்களிலும் சூழ்ந்து எல்லையின்றி வளர்ந்திருப்பதைப் போலவே மக்களின் கற்பனையும் எல்லையின்றிப் போய்க்கொண்டிருக்கிறது. எங்களைச் சுற்றிலும் பெரிய தென்னை மரங்களையும், பாக்கு மரங்களையுமே நான் காண்கிறேன். அவற்றின் நிழலில் பச்சைப் பசேலென்று பல விதமான செடி கொடிகளும் வளர்ந்திருக்கின்றன. இங்குள்ள நதிகளெல்லாம் சிந்து, கங்கை, யமுனை, பிரம்மபுத்ரா ஆகிய நதிகளைப் போல் இருக்கின்றன. இந்த நதிகள் வங்காளக் குடாக்கடலில் போய் விழுகின்றன. நான் கூறும் யோசனை என்னவெனில், அந்தத் தந்தி அனுப்பியவருக்கு நீங்கள் ஏற்கனவேயே பதில் அளித்திராவிடில், அந்தத் தந்தியில் குறிப்பிட்டுள்ளவற்றிற்கு ஆதாரம் காட்டும்படி அவரை நீங்கள் கேட்க வேண்டும். அவ்விதம் ருசுப்பித்தால், அரசியல் சட்டப்படி இந்திய சர்க்காருக்கு அவ்விஷயத்தில் தலையிட அதிகாரம் இல்லாவிட்டாலும் அவர்கள் ஏதாவது செய்ய முயற்சிக்கலாம் என்று, அவருக்கு எழுதுங்கள். மேலும் நீங்கள் அவருக்குப் பின்வருமாறு எழுதுங்கள் :

'இப்போது உங்களிடையே காந்தி இருக்கிறார். நீங்கள் கூறுவதற்கு அவர் செவிசாய்க்க மாட்டார் என்று சொல்லுவதற்கில்லை. ஆனால் அவர் சத்தியமும் அகிம்சையும் உருவானவர். எனவே அவரிடம் சென்றால் உங்களுக்கு ஏமாற்றம் ஏற்பட இடம் உண்டு. உங்களுக்கு ஏமாற்றம் உண்டாகும்படி அவர் செய்தால், அவரிடம் பயிற்சி பெற்ற நாங்கள் உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி எவ்வாறு செய்ய முடியும்? இருந்தாலும், எங்களால் இயன்றதைச் செய்கிறோம்?'

'காந்தி அங்கே இருப்பதால், நீங்கள் உங்களுடைய பிரச்னைகளை எங்களிடம் கொண்டு வராதீர்கள்' என்று நீங்கள் யாரிடமும் கூறவேண்டாம். அவர்கள் உங்களுக்கும் எழுதட்டும். எனக்கு விரோதமாக நீங்கள் செல்லுவதாக இருந்தால் கூட, அவர்களுக்குப் பரிகாரம் அளிக்க வேண்டியது உங்களுடைய கடமையாகும். நான் உங்களுக்குக் கற்பித்திருப்பது அதுதான். நிலைமை மோசமாக இருந்துவருகிறது. சத்தியம் இருக்கும் இடமே தெரியவில்லை. அகிம்சை என்ற போர்வையில் பலாத்காரமும், மதம் என்ற போர்வையில் மத விரோதமான செயல்களும் நடைபெற்று வருகின்றன. அத்தகைய சந்தர்ப்பங்களில்தான் சத்தியத்தையும் அகிம்சையையும் சோதனை செய்து பார்க்க முடியும் என்பதை நான் அறிவேன். அதனால்தான் நான் இங்கே இருக்கிறேன். எனவே என்னை இங்கிருந்து வேறு எங்கும் அழைக்காதீர்கள். நான் இங்கிருந்து பயந்து ஓடிவிட்டால்,

அது எனக்குப் பெரும் துரதிர்ஷ்டமாகவே முடியும். ஆனல் இந்தியா அத்தகைய துரதிர்ஷ்டம் வாய்ந்ததல்ல என்பது நிச்சயம். எனது கடமையைச் செய்யவோ அல்லது இறக்கவோ தான் நான் இங்கு வந்திருக்கிறேன். ஜவாஹர்லால், கிருபளானி, தேவ் ஆகியோர் என்னுடன் கலந்து ஆலோசிப்பதற்காக இங்கு வருகிருர்களென நேற்று வானெலி மூலம் செய்தி வந்தது. அது போதுமானது. ஒவ்வொருவரையும் நான் சந்திப்பதால் என்ன பலன்? உங்களிடையே யாராவது என்னைச் சந்திக்க விரும்பினல், அப்படியே செய்யலாம்.

நான் அஸ்ஸாமைப் பற்றி எழுதியது, உடனடியாக அதை வெளியிடவேண்டும் என்பதற்காக அல்ல. இருந்தாலும் அவ் விஷயத்தில் நான் கூறுவது சரி என்பதை உறுதியாக நம்புங்கள்.

பீகார் முஸ்லிம் லீகின் அறிக்கையை நீங்கள் பார்த்திருக்க லாம். அதைப் பற்றி நான் ராஜேந்திரபாபுவுக்கு எழுதினேன். அதன் சம்பந்தமாக என் கருத்துகளை உங்கள் எல்லோருக்கும் தெரிவிக்குமாறு அவரை நான் கேட்டிருக்கிறேன். பீகார் முதல் மந்திரிக்கும் நான் எழுதியிருக்கிறேன். அந்த அறிக்கையில் என்ன கூறப்பட்டிருக்கிறதோ அதில் பாதி உண்மையாக இருந்தால் கூட, அது மோசமான நிலைமையேயாகும். எனவே அவ்விவரங்களை விசாரிக்க பாரபட்சமற்ற ஒரு கமிஷனை நியமிக்க வேண்டியது கடமையாகும். அக் கமிஷன், யாரும் குறை கூறமுடியாதவாறு இருக்க வேண்டும்; ஒரு நாள் கூடத் தாமதமின்றி அதை நிறுவவேண்டும். அறிக்கையில் கூறப்பட் டுள்ள புகார்களில் எவை உண்மையோ அவற்றை உடனடி யாக ஒத்துக் கொள்ளவேண்டும். மற்றவைகளைக் கமிஷனின் விசாரணைக்கு விடவேண்டும். அவ்விஷயத்தை நீங்கள், உங்கள் மந்திரிசபையில் உள்ள முஸ்லிம் லீக் சகாக்களுடன் விவாதிக்க வும் வேண்டும். நான் இன்னும் சுஹ்ரவர்தியுடன் கடிதப் போக்குவரத்து நடத்திவருகிறேன். அது பூர்த்தியானதும் அக் கடிதங்களையெல்லாம் உங்களுக்கு நான் அனுப்புகிறேன். நமக்குள் இதுவரை நடந்துள்ள கடிதப் போக்குவரத்தை ஜவாஹர்லால் நேரு பார்ப்பார்.

பிரார்த்தனைக்குப் பின் நான் செய்யும் பிரசங்கங்களின் சாரத்தை நீங்கள் வாசித்திருக்கலாம். ஏற்கனவே அவற்றை நீங்கள் வாசிக்காவிடில், தயவு செய்து இப்போது வாசியுங்கள். அப்பிரசங்கங்கள் பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்டுள்ளன. அல்லது பத்திரிகைகளிலிருந்து கத்தரித்து மணி அனுப்புவதை நீங்கள் வாசியுங்கள். நீங்கள் எவ்வளவு கடுமையாக உழைத்து வருகிறீர்கள் என்பதை நான் அறிவேன். இருந்தாலும், அவசர மான வேலைகள் இருந்தபோதிலும், சில விஷயங்களை நீங்கள்

கவனித்துத் தீரவேண்டும். நான் அப்போதைக்கப்போது என்ன சொல்லிவருகிறேன் என்பதை அறிந்து கொள்வதும் அந்த வேலைகளில் ஒன்றாகும்.

உங்களுடைய ஆரோக்கியம் முதல்தரமாக இருந்துவரு கிறதென நான் நம்புவதற்கில்லை. எனினும் நீங்கள் தொண்டு செய்வதற்குப் போதிய நிலையில் அது இருந்துவருகிறது என்று நினைக்கிறேன். உங்களுடைய ஆரோக்கியத்தை மிகவும் அபிவிருத்தி செய்துகொள்ள முடியும். சிகிச்சைக்கு டின்ஷா மேத்தாவை அழைக்கும்படி உங்களை இன்னும் கேட்டுக் கொள் கிறேன். அவர் ஒரு நல்ல மனிதர்; கபடமற்றவர், பரோபகார சிந்தனையுள்ளவர் என்பதில் ஐயமில்லை. அவர் அவ்வளவு திறமைசாலியாக இராவிட்டால்தான் என்ன? சுசீலாவை வரும் படி நீங்கள் கோருகிறீர்கள். அவள் சிறந்த ஆரோக்கியத்துடன் இருக்கிறாள் என்று நான் கூறமுடியாது. வெளியிலிருந்து வந்தவர்களை உபசரித்து அவர்களிடம் அன்பு காட்டும் பண்பற்ற கிராமங்களில் அவர்கள் நல்ல தொண்டு செய்துவருகிறார்கள். இந்தப் பகுதிகளில் அரைகுறையான வைத்தியர்களைக் கூட அபூர்வமாகவே காண முடியும். எனவே சுசீலாவைப் போன்ற ஒருவரை மக்கள் பிரமாதமாக எண்ணி அவளது வைத்திய உதவியை நாடுவது இயல்பேயாகும். எனவே இங்குள்ள எங்களில் எவரைப் பற்றியும் நீங்கள் கவலைப்படவேண்டாம். அவர்களில் ஒவ்வொருவரும் இங்கே இறக்கத் தயாராக இருக்கும்போது, அவர்கள் நோய்க்கு இலக்காவதைக் குறித்து அதிகமாகக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. அவர்கள் இறந்தால், அது வாழ்த்துவதற்கு உரிய ஒரு விஷயமேயாகும். ஆனால் அவர்கள் தூய்மையானவர்களாக இறக்கவேண்டும்.

## 234

ஸ்ரீராம்பூர்,
டிசம்பர் 26, 1946

டாக்டர் பில்ச்னர் என்ற ஒரு நபரைப்பற்றி டின்ஷாஜி எனக்கு எழுதியிருந்தார். அவரைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவே நான் இந்தக் கடிதத்தை எழுதிக் கொள்ளும்படி செய்கிறேன். இங்குள்ள அலுவல்களை என்னால் சமாளிக்க முடியவில்லை. எவ்வளவு செய்தாலும், ஏதாவது பாக்கி அலுவல்கள் நின்றுவிடுகின்றன. எனவே எனக்கு என்ன நேரும் என்பதை நான் அறிந்து கொள்வதற் கில்லை. எது நேருவதாயினும் நான் இங்கேயேதான் இருப் பேன். நான் மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன். என் முன் முற்றிலும் இருள் சூழ்ந்திருந்தால் கூட, நான் உற்சாகத்துடனேயே இருக்கிறேன். என்னுடைய ஆரோக்கியம் முதல்தரமாக இருந்து வருகிறதென்றே கருதுகிறேன். என்னைப் பற்றிக் கவலைப்படாதீர் கள். டின்ஷா சிபார்சு செய்துள்ள நபர் அனுமதிக்கப்படலாம்.

எனில், அவருக்கு அனுமதி கொடுக்க வேண்டும் என்பதே எனது அபிப்பிராயமாகும். எனினும் சர்க்காருக்கு நீங்கள் செய்ய வேண்டிய கடமைக்கு முரணின்றி அவர் தங்கியிருக்க அனுமதி கொடுக்கலாம் என்ருல்தான் தாங்கள் அவ்விதம் அனுமதி கொடுக்கவேண்டும். உண்மை விவரங்கள் எனக்குத் தெரியாததலின், இதற்கு மேல் நான் எதுவும் கூற முடியாது.

உங்களுடைய ஆரோக்கியத்தை அக்கறையுடன் கவனித்துக் கொள்ளுங்கள்.

## 235

ஸ்ரீராம்பூர்,
டிசம்பர் 30, 1946, காலை மணி 5-15

உங்கள் கடிதம் கிடைத்தது. இங்கே என்ன நிகழ்ந்தது என்பது பற்றி ஜவாஹர்லாலும், மற்றவர்களும் உங்களுக்குக் கூறுவார்கள்.

'அ' நபரைப் பற்றி எனக்கு உறுதியான அபிப்பிராயங்கள் உண்டு. இங்கே நடந்துவரும் அலுவல்களை, காங்கிரஸ் நிதியைக் கொண்டோ அல்லது நீங்கள் வசூல் செய்துள்ள தொகைகளைக் கொண்டோ நடத்துவது முடியாத காரியம். ஹிந்துக்களிடமிருந்தும் முஸ்லிம்களிடமிருந்தும் பகிரங்கமாகத் தொகைகள் வசூல் செய்யப்படவேண்டும். பணத்தை மாத்திரம் அடிப்படையாகக் கொண்டு நடைபெறும் எல்லா நடவடிக்கைகளும் இறுதியில் தோல்வியுறுவது நிச்சயம் என்ற என்னுடைய உறுதியான அபிப்பிராயம் அனுபவ பூர்வமானது. பணத்தைக் கொண்டு காரியங்களைச் செய்து முடிக்கும் எண்ணத்தை நீங்களும் விட்டு விடவேண்டும். 'அ'வுக்கும் எனக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தத்திலிருந்து 'அ' ஓர் அங்குலம் கூட பிறழாமல் இருக்க வேண்டியது அவசியமாகும். அதில் அணுவளவு அழுக்காறை நான் கண்டாலும், அதிலிருந்து வெளியேறிவிட நான் உறுதியாகத் தீர்மானித்திருக்கிறேன். என்னுடைய வாழ்க்கையிலேயே இது ஒரு மகத்தான, தர்மசங்கடமான அலுவலாகும். இதுவரையில் கடவுள் என்னைத் தாங்கி வந்திருக்கிருர். நான் இரவு 1-30 மணிக்கே விழித்துக் கொண்டு வேலையைத் துவங்குகிறேன். இதுவரை யாதொரு சங்கடமும் ஏற்படவில்லை. நாளை என்ன நேரும் என்பதுபற்றிக் கடவுளே அறிவார்.

உங்களுக்கு எதிராகப் பல புகார்கள் எனக்கு எட்டியிருக்கின்றன. உங்களுடைய பிரசங்கங்கள் மக்களுக்கு வெறியூட்டுவனவாகவும், விஷமிகளுக்குத் திருப்தியளிப்பனவாகவும் இருக்கின்றன; நீங்கள் பலாத்காரத்திற்கும் அகிம்சைக்கும் உள்ள வேற்றுமையைப் புறக்கணித்து விட்டீர்கள்; பலாத்காரத்தை பலாத்காரத்தினுல் எதிர்க்கும்படி நீங்கள் மக்களுக்குக் கற்பித்து வருகிறீர்கள்; எந்தச் சமயத்திலும் முஸ்லிம் லீகை அவமதிக்கும்

சந்தர்ப்பத்தை நீங்கள் ஒருபோதும் நழுவ விடுவதில்லை. இந்தப் புகார்களெல்லாம் உண்மையாக இருக்குமாயின், அது அபாயகரமாகும். பதவியிலிருந்து விலகப்போவதில்லை என்று நீங்கள் சொல்லுவதாகவும் அவர்கள் கூறுகின்றனர். இதுவும் கலக்கத்தைக் கொடுக்கக் கூடிய விஷயமாகும். நான் கேள்விப்பட்டதையெல்லாம் உங்களிடம் கூறிவிட்டேன். அவற்றைப் பற்றி ஆலோசியுங்கள். இப்போது நிலைமை மிகவும் நெருக்கடியாக இருந்து வருகிறது. எனவே நேரடியான, குறுகிய பாதையிலிருந்து நாம் சிறிது தவறிவிட்டாலும், நமது நிலைமை மோசமாகிவிடும். காரியக் கமிட்டியின் அலுவல்கள் அந்நியோன்னியமாக நடைபெறவில்லை. ஊழல்களைக் களையுங்கள். அவற்றைக் களைவது எப்படி என்பதை நீங்கள் அறிவீர்கள். விஷயங்களை என்னிடம் விளக்க வேண்டும் என்றும், எனது அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் நீங்கள் கருதினால், விவேகமுள்ள, நம்பத் தகுந்த யாரையாவது அனுப்புங்கள். நீங்கள் வரவேண்டும் என்ற அவசியமே இல்லை. அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்க உங்களுடைய உடல் நிலை இனி இடம் கொடுக்காது. உங்களுடைய ஆரோக்கியத்தைக் குறித்து நீங்கள் யாதொரு அக்கறையும் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. அது சரியல்ல.

இதற்கு மேல் நான் எழுத மாட்டேன். இப்போது கல்கத்தா மணி 5-35. இன்னும் எழுத வேண்டிய கடிதங்கள் ஏராளமாக இருக்கின்றன.

## சர்தாரின் பதில்

உங்கள் கடிதம் எனக்கு வேதனையைக் கொடுக்கின்றது. உங்களுக்கு வந்த செய்திகளையும், உங்கள் காதுக்கு எட்டிய புகார்களையும் அடிப்படையாகக் கொண்டே நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். அந்தப் புகார்கள் பொய் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. சில புகார்கள் அர்த்தமற்றவையாக இருக்கின்றன.

நான் பதவியை விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருக்க விரும்புகிறேன் என்ற குற்றச்சாட்டு ஒரு கட்டுக் கதையாகும். இடைக்கால சர்க்காரிலிருந்து ராஜிநாமா செய்துவிடுவதாக ஜவாஹர்லால் அடிக்கடி வீணாக மிரட்டுகிறார். நான் அதை ஆட்சேபித்தேன்; அவ்விதம் வீண் மிரட்டல்களில் ஈடுபடுவது காங்கிரசின் கௌரவத்துக்குக் கேடு விளைவித்து, உத்தியோகஸ்தர்களிடையேயும் சீர்கேட்டை உண்டாக்கும் என்று கூறினேன். முதலில் ராஜிநாமா செய்வதென்ற முடிவுக்கு வரவேண்டும். அவ்விதமின்றி அடிக்கடி கையாளும் வீண் மிரட்டல்களால் வைஸ்ராய் முன்னிலையில் நமது கௌரவம்தான் குன்றியிருக்கிறது. இப்போதெல்லாம் அத்தகைய மிரட்டல்களை வைஸ்ராய் பொருட்படுத்துவதில்லை. என்னுடைய நிர்வாகத்திலிருந்த இலாகாவை மாற்ற வேண்டுமென வைஸ்ராய் வற்புறுத்தியபோது, நான் ராஜிநாமா செய்ய ஒரு விநாடி கூடத் தயங்கவில்லை. அது வெறும் மிரட்டல் அல்லவாதலின்,

அது உடனடியாகச் சிறந்த பலனைக் கொடுத்தது. பதவியைப் பற்றிக் கொண்டிருப்பதால் எனக்கு யாதொரு லாபமும் இல்லை. நான் படுத்த படுக்கையிலிருக்கிறேன். மீண்டும் சுதந்திர மனிதனாக இருப்பதே எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும். எனவே, அத்தகைய புகாருக்கு நீங்கள் செவிகொடுப்பதை என்னால் அறிந்து கொள்ளவே முடியவில்லை. நான் லீகை அடிக்கடி அவமதிக்கிறேன் என்று லீகைச் சேர்ந்தவர்கள் கூடக் கூறவில்லை.

எனது பிரசங்கங்கள், மக்கள் கூட்டத்தைத் திருப்திப்படுத்தும் நோக்கத்துடன் இருக்கின்றன என்பது, நான் கேட்டிராத ஒரு செய்தியாக இருக்கிறது. உண்மையில், மக்களிடம் அவர்களுக்குப் பிடிக்காத உண்மைகளையே கூறுவது எனது வழக்கமாக இருக்கிறது. கடற்படைக் கலகம் நடந்தபோது, அதை நான் சிறிதும் தயவு தாட்சண்யமின்றிக் கண்டித்தேன். அப்போது எனது கண்டனம் பலருக்கும் அதிருப்தியைக் கொடுத்தது. சோஷலிஸ்டுகளுக்கு நான் கூறிய யோசனைக்கு முரணாக ஜவாஹர்லால் அவர்களுக்கு மகிழ்ச்சியூட்ட முயன்றுவந்தார்.

எனது நீண்டப் பிரசங்கம் ஒன்றிலிருந்து பொருத்தமற்ற முறையில் சில வரிகளைப் பிய்த்தெடுத்து, பலாத்காரத்தைப் பலாத்காரத்தால் சமாளிக்கவேண்டும் என்று நான் கூறியதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

காரியக் கமிட்டியில் ஒற்றுமை குன்றியிருப்பது சமீப கால நிகழ்ச்சியல்ல; அது நீண்ட காலமாக இருந்துவரும் ஓர் 'அற்புத' நிலையே ஆகும். எனினும் தற்போது காரியக் கமிட்டியிலுள்ள ஒவ்வொருவரும் அந்நியோன்னியமாகச் செயல் புரிய வேண்டும் என்பதில் ஜாக்கிரதையாக இருந்துவருகிறார்கள்.

எனது சகாக்களில் யாராவது என்னைப் பற்றி உங்களிடம் புகார் கூறினார்களா என்பதை நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். அவர்களில் எவரும் என்னிடம் புகார் எதுவும் செய்யவில்லை.

வங்காளத்தில் நீங்கள் தொடர்ந்து இருந்துவருவதைப் பற்றி வங்காள சர்க்காரிடமிருந்தும், கவர்னரிடமிருந்தும் வரும் செய்திகள் மிகவும் மோசமாக இருக்கின்றன. அவர்கள் உங்களை அங்கிருந்து வெளியே தள்ளவே விரும்புகின்றனர்.

## 236

சண்டிபூர்,
*ஜனவரி 6, 1947*

உங்களுடைய உடல் நிலை எனக்குக் கவலையைக் கொடுக்கின்றது. நீங்கள் குணமடைய வேண்டியது அவசியமாகும். செய்ய வேண்டிய வேலைகள் ஏராளமாக இருக்கின்றன.

இப்போது நிலைமை மிகவும் தர்மசங்கடமாக இருந்து வருகிறது. இங்கே என்ன நிகழ்ந்தாலும் அதை ஊன்றிக் கவனித்து வாருங்கள். நான் ஆழ்ந்த அந்தகாரத்தில் அலைந்து கொண்டிருக்கிறேன். எனினும் எனது நம்பிக்கை எப்போதும் போல் சுடர் விட்டுப் பிரகாசித்து வருகிறது.

'அ'-வுக்காக நான் இத்துடன் ஒரு கடிதம் இணைத்திருக்கிறேன். ஒருவர் பணத்தையே எல்லாவற்றையும்விட மேலானதாகக் கருதுவாராயின், அவர் எல்லாவற்றையும்விட மகோன்னதமான கடவுளை நிச்சயமாக மறந்துவிட வேண்டியதுதான்.

கடைசி நேரத்தில் உங்களுக்குக் கடிதம் எழுத நான் உட்காரும்போதெல்லாம், பல விஷயங்களையும் எழுத மறந்து விடுகிறேன். முன்னதாக எழுதவும் என்னால் முடிவதில்லை. எனவே மற்றச் செய்திகளை சுதீர் உங்களிடம் கூறுவார்.

## இணைக்கப்பட்ட கடிதம்

எனது அன்புள்ள 'அ',

பணத்தின் உதவியால் இங்குள்ள அலுவல்களைச் செய்வது முடியாத காரியம் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். காங்கிரசிடமிருந்து நான் ஒரு பைசா கூட விரும்பவில்லை. ஜோகரில் என்ன தொகை வசூலாகிறதோ அதைக் கொண்டு வேலை செய்யவே நான் விரும்புகிறேன். பணம் வசூலாகாவிட்டால் கூட நான் வேலை செய்து வருவேன். உண்மையான தொண்டு புரிவதற்கு வேறு வழி எதுவும் இல்லை.

## 237

ஷாபூர்,
*ஜனவரி 14, 1947*

இப்போது நிறுவ உத்தேசிக்கப்பட்டுள்ள பீகார் விசாரணைக் கமிஷனைப் பற்றிக் கவனிப்போம்.

விசாரணைக் கமிஷனை நீங்கள் எதிர்க்கிறீர்கள்; கவர்னரும் வைஸ்ராயும் கூட எதிர்க்கிறார்கள். எனவே கமிஷன் நிறுவுவதை முதல் மந்திரி நிறுத்திவிடுவதற்கு இது போதாதா? இருந்தாலும் கூட, கமிஷன் நியமிக்கப்படவில்லையாயின், முஸ்லிம்களுக்குக் கொடுமைகள் இழைக்கப்படுவதாக லீக் வெளியிட்டுள்ள அறிக்கை, சந்தேகத்துக்கு இடமின்றி உண்மையை அடிப்படையாகக் கொண்டதென்று கருதப்படும்.

## 238

டால்டா,
*ஜனவரி 24, 1947*

உங்களுடைய இரண்டு கடிதங்களும் எனக்குக் கிடைத்தன. நான் நூற்றுக் கொண்டே இந்தக் கடிதத்தை எழுதிக் கொள்ளச் சொல்லுகிறேன். ஒரு தூதர் வந்திருக்கிருர். இந்தக் கடிதத்தை அவருடன் நான் அனுப்பவேண்டும். நாட்டின் மற்றப் பகுதிகளில் என்ன நடக்கிறது என்பதுபற்றி எனக்கு யாதொரு தகவலும் கிடைப்பதில்லே. ஹஸாரா கலகங்களைப் பற்றி நான் கேள்விப்பட்டேன். அதனுல்தான் தந்தி கொடுத்தேன். இங்கேயுள்ள அலுவல்கள் எனது நேரத்தையெல்லாம் எடுத்துக் கொண்டுவிடுகின்றன. ஒவ்வொரு நாளும் ஜாகையை மாற்றிக் கொள்வது எளிதல்ல. இது வரையில், எப்படியோ கடவுள் என்னைப் பாதுகாத்து வந்துள்ளார். இதற்குப் பின் அவர் என்ன செய்யப்போகிருர் என்பதை நாம் இனிமேல்தான் தெரிந்து கொள்ள வேண்டும். விஷம் எங்கும் பரவியிருக்கிறது. அதனூடேதான் அகிம்சை முன்னேறிச் செல்ல வேண்டும். அதைப் பரிசோதிக்க இது ஒன்றுதான் வழியாகும்.

உங்களுடைய ஆரோக்கியம் சிறிது அபிவிருத்தியடைந்திருக்கிறது என்பதையும், நீங்கள் சிகிச்சைபெற ஒரு இயற்கை வைத்தியரை அழைத்திருக்கிறீர்கள் என்பதையும் அறிய நான் மகிழ்ச்சி அடைகிறேன். உங்களுக்கு இயற்கை வைத்தியம் ஒன்றுதான் சிறந்தது என்பது எனது அபிப்பிராயமாகும்.

டைபிஸ்ட் பரசுராம் போய்விட்டார். எனினும் அவருக்குப் பதிலாக வேறு எவரும் எனக்குத் தேவையில்லே.

## 239

*பிப்ரவரி 1, 1947*

இந்த இரண்டு நண்பர்களும் அவர்கள் பட்ட துன்பங்களைப் பற்றிய கதையை என்னிடம் கூறினர்கள். அவர்களுக்காக என்னுல் எதுவும் செய்ய முடியவில்லே. அவர்கள் கூறுவது உண்மையாயின், அது வருந்தத்தக்க ஒரு விஷயமாகும். அவர்களை அறிமுகம் செய்து வைத்து உங்களுக்கு ஒரு கடிதம் கொடுக்கும்படி அவர்கள் கேட்டார்கள். அப்படியே அவர்களிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்திருக்கிறேன்.

நீங்கள் சௌக்கியமென நம்புகிறேன்.

## 240

அமிஷாபாரா,
பிப்ரவரி 4, 1947

மாரிஸ் பிரைட்மன், பாரதானந்தைப் போன்றவரே. நீங்கள் அவரை ஓர் இந்தியப் பிரஜையாக்கிக் கொள்ள முடியுமா என்று தயவு செய்து பாருங்கள்.

நீங்கள் வருந்தக் கூடாது என்பதும், என்னைக் கடவுள் கையில் விட்டுவிட வேண்டும் என்பதுமே எனது விருப்ப மாகும்.

## 241

ஸ்ரீநகர் (வங்காளம்),
பிப்ரவரி 5, 1947

லீகைப் பற்றி நான் ஒரு நீண்டப் பிரசங்கம் செய்துள் ளேன். அதை நீங்கள் ஒருவேளை பத்திரிகைகளில் வாசித்திருக் கலாம். அது அவ்விஷயமாக நான் கொண்டுள்ள கருத்துகளின் சுருக்கமேயாகும்.

அரசியல் நிர்ணய சபையில் மன்னர்கள் கலந்து கொள்ளா விட்டால் கூட பயப்படுவதற்கு எதுவும் இல்லை என்பதே, மந்திரி சபைத் தூது கோஷ்டி அறிக்கையின் பொருள் என்று நான் நினைக்கிறேன். அவ்விதம் அவர்கள் விளக்கம் கொடுக்கா விட்டால் கூட யாதொரு நஷ்டமும் ஏற்பட்டுவிடாது. அவர் களுடைய விளக்கம் அவ்விதமே இருக்குமாயின், அது அவர்கள் மீது நல்லெண்ணம் ஏற்படுவதற்கு உதவியாக இருக்கும்; நாமும் உடனடியாக அலுவல்களைத் தொடங்குவது சாத்தியமாகும். உணவிலும் உடையிலும் பற்றுக்குறை ஏற்பட வேண்டிய அவ சியமே இல்லை என்பது பட்டப்பகலைப் போல் எனக்குத் தெளி வாகத் தெரிகிறது. இந்த அபிப்பிராயத்தை மற்றவர்களும் ஒப் புக் கொள்ளும்படி செய்ய என்னால் இயலவில்லை என்பது வேறு விஷயமாகும். இந்த நிலையில், நான் அங்கு வந்தாலும் வராவிட்டாலும் ஒன்றுதான். நான் இருக்க வேண்டிய இடம் இதுதான். இங்கே என்னால் என்ன செய்ய முடியுமோ அதைக் கொண்டு நான் திருப்தியடைந்திருக்கிறேன். இங்குள்ள மக் களுக்குச் சிறிதளவு மகிழ்ச்சி ஏற்படும்படி என்னால் செய்ய முடி கிறது என்றும், இங்கேயே நான் எனது அலுவல்களைத் தொடர்ந்து செய்துவந்தால். அவர்களுக்கு இன்னும் அதிக உதவி அளிக்க முடியும் என்றும் நம்புகிறேன். எனினும் அது கடவுளின் கையில் இருக்கிறது.

பீகார் மந்திரி சபை ஒரு விசாரணைக் கமிஷனை நியமிக்காததற்குக் காரணம் உங்களுடைய எதிர்ப்புதான் என்று நான் கேள்விப்படுகிறேன். நான் அதை நம்பவில்லை என்றாலும், அச் செய்தியை உங்களுக்கு நான் அறிவிக்க வேண்டும் அல்லவா? ஒரு விசாரணைக் கமிஷன் நியமிக்கப்படாவிட்டால், மிகுந்த பாதகம் ஏற்படும்; மந்திரி சபை குற்றவாளி என்று கருதப்படும். அவர்களுடைய நடவடிக்கைகள் அப்பழுக்கற்றவையாக இருக்குமாயின், கமிஷனால் அவர்களுக்கு என்ன தீங்கு ஏற்பட முடியும்? என்னை மிகவும் வற்புறுத்தி வருகிறார்களெனினும், நான் அங்கு செல்லவில்லை. ஏனெனில், எனக்கு மந்திரிகளிடம் நம்பிக்கை இருக்கிறது. இறுதியாக கமிஷன் நியமிக்கப்படாவிடில், நான் பீகாருக்குச் செல்ல வேண்டியிருக்கும் என்றே தோன்றுகிறது.

உங்களுடைய ஆரோக்கியத்தில் நீங்கள் போதிய அக்கறை எடுத்துக் கொண்டு வருகிறீர்கள் என்று நம்புகிறேன்.

## சர்தாரின் பதில்

பீகாரில் கமிஷன் நியமிக்கப்படாததற்கு நான் பொறுப்பாளி என்று உங்களுக்கு யார் சொன்னார்கள்? கமிஷனை நியமிப்பதால் யாதொரு லாபமும் ஏற்படாது என்றும், அதற்கு மாறாக ஓரளவு தீங்கே ஏற்படும் என்றும் நான் நினைக்கிறேன். எனினும் கமிஷனை நியமிப்பதாயின், நான் எப்படி அதற்குத் தடையாக நிற்க முடியும்? உங்களுக்கு இந்தப் பொய்க் கதைகளெல்லாம் வருவது ஆச்சரியமாக இருக்கிறது. உங்களிடம் அவற்றைக் கூறுவோர் என்னிடம் ஏன் வரக்கூடாது? புறம் கூறும் அத்தகைய நபர்களை அம்பலப்படுத்த வேண்டும்.

கமிஷன் நியமிக்கப்படாததற்கு பீகார் கவர்னரே பொறுப்பாளியாவார். அது நிறுவப்படுவதை வைஸ்ராயும் விரும்பவில்லை. இல்லாவிட்டால் அதை யார் தடுக்க முடியும்? வைஸ்ராயின் யோசனைக்கிணங்க கல்கத்தா கமிஷன் நியமிக்கப்பட்டது. அக் கமிஷனின் விசாரணை இன்னும் நடந்து வருகிறது. அதன் அறிக்கை வெளியாவதற்கு இன்னும் ஒரு வருடம் செல்லும். அவ்விதம் நீண்ட காலத்திற்குப் பிறகு வெளியாகும் அறிக்கையினால் என்ன பலன்? அதற்கு ஆகும் செலவு வீண் செலவாகவே முடியும். எனவே, அந்தக் குற்றச்சாட்டை என் மீது சுமத்துவதற்குக் காரணம் என்ன என்பதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை.

## 242

சண்டிபூரிலிருந்து செல்லும் கப்பலில்,
மார்ச் 3, 1947

எனக்கு நேற்று சண்டிபூரில் உங்களுடைய கடிதம் கிடைத்தது. உங்களுடைய நோய் மோசமாகி வருவதைக் குறித்து வருந்துகிறேன். அதை முன்பே தடுப்பது சாத்தியமாக இருந்

தது, இனியும் சாத்தியமாக இருக்கலாம். டின்ஷாவின் திற மையில் உங்களுக்கு நம்பிக்கையில்லாவிடில், எனக்குத் தெரிந்த வேறு இயற்கை வைத்தியர்கள் இருக்கிறார்கள். ஆனால் உங்க ளுடைய அபிப்பிராயத்தை யார் மாற்ற முடியும்? உங்கள் விருப்பம்போல் செய்து கொள்ளுங்கள். எத்தனை பேர் உங்களை நம்பி வாழ்கிறார்கள் என்பதை நீங்கள் அறிவீர்களா?

இங்கே நான் செய்ய வேண்டிய அலுவல்களின் அவசி யத்தை ருசுப்பிப்பது என்றால் ஒருவேளை முடியாமல் இருக்க லாம். எனினும் அந்த அலுவல்கள் மூலாதாரமானவை என்றே நான் நிச்சயமாகக் கருதுகிறேன்.

இன்று நான் பீகாருக்குப் புறப்படுகிறேன். 'அ'-விட மிருந்து ஒரு கடிதம் வந்தது. இப்போது டாக்டர் முகமதுவிட மிருந்து மற்றொரு கடிதம் வந்திருக்கிறது. இரண்டும் அதிர்ச்சி யைக் கொடுக்கின்றன. எனவே பீகாருக்கு நான் போய்க் கொண்டிருக்கிறேன். உறுதி வாய்ந்த பெரும் தலைவர்களெல் லோரும் அங்கே (டில்லியில்) வேலை செய்து கொண்டிருக் கிறீர்கள். இந்தப் பகுதிகளில் வேறு தலைவர்கள் இராததால், நான் ஏதோ ஒரு தலைவராக இருந்துவருகிறேன். ஆகையால் என்னை இங்கேயே இருக்கவிடுங்கள். இங்கு ஏதாவது சாதிக்க முடியுமாயின், அது தேசத்திற்குப் பலன் அளிப்பதாகவே இருக்கும். எதுவும் செய்ய முடியாவிடில், நஷ்டம் எதுவுமில்லை.

டாக்டர் கனுகா நோயுற்றிருப்பதைக் குறித்து நான் விசன மடைகிறேன். கடவுள் எத்தகைய நிலையில் நம்மை வைத் திருக்க விரும்புகிறாரோ அத்தகைய நிலையைக் குறித்து நாம் திருப்தியடைவோமாக.

## 243

பாட்னா,

மார்ச் 17, 1947

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள காகிதங்கள் போலந்தைச் சேர்ந்த மக்களைப் பற்றியவை. அவற்றைத் தயவு செய்து வாசித்து, உங்களுக்கு எது உசிதமாகத் தோன்றுகிறதோ அவ்விதம் செய்யுங்கள். உங்களுக்கு இவ்விதமெல்லாம் தொந் தரவு கொடுக்க நேர்ந்திருப்பதைக் குறித்து நான் வருந்து கிறேன். இருந்தாலும் அவ்விதம் செய்வதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. எனினும் அவற்றை நீங்கள் வாசிக்க இயலா விடில், அதைப்பற்றி மறந்துவிடுங்கள், அந்தக் காகிதங்களையும் எனக்குத் திருப்பி அனுப்பிவிடுங்கள். அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது செய்ய முற்படுவீர்களாயின், அவற்றை நீங்கள் எனக் குத் திருப்பி அனுப்ப வேண்டிய அவசியமில்லை.

கேதார் நாத்ஜியும், சுவாமி ஆனந்தும் இங்கே வந்திருந்தார்கள். நாங்கள் எல்லா விவரங்களையும் பற்றிப் பேசினேம். அவர்கள் அதைப் பற்றி உங்களுக்கு எழுதுவார்கள். உங்களுடைய உடல் நலம் திருப்திகரமாக இல்லையென்று சுசீலா எழுதியிருக்கிருள். எனவே தயவு செய்து கவனமாக இருங்கள்.

## 244

பாட்னு,
*மார்ச் 22, 1947*

உங்களால் இயலுமாயின், பஞ்சாபைப் பற்றிய உங்களுடைய தீர்மானத்தைத்* தயவுசெய்து எனக்கு விளக்கிக் கூறுங்கள். அதிலிருந்து எதையும் என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

## 245

ரயில் வண்டியில்,
*ஏப்ரல் 13, 1947*

எனக்கு நேரம் இராததால், உங்களிடமிருந்து ஒரு விஷயத்தைத் தெரிந்துகொள்ள நான் மறந்துவிட்டேன். அதைப் பற்றி நான் இப்போது 'ஹரிஜனி'ல் ஏதாவது எழுதவேண்டும் என்று எண்ணுகிறேன். அரசியல் பிரச்னைகளை நீங்கள் அணுகும் முறைக்கும் நான் அணுகும் முறைக்கும் அடிக்கடி வேற்றுமைகள் ஏற்படுவதையும் நான் கவனித்துள்ளேன். நிலைமை அப்படியிருக்கும்போது, ஒரு தனி நபர் என்ற முறையிலாவது நான் வைஸ்ராயைச் சந்திப்பது விவேகமானதாக இருக்குமா?

நாட்டின் நலனை மாத்திரம் மனத்திற்கொண்டு இதைத் தயவு செய்து பாரபட்சமின்றி ஆலோசித்துப் பாருங்கள். நீங்கள் விரும்பினல், இதைப்பற்றி நீங்கள் மற்றவர்களுடனும் விவாதிக்கலாம். புகார் கூறவேண்டும் என்ற எண்ணம் எனக்கு அணுவளவும் இல்லை என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். தேசீய நலனை அடிப்படையாகக் கொண்டு எனது கடமை என்ன என்பதைப் பற்றியே நான் சிந்தித்தவண்ணமாக இருக்கிறேன். கோடிக்கணக்கான மக்களின் விவகாரங்களை நிர்வாகம் செய்வதில் நீங்கள் காண்பதை நான் உணர்ந்து கொள்ள முடியாமலிருக்கலாம். நான் உங்களுடைய ஸ்தானத்தில் இருந்தால்,

---

* பஞ்சாபில் நடந்த கலகங்களைக் குறித்து வருந்தியும், பஞ்சாபை இரண்டாகப் பிரிக்கவேண்டுமென்று சிபாரிசு செய்தும் காரியக் கமிட்டியில் சர்தார் ஒரு தீர்மானம் கொண்டுவரப் போவதாக அறிவித்திருந்தார். அதைப்பற்றியே 244-ம் கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டிருக்கிருர்.

ஒருவேளை முற்றிலும் உங்கள் எல்லோருடைய பேச்சையும் செயலையும் போலவே என்னுடைய பேச்சும் செயலும் இருந்து வரலாம்.

## 246

பாட்னா,
ஏப்ரல் 24, 1947

மே மாத ஆரம்பத்தில் நான் டில்லிக்கு வரவேண்டுமென ஜவாஹர்லாலிடமிருந்து ஒரு தந்தி வந்திருக்கிறது. எனவே 27-ம் தேதி இங்கிருந்து புறப்பட்டு 3-ம் தேதி காலையில் அங்கு வந்து சேர நான் உத்தேசித்திருக்கிறேன். முன்பு என்னுடன் வந்தவர்களே இப்போதும் வருவார்கள். நான் வழக்கம்போல் பங்கி காலனியிலேயே தங்கியிருப்பேன். கனசியாமதாஸ் பிர்லாவுக்கும், மௌலானா ஆஸாதுக்கும், மற்றவர்களுக்கும் தயவு செய்து இந்தத் தகவலை அறிவியுங்கள்.

'ஹரிஜனை'ப்பற்றி நீங்கள் அனுப்பிய தந்தியும் எனக்குக் கிடைத்தது. கட்டுரையை எழுத நான் இப்போது ஆயத்தம் செய்துவருகிறேன். நான் கிஷோர்லாலுக்கும் ஜீவன்ஜிக்கும் எழுதினேன். சர்க்கா சங்கக் கூட்டமும், தாலிமி சங்கக் கூட்டமும் தற்போது நடைபெற்று வருகின்றன.

## 247

பாட்னா,
மே 17, 1947

உங்களுடைய கடிதமும் ஜவாஹர்லாலின் கடிதமும் எனக்குக் கிடைத்தன. முசூரிக்குச் செல்ல எனக்குச் சிறிதும் உற்சாகம் இல்லை. உங்களால் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு காலத்துக்கு நீங்கள் முசூரியில் தங்கியிருக்கவேண்டும். இங்கு எனக்குக் கிடைக்கும் நாட்கள் பலன்தரத்தக்க விதத்தில் செலவிடப்படும். எனவே நீங்கள் இசைந்தால், நான் 31-ம் தேதியோ அல்லது உங்கள் விருப்பம்போல் அதற்குப் பிறகோ டில்லிக்கு வந்து சேருகிறேன். முசூரியில் நீங்கள் பூரண ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். டில்லியில் நாம் பேசிக் கொள்ளலாம்.

தர்பார் கோபால்தாஸைப் பற்றி நான் பத்திரிகைகளில் வாசித்தேன். இன்று அவரிடமிருந்தும் ஒரு தந்தி வந்தது. எனவே அவருக்குக் கடிதம் எழுதியுள்ளேன்.

## 248

வால்மீகி மந்திர், புது டில்லி,
ஜூன் 23, 1947

இன்று கிடைத்துள்ள செய்தி சிறிதும் நம்ப முடியாததாக இருக்கிறது. ராய்ட்டர் தந்தியைப் பாருங்கள். மசோதாவில் இரண்டு நாடுகள் இருக்கும். அப்படியாயின் நாம் நடத்திவரும் பிரமாதமான பேச்சு வார்த்தைகளுக்கு என்ன மதிப்பு இருக்கிறது? இது உங்களால் ஒப்புக் கொள்ளப்படாத ஒரு விஷயமாயின், நீங்கள் எல்லோரும் இந்த அக்கிரமத்தைத் தடுக்க முடியும். மசோதா நிறைவேறிவிட்டால், பின்னர் நீங்கள் கூறுவதற்கு யாரும் செவி சாய்க்கமாட்டார்கள்.

....செய்துள்ள பிரசங்கம் மிகவும் மோசமாக இருக்கிறது. அவர் வேடிக்கையாக அவ்விதம் பேசினர் என்பதால், அதிலுள்ள அபாயம் குறைந்துவிடாது. அவர் மீது வேறு ஏதாவது குற்றம் இருந்தால், ராஜினாமா செய்யும்படி அவரை வற்புறுத்த முடியுமென்று கருதுகிறேன். ஆனல் முற்றிலும் இந்தக் காரணத்துக்காக அவரை விலக்குவது கடினமாக இருக்கும்.

இதைப் பற்றி ஜவாஹர்லாலுக்கும் நான் எழுதியிருக்கிறேன்.

## 249

புது டில்லி,
ஜூலை 18, 1947

அக்பரின் கடிதத்தை நான் இத்துடன் இணைத்திருக்கிறேன். அது முற்றிலும் நியாயமானதாக இருக்கிறது. அவர் உங்களுக்கும் எழுதியிருக்கிருர். அதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதை எனக்கு அறிவியுங்கள். உங்களுக்கு நேரம் இல்லாவிட்டால், அதைக் கவனித்து ஆவன செய்யும் பொறுப்பை என்னிடம் விட்டுவிடுங்கள்.

## 250

புது டில்லி,
ஜூலை 24, 1947

நான் சிந்தனை செய்யச் செய்ய, காஷ்மீர் விவகாரம் தீர்ந்த உடனே இங்கிருந்து புறப்பட்டுவிட வேண்டும் என்ற எண்ணம் எனக்கு மேன்மேலும் அதிகமாகிவருகிறது. இப்போது செய்யப்பட்டு வரும் காரியங்களில் பலவற்றையும் நான் விரும்பவில்லை. எனினும் உங்களுடைய போக்கை மாற்றிக் கொள்ளவேண்டுமென நான் சொல்லவில்லை. ஆனல் அதனுடன் எனக்குத்

தொடர்பு இருப்பது போல் தோன்றக்கூடாது என்றே நான் கூறுகிறேன். மேலும் நான் பீகாருக்குச் சென்றுவிட்டு, பிறகு அங்கிருந்து 15-ம் தேதி நோவாகாலிக்குச் செல்ல வேண்டும். அதுவும் அவசரமான வேலையே ஆகும். எனவே நீங்கள் இனி மேலும் என்னை இங்கே நிறுத்திவைத்துக் கொள்ளாதீர்கள் என்று மாத்திரமே நான் கேட்கிறேன். எப்படியிருந்தாலும் இன்னும் நான்கு அல்லது ஐந்து நாட்கள் இருக்கின்றன.

'ஹரிஜன்' வெளியாவதை இப்போது நிறுத்திவிடவேண்டு மென நான் நினைக்கிறேன். ஏனெனில் உங்களுக்கு எதிர்த் திசையில் நாட்டை நடத்திச் செல்ல நான் விரும்பவில்லை. உங் களுடைய ஓய்வு நேரத்தில் இவ்விஷயங்களையெல்லாம் பற்றித் தயவு செய்து சிந்தித்துப் பாருங்கள்.

## 251

புது டில்லி,
ஜூலை 26, 1947

இரண்டு கக்ஸார்கள் நேற்று என்னைப் பார்க்க வந்தனர். அவர்களில் ஒருவர் தேம்பித் தேம்பி அழுதார். ஓர் அதிகாரி அவர்களிடம் வந்து அவர்கள் அந்த இடத்தைவிட்டுச் செல்லுவ தால் மேற்கொண்டு யாதொரு துன்பமும் நேராது என்று அவர் களுக்கு ஊறுதி கூறியதாக அவர் (கக்ஸார்) குறிப்பிட்டார். ஆனல் அன்று மாலையிலேயே மசூதியில் துப்பாக்கியால் சுடப்பட்டதாயும், பலர் மாண்டனர் என்றும் அவர் கூறினர். எழுபது வயதுள்ள ஒரு கிழவர் மீது ஏழு தோட்டாக்கள் பாய்ந்தனவாம். காய மடைந்தவர்களில் எத்தனை பேர் மாண்டனர் என்றும், எத்தனை பேர் உயிருடன் இருக்கிருர்கள் என்றும் தெரியவில்லையென அவர் கூறினர். மசூதியைச் சூழ்ந்து கொண்டதால், மூன்று நாட்கள்வரை கக்ஸார்கள் பசியினுலும் தாகத்தினுலும் அவதிப் பட்டதாகவும், மலஜலம் கழிக்கக் கூட அவர்கள் வெளியே செல்ல முடியவில்லை என்றும் அவர் சொன்னர். இதையெல்லாம் கேட்டு நான் திடுக்கிட்டுப் போனேன். நான் அவர்களைக் கடிந்து கொண் டேன்; அவர்கள் கூறுவது உண்மையாக இருக்க முடியாது என்றேன்.

"பன்முறையும் வேண்டிக் கொண்டும்கூட அவர்கள் மசூதியை விட்டுச் செல்ல மறுத்துவிட்டார்கள். கடைசியில் போலீஸ் அதி காரிகள் மசூதி நிர்வாகியான இமாமிடம் அனுமதி பெற்று மசூ திக்குள் சென்று, முஸ்லிம் மேற்பார்வையாளரின் விருப்பத்திற் கிணங்க நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள். அவர்கள் மீது பலாத்காரம் உபயோகிக்கப்படவில்லை. கண்ணீர்ப் புகை பிர யோகித்ததைத் தவிர வேறு எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. அப்போது யாரும் கொல்லப்படவில்லை."

மேற்கண்ட விதம் தாங்கள் முன்பு என்னிடம் கூறியதை அவர்களுக்குத் திருப்பிக் கூறினேன். அவர்களுடைய கதையை நான் நம்ப முடியாது என்றும் அவர்களிடம் சொன்னேன். அவர்கள் பின்வருமாறு பதில் அளித்தனர்:

"உங்களுடைய சொந்த சர்தார் ஏதாவது சொல்லுவாராயின், அதற்கு மாறாக நாங்கள் கூறும் எதுவும் நம்பிக்கை அளிக்காது. கக்ஸார்கள் இறந்து போய்விட்டனர். இப்போது நீதியை நாடுவதால் என்ன பலன்? இருந்தாலும் ஒரு நாள் நீங்கள் உண்மையை அறிந்து கொள்வீர்கள். உண்மையை ஒருபோதும் அமுக்கிவைக்க முடியாது."

அவர்களுக்கு ஏதாவது தவறு இழைக்கப்பட்டதை நான் அறிந்தால், என்னுடைய நெருங்கிய நண்பர்களுக்காகவும் அன் பார்ந்தவர்களுக்காகவும் கூட அதை மறைத்து வைக்கமாட்டேன் என்றும், அதற்குமேல் நான் எதுவும் கூறுவதற்கில்லை என்றும், நான் எனது கடமையைச் செய்வேன் என்றும் அவர்களிடம் நான் கூறினேன்.

இதில் ஏதாவது உண்மை இருந்தால், தயவு செய்து எனக்கு அறிவியுங்கள்.

## 252

புது டில்லி,
*ஜூலை 28, 1947*

ஜவாஹர்லால் காஷ்மீருக்குச் செல்லுவதை நீங்கள் அங்கீகரிப்பதாயும், ஆனால் நான் அங்கு செல்லுவதை நீங்கள் அங்கீகரிக்கவில்லை என்றும் ஜவாஹர்லால் நேற்றிரவு என்னிடம் கூறினர். எனவே என் விருப்பப்படி செய்து கொள்ள அவர் எனக்குச் சுதந்திரம் அளித்துள்ளார். ஆகையால் நான் நாளை லாகூருக்குப் புறப்பட உத்தேசித்திருக்கிறேன். 30-ம் தேதி லாகூருக்கும் அமிருத சரஸிற்கும். 31-ம் தேதி ராவல் பிண்டிக்கும் செல்லுவேன். அங்கே நான் ஒரு நாள் தங்கிவிட்டு, பிறகு பாட்னுவுக்கு ரயிலில் புறப்படுவேன். இது சரியாயின், தயவு செய்து உங்களுடைய அங்கீகாரத்தைத் தெரிவியுங்கள். அவ்விதம் தெரிவித்தால் நான் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யலாம். நீங்கள் கூட சில ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியிருக்கலாம், அல்லவா?

வைஸ்ராய்க்கு எனது குறிப்பு உடனடியாக அனுப்பப்படும்.

# 253

புது டில்லி,
ஜுலை 28, 1917

காந்திஜி ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதியதாவது :

நான் காஷ்மீர் செல்ல விரும்பவில்லை என்றும், எனக்குப் பதிலாக ஜவாஹர்லாலே செல்லுவார் என்றும் நான் முன்பே எழுதியிருக்கிறேன். ஆனால் இப்போது வைஸ்ராயிடமிருந்து எனக்கு வந்துள்ள கடிதம் ஒன்றில், நான்தான் காஷ்மீருக்குச் செல்ல வேண்டும் என்றும், ஜவாஹர்லால் செல்லக்கூடாது என்றும் அவர் கூறியுள்ளார்.* நான் யாதொரு தீர்மானத்திற்கும் வர முடியவில்லை. நாம் என்ன செய்வது ?

# 254

லாகூர்,
ஆகஸ்டு 6, 1947

புதுடில்லியில் என்னைச் சந்தித்த கக்ஸார் கனவான்களிடம் நான் இந்தக் கடிதத்தைக் கொடுத்திருக்கிறேன். மேற்கொண்டு அநீதி இழைக்கப்படுவதாக அவர்கள் இப்போது புகார் கூறுகின்றனர். அவர்கள் அவர்களுடைய பெட்டி, படுக்கைகளை ஒரு ஹோட்டலில் வைத்துவிட்டு, என்னைப் பார்க்க வந்தார்களாம். அவர்கள் இராத நேரத்தில் போலீசார் அங்கு சென்று அவற்றை எடுத்துக் கொண்டுபோய்விட்டார்களாம். அவ்விஷயமாக உங்களுக்கு எழுதுவதைக் காட்டிலும் அதிகமாக நான் எதுவும் செய்ய முடியாதென்று அவர்களிடம் கூறினேன். ஒரு சிபாரிசுக் கடிதம் கொடுக்க வேண்டும் என்றும், அப்படியானால் தான் தாங்கள் கூறுவதற்கு [யாராவது பொறுமையுடன் செவி சாய்ப்பார்கள் என்றும், இல்லாவிடில் தாங்கள் கூறுவதை யாரும் கேட்கமாட்டார்கள் என்றும் அவர்கள் கூறினர். அவர்களை நீங்கள் சந்திப்பதை நான் விரும்பவில்லை. அவர்களுடைய புகார்களைக் கேட்கும்படி யாராவது ஒரு அதிகாரியிடம் நீங்கள் சொன்னால் அதுவே போதும்.

இவ்விஷயமாக நான் முன்பு எழுதிய கடிதத்திற்குத் தயவு செய்து பதில் அனுப்புங்கள்.

---

* பண்டித ஜவாஹர்லால் நேரு காஷ்மீருக்கு விஜயம் செய்யவேண்டாம் என்று வைஸ்ராய் லார்டு மவுண்ட்பாட்டன் காந்திஜிக்கு எழுதிய கடிதம் 13-ம் தொகுப்பு 618, 619 பக்கங்களில் வெளியாகியிருக்கிறது.

## சர்தார் அனுப்பிய பதிலின் ஒரு பகுதி

இந்த கக்ஸார்கள் உங்களுக்கு அனாவசியமாகத் தொல்லை கொடுத்துவருகிறார்கள். டில்லி மசூதியில் கக்ஸார்கள் சுடப்பட்டனர் என்று அவர்கள் கூறியதாக ஜூலை 26-ம் தேதி எனக்கு நீங்கள் எழுதியிருந்தீர்கள். அங்கே உண்மையில் என்ன நிகழ்ந்தது என்பதை நான் உங்களிடம் நேரில் சொன்னேன். டில்லியில் கக்ஸார்கள் துப்பாக்கியால் சுடப்படவில்லை; அவர்களில் எவரும் தோட்டாக் காயத்தினால் இறக்கவுமில்லை. பல கக்ஸார்கள் ஒரு மசூதிக்குள் வந்து கதவை மூடிக்கொண்டு 1947 ஆகஸ்டு 15-ம் தேதி சுதந்திர வைபவங்கள் நடைபெறும்போது ஆர்ப்பாட்டம் செய்யத் திட்டமிட்டிருந்தனர். காங்கிரஸ் கொடியேற்ற வைபவத்தைத் தடுக்கவும் கலகம் செய்யவும் திட்டமிட்டிருந்தனர். எனவே ஒரு முஸ்லிம் கமிஷனர் மசூதியில் கண்ணீர்ப் புகையை உபயோகித்து அவர்களைக் கைது செய்தார். நடந்தது அதுதான். நீங்கள் கொடுத்த கடிதத்துடன் சில கக்ஸார்கள் லாகூரிலிருந்து இன்று வந்து சேர்ந்தனர். அவர்கள் கூறும் புகார் ஆதாரமற்றது. அவர்களை நான் கமிஷனரிடம் அனுப்பியிருக்கிறேன். டில்லியும் ஆக்ராவும் பாகிஸ்தானில் சேர்க்கப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்புகின்றனர். அவர்கள் ஆஜ்மீரைக் கூடக் கேட்கின்றனர். இதற்காக அவர்கள் டில்லியை தங்களுடைய போராட்டத் தளமாக உபயோகிக்க விரும்புகின்றனர். அவர்கள் டில்லியில் தங்கியிருப்பதை கமிஷனர் விரும்பவில்லை. எனவே அவர்கள் மசூதியில் ஒளிந்து கொள்கின்றனர். இங்குள்ள முஸ்லிம் யாரும் அவர்களை ஆதரிக்கவில்லை.

## 255

லாகூர்,
ஆகஸ்டு 6, 1947

நான் ஜவாஹர்லாலுக்கு ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் வாசிப்பதற்காக அதை அவர் உங்களிடம் கொடுப்பார்.

மகாராஜாவுக்கு காக் * ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதன் நகலை அவர் உங்களுக்கு அனுப்புவார். நான் வாசிப்பதற்காக அதை அவர் என்னிடம் கொடுத்தார். அது எப்படியிருந்தாலும், அவரது வார்த்தைகளில் இனிமை ததும்புகிறது. நான் மகாராஜாவுடனும் மகாராணியுடனும் ஒரு மணி நேரம் பேசினேன். பிரஜைகளின் விருப்பப்படியே நடந்து கொள்ள வேண்டும் என்பதை அவர் ஒத்துக் கொண்டார். ஆனால் அடுத்தபடியாகத் தாம் செய்யப்போவது என்ன என்பதைப்பற்றி அவர் எதுவும் சொல்லவில்லை. எனவே தமது

* அச் சமயம் காக் காஷ்மீர் பிரதம மந்திரியாக இருந்தார்.

வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்வதற்காக அவர் தம்முடைய அந்தரங்கக் காரியதரிசியை என்னிடம் அனுப்பியிருந்தார். அவர் காக்கை விலக்கிவிட விரும்புகிறார். ஆனால் எப்படி விலக்குவது என்பதைப்பற்றி அவர் ஆலோசித்துவருகிறார். காக்கிற்குப் பிறகு அவரது ஸ்தானத்திற்கு சர் ஜெய்லால் வருவது அநேகமாக நிச்சயம்தான். அவ்விஷயத்தில் நீங்கள் ஏதாவது செய்ய வேண்டும். காஷ்மீரில் நிலைமை அபிவிருத்தி அடையும்படி செய்ய முடியும் என்பதே எனது அபிப்பிராயமாகும்.

வாஹ் முகாமில் நல்ல வேலைகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஜனங்களை அங்கிருந்து அப்புறப்படுத்தியிருக்கக் கூடாது. நீங்கள் இவ்விஷயமாக பாகிஸ்தான் அரசாங்கத்துடன் விவாதிக்க வேண்டும். ஹிந்துக்களும் சீக்கியர்களும் ராவல்பிண்டியில் மீண்டும் ஸ்தாபிக்கப்பட வேண்டும். பஞ்ச சாகிபிலும், வாஹிலும் நான் செய்த பிரசங்கங்களைத் தயவு செய்து பாருங்கள். அந்தப் பிரசங்கங்களில் இந்த யோசனையையே நான் கூறியிருக்கிறேன்.

இங்கே ராமேசுவரி நேருவுடன் நான் தங்கியிருக்கிறேன். இங்கிருந்து இன்று மாலை நான் கல்கத்தா மெயிலில் புறப்படுகிறேன். நான் பாட்னாவில் ஒரு நாள் தங்கிவிட்டு பிறகு கல்கத்தாவுக்கும் நோவாகாலிக்கும் செல்லுவேன்.

அவசியம் என்று தோன்றியதால், நான் முகாமில் சுசீலா நய்யாரை விட்டுவிட்டு வந்திருக்கிறேன். இந்த ஏற்பாட்டை மக்கள் மிகவும் விரும்பினர். அவர்கள் மிகவும் திகிலடைந்திருக்கின்றனர். ஆனால் அதற்குக் காரணம் எதுவும் எனக்குத் தென்படவில்லை.

நீங்கள் உங்களுடைய ஆரோக்கியத்தை அக்கறையுடன் கவனித்து வருகிறீர்களென நம்புகிறேன்.

## 256

கல்கத்தா,
ஆகஸ்டு 13, 1947

நான் இங்கேயே ஆழ்ந்துவிட்டேன். இப்போது நான் ஒரு பெரிய அபாயத்தை மேற்கொள்ளப்போகிறேன். அதாவது சுஹ்ரவர்தியும் நானும் கொந்தளிப்பு ஏற்பட்டுள்ள பிரதேசத்தில் சேர்ந்தாற்போல் தங்கப் போகிறோம். காத்திருந்து பாருங்கள்.

காக் காஷ்மீரிலிருந்து புறப்பட்டுவிட்டதாகத் தோன்றுகிறது.

ராஜாஜிக்கு எதிரான ஆர்ப்பாட்டங்களைப் பற்றி உங்களைப் போலவே நானும் சரத்பாபுவுக்கு எழுதியிருக்கிறேன். ஆனால் இதுவரையில் அவரிடமிருந்து எவ்விதமான தகவலும் இல்லை. இந்தத் தடவை அவர் என்னை வந்து பார்க்கவுமில்லை.

கக்ஸார்களைப் பற்றிய விவரங்களை நான் முற்றிலும் புரிந்து கொள்கிறேன். அவர்கள் விஷயத்தில் என் கடமை என்று தோன்றியதை நான் செய்தேன். நமக்கு எதிராக அவர்கள் எதுவும் சொல்லும்படி இருக்கக்கூடாது அல்லவா? மற்றவர்கள் விஷயத்திலும் நான் அவ்விதமேதான் நடந்துகொள்கிறேன்.

நம்முன் உள்ள வேலை கஷ்டமானது. அந்தக் கஷ்டம் நாளுக்கு நாள் அதிகமாகியும் வருகிறது. மழை பெய்யாவிட்டால் நாம் என்ன செய்யப்போகிறோம்? மழை பெய்யாவிடில் பலர் பட்டினியால் மரணம் அடைவார்கள், அல்லவா?

சமஸ்தானங்களின் பிரச்னை மிகவும் கடினமானது. உங்கள் ஒருவரால்தான் அதைத் தீர்க்க முடியும். ஆனால் உங்களுடைய உடல் நலனைப்பற்றிய பிரச்னையை யார் தீர்ப்பது?

## 257

கல்கத்தா,
ஆகஸ்டு *17, 1947*

இந்தக் கூக்குரல்களால் என் காதுகள் செவிடாகிவிட்டன. அலுப்பு சலிப்பின்றி நான் தரிசனம் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறார்கள். இதிலிருந்து நான் எப்படி விடுதலை பெறுவது என்பதே எனக்குத் தெரியவில்லை. மற்றச் செய்திகளை நீங்கள் பத்திரிகைகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இச் சம்பவங்கள், *1920-21*-ல் கிலாபத் கிளர்ச்சி நடந்த நாட்களை எனக்கு நினைவூட்டுகின்றன. எனினும் இது தற்காலிகமான உற்சாகமாக முடிந்துவிட்டால் என்ன செய்வது?

லாகூரிலுள்ள ஹிந்து அகதிகளிடமிருந்து வந்த ஒரு தந்தியை நான் இத்துடன் இணைத்திருக்கிறேன். நான் அதற்குப் பதில் அனுப்பவில்லை. மக்களைக் கூட்டம் கூட்டமாகப் படுகொலை செய்தல், தீ வைத்தல் போன்றவைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ள செய்திகள் உண்மையாயின், அவை மிகுந்த வேதனையைக் கொடுக்கக் கூடியவை. உண்மையான செய்திகளை எனக்கு அறிவியுங்கள். தற்போது நான் இவ்விடத்திலிருந்து புறப்பட முடியாதவனாக இருக்கிறேன்.

ஹொரேஸ் அலெக்சாண்டரிடமிருந்து வந்துள்ள ஒரு கடிதமும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. அவர் கூறியுள்ள யோசனையை நான் உண்மையில் விரும்புகிறேன். அந்த இடத்திற்கு நேரில் சென்று ஆராய்ச்சி செய்த பிறகு அவர் சிபாரிசுகள் செய்வாராயின், ஏதாவது அநீதி இழைக்கப்படுமாயின் அது தடுக்கப்படலாம்.

சந்திரநகரிலுள்ள சில கிளர்ச்சிக்காரர்கள் நிர்வாக அதிகாரியின் வீட்டைச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். எனவே பிரபுல்லபாபு அங்கே சென்றிருக்கிறார்.

# 258

கல்கத்தா,
ஆகஸ்டு 26, 1947

உங்களுடைய கடிதம் கிடைத்தது. அதை வாசிக்க மிகவும் வேதனையாக இருக்கிறது. இருந்தாலும் உங்களால் இயன்ற எல்லாவற்றையும் நீங்கள் செய்துவிட்டீர்கள். நான் மரணத்தின் வாயிலில் சுசீலாவை விட்டுவிட்டு வந்தேன். வாஹிலுள்ள அகதிகளுக்கு அபாயம் எதுவும் இல்லை என்ற நிலை ஏற்பட்டால்தான், அவள் அங்கிருந்து வர முடியும். இல்லாவிட்டால் அவள் அவர்களுடன் அங்கேயே இறக்கட்டும்.

பஞ்சாபில் எதுவும் நிகழலாம். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதம் இன்றுதான் வந்தது. அதில் அடங்கியுள்ள விவரங்களெல்லாம் உண்மையாக இருக்க முடியுமா? பஞ்சாபிற்குச் செல்லும்படி என்னை பலமாக வற்புறுத்திவருகிறார்கள். என்ன செய்வதென்றே எனக்குத் தெரியவில்லை. நான் பஞ்சாபிற்குச் செல்லவேண்டும் என்றும், ஆனால் இப்போது செல்ல வேண்டாம் என்றும் ஜவாஹர்லால் கூட எனக்கு எழுதிவருகிறார். ஞாயிற்றுக்கிழமை வரையில் நான் இங்கேயே இருக்க உத்தேசித்திருக்கிறேன்; அதன் பின் நோவாகாலிக்கும், அங்கிருந்து பீகாருக்கும் செல்ல உத்தேசித்திருக்கிறேன். அந்தப் பிரயாணத்திற்கு இரண்டு வாரங்கள் செல்லும். நான் டில்லிக்கு வந்தால் என்னால் என்ன செய்ய முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை. அங்கு நான் வந்தால், நீங்கள் எல்லோரும் செய்து வரும் அலுவல்களுக்கு நான் இடையூறாகத்தான் இருப்பேன் என்று அஞ்சுகிறேன்.

இப்போது தாம் ராஜிநாமா செய்யலாமா என்று கிருபளானி கேட்கிறார். இதைப் பற்றி உங்களெல்லோருடனும் நான் பேசிக்கொண்டிருந்தபோது, 15-ஆம் தேதிக்குப் பிறகு அவர் அவ்வாறு செய்யலாமென நான் தெரிந்து கொண்டேன். உங்களில் ஒருவருக்கும் அவரைப் பற்றி உயர்ந்த அபிப்பிராயம் இல்லை. அவரைவிட மூத்தவர்களுக்கு அவரிடம் நம்பிக்கை இல்லையாயின், அவர் ராஜிநாமா செய்ய அனுமதிப்பதே சிறந்ததென்று தோன்றுகிறது. அவருடைய ஸ்தானத்தில் யாரை நியமிப்பது என்பதை இப்போதே ஆலோசிப்பதுதான் பலன்தரத்தக்கதாகும். தற்போதைய நிலைமை அபாயகரமானதாக எனக்குத் தோன்றுகிறது. இங்கே இருந்து கொண்டு நான் காணும் அபாயத்தை, அதன் மத்தியில் இருக்கும் உங்களால் உணரமுடியா

மல் இருக்கலாம். நான் இருக்க வேண்டிய இடம் இந்தப் பிரதேசங்கள்தான் என்பதை என்னால் காண முடிகின்றது. பஞ்சாப் நிலைமையைப் பற்றியும் நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். எனினும் நான் அங்கு செல்ல வேண்டுமென யாராவது விரும்புகிறார்களா என்பது எனக்குச் சந்தேகம்தான். ஹைதராபாத் விவகாரம் இக்கட்டுகள் நிறைந்ததாக இருக்கிறது. எனினும் அவற்றைச் சீர்திருத்த நீங்கள் ஒரு வழியைக் கண்டுபிடிப்பீர்கள் என்பது நிச்சயம்.

## சர்தாரின் கடிதம்

மேற்கண்ட கடிதம், சர்தாரின் பின்வரும் கடிதத்திற்கு காந்திஜி அனுப்பிய பதிலேயாகும்:

வாஹில் நீங்கள் சுசீலாவை விட்டுவிட்டுச் சென்ற போது, கவலைப்படுவதற்கு அது மற்றொரு காரணமாகியது. ராணுவத்தைச் சேர்ந்த ஒரு விசேஷ தூதர் சுசீலாவின் கடிதத்தை இன்று கொண்டுவந்தார். அதை நான் உங்களுக்கு அனுப்பியுள்ளேன்.

பஞ்சாபில் நிலைமை மேலும் படுமோசமாகியிருக்கிறது. மக்கள் முற்றிலும் வெறிபிடித்தவர்களாக மாறிவிட்டார்கள். அவர்கள் நகரங்களையும் கிராமங்களையும் கொளுத்திவருகின்றனர்; அவர்கள் முலாம் பழங்களை வெட்டுவது போல் மக்களை வெட்டி வீழ்த்திவருகின்றனர். ராணுவத்தைச் சேர்ந்தவர்களும், போலீசாரும் கூட கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு அக்கிரமங்கள் செய்துவருவதாகச் செய்திகள் கிடைத்துள்ளன. மக்கள் ஆயிரக்கணக்கில் வெளியேறி, அவர்கள் செல்லுமிடங்களிலெல்லாம் திகிலைப் பரப்பிவருகிறார்கள். பஞ்சாபில் நிகழ்ந்த சம்பவங்கள் மற்றவிடங்களில் நடக்காமல் தடுக்க நாம் மிகவும் பாடுபட்டு உழைக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். ஒவ்வொரு நாளும் பஞ்சாபிலிருந்து வெளியேறி ஓடிவரும் மக்கள் டில்லிக்கு வந்துகொண்டிருக்கிறார்கள். எனவே நாங்கள் ஓய்ச்சல் ஒழிவின்றி இரவு பகலாக அவர்களையே கவனிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அவர்கள் துக்கத்திலும் பீதியிலும் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களைச் சமாதானப்படுத்துவது கடினமாக இருக்கிறது.

உணவு தானியங்களின் பற்றுக்குறையும் கடினமான ஒரு பிரச்னையாக இருக்கிறது. உபரியாக தானியங்களை வைத்துக்கொண்டிருப்போர், அவற்றைக் கொடுக்க மறுக்கிறார்கள். அரிசியை விற்க மறுத்துவிடுமாறு, பிரகாசமும் ரங்காவும் மக்களுக்குத் தூபம் போட்டுவருகிறார்கள். காங்கிரஸ் ஊழியர்களோவெனில், அதிகாரத்தைக் கைப்பற்றும் போராட்டத்திலும், எண்ணிக்கையற்ற சங்கடங்களைச் சிருஷ்டிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டு வருகிறார்கள்.

## சர்தாரின் பதில்

காந்திஜியின் 258-ம் கடிதத்திற்கு சர்தார் அனுப்பிய பதில் பின்வருமாறு:

நீங்கள் பஞ்சாபுக்குச் சென்றால், அங்கே உங்களால் எதுவும் செய்ய இயலாதென்றே நான் அஞ்சுகிறேன். அங்கே மூண்டுள்ள பெரும் தீயை உங்களால் அணைக்க முடியாது. ஹிந்துக்களும், சீக்கியர்களும், முஸ்லிம்களும் அங்கே சேர்ந்து வாழ முடியாது. ஒருவேளை எதிர்காலத்தில் ஹிந்துக்கள் அங்கே சென்று வசிக்கலாம்; ஆனால் இன்று வசிக்க முடியாது. எனினும் சீக்கியர்களோவெனில் தொலைவிலுள்ள எதிர்காலத்தில்கூட அங்கே முஸ்லிம்களுடன் சேர்ந்து வசிக்க முடியுமென்று கற்பனை செய்துகொள்வதும் இயலாத காரியம். அந்த விஷம் ராணுவத்தினரிடையும் புரையோடியிருக்கிறது. இரு திசைகளிலும் (பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கும், இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்கும்) பதினயிரக்கணக்கான மக்கள் ஓடிவருகிறார்கள். அகதி முகாம்களில் எப்போதும் திகில் நிலவி வருகிறது. வெளியில் ஓடுவோர் கூட படுகொலை செய்யப்பட்டு வருகிறார்கள். அவர்களைப் பாதுகாப்பான இடத்துக்கு அப்புறப் படுத்துவதற்குப் போதிய ஏற்பாடுகள் கூட செய்யப்படவில்லை.

## 259

பாலியாகாட்,
ஆகஸ்டு *30, 1947*

இப்போது ஏற்பட்டுள்ள நிலைமையைச் சமாளிப்பதற்கான சக்தியையும் விவேகத்தையும் உங்களெல்லோருக்கும் கடவுள் அளிப்பாராக. நீங்கள் பதவியேற்றபின் உடனடியாக இவ்வளவு கஷ்டமான நிலைமையைச் சமாளிக்கும்படி நேருமென யார் நினைத்தார்கள்? கடவுள் சித்தப்படி நடக்கும்.

ஹொரேஸ் அலெக்சாண்டர் என்னுடன் இருந்து வருகிறார்.

*259-ம் கடிதம், சர்தாரிடமிருந்து வந்த பின்வரும் கடிதத்திற்கு காந்திஜி அளித்த பதிலேயாகும்:*

*சுசீலா சம்பந்தமாக எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன. எனவே அவரைப் பற்றியோ அல்லது அவரது முகாமைப் பற்றியோ கவலைப்படுவதற்கு எதுவுமில்லை. எனினும் பஞ்சாப் இன்னும் கட்டுப்பாட்டிற்குள் அடங்கி வரவில்லை.*

*நேற்று லாகூரில் ஒரு நல்ல கூட்டம் நடந்தது. ஜின்னாவும், லீகைச் சேர்ந்த மற்றவர்களும் அதற்கு வந்திருந்தனர். அப்போது கொண்டு வரப்பட்ட எல்லாத் தீர்மானங்களும் ஏகமன*

தாக நிறைவேறின. எனினும் அவ்வளவு தூரம் பரவியுள்ள தீயை அணைப்பதற்குச் சிறிது காலம் ஆகும்.

ஜவாஹர்லாலும் லியாகத் அலியும் இன்று முதல் சேர்ந்தாற் போல் பஞ்சாபில் பிரயாணம் செய்வதற்காகச் சென்றிருக்கிறார்கள். மற்றவர்களும் ஜனங்களிடையே பிரயாணம் செய்து வருகிறார்கள். நிலைமையைக் கட்டுப்படுத்த எல்லோரும் மிகவும் கஷ்டப்பட்டு உழைத்து வருகிறார்கள். வெற்றி கடவுளின் கையில் இருக்கிறது.

ஹைதராபாத் புண் இன்னும் வேதனையைக் கொடுத்து வருகிறது. அதைச் சீர்படுத்த நாங்கள் கடினமாக உழைத்து வருகிறோம். எனினும் அது சீர்படச் சிறிது காலம் ஆகும். ஜுனாகாத்தும் தொந்தரவு கொடுத்து வருகிறது. இருந்தாலும், அதிகநாட்கள் தாமதமின்றி அது அமைதியாகிவிடும். இந்தூர் பிரச்னை தீர்ந்துவிட்டது. அங்குள்ள பிரிட்டிஷாரின் ஸ்தானத்தில் ஓர் இந்தியர் நியமிக்கப்பட்டுள்ளார். தற்காலிகமாக நான் என். ஸி. மேத்தாவை அந்த ஸ்தானத்திற்கு நியமித்திருக்கிறேன். திறமைசாலிகள் ஒரு சிலரே உள்ளனர். அவர்களுடைய ஊழியத்தைப் பெறுவது கடினமாக இருக்கிறது.

நாளை நான் ஜலந்தருக்குச் செல்லுகிறேன். அங்கே பரந்த முறையில் நிவாரண வேலைகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது....

## 260

கல்கத்தா,
செப்டம்பர் *1, 1947*

உங்கள் கடிதம் எனக்குக் கிடைத்தது. போபாலின் கடிதம் விசித்திரமாக இருக்கிறது. அதை நான் விரும்பவில்லை. உங்களுடைய வேலை மிகவும் கடினமாகும். அதற்கு அவசியமான பலத்தை கடவுள் உங்களுக்கு அருள்வாராக. போபால் நேர் வழியில் செல்லுமாயின், ஹைதராபாத் பிரச்னையைத் தீர்ப்பது எளிதாக இருக்கும். பாகிஸ்தான் விஷயத்திலும் அதுதான் உண்மையாகும்.

என்னுடைய யாத்திரைத் திட்டத்தை நான் முன்பே அனுப்பியிருக்கிறேன். ஆனால் இப்போது அது ரத்தாகிவிட்டதாகவே கருத வேண்டும். நாளை காலை நாங்கள் நோவாகாலிக்குச் செல்லுகிறோம். எனவே ஷஹீத் சாகிப் வீட்டுக்குச் சென்றுவிட்டார். இப்போது இங்கு வீட்டிலுள்ளவர்களில் பெரியவன் நான்தான். டின்ஷா மேத்தா இங்குதான் இருக்கிறார். ஆனால் அவருக்கு வங்காளி பாஷை தெரியாது. எனவே அவரால் அதிகமாக எதுவும் செய்ய முடியாது.

மாச்வா பஜாரில் யாரோ ஒருவர் கத்தியினுல் குத்தப்பட்டுக் காயம் அடைந்தார். அவரைக் குத்தியவர் யார் என்பது ஒருவருக்கும் தெரியாது. எல்லோரும் பார்ப்பதற்காக மக்கள் அவரை இங்கே கொண்டு வந்தனர். ஒருவேளை அவர்கள் ஷஹீத் சுஹ்ரவர்த்தியைத் தாக்க விரும்பியிருக்கலாம். ஆனல் அவர்கள் அவரை இங்கே காணுததால், தங்களுடைய கோபத்தை அவர்கள் என்மீது திருப்பினர். முன் புறத்தில் கூச்சல் அதிகமாக இருந்தது. இரண்டு பெண்களும் (அபா காந்தியும் மனு காந்தியும்) கூட்டத்தினிடையே சென்ருர்கள். நான் படுக்கச் சென்று அப்போதுதான் தூங்க ஆரம்பித்தேன். எனக்கு ஏதாவது அபாயம் ஏற்படலாமென அஞ்சி எங்கள் வீட்டுச் சொந்தக்காரரான முஸ்லிம் பெண்மணி உள்ளே வந்து பார்த்தார். நான் சட்டென எழுந்திருந்தேன். நான் மௌன விரதத்தை விட்டுவிட்டு குழப்பம் ஏற்பட்ட இடத்திற்குச் சென்றேன். ஆனல் அந்தப் பெண்கள் என் அருகிலிருந்து அப்பால் செல்ல மறுத்துவிட்டனர். பின்னர் மற்றவர்களும் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். கண்ணுடி ஜன்னல்கள் உடைக்கப்பட்டன. மக்கள் கதவுகளையும் தகர்க்க முற்பட்டார்கள். மின்சார விசிறியின் கம்பிகளை அறுக்க சிலர் முயன்றனர். ஆனல் ஒரு சில கம்பிகளைத்தான் அறுக்க முடிந்தது. அவர்களை அமைதியாக இருக்கும்படி செய்வதற்காக நான் உரக்கக் கூவ ஆரம்பித்தேன். ஆனல் அதற்கு யார் செவி கொடுப்பார்கள்? மேலும் என்னுல் ஹிந்துஸ்தானியில் மாத்திரமே பேச முடிந்தது. அங்கிருந்தவர்கள் வங்காளிகள் ஆவர். அருகில் சில முஸ்லிம்களும் இருந்தனர். எதிர்த்துத் தாக்க வேண்டாமென அவர்களை நான் கேட்டுக்கொண்டேன். எனவே அவர்கள் என்னைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்களேயன்றி வேறு எதுவும் செய்யவில்லை. அங்கு இரு கோஷ்டியினர் இருந்தனர். ஒரு கோஷ்டியினர் மக்களின் ஆத்திரத்தைத் தூண்டிவிட்டார்கள், மற்ருெரு கோஷ்டியினர் அதைத் தணிக்க முற்பட்டனர். போலீசைச் சேர்ந்த இருவரும் வந்திருந்தார்கள். அவர்கள் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். நான் கைகளைக் கட்டிக் கொண்டு, என் குரலை உயர்த்தினேன். அவர்கள் என்னைத் தடுத்தார்கள். உள்ளே சென்று உட்காரும்படி கல்யாணம் எனக்கு யோசனை கூறினுர். பிஷன் மத்தியில் இருந்தார். அவர் பைஜாமா மாத்திரம் உடுத்திக் கொண்டிருந்ததால், அவரை ஒரு முஸ்லிம் என்று எண்ணிக் கொண்டார்கள். கற்கள் வீசப்பட்டன. ஒரு கல் முஸ்லிம் ஒருவர் மீது விழுந்தது. யாருக்கும் காயம் ஏற்படவில்லை. அந்தக் கல் என் மீது விழுந்திருக்க வேண்டும். அதன் பின் போலீஸ் சூபரின்டெண்ட் அங்கு வந்ததால், இளைஞர்கள் கலைந்துவிட்டார்கள். எனினும் அவர்களால் அந்த வீட்டுக்கு மிகுந்த சேதம் ஏற்பட்டது. பிறகு பிரபுல்லாபாபு வந்து சேர்ந்தார். போலீஸ் காவலை அதிகப்படுத்த வேண்டுமென்று அவர் கூறினுர். ஆனல் நான் அதை ஆட்சேபித்தேன்.

இந்தத் தாக்குதலில் ஹிந்து மகாசபை சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமென எல்லோரும் சந்தேகப்படுகின்றனர். கலகக்காரர்

களைக் கைது செய்யுமுன் அவர்கள் சியாமப் பிரசாதையும், சாட்டர் ஜியையும் பார்க்கவேண்டும் என்றும், அவசரப்பட்டு எதுவும் செய்துவிட வேண்டாம் என்றும் நான் போலீசாரிடம் கூறினேன். இங்கே நிலைமை அவ்விதம் இருந்து வருகிறது. அவ்வாருக நான் நடுநிசிக்குப் பிறகு அரை மணி நேரம்தான் தூங்குவதற்கு முடிந்தது. மறுபடியும் வழக்கம்போல் நான் விடியற்காலம் எழுந்து விட்டேன்.

இதைப் பற்றி ஜவாஹர்லாலிடம் தயவு செய்து பேசுங்கள். இத்தகைய நிலையில், நான் இங்கேதான் இருக்கவேண்டுமென நீங்கள் எதிர்பார்க்கவேண்டும். நாளை என்ன நடக்கும் என்பதை யார் கூறமுடியும்?

## 261

கல்கத்தா,
செப்டம்பர் *1, 1947*

இன்று அவர்கள் சண்டைக்குத் தயார் செய்து வருகிருர்கள். காயம்பட்டு மாண்ட இரண்டு முஸ்லிம்களின் உடல்களை இப்போதுதான் நான் பார்த்துவிட்டு வந்தேன். பல இடங்களிலும் கலகங்கள் மூண்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவ்வாருக நாம் அசாதாரணமான அற்புதம் என்று கருதியது, திடீரென்று தோன்றி மறையும் சாரமற்ற பகட்டு ஒளியாக முடிந்திருக்கிறது. இந்த நிலைமையில் எனது கடமை என்ன என்பது பற்றி இப்போது நான் சிந்தித்து வருகிறேன். மாலை 6 மணிக்கு இதை நான் எழுதிக் கொண்டிருக்கிறேன். இது நாளைத் தபாலில்தான் செல்லுமாதலின், நான் நாளை இன்னும் சில விஷயங்களைச் சேர்த்து எழுத முடியும். நான் பஞ்சாபுக்குச் செல்ல வேண்டுமென ஜவாஹர் தந்தி கொடுத்திருக்கிருர். எனினும் இப்போது நான் கல்கத்தாவை விட்டு எப்படிச் செல்ல முடியும்? இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கான ஒரு வழியைப் பற்றி நான் சிந்தித்து வருகிறேன். அத்தகைய சிந்தனைக்கு மௌனம் ஓர் உதவியாகும்...

## 262

செப்டம்பர் *2, 1947*
காலை *4-45* மணி.

நான் மேலே கண்ட கடிதத்தை எழுதிய பின், கலகங்களைப் பற்றிய செய்திகள் மேற்கொண்டு எனக்கு வந்து சேர்ந்தன. நேற்று மாலை ஏராளமானவர்கள் என்னைக் காணவந்தனர். எனது கடமை என்ன என்பதைப் பற்றி நான் சிந்தித்து வந்தேன். எனக்குக் கிடைத்த செய்திகள் அந்தக் கடமை

என்ன என்பதை உறுதி செய்தன. அதாவது நான் உண்ணு விரதம் இருக்கத் தீர்மானித்தேன். அது இரவு 8-15 மணிக்கு ஆரம்பமாயிற்று. இரவு ராஜாஜி இங்கே வந்தார். உண்ணு விரதம் இருக்கவேண்டாம் என்று எனக்கு அறிவுறுத்த அவர் முயற்சித்தார். எனினும் அவரது வாதங்கள் எதுவும் என் மனத்தைக் கவரவில்லை. என் முன் உள்ள வழியை நான் தெளிவாகக் கண்டேன். நீங்களோ அல்லது மற்றவர்களோ என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். கவலைப்படுவதால் யாதொரு லாபமும் ஏற்படுவதில்லை. தலைவர்கள் தங்களுக்குத் தாங்களே உண்மையாக நடந்து கொள்வார்களாயின், கலகங்கள் நின்றுவிடும்; உண்ணுவிரதமும் நிறுத்தப்படும். கலகங்கள் தொடர்ந்து நடைபெறுமாயின், நான் தொடர்ந்து உயிர் வாழ்வதால் என்ன பலன்? ஜனங்களைச் சமாதானப்படுத்தும் சக்தி கூட எனக்கு இராவிடில், நான் என்னைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென கடவுள் விரும்பினுல், அவர் மக்களின் உள்ளங்களில் புகுந்து, அவர்களுக்கு மதிமயக்கம் தெளிந்து புத்தி ஏற்படும்படி செய்து, என் உடலையும் காப்பாற்றுவார். கடவுளின் பெயராலேயே நான் உண்ணுவிரதத்தை ஆரம்பித்திருக்கிறேன்.

உங்களெல்லோரையும் கடவுள் பாதுகாத்துவருவாராக. எங்கும் நாச வேலைகளும் படுகொலைகளும் தலைவிரித்தாடிவரும் இச் சமயத்தில், கடவுளைத் தவிர வேறு யாருக்கும் எதுவும் செய்யச் சக்தி இல்லை.

## 263

*பிர்லா மாளிகை, புது டில்லி,*
*அக்டோபர் 6, 1947*

மௌலானா சாகிப் நேற்று மாலை இங்கு வந்து சிறிது நேரம் என்னுடன் பேசிக் கொண்டிருந்தார். நாம் மூவரும் சந்தித்துப் பேச வேண்டுமென அவர் விரும்புகிறுர். சந்திக்க வேண்டிய நேரத்தை நீங்கள்தான் நிர்ணயிக்க வேண்டும். நாளைக்கு எப்போதாவது ஒரு மணி நேரம் பேச வேண்டும் என்பதே அவரது விருப்பமாகும். அந்த நேரத்தைத் தயவுசெய்து எனக்கும் அவருக்கும் அறிவியுங்கள்.

## 264

*பிர்லா மாளிகை, புது டில்லி,*
*நவம்பர் 1, 1947*

நீங்கள் நேற்று என்னை வந்து பார்த்தீர்கள். ஆனல் நேற்று உங்களுடைய பிறந்த நாள் என்பது எனக்கு அப்போது நினைவில்லை. எனவே அப்போதே நான் உங்களுக்கு வாழ்த்துக் கூற

முடியவில்லை. அத்தகைய துக்ககரமான நிலையில் நான் இருந்து வருகிறேன்.

விசேஷ காரணங்களுக்காகவே நான் இந்தக் கடிதம் எழுது கிறேன்.

1. பிர்லா ஆலயத்துக்கு அருகில் அகதிகள் பெரும் கூட்ட மாக வருகிறார்கள். எல்லோரும் அங்கு வசிப்பது சாத்தியமல்ல. அவர்கள் எப்படியோ அங்கு அடைந்து கிடக்கிறார்கள். எனவே அவர்களை விரைவில் ஒரு முகாமுக்கு மாற்ற வேண்டும்.

2. மசூதிகளைப் பற்றி இத்துடன் ஒரு கடிதத்தை இணைத் திருக்கிறேன். அவ்விஷயமாக வந்துள்ள பல கடிதங்களில் இது ஒன்றாகும். அசுத்தம் செய்ய முடியாதவாறு எல்லா மசூதிகளும் பாதுகாக்கப்படும் என்றும், அவற்றிற்கு ஏதாவது சேதம் ஏற்பட் டிருந்தால் அது அரசாங்கத்தால் பழுதுபார்க்கப்படும் என்றும் ஓர் அறிக்கை வெளியிட வேண்டும்.

3. ஹிந்து மதத்திற்கோ அல்லது சீக்கிய மதத்திற்கோ பலாத்காரமாக மாற்றப்பட்டவர்கள் அவ்விதம் மதம் மாறியதாக அரசாங்கத்தினால் கருதப்படமாட்டார்கள் என்றும், அவர்களுக்குப் போதிய பாதுகாப்பு அளிக்கப்படும் என்றும் அறிவிக்க வேண்டும்.

4. இந்திய யூனியனிலிருந்து வெளியேறும்படி ஒரு முஸ்லிமைக் கூட வற்புறுத்தக் கூடாது.

5. யாரையாவது அவரது வீட்டைவிட்டு வெளியேறும்படி வற்புறுத்தி, அந்த வீட்டை மற்றவர்கள் சட்டத்திற்கு விரோத மாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தால், அது சட்டப்படி செல்லாது என்றும், அத்தகைய வீடுகள் அவற்றின் சொந்தக்காரர்களான முஸ்லிம்களுக்கே திருப்பிக் கொடுக்கப்படும் என்றும் அறிவிக்க வேண்டும்.

அத்தகைய அறிக்கை ஒன்றை வெளியிடுவது அவசியம் என்று நான் நினைக்கிறேன்.

## 265

பிர்லா மாளிகை,
டிசம்பர் *29, 1947*

அவர் நேற்றுத்தான் என்னைச் சந்தித்தார். நீங்கள் ஜம்மு வுக்குச் சென்றது தமக்குத் தெரியாது என்று அவர் கூறினார். உங் களுடன் ஜாம்சாகிப் சென்றதும் கூட அவருக்குத் தெரியாது. 'எனக்குத் தெரிந்திருந்தால், நான் சில யோசனைகளைக் கூறியிருப்

பேன் அல்லது ஒரு கடிதம் எழுதியிருப்பேன்' என்றும் அவர் கூறினார். இது சரிதானே?

ரந்தவாவை* நான் சந்தித்த பிறகு, நான் அவருக்கு நேராக எழுத இயலுமாயின் உங்களுடைய நேரம் வீணாகாது என்று கருதினேன். அவ்விதம் செய்வது ஒழுங்காக இருக்குமா?

* டில்லியில் அப்போது உதவி கமிஷனராக உத்தியோகம் வகித்த ஸ்ரீ ரந்தவாவைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

பகுதி ஆறு

# அன்னை கஸ்தூரிபாய்

மகாத்மா காந்தி மனித குலத்துக்கே மாணிக்கமாகவும், உலகம் போற்றும் உத்தமராகவும் விளங்கியது போலவே, அன்னை கஸ்தூரிபாயும் (1869-1944) பெண்குலத்தின் திலகமாகத் திகழ்ந்தார். நாட்டிற்காகவும் நாட்டு மக்களுக்காகவும் காந்திஜி பட்ட கஷ்ட நஷ்டங்களிலும், புரிந்த தியாகங்களிலும் அன்னைக்கும் பூரண பங்கு உண்டு. காந்திஜியைப் போலவே அன்னையின் சிறைவாழ்க்கை தென்னுப்பிரிக்காவிலேயே ஆரம்பமாகிவிட்டது. பணிவு, வியக்கத்தக்க பொறுமை போன்ற குணங்களைக் கஸ்தூரிபாயிடமிருந்தே தாம் கற்றுக் கொண்டதாக காந்திஜி கூறியிருப்பதிலிருந்து அன்னையின் இணையற்ற பெருமையை உணர்ந்து கொள்ளலாம். 'ஹிந்து மதத்தினிடம் எனக்குள்ள உணர்ச்சியை நான் எவ்விதம் விவரிக்க முடியாதோ அது போலவே என் மனைவியிடம் எனக்குள்ள உணர்ச்சியையும் நான் விவரிக்க முடியாது. இந்த உலகில் கஸ்தூரிபாயைப் போல் என் மனத்தை உருக்கும் சக்தி வாய்ந்த ஒரு பெண் வேறு எவருமே இல்லை' என்று காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார். அன்னை கஸ்தூரிபாய்க்கு காந்திஜி எழுதிய சில கடிதங்கள் இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன:

# 1

வால்க்ஸ்ரஸ்ட் சிறை,*
*நவம்பர் 9, 1908*

பேரன்புள்ள கஸ்தூரி,

உன்னுடைய நோயைப் பற்றி ஸ்ரீ வெஸ்ட்* அனுப்பிய தந்தி எனக்குக் கிடைத்தது. அச் செய்தி என் இதயத்தைப் பிளக்கின்றது. இதைக் கேட்டு நான் மிகவும் வருந்துகிறேன். என்றாலும், அங்குவந்து உனக்குப் பணிவிடை செய்யக் கூடிய நிலையில் நான் இல்லை. சத்தியாக்கிரகப் போராட்டத்திற்காக நான் எனக்குச் சொந்தமான எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்துள்ளேன். நான் அங்கு வருவதென்றே பேச்சிற்கே இடமில்லை. நான் அபராதத்தைச் செலுத்தினால்தான் சிறையிலிருந்து விடுதலை பெற்று அங்கு வர முடியும். ஆனால் நான் அபராதம் செலுத்தக் கூடாது. நீ தைரியத்துடன் இருந்து, அவசியமான ஊட்டச் சத்துள்ள உணவையும் அருந்தினால் நோய் தீர்ந்து குணமடைவாய். அவ்விதமின்றி என்னுடைய துரதிர்ஷ்டம் காரணமாக நீ காலமானால், நான் உயிருடன் இருக்கும்போது என்னை விட்டுப் பிரிந்திருக்கையில் நீ மரணம் அடைவதில் தவறு எதுவும் இல்லை என்றே நான் கூறுவேன். நான் உன்னை உள்ளன்புடன் நேசிப்பதால், நீ இறந்துவிட்டால்கூட, என்னைப் பொறுத்தவரையில் நீ உயிருடன் இருப்பதாகவே கருதுவேன். உன்னுடைய ஆன்மா இறப்பற்றது. நான் உன்னிடம் அடிக்கடி கூறியதையே திரும்பவும் கூறுகிறேன். அதாவது இப்போது ஏற்பட்டுள்ள நோய்க்கு நீ பலியாகிவிட்டால், நான் மீண்டும் விவாகம் செய்து கொள்ள மாட்டேன் என்று உனக்கு உறுதி கூறுகிறேன். கடவுளிடம் நம்பிக்கை வைத்து நீ அமைதியாகக் கடைசி மூச்சை விடலாம் என்று உனக்கு நான் அடிக்கடி கூறிவந்திருக்கிறேன். நீ இறந்தால், உன்னுடைய அந்த மரணம் கூட சத்தியாக்கிரக லட்சியத்திற்கு ஒரு தியாகமாகவே இருக்கும். எனது போராட்டம் வெறும் அரசியல் போராட்டம் மாத்திரம் அல்ல. அது மத சம்பந்தமான ஒரு போராட்டமே. எனவே அது முற்றிலும் தூய்மையான ஒரு போராட்டமாகும். அதனால் ஒருவர் இறந்தாலும் சரி, வாழ்ந்தாலும் சரி, அது ஒரு பெரிய காரியம் அல்ல. என்னைப் போலவே நீயும் நினைப்பாய் என்றும், துக்கமடைய மாட்டாய் என்றும் நான் நம்புகிறேன், எதிர்பார்க்கிறேன். உன்னிடமிருந்து நான் கோருவது இதுதான்.

மோகன்தாஸ்†

---

*தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தையொட்டி காந்தஜி, தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த வால்க்ஸ்ரஸ்ட் நகரிலுள்ள சிறையில் வைக்கப்பட்டிருந்தார். தென்னாப்பிரிக்காவில் முதன் முதலாக ஸ்ரீ ஆல்பர்ட் வெஸ்ட் என்ற ஐரோப்பியப் பிரமுகர்தான் காந்திஜியுடன் நட்புக் கொண்டு இந்திய சமூகத்திற்கு உதவியாக இருந்துவந்தார்.

† ரத்த நஷ்டம் காரணமாக அன்னை கஸ்தூரிபாயின் நிலை கவலைக்கிடமாகியது 1909 ஜனவரி 10-ஆம் தேதி அவருக்கு அறுவை சிகிச்சை நடந்தது.

## 2

தென்னுப்பிரிக்காவில் ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டபோது நடந்த உபசார வைபவத்தில் காந்திஜி பேசியதாவது:

மாரிட்ஸ்பர்க்,
டிசம்பர் 22, 1913

இது எங்களுக்கு மிகவும் துக்ககரமான நேரமாகும். கூட்டங்களிலும் வைபவங்களிலும் நாங்கள் கலந்து கொண்டு மகிழ்ச்சி அடைவதற்கில்லை. இருந்தாலும், எங்களுக்கு நீங்கள் இன்று அளித்த வரவேற்புக்காக என் மனைவியின் சார்பிலும், மற்றப் பெண்மணிகளின் சார்பிலும் நான் நன்றி செலுத்துகிறேன். என்னுடைய சகோதரர்கள் துப்பாக்கியால் சுடப்பட்டு உயிரைப் பலி கொடுத்திருக்கிறுர்கள். எனவே இது போன்ற ஒரு சமயத்தில் இந்த வைபவத்தில் கலந்து கொள்வது எனக்கு துக்கத்தையே கொடுக்கின்றது.

---

அன்னை கஸ்தூரிபாயின் உடல் நிலையைக் குறித்து காந்திஜி சிறையிலிருந்து ஸ்ரீ வெஸ்டுக்கும் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதன் விவரம் பின்வருமாறு:

வால்க்ஸ்ரஸ்ட் சிறை, திரான்ஸ்வால்,
நவம்பர் 9, 1908

ஏ. எச். வெஸ்ட் அவர்களுக்கு
மானேஜர், 'இந்தியன் ஒபினியன்',
போனிக்ஸ், நேட்டால்.

எனது அன்புள்ள வெஸ்ட்,

உங்கள் தந்தி கிடைத்தது. அச்செய்தி என் மனத்தைப் பிளக்கின்றது. எனினும் அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. நான் அபராதத்தைச் செலுத்தினுலன்றி இங்கிருந்து வெளியேறுவது முடியாத காரியம். நான் அபராதத்தைச் செலுத்தமாட்டேன். போராட்டத்தை ஆரம்பித்தபோது, அதனுல் ஏற்படக்கூடிய கஷ்டநஷ்டங்களை நான் எண்ணிப் பார்த்தேன். மனைவியிடம் மிகவும் ஈடுபாடு உள்ள ஒரு கணவனுக்குக் கிடைக்கக்கூடிய ஆறுதலுக்குக் கூட வழியில்லாமல் ஸ்ரீமதி காந்தி என்னை விட்டுவிட்டுப் போய் விடுவாளாயின், அப்படியே நடக்கட்டும்.

அவளுக்காக உங்களால் என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதையெல்லாம் தயவு செய்து செய்யுங்கள். அங்கு வரும்படி ஹரிலாலுக்கு நான் தந்தி கொடுத்திருக்கிறேன். ஸ்ரீமதி காந்தியின் உடல் நிலையைப் பற்றிய தகவலை தினந்தோறும் உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேன். அவளுக்கு என்ன நோய் என்பதைப் பற்றி தயவு செய்து திட்டவட்டமாக எனக்கு அறிவியுங்கள். நான் அவளுக்கும் கடிதம் எழுதுகிறேன். அந்தக் கடிதத்தைப் புரிந்து கொள்ள அவள் உயிருடனும் சுயநினைவுடனும் இருப்பாள் என்றே நம்புகிறேன். அங்கிருந்து தினந்தோறும் எனக்குக் கடிதங்கள் வர அதிகாரிகள் அனுமதிப்பார்கள். ஸ்ரீமதி காந்திக்கு எழுதியுள்ள கடிதத்தை இத்துடன் இணைத்துள்ளேன். இதை மணிலால் அவளுக்கு வாசித்துக் காட்டட்டும்.

இந்த அழுகை இப்போது நமது* துக்க நிலையையே எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. எனது இந்திய சகோதரர்களும் சகோதரிகளும் பல்வேறு விதத்திலும் துக்கத்தைத் தெரிவிப்பதன் மூலம், திக்கற்றவர்களான விதவைகளுக்கும், பெற்றோர்களை இழந்த குழந்தைகளுக்கும் தங்களுடைய மனப்பூர்வமான அனுதாபத்தைக் காட்ட முடியும். உதாரணமாக, புகையிலை, வெற்றிலை, பாக்கு முதலியவற்றை உபயோகிப்பதை ஆடவர்கள் விட்டுவிடலாம்; பெண்கள் நகைகளையும் உயர்ந்த உடைகளையும் அணிந்து கொள்வதை நிறுத்திவைக்கலாம்.

## 3

பம்பாய்க்குச் செல்லும் ரயிலில்,
ஏப்ரல் 23, 1918

அன்பார்ந்த கஸ்தூரி,

மகன்லாலுக்கு† நீ ஒரு தாயாராக இருக்கவேண்டும். அவன் அவனுடைய பெற்றோர்களை விட்டுவிட்டு, இங்கு வந்திருக்கிறான்; என்னுடைய அலுவல்களை யெல்லாம் அவனுடைய சொந்த அலுவல்களைப் போல் கவனித்து வருகிறான். தற்போது மகன்லால் நன்கு பயிற்சி பெற்றிருப்பதால், எனக்குப் பிறகு என்னுடைய அலுவல்களையெல்லாம் அவன்தான் கவனித்துவர முடியும். அவனுக்குத் தேவையான பலத்தை யார் கொடுப்பார்கள்? அவன் விஷயத்தில் அனுதாபமும், அவன் உணவு விஷயத்தில் அக்கறையும் காட்ட வேண்டியது உன்னுடைய கடமையாகும். அவனுக்கு எந்த விதமான கவலையும் இராதவாறு நீ அவனைப் பாதுகாக்க வேண்டும். பூபத்ராயின் குடும்பத்தில் கடுமையான சச்சரவு இருந்துவருகிறது. அதற்கு முற்றுப்புள்ளி வைக்க நீ உதவிபுரிய வேண்டும். அத்தகைய விஷயங்களில் நீ சுறுசுறுப்புடன் நடந்து கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். உண்மையான கல்வியும் பெருமையும் அத்தகைய தொண்டில்தான் அடங்கியிருக்கின்றன. அருகு இல்லாத சுத்த வெள்ளைப் புடவையைக் கட்டிக் கொள்ள நீ ஆட்சேபிக்க வேண்டாம். நான் விரைவில் அங்குவர முயற்சிக்கிறேன்.

## 4

நாடியாட்,
ஜுலை 29, 1918

பேரன்புள்ள கஸ்தூரி,

என்னுடன் தங்கியிருக்க வேண்டுமென நீ ஏங்கிவருகிறாய் என்பதை நான் அறிவேன். இருந்தாலும் நமது கடமைகளை

---

*அப்போது கூட்டத்தில் இருந்த ஒரு குழந்தை அழுதுகொண்டிருந்தது. அதையே காந்திஜி தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டார்.

†மகன்லால், காந்திஜியின் சிற்றப்பாவினுடைய புதல்வர், சகன்லாலின் சகோதரர்.

நாம் செய்துவர வேண்டுமென நான் கருதுகிறேன். தற்போது நீ எங்கே இருக்கிறாயோ அங்கே இருந்துவருவதுதான் சரி. நீ எல்லாக் குழந்தைகளையும் உன்னுடைய சொந்தக் குழந்தைகளாகக் கருதினால், சொந்தக் குழந்தைகள் உன்னுடன் இராததைக் குறித்து நீ வருந்தாமல் இருக்கும் மனநிலை உனக்கு மிகவும் விரைவில் ஏற்பட்டுவிடும். வயது ஆகஆக குறைந்த பட்சம் ஒருவர் செய்யக் கூடியது அதுதான். மற்றவர்கள் மீது அன்பு காட்டி அவர்களுக்குத் தொண்டு செய்யும் வழக்கத்தில் உனக்கு விருப்பம் ஏற்பட்டுவிட்டால், பின்னர் உன் மனத்தில் ஆனந்தம் பொங்கி எழும். யார் நோயுற்றிருக்கிறார்களோ அவர்களையெல்லாம் தினந்தோறும் அதிகாலையில் எழுந்து சென்று பார்ப்பதையும், அவர்களுக்குப் பணிவிடை செய்வதையும் நீ ஒரு முக்கிய கடமையாகக் கருதவேண்டும்.

பலன் தரத்தக்க விஷயங்களையொட்டி, அதாவது மத சம்பந்தமான விஷயங்கள் போன்றவற்றைப் பற்றி நீ நிர்மலாவுடன் அளவளாவ வேண்டும். உனக்கு பாகவதத்தை வாசித்துக் காட்டும்படி நீ அவளைக் கேட்கலாம். அதில் அவளுக்குக் கூட அக்கறை ஏற்படலாம். நீ அவ்விதமாக மற்றவர்களுக்குத் தொண்டு செய்வதில் எப்போதும் சுறுசுறுப்பாக இருந்துவந்தால், உன் மனம் எப்போதும் மகிழ்ச்சியால் நிறைந்திருக்கும். பஞ்சபாயின் உணவு முதலிய மற்றத் தேவைகளைக் கவனித்து ஏற்பாடு செய்ய நீ தவறிவிடக் கூடாது.

மோகன்தாஸ்

## 5

நாடியாட்,
*ஜூலை 31, 1928*

பேரன்புள்ள கஸ்தூரி,

நீ மகிழ்ச்சியற்றிருப்பது என்னையும் மகிழ்ச்சியற்றவனாகச் செய்கிறது. இங்கே பெண்களை அழைத்துவருவது சாத்தியமாக இருந்திருக்குமாயின், நான் உன்னை அழைத்துவந்திருப்பேன். நான் வெளியிடங்களுக்குச் செல்லவேண்டியிருக்கலாம் என்பதற்காக நீ ஏன் கலக்கமடையவேண்டும்? நாம் பிரிந்திருப்பதில் நம்முடைய மகிழ்ச்சியைக் காண நாம் கற்றுக் கொண்டுள்ளோம். கடவுள் சித்தமிருந்தால் நாம் மீண்டும் சந்தித்து, ஒன்று சேர்ந்து வசிப்போம். பலன் தரத்தக்க பல அலுவல்களைச் செய்வதற்கு ஆசிரமத்தில் இடம் இருக்கிறது. அவற்றில் கவனம் செலுத்தி வந்தால், நீ மகிழ்ச்சியுடன் இருப்பாய் என்பது நிச்சயம்.

பகுதி ஏழு

# லியோ டால்ஸ்டாய்

"'உன்னுள்ளேயே ஆண்டவன் ராஜ்யம்' என்ற டால்ஸ்டாயின் நூல் என்னைப் பரவசப்படுத்தியது. அதில் கண்ட கருத்துகள் என் உள்ளத்தில் பலமாகப் பதிந்தன. அந்த நூலில் கண்ட சுயேச்சையான சிந்தனை, மிகச் சிறந்த ஒழுக்கம், உண்மை ஆகியவை என்னைக் கவர்ந்தன" என்று காந்திஜி தமது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். மற்றும் 25-12-1909-ல் வெளியான 'இந்தியன் ஒபினியன்' பத்திரிகையில் டால்ஸ்டாயைப் பற்றி காந்திஜி பின்வருமாறு எழுதியுள்ளார் :

"கவுண்ட் டால்ஸ்டாய் ருஷ்யாவைச் சேர்ந்த ஒரு பிரபு. அவர் வாழ்க்கையில் எல்லா இன்பங்களையும் பூரணமாக அனுபவித்தவர். அவர் ஒரு காலத்தில் தைரியசாலியான ஒரு போர் வீரராகவும் இருந்தார். ஐரோப்பாவிலுள்ள சிறந்த எழுத்தாளர்களில் அவருக்குச் சமமானவர் யாரும் இல்லை. உலகில் பொதுவாகப் பின்பற்றப்படும் அரசியல் கொள்கைகள் முற்றிலும் தவறானவை என்பது அவரது அபிப்பிராயமாகும். மிகுந்த அனுபவத்தையும் ஆராய்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டே அவர் அந்த முடிவுக்கு வந்துள்ளார். அதற்கு முக்கிய காரணம், நாம் பழிவாங்கும் குணம் உள்ளவர்களாக இருப்பதே என்பது அவரது அபிப்பிராயமாகும். அத்தகைய குணம் நமது பெருமைக்கு உகந்ததல்ல என்றும், எல்லா மதங்களின் கோட்பாடுகளுக்கும் முரணானது என்றும் அவர் கருதுகிறார். அடிக்குப் பதில் அடி கொடுப்பது நமக்கும் நமது விரோதிக்கும்

தீங்கை விளைவிக்கின்றது என்பதே அவரது நம்பிக்கை. நம்மை அடிப்பவரை நாம் திருப்பி அடிக்கக் கூடாது என்பதுடன், அவர் மீது அன்பு காட்டவேண்டும் என்றும் அவர் கூறுகிறார். தீங்கு செய்தவருக்கு நன்மையே செய்ய வேண்டும் என்பது அவரது உறுதியான சித்தாந்தம்.”

இவ்வாறாக காந்திஜியின் பெருமதிப்புக்கு உரியவரான லியோ டால்ஸ்டாய்க்கு அவர் (காந்திஜி) எழுதிய ஒரு சில கடிதங்கள் இப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன :

## 1

லண்டன்,
*அக்டோபர் 1, 1909*

கவுண்ட் லியோ டால்ஸ்டாய்,
யாஸ்நயா போலியானா,
ருஷ்யா.

ஐயா,

திரான்ஸ்வாலில் (தென்னாப்பிரிக்கா), சற்றேறக்குறைய மூன்று ஆண்டுகளாக என்ன நிகழ்ந்து வருகின்றது என்பதுபற்றி உங்களுடைய கவனத்தை ஈர்க்கும் உரிமையை நான் மேற்கொள்கிறேன்.

அந்தக் காலனியில் சுமார் 13,000 பிரிட்டிஷ் இந்தியர்கள் இருக்கிறார்கள். பல ஆண்டுகளாக இவர்கள் சட்டபூர்வமான பல்வேறு தொல்லைகளுக்கும் உள்ளாகி அல்லல் பட்டுவருகிறார்கள். அங்கு நிறத் துவேஷமும், மற்றும் சில அம்சங்களில் ஆசியாக்காரர்களுக்கு விரோதமான மன நிலையும் தீவிரமாக இருந்துவருகின்றன. ஆசியாக்காரர்களுக்கு விரோதமான அத்தகைய மன நிலைக்கு வர்த்தகத் துறையில் நிலவும் பொறாமையே பெரிதும் காரணமாகும். மூன்று ஆண்டுகளுக்கு முன் அந்த நிலைமை உச்ச நிலையை அடைந்தது. அப்போது அரசாங்கம் கொண்டுவந்த சட்டம் இழிவுபடுத்துவதாகவும், மனிதத் தன்மைக்கே சாவு மணி அடிப்பதாகவும் இருந்ததென நானும் மற்றும் பலரும் கருதினோம். அத்தகைய சட்டத்திற்கு உட்படுவது உண்மையான மத தத்துவத்திற்கு முரணாகும் என்றும் நான் கருதினேன். நீங்கள் எழுதியுள்ளவற்றை வாசிக்கும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. நீங்கள் கூறியிருப்பவை என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தன. இங்குள்ள பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு நிலை

மையைத் தெளிவாக விளக்கிக் கூறினேம். அச் சட்டத்திற்கு அடி பணியக் கூடாது என்ற யோசனையை அவர்கள் ஒப்புக் கொண்டனர். அதற்கு மாருக, அந்தச் சட்டத்தை எதிர்த்து சிறைத் தண்டனையையோ அல்லது சட்டத்தை மீறுவதன் விளைவாக விதிக்கப்படும் வேறு வித தண்டனைகளையோ அனுபவிக்க வேண்டும் என்பதையும் அவர்கள் ஒப்புக்கொண்டனர். அதன் பலன் என்னவெனில், போராட்டத்தின் உக்ரத்தைத் தாங்கவும், சிறைத் தண்டனையால் ஏற்படும் துன்பங்களைச் சகிக்கவும் சக்தியற்றவர்கள், இழிவானதென்று தாங்கள் கருதும் அந்தச் சட்டத்திற்குப் பணிவதைக் காட்டிலும் திரான்ஸ்வாலிலிருந்து வெளியேறிவிடுவதே சிறந்ததென்று கருதி அவ்விதமே செய்துவிட்டார்கள். அதாவது திரான்ஸ்வாலிலுள்ள இந்திய ஜனத்தொகையில் சற்றேறக்குறைய பாதி மக்கள் அவ்விதம் செய்துவிட்டார்கள். மற்றவர்களில் சுமார் 2,500 பேர் தங்களுடைய மனச்சாட்சிக்காக சிறைத் தண்டனையை அனுபவிக்க முன்வந்தனர். அவர்களில் சிலர் உரிமைப் போராட்டத்தில் கலந்து கொண்டு ஐந்து தடவைகள் கூட சிறைக்குச் சென்றுள்ளனர். அவர்கள் நான்கு நாட்களிலிருந்து ஆறு மாதங்கள் வரையில் பல்வேறு விதமாகச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டனர்; அவர்களில் பெரும்பாலோரும் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டனர். பலர் தங்களுடைய செல்வத்தையெல்லாம் இழந்தனர். தற்போது நூறு பேருக்கு மேற்பட்ட சாத்துவிக சட்ட மறுப்பாளர்கள் திரான்ஸ்வால் சிறைகளில் இருந்துவருகிருர்கள். அவர்களில் சிலர் மிகவும் ஏழைகள்; அன்ருடம் உழைத்து ஜீவனம் செய்பவர்கள். எனவே அவர்களுடைய மனைவிமாரையும் குழந்தைகளையும் பொது நிதியிலுள்ள தொகைகளைக் கொண்டு காப்பாற்ற வேண்டியிருக்கிறது. அந்தத் தொகைகள் பெரும்பாலும் சாத்துவிக சட்டமறுப்பாளர்களிடமிருந்து வசூல் செய்யப்பட்டதேயாகும். இதனுல் பிரிட்டிஷ் இந்தியர்கள் மேலும் அதிகமான கஷ்டத்திற்கு உள்ளாயினர். இருந்தாலும் அவர்கள் சோர்வடையாமல் வீறு கொண்டு எழுந்தனர். போராட்டம் இன்னும் தொடர்ந்து நடந்துவருகிறது. அதற்கு முடிவு எப்போது என்பது யாருக்கும் தெரியாது. எனினும் எங்களில் சிலர் ஒரு விஷயத்தை மாத்திரம் தெளிவாக அறிந்து கொண்டிருக்கிருேம். அதாவது மிருக பலம் தோல்வியுறும் இடத்தில் சாத்துவிக எதிர்ப்பு வெற்றி பெறும் என்பதே. போராட்டம் நீடித்து நடைபெற்றுவருவதற்குப் பெரிதும் எங்களுடைய பலவீனமே காரணம் என்பதையும் நாங்கள் அறிகிருேம். அதனுல், தொடர்ந்து எங்களால் துன்பத்தை அனுபவிக்க முடியாது என்ற ஓர் எண்ணம் அரசாங்கத்தின் மனத்தில் ஏற்பட்டிருக்கிறது.

சாம்ராஜ்ய அதிகாரிகளைச் சந்தித்து எங்களுடைய நிலையை அவர்களிடம் விளக்கிக் கூறுவதற்காக நான் ஒரு நண்பருடன் இங்கே வந்திருக்கிறேன். திரான்ஸ்வாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் துன்பங்களுக்குப் பரிகாரம் ஏற்படும்படி செய்ய வேண்டும்

என்பதே நாங்கள் இங்கு வந்திருப்பதன் நோக்கமாகும். அரசாங்கத்திடம் விண்ணப்பம் செய்து கொள்வதால் யாதொரு பலனும் ஏற்படாது என்பதை, சாத்துவிக சட்ட மறுப்பாளர்கள் உணர்ந்திருக்கிறார்கள். எனினும் இந்திய சமூகத்தைச் சேர்ந்த பலவீனர்களான சிலருடைய அபிப்பிராயத்திற்கு இணங்கவே நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். எனவே எங்கள் கோஷ்டி, பிரிட்டிஷ் இந்தியர்களின் பலத்தைக் காட்டிலும் பலவீனத்தையே பிரதிபலிப்பதாக இருக்கிறது.

‘சாத்துவிக எதிர்ப்பின் தத்துவமும் சக்தியும்’ என்பது பற்றி ஒரு கட்டுரைப் போட்டியை ஏற்படுத்தலாமென நான் நினைக்கிறேன். அது, இயக்கத்தை எல்லோரும் அறிந்து கொள்ளும்படி செய்வதுடன், அதைப் பற்றி மக்கள் சிந்திக்கும்படியும் தூண்டுவதாக இருக்கும். இந்தப் போட்டி சம்பந்தமாக ஒரு நண்பர் ஒழுங்குப் பிரச்னையை எழுப்பியிருக்கிறார். அத்தகைய போட்டிக்கு ஏற்பாடு செய்வது சாத்துவிக எதிர்ப்பின் உண்மையான தத்துவத்திற்கு முரணாகும் என்றும், அது மக்களின் அபிப்பிராயத்தை விலைக்கு வாங்குவதற்கொப்பாகும் என்றும் அவர் கருதுகிறார். ஒழுங்குப் பிரச்னை சம்பந்தமாக உங்களுடைய அபிப்பிராயம் என்ன என்பதை அறிவிக்கும்படி நான் தங்களைக் கேட்டுக் கொள்ளலாமா? அவ்விதம் கட்டுரைகள் அனுப்பும்படி கேட்பதில் தவறு இல்லை என்று நீங்கள் கருதுவீர்களாயின், அவ்விஷயமாக எழுதும்படி நான் கேட்கவேண்டிய பிரமுகர்களின் பெயர்களை எனக்கு அறிவிக்கும்படியும் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் ஒரு விஷயமாக நான் உங்களுடைய நேரத்தில் குறுக்கிடவேண்டியவனாக இருக்கிறேன். இந்தியாவில் தற்போது நிலவிவரும் அமைதியின்மை பற்றி நீங்கள் ஒரு ஹிந்துவுக்கு* எழுதிய கடிதத்தின் நகல் ஒன்று ஒரு நண்பரின் மூலம் எனக்குக் கிடைத்திருக்கிறது. உங்களுடைய கருத்துகள் அதில் அடங்கியிருக்கின்றன என்று தோன்றுகிறது. எனது நண்பர் தமது சொந்தச் செலவில் அதில் 20,000 பிரதிகள் அச்சிட்டு விநியோகிக்கலாம் என்றும், அதை மொழிபெயர்த்து வெளியிடலாம் என்றும் கருதுகிறார். ஆனால் அந்தக் கடிதத்தின் அசல் பிரதி எங்களுக்குக் கிடைக்கவில்லை. அது நீங்கள் எழுதிய கடிதம்தான் என்றும் எங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்தாலொழிய அதை அச்சிடுவது நியாயமல்ல என்று நாங்கள் கருதுகிறோம். அந்த நகலின் பிரதி ஒன்றை நான் இத்துடன் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அது

---

* வாங்கூவரில் (அமெரிக்கா) ரகசியமாக நடந்துவந்த ‘சுதந்திர ஹிந்துஸ்தான்’ என்ற பத்திரிகையின் ஆசிரியர்கள் டால்ஸ்டாய்க்கு எழுதிய கடிதத்திற்குப் பதிலளித்து அவர் (டால்ஸ்டாய்) எழுதிய கடிதத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். தாரகநாத் தாஸ் அப்பத்திரிகையின் பிரதம ஆசிரியராக இருந்தார். டால்ஸ்டாயின் கடிதம், காந்திஜியின் முகவுரையுடன் 25-12-1909 ‘இந்தியன் ஒபீனியனி’ல் பிரசுரமாகியிருந்தது.

உங்களுடைய கடிதம்தானு? அதில் உள்ள விவரங்கள் சரியா? மேற்கண்ட விதம் அதை வெளியிடுவதை நீங்கள் அங்கீகரிக் கிறீர்களா? இவற்றை யெல்லாம் நீங்கள் அன்பு கூர்ந்து எனக்குத் தெரிவித்தால் நான் அதை ஓர் உதவியாகக் கருதுவேன். அந்தக் கடிதத்துடன் மேற்கொண்டு நீங்கள் ஏதாவது சேர்க்க வேண்டு மென்ருலும், தயவு செய்து அப்படியே செய்யுங்கள்.

நான் ஓர் யோசனை கூறவும் துணிகிறேன். உங்களுடைய கடிதத்தின் கடைசி பாராவில், மறுபிறப்பில் நம்பிக்கை வைக்க வேண்டாம் என்று வாசகர்களை நீங்கள் தடுப்பதுபோல் தோன்று கிறது. நீங்கள் இந்தப் பிரச்னையை (நான் இவ்விதம் கூறுவது அதிகப் பிரசங்கித்தனமாக இராமல் இருக்குமாயின்) விசேஷமாக ஆராய்ச்சி செய்திருக்கிறீர்களா என்பது எனக்குத் தெரியாது. மறு பிறப்பு என்பது, இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் பேணி வளர்த்துவந்துள்ள உறுதியான நம்பிக்கையாகும். சீனுவிலும் அந்த நம்பிக்கை இருக்கிறது. பலருடைய விஷயத் திலும் அந்த நம்பிக்கை, வெறும் தர்க்க வாதத்தை அல்ல, சொந்த அனுபவத்தை அடிப்படையாகக்கொண்டது என்றும் சொல்லலாம். அந்த நம்பிக்கைதான், வாழ்க்கையின் பல மர்மங்களையும் புதிர் களையும் நியாயமான முறையில் விளக்குவதாக இருக்கிறது. திரான்ஸ்வால் சிறைகளுக்குச் சென்றுவந்துள்ள சில சாத்துவிக சட்ட மறுப்பாளர்களுக்கு அத்தகைய நம்பிக்கைதான் ஆறுதல் அளிப்பதாக இருந்து வந்திருக்கிறது. அந்தச் சித்தாந்தத்தின் உண்மையைக் குறித்து உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் இதை நான் எழுதவில்லை. மற்றும் பல விஷயங்களைத் தவிர்க்க வேண்டுமென நீங்கள் வாசகர்களுக்கு ஆலோசனை கூறியிருக்கிறீர்கள். அவற்றிலிருந்து 'மறுபிறப்பு' என்ற சொல்லை மாத்திரம் தயவு செய்து அகற்றிவிட வேண்டும்* என்பதற்காகவே இதை நான் எழுதுகிறேன். உங்களுடைய கடிதத்தில் கிருஷ்ணன்† கூறியதிலிருந்து பல பகுதிகளை எடுத்துக் காட்டியிருக்கிறீர்கள். நீங்கள் எந்த நூலி லிருந்து அந்த மேற்கோள்களை எடுத்துக் கூறியிருக்கிறீர்களோ அந்த நூலின் தலைப்பை எனக்கு அறிவித்தால் நான் நன்றியுள்ள வனுக இருப்பேன்.

இந்தக் கடிதத்தினுல் உங்களுக்கு அலுப்பு ஏற்படும்படி நான் செய்திருக்கிறேன். உங்கள் மீது மதிப்பும் மரியாதையும் வைத்து உங்களைப் பின்பற்ற முயற்சிப்போருக்கு, இவ்விதம் உங்கள் நேரத்தில் குறுக்கிட உரிமை இல்லை என்பதை நான் அறிவேன். அவர்கள் சாத்தியமானவரையில் உங்களுக்குத் தொல்லை கொடுக்காமல் இருக்கவேண்டியது கடமையுமாகும்.

---

* காந்திஜியின் கோரிக்கைக்கு இணங்க, 'மறுபிறப்பு' என்ற சொல்லை அகற்றிவிட டால்ஸ்டாய் இசைந்தார்.

† காந்திஜி குறிப்பிட்டுள்ள சிறு நூல் 1904-ம் ஆண்டில் எழுதப் பட்டதாகும். அதை எழுதிய பாபா பிரேமானந்த பாரதி என்ற வங்காளி முனிவர். அப்போது கலிபோர்னியாவில் (அமெரிக்கா) வாழ்ந்து வந்தார்.

நான் உங்களுடன் சிறிதும் அறிமுகமற்ற அந்நியனாயினும், சத்தியத்தை எடுத்துக் கூறவேண்டும் என்றும், பல பிரச்னை களையொட்டி உங்களுடைய ஆலோசனையை நாடவேண்டும் என்றுமே இதை உங்களுக்கு எழுதியிருக்கிறேன். அந்தப் பிரச்னைகள் தீருவதையே நீங்கள் உங்களுடைய வாழ்க்கையின் கடமையாகக் கொண்டிருக்கிறீர்கள்.

மரியாதையுடன்,

தங்கள்,
**மோ. க. காந்தி**

## டால்ஸ்டாயின் பதில்

காந்திஜியின் மேற்கண்ட கடிதத்திற்கு லியோ டால்ஸ்டாய் அளித்த பதில் பின்வருமாறு:

யாஸ்நயா போலியானு,
அக்டோபர் 7, *1909*

மோ. க. காந்தி,
திரான்ஸ்வால்.

கவனத்தை ஈர்க்கும் சுவைமிக்க உங்களுடைய கடிதம் இப் போதுதான் எனக்குக் கிடைத்தது. அக்கடிதம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்திருக்கிறது. திரான்ஸ்வாலிலுள்ள நமது அன்பார்ந்த சகோதரர்களுக்கும், சக ஊழியர்களுக்கும் கடவுள் துணை புரிவாராக.

இங்கே எங்களிடையேயும் அதேபோன்ற போராட்டம் நடந்துவருகிறது. கொடுமையை எதிர்த்து பலவீனமும், மமதையை யும் பலாத்காரத்தையும் எதிர்த்து சாத்துவிகமும் அன்பும் நடத்திவரும் போராட்டம் வருடந்தோறும் அதிகமாகிவருகிறது. குறிப்பாக உலகாயதமான சட்டங்களை எதிர்த்து மத சம்பந்த மான சட்டத்தின் போராட்டம் மிக மிக உக்ரமாக இருந்து வருகிறது. அதன் காரணமாக ராணுவத்தில் சேர மக்கள் மறுப்பது நாளுக்கு நாள் அதிகமாகிவருகிறது.

'ஒரு ஹிந்துவுக்குக் கடிதம்', என்னால் எழுதப்பட்டதே யாகும். அதன் மொழிபெயர்ப்பு மிகவும் அருமையாக இருக் கிறது. கிருஷ்ணனைப் பற்றிய புத்தகத்தின் தலைப்பு மாஸ் கோவிலிருந்து உங்களுக்கு அனுப்பப்படும். 'மறுபிறப்பு' என்ற சொல் தவிர்க்கப் படவேண்டும் என்பதை நான் விரும்பவில்லை. ஏனெனில் ஆன்மாவின் அழிவற்ற தன்மையிலும், கடவுள் நீதி யிலும் அன்பிலும் உள்ள நம்பிக்கையைப் போல், மறுபிறப்பில் உள்ள நம்பிக்கை அவ்வளவு உறுதியுள்ளதாக இருக்க முடியாது. இருந்தாலும் அந்தச் சொல்லைத் தவிர்க்கும் விஷயமாக உங்கள்

விருப்பப்படி நீங்கள் செய்யலாம். நீங்கள் அதை வெளியிடுவதற்கு நான் உதவி புரிய இயலுமாயின், நான் அவ்விதமே செய்ய மகிழ்ச்சியடைவேன். என்னுடைய கடிதத்தை இந்திய பாஷையில் மொழிபெயர்ப்பதும் விநியோகிப்பதும் எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கும்.

ஒரு போட்டிப் பந்தயத்தை ஏற்படுத்துவது, அதாவது பணம் கொடுப்பதன் மூலம் மத சம்பந்தமான துறையில் அக்கறை ஏற்படும்படி செய்வது பொருத்தமாக இராது என்றே நினைக்கிறேன்.

சகோதர முறைமையில் நான் உங்களுக்கு வாழ்த்துக் கூறுவதுடன், உங்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளவும் மகிழ்ச்சியுள்ளவனாக இருக்கிறேன்.

லியோ டால்ஸ்டாய்

## 2

லண்டன்,
நவம்பர் 10, 1909

அன்புள்ள ஐயா,

ஒரு ஹிந்துவுக்குத் தாங்கள் எழுதிய கடிதத்தைக் குறித்து நான் எழுதிய கடிதத்திற்கும், அந்தக் கடிதத்திலுள்ள மற்ற விஷயங்களை யொட்டியும் தாங்கள் ரிஜிஸ்தர் மூலம் அனுப்பியுள்ள பதிலுக்காக நன்றியுள்ளவனாக இருக்கிறேன்.

உங்களுடைய ஆரோக்கியம் குன்றிவருவதாக நான் கேள்விப்பட்டதால், உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாது என்று நினைத்தேன். அதனால்தான், உங்கள் கடிதம் வந்து சேர்ந்ததைக் குறித்து நான் பதில் எழுதவில்லை. தவிர, அதற்காக எழுத்து மூலம் தங்களுக்கு நன்றி செலுத்துவது வீண் சம்பிரதாயம் என்பதை அறிந்தே நான் அவ்விதம் செய்யவில்லை. ஆனால் நான் இப்போது சந்தித்த ஸ்ரீ அயில்மர் மாட், தங்களுடைய ஆரோக்கியம் மிகவும் திருப்திகரமாக இருப்பதாகவும், நீங்கள் ஒவ்வொரு நாளும் காலையில் தவறாமலும் ஒழுங்காகவும் உங்களுடைய கடிதப் போக்குவரத்தைக் கவனிப்பதாகவும் உறுதியாகக் கூறினார். அச் செய்தியைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைவதுடன், பல முக்கிய விஷயங்களைக் குறித்து உங்களுக்கு மேலும் எழுதும்படி அது எனக்கு உற்சாகமளித்திருக்கிறது. உங்களுடைய போதனைக்கிணங்க அவையெல்லாம் மிகவும் முக்கியமான விஷயங்கள் என்பதை நான் அறிவேன்.

ஆங்கிலேயரான ஒரு நண்பர் எழுதிய புத்தகம்* ஒன்றை நான் இத்துடன் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அது

*'மோ. க. காந்தி தென்னாப்பிரிக்காவில் உள்ள ஓர் இந்திய தேச பக்தர்' என்ற தலைப்பில் ரவரண்ட் ஜே. ஜே. டோக் எழுதிய புத்தகத்தையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

எனது வாழ்க்கையைப் பற்றியதாகும். அந்த நண்பர் தற்போது தென்னுப்பிரிக்காவில் இருக்கிறுர். எங்களுடைய போராட்டத்தில் நீங்கள் தீவிரமான அக்கறையும் அனுதாபமும் கொள்ள வேண்டும் என்பதில் நான் ஆர்வமுடையவனுக இருக்கிறேன். ஆகையால், நான் அந்த நூலை அனுப்புவதைத் தாங்கள் தவருக நினைக்கமாட்டீர்கள் என்ற எண்ணத்துடனேயே அதை அனுப்பியுள்ளேன்.

திரான்ஸ்வாலில் இந்தியர்கள் நடத்திவரும் போராட்டம், இந்தக் காலத்திய ஒரு மாபெரும் போராட்டம் என்பதே எனது அபிப்பிராயமாகும். ஏனெனில் எங்களுடைய லட்சியமும், அதை அடைவதற்காக நாங்கள் மேற்கொண்டுள்ள முறைகளும் மிகச் சிறந்தவை, அப்பழுக்கற்றவை. போராட்டத்தின் இறுதியில், அதில் பங்கு எடுத்துக் கொண்டவர்களுக்குச் சொந்த நலன் எதுவுமில்லாத, போராட்டத்தில் ஈடுபட்டவர்களில் 50 சதவிகிதத்தினர் ஒரு கொள்கைக்காக மகத்தான துன்பங்களையும், சோதனைகளையும் அனுபவித்த ஒரு போராட்டம் இதுவரை நடந்திருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்தப் போராட்டத்தைப் பற்றி என் விருப்பப்படி விளம்பரம் செய்ய எனக்குச் சாத்தியமில்லாமல் இருக்கிறது. இன்று உங்களுக்குப் பொது மக்களிடையே பரந்த அளவில் செல்வாக்கு இருந்து வருகிறது. ஸ்ரீ டோக் எழுதியிருக்கும் புத்தகத்தில் அடங்கியுள்ள உண்மையான விவரங்களைக் குறித்து உங்களுக்குத் திருப்தி ஏற்பட்டு, நான் செய்துள்ள முடிவுகள் நியாயமானவை என்று நீங்கள் கருதுவீர்களாயின், இந்த இயக்கத்தைப் பொதுமக்களிடையே பரப்ப நீங்கள் தகுதி வாய்ந்தது என்று கருதும் விதத்தில் உங்களுடைய செல்வாக்கை உபயோகிக்கும்படி நான் தங்களைக் கேட்கலாமா? அது வெற்றி பெறுமாயின், அது மதத்தின் வெற்றியாக, மத விரோதிகளையும், துவேஷத்தையும், பொய்யையும் எதிர்த்து சத்தியம் பெறும் வெற்றியாக மாத்திரம் இராது ; அது இந்தியாவிலும், உலகத்தின் மற்றப் பாகங்களிலும் தாழ்த்தப்பட்ட கோடிக்கணக்கான மக்களுக்கு ஓர் உதாரணமாக இருக்கும் என்பது நிச்சயம்; இந்தியாவைப் பொறுத்தமட்டிலாவது அது பலாத்கார கோஷ்டியைத் தகர்ப்பதற்குப் பெரிதும் துணைபுரிவதாக இருக்கும் என்பதும் நிச்சயம். நாங்கள் இறுதிவரையில் உறுதியுடன் நிற்போம் என்றே நினைக்கிறேன். அவ்விதம் உறுதியுடன் நின்ருல், அதன் இறுதி வெற்றியைக் குறித்து எனக்கு அணுவளவும் சந்தேகம் இல்லை. நீங்கள் குறிப்பிட்ட விதம் எங்களுக்கு நீங்கள் உற்சாகம் அளிப்பதன் மூலம், எங்களுடைய உறுதிக்கு மேலும் ஆக்கமளிக்க முடியும்.

அப்பிரச்னை தீருவதற்காக நடந்துவந்த சமரசப் பேச்சுகள் தோல்வியடைந்துவிட்டன. எனவே நான் எனது சகாவுடன் இந்த வாரம் தென்னுப்பிரிக்காவுக்குத் திரும்பி, சிறைவாசத்தை வரவேற்கப் போகிறேன். என்னுடைய மகனும் மகிழ்ச்சியுடன் இந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டு, ஆறு மாதம் கடுங்

காவல் தண்டனை விதிக்கப்பட்டு இப்போது சிறையில் இருந்து வருகிறான். போராட்டம் தொடங்கியதிலிருந்து அவன் சிறைத் தண்டனை அடைந்தது, இது நான்காவது தடவையாகும்.

இந்தக் கடிதத்திற்கு நீங்கள் அன்பு கூர்ந்து பதில் எழுதுவீர்களாயின், தபால் பெட்டி நெ. 6522, ஜோகன்னஸ்பர்க், தென்னுப்பிரிக்கா என்ற விலாசத்துக்கு எழுதும்படி நான் தங்களைக் கேட்டுக் கொள்ளலாமா?

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறீர்களென நம்புகிறேன்.

தங்கள்,
**மோ. க. காந்தி.**

## 3

ஜோகன்னஸ்பர்க், திரான்ஸ்வால்,
தென்னுப்பிரிக்கா, ஏப்ரல் 4, 1910

அன்புள்ள ஐயா,

நான் லண்டனில் தற்காலிகமாக இருந்தபோது உங்களுடன் கடிதப் போக்குவரத்து நடத்தியது உங்களுக்கு நினைவிருக்கும். உங்களைப் பணிவுடன் பின்பற்றும் ஒருவன் என்ற முறையில், இத்துடன் சிறு புத்தகம் ஒன்றை உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அது நான் எழுதியதே. குஜராத்தி மொழியில் நான் எழுதிய அப்புத்தகத்தை நானே மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறேன். அதில் விசித்திரம் என்னவெனில், குஜராத்தி வெளியீட்டை சர்க்கார் பறிமுதல் செய்திருக்கிறார்கள். எனவே அவசரமாக நான் மேற்கண்ட மொழிபெயர்ப்பை வெளியிட்டிருக்கிறேன். உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாது என்பது எனது ஆர்வமாகும். எனினும் உங்களுடைய உடல் நலம் இடம் கொடுக்குமாயின், அந்தப் புத்தகத்தை வாசிக்க உங்களுக்கு நேரமும் இருக்குமாயின், அதைப் பற்றிய உங்களுடைய அபிப்பிராயத்தை நான் மிகவும் மதிப்பு வாய்ந்ததாகக் கருதுவேன் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. நீங்கள் எழுதிய 'ஹிந்துவுக்கு ஒரு கடித'த்தின் சில பிரதிகளையும் உங்களுக்கு அனுப்பியுள்ளேன். அதை வெளியிட நீங்கள் அனுமதியளித்தீர்கள். அது இந்திய பாஷை ஒன்றிலும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,
**மோ. க. காந்தி.**

## டால்ஸ்டாயின் பதில்

யாஸ்நயா போலியானு,
மே *8, 1910*

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய கடிதமும், 'இந்தியன் ஹோம் ரூல்' என்ற உங்களுடைய புத்தகமும் எனக்குக் கிடைத்தன.

உங்களுடைய புத்தகத்தை நான் மிகுந்த அக்கறையுடன் வாசித்தேன். ஏனெனில் அதில் நீங்கள் எடுத்துக் கொண்டுள்ள பிரச்னை, அதாவது சாத்துவிக எதிர்ப்பு, இந்தியாவுக்கு மாத்திர மல்ல, மானிடவர்க்கத்திற்கே மிக மிக முக்கியமாகும்.

ஜே. ஜே. டோக் எழுதியுள்ள உங்களுடைய வாழ்க்கை வரலாற்றையும் ஆழ்ந்த அக்கறையுடன் வாசித்தேன். அதனுல், உங்களை மேலும் நன்கு அறிந்து கொள்வதும், புரிந்து கொள்வதும் சாத்தியமாகியது.

நான் தற்போது சிறிது சுகவீனமாக இருக்கிறேன். எனவே உங்களுடைய புத்தகத்தைப் பற்றியும் உங்களுடைய அலுவல் களைப் பற்றியும் நான் கூறவேண்டிய விஷயங்களையெல்லாம் எழுத இயலவில்லை. எனினும் அவற்றை நான் மிகவும் பாராட்டு, கிறேன். என் உடல் நிலை அபிவிருத்தி அடைந்ததும், நான் உங்களுக்கு எழுதுகிறேன்.

உங்களுடைய நண்பனும், சகோதரனும்.

## 4

ஜோகன்னஸ்பர்க்,
ஆகஸ்டு *15, 1910*

அன்புள்ள ஐயா,

சென்ற மே மீ 8வ நீங்கள் உள்ளன்புடனும் உற்சாக மளித்தும் எழுதிய கடிதத்திற்காக நான் மிகவும் கடமைப் பட்டிருக் கிறேன். 'இந்தியன் ஹோம் ரூல்' என்ற என்னுடைய புத்த கத்தையொட்டி உங்களுடைய பொதுவான ஆதரவை, மிகவும் மதிப்பு வாய்ந்ததாகக் கருதுகிறேன். அதைப் பற்றி விமர்சனம் செய்வதாக நீங்கள் உங்கள் கடிதத்தில் வாக்களித்திருக்கிறீர்கள். உங்களுக்கு நேரம் இருந்தால், அந்த நூலைப் பற்றிய விரிவான விமர்சனத்தை நான் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறேன்.

டால்ஸ்டாய் பண்ணையைப் பற்றி ஸ்ரீ காலென்பாக் உங் களுக்கு எழுதியிருக்கிருர். ஸ்ரீ காலென்பாக்கும் நானும் பல ஆண்டுகளாக நண்பர்கள். 'நான் ஒப்புக்கொண்டவை' என்ற உங்களுடைய நூலில் நீங்கள் மிகவும் அழகாக விவரித்துள்ள

அனுபவங்களில் பெரும்பாலானவற்றையும் ஸ்ரீ காலென்பாக் அனுபவித்திருக்கிருர் என்று நான் கூறலாம். உங்களுடைய நூல்களைப்போல் வேறு எதுவும் ஸ்ரீ காலென்பாக்கின் மனம் அவ்வளவு தூரம் உருகும்படி செய்ததில்லே. உலகத்தின் முன் நீங்கள் சமர்ப்பித்துள்ள சிறந்த கொள்கைகளுக்கு இணங்க வாழ முயற்சிக்கவும் ஸ்ரீ காலென்பாக்கிற்கு உங்கள் நூல்கள் தூண்டுகோலாக இருந்து வருகின்றன. அதனுல்தான் அவர் என்னுடன் கலந்து ஆலோசித்த பின், அவரது பண்ணேக்கு உங்களுடைய பெயரை வைக்கும் உரிமையை மேற்கொண்டார்.

அவர் தமது பண்ணேயை, சாத்துவிக எதிர்ப்பாளர்களின் உபயோகத்திற்காகக் கொடுத்த பெருந்தன்மையான செயலேப் பற்றிய முழு விவரங்களேயும் இத்துடன் இணேக்கப்பட்டுள்ள ‘இந்தியன் ஒபினியன்’ (*11—6—1910*) இதழிலிருந்து தெரிந்து கொள்ளலாம். திரான்ஸ்வாலில் நடைபெற்றுவரும் சாத்துவிக எதிர்ப்புப் போராட்டத்தில் தாங்கள் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டிராவிடில், இந்த விவரங்களேயெல்லாம் எழுதித் தங்களுக்குத் தொந்தரவு கொடுத்திருக்கமாட்டேன்.

உங்கள் நம்பிக்கையுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி.**

## டால்ஸ்டாயின் பதில்

டால்ஸ்டாய் நோயுற்றிருந்ததால் அவரது சார்பில் வி. செர்ட்காவ், காந்திஜியின் மேற்கண்ட கடிதத்திற்குப் பதில் அளித்திருந்தார். அதன் விவரம் வருமாறு.

தங்களுடைய ஆகஸ்டு 15வ கடிதம் கிடைத்தது என்பதைத் தங்களுக்கு அறிவிக்கும்படியும், செப்டம்பர் 7வ தாம் (டால்ஸ்டாய்) ருஷ்ய மொழியில் எழுதிய கடிதத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும்படியும் எனது நண்பரான லியோ டால்ஸ்டாய் என்னேக் கேட்டுக் கொண்டார்.

ஸ்ரீ காலென்பாக்கைப்பற்றி நீங்கள் அறிவித்துள்ள தகவல்கள் யாவும் டால்ஸ்டாய்க்கு மிகுந்த அக்கறையை உண்டாக்கியிருக்கின்றன. ஸ்ரீ காலென்பாக்கின் கடிதத்திற்கும் தமது சார்பில் பதில் எழுதுமாறு டால்ஸ்டாய் என்னேக் கேட்டுக்கொண்டிருக்கிருர்.

உங்களுக்கும் உங்களுடைய சக ஊழியர்களுக்கும், உங்களுடைய அலுவல்கள் வெற்றிபெற வேண்டுமென்று அவர் தமது மனப்பூர்வமான ஆசிகளேயும், அன்பார்ந்த வாழ்த்துக்களேயும் அனுப்புகிருர். உங்களுடைய அலுவல்களே அவர் பாராட்டியிருப்பதை, இத்துடன் இணேக்கப்பட்டுள்ள அவரது கடிதத்தின் ஆங்கில

மொழிப்பெயர்ப்பிலிருந்து நீங்கள் அறிந்து கொள்வீர்கள். எனது ஆங்கில மொழிபெயர்ப்பில் உள்ள தவறுகளுக்காக நான் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவேண்டும். நான் ருஷ்யாவில் கிராமப் பிரதேசத்தில் வசித்து வருவதால், என்னுடைய தவறுகளைத் திருத்திக்கொள்ள நான் எந்த ஆங்கிலேயருடைய உதவியையும் நாடி, பயன்பெற இயலாதவனாக இருக்கிறேன்.

லண்டனில் உள்ள எங்கள் நண்பர்களில் சிலர் அங்கே ஒரு சிறு சஞ்சிகையை அச்சிட்டுவருகிறார்கள். உங்களுக்கு டால்ஸ்டாய் எழுதியுள்ள கடிதம், அவரது அனுமதியின்மீது அந்த சஞ்சிகையில் வெளியிடப்படும். அக்கடிதம் பிரசுரமாகியிருக்கும் சஞ்சிகையின் ஒரு பிரதியும், டால்ஸ்டாய் எழுதியுள்ள சில ஆங்கில வெளியீடுகளும் உங்களுக்கு அனுப்பப்படும்.

உங்களுடைய இயக்கத்தைப் பற்றி இங்கிலாந்தில் உள்ளவர்கள் அதிகமாக அறிந்து கொள்ளவேண்டியது மிகவும் விரும்பத்தக்கதாகும். எனவே டால்ஸ்டாய்க்கும் எனக்கும் மிகவும் நெருங்கிய நண்பரான கிளாஸ்கோவைச் சேர்ந்த ஸ்ரீமதி வைவி மேயோவுக்கு,* உங்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ளும்படி எழுதியிருக்கிறேன். அவர் ஓர் இலக்கிய மேதை; நூலாசிரியர் என்றும் இங்கிலாந்தில் மிகவும் புகழ் பெற்றவர். உங்களுடைய வெளியீடுகளையெல்லாம் அவருக்கு அனுப்பிவைத்தால், அவை பலன்தரத்தக்கவையாக இருக்கும். அவற்றை ஆதாரமாகக் கொண்டு அவர் உங்களுடைய இயக்கத்தைப் பற்றிக் கட்டுரை எழுதுவார். அது, உங்களுடைய நடவடிக்கைகளையும், நிலையையும் பற்றி இங்கிலாந்தில் உள்ளவர்களின் கவனத்தை ஈர்க்கும். அநேகமாக ஸ்ரீமதி மேயோவும் உங்களுக்குக் கடிதம் எழுதலாம்.

நான் உங்களுக்கு எனது மனப்பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இத்துடன் இணைக்கப்பட்டுள்ள கடிதத்தை அன்பு கூர்ந்து ஸ்ரீ காலென்பாக்கிடம் சேர்ப்பியுங்கள்.

வி. செர்ட்காவ்

---

*ஸ்ரீமதி வைவி மேயோ ஒரு பத்திரிகை எழுத்தாளர், டால்ஸ்டாயின் நூல்களை மொழிபெயர்த்தவர். திரான்ஸ்வால் இந்தியர்களின் போராட்டததைப் பற்றியும் அப்போது அவர் ஒரு கட்டுரை எழுதியிருந்தார்.

பகுதி எட்டு

# சுவாமி சிரத்தானந்தர்

இந்தியாவில் அவதரித்த அரும்பெரும் சீர் திருத்தவாதிகளின் முதல் அணியில் சிரத்தா னந்தருக்கும் (1856-1926) இடம் உண்டு என்று காந்திஜி அவரைப் பாராட்டியிருக்கிருர். காந்திஜி சமூக சீர் திருத்தப் பிரச்னைகளில் கவனம் செலுத்து வதற்கு முன்பே சுவாமி சிரத்தானந்தர் ஹிந்து மதத்தில் படிந்துள்ள களங்கத்தை அகற்றுவதற் காக ஒரு குருகுலத்தை ஸ்தாபித்து, அதற்காகவே வாழ்ந்தார், அதற்காகவே உயிரையும் பலி கொடுத்தார். அவர் நோயுற்றிருந்தபோது 1926 டிசம்பர் 23-ம் தேதி அப்துல் ரஷீத் என்ற ஒரு வெறியனுல் சுட்டுக் கொல்லப்பட்டார். அவர் கங்ரி என்ற இடத்தில் 1902-ம் ஆண்டில் ஒரு குருகுலத்தை ஸ்தாபித்த போது அதில் 20 குழந்தைகளே இருந்தனர். ஆனுல் இன்று அது ஒரு பெரும் பல்கலைக் கழகமாகத் திகழ்கிறது. தூய்மையற்ற அவல வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்த சிரத்தானந்தருக்கு 1882-ல் சுவாமி தயானந்தரைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத் தது. அப்போது அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு திருப்பமானது, பிற்காலத்தில் அவர் ஒரு மகரிஷியாகவும், இணையற்ற சீர்திருத்த வாதியாக வும், ஆரிய சமாஜத்தின் சீரிய தலைவராகவும் திகழும்படி செய்தது. சுவாமி சிரத்தானந்தரின் அருமை பெருமைகளைப் பற்றி 'எங் இந்தியா'வில் மகாத்மா காந்தி பல கட்டுரைகள் எழுதியுள்ளார். அவற்றை மகாத்மா காந்தி நூல்கள் ஒன்பதாம் தொகுப்பில் (273-297 பக்கங்களில்) காணலாம்.

**சுவாமி சிரத்தானந்தருக்கு காந்திஜி எழுதிய சில கடிதங்கள் இந்தப் பகுதியில் கொடுக்கப் பட்டுள்ளன :**

## 1

போனிக்ஸ், நேட்டால்,
மார்ச் *27, 1914*

அன்புள்ள மகாத்மாஜி*,

உங்களுடைய பெயரையும், உங்களுடைய தொண்டையும் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் எனக்கு அறிமுகம் செய்து வைத்திருக்கிறார். எனவே இந்தக் கடிதம், அறிமுகம் இல்லாத ஒருவருக்கு எழுதுவது போல் எனக்குத் தோன்றவில்லை. ஆகையால் உங்களுடைய பட்டப் பெயரைக் குறிப்பிட்டு நான் எழுதுவதைக் குறித்து நீங்கள் என்னை மன்னிப்பீர்களென நம்புகிறேன். உங்களைப் பற்றியும் உங்களுடைய அலுவல்களைப் பற்றியும் நானும் ஸ்ரீ ஆண்ட்ரூஸும் பேசும்போது பட்டப் பெயரையே உபயோகிப்பது வழக்கமாகியிருக்கிறது. நீங்களும், குருதேவரும், ஸ்ரீ ருத்ராவும் ஸ்ரீ ஆண்ட்ரூஸை எவ்வளவு தூரம் கவர்ந்திருக்கிறீர்கள் என்பதையும் அவர் (ஸ்ரீ ஆண்ட்ரூஸ்) என்னிடம் கூறினார். சாத்துவிக எதிர்ப்பாளர்களுக்காக உங்களுடைய மாணவர்கள் செய்துள்ள தொண்டை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் விவரித்ததுடன், உங்களுடைய குருகுல வாழ்க்கையைப் பற்றியும் அவர் சித்திரித்துக் கூறினார். அதன் பலனாக, நான் இதை எழுதும்போது உங்களுடைய குரு குலத்தில் நான் இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. ஸ்ரீ ஆண்ட்ரூஸ் விவரித்த மூன்று இடங்களுக்கும் வரவேண்டும், அந்த மூன்று ஸ்தாபனங்களின் தலைவர்களாக இருக்கும் இந்தியாவின் மூன்று தவப் புதல்வர்களையும்† சந்தித்து அவர்களுக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்ற பேரார்வம் எனக்கு ஏற்படும்படி அவர் செய்திருக்கிறார்.

தங்கள்,

**மோகன்தாஸ் க. காந்தி**

---

*மகாத்மா முன்ஷிராம் என்பது சிரத்தானந்தரின் மற்றொரு பெயராகும். முன்ஷிராமே பிற்காலத்தில் சுவாமி சிரத்தானந்தராகப் புகழ் பெற்று விளங்கினார்.

†சுவாமி சிரத்தானந்தர், சாந்திநிகேதனத்தின் தலைவரான ரவீந்திரநாத் தாகூர், டில்லி செயின்ட் ஸ்டீபன் கல்லூரியின் தலைமைப் பேராசிரியர் சுசீல் குமார் ருத்ரா ஆகிய மூவரையுமே இந்தியாவின் தவப் புதல்வர்கள் என்று காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

## 2

இந்திய ஊழியர் சங்கம்,
புனு நகர், பிப்ரவரி *8, 1915*

மகாத்மாஜி,

உங்கள் தந்தி வந்து சேர்ந்தது. அதற்கு நான் அனுப்பிய பதில் தந்தியும் உங்களுக்குக் கிடைத்திருக்கும் என்பது நிச்சயம். என் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும் சிரமத்தைத் தாங்கள் ஏற்றுக் கொண்டதற்காகவும், அவர்கள் மீது அன்பைச் சொரிந்ததற்காகவும் உங்களுக்கு நன்றி செலுத்தும்படி கேட்டுக் கொண்டு நான் ஸ்ரீ ஆண்ட்ரூஸுக்கு எழுதியிருக்கிறேன். எனினும் என்னுடைய பணிவையும் மரியாதையையும் தங்களுக்கு நேரில் தெரிவிக்க நான் ஆர்வமுள்ளவனாக இருப்பதால், தங்களிடமிருந்து அழைப்புவருவதற்காகக் காத்திராமல் அங்கு வரவேண்டியது என்னுடைய கடமை என்று கருதுகிறேன். போல்பூரிலிருந்து நான் திரும்பி வரும்போது, உங்களை வந்து காணமுடியுமென நம்புகிறேன்.*

## 3

அகமதாபாத்,
ஜூன் *14, 1915*

மகாத்மாஜி,

குருகுலத்திலிருந்து பையன்கள்† வந்த பிறகு நான் பல்வேறு ஏற்பாடுகளையும் குறித்து கவனம் செலுத்தவேண்டியிருந்ததால், முன்பே உங்களுக்குக் கடிதம் எழுத இயலவில்லை. நீங்கள் காட்டிய பேரன்பை, பையன்கள் ஒரு காலத்திலும் மறக்க முடியாது. என்னுடைய பையன்களுக்கும் சகபாடிகளுக்கும் குருகுலத்தில் இடம் அளித்ததற்காக உங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

தற்காலிகமாக அகமதாபாத்தில் ஓர் ஆசிரமத்தை ஆரம்பித்திருக்கிறேன். அதன் சம்பந்தமான விதிகளும் ஒழுங்கு முறைகளும் ஹிந்தி மொழியில் தயாரிக்கப்பட்டு வருகின்றன. அவை பூர்த்தியானதும், உங்களுடைய அபிப்பிராயத்துக்காக அனுப்பப்படும். ஹரித்வாரத்துக்குச் சென்று‡ உங்களுடன் சில நாட்கள்

---

*போல்பூரிலிருந்து பிப்ரவரி 15-ஆம் தேதி காந்திஜி புறப்பட்டாரெனினும் ஏப்ரல் 6-ஆம் தேதி தான் அவர் கங்ரிக்குச் செல்ல முடிந்தது.

†கங்ரி குருகுலத்திலிருந்து அகமதாபாத்திற்கு வந்து சேர்ந்த மகன்லால் காந்தியையும் மற்றப் பையன்களையும், உபாத்தியாயர்களையுமே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

‡ஹரித்வாரத்துக்கு அருகில் கங்ரி குருகுலம் அமைக்கப்பட்டது.

தங்கியிருப்பதாக நான் கொடுத்த வாக்குறுதியை மறந்து விடவில்லை. எனக்கு நேரம் கிடைக்கும்போது நான் நிச்சயமாக வருகிறேன்.

உங்களுடைய அன்பை ஆவலுடன் எதிர்பார்க்கும்,

தங்கள்,
**மோகன்தாஸ் காந்தி**

## 4

பெட்டையா,
*ஏப்ரல் 26, 1917*

மகாத்மாஜி,

உங்கள் கடிதம் கிடைத்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். நீங்கள் மேற்கொண்டுள்ள புதுப்பெயர்* உண்மையிலேயே உங்களுக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது.

இங்கு அலுவல்கள் மிகவும் ஏராளமாக இருக்கின்றன. கடவுளின் அருளால் கொடுமை ஒழிந்துவிடும். ஆனால் நான் இங்கு சுமார் ஆறு மாதங்கள்வரையில் நிச்சயமாகத் தங்கவேண்டியிருக்கும். எனக்கு உதவியளித்து வரும் பாபு பிரஜ்கிஷோர் பிரசாதும் மற்றவர்களும் மதிப்புக்கு உகந்தவர்கள் ஆவர்.

தங்கள்,
**மோகன்தாஸ் காந்தி**

## 5

சபர்மதி,
*மே 30, 1918*

அன்புள்ள மகாத்மாஜி,

அன்பு ததும்பும் உங்களுடைய உருக்கமான கடிதம் எனக்குக் கிடைத்தது. எனக்கு நேரமில்லாததால், அதற்குப் பதில் எழுதத் தாமதமாகிவிட்டது. சமீபத்தில் நான் டில்லியில் இருந்தபோது, "மகாத்மாஜி என்னை மறந்துவிட்டாரா?" என்று சிரஞ்சீவி இந்திராவிடம் கேட்டுக் கொண்டிருந்தேன். இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குப் பின் உங்கள் கடிதம் கிடைத்தது. அதைப் பார்த்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். ஜப்தி செய்திருந்த கெட்டா ஜில்லா விவசாயிகளின் நிலங்களைத் திருப்பிக்

---

* 1917-ல் மகாத்மா முன்ஷிராம், சுவாமி சிரத்தானந்தர் என்ற புதிய பெயரை மேற்கொண்டார்.

கொடுத்துவிட்டார்கள். அந்த விவசாயிகளுக்குச் சிறிது பண நஷ்டம் ஏற்பட்டிருந்தாலும், அவர்களுக்கு இந்தப் போராட்டத்தின் பலனாக மிகுந்த பலம் ஏற்பட்டிருக்கிறது.

உங்களுடைய கடிதம் எனக்குப் பலம் அளிக்கிறது. எனது அலுவல்களுக்குத் தேவையான தொகை குறையும்போது, நான் உங்களை நிச்சயமாக நினைவில் வைத்துக்கொள்வேன்.

உங்களுக்கு உடல் வேதனை சிறிது தணிந்திருக்குமென நம்பு கிறேன். கடவுள் உங்களைப் பாதுகாத்துவருவாராக.

ஆசிரமத்திலுள்ள எல்லோரும் உங்களுடைய வருகையை ஆர்வத்துடன் எதிர்பார்த்து வருகிறார்கள். நீங்கள் வருவதாகக் கூறியுள்ள காலம் கடந்து விட்டால், நாங்கள் எல்லோரும் அமைதி யற்றிருப்போம்.

உங்களுக்கு ஆசிரமத்திலுள்ள எல்லோரும் நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

தங்கள்,

**மோகன்தாஸ் காந்தி**

## 6

(தந்தி)

*ஏப்ரல் 3, 1919*

சந்நியாசி சுவாமி சிரத்தானந்தஜி,
ஆரிய சமாஜ்,
டில்லி.

சென்னை யாத்திரையிலிருந்து இப்போதுதான் திரும்பி வந்தேன். நேற்று ரயில் வண்டியில் நிகழ்ந்த கோர சம்பவங்களைப் பற்றிய அரை குறையான செய்திகளை வாசித்தேன். பத்திரிகைகளுக்கு நீங்கள் விடுத்துள்ள ஆவேசம் ததும்பும் அறிக்கையையும் வாசித்தேன். அதைக் குறித்துப் பெருமை அடைகிறேன். ரௌலட் சட்டத்தை எதிர்ப்பதில் நீங்களும் டில்லி மக்களும் காட்டிவரும் எல்லையற்ற பொறுமைக்காக நான் எல்லோரையும் பாராட்டுகிறேன். அச்சம்பவத்தின் பின்னணியிலுள்ள பயங்கர ஆட்சி முறையையே நாம் எதிர்த்துவருகிறோம். அது எளிதான காரியம் அல்ல. சென்ற ஞாயிற்றுக்கிழமை டில்லியில் நிரபராதிகள் ரத்தம் சிந்தியதைப்போல் இன்னும் ஏராளமானவர்கள் ரத்தம் சிந்த வேண்டியிருக்கலாம். அது, தங்களால் இயன்ற எல்லாத் தியாகங்களையும் செய்யும்படி சத்தியாக்கிரகிகளுக்கு மேற்கொண்டு விடுக்கும் ஓர் அழைப்பே

யாகும். சாத்தியமாயின், இதுவரை மரணமும் காயமும் அடைந்த ஹிந்து, முஸ்லிம்களின் நிச்சயமான எண்ணிக்கை எவ்வளவு என்பதைத் தயவு செய்து தந்தி மூலம் அறிவியுங்கள். அடுத்த ஞாயிற்றுக்கிழமை டில்லி மீண்டும் உண்ணாவிரதம் இருக்க வேண்டிய அவசியமில்லை.

காந்தி

## 7

(தந்தி)

பம்பாய்,
ஏப்ரல் 5, 1919

சிரத்தானந்தஜி,
டில்லி.

உங்கள் தந்தி கிடைத்தது. மரணமடைந்தவர்களையும் காயமடைந்தவர்களையும் நம்பி வாழ்ந்துவந்தவர்களுக்கு உதவி தேவையா என்பதைக் குறித்து தயவு செய்து தந்தி கொடுங்கள். அவர்களுக்கு உதவி தேவையாயின், அதற்குப் போதிய தொகையை நீங்கள் வசூல் செய்திருக்கிறீர்களா?

காந்தி

## 8

ஏப்ரல் 8, 1919

(தந்தி)

நாளை மாலை வந்து சேருகிறேன். எனது வருகையை தயவு செய்து முற்றிலும் அந்தரங்கமாக வைத்துக் கொள்ளுங்கள். பொது ஜனங்களின் ஆரவாரத்தையும் ஆர்ப்பாட்டத்தையும் என்னால் தாங்க முடியாது.

காந்தி

## 9

(தந்தி)

ஏப்ரல் 11, 1919

இப்போதுதான் வந்தேன். காவலிலிருந்தும் விடுதலை அடைந்தேன்.* விவரமாகப் பிறகு தெரிவிக்கிறேன். சில இடங்

* அமிருதசரஸ் படுகொலையைக் கண்டித்து அப்போது நாடெங்கும் மக்களிடையே மிகுந்த மனக்கொதிப்பு ஏற்பட்டிருந்தது. ஏப்ரல் 9௨ காந்திஜி டில்லிக்குச் செல்லும் வழியில் அவர் பஞ்சாபிலும், டில்லி மாகாணத்திற்குள்ளும் பிரவேசிக்கக் கூடாதென அதிகாரிகள் உத்தரவு பிறப்பித்தனர். அவர் பம்பாயிலேயே இருக்க வேண்டும் என்றும் மற்றொரு உத்தரவு பிறப்பித்தனர். காந்திஜி அதை உடனடியாக மீறியதால், அவரைக் கைது செய்து பம்பாய்க்கு அழைத்து வந்து விடுதலை செய்தனர்.

களில் உயிர்ச்சேதம் ஏற்பட்டதைக் குறித்து வருந்துகிறேன். இதை லாகூர், அமிருதசரஸ் முதலிய இடங்களுக்கு அறிவியுங்கள்.

காந்தி

## 10

ஆசிரமம், சபர்மதி,
ஏப்ரல் *17, 1919*

*அன்புள்ள சிரத்தானந்தஜி,*

இக் கடிதத்தை நான் ஆங்கிலத்தில் எழுதுகிறேன். இதற்குக் காரணம் என்னவெனில், எந்தக் குழுவினரின் முன்னிலையில் இது வாசிக்கப்படுமோ அவர்களுக்காக இதை நான் ஆங்கிலத்தில் எழுத வேண்டும் என்பது ஸ்ரீ ஷுயைபின் விருப்பமாகும். எந்தக் கேள்விகளுக்கு நான் பதில் அளிக்க வேண்டுமோ அந்தக் கேள்விகள் உங்கள் முன்னிலையில் இருக்கலாம். எனவே கேள்விகளின் எண்ணிக்கையை மாத்திரம் நான் குறிப்பிடுகிறேன்.

*1*-வது கேள்விக்கு எனது பதில் இதுதான்: சத்தியாக்கிரக நடவடிக்கைகளில் கலந்து கொள்ளும் சத்தியாக்கிரகி அல்லாதார் அப்போதைக்கு சத்தியாக்கிரக விதிகளுக்கு உட்பட்டே நடந்து கொள்ளவேண்டும். எனவே எவ்வளவு கோபமூட்டப்பட்டாலும் அவர்கள் பதில் அடி கொடுப்பதைத் தவிர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். சத்தியாக்கிரகிகள் அல்லாதார் கலந்துகொள்ளும் அச்சமயத்தில், அவர்களுக்கும் சத்தியாக்கிரகிகளுக்கும் யாதொரு வேற்றுமையும் இல்லை. எந்தக் குறிப்பிட்ட சந்தர்ப்பத்திற்காக அவர்களுடைய கூட்டுறவை நாம் நாடுகிறோமோ அச்சந்தர்ப்பத்தில் அவர்கள் நம்முடைய சித்தாந்தத்தை ஒப்புக்கொள்வதாக உறுதி அளித்தால் மாத்திரமே, அவர்கள் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள முடியும். எனவே அத்தகைய சந்தர்ப்பங்களில் நமது சொந்த நடவடிக்கைகளுக்கு நாம் எவ்வளவு தூரம் பொறுப்பாளிகளோ அவ்வளவுக்கு சத்தியாக்கிரகிகள் அல்லாதாரின் நடவடிக்கைகளுக்கும் நாம் பொறுப்பாளியாவோம் என்பது எனது உறுதியான அபிப்பிராயம். அவர்களுடன் அத்தகைய உடன்பாடு செய்துகொள்ளாவிடில், சத்தியாக்கிரகிகள் அல்லாதாரால் சத்தியாக்கிரக இயக்கம் எளிதில் நசுக்குண்டுவிடும் என்பது தெளிவாகும். முரண்பாடுள்ள இரு கோஷ்டியினரின் கூட்டுறவினால் விபரீதமே பிறிட்டெழும்.

*2*-வது கேள்விக்கு எனது பதில்: இதற்கு என்னுடைய பதில் என்ன என்பதை மேற்கண்ட பதிலிலிருந்தே ஊகித்துக் கொள்ளலாம். நாம் சத்தியாக்கிரகிகள் ஆதலின், சட்டத்தின் சாதாரண விதியை நமக்கு நாமே அதிகக் கண்டிப்புடன் பிரயோகித்துக் கொள்ள வேண்டுமென நினைக்கிறேன். சில விளைவுகளை நானவது முன்கூட்டியே அறிந்திருக்க வேண்டும். சில நண்பர்களின்

ஆலோசனையை நான் எப்போதும் நாடி வந்திருக்கிறேன், அதை மதித்தும் வந்திருக்கிறேன். அத்தகைய சில நண்பர்கள் கடுமையாக எச்சரிக்கைகள் விடுத்தபோதாவது நான் அவற்றை அறிந்துகொண்டிருக்க வேண்டும். ஆனால் நான் மந்தமாக இருந்துவிட்டேன் என்பதை ஒத்துக்கொள்கிறேன். நான் கேலியாகக் கூறவில்லை. மற்றவர்களுடைய அனுபவங்களைக் கண்டு பலனடையும் திறன் எனக்கு இல்லை என்றும், ஒவ்வொரு தடவையும் நானே தீயில் குதித்து கசப்பான அனுபவங்களைப் பெற்றபின்தான் தெரிந்து கொள்கிறேன் என்றும் பல நண்பர்கள் என்னிடம் கூறியிருக்கிறார்கள். இந்தக் குற்றச்சாட்டு மிகைபடக் கூறுவதாயிருக்கும் என்றாலும், அதில் சாரமான உண்மையும் இருக்கிறது. எனக்குள்ள இந்த மந்த புத்தி என்னுடைய பலவீனமாகும், என்னுடைய பலமும் ஆகும். பிடிவாதமாக எதிர்க்கும் தன்மையை நான் வளர்த்துக் கொண்டிராவிடில், நான் ஒரு சத்தியாக்கிரகியாக இருந்து வந்திருக்க முடியாது. அத்தகைய எதிர்ப்பு அனுபவத்தின்மீது வர முடியுமேயன்றி, ஊகத்தினால் வர முடியாது. சத்தியத்தைப் பின்பற்றுவது எப்போதுமே ஓர் அபாயகரமான காரியமாகும். அதிலும் சூழ்நிலை அசத்திய மயமாக இருந்து வருகையில், சத்தியத்தைப் பின்பற்றுவது மேலும் அதிக அபாயமாகும். நீங்கள் அத்தகைய ஒரு சூழ்நிலையில் வேலைசெய்து வருகிறீர்கள்; நாம் அத்தகைய சூழ்நிலையில்தான் வேலை செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். எனவே டில்லியிலும், பம்பாயிலும் நிகழ்ந்த சம்பவங்களுக்கு நாம்தான் பொறுப்பாளிகள் என்று கருதுவதை இப்போது நீங்கள் புரிந்து கொள்ளுவீர்கள். அவை அவ்வளவு மோசமான சம்பவங்கள் அல்ல என்றாலும், அகமதாபாத்திலும், வீரம்காமிலும் நிகழ்ந்த சம்பவங்கள் மானக்கேடானவை. டில்லி, பஞ்சாப் நிகழ்ச்சிகளைப் பொறுத்தமட்டில் நான் யார் மீதும் சிறிதும் குற்றம் சாட்டவில்லை. சத்தியாக்கிரகம் இராவிட்டால் கூட அவையெல்லாம் நிகழ்ந்திருக்கும். அதாவது வேறு எந்தச் சந்தர்ப்பத்தில் டாக்டர் சத்தியபாலும், டாக்டர் கிச்சலுவும் கைது செய்யப்பட்டிருந்தாலும் அத்தகைய சம்பவங்கள் ஏற்பட்டிருக்கும். நான் மேலும் ஒன்று கூறுகிறேன். அதாவது பஞ்சாப் நிகழ்ச்சிகள் நாம் எதிர்காலத்தில் மேற்கொள்ள வேண்டிய முறையைச் சுட்டிக் காட்டுவதாக இருக்கின்றன.

3-வது கேள்விக்கும் எனது பதில், 1-வது கேள்விக்கு நான் அளித்துள்ள விடையில் அடங்கியிருக்கிறது. உண்மையில் எனது பதில்கள் இயல்பாகவே இயக்கத்துடன் ஒன்றியிருக்கின்றன. நான் என்னவெல்லாம் சொல்லிவந்திருக்கிறேனே அவைதான் சத்தியாக்கிரகத்தின் பொருள் ஆகும்; அவற்றிற்குக் குறைந்த வேறு எதுவும் இல்லை. நான் குறிப்பிட்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்படாவிடில், நாம் வெற்றி பெறுவது சாத்தியமல்ல.

4-வது கேள்விக்கு விடை: எனது பிரசங்கத்தின் முழு விவரமும் உங்களுக்குக் கிடைத்ததா? இயக்கத்தைக் கைவிடுமாறு நேரலாம் என்பதுபற்றி நான் கூறியிருப்பதன் பொருளை அதில்

நீங்கள் காண்பீர்கள். நீங்கள் புரிந்து கொண்டுள்ள விதத்தில் இயக்கத்தை ஒரு காலத்திலும் கைவிட முடியாது. இருந்தாலும் அகமதாபாத்தில் ஏற்பட்டிருப்பதைப் போல் நமது இயக்கத்திற்கு ஒரு திருப்பம் ஏற்படலாம். சத்தியாக்கிரகத்தைக் கைவிடவேண்டும் என்பதே அத்தகைய திருப்பத்தின் அர்த்தமாகும். எனினும் தார்மிக ரீதியாகவோ அல்லது அரசியல் ரீதியாகவோ நாம் தற்கொலை செய்துகொண்ட குற்றத்திற்கு ஒரு காலத்திலும் இலக்காகக்கூடாது. நீங்கள் கூறிய யோசனைக்கிணங்கவே நாம் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்துள்ளோம். கமிட்டியினால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டங்களையெல்லாம் மீறுவதை நாம் இன்னும் ஒத்திவைக்கக்கூட இல்லை; ஆனால் டில்லியில் நான் பிரவேசிக்க முயற்சிப்பதன் மூலம் மீண்டும் நான் கைதியாகி சிறை செல்லுவதே ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. மிக மிகத் தீவிரமான முறையில் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளுவதற்கான போதனைகளையே, பம்பாயிலும் அகமதாபாத்திலும் பகிரங்கமாகச் செய்துவருகிறோம். பாமர மக்களைக் கூடிய சீக்கிரம் ஒழுங்கான கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடியுமென ஊழியர்கள் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். இன்று நான் கேள்விப்பட்ட விஷயங்களிலிருந்து நாம் இன்னும் மேற்கொண்டு ஓர் அடி செல்லுவது அவசியமாக இருக்கலாம். அதாவது நாம் வேலை செய்யக் கூடிய ஒரு திருப்திகரமான சூழ்நிலை நிச்சயமாக ஏற்படும்வரையில் சட்டங்களையெல்லாம் மீறுவதை நிறுத்திவைக்கலாம். நான் பம்பாய்க்குச் சென்றதும், அதாவது நாளை வெள்ளிக்கிழமை ஓர் அறிக்கை வெளியிடலாமென நம்புகிறேன். பம்பாயிலிருந்து கவலையைக் கொடுக்கக்கூடிய ஒரு செய்தி வந்திருக்கிறது. பம்பாயில் முஸ்லிம் நண்பர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில் நான் பேசுவதாக இருந்தேன். ஆனால் நான் திடீரென்று அகமதாபாத்திற்குச் செல்லும்படி நேர்ந்ததால், நான் அதில் பேச முடியவில்லை. அங்கு கூடிய முஸ்லிம் நண்பர்கள், சத்தியாக்கிரகம் பலவீனர்களின் ஆயுதம் என்று கருதுகிறார்கள் என்பதைத் தாம் அக் கூட்டத்திலிருந்து தெரிந்து கொண்டதாக ஸ்ரீ ஜம்னாதாஸ் எழுதியிருக்கிறார். தங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தவுடன் தாங்கள் நிச்சயமாக பலாத்காரத்தில் ஈடுபடப்போவதாகவும் அவர்கள் கூறினார்களாம். இது அபாயகரமான ஒரு நிலை என்று என் மனத்திற்குத் தோன்றுகிறது. சத்தியாக்கிரகத்தை விட்டுவிட்டு, அரசியல் ரீதியாகப் பேசுவோமாயின் இங்கே எந்த பலாத்கார இயக்கமும் இஸ்லாமின் உரிமைகளை மீண்டும் ஸ்தாபிக்க முடியாது: ஆனால் உண்மையான சத்தியாக்கிரகம் பாமர மக்களிடையே ஊடுருவுமாயின், இஸ்லாம் ஒரே நாளில் தன் உரிமைகளை மீண்டும் ஸ்தாபித்துக் கொள்வதில் வெற்றி பெற முடியும். அதுதான் எனது அசைக்க முடியாத உறுதியும் நம்பிக்கையுமாகும்.

5-வது கேள்வி : இந்தக் கேள்விக்குப் பதில் மேற்கண்ட பல்வேறு பாராக்களிலும் அடங்கியிருக்கிறது.

நேற்று உங்களிடமிருந்து வந்த கடிதத்திற்குப் பூரணமாக பதில் அளித்து நேற்றே தபாலில் ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறேன். அந்தக் கடிதத்தில் நான் குறிப்பிட்டுள்ள ஆலோசனைகளின் சாரத்தை இங்கே நான் கூறலாம். சட்ட மறுப்பு செய்ய வேண்டிய நேரம் வந்திருப்பதாக உங்கள் கமிட்டி கருதும்வரையில் நீங்கள் சட்டமறுப்பை நிறுத்தி வையுங்கள், மக்களிடையே இடைவிடாது வேலை செய்யுங்கள், அவர்களுக்கு எல்லா விதமான தொண்டுகளும் செய்து, சத்தியாக்கிரகத்தில் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படும்படி தூண்டுங்கள் என்பதுதான்.

## 11

(தந்தி)

*ஜுலை, 1919*

சுவாமி சிரத்தானந்தஜி,

அனர்க்கலி,

லாகூர்.

உறவினர்களை இழந்த குடும்பங்களுக்குப் பண உதவி செய்ய வேண்டுமென நீங்கள் விடுத்துள்ள வேண்டுகோளை நிச்சயமாக ஆதரிக்கிறேன். நான் உங்களுடைய கடிதத்தை பிரசுரிக்க உத்தேசித்திருக்கிறேன். அல்லது நீங்கள் முழு விவரங்களும் அடங்கிய வேறு கடிதம் அனுப்புகிறீர்களா? தயவு செய்து அவசரத் தந்தி கொடுங்கள்.

காந்தி

## 12

## சுவாமி சிரத்தானந்தரின் வேண்டுகோள்

பஞ்சாப் நிகழ்ச்சிகளைப் பற்றி சந்நியாசி சுவாமி சிரத்தானந்தஜி டில்லியிலிருந்து பின்வருமாறு எழுதுகிறார்:*

"சென்ற ஏப்ரலில் நடந்த கோர சம்பவங்களுக்குப் பின் நான் இரண்டு தடவை பஞ்சாபுக்குச் சென்றிருந்தேன். அமிருதசரஸ், லாகூர், குஜ்ரன்வாலா, ஷேக்புரா, சாசட்கானா ஆகிய இடங்களுக்கு நான் சென்றேன். அவ்விடங்களில் நிகழ்ந்த பல சம்பவங்களைப் பற்றியும் கேள்விப்பட்டேன், நேரிலும் பார்த்தேன். ஏப்ரல் 13-ம் தேதி அமிருதசரஸில் 1500 பேருக்குமேல் கொல்லப்பட்டனர். மற்ற விடங்களிலும் ஏராளமானவர்கள் கொல்லப்பட்டிருக்கவேண்டும். அவர்களில் நூற்றுக்கணக்கானவர்களை நம்பியே அவர்களுடைய குடும்பங்கள் ஜீவனம் செய்துவந்தன. அவ்விதம் தங்களுடைய குடும்பத்தை ரட்சித்துக் கொண்டு வந்தவர்களில் பலர் இப்போது தூக்கில் மாண்டுவிட்டனர்; மற்றும் பலர் ஆயுள் தண்டனையடைந்து சிறைகளில் உழன்று வருகிறார்கள்; வேறு பலர் 10-லிருந்து 20 வருடங்கள் வரையில் சிறைத் தண்டனை அடைந்துள்ளனர். பஞ்சாபில் அவ்விதம் தங்களுடைய குடும்பத் தலைவர்களை இழந்த பெண்களும், குழந்தைகளும் அடங்கிய ஆயிரம் குடும்பங்கள் திக்

* அமிருதசரஸ் படுகொலைகளையும் பஞ்சாபில் நிகழ்ந்த ராணுவச் சட்ட அட்டூழியங்களையுமே சுவாமி சிரத்தானந்தர் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

கற்றுத் தவித்து வருகின்றன. எனவே அவர்களுக்கு உணவும் உடைகளும் கிடைக்கும்படி செய்வது நம்முடைய கடமையாகும். அவர்களுக்கு உதவி யளிக்க ஒரு லட்சம் ரூபாய் தேவையாக இருப்பதால், பண்டித மதன் மோகன் மாளவியா ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார். அவற்றில் பல குடும்பங் களையும் நாம் குறைந்தபட்சம் ஆறு மாதங்களுக்காவது பராமரித்துவரவேண்டி யிருக்குமென நான் நினைக்கிறேன். அப்படியாயின் நமக்கு ஒன்றரை லட்சம் ரூபாய் தேவையாக இருக்கும். அக்காலத்திற்குள், சிறைத் தண்டனை அடைந் தவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள் என்ற நம்பிக்கையின் அடிப்படையி லேயே அந்தத் தொகை மதிப்பிடப்பட்டிருக்கிறது. நான் கூறியுள்ள இந்த யோசனையை நீங்கள் அங்கீகரிப்பீர்களாயின், தயவு செய்து பம்பாயிலுள்ள பணக்காரர்களிடம் கெஞ்சிக் கேட்டுத் தொகையை எனக்கு அனுப்பி வையுங்கள். அந்தத் தொகையை விநியோகிப்பதற்கு நம்பிக்கையுள்ள தொண் டர்களும் எனக்குத் தேவையாக இருக்கிறார்கள். அத்தகைய தொண்டர் களையும் நீங்கள் அனுப்பிவைக்கலாம். சாத்தியமாயின் அத்தகைய நான்கு அல்லது ஐந்து நபர்களைத் தயவு செய்து அனுப்பிவையுங்கள்.''

சுவாமியின் வேண்டுகோள் சுருக்கமாக இருப்பினும் விளக்க மாகவும், மனத்தைக் கவர்வதாகவும் இருக்கிறது. அது பல ருடைய உள்ளத்திலும் சரியான உணர்ச்சியை உண்டுபண்ணு மென நான் நம்புகிறேன். அந்த வேண்டுகோளை ஆதரித்தும், பாராட்டியும் நான் எதுவும் கூறவேண்டிய தேவை இல்லை என்றே நினைக்கிறேன். அதை ஆதரிக்க வேண்டிய அவசியத் தைப்பற்றியும், பம்பாயிலுள்ள பெருந்தன்மை வாய்ந்த பொது மக்களின் கடமையைப் பற்றியும் இரண்டு விதமான அபிப்பிரா யங்கள் இருக்க முடியாது. அந்தக் குடும்பங்களுக்கு ஆதர வளிப்பதில் சந்தேகம் எதுவும் ஏற்படுவதற்கில்லை என்று நம்பு கிறேன். அமிருதசரஸிலும், மற்ற இடங்களிலும் உயிரை இழந்த பலரும் நிரபராதிகள் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. கட்சி, இன வேற்றுமைகள் எதுவுமின்றி அந்தக் குடும் பங்கள் எல்லோருடைய ஆதரவையும் பெறுவதற்கு உரியவை. எனவே பம்பாயில் உள்ள செல்வவந்தர்கள் சுவாமிஜியின் வேண்டுகோளுக்கிணங்க பெருந்தன்மையுடன் பண உதவி புரி வார்களென நம்புகிறேன். இவ்விஷயத்தில் உடனடியாகக் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகும். தொகை உடனே தேவையாக இருப்பதாக சுவாமிஜியிடமிருந்து எனக்கு ஒரு தந்தி வந்திருக்கிறது. வசூலாகும் தொகைகளைப் பற்றிய முழுவிவரங்களும் வெளியிடப்படும். சுவாமிஜியின் கடிதத்தில் மற்றொரு முக்கிய விஷயமும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதா வது நம்பிக்கைக்கு உரிய தொண்டர்கள் வேண்டுமென அவர் கோரியிருக்கிறார். அவர்கள் பஞ்சாபுக்குச் சென்று, திக்கற்ற குடும்பங்களுக்குத் தொகைகளைப் பகிர்ந்து கொடுக்கும் விஷய மாக சுவாமிஜிக்கு உதவி புரிய வேண்டும். சுவாமியின் ஜீவ காருண்ய அலுவல்களின் பெருமை, அங்கு செல்லும் தொண்டர் களின் தகுதியற்ற நடவடிக்கைகளால் குன்றிவிடக் கூடாது என்பதே எனது கவலையாகும்.

'எங் இந்தியா', *2-8-1919*

## 13

(தந்தி)

அக்டோபர் 2, 1919

சுவாமி சிரத்தானந்தஜி,
பிரகாஷ் அலுவலகம்,
லாகூர்.

அகமதாபாத் நிலைமைபற்றி* என்ன செய்யப்பட்டு வருகிறது என்பதைக் குறித்துத் தயவு செய்து தந்தி கொடுங்கள். கலகங்களைப் பற்றி விசாரிக்கும் கமிட்டி முன்னிலையில் சாட்சியம் கூற ஏற்பாடு செய்யுங்கள். சாட்சியங்களைச் சேகரிப்பதற்காக மாத்திரம் ஒரு மத்திய குழுவை அமைக்க வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். சரியான முறையில் வக்கீல் நியமிக்கப் பட வேண்டும். நான் பஞ்சாப் செல்லுவதற்கு அனுமதிபெற முயற்சித்து வருகிறேன்.

## 14

மே 2, 1920

அன்புள்ள சகோதரருக்கு,

உங்கள் கடிதம் கிடைத்தது. சர்க்கார் சிப்பந்திகளின் ஜீவனத்திற்கு வேறு வேலை கொடுப்பதற்கான திட்டங்களை வகுத்த பின்தான் சர்க்கார் உத்தியோகங்களை விட்டுவிடும்படி அவர்களைக் கேட்கவேண்டும். இவ்விஷயமாக நான் முஸ்லிம் சகோதரர்களைக் கலந்தாலோசித்து வருகிறேன். நாட்டைவிட்டு வெளியேறிவிடும்படி நான் யாருக்கும் ஆலோசனை கூறவில்லை.† அவ்விதம் நான் யோசனை கூறவும் முடியாது. நமது முஸ்லிம் சகோதரர்களில் சிலர் இந்தியாவை விட்டு வெளியேறி விட வேண்டுமென நினைக்கிறார்கள் என்பது உண்மையே. அப்படி வெளியேற விரும்புவோரை நாம் நிறுத்தி வைக்க முடியாது. ஆனால் அவர்கள் நாட்டைவிட்டு வெளியேறுவதால் யாதொரு பலனும் ஏற்படாது என்று அத்தகைய நபர்களுக்கு நான் கூறுகிறேன். நாட்டை விட்டு வெளியேறுவதை சத்தியாக்கிரகத்தின் ஓர் படியாக எண்ணி நாம் அவ்விதம் செய்வோமாயின், அதன் மூலம் நாம் சர்க்காரை நிர்ப்பந்தப்படுத்தி எத்தகைய நலனும் அடைய முடியாது. ஹிந்துக்கள் இந்தியாவை விட்டு வெளியேறும்படியான ஒரு காலம் வரலாம் என்பது எனது அபிப்பிராயமாகும். அதாவது இந்தியாவில் ஒரு ஹிந்து மன்னர் இருந்து, அவரது பிரஜைகளும் அவருடன் சேர்ந்து ஹிந்து

---

* அகமதாபாத் மில் தொழிலாளர் வேலை நிறுத்த நிலைமையைப் பற்றியே மேலே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

† மத பக்தர்களான முஸ்லிம்கள் இந்தியாவிலிருந்து வெளியேறி ஆப்கானிஸ்தானில் குடியேறிவிட வேண்டுமென சில கிலாபத் தொண்டர்கள் 1920-ல் யோசனை கூறினார்கள். அதையே மேற்கண்ட கடிதத்தில் காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

மதத்தைப் பின்பற்ற வேண்டுமென்று எல்லோரையும் நிர்ப்பந் தப்படுத்துவார்களாயின், அப்போது ஹிந்துக்கள் வெளியேறும் படியான நிலைமை ஏற்படலாம். இப்போது நாம் சர்க்காருடன் ஒத்துழைக்காமல் இருக்கத் தவறிவிடுவோமாயின், முஸ்லிம்களின் மத உணர்ச்சி பலவீனம் அடைந்துளது என்பதையே அது காட்டுகிறது என்பதை நான் அறிந்து கொள்வேன். இந்த கிலா பத் பிரச்னை, இஸ்லாமுக்கே ஒரு பெரும் அடியாகும் என்பதை ஒவ்வொருவரும் அறிந்து கொள்ள முடியும். இத்தகைய ஒரு நெருக்கடியான நிலையில், உயிரையும், சொத்துக்களையும் தியாகம் செய்ய முஸ்லிம்கள் தயாராக இல்லை எனில், முஸ்லிம்க ளிடையே மத உணர்ச்சி செத்துவிட்டது என்பதே அதன் அர்த்தமாக இருக்க முடியும். அத்தகைய விபரீதம் நேர்ந்தால் கூட, அதைக் குறித்து நான் ஆச்சரியப்படமாட்டேன். ஏனெ னில் உலகத்தைச் சுற்றிவருகையில், கலியுகத்தின் சக்தியை நான் நேரில் கண்டிருக்கிறேன். எங்கு பார்த்தாலும் மதப் பற்று குன்றிவருகிறது; மதத்திற்கு நேர் விரோதமான காரி யங்கள் கூட மதத்தின் பெயரால் நடைபெறுவதை நான் காண் கிறேன். நான் எழுதியிருப்பது உங்களுக்குத் தெளிவாக இரா விடில், தயவு செய்து அதை எனக்குக் கூறுங்கள்.

குருகுல அலுவல்கள் இப்போது செவ்வனே நடைபெற்று வருகின்றன என்று நம்புகிறேன். நான் சென்ற நான்கு நாட்க ளாக இந்த ஒதுக்கமான இடத்தில் (சின்காத்) இருந்து வருகிறேன்.

பகுதி ஒன்பது

# ஸ்ரீ மகாதேவ தேசாய்

1917-ம் வருட இறுதியில் ஸ்ரீ மகாதேவ தேசாய் காந்திஜியின் காரியதரிசியாக வந்ததிலிருந்து 1942 ஆகஸ்டு 15-ம் தேதி ஆகாகான் மாளிகையில் அவரது உயிர் பிரிந்த வரையில் அவர் காந்திஜியை விட்டு அதிக நாட்கள் பிரிந்து வாழ்ந்ததில்லை. காந்திஜிக்கு இடைவிடாது தொண்டு புரிவதையே தமது வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருந்த ஸ்ரீ மகாதேவ தேசாய் காலமானபோது, "யோகியும், தியாகியும், இணையற்ற இலக்கிய மேதையுமான மகாதேவ் மறைந்து விட்டார்" என்று காந்திஜி கூறினர். "மகாதேவ் எனக்கு நண்பர், சகோதரர், மகன், காரியதரிசி எல்லாமாக இருக்கிறார்" என்றும் காந்திஜி கூறியுள்ளார். சிற்சில சமயங்களில் ஸ்ரீ மகாதேவ் தேசாய் வெளியிடங்களுக்குச் சென்றபோது அவருக்கு காந்திஜி எழுதிய முக்கியமான கடிதங்களும், மகாதேவ தேசாய்க்கும் காந்திஜிக்கும் முதன் முதலாக எவ்வாறு தொடர்பு ஏற்பட்டது என்ற சுவை ததும்பும் விவரங்களும் இப்பகுதியில் வெளியாகியுள்ளன :

## 1

தாம் காந்திஜியை முதன் முதலாகச் சந்தித்த சம்பவத்தைப்பற்றி ஸ்ரீ மகாதேவ தேசாய், நரஹரி பரீக்கிற்கு எழுதிய கடிதத்தின் முழு விவரங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

ஆகஸ்டு *31, 1917*

இன்று காலே பாபுஜி கூறிய வார்த்தைகள், என் மனத்தில் அன்பு, திகைப்பு, மகிழ்ச்சி முதலிய பல்வேறு உணர்ச்சிகளேயும் உண்டாக்கின. எனக்கும் அவருக்கும் அன்று நடந்த சுருக்கமான சம்பாஷணையை எளிதில் விவரிக்க முடியாது என்ருலும்,

இக்கடிதத்தில் அதைப்பற்றி நான் குறிப்பிட முயற்சிக்கிறேன், அப்போது பாபுஜி என்னிடம் பின்வருமாறு கூறினர் :

“நான் இருக்கும் இடத்திற்கு நீங்கள் ஒவ்வொரு நாளும் வரவேண்டுமென நான் உங்களைக் கேட்டிருப்பதற்குக் காரணம் இல்லாமலில்லை. நீங்கள் இங்கு வந்து என்னுடன் தங்க வேண்டுமென நான் விரும்புகிறேன். சென்ற மூன்று நாட்களாக நான் உங்களுடைய திறமையைக் கவனித்துள்ளேன். எனக்கு உதவி புரிய ஒரு தகுந்த இளைஞரைச் சென்ற இரண்டு வருடங்களாக நான் தேடிக் கொண்டிருக்கிறேன். அத்தகைய இளைஞர் நீங்கள்தான் என்பதை இப்போது நான் கண்டு கொண்டுள்ளேன். நான் தேடிக்கொண்டிருந்த சரியான நபர் நீங்கள்தான் என்று நான் கூறினல், நீங்கள் நம்புவீர்களா? என்ருவது எனது நம்பிக்கைக்கு உகந்த உங்களைப் போன்ற ஒருவரிடம் எனது வேலையையெல்லாம் ஒப்படைத்து விட்டு மன அமைதியுடன் இருக்க வேண்டும் என்று விரும்பினேன். நீங்கள் நான் இருக்கும் இடத்திற்கு வந்துவிடவேண்டும். ஹோம் ரூல் லீகையும், ஸ்ரீ ஜம்னுதாஸையும், மற்றும் எல்லாவற்றையும் நீங்கள் விட்டுவிடுங்கள். இதற்கு முன் ஸ்ரீ போலக், ஸ்ரீமதி ஷ்லெஸின், ஸ்ரீ மகன்லால் ஆகிய மூவரிடம் மாத்திரமே இதைப்போல் நான் பேசியிருக்கிறேன். இன்று உங்களிடமும் இதே விதமாகப் பேசுகிறேன். உங்களுடன் இவ்விதம் பேசுவதைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். உங்களிடம் மிகச் சிறந்த மூன்று குணங்களை நான் கண்டுள்ளேன். அவையாவன : ஒழுங்கு, விசுவாசம், அறிவு. முதலில் நான் மகன்லாலைத் தேர்ந்தெடுத்தபோது அவனிடம் விசேஷத் திறமை எதுவும் இருப்பதாக வெளிக்குத் தெரியவில்லை. ஆனல் இன்று அவனது திறமை வியப்புறும்படியாக இருக்கிறது. அவனுக்குப் படிப்பு இல்லை. முதலில் நான் அச்சக வேலை சம்பந்தமாக அவனுக்குப் பயிற்சி அளித்தேன். அவன் குஜராத்தியிலும், பிறகு ஆங்கிலம், ஹிந்தி, தமிழ் முதலிய மற்ற மொழிகளிலும் அச்சுக் கோர்க்கக் கற்றுக் கொண்டான். அவன் மிகவும் துரிதமாக அக்கலையில் தேர்ச்சி பெற்றது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அதிலிருந்து அவன் மற்றும் பலவிதமான தொழில்களிலும் தனது திறமையைக் காட்டியிருக்கிருன். மகன்லாலை விட்டுவிடுவோம். ஆனல் உங்களிடம் நான் காணும் அறிவை, அவனிடம் நான் கண்டதில்லை. உங்களுடைய சிறந்த குணங்கள் காரணமாக நீங்கள் எனக்குப் பல்வேறு விதத்திலும் உபயோகமாக இருப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.’’

இவ்விதம் காந்திஜி கூறியதையெல்லாம் நான் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் ஆச்சரியத்துடனும், சங்கோசத்துடனும் கேட்டுக் கொண்டிருந்தேன். பின்னர் அவர் பேசிக் கொண்டிருக்கையில் நான் குறுக்கிட்டு ‘எனது திறமையைக் காட்டும்படியாக நான்,

எதுவும் செய்யவில்லையே' என்றேன். இதற்கு அவர் பின் வருமாறு பதில் அளித்தார் :

"அதை நீங்கள் எப்படி அறிவீர்கள்? நான் வெகு விரைவில் மனிதர்களின் திறமையைப் பற்றி முடிவு செய்துவிடுவேன். ஐந்து மணி நேரத்திற்குள் நான் போலக்கைப்* பற்றித் தெரிந்து கொண்டேன். ஒரு பத்திரிகையில் வெளியான என்னுடைய கடிதம் ஒன்றை அவர் வாசித்துவிட்டு, எனக்குப் பதில் எழுதினர். பின்னர் அவர் என்னைப் பார்க்க வந்தார். அவரைப் பார்த்ததுமே அவர் எப்படிப்பட்டவர் என்பதை நான் தெரிந்துகொண்டேன். அதிலிருந்து அவர் என்னுடைய மனிதராகிவிட்டார். அவர் என்னுடன் சேர்ந்தபிறகுதான் கல்யாணம் செய்து கொண்டு வக்கீல் தொழிலை ஆரம்பித்தார். தாம் தமது குழந்தைகளுக்காக ஏதாவது சம்பாதிக்க வேண்டும் என்று, கல்யாணம் ஆகுமுன் அவர் என்னிடம் கூறினர். 'நீங்கள் என்னைச் சேர்ந்தவர்களாகிவிட்டீர்கள். எனவே உங்களுக்கும் உங்களுடைய குழந்தைகளுக்கும் வழி செய்ய வேண்டியது என்னுடைய பொறுப்பு, உங்களுடையதல்ல. நீங்கள் கல்யாணம் செய்து கொள்வதில் எனக்கு யாதொரு ஆட்சேபணையும் இல்லாததால், உங்களுக்கு நான் கல்யாணம் செய்து வைக்கிறேன்' என்று அவரிடம் நான் மனம் விட்டுக் கூறினேன். அவரது கல்யாண வைபவம் என்னுடைய ஜாகையில்தான் நடந்தது. எனினும் நாம் பேசிக் கொண்டிருக்கும் விஷயத்திற்கு வருவோம். ஹோம் ரூல் லீகைப்பற்றிய அல்லது ஜம்னுதாஸைப் பற்றிய சிந்தனையை அடியோடு விட்டுவிடும்படி உங்களுக்கு நான் யோசனை கூறுகிறேன். ஹைதராபாத்திற்குச் செல்லுங்கள். ஒரு வருடம்

*ஸ்ரீ ப்போலக் தென்னாப்பிரிக்காவில் காந்திஜியின் கூட்டாளியாக இருந்தவர். தாமும் போலக்கும் முதன் முதலாகச் சந்தித்ததைப் பற்றி காந்திஜி 'சுயசரிதை'யில் பின்வருமாறு எழுதியுள்ளார்:

ஸ்ரீ வெஸ்டைப் போல் ஸ்ரீ போலக்குடனும் எனக்கு சைவ சாப்பாடு விடுதியில் பழக்கம் ஏற்பட்டது. ஒரு நாள் மாலை என் மேஜைக்குச் சிறிது தூரத்தில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த ஓர் இளைஞர், என்னைப் பார்க்க விரும்புவதாக ஒரு சீட்டு அனுப்பினர். என் மேஜைக்கே வருமாறு அழைத்தேன். அவ்வாறே வந்தார்.

"நான், 'கிரிடிக்' என்ற பத்திரிகையில் உதவி ஆசிரியர். என் பெயர் போலக். பிளேக் சம்பந்தமாகப் பத்திரிகைகளுக்குத் தாங்கள் எழுதிய கடிதத்தைப் பார்த்தது முதல் தங்களைக் காணவேண்டும் என்ற பேரார்வம் எனக்கு ஏற்பட்டது. இந்தச் சந்தர்ப்பம் கிடைத்ததற்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்ருர் அவர்.

ஸ்ரீ போலக்கின் கபடமற்ற தன்மை என்னை அவர்பால் கவர்ந்துவிட்டது. அன்று மாலை நாங்கள் ஒருவரையொருவர் நன்கு அறிந்து கொண்டோம். வாழ்க்கையின் முக்கியமான விஷயங்களிலெல்லாம் நாங்கள் இருவரும் ஒரே விதமான கருத்துடன் இருப்பதாகத் தோன்றியது. அவர் எளிய வாழ்க்கை நடத்திவந்தார்.

வரையிலோ அல்லது அதற்கு மேலாகவோ வாழ்க்கையை அனுபவியுங்கள். வாழ்க்கையின் இன்பங்களையெல்லாம் உங்கள் மனத்திற்குத் திருப்தி ஏற்படும் வரையில் அனுபவியுங்கள். ஆனால் அதிலேயே ஆழ்ந்துவிடுவதுபோல் உங்களுக்குத் தோன்றும் அதே விநாடியில் அதை உதறித்தள்ளிவிட்டு இங்கு வந்து என்னுடன் சேர்ந்து கொள்ளுங்கள்.''

காந்திஜி அவ்விதம் கூறியதும், நான் உடனடியாகவே அவருடன் சேர்ந்து கொள்ளத் தயாராயிருப்பதாகக் கூறினேன். அதற்கு காந்திஜி இவ்விதம் பதிலளித்தார் :

“நீங்கள் தயாராக இருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். எனினும் நீங்கள் இன்னும் கொஞ்சம் வாழ்க்கையின் இன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். கூட்டுறவு இயக்கத்தில் உங்களுக்குள்ள அறிவும் எனக்குத் தேவையாக இருக்கும். அந்த இலாகாவிலுள்ள குறைகளை நாம் களைந்தாக வேண்டும். எவ்விஷயத்தையும் பற்றிக் கவலைப்படாதீர்கள். இன்னும் கொஞ்சம் வாழ்க்கையை அனுபவித்த பின் என்னிடம் திரும்பிவாருங்கள். பள்ளிக்கூடத்திற்கோ அல்லது வேறு விதமான அலுவல்களுக்கோ அல்ல, என் சொந்த அலுவல்களுக்காகவே உங்களுடைய உதவி தேவையாக இருக்கிறது.''

இந்தக் கடிதத்தை வாசித்த பின் எனக்குத் திருப்பி அனுப்பி விடுங்கள். ஏனெனில் பாபு என்னுடன் பேசிய விவரங்களை நான் அப்படியே குறிப்பிட்டிருக்கிறேன். காலக் கிரமத்தில் அவற்றை நான் மறந்துவிடக்கூடும்.

## 2

ஸ்ரீ மகாதேவ தேசாய் சம்பாரணுக்குச் செல்லவேண்டுமென காந்திஜி விரும்பினார். ஆனால் அதை ஆட்சேபித்து ஸ்ரீ மகாதேவ தேசாய் காந்திஜிக்கு எழுதிய கடிதத்திற்கு, காந்திஜி அளித்த பதிலே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

நாடியாட்,
மே *9, 1918*

பாய்ஸ்ரீ மகாதேவ்,

உங்களிடத்தில் எனக்குள்ள எல்லையற்ற நம்பிக்கை காரணமாக நான் கூறியதை, நீங்கள் முற்றிலும் தவருகப் புரிந்து கொள்வீர்களென நான் கனவிலும் நினைக்கவில்லை. நீங்கள் என்னிடம் மிகுந்த விசுவாசமும் பற்றுதலும் வைத்திருப்பதால், சம்பாரணுக்கு நீங்கள் செல்லவேண்டியிருப்பது உங்களுக்கு அதிர்ச்சியைக் கொடுக்குமென நான் எதிர்பார்த்தேன். எனினும், நீங்கள் தகுதியற்றவரென நான் நினைப்பதால், உங்களைத் தட்டிக் கழிக்க இந்த மறைமுகமான வழியை நான் கண்டுபிடித்ததாக நீங்கள் கற்பனை

செய்து கொள்வது எவ்விதம் சாத்தியமாயிற்று? நான் எதிர்பார்க்கும் அளவுக்குத் தகுதி வாய்ந்தவர் நீங்கள் ஒருவர்தான் என்று நான் நினைத்தே, நீங்கள் சம்பாரணுக்குச் செல்லவேண்டுமென யோசனை கூறினேன். பதர்வாலில் உள்ள அலுவல்கள் துர்க்காவின் திறமையை மீறியவை அல்ல என்று நான் நம்பினேன். எனது மதிப்பீடு தவருக இருக்கலாம். உங்களுடைய மன அமைதிக்காக நான் தற்போது ஒன்றுதான் கூறமுடியும். அதாவது உங்களுடைய ஊகங்கள் யாவும் தவருனவை. நான் அவ்விதம் யோசனை கூறியதற்கு உங்கள் இருவருடைய திறமையிலும் எனக்குள்ள மதிப்பே காரணமாகும். உங்களுடைய உதவி இராதது எனக்கு மிகவும் கஷ்டமாக இருக்கும் என்று நான் ராவ்ஜிபாய், தேவதாஸ் இருவரிடமும் கூறினேன். நீங்கள் உங்களை எனக்கு இன்றியமையாதவராகச் செய்து கொண்டிருக்கிறீர்கள். என் மனத்தில் உள்ளதையே நான் போலக்கிற்கு எழுதினேன். நீங்கள் அவ்விஷயத்தில் எனக்கு ஏமாற்றமளிக்கவில்லை. உங்களுடைய திறமைக்காகவும் ஒழுக்கத்திற்காகவுமே, அரசியல் அலுவல்களில் எனக்கு உதவி புரிவதற்காக உங்களை நான் தேர்ந்தெடுத்தேன். அவ்விதம் தேர்ந்தெடுத்ததில் எனக்கு ஏமாற்றம் ஏற்படும்படி நீங்கள் எதுவும் செய்யவில்லை. இதற்கெல்லாம் மேலாக, எனக்கு மிகுந்த அன்புடன் கிச்சடியும் சமைத்துப் போட உங்களால் முடிகின்றது! மற்றவை நாம் சந்திக்கும் போது.

## 3

நவகாம்,
*ஜூலை 23, 1918*

அன்புள்ள மகாதேவ்,

உங்களுக்குக் கோபம் ஏற்பட்டதன் பலன் என்னவெனில், நீங்களோ அல்லது சிவபாயோ இங்குவர முடியாமற்போயிற்று. நாங்கள் ஆனந்தமாக இந்த இடத்திற்கு நடந்து வந்து சேர்ந்தோம். நாங்கள் *10-15* மணிக்கு வந்து சேர்ந்தோம். எங்களைக் கண்டதும் இங்குள்ள மக்கள் வியப்படைந்தனர். இங்கே சர்க்கிள் இன்ஸ்பெக்டர் விதைத்துள்ள விஷத்தை, தோண்டியெடுத்துக் களைய வேண்டும். எனவே நாங்கள் இங்கு மூன்று அல்லது நான்கு நாட்கள் தங்கியிருப்போம். நீங்களோ அல்லது சிவபாயோ தபால்களைக் கொண்டுவரலாம்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

பின்குறிப்பு: எப்படியிருந்தாலும் வியாழக்கிழமை வரையில் நாங்கள் இந்த தங்கியிருப்போம் என்று அனசூயாபென்னிடம் கூறுங்கள். தபால், கவர்கள், கார்டுகள், சாதாரண உறைகள் ஆகியவற்றைக் கொண்டுவாருங்கள் அல்லது அனுப்புங்கள்.

## 4

குஜ்ரன்வாலா,
நவம்பர் 22, 1919

பாய்ஸ்ரீ மகாதேவ்

லாலா லஜபதிராயைப்பற்றி நீங்கள் அனுப்பிய தந்தி கிடைத்தது. அவர் உங்களை எவ்விதம் பணம் கேட்டிருக்க முடியும் என்பதை என்னால் அறிந்து கொள்ள இயலவில்லை. அவரிடம் ஏராளமான பணம் இருக்கிறது. இருந்தாலும், நான் அவரது புதல்வனைப் பார்த்து அச் செய்தியை உறுதிசெய்து கொள்கிறேன். என்னுடைய கட்டுரைகள் யாவும் உங்களுக்குக் கிடைத்திருக்கும்.

நரஹரியிடமிருந்து இன்று ஒரு கடிதம் வந்தது. அதிலிருந்துதான் நீங்கள் ஸொஜித்ராவுக்குச் சென்றிருப்பதை நான் தெரிந்து கொண்டேன். அங்கு உங்களுக்கு என்ன அலுவல் என்பது எனக்குத் தெரியாது.

கட்டிட நிர்மாண வேலைகளின் முன்னேற்றத்தைப்பற்றி நரஹரி எழுதியிருக்கிறார். அதை வாசிக்க நான் மகிழ்ச்சியடைந்தேன். ஒரு சில கட்டிடங்கள் பூர்த்தியாகியிருக்குமாயின், நமக்கு சிறிது நிவாரணம் ஏற்படும். இன்று நான் டில்லியிலிருந்து புறப்பட்டு, செவ்வாய்க்கிழமை காலையில் லாகூருக்குச் செல்லுகிறேன். 'நவஜீவனி'லிருந்து எனது யாத்திரைத் திட்டத்தை நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

## 5

பிப்ரவரி 29, 1920

நான் எவ்வளவு முயற்சி செய்தாலும், உங்களுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுத எனக்கு நேரம் கிடைக்கவில்லை. உங்களுடைய உடல் நிலையைப்பற்றி டாக்டர் ஜீவராஜ் மேத்தா பேச்சுவாக்கில் என்னிடம் கூறினார். கிலாபத் அலுவல் சம்பந்தமாக நான் இங்கு வந்தேன்; அகமதாபாத்துக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறேன். * நான் எப்போது வந்து சின்காட்டில் † உங்களுடன்

* மேற்கண்ட கடிதம், காந்திஜி கல்கத்தாவுக்கு வந்திருந்தபோது எழுதப்பட்டதென்று தெரிகிறது. 29-2-1920-ல் அந் நகரில் நடந்த கிலாபத் மகாநாட்டிற்கு காந்திஜி வந்திருந்தார். அவர் மார்ச் 2-ம்தேதி மீண்டும் அகமதாபாத்திற்குச் சென்றுவிட்டார்.

† காந்திஜி 26-3-1920-ல் சின்காட்டிற்குச் சென்றார்.

கலந்து கொள்வேன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். ஆனந்தானந்த் ‡ உங்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதுகிருரென நம்புகிறேன்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

## 6

*மார்ச் 10, 1920*

பாய் மகாதேவ்,

நான் உங்களுக்குக் கடிதம் எழுதாவிடில் நீங்களும் எழுதக் கூடாது என்ற விதியை நீங்கள் அனுசரித்து வருவதாகத் தோன்றுகிறது. இன்று நான் என்னையே மிஞ்சிவிட்டேன். அதாவது விடியற்காலம் இரண்டு மணிக்கே நான் எனது அலுவலைத் தொடங்கினேன். அதன் விளைவாக மிகவும் களைப்படைந்துவிட்டேன். எனினும் என் மனத்திற்குப் பூரண அமைதி ஏற்பட்டுளது. அறிக்கையை § நான் மீண்டும் பரிசீலனை செய்து முடித்ததும், ரஜாவுக்காகப் பள்ளிக்கூடம் மூடும்போது ஒரு பள்ளிக்கூடப் பையன் எவ்விதம் சந்தோஷத்தினுல் குதிப்பானே அதுபோல் நானும் குதிப்பேன்.

அங்கே நீங்கள் உங்களுடைய உடல் நலனைப் பாதுகாத்து வரக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். துர்க்கா நேற்று நவசாரிக்குப் புறப்பட்டுச் சென்ருள். கிலாபத் சம்பந்தமாக எனது அறிக்கையை நீங்கள் வாசித்தீர்களா? வாசிக்காவிடில், நேற்றைய 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையைப் பாருங்கள்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

---

‡ சுவாமி ஆனந்தானந்த், நவஜீவன் அச்சக மானேஜர். 'நவஜீவன்' 1919 செப்டம்பரில் அகமதாபாத்திலிருந்து முதன் முதலாக வெளியாயிற்று.

§ பஞ்சாப் கொந்தளிப்புகளைப் பற்றி காங்கிரஸ் தயாரித்த அறிக்கையையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். அந்த அறிக்கை 25-3-1920-ல் வெளியாயிற்று.

## 7

ஏப்ரல் 19, 1920

பாய் ஸ்ரீ மகாதேவ்,

சகன்லாலுக்கு* நீங்கள் எழுதிய கார்டைப் பார்த்தேன். உங்களிடமிருந்து கடிதங்கள் வராததற்குக் காரணம் இப்போது தான் எனக்குத் தெரிகிறது. அடிக்கடி நீங்கள் நோய்க்கு இலக்காகத் தீர்மானித்திருக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. துர்க்கா எப்படி இருக்கிருள்? நீங்கள் இப்போது இருக்கும் இடத்திலேயே தொடர்ந்து இருந்துவர வேண்டியிருக்கும் என்று தோன்றுகிறது. உங்களுடைய உடல் நலனைக்குறித்து கண்காணிப்புடன் இருங்கள்.

மாளவியாஜி இன்னும் இங்கேதான் இருக்கிருர். மில் தொழிலாளர் தகராறை இப்போது நாங்கள் எடுத்துக் கொண்டுள்ளோம். எனவே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுச் செல்லும் கடைசி நேரத்தில் அவர் தமது மனத்தை மாற்றிக் கொண்டார். உங்களுக்கு எழுதும்படியாக, முக்கியமான எந்த விஷயத்தையும் பற்றி அவருடன் நான் விவாதிக்கவில்லை. என்னுடன் நீங்கள் டில்லிக்கு நிச்சயமாக வரவேண்டும். அல்லது டில்லியிலாவது என்னுடன் வந்து சேர்ந்து கொள்ளுங்கள்.

இங்கே நெசவும், மற்ற அலுவல்களும் திருப்திகரமாக நடைபெற்றுவருகின்றன.

## 8

ஏப்ரல் 20-ம் தேதிக்கு முன், 1920

பாய் ஸ்ரீ மகாதேவ்,

உங்களுடைய கடிதம் கிடைத்தது. எனக்கு நேரம் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும், சாப்பாடு எனக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதுபோல் சிலருக்குக் கடிதங்கள் எழுதுவதும் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கின்றன. எனவே சாப்பாட்டுக்கு எனக்கு நேரம் கிடைப்பதுபோல, அத்தகைய கடிதங்கள் எழுதுவதற்கும் எனக்கு நேரம் கிடைக்கின்றது.

நான் 20-ம் தேதி பம்பாய் வந்து சேருவேன். முற்றிலும் அவசியமாக இருந்தால் நீங்கள் 21-ம் தேதி வரையில் அங்கே

---

* சகன்லால், காந்திஜியினுடைய சிறிய தந்தையின் புதல்வர். காந்திஜியுடன் சேர்ந்து தென்னுப்பிரிக்காவிலும், பின்னர் சபர்மதி ஆசிரமத்திலும் தொண்டு புரிந்தவர்.

தங்கியிருந்து, 22-ம் தேதி பம்பாய்க்கு வந்து சேருங்கள். நாம் புறப்படுவதாக இருந்தால் கூட, * மே 12-ம் தேதிக்கு முன் புறப்படப்போவதில்லை. நாம் பம்பாயில் இருக்கும்போது, உடைகளைப்பற்றித் தீர்மானிப்போம். 26-ம் தேதி பதீமாவின் கல்யாணம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு நான் திரும்பிவந்துவிட வேண்டும். அப்போது நீங்கள் விரும்பினால் இங்கேயோ அல்லது பம்பாயிலோ இருக்கலாம். நாம் இங்கிலாந்துக்குச் செல்லாவிடில் சின்காட்டிலேயே இருக்கலாம். பாலகிருஷ்ணவும் பிரபுதாஸும் சின்காட்டில் மன அமைதியற்றிருக்கிறார்கள்.

**பாபுவிடமிருந்து ஆசிகள்**

## 9

ஆசிரமம்,
*மே 13, 1920*

பாய்ஸ்ரீ மகாதேவ்,

நீங்கள் 5-ம் தேதி எழுதிய கடிதம் நேற்றுதான் எனக்குக் கிடைத்தது. நீங்கள் இப்போது உங்களுடைய மனச்சோர்வையும், உங்கள் இருதயத்திலுள்ள சூன்ய உணர்ச்சியையும் உதறித்தள்ளிவிட வேண்டும். மன உற்சாகம் வரும்போது வரும்; வற்புறுத்துவதன் மூலம் மனத்தில் உற்சாகம் ஏற்படும்படி செய்துவிட முடியாது. என்னைவிட்டுப் பிரிந்து அப்பால் செல்லுவதால் உங்களுக்கு மனத்தில் உற்சாகம் உண்டாக முடியாது. என்னுடன் இருந்து உங்களால் இயன்ற கடமையைச் செய்வதன் மூலம்தான் அது ஏற்படும்.

மன அமைதியை விலைக்கு வாங்கக் கூடிய இடம் எங்கேயாவது இருக்கிறதா? தனது மாளிகையில் சுகமாக வாழும் ஒரு மன்னன் மன அமைதியின்றித் தவிக்கலாம்; ஜாபைப் போல் துன்பத்தை அனுபவிக்கும் ஒருவர் மன அமைதியுடன் வாழலாம். பன்யன் சிறைப்பட்டிருந்தபோது அங்கு அவர் பூரண மன அமைதியுடன் இருக்கவில்லையா? நீங்கள் நோயுற்று படுத்தபடுக்கையாக இருந்தபோது மன அமைதியுடன் இருந்தீர்கள், அல்லவா? பண்டங்களில் பேராசையில்லாதவர்கள் மன அமைதியுடன் இருக்க முடியும். பல ஊழியர்களும் அமைதியாக வாழ்ந்து வரும்போது மங்களதாஸ் மாத்திரம் ஏன் அமைதியற்றிருக்கவேண்டும்? அவருக்குள்ள ஆசை அதற்குக் காரணம் அல்லவா? உங்கள் உடலினால் நன்கு உழைப்பது சாத்தியமாயின் எல்லாம் சீராகிவிடும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? உடலினால் உழைக்க முடியாவிட்டால் என்ன அபாயம் ஏற்பட்டுவிடும்? அதன் வேலைகளுக்கு நீங்கள் தடை

* கிலாபத் தூது கோஷ்டி சம்பந்தமாக இங்கிலாந்துக்குப் புறப்படுவதைப்பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

யாக இராமல், அதைத் தகுதியான நிலையில் வைத்துக் கொண்டிருப்பதற்குச் சாத்தியமான எல்லா முறைகளையும் எடுத்துக் கொண்டாலே போதுமானது. பின்கண்ட வாக்கியத்திற்குப் பலமான ஆதாரம் இருக்கிறதென்பதை யார் அறிவார்கள்? "மனிதர்களின் அடிமைத்தனத்திற்கும் விடுதலைக்கும் அவர்களுடைய மனமே காரணமாகும்"*

அந்த வாக்கியத்தை நாம் ஒவ்வொரு நாளும் கேள்விப்படுவதன் காரணமாக, அதன் உண்மை மறைந்துவிடாது. அதன் உண்மையை நீங்கள் ஒத்துக்கொண்டால் அதைப் பற்றி உங்கள் மனத்தில் அடிக்கடி சிந்தித்துப் பார்த்து, உங்களுடைய வருத்தம், உற்சாகமின்மை, மனச்சோர்வு, கற்பனைகள் எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டு எழுங்கள்.

கிலாபத் பிரச்னையையொட்டி இங்கிலாந்துக்குச் செல்லுவதன் சம்பந்தமாக வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன். நான் இப்போது போக வேண்டும் என்றே நினைக்கிறேன். 'நான்' என்பதற்கு 'நாம்' என்பதே அர்த்தமாகும். இவ்விஷயத்தைக் குறிப்பிட்டு ஷவுகத் அலிக்கும் எழுதியிருக்கிறேன். அவர் தற்போது பம்பாயில் இருக்கிறார். அவரை இங்கே வரும்படி கேட்டிருக்கிறேன். அவர் வந்த பின் நாம் என்ன செய்ய வேண்டும் என்பது தெரியும். சிறிதும் கவலைப்படாதீர்கள். முற்றிலும் அமைதியாக இருந்து கொண்டு, என்ன நிகழ்கின்றது என்பதை எதிர்பார்த்து வாருங்கள். உங்களுக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியதும், உங்களுக்கு வேண்டிய உடைகள் முதலியவற்றைத் தயாரிக்க வேண்டியதும் என்னுடைய வேலை அல்லவா? நான் கூறும்போது புறப்படுங்கள். எனக்கு இங்கே எல்லா வசதிகளும் இருப்பதால், நான் பொறுமையின்றி அவசரப்படவில்லை.

ஈஸ்தரை,† மகிழ்ச்சியுடன் இருக்கும்படி செய்யுங்கள். நீங்கள் மகிழ்ச்சியுடன் இருங்கள். மிகச் சிறந்த ஆரோக்கியத்தை உரு

---

* பின்கண்ட சம்ஸ்கிருத சுலோகத்தின் பொருளையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்:

மன ஏவ மனுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோ:

†1916-ல் இந்தியாவுக்கு வந்த டேனிஷ் பாதிரிமார் சங்கத்தைச் சேர்ந்த ஈஸ்தர் பேரிங் என்ற சிறுமி சபர்மதி ஆசிரமத்தில் சில நாட்கள் தங்கியபோது, காந்திஜியின் அன்பையும் ஆதரவையும் பெற்றார். அவர்களிடையே அப்போது ஏற்பட்ட நட்பு, தந்தைக்கும் மகளுக்கும் உள்ள பாசமாக வளர்ந்தது. காந்திஜி சிறையில் இருந்தபோது கூட ஈஸ்தர் பேரிங்கிற்குக் கடிதம் எழுதத் தவறுவதில்லை. அக் கடிதங்களை ஸ்ரீமதி ஈஸ்தர் பேரிங் ஒரு அரிய பொக்கிஷமாகப் பாதுகாத்துவந்தார். 'எனது அன்பார்ந்த குழந்தாய்' என்ற தலைப்பில் அந்த அற்புதமான கடிதங்கள் ஒரு நூலாக வெளியாகியுள்ளன.

வாக்கிக் கொள்ளுங்கள். அதன் பின் நீங்கள் மற்ற விஷயங்களை நன்ருகக் கவனிக்க முடியும்.

நேற்று கிலாபத் கூட்டம் சிறப்பாக நடந்தது. அது எனக்குத் திருப்தியை அளித்தது. எல்லோரும் உறுதியுடன் பேசினர்கள்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

## 10

*மே 15, 1920*

பாய்ஸ்ரீ மகாதேவ்,

உங்களுடைய இரண்டு கடிதங்களும் இன்று எனக்குக் கிடைத்தன. நீங்கள் என்னைக் கடிந்து கூறியிருப்பவைகளை நான் விரும்புகிறேன். ஏனெனில் அவை என்மீது உங்களுக்குள்ள அன்பையே காட்டுகின்றன.

உங்களைப் பற்றி நான் தினந்தோறும் விசாரித்துக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு நாளும் உங்களுக்கு எழுதும்படி நான் ஆனந்தானந்திடம் கூறினேன்; உங்களிடமிருந்து கடிதங்கள் வராததைக் குறித்தும் புகார் செய்தேன். மூன்று நாட்களுக்கு முன் தான் உங்களிடமிருந்து கடிதங்கள் வரத் தொடங்கின.

எனினும் என்னிடம் உள்ள குறையை நான் ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும். அதை காலென்பாக் தெளிவாக அறிந்து என்னை மிகவும் கடிந்து கொண்டார். அதாவது சோதனையில் தேறியவர்களை நான் மறந்து விடுவதாகப் பிறர் எண்ணும்படி நடந்துகொள்கிறேன் என்பதுதான் அவர் எடுத்துக் காட்டிய குறையாகும். அத்தகைய ஒருவருக்கு எழுதவேண்டிய அல்லது உபசார வார்த்தைகள் கூறவேண்டிய தேவை என்ன? சம்பிரதாய உபசாரத்தின் பக்கபலம் தேவையாக இருப்பது அன்பு ஆகுமா? அத்தகைய ஒருவருக்கு நான் எழுதாவிடில், அவர் என்மீது தப்பெண்ணம் கொள்ளுவாரா? பிரம்மாண்டமான கருவாலி மரத்துக்கு யாராவது தண்ணீர் ஊற்றுவார்களா? ஒரு மாஞ்செடியை நட்டபின் இரண்டு, மூன்று நாட்கள் வரையில் தண்ணீர் ஊற்ருமலும் அதைச் சுற்றி அடைப்பு வைக்காமலும் இருந்தால் என்ன நேருகிறது என்பதைப் பாருங்கள். ஈஸ்தரை ஒரு மாஞ்செடியைப் போலவும் உங்களை ஓர் ஆலமரத்தைப் போலவும் நான் கருதுகிறேன். விரும்பினல் நீங்கள் ஒரு மாஞ்செடியைப் போல் நடந்து கொள்ளலாம். ஆனல் எப்போதும் நீங்கள் ஒரு சிறிய செடியாகவே இருக்க விரும்புவது போல் தோன்றுகிறது. உங்களுடைய அந்த விருப்பத்தைக்கூட நான் திருப்தி செய்ய வேண்டுமா? நான் அவ்விதம் திருப்தி செய்யாவிடில், நீங்கள் என்னிடத்தில் இருப்பதாகக் கூறிய குணவிசேஷங்களை மறுத்துவிடுவீர்களோ? நீங்கள் ஒரு

நாயைக் கொல்ல நினைத்தால், அதற்கு ஒரு கெட்ட பெயரைச் சூட்டவேண்டும். ஒரு மனிதனை வீழ்ச்சியடையும்படி செய்வதற்கான ஓர் அற்புத வழி என்னவெனில், அரும் பெரும் குணங்களுக்கு அவன் இருப்பிடம் என்று பட்டம் சூட்டுவதுதான். எனினும் என்னை நான் வீழ்ச்சியுறும்படி விட்டுவிட மாட்டேன். நான் எங்கு இருக்கிறேனோ அங்கேயே இருப்பேன். எனவே ஜாக்கிரதையாக இருங்கள். என்னிடமிருந்து கடிதங்கள் வரவேண்டும் என்ற தாபம் உங்களுக்கு எப்போதெல்லாம் ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் உங்களுக்கு என் கடிதங்கள் வரும். அப்படியாயின், ஆலவிருட்சம் என்றோ மாபெரும் கருவாலி மரம் என்றோ யாரைக் கூறுவது? ஒரு சிறிய குடத்திற்கு அடிக்கடி தண்ணீர் ஊற்ற வேண்டும். ஆனால் கடலுக்கு அவ்விதம் ஊற்ற வேண்டியது அவசியமா?

நீங்கள் கூறுவது முற்றிலும் சரிதான். நீங்கள் இன்னும் பலவீனமாக இருப்பதால், நீங்கள் செய்ய வேண்டிய ஒரே வேலை எல்லாவற்றையும் என் பொறுப்பில் விட்டுவிடுவதுதான். "உங்களுக்கு இரண்டு மனைவிகள் இருக்கின்றனர்; ஸ்ரீமதி போலக் ஒரு மனைவி, நான் மற்றொரு மனைவி" என்று நான் போலக்கிடம் சொல்லுவது வழக்கம். ஏனெனில் அவர் எங்கள் இருவரிடமும் தான் அவரது உள்ளத்தில் இருப்பதையெல்லாம் கொட்டுவது வழக்கம்; அதுபோலவே அவர் எங்கள் இருவரிடமும் மாத்திரமே கோபித்துக் கொள்வார். உங்களுக்கும் அதே பழக்கம் ஏற்பட்டு வருவதாகத் தோன்றுகிறது. ஆனால் இதற்கு துர்க்கா என்ன சொல்லுவாள்?

ஷவுகத் அலி இன்று இங்கு வந்திருக்கிறார். குறை எதுவும் கூற முடியாதவாறு அவர் தைரியமாகவே இருக்கிறார். டச்சயானுவைச் சேர்ந்த மூவரும் கூட இங்கேதான் இருக்கிறார்கள். ஆகையால் இன்று எனக்கு மூச்சு விடக் கூட நேரம் இல்லை. காலையில் †லலுபாயும் பிரெல்வியும் இங்கே வந்திருந்தனர். தேசிய மொழியைப் பற்றி பலன் தரத்தக்க முறையில் எங்களுக்குள் இனிமையான விவாதம் நடந்தது. ஒரிஸ்ஸா கஷ்ட நிவாரண நிதிக்காக அவர்கள் ரூ 200 அனுப்பியிருக்கிறார்கள். நாம் இங்கிலாந்திற்குப் போவதென்று தீர்மானித்தால் கூட, இன்னும் ஒரு மாதத்திற்குப் பிறகே நாம் புறப்படவேண்டியிருக்கும்.

பழங்களையெல்லாம் நீங்கள் சாப்பிட்டுவிட்டதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். அந்தப் பழங்கள் எனக்காக மாத்திரம் வரவில்லை என்பது மாத்திரம் நிச்சயம்தான். அவை எனக்காகவும் என்னைச் சேர்ந்தவர்களுக்காகவுமே அனுப்பப்பட்டன. ஹரி

---

† பம்பாயைச் சேர்ந்த பிரமுகரும், மிதவாதக் கொள்கையை ஆதரித்தவருமான சர் லலுபாய் சமல்தாஸ் மேத்தாவையும், 'பம்பாய் கிரானிகிளை'ச் சேர்ந்த ஸ்ரீ எஸ். ஏ. பிரெல்வியையுமே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார். ஸ்ரீ பிரெல்வி பின்னர் அப்பத்திரிகையின் ஆசிரியரானார்.

பாவுக்கும்† நீங்கள் சில பழங்களை அனுப்பிவைத்தது, நீங்கள் பிறருக்கு நிழல்கொடுக்கும் பெரிய விருட்சம் என்பதற்குச் சாட்சியாகும். தந்தி கொடுக்கும் பணத்தை நீங்கள் மிச்சப்படுத்தியது, அதற்கு மற்றெரு உதாரணமாகும். பெல்காமுக்குச் செல்ல நான் அனுமதி கொடுத்தும் கூட நீங்கள் செல்லாதது, மூன்ருவது உதாரணமாகும். இப்போது ஆனந்தானந்த் அங்கு செல்லுவதால், இனி நீங்கள் அங்கு செல்ல வேண்டிய அவசியம் இல்லை. 30-ம் தேதி நான் காசியில்‡ இருக்க வேண்டும்.

மகன்லாலும், ராதாவும் யாத்திரை செல்லுவதற்காக இன்று புறப்பட்டார்கள். அவ்விதம் செல்லும்படி நான்தான் அவர்களுக்கு ஆலோசனை கூறினேன்.

பாபுவிடமிருந்து ஆசிகள்

---

† ஹரிபாவ் உபாத்யாயா, 'ஹிந்தி நவஜீவன்' பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார்.

‡ காசியில் மே 30-ம் தேதி நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்காக காந்திஜி 29-5-1920-ல் அந்நகருக்குச் சென்ருர்.

தொகுதி பத்து

# மகாகனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியார்

காங்கிரசுக்கு வெளியில் இருந்து கொண்டும், காங்கிரஸ் கொள்கையை ஆதரிக்காமலும் காந்திஜியின் அன்பையும் மதிப்பையும் பெற்ற ஒரு சிலரில் கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியாரும் (1869-1946) ஒருவர். 'அரசியல் கொள்கையில் எனக்கும் சாஸ்திரியாருக்கும் தென் துருவத்திற்கும், வட துருவத்திற்கும் உள்ள வேற்றுமை இருந்தாலும், எனக்கும் அவருக்கும் இடையே உள்ள பிணைப்பு சிறிதும் குன்ருமல் எத்தனையோ அக்னிப் பரீட்சைகளையும் கடந்து வந்திருக்கிறது. இந்தியாவின் அரும் தவப் புதல்வர்களில் சாஸ்திரியாரும் ஒருவராவார். இந்தியாவினிடம் அவருக்குள்ள அன்பும் பக்தியும் வேறு எவருக்கும் குறைந்ததல்ல. அரசியலில் எங்களுக்குள் வேற்றுமை இருந்தாலும், எங்களுடைய உள்ளம் ஒன்ருகவே இருந்து வந்துளது' என்று காந்திஜி சாஸ்திரியாரைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதிலிருந்தே சாஸ்திரியாரின் பெருமையைத் தெரிந்து கொள்ளலாம். 1923-ல் காந்திஜிக்கு அறுவை சிகிச்சை நடந்த போது, அவர் யாரையாவது பார்க்க விரும்புகிருரா என்று ஆஸ்பத்திரி அதிகாரிகள் கேட்டதற்கு, தாம் சாஸ்திரியாரைப் பார்க்க விரும்புவதாக காந்திஜி கூறினுர். அறுவை சிகிச்சையின் போது சாஸ்திரியார்தான் காந்திஜிக்கு அருகில் இருந்தார். தவிர காந்திஜி தமது அரசியல் குருவாகக் கருதிய கோபால கிருஷ்ண கோகலேயின் நன்மதிப்பையும் சாஸ்திரியார் பெற்றிருந்தது

**குறிப்பிடத் தக்கதாகும். கோகலே காலமான பின் அவரது ஸ்தானத்தில் 1915-லிருந்து 1927 வரையில் சாஸ்திரியார் இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவராகப் பதவி வகித்தார். சாஸ்திரியாருக்கு மகாத்மா காந்தி எழுதிய கடிதங்களே இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.**

## 1

டால்ஸ்டாய் பண்ணை,
லாலி ஸ்டேஷன், திரான்ஸ்வால்,
*நவம்பர் 3, 1912*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

உங்களைப் பற்றி நான் மிகவும் கேள்விப்பட்டிருப்பதால், நாம் ஒருவரையொருவர் நன்கு அறிந்திருப்பது போலவே எனக்குத் தோன்றுகிறது. அதனாலேயே பழக்கமான தோரணையில் எழுதுகிறேன்.

ஸ்ரீ கோகலே இரண்டு வாரங்கள் வரையில் இங்கே தீவிரமாக யாத்திரை செய்தபின், ஒன்றிரண்டு நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு வருகிறார். அவருக்குத் தேவையான ஓய்வெடுத்துக் கொள்ளும்படி நான் அவரை வற்புறுத்தியிருக்கிறேன். எனவே தங்களுக்குக் கடிதம் எழுதும்படி அவர் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். யாத்திரையின்போது, ஆரம்பம் முதல் கடைசிவரையில் அளிக்கப்பட்ட வரவேற்புகள் மிகவும் மகிழ்ச்சியளிப்பவையாக இருந்தன. பல பிரபல தலைவர்களான ஐரோப்பியர்கள் வரவேற்புகளில் கலந்துகொண்டார்கள். உங்கள் சங்கத்திற்கு அனுப்பப்பட்டுள்ள பத்திரிகைகளிலிருந்து அவற்றை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். ஸ்ரீ கோகலேயின் லட்சியம் நிச்சயமாக பலனைக் கொடுக்கும் என்பதே எனது அபிப்பிராயமாகும். அவரது பிரசங்கங்கள் எல்லா இடங்களிலும் வெகுவாகப் பாராட்டப்பட்டன. இந்தியாவுக்குக் கப்பல் போக்குவரத்து சீர்கெட்டு இருப்பதால், ஸ்ரீ கோகலேயின் பிரயாணத் திட்டங்களில் மாறுதல் செய்ய வேண்டியிருந்தது. அவர் இப்போது 'உம்குலி' கப்பலில் டர்பனிலிருந்து 20-ம் தேதி புறப்பட்டு, டிசம்பர் 7-ம் தேதி கொழும்பு போய்ச் சேருவார். நீங்கள் தயவு செய்து அதைக் கவனித்து வருவீர்களா? தம்மை ஸ்ரீ ரங்கநாதன் கொழும்புவில் வந்து சந்திக்க வேண்டும் என்பதும், நீங்கள் சென்னையில் தம்முடன் கலந்து கொள்ள வேண்டும் என்பதும் ஸ்ரீ கோகலேயின் விருப்பமாகும்.

கப்பற் பிரயாணச் சீட்டு இன்னும் வாங்கவில்லை. இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைக்குமுன், விவரங்களைத் திட்டவட்டமாகக் குறிப்பிட்டு உங்களுக்கு ஒரு தந்தி அனுப்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 2

அகமதாபாத்,
மே *14, 1915*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

உங்களுடைய ஆரோக்கியத்தையொட்டி உங்களுடன் நான் அமைதியாகப் பேச விரும்புகிறேன். இவ்விஷயமாக நான் மிகுந்த அக்கறையுடையவனாக இருக்கிறேன். உங்களுடைய உணவை ஒழுங்கான முறையில் நிர்ணயித்துக் கொள்வதுடன், நீங்கள் தண்ணீர் சிகிச்சையும் செய்து கொண்டால் முற்றிலும் குணமடைவீர்கள் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். எனினும் காலம் கடப்பதற்கு முன் அவ்விதம் செய்து கொள்ள வேண்டும். உங்களுடைய நோயை எளிதில் தீர்த்துக் கொள்வது சாத்தியமாக இருக்கும்போதே அவ்விதம் செய்து கொள்வது, சங்கத்திற்கும் தேசத்திற்கும் நீங்கள் செய்ய வேண்டிய கடமையாகும். நான் கூறும் சிகிச்சை முறையை நீங்கள் கைக்கொள்ளுவதால், உங்களுடைய பொதுஜன ஊழியம் ஒரு நாள் கூட தடைப்பட வேண்டிய அவசியமில்லை. அவசியமான ஒரு நிபந்தனை என்னவெனில், சிகிச்சை முறைகளை நீங்கள் ஒழுங்காகப் பின்பற்ற வேண்டும். அதன் பலன்கள் தெரிவதற்கு நெடுங்கால சிகிச்சை எதுவும் அவசியமில்லை. அந்த முறைகள் இவைதான்:

தினந்தோறும் இரண்டு தடவைகள் இடுப்பு ஸ்நானம் செய்ய வேண்டும். ஒவ்வொரு தடவையும் அந்த ஸ்நானம் 20 நிமிஷ நேரத்துக்கு நீடிக்கவேண்டும். சாப்பிட்ட பிறகு மூன்று மணி நேரம் ஆவதற்கு முன் அத்தகைய ஸ்நானம் செய்யக்கூடாது. காலையிலும் மாலையிலும் வெட்ட வெளியில் இரண்டு மணி நேரம் மெதுவாக உலாவ வேண்டும்.

தினந்தோறும் இரண்டே வேளைதான் சாப்பிட வேண்டும். கடைசிச் சாப்பாட்டை சூரியன் மறைவதற்கு முன் முடித்துவிட வேண்டும். சாப்பிடும் ஒவ்வொரு கவளத்தையும் நிதானமாக மென்று உட்கொள்ள வேண்டும். அது கஞ்சி போல் திரவப் பொருளாக உட்செல்ல வேண்டுமேயன்றி கட்டியாகச் செல்லக் கூடாது. நீங்கள் இவ்விதம் செய்திருக்கிறீர்களா அல்லவா என்பதை நீங்கள் மலம் கழிக்கும்போது தெரிந்து கொள்ளலாம்.

வாழைப்பழம், மாம்பழம், ஆரஞ்சுப்பழம், ஓட்ஸ், அத்திப் பழம் (புதிதோ அல்லது உலர்ந்ததோ), திராட்சைப்பழம், எலுமிச் சம்பழம், புளி, பப்பாளிப் பழம், அன்னாசிப்பழம், உலர்ந்த திராட்சை, தேங்காய், கடலை, பாதம் கொட்டை, அவசியமாயின் ஆலிவ் எண்ணெ ஆகியவையே உங்களுடைய உணவாக இருக்க வேண்டும்.

கொட்டைப் பருப்புகளில் இரண்டு வகைகளை மாத்திரமே பகற்காலத்தில் உட்கொள்ள வேண்டும். அதிலும் அவ்விரண்டு வகைகளையும் சேர்த்து 4 அவுன்ஸ்களுக்கு மேல் இருக்கக்கூடாது. ஆரம்பத்தில் கொட்டைப் பருப்புகளை அறவே தவிர்த்துவிடலாம். பிறகு சிறிது சிறிதாக உட்கொள்ளத் துவங்கலாம்.

எலுமிச்சம்பழங்களோ அல்லது புளியோ சேர்த்துக் கொள்ள லாம். அத்திப்பழம், பேரீச்சம்பழம், உலர்ந்த மற்றப் பழங்கள் ஆகியவற்றை நன்கு கழுவி, சாப்பிடுவதற்கு ஆறு மணிக்கு முன்பே தண்ணீரில் ஊறவைத்துவிட வேண்டும். அவை ஊற வைக்கப்படும் தண்ணீரைப் பிறகு சாப்பிட வேண்டும்.

ஆலிவ் எண்ணெயை உட்கொள்வதாயின், ஒரு நாளைக்கு ஒரு அவுன்சுக்கு மேல் உட்கொள்ளக்கூடாது. ஒரு நாளைக்கு மற்றப் பழங்களுடன் ஒன்பது வாழைப்பழங்கள் சாப்பிட்டால் போது மானது.

இருந்தாலும், எவ்வளவு தேவை என்பதை அவரவரே நிர்ணயித்துக் கொள்ளவேண்டும்.

விட்டுவிடாமல் சேர்ந்தாற்போல் ஒரு மாதம் அவற்றை உட்கொண்டு பார்த்தால், பூரணமாகக் குணம் அடைவதற்கு அதுதான் வழி என்பதையும், வேறு வழி இல்லை என்பதையும் தெரிந்து கொள்ளலாம். எனினும் மேற்கண்ட சிகிச்சை முறை யைக் கையாளும்போது, காப்பி, டீ, சோடாத் தண்ணீர், வெற் றிலை ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டியது அவசியம். பின்னர் நீங்கள், சிகிச்சையின்போது மேற்கொண்ட சில உணவுப் பொருட்களுடன் உங்களுடைய பழைய உணவை மீண்டும் உட் கொள்ளத் தொடங்கலாம்.

தயவு செய்து இதைப் பற்றி அக்கறையுடன் சிந்தனை செய்யுங்கள்.

உங்களுடைய தாயாரையும், ஸ்ரீமதி சாஸ்திரியாரையும் நாங்கள் விசாரித்ததாகச் சொல்லும்படி கோருகிறோம்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 3

அகமதாபாத்,
மே 20, 1915

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

நான் ஒரு குடும்ப அலுவலையொட்டி ராஜ்கோட்டிற்குச் சென்று திரும்பிவந்தபோது உங்களுடைய இரண்டு கடிதங்களையும் பார்த்தேன். நான் யோசனை கூறுவதாயின், சர் வில்லியத்தின் அழைப்புக்கு நீங்கள் இசைய வேண்டுமென்றே நினைக்கிறேன். அவ்விஷயமாக ஸ்ரீமதி பெசண்டைப் போலவே சர் பிரோஸிஷாவின் கருத்தும் இருக்கக்கூடும். சர் வில்லியம் உங்களை விரும்புகிறார் என்பதும், நீங்கள் கையாளவேண்டும் என்று எதிர் பார்க்கப்படும் விஷயத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள் என்பதுமே எனக்குப் போதுமானது. இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவர் என்ற முறையில் உங்களுக்குள்ள அந்தஸ்தும் அதிகாரமுமே உங்களுக்குப் போதுமானவை. நீங்கள் மேற்கொள்ளப்போகும் பொறுப்புக்கு, அந்தஸ்தும் அதிகாரமுமே தேவையாகும்.

நீங்கள் போவதாயின், இன்னும் இரண்டு மாதங்களுக்கு நீங்கள் அவ்விதம் செய்ய வேண்டிய அவசியம் இராது. எனவே அக்காலத்தில் நீங்கள் உங்களுடைய நோயைப் போக்கிக் கொள்ள மாட்டீர்களா? அவ்விதம் போக்கிக் கொண்டால், உங்களுடைய அலுவல்களை இன்னும் அதிக பலன்தரத்தக்க விதத்தில் நீங்கள் செய்ய முடியும்.

நாயக்கரும் சுந்தரமும் மிகவும் சௌக்கியமாக இருந்துவருகிறார்கள் என்றே தோன்றுகிறது.

தற்காலிகமாக நான் இங்கேயே நிரந்தரமாக இருக்க ஏற்பாடு செய்து வருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 4

அகமதாபாத்,
ஜுலை 16, 1915

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

ஸ்ரீ ஆண்ட்ரூசின் கடிதத்தை நீங்கள் வாசிப்பதற்காக இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இந்தியாவில் ஒப்பந்தத் தொழிலாளர்களாக வேலை செய்ய ஆள் சேர்ப்பதை அடியோடு தடுப்

பதற்காக, இந்திய ஊழியர் சங்கம் ஒரு பெரிய இயக்கத்தை ஆரம்பிக்கலாமென நான் நினைக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

எனக்காக ஒரு தமிழ் உபாத்தியாயரை ஏற்பாடு செய்ய நீங்கள் முயற்சித்து வருகிறீர்களா?

## 5

அகமதாபாத்,
ஆகஸ்டு *1, 1915*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

ஸ்ரீ ராகவேந்திரா இக் கடிதத்தை உங்களிடம் கொண்டு வருவார். அவருக்குத் தகுதியான எந்த முறையிலும் அவர் இந்திய ஊழியர் சங்கத்தில் சேர விரும்புகிறார். பல துறைகளிலும் அவர் அனுபவம் பெற்றுள்ளார் என்றும் தெரிகிறது. சிறிது காலமாக அவரை எனக்குத் தெரியும். அவர் ஒரு பத்திரிகை நிருபராக இருக்கிறார்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 6

அகமதாபாத்,
ஆகஸ்டு *23, 1915*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

இதோ உங்களிடம் வரும் மணிலால் என்னுடைய இரண்டாவது மகன். அவன் ஏன் சென்னைக்கு வந்திருக்கிறான் என்பதை உங்களிடம் கூறுவான். அங்கே அவன் தமிழ்ப் பயிற்சியையும், கைத்தறி நெசவுப் பயிற்சியையும் பூர்த்தி செய்ய வேண்டியவனாக இருக்கிறான். அன்பு கூர்ந்து அவனுக்கு வழிகாட்டுங்கள். மணிலாலுக்கு சமுதாயத் தொண்டிலும் ஹனுமந்தராவ் பயிற்சி அளிக்கலாம்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 7

அகமதாபாத்,
செப்டம்பர் 14, 1915

அன்புள்ள சாஸ்திரியார்,

பத்திரிகையில் வெளிவந்துள்ள அறிக்கைக்கு உடனடியாக பதில் அளிக்க வேண்டுமென நான் நினைக்கிறேன். கேப் டவுனிலும், மற்றச் சந்தர்ப்பங்களிலும் அவருக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணைகளை விவரிக்க நான் தயாராக இருக்கிறேன். அசல் விண்ணப்பத்தை நாம் பார்த்தாலொழிய கையெழுத்துக் கதையை நம்புவது இயலாத காரியம். சப்பைக்கட்டு கட்டுவதற் காக ஒரு விஷமத்தனமான முயற்சி நடந்துவருகிறது. அதை நான் என்னவென்று கூறுவது!

எனது வாழ்க்கையிலேயே நான் மிக மிக முக்கியமான ஒரு முறையை* மேற்கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். அதைப் பற்றி எழுத இன்று எனக்கு நேரம் இல்லை. அது பறையர் பிரச்னையைப் பற்றியதேயாகும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 8

அகமதாபாத்,
செப்டம்பர் 23, 1915

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

நாயக்கரை நான் என்னுடன் சேர்த்துக் கொண்டபோது, ஸ்ரீமதி காந்தி தகராறு செய்யவில்லை. குஜராத்தைச் சேர்ந்த வயது வந்த ஒரு தீண்டாதாரையும் அவரது மனைவியையும்† நான் என்னுடன் சேர்த்துக் கொள்ளுவதா என்பதை இப்போது நான்

---

* ஒரு "தீண்டாதாரை"த் தம்முடன் ஆசிரமத்தில் சேர்த்துக்கொள்ளத் தீர்மானித்ததைப் பற்றியே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார். இதன் சம்பந்த மான முழு விவரங்களையும் அடுத்த கடிதத்தில் காணலாம்.

† துதாபாய் என்ற ஹரிஜன் அவரது குடும்பத்துடன் 1915 செப்டம்பர் 26-ல் காந்திஜியின் ஆசிரமத்தில் சேர்ந்தார். அவ்விதம் சேர்ந்துகொண்ட முதல் ஹரிஜன் அவர்தான். அமிருதலால் தக்கர் சிபாரிசு செய்ததன் மீதே காந்திஜி அவரை ஏற்றுக்கொண்டார். அச்சம்பவம் அகமதாபாத்தில் மிகுந்த பரபரப்பை உண்டாக்கியது. அப்போது மக்கள், ஆசிரமத்தைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்று கூட நினைத்தனர்.

தீர்மானிக்க வேண்டியிருந்தது. கடைசியில் அவர்களைச் சேர்த்துக் கொள்ளுவதென்று தீர்மானித்தேன். ஆனால் அதை அவள் கடுமையாக எதிர்த்தாள்; ஆசிரமத்திலுள்ள மற்றொரு பெண்மணியும் அதை எதிர்த்தார். அவ்விஷயமாக ஆசிரமத்தில் மிகுந்த சலசலப்பு ஏற்பட்டது; அகமதாபாத் நகரில் கூட சலசலப்பு ஏற்பட்டுள்ளது. 'இதை நீ ஆட்சேபித்தால், என்னை விட்டுச் சென்று விடலாம்; நாம் நல்ல நண்பர்களாகப் பிரிந்து விடுவோம்' என்று ஸ்ரீமதி காந்தியிடம் நான் கூறினேன். நான் மேற்கொண்டுள்ள முறை என் வாழ்க்கையிலேயே மிகமிக முக்கியமானது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்பந்தமாக நான் மேற்கொண்டுள்ள லட்சியத்துடன் அது என்னைப் பிணைத்திருக்கிறது. வெகு சீக்கிரத்தில் நான் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வசிக்கும் சேரிக்கு எனது ஜாகையை மாற்றிக் கொள்ளும்படியும், அவர்களுடன் வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ளும்படியும் நேரலாம். உறுதி வாய்ந்த எனது நெருங்கிய சக ஊழியர்களுக்கு இது திகைப்பைக் கொடுக்கக் கூடிய விஷயமாகும். இந்தக் கதையை மேலெழுந்த வாரியாகவே உங்களுக்குக் கூறியிருக்கிறேன். இது போற்றத் தக்க பெரிய காரியம் அல்லவாயினும், என்னைப் பொறுத்த மட்டில் இது முக்கியமான ஒரு கட்டமாகும். ஏனெனில் சமுதாயப் பிரச்னைகளிலும் சாத்துவிக எதிர்ப்பின் சக்தியை அது நிரூபிக்கிறது. இறுதியில் அது சுயராஜ்யம் அடைவதற்கும் பிரயோகிக்கப்படும்.

டாக்டர் தேவாவிடத்திலும், நீங்கள் விரும்பும் மற்ற எந்த அங்கத்தினரிடத்திலும் தயவு செய்து இந்தக் கடிதத்தைக் காட்டுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 9

அகமதாபாத்,
ஜனவரி *13, 1916*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

நீங்கள் என்னை முந்திக் கொண்டுவிட்டீர்கள். சாத்தியமாயின், காங்கிரஸ் வாரத்தின்போது உங்களிடம் எனது முடிவான தீர்மானத்தைக் கூறுகிறேன் என்று நான் டாக்டர் தேவாவிடம் கூறியிருந்தேன். ஆனால் நான் அவ்விதம் செய்ய முடியவில்லை. எனினும் இப்போது ஊழியர் சங்க அங்கத்தினர்கள் அவ்விஷயத்தைப் பற்றி ஆலோசிக்க முற்பட்டிருப்பதால், எனது முடிவைக் கூறவேண்டியது அவசியம் என்று தோன்றவில்லை. என்னை அங்கத்தினராக எடுத்துக் கொள்வதில்லை என்று அங்கத்தினர்கள் தீர்மானித்திருப்பது நியாயமேயாகும். நாம்

தனித்தனியாக இருக்கும் இச் சமயத்தில் ஒத்துழைப்புக்கு இடம் இருந்துவருகிறது. நான் அங்கத்தினராகச் சேர்ந்து விட்டால், சங்கத்திற்கு நான் தொல்லை கொடுப்பவனாகிவிடு வேன். சங்கம் அனுசரிக்கும் முறைகள் பல அம்சங்களிலும் என்னுடைய முறைகளிலிருந்து வேறுபட்டவையாக இருக்கின் றன. ஸ்ரீ கோகலேயின் அலுவல்களை நாம் வெவ்வேறு கோணங்களிலிருந்து பின்பற்றிவருகிறோம். என்றாலும், நாம் ஒரு குருவின் பொதுவான சீடர்கள் என்பது நம்மிடையே பிரிக்க முடியாத ஒரு தொடர்பை ஏற்படுத்தியிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள

**மோ. க. காந்தி**

## தர்மசங்கடமான நிலைமை தீர்ந்தது

காந்திஜி 9-ம் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கும் விஷயமாகத் தமது சுயசரிதையில் (ஐந்தாம் பாகம், ஆறும் அத்தியாயம்) பின் வருமாறு எழுதியுள்ளார் :

நாங்கள் புனா வந்து சேர்ந்தோம். சிரார்த்தச் சடங்கு களெல்லாம் முடிந்த பிறகு இந்திய ஊழியர் சங்கத்தின் எதிர் காலத்தைக் குறித்தும், நான் அச்சங்கத்தில் சேருவதா, வேண்டாமா என்பதைக் குறித்தும் விவாதங்கள் எழுந்தன. அச் சங்கத்தில் நான் அங்கத்தினனாவது என்ற விஷயம் எனக்கு மிகவும் சங்கடமான பிரச்னையாக இருந்தது. கோகலே இருந்தபோது அதில் அங்கத்தினன் ஆவதற்கு நான் முற்பட வேண்டிய அவசியமே இல்லை. அவர் விருப்பம் எதுவோ அதை அப்படியே நான் பணிவுடன் நிறைவேற்றி வந்திருப்பேன். அத்தகையதோர் நிலையில் இருக்க வேண்டும் என்பதுதான் என் விருப்பமும். இந்தியப் பொதுவாழ்க்கை என்ற கொந்தளிப்பான கடலில் பிரயாணம் செய்வதற்கு சரியான மாலுமி ஒருவர் எனக்குத் தேவைப்பட்டார். கோகலேயை நான் அத்தகைய மாலுமியாகக் கொண்டிருந்ததோடு, ‘அவர் இருக்கப் பயமில்லை’ என்ற தைரியத்துடனும் இருந்தேன். இப்பொழுதோ அவர் போய் விட்டதால் என் சக்தியைக் கொண்டே நான் இருக்க வேண்டிய வனாகிவிட்டேன். ஆகவே அச் சங்கத்தில் அங்கத்தினனாகிவிட வேண்டியது என் கடமை என்பதை உணர்ந்தேன். அப்படிச் செய்தால் கோகலேயின் ஆன்மாவும் திருதியடையும் என்று எண்ணினேன். ஆகவே, தயக்கம் எதுவும் இல்லாமல், அதே சமயத்தில் உறுதியுடனும், அச் சங்கத்தின் அங்கத்தினர்களை நயந்து கொள்ளும் முயற்சியில் இறங்கினேன்.

இச் சமயத்தில் அச் சங்கத்தின் அங்கத்தினரில் பெரும் பாலோர் புனாவில் இருந்தார்கள். என்னைச் சேர்த்துக் கொள்ளு மாறு அவர்களைக் கேட்டுக்கொண்டேன். என்னைக் குறித்து

அவர்களுக்கு இருந்த பயத்தை யெல்லாம் போக்குவதற்கும் முயன்றேன். ஆனால், என்னைச் சேர்த்துக் கொள்ளும் விஷயத்தில் அவர்களிடையே பிளவு இருந்தது என்பதைக் கண்டேன். அவர்களில் ஒரு பகுதியினர், என்னைச் சேர்த்துக்கொள்ளுவதற்கு ஆதரவாக இருந்தார்கள். மற்றொரு பகுதியினரோ, அதைப் பலமாக எதிர்த்துவந்தனர். என்னிடம் கொண்டிருந்த அன்பில் இந்த இரு சாராரும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல என்பதையும் நான் அறிவேன். ஆனால் சங்கத்தினிடம் அவர்களுக்கு இருந்த விசுவாசம், என்னிடம் அவர்கள் கொண்டிருந்த அன்பைவிட அதிகமாக இருந்திருக்கலாம். என்மீது கொண்ட அன்பைவிடக் குறைவாகவாவது இல்லாமல் இருந்திருக்கும். ஆகையால், எந்தவிதமான மனக்கசப்பு மின்றியே விவாதித்து வந்தோம். அந்த விவாதம் முழுவதும் கொள்கையைப் பற்றியதாகும். என்னை அங்கத்தினனாகச் சேர்த்துக் கொள்ளுவதை எதிர்த்தவர்கள், அநேக விஷயங்களில் நானும் அவர்களும் வட துருவம்-தென் துருவம்போல் வெகு தொலைவில் இருப்பதாகக் கூறினர். என்னை அங்கத்தினனாகச் சேர்த்துக் கொண்டுவிட்டால், எந்த நோக்கத்திற்காக அச்சங்கம் ஆரம்பிக்கப்பட்டதோ அந்த நோக்கத்திற்கு ஆபத்து நேர்ந்துவிடும் என்று எண்ணினார்கள். இயற்கையாகவே இத்தகைய ஆபத்தை அவர்களால் தாங்க முடியாதுதான்.

நீண்ட நேரம் விவாதித்த பிறகு நாங்கள் கலைந்துவிட்டோம். முடிவான தீர்மானத்திற்கு வரும் விஷயம் பிந்திய தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டுவிட்டது.

அதிகப் பரபரப்பு அடைந்துவிட்ட நிலையிலேயே நான் வீடு திரும்பினேன். பெரும்பான்மை வோட்டுக்களின் மூலம் நான் அங்கத்தினனாகச் சேர்த்துக்கொள்ளப்படுவது எனக்குச் சரியா? கோகலேயிடம் நான் கொண்டிருந்த பக்திக்கு அது பொருத்தமானதாக இருக்குமா? ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகத் தோன்றியது. என்னை அங்கத்தினனாகச் சேர்த்துக் கொள்ளுவதில் அச் சங்கத்தின் அங்கத்தினர்கள் இடையே கருத்து வேற்றுமை இவ்வளவு கடுமையாக இருக்கும்போது, சேர்த்துக் கொள்ளக் கோரும் என் மனுவை வாபஸ் வாங்கிக்கொண்டு என்னை எதிர்ப்பவர்களுக்கு இருக்கும் சங்கடத்திலிருந்து அவர்களைத் தப்புவிப்பது ஒன்றே நான் செய்யக்கூடிய சரியான காரியம். சங்கத்தினிடமும் கோகலேயிடத்திலும் நான் கொண்டிருந்த பக்திக்கு ஏற்ற காரியமும் அதுதான் என்று எண்ணினேன். இந்த யோசனை பளிச்சென்று எனக்குத் தோன்றியதும், ஒத்தி வைக்கப்பட்ட கூட்டத்தை கூட்டவே வேண்டாம் என்று உடனே ஸ்ரீ சாஸ்திரியாருக்கு எழுதினேன். என் மனுவை எதிர்த்தவர்கள், நான் செய்த தீர்மானத்தை முற்றும் பாராட்டினர். இது, ஒரு சங்கடமான நிலையிலிருந்து அவர்களைக் காப்பாற்றியது; எங்களுக்குள் நட்பையும் இன்னும் அதிகமாக வலுப்படுத்தியது. மனுவை வாபஸ் வாங்கிக்கொண்டது, உண்மையில் என்னை அச்சங்கத்தின் அங்கத்தினனாக்கியது!

## சாஸ்திரியாரின் பதில்

காந்திஜியின் தீர்மானத்தைக் குறித்து ஸ்ரீ ஸ்ரீனிவாச சாஸ்திரியார், அப்போது இந்திய ஊழியர் சங்கத்தின் காரிய தரிசியாக இருந்த ஸ்ரீ எச். எஸ். தேவுக்குப் பின்வருமாறு எழுதியிருந்தார் :

திருவல்லிக்கேணி,
ஜனவரி *21, 1916*

எனது அன்புள்ள டாக்டர்,

ஸ்ரீ காந்தியினிடமிருந்து வந்த ஒரு கடிதத்தை நான் இத்துடன் இணைத்திருக்கிறேன். நான் கேட்டுக் கொண்டதாகக் கூறி அதை சபை அங்கத்தினர்களுக்கும், எல்லாக் கிளைகளுக்கும் தயவு செய்து அறிவியுங்கள்.

காந்தி நம்முடைய தீர்ப்பு எவ்விதம் இருக்கும் என்பதை முன்கூட்டியே எதிர்பார்த்து, தர்மசங்கடமான நிலைமையிலிருந்து நம்மை விடுவித்தது அவரது பெருந்தன்மையையே காட்டுகிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அவருக்கே உரித்தான அச் செயல், சங்கத்தினிடம் அவருக்குள்ள பேரன்புக்கு ஒரு சிறந்த உதாரணமாகும் என்றே நான் நினைக்கிறேன்.

இந்தத் தீர்மானத்தைப் பகிரங்கமாக அறிவிக்க வேண்டாம் என்று நான் அவருக்கு யோசனை கூறியிருப்பதுடன், பொதுமக்கள் அதை மெதுவாகத் தெரிந்து கொள்வார்கள் என்றும் அறிவித்திருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**வி. எஸ். ஸ்ரீனிவாசன்**

## 10

மோதிஹாரி,
ஜூன் *30, 1917*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

டாக்டர் தேவாவை நீங்கள் அனுப்பியதற்காகவும், உங்களுடைய கடிதத்திற்காகவும் நன்றி செலுத்துகிறேன். உங்களிடமிருந்து உற்சாகமளிக்கும் வார்த்தைகளை நான் விரும்பினேன். டாக்டர் தேவா இன்னும் சிறைக்குச் செல்லவில்லை எனில்,

அதற்குக் காரணம் எனது முயற்சிக் குறைவு அல்ல என் பதை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். அவர் நாளைக்கு ஜில்லா மாஜிஸ்திரேட்டைப் பார்க்கப்போகிறார்.

நீங்கள் டாக்டர் தேவாவுக்கு எழுதியுள்ள கடிதத்தைப் பற்றி நான் உங்களுக்கு நீண்ட கடிதம் ஒன்று எழுத வேண்டு மென நினைக்கிறேன். எனக்கு நேரம் கிடைக்கும் போது அவ் விதம் செய்கிறேன். இதன் மத்தியில் பம்பாய் நண்பர்களுக் காகத் தயாரிக்கப்பட்டுள்ள குறிப்பின் நகல்களை உங்களுக்கு அனுப்புகிறேன்.

நீங்கள் உங்களுடைய உடல் நலனை சரியாகக் கவனித்துக் கொள்ளாததைக் கண்டித்து உங்களுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுத விரும்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 11

ராஞ்சி,
செப்டம்பர் 30, 1917

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

எவ்வளவு வல்லமை வாய்ந்தவர் வீழ்ந்து விட்டார்! நான் ஒரு காலத்திலும் நோயுற்றுப் படுக்கமாட்டேன் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் நான் மலேரியா ஜுரத்தினால் அவஸ் தைப்பட்டுவருகிறேன். அது ஒரு நாள் விட்டு ஒரு நாள் மாலை யில் வருகிறது. எனினும் நான் செய்துவரும் வேலைக்கு அது இடையூறாக இல்லை. ரயில் பிரயாணிகளைக் குறித்து நான் பத் திரிகைகளுக்கு எழுதிய கடிதத்தில், நோய் தொற்றிக் கொள் வதைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். நீங்கள் அதை வாசித்தீர் களோ, என்னவோ! நானே அதற்கு உதாரணமாக இருக்கப் போகிறேன் என்பதையும், அந்தக் கடிதத்தை அனுப்பியபின் உடனடியாக நான் நோய்க்கு இலக்காவேன் என்பதையும் அப்போது நான் அறியவே இல்லை. இப்போது நான் எனது சொந்த சிகிச்சை முறையையே கைக்கொண்டு வருகிறேன். நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. ஒரு வேளை நாம் அலகாபாத்தில் சந்திப்போம். 'ஒருவேளை' என்று நான் ஏன் கூறுகிறேன் எனில், அதற்குள் இங்கு கமிட்டி அலுவல்களை நான் முடிக்க முடியாமல் இருக்கலாம். நீண்ட கால சமரசப் பேச்சிற்குப் பிறகு நாங்கள் எல்லா விஷயங்களையும் நிர்ணய மாக முடிவு செய்துள்ளோம். எனவே ஏகமனதான அறிக்கை வெளியாகலாம்.

ஆம், குஜராத் சபை ஊழியர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. ஒரு லட்சம் கையெழுத்துகளைப் பெறவேண்டும் என்பதே அச் சபையின் ஆர்வமாகும். ஹோம் ரூல் லீக் பம்பாயில் வேலை செய்து கொண்டிருக்கிறது. இப்போதுதான் ஸ்ரீமதி பெசண்டி னிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அவரது ஊழியர்கள் சென்னையில் அவ்விதம் கையெழுத்துகள் வாங்கிவருவதாக அவர் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். தொண்டர்களுக்கு விவர மான கட்டளைகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. கிராமவாசிக ளிடமும், யாருடைய கையெழுத்துகள் கோரப்படுகின்றனவோ அவர்களிடமும் சமர்ப்பிப்பதற்காக அத்திட்டம் முற்றிலும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. அது சுதேச பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டு இந்தியா முழுவதும் விநியோகிக்கப்பட வேண்டும் என்பதே நோக்கமாகும். அதன் அசல் குறிப்பு குஜராத்தி மொழியில் இருந்தது. நீங்கள் பார்த்த ஆங்கில நகல், அதன் மொழி பெயர்ப்பேயாகும். என்னைப் பொறுத்த வரையில் அதன் மதிப்பு, பாமர மக்களுக்கு அறிவு புகட்டு வதையும், படித்தவர்களான ஆடவர்களும் பெண்களும் மக்க ளுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுவதையுமே பொறுத்திருக் கிறது.

நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 12

நாடியாட்,

*ஏப்ரல் 1, 1918*

கெய்ராவைப் பற்றி நான் விடுத்த அறிக்கையை நீங்கள் ஒருவேளை வாசித்திருப்பீர்கள். மக்களின் உணர்ச்சியை நசுக்கு வதற்கு அதிகாரிகள் செய்யும் முயற்சியை எதிர்ப்பதே அந்தப் போராட்டத்தின் நோக்கமாகும். இந்த நிலையில், விவசாயி களுக்கு உதவி அளிப்பதே நமது தெளிவான கடமையென நான் நினைக்கிறேன். அடக்கு முறையை மறைப்பதற்கு யுத்தத்தைக் காரணமாகக் கூறக்கூடாது. மக்கள்மீது அனுதாபம் தெரிவித்து பம்பாயில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெறுமென நான் அறி கிறேன். உங்களுக்கு முடிந்தால், நீங்கள் கூட்டத்திற்கு வந்து அதில் பேசுவீர்கள் என்று நம்புகிறேன்.

## சாஸ்திரியாரின் பதில்

காந்திஜியின் மேற்கண்ட கடிதத்திற்கு ஸ்ரீ ஸ்ரீனிவாச சாஸ் திரியார் அனுப்பிய பதிலின் விவரம் பின்வருமாறு :

"நாடியாடியிலிருந்து ஏப்ரல் 1-ம் தேதி தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. அது எனக்கு அளிக்கும் கௌரவத்தை உணர் கிறேன் என்பதை நான் கூறவேண்டியது அவசியமா? அனுபவத்திலும், அந்தப் பிரதேசத்தைப் பற்றிய அறிவிலும் என்னைக் காட்டிலும் மேலான தகுதி வாய்ந்தவர்களுக்கு எதிராக நான் எனது முடிவைக் கூறவிரும்பவில்லை. இருந்தாலும், குறிப்பாக முக்கியமான விஷயங்களையொட்டி என் மனம் அங்கீகரிக்காத எதையும் நான் செய்யவேண்டுமென நீங்கள் விரும்பமாட்டீர்கள். மனம் விட்டுக் கூறுவதாயின், விவசாயிகளின் பக்கத்தில் நியாயம் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும்கூட கெய்ரா பிரச்னை யைத் தீர்க்க சாத்துவிக எதிர்ப்பு விரும்பத்தக்கது என்பதில் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. அரசாங்கத்தின் பலாத்காரத் தையும் நான் ஆதரிக்கவில்லை. உண்மையில், நேற்று நான் சர் இப்ராஹிம் ரஹிம்துல்லாவையும், சர் ஜேம்ஸ் டுபாலேயையும் பார்த்த போது அவர்களிடம் என்னால் இயன்றவரையில் சமா தானக் கொள்கையையே வற்புறுத்தினேன். உங்களுடைய அழைப்பிற்கிணங்க துள்ளி வந்து உங்கள் பக்கத்தில் சேருவ தற்குப் பதிலாக நான் தயங்குவதைக் குறித்து நானே வருந்து கிறேன். ஆனால் அதே சமயத்தில், என்னால் மனப்பூர்வமாக ஆதரிக்க முடியாத ஒன்றை நான் செய்ய வேண்டுமென நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்பதை நான் அறிவேன்."

## 13

ஏப்ரல் 5, 1918

உங்களுடைய கடிதத்திற்காக நான் நன்றியுள்ளவனாக இருக் கிறேன். என்னுடைய எந்த நடவடிக்கையைக் குறித்தும் உங்க ளுடைய அங்கீகாரத்தைப் பெற நான் எவ்வளவு ஆர்வமுள்ள வனாக இருந்தாலும், உங்களுடைய மனச் சாட்சியை எவ் விதத்திலும் நிர்ப்பந்தப்படுத்தக் கூடாது என்பதில் உங்களைப் போல் எனக்கும் மிகுந்த அக்கறை உண்டு. நாளுக்கு நாள் முற்றிவரும் கெய்ரா விவகாரங்களுடன் நீங்கள் தொடர்பு வைத் துக்கொண்டு வருவீர்கள் என்பதை நான் அறிவேன்.

## 14

பம்பாய்,
மே 3, 1918

'சரியல்ல' என்று நீங்கள் கூறியதுதான் உண்மையான மதிப்பு வாய்ந்ததென நான் கருதுகிறேன். மற்றவர்கள் 'சரி' என்று கூறியதற்குச் சிறிதும் மதிப்பே இல்லை.*

---

* பம்பாயில் நடந்த கூட்டம் ஒன்றில் ஸ்ரீ சாஸ்திரியார் ஒரு ஒழுங்குப் பிரச்னையை எழுப்பினர். அதாவது விதிகளின்படி கெட்டா சத்தியாக்கிரக

# 15

நாடியாட்,
ஜூலை 5, 1918

'கிராணிகிள்' பத்திரிகையில் நீங்கள் எந்த அறிக்கையை வாசித்தீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. என் பெயர் கொண்ட ஆள் சேர்க்கும் ஏஜண்ட் ஒருவர் உத்தியோகத்தில் இருக்கிறார். ஒருவேளை அவரது அற்புதமான அறிக்கையை நீங்கள் வாசித்திருக்கலாம். எனது சக ஊழியர்களைத் தவிர வேறு ஒருவரைக் கூட நான் சேர்க்கவில்லை. அவர்கள் தொண்டு செய்வதாகவும், அல்லது தங்கள் தங்கள் ஸ்தாபனத்தில் தொண்டு புரிய வேறு ஒருவரைக் கொண்டுவருவதாகவும் உறுதிமொழி அளித்திருக்கிறார்கள். அந்த வேலை மிகமிகக் கடினமானது. எனது வாழ்க்கையிலேயே இதைப் போன்ற மிகவும் கடினமான ஒரு வேலையை நான் செய்யும்படி நேர்ந்ததே இல்லை. எனினும் அதன் முடிவைப் பற்றி அதற்குள் ஜோசியம் எதுவும் கூறுவதற்கில்லை.

# 16

நாடியாட்,
ஜூலை 17, 1918

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

நீங்கள் பம்பாய்க்குச் செல்ல இயன்றதைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் காங்கிரசுக்கு வரக்கூடுமாயின், அது உங்களுடைய மகத்தான தைரியத்தையே காட்டுமென நான் நினைக்கிறேன். பண்டிட்ஜியின் நிலைபற்றி வெளிவந்துள்ள செய்தி உண்மையாயின், அவரிடம் அனுதாபம் கொள்கிறேன் என்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். தாம் காங்கிரஸ் மேடைக்கு வராமல் அவர் தவிர்ப்பாராயின், அது உண்மையில் அவரது வாழ்க்கையிலேயே மிக மிகத் துணிகரமான செயல்களில் ஒன்றாக இருக்கும். அவ்விஷயமாக நான் கருதுவது இதுதான். தவறான வழியைக் காட்டவிருக்கும் ஒரு சபை என்பதையும், அதில் பங்கு எடுத்துக்கொள்ளும் முக்கிய

---

சம்பந்தமான தீர்மானத்திற்கு ஏழு நாள் 'நோட்டீஸ்' கொடுக்காததால், அதைக் கூட்டத்தில் கொண்டுவரக் கூடாது என்பதே ஸ்ரீ சாஸ்திரியாரின் ஆட்சேபணையாகும். அப்படியாயின் தாம் அத் தீர்மானத்தை வாபஸ் செய்து கொள்வதாக காந்திஜி கூறினர். சாஸ்திரியாரைத் தவிர மற்றெல்லோரும் தீர்மானத்தை வாபஸ் செய்து கொள்ளக்கூடாது என்று கூறினர். எனினும் தீர்மானம் கொண்டுவரப்படுவதை தாம் ஒப்புக் கொள்ள முடியாது என்று சாஸ்திரியார் கூறியதால், தீர்மானம் கைவிடப்பட்டது. 14-ம் கடிதத்தில் காந்திஜி இச்சம்பவத்தையே குறிப்பிட்டிருக்கிறார்.

மானவர்கள் தாங்கள் கூறுவதைத் தாங்களே நம்பாதவர்கள் என்பதையும், அவர்கள் ஆதரித்து வாக்கு அளிக்கும் தீர்மானங்களையே பத்திரிகைகளில் அவர்கள் கண்டித்து எழுதுவார்கள் என்பதையும் அறிந்த நான் அத்தகைய சபையில் எப்படி கலந்து கொள்ள முடியும்? மற்றொரு கட்சி இருக்கிறது என்பதை நான் அறிவேன். இருந்தாலும் தற்போதைக்கு நான் அச்சபைக்கு வராமல் தவிர்ப்பதையே ஆதரிக்கிறேன். நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன்.*

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 17

நாடியாட்,
*ஜூலை 18, 1918*

இப்போது வெளியாகியுள்ள அரசியல் சீர்திருத்த திட்டத்தைப்பற்றி எனது அபிப்பிராயத்தைக் கூறவேண்டும் என்று நீங்கள் வற்புறுத்தியிருக்கிறீர்கள்.† காங்கிரஸ், லீக் திட்டத்தில் தீவிர பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென நான் கருதவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். விவாதத்திற்கிடமான அரசியலில் நான் தீவிரமாக அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. ஒரு நுணுக்கமான அரசியல்வாதி அரசியல் சீர்திருத்த யோசனைகளை எவ்விதம் ஆராய்ச்சி செய்வாரோ, அவ்விதம் அவற்றை ஆராய்ச்சி செய்திருப்பதாக இப்போது கூட நான் பாசாங்கு செய்யவில்லை. எனவே அவற்றைப்பற்றி எனது அபிப்பிராயத்தைக் கூற நான்

---

* 16-ம் கடிதம் சாஸ்திரியார் எழுதிய கடிதத்திற்கு காந்திஜி எழுதிய பதிலேயாகும். சாஸ்திரியார் தமது கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார். "ஸ்ரீமதி பெசண்டும், திலகரும் பத்திரிகைகளில் வேறுவிதமாக எழுதியிருந்தனர். ஆனால் இப்போது அவர்களுடைய நிலை சற்றேறக்குறைய உங்களுடைய நிலைக்கும் எனது நிலைக்கும் ஒத்ததாக இருப்பதைக் குறித்து ஆச்சரியம் அடைகிறேன். காங்கிரசுக்குச் செல்லாமல் இருப்பதென்ற பேச்சையெல்லாம் நான் விரும்பவில்லை, அத்தகைய பேச்சை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

மேற்கண்ட காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் ஆகஸ்டு 29-லிருந்து செப்டம்பர் 1-ம் தேதி வரையில் பம்பாயில் நடந்தது. அதற்கு மதன் மோகன் மாளவியா தலைமை வகித்தார். மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தையொட்டி அப்போது பிளவு ஏற்படுமென பலரும் அஞ்சினர். ஆனால் உண்மையில் மிகப் பெரும்பாலோரின் ஆதரவு பெற்று அப்போது ஒரு கொள்கை மேற்கொள்ளப்பட்டது.

† 'தி ஸர்வெண்ட் ஆவ் இந்தியா' என்ற பத்திரிகையில் பிரசுரிப்பதற்காக சாஸ்திரியார் அரசியல் சீர்திருத்தத்தைப் பற்றி காந்திஜியின் அபிப்பிராயத்தைக் கேட்டிருந்தார்.

மிகவும் தயங்குகிறேன். இருந்தாலும், அத்திட்டத்தைப்பற்றி எனது அபிப்பிராயம் எதுவோ அதை நான் கூறவேண்டும் என்பதற்குச் சாதகமாக நீங்கள் கூறும் வாதத்தின் முக்கியத்தையும் சிறப்பையும் நான் உணர்கிறேன்.

திறமைமிக்க ஒரு தயாரிப்பு என்ற முறையில், மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தம், காங்கிரஸ், லீக் திட்டத்தைக் காட்டிலும் உயர்தரமானது என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். சென்ற ஆகஸ்டு 20-ம் தேதி விடுத்த பிரகடனத்தை நிறைவேற்றுவதிலும், இந்தியாவின் நலனிலும் அவர்களுக்குள்ள நேர்மையான ஆர்வத்தினல் தூண்டப்பட்டே அவர்கள் அதைத் தயாரித்துள்ளனர் என்றும் நான் கருதுகிறேன். மிகவும் கடினமான, தர்ம சங்கடமான அவர்களுடைய கடமையை நிறைவேற்ற அவர்கள் பெருமுயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே அவசரப்பட்டு அதை நிராகரிப்பது தேசத்திற்கு துரதிர்ஷ்டமாக முடியும் என்று நான் நினைக்காமல் இருக்க முடியவில்லை. முன்பின் யோசியாமல் நிராகரிப்பதைக் காட்டிலும், அனுதாபத்துடன் பரிசீலனை செய்வதற்கே அது உரியது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். எனினும் சீர்திருத்தக்காரர்கள் அதை ஒப்புக் கொள்ளுமுன், அதில் முற்போக்கான பல திருத்தங்கள் செய்ய வேண்டியது அவசியமாகும். காங்கிரஸ்-லீக் திட்டம் கரடுமுரடானதாக இருப்பினும், அதுதான் நமது அளவுகோலாக இருக்கவேண்டும். நாம் கூறும் முக்கியமான அம்சங்களை அதில் சேர்த்துக் கொள்ளுமாறு நம்மால் இயன்ற வரையில் மிகத் தீவிரமாகவும் திறமையுடனும் வற்புறுத்த வேண்டும் என்றும் நான் நினைக்கிறேன்.

உதாரணமாக, உட்பிரிவுகளை ஏற்படுத்தும் கொள்கையை நிராகரிக்கும்படி நான் கேட்பேன். மாகாணங்களில் இரட்டையாட்சி முறை, அந்தப் பரிசோதனையின் வெற்றிக்கு ஆபத்தாக முடியும் என்று நான் மிகவும் அஞ்சுகிறேன். அப்பரிசோதனையின் வெற்றியே நம்மை அடுத்த கட்டத்திற்கு இட்டுச் செல்லும். அதுவே இறுதியான கட்டமாக இருக்குமென நான் நம்புகிறேன். எனவே பதவிகளை ஒதுக்கி வைக்கும் கொள்கை கைவிடப்பட வேண்டும் என்பதை நாம் மிதமிஞ்சி வற்புறுத்துவதாகக் கருதமுடியாது. முற்றிலும் பிரிட்டிஷாரின் நலன், முற்றிலும் இந்தியர்களின் நலன் என்பதன் சம்பந்தமாக நமது நோக்கங்களைக் குறித்து துரதிர்ஷ்டவசமான சந்தேகம் நிலவிவருவதை எவரும் கவனிக்காமல் இருக்க முடியாது. அதனல்தான், அத்திட்டத்தில் பிரிட்டிஷாரின் நலன்களுக்கு விசேஷப் பாதுகாப்புகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. மற்ற எதையும் காட்டிலும் முக்கியமாக, இந்த நலன்களைப் பற்றி நேர்மையுடனும், மனம் விட்டும், நேரடியாகவும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும் என்று நினைக்கிறேன். என்னைப் பொறுத்த மட்டில், திறமை மிக்க பிரிட்டிஷார் மாத்திரமோ அல்லது திறமை மிக்க பிரிட்டிஷாரும் இந்தியர்களும் சேர்ந்தோ நிறை

வேற்றக்கூடிய சட்டபூர்வமான ஓர் அரும் பெரும் சாதனையைக் காட்டிலும் மேலே நான் கூறியதுதான் மிக மிக முக்கியமாகும். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு நான் மரியாதையுடன் ஒரு விஷயத்தை வற்புறுத்துவேன். அதாவது பிரிட்டிஷாரின் நலன்கள் மொத்தத்தில் இந்தியர்களின் நலன்களுக்கு உட்பட்டவையாகவே இருக்கவேண்டும்; இந்தியாவின் பொதுவான முன்னேற்றத்திற்கு முரணாக இருப்பது அவற்றிற்கு அபாயமாகும். உதாரணமாக என் விருப்பப்படி நடப்பதாயின், நான் ராணுவச் செலவைக் குறைத்துவிடுவேன்; நம்முடைய கைத்தொழில்களுடன் போட்டிபோடும் பண்டங்களுக்குக் கடுமையான வரிவிதித்து சுதேசக் கைத்தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பேன்; உத்தியோகங்களில் இருக்கும் பிரிட்டிஷாரின் தொகையை மிகவும் குறைத்துவிடுவேன். நமக்குப் போதிக்கவும், வழிகாட்டவும் தேவையான பிரிட்டிஷாரை மாத்திரமே வைத்துக் கொள்வேன். வெற்றி பெற்று இந்தியாவை ஆக்கிரமித்துக் கொண்டவர்கள் என்பதைத் தவிர இந்தியாவில் அவர்களுக்கு வேறு எந்தவிதமான உரிமையும் இருந்ததாகவோ அல்லது இருப்பதாகவோ நான் நினைக்கவில்லை. நமக்கு தேசிய உணர்ச்சி ஏற்பட்டு. நாம் தூக்கத்திலிருந்து எழுந்து, இழந்த உரிமையை நாம் மீண்டும் வற்புறுத்தும் பலத்தைப் பெற்ற உடனேயே அவர்களுடைய உரிமையெல்லாம் மறைந்துவிடும் என்பது தெளிவாகும். வெற்றி பெற்று இந்தியாவை ஆக்கிரமித்துக் கொண்டதன் காரணமாக தங்களுக்கு ஏதாவது உரிமை உண்டு என்று கூற அவர்கள் முன்வராதது, அவர்களுக்குப் பெருமை அளிப்பதேயாகும். தங்கள் கடமையில் உள்ள ஈடுபாட்டிற்காகவும், மகத்தான செயல் திறமைக்காகவும் இந்தியன் சிவில் சர்விஸ் அதிகாரிகள் பாராட்டப்பட்டிருப்பதை எவரும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால் அவர்களுக்கு சன்மானம் அளிக்கவேண்டும் என்பது பற்றி ஒன்று கூறலாம். அந்த அதிகாரிகளுக்கு திட்டத்திற்கு அதிகமாகவே சம்பளம் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. எனவே இனி அவர்களுடைய குணவிசேஷங்களை நாம் பின்பற்றுவதன் மூலம் அவர்களுக்கு நாம் சிறந்த முறையில் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளலாம்.

தற்போதைய நிர்வாகச் செலவு மிகவும் அதிகமாக இருக்கிறது என்பதையும், ஊதாரித்தனமான அந்தச் செலவு நாசத்தை உண்டுபண்ணுவதாக இருக்கிறது என்பதையும், உணராத எந்த அரசியல் சீர்திருத்தத் திட்டத்தினாலும் இந்தியாவுக்குப் பலன் ஏற்பட முடியாது. சட்டம், சமாதானம், ஒழுங்கு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட ஒரு நல்ல அரசாங்கம் ஏற்படுவதாக இருந்தால்கூட, பாமர மக்களின் சகிக்க முடியாத வறுமைதான் அதற்கு விலை எனில், அது தாங்க முடியாத விலையே ஆகும். வளர்ந்து வரும் ஒரு தேசத்தின் வளர்ந்து வரும் தேவைகளுக்காக வரிகளை அதிகமாக்கக் கூடாது; அதற்கு மாறாக தேச வளர்ச்சியின் அஸ்திவாரத்தையே உறிஞ்சிவரும் நிதி சம்பந்தமான பளுவைக்

குறைக்க வேண்டும். இவைதான் நமது சீர்திருத்த சபைகளின் முக்கியமான மந்திரமாக இருக்கவேண்டும். மூலாதாரமான இந்த உண்மையை உணர்ந்து கொண்டால், 'நமது நோக்கங்களையொட்டி சந்தேகம் ஏற்பட வேண்டிய அவசியமில்லை. மற்ற ஒவ்வொரு அம்சத்திலும், இந்தியர்களிடம் நம்முடைய சொந்த நலன்களைப் போல் பிரிட்டிஷ் நலன்கள் பத்திரமாக இருக்கும் என்று நான் நிச்சயமாகக் கூற முடியும். நான் மேலே கூறியவற்றிலிருந்து பின்கண்ட விஷயம் எழுகின்றது: அதாவது சிவில் சர்விஸில் உள்ள உயர்தர உத்தியோகங்களில் 50 சத விகிதத்தை உடனடியாக இந்தியர்களுக்கு அளிக்க வேண்டும் என்ற காங்கிரஸ்-லீக் கோரிக்கையை நாம் மரியாதையுடன் வற்புறுத்த வேண்டும். இது, அத்திட்டத்தையொட்டி எனது அபிப்பிராயத்தின் ஓர் அம்சமேயாகும். பிரிட்டிஷ் சர்க்காருக்கு நான் கூற விரும்பும் அபிவிருத்தி சம்பந்தமான எல்லா யோசனைகளும் அதில் அடங்கியிருக்கவில்லை. பின்னர், நாம் இந்தியாவின் பிரதிநிதிகள் என்ற முறையில் அத்திட்டத்தைப் பற்றிய நமது அபிப்பிராயங்களை வெளியிட முயற்சிப்போம். எனவே, அத்திட்டத்தை விரிவாகப் பரிசீலனை செய்யும் ஆற்றல் எனக்கு இருந்திருந்தாலும் கூட, அதைப் பற்றிய விரிவான பரிசீலனையில் இப்போது பிரவேசிப்பது அவசியமென்று நான் கருதவில்லை. எனினும் நமது கருத்துகள் இறுதியில் எப்படி உருவானாலும் சரி, அவற்றை வற்புறுத்துவதற்குரிய சிறந்த முறை என்ன என்று நான் எண்ணுவதைக் கூறாமல் இதை நான் முடிக்க முடியாது. சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அந்த தஸ்தாவேஜியின் கர்த்தாக்கள், ஆயிரக்கணக்கான இந்திய சீர்திருத்தக்காரர்கள் இன்று அதைப் பேராவலுடன் பரிசீலனை செய்து வருவதாக இறுதியில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை நான் முற்றிலும் ஒப்புக் கொள்கிறேன். மற்றும் அவர்கள் கூறுவதாவது:

"இந்த அறிக்கையின் முடிவுரையை நாங்கள் எழுதிக் கொண்டிருக்கும் இச் சமயத்தில் கூட, பிரான்ஸ் போர் முனையில் இன்னும் பெரிய பிரச்னைகள் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன என்பதை நாங்கள் அறிவோம். பொறுப்பு உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே மகத்தான விளைவுகளுக்குக் காரணமான ஒரு விஷயத்தையொட்டி நாங்கள் சிபாரிசுகள் செய்திருக்கிறோம். இந்தியாவின் எதிர்காலம் பிரஞ்சு போர்க்களத்தில்தான் இறுதியாக முடிவு செய்யப்படுமேயன்றி, டில்லியிலோ அல்லது லண்டனிலோ அல்ல."

அவர்கள் கூறியுள்ள இந்த சாதாரண உண்மையைக் காணும் விவேகத்தை சுயாட்சிவாதிகளான நமக்குக் கடவுள் அளிப்பாராக. நமது சுதந்திரத்தின் வாயிற்படி பிரஞ்சு மண்ணிலேயே அமைக்கப்பட்டிருக்கிறது. ரத்தம் சிந்தாமல் குறிப்பிடத் தகுந்த வெற்றி எதுவும் இதுவரையில் கிடைத்ததில்லை. எனவே சுயாட்சியை ஆதரிப்பவர்களான நம்முடைய அஞ்சா நெஞ்சம் படைத்த படைகள் பிரஞ்சு போர்க்களத்திற்குத் திரளாகச்

சென்று நேச தேசங்களின் லட்சியம் வெற்றி பெறுவதற்காக யுத்தம் செய்யுமாயின், அது நம்முடைய சொந்த லட்சியம் வெற்றி பெறுவதற்காகச் செய்யும் யுத்தமாகவே இருக்கும். அப்போது நாம், தொலைவிலுள்ள ஒரு காலத்தில் அல்ல, வெகு சமீபத்திலுள்ள எதிர்காலத்திலும் அல்ல, ஆனால் உடனடியாக சுயாட்சி வழங்குவதற்கு ஆட்சேபிக்க முடியாத ஒரு காரணத்தைக் காட்டியவர்களாவோம். எனவே தேசத்திற்கு நான் கூறும் ஆலோசனை என்னவெனில், வெற்றிக்காக யாதொரு நிபந்தனையுமின்றி பிரிட்டிஷாருடன் சேர்ந்து இறக்கும்வரையில் யுத்தம் செய்யுங்கள்; அதே சமயத்தில் நமக்குத் தகுதியான அரசியல் சீர்திருத்தங்களுக்காக இறக்கும் வரையில் கிளர்ச்சி செய்யுங்கள் என்பதுதான். அதிகாரவர்க்கத்தின் பலமான எதிர்ப்பைச் சமாளித்து நாம் கௌரவமான ஒரு வெற்றி பெறுவதற்கு இதுதான் நிச்சயமான வழியாகும். அதன் இறுதியில், யாருக்கும் துவேஷம் எதுவும் இராது. முட்டுக்கட்டை போடுவதாலும், கலப்பற்ற நாசகரமான கிளர்ச்சியினாலும் நாம் நமது லட்சியத்தில் வெற்றி பெறுவது சாத்தியமாக இருக்கலாம். ஆனால், அப்போது பிரிட்டிஷாருக்கும் இந்தியர்களுக்கும் இடையே துவேஷம் ஏற்படும் என்பதை அறிந்து கொள்வது எளிதேயாகும். அத்தகைய துவேஷம், எதிர்காலத்தில் பங்காளிகளாக இருக்கப்போகிறவர்களிடையே உறவை பலப்படுத்துவதற்கு அவ்வளவு உதவியாக இராது.

'லீடர்,' *24—7—1918*

## 18

நாடியாட்,
ஜுலை *29, 1918*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

தாகூர் இப்போதுதான் வந்துள்ளார். நீங்கள் மீண்டும் நோயுற்றுப் படுத்திருப்பதாக அவர் என்னிடம் கூறினார். நீங்கள் முழுப் பட்டினி கிடக்கவேண்டும் என்றும், தண்ணீர் சிகிச்சையை மேற்கொள்ளவேண்டும் என்றும் சிறிதும் இரக்கமின்றி உத்தரவிடும் ஒரு கொடிய டாக்டரே இப்போது உங்களுக்குத் தேவையாகும். முறைப்படி வைத்திய சாஸ்திரத்தில் பயிற்சி பெறாத டாக்டர்களிடமிருந்து நீங்கள் 'லைசன்ஸ்' பெற்ற கொலைகளைத் தவிர வேறு எதையும் எதிர்பார்க்க முடியாது. நீங்கள் நோயுற்றிருப்பதாக நான் கேள்விப்படும்போதெல்லாம், யாராவது ஒரு டாக்டரை சுட்டுவிடவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் நான் அவ்விதம் செய்வதற்கு எனது அகிம்சை தடையாக இருக்கிறது. சட்டசபை சம்பந்தமான ஆசை எனக்கு எதுவும் இல்லை. இது உங்களுக்கும் இந்தியாவுக்கும் மகிழ்ச்சி அளிக்கக் கூடிய விஷயமாகும். இல்லாவிட்டால், அடிக்கடி நோய்க்கு இலக்

காவோர் சட்டசபை அங்கத்தினர் பதவிக்குத் தகுதியற்றவராவர் என்று நான் ஒரு மசோதா கொண்டுவருவேன்!

போலக்கிடமிருந்து ஒரு தந்தி வந்திருக்கிறது. அதன் முழு அர்த்தத்தையும் என்னல் அறிந்து கொள்ள முடியவில்லை. மாண்டேகு-செம்ஸ்போர்ட் திட்டத்தை நாடு நிராகரித்துவிடும் என்ற அபாயத்திற்கு இடமில்லை என்றே நினைக்கிறேன்.

மோ. க. காந்தி

## 19

சபர்மதி, அகமதாபாத்,
அக்டோபர் 20, 1918

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

நான் நோயுற்று படுத்த படுக்கையாக இருப்பினும், டாக்டர் தேவாவின் நினைவையொட்டி உங்களைப் போலவும், மற்ற நண்பர்களைப் போலவும் எனது பணிவான புகழுரையை நான் தெரிவிக்க விரும்புகிறேன். அவரது மரணத்தினல், இந்திய ஊழியர் சங்கமும், தேசமும் ஓர் உண்மையான ஊழியரை இழந்திருக்கிறது. சங்கத்திலுள்ள எல்லா அங்கத்தினர்களையும் காட்டிலும் ஸ்ரீ தேவாவுடன்தான் நான் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தேன். அவருடன் நான் எவ்வளவுக்கு அதிகமாகப் பழகினேனே அவ்வளவுக்கு அவரிடம் எனக்கு அதிக அன்பு ஏற்பட்டது. நான் ஒன்று கூறலாம் எனில், டாக்டர் தேவாவின் அரிய குணங்கள் வெளியாவதற்கு சம்பாரண்தான் முற்றிலும் தகுதிவாய்ந்த இடமாக இருந்தது. சம்பாரணில் நிலவிய சூழ்நிலை, வைத்திய சம்பந்தமான அறிவு உட்பட அவரது மகத்தான இயல்புகளுக்குச் சோதனையாக அமைந்தது. அவர் ஒருபோதும் பின்தாங்கவில்லை, தோல்வியடையவுமில்லை. அதிகாரிகளுடனும், தோட்ட முதலாளிகளுடனும் அவரது தொடர்புகள் ஆரம்பத்தில் சந்தேகத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தன என்ருலும், இறுதியில் அவர் அவர்களுடைய தயக்கத்தையெல்லாம் அகற்றிவிட்டார். பெட்டையாவில் அவர் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருந்த சப்டிவிஷனல் அதிகாரி, ஸ்ரீ தேவாவின் தன்னலமற்ற குணத்திற்காகவும், கடமையில் அவருக்குள்ள ஈடுபாட்டிற்காகவும் அவரைத் தாம் விரும்புவதாக என்னிடம் அடிக்கடி கூறினர். அவர் எப்படி விரும்பாமலிருக்க முடியும்? தேவா, திக்கற்ற கிராமவாசிகளுக்கு வைத்திய ஆலோசகராக மாத்திரம் இல்லை, மருந்துகள் கொடுத்து அவர்களுக்கு உதவி புரிபவராகவும் இருந்தார். அவர்களுடைய சுகாதார நிலையை யொட்டியும் அவர் கவனம் செலுத்திவந்தார். கிராமக் கிணறுகளைச் சுத்தம் செய்வதிலும், கிராம ரஸ்தாக்களைச் செப்பனிடுவதிலும் அவரும் உடல் உழைப்பின் மூலம் பங்கு எடுத்துக்கொண்டார். பிட்டிஹார்வாவில் ஒரு வைக்கோல் குடிசை

பள்ளிக்கூடமாக உபயோகிக்கப்பட்டு வந்தது. அது எரிந்துவிட்டதால், அந்த இடத்தில் ஸ்ரீ ஸோமன், ஸ்ரீ ராண்டவ் ஆகியோருடன் சேர்ந்து டாக்டர் தேவா எல்லோரும் அதிசயிக்கும்படியாக ஒரு சில நாட்களில் பலமான கட்டிடம் ஒன்றை நிர்மாணித்து விட்டார். அவர் உடல் பலம் இல்லாதவராயினும், திடகாத்திரமுள்ள கிராம வாசிகளுடன் தோளோடு தோள் நின்று கட்டிட நிர்மாண வேலையில் ஈடுபட்டார். அவரது உற்சாகத்தினுல் உணர்ச்சி பெற்ற கிராமவாசிகள், அவர்களுக்காகத் திட்டமிட்ட பள்ளிக் கட்டிடத்தைக் கட்டுவதற்கு அவரது அழைப்புக்கு இணங்க முன் வந்தார்கள். பெல்காமைச் சேர்ந்த ஸ்ரீ ஸோமன், பி. ஏ. எல். எல். பி., டாக்டர் தேவாவைப் போற்றி எழுதியுள்ள கடிதம் இப்போதுதான் எனக்குக் கிடைத்தது. டாக்டர் தேவாவைப் பற்றி நான் பெற்ற அனுபவங்களில் இந்தக் கடிதம்தான் எனக்கு மிகவும் மகிழ்ச்சி அளிப்பதாக இருக்கிறது. ஸ்ரீ ஸோமன் தேசீயக் கட்சியைச் சேர்ந்தவர். அவர் சம்பாரணில் தொண்டர்களில் ஒருவராக இருந்தார். அவர் உறுதிவாய்ந்த, உண்மையான ஒரு தொண்டர். தேசீயக் கட்சியினரிடம் டாக்டர் தேவாவின் மன நிலை எப்படியிருக்குமோ என்ற சந்தேகத்துடனும் அவநம்பிக்கையுடனும் அவரைத் தாம் அணுகியதாகவும், ஆனுல் சில நாட்களில் அந்த சந்தேகமும் அவநம்பிக்கையும் மறைந்து அவர் மீது நம்பிக்கையும் மரியாதையும் ஏற்பட்டதாகவும் ஸ்ரீ ஸோமன் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். அவர்களுக்குள் கருத்து வேற்றுமை இருப்பினும் அவர்கள் நெருங்கிய நண்பர்களாயினர். டாக்டர் தேவா விருப்பு அல்லது வெறுப்பு காரணமாக வெறியுடன் நடந்து கொண்டதில்லை. அவர் எல்லையற்ற அன்பு உள்ளம் படைத்தவராக இருந்தார். எனவே அவ்விருவரும் பரஸ்பரம் உள்ள நல்ல அம்சங்களை மாத்திரமே கவனிக்கும் ஆற்றல் பெற்றிருந்தனர். பணவசூல் செய்வதிலும், விளம்பரம் செய்வதிலும் அரும் திறன் வாய்ந்திருந்த ஒருவரை இந்திய ஊழியர் சங்கம் இழந்து விட்டது. அவர் உண்மையான மனிதராகத் திகழ்ந்தார்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 20

*நவம்பர் 5, 1918*

*அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,*

உங்களுடைய கடிதத்திற்காக நான் நன்றி செலுத்துகிறேன். அதை எழுதும்படி தூண்டிய தங்களுடைய உயர்ந்த நோக்கத்தைப் பூரணமாக உணர்ந்து பாராட்டுகிறேன். என்னுடைய உடல் நலனைக் குறித்து நான் இயன்றவரையில் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டுள்ளேன் என்று உங்களுக்கு உறுதி கூறு

கிறேன். நோயுற்றுப் படுத்தபடுக்கையாக இருந்து வழக்கமில்லாத ஒருவன், மூன்று மாதங்களுக்கு மேலாக அத்தகைய நிலையை அனுபவிக்கும்படி நேர்ந்தது வேடிக்கையான ஒரு விஷயம் அல்ல. எனக்கு ஏற்பட்டுள்ள நோய் மேலும் நீடித்துக்கொண்டு போகுமாயின், என்னுடைய அறியாமையோ அல்லது மதியீனமோ அல்லது இரண்டுமோதான் அதற்குக் காரணமாக இருக்கும். நோய் மீண்டும் திருப்பிக் கொண்டிருப்பதற்குக் காரணம், வைத்திய நண்பர்களின் கவனக்குறைவு என்றோ அல்லது திறமைக்குறைவு என்றோ நான் கூற முடியாது. என்னுடைய போக்கு அவர்களுக்கு விசித்திரமாக இருக்கிறது. அதனால் அவர்கள் எதுவும் செய்ய முடியாதவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் என்னில் ஓர் அம்சமாகவே திகழ்வதால், நான் தாங்க முடியாத வேதனையினால் துன்பப்படும்போது அவர்கள் எனக்கு மகத்தான ஆறுதலும் மகிழ்ச்சியும் ஏற்படும்படி செய்கிறார்கள். மோதிஹாரி ரவரண்ட் எப். இஸெட் ஹாட்ஜ் எழுதியுள்ள கடிதத்தில் காலஞ்சென்ற டாக்டர் தேவாவைப் பற்றி எழுதியிருக்கிறார். அதன் சாரத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். அவர் அசாதாரணமான சுதந்திர உணர்ச்சியும். தாராள சிந்தனையும் உள்ள ஒரு பாதிரியாவார். நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

தங்கள்,

மோ. க. காந்தி

## 21

பம்பாய்,
*பிப்ரவரி 9, 1919*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

ரௌலட் மசோதாக்களைப் பற்றி நீங்கள் நிகழ்த்திய ஆணித்தரமான பிரசங்கத்தை இப்போதுதான் நான் வாசித்தேன். அதைக் கூட அவ்வளவு கடுமையான பிரசங்கம் என்று சொல்லுவதற்கில்லை. அந்த மசோதாக்களும், வைஸ்ராய், சர் வில்லியம் வின்ஸென்ட், சர் ஜார்ஜ் லௌண்ட்ஸ் ஆகியோரின் பிரசங்கங்களும் என்னை அடியோடு கலக்கிவிட்டன. நான் இன்னும் படுத்த படுக்கையிலிருந்து எழுந்திருக்கவில்லை என்றாலும், அம்மசோதாக்களின் போக்கைப் படுத்தவண்ணம் பார்த்துக் கொண்டிருக்க இனி என்னால் முடியாது என்றே தோன்றுகிறது. அம்மசோதாக்கள் ஆழ்ந்து புரையோடிய நோயின் கடுமையான அறிகுறிகள் என்றே எனக்குத் தோன்றுகின்றன. நமது நெஞ்சில் வைத்துள்ள பிடியைத் தளர்த்துவதில்லை என்ற அதிகாரவர்க்கத்தின் உறுதியையே அது தெளிவாகக் காட்டுகிறது. அதற்குள்ள எல்லையற்ற அதிகாரங்களைச் சிறிதளவுகூட விட்டுக்

கொடுக்கும் ஆசை அதற்கு எள்ளளவும் இல்லை. நம் மீதுள்ள இரும்புப்பிடி ஆட்சியை சிவில் சர்விஸ் அதிகார வர்க்கம் நீடித்து வர விரும்புமாயின், பிரிட்டிஷ் வியாபார வர்க்கம் அதன் தூய்மை யற்ற தற்போதைய நிலையையும், விசேஷ உரிமைகளையும் தொடர்ந்து வருமாயின், அரசியல் சீர்திருத்தங்களால் யாதொரு பலனும் ஏற்படாது. ரௌலட் மசோதாக்கள் நமக்கு பகிரங்க மாக விடுக்கப்பட்டுள்ள ஒரு சவாலேயாகும். அதற்கு நாம் அடிபணிந்தோமாயின், நாம் அதோகதியாகிவிடுவோம். சர்க்கார் இதுவரை பார்த்திராத ஒரு கிளர்ச்சியைக் காண்பார்கள் என்று நாம் கூறியிருப்பதை நிருபித்துக் காட்டுவோமாயின், ஏகாதிபத்தியத்தையும், கொடுங்கோல் ஆட்சியையும் எதிர்ப் பதில் நமக்குள்ள சக்தியை நாம் நிரூபித்தவர்களாவோம். விண்ணப்பங்களாலும், பிரம்மாண்டமான கூட்டங்களில் நிறை வேறிய தீர்மானங்களாலும் பலன் ஏற்படவில்லையாயின், பின்னர் நமக்கு இரண்டே வழிகள்தான் இருக்கின்றன. சாதாரணமாகக் கரடு முரடான, உடனடியான ஒருவழி ஆயுதந்தாங்கிய கலகம்; இரண்டாவது வழி இந்தியாவிலுள்ள எல்லாச் சட்டங் களையுமோ அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சில சட்டங் களையோ சாத்துவிகமாக மறுப்பதேயாகும். அரசாங்கத்தின் நேர்மையின்மைக்கும், அநீதிக்கும் இம்மசோதாக்கள் ஒரு தனி உதாரணமாயின், நான் அவற்றைப் பொருட்படுத்தவேண்டிய தில்லை. ஆனால் அடக்கு முறையில் சர்க்காருக்குள்ள பிடிவாத மான கொள்கைக்கு இவை தெளிவான சாட்சியமாக இருக்கும் போது, சாத்துவிக சட்டமறுப்பு, சொந்த சுதந்திரத்தையும் பொது மக்களின் சுதந்திரத்தையும் நேசிக்கும் ஒவ்வொருவரும் அனு சரிக்க வேண்டிய கடமையாகவே தோன்றுகிறது. இவ்விஷய மாக நான் நேற்று பண்டிட்ஜிக்கு* எழுதியிருக்கிறேன். தனிக் கமிட்டியிலுள்ள எல்லா இந்திய அங்கத்தினர்களுமோ அல்லது எத்தனை பேர் முன்வருகிறார்களோ அத்தனை பேருமோ அக் கமிட்டியிலிருந்து ராஜிநாமா செய்துவிடவேண்டும் என்று அக் கடிதத்தில் நான் யோசனை கூறியிருக்கிறேன். அவர்கள் தயாராக இருந்தால், சட்டசபை அங்கத்தினர் பதவிகளையும் கூட ராஜிநாமா செய்துவிட வேண்டும் என்றும் கூறியிருக்கிறேன். அவர்களுடைய ராஜிநாமாக்கள், பொதுமக்களின் உணர்ச்சியைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டியதில்லை என்பதில் சர்க்காருக்குள்ள நம்பிக்கையைக் குலைத்துவிடும் என்று எண்ணுகிறேன். அவை பொதுமக்களுக்கு மிகவும் மதிப்பு வாய்ந்த ஒரு படிப்பினையாகவும் இருக்கும். என்னைப் பொறுத்தமட்டில் அம் மசோதாக்கள் தொடர்ந்து ஆலோசிக்கப்படுமாயின், அவற்றைப் போன்ற பேய்த் தன்மை வாய்ந்த ஒரு சட்டத்தைக் கொண்டுவரக் கூடிய ஒரு சர்க்காரின் சட்டங்களுக்கு அமைதியாகக் கீழ்ப்படிவது என்னால் இயலாமற்போய்விடும். அவ்விஷயமாக என்னைப்

---

* மதன் மோகன் மாளவியாவையே பண்டிட்ஜி என்று மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

போன்ற அபிப்பிராயம் உள்ளவர்களையும் என்னுடன் போராட்டத்தில் சேர்ந்து கொள்ளும்படி அழைக்க நான் தயங்கமாட்டேன். நான் மேற்கொள்ள விரும்பும் நிலையை நீங்கள் ஆதரிப்பது சாத்தியமில்லாமல் இருக்கலாம். இருந்தாலும், மனச் சாட்சியின் குரல் என்று எனக்குத் தோன்றுவதை நான் அமுக்கிவிட வேண்டுமென நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்பதை அறிவேன். எனவே, எந்த ஒரு சில நண்பர்களின் ஆலோசனையை நான் மதிக்கின்றேனே அத்தகைய நண்பர்களின் அங்கீகாரத்தைப் பெற நான் விரும்புவது இயல்பேயாகும். உங்களுக்கு நேரம் இருந்தால், நான் உத்தேசித்துள்ள நடவடிக்கையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்பதைக் குறித்து நீங்கள் ஒரு வரி எழுதவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். நான் அவசரப்பட்டு எதுவும் செய்ய மாட்டேன் என்றும், என்னால் இயன்றவரையில் சாந்தமாகவும் மரியாதையாகவும் முன்கூட்டியே அந்தரங்கமாக எச்சரிக்கை விடுக்காமல் எதுவும் செய்ய மாட்டேன் என்றும் உறுதி கூற விரும்புகிறேன்.

எதிர்காலத்தில் மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்படப் போகிறது. அப்போது நீங்கள் உங்களுடைய ஆரோக்கியத்தைச் சிறந்த முறையில் பாதுகாத்து வருவீர்களென நம்புகிறேன்.

## 22

டில்லி,
*மார்ச் 8, 1919*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

நான் இன்று மாலை அலகாபாத்திற்குப் புறப்படுகிறேன். பின்னர் அங்கிருந்து பம்பாய்க்குச் செல்லுவேன். நான் சரியான நிலையில் இருந்தால், ரௌலட் மசோதாக்களை எதிர்த்து ஆரம்பிக்கப்பட்டுள்ள சத்தியாக்கிரக இயக்கத்திற்கு விரோதமாக வெளியாகியிருக்கும் அறிக்கையில்* கையெழுத்திட்டவர்களில் பெரும்பாலோரையும் நிச்சயமாக வந்து பார்த்திருப்பேன். நேற்று நான் சர் ஜேம்ஸ் டுபௌலியைச் சந்தித்தபோது, அதன் பின் உங்களை வந்து சந்திக்க வேண்டுமென நம்பிக்கொண்டிருந்தேன். ஆனால் சர் ஜேம்ஸுடன் எனது பேட்டி ஆறு மணிக்கு மேலும் நீடித்தது. சாப்பாட்டிற்கு நேரமாகிவிட்டதால், நான் அவசரமாக ஸ்ரீ ருத்ராவின் வீட்டிற்குச் சென்றேன். நேற்று உங்களிடம் கூற விரும்பியதையே இப்போது நான் சொல்லுகிறேன். அறிக்கையில்

* ரௌலட் சட்டங்களைக் கண்டித்து காந்திஜி ஆரம்பித்த சத்தியாக்கிரக இயக்கத்தை எதிர்த்து சர் டி. ஈ. வாச்சா, சர் சுரேந்திரநாத் பானர்ஜி, கனம் வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரியார் முதலிய மற்றும் சில மிதவாதத் தலைவர்கள் மார்ச் 2-ஆம் தேதி வெளியிட்ட ஓர் அறிக்கையையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார்.

கையெழுத்திட்டவர்களிடம் எனது நிலையைப் பூரணமாக விளக்கிக் கூற நான் விரும்புகிறேன். பத்திரிகைகளின் மூலம் என்னால் எவ்வளவு தூரம் விளக்கிக்கூற முடியுமோ அதைக்காட்டிலும் இன்னும் அதிகமாகவே அவர்களிடம் விளக்கிக் கூற விரும்பினேன். ஆனால் மேலே நான் கூறியுள்ள காரணங்களினால் அவ்விதம் செய்ய முடியாமற்போயிற்று. இதை நீங்கள் தயவு செய்து அவர்களிடம் கூறுங்கள். நான் மேலும் ஒன்று கூறவிரும்புகிறேன். அதாவது அவ்வறிக்கையில் கையெழுத்திட்டுள்ளவர்களை நேரில் அறியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. அவர்கள் மீது எனக்கு உள்ள மதிப்பு அந்த அறிக்கையினால் அணுவளவும் பாதிக்கப்படவில்லை. யாருடைய அபிப்பிராயத்தை நான் மிகவும் மதிக்கின்றேனோ அவர்களுடைய அங்கீகாரத்தை நான் பெறத் தவறியது எனது துரதிர்ஷ்டமேயாகும். எனினும் எனக்கு நம்பிக்கை இல்லாமலில்லை. அதாவது போராட்டம் தீவிரமாகும்போது, அவர்கள் அதிலுள்ள நல்ல அம்சங்களைக் காண்பார்கள். சத்தியாக்கிரகம் ஊக்கமூட்டும் சிறந்த நடவடிக்கை என்பதில் சந்தேகமில்லை. இந்த நாட்டில் மிகவும் உத்வேகமும் ஆர்வமும் உள்ள இளைஞர்கள், வேறு சிறந்த வழியின்றி ஆட்சேபகரமான நடவடிக்கைகளில் ஈடுபடாமல் தடுக்க சத்தியாக்கிரகத்தினால் மாத்திரமே இயலும் என்பதை, என்னைப் போல் அவர்களும் அறிந்து கொள்வார்கள்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 23

(தந்தி)

லக்ஷ்மணபுரியிலிருந்து வரும் ரயிலில்,

மார்ச் *11, 1919*

எனது பிரயாணத்தின்போது பொது மக்களின் அபிப்பிராயத்தை என்னால் மதிப்பிட முடிந்தது. அவர்களுடைய அபிப்பிராயம் மிகவும் தீவிரமாக இருக்கிறது. பொதுஜன நன்மைக்காகத் தியாகம் செய்து அவர்களுக்கு வழக்கமில்லை யாதலால், அவர்கள் சோம்பிக்கிடப்பது போல் தோன்றலாம். எனினும் ரௌலட் மசோதாக்களைத் தொடர்ந்து வற்புறுத்துவார்களாயின், பொது மக்களின் மனக் கசப்பு எல்லை மீறிவிடும். எதிர்ப்பு முறைகளையொட்டி நமக்குள் கருத்து வேற்றுமை இருப்பினும், அம் மசோதாக்கள் நிறைவேறுவதை எதிர்ப்பதன் மூலம் நீங்கள் பொது மக்களின் அபிப்பிராயத்தை எடுத்துக் கூறுவீர்களென நம்புகிறேன்.

## 24

(தந்தி)

ஏப்ரல் 3, 1919

கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரியார்,
ராயப்பேட்டை, சென்னை.

டில்லியில் நிகழ்ந்த கோர சம்பவம், நீங்களும் மற்ற நண்பர்களும் உங்கள் அபிப்பிராயங்களைத் திட்டவட்டமாக வெளியிட வேண்டியது உங்களுடைய கடமை என்பதை வற்புறுத்தவில்லையா? சத்தியாக்கிரகத்தைப் பற்றிய கருத்து வேற்றுமைக்கு, டில்லி போலீசார் உபயோகித்த முறைகளைப் பற்றிய கருத்து வேற்றுமை என்று அர்த்தமில்லை. ரௌலட் சட்டத்தை நாம் எதிர்ப்பதன் மூலம், அதில் அடங்கியுள்ள பயங்கர ஆட்சி முறையையே எதிர்த்துப் போராடிவருகிறோம்.

## 25

பம்பாய்,
ஜூன் 6, 1919

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரியார்,

'எங் இந்தியா'வின் தலையங்கங்களை நீங்கள் பார்க்க வேண்டும் என்பதே எனது விருப்பம். பெரும்பாலான தலையங்கங்களும் என்னால் அல்லது எனது மேற்பார்வையில் எழுதப் பட்டவை. அதில் கூறப்பட்டிருப்பவையெல்லாம் உண்மையே என்று நான் உறுதி கூறமுடியும். அவை உண்மையில் அதிகாரிகளின் நிலையை எடுத்துக்காட்டுவதாக இருக்கின்றன. அந்த நிலையின் உருவாகவே ரௌலட் சட்டம் அமைந்திருக்கிறது. அதனால்தான் அதை நான் பிடிவாதமாக எதிர்க்கிறேன். புரட்சிக் குற்றங்களை அடியோடு ஒழிப்பதற்காக சர்க்கார் அச்சட்டத்தைக் கொண்டுவர வேண்டிய அவசியமில்லை. மக்களுக்குத் தொல்லை கொடுக்கவே அச்சட்டம் அதிகாரிகளுக்குத் தேவையாக இருக்கிறது. மக்களைத் தொல்லைப்படுத்தும் வழி என்ன என்பதை, இந்தியத் தற்காப்புச் சட்ட நிர்வாகம் காட்டிவருகிறது. அச்சட்டம் வாபசானலொழிய நாட்டில் அமைதி ஏற்பட முடியாது. அதை ஆதரித்து ஸ்ரீ மாண்டேகு பேசியிருப்பது, கவைக்குதவாத வாதமாகும். ஸ்ரீ ஹார்னிமனைப் பற்றி அவர் கூறியிருப்பவை முற்றிலும் அநீதியாகவும் உண்மைக்கு மாறாகவும் இருக்கின்றன. பஞ்சாபில் நிகழ்ந்த பயங்கர சம்பவங்களைப் பற்றி கவியரசர் அனல் கக்கும் கடிதம்* ஒன்று எழுதியிருக்கிறார்.

* பஞ்சாப் படுகொலைகளைக் கண்டித்தும் தமது சர் பட்டத்தைத் துறந்தும் கவி ரவீந்திரநாத் தாகூர் வைஸ்ராய்க்கு எழுதிய கடிதம் 7-6-1919 'எங் இந்தியா'வில் வெளியாகியது. அக்கடிதத்தையே காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

மக்களின் அதிருப்திக்குக் காரணமாக உள்ள விபரீதங்களை அகற்றி அவர்களுக்குத் திருப்தி ஏற்படும்படி செய்தாலன்றி, நீங்களும் மற்ற நண்பர்களும் அரசியல் சீர்திருத்தங்களை ஏற்றுக் கொள்ள மறுத்துவிடுவீர்களென நான் நம்பலாமா?

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 26

(தந்தி)

பம்பாய்,
*ஜூன் 27, 1919*

சாஸ்திரியார்,

இந்தியா மந்திரி காரியாலயம்,

லண்டன்.

ரௌலட் சட்டத்தை வாபஸ் செய்து கொள்ளாவிட்டால், ஜூலை மாத ஆரம்பத்தில் சட்ட மறுப்பு மீண்டும் நிச்சயமாக ஆரம்பிக்கப்படும் என்று மாண்டேகிற்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். பஞ்சாப் கொந்தளிப்புகளைப் பற்றி விசாரிக்கும்படி கேட்டிருக்கிறேன். தண்டனைகளைக் குறைக்கவும், காளிநாத் ராயை விடுதலை செய்யவும் அதிகாரம் அளிக்க வேண்டும் என்றும் கேட்டிருக்கிறேன்.

## 27

*பிப்ரவரி 4, 1920*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரி,

பிஜியிலிருந்தும் பிரிட்டிஷ் கயானாவிலிருந்தும் வந்துள்ள கோஷ்டியினர் உங்களைக் கண்டு பேசியிருப்பார்கள், அல்லது பேச வருவார்கள். நான் இப்போதுதான் அவ்விஷயமாக 'யங் இந்தியா'வுக்கு ஒரு கட்டுரை எழுதி அனுப்பியிருக்கிறேன். அதை அடுத்த புதன்கிழமைக்கு முன் பிரசுரிக்க முடியாது. அது வெளியானதும் உங்களுக்கு அனுப்பப்படும். எனினும் அந்தக் கோஷ்டியினரின் நோக்கங்களில் எனக்கு நம்பிக்கையில்லை என்று நான் கூற விரும்புகிறேன். அந்தக் கோஷ்டியினர் நல்லெண்ணம் உடையவர்கள்தான். எனினும் நம்முடைய கஷ்டங்களை அவர்களால் உணர்ந்து கொள்ள முடியாது. தற்போது எத்தகைய குடியேற்றத்தையும் ஆதரிக்க முடியாது என்று கருதுகிறேன். அது நல்ல பாலுடன் கெட்ட பாலைச்

சேர்த்து, நல்ல பாலையும் கெட்ட பாலாகச் செய்து விடுவது போல் இருக்கிறது. பிஜியிலும் பிரிட்டிஷ் கயானாவிலும் உள்ள சூழ்நிலை, ஒப்பந்தத் தொழிலாளர்களின் துயரத்தினால் நாற்றம் நிறைந்ததாக இருக்கிறது. எனவே நாம் புதிதாகத் தொழிலாளர்களை அனுப்புவதற்கு முன், அந்தக் கொடிய நாற்றம் ஒழிய வேண்டும். இப்போது அவ்விடங்களுக்குத் தொழிலாளர்கள் சுதந்திரமாகச் செல்லலாம் என்பது உண்மையே. எனினும் அவ்விஷயமாக நாம் நமது தேச மக்களுக்கு எடுத்துக் கூற வேண்டும். அங்குள்ள நிலைமையை நன்கு விசாரணை செய்து அறிக்கை வெளியிடுவதற்காக, பண்பாடுள்ள ஒரு சிறந்த இந்தியரை அனுப்பினால் நலமாக இருக்கும் என்று நான் டாக்டர் நூனனுக்கு யோசனை கூறினேன். பரிசோதனைக்காக ஒரு கப்பலில் இந்திய விவசாயிகள் அங்கு செல்லுவதை நான் ஆட்சேபிக்கவில்லை என்றும் அவரிடம் நான் கூறினேன். அவ்விடங்களுக்கு விஜயம் செய்வதற்காக அமிருதலால் தக்கரையாவது* அல்லது திவாரியையாவது தாங்கள் உதவ இயலுமா? அவர்களுக்கு ஆகும் செலவைக் கொடுத்துவிட டாக்டர் நூனன் இசைந்துள்ளார்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்து வருகிறீர்களென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 28

2, மொஸாய் ரோடு, லாகூர்,

*பிப்ரவரி 5, 1920*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரி,

உங்கள் கடிதம் கிடைத்தது. நான் அதற்கு ஒன்றிரண்டு நாட்களில் பதில் எழுதுகிறேன். இதன் மத்தியில், ஸ்ரீ போலக்கிடமிருந்து வந்த ஒரு கடிதத்தின் சாரத்தை இத்துடன் அனுப்புகிறேன். அக்கடிதம், ஏட்டளவில் அருமையாகத் தோன்றும் குடியேற்றத் திட்டத்தைப் பற்றி ஆலோசிப்பது கூட முடியாத காரியம் என்ற நிலையை உண்டாக்கியிருக்கிறது. நான் ஒரு விதமான திட்டத்தைத் தயாரிக்க முயற்சித்து வருகிறேன். குறைந்த

---

*அமிருதலால் வித்தல்தாஸ் தக்கர் (1869-1951) இந்தியர் ஊழியர் சங்கத்தின் ஜீவிய அங்கத்தினர் என்ற முறையில் தமது முழு நேரத்தையும் சமுதாயத் தொண்டிற்காக அர்ப்பணம் செய்தார். பின்னர் ஹரிஜனங்கள், ஆதிக்குடிகள் ஆகியோரின் முன்னேற்றத்திற்காக அரும் தொண்டு புரிந்து வந்தார்.

பட்சம் இதுதான், குடியேற்றத் திட்டத்தைப்பற்றி ஆலோசிப்ப தற்கு அடிப்படையாக இருக்கவேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 29

பம்பாய்,
*மார்ச் 18, 1920*

அன்புள்ள ஸ்ரீ சாஸ்திரி,

சென்ற வருடம் நான் காங்கிரஸ் விவகாரங்களில் தீவிர மாகப் பங்கு எடுத்துக் கொண்டதால், ஒரு ஸ்தாபனத்தில் நான் சேரும் அளவுக்கு இன்னும் அதிகமாகவும் தீவிரமாகவும் அக் கறை எடுத்துக் கொள்ளவேண்டுமென என்னைக் கேட்டிருக் கிறார்கள். யாருடன் சேர்ந்து தொண்டு புரியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததோ அவர்களிடமிருந்துதான் அக்கட்டளை வந்திருக் கிறது. எனினும் அவர்களுடைய ஸ்தாபனத்துடன் நான் தொடர்பு வைத்துக் கொண்டதில்லை. அகில இந்திய ஹோம் ரூல் லீகில் சேருமாறு அவர்கள் என்னைக் கேட்டிருக்கிறார்கள். இந்த வயதில், பல்வேறு பிரச்னைகளையொட்டியும் எனக்கு உறுதியான அபிப்பிராயங்கள் உருவாகியுள்ள இச்சமயத்தில், ஒரு ஸ்தாபனத்தின் கொள்கையை மாற்றுவதற்காக நான் அதில் சேர முடியுமேயன்றி, எனது அபிப்பிராயங்களைப் பாதிக்கும் ஒரு ஸ்தாபனத்தில் நான் சேரமுடியாது. எனினும் இவ்விதம் நான் கூறுவதற்கு, புதிய ஒளியை ஏற்றுக் கொள்ள நான் திறந்த மனத்துடன் இருக்கமாட்டேன் என்று அர்த்தமில்லை. எத்தகைய புதிய ஒளியாயினும், அது என்னைக் கவரும் அளவுக்கு மிகமிகப் பிரகாசமுள்ளதாக இருக்க வேண்டும் என்ற உண்மையையே நான் வற்புறுத்த விரும்புகிறேன். நான் திட்டவட்டமான அபிப் பிராயங்கள் கொண்டுள்ள பின்வரும் விஷயங்களை நண் பர்களின் முன்னிலையில் வைத்துள்ளேன்.

1. நாம் ஒரு தேசிய இனமாகப் புகழ் பெற்றுத் திகழ வேண்டுமாயின், நம் தேசத்தின் அரசியல் வாழ்க்கையில் அப் பழுக்கற்ற உயர்ந்த யோக்கியப் பொறுப்பை மேற்கொள்ள வேண்டும். இதற்கு முதற்படியாக நாம், என்ன நேருவதாயினும் சத்தியமாகிற சித்தாந்தத்தை மிக்க உறுதியுடனும், திட்டவட்ட மாகவும் ஒப்புக் கொள்ளவேண்டும்.

2. சுதேசியே நமது உடனடியான லட்சியமாக இருக்க வேண்டும். எதிர்காலத்தில் சட்டசபைக்கு வரும் அங்கத்தினர்களை நாட்டின் கைத்தொழில்களுக்கும், குறிப்பாக துணி உற்பத்தித்

தொழிலுக்கும் பூரண பாதுகாப்பு அளிப்பதாக பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளும்படி கேட்கவேண்டும்.

3. ஹிந்தியும் உருதுவும் சேர்ந்ததன் பலனாக எழும் ஹிந்துஸ்தானியை உடனடியாக, பரஸ்பரம் தொடர்பு வைத்துக் கொள்வதற்குரிய ஒரு தேசீய மொழி என்று திட்டவட்டமாக ஒப்புக்கொள்ளவேண்டும். எனவே எதிர்காலத்தில் சட்டசபை அங்கத்தினர்களாக வருவோர், தேசீய விவகாரங்களை நடத்திவரும் விஷயமாக, ஆங்கில மொழியைக் கைவிடும் ஆற்றல் நமக்கு உண்டாகும் வரையில் இம்பீரியல் சட்டசபையில் ஹிந்துஸ்தானியையும், மாகாண சட்டசபைகளில் அந்தந்த மாகாணத்தின் தாய்மொழியையும் தற்காலிகமாக இஷ்ட மொழியாக வைத்துக் கொள்ள முயற்சிப்பதாகப் பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டும். நமது பள்ளிக்கூடங்களில் தேவநாகரி அல்லது உருது லிபியில் ஹிந்துஸ்தானியை கட்டாயமான இரண்டாவது மொழியாகக் கொண்டுவருவதாகவும் அவர்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டும். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் தொடர்பு வைத்துக் கொள்ளவும், ராஜதந்திரத் துறையிலும், சர்வ தேச வர்த்தகத் துறையிலும் ஆங்கில மொழி அங்கீகரிக்கப்படும்.

4. எவ்வளவு விரைவில் சந்தர்ப்பம் கிடைக்குமோ அவ்வளவு விரைவில், சாத்தியமான வரையில் மொழி அடிப்படையில் மாகாணங்களை மாற்றி அமைக்கும் கொள்கையை ஒப்புக்கொள்ள வேண்டும்.

5. அரசியல் அடிப்படையிலும், மத அடிப்படையிலும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை மாற்ற முடியாத நம்பிக்கையாகவும் விதியாகவும் இருக்க வேண்டும். இதன் பலனாக, பரஸ்பரம் உதவி செய்யவேண்டும் என்றும், பரஸ்பரம் சகிப்புத்தன்மை நிலவ வேண்டும் என்றும், ஒரு பிரிவினருக்கு ஏற்படும் துன்பங்களை எல்லோருக்கும் ஏற்படும் துன்பங்களாகக் கருதவேண்டும் என்றும் ஏற்படுகின்றன. லீகின் அதிகார பூர்வமான திட்டத்திலிருந்து, சமபந்தி போஜனம், கலப்பு மணம் ஆகியவற்றின் மூலம் ஒற்றுமைப் பிரசாரம் செய்வது தவிர்க்கப்படும். எனினும் கிலாபத் பிரச்னையில் பூரணமாக ஒத்துழைக்கவேண்டும் என்ற அம்சம் சேர்க்கப்படும். நான் நண்பர்களுடன் விவாதித்தபோது, என்னுடைய சித்தாந்தமான சட்டமறுப்பை அதிகார பூர்வமாக அங்கீகரிக்க வேண்டுமென நான் கேட்கமாட்டேன் என்றும் அவர்களிடம் கூறினேன். மேலும் நான் எந்தக் கட்சியையும் சேர்ந்தவன் அல்ல என்றும், அகில இந்திய ஹோம் ரூல் லீக் கட்சிப் பற்றில்லாத ஒரு ஸ்தாபனமாக இருக்கும்படி செய்வதையே நான் விரும்புவதாகவும் அவர்களிடம் கூறினேன். அதாவது எந்தக் கட்சியைச் சேர்ந்தவராயினும் அவர்கள் செய்ய விரும்பும் தொண்டை அவர்கள் நேர்மையுடன் செய்பவர்களாக இருந்தால், அத்தகைய யோக்கியப் பொறுப்புள்ள சகலருக்கும் லீக் உதவி அளிக்கவேண்டும் என்றும் கூறினேன். லீக், காங்கிரசை எதிர்க்

கும் ஒரு ஸ்தாபனமாக இருக்க முடியாது. ஆனால் அது இப்போது செய்துவருவது போலவே காங்கிரசின் நலன்களை அபிவிருத்தி செய்யும் ஸ்தாபனமாகவே இருக்கவேண்டும்.

நீங்கள் என்னையும் எனது தகுதிகளையும், எல்லைகளையும் அறிவீர்கள். லீகில் சேரும்படி எனக்கு நீங்கள் ஆலோசனை கூறுகிறீர்களா?

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 30

*மார்ச் 20, 1920*

அன்புள்ள நண்பருக்கு,

ஏப்ரல் 6-லிருந்து 13-ம் தேதி வரையில் சத்தியாக்கிரக வாரத்தை அனுஷ்டிக்கும் விஷயமாக நான் கூறியிருந்த யோசனைகளை* நீங்கள் வாசித்திருப்பீர்கள். அந்த வாரத்தின் போது பத்து லட்சம் ரூபாய் வசூல் செய்வது கடினமாக இராது என்றே நம்புகிறேன். தெரிந்தவர்களும், கண்ணியம் வாய்ந்தவர்களும், ஆட்சேபிக்க முடியாத யோக்கியப் பொறுப்பு உள்ளவர்களுமான தொண்டர்கள் இருந்தால், நாம் வசூல் செய்யும் தொகைகளுக்கு ரசீது கொடுக்க வேண்டிய அவசியமே இல்லை. சாதாரணமாக, எல்லோரிடமிருந்தும் தொண்டர்கள் வசூல் செய்ய வேண்டும். செல்வந்தர்களான ஆடவர்களும் பெண்களும் தாங்கள் நன்கு அறிந்த பகுதிகளுக்குச் சென்று வசூல் செய்யலாம். வழியைக் காட்டிலும் விஷயத்தைத்தான் நான் அதிகமாக வற்புறுத்த விரும்புகிறேன். நான் கூறியுள்ள முறையில் அந்த வாரத்தை அனுஷ்டிப்பதிலோ அல்லது 13-ம் தேதி நிகழ்ந்த படுகொலையையொட்டி ஒரு நினைவுச் சின்னத்தை அமைப்பதிலோ யாதொரு இடையூறும் இராதென நம்புகிறேன். மக்களுக்கு விவரங்களை எடுத்துக் கூறும்போது அன்று நடந்த அட்டுழியங்களையல்ல, அன்று பலியானவர்களை நினைவு கூர்வதே நமது முக்கிய நோக்கமாக இருக்கவேண்டும் என்பது நான் கூறும் யோசனையாகும்.

சத்தியாக்கிரக முறையை அங்கீகரிக்காதவர்கள், அதற்காக வசூல் செய்வதில் ஈடுபடாமல் இருந்துவிடமாட்டார்கள் என்றே நம்புகிறேன். இது உண்மையில் ஒரு தேசீய நினைவுச் சின்னமாகவே இருக்கவேண்டும்.

---

* ஏப்ரல் 6-13-ம் தேதி சத்தியாக்கிரக வாரத்தில் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி காந்திஜி கூறிய யோசனைகளைப் பின்சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

எனினும், நினைவுச் சின்னத்தைக் காட்டிலும் உண்ணாவிரதத்தையும், பிரார்த்தனையையும் நான் இன்னும் அதிகமாக வற்புறுத்த விரும்புகிறேன். ஏனெனில் எல்லோரும் உண்ணாவிரதத்தையும், பிரார்த்தனையையும் மேற்கொண்டால், பணமும் அல்லது நாம் விரும்பும் வேறு எந்தச் சாதனங்களும் மேற்கொண்டு எவ்வித முயற்சியுமின்றி வானத்திலிருந்து கொட்டுவது போல் வந்து குவியும் என்பதை நான் அறிவேன். அத்துறையில் ஒரு நிபுணன் என்ற முறையில், இவ்விஷயமாக எனது அனுபவத்தை உங்களிடம் கூற விரும்புகிறேன். இப்போது உள்ளவர்களில் என்னைப் போல் வேறு எவரும், உண்ணாவிரதத்தையும் பிரார்த்தனையையும் ஒழுங்கான ஒரு சாஸ்திர முறையில் கையாண்டதாக எனக்குத் தெரியவில்லை; அதுபோலவே அவற்றின் மூலம் என்னைப் போல் மகத்தான பலன்களை அடைந்ததாகவும் தெரியவில்லை. என்னுடைய அனுபவத்தைத் தேச மக்களின் உள்ளத்தில் பதிய வைத்து, புத்திசாலித்தனமாகவும், நேர்மையுடனும், விடாப்பிடியாகவும் உண்ணாவிரதத்தையும் பிரார்த்தனையையும் மேற்கொள்ளும்படி செய்வது எனக்குச் சாத்தியமாக இருக்கவேண்டும். இதுதான் எனது விருப்பமாகும். அவ்விதம் செய்தால் யாரும் நம்ப முடியாத விதத்தில் நாம் பரந்த ஸ்தாபனமோ, பாதுகாப்புகளோ எதுவும் இல்லாமல் லட்சக்கணக்கான காரியங்களைச் சாதிக்க முடியும். உண்ணாவிரதமும் பிரார்த்தனையும் எனது சொந்த அனுபவத்தில் அளித்ததுபோல் பலனளிப்பவையாக இருக்க வேண்டுமாயின், அவை வெறும் யந்திரம் போன்ற நடவடிக்கைகளாக இருக்கக்கூடாது; ஆனல் திட்டவட்டமான ஆன்மிக நடவடிக்கைகளாக இருக்க வேண்டும். அப்போதுதான் உண்ணாவிரதம், ஆன்மிக சுதந்திரத்துக்காக உடலை வருத்திக் கொள்வதாக இருக்கும்; பிரார்த்தனை, குற்றம் குறையின்றி முற்றிலும் தூய்மையாக இருப்பதற்காக ஆன்மாவின் பெருமுயற்சியாகவும் ஏக்கமாகவும் இருக்கும். அவ்விதம் அடைந்த தூய்மை, ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக அர்ப்பணம் செய்யப்படவேண்டும். அத்தகைய நோக்கமும் தூய்மையானதாக இருக்கவேண்டும். எனவே புராதன முறையான உண்ணாவிரதத்திலும், பிரார்த்தனையிலும் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமாயின், அந்த நோக்கத்திற்காக 6-ம் தேதியையும் 13-ம் தேதியையும் அர்ப்பணம் செய்து, அவ்விதமே செய்யும்படி உங்கள் அண்டையிலுள்ளவர்களையும் தூண்டுவீர்களென நம்புகிறேன்.

பின்னர் மூன்று கூட்டங்கள் இருக்கின்றன. நீங்கள் அக்கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து, அவற்றை வெற்றிகரமாக நடத்துவீர்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 31

டில்லி,
செப்டம்பர் 20, 1924

எனது பேரன்புள்ள நண்பருக்கு,

உங்களுடைய உடல் நலத்தைப்பற்றி விசாரித்து முன்பே நான் உங்களுக்கு எழுதவேண்டுமென விரும்பினேன். நீங்கள் ஹகீம்ஜிக்கு அனுப்பிய தந்தி, அதை எனக்கு நினைவூட்டியது. தயவு செய்து உங்களுக்கு நீங்களே பூரண ஓய்வு கொடுங்கள்.

நீங்கள் மன வேதனை அடையவேண்டாம். எனக்கு உண்ணா விரதமானது* மத சம்பந்தமான ஒரு கடமையாகும். இந்தத் தீயினூடே செல்ல எனக்குக் கடவுள் சக்தியைக் கொடுத்திருப் பதைக் குறித்து நண்பர்கள் ஆனந்தம் அடைய வேண்டும் என் பதே எனது விருப்பமாகும்.

அன்புடன்,

தங்கள்,
**மோ. க. காந்தி**

## 32

தார்யகஞ்ஜ், டில்லி,
நவம்பர் 12, 1924

அன்புள்ள நண்பருக்கு,

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கும் மற்றப் பொதுச் சங்கங்களின் பிரதிநிதிகளுக்கும் இடையே சமீபத்தில் நடை பெறவிருக்கும் மகாநாட்டிற்கு, மௌலானா முகமது அலி விடுத் துள்ள அழைப்பை நீங்கள் வாசித்திருப்பீர்கள். அந்த மகாநாட் டிற்கு வர உங்களுக்கு இயலும் என்றே நம்புகிறேன். சாத்திய மாயின், வங்காள அடக்குமுறையையொட்டி பல்வேறு அபிப் பிராயமுடையவர்களின் கவனத்தையும் ஒன்று திரட்டவேண்டும் என்பதே மகாநாடு கூட்டுவதன் நோக்கமாகும். வங்காள அடக்கு முறை, எனக்குத் தெரிந்தவரையில், அராஜக நடவடிக்கைகளுக்கு எதிராகக் கைக்கொள்ளப்படவில்லை; சட்டவரம்பிற்கு உட்பட்ட கிளர்ச்சிக்கு எதிராகவே கைக்கொள்ளப்படுகின்றன. அந்தக்

---

* 1924 செப்டம்பர் 18-லிருந்து அக்டோபர் 10-ம் தேதி வரையில் 21 நாட் கள் காந்திஜி உண்ணாவிரதம் இருந்தார். அந்த வருடம் அடிக்கடி நிகழ்ந்த ஹிந்து-முஸ்லிம் கலகங்களால் காந்திஜிக்கு ஏற்பட்ட ஆழ்ந்த மனவேதனையே அவரது உண்ணாவிரதத்திற்குக் காரணமாகும்.

கிளர்ச்சி சர்க்காருக்கு சங்கடமாக இருக்கும்போது, அவர்கள் அடக்குமுறைகளைப் பிரயோகிக்க முற்படுகிறார்கள். மேலும், எல்லாக் கட்சிகளையும் காங்கிரஸ் மேடையில் ஒன்று சேர்ப்பது சாத்தியமா என்பதைக் கண்டுபிடிப்பதும் அம்மகாநாட்டின் நோக்கமாகும். அவ்விதம் எல்லாக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து, தேசீய வளர்ச்சிக்கு முக்கியமான பொதுவான ஓர் ஆக்கத் திட்டம் ஒன்றை உருவாக்க வேண்டும். மற்ற விஷயங்களில் ஒவ்வொரு கட்சியும் தன் தன் சொந்தக் கொள்கையை விட்டுவிட வேண்டும் என்பதில்லை. நீங்கள் அம் மகாநாட்டிற்கு வந்தால், எல்லாக் கட்சிகளுக்கும் திருப்தியளிக்கக் கூடிய ஒரு முடிவுக்கு வருவதில் உங்களுடைய ஒத்துழைப்பும், ஆலோசனையும் மதிப்பிற்குரியவையாக இருக்கும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 33

*ஏப்ரல் 6, 1927*

எனது அன்புள்ள நண்பருக்கு,

இந்தக் கடிதம், படுத்த படுக்கையிலிருக்கும் ஒரு நோயாளியிடமிருந்து உங்களுக்கு வருகிறது. பெங்களூரில் உங்களைப் பார்த்து எனது கோரிக்கையை வற்புறுத்தலாமென நான் நம்பிக்கொண்டிருந்தேன்.* ஆனால் இன்னும் சிறிது காலத்திற்கு அவ்விதம் செய்வது முடியாத காரியம். நான் அனுப்பிய தந்திக்கு இன்னும் பதில் வரவில்லை. அது உங்களுக்கு வந்து சேர்ந்ததென்றே நம்புகிறேன். நீங்கள் தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லாவிடில், அங்குள்ள இந்தியர்களின் உள்ளம் உடைந்துவிடும். ஸ்ரீமதி சாஸ்திரியும் உங்களுடன் நிச்சயமாகச் செல்லவேண்டும்.† ஸ்ரீமதி சாஸ்திரிக்கு நீங்கள் மொழி பெயர்ப்பாளராக இருக்கலாம். அல்லது உங்களிடத்திலுள்ள பட்டம் பெற்ற பல சிறந்த தமிழ்ப் பெண்களில் ஒருவரை நீங்கள் அழைத்துச் செல்லலாம். ஸ்ரீமதி சாஸ்திரிக்கு அந்தப் பெண் தோழியாகவும், உபாத்தியாயராகவும், மொழிபெயர்ப்பாளராகவும் இருப்பார். விக்டோ

---

* தென்னாப்பிரிக்காவில் இந்திய சர்க்காரின் முதலாவது ஏஜண்டாக ஸ்ரீ சாஸ்திரியாரை நியமிக்க வேண்டுமென யோசனை கூறியவர் மகாத்மா காந்திதான். சாஸ்திரியார் இந்தியாவில் தமது அலுவல்களை விட்டுவிட்டு அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. எனினும், கேப் டவுன் ஒப்பந்தத்தை வெற்றிகரமாகத் தொடங்கி வைக்க அவர் ஒருவரால்தான் இயலுமென காந்திஜி வற்புறுத்தினர். அந்த ஒப்பந்தம் ஏற்படுவதில் சாஸ்திரியார் எடுத்துக் கொண்ட பங்கு அற்ப சொற்பம் அல்ல என்றும் காந்திஜி குறிப்பிட்டார்.

† இறுதியில் ஸ்ரீமதி சாஸ்திரி அப்போது சாஸ்திரியாருடன் தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லவில்லை.

ரியா மகாராணி, ஆங்கிலம் தெரியாத பாரசீக மன்னரான ஷாவை வரவேற்று உபசரித்தபோது என்ன செய்தார்? ராயல் கமிஷன் இங்கு வரும்போது நீங்கள் இங்கே இருக்க விரும்புவதாக லார்டு இர்வினிடம் தெளிவாகக் கூறிவிடுங்கள். கடைசியாக, லார்டு இர்வின் வைஸ்ராயாக இருக்கும் வரையில், சில்லறைத் தொல்லைகள் ஏற்படுமோ என்று அஞ்சவேண்டியதில்லை. அவர் உங்களை நன்கு அறிவார். எனவே நீங்கள் செய்துள்ள முடிவைப் பற்றிப் புனராலோசனை செய்யும்படியும், ஒரே வருடம் அங்கு இருப்பதாக இருந்தால் கூட நீங்கள் செல்லவேண்டும் என்றும் நான் வற்புறுத்துகிறேன்.

ஒப்பந்தத்தைத் தொடங்கிவைக்க உங்கள் ஒருவரால்தான் முடியும். அது மதிப்பு வாய்ந்ததாக இருக்கும்படி செய்ய உங்கள் ஒருவரால்தான் முடியும்.

கடவுள் உங்களுக்கு வழி காட்டுவாராக.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 34

சபர்மதி,
செப்டம்பர் 22, 1927

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களிடமிருந்து வந்த இரண்டு கடிதங்களுக்கு இப்போது நான் பதில் எழுதவேண்டும். திரான்ஸ்வால் நண்பர்களிட மிருந்து உங்களுக்கு இன்னும் தொல்லை ஏற்பட்டு வருவதைக் குறித்து நான் வருந்துகிறேன். இருந்தாலும், அவர்களுடைய தடுமாற்றத்தினுல் உங்களுடைய மன அமைதி கெடுவதற்கு நீங்கள் இடம் கொடுக்கமாட்டீர்கள் என்றே நம்புகிறேன். நான் இங்கே விஷயங்களைக் கண்காணித்து வருகிறேன். சிலர் உங்க ளுடைய நடவடிக்கைகளைப்பற்றி இங்கு பத்திரிகைகளில் வெளி யாகும்படி செய்யும் அறிக்கைகளைக் குறித்து நீங்கள் உங்களை அலட்டிக் கொள்ளவேண்டாம். நான் கிளர்ச்சி செய்தாலொழிய தென்னுப்பிரிக்கா பிரச்னைபற்றி இந்தியாவில் உண்மையான கிளர்ச்சி எதுவும் எழாதென நான் நிச்சயமாகக் கூறலாம். எப்படியோ அந்த அளவுக்கு எனக்கு இன்னும் மதிப்பு இருக் கிறது. உங்களுடைய பதவி காலம் முடிவுற்ற பிறகும் அந்த மதிப்பு நீடித்திருக்கலாம். தென்னுப்பிரிக்கா யூனியன் சர்க்கார் உங்களுடன் ஒத்துழைத்து வரும்வரையிலும், உங்களுடைய கோரிக்கைகளை அவர்கள் நிராகரிக்காமல் இருக்கும்வரையிலும், இங்கே நான் கிளர்ச்சி செய்வதால் உருவான என்ன பலன் ஏற்படுமென எனக்குத் தெரியவில்லை.

பிராக்ஜி, மேத்* ஆகியோருடைய வழக்குகளின் முடிவு துரதிர்ஷ்டமானது. தற்காலிகப் பத்திரங்கள் அளிக்கப்படுவதை அவர்கள் நிராகரித்துவிட்டது சரியென்றே நினைக்கிறேன். மேதைப்பற்றி ரகசிய போலீசார் அனுப்பியுள்ள அறிக்கைகளுக்கு நான் எவ்வித முக்கியத்துவமும் அளிக்கவில்லை. அவர் ஏதாவது குற்றம் செய்திருந்தால், அதிகாரிகள் அவர்மீது வழக்குத் தொடர வேண்டுமேயன்றி, அவருக்கு விரோதமாக ரகசிய போலீஸ் அறிக்கைகளை உபயோகிக்கக் கூடாது. அவர் அப்பழுக்கற்ற ஒரு மனிதராக இராமலிருக்கலாம். எனினும், அங்கேயோ அல்லது இங்கேயோ உள்ள சராசரி இந்தியரைக் காட்டிலும் அவர் எவ்விதத்திலும் இழிவானவர் அல்ல. *1914*-ம் ஆண்டில் ஏற்பட்ட ஒப்பந்தத்திற்கிணங்க, ஏட்டளவில் நிறத்தடை இருக்கக்கூடாது என்றாலும், நடை முறையில் நிறத்தடையே அவர்களுடைய பத்திரங்கள் புதுப்பிக்கப்படாததற்குக் காரணமாகும். எனினும் அவர்களுக்கு இடம் கிடைக்க ஏதாவது வழி பிறக்குமென நம்புகிறேன்.

போனிக்ஸ் குடியிருப்பு முகாமை நீங்கள் விரும்புவதைக் குறித்து நான் மகிழ்ச்சி யடைகிறேன். பிரிடோரியாவிலிருந்து ஜோகன்னஸ்பர்க்கிற்கு நீங்கள் மோட்டாரில் சென்றபோது காலென்பாக் தலைதெறிக்க மோட்டாரை ஓட்டிக்கொண்டு சென்றதாயும், பயங்கரமாக முடிந்திருக்கக்கூடிய விபத்து தவிர்க்கப்பட்டதாயும், அவரது அழகான மோட்டாரின் டயர்களில் ஒன்று வெடித்ததாயும் ஆண்ட்ரூஸ் விவரித்துக் கூறினர். காலென்பாக்கை இந்தியாவுக்கு வரும்படி நீங்கள் நல்வார்த்தைகளால் தூண்ட வேண்டும் என்பது என் விருப்பம். அவர் என்னைப் பார்த்துவிட்டு, பிறகு அவரது அலுவல்களைக் கவனிக்கத் திரும்பிச் சென்றுவிடலாம். மிஸ் ஷ்லெசின் உங்களைப் பேட்டி கண்ட விவரங்களை மனத்தைக் கவரும் வண்ணம் அற்புதமாக வர்ணித்து எனக்குக் கடிதம் எழுதியுள்ளார். நான் சென்னையில் இருந்தபோது ஸ்ரீமதி சாஸ்திரியைக் காண முயற்சித்தேன்; ஆனல் அவர் லக்ஷ்மணபுரியில் இருப்பதாகத் தெரிந்து கொண்டேன்.

அன்புடன்,

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

---

* பிராக்ஜி, மேத் இருவரும் ஜோகன்னஸ்பர்க்கிலுள்ள பிரபல இந்திய வியாபாரிகள் ஆவர். அவர்கள் இந்தியாவில் சிறிது காலம் இருந்துவிட்டுத் திரும்பி வந்தபோது, அவர்களுடைய குடியிருப்புப் பத்திரங்களைப் புதுப்பித்துக் கொள்வதில் அவர்களுக்குச் சங்கடங்கள் ஏற்பட்டன.

# 35

கோயம்புத்தூர்,
அக்டோபர் 20, 1927

எனது அன்புள்ள சகோதரருக்கு,

இப்போதெல்லாம் தென்னாப்பிரிக்காவிலிருந்து வரும் செய்திகள் கனல் கக்குவனவாக இருந்துவருகின்றன. பத்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட ஒரு செய்தியை இத்துடன் அனுப்பியிருக்கிறேன். அங்கு என்ன நிகழ்ந்து வருகிறதென்பதை நான் கண்காணித்து வருகிறேன். எனினும் அதைப் பற்றி எதுவும் கூறாமல் இருப்பதே விவேகமாகும் என்று கருதுகிறேன். ஆனால் அவசியமாக இருக்கும்போது நான் குறுக்கிடத் தயங்கமாட்டேன். மணிலாலின் கடிதத்திலுள்ள ஒரு பாரா எனக்கு மனக்கலக்கத்தைக் கொடுக்கின்றது. அதைக் கீழே மொழிபெயர்த்துள்ளேன்:

"அவரது (சாஸ்திரியாரின்) பிரசங்கங்கள் எனக்குச் சிறிதும் திருப்தியளிக்கவில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையும், அதனால் இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ள நன்மைகளையும் புகழ்வதில் அவர் எல்லை மீறிப் போகிறார். ஐரோப்பியர்களை அவ்விதம் திருப்திப்படுத்த வேண்டியது அவசியமென அவர் கருதுகிறார். அவ்விதம் செய்தால்தான் இங்கே நாம் ஏதாவது நலன் பெறலாம் என்று அவர் நம்புவதுபோல் தோன்றுகிறது. ஆனால் இந்தப் பிரசங்கங்களால் இந்தியாவில் ஏற்படும் பலன் நன்மையளிப்பதாக இருக்க முடியாது. எனவே அவற்றை 'இந்தியன் ஒபினியனி'ல் பிரசுரிக்க வேண்டாமென அவர் என்னிடம் கூறியிருக்கிறார்."

மணிலாலிடமிருந்து வந்துள்ள இக் கடிதத்தை உங்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று நான் நினைத்தேன். அவன் ஒரு நல்ல பையன், தைரியமுள்ள பையன். இப்போது சாம்ராஜ்யத்தைப் பற்றிய எனது கருத்துகளை அவன் அறிவான். எனவே அவனது மன நிலையைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை. சாம்ராஜ்யத்தைப் பற்றி நமக்கு ஒரேவிதமான அபிப்பிராயங்கள் இல்லை என்றாலும், நாம் ரத்த சகோதரர்களைப்போல் இருக்கிறோம் என்பதைப் பகுத்தறியும் சக்தி அவனுக்கு இல்லை. இந்தக் கடிதத்தைப் பற்றி அவனுக்கு நான் அதிகமாக எதுவும் கூறவில்லை. அவசரப்பட்டு முடிவு செய்யக்கூடாதென்று அவனை நான் எச்சரித்திருப்பதுடன், சாம்ராஜ்யத்தின் நடவடிக்கைகள் மொத்தத்தில் இந்தியாவுக்கு நன்மையளிப்பவை என நீங்கள் மனப்பூர்வமாக நம்புகிறீர்கள் என்றும் அவனுக்குக் கூறியிருக்கிறேன். எனினும் நீங்கள் அவனை நேரில் வரும்படி கூறவும், அவசியமாயின் உங்களுடைய சொந்த மகனுடன் பேசுவதுபோல் அவனுடன் பேசவும் தயங்கமாட்டீர்கள். இங்கே அப்போதைக்கப்போது சில பத்திரிகைகளில் வரும் செய்திகளைப் பற்றியோ அல்லது அங்கே மக்கள் என்ன பேசுகிறார்கள் என்பது பற்றியோ நீங்கள் கவலைப்படமாட்டீர்கள் என்று நம்புகிறேன். நான் செயலில் ஈடுபட வேண்டுமென நீங்கள் விரும்பும்போது என்னிடம் கூறத் தயங்காதீர்கள்

என்று கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக நான் ஒவ்வொரு நாளும் ஒவ்வோரிடத்திற்குச் சென்று கொண்டிருக்கும்போது பத்திரிகைகளை நுணுக்கமாக வாசிப்பதில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கக் கடவுள் அருள் புரிவாராக.

அன்புடன்,

தங்கள்,

**மோ. க. காந்தி**

## 36

சபர்மதி,
ஜனவரி *11, 1928*

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய இனிமையான கடிதம் எனக்குக் கிடைத்தது. அது திருப்பூரிலுள்ள தலைமை உபாத்தியாயரை எனக்கு நினை வூட்டியது. உங்களுடைய மாணவராக இருந்துள்ள அவர், நீங்கள் ஆங்கிலத்தைப்போல் சமஸ்கிருதத்திலும் மேதாவி என்று என் னிடம் கூறினர். எனக்கு இது தெரியாது. நான் வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பைத்தான் அதிக அக்கறையின்றி வாசித்திருக்கிறேன். துளசிதாஸ் ராமாயணத்தில்தான் எனக்கு நம்பிக்கையும் அக்கறையும் அதிகமாகும். நீங்கள் சொல்லுவதை யெல்லாம் நான் ஒப்புக்கொண்டாலும், ராமனின் விருப்பத்திற்கு மாருக சீதை காட்டிற்குச் சென்ருள் என்பதே எனது உறுதியான கருத்தாகும். அவ்விதம் செய்ததன் மூலம் சீதை தன்னையே மிஞ்சி விட்டாள். அது போலவே தசரதருக்குக் கொடுத்த வாக்குறு தியை நிறைவேற்றியதன் மூலம் ராமர் தம்மையே மிஞ்சிவிட்டார். ஆனல் நான் வீணாக விவாதித்துக் கொண்டிருக்கிறேன். ஏனெனில் ராமரையும் சீதையையும் வணங்குவதில் நாம் தனித்து நிற்கிறோம்.

உங்களுடைய நடவடிக்கைகளை நான் அக்கறையுடன் கவ னித்து வருகிறேன். சர் முகமது ஹபிபுல்லாவுக்கு நீங்கள் எழுதி யுள்ள கடிதங்களின் நகல்களைப் பொக்கிஷம்போல் மதித்து வருகிறேன்.

உங்களுடைய மகத்தான அலுவல்களை உறுதியான அஸ்தி வாரத்தின்மீது அமைக்க வேண்டுமாயின், நீங்கள் அங்கு நீடித்துத் தங்கவேண்டும். தயவு செய்து அவ்விதமே செய்யுங்கள்.

அன்புடன்,

**மோ. க. காந்தி**

# 37

சபர்மதி,
பிப்ரவரி 26, 1928

எனது அன்புள்ள சகோதரருக்கு,

சர் முகமது ஹபிபுல்லாவுக்கு நீங்கள் அனுப்பும் குறிப்புகளின் நகல்கள் எனக்குக் கிடைத்துவருகின்றன. உங்களுடைய நடவடிக்கைகளைப் பற்றி மணிலாலும் மற்றவர்களும் கூட எனக்கு அறிவித்து வருகிறார்கள். உங்களுடைய பதவிக் காலம் இவ் வருஷத்துடன் முடிவடைவதால், தென்னாப்பிரிக்காவிலிருந்து நீங்கள் புறப்பட்டுவிடக் கூடாதென்று உங்களை வேண்டிக் கொள்ளுமாறு ஏற்கனவேயே அவசரக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. நீங்கள் இப்போதே மாதங்களை எண்ணிக் கொண்டுவருவதாக அவர்கள் கூறுகின்றனர். தென்னாப்பிரிக்காவிலிருந்து நீங்கள் புறப்பட்டுவிடுவீர்களோ என்று அவர்கள் நடுங்கிக் கொண்டிருக் கிறார்கள். அவர்களைக் காட்டிலும் நான் நடுங்கிக் கொண்டிருக் கிறேன். ஏனெனில், ஆரோக்கியத்தையொட்டிய முக்கியமான காரணங்களைத் தவிர வேறு காரணங்களுக்காக நீங்கள் தற் போது தென்னாப்பிக்காவை விட்டு வருவது நம் தேசத்திற்குப் பெரும் தீங்காகவே முடியும் என்பது எனது உண்மையான கருத் தாகும். தற்போது உங்களுடைய ஸ்தானத்தை வேறு எவரும் ஏற்று வெற்றிகரமாக வகிக்க முடியாது என்று கூறவேண்டி யிருப்பதைக் குறித்து நான் வருந்துகிறேன். இருந்தாலும் அது தான் உண்மையாகும். அங்குள்ளவர்களுக்கு உங்கள் மீது அதிக மதிப்பு ஏற்பட்டிருக்கிறதேயன்றி, வெறுப்பு உண்டாகவில்லை என் பது நிச்சயம். ஐரோப்பியர்களிடையே நீங்கள் மிகுந்த செல் வாக்கு பெற்றிருப்பதைப்போல், நம் தேச மக்களிடையேயும் நீங்கள் உறுதியான ஆதரவாளர்களைப் பெற்றிருக்கிறீர்கள். அவர்களை நீங்கள் கைவிட்டுவிடக் கூடாது. எனவே தயவுசெய்து எனக்கு மீண்டும் உறுதியளித்து ஒரு கடிதம் எழுதுங்கள். நீங்கள் என்ன செய்ய வேண்டுமென்று சர்க்கார் விரும்புகிறார்களோ என்பது எனக்குத் தெரியாது.

அன்புடன்,

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 38

சபர்மதி,
ஜனவரி 12, 1930

அன்புள்ள சகோதரருக்கு,

தென்னப்பிரிக்காவுக்குச் சென்று 'இந்தியன் ஒபினியனி'ன் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளுமாறு நீங்கள் யாரையாவது அனுப்ப முடியுமா என்று கேட்பதற்காகவே உங்களுக்கு இக் கடிதம் எழுதுகிறேன். மணிலால் தன் மனைவியுடன் இங்கு வந் திருக்கிறன். அவ்விருவரும் இப்போது இந்தியாவில் இருப்பதை விரும்புகின்றனர். மணிலாலைத் திறமை மிக்க அல்லது நடுத்தர மான ஆசிரியர் என்று கூடக் கூற முடியாது. தேவதார் ஒரு சமயம் யாரையாவது ஒருவரை அனுப்புவதாக யோசித்துக் கொண்டிருந்தார். இந்த யோசனை நடைமுறையில் சாத்திய மானதென்று நீங்கள் நினைத்தால், தயவு செய்து எனக்கு அறிவியுங்கள்.

லாகூரில் எனது நடவடிக்கைகளைக் குறித்து நீங்கள் அதிக மாகக் கோபமடையவில்லை என்றே நம்புகிறேன். நான் எனது அந்தராத்மாவின் குரலைப் பின்பற்றியே அவ்விதம் செய்தேன். வேறு கௌரவமான வழி எதுவும் எனக்குத் தென்படவில்லை. என் அபிப்பிராயப்படி அந்தத் தீர்மானம் நியாயமானது என்பதை ரஸ்ஸெலின் பிரசங்கம் ருசுப்பித்து விட்டது. தீவிரமான கருத்து வேற்றுமை இருப்பினும் நாம் ஒருவரையொருவர் நேசிக்க முடி யும் என்பதை நான் அறிவேன்?

உங்களுடைய உடல் நிலை இப்போது எப்படி இருக்கிறது?

தங்கள்,
**மோ. க. காந்தி**

## 39

சபர்மதி,
பிப்ரவரி 2, 1930

அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய இரண்டு கடிதங்களும் எனக்குக் கிடைத்தன. 'இந்தியன் ஒபினியனி'ன் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ள நீங்கள் யாரையாவது அனுப்ப இயலுமாயின், என்னுடைய கட்டளைக்கு அல்ல, முற்றிலும் நிச்சயமாக உங்களுடைய கட்டளைகளுக்கு இணங்கவே அவர் தம்முடைய கொள்கையை உருவாக்குவார். நான் அதில் சிறிதும் தலையிடமாட்டேன்.

நீங்கள் எனக்கு எழுதுவதாக உத்தேசித்த கடிதத்தை எழுதியிருக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். உங்களுடைய அபிப்பிராயத்தை நான் எவ்வளவு அதிகமாக மதிக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களுடைய சிந்தனையின் போக்கை அனுசரித்து நடப்பது எனக்கு அளவற்ற ஆறுதலை அளிக்கும். எனினும் மிகவும் மதிப்பு வாய்ந்த நண்பர்களுக்கும் எனக்குமிடையே அடிக்கடி கருத்து வேற்றுமை ஏற்படுவது எனது துரதிர்ஷ்டமேயாகும். இருந்தாலும் அதன் காரணமாக பரஸ்பரம் உள்ள அன்பு ஒருபோதும் பாதிக்கப்பட்டதில்லை என்ற உண்மைதான் எனக்கு ஆறுதலை அளிக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 40

ஆனந்த பவன், அலகாபாத்,
பிப்ரவரி 7, 1931

அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய தந்தி ஜவாஹர்லாலின் மனதை உருக்கிவிட்டது.* அதற்காக உங்களுக்கு நன்றி. உங்களைக் காணவும் நீங்கள் என்னிடம் கூறவேண்டியதையெல்லாம் கேட்கவும் நான் மிகவும் ஆர்வமுடையவனாக இருக்கிறேன். எனினும் பலன் ஏற்படுமென்ற நம்பிக்கை எனக்குச் சிறிதும் இல்லை. இந்தியாவில் உள்ள சூழ்நிலை, உங்களுக்கும், மற்ற நண்பர்களுக்கும் ஏற்படும் மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் ஆதரிப்பதாக இல்லை. எனினும் எனது அச்சத்திற்கு அடிப்படையான காரணம் எதுவும் இல்லை என்று கருதவே நான் விரும்புகிறேன். உங்களுக்கு நேரம் கிடைக்கும்போதெல்லாம் நீங்கள் வரலாம். காரியக் கமிட்டி 13-ஆம் தேதி கூடுகிறது. சாத்தியமாயின் நாம் 11-ஆம் தேதியோ அல்லது அதற்கு முன்போ சந்திக்க வேண்டும்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

மோ. க. காந்தி

---

*1931 பிப்ரவரி 6-ஆம் தேதி மோதிலால் நேரு மரணமடைந்ததைக் குறித்து தமது அனுதாபத்தைத் தெரிவித்து ஸ்ரீ சாஸ்திரியார் நேருஜிக்கு அனுப்பியிருந்த தந்திச் செய்தியையே காந்திஜி மேலே குறிப்பிட்டுள்ளார். லண்டன் வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்றிருந்த ஸ்ரீ சாஸ்திரியாரும் சர் தேஜ் பகதூர் சப்ருவும் அதே தினத்தில்தான் பம்பாய் வந்து சேர்ந்தனர்.

## 41

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய உருக்கமான தந்தி எனக்குக் கிடைத்தது. உங்களுக்கு ஆறுதல் அளிக்கும்படியாக அதற்கு நான் பதில் அனுப்பியிருக்கிறேன். வட்ட மேஜை மகாநாட்டிற்கு வராமல் நான் தட்டிக் கழிக்கவில்லை. ஆனால் என்னை எதிர் நோக்கி நிற்கும் கஷ்டங்களை ஒரு கடிதத்தில் விவரிப்பதென்பது சாத்திய மல்ல. ஒப்பந்தத்தை (காந்தி-இர்வின் ஒப்பந்தம்) மாகாண சர்க்கார் காலால் மிதித்துவருகின்றனர். அடக்கு முறை அதன் சூலாயுதத்தைத் தூக்கி வருகிறது. 'எங் இந்தியா' இதழ்களை வாசிக்கும் பொறுமை உங்களுக்கு இருக்குமாயின், நான் கூறு வதன் அர்த்தம் என்ன என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள முடியும். நிகழ்ந்து வரும் சம்பவங்களில் பத்தில் ஒரு மடங்கைக் கூட நான் இன்னும் வெளியிடவில்லை. இங்கு சங்கடமான நிலை உருவாகிவருகையில் நான் இந்தியாவை விட்டுச் செல்லலாமா என்ற கேள்வி எழலாம். எனினும் நான் சிம்லாவுடன் தொடர்பு கொண்டிருக்கிறேன்.

(இந்தக் கடிதம் 1931 ஜூன் அல்லது ஜூலை மாதம் காந்திஜியினால் எழுதப்பட்டிருக்கலாம் என்பதற்கு ஆதாரம் இருக்கிறது.)

## 42

எரவாடா சிறை,
செப்டம்பர் 20, 1932

எனது பேரன்புள்ள நண்பருக்கு, சகோதரருக்கு,*

இப்போது செவ்வாய்க்கிழமை விடியற்காலம் 3 மணி அடித்துச் சிறிது நேரமாகிறது. குருதேவருக்கு ஒரு சுருக்க மான கடிதத்தை இப்போதுதான் எழுதி முடித்தேன்.

வேதனை நிறைந்த இந்த நாட்களில் நீங்கள் எப்போதும் என் மனக் கண்முன் இருந்துவருகிறீர்கள். நான் உங்களுடைய சிந்தனை களை அறிந்து கொண்டுள்ளேன். உங்களிடம் எனக்குள்ள மதிப்பை நீங்கள் அறிவீர்கள். பல்வேறு விஷயங்களை யொட்டியும் நமது மனப் போக்கு துருவங்களைப் போல் நேர்மாறாக இருப்பினும் அல்லது இருப்பதுபோல் தோன்றினாலும், நமது உள்ளங்கள் ஒன்றாகவே இருக்கின்றன. எனவே நீங்கள் கூறுவதை ஒப்புக்

* பிரிட்டிஷ் சர்க்காரின் வகுப்புத் தீர்ப்பைக் கண்டித்து 1932 செப்டம்பர் மாதம் சரித்திரப் புகழ் பெற்ற உண்ணாவிரதத்தை ஆரம்பிப்பதற்குச் சில மணி நேரத்திற்கு முன்தான் காந்திஜி இந்தக் கடிதத்தை எழுதினார்.

கொள்வது எனக்குச் சாத்தியமாக இருக்கும்போதெல்லாம் அது எனக்கு மாசற்ற மகிழ்ச்சியையே கொடுக்கிறது. இப்போது நான் மேற்கொண்டுள்ள முறை ஒருவேளை உங்களுக்குச் சகிக்க முடியாததாக இருக்கலாம். அப்படியிருந்தாலும்கூட, உங்களுடைய கடும் கண்டனத்தை நான் விரும்புகிறேன். விடாப்பிடியாக நின்று என் மனத்தை மாற்ற முயற்சிப்பதை நீங்கள் நிறுத்திவிடக் கூடாது. என்னுடைய மூத்த சகோதரரால் நான் பிரஷ்டம் செய்யப்பட்டிருந்தேன். பதினான்கு வருடங்கள் வரையில் நான் அவரால் பிரஷ்டம் செய்யப்பட்டிருந்தேன் என நினைக்கிறேன். வருடந்தோறும் அவர் ரிஜிஸ்தர் தபால் மூலம் எனக்கு அவரது சாபங்களை அனுப்பி வைத்தார். அவை எனக்கு ஆனந்தத்தையே கொடுத்தன. அவரது சாபங்கள் அத்தனையும் அன்புப் பொறிகளாகவே இருந்தன. இறுதியில் அவர் மனத்தை மாற்றுவதில் நான் வெற்றி பெற்றேன். நான் செய்தது சரி என்பதை, அவர் மரணம் அடைவதற்கு ஆறு மாதங்களுக்கு முன் கண்டார். அவரது கடுங் கோபத்திற்குக் காரணங்களில் ஒன்று, இதே தீண்டாமைப் பிரச்னையே. நம் விஷயத்தில் தவறு யாருடையது என்பது எனக்குத் தெரியவில்லை.† ஆனால் எனக்கு நீங்கள் ரத்த சகோதரரைப் போன்றவர் என்பது எனக்குத் தெரியும். இது இறுதியான நெருக்கடியாக இருக்கலாம். எனவே இதில் நீங்கள் என் மனத்தை மாற்றப் பெருமுயற்சி செய்வதை நிறுத்திவிடவேண்டாம். எனக்கு உங்களுடைய சாபங்களையோ அல்லது ஆசிகளையோ அனுப்புங்கள்.*

---

† பிரிட்டிஷ் சர்க்கார் வெளியிட்ட வகுப்புத் தீர்ப்பைக் குறித்து ஸ்ரீ சாஸ்திரியார் தெரிவித்த அபிப்பிராயம் 1932 ஆகஸ்டு 25-ஆம் தேதி 'ஸர்வெண்ட் ஆவ் இந்தியா' பத்திரிகையில் பிரசுரமாகியிருந்தது. அதன் விவரமாவது :

''வகுப்புத் தீர்ப்பை எதிர்த்துக் கண்டனத்தைத் தெரிவிப்பது எளிதாகும்; பல கோணங்களிலிருந்தும் பார்க்கும்போது அது (கண்டனம்) நியாயமுமாகும். இருந்தாலும் வகுப்புத் தீர்வு காண்பதில் காங்கிரஸ் தோல்வியடைந்ததாலேயே அருவருப்பான அந்தக் கடமையை சர்க்கார் ஏற்கும்படி நேர்ந்தது. எனவே காங்கிரஸ் வாதிகள் இப்போது சர்க்காரைக் கண்டிக்க முற்படுவது கண்ணியமல்ல. வகுப்புகள் தங்களுக்குள் இன்னும்கூட ஓர் உடன்பாட்டிற்கு வரும் விஷயமாகக் கதவு மூடப்பட்டுவிடவில்லை. அது எப்படியாயினும், குறிப்பிட்ட காலகெடுவிற்குப்பின் தீர்ப்பை மாற்றுவதற்கும் இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே சமாதானத்தை மதிப்பவர்கள், எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு கண்ணியத்துடன் தீர்ப்பை ஒப்புக் கொள்ள வேண்டும். இதன் பின் வரப் போகும் அரசியல் பிரச்னைகளைத் தீர்க்க நமது அறிவையெல்லாம் நாம் உபயோகிக்க வேண்டியிருக்கும். அந்த மகத்தான சோதனையை நாம் எதிர்பார்த்து வருவோமாக.''

* செப்டம்பர் 25-ம் தேதி புனா ஒப்பந்தம் ஏற்பட்டு காந்திஜி உண்ணாவிரதத்தை நிறுத்தியதும், ஸ்ரீ சாஸ்திரியார் காந்திஜிக்கு அனுப்பிய தந்தியின் விவரம் பின்வருமாறு: "லட்சக் கணக்கான குடும்பங்கள் ஆனந்தமடைந்து, உங்களுடைய மகோன்னதமான பாணியில் நீங்கள் புரிந்த மகோன்னதமான

உங்களுடைய ஆரோக்கியத்தைப் பற்றி விசாரித்து ஒரு மாதத்திற்கு முன் ஒரு கடிதம் எழுதினேன். எனக்குப் பதிலே வரவில்லை. அந்த கார்டு உங்களுக்குக் கிடைக்கவில்லையோ என்றே வியப்படைகிறேன்.

ஆழ்ந்த அன்பு,

**மோ. க. காந்தி**

## 43

எரவாடா மத்திய சிறை,
அக்டோபர் *30, 1932*

அன்புள்ள சகோதரருக்கு, நண்பருக்கு,

உங்களுடைய தந்தியும் உங்களுடைய கடிதமும் எனது பொக்கிஷமாகவும், எனக்கு உணவாகவும் இருக்கின்றன. நான் உங்களைத் தவருகப் புரிந்து கொள்ளமாட்டேன். இன்னும் சிறந்த சூழ்நிலையில், லண்டனில் எனது செயல்கள் பற்றிய பூர்ணமான, தெளிவான விவரங்களைக் கொடுப்பதில் கஷ்டம் இராதென எதிர் பார்க்கிறேன். எனினும் அது அற்ப விஷயமேயாகும். கடுமை யான சோதனையிலும் நமது அன்பு நீடித்திருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். நான் உற்சாகத்துடன் இருந்து வருகிறேன்.

ஆழ்ந்த அன்புடன்,

தங்கள்,

**மோ. க. காந்தி**

---

தொண்டைப் பாராட்டி ஆசி கூறுகின்றன. நான் சந்தேகத்தினல் நடுங்கிக் கொண்டிருந்தேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனல் முடிவு நீங்கள் செய்தது சரி என்பதை நிரூபித்திருக்கிறது; நீங்கள் 'தீண்ட முடியாதவர்களுள்', 'நெருங்க முடியாதவர்களுள்' முதல்வர் என்பதை ஸ்தாபித்திருக்கிறது.''

## 44

எரவாடா மத்திய சிறை,
நவம்பர் 8, 1932

அன்புள்ள சகோதரருக்கு, நண்பருக்கு,

சனாதனிகள் என்று தங்களுக்குத் தாங்களே பட்டம் கொடுத்துக்கொண்டிருப்போர் தங்களுடைய தாக்குதலுக்கு குருவாயூரை மையமாகக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள்.* சீர்திருத்தக்காரர்களின் சார்பில் போராட்டத்தை உருவாக்க உங்களுடைய உடல் நிலை எவ்வளவு தூரம் இடம் கொடுக்கும் என்பது எனக்குத் தெரியாது. எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு நீங்கள் இந்த லட்சியம் நிறைவேற, சமஸ்கிருதத்தில் உங்களுக்குள்ள மேதையை உபயோகிக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இதைப் பற்றி நீங்களே சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பது நிச்சயம். எனினும் வரப்போகும் புயலைப்பற்றிப் பல நண்பர்களுக்கும் நான் எழுதிவருகையில், உங்களுக்கும் ஒரு வரி எழுதாமலிருக்க என்னால் முடியவில்லை.

இங்குள்ள ஊழியர்களிடமிருந்து‡ சிறிது வேலை வாங்குவது என்னால் சாத்தியமாகியிருப்பதைக் குறித்து நான் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன்.

நீங்கள் குணமடைந்திருக்கிறீர்களென நம்புகிறேன்.

அன்புடன்,

தங்கள்,
**மோ. க. காந்தி**

---

* ஹரிஜனங்களுக்கு குருவாயூர் கோவில் திறக்கப்பட வேண்டும் என்பதற்காக ஸ்ரீ கேளப்பன் 'இறக்கும் வரை உண்ணாவிரதம்' ஆரம்பித்தார். பின்னர் காந்திஜியின் கோரிக்கைக்கு இணங்க அவர் உண்ணாவிரதத்தை நிறுத்தினார். அதைப் பற்றி 10-11-1932-ல் காந்திஜி தாம் விடுத்த அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிட்டார்: "அடுத்த ஜனவரி மாதம் 1-ம் தேதிக்குள் குருவாயூர் கோவில் தீண்டாதாருக்குத் திறக்கப்படவில்லையாயின், ஸ்ரீ கேளப்பன் மீண்டும் அவரது உண்ணாவிரதத்தைத் தொடர வேண்டிய அவசியம் ஏற்படுமாயின், அவருடன் நானும் உண்ணாவிரதம் இருக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்."

தீண்டாதாரின் ஆலயப் பிரவேசத்தைத் தாம் ஆதரிப்பதாயும், ஆனால் அதன் சம்பந்தமாக காந்திஜி மேற்கொண்ட முறைகளைத் தாம் ஆதரிக்கவில்லை என்றும் ஸ்ரீ சாஸ்திரியார் தமது கடிதங்களில் குறிப்பிட்டிருந்தார்.

‡ புனாவிலுள்ள இந்திய ஊழியர் சங்க அங்கத்தினர்களையே ஊழியர்கள் என்று காந்திஜி குறிப்பிட்டிருக்கிறார்.

## 45

எரவாடா மத்திய சிறை,
நவம்பர் 24, 1932

அன்புள்ள சகோதரருக்கு,

பொக்கிஷம் போன்ற உங்களுடைய கடிதங்கள் எனக்குக் கிடைத்தன. உங்களுடைய ஆட்சேபணை எனக்கு ஆறுதலளிக்கின்றது. உங்களுடைய மௌனம் என்னைத் தைரியமிழக்கும்படி செய்கிறது. காலம், உங்கள் மீது எனக்குள்ள அன்பை அதிகமாக்குகின்றது. நம்மிடையே உள்ள வேற்றுமைகள் மேலெழுந்தவாரியானவை என்றே எனக்குத் தோன்றுகிறது. உள்ளத்தின் ஆழத்தில் நம்மிருவருக்கும் ஒருமைப்பாடு இருப்பதாகவே நான் கருதுகிறேன். அந்த ஒருமைப்பாடுதான் பொக்கிஷம் போன்றது.

கடவுள் என்றோ, அந்தராத்மாவின் குரல் என்றோ அல்லது மனச்சாட்சி என்றோ நான் ஒருபோதும் குறிப்பிடாமல் இருந்திருக்கக்கூடாதா என்பதே என் விருப்பமாகும். எனினும் எவ்வளவு துஷ்பிரயோகம் செய்யப்பட்டாலும், ராம நாமத்தைப் போல் இதையும் பொருத்தமாக இருக்கும் சமயத்தில் திருப்பித் திருப்பிக் கூறவேண்டியிருக்கிறது. அவ்விதம் கூற வேண்டியது மிக மிக அவசியமாகவும் இருக்கிறது. தப்பெண்ணத்திற்கு இடம் ஏற்படும் என்றோ அல்லது மோசடி என்று கருதப்படலாம் என்றோ அஞ்சி, உண்மை என்று எனக்குத் தோன்றுவதை நான் தைரியமாக எடுத்துக் கூறாவிட்டால், சத்தியத்திற்குப் பெரும் இழுக்கு ஏற்படும்.

நீங்கள் எனக்கு அனுப்பிய டைப் செய்யப்பட்ட குறிப்புகளை நான் அக்கறையுடன் வாசித்தேன். அவற்றில் அடங்கியுள்ள வாதம் என் மனத்தைக் கவரவில்லை. அவற்றை எழுதியவர் ஆகமங்களின் அர்த்தங்களை எல்லை மீறி மிகைபடுத்தியுள்ளார்.

நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

அன்புடன்,

தங்கள்,

மோ. க. காந்தி

## 46

மே 2, 1933

எனது அன்புள்ள சகோதரருக்கு,

வரப்போகும் யக்ஞத்திற்காக* நான் உங்களுடைய ஆசிகளைக் கோரத் துணியலாமா? இப்போது இரவு மணி இரண்டு அடிக்கப் போகிறது. மற்ற அலுவல்களைக் கவனிப்பதுடன் இந்த யாசகக் கடிதமும் எழுதுவதற்காக நான் படுக்கையைவிட்டு எழுந்திருக்கிறேன். இந்த உண்ணாவிரதம் உங்களுடைய அங்கீகாரத்தைப் பெறாவிடில், நீங்கள் மிகவும் உண்மையான ஒரு சகோதரர் ஆதலின், என்னைத் திருப்தி செய்வதற்காக மாத்திரமே நீங்கள் எனது வேண்டுகோளுக்கு இணங்கமாட்டீர்கள் என்பதை நான் அறிவேன்.†

அன்புடன்,

தங்கள்,

**மோ. க. காந்தி**

## 47

ஆகஸ்டு 30, 1933

அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய கடிதத்தை ஒரு பொக்கிஷமாக நான் கருதுகிறேன்.

---

* 1933 மே 8-ம் தேதியிலிருந்து 29-ம் தேதி வரையில் காந்திஜி 21 நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார். அந்த உண்ணாவிரதத்தைப் பற்றி காந்திஜி கூறியதாவது: "குறிப்பாக எனக்கு எதிராகவே இந்த உண்ணாவிரதத்தை நான் மேற்கொண்டிருக்கிறேன். இது, என்னையும் எனது சகாக்களையும் தூய்மைப்படுத்துவதற்காக ஹிருதய பூர்வமான ஒரு பிரார்த்தனையே யாகும். யாரும் எத்தகைய குற்றமும் குறையும் கண்டுபிடிக்க முடியாத, தூய்மை வாய்ந்த இன்னும் அதிகமான ஊழியர்களை நான் விரும்புகிறேன்."

† காந்திஜியின் மேற்கண்ட கடிதத்திற்கு ஸ்ரீ சாஸ்திரியார் அளித்த பதிலின் சாரம் பின்வருமாறு: "உங்களுடைய உண்ணாவிரதத்தை நான் ஆதரிப்பதாக ஒரு விநாடி கூடப் பாசாங்கு செய்யமாட்டேன். உண்ணாவிரதத்தை மேற்கொள்வதிலிருந்து உங்களைத் தடுக்க முயற்சிப்பது பலனற்ற காரியமாகும், என்னைப் பொறுத்த வரையில் அது தர்ம சங்கடமுமாகும். உங்களுடைய நண்பர்களும் சகாக்களும் இப்போது செய்யக்கூடியது என்னவெனில், இந்தக் கடும் பரீட்சையிலிருந்து நீங்கள் யாதொரு தீங்குமின்றியும், அதற்கு மாறாக, முடிவே இல்லாததென்று தோன்றும் போராட்டத்தைத் தவத்தின் பலத்தினால் நடத்துவதற்குற்ற புதிய சக்தியுடனும் வெளிவர வேண்டுமென்று பிரார்த்திப்பதேயாகும்.

நீங்கள் கூறியுள்ள எதையும் நான் ஆட்சேபிக்கவில்லை. அதற்கு மாருக, நீங்கள் கூறியிருப்பதையெல்லாம் நான் பாராட்டுகிறேன். எனினும் சர்க்கார் உத்தரவுகளைப் பற்றிய உங்களுடைய விளக்கத்தை நான் சிறிதும் ஒப்புக் கொள்ளவில்லை என்பதை நான் கூறத்தான் வேண்டும். கடிதப் போக்குவரத்தையெல்லாம் நீங்கள் பார்த்திருந்தால், ஒருவேளை உங்களுடைய முடிவை மாற்றிக் கொள்வீர்கள்.

நீங்கள் அவற்றையெல்லாம் வாசிக்க விரும்பினுல், நான் உங்களுக்கு எல்லாக் கடிதங்களையும் அனுப்புகிறேன். சர்க்கார் மீது குற்றம் கூறவேண்டும் என்பதுதான் எனது விருப்பம் என்றும், ஹரிஜனங்களின் முன்னேற்றத்தைக் காட்டிலும் அது தான் (சர்க்கார் மீது குற்றம் காண்பதுதான்) என் மனத்திற்குப் பிடித்த விஷயம் என்றும் நீங்கள் கருதமாட்டீர்கள் என்றே நம்புகிறேன். பகுத்தறியக் கூடிய ஆற்றல் எனக்கு உண்டு என்றும், எனவே சர்க்கார் எப்போது நியாயமாக நடந்து கொள்ளுகிருர்கள் என்பதை என்னுல் அறிந்து கொள்ள முடியும் என்றுமே நான் கருதுகிறேன்.

உங்களுடைய கடிதத்திலுள்ள முக்கியமான விஷயத்துக்கு* இப்போது வருகிறேன். தற்போதைய நிலையில், அரசியல் திட்டத்தை உருவாக்க நான் முற்றிலும் தகுதியற்றவன் என்பதை உங்களுடன் நானும் ஒப்புக் கொள்கிறேன். அதற்கு இன்னும் காலம் வரவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். அதற்கான உரிமையையும் அதிகாரத்தையும் நாடு வளர்த்துக் கொள்ளும் போதுதான் அதற்குரிய காலம் வரும். எனவே காங்கிரசிலிருந்து மகிழ்ச்சியுடன் விலகவும், காங்கிரசுக்கு வெளியே சட்ட மறுப்பு இயக்கத்தை வளர்க்கவும், ஹரிஜன் தொண்டில் ஈடுபடவும் நான் ஆர்வமுடையவனுக இருக்கிறேன். ஆனுல் சங்கடம் என்னவெனில், அவ்விதம் எப்படிச் செய்வது என்பதேயாகும். காங்கிரசிலிருந்து விலகிக் கொண்டு நான் அவ்விதம் செய்ய முடியுமா? இந்தக் கேள்விதான் என்னைச் சங்கடத்திற்கு உள்ளாக்குகிறது. எனவே நான் ஒளியை நாடி வருகிறேன். எனக்கு மீண்டும் போதிய பலம் ஏற்பட்டவுடன் நான் மீண்டும் காங்கிரஸ்வாதிகளின் மன நிலையை அறிய முற்படுகிறேன். நான் காங்கிரசிலிருந்து விலகக் கூடுமாயின், மகிழ்ச்சியுடன் அவ்விதமே செய்வேன். எனினும் காங்கிரசின் மன நிலை மாறவில்லை என்பதே எனது அபிப்பிராயமாகும். காங்கிரஸ் வாதிகளில் பெரும்பாலோர்

---

* ஸ்ரீ சாஸ்திரியார் காந்திஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றில், காந்திஜியின் மனச் சாட்சிக்கு இணங்க அவர் சட்ட மறுப்பில் ஈடுபடவும், சர்க்காரை தர்மசங்கடமான நிலைமைக்கு உட்படுத்தவும், லட்சியத்தை நாடவும் முயற்சிக்கலாம் என்றும், ஆனுல் ஒரு புதிய வேலைத் திட்டத்தை உருவாக்க காங்கிரசுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டிருந்தார். இதையே காந்திஜி மேலே குறிப்பிட்டு அந்த யோசனைக்குப் பதிலும் எழுதியுள்ளார்.

களைத்துவிட்டார்கள் என்பது உண்மையே என்றாலும், வெகு சிலர்தான் வெள்ளை அறிக்கையை ஒப்புக் கொள்வார்கள் அல்லது அதில் சில அபிவிருத்திகளைச் செய்ய வேண்டுமென்று கோருவார்கள். அந்த அறிக்கையை அடியோடு மாற்ற வேண்டும் என்றே பெரும்பாலோரும் விரும்புகின்றனர். எனினும் முடிவான எந்தத் தீர்மானத்திற்கும் வரும் விஷயமாக நான் அவசரப்படவில்லை. நான் உங்களுக்கு இந்த உறுதி கூற முடியும். அதாவது தேசத்தின் சிறந்த நலன்களுக்கு உகந்த எத்தகைய முறைகளையும் மேற்கொள்வதிலிருந்து என்னை எதுவும் தடுக்க முடியாது.

நீங்கள் என்னைக் கைவிடாமல் எனக்கு வழிகாட்டிவருவீர்கள். இங்கே வரவேண்டுமென்று உங்களுக்குத் தோன்றினால், நீங்கள் வரத் தயங்கமாட்டீர்கள். உங்களுடைய நேரடியான தொடர்பும், அடிக்கடி ஒருவருக்கொருவர் எண்ணங்களைப் பரிமாறிக் கொள்வதும் எனக்கு அவசியமென்று தோன்றினால், இங்கே வருமாறு உங்களைக் கேட்க நான் தயங்கப் போவதில்லை.

அன்பு,

**மோ. க. காந்தி**

# 48

பர்ணகுடி,
*செப்டம்பர் 9, 1933*

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய கடிதம் எனக்குத் திருப்தியளிக்கின்றது. தொடர்ந்து நீங்கள் என் மனத்தை மாற்ற முயற்சித்து வர வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். நான் அடிக்கடி பிடிவாதமாக இருப்பதுபோல் தோன்றினாலும், நான் விட்டுக் கொடுக்கும், பிறர் கூறுவதற்கு இணங்கும் சுபாவம் உடையவனென்று கோகலே நம்பி வந்ததுபோல் நீங்களும் நம்பவேண்டும் என்பதும் எனது விருப்பம். அவர் எனக்குக் கொடுத்த நற்சாட்சிப் பத்திரத்தை நான் ஒரு பொக்கிஷம் போல் கருதி, அதன்படி நடக்க முயற்சித்து வந்திருக்கிறேன். காங்கிரசுக்கு நீங்கள் விரும்பும் சுதந்திரத்தை அளிப்பது என் கையில் இருக்குமாயின், இன்றே நான் அத்தகைய சுதந்திரத்தை அளித்துவிடுவேன் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். இருந்தாலும் அது அவ்வளவு எளிதான ஒரு காரியமல்ல. பாட்னாவில் நடந்த காரியக் கமிட்டியில் நான் எல்லா அதிகாரங்களையும் சுயராஜ்யக் கட்சிக்கு விட்டுக் கொடுத்தேன். நான் எப்போதுமே அவ்விதம் விட்டுக்கொடுக்கத் தயாராக இருந்து வந்திருப்பதாயும், எனினும் அக் கட்சி அப்போதுதான் அவற்றை ஏற்றுக் கொள்ள முன் வந்ததாயும் மோதிலால்ஜி

பெருந்தன்மையுடன் ஒப்புக் கொண்டார். உண்மை என்ன வெனில், நான் அதிகாரத்தை விரும்பவில்லை. அதைத் தொண்டு புரிவதற்குற்ற ஒரு வாய்ப்பாகவே நான் கருதுகிறேன். நான் காங்கிரசிலிருந்து வெளியேறுவது அதன் நலனுக்கு உகந்த தென்று நான் கருதும் அந்த விநாடியிலேயே அதிலிருந்து வெளி யேறிவிடத் தவற மாட்டேன். இருந்தாலும் உங்களுடைய ஆலோ சனையை மேற்கொள்ள நான் பெரு முயற்சி செய்வேன் என நீங்கள் நம்பலாம். ஜவாஹர்லால் சனிக்கிழமை இங்கு வருவா ரென எதிர்பார்க்கிறேன். எல்லா விஷயங்களும் பெரிதும் அவரையே பொறுத்திருக்கின்றன.

அன்பு,

மோ. க. காந்தி

## 49

வார்தா,
நவம்பர் *17, 1934*

அன்புள்ள சகோதரருக்கு,

நமது உள்ளங்கள் ஒன்ருக இருப்பினும், சிந்தனையிலும் செயலிலும் நாம் வெவ்வேறு உலகங்களில் வசித்துவருவதுபோல் தோன்றுகிறது. சமீபகாலமாக இந்த எண்ணம் எனக்கு வேதனை யைக் கொடுத்துவருகிறது. கிராமக் கைத்தொழில்கள் சம்பந்த மான தொண்டில் தாங்கள் பூரணமாக ஒத்துழைக்கத் தயாராக இருப்பதாக இந்திய ஊழியர் சங்கத்தின் நாகபுரி கிளை ஸ்தாபனத் திலிருந்து எனக்கு இப்போது அறிவித்திருக்கிருர்கள். இது நடைமுறையில் எவ்வளவு தூரம் அமுலுக்கு வரும் என்பது எனக்குத் தெரியாது. எனினும் மனப்பூர்வமாகவே அவ்விதம் அறிவித்திருக்கிருர்கள். நாம் ஒப்புக் கொண்டால், அதன் சம் பந்தமான தொண்டை நிறைவேற்றும் காலம் வரும்போது அவர் களுடைய ஒத்துழைப்பை நான் முற்றிலும் பயன்படுத்திக் கொள்வேன். அவர்களுடைய ஒத்துழைப்புக்கு உங்களுடைய முழுச் சம்மதமும் கிடைக்குமா என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. மீண்டும் கிராமங்களில் செக்குத் தொழிலையும், கையால் நெல் குத்துவதையும், மற்றுமுள்ள தொழில்களையும் மேற் கொள்ள வேண்டும் என்பது உங்கள் மனத்திற்கு எவ்வளவு தூரம் உடன்பாடானவை என்பதும் எனக்குத் தெரியாது.

என்னுடைய சிந்தனைகளை உங்களுடன் பகிர்ந்து கொள்வதற் காகவும், என்னுடைய பல்வேறு நடவடிக்கைகளையுமொட்டி உங் களுடைய ஒத்துழைப்பைப் பெற எவ்வளவு ஆர்வமுள்ளவனுக இருக்கிறேன் என்பதை உங்களிடம் கூறுவதற்காகவுமே இதை நான் எழுதுகிறேன். எனினும் உங்களுடைய பகுத்தறிவுக்கு முற்

றிலும் உடன்பாடாக இராத எதையும் நான் உங்களிடமிருந்து விரும்பவில்லை. நீங்கள் சத்தியத்தைக் கடைப்பிடிப்பவர்களாதலால் உங்களுடைய பகுத்தறிவுக்கு முரணான எதையும் நீங்கள் செய்ய மாட்டீர்கள். எனது நடவடிக்கைகளையொட்டி உங்களுடைய வெறும் ஒத்துழைப்பைப் பெறுவதைக் காட்டிலும், உங்களுடைய சத்தியம்தான் எனக்கு மிகவும் அதிக மதிப்பு வாய்ந்ததாகும்.

அன்புடன்,

தங்கள்,

**மோ. க. காந்தி**

## 50

நந்தி மலை,
*மே 13, 1936*

அன்புள்ள சகோதரருக்கு,

ஆம், அன்சாரியின் மரணத்தைக் குறித்து எனக்கு அனுதாபம் தேவையாக இருந்தது. எனவே உங்களுடைய அனுதாபக் கடிதத்தை நான் மிகவும் வரவேற்கிறேன். சிலருடைய மரணம் எனக்கு ஆறுதலுக்கே இடமின்றி துக்கத்தைக் கொடுக்கிறது. அன்சாரியின் மரணத்தினால் ஏற்பட்ட துக்கமும் அத்தகையதுதான். எங்களுடைய உள்ளங்கள் ஒன்றாக இருந்தது மாத்திரமல்ல, பல அம்சங்களிலும் எங்களிடையே ஒருமைப்பாடும் இருந்து வந்தது. நாங்கள் கூட்டாக சில திட்டங்களையும் வகுத்திருந்தோம். அவையெல்லாம் ஒரே அடியில் தூள்தூளாகிவிட்டன. டில்லியில் பழைய நாட்களை நீங்கள் நினைவு படுத்தியிருப்பது, துக்கத்தினால் ஏற்பட்டுள்ள வேதனையை அதிகப்படுத்தியிருக்கிறது.

நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன். சர்தாரும் நானும் இந்த இடத்தைவிட்டுப் புறப்படுவதற்கு முன் நாம் சந்திக்க வேண்டியது அவசியமாகும்.

## 51

சேவாகிராமம்,
*ஜூலை 9, 1940*

அன்புள்ள சகோதரருக்கு,

இப்போதுதான் உங்களுடைய கடிதத்தை வாசித்தேன். உங்களுடைய பற்றற்ற நிலை ஆச்சரியமாக இருக்கிறது.* சாலை

* இந்திய ஊழியர் சங்கத்தில் ஒரு நெருக்கடி ஏற்பட்டபோது, சாஸ்திரியார் வீண் கவலைக்கும் மனக் கலக்கத்திற்கும் இடம் கொடுக்காமல் பற்றற்ற முறையில் நடந்து கொண்டதையே காந்திஜி 51-வது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

போடுதல், ஹரிஜனங்கள், சங்க அலுவல்கள், கைவிடப்பட்ட லட்சியங்களை நிறைவேற்றுதல் முதலிய பலமுறைகளிலும் தாகர் பாபா நிபுணராவார். ஆனல் துளசிதாஸ் ராமாயணத்திற்கு விளக்கம் கொடுப்பதிலும் அவர் நிபுணர் என்பது எனக்கு ஒரு போதும் தெரியாது. சீதையின் உதாரணத்தைப் பின்பற்றும் படியே நமது பெண்களுக்கு நான் கூறவேண்டும். எனினும் நான் அதிகமாக எழுதி உங்களுக்கு அலுப்புத் தட்டும்படி செய்யக்கூடாது. நேரான, குறுகிய பாதையிலிருந்து நான் வழுவாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

அன்பு,

மோ. க. காந்தி

## 52

சேவாகிராமம்,
ஜூலை *20, 1940*

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய நீண்ட கடிதம் கிடைத்தது. இருந்தாலும் என்னைப் பொறுத்தமட்டில் அதை நான் ஒரு நீண்ட கடிதமாகக் கருதவில்லை. ராஜாஜியும் நானும் பிறருடைய தீர்ப்புக்கு எளிதில் இணங்குவதில்லை என்று நீங்கள் கூறியிருப்பது, எனக்கு நீதி வழங்குவதாகாது. உங்கள் விஷயத்தில் இது ஒருபோதும் உண்மையாக இருக்க முடியாது. எனினும் நம் மிடையே சில வேற்றுமைகள் இருக்கத்தான் செய்கின்றன. நமக்குள் பரஸ்பரம் உள்ள அன்பினலும் மதிப்பினலும் அத் தகைய வேற்றுமைகளைக் களைய முடிவதில்லை. உங்களுடைய கடிதத்தைப் பற்றி நான் நிறையக் கூறவேண்டியிருக்கிறது. இருந்தாலும் நான் விவாதத்தில் இறங்குவதை நீங்கள் விரும்பு வதில்லை என்பதை நான் அறிவேன். என் வரையில் நீங்கள் கூறும் எந்த வார்த்தையும் பலன் அளிக்காமல் இருப்பதில்லை என்பதைத் தயவு செய்து நம்புங்கள். நான் கடவுளின் கைகளில் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்கிறேன். மகாதேவ தேசாய் உங்களுக்குக் கடிதம் எழுதுவார்.*

அன்பு, தங்கள்,

மோ. க. காந்தி

* காங்கிரஸ் அரசியல் சம்பந்தமாக காந்திஜிக்கு ஸ்ரீ சாஸ்திரியார் எழுதிய நீண்ட கடிதத்திற்கு, காந்திஜியின் சார்பில் ஸ்ரீ மகாதேவ தேசாய் விவரமாகப் பதில் அளித்து ஒரு கடிதம் எழுதினர்.

## 53

ஜுஹு,
மே 20, 1944

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தைப் பற்றி† இப்போது தான் பாபா எனக்கு அறிவித்தார். அன்பார்ந்த ஒருவரின் மரணத்தின் மூலம் நான் நஷ்டமடைந்தவனாக ஏன் இருக்க வேண்டும்? தத்துவஞானமுள்ள உங்களுக்கு எனது அனுதாபம் தேவையாயின், அது நிறைய இருக்கிறது.

வனாந்திரத்தில் இருப்பதுபோன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது. 'விடுதலை' என்று கூறப்படும் இந்த நிலை‡ எனக்கு வேதனையாக இருக்கிறது. எனினும் கடவுள்தான் நமக்குத் துணை. எனவே நான் மனம் தளராமல் இருக்கிறேன்.

அன்புடன்,

தங்கள்,
சிறிய சகோதரன்

## 54

ஜூன் 10, 1944

எனது அன்புள்ள சகோதரருக்கு,

கிடைப்பதற்கரிய ஒரு தூதர் மூலம் நீங்கள் அனுப்பிய அன்புக் கடிதம் எனக்குக் கிடைத்தது. அதில் உள்ள முக்கிய அம்சங்களை நான் ஒப்புக்கொள்கிறேன். எனினும் 15-ஆம் தேதி வரையிலாவது நீங்கள் புனாவில் இருப்பீர்களென அறிகிறேன். அன்றுதான் நான் புனாவுக்கு வருகிறேன். நீங்கள் உங்களுடைய புறப்பாட்டை ஒரு நாளைக்கு ஒத்தி வைக்க முடியாதா? அப்போது நாம் நேரில் சந்தித்துப் பேச இயலும்.

---

† ஸ்ரீ சாஸ்திரியாரின் சகோதரரான ஸ்ரீ வி. எஸ். ராமசாமி சாஸ்திரியாரின் மரணத்தைப் பற்றியே காந்திஜி, ஸ்ரீ சாஸ்திரியாருக்கு ஏற்பட்ட நஷ்டம் என்று கூறியிருக்கிறார்.

‡ தாம் சிறைப்பட்டிருந்த ஆகாகான் அரண்மனையிலிருந்து 8-5-1944-ல் தாம் விடுதலையடைந்ததையே காந்திஜி அவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார்.

இத்துடன் உங்களுக்கு ஒரு பார்சலையும் அனுப்பியுள்ளேன். அதன் விவரங்களை அதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

அன்பு,
தங்கள் சிறிய சகோதரன்

## 55

புனா,
ஜுன் *19, 1944*

எனது அன்புள்ள சகோதரருக்கு,

உங்களுடைய புனா விலாசத்துக்கு நான் எழுதிய குறிப்பு உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன். உங்களுடைய *17*-ஆம் தேதிக் கடிதம் அதற்குப் பதிலாக இருக்குமென்று தோன்றவில்லை.

உங்களுடைய உடல் நிலை இடம் கொடுக்குமாயின், நீங்கள் உங்களுக்கு இயன்ற எந்தச் சமயத்திலும் வருவதை நான் விரும்புகிறேன். நமது சந்திப்பைப் பற்றிப் பலவிதமான செய்திகளும் கற்பனைகளும் வெளியாகும். ஆயினும் அவை தவிர்க்க முடியாதவை.

சென்ற காலத்தைப் பற்றி நான் நினைக்க வேண்டிய தேவையில்லை. ஆனால் நிகழ்காலத்தைப் பற்றி என்ன நினைப்பது? நான் காணும் நிகழ்காலம் எதிர்காலத்தை உருவாக்கக்கூடியதல்லவா? உடலின் எதிர்கால நலனை நான் உறுதிப் படுத்த வேண்டுமாயின், தற்போதைய இரு நோய்களையும் நான் தீர்த்துக் கொள்ள வேண்டாமா? இதை நீங்கள் தீர்க்காலோசனை செய்து, நாம் சந்திக்கும்போது அக் கேள்விக்குப் பதில் கூறுங்கள்.

அந்த இரு விரோதிகளாலும் நான் துன்பத்திற்குள்ளாகி வந்தும் கூட, என் உடல்நிலை முன்னேற்றம் அடைந்துவருகிறது.

அன்பு,

தங்கள்,
சிறிய சகோதரன்

## 56

சோட்பூர்,
ஜனவரி *4, 1946*

அன்புள்ள சகோதரருக்கு,

நீங்கள் மீண்டும் நோயுற்றிருப்பதாக ஜகதீசன் கூறுகிறார். அதன் விளைவாக நீங்கள் உங்களுக்கு இப்புவியில் இன்னும்

இரண்டு மாத கெடுதான் கொடுத்திருக்கிறீர்களாம். கோடிக் கணக்கான மக்களைப் போல் நீங்களும் கடவுளின் கையில் இருப்பதாக ஏன் கூறமாட்டேன் என்கிறீர்கள். உங்களுடைய நண்பர்களை விட்டுச் செல்லப்போவதாக நீங்கள் ஏன் நினைக்காமல் இருக்கக்கூடாது? நான் என் மனத்தில் உள்ளதைத் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறேனா என்பது எனக்குத் தெரியவில்லை.

தகுதி வாய்ந்த ஜகதீசனால் திரட்டப்பட்டிருக்கும் மிகவும் சுவையுள்ள தொகுப்பை* நான் மெதுவாகவும் ஆனால் உறுதியுடனும் வாசித்து வருகிறேன்.

அன்பு,

தங்கள்,

சிறிய சகோதரன்

* கோகலேயைப் பற்றி சாஸ்திரியாரின் கட்டுரைகளையும் பிரசங்கங்களையும், தொகுத்து 'எனது குரு கோகலே' என்ற தலைப்பில் ஒரு நூல் வெளியிடப்பட்டது. அந்த நூலுக்கு காந்திஜி ஒரு முன்னுரை எழுதியிருந்தார். மேலே காந்திஜி அந்தத் தொகுப்பைப் பற்றியே குறிப்பிட்டிருக்கிறார்.



கவி ரவீந்திரநாத் தாகூரும் காந்திஜியும்

பகுதி பதினொன்று

# கவி ரவீந்திரநாத் தாகூர்

காந்திஜி கவியரசர் ரவீந்திரநாத் தாகூரை (1861-1941) குருதேவர் என்றே அழைப்பது வழக்கம். ரவீந்திரநாத் தாகூர் கவியாக மாத்திர மல்ல, முனிவராகவும், தேசபக்தராகவும், கலைஞ ராகவும், தத்துவ ஞானியாகவும், கல்வித் துறை யில் வழிகாட்டியாகவும் திகழ்ந்தார். அவர் ஸ்தா பித்த சாந்திநிகேதனம் இன்று உலகப் புகழ் பெற்ற பல்கலைக் கழகமாகவும், தாகூருக்கு மிக்க சிறந்ததொரு நினைவுச் சின்னமாகவும் விளங்கு கின்றது. கவியரசர் சிறந்த சீர்திருத்தக்காரர் களின் பரம்பரையைச்சேர்ந்தவர். அவரது பாட்ட னரான துவாரக நாத் தாகூர், உடன்கட்டை ஏறு தல், பால்ய விவாகம், சாதி முறை ஆகிய வற்றை ஒழிக்கும் முயற்சியில் ராஜா ராம் மோகன்ராய்க்குப் பக்கபலமாக இருந்துவந்தார். ரவீந்திரநாத் தாகூர் 1913-ல் நோபல் பரிசு பெற்று நவீன இலக்கிய உலகில் இந்தியாவுக்குப் பெருமை ஏற்படும்படி செய்தார். காந்திஜிக்கு மகாத்மா என்று முதன் முதலாகப் பட்டம் சூட்டி யவர் ரவீந்திரநாத் தாகூர்தான் என்பதும் குறிப் பிடத்தக்கது. 1919-ல் நிகழ்ந்த ஜாலியன்வாலா பாக் படுகொலையைக் கண்டித்து 'சர்' பட்டத்தைத் துறந்ததன்மூலம் கவியரசரின் தேசபக்தியை இந் திய மக்கள் உணர்ந்தனர். ரவீந்திரநாத் தாகூ ருக்கு காந்திஜி எழுதிய கடிதங்கள் இந்தப் பகுதி யில் கொடுக்கப்பட்டுள்ளன :

# 1

மோதிஹாரி,
ஜனவரி 21, 1918

அன்புள்ள குருதேவ்,

இந்தூரில் நடைபெறப்போகும் ஹிந்தி சம்மேளனத்தில் நான் தலைமை உரை நிகழ்த்துவதற்காக, பின்கண்ட கேள்விகளைக் குறித்து சிந்தனையாளர்களான தலைவர்களின் அபிப்பிராயங்களைச் சேகரிக்க நான் முயற்சித்துவருகிறேன் :

1. மாகாணங்களிடையே தொடர்பு வைத்துக்கொள்வதற்கும், மற்ற எல்லாத் தேசீய நடவடிக்கைகளுக்கும் ஹிந்தி ஒன்றுதான் சாத்தியமான தேசிய மொழியாக இருக்க வேண்டும் அல்லவா ?

2. வரப்போகும் காங்கிரசில் முக்கியமாக ஹிந்தி மொழியே உபயோகிக்கப்பட வேண்டும் அல்லவா ?

3. நம்முடைய கல்விசாலைகளிலும் கல்லூரிகளிலும் தாய் மொழிகளின் மூலமே போதிக்க வேண்டியது விரும்பத்தக்கதாகவும், சாத்தியமானதாகவும் இருக்கும் அல்லவா? ஆரம்பப் பள்ளிப் படிப்புக்கு மேல் நமது கல்விசாலைகளில் ஹிந்தியை இரண்டாவது மொழி என்ற முறையில் கட்டாய பாடமாகச் செய்ய வேண்டாமா ?

நாம் பாமர மக்களின் உள்ளத்தைத் தொட வேண்டுமாயின், தேசீய ஊழியர்கள் இந்தியா முழுவதும் பாமர மக்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டுமாயின், மேற்கண்ட பிரச்னைகள் உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டும் என்றும், அவற்றை மிகமிக அவசரமான பிரச்னைகளாகக் கருத வேண்டும் என்றும் நான் எண்ணுகிறேன். எவ்வளவு விரைவில் உங்களுக்கு சௌகரியப்படுமோ அவ்வளவு விரைவில் மேற்கண்ட கேள்விகளுக்கு அன்பு கூர்ந்து உங்களுடைய பதிலை அறிவிப்பீர்களா ?*

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

---

* காந்திஜி எழுதிய மேற்கண்ட கடிதத்துக்கு ரவீந்திரநாத் தாகூர் அளித்த பதிலின் சாரமாவது: "இந்தியாவில் மாகாணங்களிடையே தொடர்பு வைத்துக் கொள்வதற்கு ஹிந்தி ஒன்றுதான் சாத்தியமான தேசிய மொழி என்பதில் ஐயமில்லை. ஆனால் வெகு காலம் வரையில் நாம் ஹிந்தி மொழியை வற்புறுத்தி அமுலுக்குக் கொண்டுவர முடியாதென நான் நினைக்கிறேன்."

## 2

டில்லி,
ஏப்ரல் 30, 1918

அன்புள்ள குருதேவ்,

இன்னும் சிறிது காலத்திற்கு ஸ்ரீ ஆண்ட்ரூஸை என்னிடமே வைத்துக் கொள்ள நான் மிகவும் விரும்புகிறேன். என்றாலும், அவர் இன்றிரவு கல்கத்தாவுக்குப் புறப்பட்டு விட வேண்டும் என்பதே எனது உறுதியான எண்ணமாகும்.* உங்களுடைய உடல் நிலை திருப்திகரமாக இல்லாத இச்சமயத்தில் ஆறுதல் அளிக்க அவர் உங்கள் பக்கத்தில் இருக்க வேண்டுமென நீங்கள் விரும்புவீர்கள் என்பதை நான் அறிவேன். உங்களுக்கு அவர் தேவையாக இருக்கும்போது அவர் உங்கள் பக்கத்தில் இருக்க வேண்டியது அவசியமாகும். இந்தியாவில் மகத்தான மாறுதல் ஏற்படும் தறுவாயில் நாம் இருந்துவருகிறோம். எனவே இந்தியா புனர் ஜன்மம் பெறும் இச்சமயத்தில் தூய்மையான எல்லா சக்திகளும் இந்தியாவிலேயே இருந்து வரவேண்டுமென நான் விரும்புகிறேன். எனவே இந்தியாவிலுள்ள எங்கேயாவது ஓரிடத்தில் நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுவது சாத்தியமாயின், நீங்களும் ஸ்ரீ ஆண்ட்ரூஸும் இந்த நாட்டிலேயே இருக்கவேண்டும் என்றும், அப்போதைக்கப்போது ஸ்ரீ ஆண்ட்ரூஸை எனக்கு உதவியாக அன்பு கூர்ந்து அனுப்பும்படியும் நான் உங்களைக் கேட்டுக் கொள்வேன். சிற்சில சமயங்களில் அவர் வழிகாட்டியாக இருந்து கூறும் யோசனைகள் மிகவும் மதிப்புவாய்ந்தவையாக இருக்கின்றன.

மேதிரானில் உள்ள தமது பங்களாவில் உங்களையும் உங்கள் கோஷ்டியினரையும் வரவேற்று, உங்களைத் தமது கௌரவ விருந்தினர்களாக வைத்துக் கொள்வதாக உங்களிடம் கூறுமாறு ஸ்ரீ அம்பாலால் என்னைக் கேட்டிருக்கிறார். அங்கு ஜூன் மாதம் மத்தியில் பருவ காலம் முடிவடைகிறது. நீங்கள் விரும்பினால், உதகமண்டலத்தில் உங்களுக்கு ஜாகை வசதிகளைச் செய்து கொடுக்கவும் ஸ்ரீ அம்பாலால் தயாராக இருக்கிறார். தற்காலிகமாக நீங்கள் மேதிரானுக்குச் சென்று அங்கேயே தங்கியிருப்பதே சிறந்ததென்பது நான் கூறும் யோசனையாகும். உஷ்ண காலத்தின் மற்ற நாட்களை உதகமண்டலத்தில் கழிக்கலாமா என்பதை நீங்கள் பிறகு தீர்மானித்துக் கொள்ளலாம்.

உங்களை அல்லல்படுத்திவரும் நரம்புத் தளர்ச்சியிலிருந்து நீங்கள் விரைவில் குணமடைவீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

---

* ஸ்ரீ ஆண்ட்ரூஸும் தாகூரும் வெளிநாட்டிற்குச் செல்லப் போவதாக காந்திஜி கேள்விப்பட்டதும், அவர் (காந்திஜி) ஆண்ட்ரூஸிடமே மேற்கண்ட கடிதத்தை தாகூருக்கு அனுப்பி வைத்தார்.

## 3

ஆசிரமம், சபர்மதி,
நவம்பர் 5, 1918

அன்புள்ள குருதேவ்,

சார்லி நேற்று ஆசிரமத்திலிருந்து புறப்பட்டுச் சென்றார். அவர் இராதது எங்களுக்குப் பெரும் குறையாக இருக்கிறது. உற்சாகம் ததும்பும் அவரது இனிமையான முகத்தைப் பார்க்க முடியாதது வருத்தமாக இருக்கிறது. எனவே ஆசிரமத்தில் அவர் சில நாட்கள் தங்கியிருக்க நீங்கள் அனுமதித்ததற்காக நான் உங்களுக்கு ஆழ்ந்த நன்றியுள்ளவனாக இருக்கிறேன். இவ்விதம் நான் கூறுவதன் அர்த்தத்தை நீங்கள் இப்போது புரிந்து கொள்வீர்கள்.

சாந்திநிகேதனில் கல்விசாலை சம்பந்தமான கடினமான அலுவல்களுக்கிடையே நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 4

ஆசிரமம், சபர்மதி,
அக்டோபர் 18, 1919

அன்புள்ள குருதேவ்,

டிசம்பர் 13, 14, 15 தேதிகளில் அகமதாபாத்தில் ஓர் இலக்கிய மகாநாடு நடைபெறுவதாக இருக்கிறது.* நீங்கள் வந்து அம்மகா நாட்டைச் சிறப்பிக்கவேண்டும் என்பதில் மகா நாட்டின் செயலாளர்கள் மிகவும் ஆர்வம் உடையவர்களாக இருக்கிறார்கள். நீங்கள் அதற்கு வர இயலும் என்றும், நீங்கள் குஜராத்திற்கு ஏமாற்றம் ஏற்படும்படி செய்யமாட்டீர்கள் என்றும் நம்புகிறேன்.

தென்னாப்பிரிக்காவுக்குச் செல்ல நீங்கள் ஆண்ட்ரூஸை அனுமதித்தது உங்களுடைய நல்ல எண்ணத்தையே காட்டுகிறது. தமது விருப்பப்படி தாம் சுதந்திரமாகத் தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லலாம் என்று கூறி அவரிடமிருந்து இப்போதுதான் ஒரு தந்தி வந்தது. இதனால் என் மனக் கவலை மிகவும் குறைந்திருக்

* ரவீந்திரநாத் தாகூரின் வசதிக்காக, அகமதாபாத் இலக்கிய மகாநாடு பின்னர் ஒத்திவைக்கப்பட்டது.

கிறது. அவர் அங்கு செல்லுவதால் மகத்தான நன்மை ஏற்படும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயம்.

நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறீர்களென நம்பு கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

## 5

அக்டோபர் 28, 1919

அன்புள்ள குருதேவ்,

நான் இப்போதுதான் பஞ்சாப் வந்து சேர்ந்தேன். துர்ப்பாக் கியமுள்ள இந்தப் பிரதேசத்திற்குக் கடைசியாக வர இயன்ற தைக் குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். இன்று நான் லாகூரில் இருக்கிறேன். இன்றிரவு நானும் ஆண்ட்ரூஸும் கமிட்டி அலுவல்கள் சம்பந்தமாக டில்லிக்குச் செல்லுகிறோம்.

இம்மாகாண மக்களுக்கு ஆண்ட்ரூஸ் எவ்வளவு மகத்தான தொண்டுகள் புரிந்திருக்கிறார் என்பதை உங்களுக்குக் கூறவே இதை நான் எழுதுகிறேன். அவர் செய்துள்ள வேலைகளை வேறு எவரும் செய்திருக்க முடியாது. வலது கை செய்யும் நற்காரி யத்தை இடது கை அறியக் கூடாது என்பதே அவரது கொள்கை. பஞ்சாபுக்குச் செல்ல அவரை நீங்கள் அனுமதித்தது, நீங்கள் செய்த பெரிய நன்மையாகும். பஞ்சாப் அலுவல்களை அவர் முடித்த பிறகு அவர் தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லவேண்டும் என்று நான் அவரை வேண்டிக்கொண்டு வருகிறேன். சாந்திநிகே தனிலிருந்து வெளியே எங்கும் போகக்கூடாது என்பதே அவரது உத்தேசமாகும். எனினும் தென்னாப்பிரிக்கா அலுவல்களில் அவ ருக்கு விசேஷ அனுபவம் இருக்கிறது என்றும், அழைப்பு வரும் போது அவர் அதை அலட்சியம் செய்துவிடக் கூடாது என்றும் நான் அவருக்குக் கூறிவருகிறேன். அவர் விருப்பப்படி செய்ய அவருக்கு நீங்கள் சுதந்திரம் அளித்திருப்பதாக அவர் என்னிடம் கூறியுள்ளார். அவர் தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லுவார் என்றே நான் நம்பிக்கொண்டிருக்கிறேன். அவர் அங்கே நீண்ட காலம் இருக்கும்படி நேராது; அவர் அங்கு இரண்டு மாதங்கள் வரையில் தங்கினால் போதுமானது.

கிழக்கு வங்காள மக்களின் கஷ்ட நிவாரண நிதிக்குத் தொகை வழங்கவேண்டுமென்று நான் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறேன். அவ்விஷயமாக நீங்கள் உங்களுடைய எழுத் தோவியத்தை அனுப்புங்கள். நிதிவசூலுக்காக பலன் தரத்தக்க

விதத்தில் மக்களை நான் அணுகுவதற்கு அது எனக்கு உதவியாக இருக்கும்.

உங்களுடைய உடல் நலம் திருப்திகரமாக இருக்கிறதென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 6

ஆசிரமம், சபர்மதி,
ஜனவரி *14, 1920*

அன்புள்ள குருதேவ்,

குஜராத் இலக்கிய மகாநாடு எதிர்பார்த்தவாறு குறிப்பிட்ட நாளில் கூடவில்லை என்பது எனக்கு இன்று வரையில் தெரியாது. போதிய முன்னறிவிப்பு கிடைக்காததே நீங்கள் அதற்கு வர இயலாத காரணங்களில் ஒன்று என அம் மகாநாட்டிற்கு முக்கிய காரணகர்த்தாவான டாக்டர் ஹரி பிரசாத் கூறுகிறார். எனவே மகாநாடு ஈஸ்டருக்கு ஒத்திவைக்க பட்டது என்றும் அவர் கூறியுள்ளார். அம் மகாநாடு குறிப்பிட்ட காலத்தில் கூடும் வருடாந்தர மகாநாடு அல்ல. எனவே சாதாரண விதிகளுக்கு முரணின்றி அது ஒத்திவைக்கப்படலாம். உங்களுடைய ஆரோக்கியமும், மற்ற விஷயங்களும் நீங்கள் அழைப்பை அங்கீகரிப்பது சாத்தியமாகும்படி செய்யுமாயின், நீங்கள் மகாநாட்டிற்கு வருவீர்கள் என்பதை நான் அறிவேன். ஈஸ்டரின்போது உங்களை வரவேற்கும் கௌரவம் குஜராத்தின் தலைநகருக்குக் கிடைக்குமென நான் மனப்பூர்வமாக நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 7

ஆசிரமம், சபர்மதி,
மார்ச் *11, 1920*

அன்புள்ள குருதேவ்,

உங்களுடைய இரண்டு தந்திகளும் வந்து சேர்ந்ததாக முன்பே என்னால் அறிவிக்க முடியவில்லை. காசி விலாசத்திற்கு நீங்கள் அனுப்பிய தந்தி அங்கிருந்து மீண்டும் இங்கு அனுப்பப் பட்டது. இங்குள்ள விலாசத்திற்கு அனுப்பிய தந்தியும் வந்து சேர்ந்தது. அழைப்பை அங்கீகரித்ததற்காக நாங்கள் எல்லோரும் உங்களுக்கு நன்றியுள்ளவர்களாக இருக்கிறோம்.* அதிக அலுவல்

---

* 1920 ஏப்ரல் 2-லிருந்து 4-ம் தேதி வரையில் நடைபெறவிருந்த குஜராத் இலக்கிய மகாநாட்டில் உரை நிகழ்த்துவதாக ஒப்புக் கொண்டு கவி தாகூர் அனுப்பிய தந்தியையே மேலே காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

களுக்கோ அல்லது தமாஷாக்களுக்கோ ஏற்பாடு செய்து உங்களுக்கு அதிகமான தொந்தரவு கொடுக்காமல் இருப்பதற்கான முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. குஜராத்தில் நீங்கள் எவ்வளவு காலம் தங்க முடியும் என்பதுபற்றியும், அங்குள்ள ஒன்றிரண்டு முக்கியமான இடங்களுக்கு நீங்கள் விஜயம்செய்ய முடியுமா என்பதுபற்றியும், அவசியமாயின் தந்தி மூலம் தயவு செய்து எனக்கு அறிவிப்பீர்களா? இரண்டாவது விஷயம் உங்களுடைய ஜாகையைப் பற்றியது. நீங்கள் ஆசிரமத்தில் தங்குவீர்களா? நீங்கள் ஆசிரமத்தில் தங்குவதைக் காட்டிலும் எனக்கு ஆனந்தத்தை அளிக்கக் கூடிய விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது. நீங்கள் இங்கே தங்கியிருக்கும்போது ஆசிரமத்தைப் பற்றியும், ஆசிரமம் எதற்காக ஏற்பட்டுளது என்பது பற்றியும் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமென நான் பேரார்வத்துடன் இருக்கிறேன். ஆசிரமத்திலுள்ள பலரும் உங்களுடைய சீடர்களாக இருந்ததாகக் கூறிக் கொள்கிறார்கள். உங்களுடைய விஜயம் அவர்களுக்கு நன்மை அளிப்பதாக இருக்க வேண்டும் என்பதிலும் எனக்கு மிகுந்த ஆர்வம் இருந்துவருகிறது. குஜராத் சிறுவர், சிறுமியர்களைத் தவிர, சிந்தி வாலிபனான கிரிதாரியும் இங்கே இருக்கிறான்.* அவனை உங்களுக்கு நினைவிருக்கலாம். மற்றும் மணீந்திரா, சாரளாதேவியின் மகன் தீபக் ஆகியோரும் ஆசிரமத்தில் இருக்கிறார்கள். அது, அகமதாபாத்திலிருந்து சுமார் நான்கு மைல்கள் தூரத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. சபர்மதி நதியின் கரையில் உள்ள ஒரு மேட்டில் அது இருக்கிறது. நீங்கள் ஆசிரமத்திலோ அல்லது அகமதாபாத்தில் தனிப்பட்டவருக்குச் சொந்தமான, எல்லா வசதிகளுடனும் கூடிய ஒரு பங்களாவிலோ தங்கியிருக்கலாம். உங்களுடைய ஆரோக்கியத்தையும், வசதியையும்தான் நாங்கள் வெகு முக்கியமாகக் கருதுகிறோம் என்பதையும், உங்களுடைய விருப்பங்கள் மிகவும் அக்கறையுடன் நிறைவேற்றப்படும் என்பதையும் நான் கூறவேண்டிய அவசியமில்லை. ஏதாவது விசேஷ ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அவற்றைத் தயவு செய்து எனக்கு அறிவிப்பீர்களா?"

* கிரிதாரி, ஆச்சாரிய கிருபளானியினுடைய சகோதரரின் மகன்.

பகுதி பன்னிரண்டு

# ஆச்சாரிய வினோபா பாவே

1940-41-ல் நடந்த சத்தியாக்கிரக இயக்கத்தில் தமது பிரதிநிதியாகவும், முதலாவது சத்தியாக்கிரகியாகவும் ஆச்சாரிய வினோபா பாவேயைக் காந்திஜி தேர்ந்தெடுத்தபோதுதான் வினோபா பாவே உலகப் புகழ் பெற்றார். என்றாலும் அதற்குப் பல ஆண்டுகளுக்கு முன் வங்காளத்தில் சுதேசி இயக்கம் மும்முரமாக இருந்தபோதே வினோபா பாவே தமது வாழ்க்கையைத் தேசத் தொண்டிற்காக அர்ப்பணம் செய்வதென்றும், தாம் விவாகம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சாரியாகவே இருப்பதென்றும் திட சங்கல்பம் செய்து கொண்டார். அவரைப் பற்றி 1918-ல் காந்திஜி கூறியதாவது :

“ வினோபா பாவே ஒரு மகா புருஷர். சிறந்த மகாராஷ்டிரர்களுடனும் மதராசிகளுடனும் உறவு கொள்வதில் நான் அதிர்ஷ்டசாலி என்றே எப்போதும் எண்ணிவந்திருக்கிறேன். அத்தகைய மதராசிகளில் இப்போது யாரும் இல்லை. மகாராஷ்டிரர்களால் எனக்கு ஒருபோதும் ஏமாற்றம் ஏற்பட்டதில்லை. அவர்களில் ஒருவரான வினோபாவைப் போதிய அளவு புகழ்வதென்பது இயலாத காரியம்!” வினோபா பாவேய்க்கு காந்திஜி எழுதிய இரண்டு கடிதங்கள் இந்தப் பகுதியில் வெளியாகியுள்ளன :

# 1

சபர்மதி,
பிப்ரவரி, 1918

உங்களை எவ்விதம் புகழ்வதென்றே எனக்குத் தெரியவில்லை. உங்களுடைய அன்பும், உங்களுடைய ஒழுக்கமும் என்னைப் பரவசப்படுத்துகின்றன. அதுபோலவே உங்களுடைய ஆத்தும பரிசோதனையும் என்னைக் கவர்கின்றது. உங்களுடைய பெருமையை அளவிட நான் தகுதியற்றவன். எனவே உங்களைப் பற்றி உங்களுடைய மதிப்பீட்டையே நான் ஒப்புக் கொள்வதுடன், உங்களுக்குத் தந்தையாக இருக்கும் நிலையையும் மேற்கொள்கிறேன். என்னுடைய நீண்டகால விருப்பத்தை நீங்கள் பெரிதும் பூர்த்தி செய்திருக்கிறீர்கள் என்றே தோன்றுகிறது. ஒரு தந்தை, ஒழுக்கத்தில் தன்னையும் மிஞ்சிவிடும் ஒரு புதல்வனை அடையும் போது மாத்திரமே உண்மையில் தந்தையாகிறார். அது போலவே, தந்தையைக் காட்டிலும் சிறந்த சாதனைகளைச் செய்பவனே ஓர் உண்மையான புதல்வனாகிறான். தந்தை சத்தியவானாகவும், மன உறுதியுள்ளவராகவும், கருணை வாய்ந்தவராகவும் இருந்தால், மகன் மேற்கண்ட குணாதிசயங்களில் அவரைக் காட்டிலும் மிகவும் மேலானவனாக இருக்கவேண்டும். நீங்கள் அத்தகைய புதல்வராகவே இருக்கிறீர்கள். உங்களுடைய சாதனைகளுக்கு எனது முயற்சி எதுவும் காரணமாக இருப்பதாய் எனக்குத் தெரியவில்லை. இருந்தாலும் அன்புப் பரிசாக நீங்கள் எனக்கு அளித்துள்ள பாத்திரத்தை நான் ஒப்புக்கொள்கிறேன். அதற்குத் தகுதிவாய்ந்தவனாக இருக்கவும் நான் முயற்சிக்கிறேன். எப்போதாவது நான் மற்றொரு ஹிரண்யகசிபுவாக மாறிவிடுவேனாயின், கடவுளிடம் பக்தி கொண்டு அவனுக்கும் (ஹிரண்யகசிபுவுக்கும்) கீழ்ப்படிய மறுத்த பிரஹ்லாதனைப்போல் நீங்களும் மரியாதையுடன் என்னை எதிர்த்து நில்லுங்கள்!

நீங்கள் கூறுவதுபோல், நீங்கள் ஆசிரமத்திற்கு வெளியில் இருந்தாலும் அதன் விதிகளை அப்பழுக்கின்றி பின்பற்றி வந்திருக்கிறீர்கள் என்பது உண்மையே. நீங்கள் திரும்பி ஆசிரமத்திற்கு வந்து விடுவீர்கள் என்பதில் எனக்கு ஒரு காலத்திலும் சந்தேகம் ஏற்பட்டதில்லை. தவிர நீங்கள் எழுதி அனுப்பிய செய்திகளை பாபாவைக் கொண்டு வாசித்துக் காட்டும்படி செய்தேன். கடவுள் உங்களுக்கு நீண்ட ஆயுளை அளிப்பதுடன், இந்தியாவின் முன்னேற்றத்திற்காக உங்களை உபயோகிப்பாராக.

இப்போது உங்களுடைய உணவில் நீங்கள் எத்தகைய மாறுதல்களும் செய்ய வேண்டியது அவசியமென நான் கருதவில்லை. பால் சாப்பிடுவதை தற்போதைக்கு நிறுத்திவிடாதீர்கள். அதற்கு மாறாக, அவசியமாயின் பாலின் அளவை அதிகப்படுத்திக் கொள்ளுங்கள்.

ரயில்வேக்களைப் பொறுத்தமட்டில், சத்தியாக்கிரகம் தேவையில்லை. இப்போது தேவை என்னவெனில், புத்திசாலிகளான ஊழியர்களைக் கொண்டு பிரசாரத்தை நடத்துவதுதான். கேடா ஜில்லாவில் எழுந்துள்ள பிரச்னையைத் தீர்க்க ஒருவேளை சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளும்படி நேரலாம். இப்போதெல்லாம் நான் ஒரு நாடோடியைப்போல் இருந்துவருகிறேன். ஒன்று அல்லது இரண்டு நாட்களில் நான் டில்லிக்குப் புறப்பட வேண்டியிருக்கும்.

மற்றவை இங்கு வரும்போது. ஒவ்வொருவரும் நீங்கள் வருவதை ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்கள்.*

பாபுவிடமிருந்து ஆசிகள்.

## 2

நவ கிராமம்,
ஜூலை *24, 1918*

சிந்தனையைத் தூண்டும் உங்களுடைய கடிதம் எனக்குக் கிடைத்தது.

நீங்கள் கூறியிருப்பதுதான் நமது இறுதி லட்சியமாகும். அந்த லட்சியம் நிறைவேற ஒரு குஜராத்தி ஆசிரியர் இருக்க வேண்டும் என்பதும் உண்மையே. ஆனல் அத்தகைய ஓர் ஆசிரியர் இராத நிலையில், மகாராஷ்டிரத்திலிருந்து நாம் ஓர் ஆசிரியரைத் தருவித்துக் கொள்வதில் தவறு எதுவும் இல்லை. மேலும், ஒழுக்கமில்லாத ஒரு குஜராத்தி ஆசிரியரைக் காட்டிலும் ஒழுக்கமுள்ள ஒரு மராத்தி ஆசிரியரையே நான் விரும்புகிறேன். எனது வழியை அனுசரித்துப் போதிக்கும் குஜராத்தியர்களைக் கண்டு பிடிப்பது தற்போது கடினமாக இருக்கிறது. ,இப்போது நிலைமை பரிதாபகரமாக இருக்கிறது. நீங்கள் இராவிட்டால் சமஸ்கிருத போதனையை நிறுத்திவிட வேண்டியிருக்கும்; இல்லாவிடில் அந்தப் போதனையை காகா கலேல்கார் ஆரம்பித்து நடத்த வேண்டும். தற்காலிகமாக, நமது லட்சியத்தைக் கைவிடாமல் நீங்கள்தான் அப்போதனையைத் தொடர்ந்து நடத்தவேண்டியிருக்கும்.

நான் மகாராஷ்டிரத்திற்கு வர ஆர்வமுள்ளவனக இருக்கிறேன். ஆனல் அதற்கு இன்னும் பூரணமாகக் குணம் அடையவில்லை. நமக்குத் தேவையான தொகையினர் நம்மிடம் இல்லை. நீங்களும், காகாவும், மாமாவும் என்னுடன் வந்து தொண்டு செய்யும்

---

* ஒரு வருட காலம் வரையில் தாம் ஆசிரமத்திற்கு ஏன் திரும்பிவரவில்லை என்பதை விளக்கி வினேபா பாவே எழுதியிருந்த கடிதத்திற்குக் காந்திஜி அளித்திருந்த பதிலே மேற்கண்ட கடிதமாகும். வினேபாவின் அக்கடிதத்தை வாசித்ததும் காந்திஜி கூறியதாவது: "மச்சீந்திராவை (குரு) கோரக்கின் சீடர்) மிஞ்சிவிட்டார். வினேபா உண்மையில் ஒரு பீமன் தான்."

படி நேர்ந்திருப்பது ஏதோ தெய்வத்தின் சித்தமாக இருக்கலாம் அல்லவா? தேஷ்பாண்டேயுடன்* எனது உறவு, இந்திய ஊழியர் சங்கத்தில் எனக்குள்ள நம்பிக்கை, மகாராஷ்டிரப் பிரதேசத்தினிடம் எனக்குள்ள விசேஷ மதிப்பு, சம்பாரணில் அவர்கள் புரிந்த பேருதவி, மகாராஷ்டிரத்திலிருந்து ஒரு சங்கீத நிபுணரின் வருகை, கொத்தவாலின் சகோதரி சமீபத்தில் இங்கு வந்து சேர உத்தேசித்திருப்பது, நாராயண்ராவுடன் எனக்கு ஏற்பட்டுள்ள அறிமுகம் - இவையெல்லாம் மகாராஷ்டிரத்தில் நான் ஏதோ விசேஷமான தொண்டு புரியலாம் என்பதையே குறிப்பிடுகின்றன. எனினும் "மனிதன் தான் நினைப்பதுபோல் நடைபெறுமாயின், பின்னர் எவரும் துன்பத்திற்கு உள்ளாகும்படி நேராது; ஒவ்வொருவனும் தனது விரோதிகளையெல்லாம் கொன்றுவிட்டு தன் நண்பர்களை மாத்திரமே பாக்கி வைப்பான்." எனவே எனது ஆசை ஒருபுறமிருக்க, என்ன நேரும் என்பதை யார் அறிவார்?

உங்களுடைய விருப்பத்தை நான் மனத்தில் வைத்துக் கொள்கிறேன். உங்களை என் அருகில் வைத்துக் கொள்ளவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். எனினும் தற்போது அவ்விதம் செய்வது முடியாத காரியம் என்பதை நான் காண்கிறேன்.

நீங்கள் நிச்சயமாக ஆசிரமவாசிகளில் ஒருவரே. அதைப் பற்றிச் சந்தேகம் எதுவும் இருக்க முடியாது.

பாபு

* பாரிஸ்டரும், கங்காநாத் பாரத வித்தியாலயத்தின் ஸ்தாபகருமான கேசவ்ராவ் தேஷ்பாண்டேயையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

பகுதி பதின்மூன்று

# லட்சுமிதாஸ் காந்தி

தமது மூத்த சகோதரரான லட்சுமிதாஸ் காந்தியின் உதவியினலேயே காந்திஜி படிக்க இங்கிலாந்துக்குச் செல்லுவது சாத்தியமாயிற்று. மூத்த சகோதரரிடத்தில் காந்திஜி மிகுந்த பக்தி வைத்திருந்தார் என்ருலும், அவரது டாம்பீகச் செலவு, சுயநலம் போன்றவை காந்திஜிக்கு மிகுந்த மனவேதனையைக் கொடுத்தன. அக் காலத்தில் காந்திஜி தமது சகோதரருக்கு எழுதிய கடிதங்களிலிருந்தே சத்தியம், நேர்மை, பொது ஜனத் தொண்டு ஆகியவற்றில் அவரது மனம் பெரிதும் நாட்டம் கொண்டிருந்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். லட்சுமிதாஸ் காந்திக்கு காந்திஜி எழுதிய கடிதங்களில் சில இப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன :

## 1

லண்டன்,

*நவம்பர் 9, 1888*, வெள்ளிக்கிழமை

மதிப்பிற்குரிய அண்ண,

சென்ற இரண்டு அல்லது மூன்று வாரங்களாக தங்களிடமிருந்து யாதொரு கடிதமும் வராததைக் குறித்து நான் வருந்துகிறேன். என்னிடமிருந்து உங்களுக்கு யாதொரு கடிதமும் வராததே ஒருவேளை உங்களுடைய மௌனத்திற்குக் காரணமாக இருக்கலாம். ஆனல் நான் லண்டன் போய்ச் சேருவதற்கு முன் கடிதம் எதுவும் எழுதுவது சாத்தியமற்ற காரியம். அதற்காக நீங்கள் கடிதம் எழுதாமல் இருந்தது உண்மையில் வியப்பாக இருக்கிறது. நான் வெகு தொலைவில் இருப்பதால், நாம் கடிதங்களின் மூலம்தான் சந்திக்க முடியும். எனக்கு ஊரிலிருந்து கடிதங்கள் எதுவும் வராவிடில், நான் மிகுந்த கவலைக்கு

உள்ளாகிவிடுகிறேன். ஆகையால் தவருமல் ஒவ்வொரு வாரமும், எனக்கு ஒரு கார்டு எழுதுங்கள். என்னுடைய விலாசம் உங்களிடம் இராவிட்டால், நான் கவலைப்பட்டிருக்கமாட்டேன். எனக்கு இரண்டு கடிதங்கள் எழுதிய பிறகு நீங்கள் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட்டதற்காகவே நான் வருந்துகிறேன்.

சென்ற செவ்வாய்க்கிழமை நான் பாரிஸ்டர் வகுப்பில் சேர்ந்தேன். அடுத்த வாரம் உங்களிடமிருந்து கடிதம் வந்த பிறகு நான் விவரமாக எழுதுகிறேன். இங்கே இப்போது குளிர் மிகவும் கடுமையாக இருக்கிறது. எனினும் இத்தகைய மோசமான கால நிலை அதிக காலம் நீடித்து இருப்பதில்லை. குளிர் மிகவும் அதிகமாக இருந்தும் கூட எனக்கு இறைச்சியோ அல்லது மதுவகைகளோ தேவையாக இல்லை. அதன் காரணமாக என் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்குவதுடன், நான் கடவுளுக்கும் நன்றி செலுத்துகிறேன். நான் இப்போது நல்ல ஆரோக்கியத்துடன் இருந்துவருகிறேன். எனது வணக்கங்களை அம்மாவுக்கும் அண்ணிக்கும் தயவு செய்து தெரிவியுங்கள்.

## 2

ஜோகன்னஸ்பர்க்,
மே 27, 1906

மதிப்பிற்குரிய அண்ண,

நீங்கள் ஏப்ரல் 17-ஆம் தேதி எழுதிய கடிதம் எனக்குக் கிடைத்தது. அதற்கு என்ன பதில் எழுதுவதென்றே எனக்குத் தெரியவில்லை. என் மீது உங்களுக்குக் காரணமில்லாமல் வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. அத்தகைய வெறுப்புக்குப் பரிகாரம் எதுவும் இல்லை. நான் திக்கற்றவனுக இருக்கிறேன். உங்களுடைய கடிதத்திற்குப் பூரணமாக பதில் அளிப்பதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்?

1. உங்களிடமிருந்து பிரிய வேண்டும் என்ற உத்தேசம் எனக்கு இல்லை.

2. அங்கே நான் யாதொரு உரிமையும் கோரவில்லை.

3. நான் எதையுமே என்னுடையது என்று உரிமை பாராட்டுவதில்லை.

4. என்னிடம் இருப்பதெல்லாம் பொதுக் காரியங்களுக்காகவே உபயோகிக்கப்பட்டுவருகின்றது.

5. பொதுத் தொண்டில் தங்களை அர்ப்பணம் செய்து கொள்ளும் உறவினருக்கு அவை பயன்படுகின்றது.

6. என்னிடம் இருப்பதையெல்லாம் நான் பொதுக் காரியங்களுக்காக அர்ப்பணம் செய்திராவிடில், உங்களுக்குப் பணம் அனுப்பியும், உங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றியும் உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி என்னால் செய்திருக்க முடியும்.

சகோதரர்களுக்காகவோ அல்லது மற்ற உறவினர்களுக்காகவோ நான் எவ்வளவோ செய்திருப்பதாக எக்காலத்திலும் நான் கூறியதில்லை. நான் மிச்சப்படுத்த முடிந்ததையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்துவிட்டேன். இதை நான் பெருமையாகக் கூறிக் கொண்டதில்லை, நண்பர்களிடம் மாத்திரம்தான் கூறியுள்ளேன்.

எனக்கு முன் நீங்கள் காலமாகிவிட்டால், குடும்பத்தைப் பராமரிக்கும் பொறுப்பை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வேன் என்று நீங்கள் நிச்சயமாக நம்பலாம். அவ்விஷயமாக நீங்கள் அஞ்ச வேண்டிய அவசியமில்லை.

நீங்கள் விரும்பும் தொகையை உங்களுக்கு அனுப்பக்கூடிய நிலையில் இப்போது நான் இல்லை.

ஹரிலால் விவாகம் செய்து கொண்டால் நல்லதுதான், விவாகம் செய்து கொள்ளாமல் இருந்தாலும் நல்லதுதான்; தற்போதைக்கு நான் அவனை என் மகனாகக் கருதவில்லை.

சாத்தியமாயின், மணியின் விவாகத்திற்காக நான் இந்தியாவுக்கு வர விருப்பமுடையவனாக இருக்கிறேன். எனது தற்போதைய நிலைமையைக் குறித்து உங்களுக்கு நான் விவரமாகக் கூற இயலாதவனாக இருக்கிறேன். எனக்கு நேரமே இல்லாததால், என்ன செய்வதென்றே தெரியவில்லை. கல்யாணத் தேதியை தயவு செய்து தந்தி மூலம் அறிவியுங்கள். சாத்தியமாயின் அங்கு வருவதற்கான ஏற்பாடுகளையெல்லாம் செய்து கொண்டு நான் தயாராக இருக்க முடியும்.

ரேவாசங்கரபாயிடமிருந்து நான் கடன் வாங்கியிருக்கிறேன் என்ற தகவலை உங்களுக்கு நான் கூறுகிறேன்.

நீங்கள் என்னை நிராகரித்தாலும், நான் உங்களிடம் எப்போதும் போலவே இருந்து வருவேன்.

நான் அங்கு இருந்தபோது உங்களிடமிருந்து பிரிந்துவிட வேண்டும் என்பது என் விருப்பமென ஒருபோதும் நான் கூறியதாக எனக்கு நினைவில்லை. அப்படியே நான் கூறியிருந்தாலும் கூட, இப்போது என் மனம் முற்றிலும் தெளிவாக இருக்கிறது. எனது அபிலாஷைகள் உயர்ந்தவை. உலக இன்பங்கள் எதிலும் எனக்கு விருப்பமில்லை.

எனது தற்போதைய நடவடிக்கைகளை வாழ்க்கைக்கு இன்றியமையாதவையாக நான் கருதுவதாலேயே அவற்றில் நான் ஈடுபட்டிருக்கிறேன். அவ்விதம் ஈடுபட்டிருக்கும் காலத்தில் மரணத்தை

ஏற்க நேர்ந்தாலும், நான் மன அமைதியுடன் அதை ஏற்பேன். பயம் என்ருல் என்ன என்பதே இப்போது எனக்குத் தெரியவில்லை.

உள்ளத்தில் யார் தூய்மையாக இருக்கிருர்களோ அவர்களை நான் விரும்புகிறேன். ஜக்மோகன்தாஸின் மகனை இளைஞன் கல்யாணதாஸ், பிரஹ்லாதனைப் போன்ற உள்ளம் படைத்தவனுக இருக்கிருன். எனவே என் மகனைக் காட்டிலும் அவன் எனக்கு அதிக அன்பார்ந்தவனுக இருக்கிருன்.

## 3

ஜோகன்னஸ்பர்க்,
ஏப்ரல் *20, 1907*

மதிப்பிற்குரிய ஐயா,

உங்கள் கடிதம் கிடைத்தது. மிகவும் அமைதியாகவும், சாத்தியமானவரையில் பூரணமாகவும் அதற்கு நான் பதில் எழுத விரும்புகிறேன். என் மனத்தில் எழும் எண்ணங்களை நான் முதலில் உங்களிடம் கூறிவிட்டு, பிறகு உங்களுடைய கேள்விகளுக்குப் பதில் அளிக்கிறேன்.

நமது நோக்கங்கள் ஒன்றுக்கொன்று முற்றிலும் மாருனவையாக இருக்கின்றன என்று அஞ்சுகிறேன். தற்காலிகமாக அந்தக் கருத்து வேற்றுமை தீருவது சாத்தியம் என்றும் எனக்குத் தோன்றவில்லை. நீங்கள் பணத்தின் மூலம் அமைதியையும் ஆனந்தத்தையும் நாடுகிறீர்கள். என்னுடைய மன அமைதிக்கு நான் பணத்தை நம்பிக்கொண்டிருக்கவில்லை. தற்போதைக்காவது என் மனம் முற்றிலும் அமைதியாக இருக்கிறது. எத்தகைய துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் ஆற்றல் எனக்கு இருக்கிறது.

உங்களைப் போலவே நானும் பண்டைய சம்பிரதாயங்களில் நம்பிக்கையுள்ளவனுக இருக்கிறேன். எனினும் நமது நம்பிக்கைகளில் வேற்றுமை இருக்கிறது. நீங்கள் பண்டைய மூடப்பழக்க வழக்கங்களில் நம்பிக்கையுள்ளவராக இருக்கிறீர்கள். ஆனுல் எனக்கு அவற்றில் நம்பிக்கை இராததுடன், அவற்றில் நம்பிக்கை வைப்பது பாவம் என்றும் நான் கருதுகிறேன்.

நீங்கள் மோட்சத்தை அடைய விரும்புகிறீர்கள். நானும் அப்படியேதான். எனினும் நீங்கள் விரும்பும் அந்த நிலைக்கும் நான் விரும்பும் அந்த நிலைக்கும் மிகமிக வேற்றுமை இருக்கிறது. உங்களிடம் நான் மிகவும் உயர்ந்த மதிப்பு வைத்திருக்கிறேன். அந்த மதிப்பு அற்பத்தனத்திஞலோ அல்லது சுயநலத்திஞலோ களங்கமற்றது. ஆனுல் உங்கள் மனத்திலோ நீங்கள் என்மீது துவேஷம் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய பாசமும் உறவும்

சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதே அதற்குக் காரணம் என்பதை நான் காண்கிறேன். நீங்கள் அறியாமலேயே இத்தகைய நிலை ஏற்பட்டுள்ளதெனினும், நீங்கள் அறிந்து செய்தாலும் அறியாமற் செய்தாலும், நான் குறிப்பிட்டுள்ளபடி பலன் ஒன்றுதான். மோட்சத்தை அடைய முயற்சிக்கும் கட்டத்தை நீங்கள் உண்மையிலேயே அடைந்திருந்தால், நீங்கள் அமைதியாகவும் மனக் கலக்கமின்றியும் இருக்கவேண்டும்; நான் மிகுந்த பாவம் செய்பவனுகவும், உங்களை மோசம் செய்பவனுகவும் இருந்தாலும் கூட என்னைப் பற்றி நீங்கள் அடியோடு மறந்துவிட வேண்டும். ஆனுல் நீங்கள் அவ்விதம் செய்ய முடியாததற்குக் காரணம், உங்களுக்குள்ள மித மிஞ்சிய பாசமேயாகும். இவ்விதம்தான் நான் எண்ணுகிறேன். நான் எண்ணுவது தவருக இருக்குமாயின், நான் உங்கள் பாதங்களில் விழுந்து வணங்கி, என்னை மன்னிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

பேராசையினுலும் பாசத்தினுலும் நீங்கள் ஆட்கொள்ளப்பட்டிருந்தாலும், இராவிட்டாலும் அதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. உங்கள் மீது எனக்குள்ள அன்பை அது பாதிக்கவில்லை. அதன் விளைவாக, உங்கள் மீது எனக்குள்ள மதிப்பு சிறிதளவும் குறையவில்லை. உங்களுக்கு என்னுல் இயன்ற எத்தகைய தொண்டும் புரிய நான் தயாராக இருக்கிறேன். அவ்விதம் தொண்டு புரிவதை என் கடமையாகவும் கருதுகிறேன்.

நீங்கள் குறிப்பிட்டுள்ள 'குடும்பம்' என்ற சொல்லுக்கு, நீங்கள் கூறும் அர்த்தம் என்ன என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னைப் பொறுத்தமட்டில் 'குடும்பம்' என்பது, இரு சகோதரர்கள் மாத்திரமல்ல, சகோதரியும் சேர்ந்ததேயாகும். நமது தாயாதிகளும் நம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களேயாவர். இறுமாப்பு எதுவுமின்றி நான் கூறுவதாயின், உண்மையில் உயிருள்ள எல்லா ஜீவன்களும் சேர்ந்ததே எனது குடும்பமாகும் என்று கூறுவேன். ஆனுல் அதில் ஒரு வேற்றுமை மாத்திரம் உண்டு. அதாவது ரத்த சம்பந்தம் காரணமாகவோ அல்லது வேறு காரணங்களினுலோ தங்கள் ஜீவனத்திற்கு என்னை அதிகமாக நம்பிக் கொண்டிருப்பவர்கள் என்னிடமிருந்து அதிகமான உதவியைப் பெறுகிருர்கள். அதனுல்தான் எனது மனைவிக்காக நான் ஓர் 'இன்ஷூரன்ஸ் பாலிஸி' எடுத்துக் கொண்டேன். நான் பம்பாயில் இருந்தபோது மிகுந்த மனக்கசப்புடன் நீங்கள் எழுதிய கடிதங்கள் காரணமாகவே அவ்விதம் இன்ஷூரன்ஸ் செய்து கொண்டேன். பிளேக் நோயாளிகளுக்கு நான் உதவி புரிந்து கொண்டிருந்தபோது ஏதாவது நேர்ந்து என் மனைவியையும், குழந்தைகளையும் பராமரிக்கும் பொறுப்பு உங்கள் மீது விழுந்துவிட்டால் என்ன செய்வது என்று நீங்கள் தூற்றிக் கொண்டிருந்தீர்கள். அதிலிருந்து தப்புவதற்காகவும் நான் இன்ஷூரன்ஸ் செய்து கொண்டேன். இன்ஷூரன்ஸ் செய்து கொள்வதை நான் எதிர்ப்பவனுயினும், அவை போன்ற காரணங்களுக்காகவே நான் அவ்விதம் செய்தேன். ஒருவேளை நீங்கள் எனக்கு முன் மரணமடைந்தால், உங்களுடைய மனை

விக்கும் குழந்தைகளுக்கும் நானே ஒரு இன்ஷூரன்ஸ் பாலிஸி போல் இருந்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பேன் என்று நீங்கள் நிச்சயமாக நம்பலாம். அவ்விஷயமாக நீங்கள் சிறிதும் மனக் கவலையின்றி உறுதியுடன் இருக்குமாறு உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். இச்சந்தர்ப்பத்தில் நான் ராலியாத் பென்னின் நிலையைக் குறிப்பிட விரும்புகிறேன்.

ராலியாத் பென் உங்களுடன் இருக்கவில்லை எனில், என் மீதுள்ள குற்றம் எதுவும் அதற்குக் காரணமென நான் நினைக்க வில்லை; உங்களுடைய சுபாவமே அதற்குக் காரணமாகும். நமது தாயார் உங்களுடன் இருந்தபோதும் மகிழ்ச்சியுடன் இருக்க வில்லை என்பதையும், மற்ற உறவினர்கள் எவரும் எந்தச் சமயத் திலும் உங்களுடன் இருந்தபோது சந்தோஷமாக இருந்ததில்லை என்பதையும் உங்களுக்கு நான் பணிவுடன் நினைவூட்டுகிறேன்.

கோகுலதாசும், ஹரிலாலும் தவறான வழியில் போகிறார் களெனில், அதற்கு நான் பொறுப்பாளி அல்ல. கோகுலதாஸ் என்னைவிட்டுச் சென்றபின், அங்குள்ள தீய சூழ்நிலையினால் கெட்டுப் போனான். ஓரளவு ஹரிலாலுக்கும் அதுதான் நேர்ந்தது. இருந்தாலும், அவ்விருவரும் நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு தூரத்திற்குச் சீர் கெட்டுவிடவில்லை. மற்றப் பையன்களைக் காட் டிலும் அவர்கள் அதிக ஒழுக்கத்துடன் இருக்கிறார்கள். ஹரி லாலுக்கு இங்கு வந்ததன் காரணமாக மிகுந்த நன்மை ஏற்பட் டிருக்கிறது. அவனது நடத்தையில் அபிவிருத்தி ஏற்பட்டிருக் கிறது. ஹரிலாலுக்கு ஏற்கனவேயே திருமணம் நிச்சயமாகி யிருப்பதால், அவனுக்கு விரோதமாக நான் எதுவும் கூறுவதற் கில்லை. அதேசமயத்தில் அவனுக்குத் திருமணம் நிச்சயமாகி யிருப்பதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன் என்றும் என்னால் கூறமுடியாது.

அதுபோலவே, கோகுலதாஸ் விவாகம் செய்து கொள்வதும் தவறு என்றே நான் கருதுகிறேன். அங்குள்ள சிற்றின்ப சம்பந்த மான சூழ்நிலையே அவர்கள் திருமணம் செய்து கொள்ளும்படியான அவசியத்தை உண்டாக்கியிருக்கிறது. நம் தேசத்தின் மீதுள்ள வெறுப்பினால் நான் இவ்விதம் கூறவில்லை. அதனுடைய தற் போதைய துக்ககரமான நிலைமையே என்னை இவ்விதம் வருத்தத் துடன் கூறும்படி தூண்டியிருக்கிறது.

அதிர்ஷ்டவசமாக, மணியோ, ராமோ, தேவோ* ஆகியோர் இங்கே ஆரோக்கியமான சூழ்நிலையில் வளர்ந்துவருகிறார்கள். எனவே அவர்களுடைய திருமணத்தைக் குறித்து நான் கவலைப் படவில்லை. இந்தியர்களில் பலரும் விவாகம் செய்து கொண்டால் கூட பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்பதே எனது கொள்கையாகும். எனவே அம்மூன்று பையன்களும் விவாகம்

---

* தமது புதல்வர்களான மணிலால், ராமதாஸ், தேவதாஸ் ஆகிய மூவரை யும் காந்திஜி அவர்களுடைய செல்லப் பெயர்களால் குறிப்பிட்டிருக்கிறார்.

செய்து கொள்ளாமலே இறந்தால் கூட நான் வருந்தமாட்டேன்; அதற்கு மாருக ஆனந்தமே அடைவேன். இருந்தாலும் அவர் களுக்கு வயது வந்த பின் அவர்கள் விவாகம் செய்து கொள்ள விரும்பினல், அவர்களுக்குத் தகுதியான பெண்கள் கிடைப் பார்கள் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். "நம்முடைய சாதியிலிருந்து பெண் கிடைக்காவிட்டால் என்ன செய்வது?" என்று நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். அந்தக் கேள்விக்கு நான் பதிலளித்தால், அது உங்களுக்கு மிகுந்த துக்கத்தைக் கொடுக்கும். எனவே அதற்கு நான், உங்களுடைய அனுமதியின் மீது பதில் அளிக்காமல் இருந்துவிடுகிறேன். அவரவருடைய நம்பிக்கைக்குத் தகுந்தவாறு பலன் கிடைக்கிறது என்பது தெய்வீக சட்டமாகும் என்பதை மீண்டும் கூறுகிறேன். எனவே இந்தப் பிரச்னை என் மனத்தில் எழவேயில்லை.

சகன்லால், மகன்லால், ஆனந்த்லால் ஆகியோர் நமது குடும் பத்தைச் சேர்ந்தவர்களே. எனவே அவர்களுக்குச் செய்யும் தொண்டு, குடும்பத்திற்குச் செய்யும் தொண்டேயாகும். போனிக் ஸிற்கு வந்தபின் அவர்கள் சிறந்த மனிதர்களாகியிருக்கிருர்கள்; அவர்களுடைய ஒழுக்க உணர்ச்சியும் அபிவிருத்தி அடைந்திருக் கிறது.

மாதந்தோறும் நான் நூறு ரூபாய் அனுப்பவேண்டுமென நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். தற்போது அவ்விதம் அனுப்புவதற் கான வசதி எனக்கு இல்லை என்பதுடன், அவ்வாறு அனுப்ப வேண்டிய அவசியமும் இல்லையென நான் கூறவேண்டும். நான் கடன் வாங்கி போனிக்ஸ் அச்சகத்தை நடத்திவருகிறேன். மேலும், புதிய அவசரச் சட்டத்தை எதிர்த்து நடைபெறும் போராட்டத்தில் நான் சிறைக்குச் செல்லும்படி நேரலாம். அப்படி யாயின், நான் மேலும் ஏழையாகிவிடலாம். இன்னும் ஒன்றிரண்டு மாதங்களில் அத்தகைய நிலைமை ஏற்படும். எனவே தற்போது உங்களைத் திருப்திப் படுத்த நான் எதுவும் செய்ய இயலாதவனுக இருக்கிறேன். இருந்தாலும், அடுத்த சில மாதங்களில் இங்கே நிலைமை அபிவிருத்தியடைந்து, நானும் தொல்லைகளிலிருந்து விடு பட்டிருப்பேனுயின், நீங்கள் கேட்டுள்ள தொகையை உங்களை மகிழ்விக்க வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன், மணி ஆர்டர் மூலம் அனுப்பிவைக்க நான் முயற்சிக்கிறேன்.

என்னுடைய சம்பாத்தியத்தில் உங்களுக்கும் கர்ஷன்தாஸுக் கும்* பங்குபெற உரிமை உண்டு என்பதை நான் ஒப்புக் கொள் கிறேன். எனினும் நீங்கள் உங்களுடைய சொந்த வசதிகளுக் காகச் செய்யும் செலவைக் காட்டிலும் மிகவும் குறைவாகவே எனது சொந்த வசதிகளுக்காக நான் செலவு செய்கிறேன். மற்ற எல்லா இனங்களுக்காகவும் செலவு செய்த பின் மீதி யிருப்பதே எனது சம்பாத்தியமாகும். இங்கே நான் தங்கியிருப்

* கர்ஷன்தாஸும் காந்திஜியின் மூத்த சகோதரர். அவர் லட்சுமி தாஸுக்கு இளையவர்.

பதன் நோக்கம் பணம் ஈட்ட வேண்டும் என்பதல்ல, மக்களுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்பதே. எனவே இங்குள்ள குடும்பத்திற்குச் செலவு செய்தது போக மீதியை மக்களின் நலனுக்காகச் செலவு செய்ய வேண்டியது எனது கடமையென நான் கருதுகிறேன். இங்கே நான் பணம் திரட்டிக் கொண்டிருப்பதாகத் தயவு செய்து எண்ணாதீர்கள். ஏற்கனவே உங்கள் இருவருக்குமாக நான் சற்றேறக் குறைய ரூ. *60,000* கொடுத்திருக்கிறேன் என்பதை இச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். அங்கே நான் இருந்த போது எல்லாக் கடன்களையும் தீர்த்தேன். மேற்கொண்டு தொகை எதுவும் தேவையில்லை என்று நீங்கள் என்னிடம் கூறினீர்கள். அவ்வாறு நீங்கள் கூறிய பிறகு தான் நான் இங்கே செலவு செய்யத் தொடங்கினேன். நேட்டாலில் நான் சேமித்து வைத்ததையெல்லாம் உங்களிடம் கொடுத்து விட்டேன். அந்தத் தொகையிலிருந்தோ அல்லது அதற்குப் பின் நான் சம்பாதித்த தொகைகளிலிருந்தோ ஒரு பைசா கூட வைத்துக் கொள்ளவில்லை. இதிலிருந்து நீங்கள் ஒரு விஷயத்தை அறிந்து கொள்ளலாம். அதாவது நான் இங்கிலாந்தில் இருந்தபோது எனக்காகச் செலவு செய்த ரூ. *13,000*-த்தை விட எத்தனையோ மடங்கு அதிகமான தொகையை நான் திருப்பிக் கொடுத்துவிட்டேன் என்பதுதான். இதை நான் கூறுவதிலிருந்து, உங்களுக்கு நான் ஏதோ உதவி செய்திருப்பதாகக் கருதுகிறேன் என்று அர்த்தமில்லை. உங்களுடைய கோபத்தைத் தணிப்பதற்காக அப்பட்டமான உண்மையையே கூறுகிறேன்.

என்னைப் பற்றி ஸ்ரீ பிட்ஸ்ஜெரால்ட் உங்களிடம் கூறியது, அவர் என்னைப் பற்றிய உண்மையான விவரங்களை அறிந்து கொள்ளவில்லை என்பதையே காட்டுகிறது.

உங்களுடைய கேள்விகளுக்கு இப்போது நான் பதில் அளிக்கிறேன். அக்கேள்விகளையும் இத்துடன் திருப்பி அனுப்பியுள்ளேன்.

என்னை இங்கிலாந்துக்கு அனுப்பியதன் நோக்கம் இதுதான்:

*1.* சகோதரர்களான நாம் மூவரும் ஏறக்குறைய நம்முடைய தந்தையின் அந்தஸ்தைப் பாதுகாப்பதுடன், நாம் சௌக்கியமாகவும், வாழ்க்கையின் நல்ல அம்சங்களையெல்லாம் அனுபவித்துக் கொண்டும் இருக்க வேண்டும் என்பதே.

*2.* என்னுடைய கல்விக்காக நம்மிடமிருந்த எல்லாவற்றையும் செலவு செய்ய நாம் தீர்மானித்தோம். அத் தீர்மானம் மிகவும் அபாயகரமானது.

*3.* நமக்கு உதவி செய்வதாக வாக்களித்தவர்கள் அவர்களுடைய வாக்குறுதியை நிறைவேற்றாததால், நீங்கள் உங்களுடைய ஆரோக்கியத்தையும் பொருட்படுத்தாமல் கடுமையாக

---

• லட்சுமிதாஸ் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருந்த கேள்விகள் என்ன என்பது தெரியவில்லை. அக் கடிதம் பாதுகாக்கப்படாததே அதற்குக் காரணம்.

உழைத்தீர்கள்; நான் கேட்ட தொகையை முணுமுணுக்காமல் மனப்பூர்வமாகக் கொடுத்தீர்கள். இது, உங்களுடைய பெருந் தன்மையையும், தம்பியினிடம் உங்களுக்கு உள்ள வாத்சல்யத்தை யுமே காட்டுகிறது.

4. இந்தக் கேள்வியில் குறிப்பிட்டுள்ள தாழ்ந்த நிலையை நாம் அடைந்தபோது, உங்களைத் திருப்தி செய்வதற்கும், எனக்காக நீங்கள் பட்ட கஷ்டங்களை மறக்கும்படி செய்வதற்கும், போதிய அளவு நான் சம்பாதிக்க வேண்டுமென எண்ணினேன். இது எனக்கு மேலெழுந்தவாரியாக நினைவிருக்கிறது.

5. இது எனக்கு ஞாபகமில்லை. ஏனெனில் நமது தந்தையே சொத்துக்களை விற்கத் தொடங்கிவிட்டார். அவருக்குப் பின் நாமும் அவ்விதமே செய்தோம்.

6. இது முற்றிலும் இயல்பேயாகும்.

7. உங்களுடைய ஊதாரித்தனமான, சிந்தனையற்ற வாழ்க்கை முறை காரணமாக இன்பங்களிலும், ஆடம்பரங்களிலும், பகட்டு களிலும் நீங்கள் பணத்தை வாரியிறைத்தீர்கள் என்பதை நான் ஆழ்ந்த வருத்தத்துடன் சொல்லத்தான் வேண்டும். நீங்கள் குதிரையும் வண்டியும் வைத்துக் கொண்டீர்கள்; நண்பர்களுக்கு விருந்துகள் அளித்தீர்கள், சுயநல நண்பர்களுக்காகப் பணத்தைச் செலவு செய்தீர்கள். ஒழுக்கம் கெட்டவை என்று நான் கருதும் சில காரியங்களுக்காகவும் சிறிது பணம் செலவு செய்தீர்கள்.

8. அவற்றை விற்றுவிட்டதாக எனக்கு ஞாபகம். அவ்விதம் விற்றதைக் குறித்து நான் வெட்கப்படவுமில்லை, வருந்தவுமில்லை.

9. உங்களுக்குத் தெரியாமல் ரகசியமாக அவற்றை விற்றதாக எனக்கு நினைவில்லை. அப்படியே விற்றிருந்தாலும் கூட, அதைக் குறித்து நான் கவலைப்படவில்லை.

10. அந்த நகைகளுக்குப் பதிலாக வேறு நகைகளை நான் வாங்காவிட்டாலும், அவை எவ்வளவு தொகை பெறுமானமுள்ள வையோ அதைக் காட்டிலும் அதிகமாகவே நான் ரொக்கமாகக் கொடுத்துவிட்டேன். நான் மீண்டும் அவ்வளவு தொகை கொடுக்க வேண்டும் என்று கோரப்பட்டால், அந்தத் தொகையை அவர் களுடைய பெயர்களில் நான் நிச்சயமாக 'டிபாசிட்' செய்வேன். நான் ஏதாவது மிச்சப்படுத்த முடிந்தால்தான் அவ்விதம் செய் வேன். அந்த நகைகளை மீண்டும் செய்யவேண்டும் என்று கூறு வதற்கு நான் இணங்க முடியாது. ஏனெனில் அவ்விதம் நகைகள் செய்ய நான் மறுக்கிறேன் எனில், அதற்குக் காரணம் அத்தகைய விஷயங்களையொட்டி எனது கொள்கைகள் அடியோடு மாறிவிட் டதேயாகும்.

11. இதைச் செய்வதன் மூலம் நான் ஏதோ உதவி புரிவதா கக் கருதவில்லை. எனக்காகத் தாங்கள் எதுவும் செய்யாமல்

இருந்திருந்தால் கூட, சொந்த சகோதரருக்காக நான் செய்ய வேண்டிய எதையும் ஒரு கடமையாகக் கருதி அவ்விதமே செய்வேன். அப்படியிருக்க, எனக்காக எவ்வளவோ செய்திருக்கும் ஒருவருக்கு நான் ஏதாவது செய்தால், அதை இரட்டிப்புக் கடமையாகவே கருதுவேன்.

*12.* எனது சம்பாத்தியங்களுக்கு நான் எஜமானன் அல்ல. ஏனெனில் அவற்றையெல்லாம் நான் மக்களுக்காக அர்ப்பணம் செய்திருக்கிறேன். நான்தான் சம்பாதிக்கிறேன் என்ற மயக்கம் எனக்கு இல்லை. பணத்தை நல்ல முறையில் விநியோகம் செய்வதற்காக கடவுள் எனக்குப் பணம் கொடுக்கிறார் என்றே நான் நம்புகிறேன்.

*13.* என்னுடைய சம்பாத்தியங்களிலெல்லாம் உங்களுக்கு ஒரு பங்கு உண்டு என்பதை நான் உணருகிறேன். ஆனால் இப்போது எனக்கு வருமானம் என்று எதுவுமே இல்லாததால், நான் உங்களுக்கு என்ன அனுப்ப முடியும்?

*14.* உங்களுடைய பங்கை நான் எனக்காகச் செலவு செய்து கொண்டிருக்கவில்லை. ஆனால் கடவுள் எனக்குக் கொடுக்கும் எல்லாத் தொகையையும் பொதுமக்களின் நன்மைக்காக நான் உபயோகித்துக் கொள்கிறேன். அதற்காகச் செலவு செய்தபின் மீதி இருக்குமாயின், அதில் உங்களுடைய பங்கை மாத்திரமல்ல, அந்தத் தொகை முழுவதையுமே உங்களுக்கு நான் அனுப்ப விரும்புகிறேன்.

*15.* உங்களையோ அல்லது வேறு எவரையோ கொள்ளையடித்ததாக எனக்கு எள்ளளவும் நினைவில்லை. நடைமுறையிலும், தார்மிக ரீதியாகவும் உயிருள்ள எல்லா ஜீவன்களையும் நான் சமமாகக் கருதுவதால், ஜீவனத்திற்கு என்னை நம்பிக்கொண்டிருப்பவர்கள் எனது சம்பாத்தியத்தில் அதிக உரிமை கோருவது பொருத்தமேயாகும். அதாவது திக்கற்றவர்களையும், அதன் காரணமாக எனது உதவியை நாடும் உரிமையுள்ளவர்களையும் காட்டிலும் எனது மனைவிக்கும் புதல்வர்களுக்கும் தான் நான் முதலில் உதவி புரியவேண்டும். அதற்கு மாறாக, எனது மனைவிக்கும் புதல்வர்களுக்கும் எனது உதவியை நாடாமலேயே ஜீவனம் செய்வதற்கு வசதிகள் இருக்குமாயின், அவர்களுக்கு உதவி புரிவதை நான் விட்டுவிடலாம். அப்போது நான் திக்கற்ற நிலையில் எனது உதவியை நாடுபவர்களுக்கே முதலாவதாக உதவி புரிய வேண்டும். உதாரணமாக கோகோவுக்கு* யாதொரு வருமானமும் இராமல், ஹரியோ ஏதாவது சம்பாதித்துக் கொண்டிருந்தால், அப்போது எனது உதவியைப் பெற முதல் உரிமையுள்ளவன் கோகோதான். அவர்கள் எல்லோரும் சம்பாதித்துக் கொண்டிருந்து, நீங்கள் சம்பாதிக்கவில்லையாயின், உதவி பெறுவதற்கு உங்களுக்கே முதல்

---

* கோகுலதாஸை கோகோ என்றும், தமது மூத்த மகனை ஹரிலாலை ஹரியோ என்றும் காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார்.

உரிமை உண்டு. நீங்கள் எல்லோரும் வேலை செய்து கொண்டிருந்து, புருஷோத்தமுக்கு வேலை இராவிடில், அவர் நம்முடனேயே இருந்துவருவாராயின், முதலில் உதவிபெற அவரே உரியவராவார். ஜீவனத்திற்கான செலவு பெறுவதற்கு மாத்திரமே அத்தகைய உரிமை உண்டு; மனத்தை மயக்கும் உலக இன்பங்களுக்கான செலவு பெறுவதற்கு அல்ல. இதன் சம்பந்தமாக வேறு சில்லறைக் கேள்விகள் எழுந்தாலும், அவற்றிற்கு நீங்களே உங்களுக்குப் பதில் அளிக்க முடியும். இதையெல்லாம் நான் யாதொரு கெட்ட எண்ணமுமின்றி எழுதியுள்ளேன்.

*16.* இந்தக் கேள்விக்குப் பதில், முன் கேள்விக்கு அளித்துள்ள பதிலில் அடங்கியிருக்கிறது.

*17.* இந்தக் கடிதம் முழுவதையுமோ அல்லது அதில் ஒரு பகுதியையோ நீங்கள் விரும்பும் எவரிடமும் காட்டுவதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. நம்மிடையே யார் மத்தியஸ்தம் செய்ய வேண்டும் என்பது எனக்குத் தெரியவில்லை. உங்கள் கட்டளையை ஏற்க நான் தயாராக இருக்கிறேன். எந்த விதத்திலும் நான் உங்களுக்குச் சமமானவன் அல்ல. எனவே யார் செய்வது சரி, யார் செய்வது தவறு என்று நம்மைப் பற்றி யார் தீர்ப்புக் கூற முடியும்? இருந்தாலும் இந்தக் கடிதத்தை நீங்கள் யாரிடம் காட்டுகிறீர்களோ அவர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதை நான் கேட்டு, எனக்குத் தெரிந்தவரையில் அவர்களுக்குப் பதில் எழுதுகிறேன்.

நீங்கள் என்னுடைய மூத்த சகோதரராதலின், உங்களை நான் போற்றி வணங்குகிறேன். நமது மூத்தோர்களை பயபக்தியுடன் நடத்தவேண்டும் என்றே நமது மதம் நமக்குக் கட்டளையிடுகிறது. அந்தக் கட்டளையில் எனக்கு முற்றிலும் நம்பிக்கை உண்டு. இருந்தாலும், சத்தியத்தில் எனக்கு இன்னும் அதிக நம்பிக்கை உண்டு. இதுவும் நமது மதத்தினால் போதிக்கப்பட்டுளதேயாகும். நான் கூறுவதில் ஏதாவது ஆட்சேபகரமானதாகத் தோன்றினால், உங்களுடைய கேள்விகளுக்கெல்லாம் சத்தியத்திற்கு எள்ளளவும் முரண்பாடின்றி நான் பதில் அளித்திருக்கிறேன்; உங்கள் மனத்தைப் புண்படுத்த வேண்டும் என்றோ அல்லது அவமரியாதையாக நடந்து கொள்ள வேண்டும் என்றோ அவ்விதம் பதில் அளிக்கவில்லை என்று நான் கூறும் உறுதிமொழியைத் தயவு செய்து அங்கீகரியுங்கள். முன்பு நம்மிடையே கருத்து வேற்றுமையோ அல்லது தப்பெண்ணமோ எதுவும் இல்லை. எனவே உங்களுக்கு என்மீது அன்பு இருந்தது. ஆனால் இப்போது உங்களுக்கு என்மீது அன்பு இல்லை. நான் கூறியது போல் என்னுடைய கருத்துகள் மாறுதல் அடைந்திருப்பதே அதற்குக் காரணமாகும். இந்த மாறுதல் சிறிதும் விரும்பத்தக்கதல்ல என்று நீங்கள் கருதுவதால், நான் அளித்துள்ள விடைகளில் சில நீங்கள் ஒப்புக் கொள்ளத் தகாதவையாக இருக்கும் என்பதை நான் முற்றிலும் புரிந்து கொள்ள முடியும்.

ஆனால் நான் சத்தியத்தை நாடுவதே, எனது கருத்துகளில் ஏற்பட்டுள்ள மாறுதலுக்குக் காரணமாகும். எனவே அவற்றை யொட்டி நான் எதுவும் செய்ய முடியாதவனாக இருக்கிறேன். உங்களிடம் எனக்கு உள்ள பக்தி முன்போலவே இருந்து வருகிறது. இப்போது அது ஒரு புதிய உருவை அடைந்திருக் கிறது, அவ்வளவுதான். எப்போதாவது நாம் சந்திக்கும்போது, நீங்கள் விரும்பினால், இதையெல்லாம் பற்றி மிக மிகப் பணி வுடனும் விவரமாகவும் உங்களிடம் விளக்கிக் கூறுகிறேன். எனினும் இந்த நாட்டை விட்டு எப்போது புறப்பட முடியும் என்பதை என்னால் கூற இயலாது. விசித்திரமான சந்தர்ப்பங் களும், நான் மேற்கொண்டுள்ள பல்வேறு கடமைகளுமே அதற்குக் காரணமாகும்.

சிறந்த நோக்கத்துடனேயே இவற்றையெல்லாம் எழுதி யிருக்கிறேன் என்று நான் கூறுவதைத் தயவு செய்து நம்புங்கள். அவ்விதம் நீங்கள் நம்பினால் உங்களுக்கு என்மீதுள்ள அதிருப்தி மறைந்துவிடும். நான் எங்கேயாவது தவறு செய்திருப்பதாக நீங்கள் கருதினால், தயவு செய்து அதைப் பொறுத்துக் கொள் ளுங்கள்.

உங்களுடைய கடிதத்தை ஹரியோவுக்குக் காட்டினேன். நீங்கள் மிகுந்த ஆத்திரத்துடன் எழுதியிருக்கிறீர்கள். இந்தக் கடிதத்திற்கு ஒரு நகல் எடுக்கும்படி அவனிடம் கூறியிருக் கிறேன். நீங்கள் சிரமமின்றி வாசிக்கவே அவ்விதம் செய்திருக் கிறேன். மேலும் நீங்கள் கோபத்துடன் எழுதியுள்ள கடிதத் திற்கு நான் எப்படி பதில் எழுதியிருக்கிறேன் என்பதையும் அவன் அறிந்து கொள்ளலாம் அல்லவா? இன்னும் அதிலிருந்து அவன், அவனுடைய கர்மவினைக்குத் தகுந்தவாறு அவன் அறி வுக்கு எட்டியதைத் தெரிந்து கொள்ளலாம்.

பகுதி பதினான்கு

# தீனபந்து ஆண்ட்ரூஸ்

மகாத்மா காந்தியுடன் மிகவும் நெருங்கிய நட்புக் கொண்டிருந்த ஐரோப்பிய நண்பர்களில் ரவரண்ட் ஸி. எப். ஆண்ட்ரூஸுக்குத் தான் முதல் இடம் கொடுக்க வேண்டும். ஸ்ரீ ஆண்ட்ரூஸ் (1871-1940) இந்தியர்களுக்காக அரும்பாடு பட்டார். தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்காக அவர் செய்த தியாகத்தை காந்திஜி பாராட்டியிருப்பதிலிருந்தே ஆண்ட்ரூஸின் பெருமையைத் தெரிந்து கொள்ளலாம். கவி ரவீந்திரநாத் தாகூரினால் ஸ்தாபிக்கப்பட்ட விசுவபாரதி பல்கலைக்கழகத்தில் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார் "அவர் இந்தியராக வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு விஷயத்திலும் இந்தியரைப் போலவே நடந்து கொண்டார். தாம் ஓர் உண்மையான ஹிந்துவாகவும், முஸ்லிமாகவும் இருக்க வேண்டுமாயின், அடிப்படையில் தாம் ஓர் உண்மையான கிறிஸ்தவராக இருக்க வேண்டும் என்று ஆண்ட்ரூஸ் கூறினார்" என்று காந்திஜி குறிப்பிட்டுள்ளார். அவர் பல ஆண்டுகள் இந்திய ஏழை மக்களுக்குத் தொண்டு புரிந்ததன் காரணமாக தீனபந்து ஆண்ட்ரூஸ் என்று புகழ் பெற்றார். அவருக்கு காந்திஜி எழுதிய கடிதங்கள் இந்தப் பகுதியில் வெளியாகியுள்ளன :

## 1

பம்பாய்,
*பிப்ரவரி 7, 1915*

எனது அன்புள்ள சார்லி,*

கடிதப் போக்குவரத்தைக் கவனிப்பதற்குக் கூட எனக்கு நேரம் கிடைக்கவில்லை. ஸ்ரீ செதல்வாட் வருவதற்காக நான் காத்துக் கொண்டிருப்பதால், இதை எழுத சிறிது நேரம் கிடைத்தது. நான் உங்களுடன் இருக்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை. இன்றிரவு நாங்கள் புனாவுக்குச் செல்லுகிறோம். 18-ம் தேதியோ அல்லது அதற்கும் முன்போ நான் போல்பூருக்குச் செல்லுவேன். தேதி நிர்ணயமான உடனே உங்களுக்கு ஒரு தந்தி கொடுக்கலாமென நம்புகிறேன். அன்புடன்,

தங்கள்,
**மோகன்**

## 2

அகமதாபாத்,
*ஜூன் 30, 1916*

எனது அன்புள்ள சார்லி,

தோடாராமை அங்கே வைத்துக் கொண்டிருப்பதால் யாதொரு பலனும் இல்லை. அவரை நான் சந்தித்தேன். அவர் உதவி புரியமாட்டார். ஒப்பந்தத் தொழிலாளர் முறை ஒழிந்தாக வேண்டும். அது தீமையானது என்பதுடன், அடிமைத் தனத்தின் ஓர் அம்சமுமாகும். இன்றே அதை ஒழிப்பது சாத்தியமெனில், யாருடைய நலனையும்பற்றி ஆலோசித்துக் கொண்டிராமல் அதை ஒழித்துவிட வேண்டும்.

அன்புடன்,
**மோகன்**

---

* ஒரு சமயம் ஆண்ட்ரூஸ் காந்திஜியிடமிருந்து ஒரு வெகுமதி கோரினார். தம்மை 'சார்லி' என்று அழைக்க வேண்டும் என்பதே அவர் காந்திஜியிடம் கோரிய வெகுமதியாகும். எனவே காந்திஜி ஆண்ட்ரூஸை 'சார்லி' என்றே அன்புடன் அழைப்பது வழக்கம். அதுபோலவே காந்திஜியை மோகன் என்று அழைக்க தாம் அனுமதிக்கப்படவேண்டும் என்றும் ஆண்ட்ரூஸ் காந்திஜியைக் கேட்டுக் கொண்டார்.

## 3

(தந்தி)*

அகமதாபாத்,
பிப்ரவரி 26, 1917

வெள்ளிக்கிழமைக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக நான் கராச்சிக்குச் செல்லுகிறேன். கல்கத்தா கூட்டம் 7-ம் தேதி நடைபெறுகிறது என்று நினைத்தே அதை ஒப்புக்கொண்டேன். எனக்கு வசதியாக இருக்கும்படியாக பார்னஸ் மகா நாட்டின் தேதியை நிர்ணயம் செய்யுங்கள். துர்க்காதாஸ் அத்வானி மேற்பார்வை, கராச்சி என்ற விலாசத்துக்குத் தந்தி கொடுங்கள்.

அன்பு,
**காந்தி**

## 4

மோதிஹாரி,
மே 23, 1918

வில்லி† கைதியானதைப் பற்றி நான் வாசித்தபோது என் மனம் நெகிழவில்லை. வைஸ்ராயின் உணர்ச்சியைக் குறித்து எனக்கு அனுதாபமே ஏற்படுகிறது. நாசகரமான யுத்தம் நடந்து கொண்டிருக்கையில், இத்தகைய விஷயங்களைப் பற்றி விசாரிக்க வைஸ்ராய் ஏன் முற்படவேண்டும்? வில்லியும் நாமும் பணிவுடன் துன்பத்தை அநுபவிக்க வேண்டியதே. வில்லியின் வழக்கில் கொள்கை சம்பந்தமான பிரச்னை எதுவும் எழவில்லை; நிறத் துவேஷம், பொது மக்களின் உணர்ச்சி போன்றவற்றிற்கும் அதில் இடமில்லை. தங்களுடைய கருத்துகள் அல்லது செயல்கள் காரணமாக சிலர் தாங்கள் சிறைப்படுவதை திருப்தியுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும். இப்போது அவசியமாகச் செய்ய

---

* பிப்ரவரி 26-ம் தேதி ஆண்ட்ரூஸ் அனுப்பிய பின்கண்ட தந்திக்குப் பதிலாகவே காந்திஜி ஆண்ட்ரூஸுக்கு மேற்கண்டவாறு தந்தி கொடுத்தார்: "மார்ச் 8-ம் தேதி பண்டிதரும் மற்றவர்களும் அடங்கிய ஒரு மகாநாட்டிற்கு பார்னஸ் ஏற்பாடு செய்துள்ளார். மகாநாட்டில் நீங்களும் இருக்கவேண்டியது அவசியமாகும்."

† டபிள்யூ. டபிள்யூ. பியர்சனையே 'வில்லி' என்று காந்திஜி பரிவுடன் குறிப்பிட்டிருக்கிறார். ஸ்ரீ பியர்சன் ஸ்ரீ ஆண்ட்ரூஸுடன் பிஜித் தீவுகளுக்குச் சென்று இந்தியத் தொழிலாளர்களின் நலனுக்காக உழைத்தவர்.

வேண்டியது என்னவெனில், வில்லியுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ள வேண்டியதேயாகும். சுதந்திரம் அவருக்குத் தேவையாயின், அவர் தமது சுதந்திரத்திற்காகப் போராடி அதை அடைவார். எனவே அவரைப் பற்றிக் கவலைப்படுவது அவருக்கு அநீதி செய்வதாகும். அவர் இருக்கும் இடத்தில் அவர் மகிழ்ச்சியுடன் இருப்பார் என்று நான் நிச்சயமாக எண்ணுகிறேன். இவ்விஷயமாக பொது மக்கள் கிளர்ச்சி செய்வது அவசியமற்றதென நான் கருதுகிறேன். என்னைப் போலவே நீங்களும் கருதினால், அவருக்குத் தொல்லை விளைவித்ததற்காக வைஸ்ராய்க்கு ஆண்மையுடன் ஒரு கடிதம் எழுதுங்கள். சோர்ந்து விழுந்துவிடாமல், யுத்தத்தின் பயங்கரமான பொறுப்புகளைப் பல ஆங்கிலேயர்கள் சமாளித்துவருகிறார்கள் அல்லவா? அவர்கள் யோகிகளாக இருக்க வேண்டும் என்று நான் சிற்சில சமயங்களில் கருதுவது உண்டு. எனினும் அவர்களுடைய யோகம் அதைக் காட்டிலும் சிறந்த லட்சியத்திற்காக மேற்கொள்ளப்படுமாயின், அவர்கள் மோட்சம் அடைவதற்குத் தகுதி வாய்ந்தவர்களாவர்!

## 5

நாடியாட்,
ஜூன் 23, 1918

மாபிக்கு* நான் எழுதிய கடிதத்தில், நண்பனாக இருந்தாலும், விரோதியாக இருந்தாலும் நான் கொல்லமாட்டேன் என்று குறிப்பிட்டுள்ளேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். யுத்தம் செய்ய விருப்பம் உள்ளவர்கள், கோழைத்தனத்தினாலோ அல்லது பிரிட்டிஷார் மீதுள்ள துவேஷத்தினாலோ யுத்தம் செய்யமாட்டோம் என்று கூறினால், அவர்களைப் பொறுத்தமட்டில் எனது கடமை என்ன? “எனது வழியை நீங்கள் பின்பற்றினால் மிகவும் நன்மையே. ஆனால் அவ்விதம் பின்பற்ற முடியாவிடில், நீங்கள் கோழைத்தனத்தையோ அல்லது துவேஷத்தையோ விட்டுவிட்டு யுத்தத்தில் ஈடுபட வேண்டியது கடமையாகும்” என்று அவர்களிடம் நான் சொல்ல வேண்டாமா? சொல்ல இயலாத ஒருவனுக்கு நீங்கள் அகிம்சையைப் போதிக்க முடியாது. மௌனத்தின் அழகையும் பெருமையையும் ஊமையான ஒருவன் பாராட்டும்படி நீங்கள் செய்ய முடியாது. மௌனம் மிக மிகச் சிறந்தது என்பதை நான் அறிந்திருந்தாலும், ஊமைக்குப் பேசும் சக்தி ஏற்படுவதற்கான முறைகளைக் கைக் கொள்ள நான் தயங்கமாட்டேன். எந்த அரசாங்கத்தினிடமும் எனக்கு நம்பிக்கை இல்லை. இருந்தாலும், தான் தோன்றித் தனமான ஆட்சி

* 1916-லிருந்து 1922 வரையில் இந்திய வைஸ்ராயாக இருந்த லார்டு செம்ஸ்போர்டுக்கு ஜே. எஸ். மாபி அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தார்.

முறையைக் காட்டிலும் பார்லிமெண்டு ஆட்சி முறை ஒருவேளை சிறந்ததாக இருக்கலாம். மிகக் குறைந்த அளவு அருவருக்கத் தக்க முறையில் ஹிம்சையை மேற்கொள்ளும்படி யுத்தத்தில் ஈடுபடவிரும்புவோரை நான் கேட்டுக் கொள்வதன் மூலம், அகிம்சை அல்லது சத்தியாக்கிரக சித்தாந்தத்தை சிறந்த முறையில் பரப்ப முடியும். இந்த உண்மை உங்களுக்குத் தெளிவாகத் தெரிகிறதென்றே நினைக்கிறேன். அவ்விதம் செய்வதன் மூலம் அகிம்சையின் உயர்வை அவர்கள் நன்கு உணர்ந்து கொள்ளும்படி செய்வதில் நான் வெற்றிபெறலாம். நிலைமை இன்னும் உங்களுக்குத் தெளிவாகப் புரியும்படி நான் செய்யவில்லையாயின், நீங்கள் இங்கு வரும்போது அதைப் புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.†

## 6

நாடியாட்,
*ஜூலை 6, 1918*

எனது அன்புள்ள சார்லி,

உங்களுடைய கடிதங்கள் கிடைத்தன. அவற்றை நான் ஒரு பொக்கிஷமாகக் கருதுகிறேன். அவை ஓரளவுதான் எனக்கு ஆறுதல் அளிக்கின்றன. எனக்கு ஏற்பட்டுள்ள சங்கடங்கள் நீங்கள் குறிப்பிட்டிருப்பதைக் காட்டிலும் ஆழ்ந்தவை. நீங்கள் எழுப்பியுள்ள கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் அளிக்க முடியும். இக் கடிதத்தில் எனது சொந்தக் கருத்துகளை எழுத்து மூலம் குறிப்பிட நான் முயற்சிக்க வேண்டும். மற்றெல்லாவற்றையும் விலக்கிவிட்டு அவைதான் இப்போது என் மனத்தை ஆட்கொண்டிருக்கின்றன. நான் ஓர் யந்திரத்தைப் போலவே மற்ற எல்லா அலுவல்களிலும் ஈடுபட்டுவருகிறேன் என்று தோன்றுகிறது. இந்த தீவிரமான சிந்தனை எனது உடல் நிலையைக் கூட பாதித்திருக்கிறது. யாருடனும் பேசவும், எதுவும் எழுதவும் எனக்கு விருப்பமில்லை. என்னுடைய இந்த சிந்தனைகளை எழுதக் கூட எனக்கு விருப்பமில்லை. அதனாலேயே நான் மீண்டும் வாயால் கூறி எழுதிக் கொள்ளும்படி செய்கிறேன். எனது சிந்தனைகளைத்

† காந்திஜியின் மேற்கண்ட கடிதத்திற்கு ஆண்ட்ரூஸ் அளித்த பதில் பின்வருமாறு: "தனக்கென்று சொந்த வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் ஒரு சுதந்திர இந்தியாதான் அகிம்சையின் மகோன்னதமான உதாரணத்தை உலகிற்கு எடுத்துக் காட்ட முடியும்; தற்போதுள்ள அடிமை இந்தியா அவ்விதம் எடுத்துக்காட்ட முடியாது. அப்போது கூட, ஆக்கிரமிப்புப் படையை எதிர்ப்பதற்காக ஒரு நிரந்தரமான ராணுவத்தைச் சிருஷ்டிக்க முற்படாமல், ஆன்மிக சக்தியினால் மாத்திரமே இந்தியா சுதந்திரம் பெறவேண்டும் என்று நீங்கள் நினைக்க முடியாதா?"

தெளிவாக எடுத்துக் கூற முடியுமா என்று பார்ப்பதற்காகவே அவ்வாறு செய்கிறேன். எனது சங்கடங்களின் ஆழத்தை இன்னும் நான் கண்டுபிடிக்கவில்லை; அவற்றைத் தீர்த்துக் கொள்ளவுமில்லை. அவற்றைத் தீர்ப்பதால், உடனடியாக நான் செய்யவேண்டிய வேலைக்குப் பாதகம் ஏற்படாது. எனினும் அம் முயற்சி தோல்வியுறுமா என்பதுபற்றி இப்போது என்னால் எதுவும் கூறமுடியாது. நான் உயிருடன் இருந்தால், நான் எப்படியாவது அந்த ரகசியத்தைக் கண்டுபிடித்தாகவேண்டும்.

"ஓர் இனம் என்ற முறையில் இந்தியர்கள் பண்டைய காலத்தில் ரத்த வெறியைக் கண்டித்தார்கள்; மனப் பூர்வமாக ஜீவகாருண்யத்தையே மேற்கொண்டார்கள்" என்று நீங்கள் கூறுகிறீர்கள். இது சரித்திர பூர்வமாக உண்மையா? மகாபாரதத்திலோ அல்லது ராமாயணத்திலோ அத்தகைய மன நிலை இருந்ததற்கான அறிகுறியை நான் காணவில்லை. ஆன்மிக தத்துவத்தில் வால்மீகியைக் காட்டிலும் மேலான, எனக்குப் பிடித்தமான துளசிதாசரின் ராமாயணத்தில் கூட அந்த அறிகுறியை நான் காணவில்லை. இந்த இதிகாசங்களின் ஆன்மிக சம்பந்தமான அர்த்தத்தைப் பற்றி இப்போது நான் சிந்திக்கவில்லை. அவதார புருஷர்கள் ரத்த வெறி கொண்டும், வஞ்ச புத்தியுடனும், விரோதிகளிடம் இரக்கமற்றும் இருந்தார்களென வர்ணிக்கப்பட்டிருக்கிறது. பகைவர்களை எதிர்த்து வெற்றி பெறுவதற்காக அவர்கள் தந்திரங்களைக் கையாண்டார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அப்போது நடந்த பெரிய யுத்தங்களும், இப்போதைய யுத்தங்களைப் போலவே பிரமாதமான உற்சாகத்துடன் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. அப்போது யுத்த வீரர்கள் நாசகரமான ஆயுதங்களுடன் போர் செய்திருக்கிறார்கள். ராமபிரானைப் புகழ்ந்து துளசிதாசர் இயற்றியுள்ள மிகவும் அருமையான கவிதை, விரோதிகளை வீழ்த்துவதில் ராமனுக்குள்ள சக்திக்கே முதலாவது ஸ்தானம் கொடுத்திருக்கிறது.

பின்னர் முகம்மதிய சகாப்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். போர் செய்வதில் ஹிந்துக்களின் ஆர்வம் முஸ்லிம்களின் ஆர்வத்திற்கு எவ்விதத்திலும் குறைந்ததாக இல்லை. எனினும் ஹிந்துக்கள் கட்டுக் கோப்பின்றி சீர்குலைந்தும், உடல் பலம் குன்றியும், உட்பூசல்களால் பிளவுபட்டும் இருந்தார்கள். ஹிந்துக்களுக்கு இருப்பதாக நீங்கள் கூறும் துறவு உணர்ச்சியைப் பற்றி, மனு விதித்துள்ள சட்டங்களில் எதுவும் குறிப்பிடப்படவில்லை. எல்லா ஜீவன்களிடமும் சகிப்புத்தன்மையும் பொறுமையும் காட்ட வேண்டும் என்ற சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்ட புத்த மதமும் குறிப்பிடத்தக்கவாறு தோல்வியுற்றது. கூறப்படும் கட்டுக் கதைகள் உண்மையாயின், இந்தியாவிலிருந்து புத்த மதத்தை ஒழிப்பதற்காக மகான் சங்கராச்சாரியார்கூட, சொல்ல முடியாத கொடுமைகளை இழைக்கத் தயங்கவில்லை. அதை ஒழிப்பதில் அவர் வெற்றியும் பெற்றார்!

அதன் பின் ஆங்கிலேயரின் சகாப்தம் வந்தது. அப்போது மக்கள் ஆயுதங்களைத் துறக்கும்படி நிர்ப்பந்தம் செய்யப்பட்டனர். ஆனால் அவர்கள் ஆயுதங்களைத் துறந்தனர் என்றாலும், கொல்லுவதில் உள்ள ஆர்வத்தைத் துறக்கவில்லை. ஜைனர்களிடையே கூட அந்தச் சித்தாந்தம் தோல்வியடைந்தது. ரத்தம் சிந்துவதில் அவர்களுக்கு மூடநம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட பயம் இருந்தாலும், ஐரோப்பியரைப் போல் ஜைனர்களும் பகைவர்களின் உயிரைத் துச்சமாகவே கருதுகின்றனர். நான் கூறுவதன் பொருள் என்னவெனில், உலகிலுள்ள மற்றவர்களைப்போல் ஜைனர்களும் பகைவர்களின் நாசத்தைக் குறித்து ஆனந்தம் அடைவார்கள். ஆனால் இந்தியாவைப் பொறுத்தமட்டில் ஒன்று கூற முடியும். அதாவது மற்ற இடங்களைக் காட்டிலும் இந்தியாவில் அந்தச் சித்தாந்தத்தைப் பரப்புவதற்கு தீவிர முயற்சிகள் செய்வதில் தனி நபர்கள் அதிக வெற்றிபெற்றிருக்கிறார்கள். எனினும் அச் சித்தாந்தம் மக்களிடையே வேரூன்றியிருக்கிறது என்று நம்புவதற்கு ஆதாரம் எதுவும் இல்லை.

“இந்தியர்களுக்கு அவர்கள் அறியாமலேயே அந்த உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. சாத்துவிகமான அந்த உணர்ச்சியை எந்தச் சமயத்திலும் எழுப்பலாம் என்பதை நீங்களே செய்து காட்டியிருக்கிறீர்கள்” என்றும் நீங்கள் கூறுகிறீர்கள். அது உண்மையாக இருக்கக் கூடாதா என்பதே எனது விருப்பமாகும். ஆனால் நான் அவ்விதம் எதுவும் செய்து காட்டவில்லை. பலவீனர்களின் ஆயுதம் என்ற முறையிலேயே சாத்துவிக எதிர்ப்பை மக்கள் மேற்கொண்டிருக்கிறார்கள் என்று இங்குள்ள நண்பர்கள் என்னிடம் கூறியபோது, நான் அதை ஆதாரமற்ற அவதூறு என்று கூறி நகைத்தேன். ஆனால் அவர்கள் கூறியது சரியே; நான் நகைத்ததுதான் தவறாகும். நானும் என் சக ஊழியர்களில் சிலரும் மாத்திரமே எங்களுடைய பலம் காரணமாக சாத்துவிக எதிர்ப்பைக் கைக் கொண்டோம். அதுதான் சத்தியாக்கிரகம் என்று வர்ணிக்கப்பட்டது. ஆனால் பெரும்பாலோரும், வேறு பலாத்கார முறைகளைக் கைக்கொள்ளும் பலம் இராததாலேயே வேறு வழியின்றி வெறும் சாத்துவிக எதிர்ப்பில் ஈடுபட்டார்கள். இந்த உண்மையை கெய்ராவில் நான் அடிக்கடி நிதர்சனமாகக் கண்டேன். இங்குள்ள மக்கள், கட்டுப்பாடு எதுவும் இல்லாததால் என்னிடம் ஒளிவு மறைவின்றிப் பேசினார்கள். வேறு முறைகளை எடுத்துக்கொள்ளும் பலம் தங்களுக்கு இராததாலேயே எனது பரிகார முறையை அவர்கள் மேற்கொண்டதாக என்னிடம் மனம் விட்டுக் கூறினர். என்னுடைய முறையைக் காட்டிலும் பலாத்கார முறையே அதிக ஆண்மை வாய்ந்ததென்பது அவர்களுடைய நிச்சயமான அபிப்பிராயம் என்றும் கூறினர். சம்பாரணிலோ அல்லது கெய்ராவிலோ மக்கள் அச்சமின்றி தூக்குமேடை ஏறவோ அல்லது சரமாரியான தோட்டாக்களை எதிர்த்து நிற்கவோ மாட்டார்களென அஞ்சுகிறேன். இருந்தாலும், ‘நாங்கள் வரி செலுத்த

மாட்டோம்', 'நாங்கள் உங்களுக்காக உழைக்கமாட்டோம்' என்று அவர்கள் கூறுகிறார்கள். எனினும் தாங்களே பாதுகாத்துக் கொள்ள அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டாலன்றி, அவர்கள் மீண்டும் அஞ்சாநெஞ்சத்துடன் இருப்பது இயலாத காரியம். மனிதன் முழுபலத்துடனும் இருந்து, பகைவர்களின் முன்னிலையில் நேருக்கு நேராக அஞ்சா நெஞ்சத்துடன் நிற்கும்போதுதான் அவனுக்கு அகிம்சை உபதேசிக்கப்பட்டது. அகிம்சையின் தத்துவத்தைப் பூரணமாக அறிந்து கொள்வதற்கும், அதை நடைமுறையில் மேற்கொள்வதற்கும், உடல் பலம் பூரணமாக வளர்ச்சியடைய வேண்டியது இன்றியமையாததென எனக்குத் தோன்றுகிறது.

மேற்கிலிருந்தோ அல்லது கிழக்கிலிருந்தோ, வடக்கிலிருந்தோ அல்லது தெற்கிலிருந்தோ வரும் கூட்டுப் படைகளை இந்தியா தன்னுடைய தார்மிக சக்தியினால் கரையேறவிடாமல் தடுக்க முடியும் என்று நீங்கள் கூறுவதை நான் ஒப்புக் கொள்கிறேன். எனினும், அத்தகைய தார்மிக சக்தியை எப்படி வளர்த்துக் கொள்ள முடியும் என்பதே கேள்வியாகும். இந்த தார்மிக சக்தியின் அரிச்சுவடியை இந்தியா அறிந்து கொள்ளு முன், இந்தியா உடல் பலம் பெற்று விளங்க வேண்டியிருக்கும் அல்லவா? ஒவ்வொரு நாளும் காலையில் கோடிக்கணக்கானவர்கள் உலகத்தைச் சிருஷ்டித்த ஆண்டவனுக்கு இவ்விதம் அபசாரம் செய்கிறார்கள் :

"நான் மாறுதலற்ற பிரம்மம்; பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களின் சேர்க்கை அல்ல. அந்த பிரம்மம் நான்தான். எனது உள்ளத்தின் ஆழ்ந்த புனித ஸ்தானத்தில் குடியிருக்கும் தத்துவமாக ஒவ்வொரு நாளும் காலையில் அதை நினைவு கூர்கிறேன். அதன் அருளாலேயே நாவன்மை ஏற்படுகின்றது. அதையே வேதங்கள் 'நேதி', நேதி' ('இது அல்ல,' 'இது அல்ல') என்று வர்ணிக்கின்றன."

மேற்கண்ட சுலோகத்தைப் பாராயணம் செய்வதன் மூலம் நாம் ஆண்டவனுக்கு அபசாரம் செய்கிறோம் என்றே நான் கூறுகிறேன். ஏனென்றால், அதன் அற்புதமான தத்துவத்தைப் பற்றி ஆலோசிக்காமலேயே அந்த மந்திரத்தைக் கிளிப்பிள்ளையைப் போல் கூறுகிறோம். அந்த சுலோகத்தில் அடங்கியுள்ள அர்த்தத்தை ஒரே ஒரு இந்தியர் தனக்குத் தானே உணர்ந்து நடந்து கொண்டால் கூட, இந்தியக் கடற்கரைகளை அணுகும் மகாவல்லமை பொருந்திய ராணுவத்தை எதிர்த்துத் தடுக்கப் போதுமானது. ஆனால் அத்தகைய சக்தி இன்று நம்மிடம் இல்லை. இந்திய பூமியில் சுதந்திரமும் அச்சமின்மையும் நிலவும் ஒரு சூழ்நிலை ஏற்படும் வரையில், அந்த சக்தி நமக்கு உண்டாகாது. அப்படிப்பட்ட சூழ்நிலையை எப்படி ஏற்படுத்துவது? மனிதனுடைய பலாத்காரத்திலிருந்தோ அல்லது மிருகத்தின் பலாத்காரத்திலிருந்தோ தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ள

முடியும் என்ற உணர்ச்சி இந்தியாவிலுள்ள பெரும்பாலான மக்களுக்கும் ஏற்பட்டாலன்றி, அத்தகைய சக்தி உண்டாகாது. எனக்குள்ள கஷ்டத்தை இப்போது நான் கூற முடியுமென நினைக்கிறேன். அதாவது, மோட்சம் என்றால் என்ன என்பதை ஒரு குழந்தைக்கு நான் உபதேசிப்பதற்கு முன், அது பூரண மனிதனாக வளருவதற்கு நான் இடம் கொடுக்க வேண்டும் என்பது தெளிவாகும். அதற்கு உடலினிடம் ஓரளவு பாசம் ஏற்படவும் நான் அனுமதிக்க வேண்டும். பின்னர் அது உடலைப் பற்றியும், தன்னைச் சுற்றியுள்ள உலகத்தைப் பற்றியும் அறிந்து கொள்ளும்பொழுது, உடல், உலகம் ஆகியவற்றின் நிலையற்ற தன்மையை அதற்கு எளிதில் நான் நிரூபிக்க முடியும்; இந்த உடல் சுகபோகங்களில் திளைப்பதற்காகக் கொடுக்கப்படவில்லை, அவற்றிலிருந்து விடுதலை பெறுவதற்காகவே கொடுக்கப்பட்டது என்பதை அது உணரும்படியும் செய்ய முடியும். அதுபோலவே, யாருடைய மனத்திலும் அகிம்சைச் சித்தாந்தத்தை அதாவது கலப்பற்ற அன்பைப் புகட்டுவதற்கு நானும் காத்திருக்க வேண்டும்; பலமும் ஆரோக்கியமும் உள்ள விறுவிறுப்பான உடலில் மனம் பூரண வளர்ச்சி பெற்று பக்குவம் அடையும் வரையில் காத்திருக்க வேண்டும். இப்போது, அக் கொள்கையை நடைமுறையில் அமுலுக்குக் கொண்டுவரும்போதுதான் எனக்கு சங்கடம் ஏற்படுகிறது. விறுவிறுப்பான உடலைப் பெற்றிருப்பது என்பதற்கு என்ன பொருள்? ஆயுதப் பயிற்சியில் இந்தியா எவ்வளவு தூரம் செல்ல வேண்டியிருக்கும்? ஒவ்வொரு தனி நபரும் அந்தப் பயிற்சி பெற வேண்டுமா? அல்லது ஒரு சுதந்திரமான சூழ்நிலை ஏற்படுவது போதுமானதா? அதாவது மக்கள் ஆயுதம் தாங்கும்படி நேராமலேயே, அவர்களுடைய சூழ்நிலையிலிருந்து அவசியமான தைரியத்தைப் பெறுவது போதுமானதா? இறுதியாகக் கூறப்பட்டிருப்பதுதான் சரியான கருத்து என்பது எனது நம்பிக்கையாகும். எனவே தற்போதுள்ள நிலைமையில், ராணுவத்தில் சேரும்படி ஒவ்வொரு இந்தியரையும் நான் அழைப்பது முற்றிலும் சரியே. அதே சமயத்தில், ரத்த வெறி காரணமாக அவர் ராணுவத்தில் சேரவில்லை என்றும், ஆனல் மரணத்தைக் கண்டு அஞ்சாமல் இருக்கக் கற்றுக் கொள்வதற்காகவே அதில் சேருகிறார் என்றும் நான் அடிக்கடி கூறி வருகிறேன். சர் ஹென்ரி வேன் கூறியிருப்பதைப் பாருங்கள். மார்லி எழுதிய ‘நினைவுகள்’ (இரண்டாம் பாகம்) என்ற நூலிலிருந்து இதை எடுத்துக் கூறுகிறேன்:

“உலகத்திலுள்ள பெரும் சமூகங்களுடைய கொள்கையில் மரணம் மிகவும் உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கிறது. வாழ்க்கையில் சில விஷயங்களை விரும்புவது வீர தீரமும், பெருந்தன்மையும் வாய்ந்த மனத்தையுடையவர்களின் தன்மையாகும்; மரணத்தைக் கண்டு அஞ்சாமையும் அத்தகைய மனத்தின் ஓர் அம்சமாகும். சிறந்த முறையில் மரணம் அடைவதையே உண்மையான, இயற்கையான விவேகம் வாழ்க்கையின் இறுதி லட்சியமாகக் கருதுகிறது. உண்மையில், யார் சிறந்த முறையில் மரணம் அடையக் கற்றுக்

கொள்கிறாரோ அவர்தான் வாழ்க்கையைச் சீரிய வழியில் நடத்திச் செல்லுபவர் ஆகிறார். சிறந்த விதத்தில் மரணம் அடைவதே வாழ்க்கையின் மிகமிக முக்கிய மான அம்சமாகும், வாழ்க்கையின் கடமையுமாகும். மரணத்தைப் பற்றிய அறிவு தான் சுதந்திரத்தைப் பற்றிய அறிவாகும். அதுதான் உண்மையான சுதந்திர நிலை, எதையும் அஞ்சாநெஞ்சத்துடன் நோக்கும் வழி. நன்றாகவும், திருப்தி யாகவும், அமைதியாகவும் வாழும் வழியும் அதுதான். வாழ்வது ஒரு சுமை யாகிவிடும்போதும், வாழ்க்கையில் நன்மையைக் காட்டிலும் தீமை அதிகமாகி விடும்போதும்தான் மரணம் அடைவதற்கான நல்லகாலமாகும்."

"ஹென்ரி வேனின்* அந்திய காலம் நெருங்கியபோது அவரது வார்த்தைகளைப்போல் அவரது நிலையும் கம்பீரமாகவும் உறுதியுடனும் இருந்தது" என்று மார்லி குறிப்பிட்டுள்ளார். ராணுவத்துக்கு ஆள் சேர்ப்பதன் சம்பந்தமான எனது பிரசங்கம் ஒன்றில் கூட, ஒரு வீரனின் கடமையை யொட்டிய இந்த அம்சத்தை நான் ஆணித்தரமாக வற்புறுத்தாமல் இருந்ததில்லை. "ஜெர்மானியர்களைக் கொல்லுவதற்காக நாம் செல்ல வேண்டும்" என்று நான் இதுவரையில் ஒரு பிரசங்கத்தில் கூடக் கூறிய தில்லை. "இந்தியாவுக்காகவும் சாம்ராஜ்யத்திற்காகவும் நாம் போர் முனைக்குச் சென்று மரணம் அடைய வேண்டும்" என்பதே எனது பல்லவியாக இருந்து வருகிறது. எனது அழைப்பிற் கிணங்க ஏராளமானவர்கள் வருவதாகவும், நாம் எல்லோரும் பிரான்சுக்குச் சென்று ஜெர்மானியர்களை முறியடிப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அப்போது, தனது கோரிக்கைக்குச் செவி சாய்க்க வேண்டுமென்று கோர இந்தியாவுக்கு உரிமை ஏற் படும். இந்தியா நிரந்தரமாக இருக்கக்கூடிய சமாதானத்தை அதிகாரத்துடன் இப்போது வற்புறுத்தலாம் என்று நான் கருது கிறேன். மேலும் அஞ்சா நெஞ்சம் படைத்த ஆடவர்கள் அடங்கிய ஒரு படையைத் திரட்டுவதில் நான் வெற்றி பெறுவதாகவும், அவர்கள் அன்பு உள்ளம் காரணமாகத் துப்பாக்கிகளைக் கீழே போட்டுவிட்டு சக மனிதர்களான தங்களைச் சுட்டுத்தள்ளும்படி ஜெர்மானியருக்குச் சவால் விடுவதாகவும் வைத்துக்கொள்வோம். அப்போது ஜெர்மானியரின் உள்ளம் கூட உருகிவிடுமென நான் கூறுகிறேன். அவர்கள் பேய்த்தன்மை வாய்ந்தவர்கள் என்பதை நான் நம்பமாட்டேன். நான் கூறிவருவது இதுதான்: "சில விசேஷ சந்தர்ப்பங்களில், உடலைப் போலவே யுத்தமும் தவிர்க்க முடியாத ஒரு தீமை என்ற முறையில் மேற்கொள்ளப்படலாம். அதை மேற்கொள்ளும் நோக்கம் நியாயமாக இருக்குமாயின், அது மானிட வர்க்கத்திற்குப் பலன் அளிக்கக்கூடிய விதத்தில் மாற்றப்

---

* சர் ஹென்ரி வேன் (1613-1662) பிரிட்டனில் பிரபல ராஜதந்திரியாக விளங்கியவர். இறுதியில் அவர் அரசாங்கத்தின் விரோதி என்று கைதியாகி, சிரச்சேதம் செய்யப்பட்டார்.

ஜான் மார்லி (1834-1896) பிரிட்டிஷ் மந்திரி சபையில் பல ஆண்டுகள் வரையில் பதவி வகித்ததுடன் 1905-லிருந்து 1910 வரையில் இந்தியா மந்திரியாகவும் இருந்தார். அவர் சிறந்த ராஜதந்திரி என்று புகழ் பெற்ற துடன், பல அரிய நூல்கள் எழுதி பிரபல நூலாசிரியராகவும் திகழ்ந்தார்.

படலாம். ஓர் அகிம்சைவாதி ஒதுங்கி நின்று ஏனோதானோவென்று பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது; தான் செய்ய வேண்டியது என்ன என்பதை நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். ஒன்று தீவிர மாக ஒத்துழைக்க வேண்டும், அல்லது கடுமையாக எதிர்க்க வேண்டும்.''

அரசியல் சச்சரவுகளிலும் சூழ்ச்சிகளிலும் நான் ஆழ்ந்திருப்ப தாக உங்களுக்கு ஏற்பட்டுள்ள அச்சத்தை, நீங்கள் முற்றிலும் ஒதுக்கித் தள்ளிவிடலாம். அவற்றில் எனக்குச் சிறிதும் நாட்ட மில்லை. அதிலும் தற்போது அவற்றை நான் விரும்பவில்லை. தென்னாப்பிரிக்காவில் கூட அத்தகைய நாட்டம் எனக்கு இருந்த தில்லை. அரசியல் வாழ்க்கையில் நான் ஏன் ஈடுபட்டுள்ளேன் எனில், அதன்மூலம்தான் என் சொந்த விடுதலை கிடைக்கும். ''நாட்டின் அரசியல் வாழ்க்கையில் நீங்கள் பங்கு எடுத்துக்கொள்வதைக் காண நான் ஆச்சரியம் அடைகிறேன்!'' என்று மாண்டேகு என்னிடம் கூறினார். ஒரு விநாடி கூடத் தாமதிக்காமல் நான் அவருக்குப் பின்வருமாறு பதில் அளித்தேன்: ''அரசியல் வாழ்க்கையில் நான் ஈடுபட்டிருப்பதற்குக் காரணம் என்னவெனில், அதில் ஈடுபடாமல் எனது சமய, சமூக அலுவல்களைச் செய்ய என்னால் இயலாது.'' எனது ஆயுட்காலம் முடியும்வரையில் இந்த பதில் பொருத்தமாக இருக்குமென்றே நினைக்கிறேன்.

ஒரு துண்டுக் காகிதத்தில் நான் ஏதோ சில வரிகள் எழுதி யிருப்பதாக, இந்தக் கடிதத்தைப் பற்றி நீங்கள் புகார் கூற முடி யாது. ஒரு கடிதத்திற்குப் பதிலாக ஒரு வியாசத்தையே வாசிக் கும் சிரமத்தை உங்கள் மீது சுமத்தியிருக்கிறேன். எனினும் தற் போது என் மனத்தில் எழுந்துவரும் எண்ணங்களை நீங்கள் அறிந்து கொள்ளவேண்டியது அவசியமாகும். இப்போது நீங்கள் தீர்ப்புக் கூறலாம்; என்னுடைய எண்ணங்கள் தவறானவை என்று உங்களுக்குத் தோன்றுமாயின், அவற்றை நீங்கள் இரக்கமின்றி அலசித் தகர்த்துவிடலாம்.

நீங்கள் குணமடைந்து வருகிறீர்களென்றும், பலம் பெற்று வருகிறீர்கள் என்றும் நம்புகிறேன். ஒரு பிரயாணத்தை மேற் கொள்ள உங்களுடைய உடல் நிலை இடம் கொடுக்கும் போது, உங்களை நாங்கள் எல்லோரும் வரவேற்கத் தயாராக இருக்கிறோம் என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

அன்புடன்,

மோகன்

# 7

நாடியாட்.
*ஜுலை 29, 1918*

எனது அன்புள்ள சார்லி,

நான் மீண்டும் எனது சிந்தனைக்கு இடம் கொடுக்கவேண்டும். தோல்வியுற்ற நாட்டைச் சேர்ந்த ஒரு தீர்க்கதரிசி* விடுத்துள்ள செய்திக்கு செவிகொடுக்க ஜப்பான் விரும்பாததற்கு ஆழ்ந்த பொருள் இருப்பதை நான் காண்கிறேன். யுத்தம் நம்முடன் எப்போதும் இருந்து கொண்டேயிருக்கும். மனித இயற்கையை மாற்றுவதற்கான சாத்தியக் கூறு எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. மோட்சமும் அகிம்சையும் தனி நபர்கள் அடைய வேண்டியதாகும். செல்வம், நிலம் ஆகியவற்றை வைத்துக் கொண்டிருப்பது அல்லது குழந்தைகளைப் பராமரிப்பது போன்றவை, அகிம்சையைப் பூரணமாக நடைமுறையில் கொண்டுவருவதற்கு முரணானவை. தவறு செய்பவனை அடித்தாவது எனது மனைவியையும் குழந்தைகளையும் பாதுகாப்பதே உண்மையான அகிம்சையாகும். ஒருவரை அடிக்காமல், அவர் கொடுக்கும் அடிகளை வாங்குவதற்கு முற்படுவதே கலப்பற்ற முழு அகிம்சையாகும். †பிளாஸி யுத்தத்தின்போது, இந்தியா அவ்விரண்டில் எதையும் செய்யவில்லை. நாம் அப்போது கோழைத்தனமாக ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக் கொண்டோம்; கிழக்கு இந்தியா கம்பெனியின் பணத்திற்கு ஆசைப்பட்டு அற்ப காரணத்திற்காக நமது ஆன்மாவை விற்றோம். இன்றுவரையில் நாம் சற்றேறக் குறைய அவ்விதமே இருந்து வந்திருக்கிறோம். சொந்த முறையில் சிலர் தங்களுடைய தைரியத்தைக் காட்டியதற்கு உதாரணங்கள் இருப்பினும், அவர்களுடைய பரிதாபகரமான நடவடிக்கைகளில் அகிம்சை எதுவும் இல்லை. ஜப்பானியர், செவி கொடுக்க விரும்பாதது சரிதான். நமது முன்னோர்கள் என்ன செய்தார்கள் என்பது போதிய அளவு எனக்குத் தெரியாது. அவர்கள் தங்களுடைய பலவீனம் காரணமாகத் துன்பத்திற்கு உள்ளாகவில்லை, பலம் காரணமாகவே துன்பத்திற்கு உள்ளானார்கள். பண்டைய ரிஷிகள், தங்களுடைய மதச் சடங்குகளுக்கு, க்ஷத்திரியர்கள் பாதுகாப்பு அளிக்கவேண்டு

---

* கவி ரவீந்திரநாத் தாகூரையே தீர்க்கதரிசி என்று காந்திஜி குறிப்பிட்டுள்ளார். மேல் நாடுகளை ஜப்பான் காப்பியடிப்பதைக் கண்டித்து தாகூர் தோகியோவில் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தை ஜப்பானியர் கண்ணியமற்ற முறையில் கேலி செய்ததையே காந்திஜி அவ்விதம் குறிப்பிட்டிருக்கிறார்.

† 1757–ல் நிகழ்ந்த பிளாஸி யுத்தத்தில் கிளைவின் தலைமையில் பிரிட்டிஷ் படைகள், தங்களைக் காட்டிலும் அதிகத் தொகையினரான சிராஜ்–உத்–தௌலாவின் படைகளைத் தோற்கடித்தன. பிரிட்டிஷாருடன் சேர்ந்து சதி செய்த மீர் ஜாபரின் துரோகமே பிரிட்டிஷார் வெற்றி பெற்றதற்குக் காரணமாக அமைந்தது.

மென விதித்தார்கள். விசுவாமித்திரரின் தவத்திற்கு இடையூறு விளைவித்த ராட்சதர்களிடமிருந்து அவருக்கு ராமன் பாதுகாப்பு அளித்தார். பின்னர் அந்தப் பாதுகாப்பை விசுவாமித்திரர் நாடவில்லை.

யுத்தத்திற்கு ஆட்கள் சேர்ப்பதில் எத்தனையோ கஷ்டங்கள் இருப்பதை நான் காண்கிறேன். இருந்தாலும் 'யுத்தத்தில் நான் கொல்லமாட்டேன்' என்று ஒருவர் கூட ஆட்சேபிக்கவில்லை. அவர்களுடைய ஆட்சேபணைக்குக் காரணம், மரணத்தில் அவர்களுக்குள்ள பயம்தான். இயற்கைக்கு விரோதமான இந்த மரண பயம் தேசத்தையே சீர்குலைத்து வருகிறது. தற்போதைக்கு நான் ஹிந்துக்களை மனத்திற் கொண்டே இவ்விதம் கூறுகிறேன். மரணத்தை முற்றிலும் துச்சமாகக் கருதுவது முஸ்லிம் இளைஞனின் அற்புதமான உடைமையாகும்.

இக் கடிதத்தில் நான் கோர்வையாக எதுவும் எழுதவில்லை. எனினும் எனது மனப் போராட்டத்தைப் பற்றிய விவரங்களை உங்களுக்கு நான் தெரிவித்திருக்கிறேன்.

சொராப்ஜி காலமாகிவிட்டார் என்பது உங்களுக்குத் தெரியுமா? அவர் ஜோகன்னஸ்பர்க்கில் காலமானார். எதிர்காலத்தில் மிகுந்த பலனை அளிக்கவல்ல ஒரு வாழ்க்கை திடீரென்று முடிவடைந்துவிட்டது. கடவுளின் வழிகள் அறிவுக்கு எட்டாதவை.

ஆழ்ந்த அன்புடன்,

தங்கள்,
**மோகன்**

## 8

ஆகஸ்டு *6, 1918*

எனது அன்புள்ள சார்லி.

இந்தத் தடவை நான் நல்லவனாக இருப்பேன்; ஆரோக்கிய சம்பந்தமாக கடவுளின் விதிகளுக்கும் மனிதனின் விதிகளுக்கும் விரோதமாக நீங்கள் தவறுகள் செய்திருப்பதாக உங்கள் மீது குற்றம் சாட்டமாட்டேன். கிறிஸ்தவாலயத்திலுள்ள காவலரைப் போன்ற ஓர் அதிகாரி உங்களுக்கு இப்போது தேவையாகும். உங்கள் விஷயத்தில் அந்த அதிகாரி ஒரு 'நர்ஸாக'த்தான் இருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. அந்த உத்தியோகத்தை ஏற்றுக் கொள்ள எனக்கு எவ்வளவு விருப்பம் தெரியுமா! நான் உங்கள் மீது பேரன்பு செலுத்துவேன்; அதே சமயத்தில் டாக்டர்களின் கட்டளைகளையும் கண்டிப்பாக நிறைவேற்றுவேன். எனினும் என்னைப் போன்ற ஒரு நர்ஸ் உங்களுக்குக் கிடைக்காவிடில்,

உங்களுக்கு ஒரு மனைவி தேவையாகும். உங்களுக்கு உணவு ஒழுங்காகப் பரிமாறப்படுகிறதா என்பதையும், வயிற்றில் கட்டு கட்டிக் கொள்ளாமல் நீங்கள் ஒருபோதும் வெளியே போகாமலும், உறவினர்கள் நோயுற்றிருக்கிறார்கள் என்ற கெட்ட செய்தியைக் கேட்டு நீங்கள் எல்லைமீறி கவலைக்கு உள்ளாகிவிடாமலும் பார்த்துக் கொள்ளக் கூடிய ஒரு மனைவியாக இருக்கவேண்டும். ஆனால் நீங்கள் கல்யாணம் செய்து கொள்வதற்கான காலம் கடந்து விட்டது. உங்களுக்கு நான் நர்ஸாக இருந்து பணிவிடை செய்ய இயலாதவனாக இருப்பதைக் குறித்து நான் ஆத்திரமடைவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? எனினும் அதைக் காட்டிலும் நான் செய்யக் கூடிய சிறந்த காரியம் பிரார்த்தனை செய்வதுதான். நானும் அதைத்தான் செய்யப் போகிறேன். ஆண்டவன் உங்களை நலனுடனும், அபாயம் எதுவுமின்றியும் வைத்திருக்கவேண்டும். கடவுள் சித்தம் அவ்விதமாயின், நீங்கள் பலத்துடன் இருக்கையில் அவரது மகிமையைப் போற்றி வணங்கலாம்.

நான் எனது கடமையைச் செய்வதில் அமைதியாக ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேன். சில்லறைப் பிரச்னைகள் என்னைக் குழப்புகின்றன. இருந்தாலும், அவற்றைப் பற்றிச் சிந்திப்பதையே நான் விரைவில் விட்டுவிடுவேன். நான் உடனடியாக அவற்றைத் தீர்க்க வேண்டும் என்பதில்லை. எல்லாம் என் மனப்படி திருப்தி கரமாக நடைபெறவேண்டும் என்ற எண்ணத்துடன் நான் ஒரு போதும் செயலில் ஈடுபட்டதில்லை. என் முன் எழும் பிரச்னைகளை நான் நடுக்கத்துடனும் அச்சத்துடனும் மேற்கொள்வது வழக்கமாக இருந்துவந்திருக்கிறது. சம்பாரண், கெட்டா, அகமதாபாத் ஆகிய இடங்களில் என்ன நேரக்கூடும் என்பதை ஆராய்ந்து பார்த்து நான் அப்பிரச்னைகளில் ஈடுபடவில்லை. 1914-ல் யாதொரு நிபந்தனையுமின்றி யுத்த சம்பந்தமான தொண்டில் நான் ஈடுபட்டபோதும், அதனால் ஏற்படக்கூடிய பலாபலன்களை ஆராய்ந்து பார்த்து நான் அவ்விதம் செய்யவில்லை. அப்போதெல்லாம் நான் கடவுளின் சித்தப்படி மாத்திரமே நடந்து கொண்டதாக நினைக்கிறேன். நம்மைச் சூழ்ந்துள்ள இருளின் வழியாக அவர் என்னை நடத்திச் செல்லுவார்.

கவியே நேரில் பையன்களுக்குப் போதித்துவருவதை அறிய என் மனம் ஆனந்தமடைகின்றது. என்னைப் பொறுத்தமட்டில் அவர் அமெரிக்காவுக்கு விஜயம் செய்வதைக் காட்டிலும் இது எவ்வளவோ அதிக பலனைக் கொடுக்கக்கூடியது. அந்தப் பொறுப்பில் நீங்களும் பங்கு எடுத்துக் கொள்வதைக் குறித்தும் நான் மகிழ்ச்சியடைகிறேன். உங்கள் இருவருக்கும் இறைவன் அருள் புரிந்து, உங்களை ஆரோக்கியத்துடன் வைத்திருப்பாராக.

பரதாதாவுக்கு எனது வணக்கத்தைத் தயவு செய்து தெரிவியுங்கள்.

அன்புடன்,

தங்கள்,

**மோகன்**

## 9

ஆகஸ்டு 29, 1918

எனது அன்புள்ள சார்லி,

நான் உண்மையில் துன்பத்திற்குள்ளாகிவிட்டேன். எனினும் நான் அவ்விதம் துன்பத்திற்கு இலக்கானது நியாயமேயாகும். இந்த நோய்க்குக் காரணங்கள் என்ன என்பதை நான் திட்டவட்ட மாகக் கூற முடியும். அந்தக் காரணங்கள் எனக்குப் பெருமை அளிப்பனவாக இல்லை. அவை எனது பலவீனத்தையே காட்டு கின்றன. அத்தகைய பலவீனத்தைச் சமாளித்து வெற்றி பெற நான் எவ்வளவோ முயற்சி செய்தும் வந்திருக்கிறேன். இயற்கை யின் விதிகளை நாம் எவ்விதம் தொடர்ந்து மீறிவருகிறோம் என் பதை, இந்த நோய் மிகவும் தெளிவாக எனக்குக் காட்டுகிறது. ருசிக்கு இடம் கொடுக்காமல் நாவைக் கட்டுப்படுத்துவதைக் காட்டிலும் கடினமான சாதனை வேறு எதுவுமே இல்லை. அது மிகவும் கடினமாக இருப்பதாலேயே அவ்விஷயத்தைப் பற்றி நாம் சிந்திப்பதே இல்லை. ருசியை அடக்குவதில் வெற்றி பெற்றுவிட் டால், எல்லாவற்றிலும் வெற்றிபெற்றதாகும் என்பதே எனது அபிப்பிராயம். ஆனால் இதைப் பற்றி பின்னர் விவரமாகக் கவனிக்கலாம். எனது உடல் நிலை சிறிது சிறிதாக முன்னேற்றம் அடைந்துவருகிறது. எனது அமைதிக்கு யாதொரு குந்தகமும ஏற்படவில்லை. எனவே என்னைப் பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். எக் காரணத்தைக் கொண்டும் நீங்கள் சாந்திநிகேதனை விட்டுவர நான் சம்மதிக்கமாட்டேன். நீங்களும் குருதேவரும் உங்களுடைய வாழ்க் கையிலேயே மிகவும் அருமையான தொண்டு செய்து வருகிறீர்கள். உங்களுடைய போதனைகளையும் குருதேவரின் போதனைகளையும் கேட்டுவரும் பையன்கள் பாக்கியசாலிகளேயாவர். சாந்திநிகே தனில் அவர்களுடைய பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு உங் களுடைய போதனைகளைக் கேட்கும் வாய்ப்பு எனக்கும் கிடைக்கக் கூடாதா என்பதே எனது ஏக்கமாகும்.

தங்கள்,

**மோகன்**

## 10

ஆகஸ்டு 30, 1918

உங்களுடைய அன்பார்ந்த செய்திகளெல்லாம் என் முன் இருக்கின்றன. அவை எனக்கு மனச் சாந்தி அளிக்கும் ஔஷதமாக இருக்கின்றன. நான் நோயுற்றதைப் பற்றி எவ்வளவுக்கு அதிக

மாகச் சிந்திக்கின்றேனே அவ்வளவுக்கு மனிதனுக்கு மனிதன் காட்டும் அன்பு எப்படி இருக்கவேண்டும் என்பதையும், எனவே மனிதனிடம் கடவுள் காட்டும் கருணையையும் நான் அதிகமாக உணருகிறேன். இதில் நான் இயற்கையின் அன்புக் கரத்தைத் தவிர வேறு எதையும் காணவில்லை. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது இயற்கையின் கோபத்தினால் உண்டான தண்டனைகள் என்று தோன்றுபவையெல்லாம் உண்மையில் பல்வேறு அன்புச் செயல்கள் என்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை.

என்னைப் பற்றி நீங்கள் கவலைப்படக் கூடாது என்பதே எனது விருப்பமாகும். சாந்திநிகேதனில் நீங்கள் செய்துவரும் அற்புதமான தொண்டிற்கு ஏதாவதொரு காரணத்தினால் தடை ஏற்படுமாயின், அது பெரும் துரதிர்ஷ்டமாக முடியும். சாந்திநிகேதனில் நீங்களும் குருதேவரும் செய்துவரும் தொண்டுகளைப்பற்றிக் கேள்விப்படும் போது நான் எவ்வளவு ஆனந்தம் அடைகிறேன் என்பதை என்னால் விவரிக்க முடியாது. நீங்கள் எழுதும் கடிதங்கள் ஒவ்வொன்றையும் நான் நடுக்கத்துடனேயே பிரித்துப் பார்க்கிறேன் என்பதை நான் உங்களுக்குச் சொல்லவேண்டும். ஏனெனில் குருதேவரின் இந்த உயர்ந்த தொண்டிற்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டுவிடுமோ என்பதே எனது அச்சமாகும். நீங்கள் இருவரும் யாதொரு இடையூறுமின்றியும் பூரண ஆரோக்கியத்துடனும் பையன்களுக்கு ஒரு தடவையாவது படிப்பை ஆதியோடந்தமாகப் பூர்த்தி செய்தால், எனக்கு மிகவும் ஆறுதலாக இருக்கும்.

பரதாதா எனக்குக் கூறியுள்ள ஆசிகளுக்காக எனது நன்றியை அவருக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அவரது ஆசிகளை மதிப்பு வாய்ந்தவையாகக் கருதுகிறேன். குருதேவர் அனுப்பிய நல் வாழ்த்துக்களுக்காக அவருக்கும் நன்றி செலுத்துகிறேன். ஸ்ரீ ருத்ராவுக்கு என்னை நினைவு படுத்துங்கள்.

எல்லோருக்கும் என் அன்பு.

தங்கள்,

**மோகன்**

## 11

ஆகஸ்டு *31, 1918*

எனது அன்புள்ள சார்லி,

நீங்கள் கொடுத்துள்ள தகவல் எனக்கு ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அளித்திருக்கிறது. சாந்தி நிகேதனில்* குஜராத்தி,

* சாந்திநிகேதனில் 70 குஜராத்தி, மார்வாரி மாணவர்கள் இருக்கிறார்கள் என்றும், தாகூர் அவர்களை அன்புடன் பராமரித்து வருகிறார் என்றும், அம்மாணவர்களுடைய பெற்றோர்களை அவர் வரவேற்றார் என்றும் ஆண்ட்ரூஸ் எழுதிய கடிதத்திற்கு காந்திஜி அளித்த பதிலே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

மார்வாரிகளின் பிரிவு அவ்வளவு பலம் வாய்ந்ததென்பது எனக்குத் தெரியவே தெரியாது. அந்தப் பையன்கள் யாவரும் தங்கள் படிப்பு முடியும் வரையில் அங்கேயே இருப்பார்களாயின், குஜராத்திற்கும் வங்காளத்திற்கும் அவர்கள் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்தியவர்களாவர். கவியரசர் தாம் தொடங்கிய வேலையைத் தொடர்ந்து நடத்திவருவாராயின், எல்லா குஜராத்தியர்களும் தங்களுடைய படிப்பு முடியும் வரையில் அங்கேயே இருக்கும்படியும், அவர்களைத் தொடர்ந்து மேலும் பலர் வந்து சேரும்படியும் செய்தவராவார். எனக்கு இவ்விதம் கேட்க வேண்டும்போல் தோன்றுகிறது: 'அதாவது அந்த இடத்தின் சுகாதாரத்தில் கவனம் செலுத்திவர யாராவது இருக்கிறார்களா? தண்ணீர் ஒழுங்கான முறையில் விநியோகிக்கப்பட்டுவருகிறதா?'

என்னைப் பொறுத்தவரையில், நான் ஏதோ நடமாடிக் கொண்டிருக்கிறேன். உடல் நிலை மிகவும் மெதுவாகவே முன்னேற்றம் அடைந்து வருவது தொல்லையாக இருக்கிறது. உடலில் இனி புதிதாகத்தான் பலம் ஏற்படவேண்டும். அதற்கு இயல்பாகவே அதிக காலம் ஆகும். அதிலும் குறிப்பாக, பாலும் அதிலிருந்து உண்டாகும் உபசாதனங்களுமின்றி உடலைத் தேற்றிக் கொள்வது கடினமாக இருக்கிறது. எனினும் அவ்விதம் தேற்றிக் கொள்ள இயலும் என்றே நான் கருதுகிறேன். ஆள் சேர்ப்பதோ அல்லது காங்கிரஸ் நடவடிக்கைகளோ எனக்குச் சிறிதும் கவலையைக் கொடுக்கவில்லையென நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். உங்களைப் போல் அவற்றைப் பற்றிய விவரங்கள் அடங்கிய காகிதங்களையே நான் பார்க்கமாட்டேன் என்று என்னால் கூறமுடியாது. அதற்கு மாறாக, நான் காங்கிரஸ் நடவடிக்கைகளை ஆர்வத்துடன் கவனித்து வருகிறேன். எனினும் அவை எனக்குக் கவலையை உண்டாக்க நான் இடம் கொடுப்பதில்லை.

எனக்காக ஸ்ரீ ருத்ரா கவலைப்படுவதை நான் உணருகிறேன். எனது உடல் நிலையைப் பற்றி நீங்கள் அவரிடம் கூறுங்கள். உங்கள் எல்லோருடைய கூட்டுப் பிரார்த்தனைகளும் எனக்கு ஆரோக்கியத்தையும் ஆறுதலையும் அளிக்கத் தவறாது என்று அவருக்கு உறுதி கூறுங்கள்.

அன்புடன்,

தங்கள்,

மோகன்

## 12

செப்டம்பர் 3, *1918*

எனது அன்புள்ள சார்லி,

என் உடல் நிலை நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து வருகிறது. எனவே தயவு செய்து என்னைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். நாம் நேரில் சந்திக்காவிட்டாலும், நம்மிடையே ஆன்மாவின் ஐக்கியம் எப்போதுமே இருந்துவருகிறது. தற்போது நான் சிறிதளவு வாசிப்பதில் ஈடுபட்டிருக்கிறேன். நான் இப் போது வாசித்துவரும் புத்தகம், மதத்தைப்பற்றிய அற்புதமான வியாசங்கள் அடங்கிய ஒரு தொகுதியாகும். அவை, குஜராத் கல்லூரியைச் சேர்ந்த பேராசிரியர் ஆனந்தசங்கர் துருவாவினுல் எழுதப்பட்டவை. அவ்வியாசங்கள் சுத்தமான தங்கம்தான். இந்த மாகாணத்திலுள்ள சிறந்த சமஸ்கிருத மேதைகளில் அவரும் ஒருவர். இந்த வியாசங்கள் எனக்குப் பெரும் ஆறுதலை அளித்திருக்கின்றன. ஆன்ம ஐக்கியத்தின் அர்த்தத்தை மேலும் பூரணமாக உணர்ந்து கொள்வதற்கு அவை எனக்கு உதவியாக இருக்கின்றன. அதன் பூர்ணமான ஆழ்ந்த அர்த்தத்திலேயே அந்தத் தொடர்மொழியை நம் விஷயத்திலும் நான் உபயோகித் திருக்கிறேன்.

நான் முன்பு கூறியிருப்பதுபோல், எக்காரணத்தைக் கொண்டும் நீங்கள் போல்பூரை விட்டுச் செல்லுவதை நான் விரும்பமாட்டேன். தற்போது நீங்கள் செய்ய வேண்டிய வேலை அங்கேதான் இருக்கிறது, வேறு எங்கேயும் இல்லை.

காலனிகளுக்குக் குடியேற்றம் பற்றிய ஹிந்தி புத்தகத்துக்கு நீங்கள் உங்களுடைய மோசமான முன்னுரையை ஏன் எழுதினீர் கள்? அதை நான் மேலெழுந்தவாரியாகத்தான் பார்த்தேன். தகுதியற்ற ஒரு புத்தகத்துக்கு நீங்கள் நற்சாட்சிப் பத்திரம் அளித்திருக்கிறீர்கள் என்றே கருதுகிறேன். தவறுகளுக்கும், போலிப் புகழுரைகளுக்கும், விளம்பரங்களுக்கும் நீங்கள் இடம் கொடுக்க விரும்பமாட்டீர்கள். அந்தப் புத்தகத்தை நான் கவன மாக வாசிக்க உத்தேசித்திருக்கிறேன். வாசித்த பின், அதி லுள்ள வெளிப்படையான தவறுகளில் சிலவற்றைக் குறிப்பிட்டு உங்களுக்கு அனுப்புகிறேன். ஒரு நூலாசிரியர் தமது பெயரை வெளிக்குத் தெரியாமல் வைத்துக் கொள்வதில் உண்மையாகப் பெருமை எதுவும் இல்லை. தம்மை யார் அறிந்து கொள்ள வேண்டும் என்று அவர் விரும்புகிருரோ, அத்தகையோரிடம் அவர் தமது உண்மையான பெயரைத் தெரிவிக்காமல் இருப்ப தில்லை.

நீங்கள் எழுதியுள்ள முகவுரை உங்களுடைய நல்ல உள்ளத் திற்குப் பெருமை அளிப்பதாக இருக்கிறது. நீங்கள் ஓர் இந்தியர். லார்டு வில்லிங்டன்* கூறுவதுபோல், 'முடியாது'

---

*லார்டு வில்லிங்டன் 1913–1918–ல் பம்பாய் கவர்னராகவும், 1919–1924–ல் சென்னை கவர்னராகவும், 1931–1936–ல் இந்தியா வைஸ்ராயாகவும் இருந்தார்.

என்று சொல்ல நீங்கள் எப்போதும் அஞ்சுகிறீர்கள். 'முடியாது' என்று சொல்லவேண்டிய சமயத்தில் 'முடியாது' என்று சொல்லும் ஆங்கிலேயர்களின் இயல்பை நீங்கள் விட்டுவிடக் கூடாது என்பதே எனது விருப்பமாகும். சில சமயங்களில் அன்பு காரணமாகவே 'முடியாது' என்று கண்டிப்பாகக் கூறும் வாய்ப்பு கிடைக்கிறது என்று நான் எண்ணுகிறேன். உங்களுக்கு நான் உபதேசம் செய்ய விரும்பவில்லை. எனினும் நீங்கள் இவ்விஷயத்தில் உங்களைச் சீர்திருத்திக் கொள்ளவேண்டும். இல்லாவிடில் நான் சந்திக்கும் அயோக்கியர்களையெல்லாம் உங்களிடம் செல்லும்படி நான் கூறவேண்டியதுதான்! பின்னர் நீங்கள் அவர்களுடனும் உங்கள் கணக்கு வழக்குகளைத் தீர்த்துக் கொள்ள வேண்டியிருக்கும்!

உங்கள் எல்லோருக்கு எனது அன்பு,

தங்கள்,

**மோகன்**

## 13

*ஜனவரி 6, 1919*

என் உடல் நிலையில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளுக்கு நான் என்னைப் பழக்கிக் கொள்ளவேண்டுமென எண்ணுகிறேன். அதற்காக நான் வருந்தவும் கூடாது. இந்த நீண்டகால நோயிலிருந்து நான் பூரணமாகக் குணமடைவதற்கு முன், மீண்டும் என் உடல் நிலையில் பல மாறுதல்கள் ஏற்படக்கூடும். தற்போது என் உடல் நிலை சரியாக இருக்கிறதென்றே தோன்றுகிறது. மருந்து ஊசிகள் போட்டுக் கொள்ள நான் இணங்கவேண்டியதுதான் என்று நினைத்தேன். நான் போட்டுக் கொண்ட ஊசிகள் எதிர்பார்த்த பலன்களைக் கொடுத்துவருகின்றன. எனக்குப் பசி உண்டாகும்படி செய்வதற்காகவே அந்த ஊசிகள் போடப்பட்டன. இன்று நான் உட்கொள்ளும் உணவு, அளவிலும் சரி, தரத்திலும் சரி, சாப்பாட்டு ராமன் கூடப் பொறுமைப் படும்படியாக இருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். எனது உடல் நிலை மீண்டும் எப்போது பாதிக்கப்படும் என்பதை யாரும் அறியார். எனினும் உன்னிப்பாகக் கவனிப்போர், அடுத்த தடவையாக என் உடல் நிலை எப்போது பாதிக்கப்படும், அதன் பின்னர் எவ்வெப்போது பாதிக்கப்படும் என்பதுபற்றி ஓர் அட்டவணையையே தயாரித்துவிட முடியும் என்று நான் கூறத் துணிகிறேன். நான் மிகப் பிரபலமான ஒரு டாக்டரிடம் சிகிச்சை பெற்றுவருகிறேன. அவர் எனக்கு 15 ஊசிகள் போட வேண்டுமென விரும்புகிறார். அவற்றில் இதுவரை அவர் நான்கு ஊசிகள் போட்டிருக்கிறார். என் முன் உள்ள நிலை மகிழ்ச்சி அளிப்ப

தாக இல்லை. ஊசியால் குத்தும்போது வேதனையாகத்தான் இருக்கிறது. எனினும் நாம் உயிருடன் இருக்க வேண்டும் என் பதற்காக, நாம் எதைத்தான் சகித்துக் கொள்ளத் தயாராக இல்லை?

கல்கத்தா பிஷப் காலமாகிவிட்டார். அவரது மரணம் உங் களுக்கு ஒரு பெரிய நஷ்டமாக இருக்கும். எனினும் அவர் வேதனையிலிருந்து விடுதலை அடைந்தது நல்லதென்றே நான் எண்ணுகிறேன். குமாரி பேரிங்கை நீங்கள் போல்பூருக்கு அனுப்பியது சரிதான். அதனால் எனக்கு வசதிக் குறைவு எதுவுமில்லை. எனினும் நீங்கள் அவசரப்பட்டு அவ்விதம் செய்து விட்டீர்கள் என்றே நான் நினைத்தேன். ஆனால் உங்களுடைய பொறுப்பை அவள் முற்றிலும் ஏற்றுக் கொண்டிருப்பதாக நீங்கள் உறுதி கூறுவதால், நான் அவ்விஷயமாக மேற்கொண்டு எதுவும் சொல்லுவதற்கில்லை. சாந்திநிகேதனில் அவள் உயர்தர ஆங்கில வகுப்புகளையோ அல்லது கீழ் வகுப்புகளையோ கூட நன்றாக நடத்த முடியவில்லையென அவளுடைய கடிதத்திலிருந்து நான் அறிகிறேன். எனினும் குமாரி பேரிங்கைப் போன்ற நம்பிக்கை யுள்ளவருக்கு வெல்ல முடியாதது எதுவுமே இல்லை. ஆயிரக்கணக்கானவர்கள் தோல்வியுறக்கூடிய காரியத்தில் அவள் வெற்றி பெற்றிருக்கிறாள். போல்பூரில் அவளது அலுவல்கள் முடிந்தபின், அவள் நான் இருக்குமிடத்திற்கு வருவாள் என்று நீங்கள் கூறுகிறீர்கள். அப்படியானால் அவள் டேனிஷ் மிஷனி லிருந்து விலகிவிட்டாளா? மனக் கசப்பு எதுவுமின்றி அவள் அதிலிருந்து விலகியிருப்பாளாயின், அது ஒரு பெரிய சாதனைதான். *15*-ஆம் தேதி வரையிலாவது நான் பம்பாயில்தான் இருப்பேன், கொழும்புவிற்குச் செல்லுவது உசிதமா என்பதுபற்றி அதன் பின்னர்தான் நான் யோசிக்க வேண்டியிருக்கும். காங்கிரஸ் பிரதிநிதி ஸ்தானத்திற்கு எனது தேர்தலைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. நான் இறுதியான முடிவு எதுவும் செய்யவில்லை. அதை முடிவு செய்ய வேண்டிய நேரம் வரும்போது, நான் செல்ல வேண்டிய வழி நீலவானத்தைப் போல் தெள்ளத் தெளிவாக இருக்கும் என்பதை நான் அறி வேன். நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

## 14

*ஜனவரி 10, 1919*

எனது அன்புள்ள சார்லி,

அவ்விதமாக நீங்கள் இன்புளூயன்சா ஜுரத்தினால் அல்லல்பட்டு வருகிறீர்கள். எனினும் இடைவிடாது நீங்கள் யாத்திரை செய் தும் கூட உங்களுடைய உடல் நிலை மிகவும் திருப்திகரமாக இருந்து வந்திருப்பதைக் குறித்துத்தான் நான் ஆச்சரியம் அடை கிறேன். இருந்தாலும் யாரைக் கடவுள் தமது கருவிகளாக உப

யோகிக்க விரும்புகிருரோ அவர்களை அவர் காப்பாற்றுவார் என்றே நினைக்கிறேன். எனவே உங்கள் விஷயத்தில் நான் கவலைப்படவில்லை. உங்களுடைய லட்சியத்தை நிறைவேற்று வதற்குத் தேவையான பலம் உங்களுக்கு இருக்கும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். என்னைப் பொறுத்தமட்டில், எனது உடல் நலன் அபிவிருத்தியடைவதும், குன்றுவதாகவுமே இருந்துவருகிறது. நான் செய்யக்கூடிய பொதுஜனத் தொண்டிற் காகவோ அல்லது எனது ஆரோக்கியத்திற்காகவோ நான் இங்கி லாந்து செல்ல வேண்டியது விரும்பத்தக்கதென நீங்கள் கருது கிறீர்கள் என்று தோன்றுகிறது. ஆனல் அது விரும்பத்தக்கதென நான் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. எனினும் நான் செல்ல வேண்டிய வழியைச் சிறிது சிறிதாக உணர்ந்து, அதன்படி நடந்து வருகிறேன்.

தங்கள்,

**மோகன்.**

## 15

*பிப்ரவரி 25, 1919*

எனது அன்புள்ள சார்லி,

இன்று நான் உங்களுக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். உங்களுக்கு முதல் தந்தி கொடுத்தபோது, நான் எழுத உத்தேசித் திருந்த கடிதத்தை உங்களுக்கு எழுத முடியவில்லை. நான் கலப் பற்ற வேதனையை அனுபவித்து வருகிறேன். நான் எவ்வித சிரமத் தையும் ஏற்றுக் கொள்ளக்கூடாது என்று டாக்டர்கள் எனக்குக் கூறிவருகிருர்கள். ஆனல் ரௌலட் மசோதாக்களையும், வைஸ் ராயின் அறிக்கையையும் பற்றி எனது அபிப்பிராயத்தை ஒளிவு மறைவின்றிச் சொல்லிவிட வேண்டும் என்று எனது அந்தராத்மா கூறிவருகிறது. முரண்பாடான பல கருத்துகள் என்மீது திணிக்கப் பட்டு வருகின்றன. எனவே என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. நான் வழிகாட்ட வேண்டுமென பல நண்பர்களும் எதிர்பார்க்கிருர்கள். அவர்களை நான் எப்படிக் கைவிடமுடியும்? நேற்று நாங்கள் ஆசிரமத்தில் கூடினேம். அது ஒரு நல்ல கூட்ட மாகும். நாங்கள் ஒரு சிலரேயாயினும் கூட, போராட்டத்தில் குதித்துவிட வேண்டும் என்றே எல்லோரும் விரும்பினர். முடி வாகக் கூறும் பொறுப்பு என்னைச் சார்ந்ததாக இருந்தது. கார ணம் உண்மையானதென்பதை நான் உணர்ந்தேன். நான் அவர் களைக் கைவிட்டுவிடுவதா? எனக்கு நான் உண்மையாக நடந்து கொள்ள வேண்டுமாயின், அவ்விதம் நான் கைவிட முடியாது. அதன் பலன் என்ன என்பதை நீங்கள் அறிவீர்கள். இத்துடன் அனுப்பப்பட்டுள்ள காகிதங்களிலிருந்து நீங்கள் முழு விவரங் களையும் அறிந்து கொள்ளலாம். ஆன்மா வேதனைக்குள்ளான

இச்சமயத்தில் நீங்கள் இல்லையே என்று நான் எவ்வளவு வருந்தினேன் என்பதைக் கடவுள்தான் அறிவார். இப்போது நான் மிகவும் மன அமைதியுடன் இருக்கிறேன். வைஸ்ராய்க்கு அனுப்பப்பட்ட தந்தி காரணமாக என் மனத்திலுள்ள பாரம் மிக மிகக் குறைந்திருக்கிறது. அவருக்கு இது ஒரு எச்சரிக்கையாகும். மகத்தான தியாக மூளக்கூடிய இவ்விஷயத்தை அவரால் தடுத்துவிட முடியும். ஆனால் தீ மூண்டு, சத்தியாக்கிரகிகளும் தங்கள் பிரதிக்ஞையின்படி உண்மையாக நடந்து கொள்வார்களாயின், அதனால் நிலைமை தூய்மையடைந்து. உண்மையான சுயராஜ்யமும் ஏற்படும். உலக நாடுகள் சங்கத்தின் விதிகளை விளக்கி ஸ்ரீ வில்சன்* பேசியபோது, அவர் தம்மை அறியாமலேயே நவீன நாகரிகத்தின் உண்மையான சொரூபத்தை வெளிப்படுத்தியிருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். அடங்காப்பிடாரியான ஒரு கட்சியை அடக்கும் விஷயத்தில் தார்மிக சக்தி தோல்வியுறுமாயின், உலக நாடுகள் சங்க அங்கத்தினர்கள் கடைசி மருந்தாக. மிருக பலத்தை உபயோகிக்கத் தயங்க மாட்டார்கள் என்று அவர் கூறியது உங்களுக்கு நினைவிருக்கும்.

சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை, பலாத்கார சித்தாந்தத்திற்குச் சரியான விடையாகும்.

எனினும் இத்துடன் அத்தியாயம் முடிந்துவிடவில்லை. ஸ்ரீ அசுவத்தினிடமிருந்து† எனக்கு ஒரு நீண்ட தந்தி வந்திருக்கிறது. யூனியனிலுள்ள இந்தியர்களின் நிலை மிகவும் மோசமான ஒரு கட்டத்தை அடைந்திருக்கிறது. சென்ற போராட்டத்தின் படிப்பினையை அவர்கள் முற்றிலும் மறந்து விட்டார்கள். இங்குள்ள நாம் அவர்களுக்கு யாதொரு உதவியும் செய்யாவிடில், யூனியனிலுள்ள இந்தியர்கள் படுமோசமான அடிமை நிலைக்குத் தாழ்த்தப்பட்டு விடுவார்கள். அவர்கள் தங்களுடைய பலவீனம் காரணமாக சத்தியாக்கிரகம் செய்யாவிடில், அவர்களுடைய குறைகளுக்குப் பரிகாரம் அளிக்கும்படி நாம் எல்லோரும் இந்திய சர்க்காரைக் கேட்க வேண்டும். தாங்கள் எவ்வித உதவியும் அளிக்கக்கூடிய நிலையில் இல்லை என்று சர்க்கார் அறிவித்துவிடுவார்களாயின், நாம் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ள வேண்டும்.

---

* தாமஸ் உட்ரோ வில்சன் (1856–1924) அமெரிக்காவில் 28–வது ஜனாதிபதியாகப் பதவி வகித்தார். பாரிசில் நடந்த உலக சமாதான மகாநாட்டில் அவர் பேசியதையே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார். ஸ்ரீ வில்சன் அப்போது கூறியதாவது: "இந்தத் திட்டத்தில் ஆயுதந்தாங்கிய படைகள் பின்னணியில் தயாராக இருக்கின்றன. எனினும் உலகத்தின் தார்மிக சக்தி போதவில்லையாயின், அதற்கு உலகத்தின் ராணுவ பலமும் உதவிக்கு வரும்."

† திரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்தியர் சங்கத் தலைவரான ஸ்ரீ அசுவத் கொடுத்திருந்த தந்தியில், திரான்ஸ்வால் இந்தியர்களுக்கு மிகுந்த பாதகத்தை விளைவித்து, இந்திய வியாபாரிகளுக்குச் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களை உண்டாக்கக் கூடிய திரான்ஸ்வால் உலோக சட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவர்களுக்குள்ளேயே இவ்வித விரோத பாவம் நிலவுவது கூடாது. நான் இவ்விஷயமாக சர்க்காருக்கு எழுதியிருக்கிறேன். இன்று பத்திரிகைகளுக்கும் ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன்.

இவற்றைத் தவிர மூன்றாவது அத்தியாயம் ஒன்றும் இருக்கிறது. அலி சகோதரர்களின் வழக்கைப் பற்றி சர்க்காருக்கு ஆலோசனை கூறுவதற்காக நியமிக்கப்பட்டிருந்த கமிட்டி இரண்டு மாதங்களுக்கு முன் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. அதை நான் வாசித்தேன். அவர்களைக் காவலில் வைக்கும்படியான குற்றம் எதுவும் அவர்கள் மீது இல்லை. இனியும் அவர்கள் விடுதலை செய்யப்படாவிடில், நான் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளுவதற்கு அது ஒரு மூன்றாவது காரணமாக இருக்கும்.

*பிப்ரவரி 25, 1919*

ரௌலட் மசோதாக்களை எதிர்த்து சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளும்படியான அவசியம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் ஆடவர்களும் பெண்மணிகளுமாக ஐம்பது பேர் கையெழுத்திட்டிருக்கிறார்கள். இம்மசோதாக்களைப் பரிசீலனை செய்யும்படி வைஸ்ராயை வேண்டிக் கொண்டிருக்கிறோம். நீங்கள் நேற்று இங்கே இருந்திருக்கக் கூடாதா என்பதே எனது ஏக்கமாகும். அதன் சம்பந்தமான காகிதங்களை அனுப்பியிருக்கிறேன். வாசித்தபின் உங்களுடைய அபிப்பிராயத்தையும், சாத்தியமாயின் குருதேவரின் ஆசிகளையும் தந்தி மூலம் தெரிவியுங்கள்.

என் மீது சுமத்தப்பட்டுள்ள பளுவை நான் சரியாகவே வகித்து வருகிறேன். கடைசியாகக் குறிப்பிடப்பட்ட இரண்டு விஷயங்கள் என் மனச்சாட்சியுடன் போராட்டத்திற்குக் காரணமாக இருக்கவில்லை. முக்கியமான போராட்டம் ஆரம்பமாகுமாயின், மற்ற இரண்டு காரணங்களையும் அதனுடன் சேர்த்துவிட்டால், அது மூன்று பிரச்னைகளை அடிப்படையாகக் கொண்ட போராட்டமாகிவிடும்.

தந்தி மூலம் உங்களுடைய அபிப்பிராயத்தை நான் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறேன். பின்னர் விவரமாகக் கடிதத்தில் உங்களுடைய அபிப்பிராயத்தை எழுதி அனுப்புங்கள். ஆசிரமத்திலுள்ள பெண்கள் எல்லோரும் தாங்களாக வலுவில் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டிருக்கிறார்கள் என்பதைக் குறித்து நீங்கள் ஆச்சரியப்படமாட்டீர்கள்.

## 16

சகிந்திராபாத்,
ஏப்ரல் 1, 1919

எனது அன்புள்ள சார்லி,

நீண்ட காலத்திற்குப் பிறகு உங்களுக்கு நான் இந்தக் கடிதம் எழுதுகிறேன் என்று தோன்றுகிறது. எதிர்பாராத ஓர் இடையூறு ஏற்பட்டிராவிடில், இப்போது கூட நான் தங்களுக்கு இந்தக் கடிதம் எழுதுவது சாத்தியமாகியிராது. வாடி ஜங்ஷனில் பம்பாய் மெயிலைப் பிடிக்கலாம் என்ற நம்பிக்கையுடன் நாங்கள் இன்று விடியற்காலம் பெஜவாடாவி லிருந்து புறப்பட்டோம். எங்களுடைய வண்டி சகிந்திரா பாத்திற்கு வந்தபோது காலம் கடந்துவிட்டது. குறிப்பிட்ட நேரத்தில் அங்கிருந்த விசேஷ ரயிலில் புறப்பட்டிருந்தால் வாடி ஜங்ஷனில் எங்களுக்கு பம்பாய் மெயில் கிடைத்திருக்கும். எனவே இங்கே நாங்கள் 24 மணி நேரம் உஷ்ணத்தினல் அவதிப்பட வேண்டியவர்களாக இருக்கிறோம். சகிந்திராபாத் ஓர் அடுப்பைப் போல் அவ்வளவு உஷ்ணமாக இருக்கிறது. தொல்லையைக் கொடுக்கும் இந்தத் தாமதத்திலும் சில சௌகரி யங்கள் இருக்கின்றன! உங்களுக்கு இந்தக் கடிதம் எழுத எனக் குச் சாத்தியமாகியிருப்பது ஒரு சிறிய விஷயமல்ல.

குருதேவரின் உடல் நிலையைப் பற்றி நீங்கள் எழுதியுள்ள கடிதம் என் மனத்தில் மிகுந்த வருத்தத்தை உண்டாக்கியிருக் கிறது. அவரது உடல் நிலைக்கு என்ன நேர்ந்தது? அவர் இப் போது மிகவும் குணமடைந்திருப்பார் என்றே நம்புகிறேன். நான் 3-ம் தேதி வியாழக்கிழமை காலையில் பம்பாய் போய்ச் சேருகிறேன். 22-ம் தேதி வரையில் நான் பம்பாயிலும் அகமதா பாத்திலும் இருக்கும்படி நேருமென நம்புகிறேன். அப்போது நாம் சந்திக்கவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். இதன் மத்தியில், பிரதிக்ஞை என்றால் என்ன என்பதுபற்றி உங்களுக்கு நான் விளக்க முயற்சிக்க வேண்டும். அதன் தெளிவான அர்த் தத்தை நீங்கள் கிரகித்துக் கொள்ளாதது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. பிரதிக்ஞையில் கையெழுத்திடுபவர், அவசியமாயின், நிரந்தரமான உண்மைகளைப் பிரகடனம் செய்யாத சட்டங்கள் எல்லாவற்றையும் மீறுவதாக உறுதி கூறுகிறார். எனினும் தனிப் பட்டவர்கள் தங்கள் விருப்பப்படி செய்யாமல் இருப்பதற்காக, மீற வேண்டிய சட்டங்களையும், எந்த வரிசையில் அவற்றை மீற வேண்டும் என்பதையும் நிபுணர்கள் தேர்ந்தெடுப்பார்கள். அது நிச்சயமாக மனச் சாட்சியைப் பொறுத்த விஷயம் அல்ல. நிபுணர்கள் அடங்கிய அக்கமிட்டியும், பிரதிக்ஞையில் கையெழுத்திடும் தனி நபர் சத்தியாக்கிரகியைப் போலவே பிரதிக்ஞைக்குக் கட்டுப்பட்டிருக்கிறது. மீற வேண்டிய சட்டங்

களைக் கமிட்டி தவருகவும், சத்தியாக்கிரகத்திற்கு முரணுகவும் தேர்ந்தெடுக்குமாயின், அவை சத்தியாக்கிரகத்திற்கு முரணுனவை என்று நெஞ்சறிந்து கருதும் தனி நபர் சத்தியாக்கிரகி, அத்தகைய சட்டத்தை மீற மாட்டார். எல்லா சத்தியாக்கிரக இயக்கங்களிலும் அந்த இறுதியான சுதந்திரம் ஒப்புக்கொள்ளப் பட்டுளது. நான் கூறும் அர்த்தம் தெளிவாக இல்லையா? மீற வேண்டிய சட்டங்கள் எவை என்பதைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைக் கமிட்டியிடம் ஒப்படைத்திருப்பதுதான், பிரதிக்ஞையில் மிகவும் மகிழ்ச்சி அளிக்கக்கூடிய ஓர் அம்சமாகும். அந்த அம்சம் இராவிடில், சகிக்க முடியாத குழப்பம் ஏற்பட்டிருக்கும். சிந்து நிகழ்ச்சியை எடுத்துக் கொள்ளுங்கள். அங்கே போலீஸ் கமிஷனர், அபாயம் எதுவும் இல்லாத ஒரு சாதாரண ஊர்வலத்திற்குத் தடையுத்தரவு பிறப்பித்துவிட்டார். சத்தியாக்கிரகிகள் அந்த உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொண்டனர். ஏனெனில், கமிட்டியின் அதிகாரத்தைப் பெற்றுத்தான் அவர்கள் அந்தத் தடை யுத்தரவை மீறவேண்டும். பிரதிக்ஞையின்படி கமிட்டியின் அதிகாரத்திற்கு உட்பட்டு நடக்க அவர்கள் கடமைப் பட்டிருக்கிருர்கள். அவ்விதமின்றேல், கமிஷனரின் தடையுத்தரவை மீறவேண்டும் என்பதே அவர்களுடைய மனத்தில் எழும் முதல் உணர்ச்சியாக இருந்திருக்கும். அத்தகைய அவசர நடவடிக்கையின் விளைவாகப் பெரும் விபரீதம் ஏற்பட்டிருக்கலாம். தென்னுப்பிரிக்காவில், மீற வேண்டிய சட்டங்களைத் தேர்ந்தெடுப்பதையும், அவற்றை மீறவேண்டிய காலத்தை நிர்ணயிப்பதையும் என் முடிவுக்கு விட்டிருந்தார்கள். இங்கே எனது யோசனையின் மீதே கமிட்டி அமைக்கப்பட்டது. அவ்வாறு அமைக்கும் ஒவ்வொரு கமிட்டிக்கும் நானே தலைவனுக இருக்கிறேன். பத்திரிகைகளிலிருந்து கத்தரித்து நான் அனுப்பிவரும் செய்திகளை வாசிக்க உங்களுக்கு நேரம் இருக்குமென்றே நம்புகிறேன். என்னைக் காண வந்திருப்பவர்கள் காத்துக் கொண்டிருப்பதால், இப்போது நான் இந்தக் கடிதத்தை முடித்துவிட வேண்டும்.

குருதேவருக்கும் உங்களுக்கும் இயலுமாயின், உங்கள் இருவரிடமிருந்தும் வரும் அறிக்கைகளைப் பிரசுரிக்க நான் மிகவும் ஆர்வமுடையவனுக இருக்கிறேன்.

அன்புடன்,

தங்கள்,

மோகன்

## 17

பம்பாய்,
ஏப்ரல் 5, 1919

எனது அன்புள்ள சார்லி,

டில்லியில் நடந்த கோர நிகழ்ச்சியைப் பற்றி சென்ற 24 மணி நேரமாக நான் அடைந்த துக்கத்தை அளவிட முடியாது: ஆனால் இப்போது அதைக் குறித்து எனக்கு அளவிட முடியாத மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. டில்லியில் சிந்திய ரத்தம் நிரபராதிகளின் ரத்தமாகும். டில்லியில் சத்தியாக்கிரகிகள் தவறு செய்திருப்பது சாத்தியமே; எனினும் மொத்தத்தில் அவர்களுக்கு இணையற்ற பெருமையே ஏற்பட்டிருக்கிறது. தியாகம் செய்யாவிடில் விமோசனம் இல்லை. முதல் நாளே, அதுவும் சைத்தானின் அதிகார பீடம் இருக்கும் இடத்திலேயே சத்தியாக்கிரகிகள் பூரணத் தியாகம் செய்ததைக் காண என் மனத்தில் ஆனந்தம் ததும்புகிறது. இந்த ஆனந்தத்தை நீங்களும் பகிர்ந்து கொள்ளும்படி செய்ய முடியுமாயின், நான் அவ்விதமே செய்ய விரும்புகிறேன்.

உங்களுடைய சந்தேகங்களுக்கு விடையளித்து நான் எழுதிய கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன்.

உங்களுக்கு விரோதமாக நான் ஒரு 'அப்பீல்' செய்திருக்கிறேன்! அந்த அப்பீலின் நகலை இத்துடன் அனுப்பியுள்ளேன். அதை நீங்கள் உங்களுடைய விருப்பம்போல் செய்து கொள்ளலாம். எனினும் குருதேவரின் அபிப்பிராயம் எனக்குக் கிடைக்க வேண்டும்.

ஆழ்ந்த அன்புடன்,

தங்கள்,

மோகன்

### காந்திஜியின் 'அப்பீல்'

கவி ரவீந்திரநாத் தாகூருக்குத் தாம் எழுதிய கடிதம் ஒன்றையே 'அப்பீல்' என்று காந்திஜி மேற்கண்ட கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அதன் விவரம் வருமாறு:

பம்பாய்,
ஏப்ரல் 5, 1919

அன்புள்ள குருதேவ்,

நம் இருவருக்கும் நண்பரான சார்லி ஆண்ட்ரூஸுக்கு எதிராகவே நான் தங்களுக்கு இந்த வேண்டுகோளை அனுப்புகிறேன். தேசியப் போராட்ட சம்பந்தமாக உங்களிடமிருந்து ஒரு செய்தி

வாங்கி அனுப்பும்படி நான் அவரை மன்றாடிக் கேட்டுக் கொண்டு வந்தேன். அந்தச் செய்தியைப் பத்திரிகைகளில் வெளியிட வேண்டும் என்பதே எனது நோக்கமாகும். இந்தப் போராட்டம் ஒரே ஒரு சட்டத்தை எதிர்த்தே ஆரம்பிக்கப்பட்டுளதெனினும், உண்மையில் அது தன்மானமுள்ள ஒரு நாட்டின் விடுதலைப் போராட்டமேயாகும். நான் நீண்ட காலம் பொறுமையாகக் காத்துக் கொண்டிருந்தேன். உங்களுடைய நோயைப் பற்றிய சார்லியின் வர்ணனை, உங்களுக்கு நேரில் எழுத என்னைத் தயங்கும்படி செய்தது. உங்களுடைய ஆரோக்கியம் தேசியப் பொக்கிஷமாகும். உங்களிடம் சார்லிக்கு உள்ள பக்தி அமானுஷ்யமானது, தெய்விகமானது. எழுத்து மூலமோ அல்லது நேரிலோ உங்களுடைய அமைதியையும், ஓய்வையும் கலைக்க அவர் யாரையும் அனுமதிக்க மாட்டார் என்பதை நான் அறிவேன். எவ்வித அபாயத்திலிருந்தும் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்ற அவரது உயர்ந்த விருப்பத்தை நான் மிகவும் மதித்து வந்திருக்கிறேன். எனினும் நீங்கள் இப்போது காசியில் பிரசங்கங்கள் செய்துவருகிறீர்களென அறிகிறேன். ஆகையால் உங்களுடைய ஆரோக்கியத்தைப் பற்றிய சார்லியின் வர்ணனையைப் பொருட்படுத்தாமல், நீங்கள் ஒரு செய்தி அனுப்ப வேண்டும் என்று கேட்கத் துணிகிறேன். தேசியப் போராட்டமாகிற தீயினூடே செல்லுவோருக்கு நம்பிக்கையும் உத்வேகமும் அளிக்கக் கூடிய ஒரு செய்தி அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறேன். நான் அவ்விதம் கேட்பதற்குக் காரணம் என்னவெனில், நான் போராட்டத்தை ஆரம்பித்தபோது எனக்கு நீங்கள் அன்பு கூர்ந்து உங்களுடைய ஆசிகளை அனுப்பியிருந்தீர்கள் அல்லவா? எனக்கு எதிராக அணிவகுத்துள்ள சக்திகள் பயங்கரமானவை என்பதை நீங்கள் அறிவீர்கள். அவற்றைக் கண்டு நான் நடுங்கவில்லை. ஏனெனில் அவை அசத்தியத்தை ஆதரித்து வருகின்றன. சத்தியத்தில் எங்களுக்குப் போதிய நம்பிக்கை இருந்தால், அசத்தியத்தை ஆதரிக்கும் சக்திகளை எதிர்த்து நாங்கள் வெற்றி பெறுவோம். எனினும் எல்லா சக்திகளும் மனிதனின் மூலமே இயங்குகின்றன. எனவே இந்த மகத்தான போராட்டத்திற்கு, இதை அங்கீகரிப்போரின் மாசற்ற உயர்ந்த ஆதரவைப் பெற நான் ஆர்வமுள்ளவனாக இருக்கிறேன். தேசத்தின் அரசியல் வாழ்க்கையைத் தூய்மைப்படுத்துவதற்காகவே நான் இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன். எனவே இதைப்பற்றி தீர்க்காலோசனையுடன் கூடிய உங்களுடைய அபிப்பிராயத்தை நான் தெரிந்து கொள்ளும்வரையில் நான் மகிழ்ச்சியுடன் இருக்க முடியாது. இவ் விஷயமாக நீங்கள் முதலில் கூறிய அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளும்படி நேர்ந்திருந்தால், அதையும் தெரிவிக்க நீங்கள் தயங்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன். நண்பர்களிடமிருந்து வரும் எதிரிடையான அபிப்பிராயங்களைக் கூட நான் மதிக்கிறேன். அந்த அபிப்பிராயங்கள் என்னுடைய போக்கை மாற்றாவிடினும், அவை சூறாவளி நிறைந்த வாழ்க்கையின் பாதைகளில் இருக்கும் அபாயங்களைப் பற்றி எச்சரிக்கை செய்யும்

கலங்கரை தீபங்களாக விளங்குகின்றன. இந்த விதத்தில், சார்லியின் நட்பு எனக்கு விலை மதிக்க முடியாத ஒரு பொக்கிஷமாக இருந்து வருகிறது. ஏனெனில், எனக்கும் அவருக்குமிடையே ஏற்படும் கருத்து வேற்றுமையைக் கூட அவர் என்னுடன் பகிர்ந்து கொள்ளத் தயங்குவதில்லை. இந்த நெருக்கடியான சமயத்தில் சார்லியைப்போல் நீங்களும் அதே வாய்ப்பை எனக்கு அளிக்க வேண்டுமென நான் கேட்டுக் கொள்ளலாமா?

நீங்கள் ஆரோக்கியத்துடன் இருக்கிறீர்களென்றும், சென்னை மாகாணத்தில் நீங்கள் செய்த யாத்திரையின் காரணமாக ஏற்பட்ட களைப்பு முற்றிலும் தீர்ந்திருக்கும் என்றும் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

# 18

பம்பாய்,
மே *4, 1919*

எனது அன்புள்ள சார்லி,

உங்களுக்கு ஒரு புத்தகம் அனுப்ப எனக்கு நேரம் இல்லை. ஒரு வெறும் கடிதம் எனக்குத் திருப்தி அளிப்பதுமில்லை. பிரதிக்ஞைகளைப் பற்றிய உங்களுடைய அபிப்பிராயம் தவறு என்பதை எடுத்துக் காட்ட முடியும் என்பதே எனது நம்பிக்கையாகும். ராமபிரானுடைய செயலைப்பற்றி நீங்கள் கொடுத்துள்ள விளக்கம், அதை நீங்கள் சரிவர உணர்ந்து கொள்ளவில்லை என்பதையே காட்டுகிறது. பைபிளிலிருந்து நீங்கள் எடுத்துக் காட்டியுள்ள வாக்கியங்களையொட்டிய உங்கள் விளக்கமும் தவருக இருக்கலாம் அல்லவா? என்னைப் பொறுத்த மட்டில், ஏசு நாதரின் வாழ்க்கை ஒரு சாதாரண பிரதிக்ஞையை அடிப்படையாகக் கொண்டதே. உலகிலுள்ள எந்த சக்தியும், அவரை அந்தப் பிரதிக்ஞையிலிருந்து வழுவும்படி செய்ய முடியவில்லை. உங்களுடைய கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு பிரதிக்ஞைகளும் கேலிக்கூத்தேயாகும். அவை, பிரதிக்ஞை எடுத்துக் கொள்வதற்குத் தகுதிவாய்ந்த விஷயங்கள் அல்ல. ஒரு மனிதன் தன்னைப் படைத்த கடவுளின் முன்னிலையில் நின்றுகொண்டு பின்வருமாறு கூற ஏன் தயங்கவேண்டும்? "நான் ஒருபோதும் பொய் சொல்லாமல் இருக்க தயவு செய்து அருள் புரியுங்கள்." எனினும் நான் என்னைப் படைத்த கடவுளின் முன்னிலையில் நின்றுகொண்டு, "நான் இந்தக் குப்பையையோ அல்லது அந்தக் குப்பையையோ ஒருபோதும் கைவிடமாட்டேன்" என்று கூறமுடியாது. நான் இவ்விதம் கூறுவது தெளி

வாக இராமலிருக்கலாம். எனினும் நான் ஒளிவு மறைவின்றி மனம் விட்டுக் கூறியிருக்கிறேன் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். உள்ளத்தில் அன்பு இருக்கும்போது எதையும் மனம் விட்டுக் கூறாமல் எவ்விதம் இருக்க முடியும்?

ஏன் கசையடி கொடுக்கப்பட்டது என்பதை நீங்கள் விசாரித்து அறிந்து கொண்டீர்களா? இதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

'பம்பாய் கிரானிகிள்' பத்திரிகை நின்றுவிட்டதை நீங்கள் அறிவீர்கள். பத்திரிகை வெளியாகுமுன் தணிக்கைக்கு உட்பட வேண்டும் என்ற உத்தரவே அது நிறுத்தப்பட்டதற்குக் காரண மாகும். எனவே 'எங் இந்தியா' இனி வாரம் இரு முறைப் பத்திரிகையாக மாற்றப்படும். பிறகு அது தினசரிப் பத்திரிகை யாகவும் வெளிவரலாம். அது என்னுடைய மேற்பார்வையில் பிரசுரிக்கப்படும். அதற்கு ஏதாவது எழுத உங்களுக்கு நேரம் இருக்குமா? சுதேசி, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, சத்தியாக் கிரகம், ரௌலட் சட்டம் ஆகியவைபற்றி நீங்கள் எழுதலாம்.

சட்ட சபையின் அனுமதி பெறாமல் ரௌலட் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரக் கூடாது என்று நீங்கள் யோசனை கூறியிருக்கிறீர்கள். அந்த யோசனை ஒப்புக் கொள்ளப்பட்டால் கூட நாங்கள் ரௌலட் மசோதாவை அங்கீகரிக்க முடியாது. அது துஷ்பிரயோகம் செய்யப்படலாம் என்பது மாத்திரம் எங்க ளுடைய ஆட்சேபணை அல்ல; அதன் கீழ்க் குற்றங்கள் செய் வோர் மீது வழக்குகள் தொடரும் விஷயமாக எதேச்சாதிகார நடவடிக்கைகளுக்கு இடம் அளிக்கப்பட்டிருப்பதையும் நாங்கள் ஆட்சேபிக்கிறோம். அராஜகவாதி என்று கருதப்படுவோர் மீது கூட எதேச்சாதிகாரமாக வழக்குத் தொடரப்படுவதையும், விசேஷ அதிகாரங்களுடன் கூடிய சாதாரண சட்டத்தின் கீழ் வழக்குத் தொடருவதையும் நான் அனுமதிக்க மாட்டேன். அசா தாரண நிலைமைகளைச் சமாளிப்பதற்காக மாத்திரமே அசாதாரண அதிகாரங்கள் அளிக்கப்படவேண்டும். எவ்வளவு காலம் அவசி யமோ அவ்வளவு காலத்திற்கு நீங்கள் தயவு செய்து சிரத்தா னந்தஜியின் பக்கத்தில் இருந்து வாருங்கள். உங்களுக்கு ஓய்வு கிடைக்கும்போது, நீங்கள் இங்கு வரவேண்டுமென நான் விரும்பு கிறேன். அப்போது நாம் நிலைமையைப் பரிசீலனை செய்யலாம்.

படுகொலைகள், மக்கள்மீது வழக்குகள், ராணுவச் சட்டம், ராணுவ ஆட்சி ஆகியவற்றிற்கிடையே, அன்பாகிய சட்டம் பூரணமாகவும், வெற்றிகரமாகவும் செயல்பட்டுவருவதை நான் காண்கிறேன்.

உங்களுக்கும் சுவாமிஜிக்கும் அன்பு.

தங்கள்,

மோகன்

## 19

ஜூன் 11, 1919

பிரிவி கவுன்ஸிலில் வெற்றி கிடைக்குமென இதுவரையில் எந்த வக்கீலும் நம்பிக்கையளிக்கவில்லை. பொது மக்களுக்கு விஷயங்களை ஒழுங்காக எடுத்துக் கூறுவதன்மூலம், காளி பாபு (காளிநாத் ராய்) விடுதலை அடையும்படி நாம் செய்யலாம். அவரை விடுதலை செய்யவேண்டும் என்ற கிளர்ச்சியை ஆதரித்து கையெழுத்துகள் சேகரிக்கும்படியும், பொதுக் கூட்டங்கள் நடத்தும்படியும் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். அதற்காக நீங்கள் கல்கத்தாவுக்கும் மற்ற இடங்களுக்கும் செல்லும்படி நான் யோசனை கூறுகிறேன். இரக்கம் காட்டவேண்டும் என்ற காரணத்திற்காக அல்ல, நீதியை அடிப்படையாகக் கொண்டு மாத்திரமே விடுதலை செய்யும்படி கோரி, கல்கத்தா பிஷப்பினிடமும், மற்ற ஆங்கிலேயர்களிடமும் கூட நீங்கள் செல்ல வேண்டுமென நான் யோசனை கூறுவேன். அதிகாரிகளாயினும், அதிகாரத்தில் இராதவர்களாயினும், நீங்கள் அங்குள்ளவர்கள் மீது நம்பிக்கையிழந்துவிடுவதை நான் விரும்பவில்லை. அது எப்படியாயினும், இத்தகைய ஒரு பிரச்னையை யொட்டிக் கிளர்ச்சி செய்ய வேறு வழி எதுவும் இல்லை. பிரிவீ கவுன்சிலின் தீர்ப்பு நமக்கு விரோதமாக முடிந்தால்தான் என்ன? மேபுருக்கின் குற்றத்தை ஒப்புக்கொள்ளாதவர்கள், அதற்குப் பரிகாரம் தேட பிரிவீ கவுன்சிலுக்குச் செல்லவில்லை; தங்களுக்குச் சாதகமாக பொது மக்களின் அபிப்பிராயத்தைப் பலப்படுத்தி, உள் நாட்டு மந்திரி தங்களுடைய கோரிக்கைக்கு இணங்கும்படி செய்தனர்.

தங்கள்,
**மோகன்**

## 20

லேபர்னம் ரோட், காம்தேவி,
பம்பாய், ஆகஸ்டு 22, 1919

எனது அன்புள்ள சார்லி,

கன்னி பேரிங்கைப் பற்றி சுந்தரத்தினிடமிருந்து எனக்கு மனத்தை மிகவும் கலக்கும் செய்தி கிடைத்திருக்கிறது. பிரத்தியேகமாக அவளைச் சென்று பார்க்கும்படி நான் சுந்தரத்தைக் கேட்டிருந்தேன். அவரும் அவ்விதமே சென்றிருந்தார். அவள் இப்போது டேனிஷ் மிஷனில் வேலை செய்யவில்லை என்றும், இந்தியாவை விட்டு வெளியேறும்படி துன்புறுத்தப்பட்டு வருவதாயும் சுந்தரம் கூறுகிறார். இந்தியாவை விட்டு வெளியேறும்படி அவள் வற்புறுத்தப்படுவாளாயின். அது அவளுக்கு மரணத்திற்கு ஒப்பாகவே இருக்கும். அவ்விஷயமாக லார்டு வில்லிங்டனுக்கு

நான் எழுதிய கடிதத்தின் நகல் இத்துடன் இருக்கிறது. அவளுக்காக நான் மிகவும் வருந்துகிறேன். தாங்கள் உடனே சென்னைக்குச் சென்று, அவள் நாடு கடத்தப்படாமல் தடுக்க உங்களால் இயன்றதைச் செய்யுங்கள்.

அகிம்சைச் சித்தாந்தம்தான் சரியானது என்பது பற்றி என் அபிப்பிராயம் நாளுக்கு நாள் வலுவடைந்துவருகிறது. மிருக பலம் அதிகமாவதற்குத் தகுந்தவாறு மிருக பலமுள்ளவனின் கோழைத் தனமும் அதிகமாகிவருகிறது. எள்ளளவும் அபாயமற்ற ஒருவருடைய நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்காக வெறுக்கத் தக்க ரகசிய போலீஸ் யந்திரம் இயங்கி வருவதைப் பாருங்கள்! நிரபராதிகளின் உடலுக்கோ அல்லது மனத்திற்கோ தீங்கு இழைப்பதில் பங்கு எடுத்துக் கொள்வதைவிட என் உடல் முழுவதும் தோட்டாக்கள் பாய்ந்து உயிர் துறப்பதையே நான் விரும்புவேன்.

இன்று நமது சர்க்கார் எதுவும் செய்யத் துணிந்திருக்கிறார்கள். ஸ்தூல பலத்தினால் எள்ளளவும் பலனில்லை என்பதை உணர்ந்து கொள்ள தத்துவ நிபுணர் யாரும் தேவையில்லை. நான் செய்யும் முடிவுகளையோ அல்லது எனது ஊகங்களையோ நீங்கள் ஒப்புக் கொள்ளாமலிருக்கலாம். உயிரைக் கொடுத்தாவது ரௌலட் சட்டத்தை எதிர்ப்பது எனக்கு முக்கியமாகும். சாந்தி நிகேதனில் இருப்பது உங்களுக்கு முக்கியமாகும். இவற்றைப் போல் குமாரி பேரிங்கிற்கு நம்மால் இயன்றவரையில் பாதுகாப்பு அளிப்பதும் அவ்வளவு முக்கியமாகும். இதை நீங்கள் அங்கீகரிக்க வேண்டும் என்பதே எனது விருப்பம்.

தங்கள்,

**மோ. க. காந்தி**

## 21

(தந்தி)

அகமதாபாத்,
அக்டோபர் *13, 1919*

ஸி. எப். ஆண்ட்ரூஸ்,
பிரோஸ்பூர் ரோடு,
லாகூர்.

கத்தியவாரிலிருந்து இப்போதுதான் திரும்பிவந்தேன். நவம்பர் மாத மத்தியிலோ அல்லது அதற்கும் பிறகோ கூட நீங்கள் புறப்பட்டாலும், மிகவும் காலம் கடந்ததாகிவிடாது.*

**காந்தி**

---

* கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள நிலைமையைப் பரிசீலனை செய்வதற்காக ஆண்ட்ரூஸ் அந்த நாட்டிற்கு விஜயம் செய்ய உத்தேசித்திருந்தார். காந்திஜியின் மேற்கண்ட தந்திக்கு அவர் அக்டோபர் 17-ம் தேதி குஜ்ரன்வாலாவி

## 22

(தந்தி)

லாகூர்,
நவம்பர் 18, 1919

ஆண்ட்ருஸ்,
ஸ்ரீமதி ஜிஹாங்கீர் பெடிட் மேற்பார்வை,
பெட்டர் ரோடு, பம்பாய்.

நிச்சயமாக இங்கிலாந்து வழியாகத் திரும்பிவாருங்கள்.† விசாரணைக் கமிஷன் அங்கு வரும்வரையில் ஆப்பிரிக்காவிலேயே தங்கியிருங்கள்.‡

## 23

ஜூன் 20, 1920

அன்புள்ள சார்லி,

கிலாபத் பிரச்னையையும், மற்றப் பிரச்னைகளையும் பற்றி நீங்கள் உங்கள் உள்ளத்தில் இருப்பதையெல்லாம் கொட்டி எனக்கு எழுதிவருகிறீர்கள். ஆனல் நான் அவற்றிற்குப் பதில் எழுத முடியாதவனாக இருக்கிறேன். ஏராளமான அலுவல்களை நான் கவனிக்க வேண்டியிருப்பதே அதற்குக் காரணமாகும். இருப்பினும், நீங்கள் எப்போதும் என் மனத்தில் இருந்துவருகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். ஆன்மிகப் போராட்டங்கள் உங்களுக்கு எவ்வளவு வேதனையைக் கொடுக்கின்றன என்பதை நான் அறிவேன். உங்களுடைய ஆரோக்கியம் நன்றாக

---

லிருந்து பின்வருமாறு பதில் தந்தி கொடுத்தார்: "நீங்கள் திரும்பிவந்ததைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். இருவரும் உடனடியாகத் தென்னப்பிரிக்காவுக்குப் புறப்படுகிறோம். ஜிஹாங்கீர் பெடிட்டிற்கும் தந்தி கொடுத்திருக்கிறேன்."

† நவம்பர் 17-ம் தேதி ஆண்ட்ருஸ் எழுதியிருந்த கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: "சாஸ்கிரி இங்கு வரும்வரையில் காத்திருக்க உத்தேசித்திருக்கிறேன். அவர் வந்த பின் அவரிடம் என்னல் இயன்றவரையில் விளக்கிக் கூறுகிறேன். பின்னர் இங்கிலாந்துக்குச் சென்று அவ்விவரங்களையெல்லாம் கூறிவிட்டு சாத்தியமான வரையில் சீக்கிரமாக நீங்கள் இருக்குமிடத்திற்கு வந்து சேருகிறேன்."

‡ தென்னப்பிரிக்கா யூனியன் சர்க்காரால் நியமிக்கப்பட்ட விசாரணைக் குழுவைப்பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறர். 1920 பிப்ரவரி மாத மத்தியில் அக் கமிஷனின் விசாரணை ஆரம்பமாகப் போவதாக ஆண்ட்ருஸ் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

இருக்கிறதென நம்புகிறேன். கல்கத்தாவிலிருந்து வந்த பிறகு உங்கள் உடல் நிலை மிகவும் மோசமாக இருந்ததென்று நீங்கள் எனக்கு எழுதியிருந்தீர்கள்.

துருக்கிப் பிரச்னை சம்பந்தமாக எனது நிலையைப் பற்றி நீங்கள் கவலைப்படக்கூடாது என்பதே எனது விருப்பமாகும். அதாவது கண்மூடித்தனமாக நான் எதுவும் செய்ய மாட்டேன் என்பதை நீங்கள் நம்பலாம். அப் பிரச்னை சம்பந்தமாக எனது நிலை ஒழுங்கீனமானது என்பது ருஜுவாகுமாயின், அதைத் திருத்திக் கொள்ள நான் தயாராக இருக்கிறேன். பின்வாங்க முடியாதவாறு துருக்கிப் பிரச்னையையொட்டி நான் வாக்குறுதி எதுவும் அளித்துவிடவில்லை. இப்போது நான் இருக்கும் துரதிர்ஷ்டமான நிலை என்னவெனில், லாயிட் ஜார்ஜ் மீது எனக்குச் சிறிதும் நம்பிக்கை இல்லை என்பதுதான். துருக்கியினிடம் பிரிட்டன் நியாயமான முறையில் நடந்து கொள்ளுமாயின், எல்லாம் திருப்திகரமாக நடைபெறக் கூடும். துருக்கி நேசதேசங்களின் பக்கத்தில் சேர்ந்திருந்தால், துருக்கியினிடமிருந்து அர்மீனியாவையோ, அரேபியாவையோ அல்லது மெஸொபடோமியாவையோ பிரிட்டன் பறித்துக் கொண்டிருக்குமா? அது நேச தேசங்களுடன் சேர்ந்திருந்தால், சர்வாதிகார தோரணையில் துருக்கிக்குக் கட்டளை விடுப்பதற்குப் பதிலாக நட்பு முறையில் வற்புறுத்தித் துருக்கியில் சீர்திருத்தங்களைக் கொண்டு வர பிரிட்டன் முற்பட்டிராதா? இவ் விஷயத்தில் பிரிட்டிஷ் மந்திரி சபையின் மமதையும், வஞ்சகமும், அதுபோலவே வைஸ்ராயின் அறிக்கையிலிருந்து வெளியாகும் மமதையும் வஞ்சகமும் சகிக்க முடியாதவையாக இருக்கின்றன.

முகமது அலியின் விண்ணப்பமும், சமாதான உடன்படிக்கையைப் போல் தூய்மையற்றதாக இருக்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்கள். உடன்படிக்கையைப் பற்றிய கண்டனத்தைப் பொறுத்தமட்டில், அநேகமாக இந்தியா முழுவதும் முகமது அலியை ஆதரிக்கிறதென நான் நினைக்கிறேன். அறிவை அடிப்படையாகக் கொண்டு அல்ல, பிரிட்டன் மீதுள்ள நம்பிக்கையின்மை காரணமாகவே கண்டனம் எழும்பியிருப்பதாக நீங்கள் கூறுவீர்களாயின், அதை நான் ஒப்புக் கொள்வேன். நான் பத்திரிகைகளை வாசிப்பதில்லை. இத்துடன் இணைக்கப்பட்டிருப்பதைப் பாருங்கள். அது 'லீடர்' பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. உடன்படிக்கையைக் கண்டிக்கும் விஷயத்தில் இந்தியா முழுவதும் தமது பக்கத்தில் இருப்பதாக முகமது அலி நிச்சயமாக நம்புகிறார். அவர் யாதொரு பிரதிக்ஞையையும் மீறவில்லை. அவரது கோரிக்கை மிகவும் உயர்ந்தது. ஆனால் சமாதான உடன்படிக்கையோ வெறுக்கத்தக்கது. அது, கடவுளுக்கும் மனிதனுக்கும் விரோதமான ஒரு பாவமாகும். நேச தேசங்கள் என்பவை, பெரிதும் இங்கிலாந்துதான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தங்களுடைய மிருக பலத்தை உணர்ந்தே நேச தேசங்கள் அவ்விதம் பேசுகின்றன. முகமது அலியோவெனில்,

பலவீனமான ஒரு தேசத்தின் சார்பில் தாம் பேசுவதாகவும், ஏற்கனவே வீழ்த்தப்பட்டும், அவமதிக்கப்பட்டும் இருக்கும் ஒரு தேசத்தின் கோரிக்கையை ஆதரிப்பதாகவும் கருதுகிருர், அவர் ஓரளவு மிகைபடக் கூறுவதை மன்னிக்க நான் தயாராக இருக்கிறேன். ஆனல் மிருக பலத்தை விளம்பரம் செய்யும் வெட்கக் கேட்டைச் சகித்துக் கொள்ள நான் எள்ளளவும் தயாராக இல்லை. கலப்பற்ற துன்பமாகிற ஆயுதங்களில், அதாவது பிறருக்குத் துன்பம் இழைக்காமல் தானே துன்பத்தை அனுபவிப்பதில் எனக்குள்ள நம்பிக்கையை இந்தியா முழுவதும் ஊடுருவும்படி செய்வது என்றல் சாத்தியமாயின், அதிகார வர்க்கத்தின் மமதையை அதன் உயர்ந்த பீடத்திலிருந்து ஒரு விநாடியில் நான் வீழ்த்திவிடுவேன்; ஐரோப்பாவாகிற வெடி மருந்துக் கிடங்கையும் பலனற்றுப் போகும்படி செய்வேன்.

இந்தச் சமாதான உடன்படிக்கை, என்னை அதிர்ச்சியடையும்படி செய்துவிட்டது. பிரிட்டிஷ் மந்திரி சபை, வைஸ்ராய் சபை ஆகியவற்றின் நல்ல நோக்கங்களில் எனக்கு இருந்த நம்பிக்கையையெல்லாம் ஹண்டர் அறிக்கை அடியோடு தகர்த்துவிட்டது. இந்தச் சோதனையிலிருந்து ஸ்ரீ மாண்டேகும் நற்பெயருடன் வெளிவரவில்லை. அவர் ஏக காலத்தில் கடவுளையும் பணதேவதையையும் பூஜிக்க முயற்சித்து, அம் முயற்சியில் பரிதாபகரமாகத் தோல்வியடைந்துள்ளார். இந்த அதிர்ச்சிக்குப் பிறகும் கூட பிரிட்டிஷ் அரசியல் சட்டம் உருவாக இருக்குமாயின், அதில் இயல்பாக உள்ள ஏதோ ஒரு ஜீவ சக்தியே அதற்குக் காரணமாக இருக்கும். தற்போது பிரிட்டிஷ் அரசாங்க யந்திரத்தை இயக்குவோர், பிரிட்டிஷ் அரசியல் சட்டத்தைத் தூளாக்கும் முயற்சியில் ஒன்றைக் கூட பாக்கிவிடவில்லை. உங்களுடைய எந்தக் கடிதத்திற்கு இப்போது நான் பதில் எழுதிக் கொண்டிருக்கிறேனே அக்கடிதத்தை நீங்கள் உங்களுடைய தந்தி மூலம் ரத்து செய்திருப்பதாக மகாதேவ் எனக்கு நினைவூட்டுகிருர். எனினும் அதனல் நிலைமையில் எவ்வித மாறுதலும் ஏற்படுவதற்கில்லை. தற்போதைய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இரட்டைக் குற்றத்தின் கொடுமையை நீங்கள் உணர வேண்டும், அல்லது என்னுடைய மதியீனத்தை நீங்கள் உணர்ந்து என்னைத் திருத்த வேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

சாதியைப்பற்றிய என்னுடைய அபிப்பிராயங்களைக் குறித்து நான் உங்களுக்குத் தொல்லை கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அதன் சம்பந்தமாக என்னுடைய தார்மிக நிலைகூட உங்களுக்குக் கவலையை உண்டு பண்ணத் தேவையில்லை. எனது நிலையை நீங்கள் தவருக அர்த்தம் செய்து கொண்டிருக்கிறீர்கள். வெறுப்பு காரணமாக ஒரு சக மனிதருடன் சேர்ந்து சாப்பிட மறுப்பது ஒரு பாவமாகும். ஆனல் தன்னடக்கம் காரணமாக ஒரு சக மனிதருடன் சேர்ந்து சாப்பிட மறுப்பது தர்மமேயாகும். இந்தியத் தாய்மார்கள் தங்களுடைய குடும்பத்தினருடன்கூடச் சேர்ந்து சாப்பிடுவதில்லை என்ற கட்டுப்பாட்டைத் தங்களுக்கு தாங்களே

விதித்துக் கொண்டிருக்கிறார்கள். இதை நீங்கள் அறிவீர்களா? நரோத்தமரின் தாயார், பொதுவான சமையல் அறையில் சாப்பிடுவதில்லை. அந்தக் கட்டுப்பாட்டில் நன்மை ஏதாவது இருக்கலாம். இருந்தாலும் அது பாவமான ஒரு காரியம் இல்லை என்பது நிச்சயம்தான். பல மனைவிகள் இருப்பதைக் காட்டிலும் ஒரு மனைவி இருப்பதுதான் தர்மமாகும். அதுபோலவே குறிப்பிட்ட ஒரு இனத்தினரிடையே இருந்து எனக்கு மனைவியைத் தேர்ந்தெடுப்பது என்ற கட்டுப்பாட்டை ஒரு தர்மம் என்றே நான் கருதுகிறேன். ஒருவரது நியாயமற்ற ஆசைகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டியது அவசியம் என்பதையும் தர்மம் என்பதையும் நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்பது நிச்சயம். எனினும் தொண்டு செய்வதற்கும் தியாகம் செய்வதற்கும் நான் எல்லையை வரையறுப்பது பாவமாகும். ஹிந்து மதம் இன்று நடைமுறையில் இழிவான நிலையை அடைந்திருக்கிறது என்பது உண்மையே. ஆனால் ஹிந்து மதத்தின் அப்பழுக்கற்ற கொள்கையின் முழு மகத்துவத்தையும் நீங்கள் இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை என்று நான் அடிக்கடி எண்ணுவது உண்டு.

எனது ஆரோக்கியம் நடுத்தரமாக இருந்து வருகிறது. பூரண அமைதிக்காகவும், ஓய்வுக்காகவும், தனிமைக்காகவும் நான் ஏங்கி வருகிறேன். துருக்கி சமாதான உடன்படிக்கையின் ஷரத்துக்கள் முற்றிலும் திருத்தப்படவிருக்கின்றன என்று இப்போதுதான் கேள்விப்பட்டேன். அப்படியாயின், நான் சில நாட்கள் அவ்விதம் ஓய்வு எடுத்துக்கொள்ள இயலும் என்பதில் சிறிது நம்பிக்கை இருக்கிறது.

பிரிட்டிஷ் கயானுவுக்கு வருமாறு சர் ஜி. பார்னஸ்* என்னை அழைத்திருக்கிறார். கிலாபத் கிளர்ச்சி நடைபெற்று வருகையில் நான் அங்கு செல்ல முடியாது என்று அவரிடம் கூறியுள்ளேன். நீங்கள் அங்கு செல்ல உத்தேசித்திருக்கிறீர்களா?

கிழக்கு ஆப்பிரிக்காவைப் பற்றி நீங்கள் இம்பீரியல் பிரஜா சங்கத்திற்கு அனுப்பிய கடிதத்தை நான் வாசித்தேன். நீங்கள் பல அலுவல்களுக்கிடையே அதை எழுதியிருக்க வேண்டுமென்று தெரிகிறது. அவர்கள் அதைக் கடுமையாகக் கண்டித்தார்கள். நான் மௌனமாக இருந்தேன். அவர்களுடைய கண்டனத்தைக் குறித்து நான் அனுதாபப்படாமல் இருக்க முடியவில்லை. உங்களுடைய கடிதம் அவசரத்தில் தொடர்ச்சியின்றி எழுதப்பட்டுளது. அதில் நீங்கள் யாதொரு தகவலும் கொடுக்கவில்லை. தென்னாப்பிரிக்காவைப் பற்றி நீங்கள் யாதொரு அறிக்கையும் அனுப்பவில்லை என்றும் அவர்கள் மனம் கசந்து புகார் கூறினார்கள்.† அவர்களுடைய அதிகார பூர்வமான ஏஜண்டாக

* சர் ஜார்ஜ் ஸ்டேபிள்டன் பார்னஸ் 1916-1921-ல் இந்தியாவில் வைஸ்ராய் நிர்வாக சபை அங்கத்தினராக இருந்தார்.

† ஸ்ரீ ஆண்ட்ரூஸ் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்று, 1919 டிசம்பரிலிருந்து 1920 மார்ச் மாதம் வரையில் அங்குள்ள இந்தியர்களின் நிலைமையைப் பற்றிப் பரிசீலனை செய்து கொண்டிருந்தார்.

நீங்கள் அங்கே சென்றிருந்ததால், அது பற்றிய முழுவிவரங்களும் அடங்கிய ஓர் அறிக்கையை அனுப்ப நீங்கள் கடமைப்பட்டிருக் கிறீர்கள் என்று நான் நினைக்கிறேன். நீங்கள் மரியாதைக்காக வாவது அவர்களுக்குத்தான் முதலில் எழுதியிருக்க வேண்டும். இயன்றவரையில் இப்போதாவது அந்தத் தவறை நீங்கள் திருத் திக்கொள்ள வேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

தங்கள்,

**மோகன்**

## 24

ஆசிரமம்,

மே 25, 1920

உள்ளத்தை மிகவும் சோதிக்கும் ஒரு கேள்வியை நீங்கள் என்னிடம் கேட்டிருக்கிறீர்கள். திருமணம், சாதிப் பிரச்னை ஆகியவை பற்றி உங்களுக்கும் எனக்குமிடையே மூலாதாரமான வேற்றுமை இருந்துவருவதை நான் எப்போதுமே உணர்ந்திருக் கிறேன். ஒவ்வொருவருக்கும் திருமணம் அவசியமானதென நான் கருதவில்லை. மகோன்னதமான நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு கவனிப்போமாயின், பிரம்மச்சரியத்தைக் காட்டிலும் திருமண நிலை தாழ்ந்ததேயாகும். எனினும் பெரும்பாலோரின் வாழ்க்கையிலும் திருமணம் செய்துகொள்ள வேண்டியது முற்றிலும் அத்தியாவசியமாக இருக்கிறது என்பதை நான் உணருகிறேன். அதேசமயத்தில், ஒருவர் தமது சகோதரியை விவாகம் செய்து கொள்வது ஒழுங்கற்றது என்று கருதப்படுவதுபோலவே, ஆடவர் களுக்கும் பெண்களுக்கும் நான் சில ஒழுங்கு முறைகளையும், கட்டுப் பாடுகளையும் விதிப்பேன். அதாவது ஒரு ஆடவரோ அல்லது ஒரு பெண்ணோ தமது பிரிவுக்கு வெளியில் உள்ளவரை விவாகம்செய்து கொள்வது ஒழுங்கற்றதென நான் விதிப்பேன். இங்கே பிரிவு என்பதை சாதி என்று கூறலாம். அவ்விதம் செய்வதன் மூலம் அந்த நபரின் கவனத்திலிருந்து மற்ற ஆடவர்களுக்கோ அல்லது பெண்களுக்கோ விடுதலை ஏற்படும். ஒரு ஆடவருக்கோ அல்லது பெண்ணுக்கோ குறிப்பிட்ட பிரிவிலிருந்து தகுதியான மனைவியோ அல்லது கணவரோ கிடைக்காவிடில், அந்த ஆடவரோ அல்லது பெண்ணோ மனத்திருப்தியுடன் விவாகம் செய்து கொள்ளாமலே இருந்துவிட வேண்டும். அதாவது கட்டுதிட்டமற்ற சுயேச்சையில் எனக்கு நம்பிக்கையில்லை. பெரும்பாலான திருமண உறவுகளும் உடல் சம்பந்தமான கவர்ச்சி காரணமாகவே ஏற்படுகின்றன. இந்தக் கவர்ச்சி ஓர் எல்லைக்கு உட்பட்டிருக்கும்படி செய்யவே நான் முயற்சிப்பேன். ஒரு பிராம்மணர் தமது இனத்திற்கு வெளியேயுள்ள ஒரு பெண்ணை மனைவியாகத் தேர்ந்தெடுப்பதை நான் விரும்பமாட்டேன். இவ்விஷயத்தில் தீண்டாமைப் பிரச்னை

எதுவும் இல்லை. கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டு ஒழுங்கான முறையில் பின்பற்றப்படுமாயின், சாதி பலன்தரத்தக்க ஒரு ஏற்பாடு என்பதே எனது கருத்தாகும். தீண்டாமை, கடவுளுக்கும் மனித வர்க்கத்திற்கும் விரோதமான குற்றமாகும். சாதி முறையை நான் தூய்மைப்படுத்த விரும்புகிறேன்; தீண்டாமை முறையையோவெனில் அடியோடு ஒழித்துவிட விரும்புகிறேன். மணிலால் ஒரு பறைப் பெண்ணைக் காதலிப்பானாயின், அதைக் குறித்து நான் சச்சரவிட மாட்டேன்; ஆனால் எனது போதனையை மனத்திற் கொள்ள அவன் தவறிவிட்டான் என்றே நிச்சயமாகக் கருதுவேன். அவன் தன் சொந்த சாதிப் பிரிவுக்கு உட்பட்ட பெண்ணைத் தேர்ந்தெடுப்பதுடன் திருப்தியடைய வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். எனினும் மற்ற சாதியினரின் மீதுள்ள வெறுப்பு, அதற்குக் காரணமாக இருக்கக் கூடாது. அதாவது அவன் தன்னடக்கத்தை அனுசரிக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். சாதி ஏற்பாடு சம்பந்தமாகவும் எனது அபிப்பிராயம் அதுதான்.

ஆசிரமத்தில் நாங்கள் எவ்விதமான சாதிக் கட்டுப்பாடுகளையும் அனுசரிப்பதில்லை. எனினும் நாங்கள் ஒரு புதிய பரிசோதனையைச் செய்துவருவதால், ஒரு பிராம்மணர் தமது எல்லையைத் தாண்டி, மனம் போனவாறு எங்கே வேண்டுமாயினும் சாப்பிடுவதை நான் விரும்பவில்லை. அது ஒரு கட்டுதிட்டத்திற்கு உட்பட்டிருக்க வேண்டும் என்பதே எனது கருத்தாகும். சாதி முறையில் உள்ள அழுக்காறுகளை நீங்கள் களைந்து விடுவீர்களாயின், அது (சாதி) ஹிந்து மதத்தின் ஒரு கோட்டை என்பதையும், அதன் வேர்கள் மனித இயற்கையில் ஆழ்ந்து ஊடுருவியிருப்பதையும் நீங்கள் காண்பீர்கள்.

இப்போது கிலாபத் பிரச்னைக்கு வருகிறேன். அர்மீனியாவைப் பற்றி நான் எதுவுமே கூறவில்லை. ஏனெனில் அதைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. தவிர துருக்கி சுல்தானோ அல்லது வேறு வல்லரசோ அர்மீனியாவின் சுதந்திரத்தைப் பறிப்பதை நான் விரும்பவில்லை. மற்ற வல்லரசின் கீழ் இருப்பதைப் போல் துருக்கியின் கீழ் அர்மீனியா* சுயேச்சையுடன் இருக்கலாம். அர்மீனியா, அரேபிய நாடுகளின் உள்நாட்டு நிர்வாகத்தில் தலையிடுவதில்லையென்று சுல்தானிடமிருந்து வாக்குறுதி பெறலாமென நான் எப்போதும் கூறிவந்திருக்கிறேன். சமாதான உடன்படிக்கையினால் ஏற்பட்டுள்ள நிலைமை சகிக்க முடியாததாக இருக்கிறது. சுல்தானின் கீழ் அராபியர்களுக்கு இருந்த சுதந்திரத்தையும் இப்போது அவர்கள் இழந்துவிட்டார்கள். சாத்தியமாயின், ஹெஜாஸ் மன்னரும், அமீர் பெய்சலும் அரேபியாவையும், மெசொபடோமியாவையும் சக்கையாக உறிஞ்சிவிடுவார்கள். ஏனெனில் அவ்விருவரும்

---

* முதலாவது மகாயுத்தம் முடிந்த பின் 1920-ல் ருஷ்யப் படைகளும், துருக்கிப் படைகளும் சேர்ந்து அர்மீனியாவை ஆக்கிரமித்துக் கொண்டன.

பிரிட்டிஷ் அதிகாரிகளின் கைப் பொம்மைகளாக இருப்பார்கள். அந்த அதிகாரிகளின் ஒரே நோக்கம் ஐரோப்பிய முதலாளிகளுக்கு எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சேர்த்துக் கொடுக்க வேண்டும் என்பதே!

தங்கள்,

மே

## 25

பெஜவாடா,
ஆகஸ்டு 23, 1920

எனது அன்புள்ள சார்லி,

எனக்கு மிகுந்த களைப்பைக் கொடுத்துவந்த சென்னை மாகாண யாத்திரையை நான் இன்று முடித்துள்ளேன். நான் இடைவிடாமல் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. போராட்டம் நியாயமானது என்பதையும், ஷவுகத் அலியின் பெருமையிலும் நல்ல தன்மையிலும் எனக்குள்ள நம்பிக்கையையும் எனது அனுபவம் உறுதிப்படுத்தியிருக்கிறது. எனக்குத் தெரிந்த மிகவும் அந்தரங்க சுத்தியுள்ளவர்களில் அவரும் ஒருவர். அவர் பெருந்தன்மை வாய்ந்தவர், ஒளிவு மறைவு இல்லாமல் பேசுபவர், தைரியசாலி, பொறுமையுள்ளவர். அவருக்குத் தம்மிடத்திலும் தமது லட்சியத்திலும் நம்பிக்கையிருக்கிறது. கடவுளிடம் திட நம்பிக்கையுள்ள அவர், எல்லாம் நன்மையாக முடியும் என்பதிலும் நம்பிக்கையுடையவராக இருக்கிறார். நமக்குக் கிடைத்து வரும் பொது மக்களின் ஆதரவு ஆச்சரியகரமாக இருக்கிறது. நமது வேலைத் திட்டத்திலுள்ள சாத்துவிக அம்சத்திற்கு மகத்தான ஆதரவு இருந்துவருகிறது. பெங்களூரில் மக்கள் திரளாகக் கூடியிருந்தனர். கண்களுக்கு எட்டியவரையில் மக்கள் கூட்டம் இருந்தது. கூட்டத்தில் ஒரே ஒரு ஆங்கிலேயரும் ஒரே ஒரு ஆங்கிலப் பெண்மணியும் இருந்தனர். எனினும் மக்கள் கூட்டம் அவர்களை நெருக்கி எள்ளளவும் தொந்தரவு கொடுக்கவில்லை. மக்கள் கூட்டங்களின் சாத்துவிகமான போக்கைப் பாராட்டி எனக்குப் பலவிடங்களிலிருந்தும் செய்திகள் கிடைத்திருக்கின்றன. மக்களின் சாத்துவிகமான போக்கை சர்க்கார்கூட வேண்டா வெறுப்புடன் ஒப்புக்கொண்டிருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். இதெல்லாம் நன்மைக்கே என்பது எனது அபிப்பிராயம். ஆனால் இதற்கு மாறாக, தலைவர்கள் அடங்கிய பிரிவினரிடமிருந்து அதிக ஆதரவு கிடைக்கவில்லை. அவர்கள் எதுவும் தியாகம் செய்ய விரும்பவில்லை. பிரசங்கங்களினாலும், தீர்மானங்களினாலுமே அவர்கள் எல்லாவற்றையும் பெறலாமென எதிர்பார்க்கிறார்கள். தியாகம் செய்யத் தயாராக இருக்கும்

தேசத்தை அவர்கள் முன் செல்ல முடியாமல் தடுத்துவருகிறார்கள்.

## 26

அலிகார்,
நவம்பர் 23, 1920

எனது பேரன்புள்ள சார்லி,

உங்களுடைய கடிதங்களும் உங்களுடைய தந்தியும் கிடைத்தன. நான் உங்களுக்கு அநீதி செய்திருக்கிறேனா? உங்களை அழைப்ப நான் முயற்சித்து வருகிறேன் என்று மாத்திரமே தந்தி கொடுத்தேன். நீங்கள் அப்பதவியை ஒப்புக்கொண்டதாக நான் கூறவில்லை. நமக்குள் நடந்த சம்பாஷணையை மனத்திற்கொண்டே நான் அவ்விதம் செய்தேன். அது எப்படியாயினும், உங்களை எவ்விதத்திலும் வற்புறுத்தும் உத்தேசம் எனக்கு இல்லை. முஸ்லிம் பல்கலைக் கழகத்திற்காக உங்களால் என்ன செய்ய இயலுமோ அதை நீங்கள் செய்யலாம்.

ஆம். தூய்மையான அடிப்படையில் பிரிட்டிஷாரின் தொடர்பு இருக்கவேண்டிய அவசியத்தை நான் உணருகிறேன். தற்போதுள்ள நிலையில் அது வெறுக்கத்தக்கதாக இருக்கிறது. என்ன நேர்ந்தாலும் அதற்கு முற்றுப்புள்ளி வைத்துவிட வேண்டுமா என்று நான் கூறுவதற்கில்லை. கருப்பு நிறத்தவருடன் முற்றிலும் சமத்துவ அந்தஸ்து இருப்பதை பிரிட்டிஷார் விரும்பாமல் இருக்கலாம். அப்படியாயின் பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து வெளியேறிவிடுமாறு செய்ய வேண்டும். எனினும் கௌரவமான சமத்துவ அந்தஸ்து சாத்தியமே என்பதை நிராகரிக்க நான் தயாராக இல்லை. மதங்களின் மூலாதாரமான கொள்கை, மனிதனின் சகோதர தத்துவமேயாகும். இந்தக் கொள்கையை நடைமுறையில் கொண்டுவர பிரிட்டிஷார் அடியோடு தவறிவிட்டார்கள் என்பது தெளிவாக நிரூபிக்கப்பட்டால், அந்தத் தொடர்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட வேண்டும்.

நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

குஜராத்தியக் குழந்தைகளை அவர்களுடைய பெற்றோர்கள் திருப்பி அழைத்துக் கொண்டுவிட்டார்கள் என்பதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை.* அதனால் உங்களுக்கு நஷ்டம் எது

* சாந்திநிகேதன் ஆசிரமத்தில் சாதி வேற்றுமையின்றி எல்லோரும் சேர்ந்து சாப்பிடவேண்டும் என்ற விதியை எதிர்த்து, குஜராத்தியக் குழந்தைகளை அவர்களுடைய பெற்றோர்கள் திருப்பி அழைத்துக் கொண்டுவிட்டார்கள். அச் சம்பவத்தை காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

வும் இல்லை என்றே நினைக்கிறேன். சிறுவர்களை வைத்துக் கொள்வதற்காக நீங்கள் கொள்கைகளை விட்டுக் கொடுக்க முடியாது அல்லவா?

உங்களுடைய கடிதத்தில் கூறப்பட்டிருந்த யோசனைக்கு இணங்க, செனேட் சபையில் அந்தத் தீர்மானம்* நிறைவேறும் படி செய்ததற்காக நான் எவ்வளவு துன்பத்துக்கு உள்ளாகி வருகிறேன் என்பதை உங்களுக்குக் கூறியுள்ளேன். என்னை அறவே பகிஷ்காரம் செய்யப்போவதாக அவர்கள் மிரட்டியுள்ளனர். ஆனால் எனது நிலை மிகமிகத் தெளிவாகும். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கோ அல்லது வேறு வகுப்பினருக்கோ பாதகம் ஏற்படக்கூடிய விதத்தில் பெறும் சுயராஜ்யத்தை நான் விரும்பவில்லை. நான் கொடுத்துள்ள விளக்கத்தின்படி அது சுயராஜ்யமாக இராது. இந்தியா தூய்மையடைந்த அந்த விநாடியிலேயே விடுதலை பெற்றுவிடும். எனினும் எல்லா சைத்தான்களையும்விட மிகப் பெரிய சைத்தானுன இந்த அரசாங்கத்தை என் சக்தியையெல்லாம் உபயோகித்து நான் எதிர்த்துப் போரிட வேண்டும். அவ்வாறு செய்யும்போது நான் என் முயற்சியின்றியே சில்லறைச் சைத்தான்களையும் எதிர்த்துப் போரிட வேண்டியிருக்கும். இந்த பகிஷ்கார மிரட்டல் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கின்றது. ஏனெனில் அதன் காரணமாக நான் மேலும் தூய்மையான நிலையில் இருப்பதாக உணருகிறேன். அரசாங்கத்தை எதிர்ப்பதில் சக ஊழியர்களின் நோக்கங்கள் பல்வேறு விதமாக இருக்கலாம். ஆனால் தீண்டாமைச் சைத்தானை எதிர்ப்பதில் அப்பழுக்கற்ற கோஷ்டியினரே என்னிடம் இருக்கிறுர்கள்.

அன்புள்ள,

தங்கள்,

**மோகன்**

---

* அரசாங்கத்தினிடம் மான்யத் தொகை எதையும் எதிர் பார்க்காமல் ஸ்தாபிக்கப்பட்ட குஜராத் வித்தியாபீடம் ஒரு தேசியப் பல்கலைக் கழகமாகும். அதன் செனேட் சபைக் கூட்டம் ஒன்று 31–10–1920–ல் காந்திஜியின் தலைமையில் நடந்தது. வித்தியாபீடத்தினல் அங்கீகரிக்கப்பட்ட எந்தப் பள்ளிக்கூடங்களிலும் தீண்டாதாரின் குழந்தைகளை அனுமதிக்க மறுக்கக் கூடாது என்று அப்போது ஒரு தீர்மானம் நிறைவேறியது. இந்தத் தீர்மானத்தையே காந்திஜி 26-ம் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறுர்.

# 27

ரயிலில்,
*19-1-1921*

எனது பேரன்புள்ள சார்லி,

கிறிஸ்துமஸ் பண்டிகையின்போது நீங்கள் எழுதிய கடிதத்தையும், லால்சந்திற்கு* எழுதிய மற்றொரு கடிதத்தையும் இப்போதுதான் வாசித்தேன். அவர் அனுபவமற்றவராதலின், அவரை மொம்பாஸாவுக்கு அனுப்பக்கூடாது என்று நீங்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்கிறேன். கிழக்கு ஆப்பிரிக்கா சம்பந்தமான அறிக்கையை நான் இன்னும் வாசிக்கவில்லை. எனினும் நீங்கள் குறிப்பிட்டுள்ள கட்டுரையை நான் வாசித்தேன். லால்சந்தின் நடையை நான் சிறிதும் விரும்பவில்லை. நான் அதைப் பார்த்திருந்தால், அது பிரசுரமாவதைத் தடுத்திருப்பேன்.

நீங்கள் சௌகரியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.

பியர்சனின்† கடிதத்தை மிகவும் மதிப்புவாய்ந்த ஒரு வெகுமதியாக நான் கருதுகிறேன். பாரோ தாதாவும்‡ மற்றொரு கடிதம் அனுப்பியிருக்கிறார். அவர் மிகவும் உத்தமர். அவரது ஆசிகளை நான் போற்றுகிறேன்.

21-ஆம் தேதி நான் பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்குப் புறப்படுகிறேன்.

அன்புடன்,

தங்கள்,
மோகன்

---

* லால்சந்த் 'எங் இந்தியா' ஆசிரியர் குழுவில் ஒருவராகப் பணி புரிந்து வந்தார்.

† வில்லியம் வின்ஸ்டன்லி பியர்சன், ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸுடன் சேர்ந்து கிறிஸ்தவ இளைஞர் சங்கத்தில் பணி புரிந்துவந்தார். அவர் சிறிது காலம் சாந்தி நிகேதனிலும் ஆசிரியராக இருந்தார். 1914-ல் நேட்டாலிலுள்ள கரும்புத் தோட்டங்களில் இந்தியத் தொழிலாளர்களின் நிலைமையை ஆராய்ச்சி செய்வதற்காகத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றிருந்தார்.

‡ கவியரசர் தக்கூரின் தந்தையான துவிஜேந்திரநாத் தாகூரையே பாரோ தாதா என்று காந்திஜி மரியாதையாகக் குறிப்பிடுவது வழக்கம்.

## 28

கல்கத்தா,
ஜனவரி 29, 1921

எனது பேரன்புள்ள சார்லி,

ஏராளமான அன்புக் கடிதங்களால் நீங்கள் என்னைத் திக்குமுக்காடும்படி செய்திருக்கிறீர்கள். ஆனால் நான் உங்களை அலட்சியம் செய்துவிட்டேன். எனினும் என் சிந்தனைகளிலும் பிரார்த்தனையிலும் நீங்கள் எப்போதும் இருந்து வருகிறீர்கள். நோய்வாய்ப்படுவதற்கு உங்களுக்கு உரிமை இல்லை.* எனவே நீங்கள் எழுந்து சுறு சுறுப்புடன் அலுவல்களைக் கவனிப்பதே நல்லது. எனினும் நீங்கள் படுத்த படுக்கையில் இருந்து கொண்டே எவ்வளவோ செய்திருக்கிறீர்கள்.§ ஆகையால் பிரார்த்தனை தான் சிறந்த அலுவல் என்பதையும், மௌனம்தான் சிறந்த பேச்சு என்பதையும், பெரிதும் மௌனம்தான் சிறந்த வாதம் என்பதையும் நான் நாளுக்கு நாள் அதிகமாக உணர்ந்து வருகிறேன். தீண்டாதாரைப்பற்றி நீங்கள் கொண்டுள்ள கவலைக்கு நான் அளிக்கும் பதில் அதுதான்.

ஓர் இந்தியன், ஒரு ஹிந்து என்ற முறையில் இந்தப் பிரச்னையை நான் கவனித்து வருகிறேன். நீங்களோ, ஓர் ஆங்கிலேயர், ஒரு கிறிஸ்தவர் என்ற முறையில் அதைக் கவனித்துவருகிறீர்கள். ஓர் ஆராய்ச்சியாளர் என்ற முறையில் நீங்கள் அதைக் கவனிக்கிறீர்கள்; நானே அதனால் நேரடியாகப் பாதிக்கப்பட்டவன், துன்பத்திற்குள்ளானவன் என்ற முறையில் அதைக் கவனித்துவருகிறேன். நீங்கள் பொறுமையாக இருக்க இயலும்; என்னால் இயலாது. அல்லது பாரபட்சமற்ற சீர்திருத்தக்காரர் என்ற நிலையில் நீங்கள் பொறுமையற்றிருக்கலாம்; அந்தப் பாவத்தை நான் களைய முடியுமாயின், பாவம் செய்த ஒருவன் என்ற வகையில் நான் பொறுமையாக இருந்து தீரவேண்டும். ஜாலியன்வாலாபாக்கில் ஆங்கிலேயர் செய்த பாவத்தைக் குறித்து நான் தடபுடலாகப் பேசலாம். ஆனால் ஓர் ஹிந்து என்ற முறையில் தீண்டாதாருக்கு எதிராக ஹிந்து மதம் செய்துவரும் பாவத்தைப்பற்றி நான் பேசாமலும் இருக்கலாம். நான் ஹிந்துக்களான டயர்களைச் சமாளிக்க வேண்டியவனாக இருக்

* 1921 ஜனவரி மாதம் ஆண்ட்ரூஸ் கடுமையான இன்புளுயன்சா ஜுரத்தினால் அவதிப்பட்டதையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

§ பிஜியிலிருந்து திரும்பி கல்கத்தாவுக்கு வந்த இந்திய அகதிகளை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் பார்வையிட்டு வந்தபின், நோயுடன் படுத்த படுக்கையில் இருந்து கொண்டே அவ்விஷயமாக ஒரே நாளில் 35 கடிதங்களும், தந்திகளும், கட்டுரைகளும் எழுதினார்.

கிறேன். எனினும் நான் செயலில் ஈடுபடவேண்டும்; நான் எப்போதுமே செயலில் ஈடுபட்டே வந்திருக்கிறேன். நீங்கள் மிகுந்த உணர்ச்சிவசப்படும்போது பேசுவதில்லை, செயலில் ஈடுபடுகிறீர்கள். உங்களுக்கு குஜராத்தி மொழி தெரியாது. எனவே இந்தப் பிரச்னை குஜராத்தில் எவ்வளவு உக்கிரமாகப் பொங்கிக் கொண்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாது. வேண்டுமென்றே நான் ஒரு பறைச் சிறுமியை சுவீகாரம் எடுத்துக் கொண்டிருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்களா? மற்ற எந்தப் பிரச்னையையும்விட இது அவ்வளவு முக்கியமானதல்ல என்று ஒரு விநாடிகூட நான் நினைக்கமாட்டேன். அவ்விதம் நான் செய்வதாக நீங்கள் மனத்தில் நினைப்பதுகூட எனக்கு அநீதி செய்வதாகும். எனினும் அவ்விஷயமாக நான் ஆங்கிலத்தில் பிரசங்கங்கள் செய்ய வேண்டிய அவசியமோ அல்லது எழுதவேண்டிய அவசியமோ இல்லை. எனது பிரசங்கங்களைக் கேட்பவர்களில் பெரும்பாலோர் 'பறையர்களுக்கு' விரோதமானவர்கள் அல்ல. அவர்கள் (தீண்டாதார்) சம்பந்தமான தீர்மானத்தைக் காங்கிரசில் நிறைவேற்ற எனக்குச் சிறிதும் சிரமம் ஏற்படவில்லை.*

மேலும் எனக்குத் தெரியாத விஷயத்தைப்பற்றி நான் பேச முடியாது. வங்காளத்திலுள்ள நாம சூத்திரர் பிரச்னையைப் பற்றி எனக்கு மேலெழுந்தவாரியாகத்தான் தெரியும். அது ஒரு தீண்டாமைப் பிரச்னை அல்ல, ஜமீன்தார்களுக்கும் அடிமைகளான பண்ணையாட்களுக்கும் எழுந்துள்ள பிரச்னையேயாகும். அந்தப் 'பாவத்தை'ப் பற்றியே இப்போது நான் பரிசீலனை செய்கிறேன். ஹிந்து மதத்தைச் சேர்ந்த புரோகிதர்களின் போக்கையே நான் கண்டிக்கிறேன். ஒரு பிரிவினர் குறிப்பிட்ட ஒரு சூழ்நிலையில் பிறந்தவர்கள் என்பதற்காக, அவர்களைத் தொடுவது 'பாவம்' என்று ஹிந்துக்கள் கருதுகிறார்கள். அது பாவம் அல்ல என்பதையும், அவ்விதம் தொடுவது பாவம் என்று கருதுவதே பாவம் என்பதையும் எடுத்துக் காட்டவே ஓர் ஹிந்து என்ற முறையில் நான் ஈடுபட்டிருக்கிறேன். இந்தியா சுதந்திரம் பெற வேண்டியதைக் காட்டிலும் தீண்டாமைப் பிரச்னை பெரிதாகும். எனினும் அம் முயற்சியில் ஈடுபட்டுவரும்போது நான் சுதந்திரம் பெற்றுவிட்டால், தீண்டாமைப் பிரச்னையை நான் சிறந்த முறையில் தீர்க்க முடியும். தீண்டாமையாகிற சாபத்தீட்டிலிருந்து இந்தியா விடுதலை பெறுவதற்கு முன், ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து இந்தியா விடுதலை பெறுவது அசாத்தியமான காரியம் அல்ல. ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறுவது, சுயராஜ்யத்தின் முக்கியமான அம்சங்களில் ஒன்றாகும். அந்த ஆதிக்கமே நமது முன்னேற்றத்திற்கெல்லாம் முட்டுக் கட்டையாக இருக்கிறது. குஜராத்தில் இன்று என்னை எதிர்த்து வருவோர்

* 1920 டிசம்பர் மாதம் நாகபுரியில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு ஸ்ரீ சி. விஜயராகவாச்சாரியார் தலைமை வகித்தார். ஹிந்துக்களிடையே நிலவும் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென அக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானத்தையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

உண்மையில் சர்க்காரையே ஆதரித்து வருகிறார்கள் என்பதையும், சர்க்கார் அவர்களை எனக்கு எதிராகத் தூண்டிவருகிறார்கள் என்பதையும் நீங்கள் அறிவீர்களா?

இரவு 2 மணிக்கு உங்களைப் பற்றியும், தீண்டாதார் பிரச்னை பற்றியும் நான் சிந்திக்கத் தொடங்கினேன். தூக்கம் வராததால், 4 மணிக்கு உங்களுக்குக் கடிதம் எழுத ஆரம்பித்தேன். அப்பிரச்னை சம்பந்தமாக நான் கூற விரும்பும் எல்லா விவரங்களையும் நான் எழுதவில்லை. இந்தப் பிரச்னை எனக்குத் தெளிவாகத் தெரிவதுபோல் உங்களுக்கும் தெளிவாகப் புரியும்படி செய்ய என்னால் இயலவில்லை. நீங்களும் மாணவர்களைப் பற்றி உங்களுடைய கடிதத்தில் எழுதியிருப்பது சரியே. ஓர் ஆங்கிலேயர் என்ற முறையில் நீங்கள் சிந்தனை செய்கிறீர்கள். ஒரு விஷயத்தை உங்களிடமிருந்து நான் மறைக்கக்கூடாது. அப்பிரச்னையையொட்டி எனது நிலையைப் பலவீனப்படுத்த குஜராத்தியர்கள் முயற்சித்து வருகிறார்கள்; உங்களால் தூண்டப்பட்டே நான் தீண்டாமையை எதிர்த்து வருவதாகவும், அவ்விஷயமாக ஒரு ஹிந்து என்ற முறையில் நான் பேசவில்லை என்றும், கிறிஸ்தவரான உங்களுடைய செல்வாக்கில் சிக்கி நான் வீணாகிவிட்டதாகவும் அவர்கள் கூறுகின்றனர். இதெல்லாம் உருப்படாத பேச்சு என்பதை நான் அறிவேன். உங்களைப்பற்றி நான் கேள்விப்படுவதற்கு முன்பே தென்னாப்பிரிக்காவில் இந்த வேலையை (தீண்டாமை ஒழிப்பை) நான் ஆரம்பித்துவிட்டேன். தென்னாப்பிரிக்காவில் நான் கிறிஸ்தவர்களுடைய செல்வாக்கின் கீழ் வருவதற்கு முன்பே தீண்டாமைப் பாவத்தை நான் உணர்ந்து கொண்டேன். குழந்தையாக இருந்தபோதே அந்த உண்மையை நான் தெரிந்து கொண்டேன். நானும், என் சகோதரர்களும் ஒரு பறையரைத் தொட்டுவிட்டால் என் அருமைத் தாயார் எங்களுக்கு ஸ்நானம் செய்விப்பார். அந்தக் கூற்றைக் கண்டு நான் நகைப்பது வழக்கம். டர்பனில் பறையர் வகுப்பைச் சேர்ந்த லாரென்ஸை என்னுடன் தங்குவதற்கு அழைத்திருந்தேன். ஆனால் அவரை சமத்துவமாக நடத்த மறுத்ததற்காக ஸ்ரீமதி காந்தியை வீட்டை விட்டுத் துரத்திவிட நான் தயாராக இருந்தேன். இது 1897-ல் நிகழ்ந்தது. தீண்டாதாருக்குத் தொண்டு செய்வது எனது வாழ்க்கையின் முக்கிய லட்சியமாக இருந்து வருகிறது. ஏனெனில், தீண்டாமை ஹிந்து மதத்தின் ஓர் அம்சமாக இருக்குமாயின், நான் தொடர்ந்து ஒரு ஹிந்துவாக இருந்துவர முடியாது என்பதே எனது கருத்தாகும்.

நான் உங்களுக்குப் பாதி உண்மையையே கூறியிருக்கிறேன். தீண்டாதாரைப் போலவே காளிகட்டத்தின்* விஷயத்திலும் என் மனம் வெதும்புகிறது. நான் கல்கத்தாவில் இருக்கும்போதெல்லாம் காளி கோவிலில் ஆடுகள் பலியிடப்படும்

---

* கல்கத்தாவில் காளி கட்டத்திலுள்ள காளியம்மன் கோவிலில் அக்காலத்தில் ஆடுகளைப் பலியிடுவது வழக்கமாக இருந்தது.

வழக்கம், என் மனம் கலங்கித் தவிக்கும்படி செய்திருக்கிறது. அதன் காரணமாகவே கல்கத்தாவில் வசிக்க வேண்டாமென நான் ஹரிலாலிடம் கூறினேன். பறையர்கள் தங்களுடைய கஷ்டங்களை எடுத்துக் கூற முடியும். அவர்கள் தங்களுடைய நிலையைப் பற்றி விண்ணப்பம் செய்துகொள்ளலாம். ஹிந்துக்களுக்கு எதிராக அவர்கள் வீறு கொண்டு எழலாம். ஆனால் பாவம், வாயில்லாத ஆடுகள் என்ன செய்ய முடியும்? சிற்சில சமயங்களில் அதைப் பற்றி நான் சிந்திக்கும்போது வேதனையினால் துடிக்கிறேன். எனினும் அதைப் பற்றி நான் பேசுவதோ அல்லது எழுதுவதோ இல்லை. எனது மதத்தின் பெயரால் பலி கொடுக்கப்படும் என் சக பிராணிகளுக்காகத் தொண்டு புரிய நான் பயிற்சி பெற்று வருகிறேன். அந்த வேலையை நான் இந்த ஜன்மத்தில் முடிக்க முடியாமற் போய்விடலாம். அந்த வேலையை முடிக்க நான் மீண்டும் பிறப்பேன்; அல்லது என்னுடைய வேதனையை உணர்ந்த வேறு ஒருவர் அதைச் செய்து முடிப்பார். முக்கியமான விஷயம் என்னவெனில், அந்த வேலையைச் செய்ய ஒரு ஹிந்து மேற்கொள்ளும் வழி நவீன வழியிலிருந்து வேறுபட்டதாகும். அதுதான் தவ முறையாகும். 'நவீன' என்ற சொல் என்னால் உபயோகிக்கப்பட்டிருப்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். ஹிந்துக்களின் வழியிலிருந்து கிறிஸ்தவர்களின் வழி வேறுபட்டதல்ல என்பதே எனது நம்பிக்கை.

சர் வில்லியம் வின்செண்டிற்கு (வைஸ்ராய் நிர்வாக சபை அங்கத்தினர்) நீங்கள் எழுதியுள்ள பதிலில் குற்றம் குறை எதுவும் கூற முடியாது.

டாக்டர் சிமன்தாஸ் விரும்பினால் நீங்கள் அவரைப் போகவிடுவீர்கள் என்பதை நான் அறிவேன். ஒத்துழையாமையை சாந்தி நிகேதனம், மத சம்பந்தமான ஒரு கடமையைப் போல் தைரியமாக ஆதரிக்க முன்வரவேண்டும். ஒத்துழையாமை இயக்கத்தின் முழு உண்மையையும், அவசியத்தையும் குருதேவ் இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை என்றே அஞ்சுகிறேன்.

4-ம் தேதி நான் இங்கிருந்து டில்லிக்குப் புறப்படலாம். 9-ம் தேதி நான் காசியில் இருப்பேன்.

தங்கள்,

மோகன்

## 29

டில்லி,
*பிப்ரவரி 14, 1921*

எனது அன்புள்ள சார்லி,

இன்று எனது மௌன தினமாகும். எனவே எனக்கு அன்பார்ந்தவர்களை இன்று நான் நினைப்பது இயல்பேயாகும். சாஸ்திரியையும். பரஞ்சபேயையும் பற்றி நீங்கள் எழுதியுள்ள கடிதத்தை நான் பாராட்டுகிறேன். அது மானக்கேடான ஒரு விஷயமாகும். நாம் நமது வேலையைத் தொடர்ந்து நடத்திவர வேண்டும்; காலித்தனத்தைத் தடுக்கவும் முயற்சிக்க வேண்டும். நான் எவ்வளவுக்கு அதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்கிறேனோ அவ்வளவுக்கு இந்த இயக்கத்தில் கடவுளின் கட்டளையைக் காண்கிறேன். கோபமூட்டப்பட்டுள்ள சந்தர்ப்பங்களிலும் காட்டப்பட்டிருக்கும் தன்னடக்கம் மிகவும் ஆச்சரியத்தைக் கொடுக்கிறது.

பொதுவாக கல்வியையோ அல்லது விஞ்ஞானத்தையோ அசட்டை செய்ய நான் விரும்பவில்லை. பரீட்சார்த்தமான ஒரு வருடகாலம் வரையில் மற்றெல்லா நடவடிக்கைகளையும் நிறுத்தி வைக்க வேண்டும் என்பதே என் விருப்பமாகும். மக்களுக்காகவே அந்தக் காலகெடு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்தக் கெடுவிற்குள் நாட்டில் பலாத்காரமின்மை நிலைநிறுத்தப்படுமாயின், செப்டம்பர் மாதத்திற்கு முன்பே நீங்கள் சுயராஜ்யத்தைக் காணலாம். ஒப்பந்தத் தொழிலாளர் முறையை ஒழிக்க கால கெடு நிர்ணயிக்கப்பட்டது உங்களுக்கு நினைவிருக்கும். இதில் மக்களின் உரிமையை அபகரிப்பதென்றே பேச்சிற்கே இடமில்லை.

தயவு செய்து 36, மொஸாங் ரோடு, லாகூர் என்ற விலாசத்துக்குக் கடிதம் எழுதுங்கள். சற்றேறக்குறைய இரண்டு வாரங்கள் வரையில் நான் பஞ்சாபில் இருப்பேன்.

அன்புடன்,

தங்கள்,
**மோகன்**

## 30

லாகூர்,
*பிப்ரவரி 22, 1921*

எனது அன்புள்ள சார்லி

உங்களுடைய இரண்டு கடிதங்களும் கிடைத்தன. நீங்கள் நோயிலிருந்து குணமடைய வேண்டும்.

சீக்கியர்களிடையே நிகழ்ந்த கோர சம்பவம் என் மனத்தை ஆட்கொண்டிருக்கிறது.* குருதேவரின் அறிக்கையையொட்டி

---

* லாகூரிலிருந்து 40 மைல்கள் தூரத்திலுள்ள நாங்கானா சாகிபில் இருக்கும் குருத்துவாரத்திற்குள் 1921 பிப்ரவரி 20-ம் தேதி சீக்கியர்கள் கூட்ட

'எங் இந்தியா'வில் வெளியான சாராம்சம் சரியானதா என்பதைத் தயவு செய்து எனக்குத் தெரிவியுங்கள்.

நான் எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்தி வைக்க விரும்புகிறேன். அதாவது மற்ற நடவடிக்கைகளின் கருத்தை மக்கள் தாங்களாக உணர்ந்து கொண்டாலன்றி எந்த நடவடிக்கையும் பலனைக் கொடுக்காது. சிறுவர்கள் ஹிந்துஸ்தானி கற்றுக் கொள்வதைவிட, கிராமங்களுக்குச் செல்லுவதையே நான் எச்சமயத்திலும் விரும்புவேன். அவர்களுடைய திக்கற்ற நிலைமையைப் பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. ஒரு சிலர் தான் கிராமங்களில் வாழ்க்கை நடத்தும் ஆற்றல் பெற்றவர்களாக இருக்கிறார்கள். அதனால்தான் இடைக்காலமான பத்து மாதங்களில் அவர்கள் நூற்கவேண்டும் என்றும், தாய்மொழியின் மூலம் அவர்கள் விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் ஹிந்துஸ்தானி கற்றுக் கொள்ளவேண்டும் என்றும் நான் கூறுகிறேன். பத்து மாதங்களுக்குப் பிறகு அவர்கள் மீண்டும் கல்லூரிகளுக்குச் சென்று தங்களுடைய படிப்பைத் தொடரலாம். அவ்விதம் செய்ய முடியாதவர்கள் கல்லூரிகளைவிட்டு வெளிவராமல் இருப்பதே நல்லது. அரசாங்கக் கல்லூரிகளில் தொடர்ந்து வாசித்துவருவது பாவம் என்று அவர்கள் கருதினால் மாத்திரமே அவர்கள் கல்லூரிகளை விட்டு வெளியேறவேண்டும்; அவ்விதம் கருதாதவர்கள் வெளியேறக்கூடாது.

அன்புடன்,

தங்கள்,

**மோகன்**

## 31

லாகூர் செல்லும் வழியில்,
*மார்ச் 2, 1921*

எனது பேரன்புள்ள சார்லி,

திங்கட்கிழமை முழுவதும் உங்களைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் உங்களுக்குக் கடிதம் எழுத இயலவில்லை. டிப்பியா கல்லூரியில் நான் செய்த பிரசங்கத்தில் நான் ஒரே வாக்கியத்தில் கூறியதன் உண்மை என் மனத்தில் எவ்வளவு தீவிரமான உணர்ச்சியை உண்டாக்கியது என்பதை

---

மாகப் பிரவேசித்தபோது சுமார் 150 அகாலி சீக்கியர்கள் கொல்லப்பட்டனர். அந்த குருதுவாரம் மஹந்த் நரன்தாஸின் வசம் இருந்துவந்தது. தர்மகர்த்தா என்ற முறையில் அவர் தமது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்வதாகக் கூறி சீக்கியர்கள் குருதுவாரத்திற்குள் பிரவேசித்தனர். இதன் சம்பந்தமான முழு விவரங்களையும் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

உங்களுக்கு நான் கூற விரும்பினேன். தீண்டாதாருக்கு எதிராக நாம் செய்யும் குற்றத்தை நான் உணருகிறேன். எனினும் உலகத்திலுள்ள கீழான மிருகங்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையை, அதைக் காட்டிலும் அதிகமாகவும், தெளிவாகவும் உணருகிறேன். புத்தர் ஆட்டுக் குட்டியை தன் முதுகின்மீது தூக்கிப்போட்டுக் கொண்டு, பிராம்மணர்களுக்குப் புத்திமதி கூறியபோது, அவர் அன்பின் சிகரத்தையே எட்டிவிட்டார். ஹிந்து மதத்தில் பசுவைப் பூஜிப்பது அத்தகைய அன்புக்கு உதாரணமாகும்.

அத்தகைய அன்பு உள்ளம் கோருவது என்ன? சக மனிதர்களால் துன்புறுத்தப்படும் கால் நடைகளை ஆஸ்பத்திரிகளுக்கு அனுப்புவதல்ல; அவற்றை அழித்து விடுவதும் இல்லை; ஆனால் மிருகங்களிடம் நாம் அன்பை வளர்த்துக் கொள்ளவேண்டும். வாயில்லா ஜீவன்களுக்குத் துன்பம் விளைவிக்காமல் இருப்பதே நாம் காட்டும் அன்பாகும். மிருகங்கள் எவ்வளவுக்கு திக்கற்ற நிலையில் இருக்கின்றனவோ அவ்வளவுக்கு அவற்றின் மீது நாம் அதிக இரக்கம் காட்டவேண்டும்.

இத்தகைய சிந்தனையில் ஆழ்ந்துள்ள நான், ராட்டினத்தில் புதிய பொருள் இருப்பதைக் காண்கிறேன். இந்தியாவின் அடிமைத் தனத்திற்கும், சீரழிவுக்கும் ராட்டினத்தின் அழிவே காரணமாகும். ராட்டினமின்றி ஏழை மக்களிடையே நாம் செய்யும் தொண்டுகளால் யாதொரு பலனும் ஏற்படாது. ராட்டினத்தை நாம் மீண்டும் நடைமுறையில் கொண்டுவந்தாலன்றி, நாம் ஒருபோதும் வெற்றி பெற முடியாது. வேறு எந்தக் கைத்தொழிலினாலும் இந்திய மக்களின் வறுமைப் பிரச்னையைத் தீர்க்க முடியாது.

ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் என் மனத்தில் தோன்றிய எண்ணங்களை அப்படியே உங்களுக்கு எடுத்துக் கூறியிருக்கிறேன். எனினும் நான் கூறுவதன் அர்த்தம் என்ன என்பதை அறிந்து கொள்வதில் உங்களுக்குக் கஷ்டம் எதுவும் இராது. உங்களுடைய கேள்விகளில் அடங்கியுள்ள சங்கடமான சந்தேகங்களுக்கு நான் பதிலளிக்க முயற்சி செய்திருக்கிறேன். ராட்டினத்தின் செய்தியையோ அல்லது ஒத்துழையாமைத் தத்துவம் செயல்படுவதையோ நீங்கள் தெளிவாக உணர்ந்து கொள்ளவில்லை என்றே நான் கருதுகிறேன். ஆனால் இந்தியாவிலுள்ள பெண்கள், முயற்சி எதுவுமின்றியே ராட்டினத்தின் தத்துவத்தை உணர்ந்து கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது.

குருதேவின் கண்டனத்தை நான் பாராட்டுகிறேன். எனினும் நான் குற்றவாளி என்று எனக்குத் தோன்றவில்லை. எது சரி என்று எனக்குத் தோன்றியதோ அதையே செய்தேன். நான் அரசாங்கத்தினிடமிருந்து வெகுமதி எதையும் எதிர்பார்த்து பேரம் செய்யவில்லை.

லாகூரில் நான் ஒருவாரம் வரையில் தங்க வேண்டியிருக்கும். அங்கு சென்ற பிறகுதான் அது தெரியும்.

மகாதேவ் சபர்மதியில் இருக்கிறார். அவர் 'எங் இந்தியா'' வுக்கு வக்கீலை உதவி ஆசிரியராக நியமித்துள்ளார். லால்சந்த் 'எங் இந்தியா'விலிருந்து விலகிக் கொண்டார். அவரைக் காட்டிலும் அதிகத் திறமைசாலியே உதவி ஆசிரியராக இருக்கவேண்டுமென நான் விரும்பினேன். லால்சந்த் நல்லவர், யோக்கிய மானவர்; இருந்தாலும் தமக்குள்ள குறைகளை அவர் உணர்ந்து கொள்ளவில்லை.

இப்போது உங்கள் உடல் நலன் அபிவிருத்தி அடைந்திருக்கிறதென நம்புகிறேன்.

தயவு செய்து பாரோ தாதாவுக்கு எனது வணக்கத்தைத் தெரிவிக்கக் கோருகிறேன். இந்தப் போராட்டத்தில் அவர் எனக்கு மனப்பூர்வமான ஆதரவு அளித்து வருவது எனக்கு மிகுந்த ஆறுதலை அளிக்கின்றது.

அன்புடன்,

தங்கள்,

**மோகன்**

## 32

ஜபல்பூர்,
*மார்ச் 21, 1921*

எனது அன்புள்ள சார்லி,

நான் இன்று ஜபல்பூரில் இருக்கிறேன். பின்னர் ரயிலில் கல்கத்தாவுக்குச் சென்று அங்கிருந்து ஒரிஸாவுக்குச் செல்லுவேன். இந்தியா முழுவதும் என்னுடைய யாத்திரை அத்துடன் முடிவுறும். மிகமிக ஏழ்மை நிலையில் இருக்கும் மாகாணத்திற்குத்தான் நான் கடைசியாகச் செல்ல வேண்டும்.* அரசாங்கத்தின் தற்போதைய நடவடிக்கை எனக்குச் சொல்ல முடியாத வேதனையைக் கொடுக்கிறது. இந்திய மக்களிடையே இப்போது தூய்மை உணர்ச்சி பரவி வருகிறது. மதுபானத்தையும், கஞ்சா வியாபாரத்தையும் ஒழித்துவிட மக்கள் விரும்புகின்றனர். அந்த நோக்கம் நிறைவேறாமல் தடுத்துவிட சர்க்கார் தங்களால் இயன்றதையெல்லாம் செய்துவருகிறார்கள். மக்கள் எளிய வாழ்க்கை நடத்த விரும்புகின்றனர். அதற்குத் தடையாக இருக்கவும் தந்திரமான முயற்சிகள் நடந்து வருகின்றன. எனினும் மக்களின் எழுச்சியை இனி தடுக்க முடியாதென நினைக்கிறேன். வைஸ்ராயாக நியமிக்கப்

* 1921 மார்ச் 24-லிருந்து 29உ வரையில் காந்திஜி ஒரிஸா மாகாணத்தில் யாத்திரை செய்தார்.

பட்டுள்ள லார்டு ரீடிங் இங்கு வந்தபின் யாதொரு உண்மையான தொண்டும் செய்ய முடியாதவாறு ஒரு சூழ்நிலையை உண்டாக்க தீவிரமான முயற்சிகள் நடந்து வருகின்றன என்றே தோன்று கிறது. அத்தகைய சூழ்நிலையில், அவர் நெஞ்சுறுதியுடனும், நீதி யாகிற தராசுடனும் வந்தாலன்றி அவர் எவ்விதத் தொண்டும் செய்ய முடியாது.

இன்று என்னுடைய மௌன தினமாகும். எனவே இன்று உங்களுக்கு நான் ஒரு வரி எழுதாமல் இருக்க முடியாது. நீங்கள் மீண்டும் இன்புளுயன்ஸா ஜுரத்தினல் படுத்த படுக்கையில் இருப்பதாக எங்கேயோ பத்திரிகையில் ஒரு செய்தியைப் பார்த் தேன். நீங்கள் இப்போது குணமடைந்திருக்கிறீர்களென நம்பு கிறேன். உங்களுடைய உடல் நிலை எப்படி இருக்கிறது என்பது பற்றி எனது கட்டாக் விலாசத்திற்கு ஒரு தந்தி அனுப்புங்கள். நான் ஆறு நாட்கள் வரையில் ஒரிஸாவில் இருப்பேன்.

லால்சந்த் ஒடிந்துபோன ஒரு கொம்பாகிவிட்டார் என்று உங்களிடம் கூறவேண்டியிருப்பதைக் குறித்து நான் வருந்து கிறேன். அவர் பெரும் தொகையைக் கையாடிவிட்டதாக மகாதேவ் கூறுகிருர். அவரது விசாரணையின் முடிவு உண்மையாக இருக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அதைப் பற்றி விளக்கம் கூறும்படி லால்சந்துக்கு எழுதியிருக்கிறேன். இன்னும் அவரிடமிருந்து யாதொரு பதிலும் வரவில்லை. மகாதேவிடத்தி லும் அவர் கண்ணியமின்றி நடந்து கொண்டார். அபினைப் பற்றி நீங்கள் எழுதியுள்ள கட்டுரை தமக்காக எழுதப்பட்டதென்றும், 'எங் இந்தியா'வின் ஆசிரியருக்காக எழுதப்படவில்லை என்றும் கூறி, அக் கட்டுரையைக் கொடுக்க அவர் மறுத்துவிட்டார். அவரை நம்ப வேண்டாம் என்று உங்களை எச்சரிப்பதற்காகவே இதை நான் எழுதுகிறேன். உங்களிடமிருந்தோ அல்லது பொறுப்புள்ள ஸ்தானத்திலிருக்கும் வேறு ஒருவரிடமிருந்தோ அவருக்குக் கிடைக்கும் எந்தச் செய்தியையும் அவர் விற்றுத் தொகை பெற்றுக் கொள்ள முற்படலாம்.

இத்தகைய நிகழ்ச்சிகள் எனக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுக்கின்றன. நம்மிடம் இருப்பவர்கள் தூய்மையானவர்களாக இருந்தாலன்றி, ஒத்துழையாமைப் போராட்டத்தில் நாம் அதிக மாக முன்னேற முடியாது. லால்சந்த் முற்றிலும் நேர்மையானவர் என்றும், சந்தேகத்துக்கு இடமான நபர் அல்ல என்றும் நான் நம்பினேன்.

நான் 30 அல்லது 31உ பெஜவாடாவில் இருப்பேன். ஆந்திர மாகாணத்தில் நான் சுமார் ஐந்து நாட்கள் வரையில் தங்கி யிருப்பேன்.

அன்புடன்,

தங்கள்,
**மோகன்**

# 33

பூரி,
மார்ச் 28, 1921

எனது பேரன்புள்ள சார்லி,

இப்போதுதான் உங்களுடைய கடிதம் கிடைத்தது. உங்களுடைய உடல் நலம் அபிவிருத்தியடைந்திருக்கிறதென நம்புகிறேன். நீங்கள் அடிக்கடி நோய்க்கு இலக்காகிவிடக் கூடாது. ஒரு ஜெர்மன் சிப்பாய்க்குக் கால் வீங்கினுல் அது ஒரு குற்றமாகும் என்று காலென்பாக் என்னிடம் சொல்லுவது வழக்கம். அது போலவே கடவுளின் சிப்பாய் நோயுற்றுப் படுத்த படுக்கையில் இருப்பது குற்றம் அல்லவா? அதுதான் கடவுளின் சட்டம் என்று நான் கூறுவதை நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும் என்பதே என்னுடைய விருப்பமாகும். நான் நோயுற்றபோது நீங்கள் என்ன கூறினீர்கள் என்பது எனக்குத் தெரியும். கடவுளின் சட்டம் எதையாவது நான் மீறியிருக்க வேண்டும் என்று நீங்கள் கூறியதை நான் மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டேன்.

அவ்விஷயமாக குருதேவ் கூறியிருப்பதை இப்போது கவனிக்கலாம். யுத்தத்தின்போது நேச தேசத்தின் ராணுவத்திற்கு ஆள் சேர்த்ததற்காக எனக்குக் கடவுள் அளித்த தண்டனையே எனது நோய்க்குக் காரணம் என்பதைத் தயக்கமின்றி முற்றிலும் நான் ஒப்புக் கொண்டாலும் கூட, ‘டிரிப்யூனி’ல் வெளியாகியுள்ள குருதேவரின் கடிதத்தில் அடங்கியுள்ள கருத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாதவனுக இருக்கிறேன். ‘எங் இந்தியா’வில் நான் பதில் எழுதுவதற்காக ஒரு நண்பர் அக்கடிதத்தை எனக்கு அனுப்பியிருக்கிருர். அதை ஒரு தடவை வாசித்தேன். அதிலிருந்து, ஒத்துழையாமையின் அழகையும் கடமையையும் அவர் உணர்ந்து கொள்ளவில்லை என்று நான் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

சமீபத்தில் வந்தவர்களைப் பற்றி பிஜியிலிருந்து வந்த ஒரு நபரிடமிருந்து நான் எல்லா விவரங்களையும் கேள்வியுற்றேன். தென்னுப்பிரிக்கா கமிஷனின் சிபார்சுகளையும் நான் பார்த்தேன். இந்தியாவில் மக்களின் நிலைமையில் மிகுந்த அபிவிருத்தி ஏற்பட்டாலன்றி, யாதொரு நன்மையும் உண்டாகாது.

சீக்கியர்களின் கடிதத்திற்கும், நீங்கள் எழுப்பிய ஆட்சேபணைக்கும் நான் எவ்விதம் பதில் அளித்திருக்கிறேன் என்பதைப் பார்த்தீர்களா? அந்தக் கடிதம் அப்பழுக்கற்றது என்பதே எனது அபிப்பிராயமாகும். ஆனல் உங்களுடைய ஆட்சேபணை, மேலும் அவர்களைப் பூரணமாக மன்னிக்கும்படி செய்திருக்கிறது.

பூரி ஜில்லாவில் பஞ்சத்தில் அடிபட்ட மக்களை நேற்று நான் சந்தித்தேன். அப்போது நீங்களும் என் கூட இருந்திருக்கக்கூடாதா என்று எண்ணினேன். அந்தக் காட்சி மனதை மிகவும் உருக்குவதாக இருந்தது. அவர்களுடைய ஆழ்ந்த வேதனைக்கு, ராட்டினத்தைத் தவிர வேறு எவ்வித விமோசனமும் இல்லை என்று உங்களுக்கு உறுதியாகக் கூறுகிறேன்.

தங்கள்,

மோகன்

பகுதி பதினைந்து

# சர் வில்லியம் வெட்டர்பர்ன்

இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் இந்தியர்களின் பிரச்னைகளில் அக்கறை எடுத்துக் கொண்டு தம்மால் இயன்ற தொண்டு புரிந்த ஆங்கிலப் பிரமுகரான சர் வில்லியம் வெட்டர்பர்னை (1838-1918) இந்திய மக்கள் மறக்க முடியாது. அவர் இரு முறை இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் அக்கிராசனராக இருந்தார் என்பதே, அக்காலத்தில் இந்தியர்களிடையே அவர் பெற்றிருந்த செல்வாக்கிற்குப் போதிய சான்றாகும். 1889-ல் பம்பாயிலும், 1910-ல் அலகாபாத்திலும் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கு சர் வெட்டர்பர்ன் தலைமை வகித்தார். இந்தியன் சிவில் சர்விஸைச் சேர்ந்த அவர் இருபத்தைந்து ஆண்டுகள் வரையில் பம்பாயில் உத்தியோகம் வகித்து ஓய்வு எடுத்துக் கொண்டபின், பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கத்தினராக இருந்தார். லண்டனில் நிறுவப்பட்ட இந்திய தேசீய காங்கிரசின் பிரிட்டிஷ் கமிட்டித் தலைவராகவும் அவர் பணியாற்றினர். அக்கமிட்டியில் தாதாபாய் நௌரோஜியும், மற்றும் சில ஆங்கிலேயர்களும் அங்கத்தினர்களாக இருந்தனர். இங்கிலாந்து இந்தியாவுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை வற்புறுத்திப் பிரசாரம் செய்வதே அக் கமிட்டியின் அலுவலாக இருந்தது. இந்தியாவுக்கு நீதி வழங்கவேண்டிய அவசியத்தை 1889—ம் ஆண்டிலேயே வற்புறுத்திய சர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு காந்திஜி எழுதிய சில கடிதங்களை இந்தப் பகுதியில் காணலாம்:

## 1

தபால் பெட்டி 66, சென்ட்ரல் வெஸ்ட் தெரு,
டர்பன், நேட்டால், மார்ச் 7, 1896

சர் வில்லியம் வெட்டர்பர்ன், எம். பி.

இந்திய தேசிய காங்கிரஸ் பிரிட்டிஷ் கமிட்டித் தலைவர்,

லண்டன்.

ஐயா,

இத்துடன் வாக்குரிமை மசோதாவின் நகல் ஒன்றை உங்களுக்கு அனுப்பத் துணிகிறேன். ஏப்ரல் மாதம் நடைபெறும் நேட்டால் சட்டசபைக் கூட்டத்தில் சர்க்கார் அந்த மசோதாவைக் கொண்டு வர உத்தேசித்திருக்கிறார்கள். அம் மசோதாவை எதிர்த்து இங்குள்ள இந்தியர்கள் சர்க்காருக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பியிருக்கிறார்கள். அந்த மசோதாவை ஸ்ரீ சேம்பர்லேன் அங்கீகரித்துள்ளார் என்று கூறப்படுகிறது. அவ்விதமாயின், இந்தியர் சமூகத்தின் நிலைமை மிகவும் மோசமாகி விடும். இந்தியாவில் மக்கள் பிரதிநிதி ஸ்தாபனங்கள் இருப்பதாயும், எனவே அம் மசோதா இந்தியர்களைப் பாதிக்காதென்றும் பத்திரிகைகள் கூறுகின்றன. ஆனால் இந்தியர் சமூகத்திற்கு எதிராகவே அம் மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பதில் யாதொரு சந்தேகமும் இருக்க முடியாது. நாங்கள் அம் மசோதாவை எதிர்க்க உத்தேசித்துள்ளோம். இதன் மத்தியில், அதையொட்டி பார்லிமெண்டில் கேள்வி கேட்டால் மிகவும் பலன்தரத்தக்கதாக இருக்கும் என்பதும், ஸ்ரீ சேம்பர்லேனின் கருத்து என்ன என்று ஓரளவு தெரியும் என்பதும் எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். மிகவும் முக்கியமான மற்றும் பல விஷயங்களையொட்டியும் இந்தியர் சமூகம் விரைவில் உங்களுடைய நேரத்தையும் கவனத்தையும் ஆக்கிரமித்துக் கொள்ள வேண்டியிருக்கும்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி**

## 2

*53 ஏ, பீல்டு தெரு, டர்பன்,*
*செப்டம்பர் 18, 1897*

சர் வில்லியம் வெட்டர்பர்ன்,

லண்டன்.

ஐயா,

நேட்டால் இந்தியர் சமூகப் பிரதிநிதிகள் உங்களுக்கு எழுதியுள்ள கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். அவ்விஷயமாக பத்திரிகையில் வந்த செய்தியையும் கத்தரித்து அனுப்பியிருக்கிறேன். வேறு அதிகமாக எதுவும் செய்ய முடியாவிட்டாலும், அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளபடி நேட்டால் சட்டத்தில் சில மாறுதல்களையாவது செய்ய சக்திவாய்ந்த உங்களுடைய செல்வாக்கை நீங்கள் உபயோகிப்பீர்களென நம்புகிறேன்.

*தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,*

**மோ. க. காந்தி**

## 3

*14, மர்க்குரி லேன், டர்பன்,*
*மே 27, 1899*

ஐயா,

திரான்ஸ்வாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்கள் அனுப்பியிருக்கும் விண்ணப்பத்தின் நகல் ஒன்றை நான் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இந்த வருடம் ஜுலை 1-ம் தேதிக்கு முன் இந்தியர்கள் இந்த நாட்டிலுள்ள குறிப்பிட்ட இடங்களுக்குக் குடியேறிவிடவேண்டுமென திரான்ஸ்வால் அரசாங்கம் அனுப்பியுள்ள 'நோட்டீஸ்' சம்பந்தமாக தங்களுடைய நிலைமை என்ன என்பதை இந்தியர்கள் இந்த விண்ணப்பத்தில் விளக்கியிருக்கிறார்கள்.

ஆரோக்கிய காரணங்களை முன்னிட்டே இந்தியர்களை அந்த இடங்களுக்கு அனுப்ப அரசாங்கம் உத்தேசித்திருப்பதாக அந்த அறிக்கையிலிருந்து தெரிகிறது. ஆனால் அரசாங்கம் அவ்விதம் உத்தேசித்திருப்பதற்கு ஆரோக்கிய காரணங்கள் எதுவும் இருக்க முடியாது என்பதை, இந்தியர்கள் தங்களுடைய விண்ணப்பத்தில் ஆதாரங்களுடன் காட்டியிருக்கிறார்கள் என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயமாகும்.

இந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விண்ணப்பம் தற்போது பிரிடோரியாவிலுள்ள பிரிட்டிஷ் ஏஜண்டின் கையில் இருக்கிறது. திரான்ஸ்வால் குடியரசுத் தலைவருக்கும் ஹைகமிஷனருக்கும் தற்போது நடந்து வரும் பேச்சு வார்த்தைகளின் முடிவு தெரியும் வரையில், அந்த விண்ணப்பத்தை ஸ்ரீ சேம்பர்லேனுக்கு அனுப்பவேண்டாம் என்று நிறுத்தி வைத்திருக்கிறார்கள். அவர்களிடையே நடந்து வரும் பேச்சு வார்த்தைகளின் போது இந்தியப் பிரச்னையும் விவாதிக்கப்படலாம். ஒருவேளை அந்த விண்ணப்பத்தை ஸ்ரீ சேம்பர்லேனுக்கு பிரிட்டிஷ் ஏஜண்ட் அனுப்பாமலும் இருந்துவிடலாம். இவ்விஷயத்தில் காலம் மிகவும் முக்கியமான அம்சமாதலால், அந்த விண்ணப்பத்தைக் காலம் கடத்தாமல் ஸ்ரீ சேம்பர்லேனுக்கு அனுப்பிவைப்பதே விவேகமாகும். ஏனெனில் மேலே குறிப்பிட்ட பேச்சு வார்த்தைகள் முறிந்து விடாமல் இருக்க வேண்டும் அல்லவா?

அதே விஷயமாக, பிரிடோரியாவைச் சேர்ந்த ஸ்ரீ பார்க்கர் அனுப்பிய விண்ணப்பத்தின் ஒரு நகலும் இத்துடன் அனுப்பப்பட்டிருக்கிறது. அவர் அங்கேயே பிறந்து வளர்ந்த பிரிட்டிஷ் பிரஜையாவார். இப்போது எழுந்துள்ள பிரச்னையை அதிலிருந்து தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,

**மோ. க. காந்தி**

## 4

தபால் பெட்டி 299,

ஜொகன்னஸ்பர்க், மார்ச் 22, 1903

ஐயா,

பிரிட்டிஷ் இந்தியர்கள் கமிட்டியின் சார்பில் நேற்று உங்களுக்கு ஒரு தந்தி அனுப்பப்பட்டுளது. ஸ்ரீ கெயினின்* மரணத்தைக் குறித்து அவரது குடும்பத்தினருக்கு உங்கள் மூலம் பிரிட்டிஷ் இந்தியர்களின் அனுதாபத்தைத் தெரிவிப்பதற்காக அந்தத் தந்தி அனுப்பப்பட்டது.

சென்ற வாரம் நான் அனுப்பிய கடிதத்தில், பலவந்தமாக மூடப்பட்ட சுலைமான் இஸ்மெயில் பண்டசாலை இந்தக்

* லண்டனில் நிறுவப்பட்டிருந்த இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் பிரிட்டிஷ் கமிட்டியில் ஸ்ரீ டபிள்யூ எஸ். கெயின் ஒரு பிரபல அங்கத்தினராக இருந்தார்.

காலனியைச் சேர்ந்த ரஸ்டன்பர்க்கில் இருக்கிறது என்பதைக் கூற மறந்துவிட்டேன். கமிட்டியின் விண்ணப்பத்திற்கு லெப். கவர்னர் இன்னும் பதில் அனுப்பவில்லை.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

# 5

*25, 26,* கோர்ட் சேம்பர்ஸ், ரிஸ்ஸிக் தெரு,

ஜொகன்னஸ்பர்க், ஏப்ரல் *12, 1906*

சர் வில்லியம் வெட்டர்பர்ன்,

பாலஸ் சேம்பர்ஸ்,

லண்டன்.

ஐயா,

திரான்ஸ்வாலில் உள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் அபாய நிலையும், துன்பமும் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன. அங்கு என்னென்ன நிகழ்ந்துவருகின்றன என்பதை நான் தொகுத்துக் கூறுவதுடன், அதையொட்டித் தீவிரமாக வேலை செய்ய வேண்டுமென்றும் வேண்டிக்கொள்கிறேன்.

திரான்ஸ்வால் காலனியின் நிர்வாகத்தில் தலையிட பிரிட்டிஷ் சர்க்கார் தயங்கும் என்பது உண்மையே. எனினும் தலையிடுவதில்லை என்ற இந்தக் கொள்கைக்கும் ஓர் எல்லை இருக்க வேண்டும். திரான்ஸ்வாலில் சமாதானப் பாதுகாப்பு அவசரச் சட்டம் அமுலில் இருந்துவருகிறது. அச் சட்டத்தின் கீழ் பிரிட்டிஷ் இந்தியர்களின் குடியேற்றம் முற்றிலும் எதேச்சாதிகாரமான முறையில் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது.

*1.* கலகக்காரர்களும், பிரிட்டிஷ் சர்க்காருக்கு விரோதமாக இருப்பவர்களும் இங்கே குடியேறுமல் தடுத்து அமைதியைப் பாதுகாக்கவே அந்தச் சட்டம் உருவாக்கப்பட்டது. ஆனல் இன்று உண்மையில் பிரிட்டிஷ் இந்தியர்களின் குடியேற்றத்தைத் தடுக்கவே அது உபயோகிக்கப்பட்டு வருகிறது.

*2.* கல்வி சம்பந்தமான தகுதிகளின்றியும், அகதிகள் அல்லாமலும் இருக்கும் பிரிட்டிஷ் இந்தியர்கள் இங்கு குடியேறுவதைத் தடுக்கலாம் என்பதை பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் ஒப்புக்கொண்டிருக்கிறது.

*3.* ஆனல் உண்மையில் யுத்தத்துக்கு முன் காலனியில் இருந்த அகதிகள் கூட, காலனியில் தங்கியிருக்க அனுமதி பெறு

வதற்கு விலையாக 3 பவுன் கொடுத்தவர்கள் கூட, இங்கே பிர வேசிக்க முடியாமல் தடுக்கப்படுகிறார்கள்.

4. அவர்கள் மாதக் கணக்கில் கடற்கரைப் பிரதேசங்களில் காத்திருந்த பிறகுதான், அவர்களுக்கு அதிகாரிகள் அனுமதிச் சீட்டு கொடுக்கிறார்கள்.

5. அனுமதிச் சீட்டு பெற்ற பிறகு கூட இந்தியர்கள் மிகுந்த தொல்லையைக் கொடுக்கும் பரிசோதனைக்கு உள்ளாக வேண்டி யிருக்கிறது. காலனிக்குள் பிரவேசிக்க அவர்கள் அனுமதி பெறு வதற்கு முன் அவர்கள் விரல் முத்திரை வைக்கவும், மற்றும் அவசிய மில்லாத பல கடுமையான நிபந்தனைகளுக்கு உட்படவும் வேண்டி யிருக்கிறது.

6. அவர்களுடைய மனைவிமாரும் திரான்ஸ்வாலில் பிர வேசிக்க, குறிப்பிட்ட தஸ்தாவேஜிகளைக் கொண்டுவர வேண்டி யிருக்கிறது.

7. பதினாறு வயதுக்கு மேற்பட்ட அவர்களுடைய குழந் தைகள் காலனிக்குள் பிரவேசிக்கக் கூடாதென்று அறவே தடுக் கப்படுகிறார்கள்.

8. அத்தகைய அகதிகளின் குழந்தைகள் 12 வயதுக்குக் குறைந்தவர்களாக இருந்தால், அவர்கள் இங்கே வருவதற்கு அனுமதிச் சீட்டுகள் பெறவேண்டும். சில நாட்களுக்கு முன் ஆறு வயதுக்கும் குறைந்த ஒரு பையனை அவனது தந்தையிட மிருந்து பிரித்து வால்க்ஸ்ரஸ்டில் நிறுத்தி வைத்திருந்தார்கள். தந்தை கொண்டுவந்திருந்த பதிவுப் பத்திரத்தில் அவருக்கு இரண்டு பையன்கள் இருக்கிறார்கள் என்று குறிப்பிட்டிருந்தும் கூட, அந்தப் பையனுக்குத் தனியாக அனுமதிச் சீட்டு பெறவில்லை என்பதற்காக அவனை திரான்ஸ்வாலுக்குள் அனுமதிக்கவில்லை.

9. திரான்ஸ்வால் வழியாக தென்னாப்பிரிக்காவின் மற்ற பாகங்களுக்குச் செல்ல விரும்பும் இந்தியர்களுக்கும், வியாபாரத் தில் ஈடுபடவிரும்பும் இந்தியர்களுக்கும் மூன்று மாதங்களுக்கு முன் யாதொரு தடையுமின்றி தற்காலிக அனுமதிச் சீட்டு கள் (பர்மிட்) வழங்கப்பட்டு வந்தன. ஆனால் இப்போது மிக மிக நுணுக்கமாகப் பரிசீலனை செய்த பிறகே அவை கொடுக்கப் படுகின்றன. இங்குள்ள பிரபல இந்திய வியாபாரியின் புதல் வரான ஸ்ரீ சுலைமான் மங்கா தற்போது இங்கிலாந்தில் பாரிஸ்டர் பரீட்சைக்கு வாசித்து வருகிறார். அவருடைய உறவினர் களைப் பார்ப்பதற்காக அவர் சமீபத்தில் இங்கிலாந்திலிருந்து வந்தார். அவர் டர்பனில் வந்து இறங்கிய பின் திரான்ஸ்வாலுக்குச் செல்ல அனுமதிச் சீட்டுக் கோரி, அதிகாரிகளிடம் தமது விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தார். ஆனால் அதிகாரிகள் அவருக்கு அனுமதிச் சீட்டு வழங்க மறுத்துவிட்டனர். அவர் ஒரு பிரிட்டிஷ் இந்தியர் என்ற முறையிலேயே அதிகாரிகள் அவரது

விண்ணப்பத்தைப் பரிசீலனை செய்தனர். அவர் போர்ச்சுகீய இந்தியாவில் பிறந்ததால் போர்ச்சுகல் சர்க்காரிடம் விண்ணப்பம் செய்து கொள்ளலாமா என எண்ணி அவர் அவ்விதமே செய்தார். உடனே அவருக்கு அனுமதிச் சீட்டு வழங்கப்பட்டுவிட்டது. அதாவது திரான்ஸ்வால் வழியாகச் செல்லவும், ஒரு பிரிட்டிஷ் இந்தியர் என்ற முறையில் அவருக்கு அனுமதி கிடைக்கவில்லை. ஆனால் ஓர் அந்நிய சர்க்கார் பிரஜை என்ற முறையில் அவருக்கு எளிதில் அனுமதி கிடைத்துவிட்டது!

*10.* மேற்கண்ட சட்டத்திற்கும் பிரிட்டிஷ் இந்தியருக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. ராணுவச் சட்டம் விதிக்கப்பட்ட பின் அந்த அவசரச் சட்டம் கொண்டுவரப்பட்டது. ஆனால் அத்தகைய ஒரு பொதுவான சட்டத்தை இப்போது வேண்டுமென்றே அதிகாரிகள் பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு விரோதமாகப் பிரயோகிக்க முற்பட்டிருக்கிறார்கள்.

வெகு காலத்திற்கு முன் தென்னாப்பிரிக்காவில் குடியேறி ஸ்தாபித்த காலஞ்சென்ற ஸ்ரீ அபூபேக்கர் அகமதுவின் சொத்துக்களை அவரது வாரிசுதாரரான பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு அவர்களுடைய பெயர்களில் பதிவு செய்துகொள்ள அதிகாரிகள் தடை விதித்திருக்கிறார்கள். அந்தச் சட்டம், இந்தியர்களின் சொத்துரிமைக்கு விரோதமாக அவ்விதம் அநீதியாக அமுல் நடத்தப்பட்டு வருகிறது. திரான்ஸ்வாலில் உள்ள சுதேசிகளுக்கு அவர்கள் விரும்பும் எந்த இடத்தில் வேண்டுமாயினும் சொந்தத்தில் நிலங்கள் முதலிய சொத்துக்களை வைத்துக் கொள்ள பூரண உரிமை உண்டு. கேப்பில் உள்ள நிற மக்களுக்கும் திரான்ஸ்வாலில் ஸ்தாவர சொத்துக்கள் வைத்துக் கொள்ள உரிமை உண்டு. சொத்துக்கள் எதுவும் வைத்துக்கொள்ளக் கூடாதென ஆசியாக்காரர்களுக்கு மாத்திரம்தான் தடை விதிக்கப்பட்டிருக்கிறது.

யுத்தத்திற்கு முன் திரான்ஸ்வாலிலுள்ள எந்த ரயில் வண்டியிலும் இந்தியர்கள் பிரயாணம் செய்யலாம். அவ்விதம் பிரயாணம் செய்வதற்கு யாதொரு தடையும் விதிக்கப்படவில்லை. ஆனால் இப்போதோ, பிரிடோரியா-ஜோகன்னஸ்பர்க் எக்ஸ்பிரஸ் ரயில் வண்டியில் பிரயாணம் செய்ய பிரிட்டிஷ் இந்தியர்களுக்கும், நிற மக்களுக்கும் டிக்கெட்டுகள் கொடுக்கக்கூடாதென்று ஸ்டேஷன் மாஸ்டர்களுக்கு ரயில்வே போர்ட்டார் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். அந்த உத்தரவினால் இந்திய வியாபாரிகள் மிகவும் அசௌகரியத்திற்கு உள்ளாகிவருகிறார்கள். இறுதியில் இந்தத் தொல்லை தீர்ந்து பரிகாரம் ஏற்படலாம் என்றாலும் திரான்ஸ்வால் சர்க்காரின் போக்கு எப்படி இருந்துவருகிறது என்பதற்கு இந்த உத்தரவு ஓர் உதாரணமாகும்.

பிரிடோரியாவைப் போல் ஜோகன்னஸ்பர்க்கிலும் பிரிட்டிஷ் இந்தியர்களும் நிற மக்களும் முனிசிபல் டிராம் வண்டிகளை உபயோகிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

நேட்டாலிலுள்ள நிலைமையைப் பற்றிய சுருக்கமான விவரம் பின்வருமாறு: இங்கு வியாபாரிகள் லைசென்ஸ் சட்டம் சொல்லொணாத தீமைக்குக் காரணமாக இருந்துவருகிறது. இங்கு ஸ்ரீ தாதா உஸ்மான் என்ற பிரபல பிரிட்டிஷ் இந்திய வியாபாரி யாதொரு இடையூறுமின்றி நீண்ட காலமாக ரைஹீடில் வியாபாரம் செய்து வந்தார். யுத்தத்திற்கு முன் ரைஹீட் திரான்ஸ்வாலின் ஒரு பாகமாக இருந்தது. அதன் பின் அது நேட்டாலுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டதால், அங்கு நேட்டால் வியாபாரிகள் லைசன்ஸ் சட்டமும் அமுலுக்கு வந்தது. அதன் விளைவாக ஸ்ரீ தாதா உஸ்மானின் லைசன்ஸ் பறிமுதல் செய்யப்பட்டதால், ரைஹீடில் அவர் வியாபாரம் செய்ய முடியாமல் அவரது பண்டசாலை அடியோடு பாழாகிவிட்டது. லேடிஸ்மித் ஜில்லாவிலும் காஸிம் முகமது என்ற வியாபாரியின் வேலைக்காரர் ஞாயிற்றுக்கிழமை ஒரு சோப்பும், சிறிது சர்க்கரையும் விற்ருர் என்பதற்காக அவரது லைசன்சைப் புதுப்பிக்க அதிகாரிகள் மறுத்துவிட்டார்கள். அவ்விதம் விற்றதாக அவருக்குப் போட்டியாக இருந்த ஐரோப்பிய வியாபாரி அவர் மீது கூறிய புகாரை ஆதாரமாகக் கொண்டே அதைப் புதுப்பிக்க மறுத்துவிட்டார்கள்.

ஸ்ரீ ஹூண்டமால் என்ற இந்திய வியாபாரி ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குத் தமது வியாபார ஸ்தாபனத்தை மாற்றிய போது, அவரது லைசன்சையும் மாற்ற அதிகாரிகள் மறுத்து. விட்டனர்.

இந்தியர் பார்லிமெண்டு கமிட்டி தொடர்ந்து காலனி மந்திரியிடமும், இந்தியா மந்திரியிடமும் இவ்விவரங்களைச் சமர்ப்பித்துப் பரிகாரம் ஏற்படும்படி செய்ய வேண்டுமென்று கூறத் துணிகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

மோ. க. காந்தி

## 6

ஜோகன்னஸ்பர்க்,

*ஜூலை 30, 1906*

அன்புள்ள ஐயா,

போர் முனையிலிருந்து நான் இப்போது திரும்பிவந்துள்ளேன். அரசியல் திட்டக் கமிட்டியின் அறிக்கை சம்பந்தமாக என்னுல் இப்போது எவ்வித உதவியும் இருப்பதற்கில்லை என்ருலும், ஒன்றிரண்டு வியாபாரிகளுடன் நான் இங்கிலாந்துக்குச் செல்ல வேண்டுமென இங்குள்ள பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் கருதுகிறது. அரசாங்கம் செய்யும் முடிவையொட்டி எங்களுடைய

செல்வாக்கை உபயோகிக்க வேண்டும் என்பதற்காக அல்ல, பிரிட்டிஷ் இந்தியர்களின் நிலையை அதிகாரிகளிடம் நேரில் தெரிவிப்பதற்காகவே அவ்விதம் செல்ல வேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். எனவே அத்தகைய தூது கோஷ்டியினால் பலன் ஏதாவது ஏற்படுமா என்பதை நீங்கள் தந்தி மூலம் எனக்குத் தெரிவித்தால், நான் நன்றியுள்ளவனாக இருப்பேன். தூது கோஷ்டி வரவேண்டிய அவசியம் இல்லை என்று நீங்கள் கருதினால், 'தேவையில்லை' என்று மாத்திரம் தந்தி கொடுத்தால் போதும், நான் புரிந்து கொள்வேன். தூது கோஷ்டி வரவேண்டும் என்று நீங்கள் எண்ணினால், தயவு செய்து 'ஆம்' என்று தந்தி கொடுங்கள். அவ்விதம் வருவதற்கு, செப்டம்பர் அல்லது அக்டோபர் மாதம் தகுதியான காலமா என்பது எனக்குத் தெரியவில்லை.

தங்கள் உண்மையுள்ள,

**மோ. க. காந்தி**

# 7

ஹோட்டல் ஸீஸில், லண்டன்,
நவம்பர் *7, 1906*

சர் வில்லியம் வெட்டர்பன்,
மெரிடித், கிளௌஸ்டர்.

அன்புள்ள ஐயா,

நாளை மாலை 3 மணிக்கு லார்டு எல்ஜினைச் சந்திக்கவிருக்கும் தூது கோஷ்டியுடன் நீங்கள் சேர்ந்து கொள்ளவேண்டுமென சர் லெபல் கிரிப்பின் தீவிரமாக வற்புறுத்துகிறார். அதில் சேர்ந்து கொள்வதில் நீங்கள் கூறிய ஆட்சேபணையை அச்சமயம் அவரிடம் சொல்ல நான் மறந்துவிட்டேன். இருந்தாலும், அவரது அபிப்பிராயத்தை உங்களிடம் தெரிவித்துவிடுவதாக அவருக்கு நான் உறுதி கூறியதாலேயே, உங்களுக்கு இக்கடிதம் எழுதுகிறேன். நீங்கள் தெரிந்து கொள்வதற்காக, இந்தியர்களின் விண்ணப்பத்தின் நகலையும், அவசரச் சட்டத்தின் சுருக்கத்தையும் இத்துடன் உங்களுக்கு அனுப்பியிருக்கிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

## 8

ஜோகன்னஸ்பர்க்,
மார்ச் 25, 1907

அன்புள்ள சர் வில்லியம்,

டாக்டர் ஓல்ட்பீல்டின் உதவியைக் குறித்து நீங்கள் எழுதிய கடிதத்திற்காக உங்களுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். அவசரச் சட்டத்தையொட்டி நீங்கள் மிகவும் தீவிரமாக அக்கறை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று உங்களைக் கேட்டுக் கொள்வதற்காகவே இந்தக் கடிதம் எழுதுகிறேன். அந்த அவசரச் சட்டம் புதிய பார்லிமெண்டில் மீண்டும் கொண்டு வரப்பட்டிருக்கிறது. 'இந்தியா' பத்திரிகையில் இவ்விஷயம் விவாதிக்கப்படவில்லை. இதன் பலன் என்னவெனில், இந்தியாவில் உள்ள பத்திரிகை எழுத்தாளர்கள் அப்பிரச்னையை அலசி ஆராய முற்படமாட்டார்கள்.

'டைம்ஸ் ஆப் இந்தியாவை'ச் சேர்ந்த ஸ்ரீ பிரேஸரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அப்பிரச்னையையொட்டி ஒரு விசேஷக் கமிட்டியை நியமிக்க வேண்டுமென்ற யோசனை பரிசீலனைக்கு வரும்போது, தாம் மகிழ்ச்சியுடன் ஒத்துழைக்கத் தயாராக இருப்பதாக அவர் குறிப்பிட்டிருக்கிறார். அத்தகைய கமிட்டி நியமிக்க வேண்டியது அவசியமென நீங்கள் இந்தியாவிலுள்ள தலைவர்களுக்கு அன்பு கூர்ந்து யோசனை கூறினால், அவ்விஷயம் எடுத்துக் கொள்ளப்படும்.

ஒரு தூது கோஷ்டி, ஜெனரல் போதாவைக் கண்டு பேச வேண்டுமென யோசனை கூறி நான் தென்னாப்பிரிக்கா பிரிட்டிஷ் இந்தியர் கமிட்டிக் காரியதரிசிக்கு எழுதியிருக்கிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,
மோ. க. காந்தி

## 9

மார்ச் 3, 1915

அன்புள்ள சர் வில்லியம்,

தேசத்திற்கே ஏற்பட்டுள்ள துக்கம் காரணமாக,* உங்களுடைய கடிதத்திற்கு நான் முன்பே பதில் எழுத முடியவில்லை.

---

* இந்தியாவின் தவப் புதல்வர்களில் ஒருவரான கோபால கிருஷ்ண கோகலேயின் மரணத்தையே காந்திஜி தேசத்திற்கு ஏற்பட்ட துக்கம் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

உங்களுக்கு அனுப்பப்பட்டதைப் போன்ற பல பேழைகள் இந்தியாவுக்குக் கொண்டுவரப்பட்டுள்ளன. கேப் டவுனில் அளிக்கப்பட்ட பேழை இங்கிலாந்தில் இருக்கவேண்டும் என்பது விதியின் கட்டளை போலும். அதுதான் தென்னுப்பிரிக்காவில் கடைசியாக அளிக்கப்பட்ட பேழையாகும். அது, ஸதாம்டனில் நாங்கள் கப்பலேறும் தினத்தன்று அளிக்கப்பட்டது. பின்னர் நாங்கள் இங்கிலாந்துக்கு வந்து லண்டனில் தங்கியபோது, இங்கிலாந்திலேயே அதை விட்டுச் செல்ல வேண்டும் என்ற எண்ணம் உருவாகியது. அதை வைக்க வேண்டிய சிறந்த இடம் உங்கள் வீடுதான் என்பதை ஸ்ரீ ராபர்ட்ஸும், காலென் பாக்கும், நானும் ஒப்புக்கொண்டோம். அது, தங்களை இந்தியாவின் சிறந்த நண்பர்களில் ஒருவர் என்று கருதும் ஒருவன் சொந்த முறையில் அளிக்கும் ஒரு சிறிய பரிசாக இருக்கும். அந்தப் பேழையை உங்களிடம் விட்டுச் செல்லுவது, இந்தியாவையும் இங்கிலாந்தையும் ஒன்றுகப் பிணைக்கும் முயற்சியின் அறிகுறியேயாகும்.

எனவே அதை உங்களிடமே வைத்துக் கொள்ளும்படி நான் உங்களைக் கேட்கலாமா? ஸ்ரீ கோகலே உங்களுடைய கடிதத்தை வாசித்திருந்தால், அவரும் என்னுடன் சேர்ந்து அவ்விதமே வேண்டுகோள் விடுத்திருப்பார் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

மரியாதையுடன்,

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

பகுதி பதினாறு

# ஜெனரல் ஸ்மட்ஸ்

ஜெனரல் ஜே. ஸி. ஸ்மட்ஸ் (1870-1950) பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த ராஜதந்திரிகளுக்குள் மிகச் சிறந்தவர் என்ற புகழ் பெற்றவர். அவர் சிறந்த வழக்கறிஞராகவும், ராஜதந்திரியாகவும் மாத்திரமல்ல, திறமை வாய்ந்த போர் வீரராகவும் விளங்கினர். "ஜெனரல் ஸ்மட்ஸைக் குறித்து ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று பல ஆங்கில நண்பர்கள் என்னை எச்சரிக்கை செய்தார்கள். அவர் மிகவும் தந்திரசாலி; சந்தர்ப்பவாதி; அவர் கூறுவது அவருக்கு மட்டும்தான் புரியும்; ஒவ்வொரு கட்சியினரும் அவர் தமக்குத்தான் சாதகமாகப் பேசுகிருர் என்று எண்ணும்படி ஸ்மட்ஸின் வார்த்தைகள் இருக்கும்; ஆனல் சந்தர்ப்பம் நேரும்போது, ஜெனரல் ஸ்மட்ஸ் இரு கட்சிகளுடைய வியாக்கியானங்களேயும் தள்ளிவிட்டு தாம் கூறியவற்றிற்குப் புதிய வியாக்கியானங்கள் செய்வார்; 'அவரது வியாக்கியானம் சரி' என்று இரு கட்சியினரும் நினைக்கும்படியும் செய்துவிடுவார்!" இவ்வாறெல்லாம் ஜெனரல் ஸ்மட்ஸைப் பற்றி நண்பர்கள் தம்மிடம் கூறியதாக காந்திஜி குறிப்பிட்டிருக்கிருர். காந்திஜியின் தலைமையில் நடந்த தென்னுப்பிரிக்க இந்தியர் சத்தியாக்கிரகப் போராட்டத்தின் ஆரம்பத்தில் மிகவும் பிடிவாதமாக இருந்த ஜெனரல் ஸ்மட்ஸ் இறுதியில் பணிந்து காந்திஜியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளும்படி நேர்ந்தது சரித்திரப் புகழ்பெற்ற வரலாறு ஆகும். அப் போராட்டத்தின் போது காந்திஜி தென்னுப்

**பிரிக்க யூனியன் மந்திரியாக இருந்த ஜெனரல் ஸ்மட்ஸுக்கு எழுதிய கடிதங்கள் இப்பகுதியில் வெளியாகியுள்ளன :**

## 1

ஐயா,

ஆசியாக்காரர்கள் பதிவுச் சட்டத்தையொட்டி திரான்ஸ்வாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்கள் கையெழுத்திட்டுச் சமர்ப்பித்துள்ள விண்ணப்பத்தை நான் பார்சல் தபாலில் அனுப்பியிருக்கிறேன்.

பதிவு பாரங்கள் காலனியில் விநியோகம் செய்யப்பட்டபோது, சில இந்தியர்களின் சார்பில் சர்க்காருக்கு ஒரு கடிதம் அனுப்பப்பட்டது. அச்சட்டத்தின் விதிகளைத் திருத்த வேண்டும் என்பதே அந்தக் கடிதத்தின் கோரிக்கையாகும். ஆனால் அக் கடிதத்திற்கு இதுவரையில் யாதொரு பதிலும் இல்லை. எனவே பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் காலனி மந்திரிக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பியிருக்கிறது. காலனியிலுள்ள பெரும்பாலான இந்தியர்களின் பிரதிநிதிகளும் அதில் கையெழுத்திட்டிருக்கிறார்கள். திரான்ஸ்வாலைச் சேர்ந்த 29 நகரங்களிலும், கிராமங்களிலும், ஜில்லாக்களிலும் இருந்து அந்த விண்ணப்பத்தில் 4522 பிரதிநிதிகள் கையெழுத்திட்டிருக்கிறார்கள்.

1906 செப்டம்பரில் போராட்டம் ஆரம்பமாகுமுன் பிரிட்டிஷ் இந்தியர்களுக்குச் சற்றேறக்குறைய 13,000 'பர்மிட்'கள் வழங்கப்பட்டன. ஆனால் இன்று திரான்ஸ்வாலில் உள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் ஜனத்தொகை 7000-க்கு மேல் இல்லை. மற்றவர்கள் இங்கே அடிமைகளாக இருப்பதைக் காட்டிலும் வெளியேறிவிடுவதே சிறந்ததென்று அப்படியே செய்துவிட்டார்கள். சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்துகொண்டிருப்பவர்களில் பெரும்பாலோர், வெள்ளையர்களான முதலாளிகளின் வற்புறுத்தலுக்காக அவ்விதம் செய்திருக்கிறார்கள். ஜுலை 1-ம் தேதியிலிருந்து அக்டோபர் 31-ம் தேதி முடிய திரான்ஸ்வால் முழுவதும் பதிவு செய்துகொள்ள விண்ணப்பம் செய்துகொண்டுள்ள இந்தியர்களின் தொகை 350-க்கு மேல் இராது.

எனவே ஆசியாக்காரர் சட்டத் திருத்த மசோதாவுக்கு விரோதமாக இந்தியர்களிடையே ஏற்பட்டுள்ள தீவிரமான உணர்ச்சியைக் கவனிக்க வேண்டுமென பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறது. அரசாங்கத்தை எதிர்க்கவேண்டும் என்ற நோக்கம் இந்தியர்களுக்கு இல்லை. அவர்களுடைய எதிர்ப்பு, அவர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள

அநீதியைக் குறித்து அவர்களிடையே ஏற்பட்டுள்ள மனக் கொதிப்பையே காட்டுகிறது. தங்களுக்கு மிகுந்த தீங்கு இழைக் கப்பட்டிருக்கிறது என்ற ஆழ்ந்த உணர்ச்சி, சாத்துவிகமாக எதிர்த்து நின்று எத்தகைய துன்பத்தையும் அனுபவிக்கத் தயாராக இருக்கும்படி அவர்களை வற்புறுத்தியிருக்கிறது.

## 2

ஜோகன்னஸ்பர்க்,
*பிப்ரவரி 1, 1908*

அன்புள்ள ஸ்ரீ ஸ்மட்ஸ்,

சென்ற வியாழக்கிழமை நான் ஸ்ரீ சாம்னியுடன் பேசிக் கொண்டிருந்தபின், மீண்டும் உங்களைப் பேட்டி காண முயற்சித் தேன். நான் அங்கிருந்து புறப்படுவதற்கு முன் உங்களை நான் கண்டு பேச முடியுமென ஸ்ரீ லேன்* என்னிடம் கூறினர். எனினும் அவ்விதம் உங்களைக் காணும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை.

ஸ்ரீ சாம்னிக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணை எனக்கு ஆறுதலளிக்கவில்லை. ஏனெனில் ஆசியாக்காரர் சட்டம் அவசியம் என்ற பல்லவியை அவர் இன்னும் விட்டபாடில்லை. இப்போது நடந்துவரும் பதிவு, சட்ட பூர்வமானதாகவே கருதப்படும் என்று அவர் கூறினர். ஆனல் உங்களை நான் பேட்டி கண்டு பேசிய போது நீங்கள் கூறியதிலிருந்து அவ்வித நோக்கம் எதுவும் இல்லை என்றே நான் தெரிந்து கொண்டேன். சிறிதும் தகராறு இல்லாமலும், உங்களுக்குப் பூரண திருப்தி ஏற்படும் வகையி லும் இந்தப் பிரச்னையை முடிக்க வேண்டும் என்பதில் நான் மிகவும் ஆர்வம் உள்ளவனாக இருக்கிறேன். ஆசியாக்காரர் களுக்கு எதிரான கிளர்ச்சிக்காரர்கள் ஆர்ப்பாட்டம் செய்து வருவதை முன்னிட்டு, உங்களுக்குத் தொந்தரவு கொடுக்காமல் இருக்க நான் எவ்விதத்திலும் முயற்சி செய்வேன் என்று நான் கூறுவதை நம்புங்கள். இப்போதுள்ள நிலையில், எவ்வளவு அவசியமோ அவ்வளவுக்கு குடியேற்றக் கட்டுப்பாடு சட்டத்தைத் திருத்துவதே சிறந்த வழி என்று நான் முன்பே யோசனை கூறியிருக்கிறேன்.

விண்ணப்பம் செய்து கொள்ளும் முறையும், பதிவு செய்து கொள்ளும் முறையும் இந்தியர் சமூகத் தலைவர்களுடன் கலந் தாலோசித்து விரைவில் முடிவு செய்யப்படவேண்டும்.

லைசன்ஸ் இல்லாமல் வியாபாரத்தில் ஈடுபட இந்தியர் களுக்கு அனுமதி கொடுப்பதால், காலனி ஐரோப்பியர்களிடையே

* ஸ்ரீ லேன், ஜெனரல் ஸ்மட்ஸின் அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தார்.

தகராறுகளுக்கு இடம் உண்டாகும். எனவே இந்தியர்களுக்கு லைசன்ஸ்கள் வழங்குவதோ அல்லது தற்காலிகமாக ரசீது கொடுத்து லைசன்ஸ் கட்டணத்தை வாங்கிக் கொள்வதோதான் சிறந்ததென்று தாங்கள் நினைக்கவில்லையா?

நான் சொந்த முறையிலும் அந்தரங்கமாகவும் உங்களுக்கு இக் கடிதத்தை எழுதியிருக்கிறேன். இதற்கு நீங்கள் அனுப்பும் பதிலையும் அந்தரங்கமானதாகவே கருதுவேன். நான் விடுத்த பகிரங்க அறிக்கைகளில் அவசரப்பட்டும் ஆலோசிக்காமலும் நான் ஏதாவது கூறியிருப்பதாக நீங்கள் எண்ணினால், தயவு செய்து என்னைத் திருத்துங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 3

ஜோகன்னஸ்பர்க்,

*பிப்ரவரி 22, 1908*

அன்புள்ள ஸ்ரீ ஸ்மட்ஸ்,

நீங்கள் கொடுத்த அனுமதிக்கிணங்க, 1907-ம் ஆண்டு குடியேற்றக் கட்டுப்பாடு சட்டத்தைத் திருத்தும் நகல் மசோதா ஒன்றை நான் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். இப்போது எழுந்துள்ள நிலைமையை, இந்த நகல் மசோதா முற்றிலும் சமாளிக்கக் கூடியது என்பதே எனது அபிப்பிராயமாகும். இதை நான் சமர்ப்பிப்பதற்கு இப்போதுதான் பக்குவமான காலமாகும். ஏனெனில், சமரசமான இந்த மசோதாவை ஆசியாக்காரர்கள் இப்போது விசுவாசத்துடன் ஒப்புக் கொள்வார்கள் என்பதற்கு ஆதாரம் இருக்கிறது.

குடியேற்றக் கட்டுப்பாடு சட்டம் 6-வது பிரிவையும் நீங்கள் திருத்த உத்தேசித்திருப்பதாக அறிகிறேன். அச் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதவர்களை கட்டாயமாக வெளியேற்றிவிட அரசாங்கத்துக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் வெளியேறவேண்டும் என்ற உத்தரவை மீறுவோருக்கு அவர்கள் தாங்களாகவும், தங்கள் சொந்தச் செலவிலும் காலனியிலிருந்து வெளியேறும் வரையில் சிறைத் தண்டனை விதிக்க மாஜிஸ்திரேட்டுக்கு அதிகாரம் உண்டு என அதை மாற்றும்படி நான் யோசனை கூறலாமா? நாகரிகமான ஒரு அரசாங்கம் அந்த எல்லைக்கு மேல் செல்லக்கூடாது என நான் நினைக்கிறேன். மேலே குறிப்பிட்ட விதம் 6-வது பிரிவைத் திருத்தினால்,

அத்ற்குத் தகுந்தவாறு 11, 15-வது பிரிவுகளையும் திருத்தவேண்டியது அவசியமாக இருக்கும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 4

ஜோகன்னஸ்பர்க்,
மே 12, 1908

அன்புள்ள ஸ்ரீ ஸ்மட்ஸ்,

ஸ்ரீ சாம்னியிடமிருந்து எனக்கு ஒரு தந்தி வந்திருக்கிறது. சமரசம் ஏற்பட்ட காலத்தில் காலனிக்கு வெளியில் இருந்து, 9-ஆம் தேதிக்குப் பிறகு காலனிக்குள் வந்துள்ள எல்லா ஆசியாக்காரர்களும் சட்டத்தின் கீழ் விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும் என்று ஸ்ரீ சாம்னி அந்தத் தந்தியில் குறிப்பிட்டிருக்கிறார். இவ்விஷயமாக நான் டெலிபோன் மூலம் உங்களுக்கு ஒரு செய்தி அனுப்பினேன். சிறையிலிருந்து நான் இவ் விஷயத்தைப் பற்றித் தெளிவாகக் கடிதம் எழுதியிருப்பதால், நீங்கள் அவ்விதம் உத்தரவிட்டிருக்கமாட்டீர்கள் என்றே நிச்சய மாகக் கருதுகிறேன். அந்த உத்தரவு மிகுந்த திகிலை உண்டாக்கி யிருக்கிறது. எனவே அதன் சம்பந்தமாக அவசியமான கட்டளை கள் பிறப்பிக்கப்படுமென்றும், இப்போது காலனிக்குள் வருவோர் தாங்களாகப் பதிவு செய்துகொள்ள முன்வருவதை அதிகாரிகள் அங்கீகரிப்பார்கள் என்றும் நான் நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 5

ஜோகன்னஸ்பர்க்,
மே 21, 1908

அன்புள்ள ஸ்ரீ ஸ்மட்ஸ்,

சனிக்கிழமை தாங்கள் கேப் டவுனுக்குப் புறப்படுகிறீர் களென அறிகிறேன். இந்தியர் சமூகத்தைப் பொறுத்தமட்டில் நிலைமை எவ்வளவு நெருக்கடியான கட்டத்தை அடைந்திருக்கிற தென்பதை நீங்கள் உணரவில்லை என்றே நினைக்கிறேன். இந்த மாதம் 9-ஆம் தேதிக்குப் பிறகு காலனியில் பிரவேசித்துள்ள

இந்தியர்களை சமரசத் திட்டத்திற்கு இணங்கப் பதிவு செய்வதில்லை என்று நீங்கள் செய்துள்ள தீர்மானம், இந்தியர்களிடையே மிகுந்த கலவரத்தை உண்டாக்கியிருக்கிறது. பிரிட்டிஷ் இந்தியர் சங்கத் தலைவர் ஏற்கனவே தாக்கப்பட்டதை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அடுத்து மற்றும் பலர் தாக்கப்படலாம். என் மீது கோபம் கொண்டு பலர் எனக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். சமரசத் திட்டத்தைப் பற்றி நான் மக்களை ஏமாற்றிவிட்டதாகவும், சட்டம் ரத்தாவதற்கு இடமில்லை என்றும் அவர்கள் கடிதங்களில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அரசாங்கத்துக்கு உதவியாக இருந்தவர்களுக்காக ஒரு சாதாரணமான கோரிக்கைக்குக் கூட நீங்கள் இணங்கக் கூடாதா? சட்டம் ரத்து செய்யப்படும் என்றும், புதிதாக வருவோர் தாங்களாக வலுவில் பதிவு செய்து கொள்ளலாம் என்றும் நீங்கள் உடனடியாகப் பிரகடனம் செய்யக்கூடாதா?*

மிகுந்த பலாத்காரத்தில் ஈடுபடும் பட்டாணிய சமூகத்தைச் சேர்ந்த ஒருவரே திரைமறைவில் இருந்து கொண்டு சம்பந்தப்பட்டவர்களைத் தாக்கும்படி தூண்டி வந்தார். அபாயம் விளைவிக்கும்படி தூண்டியதாக இன்று அவர் கைது செய்யப்பட்டுள்ளார். சாத்தியமாயின் அவரை நாடுகடத்த வேண்டும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.† அவரை வெறிபிடித்த ஒரு பைத்தியக்காரர் என்றே நான் கருதுகிறேன். சமரசத் திட்டம் காரணமாக அதிருப்தியடைந்திருக்கும் பல இந்தியர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். சட்டத்தை ரத்து செய்து பிரகடனம் வெளியிடுவதில் ஏற்பட்டுள்ள தாமதமும், இந்தியர்கள் தாங்களாகப் பதிவு செய்து கொள்வதை ஒப்புக்கொள்வதில்லை என்ற தீர்மானமும் அத்தகைய நபர்களின் கையைப் பலப்படுத்தியிருக்கின்றன. சட்டத்தைப்பற்றி நீங்கள் வாக்குறுதியளிப்பதுடன், புதிதாக வருவோர் தாங்களாகப் பதிவு செய்து கொள்வதை அங்கீகரிக்க வேண்டும். நான் குறிப்பிட்ட அந்த வெறியரை நாடு கடத்த வேண்டும், அல்லது குடியேற்றக் கட்டுப்பாடு சட்டத்தை மீறி இங்கு வந்தவர் என்று அவர்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். நீங்கள் மேற்கூறிய விதம் செய்வதன் மூலம், ஒழுங்கான முறையில் நடந்து கொண்டுவரும் இந்தியர்களுக்கு மன அமைதி ஏற்படும்படி செய்தவர்களாவீர்கள். அந்த நபரிடம் சட்டப்படி தஸ்தாவேஜுகள் எதுவுமில்லை.

---

* மேற்கண்ட கோரிக்கைக்கு ஜெனரல் ஸ்மட்ஸ் இணங்கவில்லை.

† பலாத்காரத்தைத் தூண்டிய குறிப்பிட்ட நபரை நாடுகடத்தவேண்டும் என்று காந்திஜி கூறிய யோசனையைக் குறித்து ஜெனரல் ஸ்மட்ஸின் காரியதரிசி ஸ்ரீ லேன் தமது பதிலில் கூறியதாவது: "உங்களுடைய யோசனைக்கிணங்க அவரை நாடுகடத்துவது சாத்தியமல்ல என்பதற்குக் காரணங்களை ஸ்ரீ சாம்னி உங்களுக்கு விளக்கியுள்ளார். எனினும் உங்களுக்கு ஏதாவது அபாயம் நேருமென நீங்கள் கருதினால், நீங்கள் உடனடியாக போலீசாரின் பாதுகாப்பை நாடுவீர்களென ஜெனரல் ஸ்மட்ஸ் நம்புகிறார்."

நான் சொந்த முறையிலும், மனம் விட்டும் உங்களுக்கு இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறேன். நீங்களும் அவ்விதமே நடந்து கொள்ளவேண்டுமென நான் உங்களைக் கேட்கலாமா? நான் ஸ்ரீ கார்ட்ரைட்டினிடம் எனது அபிப்பிராயங்களைக் கூறி வந்தேன். அவர் நம் இருவருக்கும் தூதர்போல் இருந்து நான் கூறிய செய்திகளை உங்களிடம் கூறிவந்தார். எனினும் இப்போது மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருப்பதால், நான் உங்களுக்கு நேரில் இவ்விதம் வேண்டுகோள் விடுக்கும் படியான அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

*தங்கள் உண்மையுள்ள,*
**மோ. க. காந்தி**

## 6

*ஜோகன்னஸ்பர்க்,*
*ஜூன் 6, 1908,*

அன்புள்ள ஸ்ரீ ஸ்மட்ஸ்,

இன்று உங்களுக்கும் எனக்கும் இடையே நடந்த பேட்டியைப்பற்றி நான் எழுதுவதைக் குறித்து என்னை நீங்கள் மன்னிப்பீர்களென நம்புகிறேன். சமரசத் திட்டத்திற்கு உட்பட்டு நடக்க வேண்டும் என்ற உங்களுடைய விருப்பத்தை நான் பாராட்டுகிறேன். என்றாலும், நமக்குள் நடந்த பேட்டி திருப்தியளிப்பதாக இல்லை என்பதை நான் கூறாமல் இருக்க முடியாது. சட்டத்தை ரத்துசெய்ய நீங்கள் இன்னும் தயங்குகிறீர்கள். அச் சட்டத்தை ரத்து செய்வதே ஆசியாக்காரர்களின் லட்சியம் என்று நான் முன்பே கூறியிருக்கிறேன். அந்த லட்சியத்தை அடைவதற்காக அவர்கள் எவ்வளவோ செய்திருக்கிறார்கள், எவ்வளவோ விட்டுக் கொடுத்திருக்கிறார்கள். ஆசியாக்காரர் சட்டம் முற்றிலும் தீமையானது என்று நீங்கள் ஒப்புக்கொண்டிருக்கிறீர்களென நினைக்கிறேன். எனவே குடியேற்றக் கட்டுப்பாடு சட்டத்தைத் திருத்துவது, அப்பிரச்னையைத் தீர்ப்பதற்குற்ற சரியான வழியேயாகும். பேட்டியின்போது அவ்விஷயமாக நீங்கள் என்ன கூறினீர்கள் என்பதை உங்களுக்கு மீண்டும் நினைவூட்டுகிறேன். சமரசத் திட்ட சம்பந்தமாக ஆசியாக்காரர்கள் தங்கள் பங்கை நிறைவேற்றினால், சட்டத்தை ரத்து செய்வதாக நீங்கள் கூறினீர்கள். தானாகப் பதிவு செய்து கொள்ள ஒரு ஆசியாக்காரர் பிடிவாதமாக மறுத்தால்கூட, ஆசியாக்காரர்களுக்கு விரோதமான சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரப்போவதாகவும் நீங்கள் குறிப்பிட்டீர்கள். அவ்விதம் மறுக்கும் ஆசியாக்காரர் ஒருவர் கூட இல்லை. காலனியிலுள்ள பெரும்பாலான ஆசியாக்காரர்களும் சமரசத் திட்டத்திற்கு உட்

பட்டு நடக்கவேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காகவே நீங்கள் அவ்விதம் கூறியிருக்கிறீர்களென நான் கருதுகிறேன். பெரும்பாலோரும் அத்திட்டத்திற்கு உட்பட்டே நடந்து கொண்டிருக்கிறார்கள்.

இவ்விஷயத்தில் காலம்தான் முக்கியமாகும். எனவே சட்டம் ரத்து செய்யப்படும் என்று உறுதியாக நான் அறிவிப்பதற்கு இடம் கொடுப்பீர்களென நம்புகிறேன். இல்லாவிடில், பதிவு செய்து கொள்வதற்கான விண்ணப்பத்தை நான் வாபஸ் செய்து கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்படும். அத்தகைய நிலைமை ஏற்படுவதைத் தவிர்க்கவே நான் விரும்புகிறேன். எனினும் உங்களுடைய உறுதி மொழிக்காக பார்லிமெண்டு திறக்கும்வரையில் காத்திருப்பது முடியாத காரியம். ஆகையால் நீங்கள் உறுதி மொழி அளிக்க முடியாவிட்டால், விண்ணப்பங்களைத் திருப்பி அனுப்பும்படி எழுதியிருப்பவர்களுக்கு அவை வாபஸ் செய்யப்படாவிட்டால், அந்த தஸ்தாவேஜுகளைத் திருப்பித் தரவேண்டும் என்று வற்புறுத்தி சுப்ரீம் கோர்ட்டுக்கு மனுச் செய்து கொள்ளப்படும்.

பிப்ரவரி 1, 22-ம் தேதிகளில் நான் தங்களுக்கு எழுதிய கடிதங்கள் அந்தரங்கமானவையாதலின், அவற்றைப் பிரசுரிக்கக் கூடாது என்று ஸ்ரீ லேன் எனக்கு எழுதியிருக்கிறார். சட்டத்தை ரத்து செய்வதாக நீங்கள் வாக்குறுதி அளித்தீர்கள் என்று நான் கூறுவதற்கு அக்கடிதங்கள் நிச்சயமான ருசுவாகும். நீங்கள் அந்த நிலையிலிருந்து வாபசாகியிருப்பதுடன், நான் கூறுவதையும் மறுக்கும்போது, நான் மாத்திரம் அக்கடிதங்களை அந்தரங்கமானவையாகக் கருதவேண்டும் என்று என்னைக் கட்டுப்படுத்த மாட்டீர்கள் என்றே நம்புகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

# 7

ஜோகன்னஸ்பர்க்,

*ஜூன் 13, 1908*

அன்புள்ள ஸ்ரீ ஸ்மட்ஸ்,

இன்று நான் உங்களைப் பேட்டி கண்டதன் சம்பந்தமாக மீண்டும் உங்களுடைய நேரத்தையும், கவனத்தையும் ஆக்கிரமித்துக் கொள்வதற்காக என்னை மன்னிப்பீர்களென நம்புகிறேன். ஆசியாக்காரர் சட்ட சம்பந்தமாக எழுந்துள்ள பிரச்னை தீர்க்கப்படும் வரையில், நான் உங்களை அணுகக் கடமைப்பட்டிருக்கிறேன்.

பிரிட்டிஷ் இந்தியர்களின் சார்பில் பேச நான் முழுப் பிரதி நிதித்துவம் வாய்ந்தவனு என்பதில் உங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. இன்னும் சரியாகச் சொல்லுவதாயின், நான் கூறியுள்ள அபிப்பிராயங்கள் இந்தியர்களின் அபிப்பிராயங்களை முற்றிலும் பிரதிபலிப்பவையாக இருக்கின்றனவா என்பதில் உங்களுக்கு ஐயம் உண்டாகியிருக்கிறது. அரசாங்கத்துக்குப் பயந்து கொண்டு தவறு செய்துள்ளவர்கள் மிக மிகச் சிறு பான்மையோரே ஆவர். அவர்களில் சிலர் என்னைக் கண்டு பலதடவை பேசினர். ஆசியாக்காரர் சட்டம் ரத்து செய்யப்பட வேண்டும் என்பதில் இந்தியர் சமூகத்தைச் சேர்ந்த மற்றவர்களைப்போல அவர்களும் ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

உயர்தரக் கல்வி சம்பந்தமான தகுதிகள் உள்ள ஆசியாக்காரர்கள் மாத்திரமே எதிர்காலத்தில் இங்கு குடியேறுவதை அனுமதிக்க வேண்டும் என்ற காலனி ஐரோப்பியர்களின் முக்கியமான கொள்கை ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இருந்தாலும் இந்த நாட்டில் வசிக்க உரிமையுள்ளவர்கள் அந்தக் கொடிய தடையை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். மிகவும் நியாயமான அடிப்படையில் அந்தப் பிரச்னை திருப்திகரமாகத் தீர்க்கப் படவேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 8

*21-7-1908*-ல் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு காந்திஜி எழுதியிருந்த ஒரு கடிதத்தின் சாரம் கீழே கொடுக்கப்பட்டுளது :

பதிவுச் சட்டப்படி ஏராளமான இந்தியர்கள் சிறைத் தண்டனைக்கு உள்ளாகி அல்லல்பட்டு வருகையில், சட்டப்படி பதிவு செய்து கொள்ளாத, சிறைப்பட்டுள்ள இந்தியர்களின் நடவடிக்கைகளுக்கு மூல கர்த்தாவான நான் மாத்திரம் சுதந்திரமாக இருந்துவருகிறேன். என்னை மாத்திரம் விட்டுவிட்டு ஏழைகளான மற்ற இந்தியர்களைத் துன்புறுத்திவருவது தைரியமாகுமா? எனது சொந்த தேச மக்களுக்கு நான் தொண்டு செய்வதுபோல், பொதுவாக திரான்ஸ்வால் மக்களுக்கும் தொண்டு புரிய நான் ஆர்வமுடையவனாக இருக்கிறேன் என்பதை மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறேன்.

## 9

ஜோகன்னஸ்பர்க்,
ஆகஸ்டு *14, 1918*

அன்புள்ள ஐயா,

இந்தியர்களைப் பொறுத்தமட்டில் வரப்போகும் போராட்டத்திற்கு முடிவே இராது என்று தோன்றுகிறது. எனவே இங்கிலையில் உங்களை அணுகவேண்டியது எனது கடமை என்று நான் கருதுகிறேன். இப்போது சற்றேறக்குறைய அறுபது இந்தியர்கள் கடுங்காவல் தண்டனை அடைந்து ஜோகன்னஸ்பர்க் சிறையில் இருந்துவருகிறார்கள். மீண்டும் போராட்டம் ஆரம்பமாகி சிறைத் தண்டனையை அனுபவித்த பின் முப்பது பேர் விடுதலை செய்யப்பட்டார்கள். பதின்மூன்று இந்திய வியாபாரிகள் தற்போது ஸ்டாண்டர்டன் சிறையில் தண்டனையை அனுபவித்துவருகிறார்கள்.

பதிவுப் பத்திரங்களைக் கொளுத்துவதற்காக நாங்கள் ஞாயிற்றுக்கிழமையன்று கூடுகிறோம். எரிப்பதற்காக, ஞாயிற்றுக்கிழமைக்குள் குறைந்தபட்சம் 1500 பத்திரங்கள் வந்து சேரும் என்று கூறலாம். அவர்கள் எல்லோரும் உண்மையானவர்கள் என்பதோ, அவர்கள் இறுதி வரையில் போராட்டத்தில் ஈடுபட்டு எத்தகைய துன்பங்களையும் அனுபவிக்கத்தயாராக இருப்பவர்கள் என்பதோ எனக்குத் தெரியாது. இருந்தாலும் அவர்கள் எல்லோரும் மனப்பூர்வமாகவே பதிவுப் பத்திரங்களை அனுப்பியிருக்கிறார்கள்.

டர்பனிலுள்ள நேட்டால் இந்தியர் காங்கிரஸ் தலைவர், கேப் டவுனிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர் சங்கத் தலைவர், நேட்டால் இந்தியர் காங்கிரஸ் உபதலைவர், காரியதரிசி ஆகியோரும், மற்றும் சில ஒப்பந்த இந்தியத் தொழிலாளர்களுடனும், யுத்தத்திற்கு முன் இங்கேயே வாழ்ந்து வருவதாகக் கூறும் சிலருடனும் இன்று திரான்ஸ்வால் எல்லைக்கு வருகிறார்கள். அவர்கள் ஒன்று கைது செய்யப்பட்டு சிறைத் தண்டனை அடைவார்கள்; அல்லது அவர்களை அதிகாரிகள் கைது செய்யாமலும் விட்டுவிடலாம். இந்தியாவிலுள்ள வெவ்வேறு மதத்தினருக்கும், இனத்தினருக்கும் மேற்கண்டவை பிரதிநிதி ஸ்தாபனங்களாக இருந்துவருகின்றன.

இந்த உண்மைகள், ஆசியாக்காரர் சட்டத்திற்கு பலமான, உண்மையான, தகர்க்க முடியாத எதிர்ப்பு நிலவிவருவதையே காட்டுகின்றன என்பது என் கருத்தாகும். திரான்ஸ்வாலில் வசிப்பதற்கு உரிமையுள்ளவர்களை நீதியற்ற முறையில் நடத்த நீங்கள் உத்தேசிக்கவில்லை. அவ்விதம் நான் கூறுவது சரி என்றே நினைக்கிறேன். சர்க்கார் பிரதிநிதி என்ற முறையில்

உங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியர்களுக்கும் இடையே உள்ள வேற்றுமை மிகவும் அற்பமேயாகும். எனவே சட்ட சபையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ள விண்ணப்பத்தை* நுணுக்கமாக வாசிக்கும் படி உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன். வாசித்த பின், தற்போது வெளியாகியுள்ள மசோதா சமரசத் திட்டத்தில் உள்ள ஒவ்வொரு ஷரத்திற்கும் விரோதமாக இருக்கவில்லையா என்ற கேள்விக்கு நீங்களே உங்களுக்கு விடையளித்துக் கொள்ளுங்கள். பின்னர் நமக்குள் நடந்த பேட்டிகளின்போது நீங்கள் என்ன கூறினீர்கள் என்பதை நினைவுபடுத்திக் கொள்ளும்படியும், தங்களை நீதியுடன் நடத்தவேண்டும் என்பதைத் தவிர இந்தியர் சமூகத் தலைவர்களோ அல்லது நானோ அதிகமாக வேறெதுவும் கோரவில்லை என்று நான் கூறும் உறுதி மொழியை நீங்கள் அங்கீகரிக்க வேண்டும் என்றும் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

நான் மேலே கூறியுள்ள யோசனையை அங்கீகரிக்க உங்களால் இயலாவிடில், இந்தியத் தலைவர்களில் சிலரைப் பார்க்கும்படியும், சமரசத் திட்டத்தின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்குற்ற, ஒப்புக் கொள்ளத் தக்க ஓர் ஒப்பந்தத்திற்கு வந்து தற்போதைய வருந்தத்தக்க நிலைமையை ஒரு முடிவிற்குக் கொண்டுவருமாறும் உங்களுக்கு யோசனை கூறத் துணிகிறேன். உங்களால் அவ்விரண்டில் எதையும் செய்ய இயலாவிடில், ஞாயிற்றுக்கிழமை நடைபெறும் பொதுக் கூட்டத்தில் பத்திரங்களை எரிக்கவேண்டும் என்று செய்துள்ள தீர்மானம் நிறைவேற்றப்படும். அவ்விதம் நிறைவேற்றும்படி யோசனை கூறியிருப்பதன் சம்பந்தமான முழுப் பொறுப்பும் என்னையே சார்ந்தது.

தங்கள் நம்பிக்கையுள்ள,

மோ. க. காந்தி

---

* பிரிட்டிஷ் இந்தியர் சங்கத் தலைவரான ஈசப் இஸ்மெயில் மியாவும், அச் சங்கத்தின் கௌரவக் காரியதரிசியான காந்திஜியும் திரான்ஸ்வால் அசெம்பிளி சபாநாயகருக்கும், அங்கத்தினர்களுக்கும் அனுப்பிய விண்ணப்பத்தைப் பற்றியே காந்திஜி மேலே குறிப்பிட்டிருக்கிறார். சமரசத் திட்டத்தை நிறைவேற்ற சர்க்கார் தவறிவிட்டார்கள் என்பதை அவர்கள் தங்களுடைய விண்ணப்பத்தில் ஆதாரபூர்வமாகக் காட்டியிருந்ததுடன், இந்தியர்களின் கோரிக்கைகள் என்ன என்பதையும் குறிப்பிட்டிருந்தார்கள்.

## 10

கேப்டவுன்,
*ஏப்ரல் 19, 1911*

அன்புள்ள ஜெனரல் ஸ்மட்ஸ்,

இன்று காலை நமக்குள் நடந்த உரையாடலைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தபின், எனது நிலைமையை மனம் விட்டு உங்களிடம் கூறவேண்டுமென நான் கருதுகிறேன்.

தற்போது நடந்துவரும் சட்டசபைக் கூட்டத்தில் அப் பிரச்னை தீர்க்கப்படாவிட்டால், சாத்துவிக எதிர்ப்பாளர்கள் யாதொரு அலுவலுமின்றி உட்கார்ந்திருக்கும்படி நேரும். அத் தகைய நிலைமையை நினைக்கவே பயமாக இருக்கிறது. டால்ஸ் டாய் பண்ணையில் தங்கள் குடும்பங்களுடன் இருப்போர் அவர் களிடமிருந்த பணத்தையெல்லாம் இழந்துவிட்டார்கள். அந்தப் பண்ணைக்கு வெளியிலும் பலர் அதே நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் சிறையை நாடாவிட்டாலோ அல்லது சிறைக்குச் செல்லுவதைத் தவிர்த்தாலோ, வேறு எங்கும் செல்ல முடியாது. உதாரணமாக, எல்லையில் அதிகாரிகளின் தொல்லைக்கு உட் படாமல் நேட்டாலுக்குச் சென்று திரும்பிவர அவர்களால் முடி யாது. வியாபாரிகளான சிலர் வர்த்தகத்தில் ஈடுபடுவதற்கு மில்லை. ஏனெனில் போராட்டம் நீடித்துவரும்வரையில் அவர்கள் பதிவுப் பத்திரங்களை அதிகாரிகளிடம் சமர்ப்பிக்க மாட்டார்கள். நாங்கள் தீவிரமான இயக்கத்தை நடத்திக் கொண்டிருந்தால், இந்தத் துன்பங்களையெல்லாம்பற்றி எதுவும் கூறமாட்டேன். ஒருவருடத்திற்கோ அல்லது அதற்கும் அதிகமாகவோ அதாவது பார்லிமெண்டு மீண்டும் கூடும்வரையில் சமாதானம் நிலவிவரும் என்ற அடிப்படையிலேயே நமக்குள் பேச்சு நடந்தது. இது எவ்விதம் சாத்தியம் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. இந்த இயக்கத்தினால் எங்களுக்கு மிகுந்த பொருட்செலவு ஏற்பட்டது என்பது உங்களுக்குத் தெரியும். குடும்பங்களைக் காப்பாற்ற வேண்டியிருப்பதால், எங்களுடைய மாதச்செலவு இயல்பாகவே அதிகமாகியிருக்கிறது. நாங்கள் மீண்டும் யாசகத்தைத் தொடங்குவோமாயின், இங்கேயும், இந்தியாவிலும், இங்கிலாந்திலும் நாங்கள் கிளர்ச்சி செய்ய வேண்டியிருக்கும். நேட்டாலிலிருந்து வந்தவர்கள் இங்கே இருக்கிறார்கள். அவர்கள் எல்லாவற்றையும் இழந்துவிட்டார்கள். எவ்வித முடிவும் தெரி யாத நிலையில் அவர்களை நாங்கள் மாதக்கணக்கில் வைத்துக் கொண்டு பராமரித்துவர வேண்டாமா?

உங்களுக்கு உதவியாக இருக்க நான் மனப்பூர்வமாக ஆர்வமுடையவனாக இருக்கிறேன். எனினும் சாத்துவிக எதிர்ப் பாளர்கள் யாதொரு நடவடிக்கையிலும் ஈடுபடாமல் இருப்பார் களென நான் எவ்விதம் வாக்குறுதி அளிக்க முடியும் என்பது

எனக்குத் தெரியவில்லை. கிளர்ச்சியைத் தவிர்க்கவே, நீங்களும், பிரிட்டிஷ் அரசாங்கமும், நானும் விரும்புகிறோம். எனினும் சட்ட சபையின் இந்தக் கூட்டத்திலேயே அப்பிரச்னைக்கு ஒரு முடிவு ஏற்படாவிடில், கிளர்ச்சியைத் தவிர்ப்பது தற்போதுள்ள நிலையில் அசாத்தியமாகும் என்றே அஞ்சுகிறேன்.

மற்றொரு புறம், குறிப்பாக சட்டசபையில் எல்லோரும் களைப்புற்றிருக்கும் இறுதிக் கட்டத்தில் உங்களுடைய சங்கடமான நிலையை உணராமல் இருப்பது அற்பத்தனமாகும். பல கடினமான பிரச்னைகளை நீங்கள் தீர்க்க வேண்டியிருக்கிறது. நான் கூறிய மாற்று யோசனையை ஒப்புக்கொள்வதில் இடையூறுகள் இருப்பதாக உங்களுடைய சட்ட ஆலோசகர்கள் கூறுவதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். நீங்கள் மற்றும் பல சங்கடமான பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இருந்தாலும், என் தேச மக்களுக்கு முட்டுக்கட்டையாக உள்ள தடைகளை அகற்றி, வரப்போகும் முடிசூட்டு விழாக் கொண்டாட்டங்களில் அவர்களும் தங்களுடைய பணிவான பங்கை எடுத்துக் கொள்ள நீங்கள் சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென நான் உங்களைக் கேட்டுக் கொள்வது அதிகமாகுமா?

இந்தக் கடிதம் முற்றிலும் சொந்த முறையில் எழுதப்பட்டதாகும். இதிலுள்ள விஷயங்கள் நமக்குள் நடந்த சம்பாஷணையிலிருந்தே எழுந்துள்ளன. அச் சம்பாஷணையின் ஒரு பகுதி அந்தரங்கமானதாக இருக்க வேண்டுமென நீங்கள் விரும்புவதால், உங்களுடைய அனுமதி பெறாமல் இதை நான் வெளியிட மாட்டேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,

**மோ. க. காந்தி**

பின் குறிப்பு: ஸ்ரீமதி ஸோதாவின் அப்பீல் புளூம்பாண்டீனில் சனிக்கிழமையன்று விசாரணைக்கு வருகிறது. அந்த அப்பீல் தோல்வியுற்றால் அவரைக் கைது செய்ய வேண்டாமென இப்போதே நீங்கள் அட்டர்னி ஜெனரலுக்கு ஏன் கட்டளையிடக் கூடாது?

# பின் சேர்க்கைப் பகுதி

## 1

## காலனி மந்திரிக்கு விண்ணப்பம்

நேட்டால் இந்தியர்களின் வாக்குரிமை சம்பந்தமாக தாம் மிகுந்த சிரமம் எடுத்துக்கொண்டு இரண்டு வார காலத்திற்குள் விண்ணப்பத்தில் 10,000 கையெழுத்துக்கள் வாங்கியதாக காந்திஜி சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். நேட்டால் காலனியில் வாழும் இந்தியர்கள் கையெழுத்திட்டு பிரிட்டிஷ் காலனி மந்திரி லார்டு ரிப்பனுக்கு 1894 ஜூலை 17-ம் தேதி அனுப்பிய அந்த விண்ணப்பத்தின் சாரம் பின்வருமாறு:

இந்த விண்ணப்பத்தில் கையெழுத்திட்டுள்ள இந்தியர்கள் பிரிட்டிஷ் பிரஜைகளாவர். இவர்கள் நேட்டால் காலனியிலுள்ள பல்வேறு ஜில்லாக்களிலும் வசித்து வருகிறார்கள்.

இந்த விணணப்பதாரர்களில் பலர் வர்த்தகர்களாக இங்கே வந்து ஸ்தாபித்தவர்களாவர். மற்றும் பலர் ஒப்பந்தத் தொழிலாளர்களாக வந்து ஒப்பந்த காலம் முடிந்த பின் சென்ற முப்பது வருடங்களுக்கு மேலாக சுதந்திரமான தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். சிலர் ஒப்பந்தத்தின் கீழ் வந்துள்ள தொழிலாளர்களாவர். வேறு சிலர் காலனியிலேயே பிறந்து வளர்ந்து கல்வி கற்றவர்கள். அவர்களில் வக்கீல்கள், குமாஸ்தாக்கள், கம்பவுண்டர்கள், அச்சுக்கோர்ப்போர், புகைப்படம் எடுப்போர், பள்ளிக்கூட ஆசிரியர்கள் முதலிய பல பிரிவினரும் இருக்கின்றனர். விண்ணப்பதாரர்களில் சிலருக்கு காலனியில் ஏராளமான சொத்துக்கள் இருக்கின்றன. அவர்களுக்கு சட்டசபை அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் வாக்குரிமையும் உண்டு. வாக்குரிமை இருந்தும், வாக்காளர் ஜாபிதாவில் ஏதோ காரணங்களால் தங்களுடைய பெயர்கள் இடம் பெறுமாறு செய்ய முடியாதவர்களும் இருக்கிறார்கள்.

வாக்குரிமைச் சட்டத் திருத்த மசோதாவை யொட்டியே நாங்கள் உங்களிடம் இந்த விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறோம்.

சட்டசபையின் சென்ற கூட்டத்தில் அம்மசோதா, காலனி பிரதம மந்திரி சர் ஜான் ராபின்ஸனால் கொண்டுவரப்பட்டது. அது மூன்ருவது முறையாக நிறைவேறி கவர்னரின் அங்கீகாரத்தையும் பெற்றுவிட்டது. அதற்கு இனிமேல்தான் மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் மன்னரின் அங்கீகாரம் கிடைக்கவேண்டும்.

காலனியில் ஸ்தாபித்துள்ள ஆசியாக்காரர்கள் எவருக்கும் பார்லிமெண்டு தேர்தல்களில் வாக்குரிமை அளிக்கக்கூடாது என்பதே அந்த மசோதாவின் நோக்கமாகும். எனினும் வாக்காளர்கள் ஜாபிதாவில் ஏற்கனவே தங்களுடைய பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருப்பவர்களை அம் மசோதா பாதிக்காது.

மசோதா இரண்டாம் முறையாக நிறைவேறிய பின், அதை அதிகாரிகள் புனராலோசனை செய்வதற்கான முயற்சிகளையெல்லாம் நாங்கள் எடுத்துக்கொண்டோம். ஆனால் எங்களுடைய முயற்சிகள் வெற்றிபெறவில்லை.

அம் மசோதாவின் முன்னுரையிலும், மசோதாவைப்பற்றி விவாதம் நடந்தபோதும் ஆசியா சமூகத்தினர் வாக்குரிமையை ஒரு காலத்திலும் உபயோகித்ததில்லை என்று கூறப்பட்டுள்ளது. வாக்குரிமையை உபயோகிக்க ஆசியாக்காரர்கள் தகுதியற்றவர்கள் என்றும், இந்தியர்களுக்கு வாக்குரிமை அளிக்காததற்கு அவ்விரண்டும்தான் முக்கிய காரணங்கள் என்றும் விவாதத்தின் போது கூறப்பட்டது.

மசோதாவைப்பற்றி மூன்ருவது முறையாக விவாதம் நடந்தபோது, முதலில் குறிப்பிட்டதுபோலன்றி உண்மை பகிரங்கமாகப் பிரகடனம் செய்யப்பட்டது. அதாவது இந்தியர்கள் வாக்குரிமை அளிக்கப்படாததற்கு நியாயமான, தார்மிகமான காரணங்கள் எதுவும் இல்லை என்றும், முற்றிலும் அரசியல் பிரச்னையே காரணம் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. இந்தியர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டால், அவர்களுடைய வாக்குகள் ஐரோப்பியர்களின் வாக்குகளைப் பலனற்றவையாகச் செய்துவிடும் என்றும், பின்னர் ஐரோப்பியர்களின் அரசாங்கத்திற்குப் பதிலாக ஆசியாக்காரர்களின் அரசாங்கம் ஏற்பட்டுவிடும் என்றும் பகிரங்கமாகக் கூறினர்கள்.

அத்தகைய பீதிக்குச் சிறிதும் ஆதாரம் இல்லை என்பதை நாங்கள் மிகுந்த மரியாதையுடன் கூறத் துணிகிறோம். இப்போது கூட, ஐரோப்பிய வாக்காளர்களின் தொகையைக் காட்டிலும் இந்திய வாக்காளர்களின் தொகை மிகமிகக் குறைவாகும். ஒப்பந்தத்தின் மீது வரும் இந்தியர்களுக்கு, ஒப்பந்த காலம் முடியும் வரையிலும், அதற்குப் பின் பல ஆண்டுகள் வரையிலும்கூட வாக்குரிமை பெறுவதற்குத் தேவையான சொத்து அந்தஸ்து இருப்பது முடியாத காரியம். தங்கள் சொந்தச் செலவின்மீது இங்கு வரும் இந்தியர்கள் காலனியில்

நீடித்து இருப்பதில்லை என்பது எல்லோரும் அறிந்த உண்மையாகும். சில வருடங்களுக்குப் பிறகு அவர்கள் தாய் நாட்டிற்குத் திரும்பிச் சென்றுவிடுகிறார்கள். தவிர ஐரோப்பியர்களைப்போல் இந்தியர்கள் காலனியின் அரசியல் விவகாரங்களில் அவ்வளவு தீவிரமாக அக்கறை எடுத்துக் கொள்வதில்லை. எனவே இன்னும் பல தலைமுறைகள் வரையில் இந்தியர்கள் நேட்டால் பார்லிமெண்டில் பிரவேசிப்பது சாத்தியம் என்ற நம்பிக்கைக்குச் சிறிதும் இடமில்லை.

ஆதலின், மேற்கண்ட மசோதா முற்றிலும் பிற்போக்கானது, அநீதியானது.

தற்போது வாக்காளர்களின் ஜாபிதாவில் உள்ள இந்தியர்களின் பெயர்கள் நீடித்து இருந்துவர மசோதா அனுமதிக்கின்றது. இதிலிருந்து, வாக்குரிமை சம்பந்தமான பொறுப்பை வகிக்க இந்தியர்களுக்குத் திறமை உண்டு என்பதை ஒப்புக் கொள்கிறார்கள் என்பது வெளியாகிறது.

எனினும் இப்போது வாக்காளர் ஜாபிதாவில் எந்த இந்தியர்களின் பெயர்கள் இருக்கின்றனவோ அந்த இந்தியர்களின் குழந்தைகளுக்கு, அவர்கள் எவ்வளவு படித்திருந்தாலும். வாக்குரிமை பெறுவதற்கான அந்தஸ்து இருந்தாலும், அவர்கள் ஒரு காலத்திலும் வாக்குரிமை பெற முடியாது. அதாவது அந்த மசோதாவிற்கிணங்க அவர்களுடைய குழந்தைகள், சமூகத்தில் யாதொரு அந்தஸ்தும் இல்லாத, வாழ்க்கையில் எவ்வித ஆசையும் இல்லாத பறையர்களாகவே இருக்கவேண்டும். ஒரு மனிதனுக்கு சமூகத்தில் செல்வத்தினால் யாதொரு அந்தஸ்தும் ஏற்படாவிடில், அந்தச் செல்வம் கூட பயனற்றதாகிவிடுகிறது. தென்னாப்பிரிக்காவிலுள்ள சுதேசிகளுடன் இந்தியர்களை ஒப்பிட்டுக் கூற முற்படுவது வெட்கக்கேடும், வருந்தத்தக்கதுமாகும்.

இந்த மசோதா சட்டமாகிவிட்டால், இந்த விண்ணப்பத்தில் கையெழுத்திட்டுள்ளவர்களில் பலர் உட்பட கல்வியறிவுள்ள நூற்றுக்கணக்கான இந்தியர்கள் பார்லிமெண்டு தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமையை இழந்துவிடுவார்கள். பிரிட்டிஷ் பிரஜைகளின் ஒரு பிரிவினருக்கு அத்தகைய அநீதியிழைக்கும் ஒரு மசோதாவை அனுமதிக்க பிரிட்டிஷ் சர்க்காருக்கு நீங்கள் ஆலோசனை கூற மாட்டீர்கள் என்றே நம்புகிறோம்.

நேட்டாலிலுள்ள 26 பள்ளிக்கூடங்களில் 2,589 இந்தியச் சிறுவர்கள் வாசிப்பதாக நேட்டால் சர்க்கார் கெஜட்டில் ஓர் அறிக்கை வெளியாகியிருக்கிறது. அந்தச் சிறுவர்களில் பலரும் காலனியிலேயே பிறந்தவர்கள். அவர்கள் முற்றிலும் ஐரோப்பியர்களுடனேயே தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள். கல்வித் திறனில் அவர்கள் எவ்விதத்திலும் ஐரோப்பியர்களுக்குக் குறைந்தவர்களல்ல. இந்தியாவிலும் இங்கிலாந்திலும் நடக்கும் போட்டிப் பரீட்சைகளில் தாங்கள்

ஐரோப்பியர்களுக்குக் குறைந்தவர்கள் அல்ல என்பதை ஐயந் திரிபுக்கு இடமின்றி இந்தியர்கள் நிரூபித்திருக்கிறார்கள்...

நேட்டால் பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் சிறுவர்கள் வயது வந்தபின் அவர்களுடைய பிறப்புரிமையைக் கோருவது தவறாகாது. நாகரிகமுள்ள ஒரு தேசத்தைச் சேர்ந்த எவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட வேண்டும் அல்லவா? எனவே பார்லிமெண்டு முறைப்படி ஆட்சி நடைபெறும் ஒரு நாட்டின் பிரஜைகளான இந்தச் சிறுவர்கள் மிகவும் சாதாரண உரிமை கூடப் பெற முடியாத அவமதிப்பிற்கு ஆளாகும்படி நீங்கள் விடமாட்டீர்களென நம்புகிறோம்.

இந்தக் காலனியில் வந்து ஸ்தாபித்து குமாஸ்தாக்களாகவும், உபாத்தியாயர்களாகவும், மொழி பெயர்ப்பாளர்களாகவும் இருக்கும் பலருக்கும் வாக்குரிமை மறுக்கப்படுவது மிகவும் கொடுமையாகும்.

இந்தியாவில் மிகவும் உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கும் ஒருவர் இங்கு வந்து ஸ்தாபித்தால் கூட, சட்டப்படி அவருக்கு வோட்டு அளிக்கப்படமாட்டாது. உயர்பதவி வகிக்கும் சில ஐரோப்பியப் பிரமுகர்கள் கூட மேற்கண்ட மசோதா அநீதியானது என்று பகிரங்கமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இந்தக் காலனியில் ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்குமிடையே பெரும் பிளவு இருப்பது எல்லோரும் அறிந்த உண்மையாகும். ஐரோப்பியர்கள் இந்தியர்களை வெறுக்கிறார்கள், ஒதுக்கி வைக்கிறார்கள், சிறிதும் காரணமின்றி இந்தியர்களை தொல்லைப் படுத்துகிறார்கள். அவர்களுடைய அத்தகைய துவேஷ உணர்ச்சியை வாக்குரிமை மசோதா அதிகமாக்கியிருக்கிறது. பத்திரிகை அறிக்கைகளிலிருந்தும், சட்டசபைகளில் நிகழ்ந்த விவாதங்களிலிருந்தும் இந்த உண்மையை நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

இந்தியர்களுக்கு வாக்குரிமை அளிக்காததால் சட்டசபை அங்கத்தினர்களான ஐரோப்பியர்களுக்கு அதிகப் பொறுப்பு ஏற்படும் என்றும், அதன் பலனாக, இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதால் ஏற்படும் பாதுகாப்பைக் காட்டிலும் அதிகமான பாதுகாப்பு அளிக்கப்படும் என்றும், மசோதா இரண்டாவது முறையாக விவாதத்திற்கு வந்தபோது கூறப்பட்டது. ஆனால் மேற்கண்ட வாதம், இந்தியர்கள் இதுவரை பெற்றுள்ள அனுபவத்திற்கு நேர்மாறாக இருக்கிறது என்பதை நாங்கள் பணிவுடன் கூறுகிறோம்.

முனிசிபல் தேர்தல்களில் கூட இந்தியர்கள் வாக்களிக்க அனுமதிக்கக் கூடாது என்று சில அங்கத்தினர்கள் கருதினர். வாக்குரிமை மசோதா சட்டமாகி விடுமாயின், நாளடைவில் இந்தியர்கள் முனிசிபல் வாக்குரிமையையும் இழக்க நேரும்.

ஒப்பந்தத்தின்மீது வரும் இந்தியர்கள் இங்கேயே ஸ்தாபிக்கத் தீர்மானிப்பார்களாயின், அவர்களிடமிருந்து குடியிருப்பு வரி வசூலிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். காலனியில் இருப்பதால் அவர்களுக்கு யாதொரு பலனும் ஏற்பட முடியாதவாறு அந்த வரி மிகவும் அதிகமாக இருக்க வேண்டுமென்று கூறப்படுகிறது. இந்தியர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படாவிட்டால், அவர்களுடைய நலன்கள் எவ்வாறு பாதுகாக்கப்படும் என்பதற்கு இது மற்ெருரு உதாரணமாகும்!

இந்தியர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படாததால், சிவில் சர்விஸ் உத்தியோகங்களையும் அவர்கள் வகிக்கக்கூடாதென்று தடை விதிக்க வேண்டுமென சில அங்கத்தினர்கள் கூறினர். அத்தகைய ஒரு திருத்தத்திற்குச் சாதகமாகவும் பாதகமாகவும் சரி சமானமான வோட்டுகள் கிடைத்தன. கடைசியாக திருத்தம் சபாநாயகரின் அதிகப்படியான ஒரே வோட்டினல் நிராகரிக்கப்பட்டது. இவ்விஷயத்தில் இந்தியர்களிடம் சர்க்கார் அநுதாபத்துடன் நடந்து கொண்டனர் என்பதை நாங்கள் உணர்ந்துள்ளோம். எனினும் காற்று எந்தத் திசையில் அடித்துவருகிறது என்பதற்கு இது மற்ெருரு உதாரணமாகும்.

ஆனல் இத்தகைய நிறவேற்றுமையோ அல்லது இன வேற்றுமையோ கேப் காலனியில் இல்லையென நாங்கள் அறிகிரேம்.

இந்த மசோதா சட்டமாகிவிட்டால், தென்னுப்பிரிக்காவைச் சேர்ந்த மற்ற இடங்களிலுள்ள இந்தியர்களின் நலன்களுக்குக் கூட பேரபாயம் ஏற்படும். திரான்ஸ்வாலிலுள்ள இந்தியர்கள் ஏற்கனவேயே வெறுக்கப்பட்டுவருகிருர்கள். பிரிட்டிஷ் காலனியில் இருக்கும் பிரிட்டிஷ் பிரஜைகளான இந்தியர்கள் இவ்விதம் நடத்தப்படுவார்களாயின், சுயமரியாதையுள்ள இந்தியர்கள் காலனியில் வசிப்பது அசாத்தியமாகிவிடும்.

எனவே மேலே குறிப்பிட்டுள்ள உண்மைகளும், வாதங்களும், வாக்குரிமைச் சட்டத் திருத்த மசோதா எவ்வளவு அநீதியானது என்பதை உங்களுக்குச் சந்தேகத்துக்கு இடமின்றி எடுத்துக்காட்டுமென நம்புகிரேம். ஆகையால் பிரிட்டிஷ் பிரஜைகளான ஒரு பிரிவினர் மற்ெருரு பிரிவினரின் உரிமைகளில் காரணமின்றித் தலையிடுவதை நீங்கள் அனுமதிக்கமாட்டீர்கள் என்றும் நம்புகிரேம்.

## 2

*1897*-ல் லண்டனில் நடந்த காலனி பிரதமர்களின் மகாநாட்டில் அப்போது காலனி மந்திரியாக இருந்த ஸ்ரீ சேம்பர்லேன் நிகழ்த்திய பிரசங்கம், நேட்டால் குடியேற்றத் தடைச் சட்டத்

திற்கு முற்றிலும் ஆதரவளிப்பதாக இருந்தது. ஆசியாக்காரர் களுக்கு எதிராகக் கொண்டுவரப்படும் மசோதாக்களையொட்டி பிரிட்டிஷ் சர்க்காரின் பொதுவான கொள்கையையும் அப் பிர சங்கம் சுட்டிக் காட்டுவதாக இருந்தது. வேற்றுமை பாராட்டும் அத்தகைய சட்டங்களைக் கண்டித்து அப்போது காந்திஜி, இங்கி லாந்திலும் இந்தியாவிலும் செல்வாக்குடன் விளங்கிய பல பிரமுகர் களுக்கும் எழுதிய கடிதம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

செப்டம்பர் 18, 1897

ஐயா,

புனாவிலும், இந்தியாவின் மற்றப் பாகங்களிலும் ஏற்பட் டுள்ள நெருக்கடியையும்,* அந்த நெருக்கடி இந்திய விவகாரங் களில் அக்கறையுள்ள பிரமுகர்களின் கவனத்தைப் பெரிதும் ஈர்த் திருக்கிறது என்பதையும் நாங்கள் அறிவோம். நேட்டாலிலுள்ள இந்தியர்களின் நிலை இப்போது ஒரு மோசமான கட்டத்தை அடைந்திருக்கிறது. அவ்விதமிராவிடில், உங்களுடைய நேரத் திலும் கவனத்திலும் குறுக்கிட நாங்கள் முற்பட்டிருக்க மாட்டோம்.

வைர ஜூபிலி விழாவையொட்டி நடந்த காலனி பிரதமர்களின் மகாநாட்டில் ஸ்ரீ சேம்பர்லேன் நிகழ்த்திய பிரசங்கம் இவ்வாரம் வெளியாகியுள்ள நேட்டால் சர்க்கார் கெஜட்டில் வெளியாகியிருக் கிறது. இந்தக் காலனியிலும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த மற்ற இடங்களிலும் இந்தியர்களின் குடியேற்றத்தைப் பற்றி அவர் பேசியிருக்கிறார்.

இந்தியர்களின் நாகரிகத்தையும், பிரிட்டிஷ் சர்க்காரிடம் இந் தியர்களுக்குள்ள விசுவாசத்தையும் ஸ்ரீ சேம்பர்லேன் மிகவும் போற்றிப் புகழ்ந்துள்ளார். அப்படியிருந்தும் அவர் இந்தியர்களை அடியோடு கைவிட்டு விட்டார்; பல்வேறு காலனிகளிலும் ஆசியாக் காரர்களுக்கு விரோதமாக எழுந்துள்ள கூக்குரலுக்கு அடி பணிந்து விட்டார். இனவேற்றுமையோ அல்லது நிறவேற்று மையோ பாராட்டாமல் இருப்பதே பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சம்பிரதாயம் என்று கூறியுள்ள அவர், அதே மூச்சில், இன, நிற வேற்றுமையை அடிப்படையாகக் கொண்ட காலனிகளின் நிலையை யும், நேட்டால் குடியேற்றத் தடைச் சட்டத்தையும் தங்குதடை யின்றி ஆதரித்துள்ளார்!

இந்தியர்களின் குடியேற்றத்தைத் தடுப்பது மாத்திரமே நேட் டால் சட்டத்தின் நோக்கம் என்ற உண்மையை ஸ்ரீ சேம்பர்லேன் அறியாமல் இருக்க முடியாது. நேட்டால் காலனி பிரதமரான ஸ்ரீ எஸ்கோம்ப் நேட்டால் குடியேற்றத் தடை மசோதாவைச் சட்ட சபையில் கொண்டு வந்து பேசியபோது, நேரடியான முறை

* அப்போது இந்தியாவில் ஏற்பட்ட பஞ்சத்தையும், பிளேக் நோயின் கொடுமையையும் காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

களால் இந்தியர்களின் குடியேற்றத்தைத் தடுக்க முடியாதாதலின், மறைமுகமான முறைகளைத் தாம் கைக்கொள்ள நேர்ந்ததென்று குறிப்பிட்டார்.

அந்த மசோதா பிரிட்டிஷாரின் கௌரவத்துக்கு உகந்ததல்ல என்றும், நேர்மையற்றது என்றும் ஏகமனதாக அபிப்பிராயம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அது உண்மையில் முதுகில் குத்துவதே யாகும். அத்தகைய ஓர் அநீதியான மசோதாவுக்கு ஸ்ரீ சேம்பர் லேன் தமது அங்கீகார முத்திரையையும் வைத்துவிட்டது, இந்தி யர்களுக்கு மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது. எங் களுடைய நிலைமை என்ன, நாங்கள் என்ன செய்வது என்பதே இப்போது எங்களுக்குத் தெரியவில்லை. அந்தச் சட்டம் ஏற் கனவேயே இந்தியர்களுக்குத் துன்பம் விளைவிக்கத் தொடங்கி விட்டது. நேட்டாலில் அறைகள் வைத்துக் கொண்டுள்ள இந்தி யர்கள் சில நாட்களுக்கு முன் தங்களுடைய பண்டங்களை விற்பதற் காக திரான்ஸ்வாலுக்குச் சென்றார்கள். ஆனால் அவர்கள் மீண்டும் நேட்டாலுக்குத் திரும்பிவந்த சில நாட்களுக்குப் பிறகு கைது செய்யப்பட்டு ஆறு நாட்கள் வரையில் சிறையில் இருக்க நேர்ந்தது. அவர்கள் மீது தொடரப்பட்ட வழக்கு இன்னும் சில நாட்கள் வரையில் தொடர்ந்து நடந்திருந்தால், அவர்களுக்கு நூற்றுக்கணக்கான பவுன் செலவாகியிருக்கும். ஆறு நாட்கள் வரையில் நடந்த வழக்கில் கூட அவர்கள் பெரும் தொகை செலவு செய்ய நேர்ந்தது. இனியும் அத்தகைய வழக்குகள் நடந்தே தீரும்.

அசுத்தமானவர், ஒழுக்கமற்றவர், கையில் காசு இல்லாத ஏழை ஆகியோரைக் காலனியில் குடியேற அனுமதிப்பது விரும்பத்தக்கதல்ல என்றும், மற்றும் வேறு நியாயமான ஆட்சேபணை காரணமாக ஒருவர் குடியேற்றத்திற்குத் தடை விதிக்கலாம் என்றும் ஸ்ரீ சேம்பர்லேன் கூறுகிறார். இந்தியர் கள் ஒழுக்கமற்றவர்களோ அல்லது அசுத்தமானவர்களோ அல்ல என்று திரான்ஸ்வால் சர்க்காருக்கு அனுப்பிய அறிக்கையில் ஸ்ரீ சேம்பர்லேனே ஒப்புக் கொண்டுள்ளார். அவர்கள் கையில் எதுவும் இல்லாத ஏழைகளுமல்ல. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் இந்தியர் பிரச்னைகளைப் பற்றி விசாரிப்பதற்காக நியமிக்கப் பட்ட கமிஷனர்கள், இந்தியர்கள் இங்கே இருப்பதால் காலனிக்கு மிகுந்த நன்மை ஏற்பட்டிருக்கிறது என்று தங்கள் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளனர்.

ஏற்கனவே காலனியில் ஸ்தாபிக்கப்பட்டவராக இருந்தா லொழிய, ஐரோப்பிய மொழிகளில் ஏதாவதொன்றைப் படிக்கவோ அல்லது எழுதவோ முடியாத இந்தியர் எவரும் நேட்டாலுக் குள் பிரவேசிக்கக் கூடாதென நேட்டால் சட்டம் தடை விதித் திருக்கிறது. ஒருவர் மற்ற மொழிகளில் எவ்வளவு நிபுணராக இருந்தாலும், அவருக்கு ஐரோப்பிய மொழி ஏதாவது தெரிந்

திருந்தாலொழிய நேட்டாலுக்குள் பிரவேசிக்க அவருக்கு உரிமை இல்லை!

குடியேற்றத் தடைச் சட்டம் நீடித்து அமுலில் இருக்கும்படி நேருமாயின், அச் சட்டத்தை நிராகரிக்க ஸ்ரீ சேம்பர்லேன் மறுத்துவிடுவாராயின், குடியேறுவதற்கு அவசியமான மற்றத் தகுதிகள் உள்ளவர்களுக்குத் தங்களுடைய சொந்த மொழியைப் படிக்கவும் எழுதவும் தெரிந்தால் போதுமென்றுவது சட்டத்தைத் திருத்தவேண்டும் என்று நாங்கள் கேட்டுக் கொள்கிறோம். இந்தக் கோரிக்கையாவது அங்கீகரிக்கப்படுமென்றே நிச்சயமாக நம்புகிறோம். வேறு எதுவும் செய்யத் தங்களால் இயலாவிட்டாலும், மேலே குறிப்பிட்டுள்ளவாறு சட்டத்தை மாற்ற நீங்கள் உங்களுடைய செல்வாக்கை உபயோகிக்கும்படி நாங்கள் கேட்டுக் கொள்கிறோம்.

நேர்மையற்ற முறைகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு சட்டத்தை காலனி மந்திரி அனுமதிக்க முற்பட்டிருப்பது எங்களுடைய உள்ளத்தைப் பிளக்கின்றது. எவ்விதமான கட்டுப்பாடுமின்றி இங்கு இந்தியர்கள் குடியேறுவதைக் கடுமையாக எதிர்க்கும் ஐரோப்பியர்கள் கூட, இந்தியர்களின் குடியேற்றத்தைத் தடுக்கும் மேற்கண்ட முறைகள் நேர்மையற்றவை என்பதை ஒப்புக்கொள்கின்றனர்.

இந்த அநீதியைத் தடுக்க நாங்கள் சக்தியற்றவர்களாக இருப்பதால், இவ் விஷயத்தை உங்களிடம் ஒப்புவிக்கிறோம். நீங்கள் மிகுந்த அக்கறையெடுத்துக் கொண்டு எங்கள் சார்பில் தகுந்த முறைகளைக் கைக் கொள்ள முன்வருவீர்கள் என்பதே எங்களுடைய நம்பிக்கை. எங்களுடைய கோரிக்கை நியாயமானதால், நீங்கள் அவ்விதம் செய்வீர்களென்றே எண்ணுகிறோம்.

## 3

# இந்தியாவின் முது பெரும் கிழவர்

ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் ஜெயந்தி வைபவத்தையொட்டி இந்தியாவிலிருந்து வந்துள்ள பத்திரிகைகளில் மிகவும் நீண்ட செய்திகள் வெளியாகியுள்ளன. பிரிட்டனுக்கு ஸ்ரீ கிளாட்ஸ்டன் எப்படியோ அப்படியே இந்தியாவுக்கு தாதாபாய் நௌரோஜி அருந்தவப் புதல்வராவார். ஸ்ரீ தாதாபாய்க்கு 79-வது வயது பிறக்கின்றது. எனவே அந்த வைபவம் இந்தியா முழுவதும் தகுந்த முறையில் கொண்டாடப்பட்டிருக்கிறது. அந்த முது பெரும் கிழவர் இன்னும் பல ஆண்டுகள் இந்த உலகில் இருந்துவர அருள் புரியுமாறு கோடிக்கணக்கான மக்கள் இறைவனைப் பிரார்த்தனை செய்திருக்கிறார்கள். அவர்களுடைய பிரார்த்தனையில் நாமும் கலந்து கொள்கிறோம்.

ஹிந்துகுஷ்ஷிலிருந்து கன்னியாகுமரி வரையிலும், கராச்சியிலிருந்து கல்கத்தா வரையிலும் ஸ்ரீ தாதாபாய் எல்லோருடைய அன்பையும் பெற்றிருக்கிறார். இந்தியாவில் ஜீவதசையிலுள்ள வேறு எவரும் அவ்விதம் எல்லோருடைய அன்பையும் பெற்றிருக்கவில்லை. தாம் பிறந்த தாய் நாட்டிற்குத் தொண்டுபுரிவதற்காக அவர் தமது வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணம் செய்துள்ளார். அவர் ஒரு பார்சியாயினும், சாதி மத வேற்றுமையின்றி, ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் முதலிய பிற மதத்தினரும் அவருக்கு வணக்கம் செலுத்துகிறார்கள். இந்தியாவின் நலனுக்காக அவர் சுக போக வாழ்க்கையைத் துறந்து, நீண்ட கால அஞ்ஞாதவாசத்தையும் ஏற்றுக் கொண்டார். இந்தியாவின் நலனுக்காக அவர் தமது செல்வத்தையும் அர்ப்பணம் செய்துள்ளார். அவரது தேசபக்தி மிகமிகத் தூய்மையானது, தாய் நாட்டிற்குத் தமது கடமையைச் செய்ய வேண்டுமென்ற உணர்ச்சியிலிருந்து எழுந்தது. இதெல்லாம் மாத்திரமல்ல, ஸ்ரீ தாதாபாயின் அப்பழுக்கற்ற ஒழுக்கமும், வருங்கால சந்ததிகளுக்கு உதாரணமாகத் திகழ்கிறது. இதைத் தவிர, தீவிரமான மதப்பற்றும், பக்தியும் அவரது அரசியல்களுக்கெல்லாம் பின்னணியாக இருந்துவருகின்றன. தாதாபாயைப் போன்ற ஒருவரை ஈன்றெடுக்கும் ஒரு நாடு நாளடைவில் மகோன்னதமான நிலையை அடையுமென நம்பலாம்.

பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு பிரிட்டிஷ் தொகுதியொன்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் கௌரவத்தைப் பெற்ற முதல் இந்தியர் அவர்தான். பார்லிமெண்டு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின் அவர் இந்தியாவுக்கு வந்த போது அவரை மக்கள் மகத்தான உற்சாகத்துடன் வரவேற்றனர். மாபெரும் கஷ்டங்களுக்கிடையே அவரது தியாகமும், தேச பக்தியும், பொறுமையும், மக்களிடத்தில் அவருக்குள்ள அன்பும் எல்லோருக்கும் மிகச் சிறந்த ஒரு படிப்பினையாக அமைந்திருக்கின்றன.

அரசியல் போராட்டத்தில் வெற்றி ஒரே நாளில் கிடைத்து விடாது. அப்போராட்டத்தில் மக்கள் அடிக்கடி ஏமாற்றம் அடையும்படியும் நேரும். தென்னாப்பிரிக்காவில் உள்ள நாம் அரசியல் போராட்டத்தில் ஏமாற்றம் அடையும்படி நேர்ந்திருக்கிறது. எனினும் சென்ற நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக ஸ்ரீ தாதாபாய் போராடிவருகிறார் என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்வோமாயின், நமக்கு ஏற்பட்ட ஏமாற்றம் பெரிதல்ல என்பதையும், நமது போராட்டம் இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது என்பதையும், நம்மைச் சூழ்ந்துள்ள மேகங்களுக்கிடையே மின்னொளி தென்படுகிறது என்பதையும் எண்ணி ஆறுதல் அடைவோம். ஸ்ரீ தாதாபாய்க்கு எத்தனையோ அலுவல்கள் இருந்தும் கூட, அவர் எப்போதும் தென்னாப்பிரிக்கா இந்தியர் பிரச்னையையொட்டியும் கவனம் செலுத்திவந்துள்ளார். நமது கோரிக்கைகளை உறுதியுடனும் உற்சாகத்துடனும் ஆதரிப்பவர்களில் அவரும் ஒருவர். அவர் இன்னும் நீண்ட காலம் வரையில் ஆரோக்கியத்

துடனும், மன பலத்துடனும் விளங்கிவர வேண்டும் என்பதும், அவரது நாட்டிற்குத் தொண்டு புரிந்து வரவேண்டும் என்பதுமே நமது மனப்பூர்வமான பிரார்த்தனையாகும்.

'இந்தியன் ஒபினியன்', *19—11—1903*

* * * *

தபாலில் வந்துள்ள 'இந்தியா'வின் இதழ்களில் வெளியாகியிருக்கும் செய்திகள், ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி பொது அலுவல்களில் இடைவிடாது ஈடுபட்டுவருவதையே காட்டுகின்றன. கோடிக்கணக்கான தமது தேச மக்களின் நலனுக்கு இன்றியமையாத எந்த விஷயத்தையும் அவர் அலட்சியமாகக் கருதுவதில்லை. அவருக்கும் ஸ்ரீ லிட்டில்டனுக்கும் நடந்துள்ள கடிதப் போக்குவரத்து 'இந்தியா'வில் வெளியாகியிருக்கிறது. திரான்ஸ்வாலில் உள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் நிலைமை பற்றியே அவர்களுக்குள் கடிதப் போக்குவரத்து நடந்திருக்கிறது. ஸ்ரீ தாதாபாயைப் போல் வயதான எவரும் பொதுவாழ்க்கையிலிருந்து விலகி ஓய்வு எடுத்துக் கொள்வது நியாயமேயாகும்.

ஆனால் ஸ்ரீ தாதாபாய் அவ்விதம் ஓய்வு எடுத்துக் கொள்ளாததுடன், பல இளைஞர்களும் பிரமிக்குமாறு பொது அலுவல்களில் தீவிரமாக ஈடுபட்டுவருகிறார். தமது தேசமக்களுக்குத் தாம் செய்ய வேண்டிய கடமை என்று அவர் கருதுவதைச் செய்வதே, அவருக்கு மகிழ்ச்சியளிக்கும் விஷயமாகும். ஸ்ரீ நௌரோஜியைப் போல் வாழ்க்கையில் அப்பழுக்கற்ற தூய்மையும், தன்னலமின்மையும், வெகுமதியையோ அல்லது புகழுரையையோ சிறிதும் எதிர்பாராமல் நீடித்த காலம் பொதுப்பணியில் ஈடுபடும் தன்மையுமுள்ள மற்றொருவரை, இந்தியாவில் மாத்திரமல்ல, உலகத்திலுள்ள எந்தப் பகுதியிலும் காண்பது அரிதாகும்.

'இந்தியன் ஒபினியன்', *13-8-1904*

* * *

சில தினங்களுக்கு முன் ஆம்ஸ்டர்டாமில் (நெதர்லண்ட்ஸ்) நடந்த சர்வதேச சோஷலிஸ்ட் காங்கிரசில் ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி எவ்வளவு உற்சாகத்துடன் வரவேற்கப்பட்டார் என்பதை விவரித்து 'இந்தியா' பத்திரிகையின் விசேஷ நிருபர் பின்வருமாறு எழுதுகிறார் :

"ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி மெதுவாக மேடைக்கு நடந்து வந்தபோது, சோஷலிஸ்ட் காங்கிரஸ் தலைவரான ஹர் வான் காலின் கோரிக்கைக்கு இணங்க எல்லோரும் மௌனமாக எழுந்து நின்று

அவருக்கு (நௌரோஜிக்கு) மரியாதை செய்தனர். பல்வேறு நாடுகளையும் சேர்ந்த பிரதிநிதிகள் அவ்விதம் மனப்பூர்வமாகவும், ஒருமித்தும் அவருக்கு மரியாதை செய்தது விசேஷமாகக் குறிப்பிடத்தக்கதாகும். பின்னர் அவர்கள் யாவரும் கைதட்டி ஆரவாரம் செய்து இந்திய மக்களின் பிரதிநிதியான ஸ்ரீ நௌரோஜியின் வருகைக்காகத் தங்களுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். மறக்க முடியாத அந்தக் காட்சி, பல்வேறு தேசங்களிடையே மாத்திரமல்ல, பல்வேறு கண்டங்களிடையேயும் உள்ள ஒற்றுமையை நிரூபித்தது.''

பூஜ்யரான இந்தியாவின் தந்தை என்று இந்தியர்களால் அன்புடன் அழைக்கப்படும் ஸ்ரீ தாதாபாயிடம் ஐரோப்பிய மக்கள் எவ்வளவு மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிறார்கள் என்பது ஒவ்வொரு இந்தியரும் பெருமைப்படுவதற்குரிய விஷயமாகும். 1825 செப்டம்பர் 4-ம் தேதி பிறந்த ஸ்ரீ தாதாபாயின் 79-வது ஜெயந்தி சென்ற செப்டம்பர் 4-ம் தேதி கொண்டாடப்பட்டது. அவர் இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்திருந்து, தியாகத்திற்கும் தேசத்தொண்டிற்கும் இளம் சந்ததிகளுக்கு முன்னுதாரணமாகத் திகழ்ந்து அவர்களை ஊக்குவிக்கவேண்டும் என்பதே நமது பிரார்த்தனையாகும்.

'இந்தியன் ஒபினியன்', 1-10-1904

* * *

இந்தியாவின் இணையற்ற தேசபக்தரான ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் 82-வது ஜெயந்தி வைபவம் செப்டம்பர் 4-ம் தேதி வருகிறது. தமக்குத் தாமே அஞ்ஞாத வாசத்தை மேற்கொண்டு, இந்தியாவுக்காகச் சோர்வின்றியும் இடைவிடாமலும், 25 வயதுள்ள இளைஞரைப் போல் உற்சாகத்துடனும் உறுதியுடனும் ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி போராடிவரும் காட்சி மிகவும் அற்புதமானது, மகோன்னதமானது. அவரது தொண்டு எவரையும் மெய்சிலிர்க்கச் செய்கிறது. இந்தியாவுக்குத் தொண்டு செய்வதே அவரது உயிர்நாடியாகும்; அதுதான் அவரது மதம்; அதுதான் அவரது ஒரே தொழில். அவரைப் போல் வேறு எவரும் இந்தியாவுக்காக எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்ததில்லை. இந்தியாவினிடம் அவருக்குள்ள ஈடுபாடும், பக்தியுமே தமது வயோதிக நிலையைக் கூட அவர் பொருட்படுத்தாமல் இருப்பதற்குக் காரணமாகும். அவரது தன்னலமற்ற தியாகம் காரணமாக இறைவன் அவருக்கு அத்தகைய பலத்தை அளித்திருக்கிறார் என்றும் சொல்லலாம். தென்னாப்பிரிக்காவிலுள்ள நமக்கு, அவரது வாழ்க்கை ஒரு சிறந்த படிப்பினையாக அமைந்திருக்கிறது. எனவே அவரது வாழ்க்கையைப் பின்பற்றி நாமும் தாய்நாட்டிற்கு இடையறாது தொண்டு செய்வதே அந்த முதுபெரும் கிழவருக்கு நாம் செய்யும் மரியாதையாகும். அவரது தொண்டை நாம் போற்றவேண்டும்; அவரது அடிச் சுவடுகளை நாம் பின்பற்ற வேண்டும்; அவர் காலமான பிறகு கூட அவரது நினைவும் செயல்களும் நமது மனத்தில் இருந்து கொண்டிருக்கும்

என்பதைக் காட்டிலும் அவருக்கு மகிழ்ச்சியளிக்கக்கூடியது வேறு எதுவும் இருக்க முடியாது. இந்தியாவின் முது பெரும் கிழவருக்கு இறைவன் நீண்ட ஆயுளை அளிக்க வேண்டும் என்பதே நமது பிரார்த்தனையாகும்.

'இந்தியன் ஒபினியன்', *1-9-1906*

* * *

தாதாபாய் நௌரோஜியின் ஜெயந்தி வைபவம் செப்டம்பர் 4-ம் தேதி வருகின்றது. இந்தப் புவியில் அவரது இறுதி நாட்கள் நெருங்கிவருகின்றன. எனினும் காலம் செல்லச் செல்ல அந்த முது பெரும் கிழவரின் ஒளி அதிகமாகச் சுடர்விட்டுப் பிரகாசித்துவருகிறது. அவருக்கு லண்டன் ஒரு வனாந்தரப் பிரதேசமேயாகும். அவர் தமது நாட்டிற்காக ஒரு முனிவரைப் போல் அந்த வனாந்தரப் பிரதேசத்தில் வசிக்கலானார். இங்கிலாந்தில் அவரது அலுவலகத்தைப் பார்த்தவர்கள், அதற்கும் ஓர் ஆசிரமத்திற்கும் வேற்றுமை இல்லை என்பதை அறிவார்கள். அதில் இரண்டுபேர் கூட உட்கார முடியாது. அவர் அங்கே உட்கார்ந்துகொண்டு கோடிக்கணக்கான மக்களுடைய துன்பங்களின் சுமையை வகித்துவருகிறார். அவர் வயோதிக தசையை அடைந்துவிட்டாலும், ஓர் இந்திய இளைஞரைப்போல் கடினமாக உழைக்கும் சக்தியுடன் விளங்குகிறார். அவர் நீண்டகாலம் வாழ நாம் பிரார்த்திப்பதுடன், நமக்கும், இந்தப் பத்திரிகையுடன் தொடர்புள்ள எல்லோருக்கும் அவரைப் போன்று தூய உள்ளத்தை அருளும்படி சிருஷ்டி கர்த்தாவையும் பிரார்த்திக்கிறோம். அவரது தேசபக்தியை உதாரணமாகக் கொண்டு நடக்கும்படி நாம் நமது வாசகர்களுக்கு யோசனை கூறுகிறோம். முது பெரும் கிழவரான இந்தத் தாத்தாவின் பெயர் நிலைக்க அதுதான் சரியான வழியாகும். நமக்காகத் தொண்டு செய்ய வேண்டும் என்பதில் தாதாபாய் உறுதியுடன் இருப்பதுபோல், அவரது அடிச்சுவடுகளைப் பின்பற்ற வேண்டும் என்பதில் நாமும் உறுதியுடன் இருக்கவேண்டும். அவரது பிறந்த தினத்தன்று இந்த நாட்டிலுள்ள இந்தியர் சங்கங்கள் யாவும் கூட்டங்கள் கூடி, அவருக்கு வாழ்த்துத் தந்திகள் அனுப்புமென நம்புகிறோம். ஒவ்வொரு வருடமும் தாதாபாய் பிறந்த தினத்தன்று அவரது புகைப்படமொன்றை வெளியிட உத்தேசித்திருக்கிறோம். அதற்கிணங்க அவரது படம் அடுத்த வாரம் வெளியாகும். அதை ஒவ்வொருவரும் வாங்கி, சட்டத்தில் வைத்துக் கண்ணாடி போட்டுப் பாதுகாத்து வரவேண்டுமென யோசனை கூறுகிறோம்.

'இந்தியன் ஒபினியன்' - *31-8-1907*

* * *

இன்றுள்ள இந்தியர்களிலேயே மிகச் சிறந்தவரான ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் பிறந்த தின வைபவத்தை இந்தியா முழுவதும், காலனிகளும் கொண்டாடுகின்றன. அவ்விதம் கொண்டாடும் சகோதரர்களுடன் சேர்ந்து கொள்ளும் வாய்ப்பு நமக்கு மீண்டும் கிடைத்திருக்கிறது. நேற்று அவருக்கு 83 வயது பூர்த்தியாகி 84-வது வயது பிறந்துளது. அவர் தமது தாய் நாட்டிற்காகவும் மக்களுக்காகவுமே தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்துள்ளார்.

வயது முதிர்ந்த அத் தேசபக்தர் இப்போது அமைதியாக ஓய்வு எடுத்துக் கொண்டுவருகிறார். அவ்விதம் ஓய்வு பெற்று வாழ்வதற்கு அவர் முற்றிலும் உரியவராவார். தமது நாட்டு மக்களின் உரிமைகளுக்காகவும் சுதந்திரத்திற்காகவும் ஆயுள் முழுவதும் போராடிவந்துள்ள ஸ்ரீ தாதாபாயை நினைவு கூர்வதன் மூலம், தென்னாப்பிரிக்காவிலும், குறிப்பாக திரான்ஸ்வாலிலும் உள்ள இந்தியர்கள் உரிமைகளுக்காகப் போராடுவதற்கான தைரியத்தை மேற்கொள்ளவேண்டும். எனவே தென்னாப்பிரிக்காவிலுள்ள நாம் அவரது உதாரணத்தைப் பின்பற்றுவதே அவருக்கு நாம் காட்டும் மதிப்பும் மரியாதையுமாகும். நமது உரிமைகளையும் சுதந்திரத்தையும் நாம் பெறும்வரையில் போராட்டத்திலிருந்து நாம் ஒருபோதும் பின்வாங்கக் கூடாது.

'இந்தியன் ஒபினியன்' - *5-9-1908*

* * *

நாளை இந்திய தேசீயத்தின் தந்தையான ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் 86-வது பிறந்த தினமாகும். ஒவ்வொரு வருடமும் நாம், அவரைப் பிரிய வேண்டிய காலத்திற்கு அருகில் வந்து கொண்டிருக்கிறோம். எனவே இந்த இதழின் முதல் பக்கத்தில் அவரது வாழ்க்கைக் குறிப்பையும், அந்த வயோதிகரான தேசபக்தரின் உருவப்படத்தையும் பிரசுரித்திருக்கிறோம். தாய் நாட்டின் தொண்டிற்காக நாம் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்வதே அந்த மாபெரும் தேசபக்தருக்கு நாம் செய்யும் மரியாதையாகும்.

## ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் வாழ்க்கை வரலாறு

பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கத்தினர் பதவி வகித்த முதலாவது இந்தியர் ஸ்ரீ தாதாபாய் நௌரோஜிதான். 1825 செப்டம்பர் 4-ம் தேதி பம்பாய் நகரில் பிறந்த தாதாபாய், எல்பின்ஸ்டன் பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும் வாசித்துத் தேறி தமது 29-வது வயதில் கணக்கு, இயற்கை தத்துவப் பேராசிரியராகப் பதவியேற்றார். அப்பதவிக்கு வந்த முதல் இந்

தியரும் அவர்தான். பின்னர் 1885-ல் இங்கிலாந்தில் நிறுவப் பட்ட ஒரு வர்த்தக ஸ்தாபனத்தின் பங்குதாரராக அவர் லண்ட னுக்குச் சென்றார். அப்போது லண்டன் யூனிவர்ஸிடி கல்லூரி அவரை குஜராத்திப் பேராசிரியராக நியமித்து அவருக்கு கௌரவம் அளித்தது. 1870-ல் இந்தியர்களுக்கு முதன் முதலாக ஐ. ஸி. எஸ் பரீட்சையில் இடம் கிடைக்குமாறு செய்த பெருமை ஸ்ரீ தாதா பாய்க்கே உரியது. 1874-ல் அவர் பரோடா பிரதம மந்திரியாக நியமிக்கப்பட்டார். அவர் பம்பாய் கார்ப்பொரேஷனில் அங்கத் தினராக இருந்து ஐந்து வருடகாலம் வரையில் செய்த தொண்டு மிகவும் போற்றுதற்குரியது. 1885-லிருந்து 1887 வரையில் அவர் பம்பாய் சட்டசபை அங்கத்தினராக இருந்ததுடன், மூன்று முறை (1886, 1893, 1906) இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் அக்கிராசனர் பதவியையும் வகித்தார். லண்டன் சென்ட்ரல் பின்ஸ்பரி தொகுதியில் பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்படும் கௌரவத்தைப் பெற்ற முதல் இந்தியரும் அவர்தான். இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் பிரிட்டிஷ் கமிட்டியில் ஆரம்பம் முதல் அங்கத்தினராக இருந்து சுறுசுறுப் புடனும் கடினமாகவும் உழைத்துத் தொண்டு புரிந்தார். அவர் எழுதிய நூல்களில், 'இந்தியாவுக்கு இங்கிலாந்தின் கடமை', 'இந்தியன் சிவில் சர்விஸில் இந்தியர்களுக்கு இடம்', 'இந்தியா வின் நிதி நிர்வாகம்' ஆகியவை குறிப்பிடத் தக்கவை. 'வறுமையும் இந்தியாவில் பிரிட்டிஷாரின் அவல ஆட்சியும்' என்பதுதான் அவர் எழுதிய நூல்களில் சிறந்ததாகும். கல்கத்தாவில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை வகிப்ப தற்காக 1906-ல் பூஜ்யரான தாதாபாய் தாய்நாட்டிற்கு வந்து மகத்தான பளுவை வகித்தபோது, இரும்பு போன்ற உடலும் அஞ்சாநெஞ்சமும் படைத்த அவருக்கும் கூட அதைச் சமாளிப்பது கஷ்டமாக இருந்தது. அதிலிருந்து அவர் பொது வாழ்க்கையி லிருந்து விலகிவிட்டார் என்றே கூறலாம். 1907-ல் அவர் பம்பாய் மாகாணத்திலுள்ள வார்சோவா என்ற கிராமத்துக்குச் சென்று அங்கேயே வசித்துக் கொண்டு, இந்திய அரசியல் நிகழ்ச்சிகளை மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறார்.

அவர் புரிந்த ஈடு இணையில்லாத தொண்டின் காரணமாக அவர் இந்தியாவின் 'முது பெரும் கிழவர்' என்ற பட்டத்துக்கு உண்மையிலேயே உரியவராகியிருக்கிறார்.

'இந்தியன் ஒபினியன்' – 3-9-1910

* * *

இந்தியாவின் முது பெரும் கிழவர் செப்டம்பர் 4-ஆம் தேதி வியாழக்கிழமை தமது 89-வது பிறந்த தினத்தைக் கொண்டாடு கிறார் என்பதை நமது வாசகர்களுக்கு நினைவுபடுத்த வேண்டிய தேவை இல்லை. இந்தியாவின் தவப் புதல்வருக்கு நாம் மீண்டும் நமது நல்வாழ்த்துக்களை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்

கிறோம். ஒரு மனிதர் செய்யக் கூடிய பங்கைக் காட்டிலும் மிகவும் அதிகமாக அவர் பொதுத் தொண்டு புரிந்த பின், இப்போது சுக மாக ஓய்வு பெற்றுவருகிறார். அவர் தமது நாட்டு மக்களுக்காக இடைவிடாது தொண்டு புரிந்து வந்தார் என்ற நினைவு, நமது அற்ப முயற்சிகளுக்கு எப்போதும் ஒரு தூண்டுகோலாக இருந்து வருகிறது. ஒரு நாடு சீருடனும் செல்வத்துடனும் விளங்குவதற்கு அத்தகையோருடைய வாழ்க்கையே காரணமாகும். செல்வம் என்றால் ஸ்தூலமான உடைமைகள் அல்ல, தேசத்தின் கௌரவமே யாகும். அவருக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்புவோர், தாதா பாய் நௌரோஜி, வார்ஸோவா, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்பலாம். நாம் இந்த இதழுடன் ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி யின் படத்தையும் ஒரு விசேஷ அனுபந்தமாக வெளியிட்டிருக் கிறோம்.

'இந்தியன் ஒபினியன்' - *30-8-1913*

* * *

கோத்ரா,
நவம்பர் *3, 1917*

கோத்ராவில் நடந்த முதலாவது குஜராத் அரசியல் மகா நாட்டிற்கு காந்திஜி தலைமை வகித்துப் பேசியபோது, இந்தியா சுதந்திரம் பெறவேண்டிய அவசியத்தையும், அதற்கான வழிகளை யும் விவரமாகக் குறிப்பிட்டார். ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் மரணத்தைக் குறித்து அப்போது அவர் கூறியதாவது:

"ஒவ்வொரு வருடமும் நமது தலைவர்களிடையேயிருந்து மரண தேவன் தன்னுடைய பலியை வாங்கிக் கொள்கிறான். சென்ற பன்னிரண்டு மாதங்களாக இந்தியா முழுவதும் அந்தத் தேவனால் பலி கொண்டவர்களைப் பற்றிக் குறிப்பிடும் நோக்கம் எனக்கு இல்லை. ஆனால் ரிஷியைப் போல் விளங்கிய இந்தியாவின் முது பெரும் கிழவரைப் பற்றிக் குறிப்பிடாமல் இருப்பது முடியாத காரியம். அவர் நாட்டுக்குச் செய்துள்ள தொண்டுகளின் பெரு மையை மதிப்பிடுவதற்கு நான் யார்? நான் அவரது காலடியில் உட்கார்ந்திருந்தவன் என்பதைத் தவிர எனக்கு வேறு எவ்வித யோக்கியதையும் இல்லை. நான் ஒரு சிறு பையனாக லண்டனுக்குச் சென்றபோது அவருக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்தேன். அவருக்கு என்னை அறிமுகம் செய்து எழுதப்பட்ட கடிதத்தை எடுத்துச் சென்று அவரைப் பார்த்த விநாடியிலிருந்து அவரைப் போற்றி வணங்க முற்பட்டேன். நாட்டிற்கு தாதாபாய் செய்த குற்றம் குறையற்ற, இடைவிடாத தொண்டு. அவரது பாரபட்சமற்ற தன்மை, அவரது தூய்மையான ஒழுக்கம் ஆகி யவை எப்போதும் இந்திய மக்களுக்கு முன்னுதாரணமாக விளங்கிவரும். அவருக்கு இறைவன் சாந்தி அளிப்பாராக! அவரது குடும்பத்திற்கும் நாட்டிற்கும் அந்த நஷ்டத்தைச் சகித்துக் கொள்ளும் சக்தியைக் கடவுள் அருள்வாராக. அவரது ஒழுக்

கத்தைப் பின்பற்றி, அவர் செய்த தொண்டைப் போல் நாமும் தொண்டு செய்வதன் மூலமும், நமது இருதய பீடத்தில் அவரை வீற்றிருக்கச் செய்வதன் மூலமும் நாம் அவரை அமரராகச் செய்ய முடியும். தாதாபாயின் புனித ஆன்மா இங்கே நமது நடவடிக்கை களைக் கவனித்து வருமாக!''

4

## சட்ட பூர்வமான கொள்ளை

திரான்ஸ்வால் சுப்ரீம் கோர்ட்டில் சென்ற திங்கட்கிழமை ஒரு வழக்கைப்பற்றிய விசாரணை நடந்தது. அதை நமது நிருபர் "சட்ட பூர்வமான கொள்ளை'' என்று குறிப்பிட்டிருக்கிறார். எனவே இந்தக் குறிப்புக்கும் அதே தலைப்பைக் கொடுக்க நாம் தயங்கவில்லை. 1885-ம் வருடத்திய 3-வது சட்டத்தைப் பற்றி பிரிட்டிஷ் இந் தியர் சங்கம் பல புகார்கள் செய்திருக்கிறது. எனினும் நமது நிருபர் விவரித்துள்ள வழக்கைப்போல் அவ்வளவு கொடுமையான, அநீதியான ஒரு வழக்கைக் கற்பனை செய்துகொள்ள முடியாது. அத்தகைய கொடிய தவறை இழைப்பதற்கு இடம் கொடுக்கும் ஒரு சட்டம் சிறிதும் மனிதத் தன்மையற்றதாகவே இருக்க வேண்டும். ஸ்ரீ லியோனார்ட் அந்த வழக்கை மிகத் திறமையுடனும் நாவன்மையுடனும் வாதித்தார். அந்தச் சட்டத்தின் கொடுமையை மனத்தில் வைத்துக்கொண்டே, அதற்கு ஜீவகாருண்ய நோக்கத் துடன் வியாக்கியானம் செய்யுமாறு அவர் நீதிபதிகளைக் கேட்டுக் கொண்டார்; சாத்தியமாயின், துன்பத்திற்குள்ளான துரதிர்ஷ்ட சாலிகளுக்கு நீதி வழங்கும்படியும் கேட்டுக் கொண்டார்.

தென்னாப்பிரிக்காவில் முதன் முதலாகக் குடியேறி ஸ்தாபித்த இந்தியர்களில் காலஞ்சென்ற அபூபேகர் ஆமதும் ஒருவர். பிரபல இந்திய வியாபாரிகளில் அவர் தலைசிறந்தவராக விளங் கினார். நேட்டாலிலும், தென்னாப்பிரிக்காவிலுள்ள மற்றப் பாகங் களிலும் அவருக்கு ஸ்தாவர சொத்துக்கள் ஏராளமாக உள்ளன. அவரது காலத்தில் ஐரோப்பியர்களும் சரி, இந்தியர்களும் சரி, அவருக்கு மரியாதை காட்டி வந்தனர். அவர்களுடைய மதிப் புக்கு அவர் முற்றிலும் உரியவராக இருந்தார். மிகுந்த பண்பாடு உள்ள அவருக்கு திரான்ஸ்வாலிலும் சொத்துக்கள் இருந்தன. அந்த சொத்துக்களை அவர் தமது சகோதரருக்கும் மகனுக்கும் அளித்து மரணசாஸனம் எழுதி வைத்தார். அவ்விருவரும் கூட மிகவும் பிரபலமானவர்கள், சிறந்த கற்றறிஞர்கள். காலஞ் சென்றவர் அவர்களுக்கு விட்டுச் சென்ற சொத்துக்களை அந்த வாரிசுகள் அடைய முடியாமல் செய்வது இப்போது சாத்திய மாகியிருக்கிறது! இந்தத் தவறைச் சீர்திருத்த வேண்டும் என்ற ஆர்வம் சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளுக்கு இருந்தும் கூட, அவர்கள் அவ்விதம் செய்ய முடியாதவர்களாக இருக்கிறார்கள். திரான்ஸ்

வால் சுப்ரீம் கோர்ட்டில் தற்போதுள்ள நீதிபதிகளைக் காட்டிலும் தூய்மையான, சுதந்திரமான சிறந்த நீதிபதிகளைக் காண்பது அரிதாகும். அவர்கள் சிறிதும் விருப்பு வெறுப்பிற்கு இடம் கொடுப்பதில்லை. இதற்கு முன் அவர்கள் அஞ்சா நெஞ்சத்துடன் பல தீர்ப்புகள் கூறியிருப்பதை நாம் அறிவோம். மேற்கண்ட வழக்கை, தென்னாப்பிரிக்காவிலேயே மிகச் சிறந்த வக்கீல் ஒருவர் இருதய பூர்வமாக வாதித்தார். அப்படியிருந்தும் அவ்வழக்கில் தாங்கள் நீதி வழங்க முடியவில்லை என்பதை நீதிபதிகள் ஒப்புக் கொண்டனர். அதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டு பிடிப்பது கடினமல்ல. பிரிட்டிஷ் இந்தியர்களின், மற்ற நிற மனிதர்களின் உணர்ச்சியைச் சிறிதும் பொருட்படுத்தாத ஒரு சட்ட சபையிலேயே *1885-3*-வது சட்டம் நிறைவேறியது. அந்தச் சட்டம் பிரிட்டிஷாரின் கௌரவத்திற்குச் சிறிதும் உகந்ததல்ல. அது உலகமறிந்த நாகரிக விதிகள் எல்லாவற்றிற்கும் முரணாகும். போயர் யுத்தத்திற்கு முன் நிற மனிதர்களிடம் அனுதாபம் காட்டி வந்த லார்டு மில்னர் கூட இப்போது காலத்திற்கேற்ப தமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டுவிட்டார்! வெறுக்கத்தக்க இந்தச் சட்டத்தை ரத்து செய்வதே லார்டு மில்னர் நிர்வாகத்தின் முதலாவது நடவடிக்கையாக இருக்குமென்று எல்லோரும் எதிர்பார்த்திருப்பார்கள். ஆனால் லார்டு மில்னர் காலத்திற்கேற்ப நடந்து கொண்டுவிட்டார். பிரிட்டிஷ் இந்தியர்கள் அவரை அணுகி தங்கள் கோரிக்கைகளைத் தெரிவித்துக் கொண்டனர். ஆனால் சட்ட புத்தகத்திலிருந்து *1885-3*-வது சட்டத்தை ஒழிப்பது சாத்தியமில்லை என்ற நிலைமை ஏற்படும்வரையில், அவர் இந்தியர்களுக்குச் சாக்குப் போக்கு சொல்லிவந்தார். திரான்ஸ்வாலிலுள்ள வெள்ளையர்களின் கிளர்ச்சியே அவரது மனமாற்றத்திற்குக் காரணமாகும். திரான்ஸ்வாலில் லார்டு மில்னரின் நிர்வாகத்தில் அந்தச் சட்டம் பிரிட்டிஷ் சர்க்காரின் நிரந்தரமான மானக்கேட்டிற்கு ஓர் அறிகுறியாக இருந்துவருகிறது. இங்கே பிரிட்டிஷ் இந்தியர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள பயங்கரமான தவறு நீடித்திருக்குமாறு பிரிட்டிஷ் லிபரல் அரசாங்கம் செய்யப்போகிறதா?

*'இந்தியன் ஒபினியன்' – 17–3–1906*

## 5

# கோகலேயின் மறைவு

*பிப்ரவரி 20, 1915*

கோபால கிருஷ்ண கோகலேயின் மரணத்தைக் குறித்து சாந்திநிகேதனில் நடந்த கூட்டத்தில் காந்திஜி பின்வருமாறு கூறினார்:

நீங்கள் எல்லோரும் துளசிதாஸ் ராமாயணத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நல்லவர்களின் நட்பை நாட வேண்டும் என்பதைப் பற்றி அதில் குறிப்பிடப்பட்டிருப்பது, மனத்தை மிகவும் கிளறும் ஒரு பகுதியாகும். துன்பத்திற்குள்ளாகியும், தொண்டு செய்தும் மாண்டவர்களுடைய நட்பை நாம் நாட வேண்டும். அப்படிப்பட்டவர்களில் கோகலேயும் ஒருவர். அவர் மறைந்துவிட்டார். என்றாலும் அவரது ஊழியம் மறைந்து விடவில்லை; அவரது ஆன்மா வாழ்கின்றது.

தொண்டு புரிவதில் கோகலேய்க்கு இருந்த திறமையைப் பாமர மக்கள் நன்கு அறிந்து கொண்டனர். அருஞ்செயல்கள் நிறைந்த கோகலேயின் வாழ்க்கையை எல்லோரும் அறிவர். ஆனால் மதப்பற்றுள்ள அவரது வாழ்க்கை சிலருக்கே தெரியும். அவரது நடவடிக்கைகளுக்கெல்லாம் அடிப்படை சத்தியமேயாகும்.

அவரது எல்லாத் தொண்டுகளுக்கும், அரசியலுக்கும் கூட சத்தியமே பின்னணியாக இருந்தது. இந்திய ஊழியர் சங்கத்தை அவர் ஸ்தாபித்ததற்குக் காரணம் அதுதான். தேசத்தின் அரசியல் வாழ்க்கையையும், சமுதாய வாழ்க்கையையும் ஆன்மிக மணம் கமழும்படி செய்வதே அச் சங்கத்தின் கொள்கையாகும்.

அவருடைய வாழ்க்கையில் அவரது எல்லாச் செயல்களுக்கும் அஞ்சாமையே மூல காரணமாக இருந்து வந்தது. அவர் அஞ்சா நெஞ்சத்துடன் இருந்ததுபோல், எந்த அலுவலையும் குற்றம் குறையின்றி நிறைவேற்றும் ஆற்றல் பெற்றவராகவும் இருந்துவந்தார். சாத்திரங்களிலுள்ள ஒரு சுலோகத்தை அவர் அடிக்கடி கூறுவது உண்டு. 'உண்மையான விவேகம் ஒரு காரியத்தை ஆரம்பிப்பதில் இல்லை. அந்தக் காரியத்தை இறுதிவரையில் நிறைவேற்றுவதில்தான் இருக்கிறது' என்பதே அந்த சுலோகத்தின் பொருளாகும். அவரது குறிப்பிடத்தக்க இந்த ஆற்றலைக் கீழ்க் கண்ட ஒரு நிகழ்ச்சியிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:

ஒரு சமயம் பெரிய கூட்டம் ஒன்றில் அவர் பேசவேண்டியிருந்தது. அந்தக் கூட்டத்தில் பேசுவதற்காக ஒரு சூக்கமான பிரசங்கத்தைத் தயாரிக்க அவர் மூன்று நாட்கள் வரையில் முயற்சி செய்தார். அவருக்காக ஒரு பிரசங்கத்தை எழுதிக் தரும்படிஅவர் என்னைக் கேட்டார். நான் பிரசங்கத்தை எழுதிக் கொடுத்தேன். அவர் அதை எடுத்துக் கொண்டு, அவரது தெய்விகமான புன்முறுவலுடன் அதைப் பற்றி என்னுடன் விவாதித்தார். "அந்தப் பிரசங்கம் இன்னும் சிறந்ததாக இருக்க வேண்டும். அதை மாற்றி எழுதுங்கள்" என்று என்னிடம் கூறினார். மூன்று நாட்கள் வரையில் அவர் அதே கவலையாக இருந்தார். ஆனால் அந்தக் கூட்டத்தில் அவர் பேசியபோது, அவரது பிரசங்கம் எல்லோரையும் மெய்சிலிர்க்கும்படி செய்தது. அவர் குறிப்புகள் எதுவுமின்றியே அங்கு பேசினார். அவர் எள்ளளவும் குற்றம் குறையின்றி அவரது

பிரசங்கத்தை மிகுந்த அக்கறையுடன் தயாரித்திருந்ததே அதற்குக் காரணம். அவர் தமது பிரசங்கங்களை தமது ரத்தத்தினுல் எழுதினர் என்று கூறலாம். அவர் சாந்த சுபாவம் உள்ளவர். அவரது நடவடிக்கைகள் யாவும், அவரது கருணை உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தன. சிற்சில சமயங்களில் அவர் பொறுமையிழப்பது உண்டு. எனினும் அத்தகைய சந்தர்ப்பங்களில் அவர் அவருக்கே உரித்தான புன்முறுவலுடன் முன்வந்து, அவர் ஒரு வேலைக்காரராயினும், அல்லது ஒரு பெரிய மனிதராயினும், மன்னிப்புக் கேட்டுக் கொள்வார். "நீங்கள் என்னை மன்னிப்பீர்கள் என்பது எனக்குத் தெரியும்; அப்படி அல்லவா?" என்று கேட்பார்.

அவரது வாழ்க்கையின் பிற்காலத்தில் அவர் தமது மனச்சாட்சியுடன் போராட வேண்டியிருந்தது. அதாவது அவரது ஆரோக்கியத்தைச் சீர்குலைத்துக் கொண்டு போராட்டத்தில் தொடர்ந்து தாம் பங்கெடுத்துக் கொள்ளவேண்டுமா என்பதை அவர் தீர்மானிக்கவேண்டிருந்தது. அவரது வாழ்க்கையில் ஒவ்வொரு நடவடிக்கையும் அவரது மனச்சாட்சிக்கு உட்பட்டதாகவே இருந்தது. எனவே அவர் இன்னும் நம்மிடையே வாழ்ந்து வருகிறுர். அவருடன் கூட இருந்த இந்திய ஊழியர் சங்க அங்கத்தினர்களிடம் அவர் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் இவை தான்: "நான் எனக்கு யாதொரு நினைவுச் சின்னத்தையும், சிலையையும் விரும்பவில்லை. எல்லோரும் தங்கள் நாட்டை நேசிக்க வேண்டும் என்பதும், தங்களுடைய உயிரையும் லட்சியம் செய்யாது நாட்டிற்குத் தொண்டு புரிய வேண்டும் என்பதுமே எனது விருப்பமாகும்".

இந்தியாவிலுள்ள சகலருக்கும் அவர் விடுத்த செய்தி அது தான். கோகலேயின் கடைசி விருப்பத்தை நிறைவேற்றும் உறுதி நம் எல்லோருக்கும் ஏற்படுமாக.

தொண்டின் மூலம்தான் கோகலே தமது இயல்பையும், தமது தேசத்தையம் நன்கு தெரிந்து கொண்டார். அவரது தேசபக்தி உண்மையானது. அதனுலேயே மானிட வர்க்கத்தின் நலனுக்காக அவர் விரும்பாத எதையும் இந்தியாவின் நலனுக்காக அவர் விரும்பவில்லை. அவரது தேசபக்தி கண்மூடித்தனமானது அல்ல. இந்தியாவின் குற்றம் குறைகளையும், தவறுகளையும் அவர் தெரிந்து கொண்டிருந்தார். அவரைப் போல் நமக்கும் இந்தியாவினிடம் பக்தி இருப்பது சாத்தியமாயின், நாம் சாந்திநிகேதனுக்கு வந்திருப்பது முற்றிலும் சரிதான். இந்தியாவுக்காக எப்படி வாழ்வது என்பதைக் கற்றுக் கொள்ளவே நாம் இங்கே வந்திருக்கிறோம். அவர் மேற்கொண்ட கடமைகளிலும், அலுவல்களும் அவர் மிகுந்த உற்சாகத்துடன் ஈடுபட்டார்; அன்பே அவரது வாழ்க்கையின் நியதியாக இருந்தது; அவரது ஒவ்வொரு நடவடிக்கையும் சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது; எந்த அலுவலையும் அரைகுறையின்றியும், அப்பழுக்கின்றியும் செய்து முடிப்பதே

அவரது இயல்பாக இருந்தது. எனவே கோகலேயின் மேற்கண்ட குண விசேஷங்களைப் பின்பற்றி நீங்கள் நடக்கவேண்டும்.

சாதாரணமான இந்தத் தகுதிகள்தான் வாழ்க்கையின் உயர்ந்த நிலைக்குப் படிகளாக இருக்கின்றன என்று நமது சாஸ்திரங்கள் நமக்குக் கற்பிக்கின்றன. இந்த உண்மையை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அந்தத் தகுதிகள் இல்லையாயின் நமது வழிபாடுகளும், வேலைகளும் பலனற்றவையாகிவிடும்.

இந்தியாவில் உண்மையிலேயே சத்திய சீலரான ஒரு வீரத் தலைவரை நான் தேடிக் கொண்டிருந்தேன். பின்னர் கோகலே அத்தகைய வீரர் என்பதை நான் கண்டேன். இந்தியாவினிடம் அவருக்குள்ள அன்பும் பக்தியும் உண்மையானவை, தூய்மையானவை. நாட்டிற்குத் தொண்டு புரிவதற்காக அவர் தமது சந்தோஷ வாழ்க்கையையும் சுயநலத்தையும் உதறித் தள்ளினர். அவர் நோயுற்று படுத்த படுக்கையாக இருந்தபோது கூட, அவரது மனம் இந்தியாவின் நலனைப் பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தது.

சில தினங்களுக்கு முன் அவர் இரவில் வேதனையினல் துடித்துக் கொண்டிருந்தபோதுகூட, அவர் எங்களில் சிலரைக் கூப்பிட்டு, இந்தியாவின் பிரகாசமான எதிர்காலத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினர். அப்போது டாக்டர்கள் அவரிடம், வேலைகளையெல்லாம் நிறுத்திவிட்டுத் தூங்கச் செல்லும்படி அடிக்கடி கூறினர். ஆனல் அவர்களுடைய வார்த்தைகளுக்கு அவர் செவி கொடுக்கவில்லை. "நான் வேலை செய்வதிலிருந்து மரணத்தைத் தவிர வேறு எதுவும் என்னைத் தடுக்க முடியாது" என்று அவர் கூறினர். கடைசியாக மரணம்தான் அவருக்கு அமைதியையும் ஓய்வையும் கொடுத்துள்ளது. இறைவன் அவரது ஆன்மாவுக்கு அருள் புரிவாராக !

புனு,
*மார்ச் 3, 1915*

இன்று கிர்லாஸ்கர் தியேட்டரில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்திற்கு பம்பாய் கவர்னர் தலைமை வகித்தார். அப்போது ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலேயின் மரணத்திற்காக துக்கம் தெரிவித்து காந்திஜி கொண்டுவந்த பின்கண்ட தீர்மானம் நிறைவேறியது :

"ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலேயின் அகால மரணம் இந்த நாட்டிற்கும், குறிப்பாக புனுவுக்கும் மாபெரும் நஷ்டமாகும் என்பதை, புனுவிலுள்ள பொதுமக்கள் அடங்கிய இந்தக் கூட்டம் தெரிவித்துக் கொள்கிறது. அவர் இந்தியா முழுவதற்கும் தலைவராக இருந்தார். அவரது பக்தியும், தியாகமும், தேச மக்களுக்குச் செய்த தன்னலமற்ற பொதுத் தொண்டும்

மகத்தான உதாரணமாகத் திகழ்கின்றன. ஸ்ரீ கோகலேயின் புதல்விகளுக்கும், மற்ற உறவினர்களுக்கும் இந்தக் கூட்டம் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிப்பதுடன், இந்தத் தீர்மானத்தை அவர்களுக்கு அறிவிக்கும்படியும் தலைவரைக் கேட்டுக் கொள்கிறது.''

மேற்கண்ட தீர்மானத்தை கொண்டு வந்து பேசிய காந்திஜி, காலஞ்சென்ற ராஜதந்திரியின் அருமை பெருமைகளை விவரித்துக் கூறினர். மேலும் காந்திஜி பேசியதாவது: காலஞ் சென்ற தேசபக்தரின் பெருமைகளை லார்டு வில்லிங்டன் போற்றிப் புகழ்ந்த பின் நான் மேற்கொண்டு எதுவும் கூறுவது தன் மூப்பாகக் கருதப்படும். ஆனல் ஒன்று மாத்திரம் நான் கூற விரும்புகிறேன். ஸ்ரீ கோகலே ஆழ்ந்த மதப்பற்று உள்ளவர். அதனுல்தான் அவர் எதையும் அரைகுறையின்றியும், அப்பழுக்கின்றியும் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவராகவும், மனச்சாட்சிக்கு முரணின்றி நடப்பவராகவும் இருந்தார். அவர் மரணமடைவதற்குச் சில நாட்களுக்கு முன் அவர் ஒரு தர்ம சங்கடமான நிலைமையைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அதாவது ஒரு குறிப்பிட்ட மகாநாட்டிற்குச் செல்லுவதா அல்லது வேண்டாமா என்பதை அவர் தீர்மானிக்க வேண்டியிருந்தது. அவர் தீர்க்காலோசனை செய்த பின், உயிருக்கு அபாயம் ஏற்படக் கூடிய தமது உடல் நிலையைக் கூடப் பொருட்படுத்தாமல் அவர் நாட்டின் நலனை மனத்திற் கொண்டு அம் மகாநாட்டிற்குச் செல்லவேண்டியது அவசியமென முடிவு செய்தார்.

'பம்பாய் கிராணிகிள்'

## 6

# கோகலேயின் பேருரைகள்

பிப்ரவரி, 1918

காலஞ் சென்ற மகாத்மா கோகலேயின் முதலாவது சிராத்த தினத்தையொட்டி, அவரது பிரசங்கங்களை குஜராத்தியில் மொழி பெயர்த்து ஒரு நூலாக வெளியிட வேண்டுமென்று நான்தான் முதன் முதலாக யோசனை கூறினேன். எனவே அவரது பேருரைகளின் முதல் பாகத்திற்கு நானே முன்னுரை எழுதுவது ஒருவகையில் பொருத்தமேயாகும். கோகலேயின் சிராத்த தினத்தை வருடந்தோறும் தொடர்ந்து அனுஷ்டித்து வரவேண்டும். ஒவ்வொரு வருடமும் கூடி பக்தி கீதங்களைப் பாடுதல், பிரசங்கங்கள் செய்தல், பிறகு கலைந்து செல்லுதல் ஆகியவை யாருக்கும் எவ்வித லாபமுமின்றி வீணுகக் காலத்தைப் போக்குவதேயாகும். பேச்சைக் காட்டிலும் செயலுக்கு அதிக முக்கி

யத்துவம் கொடுக்க வேண்டும் என்பதற்காகவும், இத்தகைய வருடாந்திர நிகழ்ச்சிகளால் ஏதாவது உருவான பலனை அடைய வேண்டும் என்பதற்காகவும், தாய் மொழியில் பலன் தரத்தக்க ஒரு நூலை வெளியிட வேண்டுமென்று சென்ற ஆண்டில் தீர்மானித்தார்கள். அதற்கிணங்க காலஞ்சென்ற மகாத்மாவின் பிரசங்கங்களை மொழிபெயர்த்து ஒரு நூலாக வெளியிடுவதென்று முடிவு செய்யப்பட்டது.

அந்த மொழி பெயர்ப்பு குஜராத்தி இலக்கியத்திலேயே சிறந்த ஒரு நூலாக இருக்கவேண்டும் என்பதும், மகாத்மாவின் புனிதமான வார்த்தைகளின் அழகு, மொழி பெயர்ப்பில் குன்றி விடாமல் அப்படியே இருக்க பெரு முயற்சி செய்ய வேண்டும் என்பதும் எல்லோருடைய விருப்பமுமாகும். பணத்தின் மூலம் அதைச் சாதித்துவிட முடியாது; வலுவில் தொண்டு செய்ய முன்வருவோரின் மூலம் தான் அதைச் சாதிக்க இயலும். அத்தகையோரின் தொண்டு நமக்குக் கிடைத்தது. ஆனல் அவ்விஷயத்தில் கோரிய பலன் கிடைத்ததா என்பது எதிர்காலத்தில் தான் தெரியவேண்டும்.

எந்த நூலுக்காக இந்த முன்னுரை எழுதப்படுகிறதோ அதை, ஸ்ரீ மகாதேவ் ஹரிபாய் தேசாய் மொழிபெயர்த்துள்ளார். அவரை அறிமுகம் செய்து வைத்து எதுவும் கூறுவதற்கு இது சந்தர்ப்பமில்லை. எனினும் அவர் குஜராத்தி இலக்கியத்தில் பற்றுள்ளவர் என்று மாத்திரம் நான் கூறவேண்டும். தவிர இந்த விஷயம் அவருக்குப் புதிதல்ல. காலஞ்சென்ற மகாத்மாவின் ஆயிரக்கணக்கான பக்தர்களில் அவரும் ஒருவர். அவர் தமது கடமையை மிகுந்த உற்சாகத்துடனும், பக்தியுடனும் நிறைவேற்றியிருக்கிறர். எனவே இந்த மொழிபெயர்ப்பு குஜராத்தி இலக்கியத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெறும் என நம்புவது நியாயமேயாகும்.

சென்ற வருடத்தில் அத்தகைய ஒரு நூலை வெளியிடுவதென்று தீர்மானிக்கப்போவதை அறிந்ததும், பம்பாய் ஹோம் ரூல் லீக் அதற்காக ரூ. 3000 கொடுக்க முன்வந்தது. எனவே அதை அச்சிட்டு வெளியிடுவதற்கான செலவுக்காக நிதி வசூல் செய்ய வேண்டிய தொல்லை எதுவும் இருக்கவில்லை. தாராளமான அந்த உதவி செய்ததற்காக ஹோம் ரூல் லீக் பாராட்டுதலுக்கு உரியதாகியிருக்கிறது.

மேலே குறிப்பிட்டிருக்கும் விவரங்கள் இந்த நூலின் முன்னுரைக்கு ஒரு முன்னுரையேயாகும். நூலின் முன்னுரையில், மறைந்த ஆன்மாவைப் பற்றி ஏதாவது குறிப்பிட வேண்டியது அவசியமாகும். இருந்தாலும் ஒரு சீடன் தனது குருவைப்பற்றி என்ன எழுத முடியும்? அவன் எப்படி எழுத முடியும்? ஒரு சீடன் அவ்விதம் எழுத முற்படுவது அதிகப்பிரசங்கித் தனமேயாகும். உண்மையான சீடன் குருவுடன் கலந்துவிடுகிறன்.

எனவே அவனல் குருவைப்பற்றி விமர்சனம் செய்வது ஒரு போதும் முடியாத காரியம். ஒருவனுக்கு யாரிடம் பக்தி அல்லது ஈடுபாடு இருக்கிறதோ அவரது குறைகள் கண்களுக்குத் தெரியாது. உண்மையில் சீடனின் நடவடிக்கைகள், குருவைப்பற்றிய வியாக்கியானமேயாகும். கோகலே என்னுடைய அரசியல் குரு என்று நான் அடிக்கடி கூறியிருக்கிறேன். அதனல்தான் அவரைப்பற்றி எழுத எனக்கு ஆற்றல் இல்லை என்று கருதுகிறேன். எனவே அவரைப்பற்றி நான் என்ன எழுதினலும் அது குறையுள்ளதாகவே இருக்கும். குருவுக்கும் சீடனுக்கும் உள்ள தொடர்பு முற்றிலும் ஆன்மிகமானது என்பதே எனது நம்பிக்கையாகும். அத்தகைய தொடர்பு திடீரென்று ஏற்படுகிறது; பின்னர் அது ஒருபோதும் முறிவதில்லை.

எங்களிடையே இந்தத் தொடர்பு 1896-ல் ஏற்பட்டது. அதன் தன்மையை அப்போது நானே அல்லது அவரோ உணரவில்லை. அதே சமயத்தில் குருவின் குருவான நீதிபதி மகாதேவ் கோவிந்த ரானடே, லோகமான்ய திலகர். சர் பிரோஸிஷா மேத்தா, நீதிபதி பஹ்ருதீன் தயாப்ஜி, டாக்டர் பண்டர்கார் ஆகியோருடனும், மற்றும் சென்னையிலும், வங்காளத்திலுமுள்ள தலைவர்களுடனும் தொடர்பு கொள்ளும் அதிர்ஷ்டம் எனக்கு ஏற்பட்டது. நான் அப்போது அனுபவமற்ற இளைஞனுக இருந்தேன். அவர்கள் எல்லோரும் என்மீது அன்பைச் சொரிந்தார்கள். என் ஆயுள் உள்ள வரையில் அச் சம்பவங்களை நான் மறக்கவே முடியாது. எனினும் கோகலேயுடன் ஏற்பட்ட தொடர்பு காரணமாக எனக்கு மிகவும் மன அமைதி உண்டாயிற்று. மற்றவர்களுடன் ஏற்பட்ட தொடர்பின் பலனுக அத்தகைய மன அமைதி உண்டாகவில்லை. எனக்கும் கோகலேய்க்கும் ஏற்பட்ட புதிய தொடர்பு திடீரென்று உருவாகிவிடவில்லை. 1901-ல் நான் கல்கத்தாவில் நடந்த காங்கிரசுக்குச் சென்ற போதுதான், நான் அவருக்குச் சீடனுக இருக்கும் நிலையை உணர்ந்தேன். அங்கேயும் மேலே குறிப்பிட்ட தலைவர்களையெல்லாம் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. கோகலே என்னை மறக்கவில்லை என்பது மாத்திரமல்ல; என்னை அவரது மேற்பார்வையில் எடுத்துக் கொண்டார். அதனல் மிகுந்த பலன் ஏற்பட்டது. அவர் என்னை அவரது ஜாகைக்கு இழுத்துச் சென்ருர். விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் நான் திக்கற்றவனுக எனக்குத் தோன்றியது. அப்போது பல்வேறு தீர்மானங்கள் விவாதிக்கப்பட்டன. தென்னப்பிரிக்கா விஷயமாக என் சட்டைப் பையிலும் ஒரு தீர்மானம் இருக்கிறது என்பதைப் பிரகடனம் செய்யும் தைரியம் கடைசிவரையில் எனக்கு இல்லை. எனக்காக இரவு காத்திருக்குமென்று எதிர்பார்ப்பதற்கில்லை! கையிலுள்ள அலுவல்களை முடித்து விடவேண்டுமென தலைவர்கள் அவசரப்பட்டார்கள். எந்த விநாடியிலும் கூட்டம் கலைந்து அவர்கள் எழுந்துவிடலாம் என்று தோன்றியது. தீர்மானத்தைக் குறித்து கோகலேயிடம் கூறவும் எனக்குத் தைரியமில்லை. அப்போது கோகலே, “தென்னப்பிரிக்காவைப் பற்றி காந்தியிடம்

ஒரு தீர்மானம் இருக்கிறது. அதை நாம் யோசனைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும்'' என்று உரக்கக் கூறினர். அப்போது எனக்கு உண்டான ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. காங்கிரசில் எனது முதல் அனுபவம் அதுதான். காங்கிரசில் நிறைவேறும் தீர்மானங்களில் நான் மிகுந்த மதிப்பு வைத்திருந்தேன். பின்னர் அவரை நான் சந்தித்த சந்தர்ப்பங்கள் எண்ணில் அடங்கா. அவையெல்லாம் எனக்குப் புனிதமானவை. தற்போதைக்கு நான், அவரது வாழ்க்கையின் மூலாதாரமான கொள்கை என்று எதை நம்பினேனே அதைக் கூறி இந்த முன்னுரையை முடிப்பதே சிறந்ததென நினைக்கிறேன்.

எல்லாம் சீர்கெட்டுக் கிடக்கும் இக்காலத்தில் தூய்மையான தர்ம உணர்ச்சியைக் காண்பது அரிதாக இருக்கிறது. உலகத்தில் தங்களை ரிஷிகள் என்றும், முனிவர்கள் என்றும், சாதுக்கள் என்றும் கூறிக் கொண்டு செல்லுவோருக்கு அத்தகைய உணர்ச்சி இருப்பதில்லை. கடவுள் பக்தர்களுள் சிறந்தவரான நரசிம்ம மேத்தா, அந்த உணர்ச்சி என்ன என்பதைக் காட்டியிருக்கிறுர். "தன்னுள் இருக்கும் ஆன்மாவைப் பற்றிச் சிந்திக்காமல் செய்யப் படும் ஆன்மிக முயற்சிகள் யாவும் பலனற்றவை'' என்று அவர் கூறியிருக்கிறுர். அவர் பரந்த தமது சொந்த அனுபவத்தின் மீதே அவ்விதம் கூறினர். மகத்தான தவங்கள் செய்தவரிடமோ அல்லது யோக முறைகளை நன்கு அறிந்த ஒரு யோகியிடமோ கூட அத்தகைய தர்ம உணர்ச்சி இருப்பதில்லை. தம்முள் இருக்கும் ஆன்மாவைப் பற்றி அறிந்து கொள்ளும் விவேகம் கோகலேய்க்கு இருந்தது என்பதில் சந்தேகமில்லை. மத சம்பந்தமான காரியங்களைச் செய்வதாக அவர் ஒருபோதும் பாசாங்கு செய்ததில்லை. எனினும் அவரது வாழ்க்கை, உண்மையான மத உணர்ச்சி நிறைந்ததாக இருந்தது. மோட்சம் அடைவதற்கு, ஒவ்வொரு யுகத்திலும் அதற்குப் பொருத்தமான விசேஷ முறைகள் மேற்கொள்ளப்பட்டுவந்தன என்று தெரிகிறது. இந்த சகாப்தத்தில் நமது அரசியல் நிலை, நமது இழி நிலையை எடுத்துக் காட்டுவதாக இருக்கிறது. எனினும் நமது அரசியல் நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டால், வீழ்ச்சியுற்ற இந்த நிலையிலிருந்து நாம் மீண்டும் தலை தூக்குவோம் என்று நம்பிக்கொண்டிருக்கிறோம். இது ஓரளவு மாத்திரமே உண்மையாகும். நமது அரசியல் நிலைமையில் சிறந்த மாறுதல்கள் ஏற்பட்டாலொழிய நாம் மீண்டும் தலை தூக்க முடியாது என்பது உண்மையே. எனினும் நாம் எத்தகைய முறைகளைக் கைக்கொண்டு நமது அரசியல் நிலைமையில் மாறுதல் ஏற்பட்டாலும், நிச்சயமாக முன்னேற்றம் அடைவோம் என்பது உண்மையல்ல. நாம் மேற்கொள்ளும் முறைகள் தூய்மையற்றவையாக இருக்குமாயின், நமது நிலைமையில் முன்னேற்றம் ஏற்படாது. அதற்கு நேர்மாருக நாம் பிற்போக்கான நிலையையே அடைவோம். தூய்மையான முறைகளின் மூலம் நமது அரசியல் நிலையில் மாறுதல் ஏற்பட்டால்தான், நாம் உண்மையான முன்னேற்றம் அடைவது சாத்தியமாகும். இந்த உண்மையை, கோகலே தமது பொது வாழ்க்கை

யின் தொடக்கத்திலேயே உணர்ந்து கொண்டதுடன், அக் கொள்கையை நடைமுறையில் பின்பற்றவும் உறுதி கொண்டார். அரசியல் நடவடிக்கைகளின் மூலம்தான் பொதுமக்களிடையே எழுச்சி ஏற்படும்படி செய்ய முடியும் என்பதை எல்லோரும் உணர்ந்தனர். ஆன்மிகத் துறையில் அத்தகைய நடவடிக்கை கள் மேற்கொள்ளப்படுமாயின். அது மோட்சத்திற்கான வழியைக் காட்டும். இந்த மகத்தான கொள்கையையே கோகலே இந்திய ஊழியர் சங்கத்தின் முன்னிலையிலும், தேசத்தின் முன்னிலையி லும் வைத்தார். நமது அரசியல் இயக்கம் மத தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தாலன்றி, அதனால் யாதொரு பலனும் ஏற்படாது என்று அவர் உறுதியாகக் கூறினார். அவரது மரணத்தைக் குறித்து 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் எழுதிய ஒருவர், கோகலேயினுடைய லட்சியத்தின் இந்த அம்சத்தை விசேஷமாகக் குறிப்பிட்டார். அரசியல் சந்நியாசி களை உருவாக்க வேண்டுமென்ற கோகலேயின் முயற்சிகள் பலனைக் கொடுக்க வேண்டுமாயின், இந்தியர் ஊழியர் சங்கம் கண் காணிப்புடன் இருக்க வேண்டும் என்றும் அந்த எழுத்தாளர் எச்சரித்தார். இந்தக் காலத்தில் அரசியல் சந்நியாசிகள்தான் சந்நியாச ஆசிரமத்தின் கொள்கையை நிறைவேற்ற முடியும். மற்றவர்கள் பெரும்பாலும் சந்நியாசியின் காஷாய வஸ்திரத்திற்கு இழுக்கு உண்டாகும்படியே நடந்து கொள்வார்கள். உண்மை யான சமய வழிகளைப் பின்பற்ற விரும்பும் எந்த இந்தியரும், அரசியலில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நிற்க முடியாது. அதாவது சமயப் பற்றுள்ள உண்மையான வாழ்க்கையில் ஆர்வ முள்ள ஒருவர், பொதுத் தொண்டைத் தமது வாழ்க்கையின் லட்சிய மாக மேற்கொள்ளாமல் இருக்க முடியாது. இன்று நாம் அரசியல் யந்திரத்தில் அளவுக்கு மீறிச் சிக்கிக் கொண்டிருப்பதால், அரசியலில் பங்கு எடுத்துக் கொள்ளாமல் பொது மக்களுக்கு நாம் தொண்டு செய்வது முடியாத காரியம். பண்டைய நாட்களில் நமது விவசாயிகள் தங்களை யார் ஆட்சி புரிகின்றனர் என்பதையே அறியாமல் இருந்தார்கள்; யாதொரு பீதியுமின்றி தங்களுடைய எளிய வாழ்க்கையை நடத்திவந்தார்கள். ஆனால் இனி அவர்கள் அவ்விதம் அக்கறையற்றவர்களாக இருக்க முடியாது. இன்றுள்ள நிலைமையில் அவர்கள் சமய மார்க்கத்தைப் பின்பற்றிக் கொண்டே அரசியல் நிலைமையையும் கவனித்துவரவேண்டும். இந்த உண்மையை, நமது சாதுக்களும், ரிஷிகளும், முனிவர்களும், மௌல்விகளும், புரோகிதர்களும் உணர்ந்தால், இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் இந்திய ஊழியர் சங்கம் ஏற்படும்; இந்தியா முழுவதும் சமய தத்துவம் நிலவும்; வெறுக்கத்தக்க தற்போதைய அரசியல் முறை தானாகவே திருந்திவிடும்; பண்டைய காலத்தில் இந்தியாவில் நிலவி வந்த ஆன்மிக தத்துவ சாம் ராஜ்யத்தை இந்தியா மீண்டும் பெறும்; இந்தியாவை இறுகப் பிணைத்துள்ள அடிமைத் தளைகள் ஒரு விநாடியில் தகர்ந்துவிடும். பின்னர், பண்டைய முனிவர் அமரத்துவம் வாய்ந்த பின் கண்ட மொழிகளால் வர்ணித்துக் கூறிய மகோன்னத நிலை உருவாகும்:

"கத்திகளைச் செய்வதற்கல்ல, கலப்பைக் கொழுக்களைச் செய்யவே இரும்பு உபயோகிக்கப்படும். சிங்கங்களும் ஆடுகளும் நட்புடனும் அன்புடனும் ஒன்று சேர்ந்துவாழும்.''

இத்தகைய நிலை ஏற்படுவதற்காக அல்லும் பகலும் உழைப்பதையே கோகலே தமது வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருந்தார். அதுதான் அவரது செய்தியாகும். அவர் கூறியவற்றையெல்லாம் திறந்த மனத்துடன் வாசிப்பவர்கள், அவரது ஒவ்வொரு வார்த்தையிலும் இந்தச் செய்தி அடங்கியிருப்பதை உணருவார்கள்.

மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி

# 7

# பயங்கரமான தண்டனை

1908 ஏப்ரல் 30-ஆம் தேதி குதிராம்போஸ் என்ற இளைஞர், முஸாபர்புரியில் அப்போது ஜில்லா மாஜிஸ்திரேட்டாக இருந்த கிங்ஸ்போர்டு மீது ஒரு வெடி குண்டை வீசி எறிந்தார். அவ்வமயம் 'கோச்' வண்டியில் சென்று கொண்டிருந்த ஆங்கிலப் பெண்களான ஸ்ரீமதி கென்னடியும், அவரது புதல்வியும், வண்டிக்காரரும் காயமடைந்து மாண்டனர். அதையொட்டி குதிராம் மீது நடந்த வழக்கில் அவர் மரண தண்டனை அடைந்தார். அச் சம்பவத்திற்குப் பிறகு லோகமான்ய திலகர் தமது பத்திரிகையான 'கேசரி'யில் வங்காளப் புரட்சிக்காரர்களின் உற்சாகத்தைப் பாராட்டி இரண்டு கட்டுரைகள் எழுதியிருந்தார். எனினும் அவர்களுடைய பலாத்கார முறைகளை திலகர் ஆதரிக்கவில்லை. அத்தகைய பிரச்னைகள் தீருவதற்கான ஒரே வழி, இந்தியாவுக்கு சுயாட்சி அளிப்பதுதான் என்றும் அவர் தமது கட்டுரைகளில் குறிப்பிட்டிருந்தார். பத்திரிகைகள் சட்டத்தின் மூலம் பொது மக்களின் அபிப்பிராயத்தை நசுக்க முற்படுவதைக் குறித்து அவர் அரசாங்கத்தையும் எச்சரித்தார். அக் கட்டுரையையொட்டி அவர் மீது நடந்த வழக்கில் ஆங்கிலோ-இந்தியர்களான ஏழு ஜூரிகள் அவர் குற்றவாளி என்றும், இந்தியர்களான இரண்டு ஜூரிகள் அவர் குற்றவாளி அல்ல என்றும் கூறினர். வழக்கை விசாரித்த நீதிபதி பெரும்பான்மையான ஜூரிகளின் அபிப்பிராயத்தை ஒப்புக் கொண்டு அவரை ஆறு வருடங்களுக்கு நாடு கடத்த வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர் அக் கொடிய தண்டனையைக் கண்டித்து 1-8-1908 'இந்தியன் ஒபினியன்' இதழில் காந்திஜி எழுதியதாவது :

மாபெரும் தேச பக்தரான திலகருக்கு விதிக்கப்பட்ட தண்டனை பயங்கரமானது. ஆறு வருடங்களுக்கு நாடுகடத்தும் தண்டனையுடன் ஒப்பிடும்போது, திரான்ஸ்வால் இந்தியர்கள் சில நாட்கள் சிறையில் துன்பத்திற்குள்ளாவது அற்ப விஷயமேயாகும்.

திலகருக்கு விதிக்கப்பட்டுள்ள தண்டனை பயங்கரமானதேயன்றி ஆச்சரியப்படத்தக்கதல்ல. அதைக் குறித்து வருந்துவதற்குமில்லை.

நாம் எதிர்க்க முற்படும் அரசாங்கம், நம்மீது கொடுமையான அடக்கு முறைகளைப் பிரயோகிப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. திலகர் மிகப் பெரிய மனிதர், பண்டிதர். அவரது தொண்டைப் பற்றி இந்த நாட்டிலுள்ள நாம் எழுத முற்படுவது அதிகப்பிரசங்கித்தனமாகும். தாய்நாட்டிற்கு அவர் செய்துள்ள தொண்டிற்காக அவரை நாம் போற்றி வணங்க வேண்டும். அவரது எளிமை அசாதாரணமானது. அவர் ஒரு மேதை என்ற புகழ் ஐரோப்பாவில் கூட பரவியிருக்கிறது.

இருந்தாலும், நாம் யாரைப் பெரியவர்கள் என்று மதிக்கின்றோமோ அவர்களுடைய கொள்கைகளை நாம் கண்மூடித்தனமாகப் பின்பற்றக்கூடாது. திலகர் எழுதியிருப்பதில் வெறுப்பு உணர்ச்சியே இல்லை என்று வாதிப்பது, அவரது பெருமைக்கே குந்தகம் விளைவிப்பதாகும். குத்தலாகவும், வெறுப்புடனும், மனத்தில் ஊடுருவிப்பாயும் வண்ணமும் எழுதுவதே அவரது நோக்கமாகும். பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக இந்தியர்களைத் தூண்ட வேண்டும் என்பதும் அவரது நோக்கம். இதைக் குறைத்துக் கூற முயற்சிப்பது ஸ்ரீ திலகரின் பெருமைக்கே இழுக்கு செய்வதாகும்.

அத்தகைய ஒருவர் மீது ஆட்சியாளர் நடவடிக்கை எடுத்துக் கொண்டது, அவர்களுடைய நோக்கில் நியாயமே. அவர்களுடைய ஸ்தானத்தில் நாம் இருந்தால், நாமும் அப்படியே செய்வோம். அவ்விஷயத்தை இத்தகைய கண்ணோட்டத்துடன் நாம் அணுகுவோமாயின், அவர்கள்மீது நமக்கு வெறுப்பு ஏற்பட வேண்டிய அவசியமில்லை.

இருந்தாலும், ஸ்ரீ திலகர் நமது வாழ்த்துக்களுக்கு உரியவராகிறார். அவ்விதம் துன்பத்திற்குள்ளாவதன் மூலம் அவர் அழியாப் புகழ் பெற்றுள்ளார்; இந்தியாவின் விடுதலைக்கும் அஸ்திவாரம் அமைத்துள்ளார்.

ஸ்ரீ திலகருக்கு விதிக்கப்பட்டுள்ள தண்டனையைக் கண்டு மக்கள் பயந்து விடக் கூடாது. அதற்கு மாறாக அவர்கள் அதைக் குறித்து மகிழ்ச்சியடைந்து தங்களுடைய தைரியத்தைக் கைவிடாமல் இருப்பார்களாயின், அந்த தண்டனை பின்னர் ஒரு வரப்பிரசாதமாகவே அமையும்.

ஸ்ரீ திலகரின் கருத்துகளையும் அவரது கட்சியினரின் கருத்துகளையும் இந்தியர்கள் அங்கீகரிக்க வேண்டுமா என்பதையே நாம் கவனிக்க வேண்டியது அவசியமாகும். ஸ்ரீ திலகரின் கருத்துகள் நிராகரிக்கப்பட வேண்டும் என்று மிகவும் தீர்க்காலோசனை செய்ததன் பலனாகவே நாம் பணிவுடன் கூறுகிறோம்.

பிரிட்டிஷ் ஆட்சியை வேரோடு களைவதால் மாத்திரம் இந்தியா நலன் பெறுவதற்கில்லை. அந்த ஆட்சியைக் களைவ

தற்கு நியாயமாகவோ அல்லது அநியாயமாகவோ பலாத்காரத்தை உபயோகிப்பதால் யாதொரு பலனும் ஏற்படாது; அது அபாயமாகவும் முடியும். பலாத்காரத்தின் மூலம் அடையும் விடுதலை நீடித்து இருக்க முடியாது. பலாத்காரத்தை உபயோகித்தால் ஐரோப்பிய மக்களைப்போல் நமது கதியும் துன்பத்திற்கு உள்ளாகும்படி நேரும்; பாமர மக்களுக்கும் பலன் ஏற்படாது; அவர்கள் ஒருவகையான அடிமைத்தனத்திலிருந்து மற்றொருவகையான அடிமைத்தனத்திற்கு ஆளாவார்கள். அத்தகைய முறையால் ஒருவருக்கும் லாபம் ஏற்படாது; ஒவ்வொருவருக்கும் நஷ்டமே உண்டாகும்.

பிரிட்டிஷ் ஆட்சியினால் மக்கள் நலன் பெறுமாறு செய்வதற்குற்ற மிகவும் எளிதான வழி சத்தியாக்கிரகம்தான் என்பதே நமது நம்பிக்கையாகும். பிரிட்டிஷ் ஆட்சி கொடுங்கோன்மையாக இருக்குமாயின், அதற்கு எதிராக மேற்கொள்ளப்படும் சத்தியாக்கிரகத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் எதிர்க்க முற்பட்ட உடனேயே அவர்களுடைய ஆட்சிக்கு ஒரு முடிவு ஏற்பட்டு விடும். ஸ்ரீ திலகருக்கு விதிக்கப்பட்ட தண்டனையைக் கண்டித்து வேலை நிறுத்தம் செய்த அதே தொழிலாளர்கள் சத்தியாக்கிரகிகளாக இருந்திருப்பார்களாயின், அவர்கள் தங்களுடைய எத்தகைய நியாயமான கோரிக்கைகளுக்கும் அரசாங்கம் இணங்கும்படி செய்திருக்க முடியும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நமது கடமை என்ன? ஸ்ரீ திலகர் முதலிய பெருமை வாய்ந்த மற்ற இந்தியர்களுக்கும் நமக்கும் கருத்து வேற்றுமை இருந்தாலும், அவர்களிடம் நமக்குள்ள விசேஷ மதிப்பு குன்றாமல் தொடர்ந்து இருந்துவர வேண்டும். தேசத்திற்காகத் துன்பங்களை அனுபவிப்பதில் அவர்களுக்குள்ள ஆற்றலை நாம் உதாரணமாகக் கொள்ள வேண்டும். அவர்கள் மாபெரும் தேசபக்தர்கள் ஆதலின், அவர்களுக்கு அளிக்கப்படும் எத்தகைய பெரிய கௌரவத்திற்கும் அவர்கள் உரியவர்களென நாம் கருதவேண்டும். நாமும் அதே தேசபக்தி உணர்ச்சியுடன் நடந்து கொள்ளவேண்டும். தாய் நாட்டிற்குத் தொண்டு புரிவதும், அதன் சுபிட்ச வாழ்வுக்காக உழைப்பதுமே நமது நோக்கம். அவர்களுடைய நோக்கமும் அதுதான். அந்த லட்சியத்தை அடைவதற்காக அவர்கள் செய்துவரும் தொண்டுடன் ஒப்பிடும் போது, நாம் மேற்கொண்டுள்ள போராட்ட முறை அவ்வளவு கடினமானதல்ல. எனினும் நமது முயற்சிகளின் பலன் ஆயிரம் மடங்கு அதிகச் சிறப்பு வாய்ந்ததாக இருக்கும் என்பது நமது உறுதியான அபிப்பிராயமாகும்.

# 8

# பிரிட்டிஷ் மந்திரிசபைத் தூது கோஷ்டியின் அறிக்கை

1. இந்தியாவுக்கு பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டியை அனுப்புவதற்கு முன், 15-3-1946-ல் பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஸ்ரீ அட்லி பார்லிமெண்டில் கூறியதாவது :

"மந்திரிசபையில் உள்ள எனது சகாக்கள் இந்தியாவுக்குச் செல்லுகிறார்கள். சாத்தியமானவரையில் துரிதமாகவும் பூரணமாகவும் இந்தியா சுதந்திரம் அடைவதற்கு உதவி புரியத் தங்களால் இயன்ற முயற்சிகளையெல்லாம் செய்ய வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கமாகும். தற்போதுள்ள ஆட்சி முறையை அகற்றி விட்டு அதன் ஸ்தானத்தில் எத்தகைய அரசாங்க முறையை அமைப்பதென்பது, இந்தியா முடிவு செய்ய வேண்டிய விஷயமாகும். ஆனால் அந்த முடிவைச் செய்வதற்கான முறைகளை இந்தியா மேற்கொள்வதற்கு உதவிபுரிய வேண்டும் என்பதே நமது விருப்பம்.

"தாங்கள் பிரிட்டிஷ் 'காமன் வெல்தி'ற்குள் இருக்க வேண்டுமென இந்தியாவும் இந்திய மக்களும் முடிவு செய்யலாம் என்றே நான் நம்புகிறேன். அவ்விதம் செய்வதால் அவர்களுக்கு ஏராளமான நன்மைகள் ஏற்படும் என்பது எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

"அவ்விதமே பிரிட்டிஷ் காமன்வெல்திற்குள் இருப்பதாக இந்தியா முடிவுசெய்தால், அது யாதொரு நிர்ப்பந்தமுமின்றி தன் (இந்தியாவின்) சொந்த விருப்பத்திற்கிணங்கவே செய்வதாக இருக்கவேண்டும்.

"பிரிட்டிஷ் காமன்வெல்தும் சாம்ராஜ்யமும் வெளி நிர்ப்பந்தம் காரணமாக ஒன்றாக இணைக்கப்பட்டிருக்கவில்லை. சுதந்திரமுள்ள மக்கள் தங்கள் சொந்த விருப்பத்தின் மீது ஒன்று சேர்ந்ததே காமன்வெல்தாகும். அதற்கு மாறாக இந்தியா சுயேச்சையாக இருப்பதென்று முடிவு செய்யுமாயின், அவ்விதமே செய்ய இந்தியாவுக்கு உரிமை உண்டு என்பதே எங்களுடைய அபிப்பிராயம். அந்த நிர்வாக மாற்றம், எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு எளிதாக இருக்கும்படி செய்ய உதவி புரிவதே எங்கள் கடமையுமாகும்."

2. சரித்திரப் புகழ் பெற்ற மேற்கண்ட வார்த்தைகளை மனத்திற் கொண்டு நாங்கள்,-பிரிட்டிஷ் மந்திரிகளும் வைஸ்ராயும்,-மூலாதாரமான ஒற்றுமை சம்பந்தமாகவோ அல்லது இந்தியாவைப் பிரிப்பதன் சம்பந்தமாகவோ ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள இந்-

தியாவிலுள்ள இரண்டு முக்கிய அரசியல் கட்சிகளுக்கும் எங்களால் இயன்ற உதவியைச் செய்துள்ளோம். புது டில்லியில் பல நாட்கள் வரை விவாதித்த பின், சிம்லாவில் நடந்த மகாநாட்டில் காங்கிரசும் முஸலிம் லீகும் கலந்து கொள்ளும்படி செய்வதில் நாங்கள் வெற்றி பெற்றோம். அவ்விரு கட்சியினரும் பரஸ்பரம் அபிப்பிராயங்களைத் தெரிவித்துக் கொண்டனர். ஒரு சமரச ஒப்பந்தம் ஏற்படுவதற்காக இரு சாராரும் மிகவும் விட்டுக் கொடுக்கவும் தயாராக இருந்தனர். எனினும் இரு கட்சிகளுக்கும் இடையே உள்ள பிளவை அகற்றி அவைகளை ஐக்கியப்படுத்துவது இறுதியில் அசாத்தியமாகியது. எனவே அவர்களுக்குள் யாதொரு ஒப்பந்தமும் செய்து கொள்ள முடியாமற்போயிற்று. அத்தகைய ஒப்பந்தம் எதுவும் ஏற்படாததால், இந்தியாவின் புதிய அரசியல் திட்டத்தைத் துரிதமாக அமைக்க எத்தகைய முறைகள் சிறந்தவை என்று எங்களுக்குத் தோன்றுகின்றனவோ, அவற்றை எடுத்துக் கூறவேண்டியது எங்களுடைய கடமை என்று நாங்கள் கருதுகிறோம். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முழு சம்மதத்தையும் பெற்றே இந்த அறிக்கை வெளியிடப்படுகின்றது.

3. இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டத்தை இந்தியர்களே தயாரிப்பதற்காக உடனடியான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென நாங்கள் தீர்மானித்திருக்கிறோம். புதிய அரசியல் திட்டம் உருவாகும் வரையில் பிரிட்டிஷ் இந்தியாவின் நிர்வாகத்தை நடத்திவர உடனடியாக ஓர் இடைக்கால அரசாங்கத்தை அமைக்கவேண்டும் என்றும் தீர்மானித்திருக்கிறோம். மக்கள் அடங்கிய பெரிய பிரிவினர், சிறிய பிரிவினர் ஆகிய எல்லோரிடமும் நியாயமாக நடந்து கொள்ளவும், எதிர் கால இந்தியாவை ஆட்சிபுரிய நடைமுறையில் சாத்தியமான வழியைப் பற்றி யோசனை கூறவும் நாங்கள் முயற்சித்திருக்கிறோம். அந்த யோசனையின் பலனாக இந்திய ராணுவம் பலம் வாய்ந்த அடிப்படையில் அமைவதுடன், சமூக, அரசியல், பொருளாதாரத் துறைகளில் இந்தியா வளர்ச்சி அடைவதற்கான சிறந்த சந்தர்ப்பமும் ஏற்படும்.

4. மந்திரி சபைத் தூது கோஷ்டியினிடம் சமர்ப்பிக்கப்பட்ட ஏராளமான சாட்சியங்களைக் குறித்து இந்த அறிக்கையில் விமர்சனம் செய்ய நாங்கள் உத்தேசிக்கவில்லை. முஸ்லிம் லீக் ஆதரவாளர்களைத் தவிர, மற்ற எல்லோரும் இந்தியாவின் ஐக்கியத்தில் ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள் என்பதை அந்தச் சாட்சியங்கள் காட்டுகின்றன.

5. எனினும் இந்த உண்மை, இந்தியாவைப் பிரிப்பது சாத்தியமா என்பதை நுணுக்கமாகவும் பாரபட்சமின்றியும் பரிசீலனை செய்வதிலிருந்து எங்களைத் தடுத்துவிடவில்லை. ஏனெனில் பெரும்பாலோரான ஹிந்துக்களின் ஆட்சிக்குத் தாங்கள் அடிபணியும்படி நேருமோ என்று முஸ்லிம்களுக்கு ஏற்பட்டுள்ள உண்மையான, தீவிரமான கவலையையும், கலக்கத்தையும் நாங்கள் முற்றிலும் உணர்ந்தோம். அந்த உணர்ச்சி முஸ்லிம்களிடையே பலமாகப்

பரவியிருக்கிறது. எனவே அவர்களுடைய பீதியைக் காகிதத்தில் குறிப்பிடும் வெறும் பாதுகாப்புகளால் தணித்துவிட முடியாது. இந்தியாவில் உள் நாட்டு அமைதி நிலவ வேண்டுமாயின், முஸ்லிம் களின் கலாச்சாரம், மதம், பொருளாதாரத் துறையிலும் மற்றத் துறைகளிலும் அவர்களுடைய நலன்கள் முதலியவற்றில் முஸ்லிம் களுக்கு நிச்சயமான அதிகாரம் அளிப்பதற்கான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

6. எனவே முஸ்லிம் லீக் கோரும், தனியான, முற்றிலும் சுயேச்சையான பாகிஸ்தான் ராஜ்யப் பிரச்னை பற்றி முதன் முத லாகப் பரிசிலனை செய்தோம். அத்தகைய பாகிஸ்தான் இரண்டு பிரதேசங்கள் அடங்கியதாக இருக்கும். அதாவது வடமேற்கே பஞ்சாப், சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பிரிட்டிஷ் பலுசிஸ்தான் ஆகியவை ஒரு பிரதேசமாகவும், வட கிழக்கில் வங்காளம், அஸ்ஸாம் மாகாணங்கள் மற்றொரு பிரதேசமாகவும் இருக்கும். அந்தப் பிரதேசங்களின் எல்லைகளைப் பிறகு சரிக் கட்டிக் கொள்ள முஸ்லிம் லீக் தலைவர்கள் தயாராக இருந்தனர் என்றாலும், பாகிஸ்தான் அமைக்கப்பட வேண்டும் என்ற கொள் கையை முதலில் அங்கீகரிக்குமாறு வற்புறுத்தினர். தனி பாகிஸ் தான் ராஜ்யம் ஏற்படவேண்டும் என்பதற்கு அவர்கள் கூறிய இரண்டு அடிப்படையான காரணங்கள் பின்வருமாறு:

அ. முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக இருக்கும் இடங் களில் அவர்களுக்குத் தங்கள் விருப்பப்படி அரசாங்க ஆட்சி முறையை அமைத்துக் கொள்ள உரிமை உண்டு.

ஆ. நிர்வாக ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் பாகிஸ் தான் நடைமுறையில் செயல்படுவதற்கு, முஸ்லிம்கள் சிறுபான்மை யினராக உள்ள கணிசமான இடங்களையும் பாகிஸ்தானுடன் சேர்க்க வேண்டியது அவசியமாகும்.

மேலே குறிப்பிட்ட ஆறு மாகாணங்கள் அடங்கிய பாகிஸ் தானில், முஸ்லிம் அல்லாத சிறுபான்மையோரின் தொகை மிகவும் அதிகமாக இருக்கும் என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்களி லிருந்து* தெரிந்து கொள்ளலாம்:

**வடமேற்குப் பிரதேசம்:-**

| | முஸ்லிம்கள் | முஸ்லிம் அல்லாதார் |
|---|---|---|
| பஞ்சாப் | 1,62,17,242 | 1,22,01,577 |
| எல்லைப்புற மாகாணம் | 27,88,797 | 2,49,270 |
| சிந்து | 32,08,325 | 13,26,683 |
| பிரிட்டிஷ் பலுசிஸ்தான் | 4,38,930 | 62,701 |
| | 2,26,53,294 | 1,38,40,231 |
| | (62 சத விகிதம்) | (38 சதவிகிதம்) |

* மேற்கண்ட புள்ளி விவரங்கள் 1941-ல் எடுக்கப்பட்ட ஜனத் தொகைக் கணக்கை அடிப்படையாகக் கொண்டவை.

வட கிழக்குப் பிரதேசம்:-

| | | |
|---|---|---|
| வங்காளம் | 3,30,05,434 | 2,73,01,091 |
| அஸ்ஸாம் | 34,42,479 | 67,62,254 |
| | 3,64,47,913 | 3,40,63,345 |
| | (51½ சதவிகிதம்) | (48½ சதவிகிதம்) |

பிரிட்டிஷ் இந்தியாவின் மற்றப் பாகங்களிலுள்ள முஸ்லிம் சிறுபான்மையோரின் தொகை சுமார் 2 கோடியாகும். 18 கோடியே 80 லட்சம் உள்ள மொத்த ஜனத்தொகையில் அவர்கள் பரவலாக இருக்கிறார்கள்.

எனவே முஸ்லிம் லீகின் கோரிக்கைக்கு இணங்க தனியாக பாகிஸ்தான் ராஜ்யத்தை ஏற்படுத்துவதால் சமூகப் பிரச்னை தீர்ந்து விடாது என்பதையே மேற்கண்ட புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. பஞ்சாப், வங்காளம், அஸ்ஸாம் மாகாணங்களில் எங்கே முஸ்லிம் அல்லாதார் அதிகமாக இருக்கிறார்களோ அந்த ஜில்லாக்களை பாகிஸ்தான் ராஜ்யத்துடன் சேர்ப்பது எவ்விதத்திலும் நியாயம் அல்ல என்றே நாங்கள் கருதுகிறோம். பாகிஸ்தானுக்குச் சாதகமாக உள்ள வாதங்கள் யாவும், முஸ்லிம் அல்லாதார் வசிக்கும் பிரதேசங்களைப் பாகிஸ்தானிலிருந்து பிரித்துவிட வேண்டும் என்பதற்கும் பொருத்தமாக இருக்கின்றன. அவ்விதம் பிரிக்காவிடில், சீக்கியர்கள் மிகவும் பாதிக்கப்படுவார்கள்.

7. எனவே முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக உள்ள பிரதேசங்களை மாத்திரம் சேர்த்து ஒரு சிறிய பாகிஸ்தான் ராஜ்யமாகப் பிரிப்பது ஒப்புக் கொள்ளத் தக்கதாக இருக்கலாம் என்று நாங்கள் கருதினோம். ஆனால் நடைமுறையில் அத்தகைய பாகிஸ்தான் செய்ல்படுவது முடியாத காரியமென முஸ்லிம் லீக் கருதியது. ஏனெனில் அவ்விதம் செய்தால் முஸ்லிம்கள் சிறுபான்மையோராக உள்ள அம்பாலா, பஞ்சாபிலுள்ள ஜலந்தர் பிரிவுகள், சில்ஹெட் ஜில்லாவைத் தவிர அஸ்ஸாமிலுள்ள மற்றப் பிரதேசங்கள், கல்கத்தா உள்பட மேற்கு வங்காளத்தில் பெரும் பகுதி ஆகியவை பாகிஸ்தானில் சேர முடியாது என்று லீகைச் சேர்ந்தவர்கள் கூறினர். அந்தப் பிரச்னையைத் தீர்க்க பஞ்சாபிலிருந்தும் வங்காளத்திலிருந்தும் கணிசமான பகுதிகளைப் பிரிப்பது, அம்மாகாணங்களிலுள்ள பெரும்பாலான மக்களின் விருப்பத்துக்கும் நலன்களுக்கும் முரணாகும் என்பது எங்களுடைய உறுதியான அபிப்பிராயமாகும். வங்காளம், பஞ்சாப் மாகாணங்கள் ஒவ்வொன்றிலும், அதற்குச் சொந்தமான பொது மொழியும், நீண்டகால வரலாறும், பாரம்பரியமும் இருக்கின்றன. அவற்றைத் தவிர, பஞ்சாபைப் பிரிப்பதால், சீக்கியர்கள் அடங்கிய கணிசமான பகுதியினர் எல்லைக்கு இருபுறங்களிலும்

இருக்கும்படியான அவசியம் ஏற்படும்; எனவே பாகிஸ்தான் சிறிய ராஜ்யமாக அமைந்தாலும், பெரிய ராஜ்யமாக அமைந்தாலும், அதனுல் சமூகப் பிரச்னை திருப்திகரமாகத் தீராது என்று நாங்கள் முடிவு செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

*8.* பிரிவினைக்கு எதிராக மேலே குறிப்பிட்டுள்ள ஆதார பூர்வமான வாதங்களைத் தவிர, நிர்வாக, பொருளாதார, ராணுவ சம்பந்தமான முக்கியமான காரணங்களும் இருக்கின்றன. இந்தியாவிலுள்ள போக்குவரத்து, தபால், தந்தி ஸ்தாபனங்கள் யாவும் ஐக்கிய இந்தியாவின் அடிப்படையிலேயே அமைக்கப் பட்டுள்ளன. அவைகளைப் பிரிப்பது, இந்தியாவின் இரு பாகங்களுக்கும் (இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும்) மிகுந்த பாதகத்தை விளைவிக்கும். ராணுவத்தைப் பொறுத்தமட்டில், இந்தியா ஐக்கியமாக இருக்கவேண்டியது மிகமிக அவசியமாகும். இந்தியா முழுவதற்கும் தற்காப்பாக இருக்க வேண்டும் என்ற அடிப்படையிலேயே ராணுவமும் உருவாக்கப்பட்டிருக்கிறது. எனவே அத்தகைய ராணுவத்தை இரண்டாகப் பிளப்பது இந்திய ராணுவத்தின் மகத்தான திறமையையும், நீண்டகால பாரம்பரியத்தையும் தகர்த்துவிடுவதுடன், பேரபாயத்திற்கும் காரணமாகிவிடும். அதன் விளைவாக இந்தியக் கடற்படை, இந்திய ஆகாயப்படையின் திறமையும் குன்றிவிடும். உத்தேசிக்கப்பட்டுள்ள பாகிஸ்தானின் இரு பிரிவுகளும் பகைவர்களின் தாக்குதல்களுக்கு எளிதில் இலக்காகக் கூடியவை. எனவே வெற்றிகரமான தற்காப்புக்கு பாகிஸ்தான் பிரதேசங்கள் தகுதியானவை அல்ல.

*9.* மற்ரெரு முக்கிய விஷயமும், பாகிஸ்தான் ஏற்படுவதற்குப் பெரும் தடையாக இருக்கிறது. அதாவது பிரிக்கப்பட்ட பிரிட்டிஷ் இந்தியாவுடன் இந்திய சமஸ்தானங்கள் இணைந்திருப்பது மிகவும் கடினமாகும்.

*10.* இறுதியாக, பூகோள ரீதியான உண்மையும் பாகிஸ்தான் அமைவதற்குத் தடையாக இருக்கிறது. உத்தேசிக்கப்பட்டுள்ள பாகிஸ்தான் ராஜ்யத்தின் இரண்டு பகுதிகளும் ஒன்றுக்கொன்று சுமார் எழுநூறு மைல்கள் தூரத்தில் இருக்கின்றன. யுத்த காலமாயினும், சமாதான காலமாயினும், அவ்விரண்டு பகுதிகளும் தங்களுடைய போக்குவரத்துக்கு ஹிந்துஸ்தானத்தின் தயவையே நாட வேண்டியிருக்கும்.

*11.* எனவே தற்போதுள்ள அரசாங்க நிர்வாக அதிகாரத்தை முற்றிலும் தனித்தனியாக இரண்டு ராஜ்யங்களிடம் ஒப்புவிக்குமாறு நாங்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு ஆலோசனை கூற முடியாதவர்களாக இருக்கிருேம்.

*12.* இருந்தாலும் கூட, ஐக்கிய இந்தியாவில் தங்களுடைய கலாச்சார, அரசியல், பொருளாதார வாழ்வு இருக்குமிடம் தெரியாமல் மறைந்துவிடும் என்று முஸ்லிம்கள் பீதி அடைவதில் உண்மை இருக்கிறது. ஐக்கிய இந்தியாவில் ஹிந்துக்கள் மிகப்

பெரும்பான்மையோராக இருப்பதால், அவர்களுடைய ஆதிக்கமே மேலோங்கியிருக்கும் என்பது முஸ்லிம்களின் பீதியாகும். இவற்றையெல்லாம் நாங்கள் அறிந்து கொள்ளாமலில்லை. முஸ்லிம்களின் பீதியைப் போக்க காங்கிரஸ் ஒரு திட்டத்தை தயாரித்திருக்கிறது. அதன்படி வெளிநாட்டு விவகாரங்கள், தற்காப்பு, தபால் தந்தி போக்குவரத்து ஆகியவை மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்திலேயே இருந்துவரும். இவற்றைத் தவிர மற்றவைகளின் நிர்வாகத்தில் மாகாணங்களுக்கு சுயேச்சையான அதிகாரம் உண்டு.

*13.* அத்தகைய திட்டத்தினால் பல அரசியல் அசௌகரியங்களும் விபரீதங்களும் ஏற்படும் என்பது எங்களுடைய அபிப்பிராயமாகும். அத்தகைய திட்டத்திற்கிணங்க அமைக்கப்படும் மத்திய அரசாங்கத்திலும் சட்டசபையிலும் சில மந்திரிகள் இந்தியா முழுவதற்கும் பொறுப்பாளிகளாகவும் சில மந்திரிகள் குறிப்பிட்ட மாகாணங்களுக்கு மாத்திரமே பொறுப்பாளிகளாகவும் இருப்பார்கள். சட்டசபை அங்கத்தினர்களில் சிலருக்குத் தங்கள் மாகாணங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றிப் பேசவோ, வோட்டுக் கொடுக்கவோ முடியாத நிலை ஏற்படும்.

*14.* இவ்விஷயமாக எங்களுடைய சிபாரிசுகள் என்ன என்பதைக் குறிப்பிடுவதற்கு முன், சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் உள்ள உறவை நாங்கள் பரிசீலனை செய்ய முற்படுகிறோம். பிரிட்டிஷ் இந்தியா சுதந்திரம் பெற்ற பின், அது பிரிட்டிஷ் காமன்வெல்திற்கு உள்ளே இருந்தாலும் சரி, வெளியிலிருந்தாலும் சரி, பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் சமஸ்தான மன்னர்களுக்கும் இருந்துவந்துள்ள உறவு மேற்கொண்டு நீடிப்பது சாத்தியமல்ல. பின்னர் சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட வரையில் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு இருந்துவந்த அதிகாரத்தை வைத்துக் கொள்வதும் இயலாத காரியம்; அதை இந்திய அரசாங்கத்தினிடம் மாற்றுவதும் முடியாத காரியம். சமஸ்தானங்களில் நாங்கள் யாரைப் பேட்டி கண்டோமோ அவர்கள் இந்த உண்மையை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். எனினும் இந்தியாவில் ஏற்படும் புதிய நிலைமையில் தாங்கள் எவ்விதத்திலும் ஒத்துழைக்க ஆர்வமுடையவர்களாக இருப்பதாய் உறுதி கூறினர்கள். அவர்களுடைய ஒத்துழைப்பு எப்படி இருக்க வேண்டும் என்பது புதிய அரசியல் திட்டம் உருவாகும்போது சமரசமாக முடிவு செய்யப்பட வேண்டும். எல்லா சமஸ்தானங்களின் ஒத்துழைப்பும் ஒரே விதமாக இருக்கும் என்று சொல்ல முடியாது. எனவே அடுத்து வரும் பாராக்களில் நாங்கள் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களைப் போல் சமஸ்தானங்களைப் பற்றி விவரமாகப் பரிசீலனை செய்யவில்லை.

*15.* எல்லாக் கட்சிகளின் முக்கியமான கோரிக்கைகளுக்கும், நீதி வழங்கும் முறையில் எங்களுடைய சிபாரிசுகள் என்ன என்பதை இப்போது நாங்கள் குறிப்பிடுகிறோம். நடைமுறையில் சாத்தியமான, உறுதியான இந்திய அரசியல் திட்டத்தை உருவாக்குவதற்கும் அந்த சிபாரிசுகள் உதவியாக இருக்கும்.

பின் கண்ட அடிப்படையில் அரசியல் திட்டம் உருவாக வேண்டுமென நாங்கள் சிபாரிசு செய்கிறோம்.

1. பிரிட்டிஷ் இந்தியாவும் சமஸ்தானங்களும் அடங்கிய இந்திய யூனியன் அரசாங்கம் அமைக்கப்படவேண்டும். வெளி நாட்டு விவகாரங்கள், தற்காப்பு, போக்குவரத்துகள் முதலியவை அந்த அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருந்துவரும். மேற்கண்ட துறைகளுக்கான நிதி வசூல் செய்வதற்கும் அந்த அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு.

2. யூனியனில், பிரிட்டிஷ் இந்தியர்களும் சமஸ்தானப் பிரதி நிதிகளும் அடங்கிய நிர்வாக சபையும் சட்ட சபையும் இருக்கும். முக்கியமாக சமூகப் பிரச்னை விவாதத்துக்கு வந்து, அதையொட்டி ஒரு முடிவு செய்ய வேண்டுமாயின், இரண்டு பெரிய சமூகப் பிரதி நிதிகளில் அந்தந்த சமூகத்தைச் சேர்ந்த பெரும்பாலோரும், சபை யிலுள்ள பெரும்பாலோரும் அதற்கு ஆதரவாக வோட்டுக் கொடுக்க வேண்டும்.

3. யூனியன் நிர்வாகத்திலுள்ள துறைகளைத் தவிர மற்றத் துறைகளின் நிர்வாகத்தில் மாகாணங்களுக்கே பூரண அதிகாரம் உண்டு.

4. அதுபோலவே யூனியன் நிர்வாகத்திலுள்ள துறைகளைத் தவிர மற்றத் துறைகளின் நிர்வாகத்தில் சமஸ்தானங்களுக்கு பூரண அதிகாரம் உண்டு.

5. கோஷ்டிகளாகப் பிரிந்து நிர்வாக சபைகளையும் சட்ட சபைகளையும் அமைத்துக் கொள்ள மாகாணங்களுக்கு உரிமை உண்டு. அந்தக் கோஷ்டிகள், பொதுவாக மேற்கொள்ளக் கூடிய மாகாண நிர்வாகத் துறைகளை நிர்ணயம் செய்து கொள்ளலாம்.

6. யூனியன் அரசியல் அமைப்பிலும், கோஷ்டிகளின் அமைப் பிலும் ஒரு விதி சேர்க்கப்படவேண்டும். அரசியல் திட்டம் அமு லுக்கு வந்த முதல் பத்து வருடங்களுக்கு பிறகு அரசியல் விதி களைப் புனராலோசனை செய்யுமாறு எந்த மாகாணமும் கோரலாம். ஆனால் அந்தக் கோரிக்கை சட்டசபையில் பெரும்பான்மையான வோட்டுகள் பெற்று நிறைவேற வேண்டும். அதற்குப் பிறகும் அதே நிபந்தனையின் மீது பத்து வருடங்களுக்கு ஒரு முறை அர சியல் விதிகளைப் புனராலோசனை செய்யும்படி கோர மாகாணங் களுக்கு உரிமை உண்டு.

16. மேற்கண்ட அம்சங்களை முக்கியமாகக் கொண்டு அரசியல் திட்ட விவரங்களைக் குறிப்பிடுவது எங்களுடைய நோக்கம் அல்ல. ஆனால் இந்தியர்களுக்காக, இந்தியர்களாலேயே ஓர் அரசியல் திட்டம் உருவாக்கப்படுவதற்கான ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதே எங்களுடைய நோக்கமாகும்.

மேலும் இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டத்திற்கான ஒரு பரந்த அடிப்படை முறையைச் சிபாரிசு செய்ய வேண்டிய

அவசியம் எங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அவ்வாறு செய்தா லொழிய அரசியல் திட்டத்தைத் தயாரிக்கும் ஸ்தாபனத்தில் இரு பெரிய சமூகங்களும் சேர்ந்து கொள்ளும்படி செய்வது சாத்தியமல்ல என்பதை, சமரசப் பேச்சுகளின்போது நாங்கள் தெளிவாகத் தெரிந்து கொண்டோம்.

17. அரசியல் திட்டத்தை உருவாக்கும் ஸ்தாபனத்தைப் பற்றி இப்போது நாங்கள் குறிப்பிடுகிறோம். புதிய அரசியலை உடனடியாகத் தயாரிப்பதற்காகவே அத்தகைய ஸ்தாபனம் அமைக்கப்பட வேண்டும்.

18. ஒரு புதிய அரசியல் அமைப்பைத் தீர்மானிப்பதற்காக நிறுவப்படும் எந்தச் சபையும் பரந்த அடிப்படையில் இருக்க வேண்டும்; சாத்தியமானவரையில் ஜனத்தொகைக்குத் தகுந்த பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இருக்கவேண்டும். எனவே வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் அச் சபைக்குத் தேர்தல் நடத்துவதே திருப்திகரமான முறையாக இருக்கும். ஆனால் இப்போது அத்தகைய முயற்சியை மேற் கொள்வதால், புதிய அரசியலை அமைப்பதில் மிகுந்த தாமதம் ஏற்படும். எனவே இந்நிலையில் நடைமுறையில் சாத்தியமான மாற்று முறை என்னவெனில், மாகாண சட்டசபைகளிலிருந்து அரசியல் நிர்ணய சபைக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதே யாகும். இதிலும் சங்கடமான இரண்டு விஷயங்கள் இருக் கின்றன. ஒவ்வொரு மாகாணத்திலும் அதன் மொத்த ஜனத் தொகைக்குத் தகுந்தவாறு சட்டசபையில் அங்கத்தினர்களின் எண்ணிக்கை இல்லை. உதாரணமாக, ஒருகோடி ஜனத்தொகை யுள்ள அஸ்ஸாமில் சட்டசபை அங்கத்தினர்களின் தொகை 108-ஆக இருக்கிறது. ஆனால் அதைப் போல் ஆறுமடங்கு அதிக ஜனத்தொகையுள்ள வங்காளத்தில் சட்டசபை அங்கத் தினர்களின் தொகை 250 தான். இரண்டாவதாக, வகுப்புத் தீர்ப்புக்கு இணங்க சிறுபான்மையோருக்கு அதிக ஸ்தானங் கள் கொடுக்கப்பட்டிருப்பதால், ஒவ்வொரு சட்டசபையிலும் உள்ள பல்வேறு சமூகப் பிரதிநிதிகளின் தொகை, அந்த மாகாணத்தில் அச் சமூகத்தின் மொத்த ஜனத்தொகைக்கு ஏற்ற தாக இல்லை. உதாரணமாக, வங்காளத்தில் உள்ள மொத்த ஜனத் தொகையில் 55 சத விகிதத்தினர் முஸ்லிம்களாக இருந்தும், வங்காள சட்டசபையில் அவர்களுக்கு 48 சத விகிதம்தான் ஸ்தானங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஏற்றத் தாழ்வு களைச் சீர்படுத்துவதற்கான பல்வேறு முறைகளையும் பற்றி நாங்கள் தீர்க்காலோசனை செய்த பின், நடைமுறையில் சிறந்த, மிகவும் நியாயமான முறை இதுதான் என்ற முடிவுக்கு வந்திருக் கிறோம்:

(அ) ஒவ்வொரு மாகாணத்திற்கும் அதன் ஜனத்தொகைக் குத் தகுந்தவாறு அரசியல் நிர்ணய சபையில் ஸ்தானங்கள் அளிக்கப்படவேண்டும். 10 லட்சம் மக்களுக்கு ஒரு பிரதிநிதி

விகிதம் தேர்ந்தெடுக்கலாம். இது சற்றேறக்குறைய வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் தேர்ந்தெடுப்பது போன்றதேயாகும்.

(ஆ) ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள முக்கிய வகுப்புகளின் ஜனத்தொகைக்குத் தகுந்தவாறு ஸ்தானங்கள் பகிர்ந்தளிக்கப்படவேண்டும்.

(இ) ஒரு மாகாணத்தில் ஒவ்வொரு சமூகத்திற்கும் எத்தனை ஸ்தானங்கள் ஒதுக்கிவைக்கப்படுகின்றனவோ, அந்த ஸ்தானங்களுக்கு அந்தந்த மாகாணச் சட்டசபையிலுள்ள அந்தந்த சமூகத்திலிருந்தே அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

இதற்காக இந்தியாவிலுள்ள மூன்று முக்கிய சமூகங்களை எடுத்துக் கொள்வது போதுமானது. அவையாவன: பொதுவான சமூகம், முஸ்லிம், சீக்கிய சமூகங்கள். முஸ்லிம்களல்லாத, சீக்கியர்களல்லாத மற்ற சமூகங்களையெல்லாம் பொதுவான சமூகங்களாகக் கருதலாம். மிகச் சிறிய சிறுபான்மை சமூகத்தினருக்கு கீழே 20-வது பாராவில் குறிப்பிட்டுள்ளபடி பிரதிநிதித்துவம் அளிக்கலாம்.

19. எனவே ஒவ்வொரு மாகாண சட்ட சபையிலிருந்தும் கீழ்க்கண்டவாறு பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கலாமென நாங்கள் கருதுகிறோம்.

### பிரதிநிதிகளின் அட்டவணை

#### பிரிவு ஏ

| மாகாணம் | பொது | முஸ்லிம் | மொத்தம் |
|---|---|---|---|
| சென்னை | 45 | 4 | 49 |
| பம்பாய் | 19 | 2 | 21 |
| ஐக்கிய மாகாணம் | 47 | 8 | 55 |
| பீகார் | 31 | 5 | 36 |
| மத்திய மாகாணம் | 16 | 1 | 17 |
| ஒரிஸ்ஸா | 9 | 0 | 9 |
| மொத்தம் | 167 | 20 | 187 |

#### பிரிவு பி

| மாகாணம் | பொது | முஸ்லிம் | சீக்கியர் | மொத்தம் |
|---|---|---|---|---|
| பஞ்சாப் | 8 | 16 | 4 | 28 |
| எல்லைப்புற மாகாணம் | 0 | 3 | 0 | 3 |
| சிந்து | 1 | 3 | 0 | 4 |
| மொத்தம் | 9 | 22 | 4 | 35 |

பிரிவு ஸி

| மாகாணம் | பொது | முஸ்லிம் | மொத்தம் |
|---|---|---|---|
| வங்காளம் | 27 | 33 | 60 |
| அஸ்ஸாம் | 7 | 3 | 10 |
| மொத்தம் | 34 | 36 | 70 |

| | |
|---|---|
| பிரிட்டிஷ் இந்தியாவின் பிரதிநிதிகள் | 292 |
| அதிகபட்சமாக இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் | 93 |
| மொத்தம் | 385 |

இவர்களைத் தவிர ஏ பிரிவில் மத்திய சட்ட சபையில் உள்ள டில்லி பிரதிநிதியையும், ஆஜ்மீர்-மர்வாரா பிரதிநிதியையும், குடகு சட்டசபையிலிருந்து ஒரு பிரதிநிதியையும் நியமிக்கலாம்.

பி பிரிவில் பிரிட்டிஷ் பலுசிஸ்தானத்தின் பிரதிநிதி ஒருவரைச் சேர்த்துக் கொள்ளலாம்.

இறுதியாக அரசியல் நிர்ணய சபையில் சமஸ்தானங்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும். ஆனால் சமஸ்தானப் பிரதிநிதிகளின் தொகை 93-க்கு மேற்படக்கூடாது. ஆரம்பக் கட்டத்தில் சமஸ்தானங்களில் ஒரு சமரசக் கமிட்டி பிரதிநிதித்துவம் வகிக்கலாம்.

அவ்விதம் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் புது டில்லியில் கூடவேண்டும்.

விவாதிக்கவேண்டிய விஷயங்கள் பற்றி அவர்களின் பூர்வாங்கக் கூட்டத்தில் தீர்மானிக்கப்படும். பின்னர் மாகாணங்களின் பிரதிநிதிகள் மேலே குறிப்பிட்டுள்ள மூன்று பிரிவுகளாகப் பிரிந்து மாகாணங்களின் அரசியல் அமைப்புகளை நிர்ணயிக்க முற்படுவார்கள்.

மேற்கண்ட பிரிவுகளின் பிரதிநிதிகளும் இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகளும் சேர்ந்து யூனியன் அரசியலை நிர்ணயிக்க முற்படுவார்கள்.

மிக மிக முக்கியமான வகுப்புப் பிரச்னைகள் அடங்கிய தீர்மானங்கள் எவை என்பதை, அரசியல் நிர்ணய சபைத் தலைவர் முடிவு செய்வார். இரு பெரிய சமூகங்களில் எச் சமூகத்தின் பிரதிநிதிகளாவது கேட்டுக்கொள்வார்களாயின், தலைவர் தமது முடிவைக் கூறுமுன் அவ்விஷயமாக பெடரல் கோர்ட்டாரையும் கலந்து ஆலோசிப்பார்.

புதிய அரசியல் ஏற்பாடுகள் அமுலுக்கு வந்தபின், எந்த மாகாணமாவது குறிப்பிட்ட கோஷ்டியை விட்டுவிட்டு வெளியேற விரும்புமாயின், புதிய அரசியல் திட்டத்தின்படி நடைபெறும் முதலாவது பொதுத் தேர்தலுக்குப் பிறகு அமைக்கப்படும் சட்டசபையில் அவ்விதம் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும்.

20. சிறுபான்மையோர், பூர்வகுடிகள் ஆகிய குறிப்பிட்ட பிரிவினரின் உரிமைகள் சம்பந்தமான ஆலோசனைக் கமிட்டியில் அப்பிரிவினருக்கு பூரண பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும். மூலாதாரமான உரிமைகள் அடங்கிய ஜாபிதா, சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு அளிப்பதன் சம்பந்தமான விதிகள், அத்தகைய பிரதேசங்களின் நிர்வாகத்திற்கான திட்டம் ஆகியவைபற்றி அரசியல் நிர்ணய சபைக்கு ஓர் அறிக்கை அனுப்புவதே அவர்களுடைய கடமையாகும். அந்த உரிமைகள் மாகாணங்களின் அரசியல் திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டுமா அல்லது யூனியன் அரசியல் திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டுமா என்பதுபற்றி அவர்கள் ஆலோசனையும் கூறவேண்டும்.

21. அரசியல் நிர்ணய சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும்படி மாகாண சட்டசபைகளையும், ஒரு சமரசப் பேச்சுக் கமிட்டியை அமைக்கும்படி சமஸ்தானங்களையும் வைஸ்ராய் உடனடியாகக் கேட்டுக்கொள்வார். எனவே அரசியல் திட்டத்தை தயாரிக்கும் அலுவல்கள் துரிதமாக நடைபெறும் என்று நம்பப்படுகிறது.

22. நிர்வாக அதிகாரத்தை மாற்றுவதன் மூலம் எழும் சில விஷயங்களையொட்டி அரசியல் நிர்ணய சபைக்கும் பிரிட்டனுக்கும் இடையே ஓர் உடன்படிக்கை ஏற்படவேண்டியது அவசியமாக இருக்கும்.

23. ஒருபுறம் அரசியல் திட்டத்தைத் தயாரிக்கும் அலுவல்கள் நடைபெற்றுவரும்போது, மற்ரெருபுறம் இந்தியாவின் நிர்வாகம் சீராக நடந்துவர வேண்டும் அல்லவா? எனவே உடனே ஓர் இடைக்கால அரசாங்கத்தை அமைக்க வேண்டியது மிக மிக முக்கியமானதென்று நாங்கள் கருதுகிரேம். அந்த இடைக்கால அரசாங்கத்திற்கு, பெரிய அரசியல் கட்சிகளின் ஆதரவு இருக்கவேண்டும். இடைக்காலத்தில் இந்திய அரசாங்கம் சமாளிக்க வேண்டியிருக்கும் பிரச்னைகளையொட்டி பெரிய அரசியல் கட்சிகளின் ஒத்துழைப்பு பெரும் அளவில் இருக்க வேண்டும். தினசரி நிர்வாக அலுவல்களைத் தவிர, இந்திய அரசாங்கம் பஞ்சத்தினல் ஏற்படக்கூடிய அபாயங்களைச் சமாளிக்க நேரும்; யுத்தத்திற்குப் பின் இந்தியாவின் எதிர்கால வளர்ச்சியை யொட்டிப் பல புரட்சிகரமான தீர்மானங்களைச் செய்ய வேண்டியிருக்கும். பல முக்கியமான சர்வதேச மகாநாடுகளில் இந்தியாவின் பிரதிநிதிகள் கலந்து கொள்ளவேண்டிய அவசியம்

ஏற்படும். எனவே இவற்றிற்கெல்லாம் பொது மக்களின் ஆதரவு பெற்ற ஓர் அரசாங்கம் இருக்க வேண்டியது அவசியமாகும். இந்த நோக்கத்துடன் ஏற்கனவேயே வைஸ்ராய் பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்துள்ளார். அதன் பலனாக, விரைவில் ஓர் இடைக்கால அரசாங்கத்தை அமைக்கலாம் என்றும் நம்புகிறார். அந்த அரசாங்கத்தில் யுத்த மந்திரி பதவி உட்பட எல்லா மந்திரி பதவிகளையும் மக்களின் முழு நம்பிக்கைக்குப் பாத்திரர்களான இந்தியத் தலைவர்களே வகிப்பார்கள். பிரிட்டிஷ் சர்க்காரும் இந்திய அரசாங்கத்தில் ஏற்படும் மாறுதல்களின் கருத்தை நன்கு உணர்ந்து அவ்விதம் அமைக்கப்பட்ட இடைக்கால அரசாங்கத்திற்கு முழு ஆதரவு அளிப்பார்கள்.

24. இப்போது பூரண சுயாட்சி பெறுவதற்கான சந்தர்ப்பம் இந்தியத் தலைவர்களுக்கும் இந்திய மக்களுக்கும் கிடைத்திருக்கிறது. எனவே அவர்களுக்கு நாங்கள் இறுதியாகக் கூறுவது இதுதான் :

புதிய அரசியலை உருவாக்கும் முறையையொட்டி இந்திய மக்களுக்குள்ளேயே ஒரு சமரசம் ஏற்படுவது சாத்தியமென நாங்களும், எங்கள் அரசாங்கமும், எங்கள் தேச மக்களும் நம்பினோம். இந்தியாவிலுள்ள கட்சிகளுடன் சேர்ந்து நாங்கள் பொறுமையுடனும் நல்லெண்ணத்துடனும் எவ்வளவோ முயற்சி செய்தும், அத்தகைய சமரசம் ஏற்படுவது சாத்தியமில்லாமல் போய் விட்டது. எனவே எல்லாக் கட்சியினரும் கூறியவற்றையெல்லாம் கேட்டபின், மிகவும் தீர்க்காலோசனை செய்து நாங்கள் இந்த யோசனைகளைக் கூறியுள்ளோம். உள்நாட்டுக் கலகம், தகராறு முதலிய அபாயத்திற்கு இடமின்றி, நீங்கள் மிகவும் விரைவில் சுயேச்சை பெற இந்த யோசனைகள் உதவியாக இருக்குமென நம்புகிறோம். இந்த யோசனைகள் எல்லாக் கட்சிகளுக்கும் பூரண திருப்தியை அளிக்காமலிருக்கலாம். எனினும் இந்திய சரித்திரத்திலேயே மிகவும் முக்கியமான இந்தக் கட்டத்தில், பரஸ்பரம் விட்டுக்கொடுத்து சமரசமான முடிவிற்கு வருவதே ராஜதந்திரமாகும் என்பதை நீங்கள் எல்லோரும் உணருவீர்கள்.

இந்த யோசனைகள் ஒப்புக்கொள்ளப்படாவிட்டால் வேறு மாற்று வழி என்ன என்பதையும் யோசிக்கும்படி நாங்கள் உங்களைக் கேட்டுக் கொள்கிறோம். ஒரு சமரச ஒப்பந்தம் ஏற்படுவதற்காக நாங்களும் இந்தியாவிலுள்ள கட்சிகளும் சேர்ந்து எவ்வளவோ முயற்சி செய்தோம். இந்தியாவிலுள்ள கட்சிகள் மாத்திரம் சேர்ந்து அமைதியாக ஒரு சமரச முடிவிற்கு வரும் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை. இந்த யோசனைகள் ஒப்புக் கொள்ளப்படாவிட்டால், பேரபாயத்தை விளைவிக்கக்கூடிய பலாத்காரத்திற்கும், குழப்பத்திற்கும், உள்நாட்டுப் போருக்கும் கூட வழி ஏற்பட்டுவிடும். அத்தகைய கலகம் எவ்வளவு காலம் நீடிக்கும் என்பதையும் சொல்லுவதற்கில்லை. எனினும் அது கோடிக்

கணக்கான ஆடவர்கள், பெண்கள், குழந்தைகளுக்கு பயங்கர மான ஆபத்தாக முடியும் என்பது மாத்திரம் நிச்சயம்தான். அத்தகைய நிலைமை ஏற்படுவதை இந்திய மக்களோ, எங்கள் தேச மக்களோ, உலக மக்களோ விரும்பமாட்டார்கள் என்பதும், வெறுப்பார்கள் என்பதும் நிச்சயம்.

நாங்கள் நல்லெண்ணத்துடனும், உதவிபுரியும் நோக்கத்துட னும் இந்த யோசனைகளைக் கூறியிருக்கிறோம். இதே உணர்ச்சி யுடன் இவை ஒப்புக்கொள்ளப்படும் என்றும், அமலுக்குக் கொண்டுவரப்படும் என்றும் ஆழ்ந்த நம்பிக்கையுடன் இந்த யோசனைகளை உங்கள் முன்னிலையில் வைத்துள்ளோம். இந்தி யாவின் எதிர்கால நலனில் மனப்பூர்வமான அக்கறையுள்ள வர்கள் யாவரையும், தங்கள் தங்கள் சொந்த சமூக நலன்களைக் கவனியாமல், நாற்பது கோடி இந்திய மக்களின் நலன்களில் அக் கறை கொள்ளும்படி வேண்டிக்கொள்கிறோம்.

சுயேச்சை பெறும் நவ இந்தியா, பிரிட்டிஷ் காமன்வெல் திற்கு உள்ளேயே இருக்க விரும்புமென நம்புகிறோம். அது எப்படியாயினும், நீங்கள் பிரிட்டிஷ் மக்களுடன் நட்புடனும், நெருங்கிய தொடர்புடனும் இருந்துவருவீர்களென்றும் நம்பு கிறோம். எனினும் இது முற்றிலும் உங்களுடைய சொந்த விருப் பத்தைப் பொறுத்தது. நீங்கள் எப்படி முடிவு செய்தாலும், உலகத்திலுள்ள பெரிய நாடுகளிடையே நீங்கள் சுபிட்சத்துடன் விளங்கும் காலத்தை நாங்கள் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறோம். சென்ற காலத்தைக் காட்டிலும் உங்களுடைய எதிர்காலம் அதிகச் சிறப்புடன் விளங்கவேண்டும் என்பதும் எங்களுடைய ஆர்வ மாகும்.

புது டில்லி, மே *16, 1946*

# 9

# ஏப்ரல் ஆறும் பதின்மூன்றும்

ஏப்ரல் *6*-ஆம் தேதியை நாம் மறப்பதென்பது சாத்தியமல்ல. அந்த தினம்தான் இந்தியா முழுவதும் ஜீவசக்தியை உண்டாக் கியது. ஏப்ரல் *13*-ம் தேதி ஜாலியன்வாலாபாக்கில் அதிகாரிகள் நிரபராதிகளின் ரத்தத்தைச் சிந்தியதால், இந்தியா முழு வதற்கும் பஞ்சாப் ஒரு யாத்திரை ஸ்தலமாகியிருக்கிறது. ஏப்ரல் *6*-ம் தேதிதான் சத்தியாக்கிரகத்திற்கு அங்கு ரார்ப்பணம் செய்யப்பட்டது. சத்தியாக்கிரகத்தில் உள்ள சட்ட மறுப்பு அம்சத்தைச் சிலர் ஒத்துக் கொள்ளாமல் இருக்கலாம். ஆனால் அதில் அடங்கியுள்ள சத்தியம், அன்பு அல்லது பிறருக்கு இம்சை செய்யாமை ஆகிய முக்கிய அம்சங் களை ஒத்துக்கொள்ளாதவர்கள் இருக்க முடியாது. அகிம்சை

யுடன் சேர்ந்த சத்தியத்தின்மூலம் நீங்கள் உலகத்தையே உங்கள் காலடியில் கொண்டு வந்துவிட முடியும். அரசியல் வாழ்க்கையில் அதாவது தேசீய வாழ்க்கையில் சத்தியத்தையும் சாந்தத்தையும் மேற்கொள்வதே சத்தியாக்கிரகத்தின் சாரமாகும். ஒருவர் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டாலும், எடுத்துக் கொள்ளாவிட்டாலும், சத்தியாக்கிரகத் தத்துவம் பாமர மக்களிடையே ஊடுருவியிருக்கிறது என்பதில் ஐயமில்லை. பஞ்சாபில் நான் யாத்திரை செய்கையில் ஆயிரக்கணக்கான பஞ்சாபிகளைச் சந்தித்தபோது நான் பெற்ற அனுபவம் அதுதான்.

ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, சுதேசி சம்பந்தமான உறுதியான திட்டங்கள் ஏப்ரல் 6-ம்தேதி தான் ஆரம்பிக்கப்பட்டன.

ரௌலட் சட்டத்திற்கு அடிப்படையான மன நிலை தகர்க்கப்பட்டு, அச்சட்டம் செத்துப்போகும்படி செய்ததும் 6-ம் தேதி தான். ஏப்ரல் 13-ம் தேதி நிகழ்ந்தது வெறும் கோர சம்பவம் மாத்திரம் அல்ல, ஆனால் அந்த பயங்கர சம்பவத்தில் ஹிந்து, முஸ்லிம்களின் உதிரம் இரண்டறக் கலந்து அவர்களுடைய ஒற்றுமைக்கு முத்திரை வைத்தது.

மகத்தான இந்த இரண்டு தேசீய நிகழ்ச்சிகளையும் எப்படி நினைவு கூர்வது அல்லது கொண்டாடுவது? யார் விரும்புகிறார்களோ அவர்கள் அந்த தினத்தை (ஏப்ரல் 6) உண்ணாவிரதம் இருப்பதற்கும் (இருபத்து நான்கு மணிநேரம் உணவு உட்கொள்ளாதிருத்தல்), பிரார்த்தனை செய்வதற்கும் அர்ப்பணம் செய்ய வேண்டும்; இந்தியா முழுவதும் அன்று மாலை 7 மணிக்குப் பொதுக் கூட்டங்கள் நடைபெற வேண்டும்; அக் கூட்டங்களில் ரௌலட் சட்டம் ரத்தாக வேண்டும் என்று பிரார்த்தித்தும், அது ரத்தாகும் வரையில் நாட்டில் அமைதி நிலவாது என்ற மக்களின் நம்பிக்கையைத் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட வேண்டும். அச் சட்டம் உபயோகத்திலின்றி செத்துவிட்டது என்பது மாத்திரம் போதாது. அது இந்திய சமூகத்திற்கு ஓர் அவமானமா, இல்லையா என்பதே கேள்வியாகும், அது அவமானம் எனில், அது ரத்து செய்யப்பட வேண்டும். அரசியல் சீர்திருத்தங்கள் (1919-ம் வருடத்திய மாண்டேகு-செம்ஸ்போர்டு அரசியல் சீர்திருத்தங்கள்) அமுலுக்கு வருமுன், ரௌலட் சட்டத்தை ரத்து செய்வதன் மூலம் சர்க்கார் தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்ட வேண்டும்.

6-ம் தேதியிலிருந்து அந்த வாரம் முழுவதும், 13-ம் தேதி நிகழ்ந்த கோர சம்பவங்கள் சம்பந்தமான அலுவல்களையொட்டியே அர்ப்பணம் செய்யப்படவேண்டும். ஜாலியன்வாலா பாக் நினைவுச் சின்னத்திற்காக அந்த வாரத்தில் நிதி வசூல் செய்யும் அலுவலில் ஈடுபடவேண்டும் என்பதே எனது யோசனையாகும். அதற்காகப் பத்து லட்சம் ரூபாய் வசூல் செய்யவேண்டும் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். வசூல் செய்வதற்கு, ஒவ்வொரு கிராமமும், ஒவ்வொரு நகரமும் அதனதன் சொந்தத் திட்டத்தைப்

யின்பற்றலாம். எனினும் கையாடலோ, மோசடியோ நேராமல் பாதுகாக்க வேண்டும். ஏப்ரல் 12-ம் தேதி மாலைக்குள் வசூல் முடிந்துவிடவேண்டும்.

பிறகு 13-ம் தேதி செய்யவேண்டிய அலுவல்களாவன: முக்கியமான அந்த நாளை உண்ணாவிரதத்திற்காகவும், பிரார்த்தனைக்காகவும் அர்ப்பணம் செய்ய வேண்டும். யார் மீதும் கோபமோ, துவேஷமோ இருக்கக் கூடாது. பலியான நிரபராதிகளின் நினைவை நாம் போற்ற விரும்புகிறோம். அவர்களைப் பலி வாங்கிய கொடிய செயலை நினைவில் வைத்துக் கொண்டிருக்க நாம் விரும்பவில்லை. வஞ்சம் தீர்ப்பதற்கல்ல, தியாகம் செய்வதற்குத் தயாராக நாடு எழவேண்டும். அன்று மக்கள் புரிந்த அத்துமீறிய செயல்களையும் தேச மக்கள் நினைவில் வைத்துக் கொண்டு, அவற்றிற்காகப் பச்சாத்தாபப்பட வேண்டும் என்பதும் எனது கருத்தாகும். அன்று இந்தியா முழுதும் கூட்டங்கள் கூட்டி, அந்தத் தேதியில் நிகழ்ந்த அட்டூழியங்கள் இனி நடைபெற முடியாமல் இருப்பதற்கான தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டுமென பிரிட்டிஷ் அரசாங்கத்தையும், இந்திய அரசாங்கத்தையும் வற்புறுத்தித் தீர்மானங்கள் நிறைவேற்றப்படவேண்டும். அத்துடன் அந்த வாரத்தை நாம் முடிக்கவேண்டும்.

அந்த வாரத்தின்போது ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் தமது சொந்த முறையில் சத்தியாக்கிரகம், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, சுதேசிக் கொள்கைகளை மேலும் பூரணமாக அமுலுக்குக் கொண்டு வருவதற்காக தங்களால் முடிந்தவரையில் சிறந்த தொண்டு புரிய வேண்டுமென நான் வற்புறுத்துகிறேன். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை வற்புறுத்துவதற்காக, 12-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 7 மணிக்கு ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அடங்கிய கூட்டங்களைக் கூட்ட வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். அந்தக் கூட்டத்தில், முஸ்லிம்களின் நியாயமான உணர்ச்சிகளுக்கு இணங்க கிலாபத் பிரச்னைக்குத் தீர்வு காணவேண்டுமென சர்க்காரை வற்புறுத்தித் தீர்மானங்கள் நிறைவேற்றப்படட வேண்டும்.

அவ்வாறாக இந்த வாரம், தூய்மை, ஆன்ம பரிசோதனை, தியாகம், குற்றம் குறையற்ற ஒழுங்கு, தேசீய உணர்ச்சிகளைப் பிரகடனம் செய்தல் ஆகியவற்றை வற்புறுத்தும் வாரமாக இருக்கவேண்டும்; துவேஷத்தின் அறிகுறியோ, பேச்சில் பலாத்காரமோ இருக்கக்கூடாது; ஆனால் முற்றிலும் அஞ்சாமைக்கும் மன உறுதிக்கும் காரணமாக இருக்கவேண்டும்.

6-ம் தேதியோ அல்லது 13-ம் தேதியோ ஹர்த்தால் நடைபெறக்கூடாதா என்ற கேள்விக்கு எனது ஆணித்தரமான பதில், 'கூடாது' என்பதுதான். சத்தியத்திலும் அகிம்சையிலும் நம்பிக்கையுள்ளவர்களுக்கு அது ஒரு சத்தியாக்கிரக வாரமாகும். சென்ற வருடம் ஏப்ரல் மாதம் நிகழ்ந்த ஹர்த்தால், யாதொரு தூண்டுதலு

மின்றி மக்கள் தாங்களாகவே முன்வந்து அனுஷ்டிக்கப்பட்டதெனி னும், நேரம் செல்லச்செல்ல மக்கள் வண்டிகள் முதலியவற்றை உபயோகிக்கக்கூடாதென மிதமிஞ்சி வற்புறுத்திய சம்பவங்கள் நிகழாமலில்லை. எனவே ஒழுங்கையும் தவத்தையும் மேற்கொள்ள வேண்டிய இந்த வாரத்தில், ஹர்த்தால் அனுஷ்டிக்க வேண்டு மென நான் யோசனை கூற மாட்டேன். அடிக்கடி ஹர்த்தால் செய்து அதன் முக்கியத்துவத்தைக் குறைத்துவிடக் கூடாது: மிகவும் முக்கியமான, அசாதாரணமான சந்தர்ப்பங்களில்தான் அதை மேற்கொள்ளவேண்டும்.

இந்த தேசிய வார சம்பந்தமான நடவடிக்கைகளில் எல்லாக் கட்சிகளும், எல்லா வகுப்பினரும் பூரணமான பங்கு எடுத்துக் கொள்வார்களென்றும், தேசிய எழுச்சியின் உண்மையான, திட்ட வட்டமான வளர்ச்சிக்கு அது ஒரு சாதனமாக இருக்கும்படி செய் வார்களென்றும் நான் பணிவுடன் நம்புகிறேன்.

'எங் இந்தியா,' *10—3—1920*

## 10

# தீனபந்துவின் சீரிய தொண்டு

அகமதாபாத்,
*மார்ச் 21, 1918*

தீனபந்து ஸ்ரீ ஸி. எப். ஆண்ட்ரூஸ் *1917*-ம் ஆண்டில் பிஜிக்குச் சென்று அங்குள்ள இந்திய ஒப்பந்தத் தொழிலாளர்களின் நிலை மையைப் பரிசீலனை செய்துவிட்டு இந்தியாவுக்குத் திரும்பிவந்தார். பொதுவாக பிஜியிலுள்ள இந்திய சமூகத்தின் நலனுக்காகவும் அவர் தொண்டுபுரிந்தார். அவரைக் கௌரவிப்பதற்காக அகமதா பாத்தில் நடந்த பொதுக்கூட்டம் ஒன்றில் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் பிஜியி லுள்ள இந்தியர்களின் நிலையை விவரித்துக் கூறினர். அக் கூட் டத்திற்குத் தலைமை வகித்த காந்திஜி, ஸ்ரீ ஆண்ட்ரூஸின் அரும் தொண்டைப் பாராட்டிப் பேசியதாவது :

ஸ்ரீ ஆண்ட்ரூஸை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்க முன்பும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது உண்டு. அவரை ஒரு ரிஷி என்று குறிப்பிடுவதே முற்றிலும் பொருத்தமாக இருக்கும். ஏனெனில் ஒரு புனித முனிவருக்கு இருக்க வேண்டிய எல்லாத் தகுதிகளும் அவருக்கு இருக்கின்றன. அவர் சமீபத்தில்தான் பிஜித் தீவுகளுக்குச் சென்று திரும்பிவந்தார். நமக்காகவே அவர் அங்கு சென்றார். அவர் பிஜியில் இருந்தபோது எந்த ஹோட்ட லிலும் அல்லது எந்த செல்வந்தரின் வீட்டிலும் தங்கவில்லை. அவர் தொழிலாளர்களுடன், தொழிலாளர்களின் வீடுகளிலேயே தங்கி அவர்களுடைய வாழ்க்கை முறைகளையும் ஆராய்ச்சி செய் தார்.

தற்போது நாம் கெடா பிரச்னையைச் சமாளிக்க வேண்டி யிருக்கிறது. அந்த ஜில்லாவிலுள்ள சில தாலூகாக்களில் கால் மடங்கு பயிர்கள்கூடத் தேறவில்லை. எனது விசாரணையை அடிப் படையாகக் கொண்டே இதை நான் கூறுகிறேன். மற்றொருபுறம், நான் டில்லிக்கு மிகவும் அவசரமாகச் செல்ல வேண்டியிருக்கிறது. எனினும் கெடா ஜில்லாவில் செய்ய வேண்டிய அலுவல்களை நிறுத்திவைக்க நான் விரும்பவில்லை. எனவே ஸ்ரீ ஆண்ட்ரூஸ் தற்காலிகமாக அந்த அலுவல்களைத் தமது சொந்த அலுவலைப் போல் கவனிக்க முன்வந்திருக்கிறார் என்பதைக் கேட்க நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். கவர்னரைப் பார்ப்பதற்காக அவர் இன்று பம்பாய்க்குச் செல்லுகிறார். அவர் என் சார்பில் கவர்னரிடம் சில உண்மைகளை எடுத்துக் கூறுவார்; எனது வேண்டுகோளையும் அவரிடம் தெரிவிப்பார். அதன்மூலம் ஏதாவது பலன் ஏற்பட்டால் மிகவும் நன்மையாகும். இல்லாவிட்டால் அவர் அடுத்த ஞாயிற்றுக் கிழமை நாடியாடிற்கு வந்து சேருவார். இவ்வாறாக, அவர் இங்கும் நமக்காகவே தொண்டு புரியத் தொடங்கியுள்ளார்.

ஸ்ரீ ஆண்ட்ரூஸ் ஹிந்தியில் பேசுவதைக் கேட்க நான் மகிழ்ச்சி யடைகிறேன். எனினும் அதற்குப் பெறுப்பாளி நான் அல்ல. அவர் ஆங்கிலத்திலும் மிகவும் நன்றாகப் பேசுகிறார். கேம்ப்ரிட்ஜ் கலாசாலைப் பட்டம் பெற்றவரின் ஆங்கில மேதையைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? மில்டனின் கவிதைகளையோ அல்லது ஷேக்ஸ்பியரின் நாடகங்களையோ வாசிக்கும் மாணவர்களின் கூட்டத்தில் பேசுவதாக இருந்தால், அவர் அங்கு ஆங்கிலத்தில் பேசுவதுதான் பொருத்தமாக இருக்கும். ஸ்ரீ ஆண்ட்ரூஸ் முதல் தடவையாக பிஜிக்குச் சென்றபோது ஸ்ரீ பியர்சனும் அவருடன் கூடச் சென்றார் இரண்டாவது தடவை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் தனியாகவே பிஜிக்குச் சென்றார். அங்கே சென்று நிலைமையைப் பரிசீலனை செய்யுமாறு நான்தான் அவருக்கு ஆலோசனை கூறி னேன். ஸ்ரீ ஆண்ட்ரூஸ் குறிப்பிட்ட ஆஸ்பத்திரிகள், ஆஸ்பத்திரி களே அல்ல, கொடுமைப்படுத்தும் யந்திரங்களேயாகும். அந்த ஆஸ்பத்திரிகளிலுள்ள இந்தியப் பெண்கள் படும்பாடு பரிதாபகர மானது. அந்த நாட்டில் பெண்களுக்காக ஆஸ்பத்திரிகள் அமைக்க வேண்டுமென ஸ்ரீ ஆண்ட்ரூஸ் அரசாங்கத்தைக் கேட்டபோது, அவற்றை அமைக்க வேண்டியது தோட்ட முத லாளிகளின் கடமை என்று அரசாங்கம் பதில் அளித்தது. தோட்ட முதலாளிகளோவெனில், ஒப்பந்த முறை முடிவடைந்தபின் அரசாங்கம் அவ்விஷயமாக (ஆஸ்பத்திரிகள் அமைப்பது பற்றி) கவனிக்கும் என்று கூறிவிட்டார்கள். பள்ளிக்கூடங்களில் குழந்தை களுக்கு ஆரம்பத்திலிருந்தே கிறிஸ்தவ மத போதனைதான் அளிக் கப்பட்டுவருகிறது. இது, ஹிந்து, முஸ்லிம் குழந்தைகளுக்கு நலன் அளிக்கக்கூடியதல்ல. மேலும் ஆங்கிலத்தையே போதன மொழியாகக் கொண்டு கல்வி அளிக்கப்படுவதால், நமது மக்க ளுக்கு அதனால் லாபம் எதுவுமில்லை. நேட்டாலிலும் அதே நிலைமைதான் இருந்துவருகிறது. நேட்டாலிலோ அல்லது

பிஜியிலோ இந்திய உபாத்தியாயர்கள் கிடைப்பதில்லை. இவ்விஷயத்தில் நாம் உதவியளிக்க முடியும். குறைந்த வருமானத்தைக் கொண்டு திருப்தியடையும் ஒரு சிலர் பள்ளிக்கூட ஆசிரியர்களாக அங்கே சென்றால், அது ஓரளவு உதவியாக இருக்கும். ஒருவர் ஒரு பைசாவிலிருந்து ஒரு லட்சம் ரூபாய் வரையில் தம்மால் இயன்றதைக் கொடுப்பார்களாயின், அதுவும் உதவியாக இருக்கும். பிஜிக்குச் செல்ல தாமாக முன்வந்துள்ள ஆஸ்திரேலியப் பெண் மணிக்கு ஏற்படும் செலவையும் தற்காலிகமாக ஸ்ரீ ஆண்ட்ரூஸ் கொடுத்துவருவார். அதன் சம்பந்தமாக, சாம்ராஜ்யப் பிரஜா சங்கத்தினரிடமிருந்து அவருக்கு ஓரளவு உதவி கிடைக்கும். இருந்தாலும் மேற்கொண்டு உதவி தேவையாக இருக்கும். இவ்வாறாக, ஸ்ரீ ஆண்ட்ரூஸின் தொண்டுகளையெல்லாம் எவ்வாறு மதிப்பிடுவது என்பது எனக்குத் தெரியவில்லை. அவர் எப்போதும் ஒதுங்கியிருக்கும் இயல்பு உள்ளவர். அவரது வாழ்க்கையின் ஒரே லட்சியம் பிறருக்குத் தொண்டு செய்வதேயாகும். எனவே தீர்க்காலோசனையின் மீதே அவரை நான் ரிஷி என்று கூறியுள்ளேன். பிறருக்குத் தொண்டு செய்வதையே தமது கடமையாகக் கொண்ட அவரைப் போன்ற ஒரு பெரியாருக்கு நாம் எவ்வளவு நன்றி கூறினாலும் தகும்.

*'பிரஜாபந்து'—24—3—1918*

## 11

## காந்தி - ஸ்மட்ஸ் ஒப்பந்தம்

*ஜூலை 18, 1919*

சில தினங்களுக்கு முன் தென்னாப்பிரிக்கா யூனியன் சட்ட சபையில் நிறைவேறிய ஆசியாக்காரர் நில, வர்த்தகத் திருத்த சட்டத்தைக் கண்டித்து இன்று பம்பாய் எக்ஸெல்ஸியர் தியேட்டரில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. சாம்ராஜ்ய இந்தியப் பிரஜைகள் சங்கத்தின் ஆதரவில் நடந்த அக் கூட்டத்திற்கு சர் டின்ஷா எம். பெடிட் தலைமை வகித்தார்.

அப்போது சர் என். ஜி. சந்தவர்க்கர் கொண்டுவந்த தீர்மானத்தை ஆமோதித்து காந்திஜி பேசியதாவது :

"சில ஆண்டுகளுக்கு முன் போயர் யுத்தம் மூண்டபோது, பிரிட்டிஷ் மந்திரிகளில் ஒருவரான லார்டு லான்ஸ்டௌன் ஓர் உண்மையைப் பிரகடனம் செய்தார். திரான்ஸ்வாலில் வசிக்கும் இந்தியர்களை திரான்ஸ்வால் அரசாங்கம் நடத்திய விதம், அந்த யுத்தத்திற்குக் காரணங்களில் ஒன்றாகும் என்றும், திரான்ஸ்வால் அரசாங்கத்தினால் இந்தியர்கள் பட்ட கஷ்டங்களை நினைக்கும் போது தமக்கு ஏற்படும் வேதனையைப்போல் வேறு எந்தப் பிரச்னையும் அவ்வளவு வேதனையைக் கொடுக்கவில்லை என்றும்

அவர் 1899-ஆம் ஆண்டில் கூறினர். எனவே அங்கே இந்தியர் களின் நிலைமை 1899-ல் இருந்ததைக் காட்டிலும் மோசமாகி விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். யுத்தத்திற்கு முன் இருந்ததைக் காட்டிலும் இப்போது அவர்களுடைய நிலை முன்னேற்றம் அடைந்திருக்கவேண்டும். ஆனல் அதற்கு மாருக, புதிய சட்டத்தினல் அவர்களுடைய உரிமைகளுக்கு மிகுந்த பாதகம் ஏற்பட்டிருக்கிறது. 1899-க்கு முன் அவர்களுக்கு நிலங்கள் வாங்கவும், வர்த்தகம் செய்யவும் உரிமைகள் இருந்தன. ஆனல் புதிய சட்டம் அந்த உரிமைகளைப் பறித்துவிடுவதாக இருக்கின்றன.

"ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் எனக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தைக் கண்டிப்பான முறையில் சட்ட நுணுக்கப்படி வியாக்கியானம் செய்யக்கூடாது. காலஞ்சென்ற சர் ஹென்றி காம்பெல்-பானர்மென்* கூறிய வார்த்தைகளை நான் இச் சந்தர்ப்பத்தில் நினைவு படுத்துகிறேன். போயர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கையை, பலவீனமான கட்சியினரின் கோணத்திலிருந்து பரிசீலனை செய்ய வேண்டுமென அவர் லார்டு கிச்சனரைக் கேட்டுக் கொண்டார். அது போலவே ஸ்மட்ஸ்-காந்தி ஒப்பந்தமும் பெருந்தன்மையுடன், அதாவது பலவீனர் களான இந்தியர்களின் கோணத்திலிருந்து வியாக்கியானம் செய்யப்பட வேண்டும்.

"இந்தியர்களின் சார்பில் வைஸ்ராய் தம்மால் இயன்ற எல்லா உதவிகளையும் செய்துவருகிருர். இவ்விஷயமாக நீதியுடன் நடந்துகொள்ளுமாறு பிரிட்டிஷ் சர்க்காரையும் வைஸ்ராய் வற்புறுத்தியிருக்கிருர். எனவே இந்தியா முழுவதும் வைஸ் ராய்க்கு ஆதரவு அளிக்க வேண்டியது கடமையாகும். இவ் விஷயமாச, தாம் ஏற்கனவே எடுத்துக் கொண்டுள்ள முறைகளைப் பற்றியும், இப்போது மேற்கொண்டுவரும் முறைகளைப்பற்றியும் வைஸ்ராய் விரைவில் ஓர் அறிக்கை வெளியிடுவாரென நம்பு கிறேன்."

'பம்பாய் கிராணிகிள்' - 19—7—1919

---

* சர் ஹென்றி காம்பெல் பானர்மென் (1836-1908) 1905-லிருந்து அவர் இறக்கும் வரையில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தார். அவரது மந்திரி சபையில்தான் கிரே, ஹால்டேன், லாயிட் ஜார்ஜ், ஆஸ்க்வித், மார்லி, சர்ச்சில் முதலிய மேதைகள் மந்திரிகளாக இருந்தனர்.

பீல்ட் மார்ஷல் லார்டு கிச்சனர் (1850-1916) பல இடங்களில் வெற்றி பெற்று ராணுவ வீரராகத் திகழ்ந்தார். 1902-லிருந்து 1909 வரையில் இந்தியா வின் பிரதம தளபதியாக இருந்தார். முதலாவது மகாயுத்தத்தின்போது அவர் 'ஹாம்ஷயர்' கப்பலில் ருஷ்யாவுக்குச் சென்று கொண்டிருந்தபோது ஜெர்மன் கப்பலால் தாக்கப்பட்டு, 'ஹாம்ஷயர்' கப்பலுடன் மூழ்கி இறந்தார்.

## 12

# காந்திஜிக்கு லார்டு ஆம்தில் பாராட்டு*

இந்த நூல் எழுதியவரை எனக்கு நேரில் தெரியாது. எனினும் அவருக்கும் எனக்கும் இடையே அநுதாபத்தையும் கருத்துகளை யும் அடிப்படையாகக் கொண்ட தொடர்பு இருக்கிறது. எந்த லட்சியத்தில் அவர் அவ்வளவு தைரியத்துடனும், ஈடுபாடுடனும் இருக்கிறாரோ அந்த லட்சியத்தில் எனக்கும் பங்கு உண்டு.

காந்திஜியின் வாழ்க்கையைக் குறித்து ஸ்ரீ டோக் எழுதி யுள்ள நூல் வாசிக்க வேண்டிய ஒரு புத்தகமாகும். இவ்விதம் நான் கூறுவதில் நம்பிக்கையுள்ளவர்கள் எல்லோருக்கும் இந்தப் புத்தகத்தை நான் சிபாரிசு செய்கிறேன். எனது கருத் துக்கு மதிப்புக் கொடுக்காதவர்களுக்கும் நான் பணிவுடன் ஒரு யோசனை கூறுகிறேன். அதாவது ஒரு முக்கியப் பிரச்னையை யொட்டி இந்தப் புத்தகத்தில் அடங்கியுள்ள தகவல்களைத் தெரிந்து கொள்வது நல்லது என்பதே அவர்களுக்கு நான் கூறும் யோசனையாகும். இந்த நாட்டில் உள்ள சிலரைத் தவிர மற்றவர் களுக்கு, இவ்விஷயமாக எதுவும் தெரியாதது துரதிர்ஷ்டமேயாகும். எனினும் இது எல்லாவற்றையும் விட மிக மிக முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சாம்ராஜ்யப் பிரச்னையாகும்.

திரான்ஸ்வாலிலுள்ள இந்தியர் சமூகத்தின் தலைவரான மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியின் வாழ்க்கை வரலாற்றையும், இயல்பான குணங்களையும் ஸ்ரீ டோக் இந்த நூலில் மிகவும் சுருக்க மாகவே கொடுத்துள்ளார். எனினும் இந்த நூல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில் மானிடர் சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் மனிதர்களும், நிகழ்ச்சிகளும் பிரிக்க முடியாத தொடர்புள்ளவையாக இருக்கின்றன. எனவே குறிப் பாக அரசியல் விவகாரங்களை ஒழுங்கான முறையில் நன்கு அறிந்து கொள்ள வேண்டுமாயின், அவற்றிற்கு முக்கிய கர்த்தாக்களாக இருப்போரின் குண விசேஷங்களையும் நோக்கங்களையும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இந்த நூலில் உள்ள குற்றம் குறைகளை விமர்சனம் செய்யும் நிலையில் நான் இல்லை என்றாலும், இதில் கூறப்பட்டுள்ளவை சிறிதும் கலப்பின்றி முற்றிலும் உண்மை என்பதில் ஐயமில்லை. நான் இவ்விதம் கூறுவது நியாயமானது என்று நம்புவதற்குப் போதிய காரணங்கள் இருக்கின்றன.

---

* லார்டு ஆம்தில் (ஆர்தர் ஆலிவர் வில்லியர்ஸ் ரஸ்ஸெல்) 1899–லிருந்து 1906 வரையில் சென்னை கவர்னராக இருந்தார். 1904–ல் தற்காலிகமாக வைஸ்ராய் பதவியும் வகித்தார். டோக் எழுதிய ‘காந்திஜியின் வாழ்க்கை வரலாறு’ என்ற நூலுக்கு லார்டு ஆம்தில் எழுதிய முன்னுரையே மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த நூலில் உள்ள விஷயம் ஸ்ரீ காந்தியைப் பற்றியதாகும். அவரை ஒரு சாதாரண கிளர்ச்சிக்காரர் என்று இந்த நாட்டில் உள்ள பொறுப்பு வாய்ந்தவர்கள் கூடக் கண்டிக்கின்றனர். சட்டத்தை மீறும் அவரது நடவடிக்கைகள் அற்பத்தனமானவை என்று திரித்துக் கூறப்படுகின்றன. அவரது நோக்கங்கள் சுய நலமானவை, பண ஆசையை அடிப்படையாகக் கொண்டவை என்று கூடக் கூறுவோர் இருக்கின்றனர்.

இந்த நூலை வாசிக்கும் நியாய புத்தி படைத்த எவரது மனத்திலிருந்தும் அத்தகைய தப்பெண்ணங்கள் அகன்றுவிடும் என்பது நிச்சயம். அவரைப் பற்றி நன்கு அறிந்து கொள்வோர், அவரது நடவடிக்கைகளின் தன்மையையும் நன்கு அறிந்து கொள்வார்கள்.

திரான்ஸ்வாலிலுள்ள இந்திய சமூகத்தினர் தங்கள் உரிமைக்காகவும், தங்களுக்கு ஏற்பட்டுள்ள அவமானத்தை அகற்றுவதற்காகவும் போராடி வருகிறார்கள். ஆங்கிலேயர்களான நாம் அதற்காக அவர்கள் மீது குற்றம் கூற முடியுமா? அவர்களுக்கு வோட்டுகளும் இல்லை, பிரதிநிதித்துவ உரிமையும் இல்லை. எனவே அவர்கள் பலாத்கார நடவடிக்கைகளிலும், குழப்பத்தை உண்டாக்கும் காரியங்களிலும் ஈடுபடலாம். ஆனால் இவற்றைத் தவிர அவர்களுக்குள்ள ஒரே வழி, சாத்துவிக சட்ட மறுப்புதான். எனவே அத்தகைய சாத்துவிக சட்ட மறுப்பை மேற்கொண்டிருப்பதற்காக அவர்கள்மீது நாம் குற்றம் கூற முடியுமா? அவர்கள் சுயநல நோக்கத்துடன் வரியை எதிர்க்கவில்லை, புதிய அரசியல் உரிமைகளுக்காகவும் வஞ்சகமாக முயற்சிக்கவில்லை; தங்களுடைய சமூகத்தின் கௌரவத்தை மீண்டும் பெறவே முயற்சித்துவருகிறார்கள். அவர்கள்மீது குற்றம் கூறுபவர், அதுபோன்ற சந்தர்ப்பங்களில் தாம் என்ன செய்வார் என்பதைக் கூறட்டும். சட்டத்தை மதித்து நடக்க வேண்டும் என்பதற்காக, தங்களுடைய உரிமைகள் பறிக்கப்படுவதற்கும் தங்களுக்கு அவமானம் இழைக்கப்படுவதற்கும் சாந்தமாக அடி பணிய நம்மில் எவராவது விரும்புவாரா?

காலனி சர்க்கார் தங்களுடைய கொள்கையை இம்மியளவும் விட்டுக்கொடுக்காமலும், தங்களுடைய கௌரவத்தை அணுவளவும் இழக்காமலும் அந்த இரண்டு குறைகளையும் அகற்ற முடியும். சாம்ராஜ்யத்தின் நலனுக்காக காலனி சர்க்கார் அவ்விதம் செய்வார்களா? அவ்விதம் செய்தால்தான் சமரசமும், ஐக்கியமும், எதிர் காலத்தை யொட்டிப் புதிய நம்பிக்கையும் ஏற்பட முடியும். தற்போது அந்தக் கேள்விக்குத்தான் நாங்கள் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். இந்தியர்கள் திரான்ஸ்வாலையே தங்கள் இருப்பிடமாகக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய சமூகமே தென்னாப்பிரிக்காவின் அபிவிருத்திக்காக உதவி புரிந்திருக்கிறது. இந்தியர்கள் பிரிட்டிஷ் பிரஜைகள் ஆவர். தென்னாப்பிரிக்கா யூனியன் சம்பந்தமான கொண்டாட்டங்களில் அவர்களும் பங்கு எடுத்துக்கொள்ள வேண்டாமா என்பதே இப்போது கேள்வியாகும்.

திரான்ஸ்வாலில் சென்ற மூன்று வருடங்களாகத்தான் இந்தியர்களின் உரிமை பறிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு முன் பெயரளவிலாவது இந்தியர்களுக்கு அந்த உரிமை, அதாவது மற்ற பிரிட்டிஷ் ப்ரஜைகளைப்போல் சாம்ராஜ்யத்திற்கு உட்பட்ட எந்த நாட்டிற்கும் குடியேறும் உரிமை இருந்துவந்தது. திரான்ஸ்வாலைத் தவிர சாம்ராஜ்யத்தின் மற்றப் பாகங்களில் இந்தியர்களுக்கு அந்த உரிமை இருந்து வருகிறது என்பதை இங்குள்ளவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை. இந்த உண்மையை இந்த நாட்டில் உள்ளவர்கள் உணர்ந்து கொண்டால், தென்னாப்பிரிக்கா புதிய அரசியலின் கீழ் ஏற்பட்டுள்ள நிறவேற்றுமையை இரு பார்லிமெண்டு சபைகளிலும் உள்ள எல்லாக் கட்சியினரும் எதிர்ப்பார்கள் என்பது நிச்சயம். நிறவேற்றுமை காரணமாக பிரிட்டிஷ் பிரஜைகளின் உரிமைகள் பறிக்கப்பட்டிருப்பதற்கு வேறு எங்கும் உவமை காண்பதரிது. இது சாம்ராஜ்ய சர்க்காரின் பிற்போக்கான ஒரு முறையேயாகும்.

பிரிட்டிஷ் கொடியின் கீழ் உள்ள பிரிட்டிஷ் பிரஜைகளுக்குப் பாதுகாப்பளிக்க நம்மால் இயலவில்லை என்பதும், பிரிட்டிஷ் மன்னரும், ராஜதந்திரிகளும் கொடுத்துள்ள வாக்குறுதிகளை நிறைவேற்ற நமக்கு சக்தி இல்லை என்பதும் இறுதியாக ருசுவானால், அதன் விளைவு இந்தியாவில் எத்தகையதாக இருக்கும்? இந்தியாவை அறிந்தவர்களுக்கு அதன் விளைவு எப்படி இருக்கும் என்பது பற்றிச் சந்தேகம் இருக்க இடமில்லை. சாம்ராஜ்யத்தில் துன்புறுத்தப்பட்ட, அவமதிக்கப்பட்ட இந்தியா வேண்டா வெறுப்புடனும், வெளியேறத் துடித்துக்கொண்டும் இருக்கும் ஒரு பாகமாகவே இருக்கும். அதுதான் சாம்ராஜ்யத்தின் முடிவுக்கு முதற்படியாக அமையும்!

எனவே திரான்ஸ்வாலிலுள்ள பிரிட்டிஷ் இந்தியர்களின் பிரச்னை முக்கியமான சாம்ராஜ்யப் பிரச்னை என்பதற்கு இவைதான் காரணங்களாகும். ஆகையால் இந்தப் பிரச்னை, நமது இனத்தின் கௌரவத்தையும், சாம்ராஜ்யத்தின் ஒற்றுமையையும் பாதிக்கக்கூடியதாக இருக்கிறது. அத்தகைய ஆபத்தைத் தவிர்க்க முடியும் என்ற நம்பிக்கைக்கு இன்னும் இடம் இருக்கிறது. ஏனெனில், நான் இதை எழுதிக்கொண்டிருக்கும் இச்சமயத்தில், திரான்ஸ்வால் இந்தியர்களின் பிரச்னையைத் தீர்ப்பதற்கான சமரசப் பேச்சுகள் நடைபெற்று வருகின்றன என்று கேள்விப்படுகிறேன். அந்த முயற்சி வெற்றி பெறலாம் என்பதில் ஸ்ரீ காந்தியையும் அவரது சகதேச மக்களையும் காட்டிலும் எனக்கு அதிக நம்பிக்கையில்லை. இந்த நூல் பிரசுரிக்கப்படுமுன், அவர்கள் அந்த உரிமைகளுக்காகவே அவ்வளவு தைரியத்துடன் போராடினார்கள், அவ்வளவு தூரம் தியாகம் செய்தார்கள்.

**ஆம்தில்**

மில்டன் எர்னஸ்ட் ஹால்,
பெட்போர்டு, 26-8-1909

# 13

# ஜெனரல் ஸ்மட்ஸிற்கு லார்டு ஆம்தில் கடிதம்

ஆகஸ்டு *10, 1909*

அன்புள்ள ஜெனரல் ஸ்மட்ஸ்,

நேற்று மாலை நான் ஸ்ரீ காந்தியைப் பார்க்கச் சென்றேன். உங்களுடைய யோசனைகளுக்கிணங்க அவருடன் பேசினேன். ஆனால் இதை அவரிடம் நான் சொல்லவில்லை. உங்கள் கோணத்திலிருந்து நீங்கள் கூறுவதுபோலவே அவரது கோணத்திலிருந்து அவரும் தெளிவாகவும், திருப்தியளிக்கக்கூடிய விதமாகவும், சிறிதும் விட்டுக்கொடுக்காமலும் பேசினார். நாங்கள் இரண்டு மணி நேரம் வரையில் நடைமுறையில் சாத்தியமான, அரசியல், சட்டம், நீதி சம்பந்தமான எல்லாக் கோணத்திலிருந்தும் விவாதித்தோம். இறுதியில் யாதொரு சமரசத்திற்கும் இடமில்லை என்ற ஏக்கத்துடன் நான் திரும்பி வந்தேன்.

ஸ்ரீ காந்தி மிகவும் முக்கியமானதென்று அவர் கருதும் ஒரு கொள்கைக்காகப் போராடி வருகிறார். அரசியலிலோ அல்லது மதத்திலோ நாம் வெகு காலமாகப் பின்பற்றிவரும் கொள்கைகளை எவ்வாறு கைவிடமாட்டோமோ, அதுபோலவே அவரும் மூலாதாரமானதென்றும், நியாயமானதென்றும் தாம் கருதும் ஒரு கொள்கையைக் கைவிடமாட்டார் என்பதே எனது அபிப்பிராயமாகும். ஏட்டளவில் இருக்கும், பலனற்ற உரிமைக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்வோர் நம்மில் வெகு சிலர்தான் இருப்பார்கள். ஆனால் அத்தகைய உரிமைக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கும் ஸ்ரீ காந்தி தமது கொள்கையைக் கைவிடுவாரென்று தோன்றவில்லை. அந்த மனிதரைக் குறித்து வியப்பு அடையாமல் இருப்பது முடியாத காரியம். தம்முடைய மனச்சாட்சியைத் தவிர வேறு எந்த நீதிச் சபையையும் அவர் மதிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

இப்போது நான் உங்களுக்கு ஒரு யோசனை கூற முற்படுகிறேன். அவ்விதம் யோசனை கூறுவது தன்மூப்பான ஒரு காரியம் என்று நீங்கள் நினைக்க மாட்டீர்களென நம்புகிறேன். சாத்துவிகச் சட்ட மறுப்பாளர்களிடம் யாதொரு பேரமும் பேசாமல் நீங்கள் செய்யத் தயாராக இருப்பதை உடனடியாக ஏன் செய்யக் கூடாது? *1907*-2-வது சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்றும், சட்டப்படி வருடத்திற்கு அதிக பட்சமாக ஆறு இந்தியர்களை நிரந்தரக் குடிகளாக அங்கீகரிக்க வேண்டும் என்றும் அவர்கள் கோருவதை நீங்கள் ஒப்புக்கொண்டுவிட்டால், அவர்கள் தங்களுடைய போராட்டத்திற்கு வேறு எவ்வித சாக்கும் கூற முடியாது. அவ்விதம் ஒப்புக்கொள்வது நியாயமாயின்,

சாத்துவிக சட்ட மறுப்பாளர்களுக்கு அதனால் திருப்தி ஏற்பட்டாலும் ஏற்படாவிட்டாலும், நீங்கள் ஏன் அவ்விதம் செய்யக் கூடாது? அவ்வாறு செய்வதன் மூலம் நீங்கள் வெளிநாடுகளிலுள்ள கண்டனவாதிகள் வாயடைத்துப் போகும்படி செய்தவராவீர்கள்; இந்தியாவில் எழும் புகார்களுக்கும் நீங்கள் சாம்ராஜ்ய அரசாங்கத்திற்கு ஆணித்தரமான பதில் அளித்தவராவீர்கள்.

சாம்ராஜ்யத்தின் கோணத்திலிருந்து எனக்கு வேதனையையும், கவலையையும் அளிப்பது இதுதான்: பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த எந்தப் பாகத்திலும் பிரவேசிக்க இந்தியர்களுக்கு இதுவரை ஏட்டளவில் உரிமை இருந்து வந்திருக்கிறது. சென்ற சில ஆண்டுகளாக திரான்ஸ்வாலில் மாத்திரம்தான் அந்த உரிமை ரத்து செய்யப்பட்டும், நடைமுறையில் கட்டுப்படுத்தப் பட்டும் இருந்து வருகிறது. இந்த உரிமையை ரத்து செய்வது, இந்தியாவில் பிரிட்டிஷாரின் செல்வாக்கிற்கும், நற்பெயருக்கும் பேரபாயத்தை உண்டாக்கும் என்றே எனக்குத் தோன்றுகிறது. அதனால்தான் இவ்விஷயத்தில் நான் விடாப்பிடியாகக் கவனம் செலுத்தி வருகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ஆம்தில்

## 14

# காந்திஜிக்கு கோகலேயின் கடிதம்

தேனெட் ஹவுஸ், 231-2, ஸ்டிராண்ட்,
லண்டன், டபிள்யூ. ஸி. ஜூலை 27, 1912

அன்புள்ள ஸ்ரீ காந்தி,

நான் 'சாக்ஸன்' கப்பலுக்கு டிக்கெட் வாங்கிவிட்டேன் என்பதைத் திட்டமாக உங்களுக்குத் தெரிவிப்பதற்காகவே நேற்று முன்தினம் உங்களுக்குத் தந்தி கொடுத்தேன். அக்டோபர் 5-ல ஸதாம்டனிலிருந்து அக்கப்பல் புறப்படுகிறது. எனவே நான் அக்டோபர் 22-ம் தேதி கேப் டவுன் வந்து சேருவேன். நான் தென்னாப்பிரிக்காவில் சுமார் 24 நாட்கள் தங்கியிருக்கலாம். நவம்பர் 16-ம் தேதி டர்பனிலிருந்து நான் பம்பாய்க்குப் புறப்பட வேண்டும். இந்தியாவில் அரசாங்க உத்தியோகங்கள் சம்பந்தமாக அமைக்கப்படவிருக்கும் ராயல் கமிஷனில் எனக்கு ஒரு ஸ்தானம் அளித்து லார்டு க்ருவிடமிருந்து சென்ற சனிக்கிழமை ஒரு கடிதம் வந்தது. அதை நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். எனினும் கமிஷன் அடுத்த ஜனவரி மாதம் வரையில் வேலையைத் தொடங்காது. எனவே அக்டோபர் 5-ம் தேதிக்கு முன்

நான் தென்னுப்பிரிக்காவிலிருந்து புறப்பட வேண்டிய அவசிய மில்லை. கப்பலுக்கு டிக்கெட் வாங்க எனக்கு ஏற்பட்ட தொல்லை களைக் குறித்து உங்களுக்குக் கடிதம் எழுதியிருப்பதாக ஸ்ரீ போலக்கின் மகள் என்னிடம் கூறினர். ஆனல் அத் தொல்லை களெல்லாம் சீராகிவிடும் என்றும், எனது பிரயாணம் சௌகரிய மாக இருப்பதற்குரிய எல்லா வசதிகளும் செய்யப்படும் என்றும் கூறி, யூனியன் காஸில் கம்பெனித் தலைவர் சர் ஓவன் பிலிப் ஸிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. சர் ஓவனின் பதில் அதிருப்திகரமாக இருந்திருந்தால், அதைக் கண்டித்து நான் இங்குள்ள பல பத்திரிகைகளுக்கும் ஆசிரியர்களுக்கும் கடி தங்கள் எழுத உத்தேசித்திருந்தேன். இவ்விஷயமாக ஸ்ரீ ராம்சே மெக்டொனல்டு பார்லிமெண்டில் கேள்விகள் கேட்கவும் திட்ட மிட்டிருந்தார். எனினும் இனி அவ்விஷயமாக எதுவும் செய்ய வேண்டிய அவசியமில்லை என்றே கருதுகிறேன். இருந்தாலும் இந்தப் பிரச்னையைக் கைவிடவேண்டியிருப்பதைக் குறித்து ஒரு விதத்தில் நான் வருந்துகிறேன். ஏனெனில் என்வரையில் தொல்லை தீர்ந்துவிட்டாலும், அப்பிரச்னை தீராமல் அப்படியே தான் இருக்கிறது.

தென்னுப்பிரிக்கப் பிரச்னைகளை நேரில் சென்று அறிந்து வந்து இங்கு அவசியமான முறைகளைக் கைக் கொள்ள வேண்டும் என்று கூறி உங்களுக்குக் கடிதம் எழுதியிருப்பதாக போலக்கின் மகள் என்னிடம் கூறினர். அவரது யோசனையை நான் முற்றி லும் ஒப்புக்கொள்கிறேன். அதை நீங்களும் ஏற்றுக் கொள்வீர் களென நம்புகிறேன். அவர் ஏராளமான கஷ்டங்களைச் சமா ளிக்க வேண்டியிருக்கிறது. எனவே அவர் தென்னுப்பிரிக்கப் பிரச்னைகளை நேரில் சென்று அறிவதற்குச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். எப்படிப் பார்த்தாலும் அவர் கூறுவது சரியான யோசனையே. அவரது யோசனையை நீங்கள் அங்கீகரிக்க பண முடை தடையாக இருக்குமாயின், நான் இந்தியாவுக்குத் திரும்பிச் சென்றதும் நூறு பவுன் வரை யில் வசூலிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறேன். அவரது பிரயாணச் செலவுக்கு அவ்வளவு தொகை தேவையாக இருக்கும். தயவு செய்து அவரது திட்டத்தை அங்கீகரித்து, பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்யும்படி அவருக்குத் தந்தி கொடுங்கள்.

தங்கள் உண்மையுள்ள,

ஜி. கே. கோகலே

# 15
# கோகலேயின் விளக்கம்

ஸ்ரீ கோகலே 13-12-1912-ல் தென்னாப்பிரிக்காவிலிருந்து பம்பாய் வந்து சேர்ந்தார். 14-ம் தேதி அவரை வரவேற்பதற்காக பம்பாய் நகர மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. அப்போது பொது மக்களின் சார்பில் அவருக்கு உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது. தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் நிலைமையைப் பற்றியும், அவர்களுக்காக காந்திஜி செய்து வரும் தொண்டைப் பற்றியும் கோகலே பேசியதாவது :

நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்திருப்பதைக் குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இக் கூட்டத்தினர் எனக்கு அளித்த உற்சாகமான வரவேற்பு, அந்த மகிழ்ச்சியைப் பன்மடங்கு அதிகப்படுத்தியிருக்கிறது. இந்த வரவேற்பும், நான் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றபோது அங்குள்ள நமது தேச மக்கள் அடைந்த மகிழ்ச்சியுமே எனக்குப் பெரிய வெகுமதியாகும். அங்குள்ள நமது தேசத்தின் தவப் புதல்வரான ஸ்ரீ காந்தி என்னை அடிக்கடி வற்புறுத்தி அழைத்ததற்கு இணங்கவே நான் அங்கு சென்றேன் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். இதை நான் ஒன்றிரண்டு தடவைகளில் பகிரங்கமாக முன்பே கூறியிருக்கிறேன். அங்கு செல்ல வேண்டுமென முதன் முதலாக நான் தீர்மானித்தபோது, அந்த நாட்டில் எவ்வளவுக்கு சாத்தியமோ அவ்வளவுக்கு அமைதியாகச் சுற்றுப் பிரயாணம் செய்ய வேண்டும் என்பதும், இந்தியர்கள் வசிக்கும் முக்கியமான இடங்களுக்குச் செல்ல வேண்டும் என்பதும், அந்த நாட்டில் நமது தேசமக்கள் நடத்தப்படும் விதத்தைப் பற்றிய உண்மைகளைச் சேகரிக்க வேண்டும் என்பதுமே எனது நோக்கமாக இருந்தது. பிறகு அவ்விவரங்களை இந்திய அரசாங்கத்தினிடமும் மக்களிடமும் எடுத்துக் கூறி, தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களுக்கு அதிக ஆதரவு தேட வேண்டும் என்றும் உத்தேசித்தேன். ஆனால் நான் கேப் டவுனுக்குச் சென்றபோது, தென்னாப்பிரிக்க சர்க்கார் என்னை மிகுந்த மரியாதையுடன் வரவேற்பதில் எவ்வளவு அக்கறை கொண்டிருந்தார்கள் என்பதை நேரில் கண்டேன். அங்குள்ள எல்லா முக்கியமான இடங்களிலும் இந்திய மக்களை மாத்திரமல்ல, ஐரோப்பியர்களைக் கூட நான் சந்தித்துப்பேச ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அந்தச் சந்தர்ப்பங்களைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வதொன்றே எனது கடமையாகியது. அந்தக் கடமையை நான் தவறவிடுவது, என்மீது நம்பிக்கைவைத்துள்ள தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்குத் துரோகம் செய்வதாகுமென நான் நினைத்தேன்.

தென்னாப்பிரிக்காவில் நான் நான்கு வாரங்கள் வரையில் தங்கியிருந்தேன் ; இந்தியர்கள் வசிக்கும் பல முக்கியமான இடங்களுக்கும் சென்றேன் ; அந்த நாட்டிலுள்ள ஆயிரக்கணக்கான இந்தியர்களை மாத்திரமல்ல, ஏராளமான பிரபல ஐரோப்

பியர்களையும் சந்தித்தேன். இந்தியர்களும் ஐரோப்பியர்களும் அடங்கிய பல கூட்டங்களிலும், மகாநாடுகளிலும் பேசினேன்; இந்தியர்களும் ஐரோப்பியர்களும் என்னைப் பேட்டிகள் கண்ட போதும் அங்குள்ள பிரச்னைகளைப்பற்றி விவாதித்தோம். எனவே நான் கேப் டவுனுக்குச் சென்ற பின் ஒரு சில நாட்களுக்குள்ளேயே தென்னுப்பிரிக்க இந்தியர்கள் சம்பந்தமான பிரச்னைகளைப் பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொண்டேன். ஐரோப்பியர்களை நான் சந்தித்துப் பேசியதன் பலனுக, அவர்களிடையே உள்ள பல்வேறு பிரிவினரின் உணர்ச்சிகளையும், அபிப்பிராயங்களையும் தெரிந்து கொள்வது எனக்குச் சாத்தியமாயிற்று. நவம்பர் 14-ம் தேதி பிரிடோரியாவில் ஜெனரல் போத்தா, ஜெனரல் ஸ்மட்ஸ், ஸ்ரீ பிஷர் ஆகிய மந்திரிகளையும் சந்தித்து எல்லாப் பிரச்னைகளையும் அலசி அலசி இரண்டு மணி நேரம் வரையில் பேசிக் கொண்டிருந்தேன். எல்லாப் பிரச்னைகளையும் தீர ஆலோசித்து ஆவன செய்வதாக அவர்கள் வாக்களித்தனர். மறுநாள் கவர்னர் ஜெனரல் லார்டு கிளாட்ஸ்டனையும் கண்டு பேசினேன். என் சக்திக்கு இயன்றவரையில் எவ்வளவு செய்ய முடியுமோ அவ்வளவைச் செய்து முடித்த திருப்தியுடன் நான் திரும்பிவந்தேன். நம் தேச மக்கள் என் மீது சொரிந்த பேரன்பும், ஐரோப்பிய சமூகத்தினர் என்னிடம் காட்டிய அன்பும், யூனியன் அரசாங்கம் காட்டிய ஆதரவும் மரியாதையும் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்துள்ளன.

இச் சந்தர்ப்பத்தில் நான் இரண்டு முக்கிய விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். முதலாவதாக, தென்னுப்பிரிக்க இந்தியர்களின் பிரச்னையைப்போல் இவ்வளவு கடினமான பிரச்னையை என் வாழ்க்கையிலேயே இதற்கு முன் சமாளிக்கும்படியான நிலைமை எனக்கு ஏற்பட்டதில்லை.

இரண்டாவதாக நான் கூற விரும்புவது, என்னுடைய அன்பார்ந்த, மகத்துவம் வாய்ந்த நண்பரான ஸ்ரீ காந்தியைப் பற்றியதாகும். நான் கப்பலிலிருந்து கேப் டவுனில் இறங்கியதிலிருந்து தென்னுப்பிரிக்காவைவிட்டு நான் புறப்படும்வரையில் அவர் என் கூடவே இருந்தார். நான் கிழக்கு ஆப்பிரிக்காவில் பிரயாணம் செய்தபோதும் அவர் என்னுடனேயே இருந்தார். அவர் எனது அந்தரங்கக் காரியதரிசியாக இருந்து கொண்டு செய்ய வேண்டிய கடமைகளைத் தமக்குத்தாமே ஏற்றுக் கொண்டார். உண்மையில் அவர் எனக்கு வழிகாட்டியாகவும், தத்துவ உபதேசகராவும், நண்பராகவும் இருந்தார். அவர் என்மீது வைத்துள்ள பக்தியையும் அன்பையும் பற்றி இப்போது நான் எதுவும் கூற விரும்பவில்லை. எனினும் தென்னுப்பிரிக்காவில் அவர் இந்தியர்களுக்காகச் செய்துள்ள மகத்தான தொண்டைச் சுருக்கமாகவாவது பாராட்ட வேண்டியது எனது கடமையென்று எனக்குத் தோன்றுகிறது.

ஸ்ரீ காந்தியுடன் நேரடியான தொடர்பு கொள்வோர் மாத்திரமே ஆச்சரியகரமான அவரது அருமை பெருமைகளை உணர்ந்து

கொள்ள முடியும். அவர் வீரர்களும் தியாகிகளும் வந்த மரபைச் சேர்ந்தவர் என்பதில் ஐயமில்லை. அது மாத்திரமல்ல, தம்மைச் சுற்றியுள்ள சாதாரண மனிதர்களைக் கூட வீரர்களாகவும் தியாகிகளாகவும் மாற்றும் அற்புதமான ஆன்மிக சக்தியும் அவருக்கு உண்டு. நீங்கள் இதை நம்புவீர்களா? அதாவது திரான்ஸ்வாலில் சமீபத்தில் நடந்த சாத்துவிக எதிர்ப்புப் போராட்டத்தின் போது ஸ்ரீ காந்தியின் தலைமையில் நமது தேச மக்கள் 2700 தடவைகள் சிறைத் தண்டனை அடைந்தனர். தேசத்தின் கௌரவத்தைப் பாதுகாக்கவே அவர்கள் அவ்விதம் செய்தனர். அவர்களில் சிலர் மிகவும் செல்வவந்தர்கள், சிலர் சில்லறை வர்த்தகர்கள். எனினும் பெரும்பாலோர் ஏழைகள் தான். அவர்களிடையே தெரு விற்பனையாளர்களும், தொழிலாளர்களும் இருந்தனர்: கல்வியற்றவர்களும், தங்களுடைய வாழ்க்கையில் நாட்டைப் பற்றிச் சிந்திக்கும் அல்லது பேசும் வழக்கமில்லாதவர்களும் இருந்தனர். அப்படியிருந்தும் அவர்கள், திரான்ஸ்வால் சிறைகளில் கையாளப்பட்ட பயங்கரமான கொடுமைகளைத் தைரியமாக ஏற்றுக் கொண்டனர். தங்கள் நாட்டிற்கு விரோதமான, இழிவான சட்டத்திற்குப் பணிவதைக் காட்டிலும் அக் கொடுமைகளை அனுபவிப்பதே மேல் என்று கருதி அடிக்கடி சிறைக்குச் சென்றனர்.

## வீரரும் தியாகியும்

அந்தப் போராட்டத்தினால் பல குடும்பங்கள் சீர்குலைந்தன; பல குடும்பங்கள் சின்னாபின்னமாயின. ஒரு காலத்தில் செல்வவந்தர்களாக இருந்த சிலர் தங்களுடைய சொத்துக்கள் எல்லாவற்றையும் இழந்து பரம ஏழைகளாயினர்; பெண்களும் குழந்தைகளும் சொல்லொணாக் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாயினர். அவர்களுடைய அற்புதமான சாதனைகளுக்குக் காரணம் ஸ்ரீ காந்தியின் ஆன்மிக சக்தியேயாகும். மனிதனின் ஆன்மிக சக்தி, மனிதர்களின் மனத்தையும் ஸ்தூலமான சூழ்நிலையையும் கூட எவ்விதம் அடியோடு மாற்றி விடுகிறது என்பதற்கு அது ஓர் உதாரணமாகும். ஸ்ரீ காந்தியைப் போல் என் இருதயத்தையே ஆட்கொண்டவர்கள் இரண்டே பேர்தான் இருந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் மாபெரும் தலைவரான ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி, மற்றவர் எனது குருவான ரானடே. அவர்களின் முன்னிலையில் தகுதியற்ற எந்தக் காரியத்தையும் செய்ய நாம் வெட்கமடைவோம். அவர்களின் முன்னிலையில் தகுதியற்ற எதையும் மனத்தினால் நினைக்கக்கூட அஞ்சுவோம்! தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் கோரிக்கையை உருவாக்கியவர் ஸ்ரீ காந்திதான். சுயநலமின்றியும், யாதொரு களங்கமுமின்றியும் சென்ற இருபது ஆண்டுகளாக அவர் தென்னாப்பிரிக்காவிலுள்ள நம் தேச மக்களுக்காகப் போராடிவருகிறார். எனவே இந்தியா அவருக்கு மிகுந்த நன்றிக் கடன்பட்டிருக்கிறது. இந்தியர்களுக்குத் தொண்டு புரியவே அவர் தம்மைத் தியாகம் செய்துள்ளார். வக்கீல் தொழிலில் அவருக்கு வருடத்திற்கு

ஆறாயிரம் பவுன் வரையில் வருமானம் கிடைத்துவந்தது. தென்னுப் பிரிக்காவில் ஒரு வக்கீலுக்கு அது மிகவும் நல்ல வருமானமே யாகும். ஆனல் அவர் அந்த வருமானத்தையெல்லாம் தியாகம் செய்துவிட்டு. இப்போது ஓர் ஏழையைப் போல் மாதம் மூன்று பவுன் செலவில் வாழ்க்கையை நடத்திவருகிருர். இந்தப் பெரும் போராட்டத்தை அவர் இடைவிடாது நடத்திவந்தும் கூட, அவருடைய மனத்தில் ஐரோப்பியர்கள் மீது சிறிதும் வெறுப் பில்லே. எனது பிரயாணத்தின் போது தென்னுப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியர்கள் அவர்மீது எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிருர்கள் என்பதை நேரில் கண்டேன். ஒவ்வொரு கூட்டத்திலும் பிரபல ஐரோப்பியர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு அவருடன் கைகுலுக் கினர். தாங்கள் கடுமையான போராட்டத்தை நடத்தி அவரை நசுக்க முயன்ருலும், ஒரு மனிதன் என்ற முறையில் அவரைக் கௌரவிப்பதாக அவர்கள் தெளிவாகக் கூறினர். தென்னுப்பிரிக் காவிலுள்ள இந்தியர்களுக்கு ஸ்ரீ காந்தியின் தலைமை ஒரு மகத் தான வரப்பிரசாதமாக அமைந்துளது. எனவே எனது பிரயாணத் தின்போது அவர் என்னுடன் கூட இருந்தது, என்னுடைய பெரும் பாக்கியமேயாகும்.

## தென்னுப்பிரிக்க இந்தியர் நிலே

கேப் காலனி, நேட்டால், திரான்ஸ்வால், ஆரஞ்சியா ஆகிய நான்கு மாகாணங்கள் அடங்கியதே தென்னுப்பிரிக்கா யூனியன் ஆகும். அவற்றில் மொத்தம் சுமார் ஒன்றரை லட்சம் இந்தியர்கள் வசிக்கிருர்கள். அவர்களில் சுமார் ஒரு லட்சத்து இருபதினுயிரம் பேர் கேப் மாகாணத்திலும் பத்தாயிரம்பேர் திரான்ஸ்வாலிலும் இருக்கிருர்கள். ஆரஞ்சியாவில் சுமார் நூறு இந்தியர்களே இருக்கிருர்கள். அங்குள்ள மக்களில் ஐந்தில் மூன்று மடங்கு தொகையினர் ஒப்பந்தத் தொழிலாளர்களும், முன்னுள் ஒப்பந்தத் தொழிலாளர்களும், அவர்களுடைய சந்ததிகளுமாவர். மற்றவர்கள் ஒப்பந்தத் தொழிலாளர்களைத் தொடர்ந்து தங்களுடைய சொந்தச் செலவில் சுதந்திரமாகச் சென்றவர்கள். அங்குள்ள இந்தியர்களில் படித்தவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். பெரும்பாலோரும் சில்லறை வர்த்தகர்களாகவும், தொழிலாளர்களாகவும, வீட்டு வேலேக்காரர்களாகவும் இருக்கிருர்கள். அவர்களில் ஒரு சிலர் தான் செல்வவந்தர்களான வர்த்தகர்களாவர். கேப் மாகாணத் தில் இந்தியர்களுக்கு முனிசிபல், அரசியல் வாக்குரிமைகள் இருக் கின்றன. நேட்டாலிலுள்ள இந்தியர்களுக்கு முனிசிபல் வாக் குரிமை இருக்கிறது; ஆனல் சட்டசபைகளுக்கு அங்கத் தினர்களைத் தேர்ந்தெடுக்க வாக்குரிமை இல்லே. இரண்டு டச்சு மாகாணங்களில் அவர்களுக்கு யாதொரு வாக்குரிமையும இல்லே. தற்போதைய குடியேற்றச் சட்டம் ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு விதமாக இருக் கிறது. இந்தியர்கள் ஏதாவதொரு ஐரோப்பிய மொழியில் செய்யப்படும் சோதனையில் தேறினுல்தான் கேப் காலனியிலோ

அல்லது நேட்டாலிலோ பிரவேசிக்க முடியும். சென்ற சில வருடங்களில் அவ்விதம் தேறி அவ்விரு மாகாணங்களிலும் குடியேறியவர்களின் தொகை சுமார் ஐம்பதேயாகும். ஆனால் திரான்ஸ்வாலிலும் ஆரஞ்சியாவிலும் புதிதாக இந்தியர்கள் பிரவேசிப்பது அறவே தடுக்கப்பட்டிருக்கிறது. கேப் காலனியிலும் நேட்டாலிலும் உள்ள இந்திய வர்த்தகர்களும், தெரு விற்பனையாளர்களும் ஒவ்வொரு வருடமும் தங்களுடைய லைசன்சுகளைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டும். ஆனால் அவ்விதம் புதுப்பித்துக் கொள்வதற்கு எத்தனையோ தடைகள் விதிக்கப்பட்டுள்ளன. கேப் காலனியிலும் நேட்டாலிலும் இந்தியர்கள் சொந்தத்தில் நிலங்கள் வைத்துக் கொள்ளலாம்; வேறு ஸ்தாவர சொத்துக்களையும் வாங்கலாம். ஆனால் மற்ற இரு மாகாணங்களிலும் அவர்கள் அவ்விதம் செய்ய முடியாது. இதைத் தவிர இந்தியர்களுக்கு பல்வேறு மாகாணங்களிலும் சில்லறைத் தடைகளும், இழிவான நிபந்தனைகளும் விதிக்கப்படுகின்றன. நகரங்களுக்கு அப்பாலுள்ள ஒதுக்கமான இடத்தில்தான் அவர்கள் வியாபாரம் செய்யவேண்டும் என்றும் சட்டத்தின் கீழ் வற்புறுத்தப்படுகிறார்கள். இந்தியர்களுடைய குழந்தைகள் கல்வி கற்கவும் வசதியளிக்கப்படவில்லை. பாதிரிமார்களாலும் இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்களாலும் சில ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் மாத்திரமே நடைபெற்று வருகின்றன. எனினும் இந்தியர்களின் குழந்தைகளுக்கு மத்தியதர, உயர்தர, தொழில் நுணுக்கக் கல்வி அளிப்பதற்கான வசதி எதுவும் இல்லை.

## நெஞ்சைப் பிளக்கும் நிலைமை

நான் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றதும் அங்குள்ள இந்தியர் பிரச்னையைப் பரந்த முறையில் பரிசீலனை செய்தபோது, என் நெஞ்சம் திடுக்கிட்டது, பல விதத்திலும் அவர்களுடைய நிலை உண்மையில் பரிதாபகரமாகவும், நெஞ்சைப் பிளப்பதாகவும் இருந்தது. போயர் குடியரசு இருந்த காலத்திலேயே திரானஸ்வாலிலுள்ள இந்தியர்களின் நிலைமை மோசமாக இருந்தது. அது பிரிட்டிஷ் மாகாணமாக மாறியபின் நிலைமை மேலும் மோசமாகி விட்டது! நேட்டாலிலும், கேப் காலனியிலும் கூட, தென்னாப்பிரிக்க யூனியன் ஏற்பட்டதிலிருந்து இந்தியர்களின் நிலை நாளுக்கு நாள் அதிக இளப்பமாகிவருகிறது. திரான்ஸ்வாலிலுள்ள இந்திய எதிர்ப்பு உணர்ச்சி, தொற்று நோயைப்போல் மற்ற இடங்களுக்கும் பரவிவருகிறது. நான் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றதும், அங்குள்ள இந்தியர்கள் தங்களுடைய எதிர்காலத்தைக் குறித்து நடுங்கிக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவர்கள் பொதுவாக பல கொடுமைகளுக்கும் தொல்லைகளுக்கும் உள்ளாகி, தங்களுடைய எதிர்காலம் நிலையற்றிருப்பதை உணர்ந்துள்ளனர். அங்குள்ள ஐரோப்பியர்களில் பெரும்பாலோரும், இந்தியர்களுக்கு சகிக்க முடியாத நிலைமையை உண்டாக்கி அவர்கள் தாங்களாகத் தென்னாப்பிரிக்காவை விட்டு வெளியேறும்படி செய்ய உறுதி கொண்டிருக்கின்றனர். இந்தியர்களுக்குக் கொடுமையும் அநீதியும் இழைக்கும்

சட்டங்கள் ஒருபுறமிருக்க, சாதாரணச் சட்டங்கள் கூட இந்தியர்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் விதத்தில் பிரயோகிக்கப் படுகின்றன. கேப் காலனியிலும் நேட்டாலிலும் குடியேறி நிரந்தரமாக வாழ்ந்துவந்த இந்தியர்களுக்கு, குடியேற்றத் தடைச் சட்டம் பெரும் திகிலைக் கொடுத்திருக்கிறது. ஏனெனில் அவர்கள் தற்காலிகமாக இந்தியாவுக்கு வந்தால், பின்னர் திரும்பிச் செல்லுவதற்கு அந்தச் சட்டம் தடையாக இருக்கிறது.

இதற்கு உதாரணமாக, நான் கேப் டவுனுக்குச் சென்றபோது நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் கூறலாம். அந்த மாகாணத்தில் குடியேறி ஸ்தாபித்த ஓர் இந்தியர் தற்காலிகமாக வெளியே செல்லுவதாயின், தாம் குறிப்பிட்ட காலத்திற்குள் திரும்பிவந்து விடுவதாகக் கூறி 'பர்மிட்' வாங்கிக் கொள்ளவேண்டும். ஓர் இந்திய வர்த்தகர் இந்தியாவுக்குச் சென்று ஒருவருட காலத்திற்குள் திரும்பிவந்துவிடுவதாக 'பர்மிட்' எடுத்துக்கொண்டு இந்தியாவுக்கு வந்தார். அவர் தமது மனைவியையும், குழந்தைகளையும் அங்கேயே விட்டுவிட்டு வந்தார். ஆனால் அவர் திரும்பிச் செல்லுகையில் புயல் காரணமாக அவர் சென்ற கப்பல் தாமதித்துச் சென்றதால், ஒரு வருடத்திற்குமேல் ஒருநாள் கழித்தே அவர் அங்கு செல்ல முடிந்தது. கப்பல் குறிப்பிட்ட காலத்தில் சென்றிருந்தால், 'பர்மிட்' காலாவதியாவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பே அவர் அங்கு சென்றிருப்பார். ஒரு நாள் தாமதித்து வந்தார் என்பதற்காக அவரை அதிகாரிகள் திருப்பி அனுப்பிவிட்டனர்! எனவே அவரது வியாபாரம் பாழாகி அவரது மனைவியும் குழந்தைகளும் அந்த நாட்டைவிட்டு வெளியேறும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. நேட்டாலிலும் அதுபோல் பல வருடங்களாக வசித்து வரும் இந்தியர்கள் வெளியே சென்று திரும்பிவருவதற்கு 'பர்மிட்' இருக்கிறது. ஆனால் அவர்கள் திரும்பிவரும்போது குடியேற்ற அதிகாரிகள் கேட்கும் கேள்விகளுக்குச் சிறிதும் தயக்கமின்றிச் சரியாக பதில் கூறவேண்டும். அவர்கள் நேட்டாலுக்கு முதன் முதலாக எந்த வருடத்தில் வந்தார்கள்? அவர்கள் என்ன வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்? இவை போன்ற பல நுணுக்கமான கேள்விகளை அதிகாரிகள் கேட்பர். அவற்றிற்குச் சிறிதும் தயக்கமின்றியும், தவறின்றியும் பதில் கூறவேண்டும். அற்ப காரணத்திற்காகவும், இந்தியர்கள் நேட்டாலுக்குள் பிரவேசிக்க முடியாமல் தடுத்துவிட குடியேற்ற அதிகாரிகளுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. அங்குள்ள ஐரோப்பிய நண்பர்கள் திடீரென்று அவை போன்ற கேள்விகள் கேட்கப் பட்டால், எத்தனை பேர் தவறின்றி பதில் சொல்லுவார்கள் என்று நான் கேட்கிறேன். இதைத் தவிர வர்த்தகர்களுக்கு லைசன்ஸ் வழங்கும் முறையும் இந்தியர்களுக்கு மனக்கலக்கத்தை உண்டாக்கியிருக்கிறது. அந்த லைசன்ஸ்கள் வருடந்தோறும் புதுப்பிக்கப் படுகின்றன. எனவே புதுப்பிக்க வேண்டிய நேரம் வரும்போது தங்கள் கதி எப்படியாகுமோ என்று இந்தியர்கள் அஞ்சுகிறார்கள். திரான்ஸ்வாலில் ஒதுக்கப்பட்ட இடங்களில் மாத்திரமே இந்தி

யர்கள் வசிக்க வேண்டும் என்றும், வியாபாரம் செய்ய வேண்டும் என்றும் விதிக்கப்பட்டுள்ள சட்டத்தினால் இந்தியர்கள் பயங்கரமான துன்பங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள்.

## அதிகாரிகளின் கொடுமை

ஒதுக்கப்பட்ட இடங்கள் வியாபாரத்திற்குத் தகுதியற்றவையாக இருக்கின்றன. அவற்றில் இந்தியர்கள் எத்தனையோ கஷ்டங்களுக்கிடையே வியாபாரம் செய்து வெற்றி பெறத் தொடங்குவார்களாயின், மேலும் மோசமான புதிய இடங்களுக்கு அவர்கள் செல்ல வேண்டும் என்று வற்புறுத்த அதிகாரிகள் தயங்குவதில்லை! அத்தகைய பல ஒதுக்கிடங்களையும் நான் நேரில் சென்று பார்த்தேன். ஒதுக்கிடங்களுக்குப் போகுமாறு இந்தியர்களை வற்புறுத்தும் அந்த முறையை எவ்வளவு வன்மையாகக் கண்டித்தாலும் தகும். இந்திய வர்த்தகர்களைப்போல் இந்தியத் தொழிலாளர்களும் வேறொரு விதத்தில் துன்பத்திற்குள்ளாகி வருகிறார்கள். மூன்று பவுன் லைசன்ஸ் வரியினால் அவர்கள் படும் பாடு அற்பமல்ல. அந்த வரி கொடுக்காதவர்கள் சட்டப்படி கடுங்காவல் தண்டனைக்கு உள்ளாக நேரும். பதின்மூன்று வயதான பெண்கள் கூட அந்த வரி கொடுக்க வேண்டும்! இரண்டு பெண்களுடன் தந்தையும் தாயும் சேர்ந்து நால்வர் அடங்கிய குடும்பம், நேட்டாலில் தங்கியிருக்க அனுமதி பெறுவதற்காக ஒரு வருடத்திற்கு 12 பவுன் கொடுக்க வேண்டும். ஒரு மாதத்திற்கு அந்தக் குடும்பத்தின் மொத்த வருமானம் 2 பவுனேயாகும். எனவே அவர்கள் தங்களுடைய பாதிவருமானத்தை, அதாவது ஒரு பவுனை லைசன்ஸ் வரிக்காக ஒதுக்கி வைத்துவிட வேண்டும். மீதியுள்ள ஒரு பவுனைக் கொண்டுதான் வீட்டு வாடகை, உணவு, உடை, பொது வரிகள் முதலிய செலவினங்களைச் சரிக்கட்ட வேண்டும். அந்த வரியினால் பல இந்தியர்களின் குடும்பங்கள் பாழாயின என்றும், ஆடவர்கள் குற்றவாளிகளாகவும், பெண்கள் விபசாரிகளாகவும் மாறினார்கள் என்றும் நேட்டால் சட்டசபையில் ஒரு பிரபல அங்கத்தினர் பகிரங்கமாகக் கூறியதைக் குறித்து எவரும் ஆச்சரியப்படுவதற்கில்லை. மூன்று பவுன் வரி செலுத்துவோரின் கூட்டமொன்று டர்பனில் நடந்தது. அதற்கு சுமார் 5000 நபர்கள் வந்திருந்தனர். அந்த வரியினால் தாங்கள் பட்ட துன்பங்களை ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் கூறியபோது என் மனம் பட்டபாட்டை விவரிக்க முடியாது. அத்தகைய கொடிய வரி விதித்துள்ள அதிகாரிகள் மீது ஆத்திரமும், இந்தியர்களிடம் பரிதாபமும் துக்கமும் ஏற்பட்டன. அவ்வரியைச் செலுத்த முடியாததற்காக 65 வயதான ஒரு கிழவி ஆறு தடவை சிறை செல்லும்படி நேர்ந்தது. அச்சம்பவத்தை உணர்ச்சிவசப்படாமல் இப்போது கூட என்னால் கூற முடியவில்லை. எனவே விரைவில் திருப்திகரமான ஒரு சமரசம் ஏற்பட்டாலன்றி, தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் பெரும் கஷ்டங்களுக்கு ஆளாகி அந்த நாட்டிலிருந்து வெளியேறிவிடும்படியான நிலையும் ஏற்படும்.

## ஐரோப்பியர்களின் நிலை

நான் அங்கு சென்றபோது இந்தியர்களின் நிலை அவ்விதம் இருப்பதைக் கண்டேன். அடுத்தபடியாக, அங்குள்ள ஐரோப்பியர்களின் நிலைபற்றியும் உங்களுக்குச் சுருக்கமாகக் கூற விரும்புகிறேன். அவர்களுடைய நிலையையும் தெளிவாக அறிந்து கொள்வதற்கு, அவர்களுடைய நலன்கள், கஷ்டங்கள், அபிப்பிராயங்கள், உணர்ச்சிகள், விருப்பு வெறுப்புகள் முதலியவற்றையும் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியமாகும். ஏராளமான தென்னுப்பிரிக்கக் குடிமக்களிடையே மொத்தம் சுமார் 12½ லட்சம் ஐரோப்பியர்கள்தான் இருக்கிறார்கள். அவ்விரு இனத்தினருக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பு காரணமாக, கவலையைக் கொடுக்கக் கூடிய பல பிரச்னைகள்,-சமுதாய, அரசியல், பொருளாதார, ஒழுக்கப் பிரச்னைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஏற்கனவேயே அப்பிரச்னைகள் ஐரோப்பியர்களின் மனத்தில் கலக்கத்தையும், சந்தேகத்தையும், பீதியையும் உண்டாக்கியிருக்கின்றன. தென்னுப்பிரிக்காவில் தற்போதுள்ள இந்தியர்களின் தொகை 1½ லட்சம் தான் என்றாலும், இந்தியாவில் முப்பது கோடி மக்கள் இருப்பதாலும், தென்னுப்பிரிக்காவுக்கு இந்தியர்கள் வந்து குடியேறுவதைத் தடுக்காவிட்டால், நாளடைவில் அவர்களின் தொகை அதிகமாகி தாங்கள் இருக்குமிடம் தெரியாமல் போய்விட நேரும் என்றும், அதன் விளைவாக தென்னுப்பிரிக்கா மற்றொரு இந்தியாவாகிவிடும் என்றும் ஐரோப்பியர்கள் அஞ்சுகிறார்கள். அவர்களுடைய பயம் முற்றிலும் தவறான எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். எனினும் அந்த எண்ணம் பலமாக வேரூன்றியிருக்கிறது. எனவே, அதைக் கவனியாமல் கண்களை மூடிக்கொண்டிருப்பதால் யாதொரு பலனும் ஏற்படாது. இதைத் தவிர, அந்த நாட்டில் கடுமையான நிற வேற்றுமையும் இருந்து வருகிறது.

இந்தியர்களின் வாழ்க்கைச் செலவு குறைவாதலின், நியாயமான முறையில் அவர்களுடன் போட்டி போடுவது முடியாத காரியம் என்று ஐரோப்பியர்களிடையேயுள்ள சிறிய வியாபாரிகள் அஞ்சுகின்றனர். இந்தியர்களுக்கு எதிராகக் கொடிய முறைகள் கைக்கொள்ளப்பட்டுவருவதற்கு இவையெல்லாம்தான் காரணம். இந்தியர்கள் அந்த நாட்டில் தொடர்ந்து இருந்து வருவதாயின், அடிமைகளைப்போல் இருக்க வேண்டும், இல்லாவிடில் அவர்கள் வெளியேறிவிடவேண்டும் என்பதே ஐரோப்பியர்களின் நோக்கமாகும். அதனால்தான் அவர்கள் தாங்களாகவே வெளியேறிச் செல்லும்படி செய்வதற்கான கொடிய முறைகளை ஐரோப்பியர்கள் கைக் கொண்டுவருகிறார்கள்.

## நெருக்கடியான நிலைமை

இத்தகைய நெருக்கடியான நிலைமை தீர வழி என்ன? இந்தியர்களை அங்கு குடியேற அனுமதித்தால், அவர்களின் ஆதிக்கம்

அதிகமாகி தங்களுடைய நிலை மோசமாகிவிடுமென ஐரோப்பியர்கள் பீதியடைகின்றனர். அவர்களுடைய மனத்தில் அத்தகைய பீதி இருந்துவரும்வரையில், இந்தியர்கள் அங்கு அமைதியுடனும், பாதுகாப்புடனும் வாழ முடியாது. அந் நிலையில் அவர்கள் ஐரோப்பியர்களுடன் சமத்துவமாக வாழ்வதென்ற பேச்சிற்கே இடமில்லை. அந்த பீதியை அகற்றுவதற்கான முறைகளைக் கைக்கொண்டாலன்றி இந்தியர்களின் கஷ்டங்களுக்கு எவ்விதமான பரிகாரமும் ஏற்படும்படி செய்ய முடியாது என்று இந்தியர்களிடம் அனுதாபமுள்ள, இந்தியர்களின் நண்பர்களான ஐரோப்பியர்கள் கூறுகின்றனர். ஐரோப்பியர்களின் மனத்திலுள்ள அந்த பீதியை அகற்றுவதற்கான முறைகளை இந்தியர்கள் மேற்கொள்வதுதான் விவேகமான, நடைமுறையில் சாத்தியமான, ராஜதந்திரமான காரியமாகும். அதற்கிணங்கவே சென்ற வருடத்தில் ஸ்ரீ காந்திக்கும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன் பலனாகவே சாத்துவிக எதிர்ப்புப் போராட்டம் நிறுத்தப்பட்டது; உத்தேசிக்கப்பட்டுள்ள புதிய குடியேற்றச் சட்டத்தில் இந்தியர்கள் விஷயத்தில் வேற்றுமை பாராட்டும் எந்த ஷரத்தையும் சேர்க்காமல் இருக்க தென்னாப்பிரிக்கா யூனியன் சர்க்கார் இசைந்தனர். வருடந்தோறும் குறைந்த தொகையினரான இந்தியர்கள் மாத்திரம் குடியேறுவதற்கு ஸ்ரீ காந்தியும் இசைந்தார். அந்த ஒப்பந்தத்தின்படி திரான்ஸ்வாலில் வருடத்திற்கு ஆறு இந்தியர்கள் குடியேற அனுமதிக்கப்படும்; தென்னாப்பிரிக்க யூனியன் முழுவதற்குமாக நாற்பது இந்தியர்கள் குடியேற அனுமதிக்கப்படும். சென்ற ஏழு ஆண்டுகளில் யூனியனுக்குள் ஆண்டுதோறும் குடியேறியுள்ள இந்தியர்களின் சராசரித் தொகை நாற்பதுதான். அந்த ஒப்பந்தத்தின் பலனாக ஐரோப்பியர்களின் பீதிக்கு இடமிராமற் போகும். இந்த அடிப்படையிலேயே தென்னாப்பிரிக்காவில் நான் எனது அலுவல்களை மேற்கொண்டேன். அங்குள்ள இந்தியர்கள் என்ன கேட்டுவருகிறார்களோ அதைக் காட்டிலும் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ நான் எதுவும் கேட்கவில்லை. நான் அங்கே இருந்தபோது வேறு எந்த இந்தியருக்கும் இதுவரையில் கிடைக்காத ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அதாவது இந்தியர் பிரச்னைபற்றி ஐரோப்பியர்களுடன் நேருக்கு நேராகப் பேசவும், நீதியுடனும். ஜீவகாருண்யத்துடனும் நடந்து கொள்ளும்படி அவர்களைக் கேட்டுக் கொள்ளவும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

## அர்த்தமற்ற கண்டனம்

தென்னாப்பிரிக்காவில் நான் மேற்கொண்ட முறை தவறானது என்றும், இந்தியர்கள் தங்கள் விருப்பப்படி அங்கு குடியேறுவதற்கு யாதொரு தடையும் இருக்கக் கூடாது என நான் வற்புறுத்தியிருக்கவேண்டும் என்றும், ஸ்ரீ காந்தி இந்தியர்களின்

உரிமைகளை விட்டுக் கொடுத்திருப்பதாகவும், நான் அவரது செய்கையை உறுதிப்படுத்தி விட்டதாகவும் சிலர் இங்கே கூறுவதைக் கண்டு வியப்படைகிறேன். அத்தகையோர் தென்னுப்பிரிக்காவிலுள்ள உண்மை நிலையை அறிந்து கொள்ளவில்லை என்றே நான் கூறுவேன். இன்னும் அதிகமாக அங்கே இந்தியர்கள் செல்ல அனுமதிக்க வேண்டும் என்பது தென்னுப்பிரிக்கா இந்தியர்களின் கோரிக்கையல்ல. அங்கு ஏற்கனவே குடியேறி வசித்துவரும் இந்தியர்களின் துன்பங்களுக்குப் பரிகாரம் ஏற்பட வேண்டும் என்பதே அவர்களின் கோரிக்கையாகும். எனவே நடைமுறையில் சாத்தியமாக இருக்கும்படி அவர்கள் அப்பிரச்னையை அணுகினலன்றி, இந்தியர்களின் துன்பங்களுக்குப் பரிகாரம் ஏற்படுவது கடினமாகும். தென்னுப்பிரிக்காவில் இந்தியர்கள் தங்கள் விருப்பப்படி குடியேறுவதற்கு யாதொரு தடையும் இருக்கக்கூடாது என்று நான் எளிதில் கூறியிருக்க முடியும்; அவ்விதமே தடபுடலான பிரசங்கங்களையும் நிகழ்த்தியிருக்க முடியும்; துணிகரமான பிரசங்கங்களையும் நிகழ்த்தியிருக்க முடியும்; துணிகரமான பிரசங்கங்கள் செய்து விட்டதாகத் திருப்தியடைந்து நான் திரும்பிவந்திருக்க முடியும். ஆனல் அவ்விதம் வந்திருந்தால், இந்தியர்களுக்கு நன்மை ஏற்பட நான் உதவியளித்திருக்க முடியாது. அத்தகைய பிரசங்கங்களால் இந்தியர்களுக்கு விரோதமாக ஐரோப்பியர்களின் பிடிவாதம் மேலும் பலமடைந்திருக்கும்; எப்படியாவது இந்தியர்களை விரைவில் வெளியேற்றித் தீரவேண்டுமென அவர்கள் உறுதிகொண்டிருப்பார்கள்.

ஸ்ரீ காந்தியின் மீது கொண்டுவரப்படும் குற்றச்சாட்டு, உண்மையை முற்றிலும் திரித்துக் கூறுவதாக இருக்கிறது. பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளில் இந்தியர்களுக்கு சமத்துவ உரிமைகள் என்பது இன்று ஏட்டளவில்தான் இருக்கின்றன. அந்த உரிமைகள் ஏட்டளவிலாவது இருக்கவேண்டும் என்பதற்காகவே ஸ்ரீ காந்தி மூன்று தடவை சிறைக்குச் சென்ருர். நூற்றுக்கணக்கான இந்தியர்களும் சிறைகளுக்குச் செல்லும்படி செய்தார். ஏட்டளவில் இருந்துவரும் அந்த உரிமைகள் நடைமுறையில் இந்தியர்களுக்குக் கிடைப்பது, இந்தியாவில் நமது நிலைமை அபிவிருத்தி அடைவதையே பொறுத்திருக்கிறது.

## தற்போதைய நிலைமை

தென்னுப்பிரிக்காவில் தற்போது நிலைமை எப்படி இருந்து வருகிறதென நீங்கள் கேட்கலாம். அங்கு இந்தியர்கள் அனுபவித்துவரும் துன்பங்கள் அடங்கிய ஜாபிதா நீண்டதாகும். அவற்றிற்கெல்லாம் உடனடியாகப் பரிகாரம் செய்ய முற்படும் எந்த மந்திரி சபையும், அது எவ்வளவு பலம் வாய்ந்ததாக இருப்பினும், வீழ்ச்சியடைந்துவிடும் என்று ஜெனரல் போத்தா

ஒரு பேட்டியின்போது என்னிடம் கூறினர். நாம் அங்கு இடைவிடாமல் போராட்டத்தை நடத்திவந்தாலும் கூட, நமது துன்பங்களுக்குச் சிறிது சிறிதாகத்தான் பரிகாரம் ஏற்படுவது சாத்தியமாகும். எனினும் சிற்சில விஷயங்களில் நமக்கு உடனடியாகப் பரிகாரம் கிடைக்கும். உதாரணமாக, ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் ஸ்ரீ காந்திக்கும் ஏற்பட்ட தற்காலிக ஒப்பந்தத்தை, பார்லிமெண்டின் சென்ற கூட்டத்தில் அரசாங்கத்தினுல் நிறைவேற்ற இயலவில்லை. அந்த ஒப்பந்தத்தை இந்த வருடம் அரசாங்கம் பார்லிமெண்டில் நிறைவேற்றிவிடும் என்றும், குடியேற்றச் சட்டத்தின் கொடுமை விரைவில் தணிந்துவிடுமென்றும் நான் எதிர்பார்க்கிறேன். மிகவும் அக்கிரமமான மூன்று பவுன் லைசன்ஸ் வரியும் இவ்வருடத்தில் ஒழிந்துவிடும் என்று மந்திரிகள் என்னிடம் கூறினர். கல்வி சம்பந்தமாகவும் இந்தியர்களுக்கு எதிர்காலத்தில் வசதிகள் கிடைக்கலாம். ஆனல் இந்தியர்கள் வர்த்தக லைசன்ஸ் பெறுவதன் சம்பந்தமாக மாத்திரம் நாளுக்கு நாள் நிலைமை மோசமாகலாம் என்று தோன்றுகிறது. எனினும் அவ்விஷயமாக இந்தியர்கள் தங்களுக்கு நீதி வழங்கவேண்டும் என்று கோருகிறார்களேயன்றி, சலுகை காட்டவேண்டும் என்று கேட்கவில்லை. இவ்விஷயத்தில் இந்திய அரசாங்கமும், பிரிட்டிஷ் அரசாங்கமும் மாத்திரமல்ல, தென்னுப்பிரிக்காவிலுள்ள நல்ல புத்திபடைத்த ஐரோப்பியர்களும் கூட, இந்தியர்களிடம் அனுதாபம் காட்டிவருகிறார்கள். தென்னுப்பிரிக்கா இந்தியர்களின் போராட்டத்தையொட்டி, இந்தியாவிலுள்ள நாம் நமது கடமையை ஒழுங்காகச் செய்வோமாயின், அவர்கள் வெற்றி பெறுவார்கள்.

கடல் கடந்துள்ள தன் குழந்தைகளுக்கு இந்தியா இதுவரையில் தன் கடமையைச் செய்யவில்லை என்றே இங்கிலாந்திலும் தென்னுப்பிரிக்காவிலும் நமது லட்சியத்தில் அனுதாபமுள்ள பல நண்பர்களும் கருதுகிறார்கள். உவமையே இல்லாத கஷ்டங்களுக்கிடையே இந்தியாவின் கௌரவத்தைப் பாதுகாப்பதற்காக அவர்கள் (தென்னுப்பிரிக்கா இந்தியர்கள்) போராடி வருகிறார்கள். நம்மிடையே ஒருவர் மாத்திரம், எனது நண்பரான ஸ்ரீ ரதன் டாடா மாத்திரம் மகத்தான, அற்புதமான ஒரு முன்னுதாரணம் காட்டியுள்ளார். தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் அவரிடம் ஆழ்ந்த அன்பு வைத்திருப்பதுடன், அவருக்கு நன்றி செலுத்தியும் வருகிறார்கள். சென்னையிலுள்ள ஒரு கமிட்டி இவ்விஷயமாக ஏதோ உதவி செய்திருக்கிறது. இங்குள்ள கமிட்டியும் சிறிது தொகை வசூலித்திருக்கிறது. எனினும் தென்னுப்பிரிக்கா இந்தியர் பிரச்னையைக் கவனிக்கும்போது இவையெல்லாம் மிகவும் அற்பமேயாகும். இதன் சம்பந்தமாக முன்பு நாம் அசட்டையாக இருந்திருப்பினும், எதிர் காலத்திலாவது நாம் கணிசமான உதவி புரிய முன்வரவேண்டும். தென்னுப்பிரிக்காவில் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதை, எதிர்காலத்திலாவது அதிக

அக்கறையுடன் கவனித்துவருவோமென நம்புகிறேன். தென்னுப்பிரிக்கா இந்தியர்களுக்கு நாம் உறுதியுடனும் ஒற்றுமையுடனும் ஆதரவு அளிக்க வேண்டும்; இதற்கு முன் நாம் அனுப்பியதைக் காட்டிலும் அதிகமான தொகை வசூலித்து அனுப்ப வேண்டும். தென்னுப்பிரிக்கா இந்தியர் சமூகம் நீண்ட காலப் போராட்டத்தின் விளைவாகப் பணச் செலவு செய்தும், மற்ற விதத்திலும் சோர்வடைந்துவிட்டது என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். சக்தி வாய்ந்த அரசாங்கத்தை எதிர்த்துப் போராடவும், தங்களுடைய குழந்தைகளின் நலனைப் பாதுகாக்க கல்வி முதலிய மற்ற வசதிகள் அளிக்கவும் தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர் சமூகம் நமது உதவியை நாடுகிறது என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இறுதியாக, இந்தப் போராட்டத்தில் தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் நலன் மாத்திரமல்ல, இந்த சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த ஒரு நாடு என்ற வகையில் நம்முடைய எதிர்கால நலனும் அடங்கியிருக்கிறது. எனவே அதில் நாம் நமது கடமையை எந்த அளவுக்குச் செய்கிறோமோ அந்த அளவுக்கு நாம் இந்த சாம்ராஜ்யத்தில் நாகரிகமும், சுயமரியாதையும் வாய்ந்த ஒரு சிறந்த சமூகமாக முன்னேற்றம் அடைவோம்; நமது நாட்டிற்கும், நமது குழந்தைகளுக்கும், நமது குழந்தைகளின் குழந்தைகளுக்கும் நன்மை செய்து அவர்களுடைய மதிப்பிற்கும் உரியவர்களாவோம்.

## 16

# போராட்டத்திற்கு வைஸ்ராய் ஆதரவு

*சென்னை, 24—11—1913*

சென்னையில் இன்று இந்தியர்கள் வாசித்தளித்த உபசாரப் பத்திரங்களுக்குப் பதிலளிக்கையில் வைஸ்ராய் லார்டு ஹார்டிஞ்ச் கூறியதாவது:

சென்ற சில ஆண்டுகளாக தென்னுப்பிரிக்கா இந்தியர்களின் நிலைமையை இந்திய அரசாங்கம் மிகவும் கவலையுடன் கவனித்து வருகிறது; அவர்கள் நியாயமாக நடத்தப்படவேண்டும் என்பதற்காகத் தன்னால் இயன்றதையெல்லாம் செய்துவருகிறது. யூனியனில் (தென்னுப்பிரிக்கா யூனியன்) நடைமுறையில் இருந்துவரும் சட்டத்தைப் பற்றி நீங்கள் உங்களுடைய உபசாரப் பத்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். தென்னுப்பிரிக்காவுக்கு ஆசியாக்காரர்கள் குடியேறுவதை அறவே தடுப்பதே அந்தச் சட்டத்தின் நோக்கமாகும். எனினும் வருடாவருடம் குறிப்பிட்ட தொகையினரான கல்வியறிவுள்ள இந்தியர்கள் அங்கு குடியேறுவதற்கு அனுமதிக்க வேண்டும் என்ற முயற்சியில் நாங்கள் வெற்றி பெற்றுள்

ளோம். ஏற்கனவே அங்கு குடியேறி வாழ்ந்துவரும் இந்தியர் களுக்குச் சில உரிமைகள் அளிக்க வேண்டும் என்ற முயற்சியிலும் வெற்றி கிடைத்திருக்கிறது. அந்தச் சட்டத்தின் ஷரத்துகளை யொட்டி கோர்ட்டில் அப்பீல்செய்து கொள்ள இப்போது இந்தியர்களுக்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது.

தென்னுப்பிரிக்கா யூனியன் சட்டத்திலுள்ள மற்றக் கட்டுப் பாடுகளையொட்டி இப்போது நாங்கள் தென்னுப்பிரிக்க சர்க்கா ருடன் கடிதப்போக்குவரத்து நடத்திவருகிறோம். எங்களுடைய முயற்சி வீணுகிவிடாதென்றே நம்புகிறோம். தென்னுப்பிரிக்கா சர்க்காருக்கு எதிராகத் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவேண்டுமென நீங்கள் வற்புறுத்தியிருக்கிறீர்கள். ஆனல் எத்தகைய முறைகளை மேற்கொள்வதென்று நீங்கள் கூறவில்லை.

*1911*-ல் நேட்டாலுக்கு ஒப்பந்தத்தின்மீது இந்தியர்கள் குடியேறுவதைத் தடுத்துவிட்டோம். அந்தத் தீர்மானத்தைப் புனராலோசனை செய்யுமாறு கெஞ்சிக் கேட்டுக் கொள்வதற்காக நேட்டால் தோட்ட முதலாளிகள் இந்தியாவுக்கு ஒரு பிரதிநிதியை அனுப்பினர். குடியேற்றத்தை நிறுத்தியதால் தோட்ட முதலாளி களுக்கு எவ்வளவு பாதகம் ஏற்பட்டிருக்கிறது என்பதையே அது காட்டுகிறது. எனினும் அச் சம்பவம் தென்னுப்பிரிக்கா முழுவதற் கும் ஒரு படிப்பினையாக அமையவில்லை என்றே அஞ்சுகிறேன். தென்னுப்பிரிக்காவில் அரசாங்க நிர்வாகத்தை நடத்திவருவோர், இந்தியாவின் கோபத்தை உணர்ந்து கொள்ளும்படி செய்வதற் கான வழியைக் கண்டுபிடிப்பது எளிதல்ல என்பது துரதிர்ஷ்டமே யாகும்.

சமீபத்தில் தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் தாங்க ளாகவே ஒரு வழியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். மனத்தைப் புண்படுத்தக் கூடியதென்றும், அநீதியானதென்றும் அவர்கள் கருதும் சட்டங்களை எதிர்த்து அவர்கள் சாத்துவிக எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். அந்தச் சட்டங்களைப் பற்றி எங்களுடைய அபிப்பிராயமும் அதுதான். அச் சட்டங் களை மீறுவதால் தண்டனைக்கு உள்ளாக நேரும் என்பதை முற்றிலும் உணர்ந்தே அவர்கள் அவ்விதம் செய்யத் துணிந் திருக்கிறார்கள். அதனல் ஏற்படக்கூடிய தண்டனைகளை அனுப விக்க அவர்கள் தைரியத்துடனும் பொறுமையுடனும் ஆயத்தமாக இருந்துவருகிறார்கள். அவர்களுக்கு இந்தியாவின் ஆழ்ந்த, தீவிர மான அனுதாபமும், என்போன்ற இந்தியரல்லாதாரின் அனு தாபமும் இருந்து வருகின்றன. அங்குள்ள நிலைமை சமீபத்தில் மிகவும் மோசமான ஒரு கட்டத்தை அடைந்திருக்கிறது. அதாவது சாத்துவிக எதிர்ப்பைச் சமாளிக்க அரசாங்கம் மிகவும் கடுமையான முறைகளைக் கைக்கொண்டிருப்பதாகப் புகார்கள் கூறப்பட்டு வருகின்றன. நாகரிகமானதென்று கூறிக்கொள்ளும் எந்த நாட்டிலும் அத்தகைய முறைகள் சகிக்க முடியாதவை. தென்னுப்

பிரிக்காவிலுள்ள பொறுப்புவாய்ந்த சர்க்கார் அத்தகைய முறைகள் கைக் கொள்ளப்படவில்லை என்று மறுத்திருக்கிறார்கள் என்றாலும், அவர்களுடைய மறுப்பிலிருந்தே அவர்கள் கைக் கொண்டுள்ள நடவடிக்கைகள் புத்திசாலித்தனமானவை அல்ல என்பது தெரிகிறது. இப்போது அங்குள்ள நிலைமை இதுதான். தாங்கள் எடுத்துக் கொண்டுள்ள முறைகள் நியாயமானவை என்பதை இந்தியாவின் முன்னிலையிலும், உலகத்தின் முன்னிலையிலும் நிரூபிக்க தென்னாப்பிரிக்கா சர்க்கார் விரும்புவார்களாயின், அவர்களுக்குள்ள ஒரே வழி பாரபட்சமற்ற ஒரு விசாரணைக் கமிட்டியை நியமிப்பதுதான். இந்தியர்களுடைய நலன்களில் அக்கறையுடையவர்கள் அக்கமிட்டியில் பிரதிநிதிகளாக நியமிக்கப்படவேண்டும். இந்த யோசனையை இந்திய சர்க்கார் பிரிட்டிஷ் சர்க்காரிடம் இடைவிடாது வற்புறுத்திவருவார்கள் என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.

'இந்தியன் ஒபினியன்'-3—12—1913

## 17

# லாலா லஜபதிராயின் கடிதம்*

டெலிபோன்-கிரீலி 6175,
1400, பிராட்வே, நியூயார்க்,
ஜூன் 20, 1919

அன்புள்ள மகாத்மாஜி,

நமது தாய்நாட்டின் விடுதலைக்காக நீங்கள் நடத்திவரும் மகத்தான இயக்கத்தில் நான் பங்கு எடுத்துக் கொள்ள இயல

---

* பஞ்சாப் சிங்கம் என்று புகழ் பெற்ற லாலா லஜபதிராய் (1865–1928) நாட்டின் விடுதலைக்காகவே வாழ்ந்தார்; நாட்டின் விடுதலைக்காகவே உயிரையும் பலி கொடுத்தார். 1905–ல் ஐரோப்பாவுக்குச் சென்று இந்தியாவிலுள்ள அரசியல் நிலைமையைப் பற்றி அங்குள்ளவர்களுக்கு விளக்கிக் கூறுவதற்காக, இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை கோபாலகிருஷ்ண கோகலேயுடன் லாலா லஜபதிராயையும் அனுப்பியது. இந்தியாவின் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான வழிகளைக் கண்டுபிடிக்க அந்தப் பிரயாணம் லஜபதிராய்க்கு உதவியாக இருந்தது. 1907–ல் அவர் மாண்டலேய்க்கு நாடு கடத்தப்பட்டார். எனினும் பின்னர் அவர் விடுதலை அடைந்தார். அவர் மீது ராஜத் துரோகக் குற்றம் சாட்டிய ஆங்கிலப் பத்திரிகையின் மீது அவர் தொடர்ந்த மான நஷ்டவழக்கில், லஜபதிராய்க்கு அப்பத்திரிகை நஷ்ட ஈடுத்தொகை கொடுக்கவேண்டுமென்று கோர்ட்டார் தீர்ப்பளித்தனர். தமக்குக் கிடைத்த அந்தத் தொகையை லஜபதிராய் தர்ம நிதிகளுக்கு வழங்கினர்.

1914–ல் அவர் மேனாடுகளுக்குச் சென்று ஆறு ஆண்டுகள் வரையில் அமெரிக்காவில் வாழ்ந்துவந்தார். (அப்போது அவர் காந்திஜிக்கு எழுதிய

வில்லை. என்னை மீறிய சந்தர்ப்பங்களே அதற்குக் காரணமாகும். இருந்தாலும் உங்களுடைய உயர்ந்த நிலைக்காகவும், உங்களுடைய புனிதமான தேசபக்திக்காகவும் எனது வியப்பையும் மனப்பூர்வமான பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

நான் இந்தியாவைவிட்டு வெளியேறிய பின் பல விஷயங்களைக் கற்றுக் கொண்டேன். ஏற்கனவே கற்றுக் கொண்ட பல விஷயங்களை மறந்துவிடவும் செய்தேன். எனது நம்பிக்கையைப் பூரணமாக ஒப்புக் கொள்வதற்கு இது சந்தர்ப்பமல்ல. ஆனால் ஒன்று மாத்திரம் கூற விரும்புகிறேன். உங்களுடைய சிந்தனையின் போக்கை நான் முழுமையும் ஒப்புக் கொள்ள முடியாவிட்டாலும், நாம் என்ன செய்யவேண்டும் என்பது பற்றி நீங்கள் செய்துள்ள முடிவுகளை நான் பெரிதும் ஒப்புக்கொள்கிறேன். இந்தியாவில் பலாத்காரப் புரட்சியை உண்டாக்க முயற்சிப்பது வியர்த்தமாக முடியும் என்ற அபிப்பிராயம் இதற்கு முன் ஒருபோதும் இவ்வளவு உறுதியாக என் மனத்தில் எழுந்ததில்லை. என் அபிப்பிராயத்தில் பயங்கர நடவடிக்கைகள் பலனற்றவை என்பது மாத்திரமல்ல, பாவமானவையும்கூட. நாட்டின் விடுதலைக்காக பகிரங்கமாக வேலை செய்வோருக்குத் தடையும், தண்டனையும் விதிக்க சர்க்கார் விரும்புவதன் காரணமாக, ரகசியப் பிரசாரமும், ரகசிய சங்கங்களும் நியாயமானவையாக இருக்கலாம். எனினும் காலம் செல்லச் செல்ல, அவற்றில் பங்கு எடுத்துக் கொள்வோரிடையே சீர்குலைவு ஏற்பட்டுவிடுகிறது. துன்பத்தை ஏற்றுக் கொண்டு அனுபவிக்கத் தயாராக இராத எந்த நாடும் விடுதலை பெற முடியாது, விடுதலை பெறுவதற்குத் தகுதியற்றதுமாகும். அதாவது சுதந்திரம் பெறுவதற்கான முயற்சியின் விளைவாக ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை அவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். விடுதலை பெறுவதற்குத் தகுதிவாய்ந்த சாதனைகள் எதையும் நாம் செய்யவில்லை. உண்மையான விடுதலை என்றால் என்ன என்பதுபற்றி நமது மக்களுக்குக் கற்பிக்கவும் நாம் எத்தகைய முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. விடுதலைப் போராட்டத்தில் நாம் இதுவரை செய்துள்ள தியாகங்களும் அனுபவித்துள்ள துன்பங்களும் அற்பமானவை, வெற்றியைக் கொடுக்கக் கூடியவை அல்ல.

எனவே உங்களுடைய பிரசாரத்தின் பொதுவான தத்துவத்தில் எனக்குப் பூரணமான அனுதாபம் இருக்கிறது. சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் நான் கையெழுத்திட இயலாதவனாக இருக்கலாம்; ஆனால் நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்ததும்,

---

கடிதமே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.) 1920-ல் அவர் இந்தியாவுக்குத் திரும்பிவந்ததிலிருந்து தேசியப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டு சிறைக்குச் சென்றார். 1920-ம் ஆண்டில் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகாசபையின் விசேஷக் கூட்டத்திற்கு லஜபதிராய் தலைமை வகித்தார். 1928-ல் சைமன் கமிஷன் இந்தியாவுக்கு வந்தபோது அதை எதிர்த்து நடந்த ஆர்ப்பாட்டத்தில் லஜபதிராயும் கலந்து கொண்டார். அப்போது அவர் போலீசாரின் தடியடியால் படுகாயமுற்று நவம்பர் 17-ஆம் தேதி வீரச் சொர்க்கமடைந்தார்.

தூய்மையான சுதேசிப் பிரதிக்ஞையில் நிச்சயமாகக் கையெழுத்திடுவேன்.

இந்த நாட்டிலுள்ள இளைஞர்களான இந்தியர்களில் பெரும் பாலோரும் உங்களிடம் ஆழ்ந்த பக்தியுடன் இருந்து வருகிறார்கள் என்பதைக் கேட்க நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். அவர்களில் ஒருவரும், ஒரு காலத்தில் ஹரதயாளின் சீடராக இருந்தவருமான இளைஞர் எழுதுவதாவது:

“இப்போது நமக்கு மகாத்மா காந்தியைப் போன்ற தலைவர்கள்தான் தேவை. ஆயுதப் புரட்சியை நாங்கள் விரும்பவில்லை. சாத்துவிக எதிர்ப்பையும் நாங்கள் விரும்பவில்லை. ஹரதயாள் உபதேசித்த முறைகள் விவேகமானவை அல்ல; உலகத்தின் எந்தப் பாகத்திற்கும் அவை பொருந்தா. கொலைகள், சதிகள், அரசியல் கொலைகள், தீ வைத்தல், பயங்கர நடவடிக்கை ஆகியவற்றைத் தவிர்க்கவே நாங்கள் விரும்புகிறோம். முன்பு அரசியல் போராட்டம் ரத்தக் களரியை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அத்தகைய போராட்டத்தில் நாம் போதிய அளவு ஈடுபட்டு விட்டோம். ஆனால் இனி நீதியையும், தனி நபர்களின் சுதந்திரத்தையும் அடிப்படையாகக் கொண்டே அரசியல் போராட்டத்தை நடத்த வேண்டும். ஹரதயாள் பலாத்காரக் கொள்கைகளை உபதேசித்து வந்ததன் மூலம் தம்மைத் தாமே இழிவுபடுத்திக் கொண்டுள்ளார். அவரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றி வந்த இளைஞர்கள் அக்கொள்கைகளால் பாதிக்கப்படலாம் என அஞ்சுகிறேன். நம்முடைய தலைவர்கள் உயர்ந்த நிலைக்குச் செல்லுவதற்குப் பதிலாகத் தாழ்ந்த நிலைக்குச் சென்று வருவது நமது துரதிர்ஷ்டமேயாகும். காந்தியைப் போன்ற தலைவர்களே இப்போது நமக்குத் தேவையாகும். அவர்கள் கொள்கைகளில் உறுதியுடன் இருக்க வேண்டும்; அவர்களுடைய கொள்கைகள் உலகத்தின் எந்தப் பகுதிக்கும் பொருத்தமானவையாக இருக்க வேண்டும்.”

எனது தேச மக்களின் துர்ப்பாக்கியத்தில் நானும் பூரண பங்கு எடுத்துக்கொள்ள இப்போது இந்தியாவில் நான் இல்லையே என்று ஏங்குகிறேன். அவர்களுக்காக என் இருதயத்தில் உதிரம் வழிகின்றது; என் தேச மக்களுக்காகத் தொண்டு செய்யவும் துன்பத்திற்கு உள்ளாகவும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்காததற்காக என் உள்ளத்திலிருந்து இன்னும் அதிகமாக உதிரம் வழிகின்றது.

தங்கள் உண்மையுள்ள,

லஜபதிராய்

# 18

# பிரிந்து வாழவேண்டிய அவசியம்

வால்க்ஸ்ரஸ்ட்,
சனிக்கிழமை, *16-1-1909*

சிரஞ்சீவி சஞ்சல்,*

நான் கைதியாகி நாடு கடத்தப்பட்டேன்; பின்னர் மீண்டும் கைதியாகி இப்போது ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டுள்ளேன். இப்போது நான் ஜோகன்னஸ்பர்க்கிற்குச் செல்லுகிறேன். இதன் சம்பந்தமான முழு விவரங்களையும் நீ மணிலாலிடமிருந்து தெரிந்து கொள்ளலாம்.

உன்னுடன் நான் அதிகமாகப் பேச முடியாத, எதுவுமே பேச முடியாத நிலையில் இருந்ததைக் குறித்து மிகவும் வருந்துகிறேன். எனது நிலைமை அவ்வளவு துக்ககரமானதாக இருக்கிறது.

அன்று நான் வேண்டுமென்றே வாயால் கூறி உன்னை எழுதிக் கொள்ளும்படி செய்தேன். அத்தகைய வேலைகளில் உனக்குத் திறமை ஏற்படும்படி செய்ய வேண்டும் என்பதே எனது விருப்ப மாகும். ராமி பெரியவளாகும்போது உன்னை என்னுடனேயே வைத்துக்கொள்வேன். தற்போது ஹரிலாலுடன் சேர்ந்திருக்கும் எண்ணத்தை நீ விட்டுவிட்டால், அது உங்கள் இருவருக்குமே நன்மை பயப்பதாக இருக்கும் என்பது நிச்சயம். பிரிந்திருப்பதன் மூலமே ஹரிலால் வளர்ச்சியடைந்து, தனது மற்றக் கடமைகளைச் செய்து வருவான். அவன் நீ இருக்குமிடத்தில் இருந்தால் மாத் திரம்தான் அவனுக்கு உன்மீது அன்பு உண்டு என்று சொல்லு வதற்கில்லை. சிற்சில சமயங்களில் அன்பு காரணமாகவே ஒருவர் பிரிந்து வாழவேண்டியிருக்கிறது. இது உன் விஷயத்தில் உண் மையாகும். எப்படிப் பார்த்தாலும், நீ பிரிந்திருப்பதன் காரண மாக நீ சஞ்சலமடையாமல் இருந்தால்தான், உனக்கு அதனால் மகிழ்ச்சி உண்டாக முடியும். போராட்டம் முடியும்வரையில் ஹரிலால் ஜோகன்னஸ்பர்க்கில் தங்கியிருக்க வேண்டுமென நான்

---

* ஸ்ரீமதி சஞ்சல்பென் காந்தி, காந்திஜியின் மூத்த குமாரரான ஹரி லாலின் மனைவி. நோயுற்று கவலைக்கிடமான நிலைமையிலிருந்த ஸ்ரீமதி கஸ்தூரி பாயைப் பார்த்துவிட்டு காந்திஜி ஜோகன்னஸ்பர்க்கிற்குப் புறப்பட்டுச் செல்லும் வழியில் வால்க்ஸ்ரஸ்டில் கைது செய்யப்பட்டு, பின்னர் விடுதலை அடைந்த பின் மேற்கண்ட கடிதம் எழுதினர். அக்கடிதத்தில் ஸ்ரீமதி சஞ்சல்பென்னின் கைக் குழந்தையை 'ராமி' என்றும், தமது மூன்ருவது குமாரரான ராமதாஸை 'ராமா' என்றும், நான்காவது குமாரரான தேவதாஸை 'தேவா' என்றும் காந்திஜி குறிப்பிட்டுள்ளார். மணிலால், காந்திஜியின் இரண்டாவது மகன். ஸ்ரீமதி சஞ்சல் பென்னுக்கு காந்திஜி எழுதியுள்ள கடிதங்களில் பெரிதும் குடும்ப சம்பந்தமான விவரங்களையே குறிப்பிட்டிருக்கிருர்.

நினைக்கிறேன். நீ இருக்கும் நிலையைக் கவனிக்கும்போது, உன்னை ஒரு குழந்தையைப்போல் நடத்த நான் உத்தேசிக்கவில்லை. நீயும் மணிலாலும் குடும்பத்தைக் கவனித்துக் கொள்ளவேண்டும் என்பதே எனது விருப்பமாகும். குடும்ப சம்பந்தமான எல்லா விஷயங்களையும் நீங்களே நிர்வாகம் செய்யவேண்டும். ராமாவையும் தேவாவையும் ஒழுங்கான வழியில் பராமரித்து, அவர்களுக்குச் சொந்தமான சாதனங்களைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும். அவர்கள் சுத்தமாகவும், நகங்களை ஒழுங்காகக் கிள்ளி அழுக்கின்றியும் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். பா எப்போது பூரணமாகக் குணமடைவாளென யாரும் கூற இயலாது. அவள் முற்றிலும் குணமடைந்தால் கூட, உன்னுடைய அந்தக் கடமைகளை நீ செய்துவர வேண்டும். நீ, வீட்டு எஜமானியைப் போல் நடந்து கொள்ளவேண்டும். நாம் மிகவும் ஏழைகள் என்பதை மறந்துவிடாதே.

ஆசிகள்,
**மோகன்தாஸ்**

# 19

# மருமகள் அல்ல, மகளே

*ஜனவரி 28, 1909*

சிவி. சஞ்சல்,

நீண்ட நாட்களுக்குப் பிறகு உன் கடிதம் கிடைத்தது. உன் மனம் அமைதியற்றிருப்பதைக் குறித்து நான் வருந்துகிறேன். இருந்தாலும், உன் மனத்திலுள்ள உணர்ச்சிகளை அறிய நான் எப்போதும் விரும்புகிறேன். அவற்றை அறிந்தால் நான் வருந்துவேன் என்று நினைத்துக் கொண்டு, நீ அவற்றை என்னிடம் கூறுமல் மறைக்க வேண்டாம்.

உன்னுடைய தந்தையின் வீட்டிலிருந்து நீ வெகு தொலைவில் இருப்பதாக எண்ணுவது சரியல்ல. உன்னை நான் என்னுடைய மருமகளாகக் கருதவில்லை, மகளாகவே கருதுகிறேன். நான் உன்னை என்னுடைய மருமகளாகக் கருதியிருந்தால், உன்னை ஒரு குழந்தையாகவே நடத்த முற்பட்டிருப்பேன். ஆனால் உன்னை நான் எனது மகளாகவே எண்ணுகிறேன். உன்னை ஒரு குழந்தை என்று ஒப்புக் கொள்ள நான் விரும்பாததை, உன்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. மணிலாலை ஒரு குழந்தை என்று நான் கருதவில்லை. அதுபோலவே உன்னை ஒரு குழந்தை என்று நான் நினைக்கவில்லை. நமக்குள்ள உறவை மாமனாருக்கும் மருமகளுக்கும் இடையே உள்ள உறவாக நான் கருதிவந்திருந்தால், அதாவது நம்மிடையே அத்தகைய தூரம் இருக்கும்படி நான் நடந்துகொண்டிருந்தால், என்னுடைய வழக்கமான இயல்

புக்கு இணங்க, நான் முதலில் உன் மனத்தை மாற்ற முயற்சித்திருப்பேன்; குடும்பத்துடன் உனக்கு ஒருமைப்பாடு உணர்ச்சி வளர்ச்சி பெற்றபின் தான் எனக்காக வேலை செய்யும்படி உன்னை நான் கேட்டிருப்பேன். ஆனால் நம்மிடையே மாமனார்-மருமகள் என்ற உறவை நீ மறந்திருப்பாய் என்று நான் இயல்பாகவே எண்ணினேன். ஏனெனில் உனக்கும் ஹரிலாலுக்கும் திருமணம் நடப்பதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே நான் உன்னை என் மகளைப்போல் மடியில் வைத்துக் கொஞ்சியிருக்கிறேன்.* நீ அதை மறக்கவில்லை அல்லவா? இப்போது அதை மறந்துவிட முயற்சி செய்.

எவ்விதத்திலாவது ஏதாவது தீங்கு நேரக்கூடிய அல்லது உனக்கு வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய விதத்தில் நான் ஒரு போதும் நடந்து கொள்ளமாட்டேன். தங்களுடைய கணவன் மாரிடமிருந்து பிரிந்திருப்பதிலேயே தங்களுடைய இறுதியான நன்மை அடங்கியிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்ட எண்ணிக்கையற்ற பெண்கள் இந்தியாவில் இருந்திருக்கிறார்கள். நளனிடமிருந்து பிரிந்து வாழ்ந்ததாலேயே தமயந்தி என்றும் அழியாப் புகழ் பெற்றாள். சந்திரமதி, ஹரிச்சந்திரனைவிட்டுப் பிரிந்து இருந்ததாலேயே இருவருக்கும் நன்மை ஏற்பட்டது. பாண்டவர்களிடமிருந்து திரௌபதி பிரிந்து இருந்தது, அவர் களுக்கு வரப்பிரசாதமாக முடிந்தது. அதன் காரணமாக ஹிந்து தேசம் முழுவதும் அவளுடைய (திரௌபதியின்) உறுதியைப் போற்றிப் புகழ்ந்து வணங்குகின்றனர். இந்தச் சம்பவங்கள் நடைபெறவே இல்லை என்று நினைத்துவிடாதே. புத்தர்பிரான் தமது மனைவியை விட்டுப் பிரிந்து சென்றதால், அவரும் அவரது மனைவியும் அழியாப் புகழும் பெருமையும் பெற்றனர். கணவனிட மிருந்து நீ பிரிந்திருப்பதால் உனக்கு யாதொரு தீங்கும் நேராது என்பதைக் காட்டவே இந்த உதாரணங்களையெல்லாம் கூறு கிறேன். அத்தகைய பிரிவினால் உன் மனம் வேதனைக்கு உள்ளா வது இயல்பேயாகும். அதுதான் அன்புக்கு அறிகுறியாகும். எனினும் அதனால் உனக்குத் தீங்கு ஏற்படும் என்று கூற முடியாது. மகிழ்ச்சியும் துக்கமும், பிரிவுக்குக் காரணம் என்ன என்பதையே பொறுத்திருக்கின்றன. பாவிடமிருந்து நான் பிரிந் தது பெரிதும் எதிர்பாராமல் நேர்ந்ததாகும். அதாவது நானாக அவ்விதம் செய்யவில்லை. அப்படியிருந்தும் அவ்விதம் பிரிந்து இருந் தது, எங்கள் இருவருக்கும் ஒரு வரப்பிரசாதமாக முடிந்தது. இந்த உதாரணங்களை நான் எடுத்துக்கூறுவதன் மூலம், எப்போதும் நீ பிரிந்தே வாழவேண்டுமென உன் மனத்தில் பதியும்படி வற் புறுத்த நான் விரும்பவில்லை. போராட்டத்தின்போது பிரிந் திருப்பதைக் குறித்து நீ வருந்தக் கூடாது என்பதற்காகவே இதை

---

* ஸ்ரீமதி சஞ்சல் பென்னின் தந்தையான ஹரிதாஸ் வோராவும் காந்திஜி யும் நெருங்கிய நண்பர்களாக இருந்தனர். அப்போது குழந்தையாக இருந்த சஞ்சல் பென்னை காந்திஜி மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சுவது வழக்கம். அதையே காந்திஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

நான் எழுதுகிறேன். போராட்டம் முடிவடைந்த பின், உன் கணவனிடமிருந்து பிரிந்திருப்பதற்கு நான் காரணமாக இருக்க மாட்டேன். உன் மனப் போக்கை மாற்றவே நான் முயற்சிக்கிறேன். நீ இதை உணர்ந்து, பிரிந்திருப்பதற்குப் பழகிவிட்டால், என் முயற்சி பலித்துவிடும்.

நீ இந்தக் கடிதத்தைப் பாதுகாத்துவருவதுடன், இதை அடிக்கடி வாசித்துப் பார்க்கவேண்டும். இதில் உனக்குப் புரியாததை, என்னைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். நீங்கள் இருவரும் இதை வாசிக்கவேண்டும். உன்னுடைய நலனே நான் இதை எழுதுவதன் நோக்கமாகும். உனது நலனை அபிவிருத்தி செய்வதே எப்போதும் எனது ஆர்வமாக இருந்துவருகிறது. எனினும் எனது அபிப்பிராயங்களை நீ ஒப்புக் கொள்ள வேண்டுமென நான் வற்புறுத்தவில்லை. உங்களுடைய முயற்சியினுல் நீங்கள் வளர்ச்சி பெறவேண்டும் என்பதொன்றே எனது விருப்பமாகும்.

ஆசிகள்,
மோகன்தாஸ்

# 20

## ஆரோக்கியம் அபிவிருத்தியடைய வழி

*வால்க்ஸ்ரஸ்ட் சிறை, திரான்ஸ்வால்,*
*பிப்ரவரி 26, 1909*

சிவி. சஞ்சல்,

உன்னிடமிருந்து யாதொரு கடிதமும் வராததைக் குறித்து நான் வருந்துகிறேன். பாவின் உடல் நலம் அபிவிருத்தி அடைந்து வருவதைத் தெரிந்து கொண்டேன். நல்ல விஷயங்களையும், கவிதைகளையும் தயவு செய்து அவளுக்கு வாசித்துக் காட்டுவதுடன், எப்போதும் அவளைக் கலந்து கொண்ட பின், எனக்குக் கடிதம் எழுது. கடிதங்களில் நீ, மணிலால் இருவரும் கையெழுத்திட வேண்டும். பா என்ன சொல்ல விரும்புகிருள் என்பதை நீ கேட்டு, அதை எனக்கும் தெரிவிக்கலாம்.

உன்னுடைய உடல் நிலையைப் பற்றியும், உனது வலது காது, கால்கள், இருமல் ஆகியவை எப்படி இருக்கின்றன என்பது பற்றியும் எனக்குத் தெரிவிக்க வேண்டும்.

உனது உணவில் நான் குறிப்பிட்டுள்ள மாறுதல்களை, என்னிடமிருந்து வந்த கண்டிப்பான கட்டளையைப் போல் பின்பற்ற வேண்டும். ஜவ்வரிசியும், பாலும் ஒழுங்காகச் சாப்பிட்டு வரவும். ராமிக்கு இன்னும் சில நாட்கள் வரையில் தாய்ப் பாலே

கொடுத்து வா. அவளுக்குப் பால் கொடுத்தபின், நீ போதிய உணவு உட்கொள்ளவேண்டும். நீ வெட்ட வெளியில் நல்ல காற்று வாங்கினாலன்றி, உனது ஆரோக்கியம் அபிவிருத்தி அடையாது. நான் இதைக் காட்டிலும் அதிகமாக எழுதவேண்டிய அவசியமில்லை.

ஆசிகள்,
மோகன்தாஸ்

## 21

## விலையுயர்ந்த ஆபரணம் எது?

டால்ஸ்டாய் பண்ணை,
ஜனவரி 8, 1911

சிவி. சஞ்சல்,

உன்னுடைய நீண்ட சுவையான கடிதத்தை நான் வாசித்து மகிழ்ச்சியடைந்தேன். பாவும் அதை அக்கறையுடன் வாசித்தாள். ஹரிலால் நாளைக்கு சிறையிலிருந்து விடுதலை அடைந்ததும் அதை வாசிப்பான். காரியாலயத்தில் எனக்கு நேரம் இராததால் நான் இக்கடிதத்தை அவசரமாக எழுதுகிறேன். இப்போது நான் பண்ணையில் இருக்கிறேன். இப்போது இரவு ஒன்பது மணி ஆகிறது.

உனக்கு ஒழுங்காக 'இந்தியன் ஒபினியன்' வந்து கொண்டிருக்கவேண்டும். நீ எப்போதாவது உலாவப் போகிறாயா? வாசிக்கும் வழக்கத்தை நீ வைத்துக் கொண்டிருப்பது நன்மையே ஆகும். நீ நகைகள் அணிந்து கொள்ளாதிருந்தால் யாராவது கண்டிப்பார்களோ என்பதற்காக நீ அவற்றை அணிந்து கொள்வதை நான் விரும்பவில்லை. நகைகளில் அழகு எதுவும் இல்லை. ஆடவர், பெண் இருவருக்கும் உண்மையான ஆபரணம் தூய்மையான நடத்தைதான். உன்னிடம் தூய்மையான ஒழுக்கம் இருப்பதே விலையுயர்ந்த ஆபரணமாகும். மூக்கிலும் காதுகளிலும் நகைகளை அணியும் நம்முடைய வழக்கம் காட்டுமிராண்டித்தனமானது என்று எனக்குத் தோன்றுகிறது. வெள்ளையர்களுடன் ஒப்பிடும்போது அல்ல, நாகரிக வாழ்க்கை பற்றி நமது கொள்கையின்படியே பார்த்தாலும், நகைகள் அணிவது காட்டுமிராண்டித்தனமேயாகும். ராமச்சந்திரனும், சீதையும், மற்றவர்களும் நகைகள் அணிந்திருந்ததாக கவிகள் வர்ணித்துள்ளனர். கவிகள் அவற்றை எழுதிய காலத்தில் அந்த வழக்கம் இருந்தது என்பதையே அது காட்டுகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. அதைத் தவிர, தயாள குணமுள்ள ராமபிரானோ, ஆழ்ந்த பதி பக்தியுள்ள சீதையோ, தங்கள் உடல்களில் ஒரு குன்றுமணித்

தங்கம் கூட போட்டுக் கொண்டிருந்ததாக என்னால் கற்பனை செய்து கொள்ள முடியவில்லை. அது எப்படியாயினும், மூக்கிலும் காதுகளிலும் துவாரங்கள் செய்து அவற்றில் எதையாவது தொங்க விடுவதிலோ அல்லது கழுத்தை அல்லது கைகளைச் சுற்றி நகைகள் அணிவதிலோ அழகு எதுவும் இல்லை என்பதை நாம் எளிதில் அறிந்து கொள்ள முடியும். இருந்தாலும் கைகளில் வளைகள் அணிவதைப் பற்றி நான் எதுவும் கூறவில்லை. ஏனெனில் வளைகள் போட்டுக் கொள்ளாமல் இருந்தால் அது அமங்களத்தைக் குறிப்பிடுவதாக இருக்கும்.*

வம்புப் பேச்சைத் தடுப்பதற்காக இவற்றை நாம் அணிந்து கொள்வது போதுமானது. இவைதான் எனது கருத்துக்கள். எனினும் நீ அவற்றைப் பற்றி ஆலோசனை செய்து உனக்கு எது நியாயமாகத் தோன்றுகிறதோ அவ்விதமே செய். எனக்காக நீ சங்கடப்பட்டுக் கொண்டு எதுவும் செய்ய வேண்டிய அவசியமே இல்லை.

ராமதாஸும் தேவதாஸும் மிகவும் உற்சாகத்துடன் இருந்து வருகிறார்கள். இங்கே இருபது பையன்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் சொந்த வீட்டில் இருப்பதுபோல் சௌகரியமாக இருந்து வருகிறார்கள். பா மற்றப் பெண்களுடன் இருப்பதால், அவளும் மகிழ்ச்சியுடன் இருந்துவருகிறாள். அவள் தற்காலிகமாகவாவது 'டீ' சாப்பிடுவதைக் கைவிட்டிருக்கிறாள். அவளுக்கு இப்போது குளிர்ந்த தண்ணீரில் ஸ்நானம் செய்யும் வழக்கமும் வந்திருக்கிறது.

இந்த மாதத்திற்குள்ளாவது அல்லது பிப்ரவரியிலாவது போராட்டம் ஒரு முடிவுக்கு வரலாம் என்ற பேச்சு இருந்துவருகிறது. என்ன நிகழ்கிறதென்பதைப் பார்ப்போம். அரசாங்கம் இப்போதெல்லாம் யாரையும் கைது செய்வதில்லையாதலின், ஹரிலால் சுதந்திரமாக வெளியில்தான் இருப்பான். ஜோகன்னஸ்பர்க் சிறையில் அவனது ஆரோக்கியம் சிறந்து விளங்கியது என்பது எனக்குத் தெரியும்.

சிறையிலிருந்து விடுதலை அடைந்த பின் புருஷோத்தமதாஸும் இங்கு வந்திருந்தார். ராமிபாய்க்கு எனது முத்தம். சபல்பாய்க்கு எனது வணக்கங்கள். பாலியின் கடிதத்தை நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு குமி கடிதமே எழுதுவதில்லை. எனவே அவளிடமிருந்து நான் என்ன எதிர்பார்க்க முடியும்?†

---

* விதவைகள் வளைகள் போட்டுக்கொள்ளக் கூடாது என்பது ஹிந்துக்களின் சம்பிரதாயமாகும்.

† கடைசி பாராவில் காந்திஜி குறிப்பிட்டுள்ள ராமிபாய், சஞ்சல் பென்னின் மகள்; சபல்பாய், சஞ்சல் பென்னின் தாயார்; பாலியும், குமியும் சஞ்சல் பென்னின் சகோதரிகள் ஆவர்.

# 22

# களங்கமுற்ற உணவு

லாலி,

பிப்ரவரி 18, 1912

சிவி. சஞ்சல்,

பல மாதங்களுக்குப் பிறகு உன்னிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்துளது. கடிதங்கள் எழுதும் விஷயமாக நீ சோம்பேறித் தனத்தைக் குறைத்துக் கொள்ளவேண்டும் என்பதே என் விருப்பமாகும். சிவி. ஹரிலாலுடன் இருக்க வேண்டும் என்று நீ விரும்புவது இயற்கையே. அதை நான் நன்கு அறிந்து கொள்ள முடியும். இவ்விஷயத்தில் உன் விருப்பத்திற்குக் குறுக்கே நிற்க நான் சிறிதும் விரும்பவில்லை. உன் விருப்பப்படியே இருவரும் சேர்ந்து வசியுங்கள், உங்கள் விருப்பப்படி செய்யுங்கள். எனக்கு ஒரே ஒரு ஆசைதான் இருக்க முடியும். நீங்கள் சந்தோஷமாக வாழ வேண்டும் என்பதே அந்த ஆசையாகும்.

காந்திக்கு* நீ மெல்லின்ஸ் உணவு கொடுப்பதை நான் விரும்பவில்லை. இந்தியாவில் எந்த அந்நிய நாட்டுச் சாதனத்தையும் உபயோகிப்பது பாவமாகும். அதிலும், அந்நிய நாட்டு உணவுப் பொருட்களை உபயோகிப்பது எனக்கு மிகுந்த வெறுப்பைக் கொடுக்கிறது. அவையெல்லாம் களங்கமுள்ளவை என்பதே என்னுடைய அபிப்பிராயமாகும். மிருகக் கொழுப்பு, போதை வஸ்து ஆகியவற்றை அந்நியர்கள் ஆட்சேபிப்பதில்லை. எனவே அந்நிய நாடுகளிலிருந்து வரும் உணவுப் பொருட்களில் அவை கலக்கப்படாமல் இருப்பதில்லை என்பதை நன்கு கவனித்திருக்கிறேன். பண்டைய நாட்களில் அந்நிய நாட்டு உணவுப் பொருட்களின்றியே நமது குழந்தைகள் நன்கு வளர்ந்துவந்தன என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும். எனவே அவைகளின்றியே நாமும் சமாளிக்க வேண்டும் என்பதே நான் கூறும் புத்திமதியாகும். நன்ருக வறுக்கப்பட்ட கோதுமையை மாவாக அறைத்து வெல்லத்தையும் தண்ணீரையும் கலந்து சாப்பிட்டால், மெல்லின்ஸ் உணவு போலவே இருக்கும். மெல்லின்ஸ் உணவின் ஸ்தானத்தில் நாம் பல்வேறு உணவுச் சாதனங்களையும் தயாரிக்க முடியும்.

நீயும், ராமியும், காந்தியும் அங்கே இருப்பது சபல்பாய்க்கு மிகவும் ஆறுதலாக இருக்கும் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன்.

பாவோ அல்லது நானோ இப்போது இங்கிருந்து எப்படி புறப்பட்டு வர முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை.

---

* காந்தி, சஞ்சல் பென்னின் மகன்.

மணிலால் தற்போது இங்கேதான் இருக்கிறான். அவன் மார்ச்சு மாதம் மத்தியில் இங்கிருந்து புறப்படுவான். ஜம்னா தாஸும் இங்கேதான் இருக்கிறான். இப்போது நான் பள்ளிக்கூட அலுவல்களில் மும்முரமாக கவனம் செலுத்தி வருகிறேன். 8 முஸ்லிம்களும், 2 பார்ஸிகளும், 15 ஹிந்துக்களுமாக இப்போது பள்ளிக்கூடத்தில் 25 மாணவர்கள் இருக்கிறார்கள். ஹிந்துக்களில் 5 பேர் சென்னையையும், ஒருவர் கல்கத்தாவையும் சேர்ந்தவர்கள்; மற்றவர்கள் குஜராத்திகள். ஜம்னாதாஸும், மற்றவர்களும் மாணவர்களுக்குக் கற்பிக்க உதவி புரிந்துவருகிறார்கள்.

ராமிபாய்க்கும், காந்திபாய்க்கும் எனது அன்பான முத்தங்கள். எனக்குக் கடிதம் எழுதும்படி பாலியிடம் சொல்லவும்.

ஆசிகள்,

பாபு

## 23

# வீட்டிற்குள் வரக்கூடாத பொருட்கள்

டால்ஸ்டாய் பண்ணை,
ஆகஸ்டு 3, 1912

சிவி. பாலிக்கும் சிவி. சஞ்சலுக்கும்,

உங்கள் இருவரிடமிருந்தும் கடிதங்கள் வந்து சேர்ந்தன.

ராமியின் கை முறிந்ததற்கு நீங்களே ஓரளவு பொறுப்பாளிகளென நான் நினைக்கிறேன். அடிக்கடி அத்தகைய விபத்துகள் ஏற்படத்தான் செய்கின்றன. நாம் உயிர் பிழைத்திருக்கவேண்டும் என்பது விதியாயின். அத்தகைய விபத்துகளிலிருந்து கூட கடவுள் நம்மைக் காப்பாற்றுகிறார்.

சஞ்சல் இப்போது இங்கே வர விரும்புவதாக சிவி. வேணி எனக்கு எழுதியிருக்கிறாள். அவள் விருப்பப்படி எப்போது வேண்டுமாயினும் அவளுக்கு இங்கே வர உரிமை உண்டு என்பதை அவள் அறிந்து கொள்ளவேண்டும். அவளும் ஹரிலாலும் அங்கே சந்தோஷமாக இருப்பார்கள் என்ற நம்பிக்கையுடனேயே அவள் அங்கு செல்ல நான் அனுமதித்தேன். இன்னும் அந்த நம்பிக்கை எனக்கு இருந்து வருகிறது. அதனால்தான் அவள் அங்கு இருக்கிறாள். நான் எப்போது அங்கே வருவேன் என்பதைக் குறித்து, தற்போது என்னால் எதுவும் கூற முடியாது. இங்கு இந்தியர்கள் சம்பந்தமான சட்டம் நிறைவேறுவதற்கு முன் இங்கிருந்து புறப்பட இயலுமென்று நான் நினைக்கவில்லை.

காந்தி நன்கு வளர்ச்சி பெற்று பலத்துடன் விளங்கி வருகிறான் என்பது ஒரு நல்ல செய்தியே. அந்நிய உணவுப் பொருட்கள் எதுவும் வீட்டிற்குள் வரக்கூடாது என்பதே நான் கூறியுள்ள

புத்திமதியாகும். அவை தீங்கை விளைவிக்கக் கூடியவை என்பதே எனது அனுபவம். அநேகமாக அத்தகைய உணவுப் பொருட்கள் யாவும் ஆட்சேபகரமானவை என்ற என்னுடைய அபிப்பிராயம் நாளுக்கு நாள் உறுதியடைந்துவருகிறது.

பாலி, சமஸ்கிருதம் வாசிக்க ஆரம்பித்திருப்பது, மிகவும் நன்மை அளிக்கக்கூடியதாகும். எப்போதாவது இந்தியாவுக்கு வந்து அங்கே எனது அலுவல்களைத் தொடங்கும் நல்ல அதிர்ஷ்டம் எனக்கு ஏற்படுமாயின், அப்போது நான் பாலியின் தொண்டையே பூரணமாக உபயோகப்படுத்திக்கொள்ள உத்தேசித்திருக்கிறேன்.

மணிலால், ராமதாஸ், தேவதாஸ் ஆகியோர் பண்ணையில் தான் இருக்கின்றனர். டாக்டர் மேத்தாவின் மகளான ஜெயகுன் வரும் என்னுடனேயே இருக்கிருள். குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் விஷயமாக அவள் எனக்கு மிகவும் உதவியாக இருக்கிருள். அவளுடைய கணவன் பிஜிக்குச் சென்றிருக்கிருன் என்ற செய்தியை நீ 'இந்தியன் ஒபினியனி'ல் வாசித்திருக்கலாம். சிவி. ஜம்னுதாஸ், அனி ஆகியோரும் என்னுடனேயே இருக்கின்றனர்.

ஆசிகள்,

பாபு

# 24

## எம். ஏ. பரீட்சை

திரான்ஸ்வால் போராட்டத்தில் நாம் அநேகமாக எல்லாவற்றையும் பணயம் வைத்துள்ளோம். எனவே நாம் அடிக்கடி அதைப்பற்றி விவரமாக எழுதவேண்டியது அவசியமாக இருக்கிறது. அவ்வாறு எழுதுவதுதான் சரி என்றும் தோன்றுகிறது. மீண்டும் போராட்டத்தை நடத்துவதற்கான சந்தர்ப்பம் நமக்குக் கிடைக்காதென்று எல்லா இந்தியர்களுக்கும் கூற விரும்புகிருேம். போராட்டம் தற்போதைய கட்டத்தை அடைந்திருப்பது அற்பமான விஷயமல்ல.

ஆனல், "நூற்றுக்கணக்கானவர்கள் சரண் அடைந்து விட்டார்கள்; எனவே இனி போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதில் என்ன அர்த்தம் இருக்கிறது?" என்று சில இந்தியர்கள் கேட்கின்றனர். இது அவர்களுடைய அறியாமையையே காட்டுகிறது என்று நாம் நினைக்கிருேம். ராணுவத்திலும் அவ்விதம் சிலர் சரண் அடைவது உண்டு. இதில் அசாதாரண விஷயம் எதுவும் இல்லை. அவ்விதம் சரண் அடைவதன் காரணமாக யுத்தம் நின்று விடுவதில்லை.

நாம் தற்போது ஈடுபட்டுள்ள போராட்டம் ஒருவிதமான பரீட்சையேயாகும். நாம் இப்போது படித்துக் கொண்டிருக்கிறோம். படிப்பதற்கு ஒவ்வொருவரும் முன் வந்தார்கள். ஆயிரக் கணக்கானவர்கள் முதலாவது வகுப்பில் தேறினார்கள். பின்னர் இரண்டாவது வகுப்பிற்கு வந்தபோது சிலர் சலிப்படைந்து விட்டார்கள். இவ்விதமாக நாம் ஏழாவது வகுப்பை (உயர்தரப் பள்ளியின் கடைசி வகுப்பை) அடைந்தோம். பின்னர் படிப்பு கடினமாக இருந்தது. எனவே ஏராளமானவர்கள் படிப்பைக் கைவிட்டு விட்டார்கள். இருந்தாலும் பலர் மெட்ரிகுலேஷன் கட்டத்திற்கு வந்தார்கள். அதற்கு மேலும் படிக்க வேண்டும் என்று ஒரு சிலரே துணிந்து முன்வந்தார்கள்.

நாம் இப்போது படிப்பின் (போராட்டத்தின்) கடைசிக் கட்டத்தில் இருக்கிறோம். நாம் எம். ஏ. பட்டப் பரீட்சையில் தேர்ச்சி பெற வேண்டியவர்களாக இருக்கிறோம். அந்தப் பரீட்சையில் நூற்றுக் கணக்கானவர்கள் நிச்சயமாகத் தேற முடியாது: ஒரு சிலர்தான் தேற முடியும். மற்றவர்கள் எம். ஏ. பரீட்சைக்கு வரவில்லை என்பதற்காக இப்போது வந்துள்ளவர்கள் தேர்ச்சி பெற முடியாது என்று கூற முடியுமா? முடியாது. எம். ஏ. பட்டம் பெறுவோரையே வெற்றி பெற்றவர்களாகக் கருத முடியும். அது மாத்திரமல்ல; எம். ஏ. பட்டம் பெற்றவர்களுக்குக் கிடைக்கும் பெருமையில், பட்டம் பெற முடியாமல் பின்தங்கி விட்டவர்களுக்கும் பங்கு உண்டு.

எனவே இன்னும் உறுதியாக நிற்கும் சத்தியாக்கிரகிகளை எம். ஏ. பட்டம் பெறப்போகும் மாணவர்களுடன் ஒப்பிடுகிறோம். அவர்கள் மனச்சோர்வு அடைந்துவிடக் கூடாது. அதற்கு மாறாக, அவர்கள் இதுவரை உறுதியுடன் இருப்பதற்காகப் பெருமை அடைய வேண்டும். எந்தச் சமூகத்திலும் உயர்தரக் கல்வி கற்றவர்கள் ஒரு சிலர்தான் இருக்க முடியும். அவர்களின் தொகை சிறிதாயினும், அவர்கள்தான் மகத்தான உதவி அளிக்கக் கூடியவர்களாக இருப்பார்கள். திரான்ஸ்வாலில் இன்றுள்ள நிலைமை அதுதான். இப்போது போராட்டத்தில் ஒரு சிலரே ஈடுபட்டிருக்கலாம். எனினும் அவர்களுடைய பங்கிற்குத்தான் மகத்தான மதிப்பு அளிக்கவேண்டும்.

*'இந்தியன் ஒபினியன்'—27-2-1909*

# 25

# நாராயணசாமியின் உயிர்த் தியாகம்

*ஜோகன்னஸ்பர்க்,*
*அக்டோபர் 18, 1910*

சாத்துவிக சட்ட மறுப்பாளர்களில் மற்றொருவரான ஏ. நாராயணசாமி சென்ற 16-ம் தேதி மரணமடைந்தார். ஸ்ரீ போலக்குடன்

இந்தியாவிலிருந்து திரும்பி வந்தவர்களில் அவரும் ஒருவர்; டர்பனில் கப்பலிலிருந்து இறங்க அனுமதிக்கப்படாதவர்களில் அவரும் ஒருவர். அவ்விதம் அனுமதிக்கப்படாத அவரும் மற்றும் 31 பேரும் எலிஸபத் துறைமுகத்துக்குச் சென்று, பின்னர் கேப் டவுனுக்குச் சென்றார்கள். அங்கேயும் கப்பலிலிருந்து இறங்க அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. எனவே நாராயணசாமி மீண்டும் டர்பனுக்குத் திரும்பிவரும்படி நேர்ந்தது. தம்மை அதிகாரிகள் இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பிவிடட்டும் என்றே அவர் மீண்டும் டர்பனுக்குத் திரும்பிவந்தார். எலிஸபத் துறைமுகத்தில் அவர்களுடைய பூட்ஸ்கள், தொப்பிகள், துணிகள் முதலியன திருட்டுப் போய்விட்டதால், அவர்கள் போதிய உடைகளின்றி துன்பத்திற்குள்ளாக நேர்ந்தது. கேப் டவுனில் உள்ள சில இந்தியர்கள் அவர்கள் மீது கருணை காட்டியிராவிடில், அவர்கள் யாவரும் உணவின்றிப் பட்டினி கிடக்கும்படி நேர்ந்திருக்கும். இவ்வாறாக, அவர்கள் மிகவும் கஷ்டமான நிலையில், போதிய வசதிகளின்றி சற்றேறக்குறைய இரண்டு மாதங்கள் வரையில் கப்பலிலேயே தொடர்ந்து பிரயாணம் செய்யும்படி நேர்ந்தது. எனவே அங்நிலையில் நாராயணசாமி துன்பத்தைச் சகிக்க முடியாமல் மரணமடைந்ததைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால் இது சாதாரணமாக நிகழ்ந்த மரணம் அல்ல, அதிகாரிகள் செய்த சட்ட பூர்வமான ஒரு கொலையேயாகும்.

'இந்தியா'—*18-11-1910*

* * *

ஸ்ரீ நாராயணசாமியின் மரணத்தைக் குறித்து 'ராண்ட் டெயிலி மெயில்' பத்திரிகை ஆசிரியருக்கு காந்திஜி எழுதிய கடிதம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

ஜோகன்னஸ்பர்க்,
அக்டோபர் *17, 1910*

ஐயா,

திரான்ஸ்வாலில் சட்ட பூர்வமாகக் குடியேறி ஸ்தாபித்தவர் வர்களான பல இந்தியர்களையும் அதிகாரிகள் இந்தியாவிற்குத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். அவர்களில் சிலர் தென்னாப்பிரிக்காவிலேயே பிறந்தவர்கள் ஆவர். அவ்வாறு திருப்பி அனுப்பப்பட்டவர்களில் நாராயணசாமி என்பவர் பிரயாணத்தின்போது ஏற்பட்ட கஷ்டங்களைச் சகிக்க முடியாமல் மரணமடைந்தார். அவர் யாதொரு குற்றமும் செய்யாத நிரபராதி; சட்டத்திற்கும் கட்டுப்பட்டு நடப்பவர். நல்ல ஆரோக்கியத்துடன் இருந்த நாராயணசாமியின் உயிரை, ஆறுவாரம் வரையில் கப்பலில் அவர் பட்ட கஷ்டங்கள் பலிகொண்டுவிட்டன.

காலஞ் சென்ற நாகப்பனின் மரணத்தை, அதிகாரிகள் செய்த சட்ட பூர்வமான கொலை என்று கூற நான் தயங்கவில்லை. நாராயணசாமியின் மரணமும் அதுபோன்றதேயாகும்.

தென்னுப்பிரிக்கா யூனியனின் முதலாவது பார்லிமெண்டைத் துவக்கி வைக்க பிரிட்டிஷ் மன்னரின் பிரதிநிதி சமீபத்தில் வருகிருர். அதையொட்டிய வைபவங்களை மகிழ்ச்சியுடன் கொண்டாட தென்னுப்பிரிக்க மக்கள் விரும்புவார்கள் என்பதில் சந்தேகமில்லை. தற்போதைய நிலையில் அந்த வைபவங்களில் தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர் சமூகமும் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறதா?

தங்கள்,

**மோ. க. காந்தி**

'ராண்ட் டெயிலி மெயில்'—*18-10-1910*

* * *

நாராயணசாமி இறந்துவிட்டார் என்ருலும், அவர் நம்மிடையே வாழ்கிருர். அவர் தமது உடலுடன் இந்த உலகில் இல்லை. ஆனல் அவரது பெயரும் புகழும் என்றென்றும் அழியாமல் விளங்கிவரும். பிறப்பும், இறப்பும் எல்லோருக்கும் பொதுவானவை. இவ்விஷயத்தை நாம் ஆழ்ந்து சிந்திப்போமாயின், மரணம், சீக்கிரமாக வந்தாலும் அல்லது தாமதித்து வந்தாலும், துக்கத்தையோ அல்லது மகிழ்ச்சியையோ கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அதற்கு மாருக, சமூகத்திற்காகத் தொண்டு செய்யும்போதோ அல்லது ஏதாவது நல்ல நோக்கத்தை நிறைவேற்றும்போதோ மரணம் நேர்ந்தால் அது உண்மையில் மரணம் அல்ல, வாழ்வேயாகும். தாய்நாட்டிற்காக மரணத்தை ஏற்க விரும்பாத இந்திய தேசபக்தர் யாராவது இருக்கிருரா? நிச்சயமாக யாரும் இல்லை. நம் மனத்தில் இந்த உணர்ச்சி இல்லாவிடில், நாம் நம்மை தேசபக்தர்கள் என்று கூறிக்கொள்ள முடியாது.

நாராயணசாமி சொல்லொணுத் துன்பத்திற்கு உள்ளானர். 'டெக்'கில் பிரயாணம் செய்வது எப்போதுமே அபாயகரமானது; அதிலும் போதிய உடைகளின்றியும், மற்ற வசதிகளின்றியும் பிரயாணம் செய்வது அதிக அபாயகரமானது. நாராயணசாமி தாய் நாட்டிற்காக 'டெக்கில்' அத்தகைய பிரயாணத்தை மேற்கொண்டார். இறுதிவரையில் துன்பத்திற்கு உள்ளாகி, அவர் இந்த உலகத்தை நீத்துச் சென்ருர். அவரை நாம் ஓர் உண்மையான சத்தியாக்கிரகியாகக் கருதுகிருேம். அவர் அப்பழுக்கற்ற ஒரு சத்தியாக்கிரகியாக இறந்தார்.

நாராயணசாமியைப்போல் நாகப்பனும், அவரது மரணம் காரணமாக அழியாப் புகழ் பெற்ருர். அவர்களுடைய குடும்பத்தினருக்கு நாம் நமது துக்கத்தைத் தெரிவிக்கும் அதே சமயத்தில், அக்குடும்பத்தினரைப் பாராட்டவும் கடமைப்பட்டுள்ளோம். நாகப்பனையும், நாராயணசாமியையும் பெற்றெடுத்த தாய்மார் எல்லா மரியாதைகளுக்கும் உரியவராவர்.

நாராயணசாமியின் மரணம் புனிதமான ஒரு மரணமே என்றாலும், திரான்ஸ்வால் அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில் அது சட்ட பூர்வமான ஒரு கொலையே ஆகும். ஒரு நபர் மற்றொரு நபரின் மரணத்திற்குக் காரணமான சந்தர்ப்பங்களை உண்டாக்குவாராயின், முதலாவது நபர் மீது இரண்டாவது நபரின் கொலைக்குக் காரணமாக இருந்ததாகக் குற்றம் சாட்டலாம். நாராயணசாமியின் விஷயத்தில் நடந்ததும் இதுதான். அவரும் அவரது தோழர்களும் முதலில் டர்பனிலிருந்து எலிஸபெத் துறைமுகத்திற்குக் கொண்டுபோகப்பட்டார்கள்; அங்கிருந்து மீண்டும் கேப் டவுனுக்கும் கேப் டவுனிலிருந்து மீண்டும் டர்பனுக்கும் கொண்டுவரப்பட்டார்கள். மேற்கண்ட பிரயாணத்தின் போது இடத்திற்கும், உடைகளுக்கும், உணவுக்கும் அவர்கள் மிகுந்த துன்பத்திற்குள்ளாக நேர்ந்தது. மற்றவர்களுக்கு இந்தியர் சமூகம் உடைகளும், உணவும் அளித்து உதவி புரிந்திராவிடில், அவர்களும் சொல்லொண்ணுக் கஷ்டங்களுக்கு உள்ளாகும் படி நேர்ந்திருக்கும். அவ்விஷயத்தில் திரான்ஸ்வால் அரசாங்கம் மிகவும் கொடுமையாக நடந்திருக்கிறது. அதன் விளைவாக நாராயணசாமி மரணத்திற்குள்ளாகும்படியும் நேர்ந்துளது. அதனால்தான் திரான்ஸ்வால் அரசாங்கத்தின்மீது நாம் கொலைக் குற்றம் சாட்டுகிறோம். அதற்காக அவர்கள் மீது சட்ட பூர்வமான நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ள முடியாதாதலின், இதை நாம் சட்ட பூர்வமான கொலை என்று குறிப்பிடுகிறோம்.

அவ்வாறாக, நாகப்பனும் நாராயணசாமியும் நம்மை விட்டுப் பிரிந்து சென்று விட்டார்கள். மற்ற இந்தியர்கள் நாளுக்கு நாள் அதிகமாக நன்றிக்கடன்படும்படி தமிழர் சமூகம் செய்திருக்கிறது. தமிழர் சமூகம் நாளுக்கு நாள் அதிகமாகப் பெருமையையும் புகழையும் அடைந்து வருகிறது. எனவே தமிழர் சமூகம் செய்துள்ள அரும் தொண்டுகளுக்கு மற்ற இந்தியர்கள் கைம்மாறு செய்வது இனி எப்போதாவது சாத்தியமாகுமா? மற்ற இந்தியர்கள் தமிழர் சமூகத்தினிடமிருந்து தெரிந்து கொண்ட பாடத்தையும், உதாரணத்தையும் மனத்திற்கொண்டு தாய் நாட்டிற்காக மௌனமாகத் தொண்டுபுரியக் கற்றுக் கொள்ளவேண்டும். இவ்விதம் செய்ய இந்தியர் சமூகம் தவறிவிடுமாயின், அது (இந்தியர் சமூகம்) தனக்குத்தானே இழிவைத் தேடிக் கொண்டதாகும்.

'இந்தியன் ஒபினியன்'-*22—10—1910*

## 26

# குருதுவாரத்தில் படுகொலை

பஞ்சாபில் காந்திஜி மௌலானா ஷவுகத் அலியுடன் நாங்கனா சாகிப் குருதுவாரத்துக்குச் சென்றபோது, ஏற்கனவே அங்கே நிகழ்ந்த கோர சம்பவத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். அவர் பேசியதாவது :

உங்களுக்கு எனது அனுதாபத்தைத் தெரிவிக்க, ஓர் யாத்திரீகன் என்ற முறையிலேயே நான் இங்கு வந்திருக்கிறேன். இங்கு நிகழ்ந்த கோர சம்பவத்தைப் பற்றி கூர்க்காவைச் சேர்ந்த ஒரு சீக்கிய நண்பரிடமிருந்து எனக்கு ஒரு தந்தி கிடைத்தது. நான் அதை லாலா லஜபதிராய்க்கும், மற்ற நண்பர்களுக்கும் காட்டினேன். அந்தச் செய்தி மிகவும் திடுக்கிடத்தக்கதாக இருந்ததால், உறுதியாகத் தெரிந்தாலன்றி அதை நம்புவதற்கில்லை என்று கூறிவிட்டார்கள். பின்னர் நாங்கள் அதைத் தெரிந்து கொள்வதற்காக அவசரமாக லாகூருக்குச் சென்றோம். அங்கே சென்றபின், அந்தப் பயங்கரமான செய்தி முற்றிலும் உண்மை என்பதைத் தெரிந்து கொண்டோம். எனவே முல்டானுக்குச் செல்ல நான் திட்டமிட்டிருந்த யாத்திரையை ரத்து செய்துவிட்டு, மேற்கொண்டு அச் சம்பவத்தையொட்டிய தகவல்கள் கிடைப்பதற்காகக் காத்திருந்தேன். மறுநாள் நான் லயல்பூருக்குச் சென்று, அங்கிருந்து ஶ்ரீக்குப் புறப்பட்டுச் சென்றேன். அன்று தகனம் நடப்பதாக அங்கேதான் நான் கேள்விப்பட்டேன். அச் செய்திவந்த போது காலம் கடந்துவிட்டதால் நான் அதற்குச் செல்ல முடியவில்லை. அமிருதசரஸிலும் லக்ஷ்மணபுரியிலும் ஏற்கனவே தீர்மானித்திருந்த முக்கியமான சில கூட்டங்களில் நான் கலந்து கொள்ளவேண்டியிருந்ததால், இந்த யாத்திரையை நான் மேற்கொள்ள முடியவில்லை. இதன் மத்தியில் அங்கு நிகழ்ந்த உயிர்த் தியாகத்தைப் பற்றிய பல விவரங்களையும் நான் கேள்விப்பட்டேன்.

உங்களுடைய துக்கம் என்னுடைய துக்கமேயாகும் என்று நான் உங்களுக்கு உறுதி கூறவேண்டிய அவசியமேயில்லை. மற்றவர்களுடைய துன்பம் என்னைத் துக்கத்தில் ஆழ்த்தியிருக்கிறது. இது எனது இயல்பாகும். துக்கத்தைப் போக்கிக் கொள்ள, தற்கொலை பலனற்றதாகும். அவ்விதமிராவிடில், நான் இதற்கு முன்பே தற்கொலை செய்து என் உயிரை மாய்த்துக் கொண்டிருப்பேன். எனவே நாங்கனா கோர நிகழ்ச்சியைப் பற்றி நான் கேள்விப்பட்டவுடன், அதில் பலியானவர்களுடன் நானும் இருக்க விரும்புவது போல் எனக்குத் தோன்றியது. தற்போதுள்ள நிலையில் நான் உயிர்த் தியாகம் செய்தவர்களின் உறவினர்களுக்கு எனது அனுதாபத்தைத்தான் தெரிவிக்க முடியும்.

இங்கு உண்மையில் என்ன நிகழ்ந்தது என்பது பற்றி நான் இன்னும் எவ்வித முடிவுக்கும் வர முடியாதவனாக இருக்கிறேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். அகாலி கட்சியினரின் கையினால் ஒருவர் கூட இறக்கவில்லை என்பதை நம்பவே முடியவில்லை. கிர்பான்களையும்* கோடரிகளையும் வைத்துக் கொண்டிருந்த அந்த தைரியசாலிகள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காகக் கூட அவற்றை உபயோகிக்கவில்லையா? அவர்கள் அந்த ஆயுதங்களை உபயோகிக்கவில்லையாயின், அச் சம்பவம் உலகம் முழுவதும் மின்சாரம்போல் பாய்ந்து எல்லா மக்களையும் மெய்சிலிர்க்கச் செய்வதாகும்.

அச் சம்பவத்திற்கு மூன்று காரணங்களை நான் கற்பனை செய்து கொள்ள முடியும்.

1. அகாலி கட்சியினர் கோவிலைத் தங்கள் வசம் எடுத்துக் கொள்வதற்காக வந்தார்கள். அம் முயற்சியில் அவர்கள் உயிர் துறந்தார்கள். அதைத் தங்கள் வசம் எடுத்துக் கொள்வதற்காக அவர்கள் வந்ததைக் குறித்து உலகம் அவர்கள்மீது குற்றம் சாட்டாது. மஹந்த் அதன் தர்மகர்த்தாவாக இருக்கத் தகுதி யற்றவர் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். நீங்கள் சமய சீர்திருத்த வாதிகள். எனவே அதை உங்கள் வசத்தில் எடுத்துக் கொள்ள நீங்கள் முயற்சித்தது இயற்கையேயாகும். எனினும் பலாத்காரமாக அதை உங்கள் வசப்படுத்திக் கொள்வதை நான் ஆதரிக்க முடியாது. பலாத்காரம் கூடாது என்பதே எனது கொள்கையாகும். தீங்கு செய்வோருக்கு எதிராகக் கூட பலாத்காரத்தை மேற்கொள் ளப்போவதாக மிரட்டக் கூடாது என்பதும் எனது கொள்கையா கும். உங்களுடைய கொள்கைகளுக்கும் எனது கொள்கைகளுக்கும் இந்த வேற்றுமை உண்டு என்பதை நான் அறிவேன். எனக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் தீங்கு செய்வோரை மன்னிக்கும் ஆற்றல் எனக்கு உண்டு என்றே நம்புகிறேன். அத்தகைய சந்தர்ப்பம் ஏற்படுமாயின், தீங்கு செய்வோரை மன்னிக்கும் சக்தி யைக் கடவுள் எனக்குக் கொடுக்க வேண்டும் என்று எப்போதும் பிரார்த்தித்து வருகிறேன். எனினும் அந்தத் தியாகிகள் பலாத் காரமாகக் கோவிலைத் தங்கள் வசப்படுத்திக் கொள்வதற்காக வந்திருந்தால்கூட, நீங்கள் குற்றவாளிகள் என்று சரித்திரம் கூறாது. இது முதலாவது காரணமாக இருக்கலாம்.

2. அகாலி கட்சியினர் கடவுளை வணங்குவதற்காக கோவி லுக்குள் வந்தார்கள். அப்போது தங்களைப் பாதுகாத்துக் கொள் வதற்குக் கூடச் சந்தர்ப்பம் அளிக்காமல் அவர்கள் கொல்லப்பட் டார்கள். இது இரண்டாவது காரணமாக இருக்கலாம்.

3. அவர்கள் கடவுளை வணங்குவதற்காக வந்தார்கள். தங் களைக் கொல்ல மஹந்த் பூரண ஆயுத பலத்துடன் இருக்கிறார்

* கிர்பான், ஒரு வளைவான கத்தியே. அதை ஒவ்வொரு சீக்கியரும் வைத்துக் கொண்டிருக்கவேண்டும் என்பது சீக்கிய மதத்தின் கட்டளையாகும்.

என்பது தெரிந்தும் கூட, அவருடைய தாக்குதலிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் சக்தி அவர்களுக்கு இருந்தும் கூட, அவர்கள் தாங்கள் படுகொலை செய்யப்படுவதைத் தடுக்கவில்லை. இது மூன்றாவது காரணமாக இருக்கலாம்.

மேற்கூறிய காரணங்களில் எது உண்மையாக இருந்தாலும், அச் சம்பவம் சரித்திரத்தில் இடம் பெறும் என்பது நிச்சயம்.

அவர்களுடைய துணிச்சல் சீக்கியர்களுக்கு மாத்திரம் பெருமையை அளிக்கக் கூடியது என்று நீங்கள் எண்ணவேண்டாம்; அது நாடு முழுவதற்குமே பெருமை அளிக்கக் கூடியது என்று நீங்கள் கருதவேண்டும். அந்தத் தியாகிகள் தங்களுடைய மதத்தைப் பாதுகாப்பதற்காக மாத்திரமல்ல, களங்கத்திலிருந்து எல்லா மதங்களையும் பாதுகாக்கவே உயிர் துறந்தனர்.

ஹிந்துஸ்தானத்தின் புதல்வர்கள், புதல்விகள் என்ற முறையில் நானும் நீங்களும் வாழ வேண்டும், இறக்க வேண்டும். கிலாபாத் லட்சியத்திற்காக எனது வாழ்க்கையை நான் அர்ப்பணம் செய்திருக்கிறேன். அதைப் பாதுகாப்பது என்பதற்கு, எனது சொந்த மதத்தையும் தேசத்தையும் பாதுகாப்பது என்பதே அர்த்தமாகும். நான் என்னை ஒரு சனாதனி என்று சொல்லிக் கொள்கிறேன். எனது அண்டை அயலாருடன் நான் சமாதானமாக வாழவும் விரும்புகிறேன். அவர்களுக்குத் தொண்டு புரிவதன் மூலம்தான் நான் அவ்விதம் வாழ முடியும். மற்றவர்களைக் கொன்றுவிட்டு, எனது நாட்டையோ அல்லது என்னுடைய மதத்தையோ பாதுகாத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. மதத்திற்காகவோ அல்லது நாட்டிற்காகவோ இறக்கும் சக்தி எனக்கு இருக்குமாயின், நான் குற்றமற்றவன் என்று கடவுள் கருதுவார் என்பதை நான் அறிவேன்.

எனவே இந்தத் தியாகத்தை நீங்கள் பாரத மாதாவுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டுமென உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன். சுதந்திர இந்தியாவில்தான் சீக்கியர்கள் சுதந்திரமாக இருக்க முடியும் என்பதை நம்புங்கள். இந்தியா அடிமையாக இருந்தால். நீங்கள் சுதந்திரமாக இருக்க முடியாது. எனினும் இந்தியாவை அடிமைத்தனத்தில் வைத்துக் கொண்டிருப்பதற்காக தந்திரசாலிகளான சர்க்கார் உங்களுடைய துணையை நாடுவார்கள். தற்போதுள்ள கவர்னரையோ அல்லது வேறு எந்த அதிகாரியையோ நான் குறை கூறவில்லை. அவர்களும் உடந்தையாக இருப்பதாக நான் அறிந்தால், அதைப் பகிரங்கமாகக் கூற நான் தயங்கமாட்டேன். இப்போது நான் சர்க்காரின் பொதுவான போக்கைப் பற்றியே கூறுகிறேன். நம் மீதுள்ள பிடியை நிலை நிறுத்துவதற்காக அவர்கள் முஸ்லிம்களிடமிருந்து ஹிந்துக்களைப் பிரிக்கத் தயங்கவில்லை. எனவே இந்தியாவின் மற்றப் பகுதிகளிலிருந்து உங்களைப் பிரித்து வைக்கவும் அவர்கள் தயங்கமாட்டார்கள். அத்தகைய ஆசை எதற்கும் நீங்கள் இடம் கொடுத்துவிடக் கூடாது. அதற்கு மாறாக, இந்த சைத்தான் அரசாங்க ஆட்சியை

ஒழிக்க நீங்கள் இந்தியாவின் மற்றப் பகுதிகளுடன் ஒன்று பட்டுத் தொண்டு புரிய வேண்டும்.

துன்பத்திற்குள்ளாகும் விஷயத்தில் சீக்கியர்கள் பரீட்சையில் தேறிவிட்டதாக இப்போதுதான் ஒரு நண்பர் கூறினார். அதை நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. உங்களுடைய பரீட்சை இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறதென்று உங்களுக்கு கூறவிரும்புகிறேன். உங்களுக்கு ஏற்பட்டுள்ள இந்தப் புதிய சக்தியை நீங்கள் எவ்வாறு உபயோகிக்கப்போகிறீர்கள்? உங்களுடைய கிர்பான்களும். கோடரிகளும் உங்களுடைய உடைகளின் ஒரு பகுதிதான் என்ற உண்மையை அதே நண்பர் என்னிடம் கூறினார். அப்படியே இருக்கட்டும். ஆனால் அவற்றை உபயோகிப்பதற்கான காலம் வரவில்லை என்று நான் உங்களுக்கு உறுதியாகக் கூறுகிறேன். தற்போது அகிம்சை அத்தியாவசியமானது என்பதை, தேசிய சங்கங்கள் யாவும் உணர்ந்திருக்கின்றன. எனவே உங்களுடைய கிர்பான்கள் உறைகளிலேயே இருக்கும்படி நீங்கள் பார்த்துக் கொள்ளவேண்டும்; உங்கள் கோடரிகளையும் நீங்கள் உபயோகிக்கவே கூடாது. உயிர்த் தியாகம் செய்தவர்களின் பெருமைகளை எடுத்துக் கூற நாம் தகுதி வாய்ந்தவர்கள் என்பதை நீங்களும் நானும் நிரூபிக்க வேண்டுமாயின், நாம் அவர்களிடமிருந்து பணிவையும் துன்பத்திற்கு உள்ளாகும் ஆற்றலையும் கற்றுக் கொள்ளவேண்டும். இணையற்ற உங்களுடைய தைரியத்தை, தேசத்திற்காகவும், தேச விடுதலைக்காகவும் அர்ப்பணம் செய்யுங்கள்.

'எங் இந்தியா'—*16—3—1921*

# 27

# லாகூர் சீக்கியர்களுக்கு காந்திஜியின் செய்தி

*மார்ச் 4, 1921*

அன்புள்ள நண்பர்களுக்கு,

நேற்று நான் நாங்கனு சாகிப் குருதுவாரத்துக்கு யாத்திரை சென்றிருந்தேன். அதன் பலனாக நான் சீக்கிய நண்பர்களுக்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். உங்களுடைய மாபெரும் ஆலயங்களில் ஒன்றான அதில் நிகழ்ந்த படுகொலைகளின் அடையாளங்களும், அவற்றையொட்டி என்னிடம் கூறப்பட்ட விவரங்களும் என்றும் அழியாத விதத்தில் என் மனத்தில் பதிந்துள்ளன.

பிப்ரவரி 20-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை அந்த துர்ப்பாக்கிய சம்பவம் நிகழ்ந்தது. அன்று அகாலி கட்சியைச் சேர்ந்த சற்றேறக் குறைய 150 பேர்கள் அக்கிரமமாகக் கொலை செய்யப்பட்டார்கள். க

என்பதிலும், அவர்களுடைய உடல்கள் சின்னுபின்னமாக்கப்பட்டன என்பதிலும், கொலேகாரர்களில் ஒருவர்கூட அகாலி கட்சியினரால் காயமடையவில்லை என்பதிலும் சிறிதும் சந்தேகமில்லை. ஒரு அகாலியர், கோவில் மைதானத்திலுள்ள மரத்தில் கட்டப்பட்டு உயிருடன் தகனம் செய்யப்பட்டார் என்பதிலும் சந்தேகமில்லை. பலருடைய உடல்களிலும் 'பாரபின்' எண்ணெயை ஊற்றித் தகனம் செய்தார்கள் என்பதும் சந்தேகமின்றித் தெரிகிறது. அகாலியர்கள் மாத்திரமே கொல்லப்பட்டார்கள் என்ற உண்மையை மறைப்பதற்காகவே அவ்விதம் செய்திருந்தார்கள். கோவிலுக்குள் சென்ற அகாலியர்களில் ஒருவராவது படுகொலேயைப் பற்றிய கதையைக் கூற உயிர்தப்பவில்லை.

அந்தக் கோவில் ஒரு கோட்டையைப் போல் தோற்றமளிக்கின்றது. கோவிலேச் சுற்றியுள்ள அறைகளின் சுவர்கள், தோட்டாக்களால் துளேக்கப்பட்டிருக்கின்றன. எனவே கோவிலுக்குள் துப்பாக்கிகளால் சுட்டார்கள் என்பது தெரிகிறது. கோவிலின் முக்கிய வாசற்படிக் கதவு, மாபெரும் எஃகுத் தகடுகளால் சமீபத்தில்தான் செய்யப்பட்டவை. கிரந்த் சாகிபிலும் (சீக்கியர்களின் வேத நூல்) தோட்டாக்களின் அடையாளங்கள் இருக்கின்றன. மூலஸ்தானத்தின் சுவர்களும், தூண்களும் கூட அதே கதையைத்தான் கூறுகின்றன. அகாலி கட்சியினரைக் கோவிலுக்குள் அனுமதித்தபின், வஞ்சகமாகக் கதவுகளேச் சாத்திவிட்டார்கள் என்று தெரிகிறது. நான் அங்கே கண்ட விவரங்களும், கேட்ட விவரங்களும், ஜாலியன்வாலா பாக்கில் டயரால் ஏற்பட்ட கொடுமைகளேக் காட்டிலும் அதிகக் காட்டுமிராண்டித்தனமான, அதிகப் பேய்த்தன்மை வாய்ந்த சம்பவங்கள் நிகழ்ந்திருப்பதையே சுட்டிக் காட்டுகின்றன. அக்காலத்தில் நாங்களுவில் ஸர்ப்பம் படமெடுத்து சாதுவான குருநானக்கிற்கு நிழல் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. அதே நாங்களுவில் அந்தகாரம் சூழ்ந்த அந்த ஞாயிற்றுக்கிழமையன்று மனிதன் சைத்தாளுக மாறிவிட்டான்.

அந்தக் கோர சம்பவத்தைக் குறித்து இந்தியா இன்று கண்ணீர் வடிக்கின்றது. அந்தப் புனித ஆலயத்தில் அத்தகைய அட்டூழியங்கள் புரியக் கூடிய இந்தியப் புதல்வர்கள் இருப்பதைக் குறித்து நான் வெட்கமடைகிறேன். அகாலி கட்சியினர் ஏன் கோவிலுக்குள் சென்ருர்கள்? கொலேகாரர்களே அவர்கள் எதிர்த்து நின்ருர்களா? இவை சம்பந்தமான தகவல்கள் கிடைக்கவில்லே. எனினும் அவர்களிடம் கிர்பான்களும், கோடரிகளும் இருந்தன.

அகாலி கட்சியினர் மத சீர்திருத்தவாதிகளாவர். குருதுவாரங்களிலுள்ள ஊழல்களேக் களேய வேண்டும் என்பதே அவர்களுடைய ஆர்வமாகும். குருதுவாரங்களில் கடவுளே வணங்கும் முறை எவ்விடத்திலும் ஒரே விதமாக இருக்கவேண்டுமென அவர்கள் வற்புறுத்துகின்றனர். சென்ற சில ஆண்டுகளாகவே -ந்த இயக்கம் நடந்து வருகிறது. அவ்வியக்கத்தைப் பொறுத்த

மட்டில் எல்லா சீக்கியர்களும் ஒரே மனத்துடன் இருந்துவரு கிறார்கள்.

கோவிலுக்குள் பலியானவர்களின் தியாகத்தை மதிப்பிடு வதற்குரிய காலம் இன்னும் வரவில்லை. எனவே உடனடியாக நாம் எடுத்துக் கொள்ளவேண்டிய முறைகள் என்ன என்பது பற்றியே இப்போது நாம் சிந்திக்கவேண்டும். இந்தியா முழு வதையும் மனத்திற் கொண்டே, அந்தக் கோர சம்பவத்தைப் பற்றி நான் சிந்திக்க முடியும். அந்தத் தைரியசாலிகளுடைய உயிர்த்தியாகத்தின் பெருமை சீக்கியர்களுக்கு மாத்திரமல்ல, தேசம் முழுவதற்குமே உரியதாகும். எனவே தேசத்தின் தேவைக் குத் தகுந்தவாறு சீக்கியர்கள் தங்களுடைய எதிர்காலத்தை உரு வாக்க வேண்டும் என்பதே நான் அவர்களுக்குக் கூறும் யோசனை யாகும்.

குருதுவாரத்திற்குள் அட்டூழியங்களைச் செய்தவர்கள் சீக்கியர் களாயினும், பட்டாணியர்களாயினும் அல்லது ஹிந்துக்களாயினும். அவர்கள் தேசமக்களேயாவர். அவர்களுக்குத் தண்டனை விதிப் பதன் மூலம், இறந்தவர்கள் உயிர் பெற்று வரும்படி செய்துவிட முடியாது. எனவே அந்தக் கோர சம்பவம் காரணமாக யாருடைய உள்ளங்கள் உதிரம் வழிந்து புண்ணாகியிருக்கின்றனவோ அவர்கள், கொலைக்குற்றம் செய்தவர்களை மன்னித்துவிட வேண்டும். பலவீனம் காரணமாக இல்லை, அளவிடமுடியாத பலம் காரண மாகவே அவர்களை மன்னிக்க வேண்டும். அவர்களுக்கு, கொலை காரர்களுக்குத் தண்டனை கொடுக்கும் சக்தி இருந்தாலும், அவர் கள் அதை உபயோகிக்கக்கூடாது. பலம் வாய்ந்தவர்கள்தான் மன்னிக்க முடியும். வஞ்சம் தீர்க்க மறுப்பதன் மூலம் உயிர்த் தியாகிகளின் பெருமை மேலும் அதிகமாகும்படி அவர்கள் செய்ய வேண்டும்.

கொலைகாரர்களுக்குத் தண்டனை கிடைக்கும்படி செய்வதற் காகக் கூட, ஒத்துழையாமைவாதிகள் பிரிட்டிஷ் ஆட்சியிலுள்ள கோர்ட்டுகளின் உதவியை நாடக்கூடாது. இன்னும் ஒரு வருட காலத்திற்குள் நாம் விடுதலை பெற வேண்டுமாயின், நாம் நம் முடைய விருப்பப்படி சொந்த அரசாங்கத்தை அமைத்து நீதி வழங்கும்வரையில், கொலைகாரர்கள்கூடத் தண்டனையின்றித் தப்பிச் செல்லுமாறு விட்டுவிடும் தைரியம் நமக்கு இருக்க வேண்டும்.

சீக்கியர்கள் எச்சரிக்கையாக இருப்பார்களாக. குற்றவாளி களைத் தாங்கள் தான் தண்டிக்க முடியுமென்று கூறி சர்க்கார் அவர்களைத் தங்கள் பக்கம் இழுத்துக் கொள்ள முயற்சிப் பார்கள் என்பதில் சந்தேகமில்லை. சிவில் சர்க்காரின் கோர்ட்டுகள், பொறிகளைப் போன்றவை. எச்சரிக்கையாக இராதவர்கள் யோசனையின்றி அவற்றில் சிக்கிக் கொள்வார்கள்.

நம்மை ஆட்சி புரிந்துவரும் சர்க்காரின் கொடுமையை நாம் இன்னும் உணர்ந்து கொள்ளவில்லையாயின், அதன் காரணமாக

நாம் தற்போதுள்ள கோர்ட்டுகளை நாடுவதைத் தவிர்க்க முடிய வில்லையாயின், சர்க்கார் விசாரணைக் கமிட்டி இருக்கும்போது மற்றொரு புறம் நமது சொந்த விசாரணைக் கமிட்டியை நியமிக்கும் யோசனையற்ற காரியத்தையாவது நாம் செய்யாமல் இருக்க வேண்டும். நாம் நமது குறையையோ அல்லது பலவீனத்தையோ பட்டவர்த்தனமாக ஒப்புக்கொண்டு கோர்ட்டுகளின் உதவியை நாடவேண்டும் அல்லது கொலைகாரர்கள் நம் மீது ஏவப்படு வதைத் தைரியமாகச் சமாளிக்க வேண்டும். நமது பலவீனத்தை மறைப்பது அபாயமாகும்; தைரியசாலிகள் போல் பாசாங்கு செய் வது அதைக் காட்டிலும் அதிக அபாயமாகும்.

போரை நடத்த மஹந்த் நீண்ட காலமாகவும் பகிரங்கமாக வும் ஆயத்தம் செய்து வந்தார் என்பதைப் பொதுவாக எல் லோரும் அறிவர். அவரிடம் ஆயுதங்கள் இருந்தன; வெடி மருந் தும் இருந்தது. அவர் தமக்குத் துணையாக போக்கிரிகளையும் சேகரித்துவந்தார். அவரது ஏற்பாடுகளை சர்க்கார் அதிகாரிகள் அறியாமல் இருந்திருக்க முடியாது. அந்தக் கொடிய குற்றத்தை அவர்கள் தூண்டாவிடினும், அமைதியாகப் பார்த்துக் கொண் டிருந்தார்கள் என்று நீங்கள் சந்தேகம் கொள்கிறீர்கள். அக் கொடுமைக்குச் சில சர்க்கார் அதிகாரிகள் உடந்தையாக இருந் தார்கள் என்பது கண்டு பிடிக்கப்பட்டால்கூட, உண்மையைத் தெரிந்து கொண்டதன் பலனை நீங்களோ, இந்தியாவோ ஓர் அடிகூட முன்னேற முடியாது என்பதை நீங்கள் நிச்சயமாக அறிந்து கொண்டிருக்க வேண்டும். இந்த சர்க்கார் எந்த அடிப் படையில் அமைக்கப்பட்டிருக்கிறதோ அதை அடியோடு மாற்றின லொழிய, இந்த அரசாங்கம் முழுவதையும் அடியோடு ஒழித்து விடவே நீங்களும், இந்திய மக்கள் யாவரும் விரும்புகின்றனர். எனவே அந்த முக்கியமான பிரச்னையிலிருந்து தேசத்திலுள்ள எந்தப் பிரிவினருடைய கவனத்தையும் வேறு திசையில் திருப்ப முற்படுவது தவறாகும்.

## 28

# தேசீயக் கொடி

எல்லா நாடுகளுக்கும் ஒரு கொடி அத்தியாவசியமாகும். 'கொடியைப் பாதுகாப்பதற்காக லட்சக்கணக்கான மக்கள் உயிரைக் கொடுத்திருக்கின்றனர். அது ஒரு விதமான விக்கிரக ஆராதனை போன்றதே. எனினும் அந்த வழக்கத்தை ஒழிப்பது பாவமாகும். ஏனெனில் ஒரு கொடி, ஒரு கொள்கைக்கு அடை யாளமாகத் திகழ்கின்றது. யூனியன் கொடியைப் பறக்க விடுவது ஆங்கிலேயர்களின் மனத்தில் உணர்ச்சிகளை எழுப்புகின்றது. அந்த உணர்ச்சிகளின் பலத்தை அளவிடுவது கடினமாகும். அமெரிக்கர்களுக்கு, நட்சத்திரங்களும் வரிகளும் அடங்கிய கொடி

எவ்வளவோ பொருளை உணர்த்துவதாக இருக்கிறது. நட்சத்திரமும் பிறைச் சந்திரனும் இஸ்லாம் மதத்தினருக்கு வீர உணர்ச்சியை உண்டாக்குகின்றன.

இந்தியர்களுக்கு அதாவது இந்தியாவைத் தாயகமாகக் கொண்ட ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், யூதர்கள், பார்சிகள் முதலிய மற்ற சகலருக்கும் வாழ்வதற்கும், உயிரை அர்ப்பணம் செய்வதற்கும் பொதுவான ஒரு கொடி இருக்க வேண்டியது அவசியமாகும்.

மற்ற நாடுகளின் கொடிகளைப் பற்றி விவரித்தும், இந்திய தேசியக் கொடி எப்படி இருக்க வேண்டும் என்பதைக் குறிப்பிட்டும் மசூலிபட்டணம் தேசியக் கல்லூரியைச் சேர்ந்த ஸ்ரீ பி. வெங்கய்யா ஒரு சிறிய நூல் வெளியிட்டுள்ளார். அது சில ஆண்டுகளாகப் பொது மக்களின் முன்னிலையில் இருந்துவருகிறது. சென்ற நான்கு வருடங்களாக, காங்கிரஸ் மகாசபையின் ஒவ்வொரு கூட்டத்திலும் ஸ்ரீ வெங்கய்யா தேசிய கொடியின் மாதிரிகளைச் சமர்ப்பித்து வந்துள்ளார். அவ்விஷயத்தில் அவரது விடாமுயற்சியையும், உற்சாகத்தையும் நான் பாராட்டுகிறேன். என்றாலும், அவற்றில் எனக்கு உற்சாகம் ஏற்படும்படி அவரால் செய்ய முடியவில்லை. அவற்றில் எதுவும் தேசமக்களின் மனத்தில் ஆழ்ந்த உணர்ச்சியை உண்டாக்கக் கூடியதாக இல்லை. எனினும் தேசீயக் கொடி சம்பந்தமாக எல்லோருடைய கவனத்தையும் உடனடியாக ஈர்க்க வல்ல ஓர் யோசனையைக் கூறிய பெருமை ஒரு பஞ்சாபியையே சார்ந்துளது. ராட்டினத்தைப் பற்றி விவாதம் நடந்தபோது, சுயராஜ்யக் கொடியில் ராட்டினமும் இடம் பெறவேண்டும் என்று ஜலந்தரைச் சேர்ந்த லாலா ஹன்ஸ்ராஜ் ஒரு யோசனை கூறினர். இதுவரை யாரும் கூறாத அந்த அருமையான யோசனையை நான் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. எனவே சிவப்பையும் (ஹிந்துக்களைக் குறிக்கும் வர்ணம்), பச்சையையும் (முஸ்லிம்களைக் குறிக்கும் வர்ணம்) பின்னணியாகக் கொண்டு, ஒரு ராட்டினமும் அடங்கிய ஒரு மாதிரிக் கொடியைத் தயாரிக்கும்படி நான் பெஜவாடாவில் இருந்தபோது ஸ்ரீ வெங்கய்யாவைக் கேட்டேன். அவர் அந்த யோசனையை மிகவும் உற்சாகத்துடன் ஏற்றுக் கொண்டு, மூன்று மணி நேரத்தில் அத்தகைய ஒரு மாதிரிக் கொடியைத் தயாரித்துவிட்டார். எனினும் அப்போது நேரம் கடந்துவிட்டதால், அதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் சமர்ப்பிக்க இயலவில்லை. அவ்விதம் நேரம் கடந்து விட்டதைக் குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். ஏனெனில் அவ்விஷயத்தை நான் தீர்க்காலோசனை செய்ததன் பலனாக, பின்னணியில் மற்ற மதங்களும் குறிப்பிடப்படவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை என்பது, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மாத்திரம் ஒற்றுமையாக இருப்பதைக் குறிப்பிடவில்லை; இந்தியாவிலுள்ள எல்லா மதங்களிடையேயும் ஒற்றுமை நிலவ வேண்டும் என்பதையே குறிப்ப

தாகும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பரஸ்பரம் சகிப்புத்தன்மை காட்டுவார்களாயின், இந்தியாவிலுள்ள மற்ற எல்லா மதங்கள் விஷயத்திலும் அவர்கள் சகிப்புத் தன்மை காட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இந்தியாவிலோ அல்லது உலகத்திலோ உள்ள மற்ற மதங்களுக்கு அபாயம் விளைவிக்கக் கூடியதாக இருக்க வேண்டியதில்லை. எனவே பின்னணி வெள்ளையாகவும், பச்சையாகவும், சிவப்பாகவும் இருக்க வேண்டுமென நான் யோசனை கூறினேன். வெள்ளை மற்ற எல்லா மதங்களையும் குறிப்பிடுவதாகும். எண்ணிக்கையில் மிக மிகக் குறைந்தவர்களுக்குத்தான் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். இஸ்லாமிய நிறத்துக்கு அடுத்த ஸ்தானமும், ஹிந்துக்களின் நிறத்திற்குக் கடைசிஸ்தானமும் கொடுக்க வேண்டும். மிகவும் பலம் வாய்ந்தவர்கள் மிகவும் பலவீனர்களாக இருப்போருக்குப் பாதுகாப்பாளராக இருக்க வேண்டும் என்பதே அதன் கருத்தாகும். தவிர, வெள்ளை நிறம் தூய்மையையும், அமைதியையும் குறிப்பிடுகிறது. எல்லோரும் சமம் என்பதைக் காட்டவே, எல்லா நிறங்களுக்கும் சமமான அளவு கொடுக்கப்பட்டிருக்கிறது.

ராட்டினத்திற்காகத்தான் இந்தியா வாழ முடியும், இறக்கவும் முடியும். ராட்டினம் மறைந்ததால்தான் இந்தியாவின் சுபிட்சமும், இந்திய மக்களின் இன்ப வாழ்வும் மறைந்தன. இந்தியப் பெண்களும், பாமர மக்களும் ராட்டினத்தின் அழைப்பிற்கிணங்கவே இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு துயிலிலிருந்து எழுந்திருக்கிறார்கள். ராட்டினம்தான் உயிர் கொடுக்கக் கூடியதென்பதைப் பாமர மக்கள் உணர்ந்திருக்கிறார்கள். பெண்கள் அதைத் தங்களுடைய கற்பைப் பாதுகாக்கும் ஒரு சாதனமாகக் கருதுகிறார்கள். மீண்டும் ராட்டினத்தைக் கைக் கொண்டால்தான், கோடிக்கணக்கானவர்களின் பசிப்பிணி தீரமுடியும். 1900 மைல்கள் நீளமும், 1500 மைல்கள் அகலமும் உள்ள இந்தியாவில் இருக்கும் பாமர மக்களின் வறுமைப் பிரச்னையை, கைத்தொழில் திட்டங்கள் எவ்வளவு வளர்ச்சி பெற்றாலும் தீர்க்க முடியாது. எனவே இந்திய மக்கள் உயிர்வாழ்வதற்கு, காற்றையும் தண்ணீரையும் போல் ராட்டினமும் இன்றியமையாததாகும்.

இந்திய தேசீயக் கொடி கதர்த் துணியினால் தயாரிக்கப்பட வேண்டும் என்பதையும் சொல்ல வேண்டியதில்லை. முரட்டுத் துணியினால் மாத்திரமே இந்தியா அந்நிய நாட்டுத் துணிகளை எதிர்பார்க்காமல் இருக்கும்படி செய்ய முடியும். எல்லா ஸ்தாபனங்களும், மத ஸ்தாபனங்களும் கூட தேசீயக் கொடிகளைக் கதர்த் துணியினாலேயே செய்ய வேண்டும். அந்தக் கொடியில் ராட்டினம் முக்கிய இடத்தைப் பெறவேண்டும்.

'எங் இந்தியா' - *13-4-1921*

# 29

# டால்ஸ்டாயின் கடிதம்

"காட்செடி" * ருஷ்யா,
செப்டம்பர் 7, 1910

'இந்தியன் ஒபினியன்' என்ற உங்களுடைய பத்திரிகை எனக்குக் கிடைத்தது. சாத்துவிக எதிர்ப்பைப் பற்றி அதில் எழுதப்பட்டுள்ளவற்றையெல்லாம் அறிய நான் மகிழ்ச்சியடைகிறேன். அந்தக் கட்டுரைகளை வாசித்ததன் பலனாக, என் மனத்தில் எழுந்துள்ள எண்ணங்களையெல்லாம் உங்களுக்குக் கூற விரும்புகிறேன்.

நான் எவ்வளவுக்கெவ்வளவு அதிக காலம் வாழ்கிறேனோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக எனக்கு, என் உள்ளத்தை ஆட்கொண்டுள்ள உணர்ச்சிகளைப் பிறருக்கு எடுத்துக் கூற வேண்டும் என்ற எண்ணம் பலமடைந்துவருகிறது. குறிப்பாக, நான் மரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் அந்த எண்ணம் மிகவும் அதிகமாகியிருக்கிறது. அந்த உணர்ச்சிகள் மிகவும் முக்கியமானவை என்பதும் எனது அபிப்பிராயமாகும். சாத்துவிக எதிர்ப்பு என்பது உண்மையில் போலி விளக்கத்தினால் உருக்குலைக்கப்படாத, கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட அன்பேயாகும். மற்ற ஆன்மாக்களுடன் ஐக்கியத்தையும் தொடர்பையும் நாடுவதே அன்பாகும். அத்தகைய அன்பே உயர்ந்த நடவடிக்கைகளுக்குக் காரணமாகிறது. அந்த அன்புதான் மானிட வாழ்க்கையின் மகோன்னதமான, தனிச்சிறப்பு வாய்ந்த விதியாகும். ஒவ்வொருவருடைய உள்ளத்தின் ஆழத்திலும் அத்தகைய அன்பு ஏற்படுகிறது. சிறு குழந்தைகளின் உள்ளத்தில் அத்தகைய அன்பை நாம் தெளிவாகக் காண்கிறோம். உலகத்தின் போலி சித்தாந்தங்களால் மனிதனின் கண்கள் மறைக்கப்படாமல் இருக்கும்வரையில், மனிதனின் உள்ளத்திலும் அவ்விதம் அன்பு உண்டாகின்றது.

இந்தியர்கள், கிறிஸ்தவர்கள், ஹீப்ருக்கள், கிரேக்கர், ரோமியர் ஆகிய எல்லோருடைய சமய தத்துவங்களும் அன்பு நியதியையே பிரகடனம் செய்துள்ளன. அன்புத் தத்துவத்தை ஏசுநாதர் மிக மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார். அவர் அத்துடன் நிற்கவில்லை. உலக சம்பந்தமான நலன்களுக்காக மாத்திரம் வாழ்வோர், அந்த அன்பு நியதியை உருக்குலைத்துவிடுவார்கள் என்பதையும், அது அவர்களுடைய இயல்பு என்பதையும் சுட்டிக் காட்டியிருக்கிறார். உலக சம்பந்தமான நலன்களை பலாத்காரத்தினால் பாதுகாக்க முற்படும்போதுதான், அன்பு நியதியை உருக்குலைக்கும் பேரபாயம் ஏற்படுகிறது. அதாவது அடிக்குப் பதிலாக அடிகொடுப்பது, நம்மிடமிருந்து

* 'காட்செடி' என்பது லியோ டால்ஸ்டாயினுடைய மூத்த மகளின் மாளிகையாகும்.

அபகரிக்கப்பட்ட பொருள்களைப் பலாத்காரமாகத் திருப்பி எடுத்துக் கொள்ள முற்படுவது போன்ற செய்கைகள்தான் அத்தகைய பேரபாயமென்றும் குறிப்பிட்டிருக்கிறார். அன்பே, வாழ்க்கையின் மூலாதாரமான விதியாகும். பலாத்காரத்தை உபயோகிப்பது அன்புக்கு முரணாகும். இதை ஏசு நாதர் அறிந்திருந்தார். நியாய புத்தி படைத்த எல்லா மனிதர்களுமே இதை அறிந்து கொள்ள வேண்டும். பலாத்காரத்தை ஒரு தடவை ஒப்புக்கொண்டால் கூட, அன்பு விதி பலனற்றதாகிவிடுகிறது, அந்த விதி மறைந்துவிடுகிறது. வெளிப்பார்வைக்கு பிரமாதமாகத் தோன்றும் கிறிஸ்தவ நாகரிகம், மனம் அறிந்தும் அறியாமலும் இந்த முரண்பாட்டை அடிப்படையாகக் கொண்டே வளர்ந்திருக்கிறது.

உண்மையில், பலாத்காரம் அங்கீகரிக்கப்படும் இடத்தில் அன்பு இராது; அங்கே வாழ்க்கையின் விதியாக அன்பு இருக்க முடியாது. அன்பு விதி இருக்க முடியாதெனில், அந்த இடத்தில் பலாத்கார விதியைத் தவிர வேறு எதற்கும் இடமில்லை; அதாவது வலிமைதான் நீதி என்ற விதிதான் இருக்க முடியும். சென்ற பத்தொன்பது நூற்றாண்டுகளாக கிறிஸ்தவர் சமூகம் அவ்விதம் தான் வாழ்ந்துவந்திருக்கிறது. சமூக அமைப்பில் மக்கள் எப்போதும்பலாத்காரத்தையே பின்பற்றிவந்திருக்கிறார்கள் என்பது உண்மையாகும். ஆனால் கிறிஸ்தவ மக்களின் கொள்கைகளுக்கும் மற்ற தேச மக்களின் கொள்கைகளுக்கும் ஒரு வேற்றுமை உண்டு. அதாவது கிறிஸ்தவ மதத்தில் அன்பு விதி தெளிவாகவும் திட்டவட்டமாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. வேறு எந்த மதத்திலும் அது அவ்வளவு தெளிவாகக் குறிப்பிடப்படவில்லை. அன்பு விதியை கிறிஸ்தவ உலகம் ஒப்புக்கொண்டிருக்கிறது. அதே சமயம் அது, பலாத்காரம் உபயோகிக்கப்படுவதையும் அனுமதித்திருக்கிறது; அந்த பலாத்காரத்தின் மீதே கிறிஸ்தவ உலகம் நிர்மாணிக்கப் பட்டிருக்கிறது. எனவே கிறிஸ்தவ மக்களின் வாழ்க்கை, அவர்களுடைய பேச்சிற்கும், செயலுக்கும் அதாவது அவர்களுடைய வாழ்க்கையின் அடிப்படைக்கு முற்றிலும் முரணாக இருக்கிறது. வாழ்க்கையின் விதியாக அன்பு அங்கீகரிக்கப்பட்டிருக்கிறதெனினும், அரசாங்கங்கள், நீதிச் சபைகள், ராணுவம் போன்ற வாழ்க்கையின் பல்வேறு இலாகாக்களிலும் பலாத்காரம் தவிர்க்க முடியாததாகியிருக்கிறது. அந்த இலாகாக்கள் பாராட்டப்பட்டும் வருகின்றன!

இச் சந்தர்ப்பத்தில் ஒரு கேள்வி எழுகின்றது: மத சம்பந்தமான, தார்மிக ரீதியான எத்தகைய கட்டு திட்டத்தையும் நாம் அங்கீகரிக்கவில்லை என்றும், பலாத்கார விதியை அடிப்படையாகக் கொண்டே நாம் வாழ்க்கையைப் பின்பற்றிவருகிறோம் என்றும் ஒப்புக் கொள்ளவேண்டும்; அல்லது நாம் பலாத்காரமாக வசூலிக்கும் வரிகள், நீதி நிர்வாகம், போலீஸ் இலாகாக்கள், எல்லாவற்றிற்கும் மேலாக ராணுவம் ஆகியவை ரத்து செய்யப்பட வேண்டும்.

மாஸ்கோவிலுள்ள பெண்கள் மத்தியதரக் கல்விசாலை ஒன்றில் மத சம்பந்தமான ஒரு பரீட்சை நடந்தது. ஏசு நாதரின் முக்கியமான பத்து கட்டளைகளைப் பற்றி ஆசிரியர் சிறுமிகளைக் கேள்விகள் கேட்டார். "நீ யாரையும் கொல்லக் கூடாது" என்பது ஆருவது கட்டளையாகும். ஆருவது கட்டளை என்ன என்ற கேள்விக்குச் சிறுமிகள் மேற்கூறியவிதம் சரியான விடை அளித்தனர். கூட இருந்த பாதிரியாரும் அதை மகிழ்ச்சியுடன் கவனித்துவந்தார். "எப்போதும், எந்தச் சந்தர்ப்பத்திலும் கொல்லுவது குற்றமா?" என்பது அடுத்த கேள்வியாகும். அதற்கு அவர்கள், தங்களுக்கு ஆசிரியர் கற்பித்துள்ள விடையையே கூற வேண்டும். அதாவது "யுத்தகாலத்தில் கொல்லுவதும் மரண தண்டனை அடைந்த குற்றவாளிகளைக் கொல்லுவதும் குற்றமல்ல" என்று அவர்கள் விடை கூறவேண்டும்! ஆனால் அந்தக் கேள்விக்கு, துரதிர்ஷ்டசாலிகளான அந்தச் சிறுமிகளில் ஒருத்தி, "ஆம் எப்போதும், எந்தச் சந்தர்ப்பத்திலும் கொல்லுவது குற்றம்தான்" என்று அழுத்தம் திருத்தமாக பதில் கூறினாள். நாவன்மை படைத்த பாதிரியார் அதே கேள்வியைப் பல கோணங்களில் கேட்டும்கூட அந்தச் சிறுமி "எந்தச் சந்தர்ப்பத்திலும் கொல்லுவது குற்றம்தான். கொல்லக் கூடாது என்று பழைய ஏற்பாட்டில் கட்டளையிடப்பட்டிருக்கிறது. ஏசுநாதரும் அவ்விதமே கட்டளையிட்டுள்ளார். அது மாத்திரமல்ல, நமது அண்டை வீட்டுக்காரர்களுக்கு நாம் எவ்விதமான கொடுமையும் இழைக்கக் கூடாது என்பதும் அவரது கட்டளையாகும்" என்று அந்தச் சிறுமி கூறவே, பாதிரியார் தமது சாமர்த்தியம் பலிக்காமல் தோல்வியுடன் திரும்ப நேர்ந்தது! அச்சிறுமி வெற்றிபெற்றாள். அது வெறும் கட்டுக் கதை அல்ல, உண்மையாகவே கண்முன் இங்கே நிகழ்ந்த சம்பவமாகும்.

சோஷலிஸம், கம்யூனிஸம், அராஜகம், ரட்சண்ய சேனை, குற்றங்கள் பெருகுதல், வேலையில்லாத் திண்டாட்டம், செல்வவந்தர்களின் நகைக்கத்தக்க எல்லையற்ற சுகபோகங்கள், ஏழைகளின் பயங்கரமான துன்ப வாழ்க்கை, நாளுக்கு நாள் பயங்கரமாக அதிகமாகிவரும் தற்கொலைகள் ஆகியவை எல்லாம் மேலே குறிப்பிட்ட முரண்பாட்டின் அறிகுறிகளேயாகும். அந்த முரண்பாடும், அதனால் எழுந்துள்ள பிரச்னைகளும் தீரவேண்டுமாயின், அன்பு விதி ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்; எல்லா விதமான பலாத்காரமும் நிராகரிக்கப்படவேண்டும். எனவே உலகத்தின் மத்தியிலிருந்து வெகு தொலைவில் இருப்பதாகத் தோன்றும் திரான்ஸ்வாலில் நீங்கள் செய்துவரும் வேலைகள் மிகவும் மூலாதாரமானவை, மிகவும் முக்கியமானவை. அங்கு அன்பு வழியை நீங்கள் நடைமுறையில் காட்டிவருகிறீர்கள். உலகம் அதில் பங்கு எடுத்துக் கொள்ள முடியும்; கிறிஸ்தவர்கள் மாத்திரமல்ல, உலகத்திலுள்ள எல்லா மக்களும் அதில் பங்கு எடுத்துக்கொள்ளவேண்டும்.

ருஷ்யாவிலும் அது போன்ற ஓர் இயக்கம் மிகவும் வேகமாக வளர்ச்சி பெற்றுவருகிறது. அதாவது ராணுவத்தில் சேர மறுப்போரின் தொகை வருடந்தோறும் அதிகமாகிவருகிறது. உங்க

ளுடைய சாத்துவிக எதிர்ப்பாளர்களும், இங்கு ராணுவத்தில் சேர மறுப்போரும், "கடவுள் நம் பக்கம் இருக்கிறுர்" என்றும், "மனிதர்களைக் காட்டிலும் கடவுள் அதிக சக்தி வாய்ந்தவர்" என்றும் கூறலாம்.

தங்களிடம் மிகுந்த மதிப்புள்ள,
லியோ டால்ஸ்டாய்.

# 30

# மர்மமான எச்சரிக்கைகள்

மெக்ஸிகோவில் உள்ள ஒரு தியேட்டரில் நாடகம் நடந்து கொண்டிருந்தபோது, தியேட்டர் தீப்பிடித்துக் கொண்டதால் 500 ஆடவர்கள் எரிந்து மாண்டனர். பிரிட்டனிலுள்ள டர்ஹாம் சுரங் கத்தில் ஏற்பட்ட வெடிவிபத்தில் 200 தொழிலாளர்கள் புதை யுண்டனர். சில தினங்களுக்கு முன் ஜோகன்னஸ்பர்க்கிற்கு அருகிலுள்ள சில சுரங்கங்களில் பெருமழை காரணமாக வெள்ளம் ஏற்பட்டதால் ஏராளமானவர்கள் மூழ்கி மாண்டனர். இச்செய்தி களையெல்லாம் பத்திரிகைகளில் வாசித்தோம்.

அடிக்கடி இத்தகைய மர்மமான எச்சரிக்கைகள் நமக்குக் கிடைத்தும் கூட, நாம் செய்வதென்று உறுதி கொண்டுள்ள கடமைகளிலிருந்து நாம் பின்வாங்கி விடுகிறேம். பண நஷ்டம் ஏற்படும் என்ற அச்சத்தினுலோ, நம் உயிருக்கு அபாயம் நேரலாம் என்பதினுலோ அல்லது அவைபோன்ற வேறு துரதிர்ஷ்டமான சம்பவங்களுக்குப் பயந்தோ அந்தக் கடமைகளை நிறைவேற்ற நாம் தவறிவிடுகிறேம். அபாயம் எதுவும் ஏற்படாமல் நமது உடல்களை நாம் இரவு பகலாகப் பாதுகாத்துவருகிறேம். எனினும் அவற்றை ஒரு மணி நேரத்திற்குக் கூடப் பாதுகாக்க நம்மால் முடிவதில்லை. கப்பல் கரைக்கு வரும் சமயத்தில், திரான்ஸ்வால் இந்தியர்கள் போராட்டத்திலிருந்து பின் வாங்குவதற்குக் காரணம் அவை போன்றதுதான். அத்தகைய நடத்தை இந்தியர்களுக்குப் பெருமை அளிக்கக்கூடியதல்ல; உண்மையில் அது அவர்களுடைய பெருமைக்கு இழுக்காகும்.

நம்மீது சாட்டப்படும் பெரும் குற்றம் என்னவெனில், நமக்கு ஆண்மை உணர்ச்சி இல்லை, நாம் ஆரம்பத்தில் சிறிதுகாலம் பெரும் முயற்சி செய்துவிட்டுப் பிறகு சலிப்படைந்து விடுகிறேம், எந்தக் காரியத்தையும் நாம் இருதய பூர்வமாகச் செய்வதில்லை என்பது தான். இந்தக் குற்றச்சாட்டிற்கு ஆதாரம் இல்லை என்பதைக் காட்டுவதே, திரான்ஸ்வால் இயக்கத்தின் நோக்கங்களில் ஒன்ருகும். ஒன்று இந்தியர்களின் விசேஷ குணங்களுக்கு இது ஒரு சோதனையாக இருக்கவேண்டும் அல்லது அவர்களுடைய குற்றம் குறைகளை அம்பலப்படுத்த வேண்டும். இந்த இயக்கத்தின் தன்மை இதுதான். எனவே இதில் பல பிரச்னைகள் இயல் பாகவே அடங்கியிருக்கின்றன.

இந்த இயக்கத்தில் மற்றவர்கள் ஒரு வழிகாட்டி நடத்திச் செல்ல வேண்டுமென எவரும் காத்திருக்க வேண்டியதில்லை என்பதை, இந்தியர்கள் உணர்ந்து கொள்ள வேண்டியது கடமையாகும். தங்களைப்போல் மற்றவர்களும் தவறுகள் செய்திருப்பதாக எவரும் சுட்டிக்காட்ட வேண்டியதில்லை என்பதையும் இந்தியர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தமது சொந்த தைரியத்தைச் சோதனைக்கு உள்ளாக்க வேண்டும். நாம் இப்போது யாரை எதிர்த்துப் போராடி வருகிறோமோ அவர்களே ஒரு காலத்தில் பல கஷ்டங்களைக் கடந்து வரவேண்டியிருந்தது என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். முந்நூறு ஆண்டுகளுக்கு முன்புதான், தங்களுடைய கொள்கைகளை விட்டுக் கொடுப்பதைக் காட்டிலும் உயிருடன் எரிக்கப்படுவதையே மேலானதென்று நினைத்த வீரர்கள் வெள்ளையர்களிடையே இருந்தனர். ஜான் பன்யன் என்ற பெயருள்ள புனிதத் தன்மைவாய்ந்த ஒரு வெள்ளையர் இருந்தார். இன்று அவரை வெள்ளையர்கள் வணங்கிப் போற்றுகிறார்கள். ஆனால் ஜான் பன்யன் அவரது வாழ்நாளில் பட்டகஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. பன்னிரண்டு ஆண்டுகள் வரையில் அவர் கொடிய சிறைத் தண்டனையையும் அனுபவிக்க நேர்ந்தது. அந்த நாட்களிலெல்லாம் சிறைகள் இருட்டறைகளாக இருந்தன. ஜான் பன்யன் தமது கொள்கைகள் காரணமாகவே துன்பத்திற்குள்ளாக நேர்ந்தது. அவரது காலத்தில், மக்கள் ஒரு குறிப்பிட்ட கிறிஸ்தவாலயத்துக்குச் செல்லாவிடில் சிறையில் அடைக்கப்பட்டனர். மிகமிகப் புனிதமான கிறிஸ்தவாலயத்துக்குக் கூடநிர்ப்பந்தம் காரணமாகச் செல்ல ஜான் பன்யன் மறுத்துவிட்டார். அதற்காக அவர் சிறைத் தண்டனையை அனுபவிக்க நேர்ந்தது. எனினும் அவர் ஒரு மாளிகையில் இருப்பதுபோல் சிறையில் மிகவும் மகிழ்ச்சியுடன் இருந்தார். அவர் சிறையில் இருந்தபோது எழுதிய நூலை இன்று கோடிக்கணக்கான வெள்ளையர்கள் பக்தியுடன் வாசித்துவருகிறார்கள். அதற்குச் சமமான நூல் வேறு மொழிகளில் இல்லை என்றே கருதப்படுகிறது. மற்றவர்கள் என்ன செய்தார்கள் என்பதைக் குறித்து ஜான் பன்யன் கவலைப்படவில்லை. அவருக்குக் கொள்கைகள்தான் முக்கியமாக இருந்தன. அவர் தமது கொள்கைகளைக் கைவிடுவதைக் காட்டிலும் சிறையில் இருப்பதையே விரும்பினார். எனினும் இறுதியில் அவர் வெற்றிபெற்றார்.

ஜான் பன்யனைச் சிறையில் அடைத்தவர்கள் இன்று கூட மக்களால் வெறுக்கப்படுகிறார்கள். ஜான் பன்யனைப் போன்றவர்கள் சிறையில் இருந்ததன் காரணமாக அவரது நாட்டு மக்களுக்கு விடுதலை கிடைத்தது. அவரது நாட்டு மக்களுடனேயே இப்போது நாம் போராட வேண்டியவர்களாக இருக்கிறோம். இதை நாம் நமது நல்ல அதிர்ஷ்டமாகவே கருதுகிறோம். தமது கொள்கையில் மதிப்பு இராதவரிடமிருந்து, கொள்கையை மதிக்கும் பண்பை நாம் கற்றுக்கொள்ள முடியாது. நரிகளுக்கிடையே உள்ள ஒருவர், நரியாக இருக்கும் தன்மையைத்தான் கற்றுக்

கொள்ள முடியும், ஆனல் சிங்கங்களுக்கிடையே உள்ள ஒருவர் சிங்கத்தைப்போல் கர்ஜிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்; இல்லா விடில் நாசமாகிவிட வேண்டும். சிங்கம் போன்ற வெள்ளையர் களின் மத்தியில் நாம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நம்மை அவர்கள் மிகவும் கொடுமையாக நடத்தி வருகிறார்கள். சரியான கோணத்திலிருந்து இவ்விஷயத்தை நாம் பார்ப்போமாயின், அவர்களை எதிர்த்து நிற்பதில் நாம் வெற்றியடைவோம்; அடிமைத் தனத்தில் ஆழ்த்தப்படுவதிலிருந்து நம்மை நாம் பாதுகாத்துக் கொள்வோம்; திரான்ஸ்வாலில் வெள்ளையர்களுக்குச் சமமாக நாமும் சுதந்திரமாக வாழ்வோம். அவர்களுடன் சமத்துவ உரிமை கோரவே இந்த இயக்கத்தில் நாம் ஈடுபடத் துணிந்துள்ளோம். இந்த இயக்கத்தில் நாம் வெற்றி பெறுவதற்கு உண்மையான அறிவும், உண்மையான கல்வியும் தேவையாகும். உண்மையான அறிவு என்பது, வெறும் எழுத்தறிவல்ல; உண்மையான கல்வி என்பது புத்தகங்களை வாசிப்பதுமட்டுமல்ல. நமது உண்மையான நிலையை நாம் அறிந்து கொள்வதும், நமது வாழ்க்கையை உரு வாக்கிக் கொள்வதும். அந்த அறிவை அடிப்படையாகக் கொண்டு நடந்து கொள்வதுமே, உண்மையான அறிவும் உண்மையான கல்வியுமாகும்.

அரசாங்கம் இப்போது பலவிடங்களிலும் பலரையும் கைது செய்துவருகிறது என்பதை ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து வந்துள்ள கடிதத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். மன உறுதி வாய்ந்த எல்லோரையும் அரசினர் கைது செய்து வருகிறார்கள். கைது செய்யப்பட்டவர்களை நாம் வாழ்த்துகிறோம். இறுதி வரையில் அவர்களுடைய தைரியம் குன்றாதிருக்கும்படி செய்ய நாம் ஈசுவரனை, குதாவைப் பிரார்த்திக்கிறோம். அவர்களுடைய துணிச் சல், திரான்ஸ்வால் இந்தியர்களின், தென்னப்பிரிக்கா இந்தியர் களின், உண்மையில் இந்தியா முழுவதும் உள்ள இந்தியர்களின் எதிர்காலம் ஒளிவீசித் திகழும்படி செய்யும். திரான்ஸ்வால் இந்தியர்கள் சிறுபான்மையோரே என்ற உண்மை, நமக்கு உற் சாகம் குன்றும்படி செய்யவேண்டிய அவசியமில்லை. யார் கைது செய்யப்படவில்லையோ அவர்கள் அடிபணிந்துவிட்டார்கள் என் பது இப்போது தெளிவாகத் தெரிகிறது. அவர்கள் அரசாங்கத் துடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பதாக நாம் பொதுவாக எண்ணலாம். பல இந்தியர்கள் அரசாங்கத்தினிடம் அடிபணிந்து விடவில்லை என்பதும், அவர்கள் இன்னும் சிறையில் வைக்கப்பட வில்லை என்பதும் உண்மையே. விரைவில் அவர்களும் கைது செய்யப்படுவார்கள். எனினும் உண்மையான எல்லா சத்தியாக் கிரகிகளும் சிறையில் இருக்கும்படி நேரும் காலம் வந்துகொண் டிருக்கிறது. அவர்கள் யாவரும் அச்சமின்றியும் தைரியமாகவும் சிறை புக முன்வரவேண்டும் என்பதே நாம் வற்புறுத்திக் கூறும் யோசனையாகும். தாங்கள் வெளியே இராத சமயத்தில் தங்களுடைய அலுவல்களை யார் செய்வார்கள் என்று அவர்கள் கவலைப்பட வேண்டாம். கடவுள் எங்கும் இருக்கிறார்—பின்

புறத்திலும் முன் புறத்திலும், வலது புறத்திலும் இடது புறத் திலும், மேலேயும் கீழேயும் இருக்கிறார். அவர் ஒருவர்தான் நமக்கு ஆதரவு அளிப்பவர். எல்லாவற்றையும் அவர் கவனித்துக் கொள்வார். அப்படியிருக்க மனிதர் எவருடைய ஆதரவை நாம் நம்பிக்கொண்டிருக்க வேண்டும்? மானிட வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் என்ன செய்ய முடியும்? தைரியசாலியான ஸ்ரீ அசுவத் இன்னும் சில நாட்களில் சிறையில் இருப்பார். அவருக்குப் பின் தலைவர், ஒருவர் பின் ஒருவராகத் தொடர்ந்து சிறைக்குச் செல்லு வார்கள். பின் வாங்கிய இந்தியர்கள் மீண்டும் சிங்கத்தைப் போல் கர்ஜித்துக்கொண்டு எழ முடியுமென நாம் மீண்டும் கூறு கிறோம். அவர்கள் செய்யவேண்டியதெல்லாம், லைசன்ஸ்களைக் கிழித்தெறிந்துவிட்டு, ரிஜிஸ்திரேஷன் சர்ட்டிபிகேட்டுகளையும் தகனம் செய்வதுதான்.

போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த, திரான்ஸ்வாலில் கிடைத்திருப்பது போன்ற அரிய சந்தர்ப்பங்கள் நமக்கு ஒரு காலத்திலும் கிடைத்ததில்லை. இந்தச் சந்தர்ப்பங்களைக் கவனிக்க இந்தியர்கள் எப்படித் தவறினார்கள்? அவர்கள் கவனித்திருப்பார் களாயின், அவற்றை அவர்கள் ஏன் உபயோகித்துக்கொள்ள வில்லை?

'இந்தியன் ஒபினியன்'—*20-2-1909*

# 31

# மூன்று தியாகிகள்

டைலர், ஹாம்ப்டன், பன்யன் ஆகிய மூன்று தியாகிகளையும் பற்றி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம். அவர்கள் அவர்களுடைய நாட்டிற்காகச் செய்த தியாகத்தில் நூற்றில் ஒரு மடங்கை, தென்னாப்பிரிக்காவில் நம்மிடையே உள்ளவர்களில் ஒரே ஒருவர் செய்தால் கூட, நம்மை இறுகக் கட்டியுள்ள சங்கிலிகள் அறுந்து விடும் என்பது நிச்சயம்.

வாட் டைலர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்தார். ஒரு சமயம் இங்கிலாந்து மன்னர் விவசாயிகளுக்குக் கடுமையான வரி விதித்தார். அது அநீதியான வரியாதலின், அந்த வரியைக் கொடுப்பதில்லை என்று டைலர் உறுதிகொண்டார். அவருடன் பல விவசாயிகள் கலந்து கொண்டனர். டைலரையும் அவரது சகாக்களையும் எதிர்ப்பதற்காக ராணுவப் படை அனுப்பப்பட்டது. அப்போது டைலர் கொல்லப்பட்டார் என்றாலும், விவசாயிகளுக்கு விதிக்கப்பட்ட அநீதியான வரி இறுதியில் ரத்து செய்யப்பட்டது. இச் சம்பவத்தின் பலனாக மக்கள் தங்களுடைய சக்தியை உணர்ந்து கொண்டனர். அவர்கள் அவ்விதம் உணர்ந்து கொண்

டார்கள் என்பது, பதினேழாம் நூற்றுண்டில் நிகழ்ந்த சம்பவங் களிலிருந்து வெளியாயிற்று.

அப்போது இங்கிலாந்தில் மன்னர் ஆட்சி புரிந்து வந்தார். அவர் அந்நிய நாடுகள் மீது போர் தொடுக்க விரும்பினர். அவ் வமயம் அவரது பொக்கிஷம் காலியாக இருந்ததால், அவர் மக்களிடமிருந்து கப்பல் பணம் வசூல் செய்ய உத்தரவிட்டார். கப்பல் பணம் கொடுக்க முற்பட்டால் மன்னரின் கோரிக்கைகள் நாளுக்கு நாள் அதிகமாகி மக்கள் துன்பத்திற்கு உள்ளாவார்கள் என்பதை ஹாம்ப்டன் தெரிந்து கொண்டார். அவர் செல்வவந்தர்; மிகுந்த செல்வாக்கும் கௌரவமும் வாய்ந்தவர். எனவே அந்த வரியைக் கொடுக்க மறுத்துவிட்டார். மற்றும் பலரும் அவருடன் சேர்ந்து கொண்டு வரி கொடுக்க மறுத்தனர். பின்னர் அவர்களில் சிலர் வரியைக் கொடுக்க ஒப்புக் கொண்டார்கள் என்றாலும், ஹாம்ப்டன் மாத்திரம் உறுதியுடன் நின்று வரி செலுத்த மறுத்து விட்டார். அவர் மீது அதிகாரிகள் வழக்குத் தொடர்ந்தனர். வரி செலுத்தாதது குற்றம் என்று தீர்ப்புக்கூறி நீதிபதிகள் அவருக்குச் சிறைத் தண்டனை விதித்தனர். சிறைத் தண்டனை விதிக்கப்பட்டும் கூட ஹாம்ப்டன் வரி செலுத்த மறுத்துவிட்டார். அதன் விளைவாக அவரும் அவரது தோழர்களும் சிறைக்குச் சென்றனர். சிறை சென்ற அவர்களை மக்கள் வாழ்த்தியதுடன், அவர்களைப் போல் மக்களும் வரி செலுத்துவதில்லையென உறுதி கொண்டனர். எனவே அதன் விளைவாக ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டது. அதைக் கண்டு மன்னர் கலங்கினர். எனவே அவ் வரியைப் பற்றிப் புனராலோசனை செய்தனர். வரி செலுத்தாத ஆயிரக்கணக்கான மக்களைச் சிறைக்கு அனுப்புவது இயலாத காரியம் என்பதை மன்னர் உணர்ந்தார். எனவே முதலில் நீதிபதிகள் கொடுத்த தண்டனையை வேறு நீதிபதிகளைக் கொண்டு ரத்துசெய்யும்படி செய்தார். அதன்பலனாக ஹாம்ப்டன் விடுதலை யடைந்தார். எனினும் அவர் விதைத்த விடுதலைப் போராட்டம் பிரம்மாண்டமான விருட்சமாக வளர்ந்தது. அவரது போராட்டத் தின் பலனாக க்ராம்வெல் மக்களை நடத்த முற்பட்டார். எனவே இங்கிலாந்து மக்கள் உண்மையான அதிகாரத்தைப் பெற்றனர். தேச நிர்வாகத்தில் அவர்களுக்கு அதிகமான பங்கு கிடைத்தது. தமது நாட்டு மக்களுக்காகப் போராடிய வண்ணம் ஹாம்ப்டன் இறந்தார். எனினும் அவர் இன்றும் அமரராகத் திகழ்கிறார்.

ஜான் பன்யன் ஒரு முனிவரைப் போன்றவர். அவருக்கு விருப்பமான ஒரே விஷயம், கடவுளைப் பிரார்த்திப்பதுதான். அவரது காலத்தில், பதினேழாவது நூற்றுண்டில் மதக் கொடுமை மிகவும் பயங்கரமாக இருந்தது. பாதிரிமார்களின் கட்டளைப்படி நடந்து கொள்வது ஒழுங்கற்றது என அவர் கருதினர். கடவுளின் கட்டளைக்கு மாத்திரமே அவர் அடி பணிந்தார். அவர் தமது மனைவியையும் குழந்தைகளையும் பிரிந்து பன்னிரண்டு வருடங்கள் வரையில் பெட்போர்ட் சிறையில் இருந்தார். அங்கேதான் அவர் ஆங்கிலமொழியில் ஈடு இணையற்ற அழகான ஒரு நூலை

எழுதினர். அந்த நூலை வாசிப்பதன் மூலம் இன்று கோடிக்கணக்கான ஆடவர்கள் மன ஆறுதல் பெறுகின்றனர். அது மிகவும் எளிய நடையில் எழுதப்பட்டிருப்பதால், குழந்தைகளும், வயதானவர்களும் அதை மகிழ்ச்சியுடன் வாசிக்க முடியும். பன்யன் சிறைப்பட்டிருந்த இடம் ஆங்கிலேயர்களுக்கு இன்று ஓர் யாத்திரை ஸ்தலமாக விளங்கிவருகிறது. பன்யன் தம் அளவில் துன்பங்களை அனுபவித்தார் என்ருலும், அவரது நாட்டு மக்களை அவர் துன்பங்களிலிருந்தும், துக்கத்திலிருந்தும் விடுவித்தார். பன்யனைப் போன்ற மகான்களால்தான் இன்று இங்கிலாந்து மக்கள் மத சம்பந்தமான விஷயங்களில் சுதந்திரத்தை அனுபவித்து வருகின்றனர்.

அத்தகைய முப்பெரும் மகாபுருஷர்களை ஈன்ற ஒரு நாட்டின் மக்கள், சுயாட்சி முறையை அனுபவிக்கத் தகுதி வாய்ந்தவர்களே யாவர். அவர்கள் அவ்வளவு கஷ்ட நஷ்டங்களை அனுபவித்தார்களெனில், திரான்ஸ்வால் இந்தியர்கள் சிறைக்குச் செல்லுவதோ அல்லது வர்த்தகத்தில் சிறிது நஷ்டம் அடைவதோ பெரிய காரியமல்ல. அவர்கள் அவ்விதம் செய்யாவிட்டால் அவர்களுக்குக் கெட்ட பெயர் ஏற்படும். அவர்கள் துன்பங்களை அனுபவிக்க முன்வருவார்களாயின், அவர்கள் கட்டுண்டிருக்கும் சங்கிலிகள் தூள் தூளாகிவிடும்.

# 32

# யுத்த வீரர்களுக்குத் தொண்டு

இந்தப் பத்திரிகையின் முந்திய இதழ் ஒன்றில், தயாள குணமுள்ள எலிஸபெத் ரை என்ற பெண்மணியின் வாழ்க்கையைப் பற்றி எழுதியிருந்தோம். கைதிகளின் நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும்படி செய்வதற்காக அவர் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்ததுபோலவே, பிளாரென்ஸ் நைட்டிங்கேலும் ராணுவத்திலுள்ள சிப்பாய்களுக்காகத் தமது உயிரை தியாகம் செய்தார். 1853-ல் கிரிமியா யுத்தம் மூண்டபோது, அதனல் ஏற்படக்கூடிய விளைவுகளை பிரிட்டிஷ் அரசாங்கம் அதன் வழக்கம் போல் உணர்ந்துகொள்ளவில்லை. அவர்கள் யுத்தத்திற்கான ஏற்பாடுகளும் செய்யவில்லை. போயர் யுத்தத்தில் அவர்கள் செய்ததைப்போல், கிரிமியா யுத்தத்திலும் அவர்கள் ஆரம்பத்தில் பல தவறுகள் செய்து, படுதோல்வியடைந்தனர். யுத்தத்தில் காயமடைந்தவர்களுக்கு இப்போது ஏற்பட்டுள்ள வசதிகளைப் போல் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் யாதொரு வசதியும் இல்லை. காயமடைந்தவர்களுக்கு இன்று ஏராளமானவர்கள் உதவி செய்ய முன்வருவதுபோல் அக்காலத்தில் வருவதில்லை. இன்றிருப்பதைப்போல் அன்று அறுவை சிகிச்சை முறையும் முன்னேற்றம் அடையவில்லை. காயமடைந்தவர்களுக்கு உதவி

செய்வதை அக்காலத்தில் வெகு சிலர்தான் ஒரு தர்ம கைங்கரிய மாகக் கருதினர். அத்தகைய ஒரு சூழ் நிலையில்தான் பிளாரென்ஸ் நைட்டிங்கேல் என்ற பெண்மணி போர் முனைக்குச் சென்று, சொர்க்கத்திலிருந்து இறங்கி வந்த ஒரு தேவதையைப்போல் தொண்டு புரிந்தார். போர் முனையில் சிப்பாய்கள் படும் துன்பங் களை அறிந்து அவரது மனம் மிகுந்த வேதனைக்கு உள்ளாகியது.

அப் பெண்மணி செல்வவந்தர்களான உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர். அவர் சொகுசான வாழ்க்கையை விட்டுவிட்டு, காய மடைந்தவர்களுக்குப் பணிவிடை செய்வதற்காகச் சென்றார். அவரைத் தொடர்ந்து பல பெண்மணிகள் சென்றனர். 1854 அக்டோபர் 21-ம் தேதி அவர் வீட்டை விட்டுச்சென்று, இங் கர்மான் யுத்தத்தில் காயமடைந்தவர்களுக்குப் பேருதவி புரிந் தார். அக்காலத்தில் படுக்கைகளோ அல்லது வேறு விதமான வசதிகளோ இல்லை. இந்தப் பெண்மணியின் மேற்பார்வையில் மாத்திரம் காயமடைந்த 10,000 சிப்பாய்கள் இருந்தனர்.

பிளாரென்ஸ் நைட்டிங்கேல் போர்முனைக்குச் செல்லுமுன் காயமடைந்தவர்களிடையே ஏற்பட்ட மரணம் 42 சதவிகிதமாக இருந்தது. அவர் போர்முனைக்குச் சென்றபின் அது 31 சத விகிதமாகக் குறைந்தது. சிறிது காலத்திற்குப் பின் அந்த விகிதம் 2 ஆகக் குறைந்துவிட்டது. ஆச்சரியமான அந்த நிலைக்கு பிளாரென்ஸ் நைட்டிங்கேலே காரணம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. காயங்களிலிருந்து ரத்தம் கொட்டுவதைத் தடுத்து, கட்டுக்கட்டி, காயமடைந்தவர்களுக்குத் தேவையான உணவு அளித்தால், பதினாயிரக்கணக்கான உயிர்களைக் காப் பாற்ற முடியும். அதற்கு அவசியமான சாதனங்கள் அன்பும், பணிவிடையும்தான். அந்த இரண்டு அம்சங்களும் நைட்டிங்கே லிடம் இருந்தன. மிகுந்த பலசாலிகள் கூட செய்ய முடியாத அலுவல்களை அந்தப் பெண்மணி செய்ததாகக் கூறப்படுகிறது. அவர் தினசரி சற்றேறக்குறைய இருபது மணி நேரம் வேலை செய்வது வழக்கம். அவருக்குக் கீழ் வேலை செய்யும் பெண்கள் தூங்கச் சென்றபின், அவர் கையில் விளக்குடன் தனியாக நோயாளிகள் இருக்குமிடத்திற்குச் சென்று அவர்களுக்கு ஆறுதல் வார்த்தைகள் கூறுவதுடன், அவசியமான உணவு முதலிய வையும் பரிவுடன் கொடுப்பது உண்டு. அவர் போர்முனைக்குச் செல்லக் கூட அஞ்சுவதில்லை. அவருக்குப் பயம் என்றால் என்ன என்பதே தெரியாது. அவர் கடவுள் ஒருவருக்குத்தான் அஞ்சினார். என்றாவது ஒருநாள் இறக்கவேண்டும் என்பதை அவர் அறிந்திருந்ததால், மற்றவர்களின் துன்பங்களைக் களைவ தற்காக அவர் எத்தகைய கஷ்டங்களையும் அனுபவிக்கத் தயங்க வில்லை.

அவர் கல்யாணம் செய்து கொள்ளாமல் ஆயுள் முழுவதும் தனிமையாகவே வாழ்ந்து, அரும்பணி புரிவதில் தமது வாழ்க் கையை அர்ப்பணம் செய்தார். அவர் இறந்தபோது ஆயிரக்

கணக்கான சிப்பாய்கள், தங்களுடைய சொந்தத் தாயாரை இழந்துவிட்டதுபோல், தேம்பித் தேம்பி அழுதார்களாம்.

அத்தகைய பெண்கள் பிறந்த நாடு மிகவும் சுபிட்சமாக இருப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. இங்கிலாந்து பரந்ததொரு சாம்ராஜ்யத்தை ஆட்சி புரிவதற்கு அதன் ராணுவ பலம் காரணமல்ல, அத்தகைய ஆடவர்களும் பெண்களும் செய்த போற்றத்தக்க செயல்கள்தான் காரணம்.

*'இந்தியன் ஒபினியன்' - 9-9-1905*

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண் பக்கத்தைக் குறிக்கும்)

ஓ



க



கா



**காந்திஜி :**

சி



ட



த

ந



நா

ம

ர

ஜ



ஸ



ஹ

---